# இன்றைய இந்தியா

மூல நூலின் முழுமையான தமிழ் பதிப்பு

**ரஜனி பாமி தத்**



நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
சென்னை—600 098.

முதல் தமிழ் பதிப்பு: ஜனசக்தி பிரசுராலயம், 1947.
இரண்டாம் தமிழ் பதிப்பு : ஜனவரி, 1978.



தமிழாக்கம்

**எம். வி. வெங்கட்ராம்**

**விலை: ரூ. 35-00**

மத்திய அரசு சலுகை விலையில் வழங்கிய
அச்சுத் தாளினால் இப்புத்தகம் அச்சாகியது
அச்சிட்டப் பிரதிகள் : 1100

*அச்சிட்டோர்:*

நியூ செஞ்சுரி பிரிண்டர்ஸ்,
சென்னை – 600 098.

# "வரலாற்று ஆராய்ச்சிக்கான இந்திய மன்றத்தின்" முன்னுரை

இந்திய மொழிகளில் நாங்கள் ஆராய்ச்சி நூல்களைத் தயாரித்து வெளியிட வேண்டும் என்று எதிர்பார்க்கும் வாசகப் பெருமக்களுக்கு ஆராய்ச்சியின் பலன்கள் கிட்டும்படி செய்ய வேண்டும் என்பது 'வரலாற்று ஆராய்ச்சிக்கான இந்திய மன்றத்தின்' (The Indian Council of Historical Research) நோக்கங்களில் ஒன்று. இந்திய வரலாற்று ஆசிரியர்கள் ஆங்கிலத்தைப் பயன்படுத்துவதால் அனைத்துலக சந்தையை அவர்கள் பெற முடியும்; புகழும் அந்தஸ்தும் அவர்களுக்கு கிடைக்கும். ஆனால் இந்திய மக்களில் வரையறுக்கப்பட்ட ஒரு பகுதியினருக்கே அது நலன் பயக்கும். எந்த ஆராய்ச்சியையும் இந்திய மொழிகளின் வாயிலாகவே கற்பிக்க வேண்டும் என்கிற போக்கு மிகுந்து வருகையில், தரமான ஆராய்ச்சி நூல்கள் இம்மொழிகளில் இல்லாதது பெரும் குறையாக இருக்கிறது. இந்திய வரலாறே நம்முடைய முதன்மையான கவனத்துக்குரிய பொருளாகையால், சில 'முன்னோடி நூல்களையும்' (Classics), நேரிய ஆராய்ச்சி வழி முறைகளைப் பின்பற்றி வரலாற்றின் சமகாலப் போக்குகளைப் பிரதிபலிக்கும் வேறு சில நூல்களையும் பல்வேறு இந்திய மொழிகளில் மொழி பெயர்த்து வெளியிடுவதெனத் தீர்மானிக்கப்பட்டது.

இந்த நூல் வரலாற்றின் முக்கியப் போக்குகளைப் பின்பற்றுகிறது. தத்தின் 'இன்றைய இந்தியா' சமூகவியல் நோக்கில் எழுதப் பெற்றது. இந்தியத் தேசத்தின் மூலத்தை அது உள்ளொற்றிக் காண்கிறது; காலனிப் பொருளாதார முறை எவ்வாறு முரண்பாடுகள் செறிந்த ஒரு சமூக ஏற்பாட்டை உண்டாக்கியது என்பதைக் காட்டுகிறது. இந்தியப்

பொருளாதாரத்தைப் பிரிட்டிஷ் ஆட்சி எப்படி பாதித்தது என்பதை விவரிக்கிறது; இந்தியத் தேசியத்தின் வளர்ச்சியில் சமூகச் சக்திகள், சமூக, சமய இயக்கங்களின் பங்கு என்ன என்பதை மதிப்பீடு செய்கிறது. ஆனால் மிக முக்கியமாக, முதன் முறையாக, இந்திய தேசீய இயக்கத் தலைமையின் வர்க்கக் குணம் இந்த ஆராய்ச்சி நூலில் பரிசீலனை செய்யப் பட்டுள்ளதை நாம் காண்கிறோம்.

சென்னையில் நிறுவப் பெற்றுள்ள கிளையினுடைய முயற்சியின் வாயிலாக இந்நூல் வெளியிடப்படுகிறது. அதற்காக மொழி பெயர்ப்பாளர் திரு. எம். வி. வெங்கட்ராமுக்கும், டாக்டர் குமாரி ஆர். சம்பக லட்சுமிக்கும், அவருக்கு உதவிய மற்ற எல்லாருக்கும் நான் நன்றி தெரிவிக்கிறேன்.

**ஆர். எஸ். சர்மா**
சேர்மன், வரலாற்று ஆராய்ச்சிக்கான
இந்திய மன்றம்

புது தில்லி,
28 பிப்ரவரி, 1977.

அரசியல் அறிவின் தொடக்கங்களைக்
கற்பித்ததோடு,
இந்திய மக்களையும், விடுதலைக்காகப் போராடும்
மக்கள் அனைவரையும் நேசிக்கவும்
கற்றுக் கொடுத்த

என் தந்தையார்

**உபேந்திர கிருஷ்ண தத்**

நினைவுக்கு

பிறப்பு: இந்தியா, கல்கத்தா,
அக்டோபர் 17, 1857

இறப்பு: இங்கிலாந்து, லெதர் ஹெட்,
மே 12, 1939



ரஜனி பாமி தத்

# அமெரிக்கச் சரித்திரம்

## 1. பூர்வ சரித்திரம்

வட அமெரிக்கக் கண்டத்தின் ஆரம்ப கால சரித்திரம் மர்மம் சூழ்ந்ததாக இருக்கிறது. பூர்வ குடிகளான இந்தியர்கள் வட ஆசியாவிலிருந்து அலாஸ்காவுக்கு வந்து, அங்கிருந்து சிறிது உஷ்ணமான பிரதேசங்களுக்குக் குடியேறியதாகக் கருதப்படுகிறது. கறுப்பு மயிரும், தாமிர நிறமும், தூக்கலான தாடை எலும்புகளும் கொண்ட இந்த அமெரிக்க இந்தியர்களின் தோற்றம் அவர்கள் கிழக்கத்திய நாடுகளைச் சேர்ந்தவர்கள் என்பதைக் குறிக்கிறது. வெகு சமீபத்திய பனியுக காலத்தில், அதாவது இருபதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், வட அமெரிக்காவும் ஆசியாவும், தற்சமயம் பேரிங் ஜலசந்தி உள்ள இடத்தில் இணைக்கப்பட்டிருந்தது என்ற தத்துவத்திற்கு விஞ்ஞானிகள் அதிக மதிப்புக் கொடுக்கின்றனர்.

அநேகமாக அமெரிக்கக் கடற்கரைகளைக் கண்ட முதல் வெள்ளையர்கள், வெல்ல முடியாத துணிவு நிறைந்த ஸ்காண்டிநேவியா தேசத்தைச் சேர்ந்த 'நார்ஸ்மென்' என்பவரே யாவர். இவர்கள் ஏறக்குறையக் கி. பி. 985-ஆம் ஆண்டில், கிரீன்லாந்துக்குச் செல்லுவதற்கு, வட்டமான ஒற்றைப் பாய்மர வர்த்தகக் கப்பல்களில், ஆர்க்டிக் கடலைத் துணிவுடன் கடந்தனர். இந்தப் பரந்த தீவிலிருந்து இவர்களுடைய கப்பல்கள் மேலும் மேற்கு நோக்கிச் சென்றன. கி.பி. 1000-ஆம் ஆண்டில் லீப் எரிக்ஸன் என்பவரும் மற்றோரும் இன்று அமெரிக்க ஐக்கிய நாடுகளாக (யுனைடெட் ஸ்டேட்ஸாக) விளங்கும் பிரதேசத்தில் இறங்கினர் என்பதற்குச் சிறிது ஆதாரம் இருக்கிறது.

# பொருளடக்கம்



முதல் பாகம்

## இந்தியா எப்படி இருக்கிறது, எப்படி இருந்திருக்கலாம்

## இரண்டாம் பாகம்

# இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி

## மூன்றும் பாகம்

# இந்தியாவின் அடிப்படைப் பிரச்னை-விவசாயப் பிரச்னை



## நான்காம் பாகம்

# கிளர்ச்சியில் இந்திய மக்கள்

ஞடோ, இப்பொழுது கான்சாஸ் என்று அழைக்கப்படும் பிரதேசத்தில் தங்கத்திற்காகத் தேடி அலைந்தார்.

பிற்கால அமெரிக்க ஐக்கிய நாட்டில் முதன் முதலாக, 1565-ஆம் ஆண்டில், பிளாரிடாவிலுள்ள செயின்ட் அகஸ்டின் என்னும் இடத்தில் நிரந்தரக் குடியேற்றப் பிரதேசம் ஸ்தாபிக்கப்பட்டது. கொள்ளையடிக்கத் திரியும் இந்தியர்களிடமிருந்தும் அந்நிய வல்லரசுகளின் சூறையாடல்களிலிருந்தும் கிராமத்தைப் பாதுகாக்க ஸ்பெயின் தேசத்தவர் பலமான கோட்டையொன்றைக் கட்டினர். ஏனெனில் பிரான்ஸ், இங்கிலாந்து, ஹாலந்து, ஸ்வீடன், போர்ச்சுகல் முதலிய நாடுகள், புது உலகத்தின்மீது மேலும் மேலும் சிரத்தை கொள்ள ஆரம்பித்ததே இதற்குக் காரணம். அவர்களுடைய கப்பல்கள் கூட, துறைமுகங்களில் நுழைந்தும், நதிகளில் புகுந்தும், எதிர்பாராது தென்பட்ட அந்த விசித்திரமான நிலப்பரப்பைக் குடியேற்ற வசதிக்கு ஏற்பப் படம் வரைந்தும் காட்டுமிராண்டிகள் வாழும் கடலோரங்களில் திரிந்தன. ஓர் ஆங்கிலக் கப்பலுக்குத் தலைமை வகித்த ஜான் காபட் என்ற இத்தாலியர், 1497-ஆம் ஆண்டில் அட்லாண்டிக் சமுத்திரத்தை. வட கோடி நோக்கிக் கடந்து ஜாக்கிரதையாக லாப்ரடாரையும், நியூ பவுண்டுலாந்தையும் சுற்றித் துருவினார். அவருடைய கடற் பிரயாணம், வட அமெரிக்கக் கண்டத்தின்மீது இங்கிலாந்து உரிமை கொண்டாட அடிப்படையாக அமைந்தது. வெர்ரா ஜானோ என்பவர், பிரெஞ்சு அரசாங்க ஆதரவில், 1524-ஆம் ஆண்டில், வட அட்லாண்டிக் கடலோரத்தை, கரோலினாவிலிருந்து நியூபவுண்டுலாந்து வரை ஆராய்ச்சி செய்தார். பிரான்ஸைச் சேர்ந்த ஜாக்வெஸ் கார்ட்டியர் என்பவரும், 1535-ஆம் ஆண்டில் செயின்ட் லாரென்ஸ் வழியாகக் கானடாவில் இப்பொழுது மாண்ட்ரீல் என்னும் இடம் வரை சென்றார்.

இதற்கிடையில், புது உலகில் சாம்ராஜ்யத்தைப் பிரிப்பதை முடிவு செய்ய உதவுவதற்கான சம்பவங்கள் நடந்து வந்தன. ஸ்பெயின் தேசத்துப் போர்க் கப்பல்கள் கரிபியனிலிருந்து (தென், மத்திய அமெரிக்கப் பிரதேசங்கள்) தங்கம் நிரப்பிக்கொண்டு வருவதை, இங்கிலாந்து வளர்ந்து

## ஆறும் பாகம்

## எதிர் காலம்

## இன்றைய இந்தியா

## 1970 ஆம் ஆண்டுப் பதிப்பின்

''இன்றைய இந்தியா'' முதன் முதலில் எழுதப்பட்டு ஒரு நூற்றுண்டில் மூன்றிலொரு பகுதி கழிந்து விட்டது; இந்தியாவில் இந் நூலின் முதல் பதிப்பு வெளிவந்து கால் நூற்றுண்டுக்கு மேலாகிறது. இடையிலுள்ள ஆண்டுகளில் இந்திய நாட்டின் விடுதலையைத் தொடர்ந்து, புதிய மாறுதல்களின் ஒரு சகாப்தம் நிகழ்ந்துள்ளது; ஒரு வகையில் புதிய வழிகாட்டி போன்ற இந்தப் புத்தகத்தில் எழுப்பப்பட்டுள்ள பல கேள்விகளுக்குப் புதிய பல ஆராய்ச்சிகள் புதிய விளக்கங்கள் காண வழி வகுத்துள்ளன. ஆகவே, ''இன்றைய இந்தியா''வை அக்காலத்து வரலாற்று நூலாகவே கருத வேண்டும்; பிரிட்டிஷாரின் இந்திய ஆட்சியைப் பற்றி மார்க்சீயக் கண்ணேட்டத்துடன் இந்த நூல் எழுதப்பட்டது; தேசீய இயக்கத்தையும் தொழிலாளர் வர்க்க இயக்கத்தையும் உள்ளிட்ட இந்திய மக்களின் போராட்டத்து வளர்ச்சியை நாடு விடுதலை பெறும் காலம் வரை இந்த நூல் விவரிக்கிறது. ஆயினும் இந்தப் புத்தகத்தை மக்கள் இன்றும் ஓரளவு வேண்டுகிருர்கள்; அந்தத் தேவையைப் பூர்த்தி செய்யும் பொருட்டே, 1947ஆம் ஆண்டில் வெளியிடப் பெற்ற முதல் இந்தியப் பதிப்பின் மறு பதிப்பு தயாரிக்கப்பட்டுள்ளது.

இந்தப் புத்தகம் 1947ஆம் ஆண்டின் பதிப்பையே பின்பற்றுகிறது. வேண்டுமென்றே யாதொரு மாறுதலும், திருத்தமும் செய்யப்படவில்லை; பிரிட்டிஷ் பதிப்பகத்தார் தணிக்கை செய்து நீக்கிய சில பகுதிகள் மட்டும் மீண்டும் இந்நூலில் முதன்முதலாகச் சேர்க்கப்பட்டுள்ளன; பிரிட்டிஷ் பதிப்பகத்தார் தணிக்கை செய்து நீக்கிய பகுதிகளைப்பற்றி சிறு விளக்கம் தருவது பயனுள்ளதாக இருக்கும்; பிரிட்டனில் இக் காலத்திலும் நடைமுறையில் உள்ள அரசியல் தணிக்கைமுறை பற்றி அறிய இந்த விளக்கம் உதவும்.

விக்டார் கொலான்ஸ் என்ற பதிப்பகத்தாரின் இடதுசாரிப் புத்தகக் கழகத்திற்காக 1936—39 ஆண்டுகளில் ''இன்றைய

இந்தியா"வின் கைப்பிரதி முதன் முதலில் எழுதப்பட்டது. 1936-ல் ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று. கனமான வேலை; சிறுசிறு பகுதி யாக அவ்வப்போது எழுத வேண்டியிருந்தது. அந்த ஆண்டுகளில் எனக்குப் பொறுப்புகளும் மிகுதி; டெய்லி ஒர்க்கர், லேபர் மந்த்லீ என்ற இரண்டு பத்திரிகைகளுக்கு அப்போது நான் ஆசிரியன்; கம்யூனிஸ்டுக் கட்சியின் அரசியல் குழுவில் உறுப்பினன்; 1937 தொடக்கத்தில் தொடங்கப்பட்ட ஐக்கிய முன்னணிக் கமிட்டியில் கிரிப்ஸ், பிவான், மாக்ஸ்டன், பிராக்வே, பாலிட் ஆகியோரோடு நானும் ஓர் அங்கத்தினன்; இந்தக் கமிட்டி முறையாகக் கூடிப் படிப்படியாகப் பல நடவடிக்கைகளை மேற் கொண்டது. இத் தகைய அலுவல்கள் காரணமாக இந்த நூலின் கைப்பிரதியை 1939-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில்—அதாவது, உலகப்போர் தொடங்கிய பிறகு—தர முடிந்தது. சேம்பர்லின்—டலாடியரின் 'போலிப்போர்' ஏகாதிபத்தியத் தன்மை வாய்ந்தது என்ற எங்கள் விளக்கத்தை ஏற்காத கொலான்ஸ், கம்யூனிஸ்டுக் கட்சியுடன் தமக்கிருந்த தொடர்பைத் துண்டித்துக் கொண்டார். அதன் விளைவாக, இந்தப் புத்தகத்தை வெளியிடாமலிருக்க அவர் முயன்றார்; ஆனால், ஒப்பந்தப்படி நடக்க வேண்டும் என்று நான் அவரை வற்புறுத்தினேன். சட்டப்படி இந்தப் புத்தகத்தை வெளி யிடுவது அபாயகரமானது என்று அவர் கூறினார். சட்ட பூர்வ மாகவே நான் புத்தகத்தை எழுதியிருப்பதாகவும், புத்தகத்தில் சட்ட வரம்பை மீறும் குற்றத்துக்கு ஆளாகும் பகுதிகளை அவர் சுட்டிக் காட்டினால் அவற்றைத் திருத்தி சட்ட வரம்புக்குட்பட்ட தாய் எழுதித் தருவதாகவும் நான் சொன்னேன்; அதன் பேரில் அவர் புத்தகத்தைத் தம் வழக்குரைஞரிடம் அனுப்பினார். வழக் குரைஞர் கைப்பிரதி முழுவதையும் படித்தார். சட்ட விரோத மாக ஒரு பகுதிகூடப் புத்தகத்தில் இல்லை என்று அவர் பதில் அளித்தார்; என்றாலும் மிகவன்மையாக உணர்ச்சி மூட்டும் விதத் தில் புத்தகம் எழுதப் பெற்றுள்ளது (''பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத் தைக் கவிழ்க்க வேண்டும் என்று தூண்டி மக்களைக் கொதித்தெழச் செய்யும் நேர்நோக்குடன் எழுதப்பட்டுள்ளது'') என்று கருத்து தெரிவித்தார். புத்தகத்தில் ஒரு பகுதியாவது அல்லது ஒரு வாக்கிய மாவது சட்ட விரோதமானது என்று வழக்குரைஞரால் கண்டிக் கப்படும் என்று எதிர்பார்த்த கொலான்ஸின் எண்ணம் கை கூடாமற் போகவே அவரே கைப்பிரதியைக் கண்காணிக்கத் தொடங்கினார். வெளியிட்டால் ஆபத்து என்று அவர் கருதிய பகுதிகளை எல்லாம் சிவப்புப் பென்சிலால் கோடிடலானார். 'புரட்சி' என்ற சொல் வரும்போதெல்லாம் சிவப்புப் பென்சில் அதைச் சுற்றி வந்தது; பதினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலாந் தில் நிகழ்ந்த தொழிற் புரட்சியைப் பற்றின குறிப்பைக்கூட அவ

ருடைய பென்சில் தீண்டியது. நாங்கள் இருவரும் சேர்ந்து ஒரு நீண்டநாள் கழித்தோம்; அவர் சிவப்புப் பென்சில் பிரயோகம் செய்யும் போதெல்லாம் நான் கடுமையாகப் போராடினேன்; ஆனுல், புத்தகம் வெளிவர வேண்டும் என்பதற்காகச் சுமார் நூறு இடங்களில் ஒரு பகுதியை நீக்கவோ அல்லது மாற்றி எழுதவோ நான் இணங்க வேண்டியதாயிற்று. ஆகையால்தான், இதுவரை வெளிவந்த பதிப்பில் 'மாறுதல்கள்', 'முடிவான மாற்றங்கள்' என்ற சொற்கள் அடிக்கடி வருகின்றன.

1947 ஆம் ஆண்டில் இந்தியாவில் திருத்தப்பெற்ற இரண்டாம் பதிப்பு வெளியிடப்பட்டது. (அதற்கு முன் இந்தியாவில் இப் புத்தகத்தைச் சட்ட பூர்வமாக அச்சிட்டு வெளியிட முடியவில்லை; எனினும், சட்ட விரோதமாக வெளியிடப்பட்ட பதிப்பும், மொழி பெயர்க்கப் பெற்ற பகுதிகளும் மக்களுக்கிடையில் சுற்றி வந்தன.) இப் பதிப்பு விரிவாக்கப்பட்டு, 1946ஆம் ஆண்டு வரை நிகழ்ந்த வரலாற்றையும் விவரித்தது; அந்த ஆண்டில் நான் இந்தியாவுக்கு விஜயம் செய்ததால் கிடைத்த அநுபவத்தால் சேகரித்த புதிய தகவல்களையும் இப் பதிப்பில் இணைத்தேன் (இந்தியாவில் நான் நுழையக்கூடாது என்ற தடையுத்திரவு அப்போதுதான் முதன் முறையாகத் தளர்த்தப்பட்டது). ஆனுல், இந்தப் புதிய தகவல்களைச் சேர்த்ததைத் தவிர மற்றபடி இப் பதிப்பும் 1940-ம் ஆண்டில் பிரிட்டிஷ் பதிப்பகத்தார் தணிக்கை செய்து வெளியிட்ட பதிப்பை அநுசரித்தே இருந்தது.

1947-ஆம் ஆண்டு இந்தியப் பதிப்பின் இந்த மறுபதிப்பு இப்போது வெளியாகும்போது அதைத் தயார் செய்கையில் கொலான்ஸ் தணிக்கை செய்வதற்கு முந்தைய மூலப் பிரதியை அதில் அவரால் செய்யப்பட்ட மாறுதல்களோடும், திருத்தங்களோடும் வெற்றிகரமாய்க் கண்டுபிடித்தேன். புத்தகம் ஓரளவு அச்சாகியிருந்தாலும், மூலக் கைப்பிரதி கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு குறிப்பிடத்தக்க எல்லா மாறுதல்களையும், செருகல்களையும் அனுப்பி வைத்தேன்; இவ்வாறு இப்பதிப்பில் சேர்க்கப்பட்டவை சுமார் ஐம்பது. ஆக, இங்கிலாந்துப் பதிப்பகத்தார் தணிக்கை செய்வதற்கு முந்தின அசல் கைப்பிரதியின் முழு புத்தகத்தின் முதல் பதிப்பு இந்தப் புத்தகம்.

ஒரு கேள்வி கேட்கப்படலாம்: 1970 ஆம் ஆண்டில் வெளியாகும் இந்தப் பதிப்பில், 1946 முதல் 1970 முடிய உள்ளதொரு காலகட்டத்தையும் பற்றி எழுத இந்த வாய்ப்பை ஏன் பயன்படுத்திக் கொள்ளவில்லை?

விடுதலைக்குப் பிந்தின, நவீன கால கட்டத்தில் நிகழ்ந்த மாறுதல்கள் பரவலானவை; இடைப்பட்ட பிரச்னைகள் நெடுங்

காலம் பாதிப்பவை; அவற்றைப்பற்றித் தனியாக ஒரு நூலே எழுத வேண்டுமேயன்றிப் பழையதொரு நூலில் அவற்றை ஒட்டுப் போட்டுச் சேர்க்க முடியாது என்பதே பதில். 1946 முதல் 1969 வரை நிகழ்ந்த நிகழ்ச்சிகளை விவரிக்க இந்த நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ள இரண்டு அத்தியாயங்களும் இந்த ஒட்டு வேலையைத் தெளிவாய்க் காட்டவே உதவும்; ஏனெனில், அதிகப் படியான விஷய ஞானத்தாலோ அல்லது மிகையான அநுபவத் தாலோ, பழைய பிரச்னைகள் புதிய உருவம் கொண்டதாலோ, இந்த நூலில் விவரிக்கப்பட்டுள்ள பொருள்களில் பெரும்பா லானவை பின்னோக்கினால் பாதிக்கப் பெறும். ஆகையால், தானே விதித்துக் கொண்ட அவசரச் சட்டத்தை மனதறிய ஏற்று 1947ஆம் ஆண்டுப் பதிப்பு, அதன் குறைபாடுகள் உட்பட அப்படியே பயன்படுத்தப்பட்டுள்ளது.

மொத்தத்தில், ஏகாதிபத்தியத்தின் ஆட்சி முறையையும், தேசியப் போராட்டமும் மக்கள் இயக்கமும் வளர்ச்சி பெற்றதை யும் இந்த நூலில் கையாண்ட விதமும் விளக்கமுறையும் காலத் தின் சோதனைக்கு இதுவரை ஈடுகொடுத்து உள்ளன. ஆனால் இந்த நூலில் கையாளப்பட்ட பல குறிப்பான பிரச்னைகள் பின்னநுபவத் தால் பாதிக்கப்பட்டுள்ளன அல்லது புதிய உருவம் ஏற்றுள்ளன; அவற்றைப்பற்றி இப்போது எழுதினால் வேறு முறையில்தான் எழுத வேண்டியிருக்கும். இதற்கு சில உதாரணங்கள் தரலாம்.

முதலாவதாக, காந்தியின் பங்கு பற்றி. அவருடைய பங்கின் உடன்பாடான தன்மையையும், எதிர்மறையான தன்மையையும் பற்றி இந்த நூலின் மதிப்பீடு, பின்னால் செய்யப்பட்ட வரலாற்று ஆய்வுக்கும், விவாதத்துக்கும் மொத்தத்தில் ஈடு தருவதாகவே அமைந்துள்ளது. தேசிய இயக்கத்தையும் காங்கிர ஸையும் அவற்றின் குறுகலான தடத்திலிருந்து விலக்கி முழு அளவு மக்களின் தேசிய இயக்கமாக அவர் உயர்த்தியதையும், மிகவும் பின்தங்கிச் செயலற்று இருந்த மக்கள் தேசிய உணர்வும், விழிப்பும் கொண்டு போராட்டத்தில் கலந்து கொள்ளுமாறு அவர் தூண்டியதையும் உரிய முறையில் இந் நூல் வலியுறுத்து கிறது; அதுவும், சில இடதுசாரி விமரிசகர்கள் ஒருதலைப்பட்ச மான கொள்கை இறுமாப்புடன் அவரை மக்கள் இயக்கத்தின் விரோதி என்றும், சில சமயம் பிரிட்டிஷாரின் கையாள் என்றும் பழித்த ஒரு காலத்தில் இந்த நூல் அவருடைய பங்கை உரிய முறையில் மதிப்பீடு செய்கிறது. அதே சமயத்தில் அவருடைய எதிர்மறையான பங்கையும் இந்த நூல் வலியுறுத்துகிறது: அஹிம்ஸையின் பெயரால் அவர் நிலப்பிரபுக்களுக்கும், செல்வங் களுக்கும் காவலராக இருந்ததையும், அவருடைய சமூக மித

வாதத்தையும், அவர் மேற்கொண்ட ஒவ்வொரு போராட்டமும் ஏகாதிபத்தியத்தையும், செல்வர்களையும் மிரள வைக்கும் புரட்சித் தன்மை கொண்டபோது அவர் போராட்டத்தை நிறுத்தியதையும் மக்கள் புரட்சி பற்றின அவர் அச்சத்தையும் இந் நூல் உரிய முறையில் வலியுறுத்துகிறது; ஏனெனில் அவரைப் பின்பற்றியவர்களில் பெரும்பாலோர் அவரை ஞான திருஷ்டி படைத்த, தவறு செய்யமுடியாத மகான் என்றும், தீர்க்கதரிசி என்றும் வணக்கத்துடன் துதி பாடுவது வழக்கமாயிருந்தது; இந்த மனப்பான்மை சில இடங்களில் இன்றும் நிலவி வருவதைக் காணலாம். ஆனால், முப்பதுகளின் பிற்பகுதியில் இந்த நூல் முதன் முதலில் எழுதப்பட்ட காலத்தில், காந்தியின் பங்கையும் கொள்கைகளையும் மதிப்பீடு செய்கையில் எழுந்த பிரச்னைகள் மிகவும் சர்ச்சைக்குரியனவாயிருந்ததால், விவரிக்கப்பட்டுள்ள தகவல்கள் சரியாக இருந்தாலும், அவற்றின் சர்ச்சைக்குரிய தன்மை இந்த நூலில் பிரதிபலிக்கிறது. இன்று இந்த வரலாற்று மாமனிதரை அமைதியாகவும் நேர்மையாகவும் மதிப்பீடு செய்வது பொருத்தமாக இருக்கும்; இந்த மதிப்பீடு மேலே விவரித்த விதத்திலேயே இருக்கும் என்றாலும் முன்னைவிட நேர்மையாக இருக்கும்; அவருடைய இறுதிக் காலத்தில் அவர் மிக உயர்ந்து நேர்த்தியாகச் செயல்பட்டு, மவுண்ட் பாட்டனின் தீர்வு தாம் வேண்டிய சுயராஜ்யத்தின் வெறும் வரி வடிவமே என்று கண்டித்ததையும், பின்னால் மூண்ட மதச் சண்டைகளையும் படுகொலையையும் தணிப்பதற்காகத் தம் உயிரைப் பற்றின அச்சமில்லாமல் ஈடுபட்டதையும், இந்த வகையில் அவர் கம்யூனிஸ்டுகளுடன் ஒத்துழைத்ததையும், கடைசியில் வலதுசாரி மத வெறியன் ஒருவனால் கொலையுண்டதையும் நேர்மையாக மதிப்பிட இயலும்.

மொழிப் பிரச்னை பற்றி '222 தனித்தனி மொழிகள்' என்ற ஏகாதிபத்தியப் பொய்மை இன்றும் செல்லுபடியாகும் என்றாலும், ''இந்தியாவின் பொது மொழியாக ஹிந்தி'' இருக்க முடியும் என்ற காங்கிரஸின் சுலபமான தீர்வை அமுல்படுத்த முனைந்தபோது எழுந்த கஷ்ட அனுபவங்களால் அத் தீர்வு விவாதத்துக்குரியதாகிவிட்டது; ''இந்தியாவில் மொழிகள் பிரச்னை நடைமுறையில் பன்னிரண்டு, பதின்மூன்று மொழிகளின் பிரச்னை'' என்று இந்த நூலில் கூறப்பட்டுள்ள முடிவு ஏறக்குறைய ஒரு சரியான மதிப்பீடாக இருக்கக் கூடும்.

''பல்லினக் கொள்கையும் பாகிஸ்தானும்'' என்ற பகுதி பாகிஸ்தான் ஒரு நாடாக நிறுவப்படாமல் ஓர் அரசியல் கோரிக்கையாக இருந்த காலத்தில் எழுதப்பட்டது. இந்தப் பகுதி எழுதப்

பட்டபோது மேற்கொள்ளப் பெற்ற நிலை பின்வருமாறு: அரசியல் துறையில் மதப் பூசல்களை வளர்த்து தேசீய இயக்கத்தைப் பிளவுபடுத்தவும், ஒடுக்கவும் முஸ்லீம் லீக்கை நிறுவத் தூண்டியதில் ஏகாதிபத்தியத்தின் பொறுப்பு; பெயரளவில் மதச் சார்பற்றது என்று கூறிக் கொண்டாலும் நடைமுறையில் தேசீயப் பிரசாரத்தை ஹிந்து சமயத்துடன் இணைத்து ஹிந்து—முஸ்லீம் ஒத்துழைப்புக்கு ஊனம் செய்த காங்கிரஸ் தலைமையின் பொறுப்பு; முஸ்லீம் லீக் பிற்காலத்தில் மக்களாதரவு பெற்று, இந்தியாவைப் பிரிவினை செய்து ஒரு தனிநாடு நிறுவவேண்டும் என்று கோரியது, இந்தியாவின் பல்லினத் தன்மையை முழுமையாகச் சுட்டிக் காட்டாவிடினும் ஏதோ ஒரு வகையில் பொய்யான இனக் கோரிக்கையையே காட்டுகிறது; தேசியத்தை மத அடிப்படையில் கணிப்பதைப் பிற்போக்குத் தன்மை வாய்ந்தது என்றும், பிளவு செய்வது என்றும், நாசகரமான தீய விளைவுகள் ஏற்படுத்துவது என்றும் இந்நூல் பகுதி கண்டிக்கிறது.

அப்பால் பாகிஸ்தான் நாடு நிறுவப்பட்டு விட்டது; 1956இல் ''இஸ்லாமியக் குடியரசு'' என்று பிரகடனம் செய்யப்பட்டு இருபது ஆண்டுகளாய் இருந்து வருகிறது. புதிய நாட்டின் எல்லைக்குள்ளேயே மக்கள் போராட்டம் துவங்கியுள்ளது. இந்த விவரங்கள் ஆய்வு செய்யப்பட்டுள்ள முறை சரியானதே. பாகிஸ்தான் ஏற்படுத்தப் பெற்ற அடிப்படையும், அதனுடைய குறுகிய ஆட்சி வட்டாரமும் நிலையாமற் போனதே இந்தச் சூறுவளி ஆண்டுகளில் காணலாம்; இடையீடு இல்லாத அமைதியின்மை, அடக்குமுறை, 1958 முதல் ராணுவச் சட்ட அமுல், அயூப்கானின் தலைமையில் ராணுவ சர்வாதிகாரம்; இதை எழுதுகையில் இந்தச் சர்வாதிகாரம் நெருக்கடி ஏற்பட்டு, அயூப்கான் வீழ்ச்சியுற்று மேற்குப் பாகிஸ்தான் கிழக்குப் பாகிஸ்தானின் ஆட்சியை எதிர்த்துச் செய்யும் மக்கள் புரட்சியாக உருவெடுத்துள்ளது.

''எதிர்காலம்'' என்ற கடைசி அத்தியாயம் 1946 ஆம் ஆண்டில் எழுதப்பட்டபடியே மீண்டும் அச்சிடப்பட்டு உள்ளது. விடுதலை நெருங்கிய காலத்தில் விடுதலை வெற்றியின் எதிர்கால விளைவுகளை மதிப்பீடு செய்யும் முயற்சியாக இந்த அத்தியாயம் சிறிது சுவாரசியமாயிருக்கும். பின்னால் நடந்த நிகழ்ச்சிகளை வைத்து நோக்குகையில் இதன் முக்கியமான கருத்துக்கள் பொருட் செறிவு வாய்ந்தவை. முதலாவதாக, தான் வழங்கிய சுதந்திரத்திற்கு ஆரம்பத்தில் வரையறை நிபந்தனைகள் விதித்து தன்னால் இயன்ற அளவு ஆதிக்கம் செலுத்த ஏகாதிபத்தியத்தின் பின்னணி முயற்சிகள்; இந்த முயற்சிகள் தோல்வி பெறவே,

''புதிய யுகத்தில், இந்தியக் கொடி பறந்தாலும் மெய்யான ஆதிக்கமும் முடிவான அதிகாரமும், சுரண்டலின் லாபங்களும் முடிந்தவரை பிரிட்டிஷ் முதலாளித்துவத்தின் கையில் இருக்க வேண்டும்'' என்ற நோக்கோடு பிரிட்டனின் முதலீட்டு மூலதனத்தைக் காத்துக்கொள்ளவும், முடிந்தால் அதை விரிவு படுத்தவும் ஏகாதிபத்தியத்தின் பின்னணிப் படை செய்த முயற்சிகள். இரண்டாவதாக, ஏகாதிபத்தியத்தின் இந்த இறுக்கமான பிடி தொடருவதிலிருந்து மீள்வதற்காக இந்திய மக்கள் நடத்திய போராட்டத்தின் முன்னேற்றம்; இந்தப் போராட்டத்திற்கும் சமூக, பொருளாதாரப் புனர் நிர்மாணம், ஆழ்ந்து வரும் விவசாய நெருக்கடி, வர்க்க உறவுகள் ஆகியவற்றுக்கும் இடையிலுள்ள பிரிக்க முடியாத தொடர்பு. மூன்றாவதாக, பல்வேறு வகைப்பட்ட பூர்ஷ்வாக்களின் பங்கும் சுதந்திரம் பெற்றபின் இந்திய நாட்டின் முன்னுள்ள வேறுபட்ட பாதைகளும்: (அ) மிதவாத சக்திகளின் பாதை; (ஆ) இந்திய நாடு பொருளாதார முறையில் முதலாளித்துவ நாடாக உருவாக வேண்டும்; முடியுமானால் ''இந்திய சோஷலிஸம்'' என்ற முத்திரையோடு கட்டுப்படுத்தப்பட்ட முதலாளித்துவ நாடாக வேண்டும் என்று தேசீய பூர்ஷ்வாத் தலைமை காட்டும் பாதை; இறுதியாக, (இ) ஜனநாயகப் புரட்சியை நிறைவேற்றி, ஏகாதிபத்தியத்தை விலக்கி, நிலப்பிரபுத்துவ முறையை ஒழித்து, பொருளாதாரத்தின் உயிர் நாடிகளான தொழிற்பகுதியைத் தீவிரமாய்ப் புனர் நிர்மாணம் செய்து, பின்தங்கிய நிலைமைக்கும் வறுமைக்கும் முடிவு கண்டு, இவ்வாறு சோஷலிஸத்தின் உண்மையான வளர்ச்சிக்காக அஸ்திவாரமிடத் தொழிலாளர் வர்க்கமும், குடியானவர்களும், மக்கள் சக்தியும் காட்டும் பாதை.

மேற்கண்ட கண்ணோட்டத்தோடு இந்த நூல் எழுதப்பெற்றபின் கழிந்த இருபத்திரண்டு ஆண்டுகளில் கிடைத்த அனுபவத்தால், இந்த நூலில் பொதுப்படையாகக் கூறப்பட்டுள்ள பெரிய பிரச்னைகள் அதிகப்படியான விவரங்களாலும், சிக்கல்களாலும், பெரு மனிதர்களின் தலையீட்டாலும் மேலும் வளர்ந்துள்ளன.

1947 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் நாள் முதலில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடாக சுதந்திரம் பெற்ற இந்திய நாடு 1950 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் இருபத்தாறும் நாள் இந்தியக் குடியரசாகப் பிரகடனம் செய்ததை உலக வரலாற்றில் ஒரு எல்லைக் கல்லாகவும் இந்திய மக்கள் பல தலைமுறைகளாய் நடத்தி வந்த போராட்டத்தின் பயனாகவும் கருதலாம். இந்த வெற்றியை உலக மக்களின் முன்னேற்றத்தில் முதல் பகுதியாகவும், சோவியத் யூனியனின் பின்னணிப் பாதுகாப்புப் படை

யாக நிற்க, பல நாட்டு மக்களின் உலக விடுதலை முன்னணி 1945 ஆம் ஆண்டில் அச்சு நாடுகளின் பாசிஸத்தை எதிர்த்து நடத்திய போராட்டத்தில் பெற்ற வெற்றியைத் தொடர்ந்து, தேசீய விடுதலை இயக்கமும், சோஷலிஸமும் பெற்ற வெற்றி எனலாம். சீனத்து மக்களின் புரட்சி 1949 ஆம் ஆண்டில் வெற்றி பெற்றதோடு பழைய காலனி ஆட்சி முறைக்கு மரண அடி அடித்தாகி விட்டது; இனி திருப்ப முடியாத அளவு உலகத் தராசு மாறிவிட்டது.

ஆயினும், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி முடிவுற்றது என்பதன் பொருள், ஏகாதிபத்தியம் தன் செல்வாக்கைப் பயன்படுத்துவதை நிறுத்திக் கொண்டது என்பதோ அல்லது சுதந்திரத்துக்குப் பிறகு இந்தியாவைச் சுரண்டுவதால் தனக்குக் கிடைக்கும் ஆதாயத்தைக் காத்துக் கொள்ள முடியவில்லை என்பதோ அல்ல; அப்போது பிரிட்டிஷ் வைசிராயாக இருந்த மவுண்ட் பாட்டன் பிரபுவின் முன்னிலையில் 1947 ஆம் ஆண்டு ஏற்பட்ட தீர்வில் இது எதிர்மறையாகப் பிரதிபலிக்கிறது; பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் எப்போதும் வளர்த்து வந்த மதப் பூசல் அப்போது மிகக் கடுமையாக இருந்ததைப் பயன்படுத்திக் கொண்டு சுதந்திரத்தையும் இந்தியா-பாகிஸ்தான் என்ற இரு நாடுகளாக நாட்டைப் பிரிவினை செய்வதை ஏற்பதையும் இணைக்க அத்தீர்வு வழிசெய்தது.

மவுண்ட் பாட்டனின் 1947 ஆம் ஆண்டுத் தீர்வுதான் இந்திய சுதந்திரத்தை சட்டபூர்வமாக அங்கீகரிக்கும் ஏற்பாடாகும்; உண்மையில் ஏகாதிபத்தியத்திற்கும் தேசீயக் காங்கிரஸ், முஸ்லீம் லீகின் உயர் தலைமையினருக்குமிடையில் பல வேற்றுமைகளுக்கு இடையில் மக்கள் புரட்சி பற்றின அச்சம் என்ற ஒற்றுமை இருந்த காரணத்தால் இவர்கள் கண்ட சமாதானத் தீர்வே அது. சம்பிரதாய பூர்வமான, அதிகார பூர்வமான பொய்மைக்கு மாறாக இந்தியாவும், பாகிஸ்தானும் பெற்ற சுதந்திரம் காந்தீய உத்தியாகிய அஹிம்ஸையின் வெற்றியோ, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் தத்துவ பரமான 'நன்கொடை'யோ அல்ல.

அது அஹிம்ஸையின் வெற்றி அல்ல. 1946 இல் ஏற்பட்ட மக்கள் எழுச்சி அடர்ந்து ராயல் இந்தியக் கப்பற்படையினர் யூனியன் ஜாக் கொடியை நீக்கி காங்கிரஸ், முஸ்லீம் லீக் கொடிகள், சிவப்புக் கொடி ஆகிய மூன்று கொடிகளையும் ஒருங்கே பறக்கவிட்ட நிகழ்ச்சியாக ஓங்கி, மற்றப்படைகளிலும் கிளர்ச்சி பரவி, பெருவேலை நிறுத்தங்களும் தெருச் சண்டைகளுமாக வளர்ந்ததால்தான் ஏகாதிபத்தியம் அவசர அவசரமாகப் பின்வாங்கக் கட்டாயப் படுத்தப்பட்டது. 1946, பிப்ரவரி 19 இல் இந்தியாவுடன் புதுவுறவு பற்றின அட்லி அறிக்கை வெளிவந்ததும், இந்திய சுயாட்சிக்கு வழி

வகுக்கப் பேச்சு வார்த்தைகள் நடத்தத் தீர்மானித்ததும், பிப்ரவரி 18 ஆம் நாள் கப்பற் படையினர் கலகம் செய்த ஒரே நாளுக்குள் தான். ஆனால், இந்த மக்களின் வெற்றி காங்கிரஸின் தலைமையில் நடைபெற்றதல்ல; பழைய காங்கிரஸின் அஹிம்ஸைப் போராட்டங் களும்—அவற்றில் பெரும்பாலானவை வெறும் தோல்விகளாய் முடிந்தன—இதற்கும் யாதொரு ஒற்றுமையும் இல்லை—மாறாக, காங்கிரஸ் தலைவர்களும், முஸ்லீம் லீக் தலைவர்களும் மக்களின் இந்த எழுச்சியைக் கண்டு அஞ்சினார்கள். அதை அடக்குவது எப்படி என்று அவர்கள் பிரிட்டிஷ் படைத் தலைவரையும் அதிகாரி களையும் நாள்தோறும் கலந்து ஆலோசித்தார்கள். அவர்கள் அதை அஹிம்ஸைக்கு விரோதமாகவும் ஹிந்து முஸ்லீம் ஒற்றுமைக்குப் பாதகமாகவும்செய்யப்பட்ட பாவம் என்று பகிரங்க மாக வருத்தம் தெரிவித்து, உடனே சரணடையும்படி அவசர அறிக்கைகளை வெளியிட்டார்கள். இவ்வாறாக நீண்ட பேச்சு வார்த்தைகள் தொடங்கி 1947 ஆகஸ்டில் கண்ட சமாதானத் தீர்வாக முடிந்தது. தலைமையினர் ஒத்துழையாதது மட்டுமல்ல; சில சமயம் தேசீயப் பூர்ஷ்வாக்கள் விரோதபாவம் காட்டியதால் மக்களின் புரட்சித் துடிப்பு ஏமாற்றமுற்றது; அதே சமயத்தில் நாட்டை நடத்திச் செல்லப் போதுமான அளவு வளர்ச்சி பெற்ற வேறு அரசியல் தலைமையும் இல்லாததால் மக்களின் புரட்சிச் சக்திகள் குரூரமான ஜாதிப் படுகொலைகளாகத் தடம் புரண்டன; திட்டமிட்ட ஜாதி அல்லது மத அடிப்படையில் இந்தியாவைப் பிரிவினை செய்வதற்குப் பூர்வாங்கமாக நடந்து வந்த நீண்ட பேச்சு வார்த்தைகளின் ஜாதி அரசியல் தன்மை இந்தப் படுகொலைகளுக்கு ஊக்கம் அளித்தன. இவ்வாறாக, உண்மையில் இந்திய சுதந் திரத்துக்குக் காரணமான, 1946-47 ஆம் ஆண்டுகளில் மக்கள் செய்த புரட்சியின் பயனை, அந்தப் புரட்சியை எதிர்த்து ஏகாதி பத்தியத்துடன் நெருங்கி ஒத்துழைத்த காங்கிரஸ், முஸ்லீம் லீகின் மேல்மட்ட பூர்ஷ்வா தலைமையினர் அடைந்தனர். சுதந்திரத்தின் தோற்றத்திற்கு முரண்பட்ட இத் தன்மை பிற்காலத்தில் ஏற்பட்ட பல கஷ்டங்களுக்கு வித்திட்டது.

சுதந்திரம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஒரு 'நன்கொடை' யும் அல்ல; 1947, மார்ச் 5 ஆம் நாள் பார்லிமெண்டில் கிரிப்ஸ் விடுத்த அறிக்கையில் பிரிட்டிஷ் அரசின் நோக்கம் மிகத் தெளிவாய்க் குறிப்பிடப்பட்டு உள்ளது:

> ''நம்மை எதிர்ப்பட்ட மாற்று யோசனைகள் என்ன? இந்த மாற்று யோசனைகள் அடிப்படையில் இரண்டு. முதலாவது, இந்தியக் காரியதரிசியின் உத்தியோக வர்க்கத்தை விரிவுபடுத்துவது, பிரிட்டிஷ் ராணுவத் துருப்பு

களை ஏராளமாக அனுப்புவது என்ற அடிப்படையில் இந்தியா வின் மீது உள்ள நம் ஆதிக்கத்தை வலுப்படுத்திக் கொள்ள முயலலாம். இக் கொள்கையை மேற் கொண்டால் இந்தியா வில் நாம் இன்னும் பதினைந்து முதல் இருபது ஆண்டுகள் இருக்க வேண்டும் என்ற தீர்மானமான முடிவுக்கு வர வேண்டும்.

''இரண்டாவது யோசனை, முதல் யோசனை காரிய சாத்தியமானது அல்ல என்ற உண்மையை நாம் ஒப்புக் கொள்ள வேண்டும்.''

ஆகவே, இரண்டு மாற்று யோசனைகள் என்பது உண்மையில் ஒன்றே ஒன்றுதான். இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தை நீடிக்க ''ஏராளமான பிரிட்டிஷ் துருப்புகளை அனுப்புவது'', ''காரிய சாத்தியமானது அல்ல.'' அறுபது லட்சம் மலேயர் களுக்கு எதிராக அதே பிரிட்டிஷ் அரசு பிரிட்டிஷ் துருப்புகளை அனுப்பி பல ஆண்டுகள் கடும் போரிட்டு அந்த மக்களின் சுதந்திர இயக்கத்தை முறியடிக்கத் தயங்கவில்லை. ஆனால், நாற்பது கோடி மக்களுக்கு எதிராக—அதுவும், மக்களின் எழுச்சி ராணுவத்திலும் பரவிய பிறகு—நாட்டை விட்டு வெளியேறி தேசீய இயக்கத் தலைமையினரோடு இயன்றவரை சிறந்ததொரு சமரசம் செய்து கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை. மவுண்ட் பாட்டனின் செயலகத்தில் தலைமை அதிகாரியாக இருந்த இஸ்மே இந்தக் கட்டாய வெளியேற்றத்துக்கான தன் கருத்தைப் பின்வருமாறு தெரிவிக்கிறார் (ஆலன் காம்ப்பெல் ஜான்ஸன் பதிப்பகத்தார் வெளியிட்ட ''மவுண்ட் பாட்டனோடு தூது'' என்ற புத்தகத்தி லிருந்து):

''வெடி மருந்துக் கிடங்குள்ள கப்பல் நடுக்கடலில் தீப்பற்றிக் கொண்டது போன்ற நிலைமையில் 1947, மார்ச்சில் இந்தியா இருந்தது. நெருப்பு வெடி மருந்தை நெருங்குமுன்பு அதை எப்படி அணைப்பது என்பதே அப்போது எங்கள் பிரச்னை. உண்மையில், நாம் அப்போது செய்ததைத் தவிர வேறொன்றும் செய்ய வழி இல்லை.''

பரவலான மக்கள் புரட்சி முன்னேறக் கூடாது என்கிற பொது வான அக்கறையுள்ள ஏகாதிபத்தியமும், தேசீய பூர்ஷ்வாக் களும் கண்ட மவுண்ட் பாட்டன் தீர்வின் சமரசத் தன்மை காரணமாக, அரிதில் பெற்ற சுதந்திரத்துக்கு வரையறையும் நிபந்தனைகளும் விதிக்கப்படுவது இன்றியமையாததாகி விட்டது. தான் கனவு கண்ட சுயராஜ்யம் இது அல்ல என்று காந்தி அதை ஏற்கவில்லை. 1947, ஆகஸ்டில் நடந்த சுதந்திர விழாக் கொண்டாட்டங்களில் அவர் கலந்து கொள்ள

மறுத்ததை அவருடைய வரலாற்றாசிரியர் பின் வருமாறு வருணிக்கிறார்:

''நாடு முழுவதும் திருவிழாக் கொண்டாட்டமாக இருந்தது. அந்நியர் ஆட்சியிலிருந்து இந்தியாவை விடுவிக்க மற்ற யாரையும் விட முக்கியக் காரணமாக இருந்தவர் இந்தக் கொண்டாட்டத்தில் கலந்து கொள்ளவில்லை. இந்திய அரசின் செய்தி, ஒலிபரப்பு துறை அதிகாரி ஒருவர் காந்தியைச் செய்திக்காக அணுகிய போது ''தான் ஓடி விட்டதாக'' அவர் பதில் கூறினார். செய்தி தராவிட்டால் நன்றாயிராது என்று வற்புறுத்தப்படவே, ''செய்தி ஒன்றுமே யில்லை என்பது கெட்டதானால், அப்படியே இருக்கட்டும்'' என்று அவர் மறுமொழி கூறினார்.''

(டி. ஜி. டெண்டுல்கர்; மஹாத்மா மோகனதாஸ் கரம் சந்த் காந்தியின் வாழ்க்கை வரலாறு. மூன்றாம் தொகுதி; பக்கங்கள் 95-6)

கொலையுண்டதற்கு நான்கு நாட்களுக்கு முன்னர், 1948 சுதந்திர தினத்தன்று தம்முடைய ஏமாற்றத்தை அவர் பின்வரும் சொற்களில் குறிப்பிட்டார்:

''ஜனவரி 26ஆம் நாளான இன்று சுதந்திர தினம். சுதந்திரத்தைக் காணாமலும் கையாளாமலும் நாம் அதற்காகப் போராடிவந்த காலத்தில் இந்த நாளை நாம் கொண்டாடியது மிகப் பொருத்தம். இப்போது நாம் சுதந்திரத்தை பெற்றுக் கையாண்டுவிட்டோம், ஏமாற்றம் கொண்டுவிட்டோம். உங்களுக்கு எப்படியோ, குறைந்த பட்சம் எனக்கு ஏமாற்றமே.''

(மேலே குறிப்பிட்ட புத்தகம்: மூன்றாம் தொகுதி, பக்கம் 333.)

இந்தச் சமாதானத் தீர்வுக்காகக் கொடுத்த விலையில் கனமான பகுதி, இந்தியாவைத் தேசீய அடிப்படையில் அல்லாமல், சமயத்தைத் தேசீயத்துக்குச் சமனாக்கிச் சமய அடிப்படையில் இந்தியா, பாகிஸ்தான் என்ற இரு தனிநாடுகளாகப் பிரிவினை செய்ததுதான். சம்பந்தப்பட்ட ஹிந்து, முஸ்லீம் இரு மதத்தினரும் இந்தியாவின் ஒவ்வொரு பகுதியிலும் கூடி வாழ்ந்ததால் செயற்கையான எல்லைகள் வகுத்து இந்தப் பிரிவினையைச் செய்ய வேண்டியிருந்தது (இடையில் ஓராயிரம் மைல் இந்தியப் பகுதியுள்ள இரண்டு பாகங்களாய் பாகிஸ்தான் உருவாயிற்று); அதன் விளைவாகப் பெருவாரியான மக்கள் பரிவர்த்தனை, ரத்த சேதம், ஜாதிப் படுகொலைகள், பெரிய அளவில் அகதிகளின் நடமாட்டம்,

இரண்டு நாடுகளுக்கும் இடையில் இருந்த கடுமையான பூசலினால் தொடக்க காலம் முழுவதும் அவற்றின் பட்ஜெட், ராணுவச் செலவுகளால் வற்றியதும் அல்லாமல், ஏகாதிபத்தியத்தின் ஊடுருவலுக்கும் இடம் கொடுத்தது. இந்தப் பூசல், ஆரம்பத்திலேயே காஷ்மீர் பற்றின போராக வெடித்த சமயம் இரு நாடுகளின் பிரிட்டிஷ் படைத் தலைவர்கள் தங்கள் நாட்டுக்குத் திரும்பவில்லை. இருபது ஆண்டுகளுக்குப் பிறகு, 1965இல் மறுபடியும் இந்தப் போர் மூண்டது; சோவியத் யூனியனின் தலையீட்டினால் நிலையில்லாததொரு போர் நிறுத்தம் ஏற்பட்டது. அயர்லாந்திலும், பிரிட்டிஷ் காலனியாட்சியிலிருந்து வெளியேறிய மற்ற நாடுகளிலும் நடைபெற்றது போலவே பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் விடைபெறும் போது வழங்கிய பரிசான நாட்டுப் பிரிவினையால் தேசீய சுதந்திரம் நிறைவு பெறாமல் மக்கள் முன்னேற்றம் பலவீனப் படுவதுடன் பிரிவினையைப் பயன்படுத்திக்கொண்டு இரு நாடுகளுக்கும் இடையில் பகைமையை வளர்த்துச் சுரண்டல் செய்வதற்கு ஏகாதிபத்தியம் வழி செய்து கொண்டது.

மவுண்ட் பாட்டன் தீர்வின் சமரசத் தன்மையின் மற்றொரு எதிர்மறை விளைவாக, இரண்டு நாடுகளும், தனித்தனி இறைமை வாய்ந்த சுதந்திர நாடுகள் என்று அங்கீகரிக்கப்பட்டாலும் தேசீய பூர்ஷ்வாக்களின் தலைமையில் பழைய ஏகாதிபத்திய ஆட்சி முறையே பெருமளவில் தொடர்ந்தது. ஏகாதிபத்தியத்தின் நிர்வாக யந்திரம் அப்படியே ஏற்கப்பட்டதோடு, தொடர்ந்தும் செயல்பட்டது; அதே உத்தியோக வர்க்கம், நீதிமுறை, பழைய ஏகாதிபத்தியத்தின் ஏஜெண்டுகளும் ஊழியர்களுமான போலீஸ்; அதே அடக்கு முறைகள், நிராயுதபாணிகளான மக்கள்மீது போலீஸ் சூடு, தடியடிப் பிரயோகம், பொதுக் கூட்டங்களுக்குத் தடை, செய்தித் தாள்களை ஒடுக்குதல், குற்றச்சாட்டோ விசாரணையோ இல்லாமல் சிறையிடுதல், ஏகாதிபத்தியத்திற்கு இந்தியாவிலிருந்த அபரிமிதமான நிலுவைகளும், முதலீடுகளும், பொருளாதார நலன்களும் மிக உறுதியாகக் காக்கப் பெற்றதுடன் ஏகாதிபத்தியச் சுரண்டலும் தொடர்ந்து நடைபெற்றது. ஆரம்ப காலத்தில் ஏகாதிபத்தியத் தலைமைப் பீடத்திடமே ராணுவ நிர்வாகம் இருந்தது. பிரிட்டிஷ் படைத்தலைவர், ராணுவ ஆலோசகர்கள், இரண்டு படைகளிலும் பணியாற்றும் நூற்றுக் கணக்கான அதிகாரிகள்; ராணுவ சேவைப் பயிற்சிகள் பிரிட்டனில் நடைபெற்றன. ஆரம்பத்தில் பிரிட்டிஷ் கவர்னர் ஜெனரலே இந்திய யூனியனின் தலைவராக ஒப்புக் கொள்ளப் பட்டார்; இரண்டு குடியேற்ற நாடுகளிலும் முக்கியமான மாகாணங்களில் பிரிட்டிஷ் கவர்னர்களே தொடர்ந்து பதவி வகித்தார்கள்.

இந்த ஆரம்ப கட்டத்தில், போராட்ட உணர்ச்சிகள்கொண்ட தொழிலாளர் வர்க்கத்தையும், குடியானவர்களின் சீற்றத்தையும் ஒடுக்கப் பெரும் தாக்குதல் நடந்தது. 1949இல் அகில இந்தியத் தொழிற் சங்கக் காங்கிரஸ் 25,000 தொழிலாளர்களும், குடியானவத் தலைவர்களும் சிறையிலிருப்பதாய் அறிவித்தது; அவர்களில் பெரும்பாலோர் குற்றச்சாட்டோ, விசாரணையோ இன்றிச் சிறைப்பட்டவர்கள். புதிய இந்திய அரசின் அதிகார பூர்வமான அறிக்கைப்படி, அதனுடைய மூன்ருண்டு ஆட்சிக் காலத்தில், 1947 ஆம் ஆண்டு ஆகஸ்டு 15இலிருந்து 1950 ஆகஸ்டு 1 வரை, அதன் போலீஸ் அல்லது ராணுவம், குறைகளை வெளியிடுவதற்காகக் கூடிய மக்கள் கூட்டத்தின்மீது 1982 தடவைக்குக் குறையாமல் துப்பாக்கிப் பிரயோகம் செய்தது, 3784 பேரைக் கொன்றது, சுமார் 10,000 பேரைக் காயப்படுத்தியது, 50,000 பேரைச் சிறையிட்டது, சிறையிலிருந்த கைதிகளில் 82 பேரைச் சுட்டுக் கொன்றது.

ஆயினும், 1947ஆம் ஆண்டு மவுண்ட் பாட்டன் தீர்வும், பழைய ஏகாதிபத்திய ஆட்சி முறையையும் நிர்வாக யந்திரத்தையும் அப்படியே ஏற்றுக்கொண்ட புதிய ஆட்சி முறையும் இந்த எதிர்மறைத் தன்மைகள் கொண்டிருந்த போதிலும், மிகப் பெரிய, உடன்பாடான நல்ல விளைவுகளைச் சாதித்ததை நாம் கவனியாமல் இருந்துவிடக் கூடாது. ஜனநாயகப் புரட்சியின் சில அரிய பணிகளை நிறைவேற்றியதையும், உள்நாட்டுச் சீர்திருத்தங்கள் பொருளாதாரச் சீரமைப்பின் தொடக்கத்தையும், தேசீய பூர்ஷ்வாவின் தலைமையில், குறிப்பாக நேரு பிரதம மந்திரியாக இருந்த, சுதந்திரத்துக்குப் பிந்தின பதினைந்து ஆண்டுகளில் இந்தியாவின் சர்வ தேசீயப் பங்கில் ஏற்பட்ட பெருமாறுதலையும் குறிப்பிடலாம்.

இந்தியா மதச் சார்பற்ற ஒரு ஜனநாயக நாடாக நிறுவப்பட்டது; 1950 முதல் அது ஒரு குடியரசு; வயது வந்தோருக்கு வாக்குரிமை; பார்லிமெண்ட் நிர்வாகம்; பற்பல கட்சிகள் போட்டியிட்ட தேர்தல்கள்; (அரசின் விசேஷ அதிகாரப் பிரயோகம் போலீஸ் நடவடிக்கைகள் என்ற எதிர்மறை விளைவுகள் ஒருபுறம் இருக்க)உயர்ந்த அளவு பேச்சுச் சுதந்திரம்,பத்திரிகைச் சுதந்திரம், கூட்டங்கள் கூடுவதற்கும், சங்கங்கள் அமைப்பதற்கும் சுதந்திரம் ஆகிய அம்சங்கள் உடையது இந்தியக் குடியரசு. குறிப்பிடத்தக்க சில விதிவிலக்குகள் இருந்தன. கேரளத்தில் ஒரு கம்யூனிஸ்டு அரசு தேர்ந்தெடுக்கப்பட்டபோது மத்திய அரசு 1959இல் அதை வீழ்த்தியது. ஆனல் பொதுவாகப் பார்க்குமிடத்து, மிகப்பெரிய பலவகைப்பட்ட நாற்பது கோடி (இப்போது ஐம்பது கோடி)

மக்களை—பெரும்பாலோர் படிப்பு இல்லாதவர்களை—கொண்ட புதிதாய் சுதந்திரம் பெற்ற ஓர் ஆசிய நாட்டில் பூர்ஷ்வா பார்லிமெண்டரி ஜனநாயகம் செயல்பட்ட விதத்தை ஒரு பெரும் சாதனை என்றே கூறவேண்டும். பாகிஸ்தானில் இத்தகைய சாதனை ஏதும் கிடையாது; அங்கே ஒரு சில பணக்கார பெரிய நிலப்பிரபுக்களின் குடும்பங்களும், அவர்களைச் சார்ந்து மேற்குப் பாகிஸ்தானில் இருந்த அதிகார வர்க்கத்தினரும், மேல்மட்ட ராணுவத்தினரும் மக்களின் ஜனநாயக அபிலாஷைகளை அடக்கி, கிழக்குப் பாகிஸ்தானை அடிமைப் பிரதேசம்போல் நடத்திச் சுரண்டல் செய்து வந்ததால் அங்கு பலவீனமாயிருந்த பார்லிமெண்டரி ஆட்சிமுறை விரைவில் அகற்றப்பட்டு, வெளிப்படையான ராணுவ சர்வாதிகார ஆட்சி ஏற்பட்டுவிட்டது.

தேசியப் புரட்சிக்கு எதிராக ஏகாதிபத்தியத்திற்குப் பேராதரவாயிருந்த மன்னர்களின் ஆட்சியிலிருந்த சமஸ்தானங்கள் சுயேச்சை நாடுகளான இந்தியாவிலும், பாகிஸ்தானிலும் செயல்பட முடியாதவாறு விரைவில் அழிக்கப்பட்டன; பொது நாட்டமைப்புடன் அவை சேர்க்கப்பட்டன என்றாலும் மன்னர்கள் தங்கள் பட்டங்களைத் தொடர்ந்து வைத்துக் கொள்ள அநுமதிக்கப்பட்டதுடன் அவர்களுக்குப் பெருந் தொகைகள் மானியமாக வழங்கப் பட்டதால் அவர்கள் பிற்காலத்தில் அரசியலில் பிற்போக்குவாதிகளாய்ப் பங்கு கொள்ள வாய்ப்பு அளிக்கப் பட்டது; இந்தியாவில் சுதந்திரா கட்சியின் தோற்றத்தை உதாரணமாய்க் கூறலாம்.

இந்தியாவின் குடியுரிமைகளில் ஜாதிப் பாகுபாடுகளைச் சட்ட பூர்வமாக ஒழித்ததும் அடங்கும்; குறிப்பாக ஹிந்து சம்பிரதாய சமூக அமைப்பினால் தாழ்த்தப்பட்ட பல லட்சக் கணக்கான 'தீண்டத் தகாதவர்களுக்கு' விரோதமான போக்கைக் கூற வேண்டும்; ஆனால், அவர்களுடைய உரிமைகள் சட்டபூர்வமாக ஏற்கப்பட்டாலும் இந்தியாவின் பல பகுதிகளில் நடைமுறை வேறுவிதமாகவே இருந்தது.

விவசாயச் சீர்திருத்த நடவடிக்கைகள் மேற் கொள்ளப் பட்டன; அவை விவசாய நெருக்கடியைத் தீர்க்கவில்லை; நிலப் பிரபுத்துவ முறையை அழிக்கவில்லை; உழுபவனுக்கே நிலத்தை உடைமையாக்கவில்லை; ஆனாலும் பிரிட்டனால் தோற்றுவிக்கப் பட்ட பெரிய நிலக் கிழார்களான ஜமீன்தார்கள், ஜாகீர்தார்களின் பிரபுத்துவ ஆட்சி முறைக்கு முடிவு கட்டின. ஆயினும், சட்டத்திலிருந்த ஏராளமான பலவீனங்களால் நிலமிழந்த நிலக் கிழார்கள் பெரிய அளவில் எஸ்டேட்டுகளை வைத்துக் கொள்ள முடிந்தது. மேலும், நிலத்துக்கு நஷ்டஈடாகப் பெருந் தொகை

தரவேண்டுமென்று விதிக்கப்பட்டதால், பண வசதியுள்ள, அல்லது நடுத்தரக் குடியானவர்கள் தான் பரவலான நில விநியோகத்தைப் பயன்படுத்திக் கொள்ள முடிந்தது; கிராமாந்தர ஏழை மக்களுக்கு, வாழ்க்கைத் தேவைக்குப் போதுமான நிலம் படைத்தவர்களுக்கு, என்றைக்கும் கடனில் உழலுபவர்களுக்கு, அல்லது பல லட்சக்கணக்கான நிலமில்லாத நில ஊழியர்களுக்கு எந்தவித நன்மையும் கிட்டவில்லை. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதுகளில் செய்யப்பட்ட ஒரு சர்வேயின்படி, கிராமாந்தரக் குடும்பங்களில் 3.6 சதவீதம் உழுநிலத்தில் 36 சதவீதத்தை இன்னும் சொந்தவுடமையாகக் கொண்டுள்ளனர் என்றும், 84 சதவீத நிலம் நாலில் ஒரு பங்கினருக்குச் சொந்தமாக இருக்கிறது என்றும் தெரிகிறது. கன்னர் மிர்தால் எழுதிய ''ஆசிய நாடகம்'' என்ற புத்தகத்தில் (3 பாகங்கள். வெளியிட்டோர்: ஆலன் லேன்) ஓர் அமெரிக்க நிபுணர் 1965இல் வெளியிட்ட அறிக்கையிலிருந்து பின்வருமாறு மேற்கோள் காட்டுகிறார்:

> ''மற்ற அம்சங்கள் எவ்வளவு முக்கியமாக இருப்பினும், நிலத்தில் பாடுபடுபவரே அதன் உரிமையாளர் என்றோ அல்லது குத்தகைதாரர் என்றோ ஏற்படாவிட்டால், மற்றவை எல்லாம் நீர் மேல் எழுத்தாகலாம்.''

வசதியுள்ள குடியானவர்களே வாங்கிப் பயன்படுத்தக் கூடிய விலையுயர்ந்த ரசாயன, நுட்பமான சாதனங்களை உபயோகித்து மொத்த விவசாய உற்பத்தியைப் பெருக்கி இருந்தாலும், அரசுக்கும் தற்போதுள்ள வர்க்கவுறவுகளுக்கும் வலிய ஆதரவாக நிற்கும் வசதியுள்ள ஒரு குடியானவ வகுப்பைத் தோற்றுவிக்கும் அரசியல் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள உதவும் நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் இயற்றப் பட்டிருந்தாலும், விவசாய நெருக்கடியின் உண்மையான பிரச்னைகளுக்கான தீர்வு காண இந்தச் சட்டங்கள் ஏதும் செய்யவில்லை என்று மிர்தால் எழுதிய விரிவான ஆய்வு நூலில் விளக்கியுள்ளார். ஜாரின் ஆட்சியில் செய்யப் பெற்ற ஸ்டோலிபின் நிலச் சீர்திருத்த சட்டங்களோடு இந்தச் சட்டங்களைப் பயனுள்ள முறையில் ஒப்பிட்டு நோக்கலாம்; வசதியுள்ள குடியானவ உரிமையாளர்களைத் தோற்றுவித்து அவர்கள் ஜாரின் ஆட்சிக்கு ஆதரவு தரும் சமூக அடிப்படையில் இருக்க வேண்டும் என்பதே ஜாரிஸத் திட்டம்; ஆனால், இதனால் விவசாயத் தொழில் நெருக்கடி ஆழ்வதைத் தடுக்க முடியாமல் அது 1917 ஆம் ஆண்டுப் புரட்சியாக வெடித்தது.

பொருளாதாரத் துறையில் தேசீயப் பூர்ஷ்வாக்கள், இந்தியாவில் ஏகாதிபத்தியத்துக்கு இப்போதுள்ள பொருளாதார நலன்களுக்குப் பாதுகாப்பு அளித்தும், தொடக்கத்தில் பத்தாண்டுக்

காலம் தொழிலைத் தேசியமாக்குவதில்லை என்று உறுதி தந்து அயல் நாடுகளின் மூலதனத்தைக் கவர்ச்சித்தும், விரிவான மாபெரும் சீரமைப்புப் பணியையும் தொழில் மயமாக்கும் முயற்சியையும் மேற்கொண்டு, குறிப்பிடத்தக்க விதத்தில் உற்பத்திப் பெருக்கத்தைச் சாதித்தனர். 1950 இல் நேரு–ஸ்டாலின் கடிதப் போக்குவரத்து வாயிலாக மத்தியஸ்தம் மூலம் கொரியப் போருக்குத் தீர்வு காண முயற்சி செய்ய வேண்டும் என்ற பொதுவான நோக்கம் ஏற்பட்டு சோவியத் யூனியனோடு ஒத்துழைக்க ஓர் அடிப்படை கிடைக்கவே ஐந்தாண்டுத் திட்டங்கள் வகுக்கும் முறை மேற்கொள்ளப்பட்டது. 1951 முதல் 1966 முடிய முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களால் நாட்டின் மொத்த உற்பத்தி 159 சத வீதம் பெருகியதாய்க் கூறப்படுகிறது. ஏகாதிபத்தியத்தின் உதவியின்றி பொருளாதார முன்னேற்றம் காண சோவியத் உதவி முக்கியமான அம்சம் ஆயிற்று. 1955 இல் ஏகாதிபத்தியத்தின் தரப்புக்கு அதுவரை தெரியாத புதிய முறையில் சோவியத் யூனியன் உதவி புரிய முன்வந்தது; பெருமளவில் ஒரு உருக்கு ஆலையைக் கட்டிக் கொடுத்துத் தொழில் மயமாக்கும் முயற்சிக்கு நேரடியான உதவி அளிக்கும் திட்டம்: சோவியத் யூனியன், செக்கோஸ்லாவாகியா, போலந்து ஆகிய நாடுகள் வளர்ச்சி பெறும் நாடுகளில் நவீன, கனரக இஞ்சினியரிங் ஆலைகளைக் கட்டுவதற்கு உதவி புரிந்தன. இந்த உதாரணத்தைக் கண்டு வெட்கமுற்ற மேலை ஏகாதிபத்தியமும், அடுத்த ஆண்டுகளில் புதிய உருக்கு ஆலைகள் கட்டுவதற்கு பேருதவி செய்தது. மேற்கு ஜெர்மனி ஓர் ஆலையும், பிரிட்டன் ஓர் ஆலையும் அமைத்துத் தந்தன. 1950 இல் 15 லட்சம் டன்களாக இருந்த உருக்கு உற்பத்தி 1964 இல் 65 லட்சம்டன்களாக உயர்ந்தது. அதே காலத்தில் மின்சார உற்பத்தி இருமடங்காகியது.

முதலாளித்துவத்தின் அடிப்படையில் ஏற்பட்ட இந்த முன்னேற்றத்துக்கு எதிர் மறை விளைவு ஒன்று இருந்தது. 1954 டிசம்பரில் நிறைவேற்றப்பட்ட பார்லிமெண்ட் தீர்மானத்தின் படியும் 1955 ஆவடி காங்கிரஸில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் படியும் ''சோஷலிஸம்'' அல்லது ''சோஷலிஸ பாணி சமூக அமைப்பு'' தங்கள் லட்சியம் என்பது இந்திய அரசுக்கும், காங்கிரசுக்கும் அதிகார பூர்வமான கொள்கையாக ஏற்பட்டு விட்டது மெய்யே. ஆனால் மிகச் சக்தி வாய்ந்த பெரும் பணக்காரரும் ஏகபோகவாதியும் காங்கிரஸ் ஆதரவாளருமாகிய ஜி.டி. பிர்லா, இந்திரா காந்திக்கும் காங்கிரசுக்கும் தம் ஆதரவை விளக்குகையில் 1966 ஆம் ஆண்டிலேயே பின்வருமாறு எழுதினார்:

''ஜனநாயக சோஷலிஸம் என்பது நம் கோஷம். அதன் சரியான பொருள் என்ன என்று யாருக்கும் தெரியாது.

பிரதமர் தம் ஒலிபரப்பில் தனியார் துறைக்கு உதவியளித்து ஊக்கப்படும் என்றூர். அதைக் கேட்க மிகவும் உற்சாகமா யுள்ளது.''

(ஜி. டி. பிர்லா: லண்டன் ஹைகமிஷன் வெளி யீடான ''வாராந்திர இந்தியா'' என்ற பத்திரிகையில் எழுதிய 'இன்றைய இந்தியாவின் பிரச்னைகள்' என்ற கட்டுரையிலிருந்து)

உண்மையில் மூலதனக் குவிப்பு விரைவாக அதிகரித்தது. மிகச் சிறிய எண்ணிக்கையிலுள்ள பெரிய ஏகபோக நிறுவனங்கள் இந்தி யருக்குச் சொந்தமான தொழில்களில் ஆதிக்கம் செலுத்த, அயல் நாட்டு மூலதனம் தன் ஊடுருவலை விரிவாக்கிக் கொண்டதுடன் பல தொழில் துறைகளில் முன்பே தனக்குள்ள செல்வாக்கை வலுப்படுத்திக் கொண்டு, இந்திய ஏகபோக நிறுவனங்களுடன் தனக்குள்ள தொடர்பையும் வளர்த்துக் கொண்டது. 1963ஆம் ஆண்டில் சாடர்டே ஈவினிங் போஸ்ட் என்ற பத்திரிகைக்கு நேரு அளித்த பேட்டியில் உரைத்தார்:

''பிரிட்டிஷாரின் ஆட்சியில் ஈட்டிய லாபத்தைவிட அதிக மாகப் பிரிட்டிஷ் கம்பெனிகள் இப்போது சம்பாதிக்கின்றன. சர் வின்ஸ்டன் சர்ச்சில் கூட இதைப்பற்றித் திருப்தி தெரிவித் துள்ளார்.''

1965இல் ''சோஷலிஸ நடவடிக்கை மன்றத்தினருக்கு'' நேரு நிகழ்த்திய உரையில், எவ்வளவோ முயற்சிக்குப் பின்னரும் நாட் டில் செல்வத்துக்கும், வறுமைக்கும் இடையிலுள்ள பிளவுபற்றிக் கவலைப்பட்டுள்ளார்.

''அபிவிருத்தித் திட்டங்கள் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள முடிந்தோருக்கே நன்மை பயப்பதாய்த் தோன்று கிறது; ஏனெனில் அவர்களுக்கு அதிக வசதிகள் உள்ளன. இதனுல் பணக்காரர்கள் மேலும் பணக்காரர்களாக, ஏழைகள் இருக்கிற இடத்திலேயே இருக்க வேண்டிய நிலைமை ஓரளவு எழுகிறது.''

அந்நிய நாட்டு உதவியை மிக அதிகமாய் எதிர்பார்த்தார்கள்; இந்த உதவியின் கணிசமான பகுதி பழைய கடனை அடைக்கப் பயன்பட்டது. முதல் திட்டத்தின் இறுதியில் 53 லட்சமாக இருந்த வேலை இல்லாதோர் எண்ணிக்கை இரண்டாவது திட்டத்தின் இறுதியில் 71 லட்சமாகவும், மூன்றுவது திட்டத்தின் இறுதியில் 96 லட்சமாகவும் உயர்ந்து, நான்காம் திட்டத்தின் இறுதியில் 140 முதல் 180 லட்சமாக உயரலாம் என்று பலவிதமாய் மதிப் பிடுகிருர்கள். 1963-இல் ''இந்தியத் திட்டக் கமிஷன்'' இந்தியா

வில் மூன்றில் இரண்டு பகுதியினர் பட்டினி நிலையில் வாழ்கிறார் கள்,'' என்று அறிவித்தது. (ஸ்டேட்ஸ்மன்; ஜனவரி 29, 1963.)

சமூகத் துறையில், குறிப்பாக, கல்வி, ஆரோக்கியத் துறை களில் முன்னேற்றம் காண்பதற்கான முயற்சிகள் செய்யப்பட்டுள் ளன. 1931 இல் மக்கள் தொகையில் 92 சதவீதமாகப் பரவி யிருந்த படிப்பின்மை (இந்த நூலின் காணும் விவரப்படி) 1961-ல் சென்ஸஸ்படி 76 சதவீதமாய்க் குறைந்து உள்ளதாய் அதிகார பூர்வமாய் அறிவிக்கப்பட்டது. துவக்கக் கல்வியும் இடைநிலைக் கல்வியும் விரிவாக்கப்பட்டன. 1931—41-ல் ஓராயிரத்துக்கு 31.2 பேராக இருந்த மரண விகிதம் 1960இல் 16·2 பேராகக் குறைக் கப்பட்டதாய் ஒரு மதிப்பீடு செய்யப்படுகிறது.

எல்லாவற்றுக்கும் மேலாக, ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பதுகளில் நேரு அரசின் காலத்தில் சர்வதேச உறவுத் துறை களில் இந்தியாவின் பாகம் குறிப்பிடத்தக்க மாறுதல் பெற்றது. பிரிட்டிஷ் காமன்வெல்த்தில் ஒரு குடியேற்ற நாடாக விளங்கி னும் இந்தியா தொடக்கத்திலிருந்தே, 'கூட்டுச் சேராக் கொள்கை'யைப் பின்பற்றி வந்தது; அதாவது பாகிஸ்தான் சிக்கிக் கொண்ட சென்டோ (முதலில் இதற்கு பாக்டாட் உடன்பாடு என்று பெயர்) ஸீடோ (1954இல் நிறுவப்பட்டது) போன்ற ஏகாதிபத்தியக் கூட்டுகளில் சேர மறுத்துவிட்டது. 1950 இல் பிரிட்டிஷ் ஆட்சியோடு இருந்த உறவை உதறிவிட்டுக் குடியரசாக மாறி பிரிட்டிஷ் அரசு காமன்வெல்த்துக்குத் தான் தலைமை என்று அறிவித்தபின் இந்தியா உலக சமாதானத்திற்காக மேற்கொண்ட பாகம் அதை சர்வதேச அரசியலில் முன்னணிக்குக் கொண்டு வந் தது. 1950 ஆம் ஆண்டுக் கோடையில்கூட, கொரியாவில் அமெ ரிக்காவின் ஆயுதப் படையெடுப்பை ஆதரிக்கும் அமெரிக்காவின் சட்ட விரோதமான தீர்மானத்திற்குச் சாதகமாக இந்தியா வாக் களித்தது. ஆனால், இந்தக் கட்டத்திலிருந்து ஆசிய நாடுகள் மீது படையெடுத்து அவற்றைப் பாழ்படுத்தும் மேற்கு ஏகாதிபத்தியத் துடன் தொடர்பு கொள்வதற்கு விரோதமாக இந்தியாவில் மக்க ளின் மனப்பான்மை இறுகியது; 1949இல் சீன மக்கள் குடியரசு பெற்ற வெற்றியால் ஆசியாவில் தோன்றிய புதிய சக்திகளால், இந்தியாவின் அயல்நாட்டுக் கொள்கை புது வடிவத்துடன் முன்னேற்றம் கண்டது.

1950 ஜூலையில் நேருவும், ஸ்டாலினும் கடிதப் போக்கு வரத்து செய்து கொண்டதுடன், கொரியப் போருக்குச் சமா தானத் தீர்வு காண இடைவிடாத முயற்சிகள் செய்யத் தொடங்கி யது முதல் உலக சமாதானத்திற்கான இந்தியாவின் தீவிரப் பணி

புதியதும், அபிவிருத்தி பெறாததுமான குடியேற்றப் பிரதேசங்களில் குடியேறியவர்கள், உற்பத்திச் சரக்குகளுக்குத் தாய்நாட்டை எதிர்பார்த்தது இயற்கையே. இவற்றிற்குப் பதிலாகப் புகையிலை, மரம், தோல் போன்ற மூலப் பொருள்களைத் தாய்நாட்டுக்கு அவர்கள் அனுப்பி வந்தனர். 'வாணிப முறை' என்று அழைக்கப்பட்டுவந்த இந்த வர்த்தகம், பொதுவாகத் தாய் நாட்டுக்கு லாபகரமாக இருந்தது. உண்மையில், இது குடியேற்றப் பிரதேசங்களை ஸ்தாபிப்பதற்கு முதலீடு செய்தவர்களின் முக்கிய நோக்கமாகவும் இருந்தது. குடியேறிய மக்கள் தங்கள் பொருள்களுக்குக் கிடைக்கும் விலைகளையே பெற்றுக்கொள்ளவும் உற்பத்திச் சரக்குகளுக்குத் தாய்நாட்டு வர்த்தகர்கள் கோரும் விலைகளைக் கொடுக்கவும் நேரிட்டது. குடியேறிய மக்கள் இதர நாடுகளுடன் வர்த்தகம் செய்வதையோ அல்லது தங்கள் தேவைப் பொருள்களைத் தாங்களே தயாரித்துக்கொள்வதையோ தடுப்பதன் மூலம், குடியேற்ற நாட்டு ஆதிக்கத்தை ஏகபோக நிலையில் வைத்துக் கொள்ளும் நோக்கத்துடன் சட்டங்கள் இயற்றப்பட்டன.

ஆனால் ஆங்கிலக் குடியேற்றப் பிரதேசங்கள் செழிக்க ஆரம்பித்தபொழுது, புது உலகத்தைச் சேர்ந்த பழைய, புதிய வியாபாரிகள் தங்கள் மீது விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகளைக் கண்டு எரிச்சல் கொண்டனர். 1660-63-ஆம் ஆண்டுகளில் இரண்டாவது சார்லஸால் விதிக்கப்பட்ட கடல் வர்த்தகக் கட்டுப்பாட்டுச் சட்டங்கள், குறிப்பாக, சொந்தமாகத் தங்கள் தொழில்களை ஆரம்பித்து, தாய் நாட்டுக்குப் போட்டியாக வர்த்தகத்தை நடத்த விரும்பிய நியூ இங்கிலாந்து மக்களுக்கு வேதனையாக இருந்தது. அதிருஷ்டவசமாக இக்குடியேற்றப் பிரதேசங்களில் இந்தச் சட்டங்கள் கண்டிப்பாக அமல் செய்யப்படவில்லை. இதனால், பிரெஞ்சு, [illegible] களுடன் கள்ள வர்த்தகம் [illegible].

18-ஆவது நூற்றாண்டின் மத்தியில், குடியேற்றப் பிரதேசங்களின் ஜனத்தொகை அநேகமாக 15 லட்சத்திற்கு அதிகரித்திருந்தது. நியூ யார்க்கிலும், நியூ ஜெர்ஸியிலும் டச்சுக்காரர்கள் பலரும், பல்வேறு இடங்களில் பிரெஞ்சு பிராடஸ்டெண்டுகள் சிதறியும், பென்சில்

விளைவுகளை உண்டாக்கியது. போர் நிறுத்தத்தோடு அது முடிந்ததேயன்றி சமாதானத் தீர்வு ஒன்றும் காணப்படவில்லை. ஆயினும், மேற்கு ஏகாதிபத்தியவாதிகளும், அவர்களுடைய கூட்டாளிகளாக இந்தியாவிலுள்ள பெரிய தொழிலதிபர்களும், இந்திய—சீன எல்லைத் தகராறைப் பயன்படுத்திக்கொண்டு தங்கள் நோக்கத்தைச் சாதித்துக் கொண்டு விட்டார்கள். இந்திய—சீன அரசுகளுக்கு இடையில் இருந்த நட்பு முறிந்து வேற்றுமை ஏற்பட்டு விட்டது. அமெரிக்க, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் இந்தியாவில் தங்களுக்குள்ள பாகத்தை வலுப்படுத்திக் கொண்டனர். இந்தியாவில் இடதுசாரிகளின் முன்னேற்றம் தடைப்பட்டது, போர்வெறி பரப்பப்பட்டது. இடதுசாரி அணிகள் குலைவுண்டன; கம்யூனிஸ்டுக் கட்சி பிளவுண்டது; பலர் சிறையில் அடைக்கப்பட்டனர்; பின்னால் கம்யூனிஸ்டுக் கட்சி இரண்டாய்ப் பிரிந்தது. இந்திய அரசில் நேருவுக்கு முக்கியமான இடதுசாரித் துணையாக இருந்த தற்காப்பு அமைச்சர் கிருஷ்ணமேனன் அமைச்சரவையிலிருந்து துரத்தப்பட்டதுடன், பார்லிமெண்டு உறுப்பினர் பதவியையும் இழக்குமாறு பழிவாங்கப்பட்டார். 1969இல் தான் அவர் மீண்டும் சுயேச்சை உறுப்பினராக மேற்கு வங்காளத்து ஐக்கிய முன்னணியின் ஆதரவால் பார்லிமெண்டில் நுழைய முடிந்தது. மரணம் குறுக்கிட்டிரா விட்டால் நேருவுக்கு எதிராகவும் வலதுசாரிகள் தாக்குதல் நடத்தியிருக்கக் கூடும் என்பதற்கான சான்றுகள் உள்ளன.

இவ்வாறாக, நேருவின் இறுதியாண்டுகள் துன்பகரமான அநுபவங்களால் குழம்பின. பாண்டுங் கோடை மகாநாட்டுச் சூழ்நிலைக்கு மாறாகச் சீனாவுடன் வேற்றுமை; கூட்டுசேரா நாடுகளில் பெரும்பாலானவை எல்லை சம்பந்தமாக இந்தியாவின் நிலைக்கு ஆதரவு தரமறுத்ததால் அவற்றுக்குத் தலைமை வகிக்கும் பொறுப்பும் செல்வாக்கும் பலவீனமுற்றன; அயல்நாடுகளின் கடன்கர்ரர்கள் இந்திய அரசியல் கொள்கையில் தாங்கள் தலையிட முடியும் என்று வெளிப்படையாகக் கூறிக் கொண்டிருக்க, இந்தியப் பொருளாதார செல்வ நிலையில் ஏகாதிபத்தியம் மேலும் மேலும் ஊடுருவி வந்தது; பொருளாதாரச் சீர்குலைவு வேலையில்லாத் திண்டாட்டத்தின் விரைவான வளர்ச்சி, மக்களின் வாழ்க்கைநிலை தாழ்வுற்று வந்தது; காங்கிரஸ் யந்திரத்துக்குள்ளேயே வேற்றுமையும், ஊழலும் மலிந்திருந்தன; வலதுசாரி பிற்போக்காளர்களின் எதிர்ப்பு மிகுந்து கொண்டிருந்தது. நேரு பிரதமராக இருந்த வெற்றிகரமான ஆண்டுகளில், தேசீய பூர்ஷ்வாக்களின் தலைமையில் இயன்ற சாதனைகளை எல்லாம் முழு அளவில் சாதித்தாகி விட்டது. இப்போது அவற்றின் வரம்பும் எதிர் மறையுமான அம்சங்களும் வெளிப்பட்டுக் கொண்டிருந்தன. இந்திய மக்களின்

புதிய முன்னேற்றத்துக்கு, ஒரு புதிய யுகத் தோற்றத்திற்கான நிலைமை கனிந்து கொண்டிருந்தது.

1964 இல் நேரு காலமான பிறகு பொருளாதாரத் துறை மேலும் குலைய, காங்கிரஸோடு சம்பந்தப்பட்ட பழைய ஆட்சிக் குழுவினர் மேலும் விரைவாக முன்னேறினர். அந்நிய உதவி மேல் அதிகமான சார்புகள், பற்றுக்குறை பட்ஜெட்கள், பண வீக்கம், உணவுத் தானியங்களின் ஏராள இறக்குமதி, உற்பத்திப் பெருக்கத்தில் தாமதம், வேகமாக அதிகரித்த வேலையில்லாமை, உண்மை ஊதியத்தில் குறைவு, மக்களின் செலாவணித் தரத்தில் வீழ்ச்சி, இவையாவும் இந்தியாவுக்கு ஏற்பட்டுவந்த நெருக்கடி யான நிலைமையைக் குறிப்பிட்டன; இவற்றின் காரணமாக மக்களிடையில் எழுச்சி தோன்றிப் பெரிய அரசியல் விளைவுகள் உண்டாக இருந்தன.

அதிகார பூர்வமான அட்டவணைப்படி தொழில் வளர்ச்சி 1960 இல் 11 சதவீதத்திலிருந்து, 1964 இல் 7 சதவீதமாகவும், 1965 இல் 5·4 சதவீதமாயிருந்தது, 1966 இல் 2·5 சதவீத மாகவும் குறைந்தது. ஏற்கனவே, இறுதியாண்டுகளில் நேரு செல்வத்திற்கும் வறுமைக்கும் இடையிலுள்ள பிளவு அதிகரிப் பதைப் பற்றிக் கவலை தெரிவித்திருந்தார். 1953-1957, 1960-1961 ஆண்டுகளில் வருவாய் விநியோகம் பற்றி ரிசர்வ் பாங்கு ஒரு ஆய்வு செய்தது; அதன்படி, மேல் மட்டத்திலுள்ள பத்து சதவீதம் பேரின் தேசீய வருவாய் 28 லிருந்து 37 ஆக உயர, குறைந்த வருவாயுள்ள நாற்பது சதவீதம் மக்களின் வருவாய் இருபது சதவீதத்திலிருந்து பதின்மூன்று சதவீதமாகக் குறைந் திருக்கின்றது. இண்டியன் லேபர் ஜர்னல் வெளியிட்ட அட்டவணைப்படி (1951 ஆம் ஆண்டு 100 என்று வைத்துக் கணக்கிட்டு) மெய்யான வருவாயினங்கள் 1956 லிருந்த 115.4, 1960 இல் 113·8 ஆகவும், 1964 இல் 104·1 ஆகவும் வீழ்ந்து விட்டது. உணவுத் தானியங்களின் செலாவணி நபருக்கு 375 பவுண்டாக 1961-62 இல் இருந்தது, 1966-67 இல் 323 பவுண்டாக குறைந்தது. 1961-62 இல் நபர் ஒருவர் 16·2 கஜம் பருத்தியாடை உபயோகித்தார், 1966-67 ல் இந்த அளவு 15·2 கஜங்களாய்க் குறைந்து விட்டது.

முன்பே சீர்குலைந்து வந்த இந்த நிலையில், 1966 ஆம் ஆண்டு மற்றொரு பலமான அடி விழுந்தது; ரூபாயின் மதிப்பு அதிர்ச்சி தரும் வகையில் 36½ சதவீதம் தாழ்த்தப்பட்டது; முன்பு ஒரு பவுன் 13 ரூபாய்க்குச் சமமாயிருந்தது; இப்போது அது 21 ரூபாயாகி விட்டது. அமெரிக்கப் பேங்கர்கள் உலக பாங்கின் வாயிலாக வெளிப்படையாய் வற்புறுத்தியதன் பேரில்தான்

ரூபாயின் மதிப்பு இவ்வாறு அரக்கத்தனமாய்க் குறைக்கப் பட்டது. விளைவுகள் பயங்கரமாயிருந்தன. இந்திய ஏற்றுமதிக்கு உதவும்படியாகக் குறிப்பிடத்தக்க நன்மை ஒன்றும் ஏற்படவில்லை. இந்தியா இன்னும் பெரும்பாலும் ஆதாரச் சரக்குகளையே ஏற்றுமதி செய்து வந்ததாலும் உலக மார்க்கெட்டுகளில் இச் சரக்குகள் அளவுக்கு மீறி நிறைந்திருந்ததுந்தான் அதற்குக் காரணம். ஆனால், இறக்குமதிகளின் விலையேற்றம் மிக அதிகம்; இதனால் குதிவேகத்தில் விலைகள் உயரப் பணவீக்கம் அதிகரித் தது; பட்டினி நிலையில் உயிர் வாழ்ந்து வந்த மக்களின் சுமை மேலும் கனத்தது. வட்டிச் சுமையும் அந்நிய நாடுகளுக்குத் திருப்பித் தரவேண்டிய கடன் சுமையும் ரூபாயின் மதிப்புக் குறைவால் 1369 கோடி ரூபாய் அல்லது 65 கோடி பவுன் உயர்ந்தது.

மேற்கு ஏகாதிபத்தியங்கள், குறிப்பாக ஐக்கிய அமெரிக்கா வின் அரசும், பாங்குகளும் இந்தியாவின் இந்தச் சிரம நிலையைப் பயன்படுத்திக் கொண்டு தங்கள் இறுக்கமான பிடியை மேலும் இறுக்கின. 'உதவி' என்ற பெயரால் வழங்கப்பட்ட மாபெரும் தொகைகள் நடைமுறையில் பழைய கடன்களைத் திருப்பித் தரும் வகையில் வழங்கிய நாடுகளுக்கே திரும்பிச் சென்று மறைந்தன. உண்மையில், சில ஆண்டுக் காலத்தில் வட்டிப்பாக்கியும், திருப்பித் தரவேண்டிய பாக்கியும் கூடி மொத்த 'உதவி'யை விட அதிகமாகி விடும் என்று கணக்கிடப்பட்டது.

> ''இப்போது தீட்டப்பட்டுள்ள திட்டத்தின் அடிப் படையில்—இது 1980-81 வரை செயல்படும்—இந்தியா வுக்கு பதினைந்து ஆண்டுக் காலத்திற்கும் மொத்தமாக 18 பில்லியன் டாலர் அந்நியவுதவி தேவைப்படும். அதே காலத் தில் திருப்பித் தர வேண்டிய பாக்கியும், வட்டிப் பாக்கியும் 14 பில்லியன் டாலராகும். 1975க்குப் பிறகு திருப்பித்தர வேண்டுமென்று எதிர்பார்க்கப்படும் தொகை உள்ளே வரும் மூலதனத்தைக் களைந்து விடும்.''
>
> (எகனாமிஸ்ட் : 1967, ஏப்ரல் 8).

பிடி இறுகியதும் நிபந்தனைகள் கடுமையாக்கப்பட்டன:

> ''மேற்கொண்டு 'உதவி' செய்ய வேண்டுமாயின் உற்பத்தி லட்சியங்கள் தெளிவாயிருக்க வேண்டும் என்று வாஷிங்டன் வெளிப்படையாகவே கருத்து தெரிவித்தது. (இதை ''நிபந்தனையுள்ள உதவி'' என்று இந்தியா கூறும்)... இந்திய, அந்நியத் தனியார் துறைத் தொழிலுக்கு அதிகப் பங்கு, குறைவான கண்ட்ரோல்கள்... அமெரிக்க (உலகப்

பாங்கின்) ஆலோசனைப்படி பொருளாதாரத் துறையை மாறுதல் செய்ய இணக்கமாக இருத்தல்.''

(தி டைம்ஸ், மே 3, 1966, வாஷிங்டன் நிருபர்)

அதைப் போலவே, தி டைம்ஸின் வாஷிங்டன் நிருபர் எழுதினார்: ''கடுமையான நிபந்தனைகள் இருப்பதை மறுக்க இப்போது வாஷிங்டன் கவலைப்படுவதில்லை,'' என்றவர் ''இந்தியாவின் பொருளாதாரத்தில் அந்நியத் தனியார் மூலதனத்தின் அந்தஸ்து'' பற்றியும், தற்போதுள்ள சட்டங்களையும் கண்ட்ரோல்களையும், திருத்த வேண்டிய அவசியம் பற்றியும் பெரிதும் வற்புறுத்துகிறார். அபக்கியாதி பெற்ற உணவுச் சட்டம் பி. எல். 480 ஐ அமெரிக்கக் காங்கிரஸ் நிறைவேற்றுகையில், இந்தியாவில் அமெரிக்கப் பணிகளுக்குப் பயன்படும்படியாக ஈட்டுத் தொகை இருக்க வேண்டும் என்று சட்டத்தில் ஏற்பாடு செய்ததோடு ''தனியார் துறைக்கும் முதலீட்டுக்கும் சௌகரியமான சூழ்நிலையை, உண்டாக்குவதான நோக்கம் இருக்கவேண்டும் என்றும் சட்டத்தில் தெளிவாக விதிக்கப்பட்டு உள்ளது.

அப்போது எதிர்ப்பின்றி ஆண்ட காங்கிரஸ் ஆட்சியை எதிர்த்து மக்கள் புரட்சி செய்ததற்கான இந்தச் சூழ்நிலை 1967 ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தலில் சிறப்பாகப் பிரதிபலித்தது. தேர்தலுக்கு முந்தின பன்னிரண்டு மாதங்களில், மக்களின் அடக்கி வைக்கப்பட்டிருந்த சீற்றம், தொடர்ச்சியான வேலை நிறுத்தங்களாகவும், பெருவாரியான தடுப்பு முயற்சிகளாகவும், பார்லிமென்ட்டை நோக்கித் தேசீய ஊர்வலமாகவும், பெருங் கண்டனக் கூட்டங்களாகவும், போலீசோடு மோதலாகவும், வடிவெடுத்து வெளிப்பட்டதுடன் 1967 ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் அமைச்சர்கள், தலைவர்கள் பலரை முறியடித்து, மண்ணில் சாய்த்து காங்கிரஸ் மெஜாரிடிகள் பலவற்றையும் தூள் தூளாக்கியது. இந்தக் கோபம் தேர்தல் பிரதிநிதித்துவத்திலும், பார்லிமென்ட் பிரதிநிதித்துவத்திலும் ஓரளவு குழம்பியிருந்தது; காங்கிரசுக்கு நேர் எதிரியாகவும், எதிர்கால மாற்றுக் கட்சியாகவும் இதுவரை தேர்தல்களில் இரண்டாவது ஸ்தானம் வகித்த கம்யூனிஸ்டுக் கட்சி இப்போது இரண்டாகப் பிளவுபட்டிருந்ததே அதற்குக் காரணம்; மக்களின் கோரிக்கைகளை ஒருமுனைப்படுத்தி அவர்களுடைய எதிர்ப்பைத் தக்க முறையில் வெளியிடும் வலிய சாதனமாக தேசம் முழுவதும் செயலாற்றக்கூடிய இடதுசாரி ஐக்கிய முன்னணியும் உருவாகவில்லை. ஆகையால் தேர்தல் முடிவுகள் எல்லா இடங்களிலும் பழைய காங்கிரசின் ஏகபோக நிலை சிதறிவிட்டது என்பதோடு

அதனால் மக்கள் பலவிதப் பயன்கள் அடைந்ததையும் காட்டியது. எல்லா ராஜ்யங்களிலும் மக்கள் இடதுபக்கம் சாய்ந்து விட்டார்கள் என்பது குறிப்பிடத்தக்க அம்சம்; அவர்கள் பிளவுபட்டிருந்தார்கள் என்பதும் உண்மை; ஆனால் சில இடங்களில் வலதுசாரிகளான சில கட்சிகள்பால் மக்கள் முக்கியமாகச் சாய்ந்திருந்தார்கள். இந்தியா முழுவதிலும் தேர்தல் முடிவுகளில் காணப்பட்ட இந்த மாறுபட்ட தன்மை ஓர் ஐக்கிய இடதுசாரி முன்னணி இல்லாத காரணத்தால் மாறுதலை வேண்டிய வாக்காளர்கள் காங்கிரசின் ஏகபோக ஆட்சியை முறியடிக்க எந்தக் கட்சி ஏற்றது என்று கருதினார்களோ அந்தக் கட்சிக்கு ஆதரவளிக்க முற்பட்டிருந்தார்கள் என்பதைக் குறிப்பிட்டது. தேர்தல் உடன்பாட்டு அடிப்படை பேரில் இடதுசாரி ஐக்கிய முன்னணி இருந்த ஒரே உதாரணமாக விளங்கிய கேரளத்தில் இடதுசாரியினர் பெரும் வெற்றி பெற்றார்கள். மேற்கு வங்கத்தில் 1969 இல் நடைபெற்ற இடைக்காலத் தேர்தலிலும் அதே உண்மை மீண்டும் வெளிப்பட்டது. இடதுசாரி ஒற்றுமை ஏற்பட்டதால் எத்தகைய முன்னேற்றத்தை எதிர்காலத்தில் சாதிக்க இயலும் என்பதை இந்த அனுபவம் உணர்த்தியது.

இடதுசாரிகளில் கம்யூனிஸ்டுகளே அதிக எண்ணிக்கையும் வலிமை படைத்த பகுதியினராதலால், கம்யூனிஸ்டுக் கட்சி தற்காலிகமாய் இரண்டாக (பிறகு மூன்று) உடைபட்டதால் இடதுசாரி ஐக்கியத்தின் முன்னேற்றம் மிகப் பெரிய பலவீனமுற்றது.

1962 தேர்தலில் இரண்டு கம்யூனிஸ்டுகளுக்கும் சேர்த்துப் பார்லிமென்ட் உறுப்பினர் எண்ணிக்கை 30; 1967இல் இந்த எண்ணிக்கை 44 ஆக உயர்ந்தது; இரண்டு கம்யூனிஸ்ட் கட்சிகளும் சேர்ந்திருந்தால் ஆளும் கட்சிக்கு அடுத்த இரண்டாவது ஸ்தானம் பெற அதுவே போதும்; ஆனால், அவை பிரிந்திருந்ததால் இரண்டாவது ஸ்தானம் வலதுசாரிக் கட்சியான சுதந்திராவுக்குப் போயிற்று; அக்கட்சி தன் எண்ணிக்கையை 18லிருந்து 42 ஆக உயர்த்திக் கொண்டிருந்தது; ஆகையால் அது அதிகார பூர்வமான எதிர்கட்சியாக இயங்கியது; அதற்கு அடுத்தபடியாக தன் எண்ணிக்கையை 14லிருந்து 35 ஆக உயர்த்திக் கொண்ட மற்றொரு பிற்போக்குக் கட்சியான ஜனசங்கம் மூன்றாவது ஸ்தானம் பெற்றது. காங்கிரசின் கொள்கைகளில் மக்கள் அதிருப்திகொண்டதொரு காலத்தில் வலதுசாரி பிற்போக்காளர்கள் இவ்வாறு வளர்ச்சி கொண்டு புதிய பாதை வகுக்கக் கோரியது நாட்டுக்கு அபாய அறிவிப்பாக அமைந்தது. இரண்டு முக்கியமான வலதுசாரி கட்சிகளான சுதந்திராவுக்கும், ஜனசங்கத்திற்கும் சேர்த்துக் கிடைத்த மொத்த வாக்குகள் சுமார் 3 கோடி; இரண்டு கம்யூ

னிஸ்டுக் கட்சிகளுக்கும் கிடைத்த வாக்குகள் 1 கோடியே முப்பது லட்சம்.

இந்த வலதுசாரிகள் பழைய மிதவாதப் போக்குகளைப் பிரதிபலித்ததோடு காங்கிரஸ் சிதைவைப் பயன்படுத்திக் கொள்வதற்காகப் புதிய அமைப்புடன் தோன்றியவை. காங்கிரஸ் மேற்கொண்ட ''சோஷலிஸ'' திட்டத்திலும், அரசுடைமைத் தொழில் துறைக் கொள்கையிலும் அதிருப்தி கொண்ட, அந்த ஸ்தாபனத்திலிருந்த மிகத் தீவிரமான மிதவாத மனப்பான்மையினரால் 1959 இல் சுதந்திராக் கட்சி நிறுவப்பெற்றது. பெரிய ஏகபோகவாதிகளும், பழைய நிலப்பிரபுத்துவ ஆட்சியின் பிரதிநிதிகளான மன்னர்களும் இக் கட்சிக்கு ஆதரவு தந்தார்கள்; பிற்பட்ட பகுதிகளில் வசிக்கும் தங்கள் பழைய குடிமக்கள் தங்களுக்குத் தேர்தல் வாயிலாக மரியாதை செலுத்தவேண்டும் என்று விரும்பிய மகாராஜாக்களும், மகாராணிகளும் நிமிர்ந்து நின்று பேசினர்கள்; அதிநாகரிக அமெரிக்கா மாதிரி வியாபார சமூகமும் மிகப் பண்டைய சமூகத்தைச் சேர்ந்த படாடோப மன்னர் சமூகமும் ஒருங்கிணைந்த மிதவாதக் கூட்டு இந்தக் கட்சி. ஏகாதிபத்தியம் மக்களைப் பிளவுபடுத்துவதற்காக நெடுங்காலமாய் மூட்டி வந்த பிற்போக்கு ஹிந்து ஜாதி வெறியின் புதிய தோற்றமே ஜனசங்கம். ஜாதி வெறியின் பயங்கர வாத ஸ்தாபனமான ஆர். எஸ். எஸ் (ராஷ்டிரீயஸ்வயம் சேவாச் சங்கம்) ஏஜண்டான கோட்ஸே 1948இல் காந்தியைக் கொலை செய்தபோது அந்தச் சங்கம் சட்ட விரோதமானது என்று அரசு அறிவித்தது; அந்தச் சங்கத்தின் அரசியல் பகுதிக் கட்சியான ஹிந்து மகாசபை மதிப்பிழந்தது, அந்த மரபைச் சேர்ந்தவர்களால் 1951 இல் ஜன சங்கம் நிறுப்பட்டது. போர் வெறி மூட்டுவதும் (''இழந்த பகுதிகளைத் திரும்பப் பெறவேண்டும்'', ''ராணுவத்தை விரிவுபடுத்த வேண்டும்'', ''அணு ஆயுதங்களைத் தயாரிக்கவேண்டும்'') புனித சாதுக்களைக் கொண்டு ஜாதி வெறி மூட்டும் கண்டனக் கூட்டங்கள் நடத்துவதும், பசு வதையைத் தடை செய்ய மத்திய அரசு சட்டம் இயற்றவேண்டும் என்று (இக் கோரிக்கையைக் காந்தி நீண்ட காலத்துக்கு முன்பே கண்டித்து விட்டார்) கோருவதும், எல்லாவற்றிற்கும் முக்கியமாக அரசுடைமைத் தொழில் துறையைக் கட்டுப்படுத்தவேண்டும் என்பதும் இக் கட்சியின் வேலைத்திட்டங்கள்; ''அரசின் அநாவசியத் தலையீடு இல்லாமல் தனியார் துறை செயல்பட அனுமதிக்கப்பட வேண்டும்'' என்பது அக்கட்சியின் கோரிக்கை.

வலது சாரிகளின் பயங்கரமான தாக்குதல் அபாயத்தை எதிர்த்து இடதுசாரி ஐக்கியத்துக்கான முயற்சிகளும், ஜனநாயக

சக்திகள் திரளுவதற்கான ஏற்பாடுகளும் அண்மையில் வலுப் பெறும் அறிகுறிகள் தென்படுகின்றன. ராஜ்யத்தேர்தல்களில் ஐக்கிய முன்னணிகள் குறிப்பிடத்தக்க வெற்றிகள் பெற்றுள்ள தையும் இரண்டு கம்யூனிஸ்டுக் கட்சிகளும் காங்கிரசிலுள்ள ஜனநாயக சக்திகளும் சேர்ந்து ஐக்கிய முன்னணி அரசுகள் அமைத்திருப்பதையும் தொடர்ந்து 1969 கோடையில் காங்கிரஸ் மத்திய சர்க்காரின் பிரதமரான இந்திராகாந்தி வெளிப்படையாக பழைய காங்கிரஸ் யந்திரத்தின் வலிய பிற்போக்கு எஜமானர் களின் ''ஸிண்டிகேட்''டை எதிர்த்து 14 பாங்குகளைத் தேசிய மயமாக்கியதுடன் இரண்டு கம்யூனிஸ்டுகளின் ஏகோபித்த ஆதரவோடும், இடதுசாரிகளின் மக்கள் இயக்கத்தின் ஆதர வோடும், கிரி குடியரசுத் தலைவராகத் தேர்தலில் வெற்றி பெறச் செய்தார்.

ஒரு புதிய அரசியல் கட்டத்திற்காகச் செய்யப் பெற்ற இந்த விரிவான ஜனநாயக ஆரம்பப்பணிகள் இன்னும் அபாயகரமான நிலையிலேயே இருக்கின்றன. மாறுதலில் தற்போதுள்ள ஸ்திர மற்ற தன்மையும் தெளிவாகப் புலப்படுகின்றது. பிற்போக்குச் சக்திகள் தங்கள் எதிர்த்தாக்குதலைப் பல வடிவங்களில் திட்ட மிட்டு வருகின்றன; பிற்போக்குக் கட்சிகளும், காங்கிரசிலுள்ள வலது சாரியினரும் கூடி மாற்றுக் குடியரசு அமைப்பதுடன் ஜனநாயக அடிப்படையையே ஆட்டம் காணச் செய்யும் முயற்சி களிலும் ஈடுபடக்கூடும் என்பதற்கான அறிகுறிகள் இருக்கின்றன.

இந்திய மக்கள் முன்னேறி வருகிறார்கள். பெரிய போராட் டங்களும், பெருமாறுதல்களுமான ஒரு புதிய யுகத்தில் இந்தியா அடியெடுத்து வைக்கிறது. சூறாவளி போன்ற சோதனைகளும், துன்பங்களும் எதிரிலுள்ளன. இந்திய மக்களின் பொருளாதார, அரசியல் விடுதலைக்கான, இன்னும் முடிவுறாத இந்தியப் புரட்சியின் பணிகள் உறுதிப்பட்டு வருவதோடு, நிலையற்றும் விரைந்து மாறியும் வருகிற கட்டத்திற்கும், கூர்மையான அரசியல் முரண்பாடுகளுக்கும் அவை அடித்தளமாகவுள்ளன. மக்களின் முன்னேற்றத்தை அடுத்து ஏககாலத்தில் வலது சாரிகள் முன்னேறக் கூடிய அபாயங்களும் இருக்கின்றன. விவசாய நெருக்கடி, மக்களின் பெருவாரி பட்டினி நிலை, வேலையில்லாத் திண்டாட்டம், செல்வத்துக்கும் வறுமைக்கும் இடையில் ஆழ்ந்து வரும் வேற்றுமை ஆகிய இன்றைய பொருளாதார நிலையின் உடனடிப் பிரச்னைகளுக்குத் தீர்வு கண்டாக வேண்டும். மக்கள் திரண்டு தங்களை எதிர்ப்பட்டுள்ள அபாயங்களை முறியடிக் கவும், தங்கள் பிரச்னைகளைத் தீர்த்துக்கொள்ளும் பாதையில் அடிவைக்கவும், எதிர்கால இந்தியாவை, தொழிலாளி மக்களின் இந்தியாவை நிர்மாணிக்கவும் தூண்ட கம்யூனிஸ்டு இயக்கமும் ஜனநாயக முற்போக்குச் சக்திகளும் ஒன்றுபட்ட வலிமையால் தான் முடியும்.

அக்டோபர் 2, 1969. ஆர். பி. டி.

அத்தியாயம் 1

# நவீன உலகத்தில் இந்தியா

*''மனித நிகழ்ச்சிகளின் போக்கில் ஒரு நாட்டு மக்கள் மற்றொரு நாட்டு மக்களுடன் தங்களை இணைத்துள்ள அரசியல் பந்தங்களை அகற்றிக்கொள்ளும் தேவை ஏற்படும் போதும், இயற்கையின் விதிகளும் இயற்கையின் ஆண்டவனும் வழங்கியுள்ள பிரிந்தும் சமத்துவ நிலையிலும் இயங்கும் உலகத்து அதிகாரங்களை அந்த மக்கள் மேற்கொள்ள விரும்பும்போதும், அவர்கள் பிரிவினை கோருவதற்கான காரணங்களை அறிவிக்க வேண்டும் என்று மனித இனத்தின் கருத்துக்களைப் போற்றும் கண்ணியமான மரியாதைக் குணம் வேண்டுகிறது.''*

—அமெரிக்கச் சுதந்திர அறிக்கை.

இந்தியாவின் எதிர்காலம், இன்று உலக அரசியலில் உள்ள பெரிய கேள்விகளில் ஒன்று.

இந்தியாவின் நாற்பது கோடி மக்கள் மனித வர்க்கத்தின் மொத்த ஜனத் தொகையில் சுமார் ஐந்தில் ஒரு பங்கினர் ஆவர். இரண்டு நூற்றுண்டுகளாய் அவர்கள் அந்நியர் ஆட்சிக்கு உட்பட்டிருக்கிறுர்கள். இன்று அந்த அந்நிய ஆட்சி தன் முடிவை நெருங்கிக் கொண்டிருக்கிறது.

இந்தியாவின் அடிமைத்தனம் உலக அளவில் மிகப் பெரியதும், நவீன உலகத்தில் சாம்ராஜ்ய ஆதிக்கத்துக்கு முக்கியமான அடிப்படையும் ஆகும். பல நூற்றுண்டுகளாக இந்தப் பரந்த பிரதேசத்தின் செல்வமும் வளமும், மக்களின் வாழ்க்கையும், உழைப்பும் மேலைநாட்டு முதலாளித்துவ ஊடுருவலுக்கும், தாக்குதலுக்கும், ஆதிக்கத்துக்கும், இறுதியில் ஆட்சிக்கும் விரிவான சுரண்டலுக்கும் இலக்காயிருந்தன. இந்த ஏற்பாட்டை முடிவுக்குக் கொண்டு வருவதால் மனித வர்க்கத்தின் ஐந்தில் ஒரு பங்கினருக்கு ஒரு புதிய எதிர்காலம் பிறக்கும் என்பது மட்டும் அல்ல. அதனுல் உலக உறவுகளில் குறிப்பிடத் தக்கதொரு சமநிலை உண்டாகும். ஏகாதிபத்தியத்தின் உலகளாவிய ஆதிக்கம் மேலும் பலவீனம் அடையும்; உலகத்திலுள்ள மக்கள்களின் விடுதலைப் போராட்டம் வலுப்பெறும். சுதந்திர சீறுவுடன்

இந்தியாவும் விடுதலை பெற்ருல் ஆசியக் கண்டத்திலுள்ள மக்கள் அனைவரும், காலனியாட்சியில் உள்ள மக்களும் விடுதலை பெற அது வழிவகுக்கும்.

நவீன உலகத்தின் பிரச்னைகளும், போராட்டங்களும் கூடும் மையமாக இந்தியா ஆகும். புதிய ஆட்சியாளர்களின் நசுக்குச் சுமையின் அடியில் புதைந்து தேங்கி, ஆதிகாலத்துப் பொருளாதார முறையிலும், வறுமையிலும், அடிமைத்தனத்திலும் அடிமட்டத்தில் கிடக்கும் பண்டைக் காலத்து வரலாற்றுப் புகழ் பெற்ற நாகரிகத்தின் பாழுக்கு அருகில் பொருளாதார முதலாளித்துவத்தின் மிக முன்னேறிய சுரண்டல் முறைகளை இங்கு காண்கிருேம். கடுமையான விவசாய நெருக்கடி, பஞ்சம், கடன் தளை, ஜாதி, ஜாதி விலக்குத்தளைகள், அளவு கடந்த தொழிற் சுரண்டல், உலகத்தின் வேறு எந்த நாட்டிலும் இல்லாத அளவு செல்வத்துக்கும் வறுமைக்கும் இடையில் முரண்பாடு, சமூக, மத வேற்றுமை, வர்க்க வேற்றுமை, இந்தியாவுக்குளுள்ள அவசரத் தேசீயச் சிக்கல்கள் ஓர் அடிமை நாட்டின் பின் தங்கிய நிலையையும், தடையுண்ட வளர்ச்சியையும், இவை அந்நிய ஆட்சியால் இறுகி வருவதையும் பல விதங்களில் பிரதிபலிக்கும் இந்தப் பிரச்னைகள் யாவும், ஏகாதிபத்தியத்தின் ஆட்சியிலிருந்து விடுபட வேண்டும் என்ற மையக் கேள்விக்கும் முன்ஞல் வந்து விடுதலைப் போராட்டத்தின் நிலைமையைச் சிக்கலாக்குகின்றன.

இன்று இந்தியா மகோந்நதமானதொரு பொருளாதார, சமூக, அரசியல் புரட்சி யுகத்தில் அடிவைத்துக் கொண்டிருக்கிறது. இந்தப் புரட்சியின் முதல்படி அந்நிய ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றுப் பரிபூர்ண சுதந்திரம் பெறுவதாகும். ஆனல், நெருங்கி வந்து கொண்டிருக்கும் அந்தச் சுதந்திரம் கிட்டியவுடன், பல நூற்ருண்டுக் காலம் மாற்ருர் ஆட்சியால் பல்கிப் பெருகி வளர்ச்சியைத் தடை செய்கிற மிகப்பெரும் சமூகப் பிரச்னைகளும், சமூக இன்னல்களும், வேற்றுமைகளும் தலைநிமிர்ந்து தீர்வு காண வேண்டும். இந்திய மக்கள் ஒரு பெரிய தேசீய, சமூகச் சீரமைப்புப் பணியை மேற்கொள்ள வேண்டிய கட்டத்தில் இருக்கிருர்கள்.

## 1. விடுதலையை நெருங்கும் இந்தியா

ஐக்கிய நாடுகள் பாசிஸ வல்லரசுகளை முறியடித்ததைத் தொடர்ந்து உலகத்தில் தோன்றியுள்ள புதிய நிலைமை காரணமாக உலக அரசியலில் இந்திய விடுதலைப் பிரச்சினை முன்னணிக்கு வந்துள்ளது.

*1914–18* இல் நடைபெற்ற முதல் உலகப் போரும், அதற்குப் பின் உலகளாவி எழுந்த புரட்சியலைகளும், இந்தியா

விலும் மற்ற காலனி நாடுகளிலும் புதிய மாறுதல்களுக்கான ஒரு யுகத்தை ஆரம்பித்து வைத்தன. 1919-22 ஆண்டுகளில் வலிய மக்கள் போராட்டங்கள் இந்தியாவை உலுக்கின; அதை விடக் கடுமையான போராட்டம் (இந்தியாவைப் பெரிதும் பாதித்த உலகப் பொருளாதார நெருக்கடிக்குப் பிறகு) 1930-34 ஆண்டு களில் நடந்தது. ஒரு முறை சீர்திருத்தங்கள் வழங்குவதும், மறு முறை கொடிய அடக்கு முறையைக் கையாளுவதுமாகப் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் தேசீய இயக்கத்தின் எழுச்சியைத் தடுக்க முயன்ருர்கள். எதிர்காலத்தில் சுயாட்சி அளிப்பதாய் உறுதி கூறுவதும், ஆட்சிமுறை உறவுகளில் உண்மையான மாறுதல் ஏற்படுத்தாத அரசியல் சட்டச் சலுகைகள் வழங்குவதுமாயிருந் தார்கள். 1937 இல் இந்தியாவிலுள்ள பதினேரு மாகாணங் களின் எட்டு மாகாணங்களில் தேசீய காங்கிரஸ் மாகாண அமைச்சரவைகள் அமைக்கக் காரணமாயிருந்த அந்தச் சலுகைகள் மக்களின் அமைதியின்மையைத் தடை செய்யப் பயன்படவில்லை; மாருக, அதற்குப் புதிய வலிவைத் தந்தன. 1939 இல் உலகப் போர் ஆரம்பமான போது, பிரிட்டிஷ் அரசு இந்தியா மீது திணிப் பதற்காகத் தயாரித்துக் கொண்டிருந்த கூட்டரசு அரசியல் சட்டத்தை எதிர்த்துக் கூர்மையான போராட்டம் இந்தியா நடத்திக் கொண்டிருந்தது. இந்தியரைப் பெயரளவில் கூடக் கலந்து கொள்ளாமலும், அவர்களுடைய சம்மதத்தைப் பெரு மலும், இந்தியாவைப் போரில் இழுத்து, போர்க்கால அவசர ராணுவ சர்வாதிகார அரசை அமைத்ததன் வாயிலாக ஆளுவோருக்கும், ஆளப்படுவோருக்கும் இடையிலுள்ள பிணக்குத் தான் வெளிப்பட்டது.

இரண்டாவது உலகப்போர் இந்திய விடுதலைப் பிரச்னையை அவசரப் பிரச்னையாக்கி விட்டது. ''தாங்கள் எந்தவித அரசிய லமைப்பின்கீழ் வாழவிரும்புகிருர்களோ அதைத் தேர்ந்தெடுத்து கொள்ள எல்லா மக்கள்களுக்கும் உரிமை உண்டு'' என்று ஐக்கிய நாடுகளின் கூட்டணி அதிகார பூர்வமாக அறிவித்தது. முதல் உலகப் போரின்போது நடந்ததற்கு மாருக ஐக்கிய நாடுகளின் கூட்டணியில் பிரிட்டன், ஐக்கிய அமெரிக்கா ஆகிய இரண்டு ஏகாதிபத்திய வல்லரசுகள் மட்டுமன்றி தேசீய சீன, சோஷலிஸ்டு சோவியத் யூனியன் ஆகிய இரண்டு ஏகாதிபத்தியமல்லாத வல்லரசுகளும் இருந்தன. உலக முழுவதும் வலிய தேசீய விடுதலை இயக்கங்கள் பாசிஸத்தை எதிர்த்துத் தேசீய சுதந்திரம் பெறுவதற்காகப் போராடிக் கொண்டிருந்தன. உலகத்திலிருந்த அந்தச் சூழ்நிலையில் எந்தத் தேசீய சுதந்திரத்தை வேண்டிப் பல நாட்டு மக்கள் போராடிக் கொண்டிருந்தார்களோ, இந்திய

ராணுவத்தினர் உயிரைத் துறந்து கொண்டிருந்தார்களோ, அதே சுதந்திரத்தை இந்திய மக்கள் முன்னைவிடத் தீவிரமாக வேண்டியதில் வியப்பில்லை.

ஆசியாவில் யுத்தம் நிகழ்ந்து கொண்டிருந்த பிரத்யேகமான சூழ்நிலை இந்த அவசரத்தை அதிகமாக்கியது. அதுவரை ஆசியா வில் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆதிக்கம் ஜப்பானியத் தாக்குதலை யும் விரிவையும் தற்கொலைக்கொப்பான முறையில் தூண்டியும் உதவியும் வந்தது; ஆனால் பேர்ல் ஹார்பரை ஜப்பானியர் தாக்கியபின் ஏகாதிபத்திய ஆதிக்கத்தின் அஸ்திவாரமே உலுக்கப் பெற்றது. தென்கிழக்கு ஆசியாவின் பரந்த பிரதேசங்கள் பெரும் பாலும் எதிர்ப்பின்றிப் படையெடுப்பாளர்க்குமுன் வீழ்ந்ததும், அங்கே இறக்குமதி செய்யப்பட்ட ராணுவத் துருப்புகள் தற்காப் புக்காக வெற்றி காணாமல் போராடியதும், அந்நிய ஆட்சியாளர் களால் ஆளப்படும் மக்களைத் திரட்ட முற்றிலும் இயலாத நிலையும் பழைய காலனி ஆட்சிமுறை திவாலாகி உள்ளூர அழுகி யிருந்ததை எல்லோரும் காண வெளிப்படுத்தின.

இந்தக் காட்சி இந்திய மக்களின் மனப்பான்மையைப் பெரிதும் பாதித்தது. பிரிட்டிஷாரின் வலிமை வெல்ல இயலாதது என்ற பிரமை உடைக்கப் பெற்றது. ஜப்பானியப் படைகள் இந்திய எல்லைகளை அடைந்து ஊடுருவின. அச்சு வல்லரசுகள் தங்களை அணுகிய முன்னாள் காங்கிரஸ் தலைவர் சுபாஷ் போஸை யும், இந்திய தேசீய ராணுவத்தையும், இந்தியாவின்பால் தங்க ளுக்கு அக்கறையுள்ளதுபோல் நடிக்கவும் தங்கள் படையெடுப் புக்கும் வெற்றிகளுக்குமான உண்மையான நோக்கத்தை மறைக்க சாமர்த்தியமாய் பயன்படுத்திக் கொண்டன. ஒரு சுதந்திர இந்தியாவில் இந்தப் பிரசார தந்திரம் பலித்திராது. ஆனால் அடிமை இந்தியாவிலோ அது ஓரளவு பலித்ததைத் தவிர்க்க முடியாது.

இவ்வாறாக, ஜனநாயகக் கொள்கைகளுக்காக மட்டும் அல்ல, இந்தியாவின் தற்காப்புக்கும் ஐக்கிய நாடுகளின் முழு பேரணியின் தற்காப்புக்கும் இந்தியா விரைவில் சுதந்திரம் பெற்றாக வேண்டும் என்ற நிலையை இரண்டாவது உலகப்போர் உண்டாக்கியது. இந்தியாவின் தேசீயத் தலைவர்கள் பாசிஸத்தின் உலகக் கூட் டணிக்கு எதிராக ஜனநாயக சக்திகளுடனேயே தங்கள் நாட்டின் நலன் பிணைந்துள்ளது என்பதைத் தொடக்கத்திலேயே அறிந்திருந் தார்கள். பிரிட்டனிலிருந்த ஆட்சியாளர்கள் பாசிஸத் தாக்குதல் களுக்கு உதவியும், துணைபுரிந்தும் வந்த காலத்திலேயே, பாசிஸத் துக்கு ஆதரவளிக்கும் பிற்போக்குக் கொள்கைகளுக்கு விரோத மாக அவர்கள் இந்த உண்மையை அறிந்து போராடினார்கள்.

அச்சு நாடுகளுக்கு எதிராக ஐக்கிய நாடுகள் நடத்தும் யுத்தத்தில் பாசிஸம் தோல்விகண்டு, தேசீய சீனுவும், சோஷலிஸ்டு சோவியத் யூனியனும், ஐரோப்பாவின் ஜனநாயக விடுதலை இயக்கங்களும் சேர்ந்துள்ள கட்சியின் வெற்றியோடுதான் இந்தியாவின் நலன்கள் இணைந்துள்ளன என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள். ஆனுல், ஐக்கிய நாடுகளின் அணியுடன் இந்தியா தானுக கூட்டு சேர்ந்து மக்களின் முழு வலிமையையும் ஒன்று திரட்ட வேண்டுமானுல், இந்தியா சுதந்திரமாக ஓர் இந்தியத் தேசீய அரசின் ஆட்சியில் இருக்க வேண்டும் என்று அவர்கள் கோரினுர்கள், சரியாகவே கோரினுர்கள். இந்தக் கோரிக்கை ஐக்கிய நாடுகளின் நலன் களுக்கு உகந்ததே. ஐக்கிய நாடுகளின் எல்லா நாடுகளிலுமிருந்த ஜனநாயகவாதிகள் மட்டுமல்ல, பிரிட்டனின் நேச நாடுகளின் பிரதிநிதிகளும், குறிப்பாக ஜனுதிபதி ரூஸ்வெல்டும், மார்ஷெல் சியாங்கே ஷேக்கும் அதை ஆதரித்தார்கள்.

ஆயினும், இரண்டாவது உலகப் போரின் முடிவு இந்தியா வுக்கு விடுதலை கொண்டுவரவில்லை. பிரிட்டனின் ஆட்சிப் பீடத் தில் டோரிகள் இருந்தார்கள்; இந்திய விடுதலைக்கான ஒவ்வொரு முயற்சியையும் அவர்கள் எதிர்த்தார்கள்; இந்தியாவின் தலைவர் களிடம் பொறுப்பான அதிகாரம் தருகிற ஒரு போர்க்கால, தற்காலிக சமாதான ஏற்பாடு செய்வதைக்கூட அவர்கள் எதிர்த் தார்கள். ''பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைத் திவால் ஆக்கும் பணிக்குத் தலைமை வகிக்க நான் பிரிட்டனின் பிரதம மந்திரி ஆக வில்லை,'' என்ற சர்ச்சிலின் கொள்கையே, அபாயமும் ஆபத்து மாக இருந்த நெருக்கடி காலத்திலும், பிரிட்டனின் வழிகாட்டிக் கொள்கையாக விளங்கியது. 1942இல் கிரிப்ஸ் தூது தோற்றது. ஏமாற்றமும், தாங்கள் இருந்த நிலைமையின் சிக்கல்களினுல் கலக்க மும் அடைந்த தேசீய இயக்கம் ஆகஸ்டுப் புரட்சியை அடுத்துத் தோன்றிய குழப்பத்தில் மாட்டிக் கொண்டது. இந்தியாவின் தேசீயத் தலைவர்கள் சிறையில் அடைக்கப்பட்டார்கள்; தலைவர் கள் கைதானதைத் தொடர்ந்து, அவர்களுடைய சம்மதமில்லாமல் நடந்த கிளர்ச்சியும் ஒழுங்கீனமும் எளிதில் அடக்கப்பட்டன.

போரின் முடிவில் இந்தியா இன்னும் அடிமை நாடாகவே இருந்தது; அரசியல் நிலைமை முட்டுக்கட்டை நிலை.

ஆனுல், பாசிஸத்தை ஐக்கிய நாடுகள் முறியடித்ததால் ஒரு புதிய நிலைமை உருவாகியது. உலகம் முழுவதும் பாசிஸ வல்லரசு கள் ராணுவத் தோல்வி கண்டு சரிந்ததை, 1917ஆம் ஆண்டுக்குப் பிறகு பிற்போக்குச் சக்திகளுக்கு விழுந்த மிகப் பலமான அடி என்று சொல்லலாம். எல்லா நாடுகளிலும் மக்கள் இயக்கங்கள் புத்துணர்ச்சியோடு எழுந்தன. ஏகாதிபத்தியம் மிகவும் வலுவுற்

றது. உலகத்தின் வரைபடத்திலிருந்து ஜெர்மானிய, இத்தாலிய, ஜப்பானிய ஏகாதிபத்தியங்கள் மறைந்து விட்டன. பிரிட்டன், ஐக்கிய அமெரிக்கா ஆகிய இரண்டு பெரிய ஏகாதிபத்திய வல்லரசுகளுடன், பிரான்ஸ், பெல்ஜியம், ஹாலந்து, போர்த்துகல் ஆகிய நாடுகளின் கீழ்த்தர காலனி சாம்ராஜ்யங்கள் இருந்தன. ஐரோப்பாவில் பாசிஸத்துக்குப் பணிந்தோ, கூட்டு சேர்ந்தோ இருந்த மிதவாத அரசுகள் அகற்றப்பட்டு புதிய ஜனநாயக அரசுகள் தோன்றின. பிரிட்டனில் டோரிஸம் பிரமிப்பூட்டும் தேர்தல் தோல்வியை அநுபவித்தது; முதன்முறையாகப் பெரும்பான்மைத் தொழிற்கட்சி அரசு ஏற்பட்டது. ஆசியா எங்கும் காலனி விடுதலை இயக்கங்கள் முன்னேறின. இந்தோனிசியக் குடியரசு ஆங்கிலோ-டச்சு ஏகாதிபத்தியத்தின் ராணுவத் தாக்குதலையும், அதன் ஜப்பானியத் துருப்புகளையும் எதிர்த்துப் போராடியது. இந்தியாவுக்குள் சுதந்திரக் கோரிக்கை நாடெங்கும் பரவியது; தேசீயப் புரட்சி இயக்கம் 1945-46 மாரிக் காலத்தில் புதிய எழுச்சி கண்டு, ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமையை வெளியிடும் பேரணிகளாகவும், இந்தியப் படைவீரர்கள் முகாமில் தேசீயப் புரட்சி ஊடுருவியதைக் காட்டும் விதத்திலும் வெளிப்பட்டது.

இந்த நிலையினால், புதிய தொழிற்கட்சி அரசின் நிர்வாகத்திலிருந்த பிரிட்டிஷ் கொள்கையில் புதிய திருப்பம் காண வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. 1946ஆம் ஆண்டு பிப்ரவரி 19ஆம் நாள் பிரதமர் திரு. அட்லி இந்தியாவுக்கு அமைச்சரவைத் தூது கோஷ்டியை அனுப்பப் போவதாய்த் தாம் செய்துள்ள முடிவை அறிவித்தார். மார்ச் 15ஆம் நாள் தூது கோஷ்டி புறப்பட்ட போது திரு. அட்லி பின்வருமாறு குறிப்பிட்டார்:

> ''இப்போதைய நிலைக்கு இறந்த காலத்துத் தத்துவத்தைக் கையாளுவது சரியல்ல; 1946 இன் வெப்ப தட்ப நிலை 1920 இலோ, 1930 இலோ அல்லது 1942 இலோகூட இருந்த வெப்பதட்ப நிலையல்ல.
>
> ''ஒரு மகா யுத்தத்தைவிட அதிகமாய் வேறு எந்த சக்தியும் மக்களின் கருத்து இயங்கவும் முன்னேறவும் உதவிட முடியாது. இரண்டு உலகப் போர்களுக்கு இடையில் இருந்த காலத்திலிருந்து இந்தக் கேள்வியோடு தொடர்புள்ள ஒவ்வொருவருக்கும், 1914-18இல் நிகழ்ந்த உலகப் போர் இந்தியரின் விழைவிலும், கருத்துகளிலும் எத்தகைய விளைவுகளை உண்டாக்கியது என்பதை அறிவர். சமாதான காலத்தில் அமைதியாக வீசும் அலை போர்க் காலத்திலும், அதற்குப் பின்னும் விரைவு கொள்கிறது; ஏனெனில் போர்க் காலத்தில் அதற்கு ஓரளவு கரை கட்டப் பட்டுள்ளது.

''உலகத்தில், எதிர்காலத்தில் தன்நிலை என்ன, அந்தஸ்து என்ன என்பதை இந்தியாவே முடிவு செய்ய வேண்டும். ஐக்கிய நாடுகளாலோ, காமன்-வெல்த்தினுலோ ஒற்றுமை வரலாம். ஆனுல் உலக நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ளாமல் எந்த நாடும் ஒதுங்கியிருக்க முடியாது.

''பிரிட்டிஷ் காமன்-வெல்த்துக்குள் இருக்க இந்தியா இணங்கும் என்று நான் நம்புகிறேன். அதனுல் இந்தியாவுக்குப் பெரு நன்மை உண்டாகும் என்பது நிச்சயம்; ஆனுல், அது அவ்வாறு செய்வதானுல் தன் விருப்பப்படி செய்யவேண்டும்; ஏனெனில் காமன்-வெல்த்தோ, சாம்ராஜ்யமோ வெளி நிர்ப் பந்தச் சங்கிலியால் பிணைப்புண்டது அல்ல. சுதந்திர மக்களின் சுதந்திரச் சங்கம் அது.

''மாருக, இந்தியா—சுதந்திரத்தை வேண்டினுல்—அதற்கு அந்த உரிமை உண்டு என்பதே நம் கருத்து. இந்த மாறுதலை இயன்றவரை எளிதாகவும் வசதியாகவும் நிகழ்த்த உதவ வேண்டியது நம் பொறுப்பாகும்.''

பிரிட்டிஷாரின் அதிகார பூர்வமான அறிவிப்பில் ''சுதந்திரம்'' என்ற சொல் முதன் முறையாக இந்தியாவின் லட்சியமாய்க் குறிப்பிடப்பட்டதை உலகெங்கும் கவனித்தார்கள்.

ஆயினும், பிரிட்டிஷ் அரசின் பிரேரணைகளைத் தொடர்ந்து அமைச்சரவைத் தூது கோஷ்டியை இந்தியாவுக்கு அனுப்பியதன் பொருள் இந்திய விடுதலைதான் என்று இந்தியாவிலும் வெளியிலும் பல இடங்களில் பரவலாக எதிர்பார்க்கப்பட்ட ஆர்வம் முதிர்ச்சி பெருததேயாகும். அமைச்சரவைத் தூது கோஷ்டியின் பேச்சு வார்த்தைகளையும், அவற்றின் தொடர்ச்சியாகச் செய்யப் பெற்ற புதிய அரசியலமைப்புப் பிரேரணைகளையும் பற்றிய வரலாறு இந்தப் புத்தகத்தின் பின்னுல் ஆராயப்படும். இந்தப் பேச்சு வார்த்தைகளின் இறுதி விளைவும், முயற்சிகளும் ஸ்தூலமான அநுபவத்தால்தான் விளங்கும். ஆனுல், அரசியலமைப்பை ஒழுங்கு செய்து கொள்வதற்காகவும், சமரசம் செய்து கொள்வதற்காகவும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் நீண்ட தொடர் முயற்சிகளாகவே அந்தப் பிரேரணைகள் கருதப்படுமேயன்றி, இந்திய சுதந்திரத்தின் தொடக்கமாகக் கருதப்படமாட்டா என்றே வரலாற்று ஆராய்ச்சி முடிவு காணக்கூடும்.

1946இல் இந்தியா பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாகவே இருக்கிறது. எதிர்காலத்தில் சுதந்திரத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமையைப் பெயரளவில் வழங்கிய இந்தச் சலுகையை, அந்த உரிமையைப் பயன்படுத்திக் கொள்ளக்

கூடிய அரசியல் நிர்ணயச் சட்டத்தை இயற்றும் நிறுவனத்தின் முன்னலேயே தீர்மானிக்கப் பெற்ற பிரதிநிதித்துவமற்ற தன்மையும், அமைப்பும், நடைமுறையும் பெரிதும் கறைப்படுத்துகிறது.

வருகிற காலத்தில் ஏகாதிபத்தியம் இன்னும் கொஞ்ச காலத்திற்கு ஆயுள் பெறலாம்; ஏகாதிபத்தியம் புதிய வடிவங்களில் தொடர்ந்து ஆதிக்கம் செலுத்தலாம்; இந்திய விடுதலைப் போர் இனிதான் வெற்றி காண வேண்டும்.

ஆனல், வரலாற்று நிகழ்ச்சிகளின் பிரவாகம் இந்திய சுதந்திரத்தை நோக்கியே போகிறது என்பதையும், இந்தப் பரிபூர்ண சுதந்திரம் மிக அண்மையில் பலிக்கும் என்பதையும் பற்றி எந்த இடத்திலும் யாருக்கும் எவ்விதச் சந்தேகமும் இன்று இருக்க முடியாது.

இன்றைய இந்தியாவைப் பற்றி நான் செய்யும் ஆய்வின் சூழ்நிலை இதுவே. ஏகாதிபத்திய ஆட்சியின் இறுதி நாட்களைப் பற்றியும், அந்த நெடுங்கால ஆதிக்கத்தின் விளைவைப் பற்றியும் இந்திய மக்கள் மேன்மேலும் முன்னேற்றம் காண்பது பற்றியும் நான் ஆராய்கிறேன்.

## 2. ஏகாதிபத்தியமும் இந்தியாவும்

பல நூற்றுண்டுகளாக நவீன ஏகாதிபத்தியத்தின் ஊடுருவலுக்கும் ஆதிக்கத்துக்கும் முக்கியத் தளமாக இந்தியா இருந்து வருகிறது.

இந்தியாவின் பரப்பு 1,808,679 சதுர மைல்கள்; அல்லது, பிரிட்டிஷ் தீவுகளின் பரப்பைப் போல் பதினைந்து மடங்கு, கிரேட் பிரிட்டனின் பரப்பைப் போல் இருபது மடங்கு. சென்ற 1941 ஆம் ஆண்டு ஜனத்தொகைக் கணக்குப்படி இந்தியாவின் ஜனத்தொகை 38.9 கோடி; இது 40 கோடியை நெருங்குவதாய் மதிப்பிடப்படுகிறது; அல்லது, மனித இனத்தில் ஏறக்குறைய ஐந்தில் ஒரு பங்கு.

இந்தியாவின் 40 கோடி மக்கள் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் மொத்த மனிதத் தொகையில் முக்கால் பங்கு ஆவர்; பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் கடல் கடந்த பிரதேசங்களில் வாழும் மக்கட் தொகையில் ஐந்தில் நான்கு பங்கு; பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் காலனி அடிமை மக்கள் தொகையில் சுமார் பத்தில் ஒன்பது பங்கு.

தற்போது நடக்கும் போர் மூண்ட காலத்தில், எட்டு முக்கிய காலனி சாம்ராஜ்யங்களின் பரப்பை ஒப்பிட்டு நோக்கினல், பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்ட இந்தியாவின் மக்கட் தொகை

1938 இல் உலகத்தில் காலனி ஆட்சியிலுள்ள மக்கள் தொகையில் பாதிக்கு மேலாவர்; எஞ்சியுள்ள காலனி சாம்ராஜ்யங்களான பிரஞ்சு, ஜப்பான், டச்சு, அமெரிக்க, பெல்ஜியன், இத்தாலிய, போர்த்துக்கீசிய சாம்ராஜ்யங்களின் காலனி மக்கட் தொகையைக் கூட்டி அதற்கு ஒன்றரை மடங்கு ஆவர். ஏகாதிபத்தியத்தின் நேரான காலனி உடைமைகளில் இந்தியா வெகு தொலேவில் இருப்பது மட்டுமல்ல, அது மிகவும் பழமையானது, நீண்ட காலமாக ஆதிக்கம் செலுத்தப் படுவது, பல தலைமுறைகளாகச் சுரண்டப் படுவது. ஆகவே காலனி ஆட்சி முறை இயங்கும் முறையையும் விளைவையும் மிக முழுமையாக எடுத்துக் காட்டுவது.

காலனிப் பிரதேசங்களைத் தேடிய ஐரோப்பிய அரசுகள் இந்தியாவையும் இந்தியாவின் செல்வத்தையும் நோக்கித்தான் தங்கள் முதல் முயற்சிகளைச் செய்தன; இந்தியாவுக்குப் புதிய கடற்பாதை கண்டுபிடிக்க அவை முயலுகையில்தான் அமெரிக்காவையும், மேற்கிந்தியத் தீவுகளையும் கண்டுபிடித்தன; பிற்காலத்தில்தான் அவை ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, சீனு, ஆசியாவின் மற்ற பகுதிகளில் ஊடுருவிப் பரவத் தொடங்கின.

வரை படத்தைப் பார்த்தால், ஏகாதிபத்தியத்தின் ஆதிக்கத்துக்கு இந்தியா மையப் பிரதேசமாக இருந்திருப்பதை எளிதில் காணலாம்.

இந்து மகா சமுத்திரத்தின் பெரும் பரப்பைச் சுற்றி, இந்தியாவைத் தலையாய கேந்திரமாய்க் கொண்டு, மேற்கே பாரசீக வளைகுடாவும், புதிய மத்தியக் கிழக்கு சாம்ராஜ்யமும், அரேபியாவும்; தென்மேற்கே செங்கடலும், எகிப்தும், ஆப்பிரிக்கா முழுவதும்; கிழக்கில் பர்மா, மலாய் ஸ்டேட்கள், கிழக்கு இந்தியத் தீவுகள்; தென் கிழக்கில் ஆஸ்திரேலியா; சிங்கப்பூர் வாயில் வழியாகவும், அண்மையில் ஏற்பட்ட புதிய பர்மா—யூனன் சாலை வழியாகவும், சீனுவுக்குச் செல்லும் பாதை.

வடக்கே, தொளைக்க முடியாத மலை எல்லைகளையும் (வட மேற்கில் மட்டும் படையெடுப்புக்கு வழி உண்டு.) கடல்களை ஆளும் வசதியையும் உடைய இந்தியா, இந்தப் பிரதேசம் முழுவதிலுமே ஆதிக்கம் செலுத்துவதற்கு சௌகரியமான மையக் கோட்டையாகவும், தளமாகவும் விளங்குவதன்றி செல்வத்துக்கும், சுரண்டலுக்கும் வளமான விளைநிலமாகவும் விளங்குகிறது.

நான்கு நூற்றுண்டுகளுக்கு முன்னுல், 1500 இல் போர்த்துகீசியர்கள் கள்ளிக்கோட்டையில் தங்கள் தொழிற் கூடத்தை நிறுவி, 1506 இல் கோவாவைக் கைப்பற்றியது முதல் இந்தியாவில்

ஐரோப்பிய முதலாளித்துவ ஊடுருவல் தொடங்கியது. பிரிட்டிஷ் கிழக்கு இந்தியக் கம்பெனி 1600 இலும், டச்சு கிழக்கு இந்தியக் கம்பெனி 1602 இலும், பிரஞ்சு கம்பெனி டே இண்டே 1664 இலும் நிறுவப்பட்டன. வியாபார ஒப்பந்தங்களை நாடு பிடிக்கும் கருவிகளாய்ப் பயன்படுத்திக் கொண்டு பிரிட்டிஷார் இந்தியாவை நேரில் ஆளத் தொடங்கியது பதினெட்டாம் நூற்றாண்டின் இடையிலிருந்து. 1757 ஆம் ஆண்டில் நடந்த பிளாஸி போரைத் துவக்கம் என்று வழக்கமாய்க் கணக்கிடுவதை ஏற்றால், இந்தியாவில் இரண்டு நூற்றாண்டுகளாய்ப் பிரிட்டிஷாரின் ஆட்சி நடைபெறுகிறது.

ஐரோப்பாவில் முதலாளித்துவ வளர்ச்சிக்கும், பிரிட்டிஷாரின் உலக ஆதிக்கத்துக்கும்,ஏகாதிபத்தியத்தின் அமைப்பு முழுவதற்கும் முக்கியமான ஆதாரங்களில் ஒன்றாக, இந்தியாவை மேலை நாகரிகம் வெற்றி கொண்டதைக் கூற வேண்டும். யாரும் வெளிப்படையாக ஒப்புக் கொள்ளாவிட்டாலும், இரண்டு நூற்றாண்டுகளாக ஐரோப்பாவின் வரலாறு, இந்தியா மீது செலுத்தும் ஆதிக்கத்தை ஒட்டித்தான் வளர்ந்துள்ளது. ஸ்பெயினோடும், போர்த்துகலோடும், ஹாலந்தோடும், பிரான்சோடும், ரஷ்யாவோடும், ஜெர்மனியோடும், பிரிட்டன் தொடர்ச்சியாக நடத்திய போராட்டங்களுக்குப் பின்னால் இந்தியாவுக்குக் கடல் வழி கண்டு பிடிக்கும் விழைவும், இந்தியா மீது ஆதிக்கம் செலுத்தும் நோக்கமும் இருப்பதைக் காணலாம். இங்கிலாந்தில் உள்நாட்டு அரசியல் போக்கிலும், இங்கிலாந்தில் மிகப் பாடுபட்டு, உறுதியுற்றுக் கட்டப் பெற்றுள்ள சமூக, அரசியல் அமைப்பின் அடித்தளமாக அதே ஆதிக்க நோக்கம் இருப்பதைக் காணலாம்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் அச்சாக இந்தியா நீண்ட காலமாய்க் கருதப்பட்டு வருகிறது. இந்தியாவில் மேலும் விரிவு அடைந்து கொண்டிருந்த ஏகாதிபத்தியத்தின் புகழ் பெற்ற இறுதி வைசிராயான கர்ஸான் பிரபு 1894 இல் (அவர் வைசிராய் ஆகும் முன்) பின் வருமாறு எழுதினார்:

> "இந்தியாவைக் கைப்பற்றி அரசு அமைத்த சாதனைகள் தான் உலகக் கருத்தில் இங்கிலாந்துக்கு இப்போதுள்ள அந்தஸ்து கிடைக்க உண்மைக் காரணங்களாயின என்று டி டாக்வில் குறிப்பிட்டது போல, பிரிட்டனின் ஆசியக் கொள்கையால் விளைந்துள்ள கௌரவமும் செல்வமும்தாம் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் அஸ்திவாரக் கற்கள். அங்கே, பண்டைய ஆசியக் கண்டத்தின் இருதயப் பிரதேசத்தில், கீழை நாடுகளை என்றுமே ஆண்டு வந்த அரியணை மீது அவள் அமர்ந்திருக்கிறாள். அவள் செங்கோல், நிலமும் கடலும் கடந்து

நீண்டுள்ளது. 'கடவுளென' அவள் 'மும்முனைச் சூலம் ஏந்தி, அரசனென மகுடம் அணிந்திருக்கிறாள்.' ''

(மாண்புமிகு ஜி. என். கர்ஸான் எழுதிய 'தொலை கிழக்குப் பிரச்னைகள்' என்ற நூலிலிருந்து-1894, பக்கம் 419).

நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு, 1898 இல், ஏகாதிபத்தியத்தின் வெறிகொண்ட துதி பாடகரான இவர் புதுக்குரலில் பேசினார்:

''நம் சாம்ராஜ்யத்தின் அச்சு இந்தியா . . . . சாம்ராஜ்யம் தன் குடியேற்ற நாடுகளில் எதனை இழந்தாலும் நாம் பிழைத்திருக்க முடியும். ஆனால், நாம் இந்தியாவை இழந்தால் நம் சாம்ராஜ்யச் சூரியன் அஸ்தமித்துவிடும்.

அடிக்கடி மேற்கோள் காட்டப் பெறும் இந்த அலங்காரச் சொற்களிலேயே, நெருங்கி வந்துகொண்டிருக்கும் முடிவின் அறிகுறிகள் தோன்றத் தொடங்கிவிட்டன.

பிரிட்டனின் பொருளாதாரத்திற்கும் நிதி விஷயத்திற்கும், பிரிட்டிஷ் முதலாளித்துவத்தின் அமைப்புக்கும், வளர்ச்சிக்கும் இந்தியா எவ்வளவு முக்கியமானது என்பதை வரலாற்றின் ஏடுகளில் காணலாம். அது இப்போது தளருகிறது என்றாலும் கணிசமான அளவிலேயே இருக்கிறது. 19 ஆம் நூற்றாண்டில் ஐந்தில் நாலு பங்கும், 1914—18 போர் மூளும் காலத்தில்கூட மூன்றில் இரண்டு பங்குமாக இந்திய மார்க்கெட்டை ஏகபோகமாய்ப் பிரிட்டன் பயன்படுத்தி வந்தது; இனி அந்த நிலை திரும்ப முடியாது. 1929 முதல் பிரிட்டிஷ் சரக்குகளுக்கு ஒரே பெரிய மார்க்கெட் என்ற நிலைமாறி, அது 1938 இல் மூன்றாவது ஸ்தானத்திற்குச் சென்று விட்டது. ஆனால், இந்திய வியாபாரத்தின் பெரும் பகுதி பிரிட்டிஷாரின் கைகளிலேயே இருந்தது. 1933 இல் பிரிட்டிஷ் முதலீடு 100 கோடி பவுன் (இண்டியன் சேம்பர் ஆப் காமர்ஸின் மதிப்பீட்டின்படி) என்று, அதாவது பிரிட்டன் கடல் கடந்த நாடுகளில் செய்திருந்த மொத்த முதலீட்டில் நான்கில் ஒரு பங்கு என்று மதிப்பீடு செய்யப்பட்டது. இரண்டாவது உலகப் போரின் போதும், பிறகும் ஏற்பட்ட மாறுதல்களை அதிகார பூர்வமாக மதிப்பீடு செய்யாவிட்டாலும் அந்த மொத்தத் தொகை இப்போது குறைந்துவிட்டது. போர் நிர்ப்பந்தத்தால் கடல் கடந்த நாடுகளில் பிரிட்டன் செய்திருந்த முதலீடுகள் தாராளமாக விற்பனை செய்யப்பட்டாலும் இந்திய முதலீடுகளை அது மிகவுறுதியாகத் தன் வசமே வைத்திருந்தது. போர்க் காலத்தில் பணம் தராமலே இந்தியாவிடமிருந்து சரக்குகளை வாங்கிக் கொண்டதால் ஏற்பட்ட

ஸ்டர்லிங் பாக்கிகளால் அந்த மொத்த முதலீட்டுத் தொகை, கணக்கு ஏட்டின்படி, அளவுக்கு மீறி ஈடு செய்யப்பட்டு விட்டது. அந்த ஸ்டர்லிங் பாக்கிகளின் எதிர்கால விதி இனிமேல் தான் அறுதியிடப்பட வேண்டும். இந்தியாவிலிருந்து பிரிட்டன் ஏதாவதொரு வடிவத்தில் ஆண்டுதோறும் 'நன்கொடை'யாக எடுத்துக் கொள்ளும் தொகை £ 15 கோடி பெறுமானமுடையது என்று மதிப்பிடப்படுகிறது. (1921—22 ஆண்டை அடிப்படையாக வைத்துக் கணக்கிடப்பட்டது. ஷாவும், கம்படாவும் எழுதிய 'இந்தியாவின் செல்வமும், வரி விதிக்கக் கூடிய அளவும்' என்ற நூலின் 234 ஆம் பக்கம் பார்க்க.) அல்லது, அதே காலத்தில் இந்தியப் பட்ஜட்டின் மொத்தத் தொகையை விட மிகுதி; பிரிட்டனின் மக்கட் தொகையில் நபருக்கு ஆண்டுதோறும் £ 3 தருவதற்குச் சமமான தொகை; மதிப்பீடு செய்யப்பட்ட காலத்தில் பிரிட்டனில் உபரி—வரிசெலுத்துவோர் ஒவ்வொருவருக்கும் ஆண்டுக்கு £ 1706.

ராணுவத் தந்திரத் துறையிலும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு இந்தியாவின் முக்கியத்துவம் சற்றும் குறைந்ததல்ல; இந்தியாவை மையமாய் வைத்துக் கொண்டு தான் சாம்ராஜ்யத்தை விரிவுபடுத்தும் பெரும்பாலான முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன என்பதுடன், கடல் கடந்த நாடுகளில் பிரிட்டன் நடத்திய எண்ணிறந்த போர்களுக்கும் படையெடுப்புகளுக்கும் பணபலமும், ஆள் பலமும் அளித்தது இந்தியாதான். (மெடிடரேனியன் கடல், சூயஸ் கால்வாய், செங்கடல், வங்காள விரிகுடா, மத்தியக்கிழக்கு சாம்ராஜ்யம், சிங்கப்பூர் ஆகியவற்றை நிர்வாகம் செய்யும்) ராணுவத் தந்திரத்திட்டங்கள் இந்தியாவைத் தலைமையகமாக வைத்து தொடர்ச்சியாக வகுக்கப் பட்டன. இரண்டாவது உலகப் போரின் போது ராணுவத் துறையில் இந்தியாவின் முக்கியத்துவம் மேலும் வெளிப்பட்டது.

## 3. இந்தியாவில் ஏகாதிபத்தியம் திவாலாகும் நிலை

இந்தியாவில் ஏகாதிபத்திய ஆட்சி நடந்ததன் விளைவு என்ன?

நோக்கர்கள் விதவிதமான சமூக, அரசியல் கருத்துக்களைத் தெரிவித்தாலும், வலதுசாரிகளோ, இடதுசாரிகளோ அவர்கள் எல்லோருக்கும் ஒரே ஒரு விஷயத்தில் கருத்தொற்றுமை இருக்கிறது. இரண்டு நூற்றாண்டுக்கால ஏகாதிபத்திய ஆட்சிக்குப் பிறகு, உலகத்தில் வேறெங்கும் ஈடு காணமுடியாத அருவறுக்கத்தக்க வறுமையும், துன்பமும் பீடித்த மக்கள் நிறைந்த ஒரு நாடாக இந்தியா காட்சி தருகிறது.

நாட்டின் இயற்கையான வறுமையோ, வளக்குறைவோ பற்றிய விஷயம் அல்ல இது. இந்திய மக்கள் வாழும் பிரதேசங்கள் பெரிதும் இயற்கைச் செல்வமும், வளமும் வாய்ந்தவை; முழுமை யாகப் பயன்படுத்திக் கொண்டால் இப்போதுள்ள மக்கள் தொகையை விட அதிகமான மக்களுக்கு ஏராளமான உணவு வழங்கவல்ல மண்வளமும், விவசாய உற்பத்திச் சக்தியும் படைத்த நாடு இந்தியா என்பதை இன்னும் விரிவாய்ப் பின்னல் காணப் போகிறோம்; தேர்ந்த தொழிலுற்பத்திக்குத் தேவையான நிலக்கரி, இரும்பு, எண்ணெய், நீர், மின்சாரம் போன்ற மூலப் பொருள்களும், மக்களின் தொழில் நுணுக்க அறிவும், சாதுரி யமும், ஈடுபாடும் (ஏகாதிபத்திய ஆட்சிக்கு முன்பு, உலகத்தி லேயே முதலிடம் வகித்த இந்தியரின் தொழில் நுணுக்க அறிவை அவர்கள் முற்றிலும் இழந்து விடவில்லை.) இங்கு மிகுதி.

ஆனல், இந்த வளங்களும், வாய்ப்புகளும் வளர்க்கப்பட வில்லை. பொதுவாக, முதலாளித்துவத்தினுல் சேதத்தையும் உற்பத்தித் திறனை முழுமையாகப் பயன்படுத்த இயலாமையையும் தவிர்க்க முடியாது என்றல், அந்தத் தோல்வி இந்தியாவில் உச்சிமுனையை எட்டி விட்டது; இவ்வகையில், மற்ற ஏகாதி பத்திய நாடுகளை விட வேறுபட்ட நாடாக இந்தியா தோன்று கிறது.

1934 வரை இந்தியாவின் பொருளாதார, தொழில் வளர்ச்சியைப் பற்றி மிகப் பெரிய அளவில் ஆராய்ச்சி செய்த அமெரிக்கப் பேராசிரியர் புகானன் பின்வரும் துயரகரமான முடிவுக்கு வருகிறுர்:

> ''தொழிலுற்பத்திக்குத் தேவையான எல்லா அடிப்படை மூலகங்களும் இங்கே இருக்கின்றன; ஆனல் ஒரு நூற்றண் டுக்கு மேலாக இந்த நாடு தொழிற்சாலைகளில் உற்பத்தியான பொருள்களைப் பெருமளவில் இறக்குமதி செய்கிறது; ஏனைய நாடுகளில் தேர்ந்த யந்திர சாதனங்களும் அமைப்பும் வாய்ந்த சில சாதாரணத் தொழில்களே இங்கு அபிவிருத்தியடைந் துள்ளன. கச்சாப் பஞ்சும், கச்சாச் சணலும், எளிதில் வெட்டி எடுக்கப்படும் நிலக்கரியும், எளிதில் வெட்டி எடுக்கப்படும் மிக உயர்தரமான இரும்புத் தாதுப் பொருளும், லாபகரமான வேலை இல்லாமையால் அடிக்கடி பட்டினி கிடக்கும், பெருகி வரும் மக்களும், உலகின் வேறெந்த நாட்டிலும் காணக் கிடைக்காத அளவில் தங்கம், வெள்ளிக் குவிப்பும்.....தன் எல்லைக்குள்ளேயும், அருகிலும் மற்றவர்கள் பெருமளவில் உற்பத்திப் பொருள்களை விற்பனை செய்யும் மார்க்கெட்டும்; இவ்வளவு வசதிகளிருந்தும், ஒரு நூற்றண்டுக்குப் பிறகு

இந்தியா தன் மக்கட் தொகையில் இரண்டு சதவீதத்தினருக்குத்தான் தொழிற்துறை வாயிலாக வாழ்வளித்து வந்தது.''

(டி.எச். புகானன்: ''இந்தியாவில் முதலாளித்துவத் தொழில் முயற்சியின் வளர்ச்சி.'' 1934; பக். 450)

இந்தியப் பொருளாதாரத்தில் தேர்ந்த நிபுணரும், லண்டன் பல்கலைக் கழகத்தில் வாணிப இயல் விரிவுரையாளருமான டாக்டர் வீரா ஆன்ஸ்டே இந்தியாவில் பொருளாதார வளர்ச்சி தடையுண்டதாய்க் காட்சி அளிப்பதைப் பற்றி வியப்பு தெரிவிக்கிறார்.

''....பதினெட்டாம் நூற்றாண்டுவரை இந்தியாவின் பொருளாதார நிலைமை ஒப்பு நோக்கின் முன்னேற்றம் கொண்டதாகவே இருந்தது; இந்தியாவின் உற்பத்தி முறைகளும், தொழில், வணிக நிர்வாகத் திறனும் உலகத்திலுள்ள வேறு எந்தப் பகுதியோடும் ஒப்பிட்டாலும் சிறந்தவையாக இருந்தன....

''பிரிட்டிஷ் ஆட்சியில் எவ்விதப் பொருளாதார வளர்ச்சியும் காணப்படவில்லை என்று அறுதியிடப்படவில்லை. பிரிட்டனுடனுள்ள தொடர்பின் விளைவாக இந்தியாவுக்கு மலிவாக இறக்குமதி செய்யப்பட்ட சரக்குகளை அளிக்க முடிந்தது; பலவித இந்திய விளைபொருள்களுக்குத் தேவையை அதிகமாக்க முடிந்தது; பொதுநலத் துறை, நிர்வாக முறைகளைப் பயன்படுத்தியதால் இந்தியா (பாசன வசதிகளை விரிவு செய்து) உற்பத்தியைப் பெருக்கி, (ரயில், நீராவிப் படகுகள் வாயிலாக) மிக அதிகமான அளவு தானியங்களையும் மற்ற பொருள்களையும், பல இடங்களுக்கு அனுப்ப முடிந்தது. குறிப்பாக, பத்தொன்பதாம் நூற்றாண்டின், இரண்டாம் பாதியில் இந்தியாவின் மொத்த உற்பத்தியும், வர்த்தகமும் மிக விரைவாய் முன்னேறின.

''ஆனால் இந்த மாறுதல்களால், இந்தியாவுக்கும் மேலைநாடுகளுக்கும் இடையில் ஒன்றையொன்று சார்ந்திருக்கும் ஒரு வகை உறவு உண்டாயிற்று; அதனால் இந்தியா முக்கியமாக மூலப்பொருள்களையும் உணவுப் பொருள்களையும் உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்ததுடன், துணிகளையும், இரும்பு, உருக்குப் பொருள்களையும், யந்திரங்களையும், வேறு பலவித சரக்குகளையும் இறக்குமதி செய்யலாயிற்று. கூடவே மக்கட் தொகையும் ஏறியதால் மொத்த உற்பத்தி அதிகமாகியும் தனிநபர் உற்பத்தியில் குறிப்பிடத்தக்க அபிவிருத்தியைக் காண முடியவில்லை. இந்த விவரங்கள் இந்தியாவில் பொரு

ளாதார வளர்ச்சி 'தடையுண்ட.தாய்'க் காட்சி அளிக்கிறது என்ற கருத்துக்கு வலிமை தருகிறது.

''பத்தொன்பதாம் நூற்றுண்டின் முடிவுவரை பிரிட்டிஷ் ஆட்சியால் மக்களின் செல்வ நிலையில் ஏற்பட்ட விளைவுகள் ஏமாற்றம் தருவதாக இருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை."

(வி. ஆன்ஸ்டே எழுதிய ''இந்தியாவின் பொருளாதார முன்னேற்றம்'' என்ற நூலின் 3ஆம் பதிப்பு, 1936, முன்னுரை, 5 ஆம் பக்கம்).

மிகச் சமீப காலத்தில் நிலைமை மாறியுள்ளது என்றும் தொழில் மயமாக்கும் முயற்சி பெரிதும் முன்னேற்றம் கண்டுள்ளது என்றும் சிலசமயம் கூறப்படுகிறதே, அதை எந்த அளவு ஏற்கலாம்? 1931ஆம் ஆண்டு புள்ளி விபரக் கணக்கை ஆராய்ந்த அதே நிபுணர் எதிர்மறை முடிவுக்குத்தான் வருகிறார்:

''விரைவாக வளரும் தொழில்மய முயற்சியோடு இந்தப் புள்ளி விவரங்களைப் பொருத்திப் பார்ப்பது மிகக் கடினம்... விவசாய வளர்ச்சியோடு ஒப்பிட்டுப் பார்த்தால் தொழில் மய வளர்ச்சி மிகக் குறைவு என்பது மட்டுமல்ல; பொருளாயத முறையில் முன்னேறிய ஒரு தேசத்துக்குத் தேவையான பல சரக்குகளையும், தொழில் நுணுக்க உதவிகளையும் இந்தியா பெரும்பாலும் வெளிநாடுகளிலிருந்தே பெற வேண்டியுள்ளது.... சீரானதொரு பொருளாதார வாழ்க்கை இன்னும் அமையவில்லை; மக்களின் வாழ்க்கைத்தரம் மிகக் கீழ்நிலையிலேயே இருக்கிறது.

(மேலே குறிப்பிடப்பட்ட நூலில் 8 ஆம் பக்கம்.)

தொழில் நுணுக்கத் திறனில் மிக முன்னேறித் தொழில் வளர்ச்சி கண்டுள்ள ஒரு வல்லரசின் ஆட்சி இரண்டு நூற்றுண்டுக் காலம் நடந்த பிறகும், ஏராளமான சாத்தியக் கூறுகளுக்கு இடையில் வருணிக்க முடியாத பெரும் வறுமை நிலவும் முரண்பாடான இந்த நிலைமை (சாதாரணமாய் முதலாளித்துவ நாடுகளில் காணப்படுவதைவிட மிக அதிகமாய்) ஏன் ஏற்பட்டது என்பதை எப்படி விளக்குவது?

இந்த முரண்பாட்டைப் புரிந்துகொள்ள இந்திய மக்களின் சமூக, பொருளாதார நிலையில் ஏகாதிபத்தியம் உண்மையில் எப்படிச் செயல்படுகிறது என்பதை ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

இரண்டு நூற்றுண்டுகளுக்கு முன்னுல் இந்தியாவில் மன்னர்களின் நிலப்பிரபுத்துவ ஆட்சி முறையைவிடப் பிரிட்டிஷ் பூர்ஷ்வா

படையெடுப்பாளர்கள் பொருளாதார வலிமை பெற்றிருந்த காரணத்தால் (அந்தப் படையெடுப்புகளால் பெருமளவு அழிவும் சேதமும் ஏற்பட்டதையும் தவிர)வெற்றி கண்டு தங்கள் ஆட்சியை நிலை நாட்டியதுபோல், இந்தியாவின் உற்பத்தி வளங்களைச் சீரிய முறையில் அபிவிருத்தி செய்யத் தவறிய காரணத்தால் இந்தியாவில் ஏகாதிபத்தியத்துக்கு இறுதியான சாவு மணி ஒலிக்கும்.

இருபதாம் நூற்றாண்டில் இந்தியாமீது மேலும் மேலும் ஆதிக்கம் செலுத்திவரும் ஏகாதிபத்திய ஆட்சியை எதிர்த்து இந்திய மக்கள் திரண்டு புரட்சி செய்துவரும் நிலை, இந்தியாவில் பழைய சமுதாய முறை திவாலாகி புதிய சமுதாயமுறை, சமூக அரசியல் துறைகளில் உருவாகிறது என்பதையே காட்டுகிறது.

மாறுதல் வேண்டுகிற இந்த நிலைமை இப்போது கனிந்துள்ளது என்பதைப் பற்றி ஐயமில்லை; அதனால், இந்தியாவில் தேக்கம் கண்டுள்ள ஏகாதிபத்தியம் ஒழிந்து, நவீன முற்போக்கு மக்களுள்ள இந்தியா தோன்றும் என்பதைப் பற்றியும் ஐயமில்லை.

## 4. விழிப்பு கொண்ட இந்தியா

சரிந்து திவாலாகிக் கொண்டிருந்த இந்த ஏகாதிபத்திய ஆட்சியை எதிர்த்துத்தான் இந்திய மக்கள் மேன்மேலும் விரிவடைந்த பரவலான புரட்சியைத் தொடங்கியிருக்கிறார்கள்.

இந்தியத் தேசீய இயக்கம்[1] சென்ற ஒரு நூற்றாண்டுக் காலமாகப் பல கட்டங்களில் வளர்ச்சி பெற்றுள்ளது; பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைக்கால் பகுதியில் புதிய உருவங்களை ஏற்றிருக்கிறது. சட்ட பூர்வமானதாகவும், சட்ட விரோதமானதாகவும், அரசியல் சட்டத்துக்குக் கட்டுப்பட்டதாகவும், புரட்சிகரமானதாகவும் பல உருவங்களில் அது வளர்ந்திருக்கிறது. அதற்கு அடி நீரோட்டங்கள் பல—மிதவாதமும் இனவுணர்ச்சியும்; நவீன யுகத்தில், சோஷலிஸமும், கம்யூனிஸமும்; அரை நூற்றாண்டுக்கு முன்பு, சட்ட பூர்வமான இயக்கம் நடத்தியவர்கள்,

---

1. 'இந்தியத் தேசம்', இந்தியத் தேசீய இயக்கம் என்ற சொற்றொடர்கள் இங்கும் பின்வரும் பக்கங்களிலும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்தும், தங்கள் அரசியல் எதிர்காலத்தைத் தாங்களே உருவாக்கிக் கொள்வதற்காகவும், இந்திய மக்கள் நடத்திய போராட்டத்தின் ஒருமைப்பாட்டைக் குறிப்பிடுவதற்காகவே பயன்படுத்தப் படுகின்றன. சுதந்திர இந்தியா எந்த விதமான உருவங்கள் ஏற்கும் என்பதைப் பற்றியோ, அல்லது, பல தேசீய இனங்கள் அடங்கியுள்ள தன்மையுள்ள ஒரு எதிர்கால சுதந்திர இந்தியா தோன்றுவதன் அறிகுறிகளைப் பற்றியோ, அதனுள் எவ்வித அரசியல் நிறுவனங்கள் தோன்றக் கூடும் என்பதையோ அறுதியிடும் வகையில் இச் சொற்றொடர்களை கையாளப்படவில்லை இந்தச் சிறப்பான பிரச்னை பின்னால் தனியாக ஆராயப்படும்.

ஏகாதிபத்திய அமைப்புக்குட்பட்ட நிதானமான சீர்திருத்தங் களையே கோரினார்கள். இந்தக் கட்டுக்கோப்பான இயக்கத்தைப் படித்த நடுத்தர மக்களில் மிகச் சிலர் மட்டுமே நடத்தினார்கள். ஆனால், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து இயக்கத் தின் போக்கும், நோக்கங்களும் தொடர்ந்து விரிவாக்கப்படு கின்றன. முதல் உலகப் போருக்குப் பிறகு தேசீய இயக்கம் முழு அளவு மக்கள் இயக்கமாக மாறியது; அது முழு தன்னாட்சிக் கோரிக்கையாகி, இறுதியில், 1929 முதல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தி யத்திலிருந்து பிரிந்து, முழு விடுதலை வேண்டும் என்ற கோரிக்கை எழுந்தது.

இந்தியா விழிப்பு கொள்கிறது. பல்லாயிரம் ஆண்டுகளாய் மாற்றாரின் அடுக்கடுக்கான படையெடுப்புக்கும் ஆட்சிக்கும் இரை யான இந்தியா, உலக அரங்கில் தன் பங்குப் பணியாற்றும் சுதந்திர மக்களாக வாழ வேண்டும் என்ற வேட்கையோடு விழிப்பு கொண்டிருக்கிறது. நம் ஆயுட் காலத்தில் இந்த எழுச்சி பிரம்மாண்டமாகியுள்ளது. சென்ற இருபத்தைந்து ஆண்டுகளில் ஒரு புதிய இந்தியா தோன்றியுள்ளது. மிக அண்மையிலேயே இந்தியா வெற்றிபெறும் என்று எல்லோராலும் நம்பப்படுகிறது. ஆனால், அடிமை மக்கள்களின் மீது ஆதிக்கம் செலுத்தும் ஏகாதி பத்தியத்தின் அடிப்படையையே இந்திய விடுதலை அகற்றிவிடும்.

சென்ற காலம் முழுவதும் தன் ஆயுதக்கிடங்கிலுள்ள எல்லாவிதக் கருவிகளையும் பயன்படுத்தி—வன்முறை அடக்குமுறை களைக் கையாளுவது, அரசியலமைப்புச் சலுகைகள் அளிப்பது, சாமர்த்தியமாய்ப் பிரிவினைச் சக்திகளை ஒன்றோடொன்று மோத விடுவது, அல்லது இயக்கத்தின் மேல்மட்டத் தலைவர்களை அணுகு வது போன்ற உபாயங்களைக் கொண்டு—தேசீய இயக்கத்தைத் தடை செய்வதும், முட்டுக்கட்டை போடுவதும், சிதைப்பதும், எதிர்ப்பதும், மேலும் வளராமல் தடுப்பதுமே பிரிட்டிஷ் அரசின் கொள்கையாக இருந்து வந்தது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கொள்கை மிகத் திறமையும், வளைந்து கொடுக்கும் தன்மையும், அநுபவ முதிர்ச்சியும் வாய்ந்த ஏகாதிபத்தியக் கொள்கை; அது வன்முறையோடு சீர்திருத் தங்களை இணைத்து, தன்னிடமுள்ள ஒவ்வொரு சாதனத்தையும் ஆற்றலையும் பிரயோகித்து, புதிய நிலைக்கு ஏற்பத் தன்னைத் திருத்தி அமைத்துக் கொண்டு, ஆழ்ந்த விளைவுகள் உண்டாக்குவதுபோலத் தோற்றம் தரும் சலுகைகள் வழங்கும் போதே, தன் அதிகாரத்தையும், சுரண்டல் வாய்ப்புகளையும் நிலைநாட்டிக் கொள்ள முயன்றுள்ளது. காலனி மக்கள் படிப்படி யாகவும், அமைதியாகவும் முன்னேறித் தன்னாட்சி பெற்று ஏகாதி

பத்தியத்திற்குள் சுதந்திரமாக இருக்க வேண்டும் என்கிற தாராளத் தன்மை கொண்ட ஏகாதிபத்திய சீர்திருத்தக் கருத்துகள் நடைமுறைச் சோதனைக்கு உட்படுத்தப் பட்டன. இந்திய மக்களின் எதிர் காலத்திற்கு மட்டுமல்ல, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் எதிர்காலத்திற்கும் இந்தப் போராட்டத்தின் இறுதித் தீர்மானம் எத்தகைய இறுதி விளைவு ஏற்படுத்தும் என்பதை வரலாறு முடிவு செய்யும்.

புதிய நிலைகளுக்கு ஏற்பத் தன்னைத் திருத்தி அமைத்துக் கொள்ள ஏகாதிபத்தியம் செய்த முயற்சிகள் யாவும் பயனற்றுப் போனதை சென்ற கால் நூற்றாண்டுக் கால வரலாறு காட்டுகிறது; இந்தக் காலத்தில் வன்முறைப் பிரயோகமும், சலுகைகளும் மாறி மாறி பயன்படுத்தப் பெற்றன; ஆனால், பெருகி வரும் தேசீய இயக்க அலைக்கு அணைப்போட அதனால் முடியவில்லை; இந்தியாவின் பிரச்சினைக்கு ஒரு தீர்வும் காண முடியவில்லை.

ஏகாதிபத்திய ஆட்சியிலுள்ள இந்தியாவில் நிலவும் சமூக, பொருளாதார நிலைமையிலும், அவற்றைப் போலவே, முக்கியமான அரசியல் நிலைமையிலும் வேரோடி வளர்ந்து வரும் முரண்பாடுகளை ஒழுங்குபடுத்துவதற்காகச் செய்யப்படும் முயற்சிகள் மீண்டும் மீண்டும் தோல்வி காண்கின்றன. மிக முன்னேறிய விரிவான மூலதன—முதலாளித்துவச் சுரண்டலும் ஆதிக்கமும் மேல் மட்டத்திலும், மிகக் கீழ்த்தரமான சமூகத் துன்பமும், பிற்போக்கும் அடி மட்டத்திலுமாக, இந்த இரண்டும் ஒன்றோடொன்று இணைந்து காரண காரியமாகப் பின்னிப் பிணைந்துள்ளன. இந்த இரு நிலைகளுக்கும் இடையில், ஏகாதிபத்தியச் சுரண்டல்வாதிகள் பிரமிட்டின் உச்சி முனையாக, உற்பத்தி செய்யும் மக்கட் சமுதாயம் அடிப்பகுதியாக ஒன்றையொன்று எதிர்க்கும் இருநிலைகளுக்கு இடையில், பலவகை உருவப் பிண்டங்களும், இடைப்படும் புல்லுருவித்தனமும், சுரண்டலின் துணை யந்திரங்களும், மக்கி உதிரும் பழைய சக்திகளும், முன்னேறிவரும் பல புதிய சக்திகளும் இருக்கின்றன. இவற்றின் வாயிலாக, ஆண்டுக்கு ஆண்டு இந்திய மக்களின் தேசீயவுணர்ச்சி வளர்ந்து வருகிறது. பசிப்பிணியால் நலிந்த இந்திய மக்களின் பொருளாதாரக் கோரிக்கைகள் அதிகரித்து வருகின்றன. ஒவ்வொரு திருப்பத்திலும் சமுதாய வெடிமருந்து நிரம்பிய நிலை இது.

இந்தியாவின் அடிப்படைப் பிரச்னை தேசீயப் பிரச்னை மட்டுமல்ல, சமூகப் பிரச்னையுமாகும். மனித ஜாதியின் ஐந்தில் ஒரு பகுதியினர் மாற்றார் ஆதிக்கத்திலிருந்து விடுதலைபெற விழைகிறார்கள் என்பதே இந்திய மக்கள் ஏகாதிபத்தியத்திற்கு விட்டுள்ள அறைகூவலின் எளிய பொருளாகும். அரசியல் விடுதலை

யில் தன்னுடைய அரசியல் வெளியீட்டை அது கண்டாலும் அதன் விடுதலைக் கோரிக்கை அதிகப் பொருள் பொதிந்ததாக இருப்பதைத் தவிர்க்க முடியாது. லண்டன் மாநகரத்தை இருப்பிடமாய்க் கொண்ட, வலிய சுரண்டல் முறைக்கும், அதற்குத் துணைக் கருவியாக இந்தியாவுக்குள் இயங்கும் சலுகைகள், சுரண்டல் முறைக்கும் விட்ட அறைகூவலே அது. ஒன்றைப் பாதிக்காமல் மற்றொன்றைத் தீண்ட முடியாது.

இந்தியாவின் அடிப்படைப் பிரச்னை நாற்பது கோடி மக்களின் பிரச்னையாகும்; அவர்களில் பெரும்பாலோர் கடும் வறுமையிலும் அரைப் பட்டினி நிலையிலும் உழலுகின்ற அதே நேரத்தில், இந்தக் கொடிய நிலைக்கு அவர்களை உட்படுத்துகிற சமூக அமைப்பை வன்முறையால் காத்துக் கொண்டு அவர்களுடைய வாழ்க்கை மீது முழு ஆதிக்கம் செலுத்தும் மாற்றார், ஆட்சியிலும் இருக்கிறார்கள். இந்த இலட்சக் கணக்கான மக்கள் வாழ்க்கைக்காகப் போரிடுகிறார்கள், வாழ்க்கைச் சாதனங்களுக்காகப் போராடுகிறார்கள், அடிப்படை சுதந்திரத்திற்காகப் போரிடுகிறார்கள்; அவர்களுடைய போராட்டத்தின் பிரச்னையும் அவர்கள் தங்கள் நோக்கத்தை எவ்வாறு நிறைவேற்றிக் கொள்ள இயலும் என்பதும்தான் இந்தியாவின் பிரச்னை.

இந்திய மக்களின் போராட்டத்திற்கு உடனடியான நோக்கம், தேசீய சுதந்திரம்; நாடு விடுதலை பெற்று தன்னாட்சி ஜனநாயக உரிமையை அடைவது. ஆனால், இந்த நோக்கம் இன்னும் ஆழ்ந்த சமூகப் போராட்டத்தை, இந்தியாவுக்குள் நிகழும் சமூகப் புரட்சியைப் பிரதிபலிக்கிறது. தேசீயப் பிரச்னைகளும், சமூகப் பிரச்னைகளும் மிக நெருக்கமாய்ப் பின்னிப் பிணைந்துள்ளன. இந்த உள் தொடர்புகளைப் புரிந்து கொண்டால் தான் இந்திய நிலையைப் புரிந்து கொள்ளமுடியும்.

இந்தியாவில் சமூக மிதவாதம் இன்னும் ஆழமாக வேரோடியுள்ளது; தேசீய இயக்கத்தின் தன்மையையும் பிரச்னைகளையும் அது பெரிதும் பாதிக்கிறது. இத்தகைய சமூக மிதவாதமும் பிற்போக்குச் சக்திகளும் தேசீய இயக்கத்தின் முன்னேற்றத்தைக் குலைத்துப் பலவீனப்படுத்துகின்றன. தன்னுடைய உண்மையான, கொன்று தின்று வாழும்நோக்கத்தை மறைக்க ஏகாதிபத்தியம் அடிமை நாடுகளை 'நாகரிகப்படுத்துவதாய்' ஒரு சம்பிரதாயப் பொய்மையைக் கிளப்பிவிட்டது போல், எதிர்த்திசையில் தோன்றும் அதே போன்ற முன்னூகங்களையும் சம்பிரதாயப் பொய்மைகளையும் பற்றி நாம் மிகவும் விழிப்பாக இருக்க வேண்டும்.

ஏனெனில், சம்பிரதாய ஏகாதிபத்தியப் பொய்மைக்கு எதிராக, இந்தியாவிலுள்ள சில பின்னேக்குச் சக்திகள் ஓர் எதிர்ப் பொய்மையை உருவாக்க முயன்றுள்ளன. ஏகாதிபத்திய ஆதிக்கத்தின் தீமைகளுக்கு எதிராக, பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னர், இந்தியாவில் பொற்காலமாயிருந்தது என்று தீட்டிக் காட்ட முயன்றுள்ளனர். பிரிட்டிஷாரின் படையெடுப்புக்கு முன்னுல் சரிந்து விழுந்த அழுகிப்போன சமூக அமைப்பின் தீமைகளை அவர்கள் மறைக்க முயலுகின்றனர், முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டையிட்டு, மக்களின் உணர்வை ஒடுக்கி, ஒற்றுமைக்கு உலைவைக்கும் பிற்போக்குச் சக்திகள் சென்ற காலத்தில் இந்தியாவில் தப்பிப் பிழைத்து நீடித்து வாழ்வதை அவர்கள் வரலாற்றுப் பூர்வமாக விளக்குவது மட்டுமல்லாமல் அதைப் போற்றித் துதி பாடவும் தொடங்கியுள்ளனர். இந்தப் பிற்போக்குச் சக்திகள் உயிர்பிழைத்ததை அடிப்படையாக வைத்துத் தேசீயவுணர்ச்சியை வளர்க்க அவர்கள் முனைந்துள்ளனர். இவ்வாருக, அவர்கள் ஏகாதிபத்தியத்துக்கு எதிரான போராட்டத்தைப் பொதுவான 'மேற்கு நாகரிகத்துக்கு' எதிரான போராட்டமாகத் திருப்ப முயற்சி செய்கின்றனர். அவர்களுடைய பார்வை பின்னேக்கியே போகிறது; முன்னேக்கி அல்ல.

இதனுல் தேசீய முன்னணி வலிமை பெருது; வலுவிழக்கும். ஏகாதிபத்திய ஆட்சியால் தோன்றியவையும் இந்தியாவின் வரலாற்றுப் பழமையின் விளைவுமான இந்திய சமூகத்திலுள்ள அத் தீமைகளைப் பார்க்காமலிருப்பதால் லாபம் ஏதுமில்லை. மாருக, தன்னுடைய பாகத்தின் தன்மையாலும் சமூக அடிப்படையாலும் ஏகாதிபத்தியம் எந்தத் தீமைகளைச் சகித்துக் கொண்டு வளர்க்கவும் வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கிறதோ, அந்தத் தீமைகளை ஏகாதிபத்தியத்தை விடத் தன்னுல் திறமையாகச் சமாளிக்க முடியும் என்று தேசீய முன்னணி காட்டிக் கொண்டால்தான் அது வலுப்பெற முடியும்.

முற்போக்கான ஒரு சமூக, பொருளாதார அமைப்பின் பிரதிநிதியாக ஏகாதிபத்தியம் எவ்வளவு காலம் காட்டிக் கொள்ள முடிகிறதோ, அவ்வளவு காலம்வரை, அதன் விளைவாக எவ்வளவு கொடுமைகளும் சேதங்களும் நேர்ந்தாலும் சரி, அது ஆட்சி செலுத்தவே செய்யும். இன்று, தேசீய அணியின் சக்திகள் இந்திய மக்களின் முற்போக்கான சக்திகளுடன் மிக அதிகமாய்க் கலந்து, ஏகாதிபத்தியத்தை விடச் சிறந்த சமூகப் பொருளாதார அமைப்பின் பிரதிநிதிகளாய்க் காட்டிக் கொண்டால், அவர்களுடைய எதிர்கால வெற்றி உறுதியாகும்.

நெருங்கிவரும் நெருக்கடி காரணமாய் முன்னுக்கு வரும் சமூக உட்பூசல்கள், பிரச்னைகள் வாயிலாக இந்திய மக்கள், மனித சமுதாயத்தின் எந்தப் பகுதியினரும் செய்யவேண்டிய அடிப்படைப் புரட்சிப் பணிகளை ஆற்ற வேண்டிய நிலையை எதிர்நோக்கியுள்ளனர். இந்தியாவின் பின்தங்கிய நிலையின் ஆழ்ந்த பிரச்னைகளும், பல காலமாய் அடிமைப்பட்டுக் கிடந்த தால் சேர்ந்துள்ள குப்பை கூளங்களைத் துப்புரவு செய்யும் பணி களும், முடக்கப்பட்ட வளர்ச்சியும், மிதவாத சமூகப் பழக்கமும் —நாட்டு விடுதலையோடு இந்தப் பிரச்சினைகள் தீர்வு கண்டுவிடா. ஆனால் அவை அப்போதுதான் முழு அளவில் வெளிப்படும். தீர்வு வேண்டிக் கவனத்தை ஈர்க்கும். இந்தப் பூசல்களையும் பிரச்னைகளையும் தீர்த்துக் கொண்டு, இந்தியாவின் உழைக்கும் மக்கள் முன்னேறித் தன்னுணர்வு பெற்றுத் தங்கள் விதியைத் தாங்களே அறுதியிட்டுக் கொண்டு, தற்போதுள்ள பொருளாதார பண்பாட்டுக்குப் பின்தங்கிய நிலையிலிருந்து மீட்டு, முற்போக் கான நாடுகளுக்கு நிகரான நிலைக்கு இந்தியாவை முன்னணிக்குக் கொண்டு வந்தால், உலக சோஷலிசத்தின் எதிர்கால முன்னேற் றத்துக்கும், கிழக்கு—மேற்கு என்ற பேதம் இறுதியாக ஒழி வதற்கும், முன்னேறிய நாடுகள்—பின்தங்கிய நாடுகள் என்ற பேதம் அழிவதற்கும் இந்திய மக்கள் சிறப்பான பணியாற்ற முடியும்.

வர்க்க-சமுதாயத்திற்குள் நாகரிகம், பண்பாட்டின் ஒவ் வொரு கட்டமும்—மிகப் பழமையானது முதல், மிக முன்னேற்றம் கண்டது வரை—இந்தியாவில் இருக்கிறது. மிக விரிவான சமூக, பொருளாதார, அரசியல், பண்பாட்டுப் பிரச்னைகள் இந்தியாவில் மிகக் கூர்மையான விதத்தில் காணக் கிடக்கின்றன. வெவ்வேறு இனங்களும், மதங்களும் எந்த உறவில் கூடி வாழ்வது என்ற பிரச்னைகள்; பழைய மூடநம்பிக்கைகளையும், நலிந்து வரும் சமூக வடிவங்களையும், மரபுகளையும் எதிர்த்துப் போராட்டம்; கல்விக் காகப் போராட்டம்; பெண் விடுதலைக்காகப் போராட்டம்; விவசாயச் சீரமைப்பு, தொழில் வளர்ச்சி, நகரத்துக்கும், கிராமத் துக்கும் இடையில் இருக்கவேண்டிய உறவு பற்றின பிரச்னைகள்; மிகப்பல வடிவங்களில் மிகக் கூர்மையாகவுள்ள வர்க்கப் போராட்டப் பிரச்னை; தேசியம், சோஷலிசம் பற்றின பிரச்னை கள்; நவீன உலகத்தின் இத்தகைய பல்வேறு வகைப் பிரச்னைகள் கூர்மையாகவும், அவசரமாகவும் இந்தியாவில் தலையெடுத்து நிற்கின்றன.

இந்தப் பல்வகைப் பிரச்னைகளுக்குத் தீர்வு தனித்தனியாய்க் காணமுடியாது; ஆனால், புதிய இந்தியாவை உருவாக்குவதற்காக

உலகாயத சக்தியையும், மனித சக்தியையும் விடுவிடுக்கும் தேசிய சுதந்திரத்தோடு அத்தீர்வு இணைந்துள்ளது. இந்தியப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பது என்பதன் பொருள், உலகத்து மக்கள்களைப் பொதுவாக எதிர் நோக்கியுள்ள, மிகச் சிக்கலான, மிகக் கடுமையான, எடுத்துக் காட்டாகவுள்ள பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பது என்பதே.

உலக வரலாற்றில் இந்திய மக்கள் முன்பே பெரும் பங்கு கொண்டவர்கள்; போர் வெற்றியாளர்களாக அல்ல; பண்பாடு, சிந்தனை, கலை, தொழில் துறைகளில். இந்திய மக்களின் சமூக, அரசியல் விடுதலை மனித வர்க்கத்திற்குப் புதிய செல்வத்தை வழங்கும்.

முதல் பாகம்

# இந்தியா எப்படி இருக்கிறது, எப்படி இருந்திருக்கலாம்?

*அத்தியாயம்-2.* **இந்தியாவின் செல்வமும் வறுமையும்**

1. *இந்தியாவின் செல்வம்.*
2. *இந்தியாவின் வறுமை.*
3. *மிகை மக்கட்தொகை போலி வாதங்கள்.*

*அத்தியாயம்-3.* **இரண்டு உலகங்களின் வேறுபாடு**

1. *சோஷலிசம், ஏகாதிபத்தியத்தின் இருபது ஆண்டுகள்.*
2. *மத்திய ஆசியக் குடியரசுகளின் அனுபவம்.*

அத்தியாயம் 2

# இந்தியாவின் செல்வமும் வறுமையும்

''இந்தியாவைப் பற்றி மிக மலைப்பூட்டும் உண்மை அதன் மண் வளமுடையது, மக்கள் ஏழைகள்.''

—எம். எல். டார்லிங் எழுதிய ''செழுமையிலும், கடன் சுமையிலும் பஞ்சாப் குடியானவன்,'' 1925, பக். 73.

இந்தியாவின் இன்றைய நிலையில் இரண்டு உண்மைகள் குறிப்பிடத்தக்கவை.

ஒன்று, இந்தியாவின் செல்வம்—இயற்கைச் செல்வம், ஏராளமான மூலவளங்கள் இப்போதுள்ள மக்கட் தொகைக்கும் அதைவிட மிகுதியான மக்கட் தொகைக்கும் நலன் செய்யவல்ல சாத்யக் கூறுகள்.

மற்றொன்று, இந்தியாவின் வறுமை—மக்களில் மிகப் பெரும்பாலோரின் வறுமை நிலை; மேலை நாடுகளின் நிலைமைகளோடு பழகியவர்கள் கற்பனையாலும் காண முடியாத அளவு வறுமை.

இந்த இரண்டிற்கும் இடையில், தற்போதுள்ள இந்திய சமூக, பொருளாதார நிலையின் பிரச்னை கிடக்கிறது.

## 1. இந்தியாவின் செல்வம்

இந்தியா ஏழை மக்கள் வாழும் ஒரு நாடு; ஆனால், அது ஏழை நாடல்ல.

விவசாயத்தையும், தொழிலையும் ஒருங்கே அபிவிருத்தி செய்வதன் வாயிலாக மக்களுக்கு உயர்ந்த அளவு செழுமை தரக் கூடிய இயற்கை வளங்கள் இந்தியாவில் மிகுதி என்பது மட்டுமல்ல; பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னர் உலக அளவில் முன்னணியில் இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி இருந்தது என்பதும் உண்மை.

முன் காலத்தில், வேறு நாட்டு மக்கள் இந்தியாவில் அளவு கடந்த செல்வம் இருப்பதாய் நம்பினார்கள் என்பது எல்லோ

ருக்கும் தெரிந்ததே. இவ்வாறு பேசப்படுவதை ஐயப்பாட்டுடன் தான் கவனிக்க வேண்டும். ஏனெனில், அக்காலத்து நோக்கர்கள் செல்வந்தர்களிடமும் அதிகாரமுடையவர்களிடமும் குவிந்திருந்த செல்வத்தைத்தான் பார்த்தார்களேயன்றிச் செல்வ வினியோகத்தைக் கவனிக்கவில்லை. இம்மாதிரி நோக்கர்களில் குறிப்பிடத் தக்கவன் கிளைவ்; வங்காளத்தின் பழைய தலைநகரமான முர்ஷிதாபாதில் அவன் 1757இல் நுழைந்தபோது எழுதினான் :

> ''இந்த நகரம் லண்டன் நகரம் போன்று விரிவாகவும், மக்கட் தொகை மிகுதியாக உள்ளதாகவும், செல்வம் படைத்ததாகவும் இருக்கிறது. ஆனால் ஒரு வித்தியாசம், லண்டன் நகரத்தை விட இங்கு அளவிட முடியாதபடி ஏராளமான சொத்து உடைய தனி நபர்கள் இருக்கிறார்கள்.''
>
> (இந்தியத் தொழிற்குழு அறிக்கையில் மேற்கோளாய்க் காட்டப்பட்டது; பக்கம் 249)

இம்மாதிரி அறிக்கைகள் மாறுபடலாம்; மிகைபடக் கூறலாம்; விஞ்ஞான பூர்வமான சாட்சியம் ஏதும் இல்லாமல் இருக்கலாம்; எனினும், பதினேழாவது நூற்றாண்டிலும், பதினெட்டாவது நூற்றாண்டின் தொடக்கத்திலும் இந்தியாவுக்கு வந்த யாத்திரீகர்கள் நாடெங்கும் செழுமையை—கிராமங்களிலும் கூட— கண்டதாக அடிக்கடி அறிவித்தார்கள் என்பதையும், அது இன்றைய இந்தியாவிலுள்ள நிலைமைக்கு நேர்விரோதமான நிலை என்பதையும் கவனிக்க வேண்டும்.[1] பதினேழாம் நூற்றாண்டு இந்தியாவில் பிரயாணங்கள் செய்த டாவர்னியர் இவ்வாறு குறிப்பிடுகிறார் :

> ''மிகச் சிறிய கிராமங்களிலும் அரிசி, மாவு, வெண்ணெய், பால், பருப்பு வகைகள், இதர காய்கறிகள், சர்க்கரை மற்ற இனிப்புப் பொருள்கள்—உலர்ந்தவையும், நீரில் ஊறியவையும்—ஏராளமாய்க் கிடைக்கின்றன.
>
> (டாவர்னியர் எழுதிய : ''இந்தியாவில் பிரயாணங்கள்''; ஆக்ஸ்போர்ட் யுனிவர்சிடி பிரஸ் பதிப்பு, 1925; முதல் தொகுதி; பக்கம் 238).

1. டபுள்யு. எச். மோர்லாண்ட் 'அக்பர் சாகும் காலத்தில் இந்தியா' (1920) என்ற நூலிலும், 'அக்பர் முதல் அவுரங்கசீப் வரை' (1923) என்ற நூலிலும். பதினேழாவது நூற்றாண்டிலும் மக்கட் சமுதாயம் வறுமையில் ஆழ்ந்திருந்தது என்பதை நிரூபிக்க எதிர் மறைச் சாட்சியங்களைத் திரட்டிக் காட்ட முயலுகிறார் : ஆயினும், 'அக்பர் சாகும் காலத்தில் இந்தியா' என்ற நூலில் 'இந்தியாவில் செல்வம்' என்று தலைப்பிட்ட அத்தியாயத்தில், எல்லாவற்றையும் தொகுத்து வகுத்து முடிவு கட்டும் போது பின் வருமாறுதான் அவரால் கூறமுடிந்தது.

பதினேழாம் நூற்றாண்டில் அவுரங்கசீபுக்கு மருத்துவனான வெனீஸ் நகரவாசி மனௌசி தன்னுடைய 'நினைவுக் குறிப்பு' களில் மாகாணம் மாகாணமாக இந்தியாவின் செல்வத்தை மெய் மறந்து வருணிக்கிறான்; உதாரணமாக, வங்காளத்தைப் பற்றின அவன் வருணனையை எடுத்துக்கொள்ளலாம்; ஏனெனில், கிளைவும், அவனுக்குப் பின்னால் வந்தவர்களும் பாழாக்கியதைத் தொடர்ந்து இம்மாகாணம் இப்போது கொடிய வறுமையில் ஆழ்ந்துள்ளது.

''எல்லா முகலாய அரசுகளிலும் வங்காளம் பற்றித்தான் பிரான்ஸில் நன்றாய்த் தெரியும்; அங்கிருந்து ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்ட செல்வக்குவை வாயிலாக அதன் செழுமை

''இந்தியாவை முழுமையாக எடுத்துக்கொண்டால் கிராம மக்களின் தனிநபர் வருமானம் பெரிய அளவில் மாறியுள்ளது என்பது நம்புதற்கரியது; அது சற்றுக் குறைவாகவும் இருக்கலாம் முன்னைவிடச் சற்றுக் கூடுதலாகவும் இருக்கலாம். எப்படி இருந்தாலும், பொருளாதார நிலையில் கணிசமான மாறுதலைக் குறிக்கும் அளவுக்குப் பெரிய வித்தியாசம் இருக்க முடியாது.'' (பக். 286)

''தேவைப் பொருள்கள் உற்பத்தியைப் பொறுத்தமட்டில், விவசாயத்தின் வாயிலாய்க் கிடைத்த சராசரி வருமானம் ஏறக்குறைய இப்போதைப் போலவே இருந்தது; காடுகளால் கிடைத்த வருமானமும் அப்படியே; மீன் பிடி தொழிலால் வந்த வருவாய் சற்று அதிகமிருக்கலாம்; தாதுப்பொருள் களால் வருமானம் கட்டாயம் குறைவுதான். தொழிலுற்பத்திகளைப் பற்றின வரை, விவசாயத் தொழில் கணிசமான ஆதாயக் கணக்கைக் காட்டவில்லை; பல்வேறு கைத்தொழில்கள், கம்பளி நெசவு, கப்பல் கட்டும் தொழிலைத் தவிர ஏனைய போக்குவரத்துச் சாதனங்கள் ஆகியவற்றின் வாயிலாக வந்த சராசரி வருமானம் குறிப்பிடத்தக்க அளவு ஏறியுள்ளது; ஆனால் பட்டு நெசவு வருமானம் குறைந்துள்ளது.........இந்த நஷ்டங்கள் தாதுப்பொருள்கள், போக்குவரத்துச் சாதன வசதி, பலவகைக் கைத்தொழில்கள் உற்பத்தி வாயிலாக வரும் லாபத்தால் அளவுக்கு மேல் ஈடுசெய்யப் படுகின்றன. இந்த ஆதாயங்கள் கணிசமானவையே. எனினும், முதன்மையான இன மாகிய விவசாய வருமானத்தோடு ஒப்பிடும்போது, அவை மிகச் சிறியவை யாகத் தோன்றுகின்றன.'' (பக். 287)

''கப்பல் கட்டும் தொழில், அயல்நாட்டு வர்த்தகம், நூல்—சணல் உற்பத்தி—ஆகிய வேறு மூன்று வருவாய் இனங்களை நுணுக்கமாக ஆராய்ந் தால், இப்போதுள்ள அளவுக்குமேல் நாட்டின் சராசரி வருவாயைக் கணிசமாக உயர்த்தும்படி அவ்வளவு மிகுதியான வருமானம் கொடுத்திருக்க முடியாது என்கிற முடிவைத்தான் ஏற்க வேண்டியிருக்கும்.'' (பக்.293)

''இந்தியா இப்போதுள்ளதைவிடப் பணக்கார நாடாக (அக்பர் காலத் தில்) இல்லை என்றே சொல்லலாம்; ஒருகால், சற்று ஏழை நாடாக இருந் திருக்கலாம்.'' (பக் 294)

எதிர்த்தரப்பில் எவ்வளவு சிரமப்பட்டு வாதித்தாலும் மூன்று நூற்றாண்டு களுக்குப் பிறகு தேக்கநிலை இருந்தது என்று தான் கூறமுடியும்; (இந்த மூன்று நூற்றாண்டுகளில் ஐரோப்பிய நாடுகளில் ஏற்பட்ட மாறுதல்களோடு ஒப்பிட்டுப் பார்க்க) உலக அளவில் எத்தகைய சீரழிவு நேர்ந்துள்ளது என்று தெளிவாய்த் தெரிகிறது.

தெரிகிறது. எகிப்தைவிட அது எந்த விதத்திலும் தாழ்ந்தது அல்ல என்று நாம் துணிந்து கூறலாம்; பட்டு, பருத்தி, சர்க்கரை, நீலச்சாயம் ஆகியவற்றின் உற்பத்தியில் அது எகிப்தை மிஞ்சி நிற்கிறது எனலாம். இங்கே எல்லாம் ஏராளமாய்க் கிடைக்கின்றன: கனிகள், பருப்புகள், தானியங்கள், மஸ்லின் துணிகள், தங்க, வெள்ளிக் காசுகள்.''

(எஃப். எஃப். காட்ரௌ எழுதிய: ''முகல் சாம்ராஜ்யத்தின் வரலாறு; நாற்பதாண்டுக் காலம் அவுரங்கசீபின் தலைமை மருத்துவராகப் பணியாற்றிய வெனீஸ்காரன் மனௌசியின் நினைவுக் குறிப்புகளிலிருந்து திரட்டப்பட்டது;'' லண்டன்; ஜான் பவர், 1709 இல் வெளியிட்ட நூல்)

அதைப் போலவே, பிரஞ்சுப் பயணியான பெர்னியர் பதினேழாம் நூற்றாண்டின் நடுவில், 1660 அளவில், வங்காளத்துக்கு இருமுறை வருகை புரிந்தான்; முகல் சாம்ராஜ்யம் சிதைவதற்குமுன் தான் கண்டதைப் பற்றி எழுதினான்:

''வங்காளத்திற்கு இரண்டுமுறை விஜயம் செய்ததன் வாயிலாக நான் அறிந்து கொண்டதிலிருந்து அது எகிப்தை விடப் பணக்கார நாடென்று நம்ப வேண்டியுள்ளது. கோதுமை, காய்கறிகள், தானியங்கள், பறவை இனங்கள், வாத்து இனங்கள் ஆகியவற்றைத் தன் சொந்த உபயோகத்திற்காக ஏராளமாய் உற்பத்தி செய்கிறது. பன்றிகளும், வெள்ளாடுகளும், செம்மறியாடுகளும் அங்கு மந்தை, மந்தையாக உள்ளன. ஒவ்வொரு வகை மீனும் மிகுதியாகக் கிடைக்கிறது. ராஜமஹலிலிருந்து கடலுக்கு பற்பல கால்வாய்கள் போகின்றன; அவை முற்காலத்தில் படகு போக்குவரவுக்காகவும், பாசனத்துக்காகவும் கங்கையிலிருந்து மிகப் பாடுபட்டு வெட்டப்பெற்றவை.''

(பெர்னியர்; சர் வில்லியம் வில்காக்ஸின், 'வங்காளத்தில் பண்டைப் பாசன முறை' என்ற பொருள் பற்றின சொற்பொழிவுகள்; கல்கத்தா பல்கலைக் கழக வெளியீடு; 1930, பக். 18–19)

பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னால் இந்தியாவில் மக்களின் வாழ்க்கைத் தரம் எப்படி இருந்தது என்ற பொதுவான கேள்வி பற்றின விவாதம் இவ்வாறு அடங்கிப் போகிறது; சாட்சியங்களும், நடைமுறை மரபுகளும் மக்கள் பரவலாக வசதிகளோடு வாழ்ந்தனர் என்பதை ஐயமறச் சுட்டிக் காட்டுகின்றன,

ஆயினும், பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னால், தற்போதைய உலக அளவுகோலின்படி, இந்தியத் தொழில் வளர்ச்சி மிகச் சிறப்பாயிருந்தது என்பது எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப் பட்ட, விவாதத்திற்கு அப்பாற்பட்ட உண்மை. 1916-18 ஆண்டுகளில் ஏற்பட்ட இந்தியத் தொழில் கமிஷன் பின்வரும் அறிக்கையோடு தொடங்குகிறது:

''நவீனத் தொழில் முறைக்குத் தாயகமான மேற்கு ஐரோப்பாவில் நாகரிகமற்ற பழங்குடிகள் வாழ்ந்தபோது இந்தியா அதன் அரசர்களின் செல்வச் செழிப்புக்காகவும், கைத்தொழிலாளர்களின் சிறந்த கலையாற்றலுக்காகவும் புகழ் பெற்றிருந்தது. மேலே நாடுகளைச் சேர்ந்த துணிச்சல்மிக்க வர்த்தகர்கள் இந்தியாவில் அடிவைத்த மிகப் பிற்காலத்தில் கூட, இந்த நாட்டின் தொழில் வளர்ச்சி மிக வளர்ந்த ஐரோப் பிய நாடுகளைவிட எந்த விதத்திலும் தாழ்ந்ததாயில்லை.''

(''இந்தியத் தொழில் கமிஷன்'' அறிக்கை, பக்.6.)

கமிஷனின் தலைவர் சர் தாமஸ் ஹாலண்ட், இந்தியத் தாதுப் பொருள் வள ஆராய்ச்சியில் தேர்ந்த நிபுணர்; 1908 இல் அவர் அறிக்கையிட்டார்.

“இங்கேயே செய்யப்பட்ட உயர்ந்ததர இரும்பும், ஐரோப் பாவில் இப்போது கையாளப்பெறும் முறைகளை எதிர்பார்ப் பது போன்ற முறையில் உற்பத்தி செய்யப்படும் உயர்தர உருக்குகளும், கலை நேர்த்தியுடன் தயாரிக்கப்படும் செம்பு, பித்தளைப் பொருள்களும், உலோகப் பொருள் உற்பத்தி உலகில் இந்தியாவுக்கு ஒரு காலத்தில் சிறப்பான இடம் அளித்தன.''

('இந்தியாவின் கனிப்பொருள் வளங்கள்'—1908இல் டி. எச். ஹாலண்டின் அறிக்கை.)

இரும்பு, உருக்கு உற்பத்தி ஏற்கனவே உயர்ந்த அளவு வளர்ச்சி அடைந்திருந்தது என்பதைக் கவனிக்க வேண்டும். நவீனத் தொழில் முறைக்கு முன்னேற இந்த அளவு சாதகமான நிலைமை இருந்தது.

பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இந்தத் தலைமை ஸ்தானம் அழிந்த தற்கான காரணங்களையும், இந்தியா பின்தங்கிய பொருளாதார நிலையை அடைந்ததற்கான காரணங்களையும் பின்வரும் அத்தியா யங்களில் ஆராய்வோம்.

மிகவுயர்ந்த நவீனப் பொருளாதார வளர்ச்சிக்குத் தேவை யான இயற்கை வளங்கள் இந்தியாவில் உள்ளன என்பதும் எல்லோராலும் ஐயமற ஏற்கப்பட்ட உண்மை.

விவசாயத்தைப் பற்றின வரை, இந்திய அரசின் பொருளாதார உற்பத்திப் பொருள் பற்றின அறிக்கையாளரான சர் ஜார்ஜ் வாட்டின் தீர்ப்பை மேற்கோளாய்க் காட்டலாம்:

> "பாசன வசதிகளை விரிவுபடுத்தியும், எல்லாப் போக்கு வரத்து வசதிகளைச் செம்மையாகத் திருத்தம் செய்தும், பயிரிடும் நிலப்பரப்பை அதிகமாக்கினால்...... இந்தியாவின் உற்பத்திச் சக்தியை எளிதில் குறைந்தபட்சம் ஐம்பது சதவீதம் அதிகமாக்க முடியும் என்று தைரியமாக உறுதி கூறலாம். உண்மையான மதிப்பையும் பயன்படுத்தப்படாத வளங்களையும் மட்டும் வைத்துப் பார்த்தால், உலகத்திலுள்ள வேறு எந்த நாடுகளிலும் இந்தியாவில் இருப்பதைப் போன்ற விவசாய வளர்ச்சிக்கான துல்லியமான வசதிகள் இருப்பதாய்க் கூற முடியாது.
>
> (சர் ஜார்ஜ் வாட், "பிரிட்டிஷ் இந்தியாவின் வளங்கள் பற்றின அறிக்கை", கல்கத்தா, 1894, பக்.5)

தொழில் வளர்ச்சிக்கான சாத்தியக் கூறுகளோ இன்னும் மிகுதி. இந்தியாவில் நிலக்கரி, இரும்பு, எண்ணெய், மாங்கனீஸ், தங்கம், ஈயம், வெள்ளி, செம்பு ஆகியவை ஏராளமாய்க் கிடைக்கின்றன. எண்ணெய்ப் பற்றின வரை, புதிய அரசியல் திட்டப்படி பர்மா இந்தியாவிலிருந்து அரசியல் ரீதியாகப் பிரிவினை செய்யப்பட்டதால் எண்ணெய் கிடைப்பதற்கான முக்கியமான வழி அடைபட்டுவிட்டது; பர்மிய எண்ணெயைத் தன் கைவசமே வைத்துக்கொள்ள வேண்டும் என்ற ஏகாதிபத்தியத்தின் நோக்கம்தான் இப் பிரிவினைக்கான காரணங்களில் ஒன்று என்பதில் சந்தேகமில்லை; ஆயினும், கிடைத்துள்ள சாட்சியங்களைக் கொண்டு பார்த்தால் இந்தியாவில் முயற்சி செய்தால் ஏராளமான எண்ணெய் கிடைக்கக்கூடிய சாத்தியக் கூறுகள் இருப்பதாய்த் தெரிகிறது.

1942இல் இந்தியாவுக்கு அமெரிக்கத் தொழில் நுட்பக் குழு வருகை புரிந்தது; 'அந்த நாட்டின் (இந்தியாவின்) தொழில் வளப்பத்தை ஆராய்ந்து, இந்தியாவின் போர்க்கால உற்பத்தியைப் பெருக்குவதற்காக ஐக்கிய அமெரிக்கா எந்த வழி வகையில் உதவி செய்யலாம் என்று சிபாரிசு செய்வதே' அதன் நோக்கம்; அந்தக் குழு அறிவித்தது:

> 'வங்காளத்திலும், பீஹாரிலும் 60 கோடி டன் நிலக்கரி கிடைக்க வழியுண்டு என்றும், அதில் 20 கோடி டன் நடைமுறைக்கு உதவும் என்றும் கருதப்படுகிறது. ஐக்கிய மாகாணங்களிலும், பீராரிலும் 17 கோடி டன் கிடைக்கும் என்றும்,

அதில் 51500 இலட்சம் டன்கள் நடைமுறைக்கு உதவும் என்றும் மதிப்பீடு செய்யப்படுகிறது. அதற்கு மேல், அஸ்ஸாமைச் சேர்ந்த லாங்ரின் பீட பூமியில் 600 இலட்சம் முதல் 800 இலட்சம் டன்களும், நாங்ஸ்டாயினில் 700 இலட்சம் டன்களும் நிலக்கரி கிடைக்கும் என்று கருதப்படுகிறது. கற்கரியாகத் தயாரிக்கப்படக்கூடிய நிலக்கரி 5000 இலட்சம் டன்கள் வரை வெட்டி எடுக்க முடியும் என்று மதிப்பிடப்படுகிறது; இதில் சுமார் ஐம்பது சதவீதம் இப்போது வழக்கிலுள்ள வெட்டியெடுக்கும் முறைகளால் சேதமாகிவிடும் என்று மதிப்பிடப்படுகிறது இந்த நிலக்கரி கனிவளம் ஓர் ஆண்டுக்குச் சுமார் 150 இலட்சம் டன்கள் வீதம் பயன்படுத்தப்படுகின்றன; கற்கரி தயாரிக்காமல் அவை வேறு விதமாகவே பயன்படுத்தப்படுகின்றன. கற்கரியாகக்கூடிய நிலக்கரி வளத்தை அதற்காகவே பயன்படுத்திஞல் அவை பல ஆண்டுகள் நீடிக்கும்; இரும்பு. உருக்கு உற்பத்தியும் பெரிதும் அதிகரிக்கப்பட முடியும்.

(அமெரிக்கத் தொழில்நுட்பக் குழுவின் அறிக்கை, 1942, பக் 25.)

இந்தியாவில் அலுமினியத் தாதுப்பொருள் 250,000,000 டன்கள் கிடைக்கும் என்றும் அமெரிக்கத் தொழில் நுட்பக்குழு மதிப்பீடு செய்தது 'உலகத்தில் கிடைக்கும் மாங்கனீஸ் தாதுப் பொருளில் முப்பது சதவீதமும்', 'உலகத்தில் கிடைக்கும் தகரம், கட்டி மைகா (அப்ரகம்)வில் நான்கில் மூன்று பாகமும்', 'உலகத்திலேயே மிக அதிகமான அரக்கும்' இந்தியாவில் அகப்படுகின்றன.

இரும்புத் தாதுப் பொருள் வளத்தை முக்கியமாய்க் குறிப்பிட வேண்டும். மிதமான ஒரு மதிப்பீட்டின்படி இந்தியாவில் 30,000 இலட்சம் டன்கள்; கிரேட் பிரிட்டனில் 22,540 இலட்சம் டன்கள்; ஜெர்மனியில் 13,740 இலட்சம் டன்கள்; இந்தியாவை மிஞ்சும் ஐக்கிய அமெரிக்காவில் 98,850 இலடசம் டன்கள்; பிரான்சில் 43,690 இலட்சம் டன்கள். ''இந்தியாவில் இரும்புத் தாதுப் பொருள்கள் ஏராளம்; அவற்றில் இருந்து மிகுதியான இரும்பு எடுக்க முடியும்; தற்போது அவை பயன்படுத்தப்படுகின்றன என்பதைவிட வீணுக்கப்படுகின்றன என்றே சொல்ல வேண்டும்; ஏனெனில், அதன் சராசரி உற்பத்தி ஐக்கிய அமெரிக்கா, கிரேட் பிரிட்டன் ஜெர்மனி, சுவீடன். ஸ்பெயின், ரஷ்யா போன்ற நாடுகளின் உற்பத்தியைப் போலவே இருக்க முடியும்; ஆஞல் அந்த நாடுகளில் சராசரி உற்பத்தி 162 இலட்சம் டன்கள், இந்தியாவிலோ 18 இலட்சம் டன்கள், வேறுவிதமாய்க் கூறிஞல்,

இந்தியாவின் உற்பத்திச் சக்தியில் 11 சதவீதத்துக்குச் சற்று மிகுதியாக அதன் உற்பத்தி இருந்தது என்றும் 89 சதவீதம் வீண் என வேண்டும்.''

(ஆர். கே. தாஸ்; ''இந்தியாவின் தொழிலாற்றல்,'' 1930, பக். 17).

இந்தியாவின் இரும்புத் தாதுவளம் பற்றிய அண்மைக் காலத்து மதிப்பீடுகளை அமெரிக்கத் தொழில் நுட்பக்குழு தருகிறது. குழுவின் அறிக்கை பின்வருமாறு உரைக்கிறது:

''உலகத்திலேயே மிக அதிகமாய் இரும்புத் தாதுப் பொருள்கள் கிடைக்கும் நாடு இந்தியாவாக இருக்கக்கூடும்; அவற்றின் தரமும், மற்ற எந்த நாட்டின் இரும்புத் தாதுவின் தரத்தை விட உயர்ந்தது. சிங்பூம் மாவட்டத்தில் மட்டும் கிடைக்கக்கூடிய இரும்புத் தாதுப் பொருள் 30,000 இலட்சம் டன்கள் என்றும், இது 2,00,000 இலட்சம் டன்களாகும் வாய்ப்பு உள்ளது என்றும், அவற்றில் 60 சதவீதத்துக்கு மேல் இரும்புச் சத்து இருக்கிறது என்றும், மதிப்பீடு செய்யப்படுகிறது. பஸ்தார் ராஜ்யத்தில் மிக உயர்தர இரும்புத்தாது 724,000,000 டன்கள் கிடைக்கும் என்று மதிப்பிடப்படுகிறது. மத்திய மாகாணங்களுக்கு அண்டையிலுள்ள மாவட்டங்களிலும் முக்கியமான இரும்புத் தாதுப் பொருள் நிறைந்திருப்பதாகவும், அவற்றில் ஒன்ருன ராஜரு குன்றுகளில் மட்டும் $67\frac{1}{2}$ சதவீதம் இரும்புச் சத்துள்ள 2,500,000 டன்கள் இரும்புத் தாதுப் பொருள் இருப்பதாகவும் ஒரு மதிப்பீடு செய்யப்படுகிறது.''

(இந்தியாவுக்கு வந்த அமெரிக்கத் தொழில் நுட்பக் குழுவின் அறிக்கை, ஆகஸ்டு, 1942; பக். 24.)

1918ஆம் ஆண்டின் தொழில் கமிஷன் பின்வருமாறு அறிவித்தது:

''இந்தியாவின் தாதுப் பொருள் வளப்பத்தின் தன்மையையும் பரப்பையும்பற்றி புவி அமைப்பியல் ஆய்வுத் துறையினர் முறையாக ஆராய்ச்சி செய்துள்ளனர்; தேவையான கருவிகளை வாங்கி, சீராக நிர்வாகம் நடத்தி, மேற்கொண்டு நுட்பமாக விசாரித்துத் தொழில் முறையில் வெற்றியாக்கும் எல்லைக்கு ஆராய்ச்சியை விரிவாக்கும் அளவுக்குப் போதுமான நிதி வசதி அதற்கு இல்லை.

“நாட்டிலுள்ள உலோகத் தாதுக்கள் அடிப்படைத் தொழில்கள் எனப்படும் பலவற்றை நிர்வகிக்கப் போது

மானவை; வானடியம், நிக்கல், ஒருகால் மாலிப்டினம் வேண்டுகிற தொழில்கள் மட்டும் விதிவிலக்குகள்.''

''இரும்புத் தாதுப் பொருள் இந்தியக் கண்டத்தின் பல பகுதிகளில் கிடைக்கும்; ஆனால், நல்ல தரமான இரும்புத் தாது கிடைக்குமிடத்திற்கு அருகில் திருப்திகரமாய் நிலக்கரி கிடைக்குமிடம் குறைவாகவே உள்ளது; ஆயினும், இப்போதுள்ள இரும்பு உருக்குத் தொழில்களைப் பெருமளவில் விரிவுபடுத்தப் போதுமான அளவில் இருக்கிறது.''

(இந்தியத் தொழில் கமிஷன் அறிக்கை; பக். 36.)

டாக்டர் சி. எஸ். பாக்ஸ் இந்திய புவி அமைப்பு ஆய்வுத் துறையில் பணியாற்றும் மேலாளர்; இந்திய இரும்பு, உருக்குத் தொழிலோடு, கால் நூற்றாண்டு மிக நெருக்கமாகச் சம்பந்தம் கொண்டிருந்த சுரங்க இஞ்சினியர் சி. பி. பெரினே மேற்கோளாய்க் காட்டி அவர் பின்வருமாறு உரைக்கிறார்: 'கல்கத்தாவை வடகிழக்கு முனையாகக் கொண்ட ஒரு சதுரத்தில், அந்த நகரத்திலிருந்து மேற்கே 400 மைல்களுக்குள்ளும், தெற்கே 200 மைல்களுக்குள்ளும், வங்காள நிலக்கரிப் பிரதேசத்திலிருந்து சராசரி 125 மைல் தூரத்தில் 2,00,000 இலட்சம் டன்கள் தாதுப் பொருள் இருக்கிறது' (உருக்குத் தொழிலுக்கு பாதுகாப்பு அளிப்பதைப்பற்றி இந்தியச் சுங்கவரி போர்ட் அறிக்கை, 1924).

புவியமைப்பு ஆய்வுத் துறையினர் 'நிர்வாகத்திற்கும், சுரங்க ஆய்வுக் கருவிகள் வாங்குவதற்கும் மிகக் கொஞ்சம் நிதியே அளிக்கப்படுகின்றனர் என்பதைக் கவனிக்க வேண்டும்; அதனால், இத் துறையினர் தங்கள் சோதனைகளைத் தொடர்ந்து நடத்தி, இந்தியாவின் செல்வத்திற்கான ஏராளமான வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொள்ள இயலாதவாறு தடுக்கப்படுகின்றனர்; ஆகையால், இத் துறையினரின் பணிகள், வான விஞ்ஞானி விண்மீன்களை வரைந்து பார்ப்பது போல் ஏட்டளவில் நிற்கின்றன. 1933-34ஆம் ஆண்டில் இந்தியா விஞ்ஞானத் துறைகள் எல்லாவற்றுக்கும் சேர்த்துச் செலவிட்டுள்ள தொகை இந்திய அரசின் மொத்தச் செலவில் ஒரு சதவீதத்தில் மூன்றில் ஒரு பகுதி; ராணுவச் செலவில் எழுபதில் ஒரு பங்கைவிடக் குறைவு.

நிலக்கரி, இரும்புவளம், 'இப்போதுள்ள இரும்பு, உருக்குத் தொழிலைப் பெருமளவில் விரிவாக்குவதற்குப் போதுமான அளவு இருக்கக்கூடும்' என்று சுங்கவரி போர்டு அறிக்கை ஐயத்தோடு குறிப்பிடுவதோடு திருப்தி அடைந்து விடுவதையும் கவனிக்க வேண்டும்,

இந்தியாவை மின்சார மயமாக்க வல்ல நீர்ச் சக்தியின் சாத்தியக் கூறுகளையும், அவை புறக்கணிக்கப்படுவதையும் சிறப்பாய்க் குறிப்பிட வேண்டும். உலகத்திலுள்ள முக்கியமான பல நாடுகளின் நீர்ச்சக்தி வளத்தையும், அவை அதை எந்த அளவு பயன்படுத்திக் கொள்கின்றன என்பதையும் (வோர்ல்ட் ஆல்மநாக், 1932) இந்தியாவோடு ஒப்பிட்டுப் பார்க்கக் கீழ்க்கண்ட பட்டியல் உதவும்:

**நீர்சக்தி வளங்கள்**

இலட்சம் குதிரைச்சக்தி கணக்கு

| நாடு | கிடைக்கக் கூடிய அளவு | பயன்படுத் தப்படும் அளவு | எவ்வளவு % பயன் படுத்தப் பட்டுள்ளது |
|---|---|---|---|
| ஐக்கிய அமெரிக்கா | 350 | 117 | 33 |
| கானடா | 182 | 45 | 25 |
| பிரான்ஸ் | 54 | 21 | 37 |
| ஜப்பான் | 45 | 17 | 37 |
| இத்தாலி | 38 | 18 | 47 |
| சுவிட்ஜர்லாந்து | 25 | 18 | 72 |
| ஜெர்மனி | 20 | 11 | 55 |
| இந்தியா | 270 | 8 | 3 |

இந்தியா, நீர்ச்சக்தி வளத்தைப் பற்றினவரை, ஐக்கிய அமெரிக்காவுக்கு அடுத்த இடத்தில் உள்ளது; ஆனால் 3 சதவீதம்தான் பயன்படுத்துகிறது; சுவிட்ஜர்லாந்தோ 72 சதவீதமும், ஜெர்மனி 55 சதவீதமும், இத்தாலி 47 சதவீதமும், பிரான்சும் ஜப்பானும் 37 சதவீதமும், ஐக்கிய அமெரிக்கா 35 சதவீதமும் பயன்படுத்திக் கொள்கின்றன.

இந்தியப் பொருளாதாரத்தின் எந்தப் பக்கத்தைப் பார்த்தாலும் ஒரே காட்சி தென்படுவதைக் காணலாம்; இங்கே செல்வ வளர்ச்சிக்கான அளவு கடந்த வாய்ப்புகள் இருப்பதையும், இப்போதுள்ள அரசினர் அவற்றைப் புறக்கணித்து அல்லது பயன்படுத்திக் கொள்ளத் தவறியும் வருகிற காட்சிதான் அது. இந்த நிலையின் பயங்கரத்தை ஏகாதிபத்தியவாதிகளே உணர்ந்துள்ளனர்; ஆயினும், அதற்குத் தீர்வுகாணும் வழியும் அவர்களிடமில்லை. இந்தியாவின் சிறந்த ஏடான கல்கத்தா ஸ்டேட்ஸ்மன் ஆசிரியரும், தி டைம்ஸ் ஏட்டின் கல்கத்தா நிருபருமாகிய

சர் ஆல்பிரெட் வாட்சன் 1933 இல் நடந்த ராயல் எம்பயர் சொசைட்டியின் ஒரு கூட்டத்தில் பின்வரும் சொற்களில் எச்சரிக்கை செய்கிறார்:

"தொழில் ரீதியாகப் பார்த்தால், இந்தியா வாய்ப்புகளைத் தவறவிட்ட நாடு என்றும், இதற்கான முக்கியமான குற்றம் பிரிட்டிஷாரையே சாரும் என்றும் சர் ஆல்பிரெட் உரைத்தார்.... ஒரு பெரியத் தொழில் நாடாகத் தேவையான எல்லா வாய்ப்புகளும் இந்தியாவில் மண்டிக் கிடக்கின்றன; ஆயினும், உலகத்தில் பொருளாதார ரீதியில் மிகப் பின்தங்கிய நாடுகளில் ஒன்றாகவும், தொழில் ரீதியில் மிகவும் பின்தங்கிய நாடாகவும் இன்று இந்தியா விளங்குகிறது.....இந்தியாவின் நிச்சயமான தொழில் சக்தியைப் பயன்படுத்த நாம் ஒருகாலும் தீவிரமாக முயன்றதில்லை....

"இந்தியாவின் பெரும் மக்கட் தொகையின் தேவைக்கு ஏற்ப, முன்னெப்போதும் இல்லாத அளவு தொழில் வளர்ச்சிக்கு வருகிற ஆண்டுகளில் வழி காணவேண்டும். இல்லாவிட்டால், இப்போதே மலைப்பூட்டத் தக்க வகையில் தாழ்ந்துள்ள இந்த நாட்டின் வாழ்க்கைத் தரம் மேலும் வீழ்ந்து பட்டினி நிலையை எட்டிவிடும்."

(சர் ஆல்பிரெட் வாட்சன், ராயல் எம்பயர் சொசைட்டியில் நிகழ்த்திய சொற்பொழிவு, தி டைம்ஸ், ஜனவரி 4, 1933.)

## 2. இந்தியாவின் வறுமை

இந்தியாவின் செல்வத்திற்கான சாத்தியக் கூறுகள் உண்மையாக இருந்தும், அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறிய இந்தப் பின்னணியில், இந்திய மக்களின் பயங்கரமான வறுமை கொடிய விளைவுகள் நிறைந்ததாய்த் தோன்றுகிறது.

நிர்வாக இயந்திரம் இயங்குவதற்காக ஏராளமான இந்தியப் புள்ளி விவரங்கள் தயாரிக்கப்படுகின்றன; ஆனால், மக்களின் மெய்யான நிலை பற்றின வினாக்கள் எழுகையில், அவற்றின் தாழ்ந்த தரமும் சரியான தகவல் தராத குறையும் வெளிப்படுகின்றன. தேசீய வருமானம் அல்லது சராசரி வருமானம் பற்றின அதிகார பூர்வமான மதிப்பீடு கிடையாது (அதிகார பூர்வமாகச் செய்யப்பெற்ற பல விசாரணைகளின் முடிவுகள் தனியாகவும், ரகசியமாகவும் வைக்கப்பட்டுள்ளன). இந்தியா அல்லது பிரிட்டிஷ் இந்தியா முழுமைக்குமான மொத்த உற்பத்தியைப் பற்றியோ, கூலி விகிதங்கள் அல்லது சராசரி கூலிஅளவுகள்

பற்றியோ, வேலைநேரம் அல்லது தொழிலாளர் நிலை பற்றியோ, ஆரோக்கிய விவரமோ, வீட்டு வசதிகள் பற்றியோ முறையான புள்ளி விவரங்களே கிடையாது.

தனிநபர் சராசரி வருமானம் பற்றித் தொடர்ச்சியாக மதிப்பீடுகள் செய்யப்பட்டுள்ளன; கடுமையான விவாதத்திற்கு அவை பொருளாகவும் இருந்துள்ளன.

தனிநபர் தேசிய வருமான மதிப்பீடு

| மதிப்பீடு செய்தோர் | அதிகார பூர்வமான மதிப்பீடா; அல்லாததா? | எந்த ஆண்டு பற்றி | செய்யப்பட்ட ஆண்டு | தனிநபர் ஆண்டு வருமானம் ரூ. | ஷில். |
|---|---|---|---|---|---|
| தா. நவ்ரோஜி[1] | அ.ம.அ. | 1876 | 1868 | 20 | 40 |
| பாரிங்கும், பார்பரும் | அ.ம. | 1882 | 1881 | 27 | 45 |
| கர்ஸான் பிரபு | அ.ம. | 1901 | 1897–98 | 30 | 40 |
| டபுள்யூ. டிக்பி[2] | அ.ம.அ. | 1902 | 1899 | 18 | 24 |
| பின்ட்லே ஷிர்ராஸ்[3] | அ.ம. | 1924 | 1911 | 49 | 65 |
| வாடியாவும், ஜோஷியும்[4] | அ.ம.அ. | 1925 | 1913–14 | 44½ | 59 |
| ஷாவும், கம்படாவும்[5] | அ.ம.அ. | 1924 | 1921–22 | 74 | 95 |
| சைமன் அறிக்கை | அ.ம. | 1930 | 1921–22 | 116 | 155 |
| வி. கே. ஆர். வி. ராவ்[6] | அ.ம.அ. | 1939 | 1925–29 | 78 | 117 |
| மத்திய பாங்கிங் விசாரணைக் கமிட்டி (விவசாய மக்கள் மட்டும்) | அ.ம. | 1931 | 1928 | 42 | 63 |
| பின்ட்லே ஷிர்ராஸ்[7] | அ.ம. | 1932 | 1931 | 63 | 94½ |
| சர் ஜேம்ஸ் கிரிக்[8] | அ.ம. | 1938 | 1937–38 | 56 | 84 |
| வி. கே. ஆர். வி. ராவ்[9] | அ.ம.அ. | 1940 | 1931–32 | 62 | 93 |

குறிப்பு: அ.ம.அ என்பது அதிகார பூர்வமான மதிப்பீடு அல்லாதது; அ.ம. என்பது அதிகார பூர்வமான மதிப்பீடு.

1. தா. நவ்ரோஜி: 'இந்தியாவில் வறுமையும் பிரிட்டிஷ் அல்லாத ஆட்சியும்' 1876.

2. டபுள்யு. டிக்பி: 'செல்வம் கொழிக்கும் பிரிட்டிஷ் இந்தியா' 1902.

3. ஜி. பின்ட்லே ஷிர்ராஸ்: 'அரசு நிதி விஞ்ஞானம்', 1924.

4. வாடியாவும், ஜோஷியும்: 'இந்தியாவின் செல்வம்', 1925.

5. ஷாவும், கம்படாவும்: 'இந்தியாவின் செல்வமும் வரி விதிக்கத்தக்க அளவும்' 1924.

6. வி. கே. ஆர் வி. ராவ்: 'இந்தியாவின் தேசீய வருமானம்', 1939.

வெவ்வேறு அடிப்படைகளில் கணக்கிடப்பட்டதாலும், விலைகளின் அளவில் பெரும் வித்தியாசங்கள் இருப்பதாலும், இந்தப் புள்ளி விவரங்கள் ஒப்புநோக்கத் தக்கவை அல்ல; இந்திய விலைகளின் அட்டவணை எண், 1873 ஐ அடிப்படையாக 100 என்று கொண்டு பார்க்க (எடை போடப்படாத 39 பொருள்கள், ஆனல்1897 வரை உணவுத் தானியங்களைச் சேர்க்காமல் 1900இல் 116 ஆக ஏறி, 1913இல் 143 ஆகி, 1920இல் 281 ஆக உயர்ந்தது; பிறகு 1921இல் 236, 1925இல் 227, 1930இல் 171, 1936இல் 125 ஆகத் தாழ்ந்தது.

கணக்கின் அடிப்படை விரிவான மாறுதலையும் காட்டுகிறது; பற்பல மதிப்பீடுகளையும் குத்து மதிப்பாகவே கொள்ள வேண்டும். பழைய அதிகார பூர்வமான மதிப்பீடுகள் மொத்த விவசாய வருமானத்தை அடிப்படையாகக் கொண்டவை. (பெரும்பாலும் மிகையான மதிப்பீடுகள் என்பது நிச்சயம்) டிக்பி அரசுப் பணியால் கிடைத்த வருமானத்தைக் கணக்கில் சேர்க்கவில்லை. பழைய மதிப்பீடுகளில் எல்லோருக்கும் தெரிந்ததும், எல்லோரும் ஒப்புக்கொண்டவையுமான மதிப்பீடுகள்: 1868 ஆம் ஆண்டுக்காக தா. நவ்ரோஜி செய்த மதிப்பீடு; அதன்படி தனிநபர் வருமானம் ஆண்டுக்கு 2 பவுன்; 1882ஆம் ஆண்டில் அறிவிக்கப்பட்ட மேஜர் பாரிங்கின் (பின்னர் க்ரோமர் பிரபு) மதிப்பீட்டின்படி தனிநபர் வருமானம் 2 பவுன் 5 ஷில்லிங் ஒரு நூற்றாண்டுக்கு மேல் பிரிட்டிஷ் ஆட்சி நடந்த பின், அதிகார பூர்வமாக ஏற்கப்பட்ட இந்தியாவின் நிலைமை எப்படி இருந்தது என்பதை இந்த விவரங்களிலிருந்தே அறியலாம்.

பின்னால் உள்ள புள்ளி விவரங்களில் மிக விரிவான மாறுதல் இருப்பதைக் காட்டுகின்றது. விலைவாசிகள் முற்றிலும் நிலையில்லாமல் இருந்தது இதற்கு ஒரு முக்கியமான காரணம்; 1912 இலிருந்து 1920க்குள் விலைகள் இரு மடங்குக்கு மேல் உயர்ந்து விட்டன; அப்பால், பத்தாண்டுகளுக்குப் பின் 1931 முதல் விலைகள் இறங்கி போருக்குமுன்பு இருந்த அளவை எட்டின; இந்திய அரசின் புள்ளிவிவர இயக்குநராக 1914 முதல் 1921 வரை பணியாற்றிய பேராசிரியர் பின்ட்லே ஷிர்ராஸ் செய்த போருக்குப் பிந்தின மதிப்பீடுகளில் போருக்குப் பிறகு விவசாய மல்லாத வருமானம் விகிதப்படி உயர்ந்துள்ளதாய் குறிப்பிடப்பட்டுள்ளது.

---

7. ஜி. பின்ட்லே ஷிர்ராஸ்: இந்தியாவில் வறுமையும் பலவகைப் பொருளாதாரப் பிரச்னைகளும்', 1932.

8. சர் ஜேம்ஸ் கிரிக்: இந்திய அரசின் நிதித்துறை உறுப்பினர், மத்தியச் சட்டமன்றத்தில் நிகழ்த்திய பட்ஜட் சொற்பொழிவு; ஏப்ரல், 1938.

9. வி.கே.ஆர்.வி ராவ்: 'பிரிட்டிஷ் இந்தியாவின் தேசியவருமானம்',1940

1930ஆம் ஆண்டில் சைமன் அறிக்கை வெளி வந்தது; இந்தியாவில் ஏகாதிபத்திய ஆட்சி நடப்பதற்குச் சமாதானம் கூறுவதாய் அமைந்திருந்த அந்த அறிக்கையின் முதல் தொகுதி பரவலாகப் பலரும் அறிய வேண்டும் என்பதற்காகவே தயாரிக்கப்பட்டது; அதன்படி, சராசரி இந்திய வருமானம் ஆண்டுக்கு 8பவுன் என்று மிகைப்படுத்திக் காட்டப்பட்டது. அது முதல் இந்த மதிப்பீடு பெரிதும் பேசப்படுகிறது. எந்தக் காலத்திலும் தயாரிக்கப்பட்ட எல்லா மதிப்பீடுகளிலும் இதுதான் உயர்ந்தது; எந்த அடிப்படை மீது இந்த முடிவுக்கு வந்தார்கள் என்பதை ஆராய்வது நல்லது.

1930 ஆம் ஆண்டில் சைமன் கமிஷனின் அறிக்கை வெளி வந்தாலும், போருக்குப் பிறகு விலைவாசிகள் மிக ஏறியிருந்த ஆண்டுகளையே மதிப்பீட்டின் அடிப்படையாகக் கொண்டது; அப்போது போர் முடிவுற்றுப் பத்தாண்டுகள் ஆகிவிட்டன. 1919-20, 1920-21, 1921-22 ஆண்டுகளில் 74 ரூபாய் முதல் 116 ரூபாய் வரை சராசரி ஆண்டு வருமானம் இருந்ததாய் ஒரு மதிப்பீட்டுப் பட்டியலை அது மேற்கோள் காட்டியது. அப்பால் அது அவற்றிலிருந்து உயர்ந்த மதிப்பீட்டைத் தேர்ந்து எடுத்துக் கொண்டது, ''மேலே கண்ட மதிப்பீடுகள் மிகவும் நம்பிக்கை தருவது'' என்று அறிக்கை தயாரித்தவர்களாலேயே ஒப்புக் கொள்ளப் பட்டது (முதல் தொகுதி; பக். 334). இந்த விதி விலக்கான மதிப்பீட்டை, அந்தக் காலப் பகுதி முழுவதற்கும் பொருந்துவதுபோல் ஏற்று அது தன் கணக்குகளை எல்லாம் தயாரித்தது; ஆனால் போருக்குப் பின் விலைவாசிகள் ஓர் உச்சிக்குச் சென்று வளமையாக இருந்த காலத்தைப்பற்றின மதிப்பீடுதான் அது. (''அதே சமயத்தில் விலைகள் வீழ்ந்து விட்டதைக் கவனித்தால், அதற்கு மேற்பட்ட மதிப்பீட்டை இன்று செய்யமுடியாது''—இரண்டாம் தொகுதி, பக். 207; உண்மையில் விலைவாசி அட்டவணை எண் 1920இல் 281ஆக இருந்தது 1930இல் 171 ஆகவும், 1934இல் 119 ஆகவும் இறங்கி விட்டது), மிகைப் படுத்திக் காட்டப்பட்ட இந்தப் புள்ளி விவரத்தை, இந்தியரின் சராசரி ஆண்டு வருமானம் ஆங்கில நாணயத்தில் சுமார் 8 பவுனுக்கு (''கொஞ்சம் குறைவு'')ச் சமப்படுத்தி விட்டது; அதே காலத்தில் ஆங்கிலேயரின் சராசரி வருமானம் 95 பவுன்.

அப்படியும், அதிகார பூர்வமான சைமன் கமிஷனின் 'மிக நம்பிக்கை தருவதான' மதிப்பீட்டின்படி சராசரி இந்தியனின் வருமானம் 1921-22இல் நாள் ஒன்றுக்கு 5 பென்ஸ் ஆக இருந்தது.

ஆயினும், உண்மையான விவரங்களை அறிய வேண்டுமானால் கணக்கில் விடுபட்டுப் போன சில தகவல்களைத் திருத்த வேண்டியது அவசியம்.

அரசினரின் இந்திய விலைவாசி அட்டவணை எண், 1921-ல் 236 ஆக இருந்தது. 1936இல் 125 ஆக வீழ்ந்தது—ஏறக் குறையப் பாதியளவு வீழ்ச்சி, இந்திய வருமானத்தின் முக்கிய அடிப்படையான விவசாய விலைகளை இந்த வீழ்ச்சி மிகக் கடுமை யாகப் பாதித்துள்ளது. 1921க்கும் 1936க்கும் இடையில் உணவுத் தானியங்களின் சில்லறை விலைகள் வீழ்ந்துள்ளதை விலை வாசி அட்டவணை காட்டுகிறது; அரிசி விலை எண் 355 லிருந்து 178 ஆகவும், கோதுமை விலை எண் 360 இலிருந்து 152 ஆகவும், பருப்பு வகை விலை எண் 406 லிருந்து 105 ஆகவும், பார்லியின் விலை எண் 325 லிருந்து 134 ஆகவும் வீழ்ந்துள்ளன—பொது வான, பாதிக்கு மேற்பட்ட விலை இறக்கம்.

இவ்வாறு, இந்த விலைவாசி வீழ்ச்சிகளைக் கவனத்தில் கொண்டு, சைமன் கமிஷனின் அறிக்கைப்படி 1921—22 இல் சராசரி நாள் வரு மானம் 5 பென்ஸ் என்ற கணக்குப்படி பார்த்தால், போருக்கு முந்தின காலத்தில் சராசரி நாள் வருமானம் சுமார் இரண்டரை பென்ஸ் என்று ஏற்படுகிறது.

ஆயினும், இது ஒரு 'மொத்த' சராசரி வருமானம்; மிகப் பெரும்பாலான மக்களின் மெய்யான வருமானம் அல்ல. இதி லிருந்து தாயகத்துக்கு (பிரிட்டனுக்கு)ச்செல்லும்கனமான தீர்வை களையும், ஏகாதிபத்தியக் காணிக்கைகளையும், (கடனுக்கு வட்டி, பிரிட்டிஷ் மூலதன முதலீடுகளுக்கு லாபப் பங்கு, நிதிகளுக்குக் கமிஷன் முதலியன.) கழிக்க வேண்டும்; இந்தக் காணிக்கை களுக்குப் பதிலாக இறக்குமதிச் சரக்குகள் கூட வருவதில்லை என்பதையும் குறிப்பிட வேண்டும். மொத்த தேசிய வருமானத் தில் பத்தில் ஒருபங்குக்குக் கொஞ்சம் மிகுதியாக இருக்கும் என்று ஷாவும், கம்படாவும் இந்த வடிகாலை மதிப்பீடு செய்கிறார்கள். ஆக, இரண்டரை பென்ஸ் என்பது இரண்டேகால் பென்ஸாய்க் குறைகிறது.

அடுத்தபடியாக, சராசரியில் சேர்க்கப்பட்டுள்ள வருமானத் திலுள்ள அதிக வேற்றுமையையும் கவனத்தில்கொள்ள வேண்டும். உதாரணமாக, சைமன் கமிஷனின் அறிக்கைப்படி பிரிட்டனின் சராசரி தனிநபர் வருமானம் 95பவுன் என்பதன் பொருள், ஒரு மனைவியும் இரு குழந்தைகளுமுள்ள ஒரு பிரிட்டிஷ் தொழிலாளி ஆண்டுக்கு 475 பவுன் அனுபவிக்கிறான் என்பதாகும். உண்மையில் இத் தொகையில் பாதி பெறும் தொழிலாளியை மிகச் சிறப்பான சலுகை பெறுகிறவனைக் கருத வேண்டும்; ஆனால், சராசரித் தொழிலாளியோ இத் தொகையில் மூன்றில் ஒரு பகுதிதான் பெறுகிறான்—மூன்றில் ஒரு பகுதியிலும் குறைவு. விநியோகத் தில் இதே வேற்றுமை இந்தியாவுக்கும் பொருந்தும். பேராசிரி

யர் கே.டி.ஷாவும், கே. ஜே.கம்படாவும் எழுதிய 'இந்தியாவின் செல்வமும் வரி விதிக்கத் தக்க அளவும்' (1924) என்ற நூலில் மக்கட் தொகையில் ஒரு சதவீதத்தினர் தேசிய வருமானத்தில் மூன்றில் ஒரு பங்கை அடைகின்றனர் என்பதையும், மக்கட் தொகையில் 60 சதவீதத்தினர் வருமானத்தில் 30 சதவீதம் பெறுகின்றனர் என்பதையும் காட்டியுள்ளார்கள். மக்கட் தொகையில் பெரும்பான்மையோருக்கு அல்லது 60 சதவீதத் தினருடைய உண்மையான சராசரி வருமானம்—தேசிய சராசரி வருமானம் எனப்படும் தொகையில் சரிபாதிதான் என்பதே இதன் பொருள்.[1]

ஆக, சைமன் கமிஷனின் 'மிக நம்பிக்கை தரும்' வருவாய் விநியோகத்தைப் பற்றின புள்ளி விவரங்களின் மதிப்பீட்டைக் கொண்டு பார்த்தால், பின்னால் நேர்ந்த விலைவாசிகள் இறக்கத்தை யும் தாயகத்துக்குச் செலுத்தும் தீர்வைகளாலும், ஏகாதிபத்தி யத்துக்குச் செலுத்தும் காணிக்கைகளாலும் ஏற்படும் வடிகாலையும் கழித்த பிறகு, இந்திய மக்களில் பெரும்பாலோருக்கு இன்று ஒரு பென்ஸ் முதல் ஒன்றேகால் பென்ஸ் ஒரு நாள் வருமானமாய்க் கிடைக்கிறது என்ற முடிவுக்கு வருகிறோம்.

*ஏகாதிபத்தியத்துக்குச் சாதகமான ஒவ்வோர் அம்சத்தை யும் அடிப்படையாய்க் கொண்டும், ஏகாதிபத்தியத்தின் சொந்த*

1. 1939 ஏப்ரலில் வெளியான தி டைம்ஸ் பத்திரிகையின் இந்தியத் தொழில், இஞ்சினியரிங் அநுபந்தத்தில் 'இந்திய மார்க்கெட்' பற்றிய வாணிப மதிப்பீட்டின் வாயிலாக, வருமானங்களின் பிரிவினைகளையும் குறைவான வருமானங்களையும் பற்றி ஓரளவு அறிய முடிகிறது. பிரிட்டிஷ் முதலாளிகள் தங்கள் சொந்த உபயோகத்திற்காகத் தயாரிக்கப்பட்ட அதிகார பூர்வமில் லாத மதிப்பீடு இது; ஏகாதிபத்தியச் சுரண்டலின் விளைவுகளை அழகான சித்திரமாய் வரைந்து காட்டும் பிரச்சாரத்திற்காகத் தயாரிக்கப்பட்டதல்ல; எந்த அளவு பொருள் உபயோகிப்பாரைக் கவர முடியும் என்பதை நிர்ணயிக்கும் வியாபார நோக்குடன் தயாரிக்கப்பட்டது. இந்த மதிப்பீட்டிற்கும், சைமன் கமிஷனின் மதிப்பீட்டிற்கும், குறிப்பிடத்தக்க வித்தியாசம் இருக்கிறது. இந்தியக் குடும்பங்களின் வருவாய்களின் அளவு பின்வருமாறு தரப்படுகிறது:

| ரூபாய்க் கணக்கில் வருமானம் | ஆங்கில நாணயத்தில் | குடும்பங்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 1,00,000க்கு மேல் | £ 7,500 | 6,000 |
| சராசரி 5,000 | £ 375 | 2,70,000 |
| சராசரி 1,000 | £ 75 | 2,50,000 |
| சராசரி 200 | £ 15 | 35,00,000 |
| சராசரி 50 | £ 3 10s | மற்றவர்கள் |

பிரிட்டிஷ் முதலாளிகள் தங்கள் சொந்த உபயோகத்துக்காகத் தொகுத்த இந்த அட்டவணையிலிருந்தே உண்மை நிலவரத்தை அறியலாம்.

சொந்த மதிப்பீடுகளின் அடிப்படை பேரிலும் இவ்வாறு கணக்கிடப்பட்டுள்ளது.

அதிகார பூர்வமாக அண்மையில் செய்யப்பட்ட இம் மதிப்பீடுகள் வாயிலாகப் பொதுவான ஊகம் (சரியான புள்ளி விவரங்கள் இல்லாமையால் அது வேறு விதமாக இருக்க முடியாது) ஊர்ஜிதம் செய்யப்படுகிறது. 1931 இல் இந்திய மத்திய பாங்கிங் விசாரணைக் குழு அறிவித்தது:

> ''மாகாணக் கமிட்டிகளின் அறிக்கைகளிலிருந்தும். வெளியிடப்பட்டுள்ள மற்ற புள்ளி விபரத் தகவல்களிலிருந்தும் விவசாய உற்பத்திப் பொருள்களின் மொத்த சராசரி ஆண்டு வருமானத்தின் மதிப்பு சுமார் 1200 கோடி ரூபாய்; 1928 ஆம் ஆண்டு விலை நிலவரங்களை ஆதாரமாய் வைத்து இந்தக் கணக்கு செய்யப் பட்டுள்ளது. இந்த அடிப்படையிலும், சில துணைத் தொழில்களின் வாயிலாகக் கிடைக்கக்கூடும் என்று எதிர்பார்க்கப்படும் வருமானம் விவசாய வருமானத்தில் 20 சதவீதம் இருக்கும் என்பதையும் சேர்த்துக் கொண்டு, 1929 முதல் மக்கட்தொகை ஏறி விலைவாசிகள் இறங்கியிருப்பதையும் கணக்கில் சேர்க்காமல் பார்த்தாலும் பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள விவசாயிகள் சராசரி வருமானம் ரூ. 42க்கு மேல், அல்லது ஆண்டுக்கு 3 பவுனுக்குச் சற்று அதிகம் என்பதற்கு மேல் போகவில்லை.''
>
> (இந்திய மத்திய பாங்கிங் விசாரணைக் குழுவின் அறிக்கை, 1931 முதல் தொகுதி, பக். 39).

விவசாய மக்களின் சராசரி தனி வருமானம் நாளுக்கு 2 பென்ஸ் என்று இதனால் ஏற்படுகிறது. 1928 ஆம் ஆண்டு விலைவாசிகளை ஆதாரமாகக் கொண்டு இக் கணக்கு செய்யப்பட்டது. 1928-1936 ஆம் ஆண்டுகளுக்கு இடையில் விலைவாசி அட்டவணை எண் 201 லிருந்து 125 ஆக வீழ்ந்தது. இதனால், நாளுக்கு 2 பென்ஸ் வருமானம் என்பது இப்போது நாளுக்கு ஒன்றேகால் பென்சாகக் குறைந்துவிட்டது.

1938, ஏப்ரலில் இந்திய அரசாங்கத்தின் நிதி உறுப்பினரான சர் ஜேம்ஸ் கிரிக், இந்தியாவின் மொத்த தேசீய வருமானம் 1,60,000 இலட்சம் ரூபாய் அல்லது 12,000 இலட்சம் பவுன் என்று மதிப்பிட்டார். மொத்த தேசீய வருமானத்தின் பேரில் எந்த அளவு விகிதம் வரி விதிக்கப்படுகிறது என்பதைக் காட்டுவதற்காகக் கொடுக்கப்பட்ட இந்த மதிப்பீடு பிரிட்டிஷ் இந்தியாவுக்கு மட்டுமே பொருந்தும் (முழு இந்தியாவின் வருமானம் என்று வைத்துக்கொண்டால் அந்த அளவு விகிதம் தனிநபர் வருமானம் குறையும்) என்று கொண்டு பிரிட்டிஷ் இந்தியாவின்

1938 ஆம் ஆண்டு மக்கட் தொகையான 28.5 கோடியால் வகுத்தால், தனிநபர் மொத்த வருமானம் 56 ரூபாய் அல்லது 84 ஷில்லிங் என்று ஏற்படுகிறது. வருவாய்ப் பிரிவினைக் கணக்குப் புள்ளி விவரத்தைக் (அதாவது, மக்கட் தொகையில் 60 சதவீதத்தினர் 30 சதவீதம் வருமானத்தைப் பங்கிட்டுக் கொள்கின்றனர் என்ற விவரத்தை) கணக்கிட்டால் பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள பெரும்பான்மை சராசரி இந்தியர்களின் நாள் வருமானம் 1·38 பென்ஸ், அதாவது 1·25 பென்சுக்குச் சற்று அதிகம்என்ற முடிவுக்கே மீண்டும் வருகிறோம். டாக்டர் வி. கே. ஆர். வி. ராவ் தனி நபரின் மொத்த வருமானம் ஆண்டுக்கு 62 ரூபாய் அல்லது 93 ஷில்லிங் என்று மதிப்பிடுகிறார்.[1] பேராசிரியர்கள் ஷாவும், கம்படாவும் கண்ட அளவு விகிதத்தைப் பயன்படுத்திப் பார்த்தால், இந்தியர்களில் பெரும்பாலோருக்கு, ஆளுக்கு, நாளுக்குச் சுமார் $1\frac{1}{2}$ பென்ஸ் வருமானம் என்ற முடிவுக்கு வருகிறது.

இந்திய வறுமையின் ஆழத்தைப் பற்றிப் பூர்வாங்கமாய் அறிந்து கொள்ள இந்தக் கணக்குகள் தேவை.

உண்மையான வாழ்க்கையில் இந்த மதிப்பீடுகளின் பொருள் என்ன? தலைசிறந்த இந்தியப் பொருளாதார நிபுணர்களான ஷாவும், கம்படாவும் அதைப் பின் வருமாறு விவரிக்கிறார்கள்:

> ''சராசரி இந்திய வருமானம், மக்கட் தொகையில் மூவரில் இருவருக்கு உணவுதரப் போதுமானது; அல்லது, மூவருக்கும் அவர்களுக்குத் தேவையான மூன்று வேளை உணவுக்குப் பதிலாக இரண்டு வேளை உணவு தரலாம்; அவ்வாறு உண்பதற்கு, அவர்கள் நிர்வாணமாக இருக்க

1. டாக்டர் ராவின் கருத்துப்படி நகர்ப்புறத் தனிநபர் வருமானம், கிராமப்புற வருமானத்தைவிட மும்மடங்குக்கு மேல் அதிகம். கிராமப்புற வருமானம் 51 ரூபாய் அல்லது 77 ஷில்லிங்; நகர்ப்புற வருமானம் ரூ. 166 அல்லது 249 ஷில்லிங். கிராமங்களிலும் நகரங்களிலும் வாழ்கின்ற மக்களுக்கு இடையில் பெருத்த பொருளாதார வேற்றுமை இருக்கின்றது; வெவ்வேறு மட்டங்களில் உள்ள மக்களுக்கு இடையிலும் வேற்றுமை இருக்கிறது.

கிராமங்களில் ஏறக்குறைய விளைச்சல் முழுவதையும் நிலச்சுவான் அல்லது வட்டிக் கடைக்காரர்கள் கவர்ந்து கொள்கிறார்கள் என்பதைப் பின்னால் கட்டாயம் கவனிப்போம்.

நகர்ப்புறத்திலும், வருவாயில் சுமார் பாதி அளவு மொத்த மக்கட்தொகையில் பத்தில் ஒரு பங்குக்குக் குறைவானவர்களுக்கே சேருகிறது; சற்று வசதி படைத்தவர்கள் என்று சொல்லக்கூடிய, ஆண்டு வருமானம் ரூ. 2000 க்குமேல் உள்ளவர்களுக்கு இடையிலும் 38 சதவீதத்தினர் மொத்த வருவாயில் 17 சதவீதமே பெறுகின்றனர்; அதே சமயம், ஒரு சதவீதத்துக்குச் சற்று அதிகமானோர் மொத்த வருவாயில் 10 சதவீதத்தைப் பெறுகின்றனர்.

(வி. கே. ஆர். வி. ராவ்: 'பிரிட்டிஷ் இந்தியாவின் தேசிய வருமானம்' 1931—32, பக். 139.)

வேண்டியிருக்கும்; ஆண்டு முழுவதும், திறந்த வெளியில் வசிக்க வேண்டும்; பொழுது போக்கோ, தமாஷாவோ கிடையாது; உணவைத் தவிர வேறு எதனையும் அவர்கள் வேண்டக் கூடாது; அந்த உணவும் மட்ட ரகமானது, சத்தில்லாதது, கரடுமுரடானது.''

(ஷாவும் கம்படாவும்: ''இந்தியாவின் செல்வமும் வரி விதிக்கத்தக்க அளவும்,'' 1924; பக். 253.)

ஜெயில் சட்டங்களையும், பஞ்சச் சட்டங்களையும் இந்த மதிப்பீடுகளுடன் ஒப்பிட்டு நோக்கினுல் உண்மை இன்னும் தெளிவாகும். 1939 ஆம் ஆண்டில், இந்தியாவில் ஒரு கைதியைப் பராமரிக்க ஓர் ஆண்டுச் செலவு ரூ. 116·67, அல்லது பாங்கிங் விசாரணைக் குழுவின் மதிப்பீட்டின்படி சராசரி இந்திய விவசாயியின் வருவாயைவிட மூன்று மடங்கு. 1923 இல் பம்பாயில் தொழிலாளர்களின் பட்ஜட்டைப் பற்றி அதிகார பூர்வமான விசாரணை நடந்தபோது, தொழிலாளர்கள் வாழ்க்கைத்தரத்தோடு சிறையிலும், பஞ்ச காலத்திலும் அரசின் பராமரிப்பில் இருப்போரின் வாழ்க்கைத்தரத்தை ஒப்புநோக்க முடிந்தது.

வயதுவந்த ஆணின் தினசரி
உணவுச் செலவு

| | பம்பாய்த் தொழிலாளர் பட்ஜட் | பம்பாய் சிறைகள் | | பம்பாய் பஞ்சப்படி (கூலி பெறுவோர்) |
|---|---|---|---|---|
| | | கடும் உழைப்புக் கைதிகள் | இலகு உழைப்புக் கைதிகள் | |
| தானியங்கள் | 1·29 lb. | 1·5 lb. | 1·38 lb. | 1·29 lb. |
| பருப்பு வகைகள் | 0·09 ,, | 0·27 ,, | 0·21 ,, | |
| புலால் | 0·03 ,, | 0·04 ,, | 0·04 ,, | விபரங்கள் |
| உப்பு | 0·04 ,, | 0·03 ,, | 0·03 ,, | கிடைக்க |
| எண்ணெய்கள் | 0·02 ,, | 0·03 ,, | 0·03 ,, | வில்லை |
| மற்றவை | 0·07 ,, | — | — | — |
| | 1·54 ,, | 1·42 ,, | 1·69 ,, | |

(பம்பாய் தொழிலாளர் இனப் பட்ஜட்கள் பற்றின ஒரு விசாரணை பற்றிய அறிக்கை, பம்பாய் தொழில் அலுவலகம், 1923).

கிராம மக்களைவிட வசதியாக இருக்கும் பம்பாய்த் தொழிலாளர் பஞ்சபடி அளவிலும் கைதிகளின் ஜெயில்படியைவிடக் குறைந்த அளவிலும்தான் உண்ண முடிகிறது.[1]

மக்கட் கூட்டத்தின் நிலையோ ஆண்டுக்கு ஆண்டு அதேதுன்பச் சித்திரம்தான் என்பதை அரசாங்க அறிக்கைகள் காட்டுகின்றன:

> ''மிகத் தேர்ச்சி பெற்ற தொழிலாளர்களைத் தவிர மற்றவர்களுக்குக் கிடைக்கும் கூலி அவர்கள் உண்ணவும், உடுக்கவும் கூடப் போதாது. எங்கு பார்த்தாலும் ஜனக் கூட்ட நெருக்கடி, அசுத்தம், இழிந்த துன்பம்.''
>
> ('1927-28 இல் இந்தியா')
>
> ''இந்தியாவில் வாழும் மக்களில் ஒரு பெரும் பகுதியினர், மேலை நாடுகளில் இணை காணமுடியாத வறுமையில் உழலுகின்றனர்; எப்படியோ உயிரைக் கட்டிப்பிடித்துக் கொண்டு வாழ்கிறார்கள்.''
>
> ('1929–30 இல் இந்தியா')
>
> ''மக்கட் தொகையில் 70 முதல் 80 சதவீதத்தினர் இன்னும் உயிர் காத்துக் கொள்ளும் நிலையிலேயே வாழ்கிறார்கள்.''
>
> (சர் ஆல்பிரெட் சாட்டர்டன்: கிழக்கு இந்தியக் கழகத்தின் பத்திரிகை, ஜூலை, 1930)

1933 இல் இந்திய மருத்துவத்துறை இயக்குனரான மேஜர் ஜெனரல் சர் ஜான் மெகா நாட்டின் சுகாதாரம் பற்றி ஓர் அறிக்கை வெளியிட்டார்: 39 சதவீதத்து மக்களுக்கு சத்துள்ள உணவு கிடைக்கிறது என்றும், 41 சதவீதம் குறைந்த சத்துள்ள உணவு பெறுகின்றனர் என்றும், 20 சதவீதம் மிக மோசமான சத்துணவு பெறுகின்றனர் என்றும் அவர் மதிப்பிடுகிறார்;

---

1 மலைப்பூட்டும் இந்த முடிவு பழித்துப் பேசப்பட்டதை அடுத்து, தொழிலாளர்கள் சில்லறை இனங்களாக உண்ணும் இனிப்புகள், ஊறுகாய்கள், மீன்கள், காய்கறிகள் அல்லது பழங்கள் இந்தக் கணக்கில் சேர்க்கப்படவில்லை என்று கூறி, 1925 இல் மிக விழிப்போடு அதிகார பூர்வமான மற்றொரு மதிப்பீடு செய்தார்கள். இம் மாதிரி சில்லறை இனங்களை எல்லாம் சேர்த்தாலும் மேலே கண்ட அட்டவணையின் உணவு இனத்தில் 4.6 விழுக்காடுதான் கூடுகிறது. முதல் கணக்குப்படி உள்ள 2,450 காலரிகளுடன் 113 காலரிகளைக் கூட்டி 2 563 காலரிகள் அளவு பம்பாய்த் தொழிலாளர் நாள்தோறும் உண்கிறார் என்று புதிய மதிப்பீட்டால் தெரிந்தது. (பம்பாய் லேபர் கெஜட்; ஏப்ரல், 1925—பக்கம் 81—2) இந்தக் கணக்கை, உணவுச்சத்து பற்றி பிரிட்டிஷ் மருத்துவக் கழகத்தின் சப் கமிட்டி மதிப்பிட்ட குறைந்த பட்ச அளவான 3,390 காலரிகளோடும் அல்லது, பேராசிரியர் ஆர். முகர்ஜீ இந்தியாவின் நிலவரமாய்க் குறித்த குறைந்த பட்சமான 2,800 காலரிகளோடும் எதிரிடையாக வைத்துப் பார்க்கலாம் (''நாற்பது கோடி மக்களுக்கு உணவுத் திட்டம்;'' 1938.)

அதாவது மக்களில் 61 சதவீதத்தினர் சத்து குறைந்த உணவே உண்கின்றனர். அதே காலத்தில் வங்காளம் பற்றிய புள்ளி விவரம்: முறையே, 22 சதவீதம், 47 சதவீதம், 31 சதவீதம். அதாவது, வங்காளத்தில் 78 சதவீத மக்கள் அல்லது ஐந்தில் நான்கு பேர் சத்து குறைந்த உணவே உண்கின்றனர். 'இந்தியா முழுவதும் நோய் பரவலாக நிறைந்துள்ளது' என்றும், 'உறுதி யாகவும், விரைவாகவும் அது அதிகரித்து வருகிறது' என்றும் அவர் மேலும் அறிவித்தார்.

உணவுச்சத்து நிபுணர் டாக்டர் ஐக்ரோட், இந்தியாவில் 'மக்கள் தொகையில் சுமார் மூன்றிலொரு பங்கினர் எப்போதுமே போஷாக்குக் குறைவாகவே இருக்கின்றனர்' என்று உரைத் துள்ளார்.

(உணவுத் தானியக் கமிட்டியின் அறிக்கையில் மேற் கோள் காட்டப்பட்டது, 1943, பக். 33.)

1926 இல் அரசாங்கம் இந்தியாவில் விவசாயத்திற்காக ஒரு ராயல் கமிஷனை நியமித்தது. வறுமைக்கு அடிப்படைக் காரணமான நிலவுடைமை, குத்தகை, வாடகை, நிலவரிக் கொடுமை முதலிய பிரச்னைகளை ஆராயும் பணியை இந்தக் கமிட்டி மேற்கொள்ள அதிகாரமில்லை; ஆனால் அரசாங்கத்தின் அதிகாரி களிடமிருந்தே விவசாயிகளின் பயங்கரமான நிலைமை பற்றிச் சாட்சியங்கள் உடனே குவியத் தொடங்கின. இந்திய அரசின் விவசாய ஆலோசகரான டாக்டர். டி. கிளவ்ஸ்டன் முதல் சாட்சியாக விசாரிக்கப் பட்டார். 'விவசாய மக்கள் மிகவும் வலுவற்ற உடலினராய், தொத்து நோய்களுக்கு எளிதில் இரை யாகின்றனர்' என்று குறிப்பிட்டார். 'விவசாய அபிவிருத்திக்குத் தடையாக இருக்கும் முக்கியமான கஷ்டங்களில் போஷாக்குக் குறைவு ஒன்று' என்று கர்னல் கிரஹாம் கமிட்டியிடம் கூறினார். கூனூர், பாஸ்டர் இன்ஸ்டிடியூட் நிர்வாகியான லெப்டினென்ட் கர்னல் ஆர். மக்ஹாரிசன் இன்னும் அழுத்தம் திருத்தமாய்ச் சொன்னார் :

> "இந்திய மக்களைத் துன்புறுத்தும் எல்லா இயலாமை களிலும் போஷாக்குக் குறைவு தலையாயதாகும்...இந்தி யாவில் நோயுண்டாகும் காரணங்களில் முதன்மையானது போஷாக்குக் குறைவே."

(லெப். கர்னல் ஆர். மக்ஹாரிசன் இந்திய மக்களுக்கு இடையில் பௌதிக ஆற்றலின்மைக்கும், ஆரோக்கி யம் இன்மைக்கும் ஒரு காரணம் போஷாக்குக் குறைவு—விவசாயம் பற்றின ராயல் கமிஷனுக்கு முன் னிலையில் அளித்த சாட்சியம், I, ii பக்கம் 95.)

1929 இல் தொழிலாளர் பற்றின ஆராய்ச்சிக்கு ஒரு ராயல் கமிஷனை அரசாங்கம் நியமித்தது. 'தொழில் முக்கியத்துவமுள்ள இடங்களில் கடனில் மூழ்கியுள்ள குடும்பங்கள் தனி நபர்களின் அளவு, மொத்த ஜனத்தொகையில் மூன்றில் இரண்டு பங்குக்குக் குறையாது. . . பெரும்பாலோரைப் பற்றின வரை மூன்று மாத ஊதியத்தின் மேல் கடன் பட்டுள்ளனர்; சில சமயம், இத் தொகையைவிட மிகவும் அதிகமாயுள்ளது' என்று இந்தக் கமிஷன் கண்டது (பக். 224). பம்பாய் ஜவுளித் தொழிலாளர் களுக்குக் கிடைக்கக்கூடிய மிகச் சௌகரியமான சராசரி மாத ஊதியமான 56 ஷில்லிங் ஆணுக்கும், 26 ஷில்லிங் பெண்ணுக்கும்; பம்பாய் திறமையற்ற தொழிலாளர்களுக்கு மாத ஊதியம் 30 ஷில்லிங்கும்; தலையாய ஜாரியா நிலக்கரி வயல் நிலக்கரி வெட்டி எடுக்கும் தொழிலாளர்களுக்குச் சராசரி 15 ஷில்லிங் முதல் 22 ஷில்லிங் வரை மாத ஊதியமும்; பருவகாலத் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் ஆண்களுக்கு நாள் ஒன்றுக்கு 6 பென்ஸ் முதல் 1 ஷில்லிங்கும், பெண்களுக்கு 4 முதல் 9 பென்ஸ் ஊதியமும்; வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகிய மாகாணங்களில் திறமையற்ற தொழிலாளர்களில் ஆண்களுக்கு 9 பென்ஸ் நாட் கூலியும், பெண்களுக்கு 6 பென்ஸ், குழந்தைகளுக்கு 4 பென்ஸ் கூலியும், மதராஸிலும், ஐக்கிய மாகாணங்களிலும் ஆணுக்கு 5 பென்ஸ் என்ற குறைவான கூலியு மாகப் பலவகைக் கூலி விகிதங்கள் நிலவுவதைக் கமிஷன் கண் டது. தொழிற்சாலைச் சட்டங்களுக்கு உட்படாத, 'ஒழுங்கு படுத்தப் படாத' தொழிற்சாலைகளிலும், தொழில் நிலையங்களிலும் இந்தியத் தொழிலாளர்களில் பெரும்பான்மையோர் குவிந்துள் ளனர்; அங்கு 'சில இடங்களில் ஐந்தே வயதான தொழிலாளர்கள் போதுமான உணவு இடைவேளை இல்லாமலும், வாராந்தர ஓய்வு நாட்கள் இல்லாமலும், பெரும்பாலும் நாளில் 10, 12 மணி நேரம் வேலை செய்வதையும் மிக எளிய வயதுள்ளவர்களுக்கு நாளுக்கு இரண்டணா (2.25 பென்ஸ்) அளிக்கப் படுவதையும்' கமிஷன் கண்டது (பக். 96).

வீட்டு வசதியைப் பொருத்தவரை, சராசரி தொழிலாளி வர்க்கக் குடும்பத்துக்கு ஓர் அறை கூட இல்லை; பெரும்பாலும், ஓர் அறையின் பகுதியைப் பகிர்ந்து கொள்ளும். 1911 இல் பம்பாயின் மொத்த மக்கட் தொகையில் 69 விழுக்காட்டினர் ஓரறைக் குடியிருப்புகளில் வசித்தனர் (அதே ஆண்டு லண்டனில் 6 விழுக்காடு); சராசரி 4.5 பேர் ஒரு குடியிருப்பில் இருந்தனர். 1931 சென்சஸ்படி, பம்பாயின் மொத்த ஜனத்தொகையில் 74 விழுக்காட்டினர் ஓரறைக் குடியிருப்புகளில் வசித்தனர்; அதாவது

தின் கொள்கைகளை வகுக்கும் அதிகாரத்தை ராஜ்யங்களில் வாழும் அதன் மக்களுக்கு அளிப்பதைவிட, அந்த அரசாங்கங்களுக்கு அளிக்வேண்டுமென்று இத்திட்டத்தில் கண்டிருந்தது.

வர்ஜீனியா, நியூ ஜெர்ஸி திட்டங்கள், அவற்றின் நோக்கத்திலும் கருத்திலும் பெரும் அளவுக்கு வேறுபட்டு இருந்தபோதிலும், பிலடெல்பியாவில் கூடிய பிரதிநிதிகள், தொடர்ந்து கூடிப்பேசி, விட்டுக்கொடுத்து, பல சமரசங்கள் மூலம், பல வாரங்கள் விவாதங்கள் செய்த பின்னர் ஓர் உடன்பாட்டுக்கு வர முடிந்தது. வர்ஜீனியா தனது திட்டத்தில் கோரியிருந்தபடி, காங்கிரஸ் இரு சபைகளைக் கொண்டதாக இருக்க வேண்டும். ஆனால் எல்லா ராஜ்யங்களுக்கும் மேல் சபையில் சமமான பிரதிநிதித்துவமே இருக்கும். அதாவது, ராஜ்யச் சட்டசபை இருசெனேட்டர்களைத்தேர்ந்தெடுக்க வேண்டும். கீழ்ச் சபையில், வர்ஜீனியா திட்டம் கோரியபடி, ஒவ்வொரு ராஜ்யமும் அனுப்பும் காங்கிரஸ்காரர்களின் (இப் பிரதிநிதிகள் காங்கிரஸ்காரர்கள் என்று அழைக்கப்பட்டனர்) எண்ணிக்கை, ஜனத்தொகையை அடிப்படையாகக் கொண்டு இருக்கவேண்டும். இந்தப் பிரதிநிதிகள் நேர்முகமாக மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவர்.

இதுதான் பிரதிநிதிகள் சமாளிக்க வேண்டிய மாபெருந் தடையாக இருந்தது. இது அவ்வளவு சுலபமாகவும் தீர்க்கப்படவில்லை. உதாரணமாக, தென்பகுதியில் ஏராளமான நீக்ரோ அடிமைகள் இருந்தனர். இவர்களுக்கு வாக்களிக்கும் உரிமை இல்லாமற் போனாலும், தங்கள் ராஜ்யங்களுக்கு அதிகமான பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் உரிமை இருக்க, அந்த அடிமைகளும் தங்கள் ஜனத்தொகையின் ஒரு பகுதியாகக் கணக்கிடப்படவேண்டுமென்று தென் பகுதி கோரியது. அடிமைகளில் ஐந்தில் மூன்று பங்கைச் சுதந்திரப் பிரஜைகளுடன் சேர்த்துக் கணக்கிடுவதென்று இறுதியாக ஒப்புக்கொள்ளப்பட்டது.

மிகவும் தெளிவான மொழியில் அரசியல் அமைப்புச் சட்டம் ராஜ்யங்களின் ஆதிபத்திய அதிகாரத்தைப் பறித்து, அதைச் சில காரியங்களுக்குத் தங்கள் தேசிய

பம்பாயில் ஓராள் வசிப்பதற்காகக் கிடைக்கும் தரைப்பகுதியின் சராசரி அளவு $12\frac{1}{2}$ சதுர அடிகள் என்று வீட்டுவசதிக் குழு (பம்பாய் நகராண்மைக் கழகம் நியமித்த ஒரு கமிட்டி) மதிப்பிட்டது; அதே சமயம், ''பம்பாய், சிறைக் குறிப்பின்படி ஒரு கைதிக்கு ஒதுக்கப்படும் இடத்தின் அளவு 40 சதுர அடிகள்.''

(வீட்டு வசதிக் குழு அறிக்கை, ஜனவரி 1946)

தவிர, பம்பாய் மக்களில் 13 விழுக்காடு இன்று தெருக்களில் தூங்குகிறார்கள்; போருக்கு முன் இவ்வாறு தூங்கியவர்கள் 5 விழுக்காடு.

சுகாதார நிலை பற்றி, விட்லி அறிக்கை கீழ்க்காணும் காட்சியைக் கண்டது:

''குவியலான குப்பை கூளங்கள் அழுகுவதையும், சாக்கடை நீர் குட்டைகளையும், கக்கூஸ் வசதி இன்மையால் காற்றும் மண்ணும் ஆபாசமாவதையும் பார்த்தால் சுகாதாரம் முற்றிலும் புறக்கணிக்கப்படுவதை அறியலாம். தளவரிசையோ, ஜன்னல்களோ, காற்றோட்ட வசதியோ இல்லாத வீடுகளில் வழக்கமாக ஒரே ஒரு சிறிய அறை இருக்கும்; குனியாமல் உள்ளே செல்ல முடியாத வாசல்தான் அதற்கு ஒரே வழி; சிறிது தனிமை வேண்டுவோர் பழைய மண்ணெண்ணெய் டின்களையும், சணல் சாக்குகளையும் திரையாகப் பயன்படுத்துவதால் காற்றும், வெளிச்சமும் உட்புக முடியாமல் மேலும் தடைப்படுகின்றன. இம்மாதிரி குடியிருப்புகளில்தான் மனித ஜீவன்கள் பிறக்கின்றன, உண்கின்றன, வாழ்ந்து மடிகின்றன'' (பக். 271).

பம்பாய் தொழிலாளர் அலுவலகம் 1932-33இல் தொழிலாளர் வர்க்கத்தின் பட்ஜெட்களைப் பற்றி விசாரணை நடத்தியது. நீர் விநியோகம் பொறுத்தவரை, குடியிருப்புகள் 26, விழுக்காடு 8 அல்லது குறைந்த குடியிருப்புகளுக்கு ஒரு குழாய்; 44 விழுக்காடு 9 முதல் 15 குடியிருப்புகளுக்கு ஒரு குழாய்; 29 விழுக்காடு 16 அல்லது அதிகமான குடியிருப்புகளுக்கு ஒரு குழாய். (பம்பாய் தொழிலாளர் பட்ஜட் விசாரணை அறிக்கை 1935.) 85 விழுக்காட்டில், எட்டு அல்லது குறைவான குடியிருப்புகளுக்கு ஒரே ஒரு கக்கூஸ்; 12 விழுக்காட்டில், 9 முதல் 12 குடியிருப்புகளுக்கு ஒரு கக்கூஸ்; 24 விழுக்காட்டில், பதினாறு அல்லது அதிகமான குடியிருப்புகளுக்கு ஒரே கக்கூஸ்; 1935இல் ஆமதாபாத் ஜவுளித் தொழிலாளர் சங்கம் தொழிலாளர் வாழும் வீடுகளைப் பற்றி விசாரணை நடத்தியது: அச் சங்கம் 23,706 குடியிருப்புகளை ஆராய்ந்தது; அவற்றில் 5,569இல் எவ்விதத் தண்ணீர் வசதியும்

இல்லை; தண்ணீர் வசதி இருந்த குடியிருப்புகளிலும், 200 அல்லது மேற்பட்ட குடும்பங்கள் வசிக்கும் பரப்பில் ஒன்று அல்லது இரண்டு குழாய்களே இருந்தன; 5000 குடியிருப்புகளில் கக்கூஸ் வசதியே கிடையாது; சுகாதார வசதிகளோ, சாக்கடையோ இல்லை.

தொழில் கமிஷனுக்கு முன் ஒரு சாட்சி அறிவித்தார்: "வாழ்க்கையின் போக்கிலும் பல நாடுகளிலும் நான் நிறைய வறுமையைக் கண்டிருக்கிறேன்; வறுமைபற்றி ஏராளமாகப் படித்திருக்கிறேன்; எனினும் . . . . . . பம்பாயிலுள்ள ஏழைகள் வசிக்கும் வீடுகள் எனப்பட்ட இடங்களைச் சோதிக்க வந்த போதுதான் அதன் கூர்மையையும், இழிவையும் என்னுல் உணர முடிந்தது. (தொழிலாளியைப் பாருங்கள்) அவன் தன் வீட்டில் குடும்பத்துக்கு இடையில் இருக்கும்போது பார்ப் போருக்குள் இயற்கையாகவே இக் கேள்விகள் எழுகின்றன: இவன் ஒரு மனிதப் பிறவியா? அல்லது பாதாளத்திலுள்ள, ஆத்மா அற்ற ஒரு கற்பனைப் பிராணியை நான் மாயமாய்ப் படைத்து விட்டேனு?

இம்மாதிரி அறையில்—பத்தடி நீளம், பத்தடி அகலம்—நடமாடவே முடியாத இடத்தில் முழுக் குடும்பங்கள் உறங்குகின்றன, வம்ச விருத்தி செய்கின்றன, நாற்ற மெடுக்கும் பசுஞ்சாண விரட்டிகளைக் கொண்டு அடுப்பு மூட்டுகின்றன, குடும்ப வாழ்க்கையின் எல்லாப் பணி களையும் செய்கின்றன; பொது கக்கூஸ் மட்டும் சற்று தூரத்தில் இருக்கிறது. சில பழைய வீடுகளின் மாடியில் உள்ள அறைகள் உண்மையில் சரிவான கூரையிலுள்ள வெறும் பொந்துகள்; அங்கே ஒரு மனிதன் நேராக நிமிர்ந்து நிற்கவும் முடியாது. பின்பக்க அறைகள் எப்போதும் இருட்டாகவும், அரை இருட்டாகவும் இருக்கும்; கண்கள் அங்குள்ள அரை இருட்டோடு பழகிய பிறகுதான் அங்கு வசிப்பவர்களை பார்க்கவே முடியும்.

(ஏ. ஈ. மிராம்ஸ்; 'இந்தியத் தொழில் கமிஷனுக்கு முன் சாட்சியம்' IV, பக். 354.)

பம்பாய் அரசினரால் ஆராய்ச்சி செய்வதற்காக நியமிக்கப் பட்ட ஒரு பெண் டாக்டர் அறிவித்தார்:

"சுமார் 15 அடி நீளமும் 12 அடி அகலமும் கொண்ட ஓர் அறை, சாவடியின் இரண்டாவது மாடியில் உள்ளது; அங்கு ஆறு குடும்பங்கள் வசிப்பதைக் கண்டேன். தரையில் தனித் தனியாக இருந்த ஆறு அடுப்புகளே அதற்குச் சாட்சி. விசாரித்ததில், அந்த அறையில்

வசிக்கும் வயது வந்தோரும், குழந்தைகளும் 30 பேர் என்று தெரிந்து கொண்டேன்....இந்த அறையில் வசித்த ஆறு பெண்களில் மூவர் விரைவில் குழந்தைப் பேற்றை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்....ஆறு அடுப்புகளில் இருந்து எழும் புகையும் மற்ற அசுத்தங்களும், இரவுச் சூழ் நிலையைக்கெடுத்து, பிரசவத்துக்கு முன்னும் பின்னும் எந்தத் தாயின் நலத்தையும் சேயின் நலத்தையும் கட்டாயம் பாதிக்கும். நான் பார்த்த பல அறைகளில் இதுவும் ஒன்று. ஒரு வீட்டின் அடித்தளத்திலிருந்த அறைகளில் நிலைமை இன்னும் மோசம். இங்கு பகல் வெளிச்சம் எவ்வாறோ உள்ளே ஊடுருவுகிறது; கதிரொளி உள்ளே நுழைவதே இல்லை.'' (பம்பாய் லேபர் கெஜட், செப்டம்பர், 1922, பக். 31.)

1946-ஆம் ஆண்டு ஏப்ரல் 21-ம் நாள் பரேலின் ஹிருதயப் பகுதியிலுள்ள, பம்பாயின் சிவப்புக் கேந்திரத்தில், ஐவுளித் தொழிலாளர்கள் வசிக்கும் பாளையத்தைப் பார்வையிட்டேன். மிக மோசமாய்க் கட்டப்பட்ட ஒற்றையறைக் குடிசைகள் நெருக்க மாயும் வரிசைக்கு மேல் வரிசையாகவும் இங்கு இருந்தன; ஒவ்வொன்றும் 12 அடி நீளம், 10 அடி அகலம்; காற்றோ, வெளிச் சமோ இல்லை, ஜன்னல்களே கிடையாது. நாங்கள் உள்ளே போன போது தடுமாறிக் கொண்டிருந்த ஓர் எண்ணெய்த்திரி ஒளி கக்கி இருளைக் கிழித்துக் கொண்டிருந்தது; அதே சமயம், எரிந்து கொண்டிருந்த ஸ்டவ்வின் சூட்டைத் தாங்க முடியவில்லை. இங்கே நாங்கள் நுழைந்த முதல் குடிசையில், பத்துபேர் வசித்துக் கொண்டிருந்தார்கள். மாத வாடகை ஏழு ரூபாய். மற்றொரு குடிசையில் நான் 13 சிறு ஸ்டவ்களையும் 'பர்னர்களையும்' எண்ணினேன்; அங்கு 13 குடும்பங்கள் வசித்தன என்று பொருள். எனக்கு வழிகாட்டியாக வந்தவன் அந்த வட்டாரத்தைச் சேர்ந்தவன். அந்தக் குடிசையில் 20 பேருக்குக் குறையாமல், அதற்குமேல் வசிப்பதாய் விளக்கினான். உண்மையான எண்ணிக்கையைச் சொன்னால் வாடகையை ஏற்றிவிடுவார்கள் என்ற அச்சம். முதல் மூன்று வரிசை குடியிருப்புகளுக்கு, மொத்தம் 30 குடியிருப்புகள் அல்லது 300 பேர்களுக்கு, மூன்று குழாய்களே இருந்தன; காலையிலும், மாலையிலும் துளித் துளியாக அவற்றிலிருந்து நீர் சொட்டும். மூன்று கக்கூஸ்கள் இருந்தன. சாக்கடைக்கு நேர் மேலே தரையில் தோண்டப்பட்ட குழிகள்; ஒன்று முன்பே நிறைந்து விட்டது; மேலும் பயன்படாது. அடுத்த வரிசையில் 160 குடியிருப்புகள் இருந்தன, ஆறு குழாய்கள் மட்டும் இருந்தன; மாலையிலும், அதிகாலையிலும், இரண்டு மணி நேரமே தண்ணீர் வரும்; பற்றுக்குறை காரணம்; பம்பாயின்

வசதியுள்ள பகுதிகளிலோ நாள் முழுவதும் தண்ணீர் கிடைக்கிறது.

இந்த நிலைமையின் விளைவாக — அரைப் பட்டினி, அதிக ஜன நெருக்கடி, சுகாதாரமின்மை — ஆரோக்கியம் எப்படி இருக்கும் என்பதைக் கற்பனை செய்து கொள்ளலாம். 1937 இல் ஓர் ஆயிரத்துக்கு 22·4 பேர் சாவு விகிதம் என்று கணக்கு கூறுகிறது; அதே சமயம் இங்கிலாந்திலும், வேல்ஸிலும் 12·4. இங்கிலாந்திலும் வேல்ஸிலும் வாழ்வோரின் ஆயுளில், பாதிக்கும் குறைவாகவே இந்தியரின் ஆயுள் இருக்கிறது.

> ''பெரும்பாலான மேலை நாடுகளுடன் ஒப்பிட்டால், இந்தியாவில் ஆயுள் அளவு மிகக் குறைவு; 1921 ஆம் ஆண்டு சென்ஸஸ்படி ஆணுக்கும், பெண்ணுக்கும் சராசரி வயது முறையே 24·8 ஆண்டுகள், 24·7 ஆண்டுகள்; அல்லது பொதுவான சராசரியாக 24·75 ஆண்டுகள் என்று கொள்ளலாம். இங்கிலாந்திலும் வேல்ஸிலும் பொதுவான சராசரி வயது 55·6 ஆண்டுகள். ஆண்களுக்கும், பெண்களுக்கும் முறையே 23·2 ஆண்டுகளும், 22·8 ஆண்டுகளாக அது மேலும் குறைந்திருப்பதை 1931 இல் கண்டார்கள்.''[1]
>
> ('இந்தியாவில் ஆலைத் தொழிலாளர் நிலை'; சர்வ தேசத் தொழிலாளர் அலுவலகம், 1938, பக். 8; 1931 ஆம் ஆண்டின் இந்திய சென்ஸஸ், பக். 98, அடிப்படையில்),

1. முக்கியமான புள்ளி விவரங்கள் இந்தியாவில் சரியாகவே இரா. 1931 ஆம் ஆண்டின் சென்ஸஸ் அறிக்கை 20 விழுக்காடு பிழைகள் இருக்கக்கூடும் என்று ஒப்புக் கொள்கிறது. 1881 முதல் 1911 வரை மக்களின் ஆயுட்கால அளவு அதிகார பூர்வமாகப் பின்வருமாறு:

| | 1881 | 1891 | 1901 | 1911 |
|---|---|---|---|---|
| ஆண்கள் | 23·67 | 24·59 | 23 63 | 22·59 |
| பெண்கள் | 25·58 | 25·54 | 23·96 | 23·31 |

1921 ஆண்டு சென்ஸஸ் கமிஷனர்கள் கொடுத்துள்ள இந்த அறிவிப்புகளின்படி, ஆயுட்கால எதிர்பார்ப்பு 1881 முதல் 1911 வரை குறைந்தது; 1921 ஆம் ஆண்டு எந்தப் புள்ளி விவரமும் எடுக்கப்படவில்லை. சென்ற அரை நூற்றாண்டாக இந்தியாவிலுள்ள இந்த நிலையை இங்கிலாந்து, வேல்ஸ் நாடுகளின் நிலைக்கு எதிரிடையாக வைத்துப் பார்க்க, இந் நாடுகளில் ஆயுட்கால எதிர்பார்ப்பு 1881-90 இல் 45·4 ஆக இருந்தது 1933இல் 60 8 ஆக உயர்ந்தது.

மற்றொரு மதிப்பீடு, 1931 இல் ஆயுட் கால எதிர்பார்ப்பு ஆண்களுக்கு 26.9 ஆண்டுகளும், பெண்களுக்கு 26·6 ஆண்டுகளும் என்று கணக்கிடுகிறது. இது சற்று அதிகமான ஆயுள் எதிர்பார்ப்பைக் குறிக்கும். ஆனால், ஆயுட்கால எதிர்பார்ப்பையும் பதிவு செய்யப்பட்ட மரணவிகிதத்தையும் பார்த்தால், இந்தப்

இந்த உண்மை, குழந்தை ஈன்றதும் மரிக்கும் தாய்மார்களின் எண்ணிக்கையால் உறுதிப்படுகிறது: இந்தியாவில் ஓராயிரத்துக்கு 24.5 தாய்மார்கள் இறக்கும் அதே காலத்தில், இங்கிலாந்திலும், வேல்ஸிலும் 4.1 பேர் இறக்கின்றனர். இந்த மரண விகிதம் ஆமதாபாத் நகரில் ஓராயிரத்துக்கு 41.05 என்பதிலும் பிரதிபலிக்கிறது; இந்த நகரத்தில் மேலே வருணிக்கப்பட்ட சூழலிலேயே இந்திய மக்கள் வசிக்கின்றனர்; அதே நகரத்தின் கன்டோன்மென்ட் பகுதியில் ஐரோப்பியர்கள் வாழ்க்கையின் எல்லாவித ஆரோக்கிய சாதனங்களோடும் வசதிகளோடும் வசிக்கின்றனர்; அவர்களுக்கு இடையில் இந்த மரண விகிதம் ஓராயிரத்துக்கு 12·84தான். இந்தியாவில் 1943இல் பிறந்த ஓராண்டுக்குள் சாகும் குழந்தைகளின் மரண விகிதம் ஓராயிரத்தில் 163ஆக இருப்பதால் இந்த உண்மை உறுதி ஆகிறது; இந்த மரண விகிதம் இங்கிலாந்திலும், வேல்ஸிலும் 46 தான். இந்தக் குழந்தை மரண விகிதம் கல்கத்தாவில் ஓராயிரத்துக்கு 239, பம்பாயில் 248, மதராஸில் 227 (ஒற்றையறைக் குடியிருப்புகளில் இந்த மரணம் இன்னும் மிகுதி: பம்பாயில் ஒற்றையறைக் குடியிருப்புகளில் மரண விகிதம் 1926இல் ஓராயிரத்துக்கு 577; இரட்டை அறைக் குடியிருப்புகளில் 254, ஆஸ்பத்திரிகளில் 107).

ஆபீஸ் ஏடுகளில் மரணத்துக்கான காரணம் 'காய்ச்சல்' என்று பதிவு செய்யப்பட்டிருக்கும். (1932-41இல் பிரிட்டிஷ் இந்தியாவில் 62 இலட்சத்தில் 36 இலட்சம் பேர் ஆண்டுதோறும் மாண்டனர்.) அரைப்பட்டினியாலும், வறுமைக் கொடுமையாலும், அவற்றின் விளைவுகளான உடல்நலக் கேட்டினாலும் ஏற்படும் சாவுகளைக் காய்ச்சல் என்ற சொல்லால் அவர்கள் மறைக்கின்றனர். இந்தியாவில் நாலு சாவுகளில் மூன்று சாவுகள் வறுமை நோயால்தான் என்பது இந்தியப் பொருளாதார நிபுணரும், ஏகாதிபத்தியத்திடம் பரிவுள்ளவருமான ஓர் ஆசிரியருடைய தீர்ப்பு :

> ''1926 இல் ஜனத்தொகையில் ஓர் ஆயிரத்துக்கு 26.7 பேர் விகிதம் மாண்டனர்; அதில் 20.5 பேர் காலரா, அம்மை நோய், பிளேக், 'காய்ச்சல்கள்', வயிற்றுப்போக்கு,

---

புள்ளிகள் எவ்வளவு தவறானவை என்பது விளங்கும். 1931 ஆம் ஆண்டில் ஆயுட்கால எதிர்பார்ப்பைப் பற்றிக் கொடுக்கப்பட்ட சாதகமான புள்ளி விவரங்களை வைத்து, மரண விகிதத்தைக் கணக்கிட்டாலும், ஆண்களின் மரண விகிதம் ஓராயிரத்துக்கு 37 என்றும், பெண்கள் மரண விகிதம் 38 என்றும் காட்டும்; ஆனால், பதிவு செய்யப்பட்ட புள்ளி 23. ''ஆயுட்கால-எதிர்ப்பு விவரங்களே தவறானவை; ஆயினும் அப்படியே அவற்றைக் கொண்டு பார்த்தாலும், இந்தியாவில் சாதாரண மரணவிகிதம் ஓராயிரத்துக்கு 33க்குக் குறையாது என்று தீர்மானிக்கும் முடிவை அது ஆதரிப்பதாகவே இருக்கிறது.'' (ஜீ. சாந்த், 'இந்தியாவின் நெருக்கமான மக்கட் தொகை'—பக். 113)

வயிற்று ரத்தப்போக்கு ஆகிய நோய்களால் செத்தனர்; இவைகள் எல்லாவற்றையும், 'வறுமையின் நோய்கள்' என்ற தலைப்பிலும், அவைகளில் பலவற்றை தடுக்க முடிந்தவை என்பதிலும் வைத்துக் கொள்ளலாம். நல்ல சுகாதார ஏற்பாடுகளும், (தூய தண்ணீர் வசதி, உணவு அசுத்தமாகாமல் தடுப்பது, ஒழுங்கான சாக்கடை, கக்கூஸ் வசதிகள், நல்ல வீட்டு வசதி) தேவையான மருத்துவ ஆலோசனைகளும், சிகிச்சை முறைகளும் சேர்ந்தால் நகரங்களில் மிகையான மரண விகிதங்கள் பெருமளவில் குறையும் என்பதிலும், க்ஷயரோகம், சுவாசக் கோளாறுகள் ஆகியவற்றால் ஏற்படும் மரணங்கள் குறையும் என்பதிலும் சற்றும் ஐயமில்லை. . . . இந்தியாவில் நோயினால் உண்டாகும் மரணங்களில் பெரும் பகுதியை (ஆரோக்கியக் குறைவையும்)யும், பல மேற்கு நாடுகளில் வெற்றிகரமாய்க் கையாளப்படும் முறைகளைப் பயன்படுத்தித் தடுக்கமுடியும்.''

(வி. ஆன்ஸ்டே: 'இந்தியாவில் பொருளாதார வளர்ச்சி', பக். 69).

1943 ஆம் ஆண்டு அக்டோபரில் இந்திய அரசாங்கம், சர் ஜோஸப் போரின் தலைமையில் 'ஆரோக்கிய அளவீடு வளர்ச்சிக் கமிட்டி' ஒன்றை நியமித்தது; 1946 இல் அவர்கள் வெளியிட்ட அறிக்கையில் அறுதியிட்டுப் பின் வருமாறு உரைக்கிறார்கள்:

மக்களின் ஆரோக்கியப் பராமரிப்புக்கு சில அடிப்படையான நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்பட வேண்டும். ஆரோக்கியமான வாழ்வுக்குப் பொருத்தமான சூழல், போதுமான சத்துணவு, ஆரோக்கியப் பாதுகாப்புக்கான[1] தடுப்பு முறைகளும், சிகிச்சை முறைகளும் எல்லா மக்களுக்கும், அவர்களால் பணம் கொடுக்க முடிகிறதோ, இல்லையோ கிட்டவேண்டும்.

1. பொது வியாதிகளாலும் குறிப்பான வியாதிகளாலும் பீடிக்கப் பட்டோருக்குப் பிரிட்டிஷ் இந்தியாவில் கிடைக்கும் படுக்கைகளின் எண்ணிக்கையை மற்ற நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம்:

| நாடு | படுக்கை | நபர்கள் |
|---|---|---|
| யூ.எஸ்.ஏ. | 10·48 | 1000 |
| இங்கிலாந்தும், வேல்சும் | 7·14 | 1000 |
| பிரிட்டிஷ் இந்தியா | 0·24 | 1000 |

தங்கள் உடல் நலனைக் காத்துக்கொள்ள வேண்டிய மக்களும் ஒத்துழைக்க வேண்டும். முன்பே சுட்டிக்காட்டப் பட்டுள்ள துன்பமும், மரண விகிதமும், பெரும்பாலும் தடுக்கப்படக் கூடியவை; ஆனால், இந்த அடிப்படை வசதிகள், இல்லாமை யால் தோன்றியவை. நாட்டின் பல பகுதிகள் சூழ்நிலைச் சுகாதாரம் மிகக் கீழ்நிலையில் உள்ளது; போஷாக்கின்மையும், போஷாக்குக் குறைவும், உயிர்ச் சத்தைக் குறைத்து பெரும் பாலான மக்களின் எதிர்ப்புச் சக்தியையும் குறைத்து விடு கிறது. மக்களின் தேவையைப் போதுமான அளவு தீர்க்கக் கூடிய ஆரோக்கிய நலத்துறையும் போதுமான அளவு இல்லை; பொதுவான கல்விக் குறைவும், ஆரோக்கிய போதனைக் குறைவும் காரணமாக, உடல்நலக் கேடு விளைவிக்கும் சூழலை யும், பலவித நோய்கள் பரவியுள்ளதையும் பொறுத்துக் கொண்டு வாழும் மக்களின் அலட்சிய புத்தியைத் திருத்தும் பணியை மிகவும் கடுமையாக்குகிறது.''

(ஆரோக்கிய அளவீடு, வளர்ச்சிக் கமிட்டியின் அறிக்கை, 1946; தொகுதி I; பக். 11.)

உலகத்திலேயே மிகக் கீழ்த்தரமான இந்த வறுமைச் சித்திரத் தையும், துன்ப சித்திரத்தையும் அதிகார பூர்வமற்ற எல்லா நோக்கர்களும், உண்மையென உறுதிப்படுத்துகிறார்கள். ஓர் இந்தியக் கிராமத்தில் வசிக்கச் சென்ற ஓர் அமெரிக்கரின் அநுபவத்தை இங்கே தருகிறோம்: அடிப்படைப் பிரச்சினையான வறுமை காரணமாக கிராமவாசிகளுக்கு மருத்துவவுதவியோ, மற்ற உதவிகளோ அளிப்பதற்காகச் செய்யப்பட்ட எல்லா முயற்சி களும் பயனற்றதை அவர் கண்டார்.

''மக்கட் தொகையில் 3 விருந்து 4 கோடி வரை நாளுக்கு ஒரு வேளை உணவுக்கு மேல் உண்பதில்லை; எப்போதும் பட்டினி எல்லையிலேயே வாழ்கின்றனர். என் வாசலில் திரண்ட நோயாளிகளுக்கு என்ன உணவு குறிப்பது என்பதே பெரிய விவகாரமாயிருந்தது.''

''காலரா நோயாளியிடம் படுமோசமான துணிகளை எரிக் கும்படி கூறினால், உடல் நலமுற்றால் உடுப்பதற்கு வேறொன்றும் இல்லையே என்று பதில்வரும். வறுமை இம்மாதிரி வீண் அழிவைத் தடுக்கிறது.''

''இந்தியக் கிராமத்துக்குத் தேவை உணவும் கல்வியும், மாத்திரைகள் அல்ல.''

(ஜி. எமர்சன்: ''குரலற்ற இந்தியா'', 1931)

பிரஜைகளைப் பாதிக்கும் பெரும்பாலான வழக்குகளை விசாரித்து வருகின்றன.

அரசியல் அமைப்புச் சட்டத்தின் இறுதியில், காலதேச வர்த்தமானத்திற்கும், மாறிக்கொண்டே போகும் நிலைமைகளுக்கும் ஏற்ப அவசியமானால், சாசனத்திற்குத் திருத்தங்களையோ அல்லது கூடுதல்களையோ ஏற்றுக்கொள்ள வழி செய்யப்பட்டிருந்தது. இரு சபைகளிலும் மூன்றில் இரு பங்கு வாக்குகளால் காங்கிரஸ் திருத்தம் ஒன்றைப் பிரேரிக்கலாம். அல்லது ராஜ்யச் சட்டசபைகளில் மூன்றில் இரு பங்கு மனுச் செய்துகொண்டால் அந்தப் பிரேரணையைப் பிரேரிக்க ஒரு சபைக் கூட்டம் (Convention) கூட்டப் படும். இரு விஷயங்களிலும் ராஜ்யச் சட்டசபைகளில் முக்கால் பங்கு அங்கத்தினர்கள் ஒப்புக்கொண்டால் திருத்தம் அமலுக்குக் கொண்டுவரப்பட்டு, அரசியல் அமைப்புச் சட்டத்தின் ஒரு பகுதியாக ஆகிவிடும். அரசியல் அமைப்புச் சட்டம் வளைந்து கொடுக்கும் முறையில் எழுதப் பட்டு, அதன் ஷரத்துக்கள் காங்கிரஸாலும், நீதி ஸ்தலங் களாலும் பல மாதிரியாக வியாக்கியானம் செய்யப்படக் கூடியதாக இருப்பதால், திருத்தங்கள் அவசியமில்லை என்பது போகப் போக நன்கு தெரிந்தது.

தேசத்தை ஸ்திரமாகச் செய்வதற்கான காரிய சாத்திய மான, அரசியல் அமைப்பு உருவாக்கும் வேலை கோடைக் காலத்திலும் தொடர்ந்து நடந்துவந்தது. இறுதியாக, ஐக்கிய நாடுகளை ஆட்சி செய்ய, பலமானதும் ஒரேசீரானது மான கருவியை (அரசியலமைப்பு) உருவாக்கியதும், அரசியல் அமைப்புக் கன்வென்ஷனின் பிரதிநிதிகள் தங்கள் வேலைகளை, 1787-ஆம் ஆண்டு செப்டம்பர் 17-ஆம் தேதி முடித்தனர். சாசனத்தில் அங்கத்தினர்கள் தங்கள் கையெழுத்துக்களை இட்டபொழுது அறையில் புனிதமான சூழ்நிலை நிலவியது. அப்பொழுது பலர் மனத்தில் ஐயம் குடிகொண்டிருந்தது. 'ராஜ்யங்களின் ஆதிபத்திய உரிமைகளை அளவுக்கு மீறிப் பறித்துவிட்டோமா? தாங்கள் செய்த வேலையை அமெரிக்க மக்கள் ஏற்பார்களா?' என்றெல்லாம் அவர்கள் ஐயுற்றனர். பிரதிநிதிகள் ஒருவரிட மிருந்து ஒருவர் உத்திரவு வாங்கிக்கொண்டு புறப்பட்ட

## 3. மிகை மக்கட்தொகை போலி வாதங்கள்

இந்திய மக்களின் இக் கொடிய வறுமைக்கு என்ன காரணம்?

இப்போது தீவிரமான பரிசீலனைக்குப் பதிலாக மேலெழுந்த வாரியான சில விளக்கங்கள் அடிக்கடி கூறப்படுகின்றன; உண்மையான காரணங்களை ஆராயப் புகுமுன் இவற்றை வழியிலிருந்து விலக்க வேண்டும்.

சமூகப் பிற்போக்கு, அறியாமை, மக்களின் மூட நம்பிக்கை (உத்திகளில் குறுகிய மனப்பான்மை, ஜாதித் தடைகள், பசு வழிபாடு, சுகாதாரப் புறக்கணிப்பு, மாதர் நிலை முதலியன) ஆகியவற்றைக் குறிப்பிட்டு இந்தியாவின் வறுமைக்கு விளக்கம் அளிப்பதை உதாரணமாய்க் கூறலாம். இந்த அம்சங்கள் இந்தியாவின் வறுமையில் பெரும் பங்கு வகிக்கின்றன என்பதில் சந்தேகமில்லை; இத்தகைய பிற்போக்குத் தன்மை வாய்ந்த சக்திகளை முறியடித்துக் கொண்டு சீரமைப்புப் பணிகளைச் செய்ய வேண்டியது இந்திய மக்களின் முக்கியமான பொறுப்பாகும். ஆனால், இந்திய வறுமைக்கு இந்த அம்சங்களே விளக்கம் என்பது, வண்டியைக் குதிரைக்கு முன்னால் வைப்பதை ஒக்கும். தாழ்வான பொருளாதார நிலை, அரசியல் அடிமைத்தனத்தின் வெளியீடும், விளைவுமே, சமூகமும், பண்பாடும் பின்தங்கிய நிலைமையில் இருப்பதற்குக் காரணமேயன்றி, அதற்கு நேர் எதிரிடையாக அல்ல. மக்களுக்குக் கல்வி வாய்ப்பு தராமல் அறியாமையில் முடங்கியதற்காக அரசாங்கத்தைத்தான் குறைகூற வேண்டுமேயன்றி, கற்பதற்கு வாய்ப்பு பெறாத மக்களைக் குறைகூற முடியாது. வேர்ப் பிரச்னை பொருளாதார—அரசியல் தன்மை வாய்ந்தது; அதை ஒட்டியது பண்பாட்டுப் பிரச்னை. முன்னேற்றம் பற்றி அறிவுரைகள் புகன்றும், ஆரோக்கியம் பற்றி சொற்பொழிவாற்றியும், சமூக, பண்பாட்டுப் பின்தங்கிய தன்மையை வெற்றிகொள்ள முடியாது; இம்மாதிரி முயற்சிகள் அத்தனையையும், நசுக்கும் வறுமை முறியடித்து விடும். சமுதாய அமைப்பின் அடிப்படையையே மாற்ற வேண்டும்; எல்லாக் கதவுகளுக்கும் அதுவே திறவுகோல். இதைச் சாதிக்க வேண்டுமானால் வர்க்கவுறவுகளில் மாற்றம் ஏற்பட வேண்டும்; அரசின் உருவமே மாற வேண்டும் என்பதே இதன் பொருள். நாட்டில் நிலவும் ஏகாதிபத்திய, நிலப்பிரபுத்துவ உறவுகள் என்ற தளையை உடைத்துக்கொண்டு, ஏக காலத்தில் ஸ்தூலமான, சமூக, பண்பாட்டு முன்னேற்றத்தைச் சாதிக்க மக்கள் இயக்கம் ஒன்றினால்தான் முடியும்.

இந்தக் கூற்றின் உண்மை சோவியத் யூனியனின் உதாரணத்தால் மிக நன்றாய்த் தெளிவுபடுகிறது. ஜாரின் ஆட்சியில் நிலவிய வறுமையும், மக்களின் இழிநிலையும், ரஷ்யக் குடியானவ

மக்களின் உடன்பிறந்த பின்தங்கிய தன்மையின் தவிர்க்க முடியாத விளைவுகள் என்று கற்றோர் சாதாரணமாக விளக்குவது வழக்கம். ஆனால், தொழிலாளர்களும், குடியானவர்களும் ஒன்று கூடிச் சுரண்டல்காரர்களைத் தூக்கி எறிந்து, மிகவும் முன்னேறிய நாடுகளும் பின் தங்கும் அளவுக்கு தங்களால் ஒரு தொழில் நுணுக்க, பண்பாட்டு வளர்ச்சியில் சாத்தியமாகும் என்பதைக் காட்டினார்கள். வளர்ச்சியின் வடிவங்களிலும் கட்டங்களிலும் வேறுபட்டாலும், இந்தியாவிலும் அந்த நிலை வெளிப்படும். இந்தியக் குடியானவ மக்களின் பின்தங்கிய தன்மை என்பது அவர்களுடைய தாழ்ந்த தொழிலியல், பண்பாட்டு நிலை போன்ற தெளிவான புறச் சின்னங்களை மட்டும் உடையதன்று; அவை அடிமைத்தனத்திற்கும் தடையுண்ட வளர்ச்சிக்கும் விளக்கமான சின்னங்களே; ஆனால், எல்லாவற்றுக்கும் மேலாக, அடிமைத்தனத்திலும், யாருடைய ஆதிக்கத்தால் வளர்ச்சி தடைப்படுகிறதோ, அந்த ஏகாதிபத்திய வாதிகளுக்கும், நிலச்சுவான்களுக்கும். அடங்கிப் போவதிலும் பின்தங்கிய தன்மை அடங்கியுள்ளது. ஆனால், இந்தப் பின்தங்கிய தன்மை முடிவை நெருங்கிக் கொண்டிருக்கிறது என்பதிலேயே எதிர்கால நம்பிக்கை திகழ்கிறது.

'மிகை மக்கட் தொகையின் விளைவே இந்திய வறுமை என்று அடிக்கடி பரவலாகப் பேசப்படுகிறது. திரும்பத் திரும்பக் கூறப்படுவதால், உண்மை நிலவரங்களைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு இல்லாத மேனாட்டு வாசகர்கள் பத்தில் ஒன்பது பேருக்கு இந்தக் கருத்து தோன்றுகிறது. ஆகையால், அது உண்மை நிலைக்கு நேர் விரோதமான கருத்து என்பதை முழுமையாக விவரிக்கவேண்டும்.

'கொடிய மனிதர்களை மகிழ்விக்கும் சுலபமான எல்லா பொய்களிலும்', முதலாளித்துவத்தின்கீழுள்ள வறுமைக்கு மிகை மக்கட் தொகை காரணம் என்பது குரூரமான பொய். அதன் நவீன மரபு, பிற்போக்காளரான பாதிரி மால்துஸின் காலத்திலிருந்து தொடங்குகிறது. அவர் புதிதாக ஒன்றும் வெளியிட்டுவிடவில்லை பிரஞ்சுப் புரட்சிக்கும், தாராளக் கருத்துகளுக்கும் எதிராக ஒரு அரசியல் ஆயுதமாய் (அவருடைய நூலின் தலைப்பே ஒப்புக்கொள்வதுபோல்) 1798 இல் தன் கருத்துக்களை வெளியிட்டார். அதற்குப் பரிசாகக் கிழக்கு இந்தியக் கம்பெனியின் கல்லூரியில் பேராசிரியர் பதவி வழங்கப்பட்டார். அவருடைய கருத்து, ''ஆங்கிலேய ஆட்சிக் கும்பலினால் மிக உற்சாகமாய் வரவேற்கப்பட்டது; மனித வளர்ச்சியை வேண்டும் எல்லா விழைவுகளுக்கும் அது காலன் என்று அவர்கள் கருதினார்கள்.'' (மார்க்ஸ்: ''மூலதனம்'' தொகுதி I, 25 ஆம் அத்தியாயம்) எல்லாப் பிரிவு பொருளா

தாரவாதிகளாலும், விஞ்ஞானிகளாலும் பழிக்கப்பட்டாலும், அது பிற்போக்கின் செல்லக் கொள்கையாக இருந்து வருகிறது. பயனுள்ள வளர்ச்சி மிக விரிவாக்கப்படும் தருணத்தில், பயனுள்ள வளர்ச்சிக்குக் கட்டாய இரும்புத்தளை பூட்டி வரையறை செய்ய வேண்டும் என்ற கோட்பாட்டின்மீது அது புனையப்பட்டுள்ளது. 19 ஆம் நூற்றுண்டின் அநுபவம் அதை நொறுக்கிவிட்டது; அப்போது செல்வ வளர்ச்சி மிக உறுத்தும்படியாக மக்கட் தொகை வளர்ச்சியைக் காட்டிலும் அதிகமாக இருந்தது; வறுமையின் காரணங்கள் வேறிடத்தில் உள்ளது என்பதையும் வெளிப்படுத்தியது. இருபதாம் நூற்றுண்டில், குறிப்பாக, முதல் உலகப் போருக்கு பிறகும் உலகப் பொருளாதார நெருக்கடியைத் தொடர்ந்தும், அதற்குப் புத்துயிர் அளிக்க முயற்சிகள் செய்யப்பட்டன. ஆயினும், சர்வதேசப் புள்ளி விவரங்கள் அதை மீண்டும் கொன்றுவிட்டது. போராலும், பிறகும் நேர்ந்த பெருவாரி அழிவுக்குப் பின்னும், உணவுப் பொருள்கள், மூலச் சரக்குகள், சரக்குகளின் உற்பத்தி, உலக மக்கட் தொகை வளர்ச்சியையும் மீறி உயர்ந்து கொண்டே சென்றதால், மக்கள் தங்கள் துன்பத்திற்கான காரணத்தைச் சமூக அமைப்பில் காணும் நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தியது. ஆளும் வர்க்கத்தினருக்கு செல்வ உற்பத்தியை எப்படி கட்டுப்படுத்துவது என்பதே பிரச்னையானது. அதற்காகப் பல சாமர்த்தியமான திட்டங்களும் தயாரித்தார்கள். மக்கட் தொகை பற்றியோ, ஐரோப்பா, அமெரிக்கா மக்கள் பீரங்கித்தீனியாகப் போதுமான அளவு குழந்தைகள் பெறவில்லை என்பது அவர்களது புகாராயிற்று. மால்தூஸைத் தலைகீழாக மாற்றி, குறைவான செல்வமும், மிகுதியான மனிதவுயிர்களும் என்பதே நவீன ஆளும் வர்க்கத்தின் கோஷம் ஆயிற்று.

ஐரோப்பாவிலிருந்தும், அமெரிக்காவிலிருந்தும் விரட்டி அடிக்கப்பட்டு, கைவிடப்பட்ட இந்தப் பழங்காலத்துப் பிற்போக்குக் கொள்கை ஆசியாவில் தன் இறுதி பதுக்கிடத்தைத் தேடுகிறது. இந்தியா, சீனுவின் வறுமைக்குக் காரணம் சமூக அமைப்பு அல்ல, 'மிகை மக்கட் தொகையே' என்று அவர்கள் சாதிக்கிறுர்கள். ஏகாதிபத்திய ஆட்சியின் நல் விளைவாக, இந்தியக் கண்டத்திலிருந்து போரைத் தவிர்த்து விட்டதாயும், கொள்ளை நோய், பஞ்சத்தின் கொடுமையைக் குறைத்து விட்டதாயும் பெருமை பேசுகிறுர்கள்; (பஞ்சக் குறைப்பு பற்றிப் பெருமை பேசுவதில் தயக்கம் ஏற்பட்டுள்ளது; ஏனெனில், பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ், 1770 முதல் இருபதாம் நூற்றுண்டின் தொடக்கம் வரை நேர்ந்த கேவலமான கடும் பஞ்சங்களும், தொடர்ந்து 1918இல் இன்புளுயன்ஸாவினுல் 1 கோடியே 40 இலட்சம் பேர் இறந்ததும்,

அண்மைக் காலத்து வங்காளத்துப் பஞ்சத்தால் 35 இலட்சம் பேர் இறந்ததும், மக்களில் பெரும்பாலோர், 'எலிகளின் உணவுத் திட்டத்தைக் கொண்டுள்ள இன்றைய நிலையுமே' காரணம்.) துர்ப்பாக்கியவசமாய் மக்கட்தொகை வளர்ச்சிக்கான 'இயற்கைத் தடைகளை அகற்றத் தவறி, வருங்காலம் பற்றின பொறுப்பில்லாத, இனவிருத்தி ஆற்றல்மிக்க இந்திய மக்களை', 'எப்படியோ பிழைத்து உயிர் வாழும் எல்லைக்கு' மேலும் இனவிருத்தி செய்ய அனுமதித்து விட்டார்கள். இதன் காரணமாகத்தான் நிலத்தின்மீது மேலும் மேலும் நிர்ப்பந்தமும், அரைப்பட்டினி நிலைமையும், பிரிட்டிஷ் ஆட்சியின் உதாரகுணத்தின் இயற்கையான விளைவுகளாகத் தோன்றியுள்ளன. இந்திய மக்கள் தங்கள் இனவிருத்தியை அறிவுபடைத்த ஐரோப்பிய மக்கள்களின் அளவில் குறைத்துக் கொண்டால்தான் இவற்றை மாற்ற முடியும்.

இந்தியாவின் பிரச்னை வலுக்க, வலுக்க இம்மாதிரி தர்க்க நியாயங்களைப் பேசுவது ஏகாதிபத்திய வட்டாரங்களில் மிக நாகரிகமாகிவிட்டது. ஒரு தலைசிறந்த ஏகாதிபத்தியப் பொருளாதார நிபுணர் நாடகமேடைப் பாணியில் கேட்கிறார்:

''நாசகரமான பிரவாகமாயுள்ள இந்தியக் குழந்தைகள்மீது வசைமாரி பொழியக்கூடிய இந்திய மால்துஸ் எங்கே?'' (ஆன்ஸ்டே: ''இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி''; பக்கம் 475). சாம்ராஜ்யப் பொருளாதாரத்தின் மற்றொரு நிபுணர் உரைக்கிறார்: ''மால்துஸின் கொள்கைகளை இந்தியா நிரூபிப்ப தாய்த் தோன்றுகிறது. போர், கொள்ளை நோய், பஞ்சத்தால் தடைப்படாத மக்கட் தொகை 'எப்படியோ பிழைக்கும் அள வுக்கு' உயரும் என்று அவர் கூறியது'' சரிதான், (எல். சி. நௌல்ஸ்: 'பிரிட்டனின் கடல்கடந்த சாம்ராஜ்யத்தின் பொருளாதார வளர்ச்சி; பக். 351.) இந்தக் கண்ணோட்டம் 'இடது' 'முற்போக் காளர்களின்' வட்டாரத்திலும் பரவி, ஏகாதிபத்தியத்தின் பொறியில் அவர்களும் சிக்கிக் கொள்கிறார்கள். 1933இல் சுகாதார, மிக உஷ்ணப் பிரதேச மருத்துவத்தின் லண்டன் ஸ்கூலில், ''ஆசியாவில் கர்ப்பத்தடை'' என்பது பற்றி ஒரு மகாநாடு அகில உலகக் கர்ப்பத்தடை நிலையத்தின் முயற்சியால் நடைபெற்றது; ஒரு மருத்துவப் பிரச்னையாக மட்டு மன்றி ஆசியாவிலுள்ள வறுமைப் பிரச்னைக்கு ஒரு தீர்வாகவும், கர்ப்பத்தடையை வற்புறுத்துவதே மகாநாட்டின் நோக்கம்; (கர்ப்பத்தடை அகிலவுலகத் தகவல் நிலையத்தினர் 1935 இல் வெளியிட்ட அறிக்கையைப் பார்க்க). அது அரசாங்க அறிக்கை களிலும் பரவியது:

''அதிகரிக்கப்பட்ட உணவு உற்பத்தி இறுதியாக வாழ்க்கைத் தரத்திலோ, கிடைக்கும் உணவுப் பொருள்களின்

*அளவிலோ எவ்வித அபிவிருத்தியும் உண்டாக்குவதில்லை; இந்தச் சாதகமான சூழ்நிலைகளில் மக்கட் தொகை விரைவில் பெருகி விடுவதே காரணம். வாழ்வதற்காக நிலத்தை நம்பியிருந்தோரின் எண்ணிக்கை முன்பு போர், பஞ்சம், கொள்ளை நோய் ஆகியவற்றால் சுறுசுறுப்பாய்க் குறைந்தன. போரும், பஞ்சமும் பெரும்பாலும் பாதிப்பு ஏற்படுத்த முடியாதவாறு ஒழிக்கப்பட்டு விட்டன; கொள்ளை நோய்களால் ஏற்படும் சாவுகள் குறிப்பிடத்தக்க அளவு குறைக்கப்பட்டு விட்டன... விளைவு, நிலத்தில் மேலும் மேலும் அதிகரிக்கும் நிர்ப்பந்தம்... இந்த அம்சம் பொதுவான வாழ்க்கைத் தரத்தைத் தாழ்த்துவதற்குப் பெரிதும் பயன்படுகிறது என்று நாம் மட்டும் தனியாகக் கருத்துக் கொள்ளவில்லை.''*

*(இந்தியாவில் தொழிலாளர் நிலைபற்றி விட்லி கமிஷன் அறிக்கை, 1931, பக். 249).*

தன் முழு மகிமையுடன் மால்துஸ், அரசாங்கம் நியமித்த ஒரு ராயல் கமிஷனுக்குத் தலைமை வகித்து, பார்லிமென்டின் மக்களவை முன்னாள் தலைவர் வாயிலாகப் பேசுவதைப் பாருங்கள்.

உண்மைத் தகவல்கள்தான் என்ன?

முதலாவதாக, மேற்கூறிய வாதங்களிலிருந்து, மற்ற நாடுகளில் காண முடியாத அளவு, பிரிட்டிஷ் ஆட்சியில் இந்திய மக்கட் தொகை ஏராளமாய்ப் பெருகி விட்டது என்றும், ஆகையால் இயற்கைக்கு மாறான, விரைவான மக்கட் தொகைப் பெருக்கத்தால் மிகக் கடும் வறுமைநிலை ஏற்பட்டுள்ளது என்றும் தோன்றுகிறது. பிரிட்டிஷ் ஆட்சியின் கீழுள்ள இந்தியாவின் வரலாற்றின் உண்மையான தகவல்கள் இதற்கு நேர் எதிரிடையான நிலைமையையே குறிக்கின்றன என்பதை எத்தனை பேர் உணருகிறார்கள்?

உண்மையில், ஐரோப்பாவின் எந்த நாட்டையும்விட, பிரிட்டிஷ் ஆட்சியின் கீழுள்ள இந்தியாவில் மக்கட் பெருக்க விகிதம் குறிப்பிடத்தக்க அளவு குறைவாக இருந்திருக்கிறது; உலக மக்கட் பெருக்கத்தின் அளவிலோ, அடிமட்டத்தில் இருக்கிறது. இது பிரிட்டிஷ் ஆட்சிக் காலம் முழுமைக்கும் அல்லது சென்ற அரை நூற்றாண்டுக்கும் பொருந்தும்.

ஆட்சிக் காலம் முழுமைக்கும் மதிப்பீடுகளையே பயன்படுத்த முடியும்; ஏனெனில், 1872 வரை, இந்தியாவில் முதல் சென்ஸஸ் எடுக்கப்படவில்லை; பதினாறும் நூற்றாண்டின் முடிவில் இந்தியாவின் மக்கட் தொகை 10 கோடி என்று மோர்லாண்ட் **('அக்பர் சாகும் காலத்தில் இந்தியா'; பக்கம் 22.)** மதிப்

பிட்டுள்ளார். இன்று இந்த எண்ணிக்கை 35·3 கோடி. மூன்று நூற்றாண்டுகளில் மூன்றரை மடங்கு ஏறியுள்ளதை இது காட்டுகிறது. மிகவும் ஜாக்கிரதையான முதல் மதிப்பீட்டின்படி (அரசின் இன்ஷ்யூரன்ஸ் கணக்கு நிபுணர் பின்லாய்ஸனின் மதிப்பீடு; 1931 ஆம் ஆண்டின் சென்ஸஸ் அறிவிப்புகளின் முன்னுரையில்) இங்கிலாந்து, வேல்ஸின் மக்கட் தொகை 1700 இல் 51 இலட்சம். இன்று இந்த எண்ணிக்கை 4·04 கோடி. இன்னும் குறைவான காலப் பகுதியான $2\frac{1}{3}$ நூற்றாண்டில் எட்டு மடங்கு பெருக்கம், இந்தியாவில் ஏற்பட்ட மக்கட் பெருக்கத்தை விட இரண்டு மடங்குக்கு மேல் இங்கிலாந்தில் மக்கட் பெருக்கம் ஏற்பட்டிருக்கிறது.[1]

சென்ற அரை நூற்றாண்டு மிகவும் முக்கியம்; ஐரோப்பாவில் தொழிற் புரட்சிக்குப் பிறகு ஏற்பட்ட சிறப்பான விரிவு தணிந்து மெதுவாகி விட்டது.

முதலில் 1914-க்கு முன் இந்தியாவிலும், ஐரோப்பாவிலும் இருந்த நிலைமையை ஒப்பிட்டுப் பார்ப்போம்; ஐரோப்பிய நாடுகளில் அதற்குப் பிறகு ஏற்பட்ட சிக்கல்களையும், பிரதேச மாற்றங்களையும் இவ்வாறு தவிர்க்கலாம். 1870 முதல் 1910 வரை இந்தியாவிலும், முக்கியமான ஐரோப்பிய நாடுகளிலும் ஜனத்தொகை அதிகரித்த விகிதம் பற்றின விவரம் இங்கே உள்ளது.

மக்கட் தொகை பெருக்கம் 1870-1910

| | | பெருக்கம் விழுக்காடு |
|---|---|---|
| இந்தியா | .... | 18·9 |
| இங்கிலாந்தும் வேல்சும் | .... | 58·0 |
| ஜெர்மனி | .... | 59.0 |
| பெல்ஜியம் | .... | 47·8 |
| ஹாலந்து | .... | 62·0 |
| ரஷ்யா | .... | 73.9 |
| ஐரோப்பா (சராசரி) | .... | 4·54 |

(பி. நாராயண்: 'இந்தியாவின் மக்கட் தொகை,'' 1925, பக். 11.)

1. பேராசிரியர் கார்—ஸாண்டர்ஸ் அண்மையில் 'உலக மக்கட் தொகை பற்றி வெளியிட்ட சிறந்த நூலில் ('உலக மக்கட் தொகை சென்ற கால வளர்ச்சியும். இக் காலப்போக்கும்'—ஏ. எம். கார்-ஸாண்டர்ஸ், 1936), 1650க்கும் 1933க்கும் இடையில் உலக மக்கட் தொகை மொத்தத்தில் ஐரோப்பாவின் பங்கு 18·3 விழுக்காட்டிலிருந்து 25 2 விழுக்காடு உயர்ந்துள்ளது என்றும், அதே சமயம் ஆசியாவின் பங்கு 61·6 லிருந்து 54·5 விழுக்காடாகக் குறைந்துள்ளது. என்றும் குறிப்பிட்டுள்ளதைக் கவனிக்க சுவாரசியமாயுள்ளது. இப்போதும் பரவலாக உள்ள பொய்மைகளுக்கு விரோதமாக, மக்கட் தொகை பெருகும் ஐரோப்பா,

பிரான்சைத் தவிர வேறு எந்த ஐரோப்பிய நாட்டையும்விட இந்தியாவின் மக்கட் பெருக்க விகிதம் குறைவுதான்.

1872—1931 காலப் பகுதிக்கு வந்தால் நாம் பின்வரும் நோக்கைக் காண்கிறோம்; இக் காலத்தில் இந்தியாவின் பெருக்கம் 30 விழுக்காடு; இங்கிலாந்து, வேல்சில் 70 விழுக்காடு. இங்கிலாந்து வேல்ஸில் ஏற்பட்ட பெருக்க விகிதம் சென்ற அறுபது ஆண்டுகளில் இருமடங்குக்கும் மேல்தான் இருந்து வருகிறது.[1]

1921-40 கால கட்டத்தில்தான் இந்தியாவில் பெருக்க விகிதம் (21 விழுக்காடு; அதே காலத்தில் அமெரிக்காவில் 24 விழுக்காடு) இங்கிலாந்தையும், மேற்கு ஐரோப்பிய நாடுகளையும் விட அதிகமாக இருந்தது. ஆனால் இந்தியாவின் வறுமைப் பிரச்னை 1921-க்குப் பிறகு தோன்றியதல்ல.[2]

---

மக்கட் தொகை சுருங்கும் ஆசியாவை உலக வரலாற்றின் பூர்ஷ்வா காலத்தில் ஒதுக்கிக் கொண்டு வருகிறது.

1. பஞ்ச விசாரணைக் கமிஷன், இறுதி அறிக்கை, 1945, பக். 75)

2. 1921க்கும் 1931க்கும் இடையில் இந்தியாவின் மக்கட் தொகைப் பெருக்கத்தில் திடீர் உயர்வு ஏற்பட்டுள்ளது போலத் தோன்றுவதையும் அதை வைத்துச் செய்யப்படும் முடிவுகளையும், பொருளையும், அந்த அடிப்படை பேரில் எதிர்கால 'மிகை மக்கட் தொகை' பற்றி வழக்கமான ஆருடம் கூறுவதையும் பற்றிச் சிறந்த புள்ளிவிவர நிபுணரான டாக்டர், ஆர் ஆர். குக்சின்ஸ்கி சில சந்தேகங்களை எழுப்புகிறார்; அவர் எழுதுகிறார்:

"சென்ஸஸ் எடுக்கப்படும் பல நாடுகளை பற்றி, அங்கே தற்போது வசிக்கும் மக்களின் எண்ணிக்கையை நாம் சுமாராய்க் கூறலாம்; ஆனால், பிறப்பு-இறப்புகளைப் பற்றிப் போதுமான பதிவேடுகள் இல்லாமையால் மக்கட் தொகைப் போக்குகளைப் பற்றி நமக்குப் பெரும்பாலும் ஒன்றும் தெரிவதில்லை இவ்வாறு, இந்தியாவின் சென்ஸஸ் புள்ளி விவரங்களைக் கொண்டு பார்க்க, 1921-1931-க்கு இடையில் மக்கட் தொகை 3·4 கோடி அல்லது 10·6 விழுக்காடு ஏறியுள்ளதாய்த் தோன்றும். ஆனால், 1931 ஆம் ஆண்டு ஆயுள் அட்டவணைகளைப் பார்த்தால் மரண விகிதம் மிகுதியாக இருப்பதாய்த் தோன்றுகிறது; தவிர, ஒவ்வொரு திருமணத்தினாலும் பிறக்கும் குழந்தைகளைப்பற்றியும், மகப்பேறொழிந்த ஏராளமான விதவைகளைப்பற்றியும் 1931 ஆம் ஆண்டில் செய்த ஆராய்ச்சியின் வாயிலாக மகப்பேறுவளம் குறைவாக இருப்பதைக் காட்டும். ஆகையால் 1921-1931க்கு இடையில் இந்தியாவில் மக்கட் பெருக்கம் ஏற்பட்டுள்ளதாகத் தோன்றுகிறதே அன்றி, அது மெய்யான வளர்ச்சி அல்லாமல் இருக்கலாம்; ஆனால் உதாரணமாக, 1931 இல் மிகச் சரியாகக் கணக்கிட்டதும் தற்காலிக வயதுத் தொகுப்பும் சேர்ந்ததன் விளைவாக, பிறப்பு எண்ணிக்கையை மிகைப்படுத்தியும், இறப்பு எண்ணிக்கையைக் குறைத்தும் காட்டியிருக்கலாம்.

(டாக்டர் ஆர். ஆர். குக்சின்ஸ்கி உலகத்தில் மக்கள் தொகைப் போக்குகள்; 1937, டிசம்பர் 25, ஸ்டேடிஸ்டில்).

இந்தியாவில் பிறப்பு விகிதம் குறைந்து வருவதாய்த் தோன்றுவதைக் கவனிக்க வேண்டும்; 1901-1910 இந்தப் பத்தாண்டில் பதிவு செய்யப்பட்ட பிறப்பு விகிதம் ஆயிரத்துக்கு 38ஆக இருந்தது. 1931-40இல் 34ஆகக் குறைந்து, 1943இல் 26ஆக நின்றது.

மத்திய பாங்கிங் விசாரணைக் குழுவின் அறிக்கை 1931-ல் வெளியிடப்பட்டது; இந்தியாவின் பொருளாதார நிலைகளை மிக விரிவாகவும், அதிகார பூர்வமாகவும் விஸ்தாரமாக அது ஆராய்கிறது; இந்திய வறுமைக்குக் காரணம் 'மிகை மக்கட் தொகை' என்று வழக்கமாய்ச் சொல்லப்படுவதை மறுத்துப் பேசவேண்டிய நிர்ப்பந்தம் அதற்கு ஏற்பட்டது:

> "மற்ற பல நாடுகளோடு ஒப்பிட்டு நோக்க, மக்களில் தலைக்கு ஓர் ஏக்கருக்கு நிலத்தில் கிடைக்கும் விளைச்சல் குறைவுதான்....சராசரி உழவன் உணவுப் பற்றுக்குறையிலேயே இன்னும் வாழ்கிறன்; அது அவனுடைய உழைக்கும் சக்தியைப் பாதிக்கிறது; நாட்டில் மிகுதியான மரண விகிதம் இருப்பதற்கும் அதுவே காரணம்....இந்த நிலைமைகளுக்கு மிகை மக்கள் தொகையும் அதன் விளைவாக நிலத்தின் மீது அதிகமான நெருக்கடியும் காரணமாக இருக்க முடியாது; இந்தியாவின் மக்கட்தொகை வளர்ச்சியை இங்கிலாந்துடன் ஒப்பிட்டுப் பார்ப்போம். இரண்டு நாடுகளுக்கும் சென்ஸஸ் விவரங்கள் கிடைக்கும் மூன்று பத்தாண்டுகளைக் கொண்டு பார்த்தால் இங்கிலாந்திலும், வேல்ஸிலும் 1891 முதல் 1901 வரை மக்கட்பெருக்கம் 12·17%, 1901 முதல் 1911 வரை, 10·91%, 1911 முதல் 1921 வரை 4·8%; அதே மூன்று பத்தாண்டுகளில் பிரிட்டிஷ் இந்தியாவில் ஏற்பட்ட மக்கட் பெருக்கம் முறையே 2·4%, 5·5%, 1·3%."
>
> (மத்திய பாங்கிங் விசாரணைக்குழு அறிக்கை, 1931, பக். 40-41).

மக்கட் தொகையின் அடர்த்தி என்ன? இந்தியா முழுமைக்கும் 1941இல் மக்கட் தொகை அடர்த்தி, சதுர மைலுக்கு 246 பேர்; இங்கிலாந்து, வேல்ஸுக்கு 703; பெல்ஜியம் 702; ஹாலந்து 639; ஜெர்மனி 348. இந்த விவரங்களை அப்படியே ஏற்கக் கூடாது, ஏனெனில், வெவ்வேறு மாவட்டங்களில் மக்கட் தொகை மாறுபட்டிருந்தது. ஆனல், மிகவும் ஜன நெருக்கமுள்ள வங்காளத்தை எடுத்துக் கொண்டாலும், அங்கு சதுர மைலுக்கு 779 பேர் வசிப்பதாய்க் காண்கிறேம்; அல்லது இங்கிலாந்து, வேல்சின், பெல்ஜியத்தின் அளவைவிடச் சற்று மிகுதி. வங்காளத்தின் சில மாவட்டங்களில் இந்த அடர்த்தி மிக மிக அதிகம் என்பது மெய்யே. டாக்காவில் சதுர மைலுக்கு 1,542, திப்பேரா 1,525, அல்லது பரீத்பூர் 1,024. இந்த மிகுந்த நெருக்கடியான மாவட்டங்களைப் பற்றின சிறப்பான கேள்வி: நாட்டின் மற்ற பகுதிகளைவிட மிகவும் மக்களடர்த்தியுள்ள இந்த வங்காள மாவட்டங்களில், மக்கட் தொகை அவர்கள் பிழைக்கும் சாதனங்களை

மீறி விட்டதா? இதற்கு விடையாக 1931ஆம் ஆண்டு 'வங்காள சென்ஸஸ் அறிக்கையின்' தீர்ப்பைக் கூறலாம். அதைக் கீழே மேற்கோள் காட்டுகிறோம் (பக். 51-52).

மக்கட் தொகை வளர்ச்சி, உற்பத்தி செய்யப்படும் உணவின் அளவை மீறி விட்டதா? விவசாய அபிவிருத்தி குற்றமாய்க் கூறுமளவு புறக்கணிக்கப்பட்டும், பயிரிடக்கூடிய நிலத்தில் ஒரு பகுதியை மட்டும் பயன்படுத்திக் கொண்டும், இன்றுவரை கிடைத்துள்ள புள்ளி விவரங்கள் நேர் எதிரிடையான நிலைமையையே குறிப்பிடுகின்றன. உற்பத்தி செய்யப்படும் மொத்த உணவு அளவே போதுமானதாக இல்லை; இருந்தும், இதில் ஒரு பகுதி ஏற்றுமதி செய்யப்படுகிறது; ஆனால், இந்தப் பற்றாக் குறைக்குக் காரணங்கள், உற்பத்தி முறையில் கையாளப்படும் கீழ்த்தரமான உத்திகளும், நிலவுடைமை ஏற்பாடும், விவசாயத்தின் மீது ஏறியுள்ள நசுக்குச் சுமையுமே ஆகும்; உணவு உற்பத்தி அளவை மிஞ்சி மக்கட் தொகை மிகுந்து விட்டது இந்தப் பற்றாக் குறைக்குக் காரணமல்ல. நேர்மாறாக, உணவு உற்பத்தியின் வளர்ச்சி அளவு, மக்கட் தொகை வளர்ச்சி அளவுக்கு மேலேயே இன்றுவரை இருந்து வருகிறது.

1891-1921க்கு இடையில் மக்கட் தொகை 9·3 விழுக்காடு அதிகரித்தது; அதே காலத்தில், உணவுத் தானியங்கள் பயிரிடப் படும் நிலப் பரப்பு 19 விழுக்காடு, அல்லது, மக்கட் தொகை வளர்ச்சியின் வேகத்துக்கு இரு மடங்கு வேகத்துடன் மிகுந்தது.

1921-31 காலப் பகுதிக்கு, 1935இல் வெளியான 'மக்கட் தொகையும் உற்பத்தியும்' என்ற நூலில் பேராசிரியர் பி. ஜே. தாமஸ் தரும் புள்ளிவிவரங்கள் உள்ளன. 1920-21, 1921-22 ஆகிய ஆண்டுகளின் அட்டவணை எண் சராசரியை 100 என்று கொண்டால், 1930-31, 1931-32 ஆகிய ஆண்டுகளின் சராசரியை 110·4 ஆக மக்கட் தொகை எண்ணிகை இருக்கும் என்றும், 116 விவசாய உற்பத்தி எண் என்றும், 151 தொழில் உற்பத்தி எண் என்றும் அவர் மதிப்பீடு செய்கிறார். வேறு விதமாய்ச் சொன்னால், மக்கட் தொகை மிக அதிகரித்துவிட்ட பத்தாண்டில், மக்கட் தொகை 10·4 விழுக்காடு அதிகரித்தபோது விவசாய உற்பத்தி 16 விழுக்காடும், தொழில் உற்பத்தி 51 விழுக்காடும் ஏறியுள்ளன.

பேராசிரியர் ராதா கமல் முக்கர்ஜீ மால்துஸின் உறுதியான சீடர்; தீயன சொல்லும் தீர்க்கதரிசி. அண்மையில் வெளியான, 'நாற்பது கோடி மக்களுக்கு உணவுத் திட்டம்' (1938) என்னும் புத்தகத்தில் அவரே, ''மொத்த விவசாய உற்பத்தியின் அதிகரிப்பு மக்கட் தொகைப் பெருக்கத்தை மீறியுள்ளது'' (பக். 18)

என்று ஏற்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது; இந்தக் கூற்றை உறுதிப்படுத்தும் புள்ளிவிவரங்களையும் தருகிறார்.

**இந்தியாவில் மக்கட் தொகையின், உற்பத்தியின் இயக்கம் 1910—1933**

*(இண்டெக்ஸ் எண்கள் 1910-11 முதல் 1914-15 வரை ஆண்டுகளின் சராசரி அடிப்படையில்)*

| | மக்கட் தொகை | எல்லா தானியங்களும் | உணவுப் பொருள்கள் | உணவல்லாத பொருள்கள் | தொழில் உற்பத்தி |
|---|---|---|---|---|---|
| 1910-11 முதல் 1914-15 வரை சராசரி | 100 | 100 | 100 | 100 | 100 |
| 1932-33 | 117 | 127 | 134 | 121 | 156 |

(ஆர். முக்கர்ஜீ: 'நாற்பது கோடி மக்களுக்கு உணவுத்திட்டம்'—பக். 17,27)

உற்பத்தி செய்யப்பட்ட உணவுத் தானியங்களின் அளவு, மக்கட் தொகை வளர்ச்சியைவிட இருமடங்கு வேகத்திலும், தொழில் உற்பத்தி அளவைவிட மும்மடங்கு வேகத்திலும் அதிகரித்துள்ளது.

1900-30 வரை மூன்று பத்தாண்டுகளின் நிலைமையைத் தொகுத்துப் பேராசிரியர் தாமஸ் எழுதுகிறார்:

''1900-க்கும் 1930-க்கும் இடையில் இந்தியாவில் மக்கட் தொகை 19 சதவீதம் ஏறியுள்ளது, ஆனால் உணவுப் பொருள்கள், மூலப் பொருள்கள் உற்பத்தி 30 சதவீதமும், தொழில் உற்பத்தி 189 சதவீதமும் ஏறியுள்ளன. 1921-30 பத்தாண்டில் மக்கட் தொகை உண்மையில் முன்னேக்கிப் பாய்ந்துள்ளது; ஆனால், உற்பத்தியும் அதைத் தொடர்ந்தது. ....இந்த முன்னேற்றம் தொழில் மந்தத்தையும் மீறி நிலைத்திருந்தது. தொழில் உற்பத்தியின் அட்டவணை (1928—100) 1934-35 இல் 144 ஆக இருந்தது; நடப்பு ஆண்டில் அது இன்னும் உயர்ந்திருக்கலாம்.

''மக்கட் தொகை, உற்பத்தியை மீறியதாக இல்லை என்பதையே இவை எல்லாம் குறிக்கின்றன.... மக்கட் தொகை உற்பத்தியை மீறிவிட்டது என்ற பீதிக்குப் புள்ளி

விவரங்களின் ஆதரவில்லை. இந்தியாவில், 'குழந்தைகளின் நாசகரமான வெள்ளம்' பற்றி அஞ்சுகிறவர்கள் தங்கள் கவனத்தை தேசீய வருமானம் விநியோகமாகும் முறையைத் திருத்துவதிலும், உணவுப் பொருட்களின் தரத்தை உயர்த்துவதிலும், மக்கட் தொகையைப் பூகோள ரீதியில் விநியோகம் செய்வதிலும் இதுபோன்ற மற்ற விஷயங்களிலும் தங்கள் கவனத்தைச் செலுத்தவேண்டும்.''

(பேராசிரியர் பி. ஜே. தாமஸ், தி டைம்ஸ், 1935, அக்டோபர் 24).

இந்தியாவில் வறுமைக்குக் காரணமாக பிழைப்புச் சாதனங்களின் உற்பத்தியைவிட மக்கட்தொகை விரைவாய் அதிகரிக்கிறது எனக் கூறமுடியாது என்றே உண்மை விவரங்கள் சுட்டிக்காட்டித் தீர்ப்பு கூறுகின்றன; ஏனென்றால், பிழைப்புச் சாதனங்களின் உற்பத்தியே மிக வேகமாக இருந்தது. ஆக, வறுமையின் காரணத்தை வேறிடத்தில்தான் தேடவேண்டும்.[1]

இப்போதுள்ள நிலவுடைமை முறைகள், குத்தகை முறைகள், நுட்பஇயல் கையாளப்படும் விதம், புல்லுருவித்தனம், கிடைக்கிற தொழிலாளர் சக்தியை வீணாக்கும் முறையின் கீழ் பிழைப்புச் சாதனங்கள், உற்பத்தியின் இப்போதுள்ள அளவு மக்களின்

1. ஏகாதிபத்தியத்தால் திணிக்கப்பெற்ற சமூக, பொருளாதார முறைகளே இந்திய வறுமைக்குக் காரணம் என்றும், அம்முறைகளால் குடியானவ மக்கள் மேலும் மேலும் வறியர்களாகி உணவு உற்பத்தியும் குன்றியது என்றும் காட்டும் இன்னும் தெளிவான புள்ளிவிவரங்களை இந்திய அரசாங்க அதிகாரியான டபிள்யு. பேர்ன்ஸ் தருகிறார்:

| ஆண்டு | முக்கியமான உணவுத் தானியங்களின் கீழுள்ள நிலப்பரப்பு (பத்து இலட்சம் ஏக்கர்களில்) | முக்கியமான உணவுத் தானியங்களின் உற்பத்தி (பத்து இலட்சம் டன்களில்) | மக்கட் தொகை (பத்து இலட்சம் பேர்) |
|---|---|---|---|
| 1921-22 | 158·6 | 54·3 | 233 6 |
| 1931-32 | 156·9 | 50·1 | 256·8 |
| 1941-42 | 156·5 | 45·7 | 295·8 |

(டபிள்யு பேர்ன்ஸ்: 'இந்தியாவில் விவசாய முன்னேற்றத்திற்கு நுட்ப இயல் சாத்தியக் கூறுகள்' 1944).

1921-22 முதல் 1941-42 கால கட்டத்தில் பிரிட்டிஷ் இந்தியாவில் மக்கட் தொகை 6.22 கோடி உயர்ந்திருக்க, முக்கியமான உணவுத் தானியங்கள் பயிரிடப்பட்ட நிலப்பரப்பு 20 இலட்சம் ஏக்கராக்களுக்கு மேல் குறைந்திருந்தன; உற்பத்தி 86 இலட்சம் டன்கள் குறைந்ததால், உற்பத்தி எண்களின் சரிவு அச்சம் தருவதாயிருந்தது.

தேவைக்கு ஏற்ப இருப்பதாய் இதனல் சொல்லப்படவில்லை. மாருக, அது முற்றிலும் பற்ருக்குறையாகவே உள்ளது; உடலுழைப்பு இல்லாத வயது வந்தோர்—இருபாலையும் சேர்ந்தவர்கள்—மிகச் சாதாரணமாய் வாழ்வோர் தினசரி உண்ணும் உணவில் 2400 காலரிகள் உணவுச்சத்து இருக்க வேண்டும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. மிதமாக வேலை செய்வோருக்கு 2500 முதல் 2600 காலரிகள் தேவை; மிகவும் கடுமையான உடலுழைப்பு வேலைகளில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு 2800 முதல் 3000 காலரிகள் வரை தேவை. 23ஆம் எண்ணுள்ள ஆரோக்கிய அறிக்கையில், 'இந்திய உணவுகளின் போஷாக்கு மதிப்பும், திருப்திகரமான உணவுத்திட்ட தயாரிப்பும்' (1941) என்ற தலைப்பில், 1750 காலரிகளுள்ள பற்ருக்குறையான, ஒழுங்கற்ற ஓர் உணவை, கூனூர் போஷாக்கு ஆராய்ச்சிக்கூட இயக்குநரான டாக்டர் அய்க்ராய்டு வருணித்து, 'இலட்சக்கணக்கான இந்திய மக்கள் உண்ணும் மாதிரி உணவு' என்கிருர்.[1] ('ஆரோக்கிய ஆய்வு, வளர்ச்சிக் கமிட்டி'யின் அறிக்கை; முதல்தொகுதி, பக். 69-70) மேலும், கொழுப்புகள், புரோடீன்கள், பாதுகாப்பான உணவுகளின் பற்ருக்குறை. மொத்த பால் உற்பத்தி 1,13,000 மில்லியன் பவுண்டுகள் என்று மதிப்பிடப்படுகிறது; சீரான உணவின் குறைந்த பட்சத் தேவையில் இது பாதியை விடக் குறைவு.

இந்தியாவின் ஏராளமான இயற்கை வசதிகளைப் பயன்படுத்தியும் வளர்ச்சி கண்டும் மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யத் தவறியதாய் இப்போதுள்ள சமூக, பொருளாதார ஏற்பாட்டை இந்தப் புள்ளிவிவரங்கள் குற்றம் சாட்டுகின்றன. ஆனல் அவை மிகை மக்கட் தொகைக்கான சாட்சியங்கள் அல்ல; மாருக, இந்தியாவின் வளங்களைச் சரியாகப் பயன்படுத்திக் கொண்டால் இப்போதுள்ள மக்கள் தொகையைவிடப் பெருந் தொகையை, அல்லது சமீப எதிர்காலத்தில் இந்தியாவில் எதிர்பார்க்கப்படுகிற பெரும் மக்கட் தொகையை இந்திய வளங்கள் காப்பாற்றவல்லவை என்பதை நிபுணர்கள் எல்லோரும் ஒப்புக் கொள்கிருர்கள். இந்தியாவில் பயிரிடத்தக்க நிலத்தில் மூன்றிலொரு பகுதி பயன்படுத்தப்படவில்லை; இப்போதுள்ள பயிர் நிலத்திலும் மிகப் பண்டை முறைகளைக் கையாண்டே பயிரிடுகிருர்கள்; இதனல், இதே அளவு நிலத்தில் இதே மாதிரி பயிருக்கு (கோதுமை விளைச்சலை ஒப்பிட்டுப் பார்க்கலாம்) பிரிட்டனில் குறைவான மனித சக்தியைப் பயன்படுத்திக் காணப்

1 தற்போது ரேஷன்கள் பயங்கரமாய்க் குறைக்கப்பட்டதால், சராசரி இந்திய உணவில் காலரிகள் 960 ஆகக் குறைந்து விட்டன; அமெரிக்காவில் 3,150; பிரிட்டனில் 3000.

வந்த வேற்றுமைகளைத் தீர்த்துவைக்க, 1794-ஆம் ஆண்டு ஜான் ஜே என்பவரை அனுப்பியதன்மூலம், ஐரோப்பா விஷயத்தில் தமது நடுநிலைமைக் கொள்கையை மீண்டும் ஊர்ஜிதம் செய்தார். வர்த்தகம், கப்பல் வாணிபம், கப்பல் போக்குவரத்து ஆகியவற்றில் உரிமைகளைப்பற்றி அவமானகரமான சலுகைகளை ஜே அளித்ததன் பின்னரே மேற்குப் பிரதேசம் கோட்டைகளைக் காலிசெய்யப் பிரிட்டன் ஒப்புக் கொண்டது. இச்செய்கை பெருவாரியான அமெரிக்கர்களுக்கு ஆத்திரமூட்டியது.

ஸ்பெயினுடன் வாஷிங்டன் வெற்றிகரமான உடன்படிக்கை செய்து முடித்தார். இதன்படி பிளாரிடாவின் எல்லை வரையறுக்கப்பட்டது. மிஸிஸிபி நதியில் கடல் வர்த்தக உரிமையும், நியூ ஆர்லியன்ஸ் துறைமுகத்தில் சரக்குகளை மாற்றும் உரிமையும் அமெரிக்காவுக்கு அளிக்கப்பட்டன.

இம்மாதிரியாக, 1796-ஆம் ஆண்டில் வாஷிங்டன் பதவியிலிருந்து விலகி, தம் வாழ்நாளில் கடைசி மூன்று ஆண்டுகளைக் கழிக்க மவுண்ட் வெர்னனுக்குச் சென்றபோது, சட்ட ரீதியான அரசாங்கம் வெற்றிகரமாக நடைபெறவும், தேசத்தை யுத்தத்தில் ஈடுபடாமலும் அவர் செய்திருந்தார். அவர் தமது பிரிவு உபசாரச் சொற்பொழிவில், ஒன்றுபட்டுச் சௌஜன்யமாக உழைக்கும்படியும், "வெளியுலகின் எப்பகுதியுடனும் நிரந்தர உடன்பாடுகள் ஏற்படுத்திக்கொள்வதை"த் தவிர்க்கும்படியும் தம் மக்களை உஷார்ப் படுத்தினர். அவருக்கு அடுத்தபடியாக, கட்டுப்பாடும் சீரிய குணமும் படைத்த ஜான் ஆடம்ஸ் ஜனாதிபதியானார். அச்சமயம் அமலில் இருந்த, 'தேர்தல் குழு'வில் விசித்திர வோட்டு முறைப்படி எதிர்க் கட்சியைச் சேர்ந்த தாமஸ் ஜெபர்ஸன், இரண்டாவதாக அதிகப்படியான வோட்டுகள் பெற்றதால், உபஜனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இங்கிலாந்துடன் மீண்டும் அமெரிக்கா சமரசம் செய்து கொண்டதில் பெரும் ஆத்திரங்கொண்ட பிரான்ஸுடன், புதிதாகப் படுமோசமான தகராறு ஏற்பட்டது. வேற்றுமைகளைத் தீர்ப்பதற்காக ஜனாதிபதி ஆடம்ஸ், கமிஷனர்களைப் (தூதர்கள்) பாரிசுக்கு அனுப்பியபொழுது, "X, Y and Z"

என்றுமட்டும் அழைக்கப்பட்ட பிரெஞ்சு ஏஜண்டுகள், தூதர்களிடம் பேசுவதற்கு முன்னரேயே, கடன்களும் தங்களுக்குப் பரிசுகளும் அளிக்கப்பட வேண்டுமென்று கோரினர். இந்த "X, Y and Z" விவகாரம் அமெரிக்காவை ஆத்திர மூட்டியது. பிரகடனம் செய்யப்படாத கடுமையான கடற்போர் ஏற்பட்டது ஜனாதிபதி ஆடம்ஸின் பொறுமையினாலேயே பெரும் அளவில் ஏற்பட்ட போர் தவிர்க்கப்பட்டது.

யுத்த அபாயத்திற்கு நடுவே தங்கள் எதிர்க் கட்சியினரின் வாயை அடக்கி, உள் நாட்டுப் பாதுகாப்பை பலப்படுத்தும் நோக்கங்கொண்ட இரண்டு சட்டங்களை, சமஷ்டிவாதிகள் நிறைவேற்றினர். இது சமஷ்டிவாதிகளின் கட்சி இறுதியாக, முற்றிலும் நசித்துப் போவதற்குக் காரணமாக ஆயிற்று. எந்த அந்நியருடைய நடத்தையினாலும் அமெரிக்காவின் அமைதிக்கும் பாதுகாப்புக்கும் ஆபத்து நேரும் என்று கருதினால் அத்தகையவரை நாடு கடத்த, முதலாவதான "அந்நியர் தடைச் சட்டம்" ஜனாதிபதிக்கு அதிகாரமளித்தது. இரண்டாவதான "அரசாங்கத் துவேஷச் சட்டம்" அமெரிக்க அரசாங்கத்திற்கு விரோதமாகப் "பொய்யானதும், அவதூறானதும், விஷமத்தனமானதுமான" எதையும் எழுதிய குற்றத்தைச் செய்தவர் என்று முடிவு செய்யப்பட்ட எவர்மீதும் கடுந்தண்டனையே விதித்தது. அந்நியர் தடைச் சட்டம் அமலுக்குக் கொண்டு வரப்படவில்லை. ஆனால், நிர்வாகத்தை அளவுக்கு மீறிக் கடுமையாகத் தாக்கிவந்த குடியரசுக் கட்சியை ஆதரிக்கும் பல பத்திரிகாசிரியர்கள், அரசாங்கத் துவேஷச் சட்டத்தின் கீழ் அபராதமோ சிறைத் தண்டனையோ விதிக்கப்பட்டனர்.

குடியரசுக் கட்சியினர் கோபத்துடன், அந்நியர் தடைச் சட்டமும், அரசாங்கத் துவேஷச் சட்டமும், பேச்சு, பத்திரிகைச் சுதந்திர உத்தரவாதத்தை அளிக்கும் அரசியல் சட்டத்தின் முதல் திருத்தத்தை மீறுவதாகக் கூறி, அவற்றைத் தாக்கினர். ஜெபர்ஸனாலும், மாடிஸனாலும் முறையே தூண்டப்பட்ட கெண்டகி, வர்ஜீனியா ராஜ்யச் சட்ட சபைகள், இச்சட்டங்களை ரத்து செய்யும்படி கோரித்

தீர்மானங்களை நிறைவேற்றின. கெண்டகியோ, காங்கிரஸினால் நிறைவேற்றப்பட்ட "சட்ட விரோதமான" எந்தச் சட்டத்தையும் ரத்து செய்யவோ நிராகரிக்கவோ ராஜ்யத்துக்கு உரிமையுண்டு என்று ஊர்ஜிதம் செய்ததன் மூலம், சமஷ்டி அதிகாரத்தின் மண்டையில் அடித்தது. சமஷ்டிவாதிகளின் "சர்வ அதிகார" ஆட்சியைக் கண்டு அமெரிக்க மக்கள் பீதிகொண்டுவிட்டனர் என்பது 1800-ஆம் ஆண்டில் நடந்த தேர்தலில் நன்கு புலப்பட்டது. சொல்ப அதிகப்படி வோட்டுக்களால் ஜெபர்ஸன் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

புது நிர்வாகம், வாஷிங்டன் என்ற சதுப்பான சிறு கிராமத்தைப் புதுத் தலைநகராகக் கொண்டு,ஆட்சியைமேற்கொண்டது. தென் பிரதேசத்தின் மேற்பகுதியில் தலைநகரை ஸ்தாபிப்பதென்ற வாக்குறுதி நிறைவேற்றப்பட்டது. செல்வம் படைத்த ஆடம்பரமான நியூ இங்கிலாந்தின் பிரதிநிதிகளுக்கு, நாகரிகப் போக்குள்ள பிலடெல்பியாவிலிருந்து இந்த அநுபவமற்ற, குடிமக்கள் அதிகமில்லாத குக்கிராமத்திற்குத் தலைநகரம் மாற்றப்பட்டது பட்டவர்த்தனமாகப் பிடித்தமற்றதாக இருந்தது. இயற்கைப் போக்கிலும் சாதாரணமான சுபாவத்திலும் பற்றுக் கொண்ட தாமஸ் ஜெபர்ஸனுக்கு, இந்த இடந்தான் தமது கொள்கைகளை அமலுக்குக் கொண்டுவரச் சரியான சூழ்நிலையாக இருந்தது.

உண்மையிலேயே, ஜெபர்ஸன். ஜனாதிபதி என்ற முறையில் தமது செய்கைகளால் தம்மையும் மற்ற எல்லாரையும் திகைக்கவைக்க இருந்தார்.அரசாங்கச் செலவைக் குறைத்து, விஸ்கிமீது வரியை ரத்து செய்து, அரசாங்கத் துவேஷச் சட்டத்தின் கீழே கைதியாக இருந்தவர்களை விடுவித்ததன் மூலம், அவர் குணத்திற்கிணங்க எதிர்பார்க்கப்பட்டபடியே நடந்துகொண்டார். அமெரிக்க, ஐரோப்பியக் கடல் வர்த்தகக் கப்பல்களைத் தாக்கி வந்த, காட்டுமிராண்டிப் போக்குள்ள கடற் கொள்ளைக்காரர்களைத் தண்டிக்க மத்தியதரைக் கடலுக்கு ஒரு கடற்படையை அனுப்பி வைத்தது அவ்வளவு குறிப்பிடத்தக்கதாக இல்லை. ஆனால்,எல்லாவற்றையும் விடப் பெருந் திகைப்பு, அரசியல்

சட்டத்தைச் சிறிதும் பிறழாமல் விரித்துக் கூறுபவரான ஜெபர்ஸன், சமஷ்டிவாதிகள்கூடக் காணத் தவறிய அர்த்தங்களைச் சாசனத்தில் காண ஆரம்பித்தபோது ஏற்பட்டது. ஜனாதிபதியின் சுபாவத்தில் ஏற்பட்ட இந்தத் திடீர் மாறுதல் முதலில் ஆச்சரியத்தையும், பின்னர் மதிப்பையும் ஏற்படுத்தியது. அவருடைய செய்கைகள் நல்லெண்ணத்தினால் தூண்டப்பட்டவை என்று நிரூபணமானதே இதற்குக் காரணமாகும். காலத்தின் போக்குகள், சமஷ்டிவாதிகளின் திட்டத்திற்கு முன்ஜாக்கிரதையாக இணங்கும்படி நிர்ப்பந்தம் செய்துவிட்டன.

அரசியல் சட்டத்தின்படி அதிகாரமே இல்லாமலும், அல்லது காங்கிரஸின் சம்பந்தத்தைப் பெறாமலும் லூசியானா பிரதேசத்தை விலைக்கு வாங்கியதுதான், ஜெபர்ஸன் எடுத்துக்கொண்ட மகத்தான நடவடிக்கையாகும். மேற்கே மிஸிஸிபி நதியிலிருந்து ராக்கி மலைத்தொடர்கள்வரை உள்ள இந்தப் பிரம்மாண்டமான பிரதேசம், 1763-ஆம் ஆண்டில் பிரான்ஸினால் ஸ்பெயினுக்குக் கொடுக்கப்பட்டது. ஆனால் பிரான்ஸைச் சேர்ந்த நெப்போலியன் போனபார்ட் 1880-ஆம் ஆண்டில், அதைத் தம்மிடம் திரும்பக் கொடுத்து விடும்படி நிர்ப்பந்தம் செய்தார். ஐரோப்பாவில் வெற்றி முரசு கொட்டிய நெப்போலியன், மாபெரும் புது உலக சாம்ராஜ்யத்தை ஏற்படுத்துவதுபற்றிக் கனவு கண்டார்.

மீண்டும் லூஸியானாவின் ஆதிக்கத்தைப் பெற்ற பிரான்ஸ், ஓஹியோ பள்ளத்தாக்கில் புதிதாக ஏற்பட்டிருந்த குடியேற்றப் பிரதேசங்களின் வளர்ச்சிக்கும் வர்த்தகத்திற்கும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த மிஸிஸிபி நதியையும், நியூ ஆர்லியன்ஸ் துறைமுகத்தையும் உபயோகித்துக்கொள்ளும் உரிமையை ரத்து செய்தது. இத்துடன் கூட, பலஹீனமான ஸ்பெயினுக்குப் பதிலாக ஆக்கிரமிப்புப் போக்குள்ள முதல் ரக வல்லரசு, அமெரிக்க எல்லை முழுதுக்குமே ஆபத்தை உண்டுபண்ணச் சூழ்ந்துகொண்டது. ஜெபர்ஸன் இது விஷயத்தில் உறுதியாக நடந்துகொள்ள முடிவு செய்தார். அதாவது, குறைந்தபட்சம் மிஸிஸிபியில் உரிமைகளை மீண்டும் பெறுவது, அல்லது இது தவறினால், பிரான்ஸ்மீது நடத்திவரும் யுத்தத்தில் இங்கிலாந்துடன்

இந்தியாவுக்கும் ஐரோப்பிய நாடுகளுக்கும் இடையிலுள்ள இறுதியான வேற்றுமை மக்கட்தொகை வளர்ச்சி வீதத்தில் இல்லை; அந்த வளர்ச்சிவேகம் ஐரோப்பிய நாடுகளிலேயே மிகுதி. இந்தியாவிலும், ஐரோப்பாவிலுமுள்ள நிலைமைகளில் உள்ள உண்மையான வேற்றுமை என்னவென்றால், ஐரோப்பிய நாடுகளில் நிகழ்ந்துள்ள பொருளாதார முன்னேற்றமும் உற்பத்தி பெருக்கமும், மிக விரைவான மக்கட் தொகைப் பெருக்கத்துக்கு வசதியாக உள்ளன. ஆனால், அத்தகைய வளர்ச்சிகள் இந்தியாவில் நிகழவில்லை; அந்த வளர்ச்சிகள் பிரிட்டிஷ் முதலாளித்துவத்தின் தேவைகளுக்கும் வேலைகளுக்கும் ஏற்பச் செயற்கை முறையில் ஒடுக்கப்பட்டுள்ளன; அதனால், மக்களில் பெரும்பான்மையோர் பண்டைக்காலத்து, மிகுந்த சுமை தாங்கும் வேளாண்மையை நம்பி வாழ வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுள்ளது என்பதைப் பின்னால் காண்போம். நாட்டின் செல்வம் வடிக்கப்பட்டுவிட்டது; தொழில் முதலிய வளர்ச்சிகள் தடையுண்டு ஒடுக்கப்பட்டுவிட்டன; அதே சமயத்தில், மக்களில் பெரும்பாலோர், பிழைப்பதற்கு ஒரே மிகுந்த சுமை தாங்கிச் சாதனமாக்கப்பட்டுள்ள வேளாண்மையும், தள்ளாடும் நிலையில் வைக்கப்பெற்று, புறக்கணிக்கப்பெற்று இழியும் நிலைக்கு உட்படுத்தப்பட்டுள்ளது.

இதில்தான், இந்திய மக்களின் கடும் வறுமையின் ரகசியம் அடங்கியுள்ளது. இல்லாத மிகை மக்கட்தொகை என்ற பொய்மையான காரணங்களில் அல்ல; மனித முயற்சிக்கும் ஆட்சிக்கும் எந்த இயற்கைக் காரணங்களிலும் அல்ல; ஏகாதிபத்திய ஆட்சியின் சமூக-பொருளாதார நிலைகளில்தான் இந்த ரகசியம் உள்ளது. இந்தக் கூற்றுக்கான சாட்சியங்கள் பின்வரும் அத்தியாயங்களில் தரப்படும்.

இந்திய மக்களுக்குப் பிழைக்கும் வழி ஏற்படுத்தித் தருவதற்கு சமூக-அரசியல் மாறுதல் இன்றியமையாதது என்பதையே இந்த விளக்கம் உறுதிப்படுத்தும்; இந்தச் சாட்சியம் சுட்டிக் காட்டும் அரசியல் முடிவு இதுதான்.

முறை ஏற்படவிருந்த பிரயாணங்களின் முன் நிகழ்ச்சியுமாகும்.

லூஸியானு பிரதேசத்தை வாங்கி, தொலை மேற்கே குடியேற்றத்திற்கு வழி செய்த ஜெபர்ஸனின் துணிகரமான செயலை மக்கள் பாராட்டினர். ஆனால், 'அரசியல் சட்டம் முறியும் அளவுக்கு அதை விஸ்தரித்ததற்கு' (வியாக்கியானம் செய்துகொண்டு நடவடிக்கை எடுத்துக் கொண்டதற்கு) அவர் மட்டும் கவலைப்பட்டார். செனேட்டின் சம்மதத்துடன் உடன்படிக்கைகள் செய்துகொள்ள அரசியல் சட்டம் ஜனாதிபதிக்கு அதிகாரம் அளித்தாலும், அதிகம் நிலம் வாங்க அரசியல் சட்டம் எங்குமே அதிகாரம் அளிக்கவில்லை. இந்தத் தெளிவற்ற வியாக்கியானத்தைக் கொண்டு தான் லூஸியானாவை வாங்கியது ஒழுங்கானது என்று முடிவு செய்துகொள்ளப்பட்டது.

ஜெபர்ஸனின் இரண்டாவது பதவிக் காலத்தில் மற்றொரு பெரிய நெருக்கடி, இதேபோல் விரிவாகச் சமஷ்டி அதிகாரத்தை உபயோகிக்கும்படி அவரைச் செய்தது. பிரான்ஸும் இங்கிலாந்தும் தங்கள் யுத்தத்தைத் தீவிரமாக்கிக்கொண்டன. ஒன்று மற்றொன்றைக் கப்பல் முற்றுகை மூலம் கழுத்தை நெரிக்க முயன்றது. எதிரியின் துறைமுகங்களுக்குச் செல்லக்கூடாது என்று நடு நிலைமை நாடுகளை ஒவ்வொன்றும் எச்சரித்தது. இந்த ஐரோப்பாவுடன், தனது வியாபாரம் பெருகி, அதன் பொருளாதார க்ஷேமத்திற்கே முக்கியமானதாக இருந்த, அமெரிக்காவுக்கு இந்தக் கப்பல் முற்றுகை பெரும் அடியாக இருந்தது. வெளிநாட்டுத் துறைமுகங்களுக்கு உணவுப் பொருள்களையும், மூலப்பொருள்களையும் ஏற்றிச்சென்ற அமெரிக்கக் கப்பல்கள், யுத்தத்தில் ஈடுபட்டிருந்த பிரான்ஸ் அல்லது பிரிட்டனால் கைப்பற்றப்பட்டன. பெரிதும் ஆள்பலம் தேவையாக இருந்த இங்கிலாந்து, அமெரிக்கக் கப்பல்களிலிருந்து மாலுமிகளைக் கைப்பற்றியே வந்தது.

யுத்தத்தைத் தவிர்க்கவேண்டும் என்ற நோக்கத்தில், அயல்நாட்டு வர்த்தகத்தை முற்றிலும் நிறுத்தி, அமெரிக்கக் கப்பல்களை நாட்டிலுள்ள துறைமுகங்களிலேயே இருக்க உத்தரவிடும்படி ஜெபர்ஸன் காங்கிரஸை இணங்கச்

வாதிக்க முடிந்தது; இவ்வாறு பழிப்போர் ஒரு பெரிய, பின் தங்கிய, படிப்பில்லாத மக்கட் தொகையுள்ள ஓர் ஆசிய நாட்டின் நிலைமையிலுள்ள மலைப்பூட்டும் இடையூறுகளைக் கணக்கில்சேர்த்துக் கொள்ளவில்லை என்றும் வாதிக்க முடிந்தது. இன்றுள்ள நிலைமை, ஆழம் காண முடியாதது தான்; அதை ஏகாதிபத்தியத் திற்காகப் பரிந்து பேசுவோர் தாராளமாக ஒப்புக்கொள்ள வேண்டியுள்ளது; ஆயினும் அவர்கள் தற்காப்பு நிலையிலிருந்தே பேசுகின்றனர்; வேறு எந்த ஆட்சியிலும் இதற்கு மேல் சாதித் திருக்க முடியாது என்று வாதாடுகின்றனர்.

இன்று இத்தகைய வாதம் செல்லத்தக்கது என்று கூட உரிமை கொண்டாட முடியாது. மிகவும் பின்தங்கியுள்ள நிலைகளையும் மிக விரைவாக மாற்ற முடியும் என்ற சாத்தியக் கூறுகளின் எல்லைகளை நவீன காலத்து அனுபவம் விரிவாக்கியுள்ளது. போருக்குப் பிறகு துருக்கி புத்தெழுச்சி பெற்றுப் புத்துயிர் பெற்றதை உதாரணமாகக் கொள்ளலாம்; இந்தியாவுக்குச் சிறந்த படிப்பினையாகவும் அது இருக்கும். ஆனால் குறிப்பாக சென்ற இரு பத்தாண்டுகளில் சோவியத் யூனியனில் சோஷலிஸ்டுப் புரட்சி புரிந்துள்ள சாதனைகளின் அனுபவம், என்ன செய்யமுடியும் என்பதற்கு வெற்றிகரமான சோதனையாக விளங்குகிறது. சோவியத் நாடும் பெரிய நாடு; தொடக்கத்தில் பின்தங்கிய தொழில் நுட்பங்களும், ஒழுங்கற்ற நிறுவன ஏற்பாடுகளும், பெரும்பாலும் படிப்பில்லாத மக்களும் நிறைந்திருந்த நாடு; இந்த நாடு அடைந்துள்ள முன்னேற்றம் மற்ற எல்லா நாட்டு மக்களின் கண்களைத் திறந்து விடுகின்றது; இந்திய மக்களின் கண்களையும்தான். இந்த ஒப்பு நோக்கை இன்னும் ஓரளவு விரிவாகத் தொடர்வதால் பயனுண்டு; இந்தியா இன்றுள்ள தேக்க நிலைமைக்கும் முன்னேறும் ஒரு சமுதாயத்துக்கும் உள்ள வேற்றுமையைக் காண அது உதவும்; சரியான சமூக அரசியல் நிலைகளை உருவாக்கினால் என்ன சாதிக்க முடியும் என்று நம்பிக்கை கொள்ளவும் அது உதவும்.

## 1. சோஷலிஸத்தின், ஏகாதிபத்தியத்தின் இரு பத்தாண்டுகள்

சோவியத் சோஷலிஸ்டுக் குடியரசுகள் யூனியனின் இருபது ஆண்டு நிறைவும், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் 180 ஆவது ஆண்டு நிறைவும், 1937 இல் ஏககாலத்தில் நேர்ந்துள்ளன. பிளாஸி போரிலிருந்து பிரிட்டிஷ் ஆட்சி தொடங்குவதாக வழக்கத்திலுள்ள கருத்து. ரஷ்யாவில் சோஷலிஸம் சாதித்துள்ளதைப் போல் சாதித்துக் காட்டுவதற்கு அதைப்போல ஒன்பது மடங்குக் கால அளவு ஏகாதிபத்தியத்திற்கு இருந்துள்ளது.

தது. தென்பிரதேசத்தினர் ஸ்பானிய பிளாரிடாமீது பேராவலுடன் கண்வைத்தனர். "யுத்தப் பருந்துகள்" என்று அழைக்கப்பட்ட இந்தப் போர் வீரமுள்ள கோஷ்டிக்கு, கென்டகியைச் சேர்ந்த (Henry Clay), தென் கரோலினாவைச் சேர்ந்த ஜான் ஸி கல்ஹோனும் (John G. Calhoun) தலைவராயிருந்தனர். 1812-ஆம் ஆண்டு யுத்தம் பெரும் அளவுக்கு அநாவசியமானதாயிற்று. நியூ இங்கிலாந்து இதற்குக் கடுமையாக எதிர்ப்புக் காட்டியது. குடியரசுக் கட்சி நிர்வாகம் பதவியில் இருந்ததே இவ்வெதிர்ப்புக்கு முக்கிய காரணமாகும். நியூ இங்கிலாந்து சமஷ்டிவாதிகளின் நடவடிக்கைகளைக் கண்டு தேசமே அதிர்ச்சியுற்றது. பலமும் உறுதியும் கொண்ட ஐக்கிய அமெரிக்கா ஏற்படவேண்டுமென்ற தங்கள் ஆரம்ப லட்சியங்களுக்கு எதிராக நியூ இங்கிலாந்து சமஷ்டிவாதிகள் சென்றதுடன், யூனியனிலிருந்து பிரிந்துவிடுவோமென்றும் மிரட்டினர். எதிர்பார்த்ததற்கு முன்னரே யுத்தம் நின்றிருக்காவிட்டால் இவர்கள் பிரிந்தும் போயிருப்பார்கள்.

போராட்டங்கள் பல்வேறு முனைகளில் நடந்தன. மிகக் குறைவான யுத்த சாதனங்களைக் கொண்ட அமெரிக்கப் படைகள், ஈரி ஏரிக்கு (Lake Erie) வடக்கு நோக்கிக் கானடாவுக்குச் சென்று, திருப்பியடிக்கப்பட்டன. ஈரி ஏரியிலும், சாம்ப்ளேன் ஏரியிலும் (Lake Champlain) நடைபெற்ற கடற்போர் வெற்றிகள்தாம், அமெரிக்காமீது பதில் படையெடுப்பு அபாயத்தைத் தடுத்தன. தென் கோடியில், 1814-ஆம் ஆண்டு பிரிட்டிஷார் வாஷிங்டன் அருகில் ஒரு படையை இறக்கி, பயந்து நடுநடுங்கிப்போன ராணுவப் படைகளிடமிருந்து தலைநகரைக் கைப்பற்றி, கானடாவில் அமெரிக்கர்கள் ஏற்படுத்திய நாசத்திற்குப் பதில் நடவடிக்கையாக ஜனாதிபதியின் வாசஸ்தலமான வெள்ளை மாளிகையையும், மற்றும் அரசாங்கக் கட்டிடங்களையும் தீ வைத்துக் கொளுத்தினர். அருகிலுள்ள பால்டிமோர் (Baltimore) பக்கம் திரும்பிய பிரிட்டிஷ் படைகள், தீவிரமான தற்காப்பினால் தடுத்து நிறுத்தப்பட்டன. அந்நகரைப் பாதுகாத்த மெக்ஹென்றி கோட்டை (Fort McHenry) மீது நடந்த பீரங்கித் தாக்குதல் தோல்வியுற்றது. இதனால் உணர்ச்சிபெற்ற பிரான்சிஸ் ஸ்காட் கீ (Francis Scott Key)

உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சி பற்றின அடிப்படைச் சோதனையிலிருந்து தொடங்குவோம்.

சோவியத் யூனியனில் தொழில் உற்பத்தியின் (பெருவாரித் தொழில்) அட்டவணை, 1913 இல் 100 ஆக இருந்தது. 1937 இல் 816·4 ஆக உயர்ந்தது—எண் மடங்கு வளர்ச்சி. இந்த வளர்ச்சி இதற்கு இணை எந்த நாட்டின் பொருளாதார வரலாற்றிலும் இல்லை—அந்நியர் மூலதனம் இல்லாமல் கனரகத் தொழில்களையும் இயந்திர உற்பத்தியையும் ஏற்படுத்தியதுடன் இலகு ரகத் தொழில்களையும் படைத்து ரஷ்யா தொழில் மயமானதை மட்டும் பிரதிபலிக்கவில்லை. முன்னர் அந்நியர் மூல தனத்தின் ஆளுகையில் அரைகுறை வளர்ச்சியடைந்த தொழிலுடன் 'குடியானவக் கண்டமாக'ப் பின்தங்கிய நாடாக இருந்த ரஷ்யா ஐரோப்பாவின் தலைசிறந்த தொழில் நாடாகவும் உலகத்திலேயே இரண்டாவது மிக வலிய நாடாகவும் உருமாறியதையும் அது பிரதிபலிக்கின்றது. தொழில் உற்பத்தி அளவுக்கும், மொத்தத் தேசீய உற்பத்தி அளவுக்கும் இருந்த விகிதாசாரம், 1913 இல் 42 சதவீதமாயிருந்தது, 1937 இல் 77 சதவீதமாக உயர்ந்தது; அதாவது வேளாண்மையைப் பிரதானமாகக் கொண்ட நாடாக இருந்த ரஷ்யா, தொழிலைப் பிரதானமாகக் கொண்ட நாடாக மாறி விட்டது. உழைக்கும் மக்களின் மொத்தத்தில் தொழில் துறைத் தொழிலாளர்களின் அளவு 16 சதவீதத்திலிருந்து 31 சதவீதமாக ஏறியது. 1913 இல் நாட்டு வருமானம் (1926—27 விலைகளில்) 21,000 பத்து லட்சம் ரூபிள்களாக இருந்தது. 1937 இல் 96,000 பத்து லட்சம் ரூபிள்களாக, அல்லது, நாலரை மடங்கு மிகுந்தது.

இந்தியாவில், பொதுப் புள்ளி விவரங்களோ, அல்லது, தொழில் உற்பத்தி அட்டவணையோ, அல்லது, மொத்த தேச உற்பத்தி அல்லது வருமான அட்டவணையோ தயாரிக்கும் முயற்சி எதுவும் செய்யப்படுவதில்லை என்பதை முதலில் குறிப்பிட வேண்டும். 1936 ஏப்ரலில் ராயல் சொசைட்டி ஆப் ஆர்ட்ஸின் இந்தியப்பகுதிக்கு முன் படிக்கப்பட்ட 'இந்தியாவின் வெளிநாட்டு வர்த்தகம்' என்ற டி.பி.மீக்கின் கட்டுரையில், முக்கியமான தொழில்களின் உற்பத்திக்கான அட்டவணைக்கான அதிகார பூர்வமல்லாத ஒரு மதிப்பீடு செய்ய முயலப்பட்டது; 1910-11 முதல் 1914-15 வரை ஐந்து ஆண்டுகளுக்கான சராசரியை 100 என்ற அடிப்படையில் 1932-33இல் அது 156 ஆக உயர்ந்தது என்ற முடிவுக்கு வந்தது; அதாவது 56சதவீதம் அல்லது சோவியத் வளர்ச்சியில் பதினாறில் ஒரு பாகம்; சோவியத்தின் தொடக்க எண் இன்று தாழ்ந்தது. 1911 இலும் 1921 இலும் ஒரு

( தாழில் சென்ஸஸ் எடுக்கப்பட்டது; 1931இல் எடுக்கப்படவில்லை. தன்படி 'நிறுவனமான தொழில்'களில் அல்லது, 20க்கு மேற் ட்ட தொழிலாளர்களைப் பயன்படுத்தும் தொழிற்சாலைகளில் வலை செய்யும் தொழிலாளர்களின் எண்ணிக்கை 1911இல் 21 லட்சமாயிருந்தது, 1921 இல் 26 இலட்சமாக உயர்ந்தது; தாவது ஓர் ஆண்டுக்கு 2·4 சதவீத வளர்ச்சி. இதே வீத அளவு ருபது ஆண்டுகள் தொடர்ந்தால் 48 சதவீத வளர்ச்சிக்குச் மம்; (உண்மையில், போர்க் காலத்தில் நேர்ந்த தொழில் விரிவு ன்னால் குன்றிவிட்டது) அல்லது சோவியத் வளர்ச்சியில் த்தொன்பதில் ஒரு பாகம். தொழில்களில் பயன்படுத்தப் டும் தொழிலாளர்களின் எண்ணிக்கை 1911இல் 175 லட்சம், 1931இல் 153 இலட்சம்; அதாவது மக்கட் தாகை ஏறியிருந்தும் 12·5 சதவீதம் குறைவு. புதிய தாழில்களையும் வளர்க்காமல் சிறுவகைத் தொழில்களையும் தாடர்ந்து அழித்ததை இக் குறைவு பிரதிபலிக்கிறது. இதன் விளைவாக வேளாண்மையை நம்பி வாழும் மக்கட் தொகையின் அளவு 1911இல் 72 சதவீதமாக இருந்தது, 1921-ல் 73 சதவீத மாக ஏறி, 1931 இலும் அதே நிலையில் இருந்தது; மொத்த உழைப்பாளி மக்களில் தொழிற்கூடத் தொழிலாளர்களின் அளவு 1911இல் 11·7 சதவீதமாக இருந்தது, 1931-இல் 10 சதவீத மாக வீழ்ந்தது, ஏகாதிபத்தியம் இருபது ஆண்டுகளில் சாதித்த 'முன்னேற்றம்' இவ்வாறு இருந்தது.

மிக முக்கியமான உற்பத்திப் பொருள்களை மிகவும் சரியாக ஒப்பிட்டு நோக்குவதன் வாயிலாக இந்தப் பொதுவான நிலை மேலும் தெளிவாகும். இந்தியாவில் நிலக்கரி உற்பத்தி 1914இல் 164 இலட்சம் டன்களாயிருந்தது, 1934இல் 220 இலட்சமாக உயர்ந்தது; அல்லது, 55 இலட்சம் டன்கள் இருபது ஆண்டுகளில் உயர்வு; அதாவது, 34 சதவீதம். ரஷ்யாவில் நிலக்கரி உற்பத்தி 1913இல் 290 இலட்சமாக இருந்தது, 1937இல் 1280 இலட்சம் டன்களாக ஏறியது; 990 இலட்சம் டன்கள் அதிகம்; அதாவது 340 சதவீத வளர்ச்சி; பெரிய தொடக்க எண்ணின் பேரில் 10 மடங்கு விரைவான அளவில் வளர்ச்சி. போருக்குச் சற்றுமுன் தான் இந்தியாவில் உருக்கு உற்பத்தி தொடங்கியது; 1934-35இல் அது பத்து இலட்சம் டன் (8,34,000) அளவையும் கூட எட்ட வில்லை. சோவியத் யூனியனில் அது 1937இல் 175 இலட்சத்தை எட்டிவிட்டது; போருக்கு முன்பைவிட 130 இலட்சம் டன் களுக்கு மேல் அதிகம். சோவியத் யூனியனில் மின்சார உற்பத்தி 1913 இல் 190 கோடி கிலோ வாட்-மணிகளாக இருந்தது, 1937 இல் 3,650 கோடியாக உயர்ந்தது; பதினெட்டு மடங்கு வளர்ச்சிக்கும் அதிகம். இந்தியாவில் மின்சாரப் புள்ளி விவரங்கள்

ஒன்றும் கிடைக்கவில்லை. ஆயினும், 1935இல் அந்த உற்பத்தி 250 கோடி கிலோ வாட்-மணிகள் என்று மதிப்பிடப்பட்டது, அல்லது சோவியத் அளவில் பதினன்கில் ஒரு பாகத்தைவிடக் குறைவு; தனிநபர் சோவியத் அளவில் முப்பதில் ஒரு பாகம்.

வேளாண்மைத் துறையில் இந்த வேற்றுமை இன்னும் கூர்மையாக இருக்கிறது; மக்களில் மிகப் பெரும்பாலோரின் மாறுதலை உணர்த்தும் அடிப்படைப் பொருள் இதற்குக் காரணம். நிலவுடைமையாளர்கள், வட்டிக்கடைக்காரர்கள், குலாக்குகள் ஆகியோரின் கொடுமையில் சிக்கி, வறுமையில் உழன்று, நிலப்பசி கொண்டிருந்த ஜார் காலத்து ரஷ்யாவின் குடியானவர்கள் இன்றைய சுயேச்சையான செழிப்புள்ள, கூட்டுப்பண்ணைக் குடியானவர்களாக மாறிவிட்டார்கள்; அவர்கள் தங்கள் சொந்தக் கூட்டுப் பண்ணைகளில் மிக முன்னேறிய யந்திர சாதனங்கள், நுட்ப முறைகளின் துணையோடு பயிரிகிறுர்கள்; கூட்டுப்பண்ணை முறை பூர்த்தியான முதல் ஐந்து வருடங்களில் அவர்களுடைய பணவருமானம் ஏற்கனவே மும்மடங்கு ஏறியிருக்கிறது. 1913க்கு மேல் பயிர் நிலபரப்பு மூன்றில் ஒரு பங்கு அதிகரித்துள்ளது: தானிய விளைச்சல் 1913 இல் 80.1 கோடி சென்ட்னர்களாக இருந்தது, 1937இல் 120·2 கோடியாக மிகுந்துள்ளது; அல்லது அரைமடங்கு மிகுதி. கச்சாப் பருத்தியின் உற்பத்தி 1913இல் 74 இலட்சம் சென்ட்னர்களாக இருந்தது, 1937இல் 258 இலட்சங்களாக உயர்ந்தது; அல்லது மூன்றரை மடங்கு வளர்ச்சி. இந்தியாவில் விவசாய நெருக்கடி ஆண்டுக்கு ஆண்டு பயங்கரமாகி வருகிறது; இதைப்பற்றி பின்வரும் அத்தியாயங்களில் விரிவாக ஆராயப்படும். நிலச்சுவான்களும், அரசினரும், வட்டிக்கடைக்காரர்களும் சேர்ந்து நெருக்கி குடியானவர்களை வறியர்களாக்கி வருகின்றனர்; நிலத்தை நம்பி வாழும் மக்கள் பலரை வெளியே துரத்திக் கொண்டிருக்கிறுர்கள்; விதைக்கப்பட்ட நிலப்பரப்பும் தானிய விளைச்சலும் மக்கட் தொகை பெருக்கத்தைவிடச் சிறிதளவு சென்ற சில ஆண்டுகளில் பெருகியுள்ளது; ஆனுல், முற்றிலும் வீழ்ச்சி அடையலாம் என்று அஞ்சுவதற்கான அறிகுறிகள் இருக்கின்றன.

உற்பத்தி, வளங்களின் அபிவிருத்தியைப் பற்றிப் பார்த்தோம்; மக்களுக்குக் கல்வி, ஆரோக்கிய வசதிகளை அளிக்க அரசாங்கம் மேற்கொண்ட முயற்சிகளைக் கவனித்தால், ஏகாதிபத்தியத்திற்கும் சோஷலிஸத்திற்கும் இடையிலுள்ள வேற்றுமை பிரமிப்பூட்டுவதாக இருக்கிறது.

கல்வித்துறையில், ஜாரின் ரஷ்யாவில் மக்களின் கல்வியறிவின்மையை வேண்டுமென்றே காத்து வந்தனர்; 78 சதவீதத்

பசிபிக் கடற் கரைப் பிரதேசம் வழியாக முண்டிக்கொண்டு இருந்த ரஷ்யர் தமது பரிசாகக் கலிபோர்னியாவை அடித்துக் கொள்ள மனத்தில் திட்டமிட்டிருந்தனர்.

இந்தத் திட்டங்களெல்லாம் அமெரிக்க மக்களைப் பீதியுறச் செய்தன. மீண்டும் ஒரு முறை, ஐரோப்பிய வல்லரசுகள் எல்லாம் பல்வேறு திசைகளிலிருந்து தங்களை வளைத்து நெருக்கப் போவதுபோல் தோன்றியது. அமெரிக்க நாட்டையடுத்து, அதிகமான தகராறுகளும், அநேகமாக யுத்தங்களும் ஆபத்தான அளவுக்கு ஏற்படக்கூடும்.

'புனித உடன்பாட்டை' இங்கிலாந்துங்கூட எதிர்த்தது. அது புதிய லத்தீன் (தெற்கு) அமெரிக்க நாடுகளுடன் ஜரூராக வர்த்தகம் நடத்தி வந்தது. எனவே, இந்நாடுகள் மீண்டும் பிரான்சுக்கோ ஸ்பெயினுக்கோ சேர்ந்து விடுவதைக் காண விரும்பவில்லை. இதற்கிணங்க, மேற்குக் கோளார்த்தத்தில் (வட,தென் அமெரிக்காவில்) தலையிடாமல் விலகி நிற்கும்படி ஐரோப்பாவுக்கு எச்சரிக்கை செய்வதிலும் வடக்கு அல்லது தென் அமெரிக்காவில் பிரிட்டனும் அமெரிக்காவும் மேலும் பிரதேசம் எதுவும் கோராமல் இருக்கவேண்டும் என்று பிரதிக்ஞை செய்து கொள்வதிலும், இங்கிலாந்துடன் சேரும்படி, பிரிட்டிஷ் மந்திரியான கானிங் அமெரிக்காவுக்கு யோசனை கூறினர்.

இந்த யோசனை கவர்ச்சிகரமாக இருந்தது. நீண்டகால விரோதி நண்பராக ஆவார்; சக்தி வாய்ந்த பிரிட்டிஷ் கடற்படையும் பிரகடனத்திற்குப் பெரிதும் பலமளிக்கும். ஆனல் சில அமெரிக்கர்கள், குறிப்பாக ராஜாங்க மந்திரியான ஜான் குவின்ஸி ஆடம்ஸ், இதர வல்லரசுகளுடன் அமெரிக்காவையும், லத்தீன், தென் அமெரிக்க நாடுகளிலிருந்து ஒதுக்கி வைக்க வேண்டும் என்பதே பிரிட்டனின் உண்மையான நோக்கம் என்று கருதினர். இது, அமெரிக்காவின் சிறந்த நலன்களுக்கு எப்பொழுதுமே உகந்ததாக இருக்காது. இது "பிரிட்டிஷ் போர்க் கப்பலுக்கு வால் பிடிக்கும் சிறு கப்பலைப் போல்" அமெரிக்கா காணப்படுவதாக ஆடம்ஸ் கண்டித்து, அமெரிக்கா தனித்தே நடந்துகொள்ள வேண்டுமென்றும் சிபாரிசு செய்தார்.

யான வேறுபாடு காணப்படுகிறது. சோவியத் யூனியனில் உள்ள ஏராளமான தொழில்நுட்ப இடைநிலைப் பள்ளிகளுக்கும், தொழிற் சாலைப் பள்ளிகளுக்கும் இந்தியாவில் இணை கிடையாது. 1937 ஒரே ஆண்டில், சோவியத் யூனியனில் பட்டதாரிகளான தொழில் நுட்பச் சிறப்பறிஞர்கள் (தொழிலியல், கட்டிட இஞ்சினியர் கள், போக்குவரத்து, செய்தித்துறை இஞ்சினியர்கள் வேளாண்மையை எந்திரமயமாக்கும் இஞ்சினியர்கள், வேளாண்மைச் சிறப்பறிஞர்கள்) எண்ணிக்கை 45,900. இந்தியாவில் 1934-35இல் பொறியியல் வேளாண்மை, வணிகவியல் துறைகளில் பட்டதாரிகளானோர் 960; சோவியத்தில் மொத்தத்தில் நாற்பத்தெட்டில் ஒரு பங்கு; மக்கட் தொகை அளவில், சோவியத் மொத்தத்தில் எழுபத்தெட்டில் ஒரு பங்கு.

பண்பாட்டு வளர்ச்சிக்கான மற்றொரு முயற்சியான பத்திரிகை கள், வெளியீடுகள் துறையை பார்ப்போம். சோவியத் யூனியனில் நாளேடுகளின் எண்ணிக்கை 1913இல் 859ஆக இருந்தது, 1937ல் 8,521 ஆக உயர்ந்தது, பத்து மடங்கு வளர்ச்சி. அவற்றில் தினசரி விற்பனை 27இலட்சத்திலிருந்து362 இலட்சமாக ஏறியது, அதாவது 14மடங்கு வளர்ச்சி. இந்தியாவில் செய்தித் தாள்களின் எண்ணிகை 1913—14 இல் 827 ஆக இருந்தது, 1933—34 இல் 1,748 ஆக உயர்ந்தது. தினசரி விற்பனை பதிவு செய்யப்படவில்லை. ஆனால், மிகக்குறைவாகவே இருக்கும். சோவியத் யூனியனில் 1913 இல் வெளியிடப்பட்ட புத்தகங்களின் எண்ணிக்கை 8·67 கோடி. 1937 இல் அது 67·3 கோடியாக ஏறியது, அல்லது சுமார் எட்டு மடங்கு வளர்ச்சி. இந்தியாவில் 1913—14 இல் வெளியான புத்தகங்களின் எண்ணிக்கை 12,819 (விற்பனை விவரம் தெரியாது). 1933-34இல் 16,763, அல்லது இருபதாண்டுகளில் சிறிய மூன்றிலொரு பங்கு வளர்ச்சி.

பொது சுகாதாரம், சமூக நலன் துறையைக் கவனிப்போம்; தொட்டிலிலிருந்து சுடுகாடு மட்டில் ஒவ்வொரு மனிதனுடைய ஆரோக்கியத்திற்காகவும் நலனுக்காகவும் சோவியத் யூனியனில் முழுமையாகவும் முறையாகவும் செய்யப்பட்டுள்ள ஏற்பாடு களுக்கு ஈடு எந்த நாட்டிலும் கிடையாது. எல்லாவித நோய்களுக் கும் விபத்துக்களுக்கும் மருத்துவவுதவி, பொருள் உதவி, மகப் பேறு, குழந்தை வளர்ப்பு வசதிகள், ஊதியத்தோடு விடுமுறைகள், தொழிலாளர்களுக்கு ஓய்வு விடுதிகள், வயதானோருக்கு வசதிகள் ஆகியவற்றை இந்தியாவிலுள்ள நிலைமையோடு ஒப்பிட்டால் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேற்றுமை காணப்படுகிறது. வேறு முதலாளித்துவ நாடுகளில் சாதாரணமாய் வழக்கிலுள்ள மிக வரையறுக்கப்பட்ட சமூக இன்ஷ்யூரன்ஸ் பற்றிக்கூட இந்தியாவில்

தெரியாது; இங்கே பொது ஆரோக்கிய நலச் சட்டம் கிடையாது; மிக ஆரம்பத் தேவைகளான உடல்நலக்காப்பு, சுகாதாரம் ஆரோக்கியக் காப்புக்கான ஏற்பாடுகள், நகரங்களிலும் கிராமங் களிலும் உள்ள உழைக்கும் மக்களைப் பொறுத்த மட்டில், இல்லை என்னும் அளவில்தான் உள்ளன.

சோவியத் யூனியனில் பொது ஆரோக்கியத்திற்காக 1913-ல் செய்யப்பட்ட செலவு (ஒப்புநோக்கக்கூடிய ரூபிள்களில் கணக்கிடப்பட்டது) 1913இல் 1.28 கோடி ரூபிள்கள் 1933இல் 38.02 கோடி; அது 1937இல் 90.50 கோடியாக உயர்ந்தது, அல்லது எழுபது மடங்கு வளர்ச்சி. 1937இல் 90·50 கோடி, தனிநபருக்கு 53 ரூபிள்களுக்குச் சமம். இந்தியாவில் சீர்திருத்தங் களின் விளைவாக ஏற்பட்ட நிர்வாக மாறுதல்களாலும், முக்கிய மான செலவினமான பொது ஆரோக்கியத் துறையின் சுமையை மாகாணங்களுக்கு மாற்றி விட்டதாலும் 1913ஆம் ஆண்டைப் பயனுள்ள முறையில் ஒப்புநோக்க முடியவில்லை. ஆனால், மத்திய அரசும், மாகாண அரசுகளும் சேர்ந்து பொது ஆரோக்கிய நல னுக்காகச் செய்த செலவு 1921-22 இல் 4·73 கோடி ரூபாய்; அது 1935-36இல் 5·72 கோடியாக ஏறியது; அல்லது, மத்திய மாகாண அரசுகள் 1921-22இல் செய்த மொத்த செலவினத்தில் 2·1 சதவீதமாக இருந்து 1935-36இல் 2·6 சதவீதமாக ஏறியது. 1935-36இல் செலவு செய்யப்பெற்ற ரூ. 5·72 கோடி, £ 4·30 இலட்சத்துக்குச் சமம்; அல்லது, தனி நபருக்கு 2.75 பென்ஸ்.

ஒப்புநோக்குக்காக ஒரு பொதுவான, ஸ்தூலமான அளவை, ஆஸ்பத்திரிப் படுக்கைகளின் எண்ணிக்கையைப் பார்ப்போம். சோவியத் யூனியனில் 1913 இல் 138,000 ஆக இருந்த எண்ணிக்கை 1937 இல் 543,000 ஆக உயர்ந்தது; அல்லது, மக்கட் தொகையில் 313 பேருக்கு 1 படுக்கை. பிரிட்டிஷ் இந்தியா வில் இந்த எண்ணிக்கை (பொது, தனியார் துறை நிறுவனங்களை எல்லாம் சேர்த்து தனியார் துறை ஆஸ்பத்திரிகளில் பல ஐரோப்பியருக்கும் அரசாங்க ஊழியருக்குமே பயன்படும்) 1914 இல் 48,435 ஆக இருந்தது, 1934 இல் 72,271 ஆக உயர்ந்தது; மக்கட்தொகையில் 3,810 பேருக்கு 1 படுக்கை. சோவியத் யூனியனில் இருந்ததைவிட பன்னிரண்டில் ஒரு பங்கு குறைவு.

மரணவீதம் ஜார் ரஷ்யாவில் 1913 இல், ஓராயிரத்துக்கு 28·3 அல்லது, இந்தியாவில் 1914 இல், ஓராயிரத்துக்கு 30 என்ற அளவு போன்றது. 1926 இல் இந்த வீதம் சோவியத் யூனியனில் 20.9 ஆகக் குறைக்கப்பட்டுவிட்டது: இந்தியாவிலோ இன்னும் 26·7 வீதமே இருந்தது. மாஸ்கோவில் 1913 இல்

மரணவீதம் ஓராயிரத்துக்கு 23·1, 1926 இல் 13·4. பம்பாயில் மரணவீதம் 1914 இல் 32·7, 1926 இல் 27·6, குழந்தைகள் மரணம் மாஸ்கோவில் 1913 இல் ஓராயிரத்துக்கு 270; 1928-29 இல் 120 ஆகக் குறைக்கப்பட்டு விட்டது. அதே ஆண்டு பம்பாயில் குழந்தை மரண வீதம் ஓராயிரத்துக்கு 255.

அல்லது, சுகாதார ஏற்பாடுகளையும் அவற்றால் தொத்து நோய்களால் ஏற்பட்ட விளைவுகளையும் கவனிப்போம். சோவியத் யூனியனில் டைபஸ் 1913 இல் பத்தாயிரத்துக்கு 7·3 ஆக இருந்தது. 1929 இல் 2·0 ஆகக் குறைக்கப்பட்டது; 72 சதவீதக் குறைப்பு டிப்தீரியா பத்தாயிரத்துக்கு 31·4 லிருந்து 5·9; 80 சதவீதக் குறைப்பு. அம்மைநோய் 4·7 லிருந்து 0·37; 90 சதவீதக் குறைப்பு (எச். இ. ஸி. ஸிஜரிஸ்ட்: ''சோவியத் யூனியனில் சமூக மயமாக்கப்பட்ட மருத்துவம்,'' பக். 357). இந்தியாவில் டைபஸ், டிப்தீரியாவுக்கான பதிவுக் கணக்கு கிடையாது; ஆனால் அம்மை நோயினால் இறந்தோரைப் பற்றின கணக்கு ஒப்பு நோக்கப் படிப்பினையாகும். இந்தியாவில் 1914 இல் அம்மை நோய்ச் சாவுகள் 76,590, அல்லது மக்கட் தொகையில் பத்தாயிரத்துக்கு 3·2 பேர், 1934 இல் அம்மைநோய்ச் சாவுகள் 83,925, அல்லது மக்கட் தொகையில் பத்தாயிரத்துக்கு 3.0பேர். 1935 சற்று அபிவிருத்தி காட்டியது. இருபதாண்டுகளில் அம்மைநோய்ச் சாவுகளில் ஒரே மாதிரி நிலை (பத்தாயிரத்துக்கு 3·2, 3·0 பேர்) இருந்ததற்கும், சோவியத் யூனியனில் 4·7 லிருந்து 0·37 ஆகக் குறைக்கப்பட்டதற்கும்—என்ன வேற்றுமை!

சோவியத் யூனியனில் 1913 இல் டாக்டர்களின் எண்ணிக்கை 19,800; 1937 இல் 97,000 ஆக ஏறியது. இந்தியாவில் 1934-35 இல் பல்கலைக் கழகங்களில் பட்டம் பெற்ற மருத்துவப் பட்டதாரிகளின் எண்ணிக்கை 630; இங்கிலாந்தில் பயிற்சி பெற்றுத் திரும்புவோரின் சிறு எண்ணிக்கையை இதில் சேர்க்க வேண்டும்.

இறுதியாக மிகக்குறுகிய பொருளில் தொழிலாளர் நிலையைக் கவனிப்போம்; இந்த விரிவான துறையில் சோவியத் யூனியன் செய்துள்ள வசதிகளிலும், மேற்கொண்டுள்ள பொறுப்பிலும் தொழிலாளர்கள் வேலை நேரத்தை உதாரணமாய் எடுத்துப் ஒப்பிட்டுப் பார்க்கலாம்; 1922 இல் எல்லோருக்கும் எட்டுமணி நேர நாளை சோவியத் யூனியன் விதித்தது; அதே சமயம் அபாய கரமான தொழில்களில்—சுரங்கத் தொழிலாளர்கள், மூளைத் தொழிலாளர்கள், பதினாறு, பதினெட்டு வயதுக்குட்பட்ட மைனர் தொழிலாளர்கள்—ஈடுபட்டுள்ளோருக்கு ஆறுமணி நாள் நேரம்; பதினான்கு வயதுக்குட்பட்ட குழந்தைகள் எந்த நிலையிலும்

வேலைக்கு சேர்த்துக்கொள்ளப் படுவதில்லை. பதினான்கு முதல் பதினாறு வயதுள்ளோர், தவிர்க்க முடியாத சூழ்நிலையில், நான்கு மணி நேர வேலை செய்ய அமர்த்திக் கொள்ளப்படுவர்.

இந்தியாவில் 1922 ஆம் ஆண்டு தொழிற் சாலைகள் சட்டம் பதினொருமணி நாளை விதித்தது; 1934 ஆம் ஆண்டு தொழிற் சாலைகள் சட்டம் அதைப் பத்து மணி நாள் ஆக்கியத்துடன் பன்னிரண்டு வயதுக்குட்பட்ட சிறுவர்களை வேலையில் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்று தடுத்தது. ஆனால், ஆண்டுக்கொரு முறை தொழிற்சாலைகளைப் பார்வையிடமுடியாத அளவுஆய்வாளர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருக்கிறது. (1929 இல் இந்தியா முழுவதற்கும் 39 பேர்—விட்லி கமிஷன் அறிக்கைப்படி) அதனால், சிறுவர்களை வேலைக்கு அமர்த்திக் கொள்வது போன்ற சட்டத்தை மீறும் செயல்கள் எளிதில் நடந்தன. மேலும், தொழிற்சாலைச் சட்டம் தொழிலாளர்களின் ஒரு சிறுபான்மையோருக்கே பொருந்தும் (1936 இல் 16 இலட்சம் தொழிலாளருக்கே சட்டம் பயன்படும்; 1931 சென்ஸஸ்படி தொழில் துறையிலும் போக்குவரத்துத் துறையிலும் இருந்த தொழிலாளர்கள் 1·77 கோடி). இந்தியாவில் மிகப் பெரும்பாலான தொழிலாளர்களுக்கு வேலைநேர வரையறை இல்லை. பாதுகாப்பு இல்லை, சிறுவர்களைச் சுரண்டுவதைத் தடுக்க வழியில்லை; விட்லி அறிக்கைப்படி, ஐந்து வயதுக் குழந்தைகளும் நாளுக்கு பன்னிரண்டு மணி நேரம் வேலை செய்தார்கள்.

ஒவ்வொரு துறையிலும் ஸ்தூலமான உண்மை விவரங்களை வைத்தே இங்கு வேற்றுமை காட்டப்பட்டுள்ளது. அரசியல் நோக்குடன் அல்லாமல், இந்த உண்மை விவரங்களின் அடிப் படையில் நோக்கினால், சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுக்கு மிடையே உள்ள வேற்றுமை, நாகரீகத்திற்கும் காட்டுமிராண்டித் தனத்திற்கும் இடையே உள்ள வேற்றுமை என்று தீர்ப்பு கூற வேண்டும்.

ஆயினும், இருபது வருடங்களுக்கு முன்னால் ஜார்கால ரஷ்ய ருக்கும் பிரிட்டிஷாரின் ஆளுகைக்குட்பட்ட இந்தியருக்கும் இடை யில் பெரிய வேற்றுமை நிலை ஏதுமில்லை. இருபதாண்டு சோஷ லிஸ்டு ஆட்சி இந்த மாறுதலை விளைவித்துள்ளது. ஆகையால், அதே போன்ற மாறுதலை இந்தியாவிலும் சாதிக்க முடியும் என்பது தெளிவாகிறது—தேவையான அரசியல் நிலைகளையும் வர்க்க சக்தி களின் உறவுகளில் மாற்றத்தையும் கொடுத்தால்.

## 2. மத்திய ஆசியக் குடியரசுகளின் அநுபவம்

சோவியத் யூனியனின் மத்திய ஆசியக் குடியரசுகளின் சாட்சியத்தால் இந்த ஒப்புநோக்கு மேலும் உறுதிப்படுகிறது.

1913இன் ஜார் கால ரஷ்யா முழுவதையும் இன்றைய இந்தியாவோடு நாம் ஒப்பிட்டால்—இந்தியாவில் மாறுதலுக்கான ஆரம்பத் தொடக்கப்புள்ளி 1913இன் ஜார் கால ரஷ்யாவின் வளர்ச்சி நிலையைவிடப் பொதுவாகத் தாழ்வாகவே இருக்கிறது என்பதில் சந்தேகமே இல்லை; இதை நாம் மனதில் வைத்துக் கொள்ள வேண்டும்; ஆனால், இதனால் பின்னால் ஏற்பட்ட வளர்ச்சி வீதம் பாதிக்கப்படவில்லை. (உண்மையாக, 1913க்கு முற்பட்ட பத்தாண்டில் ஜார் கால ரஷ்யா உலக உற்பத்தி அளவுகளில் பின்னேறிக் கொண்டிருந்தது.) ஆனால், இத் தகுதி சோவியத் யூனியன் மத்திய ஆசியக் குடியரசுகளின் அநுபவத்துக்கு அதிகப்படியான முக்கியத்துவம் அளிக்கிறது; இருபது ஆண்டுகளுக்கு முன் அவை இன்றைய இந்தியாவைவிட மிகப் பின்தங்கியிருந்தன; பின்னால் சாதிக்கப்பட்ட இன்றைய வளர்ச்சியின் உயர்ந்த நிலை இந்தியாவுக்கு விலைவுயர்ந்த எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

சோவியத் யூனியனுக்கும், பிரிட்டிஷ் ஆளுகைக்குட்பட்ட இந்தியாவுக்கும் உள்ள வேற்றுமை கூர்மையாக இருக்கிறது என்றால் மத்திய ஆசிய சோவியத் குடியரசுகளுக்கு வந்தால் இந்த வேற்றுமை மேலும் கடுமையாக இருக்கிறது. தொடக்கத்தில் இந்திய நிலைகளுக்கு மிக ஒற்றுமையான நிலையில் இந்தியச் சூழலில் நம்மை எதிர்ப்படும் துன்பங்களை எல்லாம் மீறி வளர்ச்சி முறை செயல்படுவதை நாம் இங்கு காண முடிகிறது. இந்தியாவை விட இந்தக் குடியரசுகளின் மக்கள் நிலை மிகப் பழமையானதாகவும் பின் தங்கியதாகவும், ஒடுக்கப்பட்டதாகவும், வறுமை வாய்ந்ததாகவும் இருந்தது. ஆசியப் பொருளாதாரத்தோடும் ஆசிய சமூக நிலைகளோடும் சம்பந்தப்பட்ட எல்லா சிறப்பான பிரச்னைகளும், மாதர் நிலையும், சமயநிலை முதலியனவும் கடுமையான வடிவத்தில் இருந்தன. ஆகையால் பின்தங்கிய மக்கள் விஷயத்தில் ஏகாதிபத்தியத்தின் காலனி கொள்கைக்கும் சோஷலிஸத்தின் கொள்கைக்கும் இடையிலுள்ள வேற்றுமையை இங்குபோல வேறு எங்கும் நாம் காண முடியாது.

யு. எஸ். எஸ். ஆரில் அடங்கியுள்ள ஏழு சோவியத் சோஷலிஸ்டுக் குடியரசுகளில் மூன்று மத்திய ஆசிய சோவியத் சோஷலிஸ்டுக் குடியரசுகள் சமவுரிமை படைத்த தன்னாட்சி வாய்ந்த குடியரசுகளாக இணைந்துள்ளன 171,000 சதுர மைல் பரப்பும், 125 இலட்சம் மக்கள்தொகையும் கொண்ட டர்க்மினிஸ்தான்; 66,000 சதுரமைல் பரப்பும், 50 இலட்சம் மக்கட் தொகையும் கொண்ட உஸ்பெகிஸ்தான்; 55,000 சதுர மைல் பரப்பும் 15 இலட்சம் மக்கள் தொகையும் கொண்ட தாஜிகிஸ்தான், இவற்றோடு மிக நெருக்கமாக காரா-கால்பாக் தன்னாட்சி குடியரசும் கிர்கிஸ்

தன்னாட்சிக் குடியரசும் உள்ளன. இந்த ஐந்து குடியரசுகளும் கஜகஸ்தானுக்குத் தெற்கே, இந்திய எல்லைகளுக்கு மிக அருகில் இருக்கின்றன.

> ''கஜகஸ்தானுக்குத் தெற்கே மத்திய ஆசியாஇருக்கிறது; ஐந்து சோஷலிஸ்டுக் குடியரசுகள் அவற்றின் பெயர்களி லிருந்தே அங்கு வசிக்கும் தேசீய இனங்களைக் கண்டு கொள்ள லாம், உஸ்பெக், டர்க்மென், கடாஜிக், கிர்கிஸ், காரா-கால் பாக் குடியரசுகள்.
>
> ''இது சோவியத் யூனியனின் தென்கடை கோடி; இங்கு நாட்டு எல்லையில் பாரசீகம், ஆப்கானிஸ்தானம், மேற்குசீனு உள்ளன. மத்திய ஆசியாவின் எல்லைக்குப் பதினைந்தாவது கிலோ மீட்டரில் இந்தியா ஆரம்பமாகிறது.
>
> ''புரட்சிக்கு முன்பு, மத்திய ஆசியா அரைகுறை அடிமைத்தனமும், காலனித் தொழிலாளரும் நிறைந்த பூமி.
>
> ''இப்போது அது சமவுரிமைகள் படைத்த தேசீய இனங் களும், சோஷலிஸ்டு வேளாண்மையும், புதிதாக தொடங்கப் பெற்ற தொழிலும் வாய்ந்த பூமியாகத் திகழ்கிறது.''
>
> (மிகய்லாவ்: ''சோவியத் பூகோளம்,'' 1937, பக். 6-7).

இந்தியாவுக்குச் சில மைல்களிலுள்ள தாஜிகிஸ்தானைப் பற்றிய ஆய்வுடன் தொடங்குவோம். இறந்த காலத்தில் தாஜிக் மக்களின் வாழ்க்கை இன்பகரமானதல்ல. புரட்சிவரை அவர்கள் ஜாரின் ரஷ்ய நுகத்தடியின் கீழும், பொக்காரா எமீரின் நிலப் பிரபுத்துவ சமய ஆட்சியின் சர்வாதிகாரத்தடியிலும் சிக்கித் துன்புற்றது. ஜார் சாம்ராஜ்யம் உடைந்ததைத் தொடர்ந்து எழுந்த உள்நாட்டுப் போர்கள் 1925 வரை இறுதியாக முடி வடையவில்லை; 1925இல் தாஜிகிஸ்தான் தன்னாட்சியுள்ள ஒரு குடியரசாகியது: 1929இல் ஒரு சுயேட்சைக் கூட்டுக் குடியரசாக யு. எஸ். எஸ். ஆரில் சேர்ந்தது.

ஜாரின் ஆட்சியில் தாஜிக் மக்கள் எவ்வளவு பின்தங்கிய நிலையில் வைக்கப்பட்டிருந்தனர் என்பதை, மக்களில் ஒரு சதவீதத் தில் பாதி பேருக்கே எழுதப் படிக்கத் தெரியும் என்பதிலிருந்து அறியலாம். (1911இல் இந்தியாவில் எழுதப் படிக்க அறிந்தோர் 6 சதவீதம்) 1933 அளவில் எழுதப் படிக்க அறிந்தோர் அறுபது சதவீதம் (1931இல் இந்தியாவில் 8 சதவீதம்) 1936 அளவில் 3000 பள்ளிக்கூடங்களும் (அல்லது மக்கட் தொகையில் 500 பேருக்கு ஒரு பள்ளி), 5 உயர்நிலைக் கல்வி நிறுவனங்களும், முப்பதுக்கு மேற்பட்ட தொழில்நுட்பப் பள்ளிகளும் இருந்தன.

1939அளவில் 328,000 பள்ளி மாணவர்களும் (1914இல் 100 மாணவர்களே), 21 உயர்நிலைக் கல்வி நிலையங்களும் இருந்தன.

1924இல் விதைக்கப்பட்ட நிலப்பரப்பு 1,005,000 ஏக்கர்கள். 1936 அளவில் அது 1,626,000 ஏக்கர்களாயிற்று; முக்கியமான பயிர் பருத்தி. குடியானவ குடும்பங்களில் மிகப் பெரும்பாலானவை கூட்டுமுறை வேளாண்மையைக் கைக் கொண்டிருக்கின்றன. பருத்தி பயிரிடும் முறை பெரும்பாலும் யந்திரமயம் ஆக்கப்பட்டு விட்டது. உழுதல், விதைத்தல் முதலியவை பெரும்பாலும் டிராக்டர்களால் செய்யப்படுகின்றன. பாசன அபிவிருத்தி குறிப்பிடத்தக்கது.

> ''இங்கே, பருத்திப் பயிர் நிலத்தின் வளர்ச்சி, பாசனத்தைப் பொறுத்ததாக இருந்தது. 1929 இல் தாஜிகிஸ்தான் சரியாக 30 இலட்சம் ரூபிள்கள் பாசன அபிவிருத்திக்காக செலவிட்டது. 1930 இல் 1·2 கோடி ரூபிள்கள்; 1931 ஆம் ஆண்டு பட்ஜெட்டில் 6·1 கோடி ஒதுக்கப்பட்டது. அதாவது ஒரு குடிமகனுக்கு 50 ரூபிள்கள் வீதம். இந்தப் பணத்தில் பெரும் பகுதி மக்களுக்கு வரி விதித்ததால் கிடைத்தது அல்ல, ஆனல் சோவியத் யூனியனின் மத்திய அரசு வழங்கியது.''
>
> (ஜே. குனிட்ஸ், ''சாமர்கண்டில் சூரியோதயம்,'' 1935, பக். 235)

இந்நிலைக்கும், இந்தியாவிலோ பாசன வளர்ச்சி மெதுவாகவும், தள்ளாடியும், பழைய பாசன வேலைகள் பழுதாக விட்டுப் புறக்கணிக்கப்பட்டும் இருந்த நிலைக்கும் உள்ள வேற்றுமை குறிப்பிடத்தக்கது; மிக வரையறுக்கப்பட்ட பாசன வேலை மேற் கொள்ளப் பட்ட இடத்தில் (பாசன வசதி செய்யப்பட்ட நிலப்பரப்பு 1913-14 இல் 4·68 கோடி ஏக்கர்கள், 1933-34 இல் 5·05 கோடி ஏக்கராக ஏறியது.) 7 சதவீதம் அளவில் பெரும் லாபம் தரக் கூடிய மூலதன முதலீடாகவே மேற் கொள்ளப்பட்டது; அதனல் குடியானவ மக்களின் மீது அதிகச் சுமை ஏற்றப்பட்டது; விளைந்த நன்மைகள் ஏழைக் குடியானவர்களுக்கு நன்மை தரவில்லை.

தொழில் எங்  து தெரியாத இடத்தில் விரைவான தொழில் வளர்ச்சி ஏற்பட்டது தான் மிகப் பொருள் பொதிந்த தகவல். பழைய காலனிப் பிரதேசங்கள் விவசாயப் பகுதிகள் என்று ஒதுக்கப் பெற்று முன் போலவே சலுகை பெற்ற 'தலைநகர் வட்டாரத்திலேயே' புதிய தொழிலைத் தொடங்கும் கேள்விக்கே சோஷலிசத்தில் இடம் கிடையாது. மாறாக, முன்பு பின்தங்கியிருந்த பிரதேசங்களை அபிவிருத்தி செய்து புதிய தொழில் தொடங்க சுறுசுறுப்பாக முனைவர்.

''புரட்சி வரை, டாஜிகிஸ்தானில் எவ்விதத் தொழில் களுமே கிடையாது. இன்று அங்கு பதனம் செய்யும் தொழிற் சாலைகளும், பட்டுத் தொழிற்சாலைகளும் இருக்கின்றன. எல்லாமே சென்ற சில ஆண்டுகளில் கட்டப் பெற்றவை.... இப்போது பூர்த்தியாகும் வார்ஸாப்ஸ்க் மின்னுற்பத்தி நிலையம் நகரத்திலுள்ள தொழில்களுக்கு மின்சாரம் சப்ளை செய்யும்... ஆடைத் தொழிற்சாலைகள் முழு வேகத்துடன் ஸ்டாலினு பாத்தில் செயல்படுகின்றன. லெனினுபாத்தில் ஒரு பட்டு ஆலையும் சேர்ந்து இயங்குகிறது. ஒரு பெரிய துணி தொழிற் சாலை, ஒரு புலால் அகம், சாராயம் காய்ச்சும் தொழிற்சாலை, ஒரு சிமிண்ட் தொழிற்சாலை தொடங்க இந்த ஆண்டு கட்டிடம் கட்டத் தொடங்கப்பட்டுள்ளது. இரண்டு கல் பட்டறைகள் இயங்குகின்றன. இரண்டு எண்ணெய்த் தொழிற் சாலைகள், பத்து பருத்தி சுத்தி செய்யும் பட்டறைகள், பத்து அச்சகங்கள் முதலியன.''

(பிரிட்டனில் யு. எஸ். எஸ். ஆரின் தொழில் பிரதி நிதிகள், **மன்த்லி ரிவ்யூ;** அக்டோபர் 1936, பக். 552)

புரட்சிக்கு முன்பு டாஜிகிஸ்தானில் புதிய சாலைகள் இல்லை. முதல் ஐந்தாண்டு திட்டக் காலத்தில் டாஜிகிஸ்தான் 181 கிலோ மீட்டர் ரயில்வே கட்டியது: 12,000 கிலோமீட்டர் சமதளமிட்ட சாலைகள்; அதில் 6,000 கிலோ மீட்டர் நேர்த்தியான மோட்டார் சாலைகள்.

அல்லது, பொது ஆரோக்கிய நலத்துறையை எடுத்துக் கொள்ளுங்கள். டாஜிகிஸ்தானில் 1914 இல் 13 டாக்டர்கள் இருந்தார்கள்; 1939 இல் 440 டாக்டர்கள். 1914 இல் மொத்த மக்கட் தொகைக்கே 100 ஆஸ்பத்திரிப் படுக்கைகள் இருந்தன; 1939 இல் 3675. 1914 இல் தாய்மைப்பேறு படுக்கைகளே, மகப்பேறு மருத்துவ நிலையங்களிலும், ஆஸ்பத்திரிகளிலும் கிடையாது; 1937 இல் 240 இருந்தன; 1914 இல் தாய்சேய் நல விடுதிகளே இல்லை; 1937 இல் 36 இருந்தன.

சோஷலிஸத்தின் கீழ் டாஜிக் மக்களின் வளமான புது வாழ்க்கையின் பொருட் செறிவு டாஜிக் கூட்டுப் பண்ணை குடியானவரின் பின்வரும் பாட்டில் வெளியாகின்றது; இப்பாடல் ஜோஷீவா குனிட்ஸ் எழுதிய 'சமர்கண்டில் சூரியோதயம்' என்ற நூலில் மேற்கோள் காட்டப்பட்டுள்ளது.

எங்கள் வறண்ட வெளி உழப்படுவதை நான் காண்கையில், கட்டிமுடித்திட்ட அணைக்கட்டை நான் காண்கையில், இப் புதிய வாழ்வுக்காக என்னோடு உழைப்பவரைக் காண்கையில், என் மூச்சு

சுயேச்சையாகவும் வெம்மையாகவும் இருக்கிறது; பெற்ற பிள்ளையோடுள்ள தந்தை போல் நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். 'புது மனிதர்கள் அனைவரும் வாழ்க!' என்று கூக்குரலிடாமல் இருக்க என்னால் முடியவில்லை: வயல் நெடுகிலும் ஒரு யந்திரத்தை ஓட்டும் என் மகனைக் காண்கையில், வேரையும் மண்ணையும் ஊடுருவும் கலப்பையைக் காண்கையில், 'உழைப்போர் வாழ்க!' என்று கூக்குரலிடாமலிருக்க என்னால் முடியவில்லை; 'பழைய உலகம் மீண்டுவிடும்!' என்று நான் மிரட்டப்படுகையில் நான் தரையில் விழுந்து அச்சத்தால் உறைந்து போகிறேன். தோழனே, எனக்கு ஒரு துப்பாக்கி கொடு, எனக்குச் சில குண்டுகளைக் கொடு. நான் சண்டைக்குப் போகிறேன். என் நாட்டை, சோவியத் நாட்டை நான் காப்பேன்.

உஸ்பெகிஸ்தானைப் பார்ப்போம். இந்தக் குடியரசுகளிலேயே பெரியது; 55 இலட்ச மக்கட் தொகை கொண்டது. புரட்சிக்கு முன்பு 3·5 சதவீதமே இங்கு படித்தவர்கள்; 1932 அளவில் துவக்க பள்ளிகளில் 531,000 மாணவர்களும், இடைநிலைப் பள்ளிகளில் 130,000 மாணவர்களும், படிப்பின்மையை ஒழிப்பதற்காக ஏற்பட்ட கல்வி நிறுவனங்களில் 710,000 மாணவர்களும் படித்தார்கள். கூட்டு வேளாண்மையின் விரைவான வளர்ச்சியோடு தொழிலும் வளர்க்கப்பட்டது. 1913 இல் 2·69 கோடி ரூபிள்கள் ஆக்க அளவாயிருந்தது, 1936இல் 11·75 கோடி ஆயிற்று; மின்சார உற்பத்தி 1928 இல் 3·4 கோடி யூனிட்களிலிருந்து 1936 இல் 23·0 கோடியாக உயர்ந்தது. ஐம்பத்தொரு பருத்தி நூற்பு ஆலைகள், நிலக்கரி வெட்டி எடுத்தல், விவசாயக் கருவிகளை உற்பத்தி செய்ய ஒரு பெரிய தொழிற்சாலை (டாஷ்கண்டில்), ஒரு சிமெண்டுத் தொழிற்சாலை, ஒரு ரப்பர் சுரங்கம், ஒரு ஆக்ஸிஜன் தொழிற்சாலை, ஒரு காகித ஆலை, ஒரு தோல் தொழிற்சாலை, துணி ஆலைகள் இக்குடியரசின் தொழிற்துறையில் அடங்கும். 1914-1937 ஆண்டுகளுக்கு இடையில் டாக்டர்களின் எண்ணிக்கை 128 லிருந்து 2,185 ஆக ஏறியது. புரட்சிக்கு முன் இந்த நாட்டுக்குச் சொந்தமான அகர வரிசையே இல்லை; இந்தக் கஷ்டம் லத்தீன் கலந்த அகர வரிசையை உண்டாக்கியதன் வாயிலாகத் தீர்ந்தது. 1935 அளவில் குடியரசில் ஐந்து மொழிகளில் 118 செய்தித் தாள்கள் இருந்தன: பத்துகோடிப் பிரதிகளுக்கு மேல் விற்பனை.

இந்த பிரம்மாண்டமான மாறுதலுக்கான பணச்செலவு எப்படி சமாளிக்கப்பட்டது? பின் தங்கிய மக்களைச் சுரண்டும் ஏகாதிபத்தியக் காலனி முறைகளுக்கும் சோஷலிஸத்தின் கீழ் நாடுகள் சமமாக கூட்டுறவில் இருப்பதற்கும் உள்ள வேற்றுமை,

இந்த வினவிற்குக் கிடைக்கும் விடையால் வெளிப்படுகிறது. ஏகாதிபத்தியத்தின் கீழ், ஆளும் அரசுகளின் பணக்காரச் சுரண்டல் வர்க்கத்தினருக்காக, காலனி ஆதிக்கத்திலுள்ள பின் தங்கிய ஏழை மக்களிடமிருந்து ஆண்டுதோறும் கட்டாயக் காணிக்கை வசூலிக்கப்படுகிறது. சோஷலிஸத்தின் கீழ், பின் தங்கிய மக்களை விரைவாக முன்னேற்றும் பணிக்கான அதிகப்படிச் செலவை, மொத்த யு. எஸ். எஸ். ஆர். பட்ஜெட்டி லிருந்து அளவு பாராமல் நிதிப்பங்கு தருகிறார்கள்; இந்த மாறுதல் காலத்தில் அவை தருவதைவிட வாங்கிக் கொள்வது மிகுதியாக இருக்கும் (வாங்கிக் கொள்ளும் பணத்துக்கு வட்டிச் சுமையும் இல்லை); பின்வரும் அட்டவணை, 1927-28 இல் பல்வேறு சோவியத் குடியரசுகளில் தனிநபருக்கான பட்ஜட் செலவைக் காட்டுகிறது.

1927—28 இல் சோவியத் குடியரசுகளில் தனிநபருக்கான பட்ஜட் செலவு
(ரூபிள்களில்)

| நோக்கம் | ஆர்.எஸ்.எப். எஸ்.ஆர். | உக்ரேன் | வெள்ளை ரஷ்யா | டிரான்ஸ் காகஸியா | உஸ்பெகிஸ் தான் | துர்க்மெனிஸ் தான் | சராசரி |
|---|---|---|---|---|---|---|---|
| ரசு | 0·69 | 0·86 | 1·06 | 2·23 | 1·60 | 2·45 | 1·02 |
| பாருளாதார நிர்வாகத் துறைகள் | 1·08 | 0·88 | 1·57 | 1·13 | 1·04 | 1·46 | 1·06 |
| மூகப் பண்பாட்டுத் தேவைகள் | 2·16 | 1·92 | 2·57 | 3·59 | 2·48 | 3·84 | 2·20 |
| சப்பொருளாதாரத்திற்கு நிதி அளிப்பு | 1·65 | 1·62 | 2·37 | 4·95 | 3·39 | 8·90 | 1·91 |
| ள்நாட்டு பட்ஜட்களுக்கு மாற்றப்பட்டவை | 5·87 | 5·56 | 5·57 | 6·70 | 5·77 | 5·58 | 5·83 |
| ற்ற செலவுகள் | 0·04 | — | — | 0·53 | 0·20 | — | 0·06 |
| மொத்தம் | 11·49 | 10·84 | 13·14 | 19·13 | 14·48 | 22·23 | 12·08 |

அடிப்படையான எல்லா அம்சங்களிலும் மிக வலிய ரஷ்ய, உக்ரேனியக் குடியரசுகள் மற்ற குடியரசுகளைவிடப் பின்னால் விழுவதைக் காணலாம். பின்தங்கிய இனங்களுள்ள ராஜ்யங்களின் பண்பாட்டு, பொருளாதார முன்னேற்றத்தை விரைவு படுத்தும் பொறுப்பை யூனியன் ஏற்கிறது.

1939 ஆம் ஆண்டு சோவியத் யூனியன் பட்ஜட்டிலும் இதே நிலைமைதான் நீடிக்கிறது. யூனியன் முழுவதும், குடியரசுகளும் சேர்ந்த மொத்த பட்ஜட், முன் ஆண்டைவிட 12·4 சதவீத அதிகரிப்பைக் காட்டுகையில், கஜக்ஸ்தான் பட்ஜட் 20·1 சதவீத ஏற்றத்தையும், டுர்க்மினிஸ்தான் பட்ஜட் 22·4 ஏற்றத்தையும் காட்டுகின்றன. தன் பிரதேசங்களின் வருவாயில் 18·8 சதவீதத்தை ரஷ்ய சோவியத் குடியரசு பட்ஜட் பெற்றபோது, டாஜிக்ஸ்தான் பட்ஜட் 100 சதவீதம் பெற்றது. 1928-29—1939 ஆகிய பத்தாண்டுக் காலத்தில் சமூக, பண்பாட்டுத் துறைச் செலவுகள் சோவியத் யூனியன் முழுமைக்கும் இருபத்தைந்து மடங்கு ஏறியது; டுர்க்மினிஸ்தானுக்கு 29 சதவீதம், கக்ஷக்ஸ்தானுக்கு 31 சதவீதம் ஏறியது. தேசீயச் சிறுபான்மையோரின் புதிய தொழில் வளர்ச்சி விஷயத்திலும், அதே மாதிரி அக்கறை காட்டப்பட்டுள்ளது. இவ்வாறாக, கக்ஷக்ஸ்தானின் மொத்த பட்ஜட்டே 151·3 கோடி ரூபிள்கள்; 50·9 கோடி ரூபிள்களுக்குக் குறையாத தொகை. அதன் பிரதேசங்களில் பிரமாண்டமான பால்காஷ் செப்புருக்குத் தொழிற்சாலை நிறுவுவதற்காக யூனியன் நிதிகளிலிருந்து ஒதுக்கப்பட்டது; காரகண்டா யு. எஸ். எஸ். ஆரின் மூன்றாவது நிலக்கரித் தளமாகத் திகழ்கிறது; சின்கென்டிலும், ரிட்டர்ஸ்கிலும் உள்ள ஈயத்தொழிற்சாலைகள் யு. எஸ். எஸ். ஆரின் மொத்த ஈய உற்பத்தியில் முக்கால் பகுதியை அளிக்கின்றன.

இவ்வாறு மிக ஜாக்கிரதையாகப் புதிய தொழில்கள் சோஷலிஸத்தின் கீழ் தொடங்கப்படுகின்றன. மிகய்லாவ் தன் ‘சோவியத் பூகோளத்தில்’ சுட்டிக் காட்டியுள்ளபடி, ஜாரின் சாம்ராஜ்யத்தில் அதன் பரந்த பிரதேசங்களில், ஒரு சீரில்லாமல் தொழில்கள் தொடங்கப் பெற்றிருந்தன. ரஷ்யாவின் தொழிலுற்பத்தியில் சரிபாதி தற்போதைய மாஸ்கோ, லெனின் கிராட், ஐவனோவ் முதலிய பகுதிகளில் குவிந்திருந்தது. பொருளாதார வரை படத்தில் இப்பகுதி தனித் தீவாய்க் காட்சி அளித்தது. இங்குதான் தொழில் மூலதனம் தோன்றி வளர்ந்தது; இங்கிருந்து ஜாரின் இரும்புக்கரங்கள் நீண்டு பரந்த விவசாய நிலங்களையும், தொழில் நகரங்களுக்குத் தேவையான மூலப்பொருள்களையும் வசப்படுத்தி அடக்கி ஆண்டன. உற்பத்திப் பொருள்களும்,

மூலப் பொருள்களும் நீண்ட தூரத்தில் பிரிந்திருந்தன. சமூகத்தின் தொழிலாளர் சக்தி இவ்வாறு வீணாகியது; ஆனால், காலனிகள் செலவுகளை ஏற்க நேர்ந்தது; ''பருத்தி உற்பத்தி செய்த உஸ்பெக் நியாயமான விலை பெறவில்லை; நெய்த ஆடைக்கு அவன் அநியாய விலை கொடுத்தான்....பாழடைந்த கைத்தொழில்களில் பழகிய கைகள் மின்சாரத்தைவிட மலிவாக இருந்தன.''

திட்டமிடப்பட்ட சோஷலிஸ்டு உற்பத்தி முறை, கூட்டுறவு வளர்ச்சி, தேசீய இனங்களின், சமத்துவம் என்ற அடிப்படையில், தொழில்களைப் பரவலாகப் பங்கீடு செய்யும் புதிய கொள்கையை அறிமுகப்படுத்தியது.

> ''திட்டமிட்ட சோஷலிஸ்டு உற்பத்தி, பங்கீட்டு முறையால் மையத்திலிருந்து போட்டி ஏற்படாமல் தவிர்க்கப்பட்டது. பழைய தடுப்புச் சட்டங்களுக்குப் பதிலாக, தேசீய இன, புற மாவட்டங்களில் தொழிலையும், பண்பாட்டையும் வளர்க்கும் புதிய கொள்கை உருவாகியது.
>
> ''யு. எஸ். எஸ். ஆரில் வசிக்கும் எல்லா மக்களுக்கும் சம உரிமைகள் உள்ளன. ரஷ்யப் புரட்சியின் தொடக்க நாட்களிலேயே சட்டரீதியான சமத்துவம் எல்லாத் தேசீய இனங்களுக்கும் ஏற்படுத்தப்பட்டுவிட்டது. ஆனால், சமத்துவமின்மையை உண்மையாக ஒழிக்க ரஷ்யாவின் முன்னாள் காலனி மக்களின் பொருளாதாரப் பிற்போக்கை ஒழிக்க வேண்டியுள்ளது.''
>
> (என். மிகய்லாவ், ''சோவியத் பூகோளம்'' 1935, பக். 51.)

ஆகவே, 1923 இல் நடந்த ரஷ்யக் கம்யூனிஸ்ட் கட்சியின் பன்னிரண்டாவது காங்கிரஸில் அக்கொள்கை ஸ்டாலினால் அறிவிக்கப்பட்டது:

> பள்ளிகளையும், மொழியையும் அன்றி, ரஷ்யப் பாட்டாளி வர்க்கம் எல்லைப் பிரதேசங்களில், பண்பாட்டுத் துறையில் பின்தங்கியுள்ள குடியரசுகளில் தொழில் நிறுவனங்கள் ஏற்படுத்த ஒவ்வொரு முயற்சியையும் மேற்கொள்ள வேண்டும்; பின்தங்கியிருப்பதற்கு அவற்றின் சொந்தக் குறைகள் காரணம் அல்ல; முன்பு அவை மூலப்பொருள்களின் விளைநிலமாகக் கருதப்பட்டதே காரணம்.''
>
> (ஸ்டாலின், ரஷ்யக் கம்யூனிஸ்டுக் கட்சியின் பன்னிரண்டாவது காங்கிரஸுக்கு, ''நாட்டுப் பிரச்னை'' என்பது பற்றி அறிக்கை; ஏப்ரல், 1923)

இருக்கிறார்களா அல்லது எதிராக இருக்கிறார்களா என்று முடிவுசெய்துகொள்ள விட்டுவிடப்பட வேண்டுமென்று யோசனை கூறினர்.

மீண்டும் "பெரிய சமரசவாதியான" ஹென்றி கிளேயே இச்சங்கடத்திலிருந்து மீள வழிகாட்டினர். கலிபோர்னியா சுயேச்சை ராஜ்யமாகச் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும். மெக்ஸிகோ அளித்த மற்றப் பிரதேசங்கள் உட்டா (Utah), நியூ மெக்ஸிகோ என இரண்டாகப் பிரிக்கப்பட வேண்டும். இவை ஒவ்வொன்றும் பொதுஜன ஆதிபத்திய அடிப்படையில் தமது அந்தஸ்தை நிர்ணயித்துக்கொள்ள வேண்டும். இதுதான் கிளே கூறிய ஏற்பாடு. தென் பகுதியைத் திருப்தி செய்யும் நோக்கத்துடன் கொண்டுவரப்பட்ட கிளே மசோதா, ஓடிப்போன அடிமைபற்றிய கடுமையான சட்டமாகும். வடபகுதிக்குத் தப்பியோடிச் செல்லும் எந்த அடிமையையும் உடனே தேடிப்பிடித்து அவன் எஜமானனிடம் ஒப்படைத்தாகவேண்டும் என்பதே இம்மசோதாவின் நோக்கமாகும்.

1850-ஆம் வருஷத்திய இந்தச் சமரச மசோதாமீது நடந்த விவாதம் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். தென் பகுதியின் சார்பில், தொண்டு கிழவரான கல்ஹோன் (Calhoun) பேசுகையில், புதிய பிரதேசங்களில் அடிமைத்தனத்துக்கு உத்தரவாதம் அளிக்கப்படவில்லை என்பதற்காக, இம்மசோதாவை எதிர்த்தார். அடிமைகள் தனிப்பட்டவர் சொத்து. அதனால் ராஜ்ய, பிரதேச சட்டங்களுக்கு அவர்கள் உட்பட்டவரேயன்றி, யூனியனின் சட்டங்களுக்கு உட்பட்டவர் அல்ல; எனவே, அப்பிரதேசங்களுக்கு அடிமைகளைக் கொண்டு செல்லப்படுவதைத் தடுக்கக் காங்கிரசுக்கு உரிமை இல்லை என்று அவர் வாதித்தார்.

வட பகுதியினரும் இந்தச் சமரசம்பற்றிக் கவலை கொண்டனர். குறிப்பாக அவர்கள் ஓடிப்போகும் அடிமை பற்றிய சட்டத்தை ஆட்சேபித்தனர். ஆனால், அவர்களுடைய மாபெரும் பிரசங்கியான, மாசச்சூசட்சைச் சேர்ந்த டேனியல் வெப்ஸ்டர், எப்பாடுபட்டாவது யூனியனைக் காப்பாற்றுவதற்காக, மகத்தான பிரசங்கத்தைச் செய்து கிளேக்கு ஆதரவளிக்க முன்வந்தார். இறுதியாக,

இரண்டாம் பாகம்

# இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி

## அத்தியாயம்-4. இந்திய வறுமையின் இரகசியம்

1. இந்தியாவைப் பற்றி மார்க்ஸ்
2. இந்தியக் கிராமப் பொருளாதாரச் சிதைவு
3. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் நாசவேலை
4. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் ''சீரமைப்புப் பணி''

## அத்தியாயம்-5. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி —பழைய அடிப்படை

1. இந்தியாவிலிருந்து கொள்ளை
2. இந்தியாவும் தொழிற் புரட்சியும்
3. தொழிற் சிதைவு

## அத்தியாயம்-6. இந்தியாவில் நவீன ஏகாதிபத்தியம்

1. நிதி-மூலதனத்துக்கு மாற்றம்
2. நிதி-மூலதனமும் இந்தியாவும்
3. தொழில் மயமாக்கும் பிரச்னை
4. தொழில் மயமாக்குவதற்கு முட்டுக்கட்டைகள்
5. போருக்கு முந்தின இருபதாண்டுகளின் ஐந்தொகை
6. நிதி-மூலதனத்தின் நசுக்குப்பிடி
7. நிதி-மூலதனமும் இரண்டாம் உலகப் போரும்
8. நிதி-மூலதனமும் புதிய அரசியல் அமைப்புத் திட்டமும்
9. இந்தியாவில் ஏகாதிபத்தியத்தின் விளைவு

அத்தியாயம் 4

# இந்திய வறுமையின் ரகசியம்

''இன்னுமொரு வர்க்கம், பொதுவான வர்க்கம், உண்டு.
அதற்கு எவ்விதத் தகுதியுமில்லை, இருப்பதாய்ப் பாசாங்கு செய்வதுமில்லை;
விலாங்கு மீனை விலாங்கு மீனென அறியும் சுகவாசிகள்:
ஆனால், தோலுரித்தலால் எவ்வளவு துன்பகரமாக இருக்கும் என்பதைச் சற்றும் சிந்திக்காதவர்கள்;
விலாங்குகள் தோலுரி படவே தோன்றியவை என்பதையும் இந்தியர்கள் பணம் கக்கவே பிறந்தவர்கள் என்பதையும் கண்டுகொண்ட நிறைவு கொண்டவர்கள்;
ஆகையால், அவர்கள் பெரியவர்களாகவும் உயர்ந்தவர்களாகவும் ஆகும்போது,
அவர்கள் மனமார வெறுக்கும் சொல், ''ஏன்?''

'இந்தியா' மூன்று காண்டங்களில் ஒரு காவியம்; அரசாங்கச் சேவையிலுள்ள ஒரு வங்காள இளைஞர், லண்டன், 1834.

இந்தியாவில் ஏகாதிபத்தியத்தின் பங்கைப் புரிந்துகொள்ள வேண்டுமானால், சில வரலாற்றுப் பின்னணியைக் கவனத்தில் கொள்ள வேண்டியது அவசியம்.

சமீப ஆண்டுகளில், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியில் உண்மை வரலாற்றை அரசாங்க தஸ்தாவேஜுகளிலிருந்து வெளியில் கொண்டு வரும் முயற்சி தொடங்கியுள்ளது. ஆனால், இம்பீரியல் கெஜட்டியர் ஆப் இண்டியாவின் ஆசிரியர் சர் வில்லியம் ஹண்டர் 1897இல் அறிவித்தது இப்போதும் மெய்யாகவே இருக்கிறது:

''பிரிட்டிஷ் ஆட்சியின் கீழுள்ள இந்தியாவின் உண்மையான வரலாற்றை—தொலைவிலுள்ள நூறு பதிவுரு அலுவலகங்களில் தேடித் திரட்டி ஒட்டுப் போட்டுத்தான் எழுத வேண்டியுள்ளது? அது ஒரு தனியாளின் சக்திக்கு அப்பாற்பட்ட வேலை; ஒரு தனியாளின் பெருஞ்செல்வத்தாலும் சாதிக்க முடியாத வேலை.''

போகும் நடையும் நாட்டுப்புறப் போக்கும் கொண்ட இவர், பாமர மக்களின் அன்புக்குப் பாத்திரமானவராக விளங்கினார். தாமாகவே படித்துக் கல்வி பயின்ற இவருக்கு வாழ்க்கையில் முன்னேற வேண்டுமென்ற ஆர்வமும் நிறைய இருந்தது. வாலிபத்திலேயே இல்லினாய்ஸுக்குக் குடியேறிய லிங்கன் சீரான வருவாயுள்ள வக்கீலாகத் தொழில் நடத்திவந்தார். ஒரு முறை காங்கிரசுக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தார். தம் சொந்த ராஜ்யத்தில் மக்களின் ஆதரவைப் பெற்றவராக லிங்கன் இருந்தபோதிலும், 1859-ஆம் ஆண்டில், 'சின்ன அரக்கன்' என்று அழைக்கப்பட்ட ஸ்டீபன் ஏ. டக்ளசுடன் அடிமைத்தனம்பற்றி இவர் சொற் போர்கள் நிகழ்த்தும் வரையில், தேசமுழுதுக்கும் இவரைத் தெரியாது. இருவரும் இல்லினாய்ஸிலிருந்து அமெரிக்க ஸெனட் தேர்தலுக்குப் போட்டியிட்டனர். லிங்கன் குடியரசுக் கட்சியின் சார்பிலும், டக்ளஸ் ஜனநாயகக் கட்சியின் சார்பிலும் போட்டியிட்டனர்.

இல்லினாய்ஸ் தொகுதியில் செனெட்டுக்கு டக்ளஸ் சொற்ப அதிக வோட்டுகளால், லிங்கனைத் தோல்வியுறச் செய்து, தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால், இதைவிடப் பெரிய போட்டி பின்னர் ஏற்படவிருந்தது. "இந்த அரசாங்கம் பாதி அடிமையாகவும், பாதி சுதந்திரமாகவும் இருந்தால் நிலைத்திருக்க முடியாது. அது ஒன்று, முழுவதும் அடிமையாகவோ அல்லது முழுதும் சுதந்திரமாகவோ ஆகிவிடும்" என்று தீர்க்கதரிசனத்துடன் லிங்கன் கூறிய வார்த்தைகளால், வட பகுதி முழுவதிலும் மக்களின் மதிப்பும் ஆதரவும் அவருக்குக் கிடைத்தன.

1860-இல் தேர்தல் பிரசாரம் நடந்துவந்த சமயத்தில், இரு தரப்பிலும் ஆத்திரம் உச்ச நிலையை அடைந்தது. ஜனநாயகவாதியும், சாதாரணத் திறமை படைத்தவருமான ஜனாதிபதி புக்காரைல், அடிமைத்தனப் பிரச்னைபற்றிய நெருக்கடியில் சரியான நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியவில்லை. எனவே, மீண்டும் இப்பதவிக்கு அபேட்சகராக இவர் பெயர் கருதப்படவே இல்லை. தென் பகுதியின் மத்தியில், தென் கரோலினாவிலுள்ள சார்லஸ் டவுனில் கூடிய ஜனநாயகக் கட்சியினர், ஸ்டீபன் ஏ. டக்ளஸை ஜனாதிபதி பதவிக்கு அபேட்சகராக நியமிப்பதன் மூலம் ஐக்கிய

முதலாளித்துவம் முளைத்த மர்மத்தின் சாரமான பகுதியை நெருங்குகின்றோம்; இன்று வரை அது கையாண்டுவரும் தந்திர முறைகளின் அடிப்படை அமிசங்களை நெருங்குகிறோம்.

இந்தத் துறையில் அரசுச் சார்புப் பொய்மைகளும், பரிந் துரைப்போரும் இடம் பெறுவதைக் காணலாம். பூர்ஷ்வா நாகரிகத்தின் உண்மையான உருவத்தை நிர்வாணமாக வெளிப் படுத்தும் வரலாற்றின் மிகச் சாதாரண உண்மைகள் மிக விஸ்தார மாய் மூடிமறைக்கப்பட்டு, ஆங்கிலேய மக்களின் பொது அறிவுக்கு எட்டாதவாறு அமுக்கி வைக்கப்பட்டுள்ளன; ஓர் அயர்லாந்துவாசி அல்லது இந்தியனின் எரிக்கும் நினைவுகளில் மட்டும் அவை நிலை பெற்றுள்ளன. ஆழ்ந்த வரலாறு பூர்வமான விளக்கத்திற்குப் பதிலாகச் செய்தித் தாள்களிலும் மேடைகளிலும் பள்ளிச் சிறுவர்க்கான கிப்ளிங் மாதிரிக் கட்டுக்கதை பேசுகிறார்கள். ராக்பெல்லரின் ஆயுட்காலச் சாதனைபோல மிகக் கடுமையாகவும் பிடிவாதமாகவும் சேகரித்த சாம்ராஜ்யத்தையும், மரபான வர லாற்றில் 'ஞாபகமறதி நிலையில்' நேர்ந்த ஒரு 'விபத்து'போல் வருணிக்கிறார்கள். 'பிரிட்டிஷ் அரச மகுடத்தின் ஒளிமிக்கமணி' என்று கவர்ச்சிகரமாகப் பேசுகிறார்களேயன்றி, இந்திய மக்களின் பயங்கரமான, வெட்ககரமானநிலை பற்றி ஆராய்வதில்லை; அவ் வாறு ஆராய்ந்தாலே, ஆளுகின்ற எந்த அரசையும் குற்றவாளிக் கூண்டில் ஏற்றிவிடும்.

இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் உள்ள உறவுகள் பற்றின பதிவுருக்களில்தான் இந்தப் பொய்மை மிகச் சிறப்பாகப் புலப் படுகிறது.

நவீன காலத்தில் இந்தப் பொய்மையின் போக்கு அதிகமாகி யுள்ளது என்பதையும் கவனிக்க வேண்டும். ஒரு வெல்லிங்க்டனும், ஒரு பர்க்கும், ஒரு கிளைவும், ஒரு ஹேஸ்டிங்சும், அல்லது ஒரு ஆடம்ஸ்மித்தும் தீர்வை வசூல் பற்றியும், கொள்ளைபற்றியும், சூறை பற்றியும், மிக வெளிப்படையாகப் பேசினார்கள். ஒரு ஸாலிஸ்பரி கூட இந்தியாவின் 'ரத்தத்தை வடிக்க' வேண்டுமென்று பேசினார். ஆனால் இன்று அதிகாரத்தின் அஸ்திவாரம் ஆட்டம் கண்டு விட் டது. நவீன ஆட்சியாளர்கள் நோயுற்ற உதாரகுணம் மணக்கும் மொழியில் பேசுகிறார்கள்; எனினும் அதற்குப் பின்னால் சுரண்ட லின் நிஜமான அடிப்படையும் விரிவாக அடக்குமுறை யந்திரமும் மறைந்து கிடக்கின்றன.

அண்மைக் காலத்து வரலாற்று ஆசிரியர்கள் புத்தகங்களின் சுவாரசியமான ஓர் அட்டவணைக் குறிப்பு எழுதியிருக்கிறார்கள்; சென்ற அரை நூற்றாண்டில் ஆட்சியாளர்கள் 'வெளிப்படை

யாகப் பேசுவதை'க் கைவிட்டு 'மௌனமான தணிக்கை முறைக்கு' மாறியிருப்பதாய்க் குறிப்பிட்டு கூறுகிறார்கள்:

> ''பிரிட்டிஷ் இந்தியாவின் பொது வரலாறுகளைப் பொருத்தமட்டில் ஒரு நூற்றாண்டு அல்லது அதற்கு முன்பு எழுதப்பட்டவை—ஒருவிதிவிலக்கு கூட இல்லாமல் எல்லாமே, ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்டவற்றைவிட உண்மையானதாகவும், முழுமை வாய்ந்ததாகவும், ரசமான தாகவும் உள்ளன. யாராவது ராஜத்துரோகமான, உண்மை யான அடிப்படைக் கேள்விகள் (உதாரணமாக: இந்தியாவி லிருக்க உங்களுக்கு என்னதான் உரிமை இருக்கிறது?)கேட்பார் கள் என்று ஒருவரும் கனவுகூடக் காணாத காலத்தில், பிரிட்டி ஷாரைத் தவிர வேறு பொது மக்களைப்பற்றி நினைக்காதபோது விறுவிறுப்பாகவும், புத்திசாலித்தனமாகவும் விமரிசனம் செய்யப்பட்டது. அரசியல் நெருக்கடிகளைப் பொருட்படுத்தா மல் தீர்ப்பு வழங்கப்பட்டது. சமீப ஆண்டுகளில் எல்லா இந்தியர் பிரச்னைகளும் நிர்வாகத்தினரின் கண்ணோட்டத்தில் தான் அதிகமாகவும், ஐயமின்றி இயற்கையாகவும் அணுகப் படுகின்றன; 'இதனால் எளிதாகவும், அமைதியாகவும் ஆட்சி புரிய முடியுமா?' இன்றைய ஆசிரியர் கூறுவதைக் கேட்க, அவருடைய சொந்த மக்கள் அல்லாமல் வெளியுலகிலும் மக்கள் உள்ளனர்; அவர்கள் கூர்ந்து கேட்கிறார்கள்; அவருடைய மக்களைப் போலவே அவர்களும் எளிதில் உணர்ச்சி வசப்பட்டு, மனம் புண்ணடைகிறார்கள். 'நமக்குச் சாதகமில்லாதவன் நமக்கு விரோதமானவன்' மக்கள் இவ் வாறு ஒட்டுக் கேட்கிறார்கள். ஒளிந்து கொண்டும் கேட்கிறார் கள் என்று தெரிந்திருப்பதாலேயே அது ஒரு நிரந்தரமான மௌனத் தணிக்கையாகவும் செயல்படுகிறது; அது பிரிட்டிஷ் இந்திய வரலாற்றை தற்காலப் புலமையின் மிக மோசமான ஒட்டு வேலையாக்கி விட்டது.'
>
> (இ. தாம்ப்ஸன், ஜி. டி. கார்ராட், ''இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் எழுச்சியும் நிறைவும்'' 1934, பக். 665.)

நம் இப்போதைய நோக்கத்திற்கு இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியைக் கால வரிசையில் விவரமாகப் பார்க்க வேண்டிய தேவை இல்லை; பயனுள்ள முறையில் அதை எழுதத் தனிநூலே எழுத வேண்டும். வரிசையான நிகழ்ச்சித் தொகுப்பை இப்போதுள்ள எந்தப் புத்தகத்திலும் படித்துக் கொள்ளலாம். இப்போதைய நிலைமைக்கும் அதன் பிரச்னைகளுக்கும் அடிப்படை

யாகவுள்ள சில இறுதியான வளர்ச்சி விசைகளை வெளிப்படுத்து வதே இப்போது நம் நோக்கம்.

இறந்த காலம் என்பது முடிந்து போனதே. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி பற்றின உண்மை வரலாறு எழுதப்பட்டால் அது புகழ் படைத்த வரலாறாக இருக்க முடியாது. ஆங்கிலேயர்கள் ஏகாதிபத்தியத்தின் தவறான கண்ணோட்டத்திலிருந்து விடுபட வேண்டுமானால் அந்த வரலாற்றின் உண்மை விவரங்களைக் கட்டாயம் அறிய வேண்டும் (சாதாரணமாக அவை பள்ளி நூல்களில் மறைக்கப்படுகின்றன). இந்திய விடுதலைக்காகத் தளர்வின்றி போராடுவதற்காகத் தங்களை ஆயத்தம் செய்து கொள்ள இந்தியர்களும் அவற்றைக் கட்டாயம் அறிய வேண்டும். சென்ற காலம் பற்றியே நீள எழுதுவதால் பயனில்லை; சென்ற காலத்து அநியாயங்களையும், குறைபாடுகளையும் ஒப்பிக்கும் தேசீயப் பிரசாரத்தைத் தழுவிக் எழுதுவதாலும் பயனில்லை. இறந்த காலத்து அடக்குமுறையாளரும், அடக்கி வைக்கப்பட்ட வரும் நீண்ட காலத்துக்கு முன்பே இறந்து விட்டனர்; ஒரு கவர்னர் ஜெனரலின் பிரபலமான சொற்களில் இந்திய நெசவாளர் களின் எலும்புகள் 1834 இல் இந்திய வெளிகளை வெளுத்துக் கொண்டிருந்தன என்றால், இன்று கவர்னர் ஜெனரலின் எலும்புகள் குடும்பக் கல்லறையில் அதைவிட நன்றாக இருந்துவிடவில்லை. இன்று கனலுமிழும் கேள்வி இன்றைய அடக்குமுறையும் விடுதலைப் பாதையுமே நிகழ் காலத்தில் இன்றும் சீவனோடுள்ள இயக்க சக்திகளை வெளிகாட்டவே நாம் இறந்த காலத்தைக் கவனிக்கிறோம்.

இந்திய வரலாற்றுக்கு இந்தச் சக்தி வாய்ந்த அணுகு முறையை முதன் முதலில் கொண்டு வந்தவர் பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்பும் பின்பும் இந்திய வளர்ச்சியின் சமூக உந்து விசைகள் மீது விஞ்ஞான முறையின் ஒளி வெள்ளத்தைப் பாய்ச்சியவர் பிரிட்டிஷ் ஆட்சியின் நாசகரமான பங்கையும் அதைப் போன்றே. எதிர் காலத்துக்கு அதன் புத்துயிருட்டிப் புரட்சிப்படுத்தும் பொருட் செறிவையும் வெளிப்படுத்தியவர், நவீன சோஷலிஸத்தின் நிறுவனரான கார்ல் மார்க்ஸ்—பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுவில் அவர் இந்தப் பணியை, மனித வர்க்கத்தின் எதிர்காலத் திற்கான மிக முக்கியமான பணி ஒன்றைப் பூர்த்தி செய்தார். அரை நூற்றாண்டுக்கு மேல் அது புதைந்து கிடந்து யாருக்கும் தெரியாமலிருந்தது; அப்போது அவருடைய பணியின் முக்கிய மான வேறு துறைகள் உலகெங்கும் தெரிந்திருந்தன. சென்ற கால் நூற்றாண்டாகத்தான் அவருடைய இப் பணியின் உள்ளுறைவு மாணவர்களைப் பெரிதும் கவர்ந்து இந்தியப் பிரச்னைகளுக்கான

கருத்து மீது பாதிப்பு ஏற்படுத்தி வருகிறது. இன்றைய நவீன வரலாற்று ஆராய்ச்சி அவற்றின் அணுகுமுறையின் முக்கியமான நோக்கை உறுதிப்படுத்துகிறது.

## 1. இந்தியாவைப் பற்றி மார்க்ஸ்

பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன் ஒரு தலைசிறந்த சோஷலிஸ்டு எழுத்தாளர் கூடப் பின்வரும் கருத்தை வெளிட்டார்: ''மார்க்ஸிஸத்தின் நிலையான கருத்துக்களை வைத்து இந்தியப் பிரச்னையை அறிந்து கொள்ளச் செய்யும் முயற்சி மேதைத்தனத்தின் வெளியீடாக இருக்க முடியும்: ஆனால் அது சோஷலிஸத்தின் முன்னேற்றத்திற்கு அறிவு பூர்வமான மெய்யான உதவியாக இருக்க முடியாது.'' (எச். லாஸ்கி, 'கம்யூனிஸம்', 1927, பக். 194)

மார்க்ஸ் தன்னுடைய முக்கியமான நினைவையும் பணியையும் இந்தியாவுக்காக ஈடுபடுத்தினார் என்பதை அறியாத குறை மேற்கு ஐரோப்பிய சோஷலிஸச் சிந்தனையில் உண்டு. உண்மையில் இந்தியாவைப் பற்றின மார்க்ஸின் பிரபலமான கட்டுரைகள் 1953இல் தொடர்ச்சியாக எழுதப்பட்டன; அவை அவருடைய எழுத்துக்களில் வளமானவை என்பதுடன் அவர் கையாண்ட பிரச்னைகள் பற்றின புதிய சிந்தனைக்கு தொடக்கப் புள்ளியாகக் கொள்ளலாம். மார்க்ஸின் எழுத்துக்களை ஊன்றிப் படித்தால் அவர் ஆசியப் பொருளாதாரம் குறிப்பாக, இந்திய சீனப் பொருளாதாரம் பற்றின சிறப்பான பிரச்னைகள், அவற்றின் மீது ஐரோப்பாவின் முதலாளித்துவம் ஏற்படுத்திய பாதிப்பு எதிர்கால உலக முன்னேற்றத்திற்கும், இந்திய சீன மக்களின் விடுதலைக்காகவும் செய்யப்பட வேண்டிய முடிவுகள் ஆகிய பொருள்கள் மீது இடையீடு இல்லாத கவனம் செலுத்தி வந்ததைக் காணலாம். தம் மூலதனத்தில் சுமார் ஐம்பது முறைகளும், மார்க்ஸ்-எங்கெல்ஸ் கடிதப் போக்குவரத்தில் இன்னும் அதிக முறைகளும் குறிப்பிட்டுள்ளதிலிருந்து அவர் இவ்விஷயமாக எவ்வளவு ஆழ்ந்த கவனம் செலுத்தினார் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

'கம்யூனிஸ்டு அறிக்கை' வெளியானதும் (முதலாளித்துவ உற்பத்திப் பெருக்கத்திற்கு இந்திய சீன மார்க்கெட்டுகள் இழைத்ததன் முக்கியத்துவத்தை இதில் மார்க்ஸும் எங்கெல்ஸும் வற்புறுத்தி எழுதியுள்ளனர்) 1848 ஆம் ஆண்டுப் புரட்சி அலை வீழ்ந்ததும், இந்த வீழ்ச்சிக்குக் காரணம் என்ன என்பதில் மார்க்ஸ் கவனம் செலுத்தினார்; மற்ற எந்தக் காரணத்தையும் விட ஐரோப்பாவுக்கு வெளியே ஆசியாவிலும், ஆஸ்திரேலியா

பிலும், கலிபோர்னியாவிலும் முதலாளித்துவம் புதிதாக விரிந்து பரவியுள்ளதே முக்கியமான காரணம் என்று கண்டார். 1852ஆம் ஆண்டிலேயே எங்கெல்ஸின் ஒரு கடிதத்தில் இத்தகைய சிந்தனை இடம் பெற்றுள்ளது. (மார்க்ஸுக்கு எங்கெல்ஸ் எழுதிய கடிதம்; ஆகஸ்டு 21, 1852);1852 இல் எழுதப்பட்ட ஒரு கடிதத்தில் இந்தக் கருத்து இன்னும் கூர்மையாகவே வெளிப்பட்டது.

> ''பூர்ஷ்வா சமுதாயம் இரண்டாவது தடவை தனது பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்து வருவதை நாம் மறுக்க முடியாது; முதல் பதினாறும் நூற்றாண்டு அதற்குப் புத்துயிர் அளித்ததைப் போலவே கட்டாயம் சாவு மணியும் அடிக்கும் என்று நான் நம்புகிறேன். உலகச் சந்தையை ஏற்படுத்துவதே பூர்ஷ்வா சமுதாயத்தின் குறிப்பான முயற்சி; முக்கியமான ஓர் எல்லையளவானது உலகச் சந்தையை உண்டாக்கி அந்த அடிப்படையில் உற்பத்தி செய்யவேண்டும் என்பதே அதன் நோக்கம். உலகம் உருண்டையாக இருப்பதால் கலிபோர்னியாவையும் ஆஸ்திரேலியாவையும் காலனி நாடுகளாக்கி சீனுவுக்கும் ஜப்பானுக்கும் வழி திறந்ததோடு உலகச் சந்தை முயற்சி பூர்த்தியாகிவிட்டாற் போலத் தோன்றுகிறது. இப்போது நமக்குக் கனமான பிரச்னை இதுவே: கண்டத்தில் புரட்சி நெருங்கிக் கொண்டிருக்கிறது. தொடக்க முதலே அது சோஷலிஸத் தன்மை வாய்ந்ததாக இருக்கும். பூர்ஷ்வா சமுதாயம் மிகப் பரந்த அளவில் இயங்கிக் கொண்டிருப்பதால், இந்தச் சிறிய மூலையில் தோன்றும் புரட்சி நசுக்கப்படுவதைத் தவிர்க்க முடியாதல்லவா?''
>
> (மார்க்ஸ் எங்கெல்ஸுக்கு 1858, அக்டோபர் 8 இல் எழுதிய கடிதம்)

ஐரோப்பாவில் முதலாளித்துவ வளர்ச்சிக்கும் சோஷலிஸ்டுப் புரட்சிக்கும் முதலாளித்துவம் ஐரோப்பாவிற்கு வெளியே பரவியதால் வழி ஏற்பட்டது என்பதைப் புரிந்து கொண்டிருந்ததில் தான் மார்க்ஸ் ஆயிரத்து எண்ணூற்றைம்பதுகளில் ஏற்றுக் கொண்ட மூலச் சிந்தனை இருந்தது; ஐரோப்பிய சோஷலிஸத்தின் முக்கியமான சிந்தனையாளர்கள் அண்மைக் காலத்தில்தான் இதை மெதுவாகப் புரிந்து கொள்ளத் தொடங்கியுள்ளனர்.

1853 இல் கிழக்கு இந்தியக் கம்பெனியின் உரிமைப் பத்திரம் உறுதியாகப் புதுப்பிக்கப்படுவதற்காகப் பார்லிமெண்டில் வைக்கப்பட்டபோது, மார்க்ஸ் நியூயார்க் டெய்லி டிரிப்யூன் ஏட்டுக்காக எட்டுக் கட்டுரைகள் தொடர்ச்சியாக எழுதினர். இவற்றையும், மூலதனத்தையும், கடிதப் போக்குவரத்தில் குறிப்

பிடப்பட்டுள்ளவற்றையும் சேர்த்தால் இந்தியாவைப் பற்றி மார்க்ஸின் கருத்துக் கருவாகும்.

## 2. இந்திய கிராமப் பொருளாதாரச் சிதைவு

முதலாளித்துவத்தின் பாதிப்பால் முதன் முறையாகக் குலேக்கப்பெற்ற ஆசியப் பொருளாதாரத்தின் தன்மைகளிலிருந்து மார்க்ஸின் பகுத்து ஆய்தல் தொடங்குகிறது. 1853 ஜூனில் எங்கெல்ஸ் மார்க்ஸுக்கு எழுதினர்: ''கீழை நாடுகள் அனைத்துக்கும் திறவுகோல் நிலத்தில் தனியார் உடைமை இல்லாமையே.'' இந்த நிலத்தில் தனியார் உடைமை இல்லாமைக்கும் ஐரோப்பியப் பொருளாதாரத்தின் பண்டைக் காலத் தொடக்க நிலைக்கும் இடையில் அடிப்படை வித்தியாசம் ஒன்றும் இல்லை பின்னால் ஏற்பட்ட மாறுதலில்தான் வித்தியாசம் உள்ளது.

> பொதுவுடைமையின் பழங்கால வடிவம் தெளிவான ஒரு ஸ்லோவோனியா அல்லது ரஷ்யாவுக்கே உரிய வடிவம் என்பதாக அபத்தமானதொரு ஊகம் அண்மைக் காலத்தில் நடமாடி வருகிறது. ரோமானியர்கள், டியூடான்கள், கெல்டுகளுக்கு இடையில் அந்தப் பழைய வடிவம் நிலவி வந்ததை நாம் நிரூபிக்க முடியும்: அதற்கான பல சான்றுகள் இந்தியாவில் இன்றும் ஓரளவு பாழடைந்த நிலையில் இருப்பினும் காணக் கிடைக்கின்றன. ஆசியச் சமூகவுடைமையின், குறிப்பாக, இந்தியச் சமூகவுடைமையின் பல வடிவங்களை ஆழ்ந்து ஆராய்ந்தால், பழங்காலப் பொதுடைமையின் பலவித வடிவங்களிலிருந்து அதன் பலவிதச் சிதைவு வடிவங்கள் தோன்றியுள்ளதைக் காணலாம். இவ்வாருக, உதாரணமாக ரோமானிய, டியூடானியத் தனியார் உடைமையின் பலவிதத் தொடக்க கால வடிவங்களுக்கு இந்திய பொதுவுடைமையின் பலவித வடிவங்கள் தோற்றுவாய் என்பதைக் காணலாம்.''
>
> (மார்க்ஸ்: 'அரசியல் பொருளியலின் ஆய்வுரை, —முதல் அத்தியாயம்.)

அவ்வாருனல் கீழை நாடுகளின் பழங்காலப் பொதுவுடமை, மேலை நாடுகளில் உள்ளதைப் போன்ற நிலவுடமையாகவும் நிலப் பிரபுத்துவ ஆட்சிமுறையாகவும் ஏன் உருக்கொள்ளவில்லை? இந்தக் கேள்வியின் விடை வெட்பதட்ப நிலையிலும் பூகோள அமைப்பு நிலைகளிலும் காணலாம் என்று எங்கெல்ஸ் யோசனை கூறுகிருர்:

> ''கிழக்கு நாடுகளைச் சேர்ந்தோர் நிலவுடமை நிலப்பிரபுத்துவ ஆட்சி முறையை அடையாதது ஏன்? முக்கியமாக,

வெட்பதட்ப நிலையும், அதனோடு மண்ணின் அமைப்பு நிலையும், குறிப்பாக, சஹாராவிலிருந்து அரேபியா, பெர்சியா, இந்தியா, டார்டாரி வழியாக உயரமான ஆசிய மேட்டு நிலங்கள் வரை பரந்துள்ள பெரும் பாலைவனப் பகுதியும்தான் காரணம் என்று நான் எண்ணுகிறேன். இங்கே பயிரிடுவதற்குச் செயற்கைப் பாசன முறை முதல் தேவை; இதுவே 'கம்யூன்கள்' அல்லது மாகாணங்கள் அல்லது மத்திய அரசின் பொறுப்பு.''

(எங்கெல்ஸ், 1853, ஜூன் 6 இல் மார்க்ஸுக்கு எழுதிய கடிதம்.)

வேளாண்மை நிலைமைகள் நிலத்தில் தனியார் உடைமை ஏற்பட வசதியாக இல்லை; ஆகவே, கீழ் மட்டத்தில் கிராம சமுதாயத்திலிருந்த பழங்காலக் கம்யூனிஸத்தின் எச்சத்திலிருந்தும், மேல்மட்டத்திலிருந்த பாசனத்துறையையும் பொதுத்துறையையும் நிர்வகித்த கொடுங்கோல் மத்திய அரசிலிருந்தும், போர் கொள்ளையிலிருந்தும் எடுத்துக்காட்டான 'ஆசியப் பொருளாதாரம்' தோன்றியது.

எனவே, கிராம ஆட்சி முறையை புரிந்து கொண்டால்தான் இந்தியாவைப் புரிந்து கொள்ள முடியும். கிராம ஆட்சி முறையின் இலக்கிய வருணனை 'மூலதனத்தில்' இருக்கிறது.

''அந்தச் சிறிய, மிகப் பழமை வாய்ந்த சமூகங்கள் அவற்றுள் சில இன்று வரை நீடிக்கின்றன—நிலம் எல்லோருக்கும் பொதுவுடமை என்ற அடிப்படை வாய்ந்தவை வேளாண்மையையும் கைத்தொழில்களையும் மாற்ற முடியாத வேலைப் பிரிவினைக்கு உட்படுத்தினர்; புதியதொரு சமூகம் தொடங்கப்படும்போது இந்தத் திட்டம் சற்றும் மாறுபடாமல் அப்படியே பயன்படுகிறது. நூறும் அதற்கு மேலும் பல்லாயிரம் ஏக்கர்கள் வரையுள்ள பரப்பில் வாழ்வோர் அடக்கமான ஒரு முழு சமூகமாகத் தம் தேவைகளைத் தாமே உற்பத்தி செய்துகொண்டு வாழ்ந்தனர். உற்பத்திப் பொருள்களில் முக்கியமான பகுதி சமூகத்தின் சொந்தத்திற்கே பயன்பட்டது; அது விற்பனைப் பொருளானதில்லை. ஆகையால், இந்தியச் சமுதாயம் முழுவதிலுமே பண்டமாற்று வாயிலாக வந்த வேலைப் பிரிவினையோடு தொடர்பற்றதாய் இங்கே உற்பத்தி இருக்கிறது. உபரியாக இருப்பதே விற்பனைச் சரக்காகும்; அதிலும் ஒரு பகுதி அரசின் கையில் சென்ற பிறகே விற்பனைச் சரக்கு ஆகும்; மிகப் பண்டைக் கால முதலே இந்த உற்பத்திப் பொருள்களில் ஒரு பகுதி பொருள் உருவத்தில் செலுத்தப்பட்ட வாடகையாக அரசிடம் சென்று கொண்டிருக்கிறது.

"இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் இந்தப் பண்டைய சமூகங்களின் அமைப்பு வேறுபடுகிறது. மிக எளிய வடிவமைப்புள்ள சமூகங்களில் நிலம் பொதுவாகப் பயிரிடப்படுகிறது; விளைச்சலை உறுப்பினர்கள் பகிர்ந்து கொள்கிறார்கள். அதே சமயம் ஒவ்வொரு குடும்பத்திலும் நூற்பும் நெசவும் துணைத் தொழில்களாகச் செய்யப்படுகின்றன. மக்களோடு சேர்ந்து அதே வேலையில் ஈடுபட்டுள்ள 'நாட்டாண்மைக்காரர்' நீதிபதியாகவும், போலீஸாகவும், வசூலிப்பவராகவும் செயல்படுவதைக் காண்கிறோம். வேளாண்மைக் கணக்கையும், அது சம்பந்தப்பட்ட எல்லா விவரங்களையும் பதிவு செய்து கொள்ளும் 'கணக்குப்பிள்ளை'; குற்றவாளிகளைத் தண்டித்து, பிரயாணம் செய்யும் வழிப்போக்கர்களுக்குப் பாதுகாப்பு அளித்து, அடுத்த கிராமத்துக்குப் போக உதவி புரியும் மற்றோர் அதிகாரி; அண்டைச் சமூகங்களிடமிருந்து எல்லைகளைக் காக்கும் "எல்லைக் காவலர்"; பாசனத்திற்கான பொதுக் குளத்து நீரைப் பங்கீடு செய்யும் மேற்பார்வையாளர்; சமயச் சடங்குகளை, நடத்தும் பிராமணர்; மணல்மீது எழுதிக் குழந்தைகளுக்கு எழுதவும் படிக்கவும் கற்பிக்கும் பள்ளி ஆசிரியர்; விதைக்கவும் அறுவடை செய்யவும் மற்ற உழவு வேலைகளுக்கும் நன்னாள் குறித்துக் கொடுக்கும் 'பஞ்சாங்க பிராமணன்' அல்லது, சோதிடர்; எல்லா வேளாண்மைக் கருவிகளையும் செய்யவும் செப்பனிடவும் உதவும் கருமானும், தச்சனும்; கிராமத்திற்குத் தேவையான எல்லா மண்பாண்டங்களையும் செய்யும் குயவர்; நாவிதர்; துணிவெளுக்கும் சலவையாளர், தட்டார்; சில இடங்களில் குயவரே தட்டாரின் வேலையைச் செய்வதுண்டு; சில சமூகங்களில் ஆசிரியர் இந்த வேலையைச் செய்வார். சமூகம் முழுவதும் இந்த ஒரு டஜன் பேர்களுக்கான செலவை ஏற்கிறது. மக்கட்தொகை மிகுந்தால் காலி நிலத்தில், பழைய சமூகத்தின் பாணியில் புதிய சமூகம் நிறுவப்படும்...

"இந்தச் சமூகங்கள் தம் தேவைகளைத் தாமே பூர்த்தி செய்து கொள்பவை; இவற்றில் உற்பத்திக்கான எளிய ஏற்பாடு அதே வடிவத்தில் மீண்டும் மீண்டும் தொடரும்; ஒரு சமூகம் தற்செயலாக அழிந்தால் அதே இடத்தில் மற்றொரு சமூகம் அதே பெயருடன் முளைக்கும்—ஆசியச் சமூகங்களின் மாறுபடாத தன்மையின் ரகசியத்திற்குத் திறவுகோல் அதன் எளிமையே. இந்த மாறுபடாத்தன்மை ஆசிய அரசுகள் அடிக்கடி மறைந்து மறைந்து தோன்றி, ஆளும் வம்சங்கள் இடையீடு இல்லாமல் மாறிக் கொண்டிருக்கும் தன்மைக்கு நேர்மாறானது. அரசியல் வானத்தின் புயல்

முடியுமானால், நான் அதையே செய்வேன். எல்லா அடிமைகளையும் விடுவதன் மூலம், நான் யூனியனைக் காப்பாற்ற முடியுமானால், நான் அதையும் செய்வேன்'' என்று அவர் கூறியிருந்தார். 1862-ஆம் ஆண்டில், அடிமைகளை விடுவிப்பதன்மூலம் தாம் யூனியனின் மிகச் சிறந்த நலன்களைப் பாதுகாக்க முடியும், அப்பொழுதுதான் அது வட பகுதியை ஐக்கியப்படுத்தி உலகின் அநுதாபத்தைப் பெற்று அந்நிய நாடுகளை உதவும் சகாக்களாகப் பெறும் இறுதி நம்பிக்கையையும் சிதற அடித்துவிடும்.

கிழக்கில் தென்பகுதி ராணுவப் படைகள் வெற்றிமேல் வெற்றி பெற்றுவருகையில், தென் பகுதியிலுள்ள அடிமைகள் சுதந்திரமுள்ளவர்கள் என்று பிரகடனம் செய்வது பயனற்ற சமிக்ஞையாகவே தோன்றியிருக்கும். எனவே, அன்டீடாம் (Antietam) போரில், தென் பகுதியின் பெரும் படையெடுப்பு அபாயத்தை ஜெனரல் மெக்ளிலன் ஒழித்துக் கட்டும் வரையில் லிங்கன் காத்திருந்தார். பின்னர், 1863-ஆம் ஆண்டு ஜனவரி முதல் தேதியன்று ஜனாதிபதி தமது விடுதலைப் பிரகடனத்தில் யூனியனை எதிர்த்துக் கலகம் செய்துவரும் ராஜ்யங்களிலுள்ள எல்லா அடிமைகளும் "இனிச் சுதந்திரமுள்ளவர்களாக இருப்பார்" என்று அறிவித்தார்.

உண்மையிலேயே, இந்த விடுதலைப் பிரகடனம், தென் பகுதி இன்னும் தோற்கடிக்கப்படாத நிலையில் எதிர்காலத்திற்கான ஒரு வாக்குறுதியே. இதுமட்டுமின்றி, இது அரசியல் சட்டத்திற்கு முரணானதாகும். வெற்றிபெற்ற பின்னர், அடிமைத்தனத்தை ஒழிப்பதாக ராஜ்யங்கள் திருத்தங்களை நிறைவேற்றியாக வேண்டும். ஆனால், அடிமைத்தனத்தில் வாழ்ந்துவந்த 35 லட்சம் அமெரிக்கர்களுக்கு விடுதலை உறுதியளிக்கும் இந்தப் பிரகடனத்தின் புனித லட்சிய அறிக்கை, லிங்கன் விரும்பிய பலனை அளித்தது. அப்பொழுது யூனியன் தலைசிறந்த லட்சியப்போரில் ஈடுபட்டிருந்தது.

இருந்தபோதிலும், மெக்ளிலன் அன்டீடாமில் கிடைத்த வெற்றியைத் தொடர்ந்து பயன்படுத்திக் கொள்ளத் தவறியதால் இந்த உற்சாகம் சீக்கிரத்திலேயே தணிந்துவிட்டது. பெரும் வெறுப்பில் லிங்கன் இவரைப்

ஹிந்துஸ்தானம் தன் பண்டை மரபுகளிலிருந்தும் தன் பண்டை வரலாறு முழுவதிலிருந்தும் பிரிந்து நிற்கிறது.''

(மார்க்ஸ்: ''இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி''
— நியூயார்க் டெய்லி டிரிப்யூன், ஜூன் 25, 1853.)

## 3. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் நாசவேலை

இந்த நாசகர வேலை எப்படி நிறைவேற்றப்பட்டது என்பதை மார்க்ஸ் மிகவும் கவனமாய் ஆராய்கிறார்: 1813 வரை கிழக்கு இந்தியக் கம்பெனியின் தொடக்க கால ஏகபோகத்தையும், 1813 க்குப் பிறகு அந்த ஏகபோகம் முறிக்கப்பட்டு, தொழில் முதலாளிகளின் சரக்குகள் இந்தியா முழுவதும் நிரம்பியதையும் பாகுபடுத்திப் பார்க்கிறார்.

தொடக்க காலத்தில் அழிவு வேலைகள் பின்வரும் முறையில் நிறைவேற்றப்பட்டன. முதலாவதாக கம்பெனியின் மாபெரும் நேரடிக் கொள்ளை (பதினெட்டாம் நூற்றாண்டு முழுவதிலும் இந்தியாவிலிருந்து இங்கிலாந்திற்கு ஏற்றுமதி செய்யப்பட்ட செல்வக் களஞ்சியங்கள், மிகக் குறைந்த அளவிலிருந்த வியாபாரத்தில் ஈட்டப்பட்டவை கொஞ்சமே. அந்த நாட்டை நேராகச் சுரண்டல் செய்து, மிகப்பெரும் செல்வக்குவையைக் கவர்ந்து இங்கிலாந்திற்கு அனுப்பியதே மிகுதி). இரண்டாவதாக, பழைய அரசுகள் பாதுகாத்து வந்த பாசன பொதுநலப் பணிகள் இப்போது புறக்கணிக்கப்பட்டுப் பயனற்றனவாயிற்று. மூன்றாவதாக, ஆங்கிலேய நிலவுடைமை முறையை, விற்பனை செய்யும் பராதீனம் செய்யும் உரிமையுடன் இந்த நாட்டிற்கு அறிமுகப்படுத்தியதுடன் ஆங்கிலேயக் கிரிமினல் சட்டத்தையும் அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். நான்காவதாக, இந்தியச் சரக்குகளின் இறக்குமதியைத் தடுத்தார்கள் அல்லது கடுமையாக வரி விதித்தார்கள்; முதலில் இங்கிலாந்திலும், பிறகு ஐரோப்பாவிலும் கூட இந்த முறை கையாளப்பட்டது.

ஆயினும் இவையெல்லாம் கூடி இன்னும் இறுதி அடி அடிக்கவில்லை. அது பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதலாளித்துவத்தோடு வந்தது.

கிழக்கு இந்தியக் கம்பெனியின் ஏகபோகம் பணக்கார ஆட்சிக் குழுவோடு நெருங்கிய தொடர்பு கொண்டது; விக் புரட்சியைத் தொடர்ந்து இந்த ஆட்சிக்குழு தன் அதிகாரத்தை நிலைநாட்டிக் கொண்டது.

''கிழக்கு இந்தியக் கம்பெனியின் உண்மையான தொடக்கத்தை 1702 க்கு முந்தின காலமாய்க் கொள்ள முடியாது;

ஏனெனில் அப்போது தான் கிழக்கு இந்திய வாணிபத்திற் கான முழு உரிமை கொண்டாடிய பல சங்கங்கள் ஒன்று கூடி ஒரே கம்பெனியாக உருப்பெற்றன. அதுவரை, முதல் கிழக்கு இந்தியக் கம்பெனியின் உயிருக்கே பல முறை அபாயம் ஏற் பட்டது; கிராம்வெல்லின் காப்பாளராட்சியில் ஒரு முறை பல ஆண்டுகளுக்குத் தடை செய்யப்பட்டது. மூன்றுவது வில்லியமின் காலத்தில் பார்லிமெண்ட் தலையீடு காரணமாக முற்றிலும் அழிந்துவிடக் கூடிய அபாயம் நேர்ந்தது.

''இந்த டச்சு இளவரசனின் ஏற்ற காலத்தில்தான், பிரிட் டிஷ் சாம்ராஜ்யத்தின் வருவாயை அறுவடை செய்யும் உழவர் களாக விக்குகள் மாறியபோது, 'இங்கிலாந்துபாங்க்' முளைத்து இங்கிலாந்தில் பாதுகாப்பு முறை சாதாரண நடைமுறைக்கு வந்தபோது, ஐரோப்பாவில் அதிகாரச் சமநிலை உறுதி யாக ஏற்பட்ட பிறகு, கிழக்கு இந்தியக் கம்பெனி என ஒன்று இருப்பதை பார்லிமெண்ட் ஏற்றது. அதுபோட்டி வியாபாரத் திற்குச் சுதந்திரம் அளித்த காலமாய்த் தோன்றினுலும், உண்மையில் அது ஏகபோகங்களின் காலமே. எலிசபெத், முதலாம் சார்லஸ் காலங்களை போல அரசு மானியங்களால் அவை ஏற்பட்டவை அல்ல; ஆனுல் பார்லிமெண்டின் அனுமதி பெற்று உரிமை பெற்றவை, தேசீய மயமானவை.''

(மார்க்ஸ்: 'கிழக்கு இந்தியக் கம்பெனி, அதன் வரலாறும், விளைவும்'—நியூயார்க் டெய்லிக் டிரிப்யூன், ஜூலை 11, 1853)

இந்த ஏகபோகத்தை எதிர்த்து, இந்தியச் சரக்குகளுக்கான ற்பனை உரிமையைக் கேட்டுப் பெற்றிருந்த ஆங்கிலேய உற்பத்தி ாளர்களும், ஆதாயமான இந்திய வாணிபத்திலிருந்து விலக்கப் ்ட்ட மற்ற ஆங்கிலேய வணிகர்களும் ஓயாது கிளர்ச்சி செய் னர். கம்பெனியின் இயக்குநர்கள், உரிமையாளர்கள் குழுவை ழிக்க முயன்ற 'இந்தியா மசோதா' காரணமாக ஃபாக்ஸின் அரசு 783 இல் வீழ்ந்ததற்கும், அப்பால் 1786 முதல் 1795 வரை ஹஸ்டிங்ஸ் குற்ற விசாரணையின் நீண்ட சண்டையும் இந்தப் ாராட்டத்தின் விளைவுகளே. ஆனுல் தொழிற் புரட்சி நிறைவு பற்று ஆங்கிலேய உற்பத்தி முதலாளித்துவத்தை முன்னுக்கு காண்டு வந்த பிறகுதான் 1813 இல் இந்த ஏகபோகத்தை ழ்த்தி 1833 இல் முற்றிலும் ஒழிக்க முடிந்தது.

1813 க்குப் பிறகே, ஆங்கிலேயத் தொழில் உற்பத்தியாளர் ா படையெடுத்ததைத் தொடர்ந்து இந்தியப் பொருளாதார மைப்பின் இறுதியான அழிப்பு வேலை நிகழ்ந்தது. பத்தொன்ப ாம் நூற்றுண்டின் முன் பாதியில் நடந்த அழிப்பு வேலையின்

விளைவுகளை மார்க்ஸ் பயங்கரமான தகவல்களோடு விவரிக்கிறார். 1780 க்கும், 1850 க்கும் இடையில் பிரிட்டன் இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்த பொருளின் மதிப்பு £ 386,152 லிருந்து £ 8,024,000 ஆக உயர்ந்தது. அல்லது, மொத்த பிரிட்டிஷ் ஏற்று மதியில் 32 இல் ஒரு பங்காயிருந்தது, எட்டில் ஒன்ருக உயர்ந்தது; 1850 இல் பருத்தி உற்பத்திக்கு அயல்நாட்டு மார்க்கெட்டு களில் நான்கில் ஒரு பங்கு இந்தியா; இவ்வுற்பத்தித் தொழிலில் பிரிட்டனின் மக்கட் தொகையில் எட்டில் ஒரு பங்கினர் ஈடுபட்டு, மொத்த தேசிய வருவாயில் பன்னிரண்டில் ஒரு பங்குக்கு வழி செய்தனர்.

> "1818 முதல் 1836 வரை கிரேட் பிரிட்டனிலிருந்து இந்தியாவுக்கு ஏற்றுமதியான ட்விஸ்ட் 1க்கு 5200 மடங்கு என்ற விகிதத்தில் ஏறியது; 1824 இல் இந்தியாவுக்கு ஏற்று மதியான பிரிட்டிஷ் மஸ்லின்கள் 6,000,000 கஜங்கள்கூட இல்லை; 1837இல் அது 64,000,000 கஜங்களுக்கு மேல் பெருகியது. ஆனுல், அதே சமயம் டாக்காவின் மக்கட்தொகை 150,000 லிருந்து 20,000 ஆகக் குறைந்தது. ஆடைத் தொழிலுக்குப் புகழ்பெற்ற இந்த நகரங்களின் சரிவு மிக இழிவான விளைவு அல்ல. பிரிட்டிஷ் நீராவியும் விஞ்ஞானமும் ஹிந்துஸ்தானம் முழுவதுமிருந்த வேளாண்மை, தொழில் ஒற்றுமையை வேரோடு பிடுங்கிவிட்டது."
>
> (மார்க்ஸ்: "இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி" —நியூயார்க் டெய்லி டிரிப்யூன், ஜூன் 10, 1853).

> "ஆங்கிலேயப் பருத்தியந்திரம் இந்தியாவில் கடும்பாதிப்பை ஏற்படுத்தியது. 1834-35இல் கவர்னர் ஜெனரல் அறிவித்தார். 'இந்த துன்பத்திற்கு வாணிபத்தின்வரலாற்றிலேயே ஈடுகாண முடியாது. பருத்தி நெசவாளர்களின் எலும்புகள் இந்திய சமவெளிகளை வெளுத்துக் கொண்டிருக்கின்றன' ......"
>
> (மார்க்ஸ்: "மூலதனம்". முதல் தொகுதி, 15ஆம் அத்தியாயம், 5-ம் பகுதி.

கிராம ஆட்சிமுறை "வேளாண்மை, தொழில் ஈடுபாடுகளின் குடும்ப ஒற்றுமை மீது எழுப்பப்பட்டிருந்தது." கைத்தறியும், நூற்பு ராட்டையும் பழைய இந்திய சமூக அமைப்பின் அச்சுகள் ஆகும். "ஆனுல், இந்தியத் கைத்தறியை உடைத்து நூற்பு ராட்டையை அழித்து எறிந்தவன் பிரிட்டிஷ் குறுக்கீட்டுக் காரன்தான்." அதனுல், பிரிட்டன் "ஆசியாவிலேயே முதன் முதலாய்க் கேள்விப்பட்ட மிகப்பெரிய, மெய்யாகக் கூறினுல், ஒரே ஒரு சமூகப் புரட்சியினை உண்டாக்கியது. இந்தப் புரட்சி பழைய தொழிலுற்பத்தி நகரங்களை மட்டும் ஒழிக்கவில்லை;

அங்கிருந்த மக்களை கிராமங்களுக்கு விரட்டியதோடு நிற்கவில்லை; கிராமங்கள் சீரான பொருளாதார வாழ்க்கையையும் குலைத்தது. இதனால் வேளாண்மையில் பெருத்த நெருக்கடி ஏற்பட்டது; இன்றுவரை இந்த நெருக்கடி மேலும் மேலும் பெருகிக் கொண்டு தான் இருக்கிறது. அதே சமயத்தில் உழவர்களிடமிருந்து சாத்திய மான அளவு இரக்கமில்லாமல் வரி வசூல் செய்தார்கள்; பதிலுக்குத் தேவையான பணிகளைச் செய்யவும் விரிவாக்கவும் போதுமான செலவு செய்யாததால் (1850-51 இல் மொத்த வருவாய் £ 19,300,000 அதில் £ 166,390 மட்டுமே, அதாவது 0.8 சதவீதம் ஒரு வகைப் பொது நலப் பணிகளுக்கெனச் செலவிடப் பட்டது.) விவசாய வளர்ச்சி தடையுண்டது.

> ''இந்த வாடகை, தொழிலாளர்களின் நிலைகளும் உற்பத்திச் சாதனங்களும் மீண்டும் உற்பத்தி செய்யப்பட முடியாத அளவு உயர்ந்து விடுவதற்கான அபாயம் இருக் கிறது. ஏறக்குறைய உற்பத்திப் பெருக்கம் இயலாத நிலைமையை அது உருவாக்கலாம்; நேர் உற்பத்தியாளர்கள் பிழைத்துக் கிடக்கிற நிலையில் உயிர் வாழும் கொடுமைக்கு உட்படுத்தப்படுவார்கள். தொழிலில் தேர்ந்த இங்கிலாந்து போன்ற ஒரு நாடு இந்தியா போன்ற நாட்டை வெற்றி கண்டு சுரண்டல் செய்ய முற்படும்போது இந்த மாதிரிதான் நிலைமை உருவாகும்.''
>
> (மார்க்ஸ்: ''மூலதனம்'', மூன்றும் தொகுதி, 47ஆம் அத்தியாயம், 3ஆம் பகுதி.)

இந்தியாவிடமிருந்து பிரிட்டன் நிர்ப்பந்தமாக வசூல் செய்த 'நன்கொடை'யை மார்க்ஸ் பின் வருமாறு வருணிக்கிறார்:

> ''இந்தியா, 'நல்ல அரசாங்கத்திற்காகவும்,' பிரிட்டிஷ் மூலதனத்தின் வட்டியாகவும், லாப விகிதமாகவும் 'நன் கொடையாக' ஐம்பது இலட்சம் பவுன்கள் செலுத்த வேண்டி யிருந்தது; ஆண்டுதோறும் தங்கள் சம்பளத்தில் மிச்சம் செய்து தாயகத்துக்கு அனுப்புவதையும், ஆங்கிலேய வணிகர் கள் தங்கள் ஆதாயத்தில் ஒரு பகுதியை இங்கிலாந்தில் முதலீடு செய்வதற்கென அனுப்புவதையும் இக் கணக்கில் சேர்க்க வில்லை.''
>
> (மார்க்ஸ்: ''மூலதனம்'', மூன்றும் தொகுதி, 35ஆம் அத்தியாயம், 4ஆம் பகுதி.)

கிராம ஆட்சிமுறை வீழ்ந்ததற்காகவும் இந்திய சமூகத்தின் பழைய அடிப்படை அழிந்ததற்காகவும் மார்க்ஸ் கண்ணீர் சிந்து கிறாரா? பூர்ஷுவா சமூகப் புரட்சி காரணமாக ஏற்பட்ட எல்லை

யற்ற துன்பத்தை மார்க்ஸ் கண்டார். ஒவ்வொரு நாட்டிலும் அப்படிதான் ஏற்படும். எனினும் இந்த மாதிரி நிலைமையில் சமூகப் புரட்சி ஏற்பட்டதால் அதனால் விளைந்த துன்பம் இந்தியாவில் மிகுதியாக இருந்தது. ஆனால், அந்தக் கிராம ஆட்சி முறையின் ஆழ்ந்த பிற்போக்குத் தனத்தையும், மனித இனம் முன்னேற வேண்டுமானால் அது அழிய வேண்டிய இன்றியமையாத தேவையையும் அவர் பார்த்தார். அந்தக் 'காவிய ரசம் மிக்க கிராம சமூகங்களில் சம்பந்தபட்ட மனித வர்க்கம் இழிந்திருந்ததை அவர் எரிக்கும் சொற்களில் வருணிக்கிறார். இன்றும் இந்தியாவிலாகட்டும் ஐரோப்பாவிலாகட்டும் முன்னோக்காமல் பின்னோக்க விரும்புகிறவர்களுக்கும், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியோடு போராடுவதற்காக பிரிட்டிஷாரின் காலத்துக்கு முந்தின நூற்புராட்டை கைத்தறியுகம் திரும்ப வேண்டும் என்று முயல்வோருக்கும் மார்க்ஸின் சொற்கள் வீரியம் இழக்கவில்லை.

''அந்தக் கணக்கற்ற சுறுசுறுப்பான தந்தை வழி உரிமை கொண்டாடும், எதிர்ப்பற்ற சமூக நிறுவனம் தன் இடத்திலேயே உருக்குலைத்து கரைந்து ஒரு துன்பக் கடலில் எறியப்பட்டிருப்பதையும், அதனுடைய தனி உறுப்பினர்கள் அதே நேரத்தில் தங்கள் பண்டை நாகரீக வடிவத்தையும், ஜீவனோபாயத்தையும் இழந்திருப்பதையும் பார்க்க மனித உணர்ச்சியை நோயுறுத்தும் காட்சியாகவே இருக்கும். ஆயினும் 'காவிய ரசம் மிக்க கிராம சமூகங்கள்' பார்ப்பதற்கு எதிர்ப்பற்றவையாகத் தோன்றினாலும், கீழ் நாட்டுக் கொடுங்கோல் ஆட்சிக்கு உறுதியான அஸ்திவாரமாக, அவை இருந்து வந்துள்ளன என்பதையும் அவை மனித மனத்தை மிகச் சிறிய ஓர் எல்லைக்குள்ளேயே ஒடுக்கி வைத்து மூட நம்பிக்கையின் எதிர்ப்பில்லாத கருவியாக்கி, மரபு விதிகளுக்கு அடிமையாக்கி, அதனுடைய எல்லா நேர்த்தியையும் வரலாற்றுச் சக்திகளையும் கவர்ந்து விடுகின்றன என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது.

''ஒரு துண்டு பாழும் நிலத்திற்காக வெறியுற்ற காட்டுமிராண்டி—அகங்காரம் சாம்ராஜ்யங்களின் அழிவையும் சொல்லி முடியாத கொடுமைகள் இழைத்ததையும், பெரும் நகரங்களின் மக்களைப் படுகொலை செய்ததையும், இயற்கை நிகழ்ச்சிகளுக்குச் செலுத்தப்படுவதைவிட அதிகமான கவனம் ஏதுமில்லாமல் இவ்வாறெல்லாம் செய்ததையும் நாம் மறந்து விடக்கூடாது; அந்த அகங்காரமே, அதைக் கவனிக்கிற, தாக்கும் ஒருவனுக்கு இரையாகலாம்.

''இந்தத் தேக்கம் கண்ட, கம்பீரமில்லாத வேரூன்றின சோம்பல் வாழ்க்கை இத்தகைய அமைதியாக உயிரோடிருக்கும் போக்கு மறுதரப்பில் காட்டுத்தனமான, குறிக்கோளற்ற, எல்லையில்லாத, அழிவுச் சக்திகளைத் தூண்டிவிட்டு, ஹிந்துஸ்தானத்தில் கொலையையும் ஒரு மதச் சடங்கு ஆக்கி விட்டது என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது.

''இந்தச் சிறிய சமூகங்கள் ஜாதி பேதங்களாலும் அடிமைத்தனத்தாலும் நோயுற்றவை என்பதையும், அவை மனிதனை சூழ்நிலை மீது அரசோச்சும் வல்லவனுக்காமல், அவனைச் சூழ்நிலைக்கு அடிமைபடுத்தின என்பதையும் அவை தானாக வளரும் ஒரு சமூக நிலையை என்றும் மாறாத ஓர் இயற்கை ஊழாக மாற்றின என்பதையும், இவ்வாறாக, அவை மிருகத்தனமான இயற்கை வழிபாட்டுக்கு வழிவகுத்து, இயற்கையின் அரசான மனிதன் ஹனுமன் என்ற குரங்கையும், ஸப்பலா என்ற பசுவையும் மண்டியிட்டு வணங்கும் நிலைக்கு தாழ்த்திவிட்டன என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது.''

(மார்க்ஸ்: இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி.)

ஆகையால், இந்தியாவில் பிரிட்டிஷாரின் பொருளாதாரக் கொள்கை 'பன்றித் தனமானது' என்று மார்க்ஸ் வருணித்தாலும் (1853, ஜூன் 14இல் எங்கெல்ஸுக்கு எழுதிய ஒரு கடிதம்) அந்த சமயம் பிரிட்டிஷ் வெற்றியை 'வரலாற்றின் உணர்வற்ற கருவியாக' அவர் காண்கிறார்.

''ஹிந்துஸ்தானத்தில் ஒரு சமூகப் புரட்சியை உண்டாக்கிய இங்கிலாந்து மிக இழிவான நோக்கங்களால் தூண்டப்பட்டது; அவற்றை அது மடத்தனமாய் நிறைவேற்றியது என்பது உண்மை. ஆனால், கேள்வி அதுவல்ல. கேள்வி இதுதான்: ஆசியாவின் சமூக நிலையில் ஓர் அடிப்படை புரட்சி இல்லாமல் மனித இனம் தன் விதியை நிறைவு பெறுமாறு செய்ய முடியுமா? முடியாது என்றால், இங்கிலாந்தின் குற்றங்கள் என்னவாயினும் சரி, இந்தப் புரட்சியைத் தோற்றுவிப்பதற்கு வரலாற்றின் ஓர் உணர்வற்ற கருவியாக அது விளங்கியது.''

(மார்க்ஸ்: இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி.)

## 4. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் ''சீரமைப்புப் பணி''

மார்க்ஸின் நோக்கில், இந்தியாவில் இங்கிலாந்துக்கு ''இரண்டு பணிகள் இருந்தன: ஒன்று, அழித்தல் பணி, மற்றொன்று

சீரமைப்புப் பணி—பழைய ஆசிய சமூகத்தை அழிப்பது; ஆசியாவில் மேலை நாட்டுச் சமூகத்திற்கான உறுதியான அஸ்தி வாரம் இடுவது.'' இதுவரை அழிப்புக் காட்சியையே கண்டு வந்தோம்; ஆயினும், புத்துயிரூட்டும் பணி தொடங்கி விட்டது.

''பிரிட்டிஷ்காரர்கள் முதல் வெற்றியாளர்கள், உயர்ந் தவர்கள். ஆகையால், ஹிந்து நாகரிகத்தினுல் எளிதில் அணுக முடியாதவர்கள்; உள்நாட்டுச் சமூகங்களை உடைத்தும், உள்நாட்டுத் தொழிலை ஒழித்தும், உள்நாட்டுச் சமூகத்தில் பெரியதாகவும், உயர்ந்ததாகவும் இருந்தவற்றை எல்லாம் தரைமட்டமாக்கியும் அவர்கள் அதை (ஹிந்து நாகரிகத்தை) அழித்தார்கள். இந்தியாவில் அவர்களுடைய ஆட்சி பற்றின வரலாற்று ஏடுகள் அந்த அழிவுக்கு மேல் எதைப் பற்றியும் பேசவில்லை. புத்துயிரூட்டும் பணி அழிவுக் குவியலிருந்து தொடங்குவது அல்ல. ஆயினும் அது தொடங்கி விட்டது.

(மார்க்ஸ்: ''இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் எதிர்கால விளைவுகள்''—நியூயார்க் டெய்லி ட்ரிப்யூன், ஆகஸ்ட் 8, 1853)

இம்மாதிரிப் 'புத்துயிரூட்டும் பணியின்' தொடக்கத்தை மார்க்ஸ் எங்கே கண்டார்? அவர் ஒரு வரிசை அறிகுறிகளை அடுக்குகிறுர்:

1. ''அரசியல் ஒற்றுமை...மகா மொகல்களின் கீழ் இருந்ததைவிட ஒருங்கிணைந்தது; மேலும் விரிந்து, 'மின் சாரத் தந்தியால் வலுப்பெற்று நிரந்தரமாகக்' கூடிய தன்மை வாய்ந்தது;

2. '' 'உள்நாட்டுப் படை' (1857 ஆம் ஆண்டுப் புரட் சிக்கு முன் இருந்தது; புரட்சிக்குப் பிறகு கவனமாய்ப் பிரிட்டிஷ் ராணுவம் வலுவாக்கப்பட்டது; மொத்த ராணு வத்தில் மூன்றில் ஒரு பங்கு பிரிட்டிஷாரே இருந்தனர்; பிரிட்டிஷ் ராணுவ நிர்வாகம் வலுவாக்கப்பட்டது);

3. ''சுதந்திரமான செய்தித்தாள்கள்; ஆசிய சமூ கத்தில் முதன் முறையாக அறிமுகப்படுத்தப்பட்டது'' (1835 இல் இந்தியாவில் செய்தித்தாள் சுதந்திரம் அறிவிக் கப்பட்டதைத் தொடர்ந்தும், 1873 இல் தொடங்கி ஏகாதி பத்திய ஆட்சி சரிந்துவரும் நவீன காலத்தில் மேலும் மேலும் வலுத்துவரும் அச்சகச் சட்டங்களுக்கு முன்பும்);

4. ''நிலத்தில் தனியார் உடமை ஏற்படுத்தியது—ஆசிய சமூகத்தில் மிகத் தேவைப்பட்டது;''

5. ''மனமில்லாமலும் மெதுவாகவும் ஓர் இந்தியப் படித்த வர்க்கத்தை உண்டாக்கி, அவர்களுக்கு ''அரசாங்கத் திற்குத் தேவையானவற்றையும் ஐரோப்பிய விஞ்ஞான அறிவையும் அளித்தது;''

6. ''ஐரோப்பாவுடன் சீரான, விரைவான தொடர்பு''— நீராவிப் போக்குவரத்துச் சாதனங்கள் வாயிலாக.

இவை எல்லாவற்றையும் விட, தொழில் முதலாளித்துவச் சுரண்டலின் தவிர்க்கமுடியாத விளைவுதான் மிக முக்கியம். இந்திய மார்க்கெட்டை வளர்க்க வேண்டுமானுல், 'இந்தியாவை மறு உற்பத்தி செய்யக்கூடிய நாடாக மாற்ற வேண்டும்'— அதாவது இறக்குமதி செய்யப்பட்ட உற்பத்திப் பொருள்களுக்குப் பதிலாக மூலப் பொருள்களை ஏற்றுமதி செய்யக்கூடிய நாடாக இந்தியாவை மாற்ற வேண்டும். இதற்காகப் புகைவண்டி களையும், சாலைகளையும், பாசன வசதிகளையும் அபிவிருத்தி செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. இந்தப் புதிய கட்டம் மார்க்ஸ் எழுதும்போது தொடக்க நிலையில் இருந்தது. இந்தப் புதிய அபிவிருத்திகளின் விளைவுகளிலிருந்து இந்தியாவைப் பற்றின அறிவிப்புகளில் மிகப் புகழ்பெற்ற அறிவிப்பை மார்க்ஸ் தீர்க்க தரிசனத்துடன் வெளியிட்டார்:

''ஆங்கிலேயப் பணக்கார ஆட்சிக்குழு இந்தியாவுக்கு புகை வண்டிகளை வழங்க விரும்புவதன் ஒரே நோக்கம், தங்களுடைய உற்பத்திப் பொருளுக்குத் தேவையான பருத்தி முதலிய கச்சாப் பொருள்களைக் குறைந்த செலவில் கவர முடியும் என்பதே என்பதை நான் அறிவேன். ஆனுல் இரும்பும், கரியுமுள்ள ஒரு நாட்டின் போக்குவரத்தில் யந்திரத்தை ஒருமுறை புகுத்திவிட்டால் அது விரிவடை வதைத் தடுக்க முடியாது. ரயில்வே போக்குவரத்தின், உடனடியான, இப்போதைய தேவைகளைப் பூர்த்தி செய்வ தற்குத் தேவையான எல்லாத் தொழில் முறைகளையும் புகுத்தாமல் ஒரு பரந்த நாட்டில் ரயில்வே வேலையைப் பாதுகாக்க முடியாது; அதிலிருந்து, ரயில்வேயுடன் உடனடி யான தொடர்பு இல்லாத தொழில்களிலும் யந்திரத்தைப் பயன்படுத்தும் வழக்கம் தோன்றும். ஆகையால் இந்தி யாவில் நவீனத் தொழில் ஏற்பட ரயில்வே உண்மையான முன்னேடியாக இருக்கும்....ரயில்வேயிலிருந்து தோன்றிய நவீனத் தொழில் இந்திய முன்னேற்றத்திற்கும் இந்தியச் சக்திக்கும், பெருத்த இடையூறுகளாகவுள்ள இந்திய ஜாதிகளை ஆதாரமாய்க் கொண்ட வழிவழி வந்த வேலைப் பிரிவினையைக் கரைக்கும்.'' (மார்க்ஸ்: ''இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் எதிர்கால விளைவுகள்'')

அவ்வாருனல், ஏகாதிபத்தியம் இந்திய மக்களை விடுவிக்கக் கூடிய முன்னேற்ற சக்தி என்றும் சமூக முன்னேற்றப் பாதையில் அவர்களை அழைத்துச் செல்லும் என்றும் மார்க்ஸ் கருதினர் என்று இதன் பொருளா? நேர்விரோதமான பொருள். இந்தியாவில் பிரிட்டிஷ் முதலாளித்துவ ஆட்சியின் 'புத்துயிரூட்டும் பணியை'ப் பற்றிப் பேசுகையில், புதிய முன்னேற்றத்திற்குச் சாதகமான நிலைகளை உண்டாக்கித் தந்த பணியையே குறிப்பிடுவதாய் மார்க்ஸ் தெளிவாக்கி விட்டார். ஆனல், இந்தப் புதிய முன்னேற்றத்தை இந்திய மக்களே சாதிக்க முடியும்; அதற்கு அவர்கள் ஏகாதிபத்திய ஆட்சியிலிருந்து விடுதலை பெறவேண்டும்; அவர்கள் இந்த விடுதலையை வெற்றிகரமாய்ப் புரட்சி செய்து பெற்றாலும் சரி, அல்லது பிரிட்டனிலுள்ள தொழிலில் ஈடுபட்டுள்ள உழைப்பாளர் வர்க்கம் வெற்றிபெற்று இந்திய மக்களுக்கு விடுதலை அளித்தாலும் சரி. அதுவரை, இந்தியாவில் ஏகாதிபத்தியத்தின் சிறந்த சாதனைகள் இந்திய மக்களின் நிலைமையில் நன்மையோ அபிவிருத்தியோ உண்டாக்கா.

> ''ஆங்கிலேயப் பூர்ஷ்வாக்கள் நிர்ப்பந்தத்தின் பேரில் என்ன செய்தாலும் இந்திய மக்களை விடுவிக்கவோ, அவர்களுடைய சமூக நிலையில் திருத்தவோ முடியாது; அது உற்பத்திச் சக்தியை வளர்ப்பதை மட்டும் அல்ல, அவற்றை மக்கள் எப்படி பயன்படுத்துகிறார்கள் என்பதையும் பொருத்தது. ஆனல், இரண்டிற்கும் தேவையான அஸ்திவாரத்தைப் போட அவர்கள் தவறமாட்டார்கள். பூர்ஷ்வாக்கள் இதை விட அதிகமாய் எப்போதாவது செய்திருக்கிறார்களா? ரத்தத்திலும், அழுக்கிலும், துன்பத்திலும், தாழ்விலும் தனி நபர்களையும், மக்களையும், இழுத்துச் செல்லாமல் பூர்ஷ்வாக்கள் எப்போதாவது முன்னேற்றத்தைச் சாதித்ததுண்டா?
>
> "கிரேட் பிரிட்டனிலேயே இப்போது ஆளும் வர்க்கத்தினர் தொழிலில் ஈடுபட்டுள்ள பாட்டாளி வர்க்கத்தினரால் நீக்கப்படும் வரை, அல்லது ஹிந்துக்களே ஆங்கிலேய விலங்கை முற்றிலும் உடைத்தெறியும் அளவுக்கு வலிமை பெறும் வரை, பிரிட்டிஷ் பூர்ஷ்வாக்கள் ஆங்காங்கு தூவின சமூகத்தின் புதிய ஆதாரப் பொருள்களின் பயனை இந்தியர்கள் அடைய முடியாது.''
>
> (மார்க்ஸ்: ''இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் எதிர்கால விளைவுகள்'')

இதனேடு, இந்தியப் புரட்சியின் எதிர்கால நம்பிக்கையையும் அடிமைப்பட்ட காலனி மக்களின் விடுதலையின் அவசியத்

தையும் பற்றி 1882 இல் எங்கெல்ஸ் வெளியிட்ட அறிக்கையை ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

> ''இந்தியா ஒருகால், உண்மையில் கட்டாயமாக, ஒரு புரட்சியை உண்டாக்கலாம்; தன்னை விடுவித்துக் கொள்ளும் பாட்டாளி வர்க்கம் காலனிப் போர்கள் எதையும் நடத்த முடியாதாகையால் இதற்கு முழு அளவு வாய்ப்பும் தர வேண்டும்; எல்லாவித அழிவும் இன்றி அது நிகழாது என்பது மெய்தான்; ஆனால், அதுபோன்ற செயல்களை எந்தப் புரட்சியினின்றும் பிரிக்க முடியாது. அதே செயல் ஆல்ஜியர்ஸ், எகிப்து முதலிய மற்ற இடங்களிலும் நிகழக்கூடும்; கட்டாயம் அது நமக்கு மிகச் சிறந்த விஷயமாக இருக்கும்.''
>
> (எங்கெல்ஸ், செப்டம்பர் 12, 1882 இல் கௌட்ஸ்கிக்கு எழுதிய கடிதம்)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப் பகுதி வரை இந்தியநிலை பற்றின மார்க்ஸின் பகுத்தாய்வு மூன்று முக்கியமான அம்சங்களைச் சுற்றியுள்ளது என்பதைக் காணலாம்: முதலாவதாக, இந்தியாவில் பிரிட்டிஷாரின் அழித்தல் வேலை—பழைய சமூக முறையை வேரோடு பிடுங்கியது. இரண்டாவதாக, இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் புத்துயிரூட்டும் பணி. சுயேச்சை வணிக முதலாளித்துவ காலத்தில் எதிர்காலப் புதிய சமூகத்திற்கு உறுதியான அடிக்கல் நாட்டியது. மூன்றாவதாக, அதன் விளைவான நடைமுறையான முடிவு. புதிய சமூகத்தை எழுப்புவதற்கு இந்திய மக்களே ஏகாதிபத்தியத்திலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டு அரசியல் மாற்றம் ஏற்படுத்த வேண்டும்.

உலகெங்குமுள்ள முதலாளித்துவத்தைப்போல், இந்தியாவிலும் ஏகாதிபத்திய ஆட்சி, தன் நோக்கமான முன்னேற்றப் பணி அல்லது புத்துயிரூட்டும் பணியை மீறி, சுயேச்சை வணிக முதலாளித்துவ கால அளவுக்கும் மேல் உயிர் வாழ்ந்து விட்டது; இன்று அது இந்தியாவில் மிக வலிய பிற்போக்குச் சக்தியாக விளங்குவதுடன் இந்தியப் பிற்போக்கு வடிவங்கள் எல்லாவற்றையும் ஊக்கிக் கொண்டிருக்கிறது. மார்க்ஸ் குறிப்பிட்ட அரசியல் மாற்றம் ஏற்படுத்தும் பணியே இன்றைய பணி என்ற கட்டத்தை அடைந்தாகி விட்டது.

அத்தியாயம் 5

# இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி—பழைய அடிப்படை

''இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி எனப்படும் வன் முறைக்கும் கொள்ளைக்கும் ஒரு முடிவே இல்லை''

— லெனின், ''உலக அரசியலில் தீப்பற்றக்கூடிய பொருள்,'' *1908*.

மார்க்ஸ் இந்தியாவைப் பற்றி எழுதித் தொண்ணூறு ஆண்டுகளுக்கு மேல் கழிந்து விட்டன. நீண்ட பாதிப்புகள் ஏற்படுத்தக் கூடிய மாறுதல்கள் நிகழ்ந்துள்ளன. மார்க்ஸின் வரலாறு பூர்வமான பகுத்தாய்வின் முக்கியமான அம்சங்கள் இன்னும் பொருத்தமாக இருக்கின்றன; இந்தியாவின் எதிர்காலம் பற்றின அவருடைய தீர்க்க தரிசனம் (இந்தியாவைப் பற்றி பத்தொன்பதாம் நூற்றுண்டில் எழுதியவர்களில் அதற்கு ஈடு காண முடியாது), அப்போதுமுதல் நிகழ்ந்தவற்றின் அநுபவத்தால் உறுதிப் பட்டது மட்டும் அல்ல; அவர் கண்ட அரசியல் முடிவை ஊர்ஜிதம் செய்யும் நிகழ்ச்சிகளும் கண்ணெதிரில் இன்று நடந்து கொண்டிருக்கின்றன

ஆனல், இன்று பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், இந்திய மக்களின் இயக்கம் ஆகிய இரண்டின் அபிவிருத்தி பற்றின ஒரு முழு காலம் பற்றி இந்தப் பகுத்தாய்வைத் தொடர்ந்து செய்யலாம்.

இந்தியாவில் ஏகாதிபத்திய ஆட்சியின் இந்த வரலாற்றில் மூன்று முக்கியமான கால கட்டங்கள் தென்படுகின்றன. முதலாவது, வணிகர் மூலதனக் காலம்; இதற்குப் பிரதிநிதி கிழக்கு இந்தியக் கம்பெனியும் பதினெட்டாம் நூற்றுண்டின் முடிவு வரை பரவியிருந்த அதன் நிர்வாக முறையின் பொதுத் தன்மையும். இரண்டாவது, தொழில் மூலதனக் காலம்; பத்தொன்பதாம் நூற்றுண்டில் இந்தியாவைச் சுரண்டல் செய்ய ஒரு புதிய அடிப்படையை ஏற்படுத்தியது. மூன்ருவது, நிதி—மூலதனக் காலமாகிய நவீன காலம்; பழைய சுரண்டல் முறையின் எச்சத்தின் மேல் பிரத்தியேகமான ஒரு சுரண்டல் முறையைத் தோற்றுவித்தது; பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதி ஆண்டு

களில் தொடங்கிய அதன் வளர்ச்சி மிக அண்மையில் முழுமையை நெருங்குகிறது.

வணிகர் மூலதனம், தொழில் மூலதனம் ஆகிய இரண்டு முதல் காலங்களையும், இந்தியாவுடன் அவற்றுக்குள்ள தொடர்பையும் பற்றி மார்க்ஸ் விவரித்திருக்கிறார். இந்தப் பகுத்தாய்வை நாம் தொடர்ந்து நிதி—மூலதனக் காலமாகிய நவீன காலம் பற்றி நாம் ஆராய வேண்டும்.

ஆகையால், இப்போதைய முறைக்கு அடிக்கல்லிட்டவை என்பதால் முக்கியமான முதல் இரண்டு காலப் பகுதிகளையும் பற்றி நாம் தொகுத்துக் கவனிக்கலாம். அதனால், இன்றைய நிலைமை உருவாவதற்கான வளர்ச்சிக் கிரமத்தை நாம் புரிந்து கொள்ள இயலும்; பிறகு நாம் நவீனகாலப் போக்கின் மீதே முழு கவனத்தையும் செலுத்தலாம்.[1]

## 1. இந்தியாவிலிருந்து கொள்ளை

கிழக்கு இந்தியக் கம்பெனியின் காலத்தை, அதனுடைய முதல் உரிமைச் சாஸனம் ஏற்பட்ட 1600 லிருந்து பிரிட்டிஷ் மகுடத்துடன் அது கலந்து 1858 வரை என்று கணக்கிடுவது வழக்கம். ஆனால், உண்மையில் அதன் முக்கியமான ஆதிக்க காலம், பதினெட்டாம் நூற்றாண்டின் பின் பாதியே. தொடக்க கால வியாபாரக் கிடங்குகள் பதினேழாம் நூற்றாண்டில் நிறுவப்பட்டாலும், (1612 இல் சூரத்; 1639 இல் சென்னை, செயின்ட் ஜார்ஜ் கோட்டை; 1669 லிருந்து பம்பாய் கம்பெனியிடம் வாடகைக்கு விடப்பட்டது; 1696 லிருந்து கல்கத்தா, வில்லியம் கோட்டை.) பிற்காலத்தில் இந்தியாவை வென்ற புதிய கிழக்கு இந்தியா கம்பெனி 1698 இல் முதல் உரிமைச் சாஸனத்தைப் பெற்று 1708 இல் தான் இறுதியான ஒருங்கிணைந்த வடிவம் அடைந்தது. ஆக, இந்தியாவை வென்ற கிழக்கு இந்தியா கம்பெனி, விக் புரட்சிக்குப்பின்னர் இங்கிலாந்தின் ஆட்சியை இறுகப் பற்றிய பணக்கார ஆட்சிக் குழுவின் எடுத்துக்காட்டான ஏகபோகப் படைப்பு.

பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதியளவில் கம்பெனி இந்தியாவில் தன் பிரதேச ஆதிக்கத்தை வளர்க்க முற்பட்டது. முகலாய சாம்ராஜ்யம் பதினெட்டாம் நூற்றாண்டில்

1. இந்த அத்தியாயத்தில் எழுதப்பட்டுள்ள விஷயங்களில் பெரும் பகுதிக்கு ஆர். சி. தத்தின் "தொடக்க காலப் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இந்தியாவின் பொருளாதார வரலாறு" (1911). "விக்டோரியா காலத்தில் இந்தியாவின் பொருளாதார வரலாறு" (1918) என்ற இரண்டு நூல்களுக்கும் குறிப்பாக நன்றி கூற வேண்டும்; இந்த இரண்டும், பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை ஏற்பட்ட வளர்ச்சியை ஆதாரபூர்வமாக ஆராயும் நூல்கள்.

வீழ்ச்சி அடைந்ததை அடுத்து இந்தியாவை உலுக்கிய உள்நாட்டுப் போர்கள் ஒரு குழப்பக் காலத்தையே பிரதிபலித்தன; (இங்கிலாந்தில் நடந்த ரோஜாப் போர்களோடும், ஜெர்மனியில் நடந்த முப்பதாண்டுப் போருடனும் சில அம்சங்களில இதை ஒப்பிடலாம்.) பழைய சமூக முறை சிதைந்து, இந்தியச் சமூகத்தில் முன்னேறிக் கொண்டிருந்த வணிக, கப்பல் போக்குவரத்து, உற்பத்தி நலன்களின் அடிப்படையில், வளர்ச்சிக் கிரமத்தில் பூர்ஷ்வா ஆட்சி தோன்ற அக் குழப்ப நிலை அவசியமாயிற்று. ஆயினும், இந்த நெருக்கடியான காலத்தில் மிகச் சிறப்பான வளர்ச்சி பெற்ற ஐரோப்பியப் பூர்ஷ்வாக்களின் பிரதிநிதிகள் படையெடுத்தார்கள்; இந்த ஐரோப்பியர்கள் உயர்ந்த நுட்ப இயல் அறிவும், ராணுவ அமைப்பும் படைத்தவர்கள் என்பதோடு சமூக—அரசியல் நிலைகளில் தெளிவும் வாய்ந்தவர்கள். இவர்கள் இயற்கையான வளர்ச்சிக் கிரமத்தை ஒடுக்கினுர்கள்; அதனுல், இந்தியாவில் பழைய சமூக முறை சிதைந்தும், அதற்குள் வளர்ந்த இந்தியப் பூர்ஷ்வா ஆட்சி ஏற்படாமல், இந்தியப் பூர்ஷ்வா வர்க்க வளர்ச்சியின் கிருமிகளை அழித்துப் பழைய சமூக முறை மீது அயல் நாட்டுப் பூர்ஷ்வா ஆட்சி வன்முறையால் தன்னைத் திணித்துக் கொண்டது. இந்திய வளர்ச்சியில் சோக நாடகம் இதுதான். இதற்குப் பிறகு இந்திய வளர்ச்சி என்பது ஒடுக்கி உருக்குலைக்கப் பெற்ற சமூக வளர்ச்சி ஆகி அயல்நாட்டுப் பூர்ஷ்வாக்களின் நன்மைக்காகவே பயன்பட்டது.

குழப்பத் தன்மையும் மாறுதல் தன்மையும் வாய்ந்த பதினெட்டாம் நூற்றுண்டு இந்தியாவின் நெருக்கடியான இந்தக் காலம் அயல்நாட்டுப் படையெடுப்பாளர்கள் பிரதேச ஆதிக்கத்திற்காகப் போரிடவும் தந்திரம் செய்யவும் வாய்ப்பு அளித்தது. எல்லாரும் எல்லாரையும் எதிர்த்த இப்போரில் மிக முன்னேற்றம் கண்ட பூர்ஷ்வா அரசின் பிரதிநிதிகளான பிரிட்டிஷ் பூர்ஷ்வாக்கள் வெற்றி பெற்றனர். முதலில் பழைய வடிவங்களில் பெயரளவில் தோன்றிய நாட்டு ஆதிக்கம், பதினெட்டாம் நூற்றுண்டின் பிற்பாதியின் தொடக்கத்தில் வங்காளத்தை வெற்றி கண்டது முதல் தொடங்கியது; பத்தொன்பதாம் நூற்றுண்டின் துவக்கத்திற்குள் அது நிலையாகப் பரவி முழு ஆதிக்கமாகியது.

1858 வரை கம்பெனியே நடைமுறையில் பொறுப்பைத் தொடர்ந்து வகித்தது. ஆயினும், உண்மையில், புதியதாய்க் கைப்பற்றப்பட்ட பிரதேசங்களை ஆளும் முழுவுரிமை பிரிட்டிஷ் அரசுக்குத்தான் என்பது, நார்த் பிரபுவின் சீர்ப்படுத்தும் சட்டம் 1773 வாயிலாக ஏற்பட்டுவிட்டது. அச் சட்டம் கவர்னர் ஜெனரலையும், அவருக்கு ஓர் ஆலோசனைக் குழுவையும், ஒரு உச்ச

நீதி மன்றத்தையும் ஏற்படுத்தியது; 1784இல் நிறைவேற்றப் பெற்ற பிட் சட்டம் அரசு இந்தியக் காரியதரிசியையும் கட்டுப் பாடு வாரியம் ஒன்றையும் லண்டனில் நியமித்தது. கம்பெனியின் எடுப்பான பொருளாதாரப் பாகம், 1813 இல் ஏகபோகத்துக்கு முடிவு கட்டப்பட்டதோடு ஒரு முடிவுக்கு வந்துவிட்டது. (சீன வியாபார ஏகபோகம் மட்டும் தொடர்ந்தது; அதுவும் 1833-ல் முடிவுக்கு கொண்டு வரப்பட்டது.) பத்தொன்பதாம் நூற்றாண் டின் முதல் பகுதியில் இரட்டை ஆட்சி முறை நீடித்தது; 1857இல் நடந்த புரட்சி அதன் திவாலாகி, காலாவதியாகிவிட்ட தன்மையை வெளிப்படுத்தியது; அடுத்த ஆண்டிலேயே கம்பெனி இறுதியாகக் கலைக்கப்பட்டது.

ஆகவே, கிழக்கு இந்தியா கம்பெனி இந்தியாவின் மீது ஆதிக்கம் செலுத்திச் சிறப்பாகச் சுரண்டல் செய்த தீர்மானமான காலம், பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பாதி, நவீன முதலாளித் துவத்தின் பெரிய முளைவிடும் காலம் என்பதைக் காணலாம். இந்தச் சுரண்டலின் தன்மைக்கும், பின்னர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தொழில் — முதலாளித்துவத்தால் செய்யப்பட்ட சுரண்டலுக்கும் வேறுபாடு இருக்கிறது; அதைத் தனியாகவே ஆராய வேண்டும்.

இந்தியாவுடன் வர்த்தகம் செய்த கிழக்கு இந்தியா கம்பெனி யின் முதல் நோக்கம், எல்லா வணிக மூலதனமுள்ள கம்பெனிகளை யும் போல், ஒரு கடல் கடந்த நாட்டின் சரக்குகளிலும் உற்பத்திப் பொருள்களிலும் ஏகபோக உரிமை பெற்று ஆதாயம் ஈட்ட வேண்டும் என்பதுதான். பிரிட்டனில் உற்பத்தியான பொருள் களுக்குச் சந்தை தேடுவது அவர்களுடைய நோக்கம் அல்ல; இந்தியாவிலும் கிழக்கு இந்தியத் தீவுகளிலும் உற்பத்தியாகும் பொருள்களை (குறிப்பாக, வாசனைத் திரவியங்கள், பருத்திச் சரக்குகள், பட்டுச் சரக்குகள்) தொடர்ந்து பெறுவதற்கு முயற்சி செய்வதே அவர்கள் நோக்கம்; இச் சரக்குகள் இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் உடனுக்குடன் விற்பனை ஆயின; ஒவ்வொரு தடவை சரக்குகளோடு திரும்பியதும் ஏராளமான லாபம் கிட்டியது.

இந்தியாவிலிருந்து இப் பொருள்களை வாணிப முறையில் பெற வேண்டுமானால் பதிலுக்கு என்ன தருவது என்பது தொடக்கத்திலிருந்து கம்பெனிக்குப் பிரச்சினையாக இருந்தது. பதினேழாம் நூற்றாண்டின் துவக்கத்திலிருந்த நிலையில், இந்தியா வின் உற்பத்திப் பொருள்களுக்கு நிகரான தரமும் நுட்பச்சிறப்பும் உள்ள விலையுயர்ந்த பொருள்களேதும் இங்கிலாந்திடம் இல்லை. அங்கே வளர்ச்சி பெற்றிருந்த ஒரே தொழில், கம்பளிப்

பொருள்கள் உற்பத்தி; அவற்றை இந்தியாவில் பயன்படுத்த முடியாது. ஆகையால், இந்தியப் பொருள்களை வாங்குவதற்காக விலைவுயர்ந்த உலோகங்களை வெளியில் எடுக்க வேண்டியிருந்தது.

> ''கீழை நாடுகளுடன் வாணிபம் செய்வதிலிருந்த பெருங் கஷ்டம், கீழை நாடுகளுக்குத் தேவையானவற்றைத் தரும்படியாக ஐரோப்பாவில் மிகச் சில பொருள்களே இருந்தன—அரசவைகளுக்குத் தேவையான சில ஆடம்பரப் பொருள்கள், காரீயம், செம்பு, பாதரசம், வெள்ளீயம், பவளம், தங்கமும் தந்தமும் ஆகியவையும் வெள்ளியையும் தவிர்த்து இந்தியா பயன்படுத்தக் கூடிய வேறு பொருள்கள் இல்லை. ஆகையால், பெரும்பாலும் வெள்ளியே வெளியில் எடுக்கப்பட்டது.
>
> (எல். சி. ஏ. நௌல்ஸ்: ''கடல் கடந்த சாம்ராஜ்யத்தின் பொருளாதார வளர்ச்சி'', பக். 73.)

அதன்படி, கிழக்கு இந்தியா கம்பெனியின் தொடக்கத்தில், £ 30,000 மதிப்புள்ள வெள்ளியும், தங்கமும், அயல்நாட்டு நாணயமும் ஏற்றுமதி செய்வதற்குச் சிறப்பான உரிமை வழங்கப்பட்டது. ஆனால், இது வாணிப முதலாளித்துவத்திற்கு மிகுந்த வேதனையும் வெறுப்பும் தருவதாயிருந்தது. ஏனெனில், இந்த முதலாளிகள் விலைவுயர்ந்த உலோகங்களே நாட்டின் உண்மையான செல்வம் என்று கருதினார்கள்; வாணிபத்தின் முக்கியமான நோக்கமே இந்த விலைவுயர்ந்த உலோகங்களை மிகுதியாக மீத்து, மெய்யான செல்வத்தை அதிகரிக்க வேண்டும் என்பதுதான் என்றும் அவர்கள் கருதினார்கள்.

தொடக்கத்திலிருந்தே, கிழக்கு இந்தியா கம்பெனியின் வாணிகத் துணிச்சல்காரர்கள் இந்தப் பிரச்சினையைத் தீர்க்க வழி கண்டுபிடிக்கும் கவலையில் மூழ்கியிருந்தார்கள்; இந்தியாவின் சரக்குகளைக் கொஞ்சமாய்க் கொடுத்தோ அல்லது ஒன்றும் கொடுக்காமலோ பெறவேண்டும் என்பதே அவர்கள் திட்டம். அவர்களுடைய முதலாவது திட்டம், சுற்றி வளைத்து வாணிபம் செய்தல்: குறிப்பாக, ஆப்பிரிக்கா, அமெரிக்கா போன்ற ஏனைய காலனி நாடுகளில் அடித்த கொள்ளையை இந்தியப் பொருள்களை வாங்குவதற்குப் பயன்படுத்தல்; இந்தியாவை நேரே கொள்ளையடிக்கும் அதிகாரம் அவர்களுக்கு இன்னும் கிட்டவில்லை:

> ''இந்தியா மனமார எந்தப் பொருளை ஏற்கும் என்பதைக் கண்டுபிடிக்கும் வேட்டையே இந்தியாவுடன் ஆங்கிலேயர் செய்த வாணிபம்; மேற்கிந்தியத் தீவுகளிலும் ஸ்பானிஷ் அமெரிக்காவிலும் அடிமைகளை விற்பனை செய்து ஈட்டிய வெள்ளி இந்த விஷயத்தில் மிக மிக முக்கியம்.''
>
> (எல். சி. ஏ. நௌல்ஸ்: ஷை, பக். 74.)

ஆயினும், இந்தியாவில் ஆதிக்கம் ஏற்படத் தொடங்கியதும், பதினெட்டாம் நூற்றுண்டின் நடுவிலிருந்து, பரிவர்த்தனையில் பிடித்து, குறைந்த அளவு விலைக்கு அதிக அளவு சரக்குகளை மிகுதியாக மிச்சம் வாங்குவதற்கு அதிகார முறைகளைக் கையாள முடிந்தது. தொடக்கத்திலிருந்தே, வாணிபத்திற்கும் கொள்ளைக்கும் இடையில் அதிக இடைவெளி இல்லை; (ஆரம்ப காலத் 'துணிச்சல் காரர்கள்' வாணிபத்தோடு கடற்கொள்ளையும் அடித்தார்கள்.) வணிகனுக்கும் தனி உற்பத்தியாளருக்கும்—நெசவாளரோ, உழவரோ—இடையில் இருந்த உறவில் வணிகனின் கையே மேலோங்கி இருந்தது; தனக்குச் சாதகமாகவே அவன் பேரம் பேசி நிபந்தனைகளை விதித்தான்; இப்போது, பரிவர்த்தனையில் சமநிலை என்ற பாசாங்கையும் கைவிட்டுத் தராசில் வாளை எறிந்து தன் விருப்பத்திற்கு விலை கொடுத்துப் பொருள்களை வாங்க அவனுல் முடிந்தது. 1762 ஆம் ஆண்டில் வங்காள நவாப் கம்பெனி ஏஜண்டுகளைப் பற்றிக் கம்பெனியிடம் ஆண்மையில்லாமல் குறைப்பட்டுக் கொண்டிருந்தான்:

> "அவர்கள் ரயத்துகளிடமிருந்தும், வியாபாரிகளிடமிருந்தும், மற்றவர்களிடமிருந்தும் பொருள்களையும் சரக்குகளையும், அவற்றின் மதிப்பில் நாலில் ஒரு பங்கு தந்துவிட்டு வன்முறையாக எடுத்துச் சென்று விடுகிறுர்கள்; வன்முறையாலும் அடக்கு முறையாலும் ஒரு ரூபாய் மதிப்புள்ள பொருள்களுக்கு ஐந்து ரூபாய் தருமாறு ரயத்துகள் முதலியவர்களை நிர்ப்பந்தப்படுத்துகிறுர்கள்."
>
> (ஆங்கிலேயக் கவர்னரிடம் 1762, மே மாதம் வங்காள நவாப் கொடுத்த விண்ணப்பம்.)

அது போலவே, வில்லியம் போல்ட்ஸ் என்ற ஆங்கிலேய வியாபாரி, 1772 ஆம் ஆண்டில் வெளியிட்ட "இந்திய விவகாரங்கள் பற்றின சிந்தனைகள்" என்ற புத்தகத்தில் இந்த வியாபார முறை பற்றிப் பின்வருமாறு வருணிக்கிறுன்:

> "பணியாட்கள், கறுப்புக் குமாஸ்தாக்கள் துணையோடு ஆங்கிலேயர்கள், உற்பத்தியாளர்கள் எந்த அளவுச் சரக்குகளைத் தரவேண்டும், அவற்றுக்காக என்ன விலை வாங்கிக் கொள்ள வேண்டும் என்பதைத் தங்கள் விருப்பம் போல் தீர்மானிப்பார்கள்....ஏழை நெசவாளரின் சம்மதம் பெற வேண்டும் என்று பொதுவாக யாரும் நினைப்பதில்லை; கம்பெனியில் சம்பளம் வாங்கும் குமாஸ்தாக்கள் அவர்களிடம் விரும்பிய இடத்தில் கையெழுத்திடச் செய்வார்கள். கொடுத்த பணத்தை வாங்க மறுத்த நெசவாளர்கள் இடுப்பில் இறுகக் கட்டப்பட்டோ, அல்லது சாட்டையால்

அடிக்கப்பட்டோ அனுப்பப்படுவது தெரியும். . . . இந்த நெசவாளர்களில் பலர் கம்பெனியின் குமாஸ்தாக்களின் கணக்குப் புத்தகங்களில் பதிவு செய்யப்பட்டிருப்பார்கள்; வேறு யாருக்காகவும் வேலை செய்ய அவர்கள் அநுமதிக்கப்பட மாட்டார்கள்; அடிமைகளைப் போல் ஒருவரிடமிருந்து மற்றொருவரிடம் மாற்றம் செய்யப்படுவார்கள். . . . இந்தத் துறையில் செய்யப்பட்ட அயோக்கியத்தனம் கற்பனைக்கு எட்டாது; எல்லாம் ஏழை நெசவாளரை ஏமாற்றுவதிலேயே முடியும்; கம்பெனிக் குமாஸ்தாக்களும், அவர்களோடு ஜாச்சந்தர்களும் (ஆடைகளைச் சோதிப்போர்) சேர்ந்து நிர்ணயிக்கும் விலைகள், அப் பொருள்களை பொதுக் கடைவீதி அல்லது மார்க்கெட்டில் விற்பனை செய்தால் கிடைக்கக்கூடிய விலைகளில் 15 சதவீதம், சில இடங்களில் 40 சதவீதம் குறை வாகவே இருக்கும்.''

(வில்லியம் போல்ட்ஸ்: ''இந்திய விவகாரங்கள் பற்றின சிந்தனைகள்'', 1772, பக். 191–4.)

வாணிபம் என்ற பெயரால் நடந்தது வாணிபத்தைவிட மிகுதியாகக் கொள்ளையே.

ஆனால், 1765இல் வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகிய வற்றின் குடிமுறை ஆட்சி, 'திவானி' வழங்கப்பட்டதுடன் வருவாய்களை நிர்வாகம் செய்யும் பொறுப்பு கம்பெனியின் கை களில் போய்ச் சேரவே, 'வாணிபத்தில்' அடித்த கொள்ளையோடு, நேர்க்கொள்ளை அடிக்க எல்லையற்ற ஒரு துறையின் வழி திறக்கப் பட்டது. அப்பால், கம்பெனியின் வெட்கம் கெட்ட மொத்தக் கொள்ளையடிக்கும் போக்கு தொடங்கியது; அதனால், பதினெட் டாம் நூற்றாண்டின் இறுதி மூன்றும் பகுதியில் நடந்த கம்பெனி நிர்வாகம் வரலாற்றிலேயே ஒரு வழக்குச் சொல் ஆகிவிட்டது. 1784ஆம் ஆண்டில் மக்கள் மன்றத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் சொற்களில் கூறுகிறோம்:

''பாராளுமன்ற விசாரணைகளின் முடிவு இது: கிழக்கு இந்தியா கம்பெனி முற்றிலும் நேர்மை அற்றது; அரசியல் அல்லது வாணிபத் துறையில் அது எந்த நோக்கங்களுக்காக நிறுவப்பட்டதோ அவற்றினின்று முற்றிலும் திசை மாறி விட்டது. போர் புரியவும் சமாதானம் செய்து கொள்ளவும் உரிமைச் சாஸனம் வழங்கிய உரிமைகளை, ஒவ்வோரிடத்திலும் பிணக்குகளைத் தூண்டிக் கொள்ளையடிப்பதற்காகத் துஷ்பிர யோகம் செய்துள்ளார்கள். அவர்கள் செய்து கொண்ட சமாதான உடன்படிக்கைகளில் பெரும்பாலும் எல்லாம் மீறப் பட்டு மக்களின் நம்பிக்கையைக் குலைக்கவே காரணம் ஆயின.

சீரும் சிறப்பாக விளங்கிய நாடுகள், மக்கட் தொகை குன்றி அழிவுபட்டுக் கையாலாகாத நிலைக்குத் தாழ்த்தப் பட்டுள்ளன.''

இதனோடு, 1858இல் கம்பெனி பாராளுமன்றத்தின் முன் வைத்த விண்ணப்பத்தில் தன் பணியைப்பற்றி விவரித்துள்ளதை ஒப்பிடலாம் (ஆஷாடபூதி கர்வி ஜான் ஸ்டுவர்ட் மில்லினால் எழுதப்பட்டது);

''அவர்கள் பங்கு கொண்ட அரசாங்கம் மிகத் தூய நோக்கம் கொண்டது மட்டும் அல்ல, மனித வர்க்கம் அறிந்த மிகக் கருணை வாய்ந்த செயல்கள் புரிவது.''

இவ்வாறு உரிமை கொண்டாடியதற்குப் பதிலாக சர் ஜார்ஜ் கார்னிவால் லூவிஸ் 1858-இல் பாராளுமன்றத்தில் அறிவித்தார்:

''இந்த உலகத்தில் இதைவிட ஊழல்மிக்க, நரகத்தன்மை வாய்ந்த, பேராசை படைத்ததொரு நாகரிகமான அரசாங்கம் இருந்ததில்லை என்று நம்பிக்கையோடு உறுதி கூறுகிறேன்— 1765 முதல் 1784 வரை கிழக்கு இந்தியா கம்பெனி நடத்திய அரசாங்கமே அது.''

(மக்கள் மன்றத்தில் சர் ஜார்ஜ் கார்னிவால் லூவிஸ், 1858, பிப்ரவரி 12இல்.)

கிழக்கு இந்தியா கம்பெனியின் 'காருண்யச் செயல்கள்' பற்றிக் கிளைவின் சொந்தக் கருத்துக்கள் 1772இல் அவர் பாராளு மன்றத்தின் முன் நிகழ்த்திய உரையில் வெளியாகின்றன (கம்பெனி யின் தனி ஊழியர்கள் அடித்த தனிப்பட்ட கொள்ளையும் கம்பெனியின் கொள்ளையோடு சேர்ந்தது):

''பிரான்சையும் ரஷ்யாவையும் தவிர்த்து ஐரோப்பாவில் வேறு எந்த அரசாங்கத்திற்கும் இல்லாத விசாலமான சாம் ராஜ்யத்தைக் கம்பெனி ஈட்டியுள்ளது. அவர்கள் 40 இலட்சம் ஸ்டெர்லிங் வருவாயும், அந்த அளவு வாணிபமும் ஈட்டியுள் ளனர். இத்தகைய பொருள் நிர்வாகத்தினரின் ஆழ்ந்த கவனத்திற்கான தகுதி வாய்ந்ததே என்று ஊகம் செய்ய வேண்டியது இயற்கை....அவர்கள் அதைக் கவனத்தில் கொண்டார்களா? இல்லை, அவர்கள் கவனத்தில் கொள்ள வில்லை. அதை அவர்கள் உருப்படியானதாகவும் உருவுள்ள தாகவும் கருதாமல் தென்கடல் குமிழியாய்க் கையாண்டார் கள். எதிர்காலம் பற்றி எண்ணாமல், நிகழ்காலம் தவிர அவர்கள் வேறு எதைப்பற்றியும் எண்ணவில்லை. 'இன்று கிடைப்பதை எடுத்துக் கொள்வோம், நாளை நடப்பது நடக்

கட்டும்' என்றார்கள் அவர்கள். கிடைக்கும் ரொட்டித் துண்டங்களையும் மீன்களையும் உடனுக்குடன் பங்கிட்டுக் கொள்வதைத் தவிர, அவர்களுக்கு வேறு நாட்டமில்லை.''

(மக்கள் மன்றத்தில் 1772, மார்ச் 30-இல் கிளைவின் சொற்பொழிவு.)

தான் கைப்பற்றிய வங்காளம், மற்ற பிரதேசங்களில் குடிமுறை அதிகாரம் பெற்றதும் கிழக்கு இந்தியா கம்பெனி ஏற்படுத்திய ஆட்சி முறையின் தன்மை என்ன? நிர்வாகத்தை அவர்கள் மேற்கொண்டதே, எவ்வளவு ஆதாயம் ஈட்டலாம், இங்கிலாந்துக்கு எவ்வளவு அனுப்பலாம் என்ற ஒரே நாட்டத்துடன் தான்; இதை 1765ஆம் ஆண்டில் கிளைவ் கம்பெனி இயக்குநர்களுக்கு எழுதிய கடிதத்தில் மிகத் தெளிவாகவும் எளிதாகவும் உரைக்கிறார்; பின்னால் ஒரு தரும சிந்தனை படைத்தவர்போல் நடித்து அவர் எழுதியதற்கு இது நேர்மாறானது, உற்சாகம் தருவது:

''இதைக் கைப்பற்றியதால் உங்கள் வருவாய்கள், என்னால் தீர்மானிக்க முடிந்தவரை, உங்களுடைய பழைய பர்த்வானின் உடைமைகளையும் சேர்த்து 250 இலட்சம் சிக்கா ரூபாய்களாகும். இனி, குறைந்த அளவு 20 அல்லது 30 இலட்சம் அவை கூடுதலாகும். உங்களுடைய குடிமுறை, ராணுவச் செலவுகள் சமாதான காலத்தில் 60 இலட்சம் ரூபாய்களுக்கு மேல் போகாது; நவாபுக்கு அளிக்கப்பட்ட படி 42 இலட்சமாக ஏற்கனவே குறைக்கப்பட்டு விட்டது; அரசருக்கு (மகா முகலாய மன்னருக்கு)க் காணிக்கை 26 இலட்சமாகக் குறைக்கப்பட்டு விட்டது; ஆக, தெளிவான மிச்ச ஆதாயம் 122 இலட்சம் சிக்கா ரூபாய்கள், அல்லது £ 1,650,900 ஸ்டெர்லிங்.''

(கிளைவ், 1765 செப்டம்பர் 30இல், கிழக்கு இந்தியா கம்பெனி இயக்குநர்களுக்கு எழுதிய கடிதம்.)

இதில் எல்லாமே நேராகவும் வியாபார ரீதியிலும் ஒரு வணிகனின் கணக்குப் புத்தகத்தைப்போல் இருக்கின்றன. மக்களிடமிருந்து கவரப்பட்ட மொத்த வருவாயில் கால் பகுதியே அரசாங்கத்தின் காரணங்களுக்குப் போதும் என்று கருதப்படுகிறது; இன்னும் கால்பகுதி நவாபையும் முகலாய மன்னரையும் சரிக்கட்ட தேவைப்படுகிறது; மிச்சம் அல்லது பாதி வருவாய் 'தூய ஆதாயம்'; அதன் மதிப்பு £ 15 இலட்சம். பாட்டம்லி கண்ட பழைய கனவு ''வணிகனின் அரசு'' இதோ முழுமையாக நிறைவேறுகிறது; இதற்கு ஈடு முன்பு இருந்ததில்லை, இனி இருக்கப் போவதில்லை.

கம்பெனியின் நிர்வாகத்தில் வங்காளம் இருந்த முதல் ஆறு ஆண்டுகளின் வரவு செலவு அறிக்கையிலிருந்து விளைவுகளுக்கும் நோக்கங்களுக்கும் இருந்த பொருத்தம் எத்தகையது என்பதை அறியலாம்; 1773ஆம் ஆண்டு பாராளு மன்றத்தில் இவ்வாறு அறிவிக்கப்பட்டது. மொத்த நிகர வருமானம் £ 13,066,761 என்று கூறப்பட்டது; மொத்தம் செலவு £ 9,027,609; மிச்சம் £ 4,037,152 அனுப்பப்பட்டது. இவ்வாருக, வங்காளத்தின் வருவாய்களில் சுமார் மூன்றில் ஒரு பகுதி நாட்டுக்கு வெளியே 'தூய ஆதாயமாக' அனுப்பப்பட்டது.

ஆனுல், இது தீர்வை முழுவதும் அல்ல. கம்பெனியின் தனி அதிகாரிகள் பெருஞ்செல்வம் சேர்த்துக் கொண்டார்கள். வெற்றுளாய் வாழ்க்கையைத் தொடங்கிய கிளைவே சுமார் 2·5 இலட்சம் பவுன்கள் மதிப்புள்ள செல்வத்தோடு நாடு திரும்பினுர்; அதைத் தவிர, ஆண்டுக்கு £ 27,000 வருமானம் தரக்கூடிய ஓர் இந்திய எஸ்டேட் இருந்தது. ''£ 100,000 மதிப்புள்ள செல்வங்கள் இரண்டே ஆண்டில் கிடைத்தவை'', என்று அவர் அறிவித்தார். ஏற்றுமதி, இறக்குமதி விவரங்களிலிருந்து இந்தியா செலுத்திய கப்பத்தின் முழு அளவை ஓரளவு அறியலாம்; கவர்னர் வெரல்ஸ்டின் அறிக்கைப்படி 1766 முதல் 1768 முடிய மூன்ருண்டுகளில் ஏற்றுமதியின் மதிப்பு £ 6,311,250; இறக்குமதியின் மதிப்பு £ 624,375 மட்டுமே. ஆக, ஒரு நாட்டை ஆண்ட இந்தப் புது மாதிரி வணிகக் கம்பெனியின் ஆட்சிப் பொறுப்பில் நாட்டுக்கு உள்ளே வந்ததைவிட பதின்மடங்கு மிகுதியாக வெளியே அனுப்பப்பட்டது.

கிழக்கு இந்தியா கம்பெனியின் வியாபாரிகள் கண்ட அருமையான கனவு இவ்வாறு நனவாயிற்று. கிளைவின் ஆட்சிக்குழு உறுப்பினரான எல். ஸ்கிராப்டன் ஏற்கனவே 1763இல் ஆனந்தப்பட்டு பிளாஸிக்குப் பிறகு கைக்கொள்ளப்பட்ட கொள்ளை முறையின் ஆரம்பக் கட்டங்களின் அடிப்படையில் மூன்ருண்டுகள் இந்திய வாணிபம் முழுவதையும் 'ஓர் அவுன்ஸ் தங்கமோ வெள்ளியோ வெளியில் அனுப்பாமல்' நடத்த முடிந்தது என்று பெருமிதம் கொண்டார்.

> ''இந்தப் புகழ்பெற்ற வெற்றிகள் சுமார் முப்பது இலட்சம் பணமாக நாட்டுக்குக் கொண்டு வந்தது; ஏனெனில், சரியாகச் சொன்னுல், ஸுபாவிலிருந்து பெறப்படும் பெருந்தொகைகளின் பெரும்பாலும் முழுவதுமே இறுதியில் இங்கிலாந்துக்கே வந்து சேரும். அதனில் பெரும் அளவு கம்பெனியாரின் கைகளில், அவர்களுடைய சொந்தப் பங்கிலிருந்தோ, வட்டிகளுக்காகவும் பற்று சீட்டுகளுக்காகவும்

கல்கத்தா கருவூலத்தில் செலுத்தப்பட்ட தொகைகளி லிருந்தோ போய்ச் சேர்ந்தன; அவற்ருல், அவர்கள் இந்திய வாணிபம் முழுவதையும் (சீஞ நீங்கலாக) மூன்ருண்டுகள் வரை 'ஓர் அவுன்ஸ் தங்கமோ, வெள்ளியோ வெளியில் அனுப்பாமல்' நடத்த முடிந்தது. வெளிநாட்டுக் கம்பெனிகள் வாயிலாகவும் பெருந்தொகைகள் செலுத்தப்பட்டுள்ளன; அந்த வெளிநாடுகளுடன் நமக்குள்ள வாணிபத்தில் அந்த அளவுத் தொகை நமக்குச் சாதகமாகும்.''

(எல். ஸ்கிராப்டன்: ''இந்துஸ்தான் அரசு பற்றிய நினைவுகள்''; 1763)

வங்காளத்திலிருந்து இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்ட வருவா யினங்களை தலைகீழ் நியாய மொழியில் கம்பெனியின் ''முதலீடு'' என்று குறிப்பிட்டார்கள். இந்த நிகழ்முறை பற்றி மக்கள் மன்றத்தின் 'ஸெலக்ட் கமிட்டி' 1783இல் அறிவித்தது:

''வங்காளத்தின் வருவாய்களில் ஒரு பகுதி, இங்கிலாந் துக்கு ஏற்றுமதி செய்ய வேண்டிய சரக்குகளைக் கொள்முதல் செய்வதற்கெனப் பல ஆண்டுகளாய் ஒதுக்கி வைக்கப்படு கிறது; இது 'முதலீடு' என்று கூறப்படும். இந்த முதலீட்டின் அளவைப் பொருத்துக் கம்பெனியின் முக்கிய ஊழியர்களின் தகுதி சாதாரணமாக அறுதியிடப்பட்டது; இந்தியா வறுமை வாய்ப்படுவதற்கு இது மூல காரணம்; ஆனல், அதன் செல் வத்தையும் செழிப்பையும் அளக்கும் ஓர் அளவுகோலாக அதைக் கொண்டனர்.... அந்த நாட்டுக்கு நன்மை புரியக் கூடிய வாணிபம் அல்ல, அந்த நாடு செலுத்திய கப்பத் தொகைக்கு இந்த மெய்யற்ற மாயாவடிவம் இருந்தது....

''இங்கிலாந்துக்கும் வங்காளத்துக்கும் இடையில் நடப்பது இருவழிப் போக்குவரத்துள்ள வாணிபம் அல்ல; இங்கிலாந்துக்கு ஒருவழிவரத்துள்ள பேரம்தான் என்பதைக் கணக்கு பார்த்தால் அறியலாம்; வருவாயிலிருந்து முதலீட்டுக்காக ஒதுக்கிக்கொண்டுபோகும் இந்த ஏற்பாட்டின் நாசகரமான விளைவுகளின் கடுமையையும் அறியலாம்; அதன்படி, கம்பெனியைப் பொறுத்தமட்டில் நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் உற்பத்திப் பொருள் முழுவதும் பண்டமாற்று முறையில் அனுப்பப்படுவது அல்ல; எந்தவிதப் பிரதி பிரயோசனம் இல்லாமல், அல்லது பணம் வாங்கப் படாமல் எடுத்துச் செல்லப்படுகிறது.

(''மக்கள் மன்றத்து செலக்ட் கமிட்டியின் 9 வது அறிக்கை'', 1783; பக். 54-5)

இந்த ஏற்பாட்டினால் வங்காளத்து மக்களுக்கு உண்டான பாதக்ங்களை எளிதில் கற்பனை செய்து கொள்ள முடியும். முடிவின்றி, மேலும் மேலும் கொள்ளையடிக்க முற்பட்டதன் விளை வாக நிலவரி மிக உயர்த்தப்பட்டுச் சில சமயம் உழவர்கள் விதை நெல்லையும் மாடுகளையும்கூட எடுத்துக் கொண்டார்கள். கடைசி இந்திய மன்னன் வங்காளத்தை ஆட்சி புரிந்த இறுதியாண்டில், 1764-65இல் நிலவரி வருவாயின் மதிப்பு £ 817,000; கம்பெனி யின் முதலாண்டு ஆட்சியில் 1765-66இல் வசூலிக்கப் பட்ட நிலவரி மதிப்பு £ 1,470,000; 1771-72 அளவில் அது £ 2,341,000 ஆக ஏறி, 1775-76இல் அது £ 2,818,000 ஆகியது. 1793இல் கார்ன்வாலிஸ் பிரபு 'நிரந்தர ஏற்பாடாக' நிர்ணயித்த தொகை £ 3,400,000.

இந்த ஏற்பாடு அமுலுக்கு வந்த சில ஆண்டுகளில் நாட்டில் உண்டான நாசத்தைச் சமகால சாட்சிகள் எல்லோரும் உறுதி செய்கின்றனர்; அதைத் தொடர்ந்து வந்த பஞ்சத்தால் மக்கட் தொகையில் மூன்றிலொரு பகுதி குறைந்தது; நாட்டில் மூன்றி லொரு பகுதி 'காட்டு விலங்குகள் மட்டும் வாழும் ஒரு கானகம்' ஆயிற்று. 1769இல் மூர்ஷிதாபாத் வட்டார அதிகாரி பெசர் கம்பெனிக்கு அறிவித்தார்:

> ''கம்பெனி தீவானியை ஏற்றுக் கொண்டபின் நாட்டு மக்களின் நிலைமை முன்னைவிட மோசமாகியுள்ளது என்று எண்ணக் காரணம் உண்டு என்றால் ஓர் ஆங்கிலேயனுக்கு வேதனையாக இருக்கும்; ஆனால், உண்மை அதுதான் என்பதில் சந்தேகமில்லை என்று அஞ்சுகிறேன்....மிகக் கொடுங்கோல் சர்வாதிகார ஆட்சியில் வளமாக இருந்த இந்த நேர்த்தியான ஆட்சியில் பெரும் பங்கை ஆங்கிலேயர் ஏற்றுள்ள நாடு, இப்போது அழிவை நோக்கிச் செல்கிறது.
>
> ''இந்த நாட்டில் வாணிபம் சுயேச்சையாக நடந்த காலத்தையும், அப்போது இந்த நாடு எவ்வளவு வளமாக இருந்தது என்பதையும் நான் நன்றாக நினைவில் வைத்திருக் கிறேன்; இப்போதைய அதன் பாழடைந்த நிலையை நான் கவலையோடு பார்க்கிறேன்; நாட்டில் உற்பத்தி செய்யப்படும் ஏறக்குறைய எல்லாப் பொருள்களின்மீதும், சமீப ஆண்டு களில் கம்பெனியின் பெயரால் ஏகபோகவுரிமை கொண்டா டப்படுவதே இந்த நிலைக்குக் காரணம் என்பது பற்றி எனக்கு ஐயமில்லை.''

1770இல் வங்காளத்தின் இந்தப் 'பாழடைந்த நிலையை' ஒரு பஞ்சம் தொடர்ந்தது; கம்பெனியின் அதிகார பூர்வமான

அறிக்கைப்படி அது, 'எந்த வருணனைக்கும் எட்டாதது; ஒரு காலத்தில் வளமை கொழித்த பூர்ணியா மாகாணத்தில் மூன்றிலொரு பகுதி மக்கள் அழிந்துபட்டனர்; மற்ற பகுதிகளிலும் இதே துன்ப நிலைதான்'. இந்தப் பஞ்சத்தில் ஒரு கோடி மக்கள் அழிந்திருப்பர் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. ஆயினும், இந்தப் பஞ்ச காலத்திலும் நிலவரி நிர்ப்பந்தமாய் வசூலிக்கப்பட்டது மட்டும் அல்ல; ஏற்றவும்பட்டது. 1771, பிப்ரவரி 12ஆம் நாள் கம்பெனியின் கல்கத்தா கவுன்சில் பின்வருமாறு அறிவித்தது: "சமீபத்துப் பஞ்சம் கடுமையானது என்றாலும் அதனால் மக்கட் தொகை குறைந்திருந்தாலும் வங்காளம், பீகார் ஆகிய இரு மாகாணங்களின் நிலத் தீர்வை இவ்வாண்டு சற்று ஏற்றப்பட்டுள்ளது." இது எப்படி சாதிக்கப்பட்டது என்பதை 1772 ஆம் ஆண்டில் வாரன் ஹேஸ்டிங்ஸின் சோகக் குறிப்பு பதிவு செய்கிறது:

> "மாகாணத்தின் மக்கட் தொகையில் மூன்றிலொரு பகுதி அழிந்திருந்தும் அதைத் தொடர்ந்து வேளாண்மை குறைந்திருந்தும் 1771ஆம் ஆண்டின் நிகரவசூல் 1768ஆம் ஆண்டின் நிகரவசூலைவிட மிகுதியாக இருந்தது.... அவ்வளவு பெரிய ஆபத்தின் விளைவுகளுக்கு நிகரான வருவாய்க் குறைவு ஏற்பட்டிருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது இயற்கையாக இருக்கும். அது அவ்வாறு நேரவில்லை என்றால் பழைய அளவுக்கு அது வன்முறையால் நிலைநாட்டப்பட்டதே காரணம்."
>
> (வாரன் ஹேஸ்டிங்ஸ்: இயக்குநர்களின் கோர்ட்டுக்கு அறிக்கை, நவம்பர் 3, 1772)

பதினைந்து ஆண்டுகளுக்குப் பின் பார்லிமென்ட் உறுப்பினர் வில்லியம் புல்லாட்ரன் கம்பெனியின் இருபதாண்டு ஆட்சிக்குப் பிறகு வங்காளத்தில் ஏற்பட்ட மாறுதலைப் பின் வருமாறு வருணிக்கிறார்:

> "முன்காலங்களில் வங்காளக் கிராமப்புறங்கள் நாடுகளின் களஞ்சியமாகவும், கீழை நாடுகளின் வாணிபத்திற்கும், செல்வத்திற்கும், தொழிலுற்பத்திக்கும் இருப்பிடமாகவும் விளங்கியது....
>
> "ஆனால், நம்முடைய அக்கிரம ஆட்சியின் ஒய்வற்ற சக்தியின் பயனாக, இருபதாண்டுக் குறுகிய காலத்தில் கிராமப் புறங்களின் பல பகுதிகள் பாலைவனத் தோற்றத்தை அடைந்து விட்டன. வயல்களில் பயிரிடப்படுவதில்லை; விசாலமான நிலப்பரப்புகளில் புதர்கள் மண்டி அடர்ந்துள்ளன. உழவன் கொள்ளையிடப்படுகிறான்; தொழிலுற்பத்தியாளர் ஒடுக்கப்

படுகிறுன்; பஞ்சம் மீண்டும் மீண்டும் தடுக்கப்படுகிறது; மக்கட்தொகைக் குறைவு தொடங்கிவிட்டது.''

(வில்லியம் புல்லடாட்ரன், எம். பி., ''இந்தியாவில் ஆங்கிலேயே நலன்கள் பற்றி ஒரு கண்ணேட்டம்'', 1787.)

வலிமைமிக்க சொற்களில் குற்றம் சாட்டி பர்க் உரைத்தார்: ''நாம் இன்று இந்தியாவைவிட்டுத் துரத்தப்படுவதாக இருந்தால், நம் ஆதிக்கத்தில் அந்நாடு இருந்த காலத்தில், அது உராங்உடாங் அல்லது புலியைவிடச் சிறந்த நன்றின் உடைமையாக இருந்தது என்று கூறுவதற்குச் சாட்சியமாக எதுவும் எஞ்சாது''

இந்த வலிய சொற்பொழிவின் எதிரொலி, 1789இல் கவர்னர் ஜெனரல் கார்ன்வாலிஸ் வெளியிட்ட அறிக்கையில் உண்மைத் தகவலாய்க் கேட்டது:

''ஹிந்துஸ்தானத்தில் கம்பெனி வசமுள்ள பிரதேசங்களில் மூன்றிலொரு பகுதி கொடிய விலங்குகளே வசிக்கும் ஒரு காடாக இருக்கிறது என்று நான் பத்திரமாய் உரைக்கலாம்.''

(கார்ன்வாலிஸ் பிரபு: 1789, செப்டம்பர் 18 ஆம் நாட் குறிப்பு)

## 2. இந்தியாவும் தொழிற்புரட்சியும்

பதினெட்டாம் நூற்றுண்டின் பிற்பாதியில் இந்தியாவில் அடிக்கப்பட்ட கொள்ளையை அஸ்திவாரமாக வைத்துத்தான் நவீன இங்கிலாந்து உருவாக்கப்பட்டது.

பதினெட்டாம் நூற்றுண்டுக்கு நடுவிலும் இங்கிலாந்து பிரதானமாய் ஒரு விவசாய நாடாகவே இருந்தது. 1750 இல் 'வடக்கு நாடுகளில்' மக்கட் தொகையில் மூன்றில் ஒரு பகுதியினரே வசித்தனர்; லங்காஷயரைவிட கிளஸ்டெசஸ்டர்ஷயரில் ஜனநெருக்கடி மிகுதி. (ஏ. டாயின்பீ: ''தொழிற் புரட்சி'', பக். 9—10) கம்பளித் தொழிலே அப்போதும் பிரதானமாக இருந்தது; பேயன்ஸ் எழுதிய, ''பருத்தி உற்பத்தியின் வரலாறு'' என்னும் நூலில் (பக். 112) கூறியுள்ளபடி, மொத்த ஏற்றுமதிகளில் மூன்றில் ஒரு பகுதி அல்லது நாலில் ஒரு பகுதி கம்பளி ஏற்றுமதிகளே. ''பருத்தி உற்பத்தியில் பயன்படுத்தப்பெற்ற இயந்திரங்கள் இந்தியாவில் இருந்தவை போலவே மிகச் சாதாரணமானவை'', (பக். 115) என்று பேய்ன்ஸ் எழுதுகிருர்.

சமூக ரீதியில், வர்க்கப் பிரிவினையைப் பொருத்தமட்டில், ஒரு பாட்டாளி வர்க்கம் தோற்றத்திற்கும் உறுதியான ஒரு பூர்ஷ்வா

ஆட்சி ஏற்படுவதற்கும், தொழில் முதலாளித்துவம் முன்னேறு வதற்கும் காலம் கனிந்திருந்தது. தொழில் அஸ்திவாரம் போடப் பட்டுவிட்டது. ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டிற்கு இடையில் இங்கிலாந்தில் இருந்ததைவிட மிகையான மூலதனக்குவை தொழில் முதலாளித்துவ முன்னேற்றத்திற்குத் தேவைப்பட்டது.

அப்பால், 1757 இல் பிளாஸிப் போர் வந்தது; இந்தியாவின் செல்வம் வற்றாத ஊற்றாக நாட்டில் பெருக்கெடுத்து ஓடலாயிற்று.

உடனடியாக, தொழிற்புரட்சியைத் தொடங்கிய புதியன ஆக்கங்கள் வரிசையாக ஆரம்பமாயின. 1765 இல் ஹார்கிரீவ்ஸின் நூற்பு இயந்திரம் வந்தது; 1765 இல் வாட்டின் நீராவி இஞ்சின் தோன்றி, 1769 இல் தனியுரிமை பெற்றது; 1769 இல் ஆர்க் ரைட்டின் 'தண்ணீர்க்கூடு' வெளிவந்ததை அடுத்து அவருடைய சிக்கெடுத்துச் சுத்தப்படுத்தும் கருவியும், இழுவைக் கருவியும், நூற்பு இயந்திரமும் வந்தன. 1779 இல் கிராம்ப்டனின் நூற்புக் கருவியும், 1785 இல் கார்ட்ரைட்டின் விசைத் தறியும் வந்தன; 1788 இல் நீராவி இயந்திரம் வெடிவுலைக்குப் பயன்படுத்தப் பட்டது.

இவ்வாறு புதியன ஆக்கங்கள் இக் காலத்தில் அடுக்கடுக் காய்த் தொடர்ந்ததற்குக் காரணம், அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளச் சமூக நிலைகள் கனிந்திருந்தன என்பதே. முன்பு, புதிய ஆக்கல்கள் லாபகரமாய்ப் பயன்படுத்தப்படவில்லை: "1733இல், கே தன்னுடைய 'பறக்கும் ஷட்டிலை' உரிமைப் பதிவு செய்து கொண்டார்; 1738 இல் வியாட் நீர்விசையால் இயங்கும் 'ரோலர்' நூற்பு இயந்திரத்தை உரிமைப் பதிவு செய்து கொண்டார்; ஆனால், இவ்விரு கருவிகளும் பழக்கத்திற்கு வந்த தாய்த் தெரியவில்லை." (ஜி. எச். பெர்ரிஸ்: "நவீன இங்கிலாந் தின் தொழில் வரலாறு;" பக். 16.)

இங்கிலாந்தின் தொழில் வரலாற்றில் தலைசிறந்த நிபுண ரான டாக்டர் கன்னிங்ஹாம் எழுதிய "நவீன காலத்தில் இங்கிலாந்தின் தொழில், வாணிப வளர்ச்சி" என்ற நூலில், புதியன ஆக்கும் யுகத்தின் வளர்ச்சிக்கு "சிறப்பான, காரணம் கூற முடியாத மேதாவிலாசத்தின் திடீர் வெளிப்பாடு மட்டும் காரணம் அல்ல", ஆனால் அவற்றைப் பயன்படுத்திக் கொள் வதற்குத் தேவையான மூலதனம் போதிய அளவு குவிக்கப் பட்டிருக்க வேண்டும் என்பதே இன்றியமையாத நிலை.

> "புதியன ஆக்கல்களும் புதியன காணல்களும் தற்செய லாக நிகழ்பவை போல் அடிக்கடி தோன்றுகிறது; பதி னெட்டாம் நூற்றாண்டில் ஒரு சிறப்பான, காரணம் கூற

முடியாத ஒரு மேதாவிலாசத்தின் திடீர் வெளிப்பாட்டின் விளைவாகப் புதிய கருவி தோன்றியது என்று மக்கள் நினைக்கக் கூடும். ஆனால், ஆர்க்ரைட்டும், வாட்டும் கனிவான காலத்தில் தோன்றிய அதிர்ஷ்டசாலிகள் என்று கூறுவதால் அவர்களுடைய தகுதியைக் குறைப்பதாகாது. வில்லியம் லீ, டோடோ டட்லியின் காலத்திலிருந்து பல மேதைகள் இருந்திருக்கிறார்கள்; ஆனால், அவர்கள் வெற்றி பெறுவதற்கு அவர்களுடைய காலம் சாதகமாயில்லை.

''விலையுயர்ந்த கருவிகளையும் அல்லது முறைகளையும் பயன்படுத்துவதற்குப் பெரும் முதலீடு தேவை; ஒருவன் ஆற்றல் மிக்கவனாக இருக்கலாம், முயற்சி உடையவனாக இருக்கலாம். ஆனால் போதுமான மூலதன வசதியும், விரிவான மார்க்கெட் வசதியும் இல்லாவிட்டால் ஏதும் பயனில்லை. பதினெட்டாம் நூற்றாண்டில், இந்த நிலைமையின் உண்மை நன்றாய் வெளிப்பட்டது. இங்கிலாந்து பாங்கும், மற்ற பாங்குகளும் மூலதனம் உருவாகப் பெரும் ஊக்கம் அளித்தன; அதற்கு முன்பு வேறு எக்காலத்திலும் இருந்ததைவிட இக் காலத்தில், ஆற்றலுள்ள ஒருவன் தன் வாணிப முன்னேற்றத் திற்கென விலையுயர்ந்த கருவிகளைப் பயனுக்குக் கொண்டுவர மிக மிக வசதியான நிலைமை இருந்தது.''

(டபிள்யூ. கன்னிங்ஹாம்: ''நவீன காலத்தில் இங்கிலாந்தின் தொழில், வாணிப வளர்ச்சி''; பக். 610.)

1694 இல் 'பாங்க் ஆப் இங்கிலாந்து' என்ற நிறுவனம், தானே மூலதனத்தைப் போதுமான அளவு திரட்டிக்கொடுக்க முடியவில்லை. பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதிவரை பாங்கு மூலதனமும், நடமாடும் மூலதனமும் குறைவாகவே இருந்தன. பதினெட்டாம் நூற்றாண்டின் இரண்டாம் பாதியில் மூலதனக் குவை எங்கிருந்து திடீரென்று வந்தது? நவீன காலத்து உலகத்தின் ஆரம்ப கால மூலதனக் குவை, பூர்ஷ்வா வர்க்கத் தோற்ற காலத்திலும் அதன் பின் வளர்ச்சிக் காலத்திலும் நடந்ததைப் போலவே காலனி முறைக் கொள்ளை வாயிலாகவே திரளுகிறது என்பதை மார்க்ஸ் வெளிப்படுத்தியுள்ளார்; மெக்ஸிகோவிலிருந்தும் தென் அமெரிக்காவிலிருந்தும் வந்த வெள்ளி, அடிமை வியாபாரத்திலும் இந்தியாவிலும் அடித்த கொள்ளை இந்த மூலதனக் குவையில் கூடின. (''ஆகியர் கூறுவதுபோல் 'ஒரு கன்னத்தில் பிறவியோடு வந்த ரத்தக்கறை போல் பணம் உலகத்தில் வருகிறது' என்றால், தலை முதல் கால் வரை ஒவ்வொரு துவாரத்திலிருந்தும் ரத்தமும் அழுக்கும் சொட்டச் சொட்ட மூலதனம் வருகிறது''

(''மூலதனம்'' முதல் தொகுதி; 31 ஆம் அத்தியாயம்) பதினெட்டாம் நூற்றுண்டின் இரண்டாம் பாதியில் இங்கிலாந்தில் திடீர் மூலதனத் தோற்றம் ஏற்படக் காரணம் முக்கியமாக இந்தியாவில் அடிக்கப்பட்ட கொள்ளேயே.

> 'பாங்க் ஆப் இங்கிலாந்து நிறுவப்பட்டு அறுபது ஆண்டுகளுக்கு மேலாகியும், அது வெளியிட்ட மிகச் சிறு தாள் நாணயம், இருபது பவுன் நோட்டுகளே; அது தாராளப் புழக்கத்திற்காகாத பெரிய நாணயம்; ஆகையால், லம்பார்ட் வீதியைத் தாண்டி அது நீண்ட தூரம் போவது அரிது. 1790 இல் எழுதுகையில் பர்க், 1750 இல் அவர் இங்கிலாந்துக்கு வந்தபோது மாகாணங்களில் 'பன்னிரண்டு பாங்கர்களின் கடைகள்' கூட இல்லே என்று கூறினுர்; ஆனுல், அவை இப்போது (1790) ஒவ்வொரு சந்தை நகரத்திலும் இருந்ததாக அவர் குறிப்பிட்டார். இவ்வாறு, வங்காள வெள்ளியின் வருகையால் பணக் குவை பெருகியதுடன் அதன் நடமாட்டத்தையும் தூண்டி விட்டது; ஏனெனில், 1759 இல் அந்த பாங்க் £ 10, £ 15 தாள் நாணயங்களே ஏக காலத்தில் வெளியிட்டது; கிராமப் பகுதிகளில் தனியார் கடைகள் தாள் நாணயங்களே வெள்ளமாய்க் கொட்டின.''
>
> (ப்ரூக்ஸ் ஆடம்ஸ்: நாகரீகத்தின் சட்டமும் தேய்வும், பக். 263-4.)
>
> ''நாட்டின் ரொக்க மூலதனத்தைப் பெருக்குவதாக வந்த இந்தியப் பொக்கிஷம் அதன் கையிருப்பு சக்தியை அதிகப் படுத்தியதல்லாமல், அதன் வளேந்து கொடுக்கும் தன்மையையும், விசையாக இயங்கும் தன்மையையும் பெருக்கியது. பிளாஸிப் போர் முடிந்த வெகு விரைவிலேயே வங்காளத்தில் கொள்ளேயடிக்கப்பட்ட பொருள்கள் லண்டனுக்கு வரத் தொடங்கின; விளேவு உடனடியாக இருந்ததாய்த் தோன்றுகிறது; ஏனெனில், எல்லாப் பழைய காலத்திலிருந்தும் பத்தொன்பதாம் நூற்றுண்டைத் தனியாகப் பிரித்த 'தொழிற் புரட்சி' 1760 ஆம் ஆண்டில் தொடங்கியது. 1760க்கு முன்பு லங்காஷயரில் பயன்படுத்தப்பட்ட பருத்தி நூற்புக் கருவி இந்தியாவில் இருந்ததைப் போன்றே எளியதாக இருந்தது என்று பேய்ன்ஸ் கூறுகிறுர்; சுமார் 1750 இல் இங்கிலாந்தின் இரும்புத் தொழில், எரிபொருளுக்காகக் காடுகள் அழிக்கப் பட்டமையால் முற்றிலும் சரிந்திருந்தது. நாட்டில் பயன் படுத்தப்பட்ட இரும்பில் ஐந்தில் ஒரு பகுதி சுவீடனிலிருந்து வந்தது.

"1757 இல், பிளாஸிப் போர் நடந்தது; அதைத் தொடந்து ஏற்பட்ட மாறுதலின் விரைவுக்கு வேறு ஒன்றையும் ஈடாகச் சொல்ல முடியாது. 1760 இல் 'பறக்கும் ஷட்டில்' தோன்றியது; தாதுப் பொருளிலிருந்து உலோகத்தைப் பிரிக்கும் எரிபொருளாக விறகு பயன்பட்டது; இப்போது, நிலக்கரி பயன்பட்டது. 1764 இல் ஹார்கிரீவ்ஸ் 'நூற்பு ஜென்னி' யைக் கண்டுபிடித்தார், 1776 இல் கிராம்ப்டன் 'ம்யூல்' என்னும் நூற்புக் கருவியைத் தயாரித்தார்; 1785 இல் கார்ட்ரைட் தன் விசைத் தறிக்குத் தனியுரிமை வாங்கினார்; எல்லாவற்றுக்கும் மேலே, 1768 இல், சக்தியைச் சேமித்து வெளிப்படுத்தும் சிறந்த சாதனமான நீராவி இஞ்சினை வாட் உருவாக்கினார். ஆனால், இந்த இயந்திரங்கள் எல்லாம் காலத்தின் விசையான இயக்கத்திற்குப் பயன்பட்டன என்றாலும் அவை அந்த விசையை உண்டாக்கவில்லை. புதியன ஆக்கல்கள் தாமாகச் செயல்படுபவை அல்ல; பல முக்கியமான ஆக்கல்கள் நூற்றுக்கணக்கான ஆண்டுகள் உறங்கிக் கிடந்தன; இயங்குவதற்குப் போதிய அளவு சக்தித் திரட்சிக்காக அவை காத்திருந்தன. அந்த சக்தித் திரட்சி எப்போதும் பண வடிவமே கொள்ள முடியும்; குவிந்து சோம்பிக் கிடக்கும் பணம் அல்ல, இயங்கும் பணம். இந்தியப் பொக்கிஷம் வருவதற்கு முன்பு, அதைத் தொடர்ந்து நாணயம் விரிவடைவதற்கு முன்பு இந்தக் காரியத்திற்குப் பயன்படக்கூடிய போதிய பொருள் இல்லை; இன்னும் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் இருந்திருந்தால் வாட்டும், அவருடைய புதியன ஆக்கலும் ஒன்றாக அழிந்து போயிருப்பார்கள். ஒருகால் உலகம் தோன்றியது முதல், வேறு எந்த முதலீடும் இந்தியக் கொள்ளையைப்போல் லாபகரமாயிருந்திருக்குமோ என்னவோ! ஏனெனில் சுமார் ஐம்பதாண்டுக் காலம் கிரேட் பிரிட்டன் ஒரு போட்டியற்று இருந்தது. 1694லிருந்து பிளாஸிப் போர் (1757) வரை முன்னேற்றம் சற்று மெதுவாகத்தான் இருந்தது. 1760 க்கும் 1815 க்கும் இடையில் முன்னேற்றம் விரைவாகவும் ஏராளமாகவும் இருந்தது."

(ப்ரூக்ஸ் ஆடம்ஸ்: நாகரீகத்தின் சட்டமும் தேய்வும், பக். 259-60.)

இவ்வாறாக, இங்கிலாந்தில் ஏற்பட்ட தொழிற் புரட்சியைச் சாத்தியமாக்க உதவிய பொருட் குவையின் மறைவான உற்பத்தி ஸ்தானம் இந்தியாவில் அடிக்கப்பட்ட கொள்ளையே.

ஆனால், இந்தியாவை மொட்டையடித்து இங்கிலாந்தில் தொழிற் புரட்சி சாத்தியமானதும், உற்பத்தியாகிக் குவிந்து

கொண்டிருக்கும் சரக்குகளின் வெள்ளத்திற்கு வடிகால் அமைப்பது எப்படி என்ற புதிய பொறுப்பு தோன்றியது. இதற்குப் பொருளாதார அமைப்பில் ஒரு புரட்சி தேவைப்பட்டது; வணிக முதலாளித்துவக் கொள்கையிலிருந்து தடையிலா வாணிப முதலாளித்துவக் கொள்கைகளுக்கு மாற வேண்டியிருந்தது. அதற்கேற்ப, காலனியாட்சியில் முற்றிலும் புதிய முறைகளைப் புகுத்த வேண்டியிருந்தது.

பழைய ஏகபோகவுரிமை முறைக்குப் பதிலாக இந்தியாவில் சுயேச்சையான மார்க்கெட்டை உண்டாக்க வேண்டிய புதிய தேவை எழுந்தது. உலகம் முழுவதற்கும் பருத்திச் சரக்குகளை ஏற்றுமதி செய்து கொண்டிருந்த இந்தியாவைப் பருத்திச் சரக்குகளை இறக்குமதி செய்யும் நாடாக மாற்ற வேண்டிய அவசியம் தோன்றியது. இந்தியப் பொருளாதாரத்தில் ஒரு புரட்சி உண்டாக வேண்டும் என்பதே இதன் பொருள். பழைய கிழக்கு இந்தியா கம்பெனியின் முறை முற்றிலும் மாற வேண்டும் என்பதும் அதன் பொருளாகும். இந்தியாவைச் சுரண்டல் செய்யும் முறைகளில் ஒரு மாறுதலை நிகழ்த்த வேண்டியிருந்தது; கம்பெனியின் ஏகபோகவுரிமையாளர்களின் நலன்களை எதிர்த்துக் கடுமையாகப் போராட வேண்டிய மாறுதலாகும்.

இந்த மாறுதலுக்கான தொடக்க ஏற்பாடுகள், பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிப் பதினைந்து ஆண்டுகளிலேயே செய்யப்பட்டு விட்டன.

பயன்தரத் தக்க முறையில் இந்தியாவில் சுரண்டலை நடத்த வேண்டுமானால், கிழக்கு இந்தியா கம்பெனியும் அதன் ஊழியர்களும் கையாண்ட முழு அராஜகமான, நாசகரமான கொள்ளை முறையை ஏதாவது மாறுதல் இன்றித் தொடர்ந்து பின்பற்ற முடியாது என்பது வெளிப்படை. கம்பெனியும் அதன் ஊழியர்களும் கொண்ட மடத்தனமான, பொறுப்பற்ற பேராசை சுரண்டலின் அடிப்படையையே அழித்துக் கொண்டிருந்தது, சில வருடங்களுக்குப் பின்னர் இங்கிலாந்தில் லங்காஷயர் உற்பத்தியாளர்களின் கரைக் கடந்த பேராசை மக்களில் ஏழு தலைமுறையினரை ஒரே தலைமுறையில் விழுங்கி ஏப்பம்விடப் போவதைப் போல, உற்பத்தியாளர்களின் பேராசையை, முதலாளி வர்க்கத்தினர் அனைவரின் சார்பாகவும், எதிர்காலச் சுரண்டலின் நலனுக்காகவும் அரசாங்கமே ஒடுக்க நேர்ந்தது போலவே (அவர்களுடைய பொருளாதார எதிரிகளான நிலவுடைமையாளர்களின் தலைமையில் தாக்குதல் நடந்தது.), பதினெட்டாம் நூற்றாண்டின் கடைக்கால் பகுதியில் இந்தியாவில் கம்பெனியின் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்த அரசாங்கத்தின் முக்கியமான

சாட்டினர். இந்நிலைமையைச் சீர்திருத்திவிட்டால் தேசம் சுபிட்சப்பாதையில் துரிதமாக முன்னேறிச் செல்லும் என்று குடியரசுக் கட்சியினர் பிரசாரம் செய்தனர்.

குழப்பம் நிறைந்த பரபரப்பான சூழ்நிலையில் சிகாகோவில் கூடிய ஜனநாயகக் கட்சியினர், கிளீவ்லண்டின் நிர்வாகக் குழுவையும், தங்கத்தை அடிப்படையாக ஸ்தாபிக்க அது செய்த முயற்சிகளையும் நிராகரித்தனர். பதினாறுக்கு ஒன்று என்ற விகிதத்தில் (16 அவுன்ஸ் வெள்ளிக்கு ஓர் அவுன்ஸ் தங்கம் என்ற விகிதம்) வெள்ளி நாணயத்தை வெளியிட வேண்டும் என்ற பிரச்னையைக் கொண்டு தேர்தலை நடத்துவது என்று இக் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது. கடைக்காரர்கள் விவசாயி, தொழிற்சாலைத் தொழிலாளி போன்ற 'சின்ன ஆசாமி'யை நசுக்கிவரும் வால் ஸ்ட்ரீட் கார்ப்பரேஷன்களையும், டிரஸ்டுகளையும், இக்கூட்டத்தில் ஒவ்வொரு பிரதிநிதியாகக் கடுமையாகத் தாக்கிப் பேசினர். இப் பெரிய பண முதலாளிகளைக் கடுமையாகத் தாக்கிப் பிரசாரம் செய்வதில் வல்ல 36 வயதான வில்லியம் ஜென்னிங்ஸ் பிரியன் (William Jennings Bryan) என்ற இளந்தலைவர் இக்கட்சிக்குக் கிடைத்தார். இவர் நெப்ராஸ்காவிலிருந்து காங்கிரசுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த பிரதிநிதி. இவரது இளமைக்கும் அநுபவமின்மைக்கும் ஈடு செய்வது போல், இவருக்கு ஆவேசப் போக்கும், எல்லாரையும் வசீகரிக்கச் செய்யும் பிரசங்க வன்மையும் அமைந்திருந்தன. எல்லாரையும் ஊக்கமூட்டும் இவருடைய பிரசங்கம் ஒன்று, இவரை ஜனாதிபதி ஸ்தானத்திற்கு அபேட்சகராக நியமிக்கும்படி செய்தது. அப்பிரசங்கத்தில் தமது எதிராளிகளான குடியரசுக் கட்சியினரை, "தொழிலாளர் வர்க்கத்தின் நெற்றிமீது இந்த முட்கள் நிறைந்த கிரீடத்தை வைத்து அழுத்தக் கூடாது. மனித சமூகத்தைத் தங்கச் சிலுவைமீது நீங்கள் ஆணிவைத்து அறையக் கூடாது" என்று எச்சரித்தார்.

தேர்தல் தினத்தன்று 130 லட்சத்திற்கு அதிகமான வோட்டர்கள் வோட்டுப் போடச் சென்றனர். எதிரி அபேட்சகர் 60 லட்சம் வோட்டுகள் பெற்றார். மெக்கன்சி அதற்கு அதிகமாக 10 லட்சம் வோட்டுகள் பெற்று வெற்றி பெற்றார். இறுதிவரை கடுமையாகப் போராடப்பட்ட, மகத்தான தேர்தல் போராட்டமாக இது இருந்தது.

மான ஆடம் ஸ்மித்தால் 1776இல் இத் தாக்குதல் தொடங்கி வைக்கப்பட்டது என்பதைக் குறிப்பிட வேண்டும். 1776இல் அவருடைய ''நாடுகளின் செல்வம்'' என்ற நூல் வெளியானதும், இளைய பிட் போன்ற புது வகுப்பு ராஜதந்திரிகளின் வேதமாகி விட்டது; அந்த நூலின் ஒரு பகுதியில், கிழக்கு இந்தியா கம்பெனியின் அடிப்படையையே இரக்கமில்லாமல், தாட்சண்ய மில்லாத, தனக்கே உரிய நடையில் அவர் தாக்குகிறார்:

''இத்தகைய சிறப்புரிமை பெற்ற கம்பெனிகள் ஒவ்வொரு வகையிலும் தொல்லையாகவே இருக்கும்; எந்த நாடுகளில் அவை ஏற்பட்டுள்ளனவோ அங்கே ஏறத்தாழ அசௌகரிய மாகவே இருக்கும்; அவற்றின் ஆட்சியில் சிக்கிக்கொள்ளும் துரதிர்ஷ்டம் படைத்த நாடுகளுக்கோ நாசகரமாக இருக்கும்.

''தங்கள் இந்தியப் பிரதேசங்களுக்குக் கொண்டுசெல்லப் படும் ஐரோப்பியச் சரக்குகள் அங்கே மலிவாக விற்பனை ஆக வேண்டும் என்பதைக் கவனித்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு ஆட்சியாளர்கள் என்று கருதப்பட்ட கிழக்கு இந்தியா கம்பெனியைச் சார்ந்ததாகும்; இந்தியாவிலிருந்து ஐரோப்பாவுக்குக் கொண்டு வரப்படும் சரக்குகளால் அவர் களுக்கு நல்ல வருவாய் கிடைக்க வேண்டும் அல்லது அங்கு உயர்ந்த விலைக்கு விற்கப்பட வேண்டும் என்று முயல வேண்டி யதும் அவர்கள் பொறுப்பாகும். ஆனால், வணிகர்கள் என்ற முறையில் அவர்களுடைய பொறுப்பு இதற்கு நேர் விரோத மானது. ஆட்சியாளர்கள் என்ற முறையில் அவர்களுடைய பொறுப்பும் அவர்களால் ஆளப்படும் நாட்டின் பொறுப்பும் ஒன்றே. ஆனால், வணிகர்கள் என்ற முறையிலோ அவர்க ளுடைய பொறுப்பு ஆளப்படும் நாட்டின் பொறுப்புக்கு நேர் விரோதமானது. . . .

''அது ஒரு விநோதமான அரசாங்கம்; நிர்வாகம் செய்யும் ஒவ்வொருவரும் நாட்டைவிட்டு வெளியேறிவிட வேண்டும் என்று விரும்புவதும், எவ்வளவு விரைவாக முடியுமோ அவ் வளவு விரைவாக அரசாங்கத்திலிருந்து விலகி, அவ்வாறு விலகிய இரண்டாவது நாளே தன் சொத்து முழுவதையும் தன்னோடு எடுத்துச் செல்ல வேண்டும் என்று ஆசைப்படு வதும், நாடு முழுவதும் நில நடுக்கத்தில் மறைந்து போவதா யிருந்தாலும் அவர்கள் அதைப்பற்றிக் கவலைப்படாமல் இருப் பதும் இந்த அரசாங்கத்தின் விநோதமான தன்மைகள்.''

(ஆடம் ஸ்மித்: ''நாடுகளின் செல்வம்'' நான்காம் தொகுதி, 7ஆம் அத்தியாயம்.)

''பெரும் செல்வமுடைய ஒருவன்—சில சமயம் சிறு செல்வம் படைத்தவன்கூட—அடிக்கடி ஓராயிரம் பவுன் மதிப்புள்ள இந்தியாப் பங்கை விழைகிறுன்; காரணம், 'உரிமையாளர்கள் மன்றத்தில்' வாக்குரிமை பெற்று செல்வாக்கு பெறலாம் என்ற எண்ணமே. கொள்ளையில் பங்கு கிடைக்காவிட்டாலும், இந்தியாவைக் கொள்ளையடிப்பவர்களை நியமனம் செய்வதில் அவனுக்குப் பங்கு கிடைக்கும் . . . சில ஆண்டுகள் அவன் இந்தச் செல்வாக்கை அநுபவித்து விட்டு, அதன் வாயிலாகத் தன்னுடைய சிலநண்பர்களுக்கு உதவிஞல் போதும் என்று கருதுகிற அவன் லாப வீதத்தைப் பற்றியோ, தனக்கு வாக்குரிமை தந்த பங்கின் மதிப்பு பற்றியோகூட கவலைப்படுவதில்லை. பெரிய சாம்ராஜ்யத்தின் வளமை பற்றியோ—அதன் அரசில் பங்குகொள்ள அவன் வாக்கு வாய்ப்பு தருகிறது—அவன் சற்றும் கவலைப்படுவதில்லை. தம் குடிமக்களின் சுகம் அல்லது துக்கம்பற்றி வேறு எந்த ஆட்சியாளர்களும் எந்தக் காலத்திலும் இவ்வளவு அலட்சியமாக இருந்ததில்லை, இருந்திருக்கவும் முடியாது; தங்கள் பிரதேசங்கள் செம்மையாக உள்ளனவா அல்லது பாழாகின்றனவா என்று பாராமல், இந்த ஆட்சியாளர்களைப்போல் அலட்சியமாக இருந்திருக்க முடியாது; தங்கள் நிர்வாகத்தின் புகழ் பற்றியோ இகழ் பற்றியோ இந்த ஆட்சியாளர்களைப் போல் கவலையற்று இருந்திருக்க முடியாது; இந்த வாணிபக் கம்பெனியின் உரிமையாளர்களில் பெரும்பாலோர் தடுத்து நிறுத்த முடியாத நியாயத்தால் இவ்வாறு கவலையற்று அலட்சியமாக இருந்தனர்; அவ்வாறுதான் அவர்கள் இருக்க முடியும்.''

(ஆடம் ஸ்மித்: ''நாடுகளின் செல்வம்'', நான்காம் தொகுதி, முதல் அத்தியாயம்.)

இங்குதான் கிழக்கு இந்தியா கம்பெனியின் வாணிப அடிப்படைக்குப் புதிதாய்த் தோன்றிக் கொண்டிருந்த உற்பத்தியாளர்கள் எழுப்பிய எதிர்ப்பின் குரலைக் கேட்கிறோம்; பழைய முறை மீது தொழில் முதலாளிகள் கண்ட வெற்றிக்கு முன்னோடியும் இதுதான்.

கிழக்கு இந்தியா கம்பெனியின் பழைய அடிப்படை மீது தாக்குதலும், மாறுதல் வேண்டும் கோரிக்கையும் 1782-83இல் மக்கள் மன்றத்தின் பொறுக்குக் குழுவின் நடவடிக்கைகளில் தொடர்ந்தன. 1783இல் ஃபாக்ஸின் மசோதா வந்தது. 'இயக்குநர்கள், உரிமையாளர்கள் மன்றங்களை' ஒழித்துவிட்டு நாடாளு மன்றம் ஆணையாளர்களை நியமிக்க வேண்டும் என அது கோரியது. கம்பெனியின் எதிர்ப்பால் அது தோல்வியுண்டது.

அத் தோல்வியால் ஃபாக்ஸின் அரசு வீழ்ந்து, பிட் ஆட்சிக்கு வந்தார்; இருபது ஆண்டுகள் அதிகாரம் அவர் கையில் இருந்தது. இந்த நெருக்கடியான திருப்புமுனையில், ஆங்கிலேய அரசியலில் இந்தியா பிரதானப் பங்கு வகித்தது. 1784இல் பிட்டின் இந்தியா சட்டம் வந்தது; ஃபாக்ஸின் கருத்துகள் சிதைந்து குழப்பமான இரட்டை நிர்வாக முறைக்கு அது அடிகோலியது என்றாலும், நிர்வாகத்தில் அரசாங்கத்துக்கு நேர்ப்பங்கு வேண்டும் என்ற அதே கருத்தை இச் சட்டம் வற்புறுத்தியது; ஹேஸ்டிங்ஸும் கம்பெனியும் எதிர்த்தாலும் இச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. 1786இல், நிர்வாகத்தில் தீவிரமான மாறுதல்கள் செய்வதற்காகக் கார்ன்வாலிஸ் பிரபு கவர்னர் ஜெனரலாக அனுப்பப்பட்டார். 1788-ல், கவர்னராகவும் கவர்னர் ஜெனரலாகவும் 1772 முதல் 1785 வரை நிர்வாகம் செய்த வாரன் ஹேஸ்டிங்ஸ் ஊழல், அக்கிரம ஆட்சிக் குற்றச்சாட்டுகள் பேரில் விசாரணை செய்யப்பட்டார். இந்தக் குற்ற விசாரணை உண்மையில் ஓர் அரசாங்கக் காரியம்; பிட்டின் முடிவுப்படி அதிகாரம் வழங்கப்பட்டது; தலைசிறந்த நாடாளுமன்றப் பிரமுகர்களான ஃபாக்ஸ், பர்க், ஷெரிடான் போன்றவர்கள் அவருக்குத் துணைநின்றார்கள்; இவர்கள் எல்லோரும் சேர்ந்து ஒரு தனிநபரை எதிர்த்தல்ல, ஓர் ஆட்சி முறையை எதிர்த்தே தாக்குதல் நடத்தினார்கள்.

இந்தத் தாக்குதல் மேலும் தொடருமுன் பிரஞ்சுப் புரட்சியால் எழுந்த உலகப் பிரச்னைகள் காரணமாகப் பின் விழுந்தது; அதனால் பிட்டின் சீர்திருத்த காலம் முடிவுற்றது; உலக எதிர்ப் புரட்சியாளர்களுக்குத் தலைமை தாங்குபவர்களாக ஆங்கிலேயப் பூர்ஷ்வாக்கள் ஏற்ற பாகம் வெளிப்பட்டது. இந்தியாவில் கொடுங்கோன்மையையும் அக்கிரம ஆட்சியையும் மிக வன்மையாய்க் கண்டித்து சொற்பொழிவாற்றி தாராளக் கொள்கையுடையோரின் பாராட்டைப் பெற்ற பர்க் இப்போது அதைவிட வன்மையாக பிரான்ஸில் நடந்த சுதந்திரப் போராட்டத்தைக் கண்டித்து ஐரோப்பிய மன்னர்களின் பாராட்டையும் ஆதரவையும் பெற்றார். பிலிப் பிரான்ஸிஸ் என்பவர் இந்தியாவில் கவர்னரின் நிர்வாகக் குழுவில் ஓர் உறுப்பினராக இருந்தவர்; நிர்வாகக் குழுவில் ஹேஸ்டிங்ஸை எதிர்த்துச் சண்டைபோட்டவர்; பர்க் முதலியவர்களுக்கு ஹேஸ்டிங்ஸ் குற்ற விசாரணையில் பல முக்கியமான சாட்சியங்களை உதவியவர்; பிரஞ்சுப் புரட்சி பற்றி பர்க் மேற்கொண்ட பிற்போக்குக் கொள்கையைக் கண்டித்து பிரான்ஸிஸ் பர்க்குக்கு எரிச்சலோடும் வெறுப்போடும் ஒரு கடிதம் எழுதினார் என்பது ஒரு ருசிகரமான தகவல். ஹேஸ்டிங்ஸின் விசாரணை ஏழாண்டுக் காலம் இழுத்துப் பறித்துக் கொண்டு நடந்து, இறுதியில் 1795இல் அவர் முழு விடுதலை பெற்றார்.

போர்க் கப்பல் 'மெயின்' எப்படி அழிக்கப்பட்டது - யார் அழித்தார்கள், அகஸ்மாத்தாகக் கப்பலுள் வெடி விபத்து ஏற்பட்டதால் அழிந்ததா என்பது - இன்றளவும் மர்ம மாகவே இருக்கிறது.

கடைசி நேரத்தில், கியூபாவில் போர் நிறுத்தத்திற் கான அமெரிக்கக் கோரிக்கைகளுக்கு இணங்குவதன் மூலம் போரைத் தவிர்க்க ஸ்பெயின் முயன்றது. ஸ்பெயின் அளிக்க முன்வந்த சலுகைகள் நிராகரிக்கப்பட்டன. 'மெயினை நினைவில் கொள்ளுங்கள்' என்ற கோஷத்துடன், கியூபா மக்களை அவர்களுடைய கொடுங்கோலர்களான எஜமானர்களிடமிருந்து விடுதலை பெற்றுக் கொடுத்து, அவர்களுக்குச் சுதந்திரத்தை அளிக்க அமெரிக்கர்கள் ஒரு புனிதப் போரில் இறங்கினர்.

1898-ஆம் வருஷத்திய ஸ்பானிய - அமெரிக்க யுத்தம் ஆச்சரியப்படும் வகையில் துரிதமாகவும், ஒரு தலைப்பட்ச மாகவும் நடந்தது. போரில், அட்மிரல் ஜார்ஜ் டூயி தலைமை யில் ஓர் அமெரிக்கக் கடற்படை, சைனுவில் உள்ள பிரிட் டிஷ் கடற்படைத் தளமான ஹாங்காங்கை விட்டுக் கிளம்பி, ஸ்பெயினுக்குச் சொந்தமான பிலிப்பைன் தீவு களுக்குச் சென்று, தங்களில் ஒருவரைக்கூட இழக்காமல் மணிலாவில் ஸ்பானியக் கடற்படையை நிர்மூலமாக்கியது.

மேற்கு அர்த்தகோளத்தில் அமெரிக்கத் துருப்புகள் கியூபாவுக்குள் புகுந்து தொடர்ந்து நடந்த போர்களில் ஸ்பானியர்களைத் தோல்வியுறச் செய்தன. ஸான்ஜுவான் (San Juan Hill) என்ற குன்றில், முன்னுக்கு வரக்கூடிய அரசியல்வாதியான, நியூயார்க்கைச் சேர்ந்த கர்னல் தியோடர் ரூஸ்வெல்ட் (Colonel Theodore Roosevelt), 'துணிகரக் குதிரை வீரர்கள்' என்று அழைக்கப்பட்ட ஒரு படைக்குத் தலைமை வகித்து, எதிரியைக் கடுமையாகவும் வெற்றிகரமாகவும் தாக்கினர். சில வாரங்களுக்குப் பின்னர் கியூபாவிலுள்ள சான்டியாகோ (Santiago) என்னும் இடத்திற்கப்பால் மற்றொரு ஸ்பானியக் கடற்படை நாச மாக்கப்பட்டபின் ஸ்பானியர்களின் எதிர்ப்பு நின்றது. மொத்தத்தில் இந்த யுத்தம் மூன்று மாதங்களை நடந்தது. கரீபியன் கடலிலுள்ள ஸ்பெயினின் தீவுகள் அமெரிக்காவின் வசமாகி வெகு தொலைவிலுள்ள மணிலாவரை அமெரிக்கக் கொடி பறந்தது.

''ஆடம் ஸ்மித்தின் நூலின் குறிப்புரையில் மாக்கல்லாக் 1811 அளவில் இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் நடந்த வாணிபத்தைப் பற்றி பேசுகையில்—அதாவது, முழு உரிமைக் காலத்தில்—அது முற்றிலும் குறைந்த அளவு என்கிறார். இங்கிலாந்து, ஜெர்ஸி அல்லது மனிதத் தீவுடன் செய்த வியாபாரத்தைவிட முக்கியமானது அல்ல என்கிறார்....

''ஆனால், இன்று ஜெர்ஸியுடனும் மனிதத் தீவுடனும் ஒப்பிடுவதற்குப் பதிலாக, அமெரிக்கா அல்லது பிரான்ஸுடன் நடக்கும் வாணிபத்தோடு ஒப்பிட்டுப் பேசுகிறோம். இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்யும் நாடுகளில், அமெரிக்காவைத் தவிரப் பிரான்ஸையும் மிஞ்சிவிட்டது.''

(ஜே. ஆர். ஸீலி: ''இங்கிலாந்தின் பெருக்கம்'', 1883, பக். 290.)

அதைப் போலவே, 1812 இல் கம்பெனி வெளியிட்ட அதிகார பூர்வமான அறிக்கைப்படி இந்தியா கப்பம் செலுத்தும் அல்லது கொள்ளைக்குப் பயன்படும் நாடாக மதிப்பிடப்பட்டதே அன்றிச் சரக்குகளுக்குச் சந்தையாக அல்ல என்பது தெளிவாகிறது:

''இந்த மாபெரும் சாம்ராஜ்யத்தின் முக்கியத்துவம், ஆண்டுதோறும் அரசின் செல்வமும் மூலதனமும் பெருக அவை உதவுகின்றன என்பதே அன்றி, இந்தியாவின் மக்கள் ஏராளமான சரக்குகளை வாங்குவதால் நாட்டின் உற்பத்தியாளர்களுக்குப் பெரும்பயன் உண்டாகிறது என்பது அன்று.''

(கிழக்கு இந்தியா கம்பெனியின் 1812 ஆம் ஆண்டு அறிக்கை; ''இந்தியாவின் அயல்நாட்டு வாணிபத்தைப் பற்றி சில அம்சங்கள்'' என்ற நூலில் (பக். 49) பார்ஷத் மேற்கோள் காட்டியது)

உரிமைச் சாஸனத்தைப் புதுக்கி முழு உரிமையை ஒழிப்பதற்கு முன்னர், 1813 இல் நடந்த நாடாளுமன்ற விசாரணையின் நடவடிக்கைகள் வாயிலாக, பிரிட்டனில் வளர்ந்து வந்த இயந்திரத் தொழிலுக்குச் சந்தையாகப் பயன்படுத்துவதற்குத் தோதாக இந்தியாவை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்ற எண்ணம் முற்றிலும் நிலவியது என்பதை அறிகிறோம். வாரன் ஹேஸ்டிங்ஸ் போன்ற பழைய கருத்தாளர்களின் பிரதிநிதிகள் இந்தியாவை ஒரு மார்க்கெட்டாக உருவாக்க முடியாது என்று பதிலுரைத்ததையும் கவனிக்க வேண்டும்.

இந்த விசாரணையின் போது இந்தியாவிலிருந்து இங்கிலாந்தில் இறக்குமதி செய்யப்பட்ட காலிகோக்கள் மீது 78 சதவீதம்

சுங்கவரி விதிக்கப்பட்டது. இவ்வளவு கடுமையான சுங்கவரி இல்லாவிட்டால் பிரிட்டனின் பருத்தித் தொழில் ஆரம்ப கட்டத்தில் வளர்ச்சி கண்டிருக்க முடியாது.

> ''இந்தியாவின் பருத்தி, பட்டு ஆடைகளை அதுவரை பிரிட்டனின் மார்க்கெட்டில் இங்கிலாந்திலேயே தயாரான சரக்குகளைவிட ஐம்பது அல்லது அறுபது சதவீதம் குறைவாக, ஆனால், லாபகரமாக விற்பனை செய்ய முடியும் என்று சாட்சியத்தில் (1813 இல்) குறிப்பிடப்பட்டது. ஆகையால் இங்கிலாந்தின் தொழிலைக் காக்க எழுபது, எண்பது சதவீதம் சுங்கவரி விதிக்க வேண்டியிருந்தது, அல்லது இறக்குமதியை முற்றிலும் தடை செய்ய வேண்டியிருந்தது. இவ்வாறு செய்யப்பட்டிருக்காவிட்டால், இவ்வாறு கடுமையான சுங்க வரிகளும் சட்டங்களும் இருந்திராவிட்டால், பெய்ஸ்லியிலும் மான்செஸ்டரிலும் இருந்த ஆலைகள் ஆரம்ப கட்டத்திலேயே மூடப்பட்டிருக்கும்; அவற்றை மீண்டும் நீராவிச் சக்தியால் கூட செயல்படுத்தி இருக்க முடியாது. இந்தியாவின் உற்பத்தியைப் பலியிட்டே அவை உண்டாக்கப்பட்டன.''
>
> (எச். எச். வில்ஸன்: ''பிரிட்டிஷ் இந்தியாவின் வரலாறு'', முதல் தொகுதி, பக். 385)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பாதியில், பிரிட்டனின் துணித் தொழிலைப் பாதுகாப்பதற்காக இந்தியச் சரக்குகளுக்குப் பாதகமாக இவ்வாறு சுங்கவரிப் பாகுபாடு செய்யப்பட்டது. 1840 ஆம் ஆண்டு நாடாளுமன்ற விசாரணையில் பின்வருமாறு அறிவிக்கப்பட்டது: இந்தியாவில் இங்கிலாந்திலிருந்து இறக்குமதியான பருத்தி, பட்டுத் துணிகளுக்கு $3\frac{1}{2}$ சதவீதமும், கம்பெனித் துணிகளுக்கு 2 சதவீதமும் சுங்கவரி விதிக்கப் பெற்ற அதே காலத்தில், பிரிட்டனில் இந்தியாவிலிருந்து இறக்குமதியான பருத்திச் சரக்குகளுக்கு 10 சதவீதமும், பட்டுத் துணிகளுக்கு 20 சதவீதமும், கம்பளிச் சரக்குகளுக்கு முப்பது சதவீதமும் சுங்கம் விதிக்கப்பட்டது.

ஆக, இயந்திரத் தொழில் நுட்பச் சிறப்பின் அடிப்படையில் மட்டும் அல்ல, அரசாங்கம் ஒரே வழித் தடையிலா வாணிபம் நிறுவ உதவியதாலும் (பிரிட்டிஷ் சரக்குகள் இந்தியாவில் வருவதற்குத் தடையிலா அநுமதி, முற்றிலும் தடையிலா அநுமதி; ஆனால் இந்தியச் சரக்குகள் பிரிட்டனில் வருவதற்குத் தடையாகச் சுங்கப் பாகுபாடுகள். ஐரோப்பிய நாடுகளுடனும் மற்ற அயல் நாடுகளுடனும் இந்தியா நேர்முக வாணிபம் செய்ய இயலாதவாறு கப்பல் தொழிற் சட்டங்கள் மூலம் தடை) தான் இந்திய

மார்க்கெட்டில் பிரிட்டிஷ் சரக்குகளின் ஆதிக்கம் நிலைநாட்டப் பட்டது; இந்திய உற்பத்தித் தொழில்களும் ஒழிக்கப்பட்டன.

இந்த நடைமுறை பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பாதி வரை தீவிரமாய்க் கடைப்பிடிக்கப்பட்டது; ஆயினும், அதன் விளைவுகள் பத்தொன்பதாம் நூற்றாண்டு மட்டுமல்ல, இருபதாம் நூற்றாண்டிலும் கூட ஊடுருவின. பிரிட்டனில் தொழிலுற்பத்தி தலைசுற்றும் வேகத்தில் பெருகுகையில் இந்தியத் தொழிலுற்பத்தி அதே வேகத்தில் சரிந்தது.

1814 க்கும் 1835 க்கும் இடையில் இந்தியாவுக்குப் பிரிட்டனின் பருத்திச் சரக்குகளின் ஏற்றுமதி 10 இலட்சம் கஜங்களுக்கும் குறைவாக இருந்தது, 5 கோடியே பத்து லட்சம் கஜங்களாக ஏறியது. அதே காலத்தில் இந்தியாவிலிருந்து பிரிட்டனுக்கு இறக்குமதியான துணி வகைகள் 12,25,000 லிருந்து 306,000 ஆகி, 1844 அளவில் 63,000 ஆகக் குறைந்தது.

விலை மதிப்பில் உள்ள வேற்றுமையும் குறிப்பிடத் தக்கதே. 1815 க்கும் 1832 க்கும் இடையில் ஏற்றுமதியான இந்தியப் பருத்தி ஆடைகளின் மதிப்பு £ 13,00,000 லிருந்து £ 109,000 க்கும் கீழே இறங்கியது. அதாவது, பதினேழு ஆண்டுகளில் பதின்மூன்றில் பன்னிரண்டு பாகம் நஷ்டம். அதே காலத்தில், இந்தியாவில் இறக்குமதியான ஆங்கிலேயப் பருத்தித் துணிகளின் மதிப்பு £ 26,000 லிருந்து £ 400,000 ஆக உயர்ந்தது, அல்லது பதினாறு மடங்கு உயர்வு. 1850 அளவில், உலகம் முழுவதற்கும் பல நூற்றாண்டுகளாய்த் துணி ஏற்றுமதி செய்து வந்த இந்தியா, பிரிட்டனின் துணி ஏற்றுமதியில் நாலில் ஒரு பங்கை இறக்குமதி செய்து கொண்டிருந்தது.

இங்கிலாந்திலிருந்து வந்த இயந்திரத் தயாரிப்புப் பருத்தி ஆடைகள் இந்திய நெசவாளர்களை நாசம் செய்தது என்றால், இயந்திரத் தயாரிப்பு முறுக்கினால் நூற்பாளர்கள் நாசம் ஆயினர். 1818 க்கும் 1836 க்கும் இடையில் இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு ஏற்றுமதியான பருத்தி 'முறுக்கு' 5200 மடங்கு உயர்ந்தது.

பட்டு, கம்பளி, இரும்பு, மட்பாண்டம், கண்ணாடி, காகிதம் ஆகியவற்றிலும் இதே செயல்முறை பின்பற்றப்பட்டதைக் காணலாம்.

இந்தியாவின் உற்பத்தித் தொழில்கள் இவ்வாறு பரிபூரணமாக நாசமானதன் விளைவாக இந்தியப் பொருளாதார அமைப்பு எவ்வளவு கேடுற்றிருக்கும் என்பதை எளிதில் கற்பனை செய்து கொள்ளலாம். இங்கிலாந்தில் பழைய கைத்தறி நெசவாளர்கள் அழிந்தனர் என்றால், கூடவே புது இயந்திரத்தொழில் வளர்ச்சி

பெற்றது. ஆனால், இந்தியாவிலோ இலட்சக் கணக்கான தொழிலாளர்களும் கைத் தொழிலாளர்களும் அழிந்ததைத் தொடர்ந்து புது வகைத் தொழில் எதுவும் தோன்றவில்லை. பழைய, ஜன நெருக்கடிமிக்க, உற்பத்தி நகரங்களான டாக்கா, மூர்ஷிதாபாத், (1757 இல் கிளைவ் இந்த நகரத்தைத் தான் லண்டன் போல் மக்கட் தொகை மிக்கது, பரந்தது, செல்வம் கொழிப்பது என்று வருணித்தார்.) சூரத் போன்றவை சில ஆண்டுகளில் பிரிட்டிஷ் கொடியின் கீழ் பாழாக்கப்பட்டன; மிக்க நாசகரமான போர்களோ, அயலார் போர் வெற்றியோகூட இவ்வளவு நறுவிசாகப் பாழாக்க முடியாது. ''டாக்கா நகரத்தின் ஜனத்தொகை 150,000 விருந்து 30,000 அல்லது 40,000 க்குக் குறைந்து விட்டது. கடும் மலேரியாவும் விரைவாக நகரத்தைச் சூழ்ந்து கொண்டிருக்கின்றன....... இந்தியாவின் மான்செஸ்டரான டாக்கா வளம்கொழிக்கும் நகரமாக இருந்ததுபோய் வறுமை வாய்ந்த சிறு நகரமாக உருக்குலைந்து விட்டது; அங்கு நிலவும் துன்பம் உண்மையில் மிகப் பெரிது'' என்று 1840 இல் நாடாளுமன்ற விசாரணையின்போது சர் சார்லஸ் டிர்வெல்யன் உரைத்தார். ''நாட்டின் உற்பத்தித் தொழில்கள் செய்து வந்த சூரத், டாக்கா, மூர்ஷிதாபாத் மற்றும் பல நகரங்களின் சிதைவும் அழிவும் பற்றிப் பேசுவதே வருத்தம் தருவதாகும். வாணிபத்தின் இயற்கையான, நியாயமான நடைமுறையால் அவ்வாறு நேர்ந்ததாய் நான் கருதவில்லை; வலியவன் தன் சக்தியால் எளியவனை ஒடுக்கியதன் விளைவே அது'' என்று அதே விசாரணையில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் தொடக்க கால வரலாற்று ஆசிரியரான மான்ட்கொமரி மார்டின் கூறினார். ''நூறு ஆண்டுகளுக்குள் கூட டாக்கா வாணிபத்தின் மதிப்பு ஒரு கோடி ரூபாய் இருக்கும் என்று கணக்கிடப்பட்டது; மக்கட் தொகை 200,000. 1787 இல் இங்கிலாந்துக்கு ஏற்றுமதியான டாக்கா மஸ்லினின் மதிப்பு 30 இலட்சம் ரூபாய்; 1817 இல் இந்த ஏற்றுமதி முற்றிலும் நின்றுவிட்டது. பல நூற்றாண்டுகளாய் ஏராளமான மக்களுக்கு வேலை உதவிய நூற்புக் கலையும் நெசவுக் கலையும் இப்போது மறைந்து விட்டன. வளமையாக வாழ்ந்த குடும்பங்கள் நகரங்களைத் துறந்து பிழைப்புதேடி கிராமங்களுக்கு ஓட வேண்டியதாயிற்று...இந்தத் துயரநிலை டாக்காவில் மட்டும் அல்ல, எல்லா மாவட்டங்களிலும் தான். ஆணையாளர்களும் மாவட்ட அதிகாரிகளும் உற்பத்தியாளர் வர்க்கம் வறுமைவாய்ப்படுவதைப் பற்றி அரசாங்கத்துக்கு அறிவிக்காமல் ஓராண்டு கூடக் கழிவதில்லை'' என்று 1890 இல் சர் ஹென்ரி காட்டன் எழுதினார்.

1911 ஆம் ஆண்டின் மக்கட் தொகை அறிக்கை அதே நிலைமை தொடருவதைக் காட்டியது. உதாரணமாக, துணித்

தொழிலில், முந்தின பத்து ஆண்டுகளில் துணி நெசவாளர்களின் எண்ணிக்கை 6 சதவீதம் குறைந்துவிட்டதாய் 1911 ஆம் ஆண்டு அறிக்கை காட்டியது. ஆனால், அதே சமயம் இந்தியாவில் துணி உற்பத்தி படிப்படியாக விரிவடைந்திருந்தது ''பெரும்பாலும் பருத்தி நூல் கைநூற்பு அருகி விட்டதே'' அதற்குக் காரணம் எனப்படுகிறது.

உரிவை, தோல், உலோகத் தொழில்களில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களின் எண்ணிக்கை 6 சதவீதம் குறைந்ததை 1911 ஆம் ஆண்டு அறிக்கை காட்டியது. ஆயினும், அதே சமயத்தில் உலோக வியாபாரிகளின் எண்ணிக்கை ஆறு மடங்கு உயர்ந்தது. காரணம் தெளிவாய் விளக்கப் படுகிறது:

> ''உலோகத் தொழிலாளர்களின் எண்ணிக்கை குறைந்து, அதே சமயம் உலோக வியாபாரிகளின் எண்ணிக்கை கூடுவதற்குக் காரணம், உள்நாட்டுப் பித்தளை, செப்புப் பாத்திரங்களுக்குப் பதிலாக ஐரோப்பாவிலிருந்து இறக்குமதியான எனமல் பாத்திரங்களும், அலுமினியப் பாத்திரங்களும் உபயோகத்திற்கு வந்ததே.''
>
> (''இந்திய மக்கட் தொகை அறிக்கை'',1911.)

இரும்பு, உருக்குத் தொழிலிலும் அதே நிலை:

> ''உள்நாட்டு இரும்பு உருக்கும் தொழில், புகை வண்டிகளுக்கு எட்டும் எல்லையளவுக்கு இறக்குமதியான மலிவான இரும்பாலும் உருக்காலும் துரத்தப்பட்டு விட்டது; நாட்டின் தூரப் பகுதிகளில் அத் தொழில் இப்போதும் நீடிக்கிறது.''
>
> (இம்பீரியல் கெஜடியர் ஆப் இண்டியா, 1907, மூன்றாம் தொகுதி, பக். 145.)

> ''இந்தியாவில் ஆயுதங்களுக்காகவும், அலங்கார வேலைகளுக்காகவும், கருவிகளுக்காகவும் உருக்கு பயன்படுத்தப்பட்டது; மிக உயர்தரமான பொருள்களே தயாரிக்கப்பட்டன. பழைய ஆயுதங்கள் மற்ற எவற்றுக்கும் தாழ்ந்தவை அல்ல; புகழ்பெற்ற டமாஸ்கஸ் கத்திகள் ஹைதராபாதிலிருந்து இறக்குமதியான உருக்கினால் தயாரிக்கப்பட்டவை என்று கூறப்படுகிறது. டில்லியிலுள்ள குதுப்மினார் என்ற புகழ்பெற்ற இரும்புத்தூண் ஆறு டன்களுக்கு மேல் கனமுடையது; கி. பி. 415 ஆம் ஆண்டில் சாவுக் குறிப்பு அதில் செதுக்கப்பட்டிருந்தது. அக்காலத்தில் இவ்வளவு பெரிய வார்ப்பு எவ்வாறு செய்யப்பட்டிருக்கும் என்று இன்று வரை யாருக்கும் விளங்கவில்லை. இந்தியா எங்கும் காணப்படும் பழைய உருக்குலைகளின் சின்னங்கள் நவீன காலத்துக்கு முன்பு ஐரோப்பாவில் இருந்தவற்றைப் போலவே உள்ளன....

''இரும்பை உருக்கும் ஜாதியினரான அகாரியாக்கள் பல இடங்களில் சிதறி வசித்தார்கள்; இரும்புத்தாது உற்பத்தி யாகும் பல மாவட்டங்களுக்கு லோஹாரா என்ற பெயர் பயன்படுத்தப் படுகிறது. ஆனால், மலிவாகத் தயாரிக்கப் பட்ட ஐரோப்பிய இரும்பின் வருகையால் அவர்களுடைய தொழில் பெரும்பாலும் ஒழிந்து விட்டது; அகாரியாக்களில் பலர் திறமையற்ற வேலைக்குப் போய் விட்டனர். ஒன்றேகால் நூற்றாண்டுக்கு முன் டாக்டர் பிரான்ஸிஸ் புகானன் இந்த உருக்குலைகளில் பலவற்றைக் கண்டார்.''

(டி. எச். புகானன்: ''இந்தியாவில் முதலாளித்துவத் தொழிலின் வளர்ச்சி,'' 1934, பக். 274.)

உற்பத்தி செய்த பழைய நகரங்கள் பாழாக்கப்பட்டு, அங்கே இருந்த மக்கள் கிராமங்களுக்குத் துரத்தப்பட்டு நெருக்கடி ஏற்பட்டது மட்டும் அல்ல; வேளாண்மையும் உள் நாட்டுத் தொழிலும் இணைந்திருந்த பழைய கிராமப் பொருளா தார அமைப்பு மீது மரண அடி விழுந்தது. பிழைப்பிழந்த இலட்சக்கணக்கான தொழிலாளர்களும், கைத்தொழிலாளர் களும், நூற்பாளர்களும், நெசவாளர்களும், குயவர்களும், உலோகம் உருக்குபவர்களும், கருமான்களும்—அவர்கள் நகர வாசிகளோ கிராமவாசிகளோ—வேளாண்மையைச் சார வேண்டி யதைத் தவிர வேறுவழி இல்லாதொழிந்தது. இவ்வாறு, வேளாண்மையும் தொழிலும் ஒருங்கிசைந்த நாடாக விளங்கிய இந்தியா, பிரிட்டனின் தொழில் முதலாளித்துவத்தின் விவசாயக் காலனி நாடாக மாற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. பிரிட்டிஷ் ஆட்சியின் இந்தக் காலத்திலிருந்து, பிரிட்டிஷ் ஆட்சியின் நேர் விளைவாகத்தான் இந்தியாவில் வேளாண்மையைச் சார்ந்த மக்களின் கூட்டம் நாசகரமாய் மிகுந்து நெருக்கடி ஏற்பட்டது. இதைப் பழைய இந்திய சமுதாயத்தின் இயற்கையான பிரச்னை போல் அதிகார பூர்வமான அறிக்கைகளிலும் வருணிக்கிறார்கள். மேலெழுந்த வாரியாகப் பார்ப்பவர்களும் அறியாதவர்களும் இதை ''மிகை மக்கட் தொகையின்'' அறிகுறி என்று விளக்கு கிறார்கள். உண்மையில் விவசாயத்தைச் சார்ந்த மக்கட் தொகை யின் அளவு பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ்தான் அதிகமாகியுள்ளது; பத்தொன்பதாம் நூற்றாண்டில் மட்டுமல்ல, இருபதாம் நூற்றாண் டிலும் அதிகமாகிக் கொண்டே வருகிறது என்பதை, மக்கட் தொகைக் கணக்கைப் பார்வையிட்டாலே விளங்கும். (1891க்கும் 1921 க்கும் இடையில் விவசாயத்தைச் சார்ந்த மக்கட் தொகை யின் அளவு 61 சதவீதத்திலிருந்து 73 சதவீதமாக உயர்ந்தது. முழு விவரத்திற்கு ஏழாம் அத்தியாயத்தைப் பார்க்கவும்.)

ஏற்கனவே 1840இல், முன்பு மேற்கோள் காட்டப்பட்ட நாடாளுமன்ற விசாரணையின்போது, இந்தியாவைப் ''பிரிட்டனின் விவசாயப்பண்ணை''யாக மாற்றும் இந்த அபாயகரமான போக்கு பற்றி மான்ட்கொமரி மார்டின் எச்சரிக்கை செய்தார்:

> ''இந்தியா ஒரு விவசாய நாடு என்பதை நான் ஏற்கவில்லை; இந்தியா விவசாய நாடு மட்டுமல்ல, தொழில் வளமுள்ள நாடும் ஆகும். அதை விவசாய நாடாக்கும் நிலைக்குக் கொண்டுவர விழைகிறவன் நாகரிகத்தின் அளவுகோலில் அதைத் தாழ்வுபடுத்த முயலுகிறவனே. இந்தியா இங்கிலாந்தின் விவசாயப்பண்ணை ஆகப் போகிறது என்று நான் கருதவில்லை. அது ஒரு தொழிலுற்பத்தி செய்கிற நாடு, பல வகைப்பட்ட அதன் உற்பத்திப் பொருள்கள் நீண்ட நெடுங்காலமாய் இருந்திருக்கின்றன, நியாயவுணர்ச்சி உள்ள இடங்களில் வேறு எந்த நாடும் அவற்றுடன் போட்டியிட முடிந்ததில்லை.... அதை இப்போது ஒரு விவசாய நாடு என்ற நிலைக்குத் தாழ்த்துவது இந்தியாவுக்கு அநியாயம் செய்வதாகும்.''

வியாபார ஏகபோகவுரிமையை இழுத்து, அதனால் வாணிபத்தைவிட வருவாயில் அதிகநாட்டம் செலுத்திய கிழக்கு இந்தியா கம்பெனி 1829இல் இந்தியாவில் நிகழ்த்தப்படும் ''வாணிபப் புரட்சி''பற்றிக் கலக்கத்துடன் வருணிக்கிறது; 1829, மே 30ஆம் நாள் கவர்னர் ஜெனரல் வில்லியம் காவென்டிஷ்—பெண்டிங்க் பிரபு ''இயக்குநர்கள் மன்றத்தின்'' கருத்தை வெளியிடும் நடவடிக்கைக் குறிப்புகளில் பின்வருமாறு கூறுகிறார்:

> ''இந்தியாவிலுள்ள பல்வேறு வகுப்புகளைச் சேர்ந்த மக்கள், வாணிபத்தின் வரலாற்றிலேயே ஈடு காணமுடியாத அளவு இவ்வளவு துன்பப்படுவதற்குக் காரணமான ஒரு வாணிபப் புரட்சியின் விளைவுகள் பற்றி வருணித்து வாணிப வாரியம் வெளியிட்டுள்ள அறிக்கையைக் கண்டு மன்றத்தின் இரக்கவுணர்ச்சி ஆழமாகத் தூண்டிவிடப்பட்டுள்ளது.''

ஆனால் உற்பத்தியாளர்கள் தங்கள் நலன்களைக் காத்துக் கொள்ளும் முனைப்போடுதான் இருந்தார்கள். 1840ஆம் ஆண்டு நாடாளுமன்ற விசாரணையின்போது மாக்கில்ஸ்பீல்ட் உற்பத்தியாளர் ஒருவரான திரு. கோப் கூறினார்: ''கிழக்கு இந்தியத் தொழிலாளர்களுக்காக நான் மிகவும் வருந்துகிறேன்; ஆனால், அதே சமயம் கிழக்கு இந்தியத் தொழிலாளியின் குடும்பத்தைவிட என் குடும்பத்தின்பால் எனக்கு மிகுந்த பாசம் உள்ளது; என்னைவிட ஒரு கிழக்கு இந்தியத் தொழிலாளியின் நிலைமை

மோசமாக இருக்கிற காரணத்தால் அவனுக்காக என்னுடைய குடும்ப வசதிகளைத் துறப்பது தவறு என்று நான் கருதுகிறேன்.''

தொழில் முதலாளிகள் இந்தியாவைப்பற்றி தெளிவான கொள்கை வகுத்து வைத்திருந்தார்கள்: பிரிட்டிஷ் முதலாளித் துவத்தின் ஒரு விவசாயக் காலனி நாடாக இந்தியாவை மாற்று வது; இந்தியா சச்சாப் பொருள்களைக் கொடுத்து உற்பத்திப் பொருள்களை வாங்க வேண்டும். இந்தக் கொள்கையே நோக்கம் என்று மான்செஸ்டக் வர்த்தகக் கழகத் தலைவர் தாமஸ் பஜ்லி, 1840ஆம் ஆண்டு நாடாளுமன்ற விசாரணையின்போது தெளி வாய்க் குறிப்பிட்டார்:

> ''இந்தியாவில் விரிவான நிலப்பரப்பு இருக்கிறது; அதன் மக்கட் தொகை பிரிட்டனின் சரக்குகளை மிகப்பெரும் அளவில் பயன்படுத்தும். இந்தியர்கள் தங்கள் மண்ணில் விளைந்த பொருள்களால், நாம் அனுப்பி வைக்கும் உற்பத்திப் பொருள்களுக்குப் பதிலாகச் செலுத்த முடியுமா என்பதே இந்திய வாணிபத்தைப் பற்றின முழு கேள்வி.''

எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால், அன்றைய நிலைமை யில் இந்தியாவை எவ்வாறு சுரண்டலாம் என்று கிளைவ் தெளி வாகவும் பொருத்தமாகவும் கணக்கிட்டானே, அதே மாதிரி இன்றைய புதிய நிலையில் எவ்வாறு சுரண்டல் செய்வது என்பதற்கு இது தெளிவான, பொருத்தமான கணக்கு.

இந்தியச் சந்தையை வளர்ச்சிப்பெறச் செய்ய, இந்தியாவி லிருந்து கச்சாப் பொருள்களை உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்யு மளவு அதை வளர்ச்சிப்பெறச்செய்ய வேண்டும். இந்த நோக்கோடு தான் பிரிட்டனின் கொள்கை இப்போது வகுக்கப்பட்டது.

> ''இங்கிலாந்தின் தொழிற் புரட்சிக்குத் தேவையான உரிவைகள், எண்ணெய், சாயப் பொருள்கள், சணல், பருத்தி ஆகிய அவசியமான மூலப் பொருள்களைத் தந்ததுமன்றி அதே சமயம் இங்கிலாந்தின் இரும்பு, பருத்திச் சரக்குகளுக்கு விரிவடையும் சந்தையாகவும் பயன்பட்டதால்தான் இந்தியா நூற்றாண்டின் முற்பாதியில் இங்கிலாந்துக்கு மிகத் தேவை யாக இருந்தது.''
>
> (எல். சி. ஏ. நௌல்ஸ்: ''கடல்கடந்த சாம்ராஜ் யத்தின் பொருளாதார வளர்ச்சி'', பக். 305.)

ஆங்கிலேயர்கள் இந்தியாவில் நிலத்தை வசப்படுத்திக் கொண்டு தோட்ட முதலாளிகளாய் வாழ அனுமதிப்பது என்று 1833இல் செய்யப்பட்ட தீர்மானம்தான் புதிய கொள்கையின் தொடக்க நிலை. அதே ஆண்டில், மேற்கு இந்தியத் தீவுகளில்

அடிமைத் தொழில் ஒழிக்கப்பட்டிருந்தது. புதிய தோட்ட அமைப்பு என்பது கரவான அடிமைத்தொழிலே அன்றி வேறல்ல; இந்த முறை இந்தியாவில் உடனே ஊக்கம் அளிக்கப்பட்டது; தொடக்க காலத்துத் தோட்ட முதலாளி களில் பலர் மேற்கு இந்தியத் தீவுகளில் அடிமைகளைப் பிடித்து விற்றவர்கள் என்பதையும் குறிப்பிட வேண்டும். (''மேற்கு இந்தியத் தீவுகளிலிருந்து அநுபவம் வாய்ந்த தோட்டக்காரர்கள் கொண்டு வரப்பட்டார்கள்....இந்த வட்டாரம் சிறிது முரட்டுத்தனமான தோட்டக்காரர்களையே கவர்ச்சித்தது; அவர்களில் சிலர் அமெரிக்காவில் அடிமைகளை ஏலம்போட்டவர்கள்; அவர்கள் அடிமைகளைப் பற்றி துரதிர்ஷ்ட மான கருத்துள்ளவர்கள், அப்படியே பழகியவர்கள்''—புகானன்; ''இந்தியாவில் முதலாளித்துவத் தொழிலின் வளர்ச்சி'', பக். 36-7) அதனுல் விளைந்த கொடுமைகளை 1860இல் அவுரிக் கமிஷன் வெளிப்படுத்தியது. இன்று பத்து இலட்சம் தொழி லாளர்களுக்கு மேல் தேயிலை, காபி, ரப்பர் தோட்டங்களில் கட்டுண்டு இருக்கிறுர்கள். இந்த எண்ணிக்கை, துணித்தொழில், நிலக்கரிச் சுரங்கம், பொறியியல் தொழில், இரும்பு, உருக்குத் தொழில்கள் எல்லாவற்றிலும் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் எண்ணிக்கையைவிட மிகுதி.

மூலப் பொருள்களின் ஏற்றுமதி தாவி ஏறியது—குறிப்பாக, 1833க்குப் பிறகு. கச்சாப் பருத்தியின் ஏற்றுமதி 1813இல் 90 இலட்சம் பவுண்டு இருந்தது, 1833இல் அது 3·20 கோடியாகி, 1844 இல் 8·80 கோடியாயிற்று. ஆட்டுக் கம்பளி 1833 இல் 3.7 ஆயிரம் பவுண்டுகளாக இருந்து 1844 இல் 27 லட்சம் பவுண்டுகளாக ஏறியது. ஆளிவிதை 1833 இல் 2,100 புஷல் களாயிருந்தது (எட்டு காலன்கள் கொண்ட அளக்கும் கருவி) 1844 இல் 2,37,000 ஆயிற்று. (போர்டர்: ''நாட்டின் முன்னேற்றம்'', 1847, பக். 750).

1849 க்கும் 1914 க்கும் இடையில் கச்சாப் பருத்தி ஏற்றுமதிகளின் மதிப்பு £17 இலட்சத்திலிருந்து £ 2·2 கோடி ஆயிற்று. எடையில், 1833 இல் 3·2 கோடி பவுண்டாக இருந்தது 1933இல் 96·3 கோடி பவுண்டாக உயர்ந்தது, அதா வது முப்பது மடங்கு அதிகம். சணல் ஏற்றுமதிகள் 1849 இல் £68,000, 1914 இல் £86 இலட்சம் ஆயிற்று, அல்லது 126 மடங்கு அதிகம்.

பசிப்பிணியால் தவிக்கும் இந்தியாவிலிருந்து உணவுத் தானியங்களின் ஏற்றுமதி அதிகரித்ததுதான் மிகக் குறிப்பிடத்

தக்க விஷயம், உணவுத் தானியங்களின் ஏற்றுமதி, குறிப்பாக அரிசியும் கோதுமையும், 1849 இல் £ 858,000, 1858 இல் £ 38 இலட்சம், 1877 இல் £ 79 இலட்சம், 1901 இல் £ 93 இலட்சம், 1933இல் £ 193 இலட்சமாயிற்று, அல்லது 22மடங்கு அதிகரிப்பு.

இந்தச் செயல் முறையோடு கூடவே, பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பாதியில் கடுமையான பஞ்சங்களின் எண்ணிக்கையும் கூடின. பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பாதியில் ஏழு பஞ்சங்கள் நேர்ந்தன; அப்பஞ்சங்களால் உயிரிழந்தோரின் எண்ணிக்கை 15 இலட்சம் என்று மதிப்பிடப்படுகிறது. பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பாதியில் இருபத்துநான்கு பஞ்சங்கள் (1851-க்கும் 1875-க்கும் இடையில் ஆறு, 1876-க்கும் 1900-க்கும் இடையில் பதினெட்டு); அவற்றுல் இறந்தோரின் எண்ணிக்கை அதிகாரபூர்வமான மதிப்பீட்டின்படி 2 கோடிக்கும் அதிகம். ''சுமாராகச் சொன்ஞல், நூற்றுண்டுகளுக்குமுன் இருந்ததைவிடப் பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதி முப்பது ஆண்டுகளில் நாலுமடங்கு அதிகம், நாலுமடங்கு மிகுதியான பரவல்'', (டபிள்யு. டிக்பி, ''செல்வம் கொழிக்கும் பிரிட்டிஷ் இந்தியா''; 1901). ''இந்தியாவும் அதன் பிரச்னைகளும்'' என்ற நூலில் டபிள்யு. எஸ். லில்லி, அதிகார பூர்வமான மதிப்பீடுகளின் ஆதாரத்தின் பேரில் கீழ்க்காணும் புள்ளி விவரங்கள் தருகிருர்:

| ஆண்டுகள் | | பஞ்சச் சாவுகள் |
|---|---|---|
| 1800 — 1825 | .... | 1,000,000 |
| 1825 — 1850 | .... | 400,000 |
| 1850 — 1875 | .... | 5,000,000 |
| 1875 — 1900 | .... | 15,000,000 |

1878 இல் பஞ்சங்கள் அதிகரிக்கும் பிரச்னையைப் பற்றி ஆராய ஒரு பஞ்சக் கமிஷன் நியமிக்கப்பட்டது. 1880 இல் அதன் அறிக்கை வெளிவந்தது; ''இந்தியப் பஞ்சங்களின் நாசகரமான விளைவுகளுக்கும், பயனுள்ள முறையில் உதவி வழங்க முடியாமல் இருப்பதற்கும் ஒரு முக்கியமான காரணம், மக்களில் பெரும்பாலோர் விவசாயத்தையே நம்பி வாழ்வதும், மக்களில் எந்தப் பகுதியினரும் நம்பி வாழுமாறு வேறு தொழில் எதுவும் இல்லாமலிருப்பதுமே'' என்று அது குறிப்பிடுகிறது.

> ''இந்திய மக்களின் வறுமைக்கும், பற்றுக்குறைக் காலங்களில் அவர்கள் உட்பட நேரும் அபாயங்களுக்கும் அடிப்படையில், மக்கட்தொகையில் பெரும்பாலோரின் ஒரே தொழிலாக விவசாயம் இருக்கிறது என்பதும், பற்பல தொழில்களைத் தொடங்கி அதிகப்படி மக்களை விவசாயத்தி

விருந்து திருப்பித் தொழில்களிலோ அல்லது இம்மாதிரி வேறு வழிகளிலோ பிழைப்புக்கு வழிதேடிக் கொள்ளுமாறு செய்தாலன்றி வேறு விமோசனம் என்ற சூழ்நிலை இருக்கிறது.''

*(இந்தியப் பஞ்சக் கமிஷன் அறிக்கை, 1880)*

தொழில் முதலாளித்துவம் இந்தியாவில் தான் காட்டிய கைத்திறனைப் பற்றி இச்சொற்களில் தானே தீர்ப்பு வழங்கிக் கொண்டது.

அத்தியாயம் 6

# இந்தியாவில் நவீன ஏகாதிபத்தியம்

*''நிர்வாகமும் சுரண்டலும் கைகோர்த்துச் செல்பவை''*

—1905 இல் கர்ஸன் பிரபு

**1914–18** உலகப்போர் முதல், இந்தியாவில் ஏகாதிபத்தியம் புதிய கட்டத்தில் புகுந்துள்ளது என்று பரவலாய்க் கருதப்படுகிறது; முந்தின காலத்திற்கும் இதற்கும் யாதொரு ஒற்றுமையும் கிடையாது.

அரசியல் துறையில், பழைய முழு ஆட்சி 1917 ஆம் ஆண்டின் அறிவிப்போடு முடிந்துவிட்டதாய்க் கருதப்படுகிறது; ''சாம்ராஜ்யத்தின் பிரிக்க முடியாத பகுதியான இந்தியாவில் படிப்படியாகப் பிரதிநிதித்துவம் உள்ள அரசாங்கத்தை ஏற்படுத்துவதே'' புதிய குறிக்கோள் என்று அந்த அறிவிப்பு உறுதி தருகிறது, அதை அடுத்த வரலாறு. அந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக அடுத்தடுத்து அரசியல் சீர்திருத்தங்கள் வழங்கிப் படிப்படியான வளர்ச்சி காண முயன்று 1946 ஆம் ஆண்டு மே மாதம் 16 ஆம் நாள் பிரிட்டிஷ் அரசவைத் தூது கோஷ்டி வெளியிட்ட அறிவிப்பு மூலம் இறுதியாக நிறைவுபெற்ற வரலாறாக நோக்கப்படுகிறது.

பொருளாதாரத் துறையில், பழைய 'தனித்து வாழும்' கொள்கை காரணமாக இந்தியாவின் தொழில் வளர்ச்சி மீதிருந்த பகைமை மாறிப் புதிய கண்ணோட்டம் தோன்றியுள்ளது என்று கருதப்படுகிறது; அதனால், பிரிட்டிஷ் ஆட்சியின் அன்பான பாதுகாப்பிலும், பிரிட்டிஷ் மூலதனத்தின் உதவியோடும் இந்தியா ஒரு தொழில்மய நாடாக மாறுதல் பெற்று வருகிறது என்றும் கருதப்படுகிறது.

1918 ஆம் ஆண்டுக்குப் பிந்தின காலத்து உண்மை விவரங்களைக் கூர்ந்து பார்த்தால், தன் சரிவுக் காலத்தில் ஏகாதிபத்தியம் முற்போக்காய் நடந்துகொள்வதாய்க் கூறும் இந்த வருணனை உண்மைக்கு எவ்வளவு புறம்பானது என்று விளங்கும்.

பழைய, தடையிலா வணிக முதலாளித்துவச் சுரண்டலில் ஒரு மாறுதல் ஏற்பட்டுள்ளது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், பழைய முறைக்கும் புதிய முறைக்கும் இடையில் பிளவு உண்டாக்கியது 1914 ஆம் ஆண்டுப் போர் என்று முதல் பார்வையில் தோன்றினாலும், இந்த யுத்தம் மாறுதலின் தீர்மான மான தொடக்கப்புள்ளி அல்ல. முதலாவது உலகப்போரும் அதன் நெடிய விளைவுகளும், இருபதாம் நூற்றாண்டின் முதல் பதினைந்து ஆண்டுகளில் தோன்றிக் கொண்டிருந்த மாறுதல் வேகத்தின் விளைவுகளேயாகும். தடையிலா வணிகத் தொழில் முதலாளித்துவ நிலையிலிருந்து, முதலீட்டு முதலாளித்துவத்திற்கும் அதன் ஆட்சிக்கும் இந்தியா உட்பட்ட நிலைக்குச் சென்றதே மாறு தலின் உண்மையான தொடக்கம், இந்த மாறுதலுக்கான அஸ்தி வாரம் ஏற்கனவே போடப்பட்டுவிட்டது.

1914 ஆம் ஆண்டுப் போர், முதலாளித்துவத்தின் நெருக்கடியை அவிழ்த்துவிட்டு இந்த மாறுதலை ஊக்கி விரைவு படுத்திய அதே சமயத்தில், இதற்கு முன் அறிந்திராத விதத்தில் இந்தியாவில் மக்கள் பல போராட்டங்களைத் துவக்கினர். இந்த இரட்டைச் செயல் முறையிலிருந்துதான் இந்தியாவில் நவீன காலத்தின் தனித்தன்மை தோன்றுகிறது. இந்தக் காலம், அதற்கு முன்பு தொடக்கக் கட்டத்தில் பூர்த்தியாகாமல் ஓரளவு இருந்த முதலீடு முதலாளித்துவத்தின் முழுத்தன்மையையும், ஏகாதி பத்திய ஆதிக்கத்தின் அஸ்திவாரத்தையே உலுக்கிய, அடுக்கடுக் கான மக்கள் போராட்டங்களையும் ஒரே சமயத்தில் கண்டது. இந்த இரண்டு வலிய சக்திகளும் இன்றைய புதிய இந்தியாவை உருவாக்கியுள்ளன.

இந்தியாவில் அரசியல் சீர்திருத்தங்கள் என்பது அண்மைக் காலத்துக் கண்டுபிடிப்பு அல்ல. 1861 ஆம் ஆண்டின் கவுன்சில்கள் சட்டத்திலிருந்து தொடங்கி, (ஈ. ஏ. ஹாரினின் தரமான நூல் ''பிரிட்டிஷ் இந்தியாவில் அரசியல் முறை''யில் ''பிரிட்டிஷ் இந்தியாவில் பிரதிநிதித்துவ நிறுவனங்கள் ஏற்பட முதல் விதைகள் தூவப்பட்டதாய்,'' வருணிக்கப்படுகிறது.) 1865 இலும் 1882 இலும் நகராண்மை, மாவட்ட ஆட்சிக் கழகங்கள் ஏற்பட்டது, 1892 ஆம் ஆண்டின் கவுன்சில்கள் சட்டம், 1909 மார்லி—மிண்டோ சீர்திருத்தங்கள் என அவை தொடர் வரிசையில் வந்துள்ளன. 1917 ஆம் ஆண்டு அறிவிப்பு முதல் புதிய கட்டம் ஆரம்பம் ஆவதாய்க் கூறப் படுகிறது; ஆயினும் 1914 க்கு முந்தின ஆண்டுகளில் மார்லி—மிண்டோ சீர்திருத்தங்களிலிருந்துதான் உண்மையாக ஆரம்ப மாகிறது; இந்தச் சீர்திருத்தங்கள் வழங்கப்பட்டபோது தாராள

மான சீர்திருத்தங்களும் சலுகைகளும் (வன்முறையும் தான்) வழங்கப்படுவதாய்த் தம்பட்டம் அடிக்கும் பிரசாரத்தைத் தொடங்கினார்கள்; எனினும் ஆட்சியாளர்களிடமே எல்லா அதிகாரங்களும் இருந்தன. மார்லி—மிண்டோ சீர்திருத்தங்களைப் பழிப்பதற்காகவும் குறைவுபடுத்துவதற்காகவும் மாண்டேகு—செம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் வந்தன என்பது மெய்தான். (''அந்த நேரத்தில் அவற்றைப் பற்றி உற்சாகமாகப் புகழ்ந்து பேசினார்கள்.'') அவற்றால் ஏற்பட்ட இரட்டை ஆட்சி முறையையும் பின்னால் வந்தவர்களால் பழிக்கப்பட்டுக் கண்டிக்கப்பட்டன. பழைய திட்டங்கள் தன்னாட்சியை வழங்கவில்லை என்பதை எல்லோரும் ஒப்புக்கொண்டனர்; இந்த விமரிசனம் பின்னால் வந்த திட்டங்களுக்கும் பொருந்தும், 1918க்குப்பிந்தின காலத்தை, அதிகாரத்தைக் கைவிட்டு, ஆட்சியை மாற்றும் காலமாகப் பிரிட்டிஷ் மக்கள் காணுமாறு செய்திருக்கலாம். ஆனால், இந்திய மக்கள் கண்ட அநுபவம் வேறு; ஒருபுறம் சலுகைகள் வழங்கப்படுகையில் விரிவான பரவலான அடக்குமுறையும், முன் காணாத அளவு சிறையிடுதலும், எங்கும் பரவிய வன்முறையும், துப்பாக்கிச் சூடும், கடுமையான தடுப்புச் சட்டங்களும்தான் அவர்கள் கண்டார்கள்.

அதைப் போலவே, பொருளாதாரத் துறையில் புதிய கட்டத்தின் ஆரம்ப அறிகுறிகளை இருபதாம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் காணலாம். 1905இல் கர்ஸன் பிரபு புதிதாக வாணிப, தொழில்துறையை நிறுவினார்; 1907இல்தான் முதல் தொழில் மகாநாடு நடந்தது. பருத்தி ஆலைத் தொழில் வளர்ச்சி 1914க்கு முந்தின இருபதாண்டுகளில் அதிகமாயிருந்தது; பிந்தின இருபதாண்டுகளில் அவ்வளவில்லை. தொழில் மயமாக்கும் நோக்கம்பற்றின கொள்கை மாற்றம் குறித்த அறிவிப்புகள் முன்பைவிட மிகுதியாக இருந்தன. புதிய சுங்கவரிக் கொள்கை 1918க்குப் பிந்தின காலத்தில்தான் தொடங்குகிறது. ஆனால்கிடைத்த பயன்கள் தேவைக்கும் சாத்தியத்திற்கும் மிகக் குறைவு; உற்பத்திப் பெருக்கத்தைத் தடை செய்யும் பகைமைகள் தொடர்ந்தது மட்டும் அல்ல, புதிய வடிவங்களில் பெருகியுமுள்ளன.

நவீன காலத்தின் புதிய மாறுதல் அரசியல் மாறுதலே; இந்திய மக்கள் தங்கள் விடுதலைப் போரில் ஒரு புதிய கட்டத்திற்கு முன்னேறினார்கள் என்பதே அது. ஆனால், இந்த முன்னேற்றம் ஏகாதிபத்தியத்தை எதிர்த்தெழுந்த முன்னேற்றம்.

இந்தியாவில் ஏகாதிபத்திய ஆட்சியின் நவீன காலத்து இயக்க சக்திகளின் ஆய்வுக்கான திறவுகோல், தொழில் முதலாளித்துவ

யுகத்திலிருந்து முதலீடு முதலாளித்துவ யுகத்திற்கு மாறுதல் அடைந்ததில் உள்ளது. இந்தச் செயல் முறையையும் அதன் விளைவுகளையும் புரிந்து கொண்டால்தான் இந்தக் காலத்தைப் புரிந்து கொள்ள முடியும்.

## 1. நிதி—மூலதனத்துக்கு மாற்றம்

பத்தொன்பதாம் நூற்றுண்டில் தொழில் முதலாளிகள் இந்தியாவைச் சிறப்பான முறைகளில் சுரண்டினுர்கள் என்றுல் பழைய நேர்முகக் கொள்ளையும் புதிய வடிவங்களில் தொடர்ந்து முன்னேறியதுடன் மாறுதலும் அடைந்தது.

ஆண்டுதோறும் இலட்சக் கணக்கான பவுன்கள் மதிப்புள்ள செல்வத்தை இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்கு அள்ளிக்கொண்டு போனுர்கள்; பத்தொன்பதாம் நூற்றுண்டின் இடைப்பகுதிவரை அதை அதிகார பூர்வமான வட்டாரங்களில் 'நன்கொடை' என்று பகிரங்கமாய்ப் பேசினுர்கள்; 'உள்நாட்டுச் செலவுகளுக்கென்று'' எடுத்துச் சென்றதுடன் தனிநபர்களும் அனுப்பிய வண்ணம் இருந்தார்கள்; பதிலுக்கு இந்தியாவுக்கு எந்தச் சரக்குகளும் வருவதில்லை (இங்கிலாந்திலிருந்து அரசாங்கப் பண்டங்களுக்கு வரும் சிறிய அளவு பண்டங்கள் தவிர). இந்த 'நன்கொடை', வாணிபத்தின் வளர்ச்சியோடு பத்தொன்பதாம் நூற்றுண்டு முழுவதும் நீடித்தது. இருபதாம் நூற்றுண்டிலோ, வாணிபம் ஓரளவு சரிந்திருப்பினும் 'நன்கொடை' மிக விரைவாக வளர்ச்சி கண்டது.

1848இல், மேற்கு, கிழக்கு இந்தியத் தீவுகளில் சர்க்கரை, காபிப்பயிர் பற்றின மக்கள் மன்றத்தின் பொறுக்குக் குழுவுக்கு முன்னுல், கிழக்கு இந்தியா கம்பெனி இயக்குநர்களில் ஒருவரான கர்னல் ஸைக்ஸ் சாட்சியம் அளிக்கையில், இவ்வாறு அனுப்பப்படும் 'நன்கொடை'யின்—அப்படித்தான் அவர் குறிப்பிட்டார்—மதிப்பு ஆண்டு ஒன்றுக்கு முப்பத்தைந்து இலட்சம் பவுன்கள் இருக்கும் என்றுர்.

''இறக்குமதிகளைவிட அதிகமாய் ஏற்றுமதிகள் செய்வதன் மூலம்தான் இந்தியா இந்த நன்கொடையைத் தாங்க முடியும்'' என்றுர் அவர். அதுபோலவே, கிழக்கு இந்தியா கம்பெனி வியாபாரியான என். அலெக்சாண்டர் அதே குழுக்கு முன் கூறினுர்: ''1847 வரை இந்தியாவின் இறக்குமதிகள் மதிப்பு சுமார் £ 6,000,000, ஏற்றுமதிகள் சுமார் £ 9,000,000 வித்தியாசம், அந் நாட்டிடமிருந்து கம்பெனிக்கு கிடைத்த நன்கொடையாகும்; அது சுமார் £ 4,000,000 இருக்கும்.''

1851க்கும் 1901க்கும் இடையில் 'உள் நாட்டுச் செலவுகளுக்'கென ஆட்சியாளர்கள் இங்கிலாந்துக்கு அனுப்பிய

தொகை—தனிநபர்கள் அனுப்பியதைத் தவிர—£ 25 இலட்சத்திலிருந்து £ 1·73 கோடியாகி ஏழு மடங்கு பெருகியது; இதில் £ 20 இலட்சம் மட்டும் பண்டங்கள் வாங்கிய வகையில் அனுப்பப்பட்டது. 1913-14 அளவில் அது £ 1·94 கோடியாக உயர்ந்தது; அதில் £ 15 இலட்சம் மட்டும் பண்டக் கொள்முதலைக் குறிக்கும். 1933-34 அளவில் இங்கிலாந்தில் ஏற்பட்ட மொத்த நிகரச் செலவு அரசாங்கக் கணக்குகளின்படி £ 2·75 கோடி; இதில் £ 15 இலட்சம் மட்டும் பண்டக் கொள்முதலைக் குறிக்கும் (ரூபாயின் நாணயமாற்று விகிதம் 1914இல் 1 ஷில்லிங் 4 பென்ஸிலிருந்து 1933இல் 1 ஷில்லிங் 6 பென்ஸாக மாற்றப்பட்டதால் இந்த நன்கொடையைச் செலுத்தத் தேவைப்பட்ட ரூபாய்களின் எண்ணிக்கை குறைந்தது; ஆனால், இந்திய விலைகளின் அகவிலைப் பட்டியல் எண் 1914இல் 147 ஆக இருந்தது, 1933இல் 121 ஆக வீழ்ந்ததால் நாணய மாற்றினால் கிடைத்த ஆதாயத்தைவிட அதிகமாய் நஷ்டம் ஏற்பட்டு, இந்தியாவின் சுமை 1914ஆம் ஆண்டு மதிப்பின் கணக்கில் £ 3 கோடிக்குச் சமமாயிற்று).

1851க்கும் 1901க்கும் இடையில் இந்தியாவின் ஏற்றுமதிகள் (பண்டங்களும், பொக்கிஷங்களும் சேர்ந்து) மும்மடங்கு ஆயின— £ 33 இலட்சத்திலிருந்து £ 1·1 கோடியாக ஏறியது. (பண்டங்கள் £ 72 இலட்சத்திலிருந்து £ 2·74 கோடி ஆயிற்று.) ஆனால், இருபதாம் நூற்றாண்டில் இந்த ஏற்றம் மேலும் விரைவாக ஏறலாயிற்று. 1901க்கும் 1913-14க்கும் இடையில் அது £ 1.1 கோடியிலிருந்து £ 1.42 கோடியாக ஏறியது (பண்டங்கள் மட்டும் £ 3·84 கோடி). ஆயினும், 1913-14 சராசரிக்குக் கீழே இருந்தது. போருக்கு முந்தின ஐந்து ஆண்டுகளை, 1909-10 முதல் 1913-14 வரை, எடுத்துக்கொண்டால் ஆண்டுதோறும் நிகர மிகை ஏற்றுமதிகளின் மதிப்பு £ 2·25 கோடி, அல்லது, ஒரு பத்தாண்டுக் காலத்தில் 1901 ஆம் ஆண்டு அளவுக்கு இரு மடங்கு. ("இந்திய நிதிக் கமிஷன், 1922 அறிக்கை" பக். 20 பார்க்க.)

1933-34 அளவில் இந்தியாவின் நிகர மிகை ஏற்றுமதிகள் மொத்தம் £ 6·97 கோடி ஆயிற்று; இதில் பண்டங்கள் £ 2·68 கோடி, £ 4.29 கோடி பொக்கிஷம். நெருக்கடியிலிருந்த ஸ்டர்லிங்கைக் காப்பாற்ற இந்தியாவிலிருந்து தங்கம் எடுத்துச் செல்லப்பட்டதன் விளைவாகவே இந்த அசாதாரணமான மிகை ஏற்றுமதி ஏற்பட்டது. இன்னும் நன்றாக ஒப்பிட்டுப் பார்ப்பதற்காக, 1931-32 முதல் 1935-36 வரையுள்ள ஐந்தாண்டுச் சராசரியை எடுத்துக் கொண்டால், அதன் மதிப்பு £ 5·92 கோடி. அதாவது, போருக்கு முந்தின ஐந்தாண்டுக்கால (1910-14) அளவைவிடச் சுமார் மும்மடங்கு, 1901 ஆம் ஆண்டு அளவை விட ஐந்து மடங்குக்கும் அதிகம்,

பத்தொன்பதாம் நூற்றுண்டின் நடுவிலிருந்து இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்கு நேராக அனுப்பப்பட்ட 'நன்கொடை' (இந்திய ஏற்றுமதிகளுக்கும் இறக்குமதிகளுக்கும் இடையில் உள்ள விலை வித்தியாசத்தின்மூலம் மேலும் சுரண்டல் செய்யப்பட்டதை இக் கணக்கில் சேர்க்கவில்லை.) அட்டவணை வடிவத்தில் தயாரிக்கப்பட்டால், நவீன காலத்தில் இங்கிலாந்து இந்தியாவை மேலும் மேலும் சுரண்டியது என்பது ஒரே பார்வையில் விளங்கும்; எனினும், மொத்தச் சுரண்டலில் ஒரு பகுதியை வெளிப்படுத்தவே இந்த அட்டவணை உதவும்.

இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்குப் போன
நன்கொடையின் வளர்ச்சி
(£ இலட்சக் கணக்கில்)

| | 1851 | 1901 | 1913-14 | 1933-34 |
|---|---|---|---|---|
| உள்நாட்டுச் செலவுகள் .. | 25 | 173 | 1942 | 75 |
| இந்தியாவின் மிகை ஏற்றுமதிகள் .. | 33 | 110 | 142 | 697 |

அல்லது, வர்த்தக உறவுகள் பற்றி இன்னும் சீராகப் புரிந்து கொள்ள ஐந்தாண்டுக் காலங்களை எடுத்துக் கொள்வோம்:

ஐந்தாண்டுக் காலங்களில் வருட சராசரி
(£ இலட்சக் கணக்கில்)

| | 185-55 | 1897-1901 | 1909-10 முதல் 1913-14 வரை | 1931-32 முதல் 1935-36 வரை |
|---|---|---|---|---|
| இந்தியாவின் மிகை ஏற்றுமதிகள் | 43 | 153 | 225 | 592 |

சுரண்டலின் வளைகோடு செங்குத்தாகவும் விரைவாகவும் ஏறுவதிலிருந்து அளவு கூடிக்கொண்டு போவதைமட்டும் காட்டவில்லை; சுரண்டலின் தன்மையிலும் முறைகளிலும் மாறுதல் ஏற்பட்டுள்ளதையும் பிரதிபலிக்கிறது.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பாதியில் இங்கிலாந்துக்கு இந்தியாவிலிருந்து போன நன்கொடை ஏராளமாகவும் விரைவாகவும் அதிகரித்ததும், இருபதாம் நூற்றுண்டில் அதிவேகமாக அதிகரித்ததும் சுரண்டலில் புதிய வடிவங்கள் தோன்றியுள்ளதை உண்மையில் மறைத்துக் கொண்டிருக்கின்றன; இந்தப் புதிய வடிவங்கள் தடையிலா வாணிபம் பத்தொன்பதாம் நூற்றுண்டு முதலாளித்துவத்தின் காலத்து நிலைமைகளில் தோன்றிப்

புதிய இருபதாம் நூற்றாண்டு நிதி-முதலாளித்துவத்தின் நிலைக்கு வளர்ந்து கொண்டிருக்கின்றன.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தடையிலா வாணிப முதலாளித்துவத்தின் தேவைகள் இந்தியா பற்றின பிரிட்டிஷ் கொள்கையில் மாறுதல் ஏற்படுத்த நிர்ப்பந்தம் செய்தன.

முதலாவதாக, கம்பெனியை நிரந்தரமாக ஒழித்துவிட்டு, அதன் இடத்தில், பிரிட்டிஷ் முதலாளி வர்க்கம் முழுவதற்கும் பிரதிநிதியான பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நேர் நிர்வாகத்தை ஏற்படுத்த வேண்டும். 1833ஆம் ஆண்டு உரிமைச் சாசனத்தின் போது இதை ஓரளவு நிறைவேற்றினாலும் 1858 இல் தான் இறுதியாகவும் முழுமையாகவும் நிறைவேற்றப்பட்டது.

இரண்டாவதாக, வாணிப ஊடுருவலுக்காக இந்தியாவை இன்னும் முழுமையாகத் திறந்துவிட வேண்டியிருந்தது. இதற்கு வலைப்பின்னலான ரயில் பாதைகள் தேவைப்பட்டன; ரஸ்தாக்கள் போட வேண்டியிருந்தன; பிரிட்டிஷ் ஆட்சியில் முற்றிலும் புறக் கணிக்கப்பட்ட பாசன வசதிகளைப் புதுக்குவதில் கவனம் செலுத்த வேண்டியிருந்தது; மின்சாரத் தந்தியை ஆரம்பிக்க வேண்டியிருந்தது; ஒரே சீரான அஞ்சல் முறையை ஏற்படுத்த வேண்டியிருந்தது; குமாஸ்தாக்களையும் பணிவான ஊழியர் களையும் தயாரிக்க ஆங்கிலேயக் கல்வி முறையை ஓரளவு தொடங்க வேண்டி இருந்தது. ஐரோப்பியப் பாங்கு முறையையும் புகுத்த வேண்டி இருந்தது.

ஆசியா அரசாங்கத்தின் பொதுப் பணிகளாற்றும் எளிய கடமைகளைக்கூடச் செய்யாமல் ஒரு நூற்றாண்டுக் காலம் புறக் கணித்துவிட்டு இப்போது சுரண்டலின் தேவைகளால் நிர்ப்பந்தப் படுத்தப்பட்டுப் பொதுப் பணிகளாற்ற ஏதோ ஒரு வகையில் ஆரம்பம் செய்தார்கள் என்பதே இதன் பொருள்; இந்த ஆரம் பமும் அரைகுறையாகவும் ஒழுங்கற்றும் (தொழில் வளர்ச்சி ஏற்பட முடியாமல் ஒடுக்கிக் கொண்டும் அடக்கிக் கொண்டும்) தான் இருந்தது; அயலார் ஊடுருவலுக்கான வாணிப, போர்த் தந்திரத் தேவைகளைச் சமாளிக்க வேண்டிய அளவே அது இருந்தது; மக்களுக்கு மிகக் கடுமையான பொருளாதார நிபந்தனைகளை விதிப்பதாயும் அது இருந்தது.

பெரிய அளவில் ரயில்பாதைகள் கட்டுவதற்கு முதன் முதலில் பெரும் ஊக்கம் அளித்தது, டல்ஹௌஸி பிரபு 1853 இல் ரயில் பாதைகள் பற்றிக் கொடுத்த புகழ்பெற்ற குறிப்பே ஆகும்; இந்தியாவைப் பிரிட்டிஷ் சரக்குகளுக்குச் சந்தையாகவும் மூலப் பொருள்களுக்குத் தோற்றுவாயாகவும் மாற்றும் வாணிப நோக்கத்தை அக்குறிப்பு மிகத் தெளிவாய் வெளியிடுகிறது:

''அவைகளை நிறுவுவதால் இந்தியாவுக்குக் கிட்டக்கூடிய வாணிப, சமூக நன்மைகள் தற்போதைய எந்தக் கணக்கிலும் அடங்கா என்று நான் உண்மையாக நம்புகிறேன். இந்தியா ஏற்கனவே ஓரளவு உற்பத்தி செய்யும் பருத்தியை இங்கிலாந்து உரத்து வேண்டுகிறது கப்பலில் ஏற்றுவதற்கான துறைமுகங் களுக்குச் சமவெளிகளிலிருந்து சரக்குகள் கொண்டு போவ தற்குப் பொருத்தமான போக்குவரத்துச் சாதனங்கள் அமைக்கப்பட்டால் இந்தியா போதுமான தரத்திலும் ஏராளமான அளவிலும் உற்பத்தி செய்யமுடியும், வர்த்தக வசதிகளை அதிகமாக்கும்போதெல்லாம் இந்தியாவின் மிகத் தொலைவிலுள்ள பகுதிகளிலும் ஐரோப்பிய பொருள்களுக்குக் கிராக்கி அதிகமாவதை நாம் கண்டிருக்கிறோம். உலகத்தின் இந்தப் பகுதியில் நமக்குப் புதிய மார்க்கெட்டுகள் திறந்து கொண்டிருக்கின்றன; அவற்றின் எதிர்கால மதிப்பு என்ன என்று மதிப்பிடவோ அல்லது எதிர்காலப் பரப்பு என்ன என்று கணக்கிடவோ மிகச் சிறந்த அறிவு படைத்தோரின் தொலை நோக்கிற்கும் இயலாத சூழ்நிலைகளில் இந்த மார்க் கெட்டுகள் தோன்றிக் கொண்டிருக்கின்றன.''

(டல்ஹௌஸி பிரபு, 1848-56 வரை கவர்னர்-ஜெனரல்: ரயில்பாதைகள் பற்றின குறிப்பு 1853.)

இந்தியாவை வாணிப முறையில் ஊடுருவுவதற்காகத் தொழில் முதலாளித்துவத்திற்கு ஏற்பட்ட தேவைகளின் விளைவாகத் தோன்றிய இந்தச் சுறுசுறுப்பான வளர்ச்சிக்கு, குறிப்பாக ரயில் பாதைகள் அமைப்புக்கு, (இரும்பு, உருக்கு, பொறியியல் தொழில்களுக்கு ஒரு சந்தை காண்பதற்காகவும் இந்த வளர்ச்சி ஏற்பட்டது.) தவிர்க்க முடியாத மற்றொரு விளைவும் இருந்தது; ஒரு புதிய கட்டத்திற்கு அஸ்திவாரம் இடப்பட்டதுதான் அது; இந்தியாவில் பிரிட்டிஷ் மூலதனத்தை முதலீடு செய்ய வேண்டியதாயிற்று.

ஏகாதிபத்திய விரிவின் சாதாரணச் சூத்திரத்தில் இந்தச் செயல்முறை மூலதன ஏற்றுமதி என்று கூறப்படும். ஆனால் இந்தியாவைப் பொறுத்தமட்டில், பிரிட்டிஷ் மூலதனம் இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது என்று வருணித்தால் அது உண்மையைக் கிண்டல் செய்வதாகும். உண்மையான மூலதன ஏற்றுமதித் தொகை மிகக் குறைவு. 1914 வரையான நீண்ட காலத்தில் 1856-62 ஆகிய ஏழே ஆண்டு கள் மட்டும், வழக்கமான மிகை ஏற்றுமதிகளுக்குப் பதிலாக மிகை இறக்குமதிகள் இருந்தன. ஏழு ஆண்டுகளுக்கும் சேர்த்து மொத்தம் £ 2·25 கோடி. 1914 அளவில் மொத்த மூலதன முத

வீட்டின் மதிப்பு £ 50 கோடி என்று மதிப்பிடப்படுகையில் இந்த மிகை ஏற்றுமதித் தொகை பெரியதெனக் கூறமுடியாது. இந்த காலம் முழுவதும் பிரிட்டனிலிருந்து இந்தியாவுக்கு ஏற்றுமதியான மூலதனத்துக்கும் பன்மடங்கு அதிகமாகவே மூலதனம் முதலீடு செய்யப்படுகையிலேயே இந்தியாவிலிருந்து பிரிட்டனுக்கு நன்கொடை சென்றது. இவ்வாறு, இந்தியாவில் முதலீடு செய்யப்பட்ட பிரிட்டிஷ் மூலதனம் உண்மையாக முதலில் இந்திய மக்களைக்கொள்ளையடித்து இந்தியாவிலேயே தயாரிக்கப்பட்டு, பிறகு இந்திய மக்கள் பிரிட்டனுக்குத் தரவேண்டிய கடன்பாக்கி அது என்று கணக்கெழுதப் பட்டு, அத்தொகைக்கு அப்போது முதல் வட்டியும் லாபப் பங்கும் இந்திய மக்கள் தரவேண்டும் என்று ஏற்பட்டது.

இந்தியாவில் பிரிட்டிஷார் முதலீடு செய்வதற்கு ஆணிவேரே 'நாட்டுக் கடன்'-பிரிட்டனின் பணக்கார ஆட்சிக்குழு தன் இரும்புப் பிடியை இறுக்குவதற்காகக் கையாண்ட அவர்களுக்குக் கைவந்த உபாயம். 1858இல் பிரிட்டிஷ் அரசு ஆட்சியை மேற்கொண்ட போது, அவர்கள் கிழக்கு இந்தியா கம்பெனியிடமிருந்து £ 7 கோடி கடனை ஒப்புக்கொண்டார்கள். உண்மையில், இந்திய ஆசிரியர்கள் கணக்கிட்டுள்ளபடி, கிழக்கு இந்தியா கம்பெனி இந்தியாவிலிருந்து 'நன்கொடை'யாக £ 15 கோடிக்குமேல் எடுத்துச் சென்றுள்ளது; அது தவிர, ஆப்கானிஸ்தானம், சீனு முதலிய வெளிநாடுகளில் பிரிட்டன் தொடுத்த போர்களின் செலவுகளை இந்தியாமீது சுமத்தினுர்கள். ஆக, நியாயமாய்க் கணக்கிட்டால் இந்தியாவுக்குத்தான் கடன் பாக்கி வரவேண்டும்; ஆனுல், அதனுல் கடனை மேற்கொள்வதோ, அதை விரைவாகப் பெருக்குவதோ தடைப்படவில்லை.

பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கையில் இந்த 'நாட்டுக் கடன்' பதினெட்டு வருடங்களில் £7 கோடியிலிருந்து £14 கோடி பவுனுக இரட்டித்தது. 1900ஆம் ஆண்டு அளவில் அது £22·4 கோடி பவுனுக உயர்ந்தது. 1913-ல் அது £27·4 கோடியாகப் பெருத்தது. 1939–ல், இரண்டாவது உலகப் போர் தொடங்கும்போது அது 1,179 கோடி ரூபாய்கள் (£88·42 கோடி) ஆயிற்று. இது, இந்தியக் கடனுக 709·9 கோடி ரூபாய்களும் (£53·24 கோடி), ஸ்டர்லிங் கடனுக அல்லது இங்கிலாந்தில் கடனுக £35·18கோடியுமாக (469·1 கோடி ரூபாய்கள்)ப் பிரிக்கப்பட்டது. இவ்வாறுக, பிரிட்டிஷார் நேரில் ஆண்ட முக்கால் நூற்றுண்டில் கடன் சுமை 12 மடங்குக்கும் மேல் பெருகிவிட்டது.

இங்கிலாந்தில் ஸ்டர்லிங் கடன் ஏறிய அளவைச் சிறப்பாய்க் குறிப்பிட வேண்டும். 1856 வரைகூட, கம்பெனியின் ஆட்சி முடியும்போது இங்கிலாந்தில் கடன் £40 இலட்சத்திற்கும் குறை

வாகவே இருந்தது. 1860இல் அது £ 3 கோடிக்குத் தாவியது; 1880இல் £ 7·1 கோடி; 1900இல் £ 13·3 கோடி; 1913இல் £ 17·7 கோடி; 1939இல் £ 35·18 கோடி.

முதலில், யுத்தச் செலவுகளையும் மற்ற செலவுகளையும் இந்தியாவின் கணக்கில் பற்று எழுதியதால் இந்தக் கடன் தோன்றியது; பின்னர், ரயில்பாதைகள் அமைப்பு போன்ற பொதுப்பணிகளை அரசு தொடங்கியபோது ஏற்பட்ட செலவு களையும் அதில் சேர்த்தது. வெல்லெஸ்லி பிரபு மேற்கொண்ட ஆப்கன் போர்களாலும், சீக்கியர் போர்களாலும் 1857 எழுச்சியை ஒடுக்குவதற்காகவும் நேர்ந்த செலவுகளால் மூலக் கடனை £ 7 கோடி பெரும்பாலும் ஏற்பட்டது. பதினெட்டு ஆண்டுகளில் பிரிட்டிஷ் அரசு இரட்டித்த அடுத்த £ 7 கோடியில் £ 2·4 கோடி மட்டும் அரசின் ரயில் பாதைகளுக்காகவும் பாசன வேலைகளுக்காகவும் செலவிடப் பெற்றது. கடனில் எஞ்சிய பகுதி பெரும்பாலும் விநோதமான முறையிலேயே ஏற்பட்டது; இந்தியாவுக்கும் பிரிட்டிஷாரின் இந்திய ஆட்சிக்கும் எள்ளளவும் தொடர்பில்லாத செலவுகளை எல்லாம் இந்தியாவின் கணக்கில் பற்று எழுதினார்கள்; லண்டனில் துருக்கி சுல்தானுக்கு ஒரு வரவேற்பு அளிப்பதற்கான செலவையும், சீனாவிலும் பெர்சியாவில் பிரிட்டிஷ் குடியரசு தூதுவரகமும் உதவித் தூதரகமும் நிறுவுவதற் கான செலவையும், அபிசீனியா மீது தொடுத்த ஒரு போருக் கான செலவையும், அல்லது மெடிடரேனியன் கடற்படைக்கான செலவையும் கூட இந்தியாவின் கணக்கில் பற்று எழுதினார்கள்.

> "இந்தியாவின் கணக்கில் பற்றெழுதுவது சுலபமாக இருந்தது என்ற பல்லவி அபத்தமானது. சிப்பாய் கலகத்திற் கான செலவு, கம்பெனியின் உரிமைகளை முடியரசுக்கு மாற் றம் செய்வதற்கான செலவு, சீனாவிலும் அபிசீனியாவிலும் ஏககாலத்தில் நடந்த போர்களின் செலவு, இந்தியா ஆபீஸ் வேலைக்காரிகளுக்குக் கொடுக்கப் பட்டசம்பளம்போன்று இந்தி யாவுக்குத் தூரவுறவுகூட இல்லாத லண்டன் அரசுச் செலவு ஒவ்வொன்றும் கடலில் சென்ற, ஆனால் போர்களில் கலந்து கொள்ளாத கப்பல்களுக்கான செலவு, இந்திய வீரர்கள் கடற்படையில் பணியாற்றுமுன் அளிக்கப்பெற்ற ஆறுமாதப் பயிற்சிக்கான செலவு — இவையெல்லாம் பிரதிநிதி இல் லாத ரயத்துகளின் கணக்கில் பற்று எழுதப்பட்டன. 1868இல் துருக்கி சுல்தான் அரசாங்கப் பணிக்காக லண்டனுக்கு விஜயம் செய்தார்; அதற்கானச் செலவுச் சீட்டு இந்தியா ஆபீசில் தயாரிக்கப்பட்டு இந்தியாவின் கணக்கில் ஏறியது, ஈலிங்கில் ஏற்படுத்தப்பட்ட ஒரு

பைத்தியக்கார ஆஸ்பத்திரி, ஜான்ஸிபார் தூதுவர் குழு உறுப்பினர்களுக்கு அளிக்கப்பட்ட பரிசுகள், சீனுவிலும் பெர்சியாவிலும் கிரேட் பிரிட்டன் தூதரகமும் உதவி தூதரகமும் நிறுவுதல் மெடிடரேனியனில் நிரந்தரமாக உள்ள கப்பற் படைக்காகும் செலவில் ஒரு பகுதி, இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு ஒரு தந்தித் தொடர்பு ஏற்படுத்துவதற்கான முழுச் செலவு—எல்லாம் 1870க்கு முன்பு இந்திய கருவூலக் கணக்கில் எழுதப்பட்டுள்ளன. முடியாட்சியின் கீழ் முதல் பதின்மூன்று ஆண்டுகளில் இந்திய வருவாய்கள் ஆண்டுக்கு £ 3•3 கோடியிலிருந்து £5·2 கோடியாகப் பெருகியதில் சிறிதும் வியப்பில்லை; 1866 முதல் 1870க்குள் பற்றுக் குறைகள் £ 1·1½ கோடியாய்க் குவிந்தது. 1857க்கும் 1860க்கும் இடையில் £ 30,000,000 உள்நாட்டுக் கடன் உற்பத்தி செய்யப்பட்டது, அதை நிதானமாகப் பெருக்கிக் கொண்டே போனுர்கள்; இந்தியக் கணக்குகளை சாமர்த்தியமாய்த் தயாரித்ததால் பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் சிக்கனக் காரர்கள், பொருளாதார ஆற்றல் படைத்தவர்கள் என்று புகழ் பெற்றுர்கள்.''

(எல்.எச். ஜெங்க்ஸ்: ''பிரிட்டிஷ் மூலதனத்தின் குடியேற்றம்'' பக். 223-4)

அரசாங்க உதவியுடன் ரயில்பாதை அமைக்கப்பட்டதாலும் ரயில்பாதை அமைப்பை ஏற்ற தனியார் கம்பெனிகளுக்கு அளிக்கப்பட்ட பொறுப்புறுதிகளாலும், அப்பால் அரசாங்கமே ரயில்பாதை அமைப்பை மேற்கொண்டதாலும் கடன் சுமை மிகப் பெருகியது. ரயில்பாதை அமைக்கும் பிரிட்டிஷ் முதலீட்டுக்காரர்களின் மூலதனத்திற்கு 5 சதவீத வட்டி தருவதாய் அரசாங்கப் பொறுப்புதவி வழங்குவதே அவர்கள் கையாண்ட முறை. இந்த முறை அநாவசியமான, சிக்கனமற்ற செலவுகளுக்கு வழிவகுக்கும் என்பது தெளிவு. 1872வரை முதல் 6000 மைல்களுக்கு £10 கோடி செலவாயிற்று அல்லது ஒரு மைலுக்கு £ 16,000க்கும் அதிகம்; 1872 இல் இந்தியப் பொருளாதாரத்திற்கான நாடாளுமன்ற விசாரணைக் குழுவிடம் ரயில்வே கணக்குகளின் பழைய தணிக்கையாளர், ''அவற்றை கடுமையாகக் கட்டுப்படுத்துவதில்லை என்ற ஒருவித ஏற்பாடு இருந்தது....கணக்குகள் காட்டப்படும் வரை செலவான பணத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது'' என்று உரைத்தார். அதே விசாரணைக் குழுவிடம் இந்தியாவின் முன்னுள் நிதி அமைச்சர் டபிள்யூ. என். மாஸ்ஸி, ''பெருந்தொகைகள் வீணுக்கப்பட்டன. ஒப்பந்தக்காரர்களுக்கு சிக்கனம் செய்யும்

நோக்கமே இல்லை. எல்லாப் பணமும் ஆங்கிலேய முதலாளியிடமிருந்து வந்தது; இந்தியாவின் வருவாய்களில் ஐந்து சதவீதம் கிடைக்கும் என்று உறுதி அளிக்கப்பட்டிருந்ததால் தன் பணம் ஹூக்ளி ஆற்றில் எறியப்படுகிறதா அல்லது கல்லும் சுண்ணும்புமாக மாறுகிறதா என்பதைப் பற்றி அவன் கவலைப்படுவதில்லை.. எக்காலத்திலும் செய்யப்படாத ஊதாரி வேலைகள் அவை என்று எனக்குத் தோன்றுகிறது'' என்று அறிவித்தார்.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் முடிவுவரை ரயில் பாதைகளுக்காக £ 22.6 கோடி செலவழிக்கப்பட்டது அதனால் லாபம் கிடைக்கவில்லை; £ 4 கோடி நஷ்டம் ஏற்பட்டது. அதை இந்தியாவின் வரவு செலவு திட்டத்தில் சுமத்தினார்கள். நூற்றுண்டு திரும்பிய பிறகு ரயில்வேக்களிலிருந்து ஒரு லாபம் பிழியப்பட்டது. 1943—44இல் ரயில்வேகளின் ஸ்டர்லிங் பாக்கி செலுத்தப்படும் வரை ஆண்டுதோறும் £ 1 கோடி வீதம் (1933—34 இல் £ 97 இலட்சம்) ரயில்வே கடனுக்காக இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டிருந்தது.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பாதியில் ரயில்பாதை அமைப்பு வளர்ச்சியாலும் தேயிலை, காபி, ரப்பர் தோட்டங்கள் மற்றும் சில சிறு தொழில்கள் வளர்ச்சி அடைந்ததாலும் பிரிட்டனிலிருந்து முதலாளிகளின் முதலீடு இந்தியாவில் மிக விரைவாய்க் குவியத் தொடங்கியது.

அதே காலத்தில் தனியார் பிரிட்டிஷ் பாங்குத் தொழிலும் கம்பெனியின் ஏகபோகவுரிமை ஒழிக்கப்பட்டபின் முன்னேறத் தொடங்கியது. 1876ஆம் ஆண்டின் மாகாண பாங்குகள் சட்டம் அரசின் பாதுகாப்பிலிருந்து மூன்று மாகாண பாங்குகளை ஒழுங்குபடுத்தியது. இந்த மூன்று பாங்குகளும் அப்பால் 1921இல் இணைந்து சர்வ சக்தி வாய்ந்த இம்பீரியல் பாங்க் ஆப் இந்தியாவாக உருவெடுத்தது. இந்தியாவுக்கு வெளியே தலைமை அலுவலகங்களுள்ள நாணய மாற்றுப் பாங்குகள் குறிப்பாக 1853இல் உரிமை பெற்ற சார்டர்டு பாங்க் ஆப் இண்டியா, ஆஸ்ட்ரேலியா அண்ட் சைனு, அதே ஆண்டில் உரிமைபெற்ற ஒரு பழைய பாங்கிலிருந்து தோன்றிய மர்கென்டைல் பாங்க் ஆப் இண்டியா, 1864-ல் தொடங்கப்பட்ட நேஷனல் பாங்க் ஆப் இண்டியா, 1867இல் தொடங்கப்பட்ட ஹாங்காங் அண்ட் ஷாங்காய் பாங்கிங் கார்ப்பரேஷன் (நாணய மாற்றுப் பாங்குகளில் பெரிய நான்கு) ஆகியவை இந்தியாவில் தங்கள் பணிகளை அபிவிருத்தி செய்து, மாகாண பாங்குகளோடு கூடி பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் கீழுள்ள மூலதனம், வாணிபம், தொழில் மீது ஆட்சி புரியலாயின. இந்தியாவின் பங்கு முதலீட்டுப் பாங்குகள்

அவற்றின் ஆதிக்கத்தை எதிர்க்க முயன்று, வெளிநாட்டுப் பாங்குகளுக்கு இருந்த பெருமளவு சலுகைகள் காரணமாக அதிக வெற்றி பெறமுடியவில்லை. 1913இல் வெளிநாட்டுப் பாங்குகள் (மாகாண பாங்குகளும் நாணயமாற்று பாங்குகளும்) மொத்த பாங்க் வைப்புகளில் முக்கால் பங்கை வைத்திருக்க, இந்தியப் பங்கு முதலீட்டுப் பாங்குகளில் கால் பங்குக்கும் குறைவாக இருந்தன.

1911இல் ராயல் ஸ்டாடிஸ்டிகல் சொசைடிக்கு முன்னிலையில் படித்த ஒரு கட்டுரையில் சர் ஜார்ஜ் பெயிஷ், இந்தியாவிலும் சிலோனிலும் முதலீடு செய்யப்பட்ட பிரிட்டிஷ் மூலதனம் 1909-10இல் (கம்பெனிகளைத் தவிர தனியார் மூலதனங்களை இதில் சேர்க்கவில்லை; அதாவது, உடனடியான ஆவணச் சான்றுகள் கிடைக்காத தனியார் மூலதனங்கள் இந்தக் கணக்கில் சேரவில்லை.) £ 36·5 கோடி என்றும், இத்தொகை பின்வருமாறு முதலீடு செய்யப்பட்டிருந்தது என்றும் மதிப்பிடுகிறார். (ராயல் ஸ்டாடிஸ்டிகல் சொசைடி பத்திரிகை, தொகுதி LXXIV. முதல் பாகம், ஜனவரி 2, 1911, பக். 186.)

| | | £ இலட்சக் கணக்கில் |
|---|---|---|
| அரசாங்கம், நகராட்சி | .. | 1825 |
| ரயில்வேக்கள் | .. | 1365 |
| தோட்டங்கள் (தேயிலை, காபி, ரப்பர்) | .. | 242 |
| டிராம்வேக்கள் | .. | 41 |
| சுரங்கங்கள் | .. | 35 |
| பாங்குகள் | .. | 34 |
| எண்ணெய் | .. | 32 |
| வாணிபம், தொழில் | .. | 25 |
| நிதி, நிலம், முதலீடு | .. | 18 |
| பலவகை | .. | 33 |

இந்தியாவில் பிரிட்டிஷ் முதலாளித்துவ முதலீடுகள் அல்லது ''மூலதன ஏற்றுமதி'' எனப்படுவது, இந்தியாவில், புதிய தொழில் வளர்ச்சி ஏற்பட வேண்டும் என்ற எண்ணத்தோடு செய்யப்படவில்லை என்பதை இந்த அட்டவணையே நமக்குத் தெளிவாய்ப் போதித்து விடும். 1914 ஆம் ஆண்டுப் போருக்கு முன்னால் இந்தியாவில் முதலீடு செய்யப்பட்ட பிரிட்டிஷ் மூலதனத்தில் 97 சதவிதம் அரசாங்க காரியங்களுக்காகவும், போக்குவரத்துக்காகவும், தோட்டங்களுக்காகவும், நிதிக்காகவுமே பயன்படுத்தப்பட்டன. அதாவது, இந்தியாவில் வாணிப

ஊடுருவல் செய்வதற்கான துணைக் காரணங்களுக்காகவும், மூலப் பொருள்களுக்காக அதைச் சுரண்டல் செய்யவும், அதைப் பிரிட்டிஷ் சரக்குகளுக்கான சந்தையாக்கிச் சுரண்டல் செய்யவும் தான் அவை பயன்படுத்தப்பட்டன; எந்தவகையிலும் தொழில் வளர்ச்சிக்குச் சம்பந்தம் இல்லாத காரணங்களுக்காகத்தான் முதலீடுகள் செய்யப்பட்டன.

சில தெரிந்துகொள்ள முடியாத விஷயங்களைக் கணக்கில் சேர்க்காமல் விட்டுவிட்டு சர்ஜார்ஜ் பெயிஷ் செய்த மதிப்பீடு மிதமான மதிப்பீடு என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வர். 1914க்கு முந்தி இந்தியாவில் முதலீடு செய்யப்பட்ட மூலதனம் மொத்தம் £ 45 கோடி (''இந்தியாவும் தங்கத் தரமும்,'' என்ற நூலில் எச். ஈ. ஹோவர்டு, 1911.) என்றும் £ 47·5 கோடி என்றும் (1909, பிப்ரவரி, 20 ஆம் தேதி எகனாமிஸ்டில் வெளியான ''நமது வெளிநாட்டு முதலீடுகள்'' என்னும் கட்டுரைப்படி) மதிப்பிடப்படுகிறது.

## 2. நிதி—மூலதனமும் இந்தியாவும்

இந்தியாவில் நிதி — முதலாளித்துவச் சுரண்டலுக்குப் பொதுவான அடிப்படை இவ்வாறு முதல் உலகப்போருக்கு முன் ஏற்படுத்தப்பட்டாலும் அது முழுமையாக வேலை செய்யத் தொடங்கியது பிற்காலத்தில்தான்.

ஏற்கனவே இந்தியாவில் இருந்த தொழில் முதலாளித்துவ, வாணிபச் சுரண்டலின் நிலைகளிலிருந்து வளர்ந்த பிரிட்டிஷ் நிதி முதலாளித்துவச் சுரண்டலின் அடிப்படை, தொடக்கத்திலிருந்தே தொழில் முதலாளித்துவ வாணிபச் செயல் முறைக்குத் துணைக் கருவியாகப் பயன்பட்டதேயன்றி அதை அகற்றிவிடவில்லை; 1909-10 இல் இந்தியாவில் முதல்டு செய்யப்பட்டிருந்த மூல தனம் எவ்வாறுபிரிவினை செய்யப்பட்டிருந்தது என்பதைக் காட்டும் ஸர் ஜார்ஜ் பெயிஷின் அட்டவணையிலிருந்து இதைத் தெரிந்து கொள்ளலாம். ஆயினும், நவீன காலத்திற்குப் பொருட் செறிவுள்ள அளவுகளில் ஒரு மாறுதல் ஏற்பட்டது.

பிரிட்டனின் பத்தொன்பதாம் நூற்றுண்டுத் தொழில் ஏகபோகவுரிமையும், உலகச் சந்தையில் அதன் ஆதிக்கமும் பத்தொன்பதாம் நூற்றுண்டின் கடைக்காலில் தளரலாயிற்று. உலகத்தின் ஏனைய பகுதிகளில், புதிய ஐரோப்பிய, அமெரிக்கப் போட்டியாளர்களுக்கு முன் இந்தச் சரிவு கடுமையாக இருந்தது. இந்தியாவில் இந்தச் சரிவு மிகவும் மெதுவாக இருந்தது; ஏனெனில், அரசியல் இறைமையின் வலிமையால் அது தன் இறுக்குப் பிடியைத் தளராமல் வைத்துக் கொள்ள முடிந்தது.

1914 ஆம் ஆண்டு உலகப்போர் வரைகூட, உலகத்திலுள்ள மற்ற எல்லா நாடுகளையும் எதிர்த்து இந்தியச் சந்தையில் மூன்றில் இரண்டு பங்கைப் பிரிட்டனே வைத்திருந்தது. ஆயினும், இந்தியாவிலும் மெதுவாகவும், ஆனால், நிதானமாகவும் சரிவு—பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைக்கால் பகுதியின் முடிவிலிருந்து—ஏற்படலாயிற்று.

1874 முதல் 1879 வரை ஐந்தாண்டுகளில் இந்திய இறக்குமதிகளில் பிரிட்டனின் பங்கு 82 சதவிதம்; சாம்ராஜ்யத்தின் மற்ற பகுதிகளின் பங்கு 11 சதவீதம்; இந்திய மார்க்கெட்டில் பதினொன்கில் ஒரு பங்கே வெளி உலகத்திற்குக் கிடைத்தது. 1884-89 இல் பிரிட்டனின் 82 சதவீதம் 79 சதவீதமாக வீழ்ந்துவிட்டது. 1899-1904 இல் 66 சதவிதமாகி, 1909-14 இல் 63 சதவீதமாக வீழ்ந்தது.

ஆனால், அதே காலத்தில் முதலீடு செய்யப்பட்ட மூலதனத்தின் மீதான இலாபமும் உள்நாட்டுச் செலவுக்கான தொகையும் ஏறிய வண்ணம் இருந்தன. 1913-14 இல் பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் இடையில் நடைபெற்ற வாணிபத்தின் தொகை £ 1·17 கோடி; கையாளப்பெற்ற எல்லா சரக்குகளுக்கும்—இங்கிலாந்திலிருந்தோ அல்லது இந்தியாவிலிருந்தோ ஏற்றுமதி செய்யப்பட்டிருப்பினும் சரி— 10 சதவீத வியாபார இலாபம் என்றாலும் £1·2 கோடி கிடைக்கும். இந்தியாவுக்கு ஏற்றுமதிசெய்யப்பட்ட எல்லா பிரிட்டிஷ் சரக்குகளுக்கும் உற்பத்தியாளர்களின் இலாபங்கள் 10 சதவீதமும் (£ 7·8 கோடிக்கு £ 80 இலட்சம்), கப்பலேற்றும் இலாபம் £ 80 இலட்சமும் (1913 இல் வாணிபக் குழு விசாரணை நடத்தியது; பிரிட்டிஷ் கப்பல் தொழிலின் மொத்த வருவாய்களில் இந்தியாவின் பங்கு 1913 இல் £ 9·4 கோடி, 9 சதவீதம் என்று அந்தக் குழு மதிப்பிட்டது) சேர்த்தால் 1913 இல் பிரிட்டனுடைய வாணிபத்திற்கும், உற்பத்தித் தொழிலுக்கும், கப்பல் தொழிலுக்கும் இந்தியாவினால் கிட்டிய மொத்த ஆதாயத் தொகை £ 2·8 கோடி.

ஆனால், ''இந்தியாவும் தங்கத்தரமும்'' என்ற நூலில் எச். ஈ. ஹோவர்ட் கூறியுள்ளபடி, இந்தியாவில் பிரிட்டனின் முதலீடுகள் 1911 இல் £ 45 கோடியை எட்டிவிட்டன; 1914 உலகப் போர் ஆரம்பமாகும்போது £ 50 கோடிக்கும் மேல் போய்விட்டதாய் நம்பப்படுகிறது. இதற்குச் சராசரி வட்டி விகிதம் மிகக் குறைவாக 5 சதவீதம் என்று கொண்டாலும் £2·5 கோடி வரும். அத்துடன், இந்தியாவில் வியாபாரத்தில் அல்லாமல் வேறு தொழில்களில் ஈடுபட்டுள்ள கம்பெனிகளின் ஆதாயங்களையும் வருவாய்களையும் (தோட்டங்கள், நிலக்கரிச் சுரங்கங்கள்,

சணல் முதலியவற்றில் ஈடுபட்டுள்ள கம்பெனிகள் அடிக்கடி 50 சதவீதம் லாப வீதம் தருவதுண்டு) சேர்க்கவேண்டும்; அப்பால், நிதிக் கமிஷன்கள், நாணயமாற்றுப் பேரங்கள், பாங்கு அலுவல்கள், இன்ஷூரன்ஸ் ஆகியவற்றிலிருந்து வருவாய்கள், குறைவாக மதிப்பிட்டாலும் £ 1·5 கோடி ஆகும்; ஆக, மொத்த நிகர வருவாய் £ 4 கோடி ஆகிறது. அதே சமயம் கடனுக்கான வட்டியைத் தவிர 'உள்நாட்டுச் செலவு'களும் 1913-14இல் £ 90 இலட்சமாக ஏறிவிட்டது; இதையும் சேர்த்துக் கொண்டால் முதலீடு செய்யப்பெற்ற மூலதனத்தினால் கிடைத்த லாபமும் நேர் நன்கொடையுமாக சுமார் £ 5 கோடி ஆகும்.

இத்தகைய மதிப்பீடுகள் எதுவும் ஒப்புநோக்கு வேலைகளுக்கு அதிகமாய்ப் பயன்படாது. ஆனால், 1914 அளவில் முதலீடு செய்யப்பட்ட மூலதனத்திலிருந்து கிடைத்த வட்டியும் இலாபமும் நேர் நன்கொடையும், இந்தியாவின் வர்த்தகத்திலிருந்தும், உற்பத்தியிலிருந்தும், கப்பல் தொழிலிலிருந்தும் கிடைத்த இலாபங்களைவிட மிகுதியாக இருந்தன என்பது தெளிவு. முதலீட்டு முதலாளித்துவச் சுரண்டல் இந்தியாவில் இருபதாம் நூற்றாண்டில் மிக முக்கியமான தன்மை ஆகிவிட்டது.

1914-18 போரும் அதை அடுத்த கால கட்டமும் இந்தப் போக்கை மிக விரைவு படுத்தின. இந்தியச் சந்தையில் மூன்றில் இரண்டு பங்காக இருந்த பிரிட்டனின் பங்கு மூன்றிலொரு பங்குக்குச் சற்று அதிகமாக வீழ்ந்தது. ஜப்பானும் அமெரிக்காவும், புதிய பலத்துடன் ஜெர்மனியும் போட்டியிட்டு முன்னேறின; சுங்கவரித் தடைகளும், அரசுச் சலுகைகளும் அதைத் தடுக்க முடியவில்லை. இந்தியத் தொழில் உற்பத்தி, முக்கியமாக, மென்ரகத் தொழிலில் முன்னேறியது; பல இடையூறுகளும், நிதிக் கஷ்டங்களும், அரசாங்க ஒத்துழைப்பின்மையும் அதை நிறுத்த இயலவில்லை; இந்த நிலை 1914க்கு முந்தின காலத்தில் வெளிப்படையாக இருந்தது; போரை அடுத்த காலத்தில் மறைமுகமாய் நீடிக்கிறது.

1913க்கும் 1931-32க்கும் இடையில் இந்திய இறக்குமதிகளில் பிரிட்டனின் பங்கு 64 சதவீதத்திலிருந்து 35 சதவீதமாய்க் குறைந்தது. அப்பால், இந்தியாவின் எதிர்ப்பை மீறி விதிக்கப்பட்ட ஒட்டாவா சலுகை விதிகளால் 1934-35 இல் இந்த அளவு நிர்ப்பந்தமாக 40.6 சதவீதமாக உயர்ந்தது; ஆனால், 1935-36 இல் இது 38.8 சதவீதமாகவும், 1936-37 இல் 38·5 சதவீதமாகவும் வீழ்ந்தது; அதே காலத்தில் ஜெர்மனியின் பங்கு 6·9 இலிருந்து 9·2 சதவீதமாக ஏறியது; அமெரிக்காவின் பங்கு 2·6 இலிருந்து 6·7 சதவீதமாக ஏறியது. (எகனமிஸ்ட், பிப்ரவரி 13, 1937.)

மிக அண்மைக் காலத்தைப் பொறுத்தமட்டில் 1937 இல் பர்மா நிர்வாகப் பிரிவினை காரணமாக அதிகார பூர்வமான புள்ளி விவரங்கள் பாதிக்கப்படுகின்றன. இந்திய அரசின் பொருளாதார ஆலோசகர் ஆண்டுதோறும் வெளியிடும் ''இந்திய வர்த்தகத்தின் மதிப்புரை'' இந்திய மார்க்கெட் பின்வரும் வீதத்தில் பங்கிட்டுக் கொள்ளப்பட்டிருப்பதைக் காட்டுகிறது (பர்மா நீங்கலாக) :

இந்திய இறக்குமதிகள் விதம்

(சதவீதம்)

| | 1935-36 | 1937-38 | 1939-40 |
|---|---|---|---|
| பிரிட்டன் .. | 31·7 | 29·9 | 25·2 |
| பர்மா .. | 17·5 | 14·9 | 19·0 |
| ஜப்பான் .. | 13·0 | 12·8 | 11·7 |
| ஜெர்மனி .. | 7·9 | 8·8 | 4·0 |
| அமெரிக்கா .. | 5·6 | 7·4 | 9·0 |

இரண்டாவது உலகப் போரின் போது இந்தியாவின் வர்த்தகத்தில் பெரிய மாறுதல் ஏற்பட்டது. பகை நாடுகளுடன் வர்த்தகம் நின்றுவிட்டதால் அமெரிக்கா, கானடா, ஆஸ்திரேலியா, மற்றும் மத்தியக் கிழக்கு நாடுகளான ஈரான், அரேபியா, ஈராக், துருக்கி, எகிப்து முதலியவற்றுடன் இந்திய வர்த்தகம் மிகுந்தது. ''1942-43 இல் இந்திய வர்த்தகத்தின் மதிப்புரை'' பின்வரும் விவரங்கள் தருகிறது: 1942-43 இல் இந்திய இறக்குமதிகளில் பிரிட்டனின் பங்கு 26·8 சதவீதம் (1939-40 இல் 25·2 சதவீதம்), அமெரிக்கப் பங்கு 17·3 சதவீதம் (1939—40 இல் 9·0 சதவீதம்), கானடா 5 சதவீதம் (1939-40 இல் 0·8 சதவீதம்), ஆஸ்திரேலியா 2·9 சதவீதம் (1939-40 இல் 1·4 சதவீதம்), மத்தியக் கிழக்கு நாடுகள் (எகிப்து நீங்கலாக) 20·2 சதவீதம், (1939-40 இல் 2·9 சதவீதம்), எகிப்தின் பங்கு 7·4 சதவீதம்.

பிரிட்டன் இப்போதும், சிங்கத்தின் பங்கைத் தன்கைவசமே வைத்திருந்தது—முக்கியமான எல்லா போட்டியாளர்களைச் சேர்த்துப் பார்த்தாலும் பிரிட்டனின் பங்கே மிகுதி. ஆனால், இந்தச் சிங்கத்தின் பங்கு மேலும் மேலும் தடைப்பட்டுக் கொண்டே வருகிறது; தன் பங்கைக் காத்துக் கொள்வதற்குச் சிங்கம் இந்திய, வெளிநாட்டுப் போட்டியை எதிர்த்து தன் நகங்களைக் கடுமையாகப் பயன்படுத்தியவாறு இருக்க வேண்டியுள்ளது. ஒரு நூற்றாண்டுக் காலம் பிரிட்டனின் பிரதான வாடிக்கை நாடாக இருந்த இந்தியா (பர்மாவும் உட்பட) இப்போது அதன் பிரதம வாடிக்கை நாடு அல்ல, 1937 இல் அது இரண்டாவது

இடத்திற்குப் போய்விட்டது, 1938 இல் மூன்ருவது இடத்திற்குப் போய்விட்டது.

1918 க்குப் பிந்தின காலத்தில் மிக விரைவாக ஏற்பட்ட இந்தச் சரிவு, இந்தியாவை பத்தொன்பதாம் நூற்ருண்டுத் தொழில் முதலாளித்துவம் சுரண்டுவதற்கு முதன்மையான துறையாக விளங்கிய பருத்திச் சரக்குகளின் ஏற்றுமதியில் ஏற்பட்ட விபத்தான வீழ்ச்சியையே பிரதிபலிக்கிறது. தொழில், வர்த்தக ஆய்வுக்கான பால்ஃபோர் கமிட்டி, இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட பருத்தித் துணிகளின் அளவு 1913 க்கும் 1923க்கும் இடையில் 57 சதவீதம் குறைந்திருப்பதைக் கண்டது. 1913 இல் 30·57 கோடி கஜங்கள் அல்லது லங்காஷயரின் மொத்த ஏற்றுமதி 70.75 கோடி கஜங்களில் ஏறக்குறையப் பாதி இந்தியாவுக்குப் போயிற்று. 1928 இல் அது 14·52 கோடி ஆகி, 1939-40 இல் 14.4 கோடியாக வீழ்ந்தது. 1942-43 இல் இந்திய இறக்குமதி 1·1 கோடி கஜங்கள் மட்டும்.

ஆனால், பழைய அடிப்படை இவ்வாறு குலேந்து கொண்டிருக்கையில், முதலீட்டு முதலாளித்துவச் சுரண்டலால் கிடைத்த இலாபங்கள் உறுதியாக ஏறிக்கொண்டும் அளவில் மிகுந்து கொண்டும் இருந்தன. 1929 இல் இந்தியாவில் பிரிட்டிஷார் முதலீடுகள் செய்திருந்த மூலதனம் எவ்வளவு என்பதை, பம்பாய் வர்த்தகர் கழக முன்னுள் செயலாளர் திரு. ஸேயர் "ஃபைனுன்ஷியல் டைம்ஸ்" ஏட்டில் மதிப்பீடு செய்துள்ளார். மிக மிதமான அடிப்படையில் மதிப்பிட்டாலும் £ 57·3 கோடி இருக்கும், £ 70 கோடி வரை இருக்கலாம் என்பது அவருடைய மதிப்பீடு. பின் வரும் விநியோக முறையை அவருடைய கணக்கு காட்டுகிறது:

| | | £ கோடியில் |
|---|---|---|
| அரசாங்க ஸ்டர்லிங் கடன் | .. | 26·1 |
| காப்புறுதிபெற்ற ரயில்வே கடன் | .. | 12·0 |
| போர்க் கடன் 5 சதவீதம் | .. | 1·7 |
| இந்தியாவில் பதிவு செய்யப்பட்ட கம்பெனிகளில் முதலீடுகள் | .. | 7·5 |
| இந்தியாவுக்கு வெளியே பதிவு செய்யப்பட்ட கம்பெனிகளில் முதலீடுகள் | .. | 10·0 |

இந்தியாவில் இயங்கும் கம்பெனிகளின் பங்கு £ 17.5 கோடி என்பது பெரும்பாலும் நிச்சயமாகக் குறைவான மதிப்பீடு என்றும், மொத்த முதலீடுகளின் உண்மையான மதிப்பு £ 70 கோடி என்பது 'உண்மைக்குப் புறம்பாக இராது' என்றும் அவர் கூறுகிருர். அவர் மேலும் சொல்கிருர்:

"இந்தியாவில் நமக்குள்ள பொருளாதாரப் பங்கின் முக்கியத்தை முழுமையாக மிகச் சில நிபுணர்கள் ஒருகால் அறிந்திருக்கலாம். பெரும்பாலோருக்கு அதன் பெருமையைப் பற்றியோ வன்மையைப் பற்றியோ ஒன்றும் தெரியாது. நேராக வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ள வியாபாரிகள், பாங்கர்கள், உற்பத்தியாளர்கள் பலருக்கும் கூட மூலதனத்தின் உண்மையான அளவும் பணிகளின் உண்மையான அளவும் கண்டுபிடிக்க மிகவும் சிரமமாயிருக்கும்; அவர்களால் சுமாரான ஒரு கணக்குக்கூட போட முடியாது. இந்தியாவில் வெளியார் மூலதனம் பலவடிவங்களில் நுழைகின்றன; எந்தக் கணக்கும் வெறும் ஊகமாகவே இருக்கும்."

(ஃபைனன்ஷியல் டைம்ஸ், ஜனவரி 9, 1930.)

இந்தியாவிலுள்ள பிரிட்டிஷார் இணைந்த வர்த்தகர் கழகங்கள் 1933 ஆம் ஆண்டுக்கு மிக அண்மையில் செய்த மதிப்பீட்டில், இந்தியாவில் பிரிட்டனின் முதலீடுகள் மொத்தம் £ 100 கோடி என்று கணக்கிடுகின்றன; இத்தொகையில் அரசின் ஸ்டர்லிங் கடனுக்காக £ 37·9 கோடியும், இந்தியாவிற்கு வெளியே பதிவு செய்யப்பட்டு இந்தியாவில் பணியாற்றும் கம்பெனிகளுக்காக £ 50 கோடியும், இந்தியாவில் பதிவு செய்யப்பட்ட கம்பெனிகளில் முதலீடுகள், மற்ற பலவகை முதலீடுகளுக்கு மிச்சமும் என்று கணக்கிடுகின்றன.[1]

ஆக, இந்தியாவில் முதலீடு செய்யப்பட்ட மொத்தம் £ 100 கோடி, பிரிட்டிஷார் உலகம் முழுவதிலும் வெளிநாடுகளில் முதலீடு செய்திருந்ததாய் மதிப்பிடப்படும் சுமார் £ 400 கோடியில் நாலில் ஒரு பங்குக்குக் குறையாதது. 1911 இல் சர் ஜார்ஜ் பெயிஷ் மதிப்பீடு செய்தபோது, உலக முழுவதும்

1. இந்தியாவில் வெளியார் செய்துள்ள முதலீடுகளுக்குச் சரியான விவரங்கள் இதுவரை கிடைக்கவில்லை.

இந்தியாவுக்கு வெளியே பதிவு செய்யப்பட்டு, ஆனால், பிரிட்டிஷ் இந்தியாவில் இயங்கும் பங்கு முதலீட்டுக் கம்பெனிகளின் செலுத்தப்பட்ட மூலதனம் 1938-39 இல் £ 74·11 கோடி என்று "பிரிட்டிஷ் இந்தியாவின் புள்ளிவிவரத் தொகுப்பு" கூறுகிறது. இந்திய அரசின் ஸ்டர்லிங் கடனும், இந்தியாவில் பதிவு செய்யப்பட்ட வெளி நாடுகளின் ரூபாய் மூலதனமும் இதில் சேர்க்கப்படவில்லை. எனினும் 1912 ஆம் ஆண்டோடு ஒப்பிட்டுப் பார்த்தால் 26 வருட காலத்தில், இந்தியாவில் முதலீடு செய்யப்பட்ட ஸ்டர்லிங்குகள் £ 66·76 கோடி மிகுந்துள்ளதைக் காணலாம். 1918-19 லிருந்து £ 26·8 கோடி உயர்வு ஏற்பட்டுள்ளது; பாங்கு, கடன் தரும் கம்பெனிகளில் 19.8-19 இல் £ 2.85 கோடியாக இருந்த முதலீடு 1938-39 இல் £ 9 62 கோடியாகவும், வர்த்தக, உற்பத்திக் கம்பெனிகளின் முதலீடு £ 20·54 கோடியிலிருந்து £ 34·49 கோடியாகவும் அதே காலத்தில் உயர்ந்துள்ளதை இது பிரதிபலிக்கிறது.

பிரிட்டிஷார் முதலீடு செய்த மொத்த மூலதனத்தில் 11 சதவீதம் இந்தியாவில் முதலீடு செய்யப்பட்டிருந்ததைக் கண்டார். ஒன்பதில் ஒரு பங்காயிருந்த முதலீடு நான்கில் ஒரு பங்காக, 11 சதவீதத்திலிருந்து 25 சதவீதமாக ஏற்பட்ட இந்த முன்னேற்றம், பிரிட்டனின் நிதி-மூலதனத்திற்கு இந்தியாவின் முக்கியத்திற்கு ஓர் அளவுகோலும், இந்தியாவில் பிரிட்டனுக்குள்ள பொருளாதார நலன்களைக் காத்துக் கொள்வதற்கான தனி ஏற்பாட்டுடன் நவீன ஏகாதிபத்தியம் பின்பற்றும் கொள்கைக்கு ஒரு திறவுகோலும் ஆகும்.

நவீன ஏகாதிபத்தியச் சுரண்டல் முறைகளால் ஆண்டு தோறும் இந்தியாவிலிருந்து பிரிட்டன் கவரும் மொத்த நன்கொடையின் மதிப்பு யாது? இதனை மதிப்பிட இந்தியப் பொருளாதார வல்லுநர்களான கே. டி. ஷாவும், கே. ஜே. கம்படாவும் 1924இல் வெளியான தங்கள் ''இந்தியாவின் செல்வமும் வரி விதிக்கத்தக்க அளவும்'' என்ற நூலில் முயற்சி செய்தார்கள். 1921-22க்காகக் கிடைத்த புள்ளி விவரங்களை அடிப்படையாகக் கொண்டு கணக்கிட்டுப் பின்கண்ட முடிவுக்கு வந்தார்கள். (1921-22 இல் பழக்கத்திலிருந்த, ஒரு ரூபாய்க்கு 1 ஷில்லிங் 4 பென்ஸ் என்ற சராசரி நாணய மாற்றுவீதப்படி ரூபாய்களுக்குச் சமமான ஸ்டர்லிங் மதிப்பீடுகள் அவர்களுடைய கணக்கில் சேர்க்கப்பட்டுள்ளன):

இந்தியாவிலிருந்து பிரிட்டனுக்கும் வெளிநாடுகளுக்கும்
போன ஆண்டு 'நன்கொடை' (1921-22)

| | ரூபாய்கள் கோடியில் | £ கோடியில் |
|---|---|---|
| அரசியல் கழிவுகள் அல்லது உள்நாட்டுச் செலவுகள் .. | 50·00 | 3.33 |
| இந்தியாவில் பதிவு செய்யப்பட்ட வெளிநாட்டு மூலதனத்துக்கு வட்டி .. | 60·00 | 4.00 |
| வெளிநாட்டுக் கம்பெனிகளுக்குத் தரப்பட்ட சரக்குக் கட்டணமும் பிரயாணிக் கட்டணமும் .. | 41·63 | 2.77 |
| பாங்குக் கமிஷன் கணக்கில் செலுத்தப்பட்டவை .. | 15·00 | 1.00 |
| வெளிநாட்டு வர்த்தகத்திற்கும் இந்தியாவில் வேலை செய்பவர்களுக்கும் இலாபங்கள் முதலியன .. | 53·25 | 3.55 |
| | 219·88 | 14.65 |

இந்த மொத்தத் தொகையான சுமார் 220 கோடி ரூபாய்கள் அல்லது சுமார் £150 கோடி, பிரிட்டனின் மக்கட் தொகையில் ஆளுக்கு £3க்குச் சமம், அல்லது, மதிப்பீடு செய்யப்பட்ட காலத்தில் பிரிட்டனில் மிகைவரி செலுத்தும் ஒவ்வொருவருக்கும் ஆண்டுக்கு £ 1700க்குச் சமம் ஆகும்.

1921-22இல் மிக அதிகமாயிருந்த விலைவாசிகள் குறைந்த பின் மிக அண்மைக் காலத்தில், சர் எம். விசுவேசுவரய்யா 1934 இல் வெளியான தம் "இந்தியாவிற்குத் திட்டமிட்ட பொருளாதாரம்" என்ற நூலில் மொத்த 'நன்கொடை'யை மதிப்பீடு செய்ய ஒரு முயற்சி செய்துள்ளார். அவர் பின்வரும் முடிவுக்கு வருகிறார் (அப்போதைய நாணயமாற்று வீதம் 1 ரூபாய்க்கு 1 ஷில்லிங் 6 பென்ஸ்; அதன்படி, அவருடைய ரூபாய் மதிப்பீடுகளுக்குச் சமமான ஸ்டர்லிங் மதிப்பீடுகள் சேர்க்கப்பட்டுள்ளன:

| | ரூபாய்கள் கோடியில் | £ கோடியில் |
|---|---|---|
| பிரிட்டிஷ், வெளி நாடுகளின் கப்பற்போக்குவரத்து | .. 35·00 .. | 2·6 |
| வெளி நாட்டுப் பாங்குகளுக்குத் தரவேண்டிய நாணயமாற்று முதலிய கமிஷன்கள் | .. 21·00 .. | 1·6 |
| இந்தியத் தொழில்களில் பணியாற்றும் பிரிட்டிஷ் இனத்தாருக்கு சம்பளம் முதலியனவும் வர்த்தக இலாபங்களும் | .. 40·00 .. | 3·0 |
| இந்தியாவில் முதலீடு செய்யப்பட்ட பிரிட்டிஷ் மூலதனத்துக்கு வட்டி | .. 65·00 .. | 4·9 |
| | 161·00 | 12·1 |

இந்த மதிப்பீட்டில், "ஓய்வு ஊதியங்களாகவும், மற்ற உள்நாட்டுச் செலவுகளுக்காகவும், இந்தியாவுடன் வர்த்தகவுறவு கொண்ட பிரிட்டிஷார் அல்லாதவர்களின் பொறுப்புக்களுக்காகவும் அதிகார பூர்வமாக இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்ட தொகைகள் சேர்க்கப்படவில்லை." கடனுக்கான வட்டியை அன்றி, உள்நாட்டுச் செலவுகள் கணக்கு மூலம் இன்னும் £ 1·4 கோடி கூடி மொத்தத் தொகை £ 13·5 கோடி ஆகும். இந்திய விலைவாசிகள் அட்டவணை 1921 லிருந்த 236 லிருந்து 1933இல் 121க்கு வீழ்ந்ததால், மேற்படி மதிப்பீடு சரியாகச் செய்யப்பட்

டால் பத்தாண்டுக்கு முன்பைவிட இப்போது மிகவும் அதிக மாகும் என்று கொள்ளலாம். பல விஷயங்களுக்குச் சரியான புள்ளி விவரங்கள் இல்லாமையால் இந்த மதிப்பீடுகள் சுமாரான கணக்குகளையே குறிப்பன ஆகும்.

அண்மையில், 1945இல் அமெரிக்காவின் வெளிநாட்டுக் கொள்கைக் கழகம் வெளியிட்ட ''காலனி ஆசியாவின் விடுதலை —மேலை உலகம் கொடுக்க வேண்டிய விலை'' என்ற அறிக்கையில் திரு. லாரன்ஸ் கே. ரோஸிங்கர், பிரிட்டனுக்கு இந்தியா செலுத் திய ஆண்டு 'நன்கொடை'யை மதிப்பீடு செய்துள்ளார். அதன் படி 'நன்கொடை' £ 13·5 கோடியில் பின்வரும் அம்சங்கள் அடங்கி இருந்தன:

| | | |
|---|---|---|
| முதலீடுகளான £ 67 கோடிக்கு பிரிட்டிஷ் வீதமான 6-7-8 சத வீதப்படி வட்டிச் செலவுகள் | .. | £ 4·6 கோடி |
| உள்நாட்டுச் செலவுகள் | .. | £ 3·3 கோடி |
| வர்த்தகம் | .. | £ 3·0 கோடி |
| கப்பலேற்றல் | .. | £ 2·0 கோடி |
| இந்தியாவில் பணியாற்றும் பிரிட்டிஷார் அனுப்பிய தொகைகள் | .. | £ 0·6 கோடி |
| மொத்தம் | .. | £13·5 கோடி |

(ஹிந்துஸ்தான் ஸ்டாண்டர்டு, கல்கத்தா, ஜூலை 5, 1945.)

சரியாகக் கணக்கிட முடியாத அம்சங்களுக்கு மாறுதலின் முழுமையான விளிம்பு தந்து பார்த்தால் பழங்காலத்தை புதிய காலத்தில் இந்தியச் சுரண்டல் ஆழ்ந்துள்ளது என்ற முடிவு தெளி வானதும் தப்ப முடியாததும் ஆகும். பிரிட்டிஷ் முடியரசு ஆட்சியை ஏற்பதற்கு முந்தின முக்கால் நூற்றாண்டு பிரிட்டிஷ் ஆட்சியில் இந்தியாவிலிருந்து எடுத்துச் செல்லப்பட்ட 'நன் கொடை'யின் மதிப்பு £ 15 கோடி என்று மதிப்பிடப்பட்டது. நவீன காலத்தில், போருக்கு முந்தின இரு பத்தாண்டுகளில் இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்குப் போன ஆண்டு 'நன்கொடை' அளவு சுமார் £13·5 கோடியிலிருந்து £ 15 கோடி வரை இருக்கும் என்று மதிப்பிடப்படுகிறது. முதலீட்டு முதலாளித்துவத்தின்கீழ் இந்தியச் சுரண்டல் இவ்வாறு ஆழ்ந்ததன் விளைவாகவே இன்றைய நெருக்கடியும் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து ஆழ்ந்த கலகமும் இந்தியாவில் தோன்றியுள்ளன.

## 3. தொழில் மயமாக்கும் பிரச்னே

பிரிட்டிஷ் ஆட்சியில், இந்தியாவில் நவீன முதலீட்டு முதலாளித்துவத்தின் காலத்தில், சிறப்பாக 1914-18 போரிலிருந்து, இறுக்கமான சுரண்டல் மிகுந்தது எனினும், முன்பு தடையிலா வாணிப தொழில் முதலாளித்துவத்தின் ஆதிக்கத்தில் சீரழிந்தது போல் அல்லாமல் தொழில் மயமாக்குவதிலும் பொருளாதார வளர்ச்சியிலும் இந்தியா முன்னேற்றம் கண்டு வருகிறது என்பதாய் ஒரு கருத்து சில சமயம் கூறப்படுகிறது. இந்தியாவை உலகத்தின் ''தலைசிறந்த தொழில்மய நாடுகளில் ஒன்றாய்'' க்காட்ட முயலும் நவீன ஏகாதிபத்தியப் பிரச்சாரம் (1922இல் ஜெனிவாவில், மிக ஐயப்படத்தக்க புள்ளி விவரங்களே[1] ஆதாரமாய்க் காட்டிப் பிரிட்டிஷ் அரசு அனைத்துலகத் தொழிலாளர் அலுவலகத்தின் நிர்வாகக் குழுவில் ஓர் உறுப்பினரை அதிகமாகச் சேர்க்க முயன்று உரிமை கொண்டாடியது.) இந்தக் கருத்தை ஊக்குவிக்கிறது; இந்தியாவின் தொழில் வளர்ச்சியில் உதாரணக் கொள்கையைப் பின்பற்றுவதாய் பாசாங்கு செய்கிறது.

உண்மைத் தகவல்களைச் சோதித்துப் பார்த்தால் இக்கருத்து நியாயத்துக்குப் புறம்பானது என்பதைக் காட்டும். நவீன காலத்தில், 1914 போருக்கு முன்பும், சிறப்பாக அப்பாலும் இந்தியாவில் ஓரளவு தொழில் வளர்ச்சி நிகழ்ந்துள்ளது; ஆனால் அதேகாலத்தில் மற்ற பெரிய அதிகப்படி-ஐரோப்பிய நாடுகளுடன் அதை எவ்விதத்திலும் ஒப்பிட முடியாது. ஏற்பட்டுள்ள வளர்ச்சியும், பிரிட்டிஷ் முதலீட்டு முதலாளித்துவம் நிதித்துறைப்போலவே அரசியல் துறையிலும் காட்டிய கடும் எதிர்ப்பை எதிர்த்து முன்னேற வேண்டி இருந்தது. ஒரு வழி முன்னேற்றம், குறிப்

1. 1922 அக்டோபரில், சர்வதேசச் சங்கக் கவுன்சிலில் இந்திய அரசின் சார்பாக செம்ஸ் போர்டு பிரபு கூறினார் :

> ''பிரதானமான தொழிற் சிறப்புள்ள எட்டு நாடுகளில் ஒன்றாக இந்தியாவும் சேர்க்கப்பட வேண்டும் என்ற வெளிப்படையான உரிமையை இனி நிலை நாட்ட வேண்டும். பரவலான பொதுக் காரணங்கள் பேரிலேயே இந்த உரிமை கொண்டாடப்படுகிறது; அதை நிலைநாட்ட விரிவான புள்ளி விவர முறைகள் தேவை இல்லை. அந்நாட்டில் தொழிலில் ஈடுபட்டுக் கூலி வாங்கும் மக்களின் எண்ணிக்கை சுமார் இரண்டு கோடி என்று மதிப்பிடலாம்.''

''கூலி வாங்கும் இரண்டு கோடி மக்களில்'' பெரும்பான்மையோர் கைத் தொழிலாளர்களும் குடும்பத் தொழிலில் ஈடுபட்டவர்களும் என்பதையும், பத்து அல்லது அதற்கு மேற்பட்டோரை வேலைக்கு வைத்துள்ள நிறுவனங்களில் கூலி வாங்கும் தொழிலாளர்களின் எண்ணிக்கை 1921ஆம் ஆண்டு தொழில் சென்ஸஸ்படி 26 இலட்சம் என்பதையும், அதில் 10 இலட்சம் பேர் தோட்டத் தொழிலாளர்களே யன்றி தொழிற்சாலைத் தொழிலாளர்கள் அல்ல என்பதையும் தொழிற்சாலைச் சட்டத்தின்கீழ் வரும் தொழிலாளர் எண்ணிக்கை 13 இலட்சம் என்பதையும் அவர் விளக்காமல் விட்டுவிட்டார்.

பாக, மென்ரகத் தொழில்களில் ஏற்பட்டுள்ளது; முக்கியமான கனரகத் தொழில்களில் மிகப் பலவீனமான முன்னேற்றமே கண்டுள்ளது. முதல் அத்தியாயத்தில் செய்யப்பெற்ற பூர்வாங்க ஆய்வு குறிப்பிடுவது போல், இந்தியாவில் பொதுவான தொழில் மயமாக்கும் செயல்முறை நிகழ்ந்துள்ளதாய் இப்போதும் கூற முடியாது.

1914 வரை இந்தியாவின் தொழில் வளர்ச்சிக்கு ஏகாதிபத்தியத்தின் எதிர்ப்பு வெளிப்படையாகவும் கரவற்றும் இருந்தது. அமெரிக்கரின் சுதந்திரப் போருக்கு முன்னர், பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் இடையிலுள்ள உறவை பிரிட்டன் எந்த நோக்கத்தோடு கையாண்டதோ, எந்த நோக்கத்தோடு அமெரிக்கக் காலனிகளில் உருக்கு உலைகள் நிறுவக்கூடாது என்று கண்டிப்பாய் தடுத்ததோ (ஆடம் ஸ்மித்: ''நாடுகளின் செல்வம்,'' நான்காம் தொகுதி, vii, 2) அதே நோக்கம்தான் பிரிட்டனின் இந்தியக் கொள்கைக்கு 1914 வரை அடிப்படையாக இருந்தது. 1922-ல் சர் வாலன்டைன் சிரோல் எழுதியது போல் ''தூய இந்தியத் தொழில் முயற்சியை அதிகாரிகள் பொறுமையோடு'' பார்த்தார்கள்; இந்த நிலை 1914 போர்வரை நீடித்தது:

> ''இந்தியத் தொழில் வளர்ச்சி பற்றின நம் வரலாறு சென்ற காலத்தில் எப்போதும் மதிக்கத் தக்கதாக இருந்ததில்லை; போர்த் தேவைகளினால் நிர்ப்பந்திக்கப்பட்டுத்தான் அரசாங்கம் தூய இந்தியத் தொழில் முயற்சிக்கு ஆதரவு தராமல் பழைய ஒதுங்கும் கொள்கையை—அதைப்பொறுமை அல்ல என்று கூற முடியாது—கைவிடும்படி நேர்ந்தது.''
>
> (சர் வாலன்டைன் சிரோல், அப்சர்வரில், ஏப்ரல் 2, 1922.)

அதுபோலவே, 1921ஆம் ஆண்டு அரசாங்க அறிக்கை எழுதியது:

> ''போருக்குச் சிறிது காலத்துக்கு முன்பு முன்னோடித் தொழிற்சாலைகளாலும் அரசாங்க உதவித் தொகைகளாலும் இந்தியத் தொழில்களை ஊக்குவிக்கச் செய்யப்பட்ட சில முயற்சிகள் ஒயிட் ஹாலினால் வெற்றிகரமாக முறியடிக்கப்பட்டன.''
>
> (''இந்தியாவின் சூக்கும, ஸ்தூல முன்னேற்றம்,'' 1921, பக். 144.)

1907-ல் சர் ஜான் ஹூவெட் அறிவித்தது போல்:

> ''இருபதாண்டுகளுக்கு மேலாக அரசுக்கும் மக்களுக்கும் முன்னால் தொழில்நுட்பக் கல்வி, தொழிற் கல்விப் பிரச்னை

இருந்து வருகிறது. வேறு எந்தப் பொருளைப் பற்றியாவது இவ்வளவு அதிகமாய்ப் பேசப்பட்டும், எழுதப்பட்டும் இவ்வளவு குறைவாகச் செயல் படுத்தப் பட்டிருக்குமோ என்னவோ.''

(ஐக்கிய மாகாணங்களின் லெப்டினென்ட் கவர்னர் சர் ஜான் ஹூவெட் 1907-ல் நடந்த இந்தியத் தொழில் மகா நாட்டில்.)

''இந்தியத் தொழில்களை ஊக்குவிக்கும் சில முயற்சிகள் ஒயிட் ஹாலினால் வெற்றிகரமாய் முறியடிக்கப்பட்டன'' என்று 1922-ம் வருட அரசாங்க அறிக்கை குறிப்பிட்ட நிகழ்ச்சி, 1901-ல் கர்ஸான் பிரபுவின் தூண்டுதல் பேரில் ஒரு வாணிப, தொழில்துறை ஏற்படுத்தப்பட்ட பிறகும், 1908-ல் மதராஸ் அரசு ஒரு தொழில்கள் இயக்குநரை நியமித்த பிறகும் நடந்தது. மதராஸ் தொழில்கள் துறையினரின் செயல்கள் ''அங்குள்ள ஐரோப்பிய சமூகத்தாரின் எதிர்ப்பைக் கிளப்பிவிட்டன; அவற்றை அவர்கள் தனியார் தொழில் முயற்சிக்கு மிக அபாயகரமானவை என்றும் ஆட்சியாளரின் எல்லைக்கப்பாற்பட்ட விஷயத்தில் தேவையற்ற அரசாங்கத் தலையீடு என்றும் கருதினார்கள்.'' (இந்தியத் தொழிற் குழு அறிக்கை, பக். 70.) 1910-ல், இந்தியா காரியதரிசி மார்லி பிரபு கையெழுத்திட்டு அனுப்பிய ஓர் நாசகரமான அறிக்கை மூலம் ஒயிட் ஹாலின் தடையுத்திரவு இந்தியத் தொழில் முயற்சி சோதனைமீது பலத்த அடியாக விழுந்தது:

''மாகாணத்தில் புதிய தொழில்களைத் தோற்றுவிக்க மதராஸ் அரசு செய்த முயற்சிகளின் விவரத்தை நான் ஆராய்ந்தேன். முடிவுகள் மிகுந்த உழைப்பையும் சாமர்த்தியத்தையும் காட்டுகின்றன; ஆனால் இத்திசையில் அரசு செய்யும் முயற்சியால் நன்மை ஏதாவது உண்டா என்ற என் சந்தேகத்தைத் தீர்க்கும் தன்மை வாய்ந்தவையாக அவை இல்லை; தொழிலுக்கான ஆலோசனை கூறி, வாணிப முயற்சி என்ற தோற்றமும் இல்லாமல் அவை வரையறுக்கப் பட்டிருக்கவேண்டும்....தொழில்களுக்கான ஆலோசனைகூறும் ஒரு நிலையம் ஏற்படுத்தவோ, அந்த நிலையத்திலிருந்து, தனியார்துறை முயற்சிகளில் தலையீடு ஏதும் இல்லாத விதத்தில் புதிய தொழில்களையும், செய்முறைகளையும், கருவிகளையும் பற்றித் தகவல்களும் யோசனைகளும் கூறுவதோ பற்றி எனக்கு யாதொரு ஆட்சேபமும் இல்லை.''

(மார்லி பிரபு: 1910, ஜூலை 29-ம் நாள் அறிக்கை.)

இந்த அறிக்கையின் ''நாசகரமான பயன்'' பற்றி இந்தியத் தொழிற்குழு அறிக்கை (பக். 4)யில் குறிப்பிடப்பட்டுள்ளது.

நிர்வாகத்தினர் செயல்பட்டதாலோ செயல்படாமல் இருந்ததாலோ மட்டும் இந்தியத் தொழில் வளர்ச்சி தடை செய்யப்பட வில்லை; உறுதியான சுங்கக் கொள்கையாலும் தடை செய்யப்பட்டது. ஆயிரத்தெண்ணூற்று அறுபதுகளிலும் ஆயிரத்தெண்ணூற்று எழுபதுகளிலும் மிகவும் பலவீனமாயிருந்த பருத்தித் தொழில் வளர்ச்சிபெறத் தொடங்கவே, இங்கிலாந்தில் பருத்திச் சரக்குகள்மீதும் இருந்த இறக்குமதி வரி நீக்கப்பட வேண்டும் என்று உடனே கிளர்ச்சி செய்யப்பட்டது. இதற்காக, மான்செஸ்டர் வர்த்தகர் கழகம் 1874-ல் ஒரு ஞாபகக் குறிப்பு சமர்ப்பித்தது; 1877-ல் நாடாளுமன்றம் ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. இந்தத் தீர்மானத்தை இந்திய அரசுக்கு அனுப்பி வைத்த சாலிஸ்பரி பிரபு அதன் நோக்கத்தைச் செவ்வையாக விளக்குகையில் திகிலுடன், ''இன்னும் ஐந்து ஆலைகள் வேலை துவங்க இருக்கின்றன; 1877, மார்ச் மாத முடிவிற்குள் 1,231, 284 கதிர்கள் இந்தியாவில் பயன்படுத்தப்படும்'' என்ற தகவலைக் குறிப்பிட்டுள்ளார். (கவர்னர் ஜெனரலுக்கு சாலிஸ்பரி பிரபு 1877, ஆகஸ்ட் 30-ல் எழுதிய கடிதம்.) அதன் பேரில், 1879-ல் போட்டி இருந்த உரப்பு பருத்திச் சரக்குகள் மீதிருந்த இறக்குமதி வரிகள் நீக்கப்பட்டன; 1884-ல் உப்பு, மதுபான வகைகள் தவிர மற்ற எல்லாப் பொருள்களின் மீதும் இருந்த இறக்குமதி வரிகள் அகற்றப்பட்டன. 1894 இல் நிதித் தேவைகளால் பருத்திச் சரக்குகள் உட்பட எல்லாப் பொருள்களின் மீதும் பொதுவான இறக்குமதி வரி விதிக்க வேண்டி இருந்தது; அப்போது இந்தியாவின் ஆலைத் துணிகள் எல்லாவற்றுக்கும் எக்சைஸ் வரி விதிக்கும் புதிய சாதனம் கண்டுபிடிக்கப் பட்டது; இம்மாதிரி வரிவிதிப்பை எந்த நாட்டின் பொருளாதார வரலாற்றிலும் காண முடியாது. 1896 இல் $3\frac{1}{2}$ சதவீதமாக அறுதியிடப்பட்ட இந்த எக்சைஸ் வரி 1917 வரை அப்படியே நீடித்தது; அப்போது இறக்குமதி வரியை $3\frac{1}{2}$ சதவீதத்திலிருந்து $7\frac{1}{2}$ சதவீதமாக ஏற்றியதால் எக்சைஸ் வரியின் பாதிப்பு ஓரளவு குறைந்தது; இறுதியாக 1925 இல்தான் அது முற்றிலும் அகற்றப்பட்டது. (ஆலைத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து நிர்ப்பந்தப்படுத்தினர்கள் என்பதே உண்மைக் காரணம்.)

இம்மாதிரி நிலைமைகளில் இந்தியத் தொழில் வளர்ச்சி 1914 வரை மிகவும் மெதுவாகவும் குறைவாகவுமே இருந்தது. 1914 அளவில் தொழிற்சாலைச் சட்டத்திற்கு உட்பட்ட தொழிலாளர்களின் எண்ணிக்கை 951,000 தான். ஏற்பட்ட வளர்ச்சியும் பருத்தித் தொழிலைப் பொறுத்தமட்டில்தான்; இத் தொழிலில் இந்திய மூலதனம் முன்னேறப் பெரும் பாடுபட்டது; சணல் தொழிலிலோ, அதிக ஊதியம் வேண்டிய பிரிட்டிஷ் தொழி

லாளருக்கு எதிராக மலிவான இந்தியத் தொழிலாளரைப் பயன் படுத்தும் முயற்சி செய்யப்பட்டது. பொறியியல் என்பது பழுது பார்க்கும், குறிப்பாக, ரயில்வேக்களைப் பழுது பார்க்கும் பணி களோடு சரி. 1914 போர் தொடங்கும்போது இரும்பு, உருக்குத் தொழில்கள் சிறிய அளவில் ஆரம்பிக்கப்பட்டன; இயந்திர உற்பத்தியே கிடையாது.

முதல் உலகப்போர் தொடக்கத்தை அடுத்து அரசாங் கத்தின் கொள்கை தலைகீழாக மாற்றப்பட்டது. பொருளாதாரத் துறையில் தொழில் மயமாக்குவதே கொள்கை என்று அரசு அறிவித்தது; அரசியல் துறையில் பொறுப்புள்ள அரசாங்கம் ஏற்படுத்துவதே நோக்கம் என்று கூறிக் கொண்டிருந்தது போல. 1915 இல் வைசிராய் ஹார்டிஞ்ச் பிரபு புதிய கொள்கையை அறிவித்தார்:

> ''போருக்குப் பிறகு தன்னுணர்வுள்ள உறுதியான கொள்கையால் இந்தியாவின் தொழில் சக்திகளை அதிகப் படுத்தவேண்டியதாயிருக்கும். பெரிய நாடுகளின் எதிர்காலம் அவற்றின் பொருளாதார நிலையைப் பொறுத்ததே என்று தெளிவாகும்போது வெளிநாடுகள் சந்தைகளுக்காகத் தமக்குள் பலத்த போட்டியிடும். தாங்கள் உற்பத்தி செய்யும் பொருள்களை இந்தியாவில் திணிக்க முயலும். இப் பிரச்சினை யில் இந்திய மக்களின் கருத்து ஒருமுகமானது; அதைக் கணக்கில் சேர்க்காமல் ஒதுக்க முடியாது...
>
> ''போருக்குப் பிறகு, நிலைமைகள் அனுமதிக்குமளவு ஒரு தொழிலுற்பத்தி நாடாவதற்குத் தேவையான எல்லா உதவிகளையும் அரசாங்கம் செய்யவேண்டும் என்று கேட்கத் தனக்கு உரிமை உண்டு என்று இந்தியா கருதும்.''
>
> (1915, நவம்பர் 26 இல் இந்தியா காரியதரிசிக்கு ஹார்டிஞ்ச் பிரபு அனுப்பிய கடிதம்.)

இதைத் தொடர்ந்து 1916 இல் சர் தாமஸ் ஹாலண்டின் தலைமையில் இந்தியத் தொழிற்குழு நியமிக்கப்பட்டது; அவர் சுரங்கப் பொறியாளர் கழகத்தின் தலைவர். அந்தக் குழு 1918 இல் தன் அறிக்கையைச் சமர்ப்பித்தது. இந்திய அரசியல் சீர்திருத்தங் கள் பற்றி 1918 இல் வெளியான மாண்டேகு செம்ஸ்போர்ட் அறிக்கையும் நோக்கத்தை தெளிவுபடுத்துகிறது.

> ''இந்தியாவுக்குப் பொருளாதார உறுதி தருவதற்கு மட்டுமல்ல, அதன் மக்களின் விழைவைத் திருப்தி செய்யவும், தொழில் வளர்ச்சிக்காக எல்லா அடிப்படைகளிலும் முற் போக்கான கொள்கை அவசரமாய்க் கடைப்பிடிக்கப்பட வேண்டும்....

''பொருளாதார அடிப்படையிலும் ராணுவ அடிப்படையிலும் சாம்ராஜ்ய நலன்களுக்கு, இந்தியாவின் இயற்கை வளங்கள் இன்னும் சிறப்பாகப் பயன்படுத்தப்பட வேண்டியது அவசியம். சாம்ராஜ்யத்தின் சக்தி தொழில் மயமான இந்தியாவினால் எவ்வளவு வலிமையுறும் என்று நம்மால் அளவிட முடியாது.''

(மாண்டேகு-செம்ஸ்ஃபோர்டு அறிக்கை, பக். 267)

போரினால் எழுந்த நிலைமைகள் காரணங்களாகவே இந்தக் கொள்கை மாற்றம் அறிவிக்கப்பட்டது; அதிகார பூர்வமான அறிக்கைகளில் இதைத் தெளிவாய்க் காணலாம். மூன்று முக்கியமான காரணத் தொகுதிகளைக் காணலாம்.

முதன்மையாக, ராணுவ தந்திரக் காரணம். போக்குவரத்துகளும் சப்ளைகளும் துண்டிக்கப்பட்டதும், மெசபடோமியா அவதூறுகளும் போன்ற யுத்த நிலைமைகள், பழைய முறை இந்திய சாம்ராஜ்யத்தின் பலவீனத்தையும் கிழக்கில் பிரிட்டிஷ் ராணுவ தந்திரத்தின் முழு பலவீனத்தையும் வெளிப்படுத்தி விட்டன; இந்தியாவில் நவீன தொழிலுக்குத் தேவையான மிக அடிப்படையான காரியங்களும் செய்யப்படாததும், அது காரணமாக ஜீவ நாடியான தேவைகளுக்கு நீண்ட தொலைவிலிருந்து கடல் கடந்து பொருள்கள் வரவேண்டியிருந்ததுமே இந்தப் பலவீனத்திற்குக் காரணங்கள். இக்காரணங்கள் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களை எவ்வளவு வலுவாய்க் கவர்ந்தன என்பதை மாண்டேகு—செம்ஸ்போர்டு அறிக்கையின் மூலம் அறியலாம்; இந்த அறிக்கை, ''கீழ்த் திசையின் போர்க்களங்களுக்கு'' தளமாக்க இந்தியாவை நவீனப் படுத்துவதன் அவசியம் பற்றி ஆய்கிறது:

''கடல் போக்குவரத்துகள் தற்காலிகமாய்த் தடைப்படக் கூடிய சாத்தியம் இருப்பதால், கீழ்த்திசையின் போர்க்களங்களில் பாதுகாப்பு நடவடிக்கைகளுக்கு இந்தியாவைப் போர்க் கருவிகளின் தளமாக ஏற்கவேண்டிய நிர்ப்பந்தம் நமக்கு ஏற்பட்டுள்ளது. இக்காலத்தில் தொழிலில் முன்னேறிய சமுதாயம் உற்பத்தி செய்யும் பொருள்கள் போருக்குத் தேவையான சாதனங்களின் பட்டியலோடு அளவில் ஒன்றுபடாவிடினும் வகையில் ஒன்றுபடுகின்றன. ஆகையால் இந்தியாவின் இயற்கை வளங்களைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டிய தேவை ஒரு முக்கியமான ராணுவத் தேவையாகவே ஆகிவிட்டது.''

இரண்டாவது, பொருளாதாரப் போட்டிக் காரணங்கள். இந்திய மார்க்கெட்டில் பிரிட்டிஷாருக்கு இருந்த ஏகபோக உரிமையை வெளிநாட்டுப் போட்டியாளர்கள் உடைத்தெறியத்

தொடங்கிவிட்டார்கள்; போர்த் தேவைகளால் பிரிட்டனின் தொழில்நிலை வலு குன்றியதால் போருக்குப் பின் வெளிநாட்டுப் போட்டியாளர்கள் மேலும் இந்திய மார்க்கெட்டில் முன்னேறி, பிரிட்டன் இந்திய மார்க்கெட்டையே இழக்க வேண்டியதாகுமோ என்ற அச்ச நிலை எழுந்தது. ஹார்டிஞ்ச் பிரபு விளக்கியது போல், ''வெளிநாடுகளின் உற்பத்திப் பொருள்கள் திணிக்கப்படும் நாடாக இந்தியா மாறும்'' அபாயம் இருந்தது. இதைத் தடுக்க விதிக்கப்படும் சுங்க வரிகள் இரு வகையில் பயன்படும். முதலாவதாக, இந்தியாவில் தொழில் அபிவிருத்தி செய்வதன் மூலம் வெளிநாட்டுத் தொழிலதிபர்களை நீக்கி விடுவதால் பிரிட்டனின் பொருளாதார, அரசியல் ஆதிக்கத்திற்கு, இறுதி இலாபம் பிரிட்டிஷ் மூலதனத்திற்கே வரும் பாதுகாப்பு கிடைக்கும்; சுதந்திரமுள்ள மற்றொரு முதலாளித்துவ நாட்டிடம் இந்திய மார்க்கெட்டை இழப்பதை விட இதுவே சிறந்த ஏற்பாடு. இரண்டாவதாக, சுங்கத்தடை ஏற்படுத்துவதால், பிரிட்டன் இந்திய மார்க்கெட்டை மீண்டும் கைப்பற்றுவதற்கு உதவும் ஏகாதிபத்தியச் சலுகைக்கு வழி வகுப்பதுமாகும்.

மூன்றாவதாக, அந்தரங்கமான அரசியல் காரணங்கள். போர்க் காலத்திலும் போரை அடுத்த குழப்பமான காலத்திலும் இந்தியாவைப் பிடியில் வைத்துக் கொள்வதற்கு இந்தியப் பூர்ஷ்வாக்களின் ஒத்துழைப்பை அவசியம் பெற வேண்டியிருந்தது. அவர்களுடைய ஆதரவைப் பெறுவதற்காகச் சில பொருளாதார, அரசியல் சலுகைகளை வழங்கவேண்டியிருந்தது, சில சலுகைகள் வழங்குவதாய் உறுதி கூற வேண்டியிருந்தது. இதைத்தான் ஹார்டிஞ்ச் பிரபு, ''இந்திய மக்களின் கருத்தைக் கணக்கில் சேர்க்காமல் இருக்க முடியாது'' என்று நாசுக்காய்க் குறிப்பிட்டார்.

கொள்கை மாற்றத்தை அமுல்படுத்தப் பாதுகாப்புச் சுங்க வரி முறை மேற்கொள்ளப்பட்டது. இதற்கு முதல்படியாக பருத்தி துணி வகைகள் மீது 1917 இல் $7\frac{1}{2}$ சதவீதச் சுங்கவரியை 1921 இல் 11 சதவீதமாக உயர்த்தினார்கள்; 1925 இல் நீக்கப்படும் வரை எக்சைஸ் வரி $3\frac{1}{2}$ சதவீதமாகவே இருந்தது. பொது இறக்குமதி வரி 1921 இல் 11 சதவீதமாகவும் 1922-ல் 15 சதவீதமாகவும் உயர்த்தப்பட்டது. 1921இல் ஒரு நிதிக்குழு நியமிக்கப்பட்டது; 1922 இல் அது அறிக்கை சமர்ப்பித்தது; ஒவ்வோர் அயிட்டமாக பரிசீலனை செய்து ''பாகுபடுத்தும் பாதுகாப்பு''க்குச் சாதகமாய் அது யோசனை கூறியது; ஆனால், குழுவின் ஐந்து இந்திய உறுப்பினர்கள் முழு பாதுகாப்பு வேண்டும் என்ற எதிர்ப்புக் கருத்தை வெளியிட்டார்கள். அந்த அறிக்கை சிபாரிசு செய்தபடி 1923 இல்

சுங்க வாரியம் ஏற்படுத்தப்பட்டது. அதன் முன்னிலையில் பரிசீலனைக்கு வந்த பெரிய பிரச்னை, இரும்பு, உருக்கு தொழில் பற்றின ஜீவாதாரப் பிரச்னை. 1924 இல் இரும்பு, உருக்குத் தொழில் $33\frac{1}{3}\%$ விகிதம் பாதுகாப்பு பெற்றது; தவிர, உதவித் தொகை முறையும் இருந்தது.

இந்தக் கட்டத்தில், அரசாங்கத்தின் கொள்கை மிக உதவும் படியாக இருக்கும் என்று இந்தியத் தொழில் முதலாளிகளின் நம்பிக்கை மிக உயரமாய் எழுந்தது. இது ஸ்வராஜ் கட்சி அல்லது இந்திய முற்போக்கு முதலாளித்துவக் கட்சியின் காலம்; இக் கட்சி காந்தியத் தலைமையின் ''ஒத்துழையாமை''க் கொள்கைகளை 1923 தேசிய காங்கிரஸ் கூட்டத்தில் முறியடித்தது; சட்ட மன்றங்களில் நுழைந்து உள்ளிருந்து போராட்டம் நடத்துவது, ''கௌரவமான ஒத்துழைப்பு'' நல்குவது தன் கொள்கைகளுடன் இக் கட்சி 1923—26 ஆண்டுகளில் செல்வாக்கோடு இருந்தது.

ஆனால், அடுத்துத் தொடர்ந்த ஆண்டுகளில், இந்த நம்பிக்கைகள் மீது வலுவான அடிகள் விழுவதாயிருந்தன.

## 4. தொழில் மயமாக்குவதற்குத் தடைகள்

1924 இல் இரும்பு, உருக்குத் தொழிலுக்குப் பாதுகாப்பும் உதவித் தொகைகளும் வழங்கியதே, 1914-18 போருக்குப் பிறகு தொழில் வளர்ச்சிக்கென அரசாங்கம் செய்த பேருதவியாகும். அதற்குப் பிறகு ஒரு பிற்போக்கு நேர்ந்ததைத் தெளிவாய்க் காணலாம். இந்தியத் தொழிற் குழு, தொழில்களுக்கான ஒரு சாம்ராஜ்யத்துறை ஏற்படுத்தப்பட வேண்டும் என்றும், அது மாகாணத் துறைகளை எல்லாம் நிர்வாகம் செய்ய வேண்டும் என்றும் விரிவான திட்டங்கள் வகுத்தன; அவை நிறைவேறவில்லை. மத்திய ஸ்தாபனம் அமைக்கப்படவே இல்லை; மாகாணத் துறைகள், கல்வித்துறையைப் போல், ''மாற்றம் செய்யப்பட்ட'' பொருள்களுக்கு மாற்றப்பட்டன; அதாவது, நிதிப் பற்றக்குறையால் தேக்கம் கொண்டு அதன் பொறுப்பு இந்திய அமைச்சர்கள்மீது சுமத்தப்பட்டது, 1934 அளவில் ஏற்பட்ட சாதனையை தேர்ந்ததொரு வெளிநோக்கர் பின்வருமாறு வருணிக்கிறார்:

> ''துர்ப்பாக்கியவசமாக, மத்திய ஸ்தாபனம் இன்னும் அமைக்கப்படவில்லை; 1919 ஆம் ஆண்டு அரசியல் சீர்திருத்தங்களைத் தொடர்ந்து, மாகாண நிறுவனமும், கல்வித் துறையோடு ''மாற்றம் செய்யப்பட்ட'' பொருள்களோடு சேர்க்கப்பெற்று, தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றங்களுக்குப் பொறுப்பான ஸ்தல அரசிடம் ஒப்படைக்கப்பட்டது. துர்ப்பாக்கிய வசமாகவே, போதுமான நிதிகள்

கிடைக்காததால் முக்கியமான எந்தக் கொள்கையும் செயல் படுத்தத் தொடங்கப்பட முடியவில்லை. மேலும், தொழிலை ஊக்கவேண்டுமானால் மூலப்பொருள்களையும் உற்பத்தி முறைகளையும் பற்றி மட்டுமல்ல, மார்க்கெட்களையும் பற்றி அரசுக்குத் தொலை நோக்கும் ஒருமுகமுமான கொள்கை இருக்கவேண்டும். உண்மையில், அது கல்விக் கொள்கை, முக்கியமான தேச நலன்களோடு இசைவாக இருக்க வேண்டும். இந்தியாவில் அமைக்கப்பட்டுள்ள மாகாண அலுவலகங்களால் மட்டும் போதுமான பயன் கிட்டுமா என்பது சந்தேகமே.''

(டி.எச். புகானன்: ''இந்தியாவில் முதலாளித்துவத் தொழில் வளர்ச்சி,'' 1934, பக்கம் 463-4.)

'தொழில் தகவல், ஆராய்ச்சி மத்திய நிலையம்' ஒன்று மிக அண்மையில் ஏற்படுத்தப்பட்டது. மூன்று ஆண்டுகளுக்கு £ 37,500 எனத் தாராளமாக அதற்கு நிதி ஒதுக்கப்பட்டது. பட்டு வளர்ச்சி, கைத்தறி நெசவின்பால் அது முக்கியமாய்க் கவனம் செலுத்தும் என்று அறிவிக்கப்பட்டது!

''தொழில் தகவல், ஆராய்ச்சி மத்திய நிலையம் ஒன்று ஏற்படுத்தப்படப் போவதாகவும், அதற்காக அடுத்த மூன்று வருடங்களில் 5 லட்சம் ரூபாய்கள் (£ 37,500 செலவிடப்பட இருப்பதாகவும், இந்த நிலையம் பட்டு வளர்ப்பு, கைத்தறி நெசவைக் கவனிக்கும் என்பதாகவும் அண்மையில் அறிவிக்கப் பட்டதே, இதுவரை காரிய சாத்தியமான பயன்கள். இன்று மிகத் தேவையான கனரகத் தொழில்கள் கடுமையாகப் புறக்கணிக்கப்பட்டுவிட்டன. நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான நீண்டகாலத் திட்டங்கள்—அவர் களுக்கு அப்படி ஏதாவது இருந்தால்—விளக்கப்படாமல் மர்மத்தில் மறைக்கப்பட்டுள்ளன.''

(சர். எம். விசுவேச்வரய்யா: ''இந்தியாவுக்குத் திட்டமிட்ட பொருளாதாரம்,'' 1936, பக். 247.)

1924 இல் இரும்பு, உருக்குத் தொழிலுக்கு பாதுகாப்பு அளிக்கப்பட்ட பின், பாதுகாப்புச் சுங்கவரிகள் கோரி மற்ற தொழில்களிடமிருந்து சுங்க வாரியத்துக்கு மேலும் மேலும் விண்ணப்பங்கள் வந்தன. இவற்றில் பெரும்பாலானவைகளில், முக்கியமாகச் சிமெண்ட், காகிதத் தொழில்களின் விண்ணப்பங் களில் கையொப்பமே இடப்படவில்லை. தீக்குச்சித் தொழிலுக்கு மட்டும் குறிப்பிடத்தக்க விதிவிலக்கு அளிக்கப்பட்டது; அதற்குச் சுங்கவரிப் பாதுகாப்பு கிடைத்தது; தீக்குச்சித் தொழிலில் இந்தியாவில் செயல்படும் வெளிநாட்டு மூலதனம் இருந்தது.

சமயம் போனஸ் உட்பட 400 சதவீதம் கூடத் தந்தன. பிரிட்டிஷார் நிர்வாகத்தில் இருந்த நாற்பத்தொரு சணல் ஆலைகள் தம் £ 61 லட்ச மூலதனத்திற்கு, 1918—21 ஆகிய நான்கு வருடங்களில் £ 2.29 கோடிக்குக் குறையாமல் லாபம் ஈட்டியுள்ளதாய் அவற்றின் அறிக்கைகள் காட்டின; இதைத் தவிர, சேமநிதிக்கென ஒதுக்கப்பட்டது £ 1.9 கோடி; அல்லது, £ 60 லட்சம் மூலதனத்துக்கு நான்கு வருடங்களில் கிடைத்த மொத்த லாபம் £ 4.2 கோடி.

போருக்கு அடுத்த ஆண்டுகளில், இந்த மாபெரும் லாபங்களில் பங்கு பெறவேண்டும் என்ற ஆசையால் பிரிட்டிஷ் மூலதனம் இந்தியாவில் வெள்ளமாய்ப் பெருகியது. 1908-10 இல் இந்தியாவுக்கும் சிலோனுக்கும் ஏற்றுமதியான பிரிட்டிஷ் மூலதனத்தின் அளவு சுமார் £ 1.4 கோடி, £ 1.5 கோடி இருக்கும், அல்லது, பிரிட்டனின் மொத்த மூலதன ஏற்றுமதியில் 9 சதவீதம் இருக்கும் என்று முன்பு சர் சார்ஜ் பெயிஷ் மதிப்பீடு செய்திருந்தார். 1921 இல் இத்தொகை £ 2.9 கோடி அல்லது மொத்த மூலதன ஏற்றுமதியில் கால் பங்குக்கு மேலாகவும், 1922 இல் £ 3.6 கோடி அல்லது கால் பங்குக்கு மேலாகவும், 1923 இல் £ 2.5 கோடி அல்லது ஐந்தில் ஒரு பங்காகவும் பெருகியது. 1920—21, 1921—22 ஆகிய இரண்டாண்டுக் காலத்தில் இறக்குமதிகள் பெயரளவில் மிகுதியாக இருந்தன: 1856-62க்குப் பிறகு ஒரே ஒரு முறை, இது ரயில்வே முதலீட்டுக் காலம்; ஆனுல், உண்மையில் அரசாங்கம் செயற்கையாக ஒரு ரூபாய்க்கு 2 ஷில்லிங் என்று உயர்ந்த நாணயமாற்று வீதத்தை ஏற்படுத்தியதால் உண்டான நாசகரமான பயன்களை இது ஓரளவு பிரதிபலித்தது; இதனுல் இந்திய இறக்குமதிகளுக்கு மிகுந்த லாபமும், இந்திய ஏற்றுமதியாளர்களுக்கு அழிவும், இந்த நாணயமாற்று வீதத்தை நிலைநாட்டும் வீண் முயற்சிக்காக அரசாங்கத்திற்கு £ 5.5 கோடிக்குக் குறையாத செலவும்தான் ஏற்பட்டன.

1920, 1921 முடிவிலிருந்து முறிவு ஆரம்பமாயிற்று; அரசாங்கம் தன் நாணயமாற்றுக் கொள்கையை மாற்றிக் கொண்டது; ஒரு ரூபாய்க்கு இரண்டு ஷில்லிங்குகள் என்பதைக் கைவிட்டு 1 ஷில்லிங்குக்கு 4 பென்ஸ் என்று திடீரென்று குறைத்தது; இதனுல் இறக்குமதியாளர்கள் அழிவுண்டார்கள்; £ 3 கோடிக்குமேல் பாக்கி செலுத்தப்படாமல் இருந்ததாய் மதிப்பிடப்படுகிறது. போருக்குப் பிந்தின விலைவள காலத்தில் அமைக்கப்பட்ட பல வர்த்தக நிலையங்கள் பல அடுத்த ஆண்டுகளில் திவாலாயின. போருக்குப் பிந்தின விலைவள காலத்தில் கிடைத்த

அசாதாரண லாபங்கள் தொடர்ந்து கிடைக்காது என்றானதும் பிரிட்டிஷ் மூலதனப் பெருக்கு வற்றி விட்டது. 1924 இல் மொத்த பிரிட்டிஷ் மூலதனம் £ 26 லட்சமாய், அதாவது, அவ்வாண்டு பிரிட்டன் ஏற்றுமதி செய்த மூலதனத்தில் ஐம்பதில் ஒரு பங்குக்குக் கீழே குறைந்தது; 1925 இல் £ 34 லட்சம், 1926 இல் £ 20 லட்சம், 1927 இல் £ 10 லட்சத்திற்கும் கீழே, அதாவது, பிரிட்டனின் மூலதன ஏற்றுமதியில் ஒரு சதவீதத்தில் பாதிக்கும் குறைவாக வீழ்ந்துவிட்டது.

போருக்கு முந்தியும் போருக்குப் பிந்தியும் இந்தியாவுக்கும் சிலோனுக்கும் பிரிட்டன் ஏற்றுமதி செய்த மூலதனம் பற்றின பின்வரும் தகவல்கள் படிப்பினை தருவதாகும். (போருக்கு முந்தின கணக்கு சர் சார்ஜ் பெயிஷினுடையது; போருக்குப் பிந்தின கணக்கு மிட்லண்ட் பாங்கு அறிக்கையிலிருந்து):

இந்தியாவுக்கும் சிலோனுக்கும் பிரிட்டிஷ் மூலதன ஏற்றுமதிகள்

| வருட சராசரி | | இந்தியாவுக்கும் சிலோனுக்கும் £ லட்சக் கணக்கில் | | கடல்கடந்த நாடுகளுக்கு அனுப்பியது £ லட்சக் கணக்கில் | | இந்தியா, சிலோனுக்கு சதவீதம் |
|---|---|---|---|---|---|---|
| 1908–10 | .. | 147 | .. | 1723 | .. | 8·5% |
| 1921–23 | .. | 302 | .. | 1290 | .. | 23·7% |
| 1925–27 | .. | 21 | .. | 1209 | .. | 1·7% |
| 1932–34 | .. | 42 | .. | 1351 | .. | 3·1% |
| 1934–36 | .. | 10 | .. | 302 | .. | 3·3% |

போருக்குப் பிந்தி சிறிது கால வளத்திற்குப்பின் ஏற்றுமதி அளவு போருக்கு முந்தின அளவுக்கும் கீழே வீழ்ந்தது.

இந்தியாவில் பதிவு செய்யப்பட்ட கம்பெனிகளின் மொத்த மூலதனமும்—அதிகார பூர்வமான அறிக்கைகளின்படி—அறிவுறுத்துவதாகும்:

பிரிட்டிஷ் இந்தியாவில் பதிவு செய்யப்பட்ட கம்பெனிகளின் செலுத்தப்பட்ட மூலதனம் (பர்மா நீங்கலாக)

| | 1914–15 | 1924–25 | 1934–35 | 1939–40 |
|---|---|---|---|---|
| கோடிக்கணக்கான ரூபாய்களில் | 74·4 | 239·8 | 266·6 | 288·5 |

1914க்கும் 1924க்கும் இடைப்பட்ட பத்தாண்டுகளில் 222 சதவீத ஏற்றம், அல்லது ஆண்டு சராசரி 22 சதவீதம். ஆனால்,

அடுத்த பத்தாண்டில், 1924க்கும் 1934க்கும் இடையில் 11 சதவீத ஏற்றம், அல்லது ஆண்டு சராசரி 1 சதவீதம்; 1934 க்கும் 1939க்கும் இடைப்பட்ட அரைப் பத்தாண்டில் ஆண்டு சராசரி 1.5 சதவீதமே. இக்கணக்குகளைப் பாதிக்கும் விலைவாசி அளவுகளின் மாற்றத்தை ஏற்றுக்கொண்ட பிறகும் காணப்படும் வேற்றுமை குறிப்பிடத்தக்கது; போருக்குப் பிந்தி சிறிது காலமிருந்த வளத்திற்குப் பின் ஏற்பட்ட பிற்போக்கைக் கவனியாமல் இருக்க முடியாது.

1927 இல், ஸ்டேடிஸ்டு, இந்தியாவில் பதிவு செய்யப்பட்ட புதிய கம்பெனிகளின் மூலதனம் பற்றி, 1914 ஆம் ஆண்டு அளவை 100 எனக் கொண்ட அடிப்படையில் தயாரித்த ஓர் அட்டவணையை வெளியிட்டது:

**பிரிட்டிஷ் இந்தியாவில் புதிய மூலதன அளவுகள்**

ஓவ்வோர் ஆண்டும் பதிவு செய்யப்பட்ட கம்பெனிகளின் மூலதனத்தின் அட்டவணை:

| 1914 | 1921 | 1922 | 1923 | 1924 | 1925 | 1926 | 1927 |
|---|---|---|---|---|---|---|---|
| 100 | 221 | 121 | 51 | 40 | 31 | 45 | 29 |

1914 அளவுக்குக் கீழே இவ்வளவு பலமான சரிவு ஏற்பட்டது பற்றி லண்டன் பொருளாதார ஏடு விமரிசித்தது:

> ''நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் நிச்சயமான பிற்போக்கு ஏற்பட்டுள்ளது என்பதையே இக் கணக்குகள் பிரதிபலிக்கின்றன என்பதைப்பற்றிச் சந்தேகம் இருக்க முடியாது. இந்திய அரசின் நாணயக் கொள்கையும் நாணய மாற்றுக் கொள்கையும் இந்தப் பிற்போக்குக்கான குற்றச்சாட்டிலிருந்து முற்றிலும் தப்பிட முடியாது.''
>
> (ஸ்டேடிஸ்ட், ஆகஸ்ட் 6, 1927)

உலக நெருக்கடி ஏற்படுவதற்கு முன்பேயே இந்தியத் தொழில் வளர்ச்சியின் பிற்போக்கு இவ்வாறு தொடங்கிவிட்டதைக் காண்கிறோம். இருபதுகளின் நடுவில் இந்தியக் கம்பெனிகள் மிகவும் சிரமதசையில் இருந்தன. பருத்தி அல்லாத வேறு துறைகளில் இந்தியா தொழில் வளர்ச்சி காண்பதற்கு முன்னோடியாக விளங்கிய டாடா இரும்பு, உருக்கு கம்பெனி தன்னுடைய நூறு ரூபாய்ப் பங்கு 1926இல் 10 ரூபாய்க்கு மதிப்பு குன்றியிருந்ததைக் கண்டது; லண்டன் மார்க்கெட்டில் £ 20 லட்சத்திற்குக் கடன் ஈட்டுப்பத்திரங்கள் வெளியிட வேண்டிய நிர்ப்பந்தம் அதற்கு ஏற்பட்டது. இந்த ஆண்டுகளில் பிரிட்டனில் நிதி — மூலதனம் இந்தியத் தொழில் மீது தனக்கு இருந்த

பிடியை இறுக்கியது; போருக்குப் பிந்தின ஆண்டுகளில் தளர்ந்திருந்த பிடியை இப்போது அது மீண்டும் வலுப்படுத்திக் கொண்டது.

ஹில்டன் எங் கமிஷன் இந்திய நிதியையும் நாணயத்தையும் பற்றி 1926 இல் சமர்ப்பித்த அறிக்கையைத் தொடர்ந்து, போருக்கு முன் ஒரு ரூபாய்க்கு 1 ஷில்லிங் 4 பென்ஸ் என்ற வீதத்தை மாற்றி ஒரு ரூபாய்க்கு 1 ஷில்லிங் 6 பென்ஸ் சமம் என்ற உயர்ந்த நாணய மாற்று வீதத்தை நிலைப்படுத்த வேண்டும் என்ற முடிவு 1927 இல் மேற்கொள்ளப்பட்டதன் மூலம் இந்தியத் தொழில் மீது மற்றொரு பலமான தாக்குதல் நடந்தது. இந்திய முதலாளிகள் அனைவரும் எதிர்த்தும் இந்தப் பணச்சுருக்கக் கொள்கை செயல்படுத்தப்பட்டது. இந்திய முதலாளித்துவத் தலைவர் சர் புருஷோத்தமதாஸ் டாகுர்தாஸ் நாணயக் குழுவின் அறிக்கைக்குத் தன் ஆட்சேபக் குறிப்பை எழுதுகையில் கூறினார்: ''இந்திய உற்பத்தியாளர் தாங்கமுடியாத அளவு அது அவனைத் தாக்கும்; வேளாண்மையால் வாழ்கிற நாட்டின் மக்களில் ஐந்தில் நான்கு பங்கினரை அது தாக்கும், கடுமையாகத் தாக்கும்.'' அதே சமயத்தில், இந்தியரின் செல்வாக்கு எவ்வகையிலும் எட்ட முடியாதவாறு நிதி நிர்வாகத்தை ஒதுக்குவதற்கான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன; ஹில்டன் எங் கமிஷனின் சிபாரிசுப்படி, 1921 இல் நிறுவப்பட்ட இம்பீரியல் பாங்க் ஆப் இந்தியாவோடு, ஒரு புதிய இந்திய ரிசர்வ் பாங்கை ஏற்படுத்தும் முடிவு மேற்கொள்ளப்பட்டது; இந்திய எதிர்ப்புக்கு விரோதமாய் நீண்டகாலம் போராடிய பின் இறுதியில் 1934 இல் அது அமைக்கப்பட்டது.

ஏற்கனவே சிரமதசையில் இருந்த இந்தியாமீது உலகப் பொருளாதார நெருக்கடி பெரும் சுமையாக விழுந்தது; இந்தியா தொடக்க நிலை உற்பத்தியையே பெரிதும் நம்பியிருந்ததால், மற்ற எந்தப் பெரிய நாட்டையும்விட அது மிகுந்த கஷ்டத்திற்குள்ளாயிற்று. மக்கட்தொகையில் ஐந்தில் நான்கு பங்கினர் நம்பி வாழ்ந்த இந்தியத் தொடக்கநிலை உற்பத்திப் பொருள்களின் மதிப்பு (இந்த மதிப்பே, பலவீனமான தொழில் வளர்ச்சிக்கு மார்க்கெட்டைப் பாதித்தது) பாதியாக விழ்ந்தது. 1928-29க்கும் 1932-33க்கும் இடையில் இந்தியச் சரக்குகளின் ஏற்றுமதிகளின் மதிப்பு 339 கோடி ரூபாயிலிருந்து 135 கோடி ரூபாய்க்கு விழ்ந்தது. ஆயினும் இங்கிலாந்துக்கு 'நன்கொடை' கடனுக்கு வட்டி, உள்நாட்டுச் செலவுகள் ஆகியவற்றின் சுமை விலை இறக்கத்தால் மிகுந்தது; இரக்கமின்றி இவை வசூலிக்கப்பட்டன. ஐரோப்பாவுக்கு இருந்ததைப்போல் இந்தியாவுக்கு

யாதொரு ஹூவர் கடன் நிறுத்திவைப்பு கிடையாது; ஜெர்மனிக்கு இருந்ததைப்போல் கடன்களை உறைய வைக்கும் திட்டம் கிடையாது; பிரிட்டன் அமெரிக்கக் கடன்களுக்குச் செய்தது போன்ற கடன் நிராகரிப்பும் கிடையாது. 'நன்கொடை' நிதி ஏற்றுமதி மூலம் செலுத்தப்பட்டது. 1931க்கும் 1935க்கும் இடையில், £ 20·3 கோடி மதிப்பிடப்படும் 3·2 கோடி அவுன்ஸ் தங்கம் (எகனுமிஸ்ட், டிசம்பர் 12, 1936), அல்லது, நெருக்கடிக்கு முன் பிரிட்டனின் தங்கச் சேமிப்பைவிட அதிகம், இந்தியாவிலிருந்து கவரப்பட்டது. 1936, 1937இல் மேலும் ஏற்றுமதிகள் செய்யப்பட்ட தங்கத்தின் மதிப்பு £ 3·8 கோடி (எகனுமிஸ்ட், ஏப்ரல் 2, 1938), அல்லது, 1931-37 ஆகிய ஏழு ஆண்டுகளில் மொத்தம் £ 24·1 கோடி. குடியானவர்களும் ஏழை மக்களும் சேமித்து வைப்பதற்குப் பாங்கு முதலிய வசதிகள் இல்லாமையால் பரம்பரையாகத் தங்கள் வசம் சேமித்து வைத்திருந்த தங்கமே இது. 1931-37இல் இவ்வாறு தங்க வடிகால் அமைக்கப்பட்டு வறுமையால் நலிந்த இந்தியக் குடியானவர்களின் சிறு சேமிப்புகளும் பிரிட்டிஷ் நிதி முதலாளித்துவத்தால் விஞ்ஞான பூர்வமாகப் பறிக்கப்பட்டு, பிரிட்டனின் தங்கச் சேமிப்பைப் பெருக்கப் பயன்படுத்தப் பட்டன; பிரிட்டனின் தங்கச் சேமிப்பு, இண்டர்நாஷனல் பாங்க் ஆப் செட்டில்மென்ட்ஸின் அறிக்கைப்படி, 1932 இறுதியில் 302·1 கோடி சுவிஸ் பிராங்குகளுக்குச் சமமாக இருந்தது, 1936 இறுதியில் 791·1 கோடி சுவிஸ் பிராங்குகளுக்குச் சமமாக உயர்ந்தது, அல்லது, 162 சதவீத உயர்வு. தொழிற் புரட்சிக் காலத்தில் நடந்ததைப் போல், மீண்டும் ஒருமுறை, புது வடிவில், 1933-37இல் பிரிட்டிஷ் முதலாளித்துவத்தை, இந்தியாவைச் சூறையாடிக் காப்பாற்றிக் கொள்ளும் நடவடிக்கைகளை மேற்கொண்டார்கள்.

1936 இறுதியில், எகனுமிஸ்ட் ஏடு தன் இந்திய அநுபந்தத்தில் 'தொழில்மயமாக்கும்' முயற்சியின் வளர்ச்சி பற்றிக் கவலையோடு பின்வருமாறு குறிப்பிட்டது :

> "மொத்தத்தில், தொழிலை நம்பி வாழும் மக்களின் அளவு குறையத் தொடங்கிவிட்டது; சில தொழில்களில்—குறிப்பாக சணல், பருத்தி தொழில்களில்—ஈடுபட்டோரின் எண்ணிக்கை சில ஆண்டுகளில் மிகக் குறைந்துள்ளது . . .
>
> "இந்தியா தன் தொழில்களை நவீனப்படுத்தத் தொடங்கிவிட்டது என்றாலும் அது இன்னும் 'தொழில் மயப்படுத்தப்' படுவதாய்க் கூறமுடியாது."
>
> (எகனுமிஸ்ட், இந்திய அநுபந்தம், "இன்றைய இந்தியா பற்றி ஒரு கண்ணோட்டம்", டிசம்பர் 12, 1936.)

## 5. போருக்கு முந்தின இருபது ஆண்டுகளின் ஐந்தொகைக் குறிப்பு

இந்தியாவைத் தொழில் மயமாக்குவதாய் ஆரம்பத்தில் பகட்டாக அளிக்கப்பெற்ற வாக்குறுதிகளை நினைவில் வைத்துக் கொண்டு, இரண்டு போர்களுக்கு இடைப்பட்ட இருபதாண்டுக் காலத்தில், இந்தியத் தொழிற்குழு நியமிக்கப்பட்டதை அடுத்த இருபதாண்டில், இந்தியப் பொருளாதார வளர்ச்சி எந்த நிலையில் இருந்தது என்று நாம் இப்போது கையிருப்பு பார்ப்போம்.

இந்த இருபதாண்டுக் காலத்தில்—ஐரோப்பாவிலும் ஆசியாவிலுமுள்ள வேறு எந்த ஒரு நாடும் காணாத முறையில் சோவியத் யூனியனில் சோஷலிஸத் தொழிலாக்கம் வெற்றி பெற்ற இருபதாண்டுக் காலத்தில்—இந்தியாவில் ஓரளவு தொழில் வளர்ச்சி ஏற்பட்டது என்பதில் சந்தேகமில்லை ; 1914க்கு முன் ஆரம்பமான இந்த வளர்ச்சி பிரிட்டிஷாரின் அதிகார பூர்வமான எதிர்ப்பை மீறி முன்னேறிக் கொண்டிருந்தது. இந்தியாவின் உள்மார்க்கெட்டை அணுகும் அளவு தொழில்கள் தொடர்ந்து முன்னேறிய வண்ணம் இருந்தது. இந்தியாவில் பயன்படுத்தப் படும் ஆலையில் தயாரான பருத்திச் சரக்குகளில் நாலில் ஒரு பங்கை 1914 வரை உற்பத்தி செய்து வந்த இந்தியப் பருத்தி ஆலைகள் 1934-35இல் நாலில் மூன்று பங்கு உற்பத்தி செய்யலாயின. போருக்கு முன்தான் தோன்றிய உருக்குத் தொழில் 1932-33இல், 1934ஆம் ஆண்டின் சுங்க வாரிய அறிக்கையின்படி, இந்திய உருக்கு மார்க்கெட்டின் முக்கால் பங்குத் தேவையைப் பூர்த்தி செய்தது. மிகக் குறைவான தொழில் வளர்ச்சி காரணமாக மிகக் கடுமையாய் வரையறுக்கப் பட்ட இந்திய உருக்கு மார்க்கெட்டிற்கு இது முக்கியமான ஓர் அளவுகோல்; 1935-36இல் இந்தியாவின் உருக்கு உற்பத்தி ஓர் உச்சத்தை எட்டியது, 879,000 டன்கள்; ஆனால், அதே ஆண்டில் போலந்து உற்பத்தி செய்த உருக்கின் அளவைவிடக் குறைவு (போலந்தின் மக்கட்தொகை இந்தியாவின் மக்கட் தொகையில் பத்தில் ஒரு பங்குக்கும் குறைவு); ஜப்பானின் உருக்கு உற்பத்தியில் ஆறில் ஒரு பங்குக்கும் குறைவு ; சோவியத் யூனியனின் உருக்கு உற்பத்தியில் பத்தொன்பதில் ஒரு பங்குக்கும் குறைவு.

1914க்கு முன்பே துணி ஆலைகள் வளர்ச்சிக்கான அடிப்படை பெற்றிருந்தாலும் அவற்றின் வளர்ச்சி மட்டும் தொழில் மயமாக்குவதற்குப் போதாது; இரும்பு, உருக்கு, இயந்திர உற்பத்தி போன்ற கனரகத் தொழில்கள் வளர்ச்சி மிக அவசியம். இங்குதான் போருக்கு முன்னர் இந்தியாவின் பலவீனம்

வெளிப்பட்டது. இயந்திரங்களுக்கு இந்தியா இன்னும் முற்றிலும் வெளி நாடுகளையே நம்பியிருந்தது.

> "விசையால் இயங்கும் தொழிற்சாலைகளில் மக்கள் குவிக்கப்பட்டாலும் பொறியியல், துணி ஆலைத்தொழில்கள் உள் நாட்டுத் தொழில்களின் தன்மை வாய்ந்தவை. ஒரு பருத்தித் தொழிற்சாலையில் ஒரு தறியோடு மற்றொரு தறி அல்லது ஒரு கதிரோடு மற்றொரு கதிரைச் சேர்த்துக் கொண்டே போகவேண்டியதுதான். பழுது பார்க்கும் கடைகளில் பொறியியல் ஒரு தனிப்பட்ட விவகாரம். இரும்பு, உருக்குத் தொழில்கள் வெற்றி பெறுகையில்தான் ஒரு நாடு உண்மையில் மாறுதல் பெறுகிறது ... உலோக இயல் தொழில்களின் வளர்ச்சிதான் மெய்யான தொழிற் புரட்சி. இங்கிலாந்தும், ஜெர்மனியும், அமெரிக்காவும் தம் துணி ஆலைகளைத் துவங்கு முன்பே, புதிய பெரிய அளவில் தம் இரும்பு, உருக்குத் தொழில்களைத் தொடங்கின."
>
> (எல். சி. ஏ. நௌல்ஸ்: "கடல் கடந்த சாம்ராஜ்யத்தின் பொருளாதார வளர்ச்சி," பக். 443.)

தொழில் மயமாக்குவதற்கு இது தான் அவசியமான வழிமுறை என்பதை சோவியத் யூனியனில் ஏற்பட்ட பெரும் சோஷலிஸத் தொழிற் புரட்சியும் மிகத் தெளிவாய்க் காட்டுகிறது; சோவியத் யூனியன் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் முறைப்படி கனரகத் தொழிலிலேயே முழு கவனமும் செலுத்தியது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மென்ரகத் தொழில் வளர்ச்சியைக் கவனத்தில் கொண்டது. ஓர் அடிமைக் காலனி நாட்டின் தலைகீழான பொருளாதார வளர்ச்சியை இந்தியா காட்டுகிறது.

இந்தக் காலத்தில் வேளாண்மையிலும் தொழிலிலும் ஈடுபட்டிருந்த மக்களின் அளவு வீதத்தை, 1914க்கு முந்தின காலத்து அளவு வீதத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் தொழில் வளர்ச்சி மிகத் தாழ்வான மட்டத்தில் இருந்தது என்பது இன்னும் தெளிவுபடும். மக்கட்தொகைக் கணக்குப்படி, 1911க்கும் 1931க்கும் இடையில் தொழிலை நம்பி வாழ்ந்த மக்களின் எண்ணிக்கை உண்மையாகக் குறைந்து, விவசாயத்தை ஏற்ற மக்களின் எண்ணிக்கை கூடியது. தொழிலை நம்பி வாழ்ந்த மக்கள் என்று ஜனத்தொகைக் கணக்கு காட்டிய அளவு, 1911 இல் 11·2 சதவீதத்திலிருந்து 1921இல் 10·49 சதவீதத்துக்கும் 1931 இல் 10·38 சதவீதத்துக்கும் வீழ்ந்தது.

தொழிலில் உண்மையாக ஈடுபட்டுள்ள தொழிலாளர்களைப் பற்றின அதிகார பூர்வமான அறிவிப்புகள் இன்னும் குறிப்பிடத்

தக்கவை. இவை கூர்மையான சரிவைக் காட்டுகின்றன; வேலை செய்யும் தொழிலாளர்களின் மொத்த எண்ணிக்கையின் அளவு வீதத்தில் இன்னும் வலிய சரிவைக் காட்டுகின்றன.

தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் அளவு விதம் (1911—31)

| | 1911 | 1921 | 1931 | மாற்றத்தின் சதவீதம் 1911-31 |
|---|---|---|---|---|
| மக்கட்தொகை (கோடிக் கணக்கில்) .. | 31·5 | 31·9 | 35·3 | 12·1 |
| தொழிலாளர் மக்கள் (கோடிக் கணக்கில்) .. | 14·9 | 14·6 | 15·4 | 4·0 |
| தொழில்களில் வேலை செய்வோர் (கோடிக் கணக்கில்) .. | 1·75 | 1·57 | 1·53 | —12·6 |
| தொழிலாளர் மக்கட் தொகையில் தொழிலில் ஈடுபட்ட தொழிலாளர்கள் சதவீதம் .. | 11·7 | 11·0 | 10·0 | — 9·1 |
| மொத்த மக்கட் தொகையில் தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள் சதவீதம் .. | 5·5 | 4·9 | 4·3 | —21·8 |

இவ்வாறாக, கணக்கெடுக்கப் பெற்ற இருபது ஆண்டுகளில் தொழிலில் ஈடுபட்ட தொழிலாளர்களின் எண்ணிக்கை 20 லட்சத்திற்கு மேல் வீழ்ந்தது. மக்கட்தொகை 12 சதவீதம் ஏறியபோது தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் அளவுவிதம் 12 சதவீதம் குறைந்தது, மொத்த மக்கட்தொகைக்குத் தொழிலில் ஈடுபட்ட தொழிலாளர்களின் சதவீதம் ஐந்தில் ஒரு பாகம் குறைந்தது.

1911 முதல் பிரதானத் தொழில்களின் அறிக்கைகள் அதே சரிவுச் சித்திரத்தைக் காட்டுகின்றன:

பிரதானத் தொழில்களில் தொழிலாளர்களின் குறைந்துவரும் எண்ணிக்கைகள்

| | 1911 | 1921 | 1931 |
|---|---|---|---|
| துணிகள் .. | 4,449,449 | 4,030,674 | 4,102,136 |
| ஆடை, அலங்காரத் தொழில்கள் .. | 3,747,755 | 3,403,842 | 3,380,824 |
| மரம் .. | 1,730,920 | 1,581,006 | 1,631,723 |

| | 1911 | 1921 | 1931 |
|---|---|---|---|
| உணவுத் தொழில்கள் .. | 2,134,045 | 1,653,464 | 1,476,995 |
| மண்பாண்டம் வனைதல் .. | 1,159,168 | 1,085,335 | 1,024,830 |

இவ்வாறாக, போர்த் தொடக்க காலத்தில் இந்தியாவின் உண்மையான நிலை ''தொழில்மயச் சரிவு'' என்று பொருத்தமாக வருணிக்கப்படுகிறது; அதாவது, பழைய கைத்தொழிலும் நாசமாகி, அதற்கு ஈடு செய்யக்கூடிய புதிய தொழிலும் முன்னேறவில்லை. ஆலைத் தொழிலின் முன்னேற்றம் கைத்தொழிலின் நசிவை மிஞ்சவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டுக்குரித்தான தொழிலழிப்புப் பணி இருபதாம் நூற்றாண்டில் தொடரப்பட்டு 1918க்குப் பின்னரும் நீடித்தது.

வேறு முடிவிற்கு வரமுடியாது. ஏகாதிபத்திய ஆட்சியின் கீழ் இந்தியா 'தொழில் மயமாக்கப்படுவதாய்' வரையப்படும் சித்திரம் ஒரு மாயை. ஏகாதிபத்திய ஆட்சியின் பிற்காலத்தில் வேளாண்மையை நம்பிவாழ்ந்த மக்கட் கூட்டம் மேலும் அதிகமாயிற்று.

> ''சில தொழில் கேந்திரங்கள் பெரியனவாக இருப்பினும், தொழிற்சாலை தோன்றுமுன் கைத்தொழிலால் பிழைத்த மக்களைவிட தொழிற்சாலையால் வாழ்ந்த மக்கள் மிகக் குறைவு. நாடு இன்றும் ஆண்டுதோறும் ஏற்றுமதி செய்யும் உற்பத்திப் பொருள்களைவிட இறக்குமதி செய்யும் பொருள்கள் மிகுதி. இந்த அளவுவீதம் படிப்படியாக மாறுகையில், மூலப் பொருள்களை ஏற்றுமதி செய்து உற்பத்திப் பொருள்களை இறக்குமதி செய்வதே இந்தியப் பொருளாதார வாழ்க்கையின் தன்மையாக உள்ளது. நாட்டில் தொழிற்சாலைகள் இருந்தும், வாழ்க்கைத்தரம் தாழ்வாயிருந்தும், இந்தியா ஒரு நூற்றாண்டுக்கு முன்பு இருந்ததைவிட இப்போது உற்பத்திப் பொருள்களுக்கான தன் தேவைகளைத் தானே தீர்த்துக் கொள்ளும் நிலையில் இல்லை.''
>
> (டி.எச். புகானன்: ''இந்தியாவில் முதலாளித்துவத் தொழிலின் வளர்ச்சி'', 1934, பக். 451.)

1931-ல் தொழிற்சாலைச் சட்டத்தின்கீழ் வந்த தொழிலாளர்களின் மொத்த எண்ணிக்கை 15 லட்சம், அல்லது உழைத்துப் பிழைக்கும் மக்கட்தொகையில் 1 சதவீதத்திற்கும் குறைவு; இவர்களுடன், சுரங்கத் தொழிலாளர்கள் 260,000ஐயும் ரயில்வே தொழிலாளர்கள் 820,000ஐயும் சேர்த்து மொத்தம் 26 லட்சம் தொழிலாளர்களும் உழைத்துப் பிழைக்கும் மக்களில் $1\frac{1}{2}$ சதவீதமே ஆவர்.

அது மட்டுமல்ல, 1914 முதல் வளர்ச்சி அளவு விரைவான வளர்ச்சி பெறுவதற்குப் பதிலாக சில விதங்களில் 1914க்கு முன்பு இருந்ததைவிட மந்தமாக இருந்தது. தொழிற்சாலைச் சட்டத்தின் கீழ்வந்த தொழிலாளர்களின் எண்ணிக்கை அதிகமாவதைப் பின்வரும் அட்டவணை காட்டுகிறது, (1922 வரை ஐம்பது அல்லது அதற்கு மேற்பட்டவர்களை வேலைக்கு வைத்திருந்த தொழில் நிலையங்களே சட்டத்திற்குட்பட்டன; அப்பால், இருபது அல்லது அதற்கு மேற்பட்டவர்களை வேலைக்கு வைத்துள்ள தொழில் நிலையங்களும், பத்து அல்லது அதற்கு மேற்பட்டவர்களை வேலைக்கு வைத்துள்ள சில தொழில் நிலையங்களும்கூடச் சட்டத்தின்கீழ் வந்தன; எண்ணிக்கைகளைப் பாதிக்கும் இந்த மாற்றம் போருக்குப் பிந்தின எண்ணிக்கைகளுக்குச் சாதகமாயுள்ளன. ஆகையால் வாதத்துக்கு வலு தருகிறது):

தொழிற்சாலைத் தொழிலாளர்களின் சராசரி தினசரி எண்ணிக்கை

| | |
|---|---|
| 1897 | 421,000 |
| 1907 | 729,000 |
| 1914 | 951,000 |
| 1922 | 1,361,000 |
| 1931 | 1,431,000 |

1897க்கும் 1914க்கும் இடையிலுள்ள பதினேழு வருடங்களில் தொழிற்சாலைத் தொழிலாளர்களின் எண்ணிக்கையில் 530,000 கூடியது.

1914க்கும் 1931க்கும் இடையிலுள்ள பதினேழு வருடங்களில் தொழிற்சாலைத் தொழிலாளர்களின் எண்ணிக்கையில் 480,000 கூடியது. ஆக, 1914க்குப் பிற்பட்ட காலத்தில் பெருக்கத்தின் அளவு 1914க்கு முற்பட்ட காலத்தைவிடக் குறைவாக இருந்தது மட்டும் அல்ல, மொத்தப் பெருக்கமே குறைவாக இருந்தது.

மிகக் கணிசமான முன்னேற்றம் கண்டிருந்த பருத்தித் துணித் தொழிலிலும்கூட, இந்தியாவின் முன்னேற்றம் ஜப்பான் அல்லது சீனாவைவிட மிகக் குறைவே. இந்தியா, ஜப்பான், சீனா ஆகிய மூன்று நாடுகளிலும் கதிர்களின் எண்ணிக்கை வளர்ச்சி அடைந்த அளவைப் பின்வரும் அட்டவணை காட்டுகிறது. (புகானன்: மேற்குறித்த புத்தகம்; பக். 220):

நூற்புக் கதிர்களின் எண்ணிக்கை

| | 1914 | 1930 | கூடுதல் |
|---|---|---|---|
| இந்தியா | 6,397,000 | 8,807,000 | 2,410,000 |
| ஜப்பான் | 2,414,000 | 6,837,000 | 4,423,000 |
| சீனா | 300,000 | 3,699,000 | 3,399,000 |

இந்தியாவில் 37 சதவீத வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. அதே காலத்தில் ஜப்பானிலும் சீனுவிலும் ஏற்பட்ட வளர்ச்சி 188 சதவீதம். 1914-ல் ஜப்பான் சீனு ஆகிய இரு நாடுகளிலும் உள்ள மொத்தக் கதிர்களைவிட இந்தியாவில் இருமடங்குக் கதிர்கள் இருந்தன. 1930 அளவில் ஜப்பானும் சீனுவும் (சீனுவின் முன்னேற்றம் பெரும்பாலும் ஜப்பானியர் நிர்வாகத்திலேயே ஏற்பட்டது) இந்தியாவை வெகுதூரம் மிஞ்சிவிட்டன.

ஏகாதிபத்தியத்தின்கீழ் இந்தியாவைத் தொழில் மயமாக்கும் முயற்சி இவ்வளவு மந்த கதியில் முன்னேறுவானேன்? இந்தியாவின் தடையுண்ட பொருளாதார வளர்ச்சிக்கு அதன் முழு சமூக அமைப்பிலேயே பல காரணங்கள் இருப்பினும், முக்கியமான காரணம் ஏகாதிபத்திய முறையிலேயே இருக்கிறது. இந்தியாவின் சுயேச்சையான தொழில் வளர்ச்சி ஏகாதிபத்தியத்தின் செயல் முறைக்கு விரோதமானது. ஆகையால், இந்திய மக்களுக்குள்ள செயலார்வத்தை ஒவ்வொரு விதத்திலும் ஏகாதிபத்தியம் ஒடுக்கிவிடுகிறது. ஏகாதிபத்தியத்தின் தலையீடு இல்லாதிருந்தால் இந்திய மக்கள் மற்ற எவ்வகை இடையூறுகளையும் கடந்திருக்க முடியும். ஆகையால், தொழில் மயமாக்கும் கனவுகளும், வாக்குறுதிகளும் மிக வலிய முரண்பாடுகளுக்கு எதிராகத் தோன்றுகின்றன. ஏகாதிபத்தியம் தன் பிடியில் சிக்கிய காலனி மக்களின் பொருளாதார வளர்ச்சியை அடக்கி ஒடுக்கிவிடுகிறது.

இந்தியத் தொழில் வளர்ச்சிக்கு எதிரான நலன்களின் நேர்ப் பகைமையிலும், இந்திய மார்க்கெட்டில் குன்றிவரும் பிரிட்டிஷ் பங்கை எவ்வாறுவது ஏற்றம் பெறச் செய்ய வேண்டும் என்பதிலும் மட்டும் இந்த முரண்பாடுகள் காணப்படவில்லை; மிகப் பெரும் வறுமைவாய்ப்பட்ட விவசாய மக்கள் ஏகாதிபத்தியச் சுரண்டலுக்கு ஆளான சூழ்நிலையில் இந்தியத் தொழிலுக்கு உள்நாட்டு மார்க்கெட்டில் இருந்த தீர்க்க முடியாத பிரச்னைகளிலும் இந்த முரண்பாடுகள் காணப்பட்டன. சுங்கவரி முறை, உழைக்கும் குடியானவர்கள்மீது அதிகச்சுமை ஏற்றுவதன் மூலம் இந்த முரண்பாட்டைத் தீர்ப்பதற்குப் பதிலாக, மிகுதிப்படுத்துகிறது. ஏகாதிபத்திய ஆட்சியின் அஸ்திவாரம் போலுள்ள விவசாயப் பிரச்னையைத் தீர்த்தாலன்றி இந்தியாவின் தொழில் பிரச்னையைத் தீர்க்க முடியாது. இறுதியாக, பிரிட்டிஷ் நிதி-மூலதனத்தின் சாதுரியமான பிடியிலும் இந்த முரண்பாடுகள் உள்ளன; முக்கியமான, உயிர்நாடியான விஷயங்கள் எல்லாம் அதன் ஆட்சியில் இருப்பதால், இந்தியாவின் தொழில் முயற்சியை அது தன் விருப்பம்போல் ஆட்டிப்படைக்க முடிகிறது.

## 6. நிதி—மூலதனத்தின் நசுக்குப் பிடி

இந்தியாவுக்கு வெளியே நடக்கும் விவாதத்தில் தொழில்மயம் ஆக்கப்படுவதாய்ச் சொல்லப்படும் ஊதாரிப் பேச்சைப்பற்றியும், சுங்கவரிச் சலுகைகளைப் பற்றியும், இந்திய மார்க்கெட்டில் பிரிட்டனின் பிடிப்பு தளருவதைப் பற்றியும் அதிகமாய்க் கவனம் செலுத்தப்படுகிறதேயன்றி, உண்மையில், இந்தியப் பொருளாதாரத்தின் மீது பிரிட்டிஷ் நிதி—மூலதனத்தின் பிடி இறுகி வருவதையும், இந்திய முன்னேற்றத்திற்கு எதிராக அந்தப் பிடியை வலுவாக்கச் சுறுசுறுப்பான நடவடிக்கைகள் எடுக்கப் படுவதையும் யாரும் புரிந்து கொண்டதாய்த் தெரியவில்லை. இந்திய மூலதனம் முன்னேறியுள்ளதெனினும், பிரிட்டிஷ் மூலதனம் பாங்கு, வாணிபம், நாணயமாற்று, இன்ஷ்யூரன்ஸ், கப்பல் போக்குவரத்து, ரயில்வேக்கள், தேயிலை, காபி, ரப்பர் தோட்டங்கள், சணல் தொழில் (இத்தொழிலில் எண்ணிக்கையில் மிகுதியாயுள்ள இந்திய மூலதனம் பிரிட்டிஷார் நிர்வாகத்தில் உள்ளது) ஆகிய வலிய ஏகபோக ஆதிக்கத்தில் இருக்கிறது. அரசியல் முறை முழுவதும் இந்த ஆதிக்கத்தைக் காப்பாற்றப் பாடுபடுகின்றது. இரும்பிலும் உருக்கிலும் பிரிட்டிஷ் மூலதனத்தோடு இந்திய மூலதனம் இசைந்து போகவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இந்திய மூலதனத்தின் தாய்த் தொழிலான பருத்தித் துணித்தொழிலில்கூட ''மேலாண்மை முகமை'' முறையின் மூலம் பிரிட்டிஷ் மூலதனம் செலுத்தும் ஆதிக்கத்தின் அளவு வெளித் தோற்றத்தில் தெரிவதைவிட உண்மையில் மிக அதிகம்.

''மேலாண்மை முகமை'' முறை இந்தியாவுக்கும், ஆசியாவின் ஏனைய பகுதிகளில் உள்ள ஏகாதிபத்தியத் தொழிலுக்குமே உரித்தானது; இந்தியத் தொழில் வளர்ச்சியைப் பிரிட்டிஷ் ஆட்சியில் வைத்துக்கொள்ளப் பயன்படும் தலைசிறந்த கருவிகளில் அது ஒன்று. இந்த முறையின் கீழ், சிறு எண்ணிக்கையே உள்ள ''மேலாண்மை முகமை'' நிறுவனங்கள் பற்பல தொழில் நிறுவனங்களுக்கும் தொழில் முயற்சிகளுக்கும் மூலதனம் அளித்து, நிர்வாகம் செய்து, கணிசமான முதலீடும் செய்யும், அவற்றின் செயல்களையும் உற்பத்தியையும் ஆட்சிபுரியும். அவை உற்பத்தி செய்த பொருள்களை மார்க்கெட்டுக்குக் கொண்டு போகும், இந்தக் கம்பெனிகளின் இயக்குநர் குழுவினர் வெறும் துணையாகவோ, பெயரளவிலோ இருப்பர். லாபங்களின் பெரும்பங்கு பங்குதாரர்களுக்குக் கிட்டாது, அந்த மேலாண்மை முகமையாளர்களுக்கு-மானேஜிங் ஏஜண்டுகளுக்குப் போகும். 1927, சுங்க வாரியம் பருத்தித் துணிகள் விசாரணைக் குழுவின்முன் அளிக்கப்

பட்ட சாட்சியப்படி, 1905-25க்கு இடையிலுள்ள இருபதாண்டுகளில் பம்பாய் பருத்தி ஆலைகள் இந்த மானேஜிங் ஏஜண்டுகளுக்குத் தந்த கமிஷன் ஆண்டுதோறும் செலுத்தப்பட்ட மூலதனத்தில் சராசரி 5.2 சதவீதம் இருந்தது. அந்த மானேஜிங் ஏஜண்டுகள் ஏதாவது பங்குகள் வாங்கியிருந்தால் அவற்றுக்குக் கிடைக்கும் லாபப் பங்கு தனியாகக் கிடைக்கும்; கொள்முதல், விற்று முதலில் கிடைக்கும் கமிஷன்களும் அவர்களுக்குக் கிடைக்கும். பருத்தி ஆலைகள் நஷ்டத்தில் வேலை செய்து கொண்டிருக்க, நஷ்டத் தொகையைவிட மிகுதியாக ஆலையை நிர்வாகம் செய்யும் மானேஜிங் ஏஜண்டுகள் கமிஷன் வாங்கிக் கொண்டதற்கு சில உதாரணங்களும் உண்டு. உதாரணமாக, 1927இல் பம்பாயின் 75 பருத்தி ஆலைகளுக்கு ஏற்பட்ட நிகர நஷ்டம் ரூ. 7,36,309; மானேஜிங் ஏஜண்டுகள் எடுத்துக் கொண்ட படிகளும் கமிஷன்களும் ரூ. 50,87,477 (பி. எஸ். லோகநாதன், ''இந்தியாவில் தொழில் நிறுவனம்,'' 1935, பக். 168).

இந்திய மானேஜிங் ஏஜண்டுகளும், ஆங்கிலேய மானேஜிங் ஏஜண்டுகளும் உண்டு; ஆனால், மிக வலியவர்களும், நீண்டகாலமாய் நிறுவனம் அமைத்துக் கொண்டிருப்பவர்களும், அரசுடனும் லண்டனுடனும் இயற்கையாகவும் பயனுள்ள முறையிலும் தொடர்பு உள்ளவர்களும் ஆங்கில ஏஜண்டுகளே. ஆண்ட்ரு யூல் அண்ட் கம்பெனி, ஜார்டைன் அண்ட் ஸ்கின்னர் போன்ற கம்பெனிகள் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் வரலாற்றில் பிரிக்க முடியாத பகுதிகள். பம்பாய் பருத்தித் தொழிலைப் பொறுத்தமட்டில், 1927-இல் வெளியான ''சுங்க வாரியப் பருத்தித் துணிகள் விசாரணை அறிக்கை'', பம்பாய் பருத்தி ஆலைகளில் 99 சதவீதம் பற்றிய புள்ளி விவரங்களை ஆதாரமாய் வைத்து இயக்கு சக்திகளின் தொடர்பு பற்றி ஒரு குறிப்பிடத்தக்க விவரத்தை வெளிப்படுத்தியது. (முதல் தொகுதி; பக். 258; அனுபந்தம் XII: இந்த அநுபந்தத்தின் தகவலை ஆதாரமாய்க் கொண்டு கீழ்க்காணும் அட்டவணை தொகுக்கப்பட்டு, ''லேபர் ரிஸர்ச்'' 1928 ஜூன் மாத இதழில் அச்சாயிற்று):

பம்பாய் பருத்தி ஆலைகள்

| | ஆலைகள் | கதிர்கள் | தறிகள் | மூலதனம் (கோடி ரூ.) |
|---|---|---|---|---|
| ஆங்கிலேய மானேஜிங் ஏஜண்டுகள் உள்ள கம்பெனிகள் (9) .. | 27 | 1,112,114 | 22,121 | 9.89 |
| இந்திய மானேஜிங் ஏஜண்டுகள் உள்ள கம்பெனிகள் (32) .. | 56 | 2,360,528 | 51,580 | 9.77 |

கம்பெனிகளில் 22 சதவீதத்தை நிர்வாகம் செய்த ஆங்கிலேய மானேஜிங் ஏஜண்டுகள் ஆலைகளில் 33 சதவீதத்தையும், கதிர்களில் 32 சதவீதத்தையும், தறிகளில் 30 சதவீதத்தையும், மூலதனத்தில் 50·3 சதவீதத்தையும், அதாவது மூலதனத்தில் பெரும் பகுதியையும் உண்மையில் நிர்வகித்து வந்ததை இந்த அட்டவணையிலிருந்து அறியலாம். இந்திய மூலதனம் முன்னேற்றம் கண்டுள்ள பிரதானத் துறையான தொழிலில் உள்ள நிலைமை இது.

பின்னர் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடி மூலம் ஆலைகள் பாலிருந்த தன் பிடிப்பை மானேஜிங் ஏஜன்சிகள் விரிவாக்கிக் கொண்டன; சில அயிட்டங்கள் அவை பங்குதாரர்களையே அபகரித்துக் கொண்டன: இதைப் பற்றி மத்தியப் பாங்கிங் விசாரணைக் குழு 1931இல் பின்வருமாறு குறிப்பிடுகிறது:

> ''பம்பாய் அநுபவித்து வருவதைப் போன்ற நெருக்கடி காலங்களில், தங்கள் நிர்வாகத்திலுள்ள கம்பெனிகளில் முதலீடு செய்த வகையில் மானேஜிங் ஏஜன்டுகள் பெரு நஷ்டங்கள் அடைந்தனர் என்ற போதிலும், இந்த மானேஜிங் ஏஜண்டுகள் கம்பெனிகளுக்குத் தாங்கள் கொடுத்த கடன்களைக் கடன் பத்திரங்களாய் மாற்றியதால் கம்பெனிகளே அவர்கள் வசமாகி, பங்குதாரர்கள் அக் கம்பெனிகளில் முதலீடு செய்த மூலதனம் முழுவதையும் இழந்த சில அயிட்டங்களும் இருந்ததுண்டு.''
>
> (மத்தியப் பாங்கிங் விசாரணைக் குழு அறிக்கை, 1931, முதல் தொகுதி, பக். 279.)

இந்தியத் தொழில் மீது பிரிட்டிஷ் மூலதனத்திற்குள்ள ஆதிக்கம் இப்போதும் நீடிக்கிறது. 1946, ஜூலையில் மக்கள் மன்றத்தில் திரு. ஹக் டால்டன் அறிவித்தபடி, இந்தியாவில் பிரிட்டிஷ் முதலீடுகள் கலைக்கப்பட்டதென்னும் அதற்குச் சரியான கணக்கு கிடைக்கவில்லை. உண்மையில் அதிக முதலீடுகள் இந்தியர் கைக்கு மாறிவிடவுமில்லை. மாறாக, நேர்விரோதமான செயல் முறை—இந்தியாவில் மூலதன ஊடுருவல்—தென்பட்டு வருகிறது. வெளிநாட்டுக் கம்பெனிகள் தங்கள் கிளைகளை இந்தியாவில் பதிவு செய்து இந்தியாவில் தொடங்கியுள்ளன. லீவர் பிரதர்ஸ், டன்லப், இம்பீரியல் கெமிகல்ஸ் ஆகிய மாபெரும் நிறுவனங்களுக்கு இந்தியக் கிளைகள் உள்ளன. இம் மாதிரி ''இந்தியா லிமிடெட்களின்'' எண்ணிக்கை நாள்தோறும் கூடி வருகிறது. மத்தியச் சட்ட மன்றத்தின் 1945ஆம் ஆண்டு பட்ஜட் கூட்டத்தின்போது இந்திய அரசாங்கத்தின் வாணிப உறுப்பினர்

பேசுகையில், பிரிட்டிஷ் இந்தியாவுக்கு வெளியே பதிவு செய்யப் பட்ட ஐந்து கம்பெனிகள் தங்கள் பெயர்களின் கடைசியில் ''இண்டியா லிமிடெட்'' என்ற சொற்களைச் சேர்த்துக்கொண்டு 1942-43 முடிய நாலாண்டில் இந்தியாவில் தங்கள் வியாபார நிறுவனங்களை அமைத்ததாய் அறிவித்தார். மேலும், 1943-44 உடன் முடிவாகும் ஐந்தாண்டுகளில், தொழிலின் ஒவ்வொரு துறையிலும் ஈடுபட்ட 108 ''இண்டியா லிமிடெட்கள்'' இந்தியாவில் பதிவு செய்யப்பட்டன. பேராசிரியர்கள் வாடியாவும் மர்ச்சன்டும் குறிப்பிடுவதுபோல், ''பெரும் மூலதனத்துடன் இந்தியரல்லாதாருக்குச் சொந்தமான தொழிற்சாலைகள் பிரமாண்டமான அளவில் நெருப்புக் குச்சிகள், சிகரெட்டுகள், சோப்புகள், காலணிகள், ரப்பர், ரசாயனப் பொருள்கள் முதலியவற்றை உற்பத்தி செய்யத் தொடங்கி இந்தியக் கம்பெனிகளை நாசமாக்கி விட்டன. அவை பெருவாரி தொழில்களுடன் மட்டும் போட்டி இடவில்லை; நம் (இந்தியாவின்) சிறு தொழில்களையும் பயன்படுத்துகின்றன'' (வாடியாவும் மர்ச்சண்டும் எழுதிய நூல்: ''நம் பொருளாதாரப் பிரச்னை,'' 1945, பக். 466).

இந்த ''இண்டியா லிமிடெட்''களால் இந்தியத் தொழிலுக்கு அபாயம் அதிகரித்து வருவதைப் பற்றி, பம்பாய் தொழில், பொருளாதார விசாரணைக் குழுவினர் 1940 இல் வெளியிட்ட அறிக்கையில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள்:

> ''சிறு தொழிலகங்களை ஊக்கப்படுத்துவதே நம் தொழிற் கொள்கையின் நோக்கம் எனில், அந்த நோக்கம் முறியடிக்கப் பட்டுவிட்டது... நியாயமான, பயனுள்ள வரையறை இல்லாமல் இந்தப் பெரிய வெளிநாட்டுக் கம்பெனிகள் செயல்பட அனுமதிக்கப்பட்டால்....''
>
> (அறிக்கை, 1940, பக். 168)

ஆயினும், பிரிட்டிஷ் நிதி-மூலதனத்தின் ஆட்சிப் பலத்திற்கு மிக முக்கியமான துணையாக, அரசாங்கத்தின் நிதி, நாணய மாற்றுக் கொள்கையை ஒட்டிச் செயல்படும் வெளிநாட்டுப் பாங்கு முறை பணியாற்றுகிறது. நிதி பலம் பிரிட்டிஷாரின் ஏகபோகமாக இருக்கும் வரை சுயேச்சையான இந்திய முதலாளித்துவ வளர்ச்சிப் பற்றின பேச்சு வெறும் பிரமையாகவே இருக்கிறது, இருக்க முடியும்.

இந்தியாவில் நவீன பாங்கிங் முறை நான்கு வகைகளாக, அல்லது நிறுவனங்களின் தொகுதிகளாக அமைக்கப்படுகிறது:

(1) 1934 ஆம் ஆண்டுச் சட்டப்படி நிறுவப்பெற்ற 1935 முதல் இயங்கிவரும் ரிசர்வ் பாங்கு கோபுரத்தின் உச்சி முனை

யாகும். பாங்க் ஆப் இங்கிலாண்ட் போல இந்தப் பாங்கும் தனியார்களுக்குச் சொந்தமானது, நிர்வாகம் செய்யப்படுவது. ஆனால், செலாவணி நாணயங்களை வெளியிடுவதும், நாணய மாற்றைச் சீர் செய்வதும், அரசின் பாங்கு, பணமனுப்புப் பணிகளைக் கவனிப்பதும் அதன் பொறுப்பாகும்; இவ்வாறு, இங்கிலாந்து பாங்கு போலவே இந்தப் பாங்கும் நாணயத்தை ஆளுகிறது. இந்தப் பாங்குக்கு ஓர் ஆளுநரும், இரண்டு உதவி ஆளுநர்களும், ஐந்து இயக்குநர்களும் அரசாங்கத்தினால் நியமிக்கப் படுகின்றனர். ஆனால் இந்த எண்மரில் அறுவருக்கே வாக்குரிமை உண்டு; அரசால் நியமனம் பெற்ற இந்த ஆறு வாக்குகளுக்கு எதிராக, எட்டு வாக்குகளுள்ள எட்டு இயக்குநர்கள் தனியாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இவ்வாறு, அரசியல் ஆட்சியிலிருந்து அது சட்டத்தால் பாதுகாக்கப்படுகிறது. இந்திய அரசாங்கச் சட்டம் தோன்றிய அதே சமயம் 1935 இல் இந்தப் புதிய மத்திய பாங்கு நிறுவனம் அமைக்கப்பட்டதன் நோக்கம் என்ன? அரசியல் நிர்ணயச் சீர்திருத்தம் வழங்குவதன் மூலம் மத்திய அரசில் இந்தியக் கருத்து ஓரளவு வெளிப்பட நேர்ந்தாலும், நிதி அதிகாரம் இந்தியர்களுக்கு எட்ட முடியாத கோட்டையாக இருக்க வேண்டும் என்பதே அந்த நோக்கம்; அல்லது, லண்டன் டைம்ஸ் (பிப்ரவரி 11, 1928) கூறுவது போல், "நாணயமும் நாணயச் செலாவணியும் அரசியல் செல்வாக்கிற்கு உட்படாமல் முற்றிலும் சுயேச்சையாக இருக்க வேண்டும்." இயக்குநர்கள் குழுவில் பெரும்பான்மை உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்பது வெறும் அலங்கார வேலை என்பதையும், உண்மையான அதிகாரம் அரசின் கையிலேயே உள்ளது என்பதையும், போரின்போது ரிசர்வ் பாங்கு ஏகாதிபத்தியக் கொள்கையின் கருத்துக்குப் பணிந்து, அரசாங்கத்தின் ஒரு துறையாகச் செயல்பட்டதிலிருந்து தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். ரிசர்வ் பாங்கின் முதல் பத்தாண்டுப் பணிகளை விமர்சித்து ஈஸ்டர்ன் எகனமிஸ்ட் எழுதுகிறது:

> "அரசாங்கம் தனக்காகச் செய்த முடிவுகளை கூட்டியாக நிறைவேற்றும் கடமையை ரிசர்வ் பாங்கு இவ்வாறு வியத்தகு முறையில் புரிந்துள்ளது...கிடைத்துள்ள எல்லா சாட்சியத்தைக் கொண்டும், நியாயமான அனுமானத்தின் பேரிலும், ரிசர்வ் பாங்கின் மையக் குழுவுக்கு முழு அளவுப் பொறுப்பு இல்லை என்றுதான் நாம் கூற வேண்டியுள்ளது...அரசியல் ஆதிக்கத்திலிருந்து அல்ல, மக்களின் ஆதிக்கத்திலிருந்து பாங்கு சுயேச்சையாக இருக்க வேண்டும் என்பதே அரசாங்கத்தின் உண்மையான நோக்கம்."
>
> (ஈஸ்டர்ன் எகனமிஸ்ட், மே, 25, 1945)

(2) 1920 இல் நிறைவேற்றப்பட்ட சட்டத்தின் மூலம் நிறுவப்பட்ட இம்பீரியல் பாங்கு மூன்று முன்னாள் மாகாணப் பாங்குகளை இணைத்து உருவாக்கப்பட்டு, 1921 முதல் செயல்பட்டு வருகிறது. சட்டபூர்வமாக நிறுவப்பட்டாலும் இதுவும் தனியார் உடமையாக, தனியார் நிர்வாகத்தில் உள்ளது; இதற்கு அதிகார பூர்வமான மூலதனம் £ 90 லட்சம். ஆரம்பத்தில் செலாவணிப் பணத்தை வெளியிட்டு, அரசாங்கத்தின் வாணிப அலுவல்களைக் கவனிக்கும், பணியாற்றும் மைய வங்கியாக இது திட்டமிடப் பட்டது. 1934 ஆம் ஆண்டு சட்டத் திருத்தத்தின்படி, வாணிபப் பணிகளைச் செய்வதுடன், ரிசர்வ் பாங்குடன் சேர்ந்து பணியாற்று கிறது. சுமார் நானூறு கிளைகளும் உதவி நிறுவனங்களுமுள்ள இந்தப் பாங்கு வசம் இந்தியாவின் எல்லா பாங்குகளின் வைப்புத் தொகையில் மூன்றில் ஒரு பகுதி இருக்கிறது; இந்தியப் பாங்குத் தொழிலில் இதன் ஆதிக்கம் ஓங்கியிருக்கிறது. 1936 ஆம் ஆண்டு இயக்குநர் குழுவில் பதினொரு பேர் ஆங்கிலேயர்கள், நால்வர் இந்தியர்கள்.[1]

(3) நாணயமாற்று பாங்குகள், அல்லது இந்தியாவிலுள்ள ஆங்கிலேய, அல்லது, வெளிநாட்டுத் தனியார் பாங்குகள் இவற்றின் தலைமை அலுவலகங்கள் இந்தியாவுக்கு வெளியே உள்ளன; முற்றிலும் இந்தியரல்லாத தன்மை வாய்ந்தவை.[2] ஏற்றுமதி, இறக்குமதி வாணிபத்தின் நிதி நிர்வாகம் இவற்றின் வசம் உள்ளது. 1943 இல் இம்மாதிரிப் பாங்குகள் 16 இருந்தன; சார்டர்டு பாங்க் ஆப் இண்டியா, ஆஸ்டிரேலியா அண்ட் சைனு தி மெர்க்கென்டைல் பாங்க் ஆப் இண்டியா, தி நாஷனல் பாங்க் ஆப் இண்டியா, தி ஹாங்காங் அண்ட் ஷாங்காய் பாங்கிங் கார்ப்பரேஷன், லாயிட்ஸ் பாங்க் ஆகியவை மிக முக்கியமானவை. இந்தியாவின் பாங்கு வைப்புத் தொகையில் ஐந்தில் ஒரு பகுதி இவற்றிடம் உள்ளன.

(4) இந்தியப் பங்கு முதலீட்டுப் பாங்குகள் அல்லது, இந்தியாவில் பதிவு செய்யப்பட்ட தனியார் பாங்குகள், கோபுரத்தின் அடிப்பகுதியாகின்றன. இங்கு மட்டுமே இந்திய

1. 1930 இல் இம்பீரியல் பாங்கின் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் மொத்தம் 5·625 கோடி ரூபாய்கள்; இந்தியரல்லாதார் பங்கு 2·84 கோடி ரூபாய்கள்; "இந்தியரின்" பங்கு 2·78 கோடி ரூபாய்கள். இந்த பாங்கின் நிர்வாக இயக்குநர் மத்திய பாங்கிங் விசாரணைக் குழுவிடம் தந்த தகவல் இது- (அறிக்கை, இரண்டாம் தொகுதி; பக். 264.) இதனால் 'இந்தியரல்லாதாருக்கு' முழு பெரும்பான்மை கிடைக்கிறது; உண்மையில் செல் பதவிகளில் உள்ள ஆங்கிலேயர்களிடம் உள்ள குறைந்த பங்குகளைக் கொண்டே இப்போதுள்ள ஆங்கிலேய ஆதிக்கத்தை மையாகப் பெறலாம்.

2. 1936 இல் சென்டிரல் பாங்கு, மத்திய நாணய மாற்றுப் பாங்கு நிறுவியதுதான் இத்துறையில் இந்தியர்கள் செய்த முதல் முயற்சி.

மூலதனம் செயல்பட முடிகிறது; ஆனால், இங்குகூட, மிகப் பெரிய பாங்குகளில் ஒன்றும், சார்டர்ட் பாங்க் ஆப் இண்டியா, ஆஸ்டிரேலியா அண்ட் சைனாவுடன் இப்போது இணைந்து இயங்கு வதுமான அலஹாபாத் பாங்கு போன்ற சில பாங்குகள் அந்நியர் நிர்வாகத்தில் வீழ்ந்துவிட்டன. ஆகையால், அவற்றின் மொத்த எண்ணிக்கையை இந்திய பாங்குகளின் எண்ணிக்கையாகக் கொள்ளக்கூடாது. அவை பல சிரமங்களைச் சமாளிக்க வேண்டி யிருந்தன. பல தோல்விகளைச் சந்திக்க வேண்டியிருந்தன; தி பீபிள்ஸ் பாங்க் ஆப் இண்டியா, தி இண்டியன் ஸ்பீசீ பாங்க், அல்லயன்ஸ் பாங்க் ஆப் சிம்லா ஆகியவற்றின் தோல்விகளைக் குறிப்பிடலாம். 1922க்கும் 1928க்கும் இடையில் 100 இந்தியப் பாங்குகள் முறிந்தன (எகனமிஸ்ட், 12, 1930).

பாங்குகளின் மூன்று தொகுதிகள்—இம்பீரியல் பாங்க் (1921க்கு முன் மூன்று மாகாண பாங்குகள்), நாணயமாற்று பாங்குகள்,இந்தியப் பங்கு முதலீட்டுப் பாங்குகள்——வசம் 1913, 1920, 1934 ஆண்டுகளில் இருந்த வைப்புத் தொகைகளின் அளவு வீதம் பின்வரும் அட்டவணையில் தெரிகிறது:

பாங்கு வைப்புத் தொகைகள்
(கோடிக் கணக்கான ரூபாய்களில்)

| | இம்பீரியல் பாங்க் (அல்லது மாகாண பாங்குகள்) | | நாணய மாற்று பாங்குகள் | | இந்திய பங்கு முதலீட்டு பாங்குகள் | |
|---|---|---|---|---|---|---|
| | தொகை | சதவீதம் | தொகை | சதவீதம் | தொகை | சதவீதம் |
| 1913 | 42·4 | 43·5 | 31·0 | 31·8 | 24·1 | 24·7 |
| 1920 | 87·0 | 36·9 | 74·8 | 31·6 | 73·5 | 31·6 |
| 1934 | 74·9 | 33·6 | 71·4 | 32·0 | 76·8 | 34·4 |

இம்பீரியல் பாங்க், நாணய மாற்று பாங்குகள் ஆகிய ஆங்கிலேயர்கள், வெளிநாட்டாருடைய பாங்குகளின் ஆதிக்கமே ஓங்கியிருப்பதைக் காணலாம். மேலும், இந்தியப் பங்கு முதலீட்டுப் பாங்குகளின் மொத்த வைப்புத் தொகைகளில் நாலில் ஒரு பகுதி யிலிருந்து மூன்றில் ஒரு பகுதியாக உயர்ந்தது 1913க்கும் 1920க்கும் இடையில்தான். அப்பால், இந்தியப் பங்கு முதலீட்டுப் பாங்குகள் மெதுவாக முன்னேறத் தொடங்கின. இவற்றில் சில அந்நியர் ஆட்சிக்குச் சென்று விட்டதை நீக்கிப் பார்த்தாலும், இந்திய மூலதனத்தின் நோக்கில் அவை உண்மை யில் பின்னடைந்தன எனலாம்.

போர் வருடங்களிலும் நிலைமை அதிகமாய் மாறவில்லை. 1938க்குப் பின் இந்த மூன்று பாங்குத் தொகுதிகள் வசமிருந்த வைப்புத் தொகைகளை ஒப்பிட்டுப் பார்ப்போம்:

வைப்புத் தொகைகள்[1]
(கோடிக் கணக்கான ரூபாய்களில்)

| | 1938 | 1941 | 1942 | 1943 |
|---|---|---|---|---|
| 1. இம்பீரியல் பாங்கு | 81·51 | 108·92 | 163·46 | 214·53 |
| 2. நாணய மாற்று பாங்குகள் | 67·20 | 106·73 | 116·85 | 140·19 |
| வெளிநாட்டு பாங்குகள் மொத்தம் | 148·71 | 215·65 | 280·31 | 354·72 |
| 3. ஷெட்யூல்ட் பாங்குகள் | 91·87 | 129·04 | 189·34 | 319·65 |
| 4. ஷெட்யூல்ட் அல்லாத பாங்குகள் | 14·94 | 20·05 | 29·01 | 40·23 |
| இந்தியப் பங்கு முதலீட்டுப் பாங்குகள் மொத்தம் | 106·81 | 149·09 | 218·35 | 359·88 |

முழு இந்தியப் பங்கு முதலீட்டுப் பாங்குத் தொழில் மீது இம்பீரியல் பாங்கும் நாணய மாற்று பாங்குகளும் செலுத்திவந்த ஆதிக்க நிலையை மேற்கண்ட அட்டவணையிலிருந்து அறியலாம். 1943 இல் தான் இந்தியப் பாங்குகள் விசை கொண்டு இயங்கி, அவற்றின் வைப்புத் தொகைகள் இம்பீரியல், நாணய மாற்று பாங்குகளின் வைப்புத் தொகைகளை விட சுமார் $1\frac{1}{2}$ சதவீதம் கூடுதலாயின. இந்தியப் பாங்குத் தொழில் மீது பிரிட்டிஷாருக்குள்ள நிர்வாக அதிகாரத்தை இந்தியாவின் தொழில் வளர்ச்சிக்கும் சுதந்திரமான பொருளாதார வளர்ச்சிக்கும் விரோதமாகவும், பிரிட்டிஷாரின் நலன்களுக்குச் சாதகமாகவும் பயன்படுத்துவதாய் இந்தியத் தொழிலதிபர்கள் பலமாய்க் குற்றம் சாட்டுகிறார்கள். வெளிநாட்டு மூலதனக் குழுவின் அறிக்கையுடன் இணைக்கப்பட்ட டி. ஸி. கோஸ்வாமியின் வாக்குமூலத்தை உதாரணமாய்க் கூறலாம்.

''கடன் வசதிகள் செய்து தருவதில் இனப்பாகுபாடும் அரசியல் பாகுபாடும் காட்டப்படுவதாய் மக்களுக்கிடையில்

1. ரிசர்வ் பாங்க் வெளியீடு, "1942, 1943 ஆண்டுகளுக்கு, இந்தியா, பர்மா பாங்குகளைப் பற்றின புள்ளிவிவர அட்டவணைகளிலிருந்து" இந்த அட்டவணையிலுள்ள தகவல்கள் திரட்டப்பட்டன.

ஒரு நம்பிக்கை நிலவி வருகிறது. அதற்கு உண்மையான ஆதாரங்கள் இருப்பதை நான் அறிவேன். இந்தியர்கள் தங்கள் சொத்துகளுக்கு ஏற்ற கடன் வசதிகளைச் சாதாரணமாய்ப் பெறுவதில்லை. ஆனால், வர்த்தகக் கொள்கைகளுக்கு ஒவ்வாத விதத்தில் பிரிட்டிஷ் வியாபாரிகள் அதிகப்படியான கடன் வசதிகளை அடிக்கடி அநுமதிக்கப்படுகிறார்கள்.''

(டி. ஸி. கோஸ்வாமி: வெளிநாட்டு மூலதனக் குழுவின் அறிக்கையுடன் இணைக்கப் பெற்ற குறிப்பு, பக். 24.)

இந்திய மத்திய பாங்கில் விசாரணைக் குழுவின் சிறுபான்மையோர் அறிக்கை இந்தக் குற்றச்சாட்டை உறுதி செய்தது. அதைப் பெரும்பான்மையோர் அறிக்கை பொருள் பொதிந்த மௌனத்துடன் பதிவு செய்து கொண்டு, ''முழுமையான தகவல் இல்லாமையால்'' தீர்ப்பு சொல்வதை நிறுத்தி வைத்துக் கொண்டது:

''கடன் வசதிகளுக்கான விண்ணப்பங்களைப் பரிசீலனை செய்கையில் இனப்பாகுபாடு செய்யப்படுவதாய் இம்பீரியல் பாங்கு அதிகாரிகளைப் பற்றிச் சில குற்றச்சாட்டுகள் செய்யப் பட்டுள்ளன. பாங்கின் ஐரோப்பிய நிர்வாகிகள் தங்கள் வாழ்க்கை முறை காரணமாகவும் சமூகப் பழக்கவழக்கங்கள் காரணமாகவும் இந்தியர்களைவிட ஐரோப்பிய வாடிக்கைக் காரர்களுடன் அதிகமாய் நெருங்கிப் பழக வாய்ப்புகள் இருக்கின்றன என்றும், அதனால், இந்த நேர்த் தகவலாலும் நேர்த் தொடர்பாலும் ஐரோப்பியக் கம்பெனிகள் இந்தியக் கம்பெனிகளை விடச் சாதகமான முறையில் நடத்தப் படுகின்றன என்றும் சொல்லப் படுகிறது.

''இந்தியக் கம்பெனிகளை விட ஐரோப்பியக் கம்பெனிகளுக்குப் பாங்கு தாராளமாகக் கடன் தருகிறது என்றும், பாங்கின் உதவி ஏற்ற பல இந்தியக் கம்பெனிகள் கசப்பான அநுபவம் பெற்றன என்றும் மேலும் பொதுவாக நம்பப்படுகிறது. இந்தியரல்லாதார் கம்பெனிகளுக்குப் பாங்கின் முழு உதவி கிடைக்கிறது என்றும், இந்தியக் கம்பெனிகளுக்கு அளிக்கப்படும் உதவி மிகக் கொஞ்சம் என்றும், கம்பெனியின் தேவைக்குத் தக்க உதவி அளிக்கப்படுவதில்லை என்றும் சொல்லப்பட்டது. இந்தியர் கம்பெனிகளுக்கும், இந்தியர் அல்லாதார் கம்பெனிகளுக்கும் வழங்கப்பட்ட கடனுதவிகளைப் பற்றின தகவல்கள் இம்பீரியல் பாங்கின் உதவியால் நமக்குக் கிடைத்தன. ஒவ்வொரு கம்பெனியையும் பற்றி முழுமையான

தகவல் இல்லாமையால் இந்தக் குற்றச்சாட்டை நாம் பரிசீலனை செய்ய முடியவில்லை.''

(இந்திய மத்திய பாங்கிங் விசாரணைக் குழு பெரும் பாலோர் அறிக்கை, 1931, முதல் தொகுதி, பக். 271-2.)

அது போலவே, அரசாங்கத்தால் 1925 இல் நியமிக்கப்பட்ட இந்தியப் பொருளாதார விசாரணைக் குழுத் தலைவரான சர் எம். விசுவேசுவரய்யா எழுதுகிறார்:

''இந்தியாவில் தொழில்களைத் தொடங்குவதற்குள்ள முக்கியமான கஷ்டங்களில் ஒன்று, நிதி. நாட்டின் பணபலம் அரசாங்கத்தின் ஆட்சியில் உள்ளது; அரசாங்கமோ தொழில் கொள்கைகளைப் பற்றினவரை இந்தியத் தலைவர்களோடு ஒத்துப் போகாததால் இந்த நிலைமை தோன்றுகிறது. இந்திய வர்த்தகர்களின் நிர்வாகத்தில் உள்ள பாங்குகள் மிகச் சில. பெரிய பாங்குகளில் பல அரசாங்கச் செல்வாக்குக்கு உட்பட்டவையாகவோ, அல்லது, பிரிட்டிஷ், வெளிநாட்டுப் பாங்குகளின் கிளைகளாகவோ உள்ளன.''

(சர் எம். விசுவேசுவரய்யா: ''இந்தியாவுக்குத் திட்ட மிட்ட பொருளாதாரம்,'' 1934, பக். 95.)

## 7. நிதி—மூலதனமும் இரண்டாம் உலகப்போரும்

சுதந்திரமான இந்தியத் தொழில் வளர்ச்சியை ஒடுக்கும் வகையில் பிரிட்டிஷ் நிதி—மூலதனத்தின் ஆதிக்கம் நவீனகாலத்தில் வன்மையாக நிலைநாட்டப்பட்டுள்ளதை மேலே கூறியுள்ளவற்றி லிருந்து காணலாம். இரண்டாம் உலகப் போரும், அதன் விளை வாக இந்தியாவை ஒரு முக்கிய ஆயுதத் தளமாக்க வேண்டிய சாத்தியக் கூறும் தேவையும் கூட ஏகாதிபத்தியத்தின் போக்கில் மாறுதல் உண்டாக்கவில்லை. போர்க்காலம் முழுவதிலும் இந்தியா தொழில் மயமாகாமல் தடுப்பதே பிரிட்டனின் கொள்கையாக இருந்தது. 1945 ஆகஸ்ட், 31 இல் ஈஸ்டர்ன் எகனமிஸ்ட் எழுதியது:

''நாம் ஒவ்வொன்றையும் செய்ய முடியும், எதையும் செய்யாமல் இருக்கவும் முடியும். நாம் எதையும், ஒவ்வொன்றை யும் சப்ளை செய்பவர்களாகவும், உலகத்திலுள்ள எல்லா பொருள்களையும் பழுதுபார்ப்பவர்களாகவும் திருத்துபவர் களாகவும் இருந்தோம். ஆனால், எதையும் படைப்பவர்களாக இல்லை. நமக்கு முறையோ திட்டமோ கிடையாது. அல்ல, ஒரு திட்டம் இருந்தது—செம்மையாகவும் செவ்வையாகவும்

வகுக்கப்பட்ட திட்டம்: போருக்குப் பிந்தின காலத்தில் இந்த நாடு தொழில் மயமாகாமல் தடுப்பதே அது.''

ஆயினும், போர்க் காலத்தில் தவிர்க்க முடியாத வகையில் ஓரளவு சுறுசுறுப்பாகத் தொழில் வளர்ச்சி ஏற்பட்டது. இந்தியத் தொழிற்சாலைகளில் பணியாற்றிய தொழிலாளர்களின் எண்ணிக்கை (அரசின் போர்த் தளவாடத் தொழிற்சாலைகள் முதலியவை எல்லாம் உள்பட) 1939 இல், 1,751,137 ஆக இருந்தது, 1944 இல் 2,520,000 ஆக உயர்ந்தது. பிரிட்டிஷ் இந்தியாவில் பங்கு முதலீட்டுக் கம்பெனிகளின் செலுத்தப்பட்ட மூலதனம் 1939-40 இல் ரூ 288•5 கோடியாக இருந்தது, 1943-44 இல் ரூ 329•2 கோடியாக உயர்ந்தது. தொழில் இயக்கத்தின் அட்டவணை (இந்தியாவில் பிரிட்டிஷ் நிதி நலன்களின் வார ஏடாகிய காபிடல் மாதவாரியாகக் கணக்கிட்டது) 1939-40 இல் 114·0 ஆக இருந்தது மே, 1945 இல் 120·5 ஆக ஐரோப்பியப் போரின் முடிவின் போது உயர்ந்தது; மிக அதிக உயர்வு 132.1, ஜனவரி 1945 இல் காணப்பட்டது. சில வகைப் பொருள்களின் உற்பத்தியும் மிகுந்தது. காகித உற்பத்தி போருக்கு முந்தின ஆண்டுகளில் 59,000 டன்களாக இருந்தது, 1943-44 இல் 90,000 டன்களாக ஏறியது (பின்னர் 1944-45 இல் 75,000 டன்களாய்க் குறைந்தது.) ஆலைத் துணி உற்பத்தி 380 கோடி கஜங்களிலிருந்து 470 கோடி கஜங்களாய்ப் போர்க் காலத்தில் அதிகமாகியது. (ஈஸ்டர்ன் எகனமிஸ்ட், 4, ஜனவரி, 1946.) போர் ஊக்கத்தால் இரசாயனப் பொருள்கள் முதலியவற்றின் உற்பத்தியும் கூடியது. உருக்கின் வருட உற்பத்தி 1939 இல் 750,000 டன்களாயிருந்தது, 1943—44 இல் 1,125,000 டன்களாக உயர்ந்தது. சிறப்பான உலோகக் கலப்பு உருக்கு, அமில உருக்கு போன்ற புது உருக்கு வகைகள் முதன் முதலாக உற்பத்தி செய்யப்பட்டன. வான ஊர்திகள், கப்பல்கள் முதலியவற்றைப் பழுதுபார்க்கும் பணிகளும் ஓரளவு மேற்கொள்ளப்பட்டன.

ஆனால், இந்திய வர்த்தகர் கழகங்களின் கூட்டுக் கழகத் தலைவர் சர் பத்ரிநாத் கோயங்கா குறிப்பிட்டுள்ளது போல், போர்க்காலத்தில் இந்தியாவில் ஏதாவது உற்பத்திப் பெருக்கம் ஏற்பட்டுள்ளது என்றால், ''உள்ள இயந்திரங்களையும் தளவாடங்களையும், மனித மணிநேரத்தையும், பொறுப்பின்றி அதிகமாய்ப் பயன்படுத்தியதாலும், போரில் ஈடுபட்டுள்ள மற்ற நாடுகள் செய்தது போல் உற்பத்தி சக்தியை மிகுதியாக்க யாதொரு ஏற்பாடும் செய்யாமலும் இருந்ததே காரணம். மிகச் சிறு அளவே இதற்கு விதிவிலக்காய்க் கூறலாம்.'' (ஈஸ்டர்ன் எகனமிஸ்ட், மார்ச் 5, 1946.)

போருக்கு முன்னுல், இந்தியத் தொழில் உள்ள சக்தியை முழு அளவு பயன்படுத்த முடியாமல் துன்புற்று வந்தது. உதாரண மாக, சணல் தொழிலில் நாலில் மூன்று பாகம் அல்லது மூன்றில் இரண்டு பாகம் அதிகப்படி சக்தி இருந்தது. பம்பாய் ஆலை அதிபர்கள் கழகத்தின் ஒரு மதிப்பீட்டின்படி, நாட்டில் தயார் நிலையில் உள்ள 389 பருத்தி ஆலைகளில் 22 ஆலைகள் 1939 உடன் முடிவாகும் ஆண்டில் ஓரளவோ, முற்றிலுமோ சோம்பிக் கிடந்தன.'' (பி. ஸி. ஜெயின் ''இந்தியா தன் போர்ப் பொருளா தாரத்தை உருவாக்குகிறது''; 1943 பக். 4.) போர்க் காலத்தில் முதன் முதலில் இந்த அதிகப்படி உற்பத்தி சக்தி பயன்படுத்திக் கொள்ளப்பட்டது; அப்பால், மேலும் மேலும் அதிகரித்த வேலைப் பளு இயந்திரங்கள் மீது சுமத்தப்பட்டது. முதற் பொருள்களின் இறக்குமதிகளே நடைமுறையில் அநுமதிக்கப்படவில்லை; புதிய தொழில்களைத் தொடங்குவதற்கு மட்டுமல்ல, இருக்கின்ற தொழில்களை புதுப்பிக்கத் தேவையான பொருள்களை இறக்குமதி செய்வதற்கும் அநுமதி வழங்கப்படவில்லை. அதனுல் ஏற்பட்ட கஷ்டத்தைச் சில உதாரணங்களால் விளக்கலாம். ரயில் போக்கு வரத்தை எடுத்துக் கொள்வோம். போருக்கு முந்தின காலத்தோடு ஒப்பிட்டால் இப்போது பயணிகள் வண்டி 32 சதவீதமும், சரக்கு வண்டி $8\frac{1}{2}$ சதவீதமும் அதிகப் பளுவை ஏற்றிக் கொண்டன; பணிமனைக்குத் திரும்புமுன் எஞ்சின்கள் போருக்கு முந்தின காலத்தைவிட இரண்டு மடங்கு தூரம் ஓடவேண்டியிருந்தது; சுமார் 29 சதவீதம் வயதான எஞ்சின்களும், பெரும் எண்ணிக்கையில் வயதான வண்டி களும் மாற்றப்படாமலே பயன்படுத்தப்பட்டன, (ஈஸ்டர்ன் எகனுமிஸ்ட், பிப்ரவரி, 15, 1946.) பருத்தித் துணித் தொழிலைப் பார்ப்போம். இன்று நெசவு இயந்திரங்களில் 50 சதவீதம் மாற்றப்பட வேண்டிய நிலையில் உள்ளன. உதாரணமாக, தொழிலில் இப்போது பயன்படும் பருத்தி கலந்து சுத்தம் செய்யும் அறை இயந்திரங்களில் 11·5 சதவீதம் 1890க்கு முன்னுலும், 11·1 சதவீதம் 1906-10க்கு இடையிலும், 18·6 சதவீதம் 1921-25க்கு இடையிலும், 11·4 சதவீதம் 1936-40க்கு இடை யிலும் பொருத்தப்பட்டவை; இப்போதுள்ள இழைவை, விசை யந்திரங்களில் 35 சதவீதம் 1910க்கு முன்னுல் அமைக்கப்பட்டவை (ஈஸ்டர்ன் எகனுமிஸ்ட் 7, ஜூலை, 1944.) இந்தப் பழைய சாமான்கள் தாம் கடுமையான போர்த் தேவைகளைச் சமாளிக்க வேண்டியிருந்தது. கப்பல்களில் இடமில்லை என்று பொய்க் காரணம் கூறியும், மூலதனப் பொறுப்பை அடக்கியாளுதல் போன்ற முறைகளிலும் அரசாங்கம் இந்தியாவில் போர்க்காலத்தில் முதற்பொருள்கள் நுழைய முடியாமல் பார்த்துக் கொண்டது.

போர் முயற்சிகளை நாசமாக்கும் அபாயத்தையும் கவனியாமல், நாட்டின் பெரும்வளங்களை[1]ப் பயன்படுத்திக் கொள்ளத் தீவிரமான முயற்சி யாதும் செய்யப்படவில்லை. இயந்திரத்தை இறக்குமதி செய்ய வசதிகள் தராமலும் ராணுவக் கொள் முதலுக்கு உறுதி அளிக்காமலும் மோட்டார் கார் தொழிலையும் கப்பல் கட்டும் தொழிலையும், நிறுவவிடாமல் தடை செய்தது மட்டுமல்ல; அமெரிக்கத் தொழில்நுட்பத் தூது கோஷ்டியின் (இக் கோஷ்டியும் நீர்மின் திட்டங்கள், ஆகாய விமானம், கப்பல் கட்டும் தொழில்கள்; பிராட்கேஜ் ரயில்கள் கட்டுதல் போன்ற ஆதாரத் தொழிலை ஏற்படுத்துவதற்குத் தன் உறுதியான, தீர்மானமான எதிர்ப்பைத் தெரிவித்தது.) சிபாரிசுகளையும் இந்திய அரசு ஏற்கவில்லை.

''பெரிதும் சிறிதுமான பழுதுகளைத் திருத்திக் கொள்வதற்காக 100க்கு மேற்பட்ட கப்பல்கள் துறைமுகத்தில் காத்திருக்கையில், பம்பாயிலுள்ள கப்பல்களைப் பழுதுபார்க்கும் தொழிற்சாலை ஒன்றில் குதிரை லாடங்களும், ராணுவப் பூட்சுக்கு உருக்கு முனையும், ரயில்பாதையின் சுவிட்ச் கீயரும் தயாரிக்கப் படுவதை'' அமெரிக்கத் தொழில் நுட்பத் தூது கோஷ்டி கண்டது (அதன் அறிக்கை: பக். 3) எல்லாத் தொழில்களிலும் அபிவிருத்தி செய்யப்பட வேண்டும் என்பதுடன் ''மீட்டர் கேஜ் ரயில் வண்டிகள், சரக்கு வண்டிகள், மற்ற தேவையான ரயில் வண்டி வகைகள்'' உற்பத்தி செய்யப்பட வேண்டும் என்று தூது கோஷ்டி சிபாரிசு செய்தது. கப்பல்களும் வான ஊர்திகளும் உரிய முறையில் பழுது பார்க்கப்பட வேண்டும் என்றும் அது சிபாரிசு செய்தது. தூதுக் குழுவினர் கூறினார்கள்:

> ''அமெரிக்காவிலிருந்து ஓரளவு பொருள்களையாவது கடன்—வாடகைத் திட்டத்தின்கீழ் வாங்கி, இந்த நாட்டுத் தொழில் நுட்பப் பணியாளர்களின் ஆலோசனை பேரில் இந்தியப் பொருளுற்பத்தி பெருக்கப்பட வேண்டும்.''
>
> (அமெரிக்கத் தொழில் நுட்பத் தூது கோஷ்டியின் அறிக்கை, பக். 6.)

---

1. இது சம்பந்தமாய் அமெரிக்கத் தொழில்நுட்பத் தூதுக் குழுவின் கருத்துகள் கவனிக்கத் தக்கவை. அவர்களுடைய அறிக்கையின் இறுதிப் பாராவில், 'மிகுந்த இயற்கை வளமும் மனித வளமும் காரணமாக இந்தியாவுக்குள்ள தொழிலுற்பத்திச் சக்தி''யின்பால் கவனம் செலுத்தக் கோருகிறது போதுமான கருவிகள் கிடைக்குமாறு செய்தால் இந்தியாவின் இயற்கை வளங்களைப் பெரிதும் அபிவிருத்தி செய்து விரிவாக்கிப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று தூது கோஷ்டி கருதுகிறது; இந்தியத் தொழிலாளர்களின் யந்திர வேலைத் தேர்ச்சியையும் தூது கோஷ்டி நேரில் கண்டுள்ளது; உரிய முறையில் ஊக்கம் அளித்து வேலைக்கு ஏற்ற சூழலையும் ஏற்படுத்தினால், இந்தியத்

ஆயினும் அமெரிக்கத் தொழில் நுட்பப் பணியாளர்களையும் இயந்திரங்களையும் பயன்படுத்த வேண்டும் என்ற தூது கோஷ்டியின் சிபாரிசை அரசாங்கம் ஏற்காதது மட்டும் அல்ல, அந்த அறிக்கையையே ரகசிய முத்திரையிட்டு மூடி வைத்தது.

கானடா, ஆஸ்திரேலியா போன்ற குடியேற்ற நாடுகள் ஆதாரத் தொழில்களை ஏற்படுத்தி தங்கள் பொருளாதார வளர்ச்சி அளவை உயர்த்திக் கொள்ள உதவி செய்யப்பட்டன. ஆனால் இந்தியப் பொருளாதாரத்தின் தன்மை இருந்தபடியே இருந்தது. கனரகத் தொழில்கள் கவனிக்கப்படவே இல்லை.

இந்திய வளர்ச்சியைத் தடைசெய்யும் இக் கொள்கைக்காக, கீழ்த் தொகுதி பொருள் வழங்கு மன்றத்தின் சேவைகள் பயன்படுத்தப்பட்டன. இந்தியாவிலுள்ள இந்த மன்றம், சாம்ராஜ்ய நாடுகளிலிருந்து பொருள்களைத் திரட்டி ஒருங்கிணைப்பதற்காக ஏற்பட்டது. இந்த மன்றத்தின் மூலமாகத்தான், சாம்ராஜ்ய நாடுகளின் பொருள்கள் இரட்டிப்பாவதைத் தடுக்க வேண்டும் என்று காரணம் காட்டி, இந்தியாவின் தொழில் முயற்சிகள் முன்னேறாமல் அரசாங்கம் தடை செய்தது. கீழ்த் தொகுதி பொருள் வழங்கு மன்றத்தில் இந்தியப் பிரதிநிதி ஓர் அரசாங்க அதிகாரி. போருக்குத் தேவையான பொருள்களுக்குப் பல நாடுகளிடம் ஆர்டர் கொடுக்கும் விஷயத்தில் இந்த மன்றம் மிகவும் பாரபட்சமாய் நடந்து கொண்டது. அனைத்திந்திய உற்பத்தியாளர் சங்கத் தலைவரான சர் எம். விசுவேசுவரய்யா சொல்கிறார்:

> "இப்போது நடக்கும் போருக்குத் தேவையான பொருள்களுக்கான ஆர்டர்கள், ரோஜர் தூதுக்குழு, கீழ்த்தொகுதி பொருள் வழங்கு மன்றம் ஆகியவற்றின் யோசனையின் பேரில், சாம்ராஜ்யத்திற்குளுள்ள, போரில் ஈடுபட்டுள்ள பல்வேறு நாடுகளுக்குப் பகிர்ந்து அளிக்கப்பட்டுள்ளதாய்த் தோன்றுகிறது. இப்போது செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகளின்படி, உயர்ந்த தொழில் நுட்பத் தேர்ச்சியோ அநுபவமோ தேவை இல்லாத ஒரு சில பொருள்களே இந்தியாவிலுள்ள தொழிற்சாலைகளுக்கும் தொழிலதிபர்களுக்கும் ஒதுக்கப்பட்டுள்ளதாய்த் தெரிகிறது. கனரகத் தொழில்களும், உயர்ந்த தொழில் நுட்பத் தேர்ச்சியும் தேவைப்படும் பொருள்கள் அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கோ, குடியேற்ற நாடுகளான கானடா, ஆஸ்திரேலியாவுக்கோ ஒதுக்கப்பட்டுள்ளன."
>
> (எம். விசுவேசுவரய்யா: "தொழில் மூலம் வளம்"; 1943, பக். 15.)

---

தொழிலாளர்கள் சிறிது காலப் பயிற்சிக்குப்பிறகு தேர்ச்சி பெற்ற தொழிலாளர்களாவர் என்று தூது கோஷ்டி கண்டது.

கீழ்த்தொகுதி பொருள் வழங்கு மன்றத்தின் இந்தப் பிற்போக்கு நோக்கத்தையும் செய்கைகளையும் பிரிட்டிஷ் தொழில் நலன்கள் 1940 டிசம்பர் முதலே ஆனந்தமாய்க் கவனித்து வந்தன. 1940 அக்டோபரில் கீழ்த் தொகுதி பொருள் வழங்கு மன்றத்தின் கூட்டம் நடந்தது. அதில், பிரிட்டிஷ் வாணிப வாரியத்தின் பிரதிநிதியான திரு கை லோகாக் விஜயம் செய்ததைப் பற்றி லண்டன் ரயில்வே கெஜட் பின்வருமாறு எழுதியது:

> ''போரின் ஜீவாதாரமான தேவைகளுக்கு முதல் இடம் தரவேண்டும் என்பதை எப்போதும் மனத்தில் கொண்டு, தற்போது மேற்கொள்ளப்பட்டுள்ள யுத்த உற்பத்திப் பெருக்கத்தால் பிரிட்டிஷ் தொழிலின் எதிர்காலத்தில் எத்தகைய விளைவுகள் ஏற்படும் என்பதை மதிப்பீடு செய்ய வேண்டிய பொறுப்பு, வாணிப வாரியத்தின் பிரதிநிதியாக மன்றத்திலுள்ள அவரிடம் (கை லோகாக்) ஒப்படைக்கப் பட்டது. . அதே சமயம், மன்றத்தினரின் விஜயத்தினால் போர்க் காரணங்களுக்குத் தேவையற்ற உற்பத்தியை விரிவாக்க எவ்வித முயற்சியும் எடுத்துக் கொள்ளப்படவில்லை என்றும், மொத்தத்தில், ஒரு காலத்தில் எதிர்பார்த்தது போல் இந்தியாவில் போருக்குப் பிற்காலத்தில் பிரிட்டிஷ் தொழிலின் நலன்கள் அவ்வளவு அதிகமாய்ப் பாதிக்கப்பட மாட்டா என்றும் திரு லோகாக் கருதுகிறார்.''
>
> (சர் எம். விசுவேசுவரய்யாவின் ''போருக்குப்பின் இந்தியாவின் சீரமைப்பில்'' மேற்கோள் காட்டப் பட்டது; பக். 15.)

ராணுவ நிலைமையில் ஒரு மாறுதல் ஏற்பட்ட காரணத்தால் ''கடல் கடந்த படைத் தலைமையகங்களின் சார்பில் இந்திய அரசு செய்யும் கொள்முதலுக்கு மன்றத்தின் மூலம் அனுமதி பெற வேண்டுவதால் பயனில்லை'' என்றும் அமெரிக்கத் தொழில் நுட்பக் கோஷ்டி கருதியது. ஆகையால், ''வெளிநாடுகளிலிருந்து இந்தியாவுக்கு வரும் ஆர்டர்களைக் கீழ்த்தொகுதி பொருள் வழங்கு மன்றத்தின் மூலம் முன் அனுமதியின்றி இந்தியாவின் பொருள் வழங்கு துறையே நேராய்க் கையாள வேண்டும்'' என்று தூது கோஷ்டி சிபாரிசு செய்தது; உற்பத்தியையும் பொருள் வழங்குதலையும் பற்றின தகவலைத் திரட்டி ஒழுங்கு படுத்தித் தரும் ஒரு நிறுவனமாக மட்டும் மன்றம் நீடிக்க வேண்டும் என்று தூது கோஷ்டி கருத்து தெரிவித்தது. (அறிக்கை, பக். 7.)

ஆயினும், இந்திய அரசாங்கம் மேற்கண்ட காரணங்களால் எதிர்மறை பதில் அளித்தது இயற்கையே. தூது கோஷ்டியின்

அறிக்கை மீது இந்திய அரசு சமர்ப்பித்த குறிப்பில் ''கீழைத் தொகுதி பொருள் வழங்கு மன்றத்தின் அமைப்பு விதிகளின்படி ஆர்டர்களை ஒதுக்க வேண்டியது மன்றத்தின் பொறுப்பு என்றும் அது தன் இக் கடமையைத் தவிர்க்க முடியாது'' என்றும் உரைக்கிறது.

இந்தியாவில் ஆதாரத் தொழில்களின் வளர்ச்சியை மட்டும் இந்திய அரசு தடுக்கவில்லை; அயல்நாட்டு நிறுவனங்களுக்கு வேறு பல பணிகள் தந்து நேரிடையாக உதவி செய்தது. உதாரணமாக, போர்க் காலத்தில் £ 50 லட்சம் செலுத்தப்பட்ட மூல தனத்தோடு தொடங்கப்பட்ட யுனைடெட் கிங்டம் கமர்ஷியல் கார்ப்பரேஷனுக்குப் பல்வேறு நாடுகளுடன் வாணிபம் செய்யும் ஏகபோகவுரிமை தரப்பட்டது. மேலும், இந்தியாவில் மோட்டார் வாகனங்களைக் கோர்க்கும் ஒப்பந்தங்களைக்கூட பெரும்பாலும் முழுமையாக மோட்டார்கள் கோர்க்கும் நிறுவனங்களான ஜெனரல் மோட்டார்ஸ், ஃபோர்டு என்ற இரு அமெரிக்கத் தொழிற்சாலைகளுக்குக் கொடுக்கப்பட்டன.

தொழில் வளர்ச்சி பெறுவது இருக்கட்டும்; பிரிட்டிஷாரின் ஆட்சியில் முன் எந்தக் காலத்திலும் இல்லாத அளவு இக் காலத்தில் இந்தியா சுரண்டல் செய்யப்பட்டது. பழைய போர்களை விட மிக அதிகமான பளு இந்தியாவின் தோள்கள் மீது ஏற்றப்பட்டது. 1939 நவம்பரில், பிரிட்டனின் மன்னர் பெருமான் அரசாங்கம் தன் ஏஜண்டான இந்தியா அரசாங்கத்துடன் தற்காப்புச் செலவுகளைப் பகிர்ந்து கொள்வதற்காக ஒரு நிதி ஒப்பந்தம் செய்து கொண்டது. இந்த ஒப்பந்த விதிகள் படி இந்தியாவிலான மொத்தத் தற்காப்புச் செலவில் இந்தியா கீழ் கண்டவற்றை ஏற்கும்:

(1) இந்தியாவின் சாதாரண, அமைதிக் காலத்துத் தற்காப்புச் செலவுக்கென ஆண்டுதோறும் நிலையானதொரு தொகை, சுமார் 36.77 கோடி ரூபாய்கள்; அத்துடன்,

(2) இந்த அடிப்படைத் தொகையுடன் விலையேற்றம் காரணமாக ஒரு தொகை சேர்த்துக் கொள்ளுதல்; அத்துடன்,

(3) தன் சொந்த நலன்களுக்காக இந்தியா மேற்கொள்ளக் கூடிய போர் நடவடிக்கைகளின் செலவுத்தொகை; மேலும்,

(4) கடல் கடந்த நாடுகளில் சாம்ராஜ்யத் தற்காப்புப் பணியில் ஈடுபட்டுள்ள துருப்புகளுக்கான செலவில் இந்தியாவின் பாகமாக ஒரு மொத்தத் தொகையாக ஒரு கோடி ரூபாய்கள்.

இந்தியாவில் திரட்டப்பட்ட தரைப்படையினர் இந்தியாவில் தங்கியிருந்து இந்தியாவின் தற்காப்புக்குத் தயார்நிலையில் இருக்கும் காலம் முழுவதற்கும், அவர்களைத் திரட்டுவதற்கும், பயிற்சி தருவதற்கும், ஆயுதங்கள் வழங்குவதற்கும், பராமரிப்பதற்கு மான செலவை இந்தியாவே ஏற்க வேண்டும். அவர்கள் கடல் கடந்த நாடுகளுக்குப் புறப்பட்டுவிட்டால் அவர்களைத் திரட்டு வதற்கும் பயிற்சி தருவதற்குமான செலவையும், அவர்களுக்கு ஆயுதங்கள் வழங்கும் செலவையும்கூட மன்னர் பெருமான் அரசாங்கம் தன் பொறுப்பாக ஏற்கும்; அதனிடமிருந்து வசூலிக்கப்படும்.

அதைத் தவிர, இந்தியாவில் தங்கியிருந்த வெளிநாட்டுத் துருப்புகளுக்கு வழங்கப்பட்ட பொருள்களுக்கும் பணிகளுக்கு மான செலவைப் பிரிட்டனே தருவதாய் ஒப்புக்கொண்டது; போரில் ஜப்பான் கலந்துகொண்டபின் இச் செலவுகள் மிக அதிகரித்துவிட்டன.

பார்ப்பதற்கு இந்த ஒப்பந்தம் நியாயமானதாகவும் நேர்மை யானதாகவும் தோன்றுகிறது; சாம்ராஜ்யத் தற்காப்புக்கான நிதிச்சுமையை இந்தியாமீது ஏற்றக்கூடாது என்ற நல்லெண்ணத் தோடு இந்த ஒப்பந்தம் செய்யப்பட்டதாய்த் தோன்றுகிறது; ஆனால், உண்மையில் வெளிப்படையாகப் புரியாதவண்ணம் இந்தியாவின்மேல் பளுவைச் சுமத்துவதற்கு இந்த ஒப்பந்தம் ஒரு கருவியாகவே பயன்படுத்தப்பட்டது.

பிரிட்டனில் உள்ள மன்னர் பெருமான் அரசாங்கம், இந்திய அரசாங்கம், இந்திய ரிசர்வ் பாங்கு ஆகிய ஒரே குடும்பத்தைச் சேர்ந்த மூன்று உறுப்பினர்கள்கூடி, மன்னர் பெருமான் அரசின் சார்பில் இவ்வாறும் மற்ற விதங்களிலும் செலுத்த நேர்ந்த தொகைகளுக்காக ரிசர்வ் பாங்கு மேலும் மேலும் தாள் நாணயங் களை இந்தியாவில் வெளியிட வேண்டியது என்றும், மன்னர் பெருமான் அரசு அம்மாதிரி செலுத்த வேண்டிய ஸ்டர்லிங் தொகைகளை பாங்க் ஆப் இங்கிலாண்டின் கணக்குப் புத்தகத்தில் வரவு வைத்துக் கொண்டேபோவது என்றும் ஒப்புக்கொண்டார் கள். இவ்வாறு, இந்த ஒப்பந்தமே பணம் செலுத்துவதாக ஒப்புக் கொண்ட வெறும் உறுதிமொழி என்றாகிவிட்டதுடன் இந்தியாவே செலவுச் சுமையை ஏற்க வேண்டியதாயிற்று.

இந்தியாவின் தற்காப்புச் செலவையும் மன்னர் பெருமான் அரசின் சார்பில் ஏற்பட்ட செலவையும் சேர்த்துப் பார்த்தால் இந்தியப் பொருளாதாரத்தின்மீது ஏற்றப்பட்ட பளுவின் அளவு புலப்படும்.

இந்தியாவின் தற்காப்புச் செலவு என ஒப்பந்தப்படி ஒப்புக் கொள்ளப்பட்ட செலவு பிர்மாண்டமான அளவு மிகுந்தது; போருக்கு முன் தேசீய வருவாயின் மொத்தத் தொகையில் மூன்றில் ஒரு பகுதியைச் சில ஆண்டுகளில் எட்டியது.

இந்தியாவின் தற்காப்புச் செலவு
(கோடிக் கணக்கான ரூபாய்களில்)

| ஆண்டு | மூலதனக் கணக்கில் | வருவாய்க் கணக்கில் | மொத்தம் |
|---|---|---|---|
| 1939-40 | — | 49·54 | 49·54 |
| 1940-41 | — | 73·61 | 73·61 |
| 1941-42 | — | 103·93 | 103·93 |
| 1942-43 | 52·51 | 214·62 | 267·13 |
| 1943-44 | 37·46 | 358·40 | 395·86 |
| 1944-45 | 62·83 | 395·49 | 458·32 |
| 1945-46* | 14·93 | 376·42 | 391·35 |
| மொத்தம் | 167·73 | 1572·01 | 1739·74 |

(ரிசர்வ் பாங்க்: "நாணயச் செலவாணி, நிதி பற்றின அறிக்கை—1945-46.")

* திருத்திய மதிப்பீடுகள்.

மன்னர் பெருமான் அரசாங்கத்திடமிருந்து வசூலிக்கப்படக் கூடிய செலவுகளெனக் கூறப்பட்ட யுத்தச் செலவுகள் ஏறக்குறைய இந்த அளவுத் தொகைகளே இருந்தன.

வசூலிக்கப்படக்கூடிய போர்ச் செலவுகள்[1]

| ஆண்டு | | | கோடிக் கணக்கான ரூபாய்களில் |
|---|---|---|---|
| 1939-40 | .. | .. | 4·00 |
| 1940-41 | .. | .. | 53·00 |
| 1941-42 | .. | .. | 194·00 |
| 1942-43 | .. | .. | 325·40 |
| 1943-44 | .. | .. | 377·87 |
| 1944-45 | .. | .. | 410·84 |
| 1945-46* | .. | .. | 347·07 |
| மொத்தம் | .. | .. | 1,712·18 |

(மேலே குறிப்பிடப்பட்ட அறிக்கை, பக். 48.)

* திருத்திய மதிப்பீடுகள்.

பாங்க் ஆப் இங்கிலாண்டில் இருந்த, இந்தியாவுக்கு வர வேண்டிய ஸ்டர்லிங் பாக்கிகளின் மொத்தத் தொகை 1946, ஜூன் மாத முடிவில் £ 159·69 கோடி அல்லது ரூ. 2129·25 கோடி ஆகிவிட்டது. பாக்கி இன்னும் தொடர்ந்து ஏறுகின்றன.

போர்க்காலம் முழுவதும் இந்திய மக்களுக்கு எட்ட முடியாத வாறு இத்தொகை முழுவதும் வைக்கப்பட்டிருந்தது. சரக்குகள் அல்லது தங்கத்தில் எவ்விதப் பேரங்களும் செய்வதற்கு இந்தியா வுக்கு இத்தொகை கிடைக்கவில்லை. பாக்கிகள் குவிந்துகொண்டே போயின; ஆனால், அவற்றில் ஒரு சிறிய பகுதிகூடத் தேவையான இயந்திரங்கள் முதலியவற்றை வாங்க இந்தியாவுக்குக் கிடைக்க வில்லை.

இந்தியாவின் எஜமானன் என்ற தன் அந்தஸ்தைப் பிரிட்டன் நன்கு பயன்படுத்திக் கொண்டது. இந்த ஸ்டர்லிங் பாக்கிகளுக்கு எதிராக மற்ற நாடுகளில் ஏற்பட்டதற்கு மாறாக, இந்தியாவி லுள்ள பிரிட்டிஷ், வெளிநாட்டு முதலீடுகளைக் கலைக்கவும் அனுமதிக்கப்படவில்லை. £ 32·34 கோடி அளவுக்கு இந்தியாவின் அரசுக் கடன் (ஸ்டர்லிங்) தாய்நாட்டுக்குத் திருப்பி அனுப்பப் பட்டது; எஞ்சிய பாக்கி அதற்கு நாலுமடங்கு; மிக நீண்டகாலப் பாக்கி; £ 127·35 கோடி இன்னும் பாங்க் ஆப் இங்கிலாண்டிலேயே கிடக்கிறது. பல சாக்குபோக்குகளைக் காட்டி இக்கடனை ஓரளவு மறுதலிக்கவும் அல்லது ''குறைத்து அளக்கவும்'' போருக்குப்பின் யோசனைகள் கூறப்பட்டன. 1946ஆம் ஆண்டில் ஆங்கிலேய அமெரிக்க நிதி ஒப்பந்தம் ஒன்று ஏற்பட்டது; அதன் ஷரத்துகளில் ஒன்றாக, மேற்படி கடன்பற்றி ஆங்கிலேய—அமெரிக்க உடன்பாடு ஒன்று காணப்பட்டது.

அத்துடன், ஏகாதிபத்திய ஆட்சியாளர்கள் இந்தியாவின் டாலர் சேமிப்பையும் அபகரித்துக் கொண்டார்கள். யுத்த காலத்தில் ''டாலர் திரட்டு ஏற்பாடு'' என்ற ஓர் ஏற்பாடு வகுக்கப் பட்டது; அதன்படி ''ஸ்டர்லிங் வட்டாரத்தில்'' உள்ள எல்லா நாடுகளும் தங்கள் டாலர் சேமிப்புகளை ஒன்றாகத் திரட்ட நிர்ப்பந் திக்கப்பட்டன; அமெரிக்காவுக்குச் சரக்குகள் விற்பனை செய்வ தால் அவை இந்த டாலர்களை ஈட்டலாம். இந்த டாலர் சேமிப் பின் பலத்தைக்கொண்டு இந்தியாவும் பிறநாடுகளும் அமெரிக்கா விடமிருந்து நேராகச் சரக்குகள் வாங்கிவிட முடியாது; அதைப்

1. போர்ச் செலவின் இந்தப்பட்டி பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் தொலை கிழக்குக் கொள்கையால் மிக உயர்ந்துவிட்டது; காலனி மக்களுக்கு அரசியல் உரிமைகள் வழங்க மறுக்கும் கொள்கை; இந்நாடுகளின் ஒத்துழைப்பையும் நம்பிக்கையையும் பெற்று அவற்றின் வளங்களை எல்லாம் பயன்படுத்திக்கொள்ள மறுக்கும் கொள்கை.

பிரிட்டனின் முடியரசுதான் போர்க் கொள்முதலுக்காகப் பயன் படுத்த முடியும். சரியான தொகை என்ன என்பதே தெரிவிக்கப் படவில்லை; இந்தியாவின் டாலர் சேமிப்புகளைப் பற்றின மதிப்பீடு பற்றி பெருத்த வேற்றுமை இருக்கிறது.

1942-45 ஆகிய நாலாண்டுக் காலத்தில் கணிசமான அளவு வாணிபப் பாக்கி இந்தியாவுக்கு அமெரிக்காவிடம் இருந்ததாய் அமெரிக்காவின் வாணிபத்துறை வெளியிடுகிறது. அதன் அளவு 42·1 கோடி டாலர்கள். 114 கோடி ரூபாய்கள் பெறுமானமுள்ள டாலர்கள் இன்னும் இந்தியாவின் பெயரில் வரவு இருப்பதாய் திரு. மனு சுபேதார் அறிவித்துள்ளார். 1946, மார்ச் 8ஆம் நாள் ஈஸ்டர்ன் எகனமிஸ்ட் ஏட்டில் இந்தியா சாம்ராஜ்ய டாலர் திரட்டு ஏற்பாட்டுக்கு 1945 அக்டோபர் வரை 90 கோடி டாலர்கள் செலுத்தியுள்ளதாய் மதிப்பிடப்பட்டுள்ளது. இந்திய அரசின் நிதி உறுப்பினர், 1945 மார்ச் வரை மட்டும் சாம்ராஜ்ய டாலர் திரட்டுக்கு இந்தியா செலுத்தியுள்ளது 49·2 கோடி ரூபாய்கள் என்று கூறுகிறார்.

ஆக, 1945 மார்ச் வரை, அவை ரூ. 100 கோடி முதல் ரூ. 200 கோடி வரை எவ்வளவு வேண்டுமானாலும் இருக்கலாம்; பாக்கி மேலும் ஏறிக் கொண்டே போகிறது. இந்தியாவைத் தொழில் மயமாக்கத் தேவையான மூலப்பொருள்களை இறக்குமதி செய்வதற்குப் பயன்படுத்துவதற்கு இல்லாமல் இந்தச் சேமிப்புகள் ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளன; இந்தியாவுக்குப் பயன்படும்படியாக இந்தச் சேமிப்புகள் இன்றுவரை விடுவிக்கப்படவில்லை. 1946இல் நிதி உறுப்பினர் தம் பட்ஜெட் உரையில், இந்திய மக்களின் நலன்களுக்காகவே டாலர் திரட்டு பாதுகாக்கப்படுகிறது என்பதை அவர்களுக்கு விளக்க இப்போதும் முயன்றார்!

மேலும் மேலும் தாள் நாணயங்களை வெளியிடும் ஏகாதிபத்தியப் போர்ச் செலவு முறையால் இந்தியப் பொருளாதாரத்தில் மிகப் பாதகமான விளைவுகள் ஏற்பட்டன. மிகவும் வறுமையுற்று, பொருளாதாரத்தில் மிக நலிந்து இந்தியா போரிலிருந்து வெளிப்பட்டது. உண்மையான போர்ச் சுமையைத் தாங்கும் பொறுப்பு முன்பே பட்டினி கிடந்த மக்கள் மீது விழுந்தது.

நாணயப் பணவீக்கம் எந்த அளவுக்குக் கொண்டு போகப் பட்டது என்று பார்ப்போம்:

செலாவணியிலுள்ள தாள் நாணயங்கள்

| | | | கோடிக்கணக்கான ரூபாய்களில் |
|---|---|---|---|
| ஆகஸ்ட் 1939 | .. | .. | 178·89 |
| 1939—40 | .. | .. | 209·22 |

| | கோடிக்கணக்கான ரூபாய்களில் |
|---|---|
| 1940—41 .. .. | 241·41 |
| 1941—42 .. .. | 307·68 |
| 1942—43 .. .. | 513·44 |
| 1943—44 .. .. | 777·17 |
| 1944—45 .. .. | 968·69 |
| 1945—46 .. .. | 1162·64 |
| 1946, ஜூன் 28 .. .. | 1237·84 |

ரிசர்வ் பாங்கின் அறிக்கைகளிலிருந்து எடுக்கப்பட்ட மேற்கண்ட அட்டவணையிலிருந்து, போர் ஆண்டுகளின்போது தாள் நாணய வெளியீடு 600 சதவீதம் பெருகியுள்ளதென்று தெரிகிறது (இந்தப் பெருக்கம் இன்னும் நீடிக்கிறது); ஆனால், தொழில் முயற்சிகளின் அட்டவணை 1939-40 இல் 114·0 ஆக இருந்தது, போர்க்காலத்தில் (ஜனவரி 1945) அதிகபட்சமாக 132·5 ஐ எட்டியது.

இந்தப் பணவீக்கத்தின் விளைவாகத் தொழிலதிபர்களும் போர் காண்டிராக்டர்களும் மாபெரும் லாபங்களை ஈட்டினார்கள்.

துணித் தொழிலின் லாபங்களைப் பார்ப்போம். இத் தொழில் முழுவதற்குமான மொத்த லாபங்களுக்குரிய அனைத்து இந்தியப் புள்ளிவிவரம் கிடைக்கவில்லை; எனினும், பம்பாய் ஆலைகளின் விவரங்களைப் பொதுவாக நல்ல அளவாய்க் கொள்ளலாம். பம்பாய் பருத்தி ஆலைகள் ஈட்டிய லாபங்கள் 1941 இல் 6·94 கோடி ரூபாய்கள். 1940 ஐ விட 1288 சதவீதப் பெருக்கத்தை இது காட்டுகிறது. சில குறிப்பிட்ட ஆலைகள் 1940 ஐ விட 2250 சதவீதம் லாபங்களை ஈட்டின(வாடியாவும் மர்ச்சன்டும், "நம் பொருளாதாரப் பிரச்னை," 1945, பக். 270) பம்பாயிலுள்ள பதினைந்து முதன்மையான பருத்தி ஆலைகள் 1940 இல் 90 லட்சம் ரூபாய்களும், 1941 இல் 2·95 கோடி ரூபாய்களும், 1942 இல் 8·05 கோடி ரூபாய்களும், 1943 இல் 17·52 கோடி ரூபாய்களும், 1944 இல் 13·06 கோடி ரூபாய்களும் லாபங்கள் சம்பாதித்தன (எச். டி. பரேக், காமர்ஸ், ஜூலை 7, 1945).

பிரேம் ஸாகர் குப்தாவின் கணக்குப்படி, பம்பாய்த் தீவிலுள்ள 61 பருத்தி ஆலைகள் 13·93 கோடி ரூபாய்கள் செலுத்தப்பட்ட மூலதனம் கொண்டவை. ஐந்தாண்டுப் போர்க் காலத்தில் அவை மூலதனத்தைவிட $6\frac{1}{2}$ மடங்கு நிகர லாபம் ஈட்டின. இந்த ஆண்டுகளுக்கான வருட சராசரி 1939 ஆம் ஆண்டு லாபங்களைவிட 26 மடங்குக்கு மேல் அதிகமாயிருந்தது.[1]

---

**1. நடைமுறைச் செலவுகள், ஏஜண்டுகளின் கமிஷன்களும் ஊதியமும், தேய்மானம் ஆகியவை போக இந்த நிகர லாபங்கள் கணக்கிடப்பட்டுள்ளன.**

பல்வேறு தொழில்களின் லாபங்களைக் காட்டும் பின்வரும் அட்டவணை அதே நிலைமையைப் பிரதிபலிக்கிறது.

சராசரி நிகர லாபங்களின் அட்டவணை எண்
(தொழில் வாரியாக)
(அடிப்படை 1939 எண் 100க்குச் சமம்)

| | 1939 | 1940 | 1941 | 1942 | 1943 |
|---|---|---|---|---|---|
| சணல் .. | 100 | 590 | 617 | 896 | 926 |
| பருத்தி .. | 100 | 73 | 205 | 313 | 645 |
| தேயிலை .. | 100 | 118 | 214 | 252 | 392 |
| சர்க்கரை .. | 100 | 143 | 122 | 160 | 218 |
| நிலக்கரி .. | 100 | 88 | 107 | 95 | 124 |
| பொறியியல் .. | 100 | 115 | 180 | 36 | 225 |
| பலவகை .. | 100 | 104 | 326 | 394 | 401 |
| எல்லா வகைகளும் .. | 100 | 127 | 282 | 259 | 327 |

(எம். எச். கோபால்: ''1939 முதல் தொழில் லாபங்கள்''; ஈஸ்டர்ன் எகனமிஸ்ட், மே 12, 1944, பக். 730.)

லாபங்களின் அதிகார பூர்வமான அட்டவணைகூட (இந்திய அரசின் பொருளாதார ஆலோசனையாளர் தந்த விவரப்படி)— மிகப் பணவீக்கமிருந்த 1942 வரை மட்டும் கொடுக்கப்பட்டுள்ள இந்த அட்டவணை குறைத்து மதிப்பிடப்பட்டது என்பது தெளிவு— உண்மையான நிலவரத்தை மறைக்க முடியவில்லை.

லாபங்களின் அட்டவணை எண்
(அடிப்படை 1928, 100க்குச் சமம்)

| | 1939 | 1942 |
|---|---|---|
| பருத்தி .. | 154·6 | 760·7 |
| சணல் .. | 13·6 | 49·2 |
| தேயிலை .. | 96·2 | 219·5 |
| நிலக்கரி .. | 139·1 | 110·3 |
| சர்க்கரை .. | 179·4 | 219·8 |
| இரும்பு, உருக்கு .. | 289·3 | 403·3 |
| காகிதம் .. | 151·8 | 488·4 |
| எல்லா தொழில்களுக்கும் மொத்தம் .. | 72·4 | 169·4 |

இந்தப் போக்கினால் தொழிலாளர்களுக்கும் குடியானவர்களுக்கும் சொல்லொணாத் துன்பங்களும் துயரங்களும் உண்

டாயின. ஆறு நீண்ட வருடங்கள் இந்திய மக்கள் பலவித சம்பள வெட்டுக் கஷ்டங்களையும், உணவு, உடைத் தட்டுப்பாடு களையும் நாடு முழுவதும் பரவிய பஞ்சங்களையும் பற்றுக்குறை களையும் தாங்க வேண்டியிருந்தது.

இந்திய அரசு அறிவித்தபடி உணவுப் பொருள்களின் மொத்த விற்பனை விலைகளின் அட்டவணை 1939 ஆகஸ்டில் 100 ஆக இருந்தது 1941 ஆகஸ்டில் 122·9, 1942 ஆகஸ்டில் 163·2, 1943 ஜூலையில் 300·2 ஆக ஏறியது. 1944 ஜனவரியில் அது 233·0 ஆக வீழ்ந்தது. ஆனால் மார்க்கெட் விலைகளைவிடக் குறைவாய்க் கண்ட்ரோல் விலைகளை நிர்ணயித்ததே அந்த வீழ்ச்சிக்கு முக்கிய காரணம். அப்புறம் அட்டவணை அதிகமாய் மாறவில்லை; 1945 டிசம்பர் எண் 238·8; உண்மையில் விலைகளின் ஏற்றம் மிக அதிகம்; ஏனெனில் கண்ட்ரோல் விலைகளுக்குச் சாமான்கள் கிடைப்பதில்லை. கறுப்புச் சந்தை—பிளாக் மார்க்கெட்—நாடெங்கும் பரவிய சாதாரணப் பிரச்னை ஆகிவிட்டது.

சில்லறை விலைகள் இன்னும் அதிகமாய் ஏறின. உதாரணமாக, பம்பாயில் இரண்டணாவுக்கு ஒரு பவுண்டு விற்ற பால் ஒரு ரூபாய், இரண்டு ரூபாய்க்குக்கூட விற்பனை ஆயிற்று; ஒரு பவுண்டு தக்காளி இரண்டணாவாக இருந்தது 10 அணா ஆயிற்று; ஒரு பவுண்டு உருளைக்கிழங்கின் விலை ஓரணாவிலிருந்து நாலணா ஆயிற்று. கோதுமையை அதிகமாய் உற்பத்தி செய்யும் யூ.பி. யில் போருக்கு முன் ஒரு மணு கோதுமை நான்கு ரூபாய்க்கு விற்றது; 1946 ஜூலையில் ஒரு மணு கோதுமை ரூ. 18க்கு விற்றது. ரொட்டியின் விலை, 8 அவுன்ஸ் துண்டின் விலை போருக்கு முன் 1 அணா; 6 அவுன்ஸ் துண்டின் விலை $2\frac{1}{2}$ அணாவாக ஏறியது.

ஒரு பவுண்டு ஏழணாவுக்கு விற்ற டிரில்லின் விலை 1943 ஜூனில் 42 அணாவை எட்டியது. உணவுத் தானியங்களின் விலை அட்டவணை எண் 1939 செப்டம்பரில் 93, 1943 செப்டம்பரில் 530.[1]

தொழிலாளர் வர்க்க வாழ்க்கைச் செலவு எண் (பெரும்பாலும் கண்ட்ரோல் விலைகளை வைத்துக் கணக்கிடப்பட்டது) உதாரணமாக, பம்பாயில் 1939 ஆகஸ்டில் 100, 1944 ஆகஸ்டில் 238க்கு ஏறி 1945 மார்ச்சில் 214க்கு இறங்கி, மறுபடியும் 1946 ஜூலையில் 255க்கு ஏறியது. ஆமதாபாதிலோ அது 1943 அக்டோபரில் 329 என்ற உச்சியை எட்டியது. 1946 ஜூன் அட்டவணை எண் 297.

1. பி. எஸ். லோகநாதன்: "போருக்குப்பின் இந்தியாவின் புனர்நிர்மாணமும் அதன் அகிலத்துலகத் தன்மைகளும்", 1946; பக். 81.

இதற்கு மாறாக, தொழிலாளர்களின் ஊதியம் சிறிதளவே உயர்ந்தது. எல்லாத் தொழில்களின் அதிபர்களும் வாழ்க்கைச் செலவு ஏறியதற்கு ஏற்ப அகவிலைப் படி தரமறுத்தார்கள். இந்திய அரசு தங்கள் மாத வெளியீடான இண்டியன் லேபர் கெஜட்டில் பின்வரும் தகவல்களைத் தருகிறார்கள்; அவை நம்பத் தகாதவை; எனினும், அத் தகவல்படி, துணித் தொழிலில் தொழிலாளர்களின் வருட சம்பாத்தியம் 1944இல் 100 சதவீதத் துக்குச் சற்று மிகுதியாகக் கூடியுள்ளது; பொறியியல் தொழிலில் 100 சதவீதத்துக்கும் குறைவாகவும், அரசின் ஆயுதத் தொழிற் சாலைகளில் 50 சதவீதமும், சுரங்கத் தொழிலில் 24 சதவீதமும் ஏறியிருக்கிறது.

தொழிலாளர்களுக்குத் தரப்பட்ட பட்டினிச் சம்பளத்தைப் பார்த்தால் அவர்களுடைய உண்மை கூலிகளில் நேர்ந்த வெட்டு மகா பயங்கரமானது.

கிராமப்புற மக்களின் நிலை எந்த விதத்திலும் இதைவிடச் சிறப்பாக இல்லை என்பதை இனி காண்போம்.

ஆக, மற்ற நேச நாடுகள், அல்லது குடியேற்ற நாடுகளைப் போல் அல்லாமல், இந்தியாவை ஒரு பின்தங்கிய காலனி நாடா கவே வைத்திருக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு இந்தியப் பொருளாதாரத்தை ஏகாதிபத்தியம் கையாண்டதாலேயே இந்தியா போரிலிருந்து வெளி வருகையில் முன்பிருந்ததை விட ஏழை நாடாயிற்று. இந்தியப் பொருளாதாரத்தை உருவாக்கும் வாய்ப்பு இழக்கப்பட்டது மட்டுமல்ல; போர்க்காலப் பஞ்ச காரண மாக, இந்தியா இன்று மிகக் கடுமையானதொரு தொழில் நிலையை எதிர்நோக்கியுள்ளது.

## 8. நிதி-மூலதனமும் புதிய அரசியலமைப்புத் திட்டமும்

இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் நலன்களைப் பேணுவதும் காப்பதும் வலுப்படுத்துவதும்தான் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் இதுவரை வழங்கிய எல்லா அரசியலமைப்புச் சீர்திருத்தங்களுக்கும் அடிப்படையாக இருந்தது. 1946இல் பிரிட்டிஷ் அமைச்சரவை தூதுக்குழு அண்மையில் அளித்த தீர்ப்பைக் கவனித்தால், இந்திய விடுதலை என்ற வழக்கமான முகப்பு வேலையைக்காட்டி, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் தன் ஆதிக்கத்தைக் காத்துக் கொள்ள முயலு வதைக் காணலாம். பிரிட்டிஷ் நிதி நலனுக்கு ஏற்ப இந்தியாவின் தொழில் வளர்ச்சியைத் தடுக்கும் மரபு போருக்குப் பிந்தின காலத்திலும் தொடரப்படுகிறது—ஆனால் இம்முறை அது புதிய உருவம் ஏற்றுள்ளது; இந்தியத் தொழிலதிபர்களுடன் சேர்ந்து

இந்தோ-பிரிட்டிஷ் கம்பெனிகளைப் பிரிட்டிஷ் இந்தியாவிலும் சமஸ்தானங்களிலும் தொடங்கும் முயற்சிகளில் அவர்களுடைய நோக்கம் நன்கு பிரதிபலிக்கிறது.

1935ஆம் ஆண்டு இந்தியா சட்டத்தின் (CXXI) இன் மூன்ரும் பகுதியில் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் நலன்களுக்குச் சில பொருளாதார, நிதிப் 'பாதுகாப்புகள்' அளிக்கப்பட்டுள்ளன. அதன்படி, பிரிட்டிஷ் நலன்களுக்குப் பாதகமாகவும், இந்தியத் தொழில் அல்லது வாணிபத்திற்குச் சாதகமாகவும் இந்திய அமைச்சரவைகள் ஏதாவது நடவடிக்கை எடுத்தால் அதைத் தடுக்கும் மேலதிகாரங்கள் பிரிட்டிஷ் கவர்னர்களுக்கு, பொருளாதார—வாணிபப் பாகுபாட்டைத் தடுக்கும் பெயரால் வழங்கப்பட்டுள்ளன.

ஆனல், இனி பிரிட்டிஷ் மூலதனத்துக்கு இம்மாதிரி வெளியான சலுகை காட்ட முடியாது. இந்தப் 'பாதுகாப்புகளை' ஒழிக்க வேண்டும் என்ற கோரிக்கை மிக வலுப்பெற்றுள்ளது. 1945, ஏப்ரல் 4ஆம் நாள் திரு மனுபாய் சுபேதாரின் தீர்மானத்தை ஒரு மனதாய் நிறைவேற்றியதன் வாயிலாக இந்தியா சட்டத்திலுள்ள அப் பிரிவுகளை நீக்குமாறு மத்திய சட்டமன்றம் கோரியுள்ளது. 1945, மார்ச் 2-ல், தீர்மானத்தை முன் மொழிகையில் திரு சுபேதார் கூறியிருந்தார்:

> ''இந்த நாட்டில் ஐரோப்பியக் கம்பெனிகள் வேண்டுகிற புற நிலவரை உரிமைகளைப் போல, பிரிட்டிஷ் காமன்வெல்த்திலுள்ள வேறெந்த நாட்டிலும் காண முடியாது.''

மேலும், யுத்தத்தால் முற்றிலும் புதியதொரு நிலை உருவாகியுள்ளது. போர்ப்பளு முழுவதையும் இந்தியாமீது சுமத்துவதற்கெனத் திட்டமிடப்பட்ட போர் நிதியின் செயல் முறையாலேயே அந்த நிலை தோன்றியது; இந்தியாவைத் தொழில்மயமாக்க வேண்டும் என்ற கோரிக்கையை முன்பு நேராகவும் முற்றிலும் நிராகரித்து ஏகாதிபத்தியம் இனி இந்தியத் தொழில் வளர்ச்சியைப் பழைய பாணியில் தடுக்க முடியாது.

முன்னெப்போதையும் விட இப்போது இந்தியத் தொழிலதிபர்கள் மிகவலியவர்களாக இருக்கிருர்கள். பிரம்மாண்டமான யுத்த லாபங்களால் அவர்களிடம் ஏராளமான மூலதன வசதிகள் சேர்ந்துள்ளன. அவற்றை அவர்கள் உடனே முதலீடு செய்ய விழைகிருர்கள். அதனுல், தொழில் மயமாக்க வேண்டும் என்ற கோரிக்கை மிக்க வலிமை பெற்றுள்ளது.

இந்த மூலதனம் கையில் இருப்பதால் தாங்கள் பாதுகாப்பாகச் செயல்பட முடியும் என்ற நம்பிக்கை இன்று தொழிலதிபர்

களுக்கு ஏற்பட்டுள்ளது. அவர்கள் இந்தியாவுக்குச் சுயேச்சையான பொருளாதாரத் திட்டம் வேண்டும் என்ற விதத்தில் நினைக்கத் தொடங்கி விட்டார்கள். போருக்குப் பிற்காலத்திற்கென வகுக்கப்பட்ட பல அதிகார பூர்வமல்லாத திட்டங்களைத் தவிர, தலையாய இந்தியத் தொழிலதிபர்களே ஒரு திட்டம் வகுத்துள்ளார்கள்: ''இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கு ஒரு திட்டம்'', இத்திட்டம் சாதாரணமாய்ப் பம்பாய்த் திட்டம் என்ற பெயரால் அறியப்படுகிறது; இத் திட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் தலை விகித வருமானத்தைப் பதினைந்து ஆண்டுகளில் இரட்டிப்பாக்க அவர்கள் விரும்புகிறார்கள். எவ்வளவு பிற்போக்கானதாயினும் அது நாடெங்கும் பரவலான கவனத்தை ஈர்த்துள்ளது; ஏனெனில் தொழில்மயமாக்க வேண்டும் என்ற அவர்களுடைய தடுக்க முடியாத, வலிய ஆர்வத்தை அது பிரதிபலிக்கிறது. மேலும், தங்களிடம் தேவையான மூலதனம் இருப்பதால் இந்தியத் தொழிலதிபர்கள் இன்று பிரிட்டனைத் தவிர்த்து, அமெரிக்கா முதலிய நாடுகளின் உதவியை நாடுகிறார்கள்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இந்த மாறுதல்களைக் கவனியாமல் இருக்கமுடியாது. மக்கள் மன்றத்தில் நிகழ்ந்த ஒரு விவாதத்தின் போது, நாடாளுமன்ற உறுப்பினரும் (கன்சர்வேடிவ்) ராயல் சொசைடி செயலாளருமான பேராசிரியர் ஏ. வி. ஹில் மொழிந்தார்:

> ''நாம் துணிவும் தாராள மனப்பான்மையும் தொலை நோக்கும் காட்டினால் இந்தியத் தொழிலோடு நாம் ஒத்துழைக்கக் கூடிய வாய்ப்பு இருக்கிறது; இத்தன்மைகளை நாம் காட்டாவிட்டால் இந்தியத் தொழில் வளர்ச்சி நின்று விடாது. ஆனால் இந்தியர்கள் நம் உதவியை நாடாமல் அமெரிக்க உதவியை நாடுவார்கள்.''
>
> (இந்திய ஆண்டுப் பதிவேடு, 1944, தொகுதி இரண்டு, பக். 302.)

ஆகவே, இப்புதிய நிலைமைகளைக் கவனத்தில் கொண்டு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இந்தியத் தொழில்களின் வளர்ச்சியை எதிர்க்கும் தன் செயல்முறைக்குப் புதிய உருவம் தரவேண்டிய கட்டாயம் நேர்ந்தது. அரசியல் துறையில் மட்டுமல்ல, பொருளாதாரத் துறையிலும் ஏகாதிபத்தியம் நவயுகத்திற்கு ஏற்பத் தன்னைத் திருத்திக் கொண்டுள்ளது. இந்தியப் பூர்ஷ்வாக்களுடன் இசைந்து போனால்தான் இந்தியாவில் பிரிட்டிஷ் நலன்களை இப்போது காக்க முடியும்; இந்தியாவைத் தொழில்மயமாக்கும் முயற்சியைத் தாக்க வேண்டுமானால் வெளியிலிருந்து தாக்குவதைவிட உள்ளிருந்து

தாக்குவது சுலபம்; இந்திய ஏகபோக உரிமையாளர்களின் உதவியோடுதான் பிரிட்டனில் உற்பத்தியான பொருள்களுக்குப் பாதுகாப்பான விற்பனைச் சந்தையாக இந்தியாவை வைத்துக் கொள்ளமுடியும். இவ்வாருக, இந்தியாவுக்கு மிகத் தேவையான தொழில் நுட்ப உதவி செய்வதுபோல் பாசாங்கு செய்து ஏகாதிபத்தியம் தன் நிதி நலன்களைக் காத்துக் கொள்வதற்காகப் புதிய தந்திரங்களை, இந்தியத் தொழிலதிபர்களுடன் கூட்டு சேரும் புதிய தந்திரங்களைக் கையாளுகிறது. பரஸ்பர ஒத்துழைப்பு, நலன்களின் ஒருமை என்ற புதிய தத்துவத்தை ஏகாதிபத்தியம் பேசுகிறது. சமீப காலத்துப் பேச்சுகளும் செயல்களும் இந்தக் கூட்டுக் கூட்டாண்மைகளின் மூலம் ஏகாதிபத்தியம் இந்தியாவை விட்டு வெளியேறுவதற்குப் பதிலாக அதன் மீதுள்ள தன் நிதி, பொருளாதாரப் பிடிப்பை வலுவாக்கவே முயலுகிறது என்ற உண்மை தெளிவாய்ப் புலப்படுகிறது என்பதைப் பின்னர் காண்போம்; இந்த ஒப்பந்தங்கள் மூலம் இந்தியத் தொழில் வளர்ச்சி சுயேச்சையாக ஏற்படுவதற்கு அநுமதியாமல் இந்தியத் தொழில் முயற்சிகளை உள்ளிருந்து நாசவேலை செய்ய திட்டமிடப்பட்டு செயலாற்றப் படுகிறது.

இந்திய அரசின் முன்னுள் நிதி உறுப்பினரான சர் ஆர்ச்சிபால்ட் ரவ்லான்ட் இந்தியாவை விட்டுப் புறப்படுகையில் பின்வருமாறு உரைத்தார். இரண்டு நாடுகளுக்கும் இடையிலுள்ள அரசியல் உறவுகள் எதிர்காலத்தில் எப்படி இருப்பினும், ''தொழில், வாணிபம், பண்பாட்டுத் துறைகளில் இறந்த காலத்தை விட நெருக்கமான தொடர்புகள் ஏற்படுவதால்'' பரஸ்பரம் நன்மை விளையும் என்பதே புதிய ஏகாதிபத்தியக் கொள்கை பற்றின அவர் விளக்கம். (காமர்ஸ், பம்பாய், ஜூன் 8, 1946.)

ஆயினும், வேவல் பிரபு இன்னும் வெளிப்படையாகப் பேசினுர்: 1935 ஆம் ஆண்டு இந்தியா சட்டத்தில் விதிக்கப்பட்டுள்ள ''வாணிபப் பாதுகாப்புகள்'' அகற்றப்பட மாட்டா என்று பிரிட்டிஷ் நிதி நலன்களுக்கு மறுபடியும் உறுதி கூறுகையில், எதிர்கால முழு பாதுகாப்புக்கு இந்தோ-பிரிட்டிஷ் கூட்டாண்மையே சிறந்த வழியாக இருக்கும் என்ற தம் விழைவை வெளியிட்டார். 1945, டிசம்பர் 10 ஆம் நாள் கல்கத்தா, கூட்டு வர்த்தகர் கழகத்தின் முன் உரை நிகழ்த்துகையில் கூறினுர்:

> ''அரசியலமைப்புச் சட்டத்தில் பொதுவான திருத்தம் செய்யப்பட்டு, கிரேட் பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் இடையில் ஒரு வணிக ஒப்பந்தம் ஏற்படும் வரை சட்டத்திலுள்ள பாதுகாப்பு விதிகள் அகற்றப்படும் சாத்தியம் இருப்பதாய்

நான் நினைக்கவில்லை; ஆனால், இயன்றவரை தங்கள் சொந்த மூலதனத்தையும் நிர்வாகத்தையும் கொண்டு அடிப்படைத் தொழில்களை வளர்த்து ஆள வேண்டும் என்ற இந்தியர்களின் இயற்கையான விருப்பத்தை இந்திய அரசு அறியும்; அரசு அதைப் புறக்கணிக்காது. ஆயினும், பிரிட்டிஷ் வாணிபத்துக் காகட்டும், இந்திய வாணிபத்துக்காகட்டும் ஒரு சட்டத்தின் விதிகளை விட நல்லெண்ணமும் மெய்யன்புமுள்ள தொடர்பு களே மிக முக்கியம் என்று என் மனத்திற்குத் தோன்று கிறது. இத்தகைய உறவுகளை ஏற்படுத்திக் கொள்வதே நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் இரு நாடுகளின் நலன் களுக்கும் உகந்த பாதுகாப்பாயிருக்கும். நல்லெண்ணம் நிறைந்த சூழ்நிலையில் பிரிட்டனின் தொழிலும் இந்தியாவின் தொழிலும் ஒத்துழைப்பதாலேயே இந்தியத் தொழில் முயற்சி விரைவாகவும், மிகப் பயனுள்ள முறையிலும் வளர்ச்சி பெற முடியும் என்று நான் உறுதியாக நம்பினேன்.''

(டைம்ஸ் ஆப் இண்டியா, டிசம்பர் 11, 1945.)

பரஸ்பர ஒத்துழைப்பு வேண்டி தாராள மனப்பான்மை யுடன் கூறப்பட்ட கூற்று இது என்று கருத இடமில்லாதவாறு, பிரிட்டிஷ் முதலாளித்துவத்தின் தெளிவான கோரிக்கைகள் மற்றும் பல பிரமுகர்களின் உரைகளில் ஒலிக்கின்றன.

இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் நிதியின் ஏடான காபிடல் 1945, நவம்பர் 15 ஆம் நாள் இதழில் எழுதியது:

''இப்போதோ அல்லது எதிர்காலத்திலோ நாட்டை விட்டு விரட்டப்படும் நோக்கம் பிரிட்டிஷ் வர்த்தகத்திற்கு இல்லை. . . . எதிர்காலத்தில் அதன் பணி சார்நிலையுடையதா யிருக்கும் என்று சிலருடைய பார்வைக்குத் தோன்றிய போதிலும், எந்த நாட்டின் வளப்பத்திற்கு அது பேருதவி புரிந்ததோ அந்த நாட்டிலிருந்து அது சாப்பமற கொட்டி வெளியேற்றப்படுவதற்கு இணங்காது.''

கூட்டு வர்த்தகக் கழகங்களின் தலைவரான சர் ரென்விக் ஹாட்டோ 1945, டிசம்பர் 10 ஆம் நாள் இயம்பினார்:

''நியாயமாக நடத்தப்படுவார்கள்என்று உறுதி அளிக்கப் பட்டால், இந்திய நாட்டுக்கு நிரந்தரமான நன்மைகள் விளைவிக்கக் கூடிய தொழிற்சாலைகளை நிறுவ ஐக்கிய முடியரசின் தொழிலதிபர்கள் பலர் தயாராக இருப்பர். ஆனால், யாரோ கவர்ந்து கொண்டு செலவிடுவதற்காகப் பணம் வழங்க அவர்கள் இயற்கையாகவே விரும்பவில்லை, பிரிட்டன் முதற்

பொருள்களையும் நிபுணர்களையும் வழங்க, பிரிட்டானியர்களை நாட்டுக்கு வெளியே இந்தியாவுக்கு அனுப்பிப் புதிய தொழில்களை அங்கு தொடங்கி அவற்றையும் ஏற்கனவே அங்குள்ள தொழில்களையும் நிர்வாகம் செய்யவும் விடாமல் தடுப்பது ஒருதலை ஏற்பாடாக இருக்க முடியாது.''

(டைம்ஸ் ஆப் இண்டியா, டிசம்பர் 11, 1945)

ராயல் சொசைடியின் செயலாளரான பேராசிரியர் ஏ. வி. ஹில் பிரிட்டிஷ் கோரிக்கைகளை இன்னும் தெளிவாக வெளியிட்டார்:

''வெறும் அன்புக்காகப் பிரிட்டிஷ் தொழில் இவற்றை எல்லாம் செய்யப் போவதில்லை என்பதை அவர்கள் (இந்தியர்கள்) உணர வேண்டும். தங்கள் ஆற்றலினாலும் திறமையினாலும் ஒன்றை நிறுவும் பிரிட்டிஷ் தொழிலதிபர்கள் அதன் நிர்வாகத்தில் சிறுபங்கு ஏற்க இசைய வேண்டும் என்று அவர்கள் எதிர்பார்க்க முடியுமென நான் எண்ணவில்லை. அவர்கள் வளர்ச்சியை வேண்டினால், இங்குள்ள மக்களோடு சமபங்கு பகிர்ந்து கொள்ள வேண்டும்; ஆளுக்குப் பாதி என்பது நியாயமான ஏற்பாடாகத் தோன்றுகிறது.''

(பாரத் ஜோதி, ஏப்ரல் 1, 1946.)

தங்களோடு கூட்டு சேரக் கட்டாயப்படுத்துவதற்கு, இந்த நாட்டின் ஆட்சியாளர்கள் என்ற முறையில் தங்களுக்குள்ள செல்வாக்கு முழுவதையும் ஏகாதிபத்தியவாதிகள் பயன்படுத்துகிறார்கள். போர்க் காலத்தில் இந்தியத் தொழிலதிபர்கள் ஏராளமான லாபங்கள் ஈட்டி மிக வலியவர்களாக விளங்கியபோதிலும் பிரிட்டிஷ் தொழிலதிபர்களின் கையே ஓங்கியிருக்கிறது. நாட்டின் நிர்வாக யந்திரம் அவர்கள் கையில் உள்ளது. ஆகையால், முதற்பொருள்களை இறக்குமதி செய்யும் அதிகாரம் அவர்களிடம் உள்ளது. இந்தியாவின் ஸ்டர்லிங் பாக்கிகளைக் கையாளும் அதிகாரம் அவர்களிடம் உள்ளது. இந்திய மார்க்கெட் எங்கும் நுகர்பொருள்களை நிரப்ப ஏற்கனவே முயற்சி செய்யத் தொடங்கி விட்டார்கள், அவர்களால் செய்யவும் முடியும்.[1] இந்தச் செல்

1. போர் முடிவு நெருங்கும்போது அரசு செய்த முதல் பணிகளில் ஒன்று, இந்தியக் கம்பெனிகளுடன் உள்ள போர்க் குத்தகைகளை வரிசையாக ரத்து செய்து, போர்த் தேவைகளுக்கான ஆர்டர்களையும் பிரிட்டனிலுள்ள கம்பெனிகளுக்குத் தருவதுதான். 1945 மார்ச்சில் இங்கிலாந்துக்குப்போன ஹைதாரி தூதுகோஷ்டி ரூ. 20·6 கோடிக்கான பொருள்களை 1945லும், ரூ. 48.0 கோடிக்கான பொருள்களை 1946லும் பிரிட்டனிலிருந்து இந்தியாவுக்கு இறக்குமதி செய்ய ஏற்பாடு செய்தது: ஆர்டர் செய்யப்பட்டவை பெரும்பாலும் நுகர் பொருள்களே.

வாக்கு நிலையைப் பயன்படுத்தி இந்தியத் தொழிலதிபர்களைப் பணியவைக்க அவர்கள் முயலுகிறார்கள்.

இந்தியா, பர்மா, சிலோன் வணிக முன்னாள் பிரிட்டிஷ் ஆணையாளரான சர் டி. அயின்ஸ்கப் ஒரு பிரிட்டிஷ் முதலாளி களின் கூட்டத்தில் பேசுகையில், இந்திய வர்த்தகத்துக்கு எதிராகப் பிரிட்டிஷ் பெரும் வர்த்தகத்திற்குள்ள சௌகரியங்களை ஒளிவு மறைவில்லாமல் சுட்டிக் காட்டினார்:

> ''...இந்திய வர்த்தகத்திலும் நாட்டின் பிரத்தி யேகமான தேவைகளிலும் நமக்குள்ள தேர்ந்த அநுபவம், மார்க்கெட்டில் ஊடுருவியுள்ள நம் நிதி நலன்கள், இணையற்ற நம் வியாபாரத் தொடர்புகளும் புகழும் ஆகியவற்றுடன் **நாம் இப்போது இந்தியாவுக்குக் கடன்பட்ட நாடாக இருக்கும் சாதகமான நிலையையும் சேர்த்துப்** பார்த்தால், இந்தியா மீண்டும் நமது பெரிய ஏற்றுமதி மார்க்கெட்டாகும் என்று எதிர்பார்ப்பது மிகை ஆகாது.
>
> (பாம்பே கிரானிகிள், மார்ச் 5, 1945, பெரிய எழுத் துக்கள் சேர்க்கப்பட்டது.)

இந்திய முதலாளிகளுக்கும் பிரிட்டிஷ் முதலாளிகளுக்கும் இடையில் முன்பே பல பேரங்கள் உருவாகி விட்டன.

1945 ஜூனில், இந்தியாவின் மிகப்பெரிய ஏகபோகவுரிமை நிறுவனங்களில் ஒன்றான பிர்லா பிரதர்ஸ் லிட்.டுக்கும், இங்கி லாந்தின் நஃபீல்டு நிறுவனத்துக்கும் இடையில் இந்தியாவில் கார்கள் உற்பத்தி செய்வதற்கு ஓர் ஒப்பந்தம் ஆகியுள்ளது. செய்தித் தாள்களில் வெளிவந்துள்ளபடி பிர்லா—நஃபீல்டு ஒப்பந்தம் (அதன் உண்மையான தகவல்கள் வெளியிடப்பட வில்லை), இரு நிறுவனங்களும் கூட்டாக இந்தியாவில் ஒரு கம்பெனி தொடங்குவதற்கும், நஃபீல்டு நிறுவனத்தார் அதில் 25 லிருந்து 30 சதவீதம் மூலதனத்தில் பங்கு கொள்வதற்கும், லாபங்களில் நியாயமான பங்கு பெறுவதற்கும், பதிவுப் பொருள் தனியுரிமை ஊதியம் பெறுவதும் முதலியவற்றுக்கு ஏற்பாடு செய்கிறது. ''இந்தியாவில் சிக்கனமாக உற்பத்தி செய்து வழங்க முடியாத தொழில் நுட்பப் பாகங்களை நஃபீல்டு நிறுவனத்தாரே உற்பத்தி செய்ய வேண்டியது'' என்றும், ''எந்த யந்திர உறுப்புகளை இந்தியாவில் செய்வது, எவற்றைப் பிரிட்டனில் செய்வது என்பதைத் தீர்மானிக்க வேண்டியவர்கள் நஃபீல்டின் தொழில் நுட்பப் பணியாளர்களே'' என்றுமே இவ் ஒப்பந்த ஏற் பாடு (காபிடல், ஜனவரி 3, 1946).

இந்தியாவில் ஒரு பெரிய ஏகபோகவுரிமை நிறுவனமான டாடாக்களுக்கும், இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (ஐ.சி.ஐ)க்கும் 1945 டிசம்பரில் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. இந்தியாவில் கனரக ரசாயனத் தொழில் தொடங்க இந்த ஒப்பந்தம் செய்தி ஏடுகளில் அறிவித்தபடி, முதலீட்டில் 24 சதவீதம் ஐ.சி.ஐ. தரும்; மிச்சத்தில் பெரும்பகுதியை டாடாக்களே எடுத்துக் கொள்வர். ''உள்நாட்டுத் தேவைகளை எல்லாம் உள்நாட்டு உற்பத்தியாலேயே தீர்க்க முடிகிற காலம் வரும்வரை உள்நாட்டில் குறிப்பிடப் பட்டவையும் ஐ.சி.ஐ. யால் இறக்குமதி செய்யப்பட்டவையுமான சாயப் பொருள்கள் இரு கம்பெனிகளும் சேர்ந்தே விற்பனை செய்யும்.'' (ஏ.பி.ஐ. செய்தி, டிசம்பர் 22, 1945.) இந்தக் காலம் பதினைந்து முதல் இருபதாண்டுகள் நீடிக்கும் என்று சொல்லப்படுகிறது.

இந்திய, பிரிட்டிஷ் வர்த்தகர்களுக்கு இடையில் இம்மாதிரி இன்னும் பல ஒப்பந்தங்கள் ஏற்பட்டு வருகின்றன.

இந்தியாவிலுள்ள பெரிய, நடுத்தர வர்த்தகர்களுடன் செய்து கொண்டுள்ள இந்த ஒப்பந்தங்களையன்றி, கொடுங்கோல் சமஸ்தானங்களைத் தங்கள் எதிர்காலத் தளங்களாக, வேறெதையும் விடப் பொருளாதாரத் துறைக்குத் தளங்களாகப் பயன் படுத்திக்கொள்ளப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் திட்டமிடு கிறார்கள். அரசர்களின் நிர்வாகத்துறை பங்கு கொண்டாலும் சரி, பங்கு கொள்ளாவிட்டாலும் சரி, அவர்கள் மேலும் மேலும் சமஸ்தானங்களுக்கு மூலதனம் அனுப்ப விரும்புகின்றனர். 1945 ஏப்ரலில் வெளியான தன் தொழில் கொள்கை அறிவிப்பில் இந்திய அரசு சமஸ்தானங்களில் தொழில்வளர்ச்சிக்குச் சிறப்பான ஏற்பாடு செய்துள்ளது. அறிவிப்பு கூறுவதாவது:

> ''தொழில் வளர்ச்சியில் சமஸ்தானங்களுக்குள்ள நியாய மான ஆர்வம் புறக்கணிக்கப்படவில்லை என்பதை உறுதி செய்யும் விதத்தில் லைசன்ஸ் வழங்கும் முறை நிர்வகிக்கப்பட வேண்டும் என்பதும் தெளிவாகிறது.''
>
> (ஹிந்துஸ்தான் டைம்ஸ், ஏப்ரல் 23, 1945)

தொழில் பெருக்கத்தைத் தடுக்க உருவாக்கப்பட்ட ''லைசன்ஸ் முறை'' என்ற கருவி வளர்ச்சியின் வழிகளைக் கட்டுப்படுத்து வதையும் நோக்கமாய்க் கொண்டது. ஒருகால் லைசன்ஸ்களையும் முதற்பொருள்களையும் ஒதுக்குவதில் சமஸ்தானங்களுக்கு சலுகை தருவதும் நோக்கமாக இருக்கலாம். ஏனெனில், பிற்போக்காளர் களாகிய மன்னர்களின் ஆட்சியில் பிரிட்டிஷ் மூலதனம் பத்திர மாக வரவேற்கப்படும்.

இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் நிதி நலன்களின் ஏடாகிய 'காபிடல்' 1946, ஜனவரி 24 இல் எழுதிய தலையங்கத்தில் பிரிட்டிஷாரின் நோக்கங்களைக் கரவில்லாமல் வெளியிடுகிறது:

''தங்களுடைய எல்லைக்குள் தொழில் முயற்சிகளைக் கவர்ச்சிக்க எல்லோரும் (சமஸ்தானங்கள்) ஆர்வமாயுள்ளனர். பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள நிலைமையோ, சில சமயங்களில் புதிதாய்த் தொழில் தொடங்க முயலுபவர்கள் இங்கு நிலவும் அரசியல் கொந்தளிப்பிலிருந்தும், நாள்தோறும் அதிகரிக்கும் கட்சி, தொழிற்சங்கக் கோரிக்கைகளிலிருந்தும் தப்பி ஓரளவு அமைதி நிலவும் சமஸ்தானம் ஒன்றுக்குப் போய்விடலாமோ என்று யோசிக்கும்படியாக உள்ளது; பரம்பரையாகவும் வழக்கமாகவும் சமஸ்தான ஆட்சியாளர்கள் வெளியிலிருந்து தலையீடு இல்லாமல் வர்த்தகம் செய்ய விரும்பும் தொழிலதிபர்களிடம் பரிவோடு நடந்து கொள்வார்கள் என்று எதிர்பார்க்கலாம்.''

மன்னர்களின் இந்தியாவினுல் இந்த உறுதி முன்பே அளிக்கப்பட்டு விட்டது.

இந்தியத் தொழிலதிபர்கள் பிரதிநிதிக் குழுவுக்குப் பின்னுல் இங்கிலாந்துக்குச் சென்ற இந்திய சமஸ்தானங்களின் தொழிலதிபர்கள் பிரதிநிதிக் குழுவின் தலைவரும், பாடியாலா சமஸ்தான முதலமைச்சருமான திரு மாலிக் முன்னேறியுள்ள வெளிநாட்டுத் தொழிலதிபர்களுடன் கூட்டு முறையில் ஒத்துழைப்பதை வெளிப்படையாக ஆதரித்துள்ளார். திரு மாலிக் உரைக்கிறுர்:

''இங்கிலாந்திலிருந்தோ அமெரிக்காவிலிருந்தோ வந்த ஒரு தொழிலதிபரை நாம் பற்றிக்கொண்டால், அவருக்கும் தொழிலில் ஒரு பொறுப்பு இருந்தால் — 30 அல்லது 40 சதவீதமோ அல்லது எவ்வளவாக இருந்தாலும் சரி — அந்தொழிலில் வெற்றி பெற வேண்டும் என்ற அக்கறை அவருக்கும் இருக்கும். திறமை வாய்ந்த, அனுபவமுள்ள, முன்னேற்றம் கண்ட தொழிலதிபர்களை அந்த அளவுக்குக்கூட நாம் நம்பத் தயாராக இல்லாவிட்டால் அவர்கள் நம்மோடு மனப்பூர்வமாய் ஒத்துழைப்பார்கள் என்று நீங்கள் எப்படி எதிர்பார்க்க முடியுமென எனக்குத் தெரியவில்லை.''

(டைம்ஸ் ஆப் இண்டியா, ஜனவரி 17, 1946.)

இந்திய மன்னர்கள் கழகச் செயலாளரான திரு மக்புல் அஹமத் ஏஷியாடிக் ரிவ்யூ ஏட்டில் எழுதிய ஒரு கட்டுரையிலும் இதே கருத்தை வெளியிடுகிறுர்:

> ''சமஸ்தானங்களின் தொழில் வளர்ச்சிக்கு இந்தோ-பிரிட்டிஷ் கூட்டாண்மைக்கு நிறைய வாய்ப்பு உண்டு.''

மேலே கூறியவற்றிலிருந்து, ஏகாதிபத்தியம் இந்தியாவிலுள்ள தன் நிதி-மூலதனத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்காக இந்திய மண்ணில் மேலும் மேலும் ஆழமாய் அஸ்திவாரம் தோண்டிக் கொண்டிருக்கிறது என்று தெளிவாகிறது. இந்தியத் தொழிலதிபர்களுடன் ராஜி செய்துகொண்டு இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் முதலீடுகள் எப்போதும் பாதுகாப்பாக இருக்க முயற்சி செய்யப் படுகிறது. அவர்கள் விரும்பிய விளைவுகள் ஏற்கனவே புலப்படத் தொடங்கிவிட்டன. இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் மூலதனத்தைப் பற்றிப் பேசுகையில், இந்தியாவின் முன்னணி ஏகபோக உரிமைவாதியும் நஃபீல்ட் ஒப்பந்தத்தில் ஒரு கூட்டாளியுமான திரு. ஜி.டி. பிர்லா பின் வருமாறு கூறியுள்ளார் :

> ''இவைகளின் சொத்துரிமை என்றைக்காவது பறிக்கப் படும் என்று நான் நம்பவில்லை. இந்த பிரிட்டிஷ் கம்பெனிகள் தொடர்ந்து நீடிக்கும்.''
>
> (ஹிந்துஸ்தான் டைம்ஸ், ஏப்ரல் 11, 1946.)

இப்போதுள்ள முதலீடுகளுக்கு மட்டும் பாதுகாப்பு தேடப்பட வில்லை. இந்திய சமஸ்தானங்களின் கொடுங்கோல் மன்னர்களைப் பேணுவதன் வாயிலாகப் புதிய பிரிட்டிஷ் முதலீடுகளுக்கு வழி செய்யத் திட்டமிடப் படுகிறது.

இந்த ஏற்பாடுகள் இந்தியாவைத் தொழில் மயமாக்க ஒருகாலும் பயன்படமாட்டா. பிர்லா-நஃபீல்டு, டாடா-ஐ.சி.ஐ. ஆகிய இரு முக்கியமான வாணிப ஒப்பந்தங்களின் நிபந்தனைகளிலிருந்து, இந்தக் கூட்டாண்மைகளின் மூலம் இந்தியாவில் கனரகத் தொழில்கள் ஒருகாலும் தொடங்கப்படமாட்டா என்பது தெளிவாய்த் தெரிகிறது. ஒரு முடிவில்லாத காலம்வரை இங்கிலாந்திலேயே ரசாயனப் பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்டு இந்திய மக்களிடம் இந்திய வணிகக் குறியிட்டு விற்பனை செய்யப்படும். அது போலவே, பிரிட்டனில் உற்பத்தியான கருவிகளையும் உறுப்புகளையும் தொகுத்துருவாக்கும் வெறும் தொழில் பட்டறையாக இந்தியா ஆகும். பிர்லா-நஃபீல்டு ஒப்பந்தத்தின்படி ''இந்திய உற்பத்தி''யான கார்களின் தன்மை ''ஹிந்துஸ்தான்-10'' காரிலேயே வெளிப்பட்டு விட்டது. இந்தக் கார் ''இந்தியாவில் செய்யப்பட்டது'' என்று பெரிதாக விளம்பரம் செய்யப்பட்டது. ஆனால், உண்மையில் அதன் உறுப்புகள் ''மாரிஸ்''கார் குறியிட்டவை, இந்தியாவில் கோர்க்கப்பட்டவை.

ஆக, இத்தகைய ஏற்பாடுகள் இந்தியாவில் கனரகத் தொழிலும், கனரக ரசாயனத் தொழிலும், பொறியியல் தொழிலும் தோன்றாமல் இன்னும் தடுக்கவும் முடிந்தவரை கட்டுப்படுத்தவும் பிரிட்டனில் உற்பத்தியான பொருள்களுக்கு இந்தியாவை உண்மையிலேயே பாதுகாப்பான மார்க்கெட்டாய் வைத்திருக்க உறுதி செய்து கொள்ளவும் செய்யப்படும் திரை மறைவு முயற்சிகளே. 1945, டிசம்பர் 27ஆம் நாள் பம்பாய் கிரானிகிள் தலையங்கத்தில் குறிப்பிட்டபடி, இம்மாதிரி ஒப்பந்தங்களின் விளைவாக "உரிமை அறுதியுள்ள புதுவகை நலன்கள் தோன்றும்; அவை இந்நாட்டை தொழில் மயமாக்கும் தீவிர முயற்சியில் பெரும் தடையாக இருக்கும் . . . இறுதியாகத் தேசிய அரசு உருவாகும்போது அவற்றை முறியடிக்க மிகச் சிரமப்பட வேண்டியிருக்கும்."

இந்திய ஏகபோக உரிமையாளர்களுக்கும் பிரிட்டிஷ் ஏகபோக உரிமையாளர்களுக்கும் இடையில் ஏற்பட்ட இந்தப் பொருளாதார ஒப்பந்தங்கள் 1945-ல் பெருமளவில் பெருகி, அரசியலமைப்புப் பேச்சு வார்த்தைகளுக்கும் அவற்றை அடுத்து 1946-ல் காண வேண்டிய அரசியல் தீர்வுக்கும் முக்கியமான பின்னணி ஆகிவிட்டன.

## 9. இந்தியாவில் ஏகாதிபத்தியத்தின் விளைவு

பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவில் "ஒரு சமூகப் புரட்சி விளைவிப்பதாய்"க் கூறின. "அந்தப் புரட்சியைத் தோற்றுவிப்பதற்கு வரலாற்றின் உணர்வற்ற கருவி இந்தியா" என்று மார்க்ஸ் வருணித்தபோது அவர் மனதில் இரண்டுவிதச் செயல் முறைகள் இருந்ததாய் அவருடைய விளக்கத்திலிருந்து தெரிகிறது.

முதலாவது, பழைய சமூக முறையின் அழிவு.

இரண்டாவது, ஒரு புதிய சமூக முறைக்கு உருப்படியான அஸ்திவாரம் இடுவது.

இந்த இரண்டு அம்சங்களும் இன்னும் தொடர்ந்து செயல்படுகின்றன; ஏகாதிபத்தியத்தின் பழைய செயல் முறைகளிலிருந்து தோன்றிய நவீன ஏகாதிபத்தியத்தின் புதிய கட்டங்களின் தன்மைகளால் அந்த அமிசங்களின் பொருட் குறிப்பு மறைந்துள்ள போதிலும் அவை தொடர்ந்து செயல்பட்டுத்தான் வருகின்றன.

பழைய கைத்தொழிலின் அழிவு தொழில் தேடிவரும் தொழிலாளர்களின் மொத்த எண்ணிக்கை தொடர்ந்து குறைவதில் (போர் காரணமாக இந்த நிலை தடைப்பட்டுள்ளது) பிரதிபலிக்கிறது. நவீனத் தொழில் மெதுவாக முன்னேறுவதால் அந்தக்

குறை இன்னும் நிவர்த்தி ஆகவில்லை. பழைய கிராமப் பொருளாதாரத்தின் நாசம் முரண்பாடுகள் நிறைந்த ஒரு கட்டத்தை எட்டியுள்ளது. அது பொதுவானதொரு விவசாய நெருக்கடியை நோக்கி விரைகிறது.

மார்க்ஸ் முன் கூட்டியே கூறியது போல், அதே சமயத்தில் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் அமைத்த அஸ்திவாரத்தின்மீது நவீன தொழிலின் முதல் தொடக்கம்—மிக மெதுவாக இருப்பினும்—ஏற்பட்டுள்ளது; அது இந்திய சமுதாயத்தில் ஒரு புதிய வர்க்கத்தை உண்டாக்கியுள்ளது; நவீன யந்திரத் தொழிலில் சம்பளத்துக்கு வேலை செய்யும் பாட்டாளி வர்க்கம்; எதிர்கால இந்தியாவில் புதிய சமூக நெறியைத் தோற்றுவிக்கக் கூடிய படைப்புச் சக்தியின் பிரதிநிதிகள் இவர்கள்.

ஆனால், இந்தச் செயல்முறை மேலும் வளர்ச்சி பெற்றதன் விளைவாக இன்று ஒரு புதிய நிலை உருவாகியுள்ளது. மார்க்ஸ் எழுதிய போது இல்லாத புதிய சக்திகளை அது தோற்றுவித்துள்ளது. நவீன அளவுக்கு உற்பத்தி சக்திகள் பெருவாரியாகப் புதிய முன்னேற்றம் காண்பதற்கு இந்தியாவிற்குள் உள்ள நிலைமைகள் முற்றிலும் கனிந்துள்ளன. இதற்கான அவசியம் ஆண்டுதோறும் மிக அவசரமானதாகவும் தவிர்க்க முடியாததாகவும் ஆகி வருகிறது. மறுபுறம், நவீன ஏகாதிபத்தியம் இந்தியாவின் மீது தனக்குள்ள பழைய முதலாளித்துவ ஆதிக்கத்தின் நாசகரமான விளைவுகளால் புதிய முன்னேற்றம் காண்பதற்கும், அதை உருவாக்கத் தேவையான அஸ்திவாரம் இடுவதற்குமான தன்னுணர்வற்ற புரட்சிப் பணியை இப்போது செய்யவில்லை. மாறாக, நவீன ஏகாதிபத்தியம் இந்தியாவில் உற்பத்திச் சக்திகளின் முன்னேற்றத்திற்குப் பெருந் தடையாக உள்ளது. தன்னுடைய நிதி, அரசியல் ஆதிக்கத்தின் எல்லா ஆயுதங்களையும் பயன்படுத்தி அவற்றின் வளர்ச்சியை அடக்கவும் முடக்கவும் முயலுகிறது. இந்தியாவில் முதலாளித்துவ ஆட்சி உணர்வில்லாமல் புரட்சிப் பணி புரிவதாய் இனி கூற இயலாது. இந்தியாவில் நவீன ஏகாதிபத்தியத்தின் பணி முற்றிலும் முழுமையாகவும் பிற்போக்கானது.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் முன்பாதியில் முன்னேறி வந்த பழைய முதலாளித்துவம் இந்தியாவின் பழைய சமூக நெறியின் கட்டுக்கோப்பைத் தகர்த்தது. சில பிற்போக்கான சமய, சமூக எச்சங்களை எதிர்த்துத் தன்னுணர்வுடன் தாக்குதலும் நடத்தியது. மன்னருக்குப் பிறகு மன்னராக வீழ்த்தி அவர்களுடைய பிரதேசங்களைத் தன் ஆதிக்கத்தின்கீழ் கொண்டு வந்தது. மேலை ஐரோப்பியக் கல்வியையும், கருத்தையும் பரப்பும்

முதல் தொடக்கப் பணியைச் செய்தது. பத்திரிகைச் சுதந்திரக் கொள்கையைக் கூட சிறிது காலம் கடைப்பிடித்தது. இந்தக் காலத்தில் இந்திய சமுதாயத்தில் முன்னேறும் அமிசங்கள், அதாவது, விழித்துக் கொள்ளும் நடுத்தர வர்க்கத்தார், ராம் மோஹன்ராய் போன்றோர் பிரிட்டிஷ் ஆட்சியை ஆதரித்தார்கள். அதன் முயற்சிகளுக்கு உதவ முயன்றார்கள். நலிவுற்று வந்த பிற்போக்குச் சக்திகளும் அதிருப்தியுற்ற அரசர்களும் நிலப்பிரபுத்துவ சக்திகளும் எதிர்ப்புக்குத் தலைமை தாங்கின; ஆனால் அத்தலைமை 1857 கலகமாக முற்றிச் சிதறியது. அடக்கி ஒடுக்கிச் சுரண்டப் பெற்ற குடியானவ சமுதாயத்திற்குத் தலைமை தாங்கவோ பேசவோ எந்தச் சக்திகளாலும் இயலவில்லை. கலகம் தோல்வியில் முடிவதைத் தவிர வேறு வழி இல்லை.

1857 கலகத்திற்குப் பின் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் தங்கள் கொள்கையில் மாறுதல் செய்யலானார்கள். இந்தியாவில் நவீன ஏகாதிபத்தியம் மன்னர்களைக் கைப்பாவைகளாய்ப் பேணி வளர்க்கிறது. அவர்களுடைய அரசியல் முக்கியத்துவத்தை மேலும் மேலும் அதிகரிக்க முயலுகிறது. இதை அண்மையில் வெளியான அமைச்சரவைத் தூது கோஷ்டித் தீர்ப்பிலும் காணலாம். சீர்திருத்தம் வேண்டும் முற்போக்கு இந்தியக் கருத்துக்கு விரோதமாக (திருமண வயது, தீண்டாதாருக்கு எதிராக உள்ள தடைகள் அகற்றுவது போன்ற பிரச்சினைகள்) பிற்போக்கான சமய, சமூக எச்சங்களை மிக ஆர்வத்துடன் காத்து நிலையாக்க முயலுகிறது. விரிவான அடக்கு முறைப் பின்னலால் பேச்சையும் எண்ணத்தையும் ஒடுக்கித் தாழ்த்துகிறது. சமூகக் கல்வி, தொழில் ஆகிய துறைகளில் முன்னேற்றம் வேண்டும் இந்தியர்களின் பெருங் கோரிக்கையைத் தடை செய்கிறது. இந்த லட்சணங்களை எல்லாம் கொண்டு பார்த்தால் இந்தியாவில் ஏகாதிபத்தியம் சமூகம், அரசியல், பொருளாதாரத் துறையில் கூட பிற்போக்குக் கோட்டையாகக் காட்சி தருகிறது.

ஆகையால் நவீன காலத்து இந்திய சமுதாயத்தின் முற்போக்குச் சக்திகள் யாவும் ஒன்றுபட்டு, மிகச் சக்தி வாய்ந்த கலக இயக்கத்தை முக்கியமான விரோதியும் பிற்போக்குக் கோட்டையுமான ஏகாதிபத்தியத்துக்கு எதிராக நடத்துகின்றன.

ஏகாதிபத்தியத்தின் தளைகளையும், ஏகாதிபத்தியம் பேணிக் காக்கும் காலம் கடந்த பொருளாதார அமைப்பையும் எதிர்த்து இந்தியாவின் உற்பத்தி சக்திகள் மிகவும் சிரமத்துடன் முன்னேற முயலுகின்றன. இந்தப் போராட்டம் விவசாய நெருக்கடியில் வெளிப்படுகிறது. அது ஏகாதிபத்தியப் பொருளாதாரம்

திவாலாகி விட்டதையும் உறுதியான மாறுதல் மேற்கொள்ளப் படவேண்டியதன் அவசியத்தையும் காட்டுகிறது. ரஷ்யாவில் ஜார் ஆட்சியின் இறுதி ஆண்டுகளிலும், பிரான்சில் பதினெட்டாம் நூற்றுண்டின் இறுதியிலும் விவசாயிகள் புரட்சியின் அறிகுறி களைக் காண முடிந்தது போல் இப்போதும் இந்தியாவில் விவசாயிகள் புரட்சி நெருங்கி வருவதன் அறிகுறிகளைக் காண முடியும். இந்தியாவில் விவசாயிகள் புரட்சி ஏகாதிபத்திய ஆட்சியை எதிர்த்து நடைபெறும் தேசிய, ஜனநாயக விடுதலை இயக்கத்தோடு பின்னிப் பிணைந்துள்ளது. இந்த இரண்டின் சேர்க்கைதான் இப்போது ஆரம்பமாகும் இந்திய வரலாற்றின் புதிய காலத்துக்குத் திறவுகோல்.

ஆகையால், இந்தியாவில் நவீன அரசியல் நிலைமையையும், தேசீயப் போராட்டத்தின் பிரச்னைகளையும் பற்றின ஆய்வை விவசாயப் பிரச்னையின் ஆய்வோடு தொடங்க வேண்டும்.

மூன்றும் பாகம்

# இந்தியாவின் அடிப்படைப் பிரச்னை = விவசாயப் பிரச்னை

அத்தியாயம்-7. **விவசாய நெருக்கடி**

1. விவசாயத்தைச் சார்ந்த மிகை மக்கள் கூட்டம்
2. வேளாண்மை மீது மிகுந்த நெருக்கம் ஏற்பட்டதன் விளைவுகள்
3. விவசாயத்தின் தேக்கமும், சீர்கேடும்

அத்தியாயம்-8. **உழவர்கள் மீதுள்ள சுமைகள்**

1. நில ஏகபோகம்
2. நில முறையில் மாறுதல்
3. நிலப் பண்ணையார் முறையின் தோற்றம்
4. வறுமைவாய்ப்பட்ட உழவர்கள்
5. கடன் சுமை
6. மும்மடங்குச் சுமை

அத்தியாயம்-9. **வேளாண்மைப் புரட்சி நோக்கி**

1. விவசாய நெருக்கடியின் வளர்ச்சி
2. விவசாயப் புரட்சியின் தேவை
3. அரசின் சீர்திருத்தக் கொள்கைகள் தோல்வி
4. உழவர் இயக்கத்தின் வளர்ச்சி

அத்தியாயம் 7

# விவசாய நெருக்கடி

*''உழவர்களின் இன்றைய இழிநிலை, ஒரு விவசாயப் புரட்சியின் வருகையை அறிவிப்பதாயுள்ளது.''*

—பேராசிரியர் ஆர். முகர்ஜீ, ''இந்தியாவின் நிலப் பிரச்னைகள்,'' 1933.

இந்திய உழவர் சமுதாயத்தின் வறுமையும் துன்பமும் உலகத்தில் மிகவும் கொடிய வகையைச் சேர்ந்தவை. இந்தியாவின் விவசாயப் பிரச்னைகளைப் பற்றி அண்மையில் வெளிவந்த மிகப் புகழ்பெற்ற நூல்களில் ஒன்றான, ''இந்தியாவின் நிலப் பிரச்னைகளில்'' பேராசிரியர் ராதா கமல் முகர்ஜீ நிலவரத்தை பின்வருமாறு வருணிக்கிறார்:

''இந்தியாவின் உழவர்கள் மிகக் குறைவான மூலவளங்களில் பாடுபடுகிறார்கள்; அவர்களுடைய நலத்தைக் கவனத்தில் கொண்டு நாம் பார்த்தால் அவை மிக மோசமாய்ப் பகிர்வு செய்யப்பட்டுள்ளதைக் காணலாம். சென்ற ஐம்பது ஆண்டுகளில் நிலவுடைமையிலும் குடிவாரத்திலும் ஏற்பட்டுள்ள மாறுதல்களை நாம் ஆராய்ந்தால், இந்தப் பகிர்வுக் குறைபாடுகள் மேலும் மோசமாகி வருவதைக் காணலாம். சிறு நில உரிமையாளரின் பொருளாதார நிலைமை இழிந்துவிட்டது. அதே சமயம், நிலவுடமையாளர்களுக்கும் சொத்திழந்த உழவர்களுக்கும் இடையிலும், அதிகரித்துவரும் குத்தகை வாங்கும் வர்க்கத்தினருக்கும் பாடுபடும் விவசாய அடிமைகளுக்கும் இடையிலும் உள்ள வேறுபாடு நம் விவசாய வரலாற்றில் ஒரு நெருக்கடியான நிலை ஏற்பட்டுள்ளதைக் குறிக்கிறது....இந்தியாவின் சில பகுதிகளில் குடியானவர்களின் வர்க்கவுணர்வின் முணுமுணுப்பு கேட்கிறது; அது இன்றைய விவசாய ஆட்சி முறையை அறைகூவுகிறது.'' (பக். 4.)

அவர் பின்வரும் முடிவுக்கு வருகிறார்:

''பலவித அரசியல், பொருளாதார நோக்குடையவர்கள் இந்தியாவில் இன்றுள்ள நிலவுடைமை முறையில் மாறுதல்கள் செய்யப்பட வேண்டியது மிக அவசியம் என்று வற்புறுத்து கிறார்கள். இந்தக் கருத்து சமூகத்தின் எல்லா வகுப்பினருக்கும் இடையில் இப்போது பரவி விட்டது. நிலத்தைச் சார்ந்து வாழும் மக்களின் கூட்டம் மிக அதிகமாகி விட்டது. நிலம் சிறுசிறு உடைமைகளாய்ப் பிரிந்து ஒரு குடும்பம் முழுவதும் அங்கு பாடுபடவோ, அல்லது பிழைக்கவோ முடியாத நிலையில் உள்ளது. இப்போதுள்ள மிகத் தாழ்ந்த வாழ்க்கைத் தரத்தின் அளவிலும் அவர்கள் வாழ இயலாது. அதே சமயம், நிலக் கிழார் வெறும் குத்தகை வசூலிப்பவராக இருக்கிறாரேயன்றி செல்வ உற்பத்தியாளராக இல்லை. விவசாயக் கூட்டுப்பணி யில் காலம் காலமாய்த் தனக்குள்ள கௌரவமான பணிகளை அவர் இப்போது செய்வதில்லை. இன்று அவர் விவசாயத் திற்குத் தேவையான மூலதனமும் தருவதில்லை. உழவுப் பணிகளை நிர்வாகம் செய்வதுமில்லை. அவருக்குக் கீழே நடுவர் களின் ஒரு வகுப்பினர் தோன்றியுள்ளனர். இப்போதைய நிலவுடைமை முறையிலுள்ள சிக்கல்களைப் பயன்படுத்திக் கொண்டு அவர்கள் லாபம் அடைவதுடன், உண்மையாகப் பயிரிடுவோரின் சிரம தசையை மேலும் அதிகமாக்குகிறார் கள். இது விமரிசனம் அல்ல, உண்மைத் தகவல்களின் தொகுப்பு. பழைய நிலவுடைமை முறை சிதைந்து விட்டது. அதன் இடத்தில் புதியதொரு முறையைத் தோற்றுவிக்க வேண்டியது மிக அவசியம். அந்தப் புதிய முறை, விவசாய, சமூக வாழ்க்கையின் இக்கால நிலைமைகளுக்கும் தேவை களுக்கும் உகந்ததாக இருக்க வேண்டும்'' (பக். 361-2).

இந்தியாவின் இன்றைய விவசாய நிலைமையைப் பற்றின பொதுவான இந்த முடிவை நோக்கர்கள் எல்லாரும் ஏற்கிறார் கள். ஆனால் எத்தகைய மாறுதல்கள் செய்யப்பட வேண்டும், அவை எப்படி நிறைவேற்றப்பட வேண்டும் என்ற கேள்வி எழுந்த வுடனே, ஏகாதிபத்திய ஆட்சியின் கீழுள்ள இந்தியாவின் இன்றையப் பொருளாதார, சமூக முறைகளைப் பற்றின எல்லா கேள்விகளும் தொடர்ந்து எழுகின்றன. ஏனெனில், மக்களின் வாழ்க்கையின் குரல்வளையை நெரிக்கும், ஏகாதிபத்தியம் பேணிக் காக்கும் இன்றைய சமூக நெறியின் அஸ்திவாரங்களை விவசாயத் தொடர்புத் துறையில்தான் காண முடியும். இங்கே தான் மாறுதலை வேண்டும், சக்தி வாய்ந்த உந்து விசைகள் தோன்றுகின்றன. அவை இப்போதுள்ள சமூக நெறியை ஒழித்துப் புதிய சமூக நெறிக்கு வழிவகுக்கத் திரண்டு கொண்டிருக்கின்றன.

ஏகாதிபத்தியத்தின் கீழ் நாட்டிலுள்ள பொதுவான பொருளாதாரத்தையும், ஏகாதிபத்திய ஆட்சியின் கீழ் பராமரிக்கப்படும் இன்றைய வர்க்கவுறவுகளின் அமைப்பையும் விடுத்து இந்தியாவின் விவசாயப் பிரச்னையை மட்டும் தனியாகக் கவனிக்க முடியாது.

1926இல் இந்தியாவில் விவசாயத்திற்கான ராயல் கமிஷன் நியமிக்கப்பட்டது. 1928இல் 800 பக்கங்களுள்ள ஒரு கனமான அறிக்கையை அது வெளியிட்டது. அத்துடன் சாட்சியங்களின் பதினாறு தொகுதிகள் சேர்க்கப்பட்டிருந்தன. இக் கமிஷன் நியமிக்கப்படுகையில், ''விவசாய முன்னேற்றத்துக்கும், கிராமப்புற மக்களின் நலனையும் வளத்தையும் அதிகரிப்பதற்குமான'' சிபாரிசுகள் செய்யுமாறு அது செய்ய வேண்டிய பணி பற்றி அதற்கு ஆலோசனை கூறப்பட்டது. ஆனால், அதே சமயத்தில் அது செய்ய வேண்டிய பணிபற்றி அது பின்கண்டபடி எச்சரிக்கவும் பட்டது:

> ''இப்போதுள்ள நிலவுடைமை முறை, குத்தகைமுறை, நிலவரியும் பாசனச் செலவுகளும் அறுதியிடப்படும் முறை ஆகியவை பற்றின சிபாரிசுகள் செய்யும் பணி இக்கமிஷன் செய்ய வேண்டிய கடமைகளின் வரம்புக்குள் வராது.''

உண்மையில், டென்மார்க் இளவரசன் இல்லாத ஹாம்லெட் கதைதான் இது. இந்தியாவிலுள்ள நிலவுடைமைப் பிரச்னையை ஆராயாமல் விவசாயப் பிரச்னையை ஆராய முடியாது.

இன்றைய விவசாய நெருக்கடிக்கு ஆதார அடிப்படையான எளிய பிரச்னைகள் வருமாறு:

(1) மற்ற பொருளாதாரப் பாதைகள் அடைபட்டதால் விவசாயத்தைச் சார்ந்து பிழைக்கும் மக்கட் கூட்டம் மிக மிகுந்தது;

(2) நில ஏகபோகத்தின் விளைவும் குடியானவர்கள் மீதுள்ள பளுவும்;

(3) தாழ்ந்த நுட்பச் செயல் முறையும் அதன் வளர்ச்சிக்குத் தடைகளும்;

(4) பிரிட்டிஷ் ஆட்சியில் ஏற்பட்ட விவசாயத் தேக்கமும் நலிவும்;

(5) குடியானவர்கள் மேலும் மேலும் வறுமைவாய்ப்படுதல்; நிலவுடைமை சிறுசிறு துண்டுகளாய் பிரிக்கப்பட்டது; புல பகுதியினர் நிலமிழந்தது;

(6) மூன்றில் ஒரு பங்கிலிருந்து பாதியாக மிகுந்த குடியானவர்கள் வேலையற்ற பாட்டாளிகளாய் மாறிவிடுவதற்கு தூண்டும் வர்க்கப் பாகுபாடு அதிகரித்தல்;

இத்தகவல்களைக் கவனத்தில் கொண்டே ஒரு தீர்வுக்கான விஞவை ஆராய முடியும்.

## 1. விவசாயத்தைச் சார்ந்த மிகை மக்கள் கூட்டம்

இந்தியா ஒரு ''கிராமக் கண்டம்'' என்று அடிக்கடி நாம் நினைவு படுத்தப்படுகிறோம். குறிப்பாக, இந்த உண்மையில் ஜன நாயக, சமூக வளர்ச்சிக்கு ஏதோ தடை இருப்பதுபோல் நம்பு கிறவர்களே இவ்வாறு நினைவுபடுத்துகிறார்கள்.

இந்தியாவில் மிகப் பெரும்பாலான மக்கள் விவசாயத்தைச் சார்ந்திருப்பதையும், அதற்கு மாறாக மேற்கு ஐரோப்பிய மக்கள் தேர்ந்த தொழில் மய நிலையில் வாழ்வதையும் சுட்டிக் காட்டி, இந்திய சமுதாயத்தின் பின்தங்கிய தன்மைக்கு அத்தாட்சியான ஏதோ இயற்கை அதிசயம் போல அதைக் காட்டி, மாறுதல் செய்ய வேண்டுமெனில் மிக ஜாக்கிரதைத் தேவை என்கிறார்கள்.

1918ஆம் ஆண்டில் வெளியான, புகழ் பெற்ற மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கையின் ''இந்தியாவின் நிலைமைகள்,'' என்ற ஆரம்பப் பகுதியில் உள்ள அறிவிப்பை இதற்கு உதாரண மாய் கூறலாம்:

> ''வேளாண்மை மக்களின் ஒரு பெரிய அலுவல். சாதாரண காலங்களில் இங்கிலாந்து போன்ற மிகத் தரமாய் தொழில் மயமான நாடு ஒரு நூற்றில் 58 பேரைத் தொழிலுக்கும் 8 பேரை மட்டும் வேளாண்மைக்கும் தருகிறது. ஆனால் இந்தியாவோ நூற்றில் 71 பேரை விவசாயத்துக்கும் புல்வெளிக்கும் தருகிறது...இந்தியா முழுவதிலும் 31·5 கோடி மக்களில் 22·6 கோடி மக்களை மண் காக்கிறது; அவர்களுள் 20·8 கோடி மக்கள் தங்களுடைய சொந்த வயல் களிலோ, பிறருடைய வயல்களிலோ உழவு செய்வதால் பிழைக்கிறார்கள் அல்லது நேராக உழவைச் சார்ந்திருக் கிறார்கள்.''

அதுபோலவே, 1930-ல் வெளியான சைமன் கமிஷன் அறிக்கை—இங்கிலாந்தில் பெருமளவில் பிரதிகள் வெளியிடப் பட்டன—தன்'' வேளாண்மையின் பேராதிக்கம்'' என்ற ஆரம்பப் பகுதியில் மேற்கூறிய அறிவிப்பை மேற்கொள் காட்டி, அதனால் மாறுதல் ''மெள்ளத்தான் வரமுடியும்'' என்ற நம்பிக்கையுள்ள முடிவை கண்டு களிக்கிறது.

"பொதுவான அரசியல் தீர்ப்பை விரைவு படுத்துவதாயினும், பரம்பரை மரபை மீறி, பருவகாலம், தண்ணீர், பயிர்கள், கால்நடைகள் ஆகியவற்றிலுள்ள ஈடுபாட்டையும் திருவிழாக்கள், சந்தைகள், குடும்பக் கொண்டாட்டங்களிலுள்ள ஆர்வத்தையும், பஞ்சத்தையும், வெள்ளத்தையும் பற்றின அச்சத்தையும் மீறிக் கிராமப்புற எல்லேகளை விரிவு படுத்துவதாயினும்-நினைவுக்கு எட்டாத காலம் முதல் இந்திய கிராமவாசிக்குள்ள இம்மாதிரி ஈடுபாடுகளை மீறி ஏதாவது மாறுதல் வரவேண்டுமாயினும் அது 'மெள்ளத்தான்' வர முடியும்."

இந்தியாவில் பெரும்பாலான மக்கள் வேளாண்மையை நம்பி வாழ்கிறார்கள் என்பதும், அதற்கும் தொழில் மயமான நாடுகளுக்குமுள்ள வேற்றுமையும் பற்றி இதில் குறிப்பிடப்பட்டுள்ள தகவல்கள் உண்மையே. ஆனால், இந்த நிலைமைக்குக் காரணமான ஏகாதிபத்தியத்தின் காலனி ஆட்சி முறையிலுள்ள உந்து விசைச் சக்திகளைப் புறக்கணித்துவிட்டு இத் தகவல்கள் தரப்பட்டுள்ள விதம் மிகப் பொய்யான, தவறானதொரு சித்திரமாகிறது. முடிவும் முற்றிலும் பொய்யானதே. ஏனெனில், விவசாய நெருக்கடி முற்றிக் கடுமையானதால்தான் இந்தியாவில் விரைவான மாறுதல் அவசியமாகிறது.

ஏகாதிபத்தியம் தருகிற இந்த ஆபாசமான சித்திரத்தில் விட்டுப்போன உண்மை இது. மக்களில் நாலில் மூன்று பங்கினர் மிகுதியான, மிகைப் படுத்தப்பட்ட, அளவிறந்த, வீண் விரயம் வாய்ந்த முறையில் வேளாண்மையைச் சார்ந்து வாழ்கின்ற இன்றைய நிலை, தொன்றுதொட்டு வந்த பழைய இந்திய சமுதாயத்தின் தன்மையல்ல. அது நவீன காலத்திற்குத் தொடர்ந்து வந்ததும் அல்ல. ஆனால், மாறாக, இன்றைய அளவில் அது ஒரு நவீன காலப் பிரச்னை; ஏகாதிபத்திய ஆட்சியின் நேர்விளைவு. பிரிட்டிஷ் ஆட்சியில் வேளாண்மையை நம்பி வாழ்வோரின் அளவு மேலும் மேலும் அதிகரித்தது. வேளாண்மையும் தொழிலும் சம நிலையிலிருந்த பழையநிலை மாறி, ஏகாதிபத்தியத்தின் விவசாய அநுபந்தமாக இந்தியா பின்னுக்குத் தள்ளப்பட்டதன் விளைவே இது.

சென்ற அரை நூற்றாண்டுக் காலத்து அதிகார பூர்வமான சென்ஸஸ் அறிக்கைகளால் உண்மையான சித்திரம் வெளியாகிறது. அதற்கு முந்தின காலத்து சென்ஸஸும் கிடைத்தால் சித்திரம் கலக்கமூட்டுவதாயிருக்கும். முன்பு அடர்த்தியான மக்கட் தொகை இருந்த தொழில் நகரங்களைப் பாழ்படுத்தி, மக்களைக் கிராமங்களுக்குத் துரத்தி, அதே சமயம் கிராமங்களிலுள்ள

லட்சக்கணக்கான கைத்தொழிலாளர்களின் பிழைப்பில் மண்ணைப் போட்டு இந்தியத் தொழிலைக் குலைத்த முக்கியமான நாசவேலைகள் பத்தொன்பதாம் நூற்றுண்டின் முதல் முக்கால் பகுதியில்தான் நிகழ்ந்தன. இந்தக் காலத்துப் புள்ளி விவரப் பதிவேடு ஒன்றும் கிடைக்கவில்லை. ஆனால், அண்மைப் பத்தாண்டுகள் கால சென்ஸஸ் பதிவேடுகள், இந்தச் செயல்முறை தொடர்ந்து நம் காலத்தில் வெகு தூரம் சென்றுள்ளது என்பதைக் காட்டுகின்றன.

1881-ல் முதல் சென்ஸஸ்-மக்கட் தொகைக்கணக்கு-எடுக்கப் பட்டது. ஆயினும் அது முற்றிலும் நிறைவு பெருததாக இருந்தது; ஒப்பிட்டுப் பார்க்க அதில் அடிப்படை கிடைக்கவில்லை. வேலையில் இருப்பவர்கள் என்ற தலைப்பில் 11.5 கோடி மக்களில் 5.1 கோடி மக்கள் விவசாயிகள் என்று குறிப்பிடப்பட்டுள்ளனர்; அளவு வீதம் பாதிக்குக் கீழே இருக்கிறது—உண்மையில் மிகத் தாழ் வாக இருக்கிறது.

1891 முதல் 1921 வரை, சுமாராக ஒப்பிட்டுப் பார்க்கக் கூடிய அறிக்கைகள் கிடைக்கின்றன. அவை பின்வரும் சித்திரத்தை உருவாக்குகின்றன.

வேளாண்மையைச் சார்ந்துள்ள மக்கட் தொகையின் சதவீதம்

| | | | |
|---|---|---|---|
| 1891 | .. | .. | 61.1 |
| 1901 | .. | .. | 66.5 |
| 1911 | .. | .. | 72.2 |
| 1921 | .. | .. | 73.0 |

1931-ல் வகைப்பாடு செய்யும் அடிப்படையை மாற்றி அமைத்து, விவசாயத்தைச் சார்ந்தோரின் சதவீதத்தை 65.6 ஆகக் குறைத்துக் காட்டினர்கள். மாற்றம் காகிதத்தில்தான் இருந்ததேயன்றி உண்மை நிலையில் அல்ல. "வேளாண்மையை யும் மேய்ச்சல் நிலத்தையும் சார்ந்திருப்போரின் எண்ணிக்கை 1921-31க்கு இடையில் குறைந்திருப்பதாகத் தோன்றுவது பிரமை . . . தலைப்பு பிரித்துக் கணக்கிட உதவுவதே இன்றி அது உண்மை நிலையைக் குறிக்காது .... வேளாண்மையிலும் மேய்ச்சலி லும் ஈடுபட்ட மக்களின் சதவீதம் 1921-31க்கு இடையில் மாறவே இல்லை." (ஆன்ஸ்டே: "இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி". பக். 61.) இந்திய மத்திய பாங்கு விசாரணைக்குழு 1931-ல் அறிக்கையிட்டதையும் கவனிக்கலாம். (பக். 39.)

"வேளாண்மையை நம்பி வாழும் இந்திய மக்களின் அளவு வீதம் மிக அதிகம்; அது மேலும் அதிகமாகிக் கொண்டே இருந்திருக்கிறது. இந்த அளவுவீதம் 1891 இல் 61 சதவீதமாக இருந்தது. 1901 இல் 66 சதவீதமாகவும்,

1921 இல் 73 சதவீதமாகவும் அது உயர்ந்தது. 1931 ஆம் ஆண்டு மக்கட் தொகைக் கணக்கு நமக்குக் கிடைக்கவில்லை; ஆனாலும் அந்த எண்ணிக்கை 1931 இல் மேலும் ஏறியிருக்கும் என்று அநுமானம் செய்வது நியாயமாக இருக்கும்.''

பேராசிரியர்கள் மர்ச்சன்டும் வாடியாவும், ''முந்தின மக்கட் தொகைக் கணக்குகளில் பின்பற்றப்பட்ட பழைய வகைப்பாடு முறை பின்பற்றப்பட்டிருந்தால், விவசாயத்தைப் பொறுத்த மட்டில், உழைப்பாளர்கள் மட்டும் அல்ல அதைச் சார்ந்து பிழைப்போரின் எண்ணிக்கை 1931 இல் மொத்த ஜனத்தொகையில் 75 சதவீதம் அல்லது அதிகமிருக்கும் என்ற முடிவைத் தடுக்க முடியவில்லை.'' (''நமது பொருளாதாரப் பிரச்னை'': பக். 86.) புதிய வகைப்பாடு அடிப்படையில் கூட, 1931 ஆம் ஆண்டு எண்ணிக்கையான 66.6 சதவீதம்1891ஆம் ஆண்டு எண்ணிக்கையான 61·1 சதவீதத்தைவிட அதிகம்தானே.

பிரிட்டிஷ் முதலாளித்துவக் கொள்கை வாயிலாக வேளாண்மையை நம்பி வாழும் மக்களின் எண்ணிக்கை ஏறிக்கொண்டே போவதன் காரணங்கள் ஐந்தாம் அத்தியாயம், மூன்றும் பிரிவில் முன்பே விளக்கப்பட்டுள்ளன. இக் காரணங்களை மக்கட் தொகைக் கணக்கு ஆணையாளர் நன்கு அறிந்தே 1911 இல் பின்வருமாறு எழுதினார்:

> ''மலிவான ஐரோப்பியத் துணி வகைகளும் சாதனங்களும் ஏராளமாக இறக்குமதி செய்யப்படுவதாலும், இந்தியாவிலேயே மேலை நாடுகளில் இருப்பதைப் போன்ற பல பட்டறைகள் நிறுவப்பட்டதாலும் கிராமத் தொழில்கள் பெரும்பாலும் நாசமாக்கப்பட்டு விட்டன. விவசாயப் பொருள்களின் அதிக விலையால் பல கிராமக் கைத்தொழிலாளர்கள் தங்கள் பரம்பரைத் தொழிலைத் துறந்து வேளாண்மையை மேற்கொள்ள நேர்ந்தது. பழைய கிராம அமைப்பு முறையின் இச் சிதைவு எந்த அளவுக்குப் போகிறது என்பது இடத்துக்கு தகுந்தபடி மாறுபடுகிறது. மிகவும் முன்னேறிய மாகாணங்களில்தான் மாறுதல் மிக அதிகமாய்த் தென்படுகிறது.''
>
> (''இந்திய மக்கட்தொகை அறிக்கை'',1911, முதல் தொகுதி, பக். 408.)

தொழிலில் ஏற்பட்ட இச் சரிவும், அதைத் தொடர்ந்து, வேளாண்மையை ஒருதலையாகச் சார்ந்து மக்கள் வாழ்வதுமான இந்த நிலை 1911 முதல் இன்னும் உச்ச நிலையை எட்டியுள்ளது. 1911க்கும் 1931க்கும் இடையில் தொழிலில் ஈடுபட்டிருந்

தோரின் மொத்த எண்ணிக்கை 20 லட்சங்களுக்கு மேல் குறைந்தது; அதே சமயம் மக்கட் தொகை 3·8 கோடி கூடியது.

தொழிலைச் சார்ந்து வாழும் மக்களின் சதவீதம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1911 | .. | .. | .. | .. | 5·5 |
| 1921 | .. | .. | .. | .. | 4·9 |
| 1931 | .. | .. | .. | .. | 4·3 |

இந்த இருபதாண்டுகளில் மக்கட் தொகை 12 சதவீதம் கூடியது; தொழில் துறையில் வேலைக்கு அமர்ந்துள்ளோரின் எண்ணிக்கை 12 சதவீதம் குறைந்தது; மொத்த மக்கட் தொகையில் தொழில் துறைத் தொழிலாளர்களின் எண்ணிக்கை ஐந்தில் ஒரு பங்குக்கு மேல் குறைந்தது: 1941 இல் அது 4·2 சதவீதமாக மேலும் குறைந்தது. ''தொழில் மயமாக்கச் சிதைவு'' தொடர்ந்து அழிவு செய்வதையே இது பிரதிபலிக்கிறது—அதாவது, பழைய கைத் தொழில் நாசம், அதற்கு ஈடுசெய்யப் புதிய தொழில் ஏற்படாமை, அதன் விளைவாக விவசாயத்தை நாடி மக்கள் மேலும் மேலும் செல்லுதல்.

அதே நேரத்தில் உணவுத் தானியங்கள் அல்லாத பொருள்களின் உற்பத்தி, உணவுத் தானியங்களைவிட அதிகமாயிற்று. 1892-93க்கும் 1919–20க்கும் இடையில் உணவுத் தானியங்கள் பயிர் செய்யப்பட்ட நிலப்பரப்பு 18·7 கோடி ஏக்கர்களிலிருந்து 21·0 கோடியாக, அல்லது 7 சதவீதம் கூடியது; உணவுத் தானியமல்லாத பொருள்கள் பயிரிடப்பட்ட நிலப்பரப்பு 3·0 கோடி ஏக்கர்களிலிருந்து 4·3 கோடியாகக் கூடியது, அல்லது 43 சதவீதப் பெருக்கம் (வாடியாவும் ஜோஷியும்: ''இந்தியாவின் செல்வம்''). இந்தச் செயல்முறை அண்மைக் காலத்தில் இன்னும் முன்னேறியுள்ளது. 1910-11 லிருந்து 1914-15 முடிய ஐந்தாண்டுகளின் சராசரிக்கும் 1934-35க்கும் இடையில் உணவுத் தானியங்கள் பயிரிடப்படும் நிலப்பரப்பு 12·4 சதவீதம் கூடியுள்ளது; உணவுத் தானியமல்லாத பொருள்கள் பயிரிடப்படும் நிலப்பரப்பு 54 சதவீதம் கூடியுள்ளது. (ஆர். முகர்ஜீயின்: ''நாற்பது கோடி மக்களுக்கு உணவுத் திட்டம்'' என்ற நூலிலுள்ள அட்டவணையைப் பார்க்க, பக். 16). 1934-5 லிருந்து 1939-40 முடிய உணவுத் தானியங்கள் அல்லாத பயிர்களின் ஏக்கர்கள் 16 லட்சங்கள் மிகுதியாக, உணவுத் தானியங்கள் பயிரிடப்பட்ட ஏக்கர்கள் உண்மையில் 15 லட்சங்கள் குறைந்தன. கச்சாப் பருத்தி ஏற்றுமதி 1900-01 இல் 178,000 டன்கள், 1936-37இல் 762, 133 டன்களாக உயர்ந்தது; அல்லது 328 சதவீதம் பெருக்கம் (1939-40 இல் 526,411 டன்களாக இருந்தது);

தேயிலை ஏற்றுமதி 1900-01 இல் 19 கோடி பவுண்டுகள், 1939-40 இல் 35·9 கோடி பவுண்டுகளாக ஏறியது; எண்ணெய் விதைகள் ஏற்றுமதி 1900-01 இல் 549,000 டன்கள், 1938-39 இல் 1,172,802 டன்களாக உயர்ந்தது.

இவ்வாறு வேளாண்மையைச் சார்ந்த மக்கட் கூட்டம் அதிகமானதும், ஏற்றுமதிக்கு உணவுத் தானியம் அல்லாத பயிர்கள் அதிகக் கவனம் பெற்றதும் (இந்திய மக்கள் அதனால் பட்டினி கிடக்க நேர்ந்ததும்) பிரிட்டிஷ் முதலாளித்துவக் கொள்கையின் நேர் விளைவுகள் இந்தியாவை ஒரு மார்க்கெட்டாகவும் மூலப் பொருள்களின் விளைநிலமாகவும் வைத்துக் கொள்ள வேண்டும் என்பதே அக் கொள்கை.

ஆனால், குடியானவ சமுதாயத்தைச் சுரண்டல் செய்யும் சமூகச் சூழ்நிலையோடு, விவசாயத்தில் கூட்டம் அதிகமானதுதான், இந்தியாவின் வறுமைக்கு மூலகாரணம். பிரிட்டிஷ் முதலாளித் துவக் கொள்கையின் நேர்விளைவாக, அவ்வப்போது முன் காலத்துச் சிறிய வேளாண்மை மிக அதிகமாய் நெருக்கப்பட்டது தான் இந்திய மக்களின் வறுமைக்கு அடிப்படை. 1880 இல் பஞ்சக் கமிஷன் இந்த உண்மையை ஒப்புக்கொண்டது; முன்பே மேற்கோள் காட்டப்பட்ட அதன் அறிக்கையின் பகுதி கீழே தரப்படுகிறது:

''இந்திய மக்களின் பெரும்பகுதி வறுமைக்கு அடியிலும், பற்றுக்குறைக் காலங்களில் அவர்கள் சமாளிக்க நேரும் அபாயங்களுக்கு அடியிலும், இந்திய மக்களின் ஒரே தொழில் வேளாண்மை என்ற துரதிர்ஷ்டமான சூழல் இருக்கிறது.''

ஒரு நூற்றாண்டுக்கு முன்னர், 1840இல் சர் சார்லஸ் டிரெவல்யன் மக்கள் மன்றப் பொறுக்குக் குழுவிடம் அறிவித்தார்:

''அவர்களுடைய உற்பத்திப் பொருள்களை நாம் துடைத்து எறிந்து விட்டோம்; நிலத்தில் விளைவதைத் தவிர அவர்கள் சார்ந்து பிழைப்பதற்கு வேறொன்றும் இல்லை.''

ஒரு நூற்றாண்டுக்குப் பின்னர், 1928 இல் விவசாயத்திற்கான ராயல் கமிஷன் அதே துயரக் கதையை மீண்டும் சொன்னது. (அறிக்கை, பக். 433):

''நிலத்தைச் சார்ந்த மக்கள் கூட்டம் மிகுந்ததும், பிழைப்புக்கு வேறு வழி இல்லாததும், தப்பிச் செல்ல வேறு இடம் காண முடியாததும், இளம் வயதிலேயே பலரைக் காப்பாற்ற வேண்டிய பளு ஒருவன் மீது ஏற்றப்படுவதும் சேர்ந்து உழவர் தன்னால் எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்

லாம் தன்னால் எந்த நிபந்தனைகளுக்கு உட்பட முடியுமோ அவற்றுக்கெல்லாம் உட்பட்டு உணவுப் பயிர்களை வளர்க்கிறார்.''

## 2. வேளாண்மை மீது மிகுந்த நெருக்கம் ஏற்பட்டதன் விளைவுகள்

வேளாண்மையைச் சார்ந்த மக்கள் கூட்டம் மிக அதிகமாகி விட்டது என்பதன் பொருள், வளரும் மக்கள் தொகையில் அதிகரித்துக் கொண்டே போகும் மிக அதிக அளவில் மக்கள் தங்களுக்குப் பிழைப்பு தருமாறு இந்தியாவில் இப்போது பின் தங்கிய நிலையிலுள்ள வேளாண்மையை நாடுகிறார்கள் என்பதே.

மறு பக்கம், நிலவுடமை ஏகபோகத்தின் விளைவாகவும், குடியானவர்களை முடக்கும் சுரண்டல் சுமை காரணமாகவும் வேளாண்மை வளர்ச்சி குன்றி விட்டதால், இப்போதைய சமூக அமைப்பில் மக்களின் தேவையை விவசாயம் பூர்த்தி செய்யும் நிலையில் இல்லை.

இந்திய வேளாண்மையைக் கைப்பற்றி, நாளுக்கு நாள் அதிகமாகும் நெருக்கடிக்கு அடிப்படையாகவுள்ள நச்சுவட்டம் இதுதான். விவசாய முன்னேற்றத்தில் ஏற்பட்டுள்ள தேக்க நிலையில் அதன் விளைவு பிரதிபலிக்கிறது; விவசாயத்தின் மீது சுமத்தப் பட்டுள்ள அதிகப்படியான சுமையால் இப்போதுள்ள உற்பத்தி அளவும் வீழ்ச்சியுறுவதற்கான அறிகுறிகள் தென்படுகின்றன; குடியானவர்களின் நிலைமையிலும் அபாயகரமான வீழ்ச்சி காணப்படுகிறது.

வேளாண்மைமீது மிகுதியான சுமை ஏற்படுகிறது என்பதன் பொருள் என்ன? ஒவ்வொரு குடியானவனுக்கும் பயிர் இடுவதற்கெனக் கிடைக்கும் நிலத்தின் அளவு தொடர்ந்து குறைந்து வருகிறது என்பதே.

சர் தாமஸ் ஹோல்டர்னெஸ் 1911இல் எழுதினார்:

''சுதேச சமஸ்தானங்கள் உட்பட பாரதத்தின் மொத்த மக்கட் தொகை, 31·5 கோடி. இந்தப் பெரும் தொகையினரில் முக்கால் பங்கினர் வேளாண்மையை நம்பிப் பிழைக்கிறவர்கள். சுதேச சமஸ்தானங்களிலிருந்து பூரணமான புள்ளி விவரங்கள் கிடைக்காததால் பயிரிடப்படும் மொத்த நிலத்தின் சரியான அளவு தெரியவில்லை. ஆனால், வேளாண்மையை மட்டும் நம்பிப் பிழைக்கும் மக்களுள் ஒரு நபருக்கு ஒன்றேகால் ஏக்கருக்கும் குறைவாகக் கிடைக்கும் என்ற கணக்கு பெரும்பாலும் சரியாக இருக்கும்..

''இந்தப் பெரிய மக்கட் தொகைக்கு உணவு தருவதுடன் இந்திய பூமி ஏற்றுமதிக்கான பொருளுற்பத்திக்கும் பயன்படுகிறது . . . உண்மையில் இறக்குமதிக்கான செலவினங்களையும் சர்வதேசக் கடன்களையும் இந்தியா விவசாயப் பொருள்களின் விற்பனை வாயிலாகவே செலுத்துகிறது. இவ்வாறு வெளி நாட்டுச் சந்தைகளுக்காக உற்பத்தி செய்யும் பயிர்நிலத்தைக் கழித்தால், இந்தியாவின் மொத்த மக்கட் தொகையில் நபருக்கு $\frac{2}{3}$ ஏக்கரா நிலமே கிடைப்பதைக் காண்போம். ஆக, தலைக்குக் கிடைக்கும் $\frac{2}{3}$ ஏக்கரா நிலத்தில் உற்பத்தியாகும் பொருள்களைக் கொண்டு இந்தியா தன் மக்களுக்கு, உணவும், ஓரளவு உடையும் தருகிறது. உலகத்தின் வேறு எந்த நாட்டிலும் நிலத்திலிருந்து இவ்வளவு எதிர்பார்க்கப் படுவதில்லை.''

(சர் தாமஸ் ஹோல்டர்னெஸ்: ''இந்தியாவின் மக்களும் பிரச்னைகளும்,'' 1911 பக். 139).

1917இல், பம்பாய் வேளாண்மை இயக்குநர் டாக்டர் ஹெரால்ட் எச். மன் ஒரு புனே கிராமத்தில் நடத்திய விசாரணையின் முடிவுகளை வெளியிட்டார். 1771இல் சராசரி நிலவுடைமை 40 ஏக்கர்கள்; 1818இல் அது $17\frac{1}{2}$ ஏக்கராய்க் குறைந்து, 1820-40 இல் 14 ஏக்கராய் வீழ்ந்து, 1914-15இல் 7 ஏக்கராய்த் தாழ்ந்தது என்று அவர் கண்டார். நிலவுடைமைகளில் 81 சதவீதம் 'உடைமையாளர்களுக்கு சௌகரியமான காலங்களில் கூடப் போதுமான வருவாய் தரக்கூடியவை அல்ல' என்பதையும் கண்ட அவர் கீழ்க்கண்ட முடிவுக்கு வந்தார்.

''சென்ற அறுபது எழுபது ஆண்டுகளில் நிலவுடைமைகளின் தன்மையில் ஏற்பட்டுள்ள மாறுதல் இதிலிருந்து தெளிவாய்த் தெரிகிறது. பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னும், பிரிட்டிஷ் ஆட்சியின் தொடக்க காலத்திலும் நிலவுடைமையாளர்களுக்குக் கணிசமான நிலம் இருந்தது; ஆளுக்கு 9 அல்லது 10 ஏக்கருக்குள் குறையாது; 2 ஏக்கர் நிலவுடைமையாளர் யாருமே இல்லை. இப்போது நிலவுடைமையாளர்களின் எண்ணிக்கை இரண்டு மடங்குக்கு மேலாகி விட்டது; இவற்றில் 81 சதவீதம் 10 ஏக்கருக்கும் குறைவான நிலவுடைமையாளர்கள்; 60 சதவீதத்துக்கு குறையாதவர்கள் 5 ஏக்கர் நிலவுரிமையாளர்கள்.''

(டாக்டர் எச்.எச். மன், ''ஒரு டெக்கான் கிராமத்தில் நிலமும் தொழிலாளரும்,''முதல் தொகுதி, 1917, பக். 46.)

மற்ற மாகாணங்களிலும் இத்தகைய முடிவுகளே கிடைத்துள்ளன. 'பம்பாய் மாகாணத்தில் நிலவுடைமையின் அளவு மிகத்

தாழ்ந்து பயனுள்ள முறையில் பயிரிட முடியாத நிலையை எட்டி விட்டது என்று திரு. கீடிஞ்ச் கருத்து தெரிவித்துள்ளார். சென்னை யின் சில பகுதிகளில் இதே நிலைமை நிலவுவதாய் டாக்டர் ஸ்லேடர் கருதுகிறார். மற்ற மாகாணங்களிலும் பெரும்பாலும் இதே நிலைமைதான்.''(வேளாண்மைக் குழு அறிக்கை, பக். 132.)

1921ஆம் ஆண்டு புள்ளி விவரம் ஒரு குடியானவனுக்குச் சொந்தமான பயிர் நிலத்தின் கணக்கைப் பின்வருமாறு அறுதி யிடுகிறது.

| | | | |
|---|---|---|---|
| மதருஸ் | .. | 4·9 | ஏக்கர்கள் |
| ஐக்கிய மாகாணங்கள் | .. | 2.5 | ,, |
| அஸ்ஸாம் | .. | 3·0 | ,, |
| பீகார், ஒரிஸா | .. | 3·1 | ,, |
| வங்காளம் | .. | 3·1 | ,, |
| பர்மா | .. | 5·6 | ,, |
| பஞ்சாப் | .. | 9·2 | ,, |
| மத்திய மாகாணங்கள், பீரார் | .. | 8·5 | ,, |
| பம்பாய் | .. | 11·2 | .. |

இது சராசரிக் கணக்கு; சிறுபான்மையோருக்குச் சொந்தமான பெரிய நிலவுடைமைகள் காரணமாக பெரும்பான்மையோரின் மிகச் சிறிய நிலவுடைமைகளின் கணக்கு இதில் ஓரளவு மறைந்து போகிறது.

'ஒரு கொங்கணக் கிராமத்தின் சமூக, பொருளாதார ஆய்வுப்படி.' (பம்பாய் மாகாணக் கூட்டுறவு நிலையம் வெளி யிட்டது. கிராமப் பொருளாதார வரிசை 3 ஆம் வெளியீடு) 192 ஏக்கர்கள் பயிர் நிலமுள்ள ஒரு கிராமத்தில், 24 விவசாயிகள் அல்லாதாருக்கு 113 ஏக்கர்கள் சொந்தமாயிருந்தன, அல்லது. ஆளுக்கு சராசரி 4·71 ஏக்கர்கள்; 28 விவசாயிகளுக்கு 78 ஏக்கர்கள் சொந்தம்; அல்லது, ஆளுக்கு சராசரி 2·85 ஏக்கர்கள்,

'ஒரு கேரள கிராமத்தின் பொருளாதார வாழ்க்கை' பற்றின ஓர் ஆய்வுப்படி' (சென்னை பல்கலைக் கழகப் பொருளா தாரத் தொடர் 2 இன் வெளியீடு.) ஆராயப் பெற்ற அக் கிராமத் தில் 34 சதவீத நிலவுடைமைகள் 1 ஏக்கருக்கும் குறைவானது என்று தெரிந்தது.

நிரந்தரவுரிமைகள் இல்லாத விவசாயிகள், அதாவது விவசாயிகளில் பெரும்பான்மையோர் பற்றி வேளாண்மைக் குழு அறிக்கை (பக். 133.) பின்கண்டபடி குறிப்பிடுகிறது:

''மாகாண முழுமைக்குமான புள்ளி விவரங்கள் பஞ்சாப் மாகாணத்திலிருந்து மட்டும் கிடைத்துள்ளன; அதன்படி

22•5 சதவீதக் குடியானவர்கள் ஒரு ஏக்கர் அல்லது அதற்கும் குறைவான நிலத்தில் பயிரிடுகிறுர்கள்; 15•4 சதவீதத்தினர் ஆளுக்கு ஒரு ஏக்கரிலிருந்து இரண்டரை ஏக்கர் வரை சொந்தம்; 17•9 சதவீதத்தினரில் ஆளுக்கு இரண்டரையிலிருந்து ஐந்து ஏக்கர் வரை சொந்தம்; 20•5 சதவீதத்தினரில் ஆளுக்கு 5 முதல் 10 ஏக்கர் வரை சொந்தம். பம்பாயிலும் இதே மாதிரியான நிலவரம் இருக்கலாம்; பர்மாவில் அதிகப்படியான சராசரி இருக்கலாம்; மற்ற எல்லா மாகாணங்களிலும் குடியானவர்களுக்கு இன்னும் குறைவான நிலவுடமைதான் காணப்படுகிறது.''

ஆக, சற்றே 'வளமான' பஞ்சாபிலும் (பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் தாமதித்து வந்த மாகாணம் இது.) மூன்றில் ஒரு பங்கினருக்கு மேல் $2\frac{1}{2}$ ஏக்கருக்கும் குறைவான நிலத்தில் பயிரிடுகிறுர்கள்; பாதிக்கு மேற்பட்டவர்கள் 5 ஏக்கருக்கும் குறைவான நிலத்தில் பயிர் செய்கிறுர்கள்.

வங்காளத்தில், 1921 ஆம் ஆண்டின் மக்கட் தொகைக் கணக்கு, உழைக்கும் குடியானவன் ஒவ்வொருவனும் 2•2 ஏக்கர் நிலத்தில் பயிரிடுவதாய்க் குறிப்பிட்டது. 1921, மக்கட் தொகைக் கணக்கு அறிக்கை, ''இவை போன்ற கணக்குகளில் தான் குடியானவர்களின் வறுமைக்கான விளக்கம் உள்ளது'' என்கிறது.

இந்த விவரங்களின் பொருளை மறுக்க முடியாது. வேறு கதி வியற்ற, கொடிய, வளர்ந்து வருகிற நிலப்பசியைத்தான் அவை வெளிப்படுத்துகின்றன. இதேபோன்ற விவரங்கள் ரஷ்யாவின் விவசாய வரலாற்றில் எந்தத் திசையைச் சுட்டிக் காட்டினவோ, அதே திசையைத் தான் இங்கும் சுட்டிக் காட்டுகின்றன.

## 3. விவசாயத்தின் தேக்கமும் சீர்கேடும்

நாளுக்கு நாள் வளர்ந்து வரும் இந்தக் கொடிய நிலப்பசி, இயற்கையால் திணிக்கப்பட்ட, மக்களுக்குத் திருப்திதர இயலாத நிலப் பற்றுக்குறை என்ற தவிர்க்க முடியாத பிரச்சினையைத்தான் சுட்டிக் காட்டுகிறதா?

அல்ல, அதற்கு நேர்மாறு, பரவலாகத் தற்போது நிலவும் இந்தக் கருத்துகள் ஒருபுறம் இருக்க, விவரங்களை நன்கு பகுத்துப் பார்த்தால் விவகாரம் இது அன்று என்பது புலப்படும். (2 ஆம் அத்தியாயம், 3 ஆம் பகுதியை ஆதாரத்திற்காகப் பார்க்க.)

நிலப்பற்றுக் குறையே உண்மையான பிரச்னை அல்ல. அபிவிருத்தியில் அக்கறை இல்லாததாலும் தடைகளாலும்

பயிரிடத் தகுந்த நிலத்தை எல்லாம் பயன்படுத்திக் கொள்ளாதது, இப் பிரச்னைக்கு முதல் காரணம். இப்போதுள்ள சமூக அமைப்பில் உள்ள முடக்குச் சுமைகளால் தொழில் நுட்ப முன்னேற்றம் காண முடியாமலும் பெருவாரி நிர்வாகமும் ஏற்படுத்த இயலாமலும் போனதால் பயிரிடப்பட்ட நிலத்திலும் மிகத் தாழ்வான உற்பத்தி அளவு இருப்பது இரண்டாவது காரணம்.

இப்போது நடைமுறையிலுள்ள சிறிய அளவு தொழில்நுட்ப முறையின் அடிப்படையிலேயே, இப்போது இந்தியாவில் பயிரிடக் கிடைக்கும் நிலப் பரப்பை நன்கு பண்படுத்தி தக்க பாசன வசதிகள் அளித்தால், 44·7 கோடி மக்கள், அல்லது இப்போது இருப்பதைவிட 7 கோடி மக்கள் அதிகமாக வாழ முடியும் என்று மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. (ஆர். முகர்ஜீ, நாற்பது கோடி மக்களுக்கான உணவுத்திட்டம், பக். 26.)

இந்தியப் பொருளாதார வல்லுநர் ஆர். கே. தாஸ். இப்போது பயிரிடப் பெறும் நிலத்தில் எழுபது சதவீதம் வீணுக்கப் படுவதாகவும் முப்பது சதவீதமே பயனுள்ள முறையில் செயல் படுவதாகவும் கருதுகிறார்:

> "பயிர்கள் விதைக்கப்படும் நிகர நிலப்பரப்பு 22·8 கோடி ஏக்கர்கள், அல்லது மொத்த உழவு நிலத்தில் 53 சதவீதம். ஆனால், ஒவ்வொரு பயிருக்காகவும் விதைக்கப்படும் நிலப் பகுதிகளை, ஒரு முறைக்கு மேல் பயிரிடப் பெறும் நிலப் பகுதிகளைத் தனித்தனியாகக் கணக்கிட்டால் 26·2 கோடி ஏக்கர்களாகும். பருவகால நிலைகளின் உதவியால், உழவு நிலத்தில் கணிசமான பகுதியில் ஆண்டில் இரண்டு பயிர் களுக்கு மேல் செய்ய முடியும். ஆனால், மறுபுரப்பில் இந்த நிலப்பரப்பின் ஒரு பகுதியில் ஆண்டில் ஒரு முறைக்கு மேல் பயிரிட முடியாது. இன்னும் சிறிது காலத்திற்கு ஒரு முறை கூடப் பயிரிட முடியாத நிலப் பகுதிகளும் உள. ஆகையால், உழவு நிலத்தில் சராசரியாக இரண்டு பயிர்கள் செய்யலாம் என்று கொள்ளலாம். ஆகவே, பயிரிடத்தக்க நிலப்பரப்பு 86·4 கோடி ஏக்கர்கள் எனலாம்; அதில் 26·2 கோடி ஏக்கர்களே, அதாவது 30 சதவீதமே முறையாகப் பயன் படுத்தப் படுகின்றன; 60·2 கோடி ஏக்கர்கள், அல்லது 70 சதவீதம் வீணுக்கப் படுகின்றன."
>
> (ஆர். கே. தாஸ், "இந்தியாவின் தொழில் திறன்" 1930, பக். 13.)

உண்மையாக, சென்ற கால் நூற்றுண்டில் பயிரிடப் பெறும் நிலப்பரப்பு மக்கட்தொகையைவிட விரைவாக ஏறியது என்பதைப்

பின்வரும் அட்டவணை காட்டுகிறது. இந்த ஏற்றத்தைப் போதைய பொருளாதார மந்தம் தான் தடுத்தது.

மக்கட் தொகைக்கும் பயிர் நிலப் பரப்புக்குமான குறியீட்டு எண்கள்

| | மக்கட் தொகை | மொத்த தானிய விளைநிலம் | உணவுத் தானிய விளைநிலம் |
|---|---|---|---|
| போருக்கு முந்தின சராசரி (1910—11 லிருந்து 1914-15 முடிய) .. | 100 | 100 | 100 |
| 1930—31 .. | 1071 | 18·6 | 113·9 |
| 1934—35 .. | 1201 | 17·2 | 112·4 |

(ஆர். முகர்ஜீ "நாற்பது கோடி மக்களுக்கான உணவுத் திட்டம்," பக். 16-17.)

எனவே, 1910—14 க்கும் 1930-31 க்கும் இடையில் மக்கட் தொகை 7 சதவீதம் உயர, பயிரிடப்பட்ட நிலப்பரப்பு 18·6 சதவீதம் உயர்ந்தது. பொருளாதார மந்தம் ஏற்பட்ட சமீப ஆண்டுகளில் தான் பயிர் நிலப்பரப்பின் அளவு முற்றிலும் குறைவதற்கான அபாயகரமான அறிகுறி தோன்றத் துவங்கியுள்ளது. உணவுத் தானிய விளை நிலப்பரப்பு அதைவிட அதிகமாய்க் குறைவதற்கான அறிகுறியும் உள்ளது.

ஆயினும், பயிரிடத்தக்க நிலப்பரப்பில் பெருமளவு இன்னும் பயன்படுத்தப் படவில்லை என்பது தான் முக்கியம். நிகரப் புள்ளி விவரங்கள் கீழ்க்காணும் நிலையைக் காட்டுகின்றன:

1939-40இல் பிரிட்டிஷ் இந்தியாவில் விவசாய நிலப்பரப்பு
(பர்மா நீங்கலாக)

| | | | கோடி ஏக்கர்கள் |
|---|---|---|---|
| தொழில் குறை ஆய்வுப்படி நிகர நிலப்பரப்பு | .. | .. | 51·27 |
| காட்டுப் பகுதி | .. | .. | 6·81 |
| பயிரிடக் கிடைக்காத பரப்பு | .. | .. | 8·93 |
| தரிசுபோகப் பயிரிடத்தக்க புறம்போக்கு நிலம் | .. | .. | 9·72 |
| தரிசு நிலம் | .. | .. | 4·73 |
| தானியங்கள் விதைக்கப்படும் நிகர நிலப்பரப்பு | .. | .. | 20·99 |

(பிரிட்டிஷ் இந்தியாவின் புள்ளிவிபர அறிக்கை.)

ஆக, பயிரிடுவதற்கேற்ற 35•5 கோடி ஏக்கர் நிலப்பரப்பின் 59 சதவீதத்தில் தான் தானியங்கள் விதைக்கப் படுகின்றன, 13•2 சதவீதம் தரிசு, 27•3 சதவீதத்துக்குக் குறையாத பயிர் நிலம் வீணுக்கப் படுகிறது. மொத்த நிலத்தில் ஆறில் ஒரு பாகம் ''பயிரிடக் கிடைக்காத நிலப்பரப்பு'' என்று அதிகார பூர்வமாக அறிவித்துள்ளதைப் பற்றி வேளாண்மைக் குழு அறிக்கை (பக். 605) குறிப்பிடுவதையும் கவனிக்க வேண்டும்; ''இப்போது 'பயிரிடக் கிடைக்காத நிலப்பரப்பு' என ஒதுக்கப் பட்டுள்ள பெரும் நிலப்பரப்பு முழுவதும்...பயிரிடக் கிடைக்காத நிலமென்றோ அல்லது பயிரிடத் தகாத நிலமென்றோ நம்ப கஷ்டமாயுள்ளது'' என்று அக் குழுவினர் ஒப்புக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. ஆகையால் பயிரிடத் தக்கதாயிருந்தும் பயிரிடப் பெருத நிலப்பரப்பு அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்ட 27•3 சதவீதத்தை விட உண்மையில் மிகுதியானது, அது ஏறக்குறைய மூன்றில் ஒரு பகுதியாக இருக்கலாம் என்று நம்பக் காரணம் இருக்கிறது.

'தரிசு போகப் பயிரிடத்தக்க புறம்போக்கு நிலம்' என்று ஒதுக்கப்பட்ட பிர்மாண்டமான நிலப்பரப்பின் தன்மை என்ன, அது ஏன் பயன்படுத்தப்படுவதில்லை? பல்வேறு மாகாணங்களில் அதன் அளவு வீதம் மாறுபடுகிறது என்பதை ஏற்க வேண்டும்; மக்கட் தொகை அடர்த்தியாகவுள்ள, முன்னேற்றம் கண்ட மாகாணங்களான வங்காளம், மதராஸ், அல்லது ஐக்கிய மாகாணத்திலும் அதே நிலைமைதான்; 'தரிசு போகப் பயிரிடத் தக்க புறம்போக்கு நிலம்' என்ற பெயரில் பயன்படுத்தப்படாமல் கைவிடப்பட்ட நிலத்தின் அளவு, வங்காளத்தில் 18 சதவீதம், மதராஸில் 21 சதவீதம், ஐக்கிய மாகாணத்தில் 20•3 சதவீதம் என்ற உயர்ந்த வீதத்தைக் காட்டுகிறது.

(பஞ்சக் குழு பற்றின) சர் ஜேம்ஸ் கேய்ர்டு அறிக்கை 1879 இல் இந்தியா ராஜ்யக் காரியதரிசியிடம் சமர்ப்பிக்கப் பட்டது; மேற்கண்ட கேள்விக்கு இந்த அறிக்கையிலேயே பதில் காணலாம்.

> ''இந்தியாவில் கிடைக்கும் நல்ல நிலம் பெரும்பாலும் பயன்படுத்தப்படுகிறது. நாட்டின் பல்வேறு பகுதிகளில் காடு மண்டிய நல்ல புறம்போக்கு நிலப்பரப்புகள் ஏராளமாக இருக்கின்றன; அவற்றை பண்படுத்திப் பயிரிடத் தக்கவையாக மாற்ற முடியும்; ஆனால் அதற்கு மூலதனம் வேண்டும்; மக்களிடம் அதுதான் இல்லை.''
>
> (1879, அக்டோபர் 31 இல் சர் ஜேம்ஸ் கேய்ர்டு இந்தியாவின் ராஜ்யக் காரியதரிசியிடம் அளித்த அறிக்கை.)

இந்த நிலத்தைப் பயன்படுத்த முடியாது என்பதில்லை. உழவர்களின் கடும் வறுமைதான் அவ்வாறு செய்யவொட்டாமல் தடை செய்கிறது; அவர்களிடம் எஞ்சுவதை எல்லாம் கறந்து கொண்ட பின், 'எப்படியோ பிழைத்துக் கிடந்தால் போதும்' என்ற நிலையில் வாழ்கிற அவர்களால் இப்பெரும் பணியாற்ற இயலவில்லை. மிக அவசியமும் அவசரமுமான உற்பத்தியைப் பெருக்கும் இந்தப் பணியை, சமுதாயத்தின் உபரி வருவாய்த்துறைகளைப் பயன்படுத்தி, அரசாங்க உதவியோடு கூட்டு முயற்சி செய்தால்தான் நிறைவேற்ற முடியும். ஆனால், அரசு இப்பொறுப்பை ஒருகாலும் ஏற்றதில்லை; இந்த விஷயத்தில், இப்போதைய ஆட்சி முறையும் சமூக அமைப்பும் தோல்வியுற்றதைத் தெளிவாக காண்கிறோம்; பிரிட்டிஷாருக்கு முந்தின ஆட்சியாளர்கள் பராமரித்த பொதுப் பணித்துறைகளையும் பாசனத் துறையையும் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் ஆரம்பகாலத்தில் முற்றிலும் அலட்சியம் செய்ததோடு, மிகுதியான வரிகளைச் சுமத்தி உழவர்கள் வேளாண்மையைக் கைவிட்டு ஓடும்படி செய்துவிட்டார்கள்; அண்மைக் காலத்தில் அரசினர் நிலத்தைப் பண்படுத்துவதிலும் பாசனத் துறையிலும் ஓரளவு கவனம் செலுத்துகிறார்கள்; ஆனால் சாத்தியக் கூறுகளையும் தேவைகளையும் பார்த்தால் அந்தக் கவனம் மிகமிக அற்பமானது என வேண்டும்.

ஆட்சியாளர்களின் ஆரம்பக்கால அலட்சியம் வெறுக்கத் தக்கது; அதை நீண்ட காலத்துக்கு முன்பே கவனித்து மார்க்ஸ் ஓர் அருமையான அறிக்கையை வெளியிட்டார்:

> ''பொதுவாக, தொன்று தொட்டு ஆசியாவில் அரசாங்கத்தில் மூன்று துறைகளே இருக்கும்: நிதித்துறை அல்லது உள்நாட்டுக் கொள்ளை; போர்த்துறை அல்லது வெளிநாட்டுக் கொள்ளை; இறுதியாக, பொதுப்பணித்துறை...
> ''கிழக்கு இந்தியக் கம்பெனியைச் சேர்ந்த பிரிட்டிஷார் பழைய ஆட்சியாளர்களிடமிருந்து நிதித்துறையையும் போர்த்துறையையும் மேற்கொண்டார்கள்; ஆனால், பொதுப்பணித் துறையை அறவே புறக்கணித்தார்கள். அதனால்தான் வேளாண்மை பாழ்பட்டது; பிரிட்டிஷ் கொள்கையான சுயேச்சைப் போட்டி முறையை இங்கு பயன்படுத்த முடியவில்லை.''
>
> (மார்க்ஸ்: ''இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி,'' நியூயார்க் டெய்லி ட்ரிப்யூன், ஜூன் 25, 1853)

''ஹிந்து அல்லது முசல்மான் அரசாங்கம் நாட்டுப்பணி, நாட்டு நலன் என்று கருதி அமைத்த சாலைகளும், குளங்களும், கால்வாய்களும் பாழடையும் வகையில் கைவிடப்பட்டுவிட்டன;

இப்போதோ பாசன வசதிகளின் பற்றுக்குறையால் பஞ்சங்கள் தோன்றுகின்றன,'' என்று ஒரு நோக்கர் எழுதுகிறார். (ஜி. தாம்ஸன்; 'இந்தியாவும் காலனி நாடுகளும்', 1938.)

இந்தியாவின் நவீன பாசனப் பணிக்கு முன்னோடியான சர் ஆர்தர் காட்டன் 1854 இல் வெளியிட்ட ''இந்தியாவில் பொதுப்பணித்துறை'' என்ற தம் நூலில் மார்க்ஸை விடக் கடுமையாகக் குற்றம் சாட்டுகிறார்:

> ''இந்தியா முழுவதிலும் பொதுப்பணித்துறை பெரும்பாலும் முற்றிலும் உதாசீனம் செய்யப்பட்டுள்ளது.... 'ஒன்றும் செய்யாதே, ஒன்றையும் செய்யவிடாதே, ஒருவரையும் எதையும் செய்யவிடாதே. எந்த நஷ்டத்தையும் தாங்கிக் கொள், மக்கள் பஞ்சத்தால் சாகட்டும், தண்ணீரும் சாலைகளும் இல்லாமையால் கோடிக் கணக்கில் நஷ்டம் ஏற்பட்டாலும், ஒன்றும் செய்யாதே' என்பதே இதுவரை கொள்கையாக இருந்து வருகிறது.''
>
> (லெப். கர்னல் காட்டன், ''இந்தியாவில் பொதுப் பணித் துறை''—1854-பக். 272.)

மாண்ட்கொமரி மார்டின் தம்முடைய தரமான நூலான 'இந்திய சாம்ராஜ்யத்தில்' பழைய கிழக்கு இந்தியக் கம்பெனி ''புதிய அபிவிருத்தி முயற்சிகளை மேற்கொள்ளாதது மட்டுமல்ல, வருவாய்க்கு வழிகோலும் பழைய பொதுப்பணிகளையும் மராமத்து செய்யத் தவறிவிட்டது,'' என்று 1858இல் குறிப்பிட்டார். பிரிட்டனில் அதே காலத்தில் பின்பற்றப்பட்ட தலையிடாக் கொள்கையைவிட அதிக தூரம் சென்றது இந்த அலட்சியப் போக்கு; ஜான் பிரைட் 1858, ஜூன் 24இல் மக்கள் பேரவையில் குறிப்பிட்டது போல், ''மான்செஸ்டர் என்ற ஒரு நகரம் தன் நகரவாசிகளுக்குத் தண்ணீர் என்ற ஒரே ஒரு பொருளை வழங்குவதற்காக, கிழக்கு இந்தியக் கம்பெனி 1834 முதல் 1848 வரை பதினாண்டுகளில் தன்னுடைய பரந்த குடியேற்ற நாடுகளின் பல்வேறு பொதுப் பணிகளுக்காகச் செலவிட்டுள்ளதை விட மிகுதியாகச் செலவிட்டுள்ளது.''

1900இல்கூட, பிரிட்டிஷ் வாணிபம் ஊடுருவுவதற்கு உதவும் படியாக இருந்த ரயில்வேக்களுக்கென மொத்த வருவாயிலிருந்து £ 22·5 கோடி செலவிட்ட அரசு வேளாண்மையின் முதுகெலும்பு போன்ற கால்வாய்களுக்காக £ 2·5 கோடி செலவிட்டது; அதாவது ரயில்வேக்களுக்காகச் செலவிடப்பட்ட தொகையில் ஒன்பதில் ஒரு பாகம்.

இந்த அலட்சியப் போக்கு இறந்தகாலம் பற்றின கதை என்று எண்ணிவிடக் கூடாது என்பதற்காக, வங்காள பாசனத்

துறைக்குழு 1930இல் வெளியிட்ட ஓர் அறிக்கையிலிருந்து சில பகுதிகள் மேற்கோளாய்த் தரப்படுகின்றன:

> ''ஒவ்வொரு மாவட்டத்திலும், உள்நாட்டுப் படகுப் போக்குவரத்துக்குப் பயன்படும் கால்வாய்களில் அடிக்கடி வண்டல் மண்டிப் போக்குவரவைத் தடை செய்கிறது. கிழக்கு வங்காளத்தின் கால்வாய்களும் ஆறுகளுமே அதன் சாலைகளும் நெடுஞ்சாலைகளும் ஆம். ஆகவே மாகாணத்தின் இப்பகுதியின் பொருளாதார வாழ்க்கைக்கு, கால்வாய்களைத் துப்புரவாக வைத்துக் கொள்ள வேண்டியதன் அவசியத்தைக் குறைவாக மதிப்பிட முடியாது.'' (பக்.6.)
>
> ''மத்திய வங்காளம் இப்போது சீர்கேடுற்ற பிரதேசம்; மலேரியா மிக விரைவில் பீடிக்கும்; மக்கட் தொகை மேலும் மேலும் குறைகிறது; நிலம் பயிரிடப்படாமல் கிடக்கிறது. இனி தடை செய்ய முடியாத அளவு சீர்கேடு ஆழ்ந்துவிட்ட நிலை; இந்தப் பிரதேசம் நாளாவட்டத்தில் சகதியும் காடுமாக மாற வேண்டியதுதான்.'' (பக். 11)
>
> ''சிறிய பாதைகளை மராமத்து செய்வது அல்லது பராமரிப்பதுபற்றி.... ஒன்றுமே செய்யப்படவில்லை: அதனால் மாகாணத்தின் சில பகுதிகளில் கால்வாய்களில் வண்டல் தேங்கியுள்ளது; வருடத்தில் சில மாதங்கள் மட்டுமே அவை போக்குவரத்துக்குப் பயன்படும்; பருவகாலங்களில் கால்வாய்களில் நீர்மட்டம் உயர்ந்து படகுப் போக்குவரவு சாத்தியமாகும்போதுதான் தானியங்களைச் சந்தைக்குக் கொண்டு போக முடியும்.'' (பக். 11.)
>
> (வங்காளப் பாசனத் துறைக் குழுவின் அறிக்கை, 1930.)

நீர்விசைப் பொறியியல் வல்லுநர் சர் வில்லியம் வில்காக்ஸ் வங்காளப் பாசனத்துறையின் சீரழிவு பற்றி வெளியிட்டுள்ள கருத்தும் குறிப்பிடத்தக்கது:

> ''எகிப்திலும் மெஸபடோமியாவிலும் துவக்கப்பெற்ற பிரம்மாண்டமான பாசனத் திட்டங்களுடன் தொடர்புள்ள நீர்ப் பொறியியல் வல்லுநர் சர் வில்லியம் வில்காக்ஸ் அண்மையில் வங்காளத்திலுள்ள நிலைமைகளை ஆய்வு செய்தார். டெல்டாப் பிரதேசத்திலுள்ள எண்ணற்ற, நாசகரமான சிற்றாறுகள் அடிக்கடி தடம் புரண்டு ஓடுவதைக் கண்டார்; இந்தச் சிற்றாறுகள் ஆதியில் கால்வாய்களாக இருந்து, பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் கவனிப்பு இல்லாததால் கரை புரண்டு காட்டாறுகளென ஓடுகின்றன

என்பதைக் கண்டுபிடித்தார். இக் கால்வாய்கள் முன்பு கங்கையின் வெள்ள நீரை வடிக்கப் பயன்பட்டவை. நிலத்தில் நீர் தேங்காது தடுக்க உதவியவை; ஆகவே, வங்காளத்தின் வளத்துக்குக் காரணமானவை; இந்த வளம்தான் பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பேராசை பிடித்த கிழக்கு இந்தியக் கம்பெனி வியாபாரிகளைக் கவர்ந்தது.. பழைய கால்வாய்களைப் பராமரிக்கவோ பராமத்து செய்யப் படவோ இல்லை என்பதுடன் ரயில் பாதை போட மேடு கட்டியதால் பழைய கால்வாய்களின் அமைப்பே பாழுற்றது. கங்கை நீரின் வளமான வண்டல் மண் தடையுண்டதால் சில பிரதேசங்கள் வளம் குன்றிப் பயனற்றன. இன்னும் சில பிரதேசங்களில் முறையான வடிகால் இல்லாமையால் நீர் தேங்கி மலேரியாவுக்குக் காரணமாகின்றது. தாழ்ந்த பகுதிகளில் ஓடும் கங்கைக்குத் தேவையான கரைகட்ட யாதொரு முயற்சியும் எடுத்துக் கொள்ளப்படாததால், கிராமங்களும் தோப்புகளும் பயிர்நிலங்களும் நீர் அரிப்புக்கு ஆண்டுதோறும் பலியாகின்றன.

''சர் வில்லியம் வில்காக்ஸ் புதிய ஆட்சியாளர்களையும் அதிகாரிகளையும் கடுமையாகக் கண்டிக்கிறார்; அவர்களோ தேர்ந்த தொழில் நுட்ப வல்லுநர்களின் உதவியைப் பெற எவ்வளவோ வாய்ப்புகளிருந்தும் இந்த அபாயகரமான, ஆண்டுக்காண்டு நலியும் நிலையைத் திருத்துவதற்கு இதுவரை ஏதும் செய்யவில்லை.''

(ஜி. எமர்ஸன், ''குரலற்ற மக்கள்,'' 1931, பக். 240-41)

சர் வில்லியம் வில்காக்ஸின் கருத்துக்களைப் பற்றிய முழு விவரத்தையும் அவருடைய, ''வங்காளத்தின் பண்டைப் பாசன முறைகளும் அவற்றைப் புதிய பிரச்னைகளுக்குப் பயன்படுத்தும் வழிகளும் பற்றிய சொற்பொழிவுகளிலும்'' (கல்கத்தா பல்கலைக் கழக ரீடர்ஷிப் சொற்பொழிவுகள், கல்கத்தா பல்கலைக்கழகம், 1930) அவற்றைத் தொடர்ந்து, ''வங்காளப் பாசனத் துறையின் முன்னாள் தலைமைப் பொறியாளர் ஸி. அட்டாம்ஸ்-வில்லியம்ஸ் சர் வில்லியம் வில்காக்ஸின் சொற்பொழிவுகள் பற்றி ஒரு குறிப்பு எழுதியதன் வாயிலாக எழுப்பிய விவாதத்திலும், அதற்கு சர் வில்லியம் வில்காக்ஸ் அளித்த மறுமொழியிலும் (வங்காள அரசு தலைமைச் செயலகப் புத்தகத்துறை, 1931) காணலாம்.

ஆக, இந்த அலட்சியமும் சீர்கேடும் பிரிட்டிஷ் ஆட்சியின் சென்ற ஒன்றரை நூற்றாண்டின் பழங்கதை அல்ல, இந்த நிகழ்

காலத்திலும் தொடருகிறது. 1930 இன் அதிகார பூர்வமான ஓர் அறிக்கையின்படி ''நிலம் பயிரிடப்படாமல் வீணுகிக் கொண்டிருக்கிறது.'' மிகக் கடுமையான நிலப்பற்ருக் குறைக்கும், பயிரிடப்படும் நிலத்தில் மிகுந்த நெருக்கடிக்கும் இடையில் இந்த நிலைமை 1789 இல் கார்ன்வாலிஸ் பிரபு, கம்பெனியின் பிரதேசத்தில் பெரும்பகுதி 'விலங்குகளே வாழும் காடுகளாக மாறி வருவதாய்' குறிப்பிட்டார். 1930 இல் மத்திய வங்காளம் பற்றி ஓர் அரசினர் குழு, ''இனி தடுக்க முடியாத அளவுக்குச் சீர்கேடு ஆழ்ந்துவிட்ட நிலை என்றே கூறலாம்: இந்தப் பிரதேசம் சிறுகச் சிறுகச் சகதியாகவும் காடாகவும் நலிய வேண்டியது தான்.''

ஆனுல், இந்தியாவின் மிக அதிகமான உழவர்கள் பயிரிடத் தக்க நிலத்தில் 59 சதவீதத்தையே பயன்படுத்திக் கொள்ள வேண்டியுள்ளது; இந்த வரையறுக்கப்பட்ட நிலப் பரப்பிலும் சமூகச் சூழ்நிலையும், உழவர்கள்மீது ஏற்றப்பட்டிருக்கும் முடக்குச் சுமைகளும் பொருள் வசதி இல்லாததால் முன்னேற்றம் காணுத பண்டைத் தொழில்நுட்ப முறைகளும் சேர்ந்து உற்பத்தியைப் பெரிதும் பாதித்துள்ளன. அதாவது, வேறு எந்த நாட்டையும் விட அதிகமாக இந்த நாட்டில் மக்கள் நிலத்தை நம்பி வாழ்கிருர்கள்: எனினும் இந்த நாட்டுப் பொருளாதார அமைப்பின் ஒழுங்கீனத்தால் மற்ற எந்த நாட்டையும்விட இங்கே உற்பத்தி அளவு குறைவாயுள்ளது.

இந்தியாவின் அரிசி, கோதுமை உற்பத்தியை சைனு, ஜப்பான் அல்லது அமெரிக்காவின் உற்பத்தியோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நிலைமையின் உண்மை நமக்குத் தெளிவாகும்:

ஏக்கருக்குத் தானியங்களின் கண்டு முதல் குவிண்டால்களில்*

| | இந்தியா | சைனு | ஜப்பான் | அமெரிக்கா |
|---|---|---|---|---|
| அரிசி .. | 16·5 | 25·6 | 30·7 | 16·8 |
| கோதுமை .. | 8·1 | 9·7 | 13·5 | 9·9 |

(பசிபிக்கின் பிரச்னைகள், 1931, பக். 700.)

*குவிண்டால் = 100 கிலோ கிராம்

அனைத்து நாடுகள் சங்கத்தின் புள்ளிவிவரங்கள் அடிப்படையில் மேலும் ஒப்பிட்டுப் பார்க்கலாம்:

ஏக்கருக்குத் தானியங்கள் கண்டுமுதல் பவுண்டுகளில்*

| | அரிசி | கோதுமை |
|---|---|---|
| இந்தியா .. .. .. | 1,357 | 652 |
| ஜப்பான் .. .. .. | 2,767 | 1,508 |
| எகிப்து .. .. .. | 2,356 | 1,688 |
| அமெரிக்கா .. .. .. | 2,112 | 973 |
| இத்தாலி .. .. .. | 4,601 | 1,241 |
| ஜெர்மனி .. .. .. | — | 1,740 |
| பிரிட்டன் .. .. .. | — | 1,812 |

(''அனேத்து நாடுகள் கழகத்தின் புள்ளி விவர ஆண்டு வெளியீடு,'' 1932-33.)

* பவுண்டுக்கு 16 அவுன்ஸ்

நிலத்தில் பாடுபடும் உழைப்பாளிகளின் எண்ணிக்கைகளே ஒப்பிட்டால் இந்த வித்தியாசம் இன்னும் கூர்மையாக இருப்பதைக் காணலாம். இந்தியாவில் 2·6 ஏக்கர் நிலத்தில் வேலே செய்ய ஒரே ஆள் பயன்பட, பிரிட்டனில் ஓராள் 17·3 ஏக்கரிலும், ஜெர்மனியில் 5·4 ஏக்கரிலும் வேலே செய்கிருன். வேளாண்மையைச் சார்ந்தோர் மிகுதியாக இருப்பதையும் மிகத் தாழ்வான தொழில் நுட்பத்தை பயன்படுத்தப்படுவதையும் தான் இந்த மாபெரும் உழைப்பு விரயம் காட்டுகிறது.

இந்தக் குறைவான கண்டுமுதலுக்கு, மண்ணில் வளக்குறைவு என்ற இயற்கையான அசௌகரியங்கள் காரணமல்ல.

''இந்திய மண் வளக்குறைவானது என்று சொல்லப்பட்டுள்ளது. அது சரியல்ல. அது வளக்குறைவாக, வறியதாக ஆகியுள்ளது, பெரிய ஆற்றுப்படுகைகள் ஒரு காலத்தில் மிக வளமுள்ளவையாக இருந்திருக்க வேண்டும். டென்மார்க்கிலும் ஜெர்மனியிலும் நிலத்தின் பெரும் பகுதி ஆதியில் நாணலும் புதரும் அன்றி வேருென்றும் விளேயாத மலட்டு மணல் பூமியாகவே இருந்தது.''

(இந்திய மத்திய பாங்கு விசாரணேக் குழு அறிக்கை; உள்ளடக்கம் XIII; பக். 700—ஏ. பி. மாக்டகல் 1931, மார்ச் 19 இல் சமர்ப்பித்த குறிப்பு.)

அதே குறிப்பு மேலும் கூறுகிறது:

''பிரான்ஸின் அளவுக்கு ஓர் ஏக்கரின் கண்டுமுதல் உயர்த்தப்பட்டால், நாட்டின் செல்வம் ஆண்டுக்கு £ 669,000,000 உயரும். இங்கிலாந்து அளவுக்கு உயர்ந்தால் செல்வம் £ 1,000,000,000 ஆண்டுக்கு உயரும். இந்தியாவி

ிலுள்ள இருபோக நிலங்களை இந்த மதிப்பீட்டில் சேர்க்க வில்லை. மேலே குறிப்பிட்ட மற்ற நாடுகளில் ஒரு போக விளைச்சல்தான் வறட்சியால் ஏற்படக் கூடிய எந்த நஷ்டத்தையும் இந்த வசதி ஈடு செய்யும்...டென்மார்க் அளவு கோதுமை உற்பத்தி உயர்த்தப்பட்டால் ஓர் ஆண்டுக்கு செல்வம் £ 1,500,000,000 அளவுக்குப் பெருகும். ஆகையால் இந்தியக் கிராமப் பகுதிகளில் நிலவும் வறுமைக்கு மண் காரணமல்ல.''

இப்போதுள்ள கண்டுமுதல் குறைவு என்பது மட்டுமல்ல, உற்பத்தி சக்தி மேலும் குன்றுவதற்கான அறிகுறிகளும் உள்ளன. மேலே மேற்கோள் காட்டப்பெற்ற மாக்டகல் குறிப்பு, 'உரமிடாமல் தொடர்ந்து பயிரிடுவதால்' மண்ணின் வளம் குன்றுவதையும், 'உரம் வருந்தத்தக்க விதத்தில் எரிபொருளாக பயன்படுத்தப்பட்டு வீணுவதையும்' (கடுமையான காடுபராமரிப்புச் சட்டங்களின் பயன் இது), குறிப்பிட்டுவிட்டு மேலும் கூறுகிறது: ''பயிர்களின் எச்சத்தையும் வைக்கோலையும் உரமாகப் பயன் படுத்தி மேலே நாடுகளில் மண்ணின் வளம் காக்கப்படுகிறது. இந்தியாவிலோ வைக்கோல் எல்லாம் கால்நடைகளுக்குத் தீவனமாகப் பயன்படுகிறது'' (மேய்ச்சல் வசதிகளை கட்டுப் படுத்துவதன் பயன் என்று இது சுட்டிக்காட்டுகிறது.) மாட்டுச் சாணத்தை எரிபொருளாக உபயோகித்து வீணுக்குவது இந்திய உழவர்களின் அறியாமை என்று பேசப்படுகிறது. இவ்விஷயமாய் வேளாண்மைக்குழு கூறும் முடிவுகளைக் கவனிக்கவேண்டும். காட்டு விறகுக் கரியும் நிலக்கரியும் பயன்படுத்தக் கட்டுப்பாடு இருப்பதாலும், ரயில் போக்குவரத்துக்கு 'மிகுதியான' செலவு ஆவதாலும், ''மாட்டுச் சாணத்தை உழவர்கள் விரும்பி எரிபொருளாகப் பயன்படுகிருர்கள் என்பது மட்டும் அல்லாமல், உழவர்களில் பெரும்பாலானேருக்கு இப்போது நிச்சமாய்க் கிடைக்கக்கூடிய ஒரே எரிபொருள் மாட்டுச் சாணந்தான்'' என்று அந்த அறிக்கை (பக். 264) கூறுகிறது. இப்பிரச்னைக்கு யாதொரு தீர்வும் காணப்படவில்லை; ஆகையால் மண்ணின் வளம் குன்றுவதைத் தவிர்க்க முடியவில்லை.

வங்காளம் பற்றி அறிவிக்கப்படுகிறது.

> உரமின்மையால் விவசாய மண்ணின் வளம் மேலும் மேலும் குன்றுகிறது; பல்வேறு தானியங்களின் கண்டு முதலும் குறைகிறது.
>
> (''வங்காள மாகாண பாங்கு விசாரணைக் குழு அறிக்கை,'' 1930, பக். 21.)

இந்தக் கூற்றுக்கு ஆதரவான புள்ளி விவரங்கள் கீழே தரப்படுகின்றன:

வங்காளத்தில் ஏக்கருக்கு சராசரி கண்டுமுதல்—பவுண்டுகளில்

| ஐந்தாண்டு முடிகிற | | கோதுமை | மாரிகாலம் அரிசி | பருப்பு வகை | எண்ணெய் வித்துகள் கடுகு |
|---|---|---|---|---|---|
| 1906-07 | .. | 801 | 1,234 | 881 | 492 |
| 1911-12 | .. | 861 | 983 | 881 | 492 |
| 1916-17 | .. | 698 | 1,036 | 867 | 460 |
| 1921-22 | .. | 688 | 1,029 | 826 | 485 |
| 1926-27 | .. | 721 | 1,022 | 811 | 483 |
| இருபதாண்டுகளில் குறைவு | .. | 80 | 212 | 70 | 9 |

இந்திய அரசு நியமித்த சிறப்பு அதிகாரி டபிள்யூ. பர்ன்ஸ் இந்தியா முழுமைக்கும் ஏறக்குறைய இதே போன்ற புள்ளி விவரங்களை தருகிறார்:

அரிசி சராசரி கண்டுமுதல்
(ஏக்கருக்கு பவுண்டுகளில்)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1914-15 | முதல் | 1918-19 | வரை | சராசரி | .. | 982 |
| 1926-27 | முதல் | 1930-31 | வரை | சராசரி | .. | 851 |
| 1931-32 | முதல் | 1935-36 | வரை | சராசரி | .. | 829 |
| 1938-39 | | | | சராசரி | .. | 728 |

(''இந்தியாவில் விவசாய அபிவிருத்திக்குத் தொழில் நுட்ப சாத்தியக் கூறுகள்,'' 1944, பக். 55.)

கோதுமை கண்டு முதலிலும் நிலைமை கேடுறுவது தெரிகிறது; 1909-13 ஆண்டுகளில் ஏக்கருக்கு சராசரி கண்டு முதல் 724 பவுண்டுகளாக இருந்தது, 1924-33 ஆண்டுகளில் 636 பவுண்டு களாய்த் தாழ்ந்துவிட்டது (மேற்படி அறிக்கை, பக். 57).

நாள்தோறும் வளர்ந்துவரும் சமூக முரண்பாடுகளைப் பற்றி ஆராயாமல், இந்தியாவின் மொத்தப் பொருளாதாரத் தோடு தொடர்புப்படுத்தி இன்றைய வேளாண்மை நிலைகளையும் போக்குகளையும் மட்டும் நாம் ஆய்வு செய்தால், ஒவ்வொரு நோக்கிலும் இந்திய வேளாண்மையில் நெருக்கடி நிலைமை நாளுக்கு நாள் முற்றி வருவதைக் காண்கிறோம்.

நெருக்கடி இவ்வாறு முற்றுவதற்குக் காரணங்கள் இயற்கை நிலைகளில் அல்ல, சமூக நிலைகளில் இருப்பதைக் காண்போம். உழவர்களின் சுரண்டலுக்குப் பரிகாரம் தேடாமல், அவர்கள்

பிற்போக்குத் தன்மையைக் கைவிட வேண்டும் என்று அவர்களிடம் நல்லெண்ணத்துடனும் குறுநோக்குடனும் உபதேசம் புரிவதும், வசதியற்ற அவர்களிடம் தொழில் நுட்பத்தைச் செப்பனிட வேண்டுமென்று போதிப்பதும் வெட்டிப் பேச்சுக்கள் என்பதை மிக அண்மைக் காலத்து அனுபவம் வாயிலாக நன்கு தெரிகிறது; இப்போதுள்ள நிலக் குத்தகை முறையின்கீழ் நவீன தொழில் நுட்ப முறைகளைக் கையாள வாய்ப்பும் இல்லை என்பதும் தெளிவுபடுகிறது.

இப்போதைய நிலைகளிலும் வரம்புகளுக்கும் உட்பட்ட இந்திய உழவர்களின் செயலாற்றலும் நுண்ணறிவும் நிபுணர்களின் பாராட்டைப் பெற்றுள்ளன. 1889 இல் ராயல் அக்ரிகல்சரல் சொசைட்டியின் ஆலோசகரான ரசாயன வல்லுநர் டாக்டர் ஜே. ஏ. வோல்க்கரை இந்திய வேளாண்மைத் தொழில் நுட்பத்தை ஆராய்ந்து தேவையான சீர்திருத்த யோசனைகள் கூறுமாறு இந்திய அரசு பணித்தது. இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அவருடைய அறிக்கை வெளியாயிற்று; இந்திய வேளாண்மை பற்றித் தரமான நூலாக அது இன்றும் போற்றப்படுகிறது. அவர் கூறுகிறார்:

> ''பொதுவாக இங்கிலாந்திலும், அடிக்கடி இந்தியாவிலும் சில கருத்துகள் வெளியிடப்படுகின்றன. மொத்தத்தில் இந்திய வேளாண்மை தொன்மையும் பிற்போக்குத் தன்மையும் வாய்ந்தது என்றும், அதைச் சீர்திருத்த யாதொரு முயற்சியும் மேற்கொள்ளப்படவில்லை என்பனவே அக் கருத்துகள். அவை முற்றிலும் தவறான கருத்துகள்... இந்திய ரயத்து அல்லது உழவர் சராசரி பிரிட்டிஷ் உழவருக்கு நிகரானவர், சில விஷயங்களில் தரமானவர். அவர் தேர்ந்த உழவராக எப்போதாவது இல்லாமற்போனால் வேறு எந்த நாட்டிலும் காணமுடியாத வகையில் முன்னேற்றப் பாதைகள் அடைபட்டிருப்பதே காரணம். வேறு யாராலும் இயலாத பொறுமையுடன், யாரையும் குறைகூறாமல் இந்திய உழவர்கள் கஷ்டங்களை எதிர்த்துப் போராடுவார்கள்.
> ''நான் உரைப்பதைக் கேட்டுப் பிரிட்டிஷ் உழவர்கள் வியப்படைய வேண்டாம். இங்கிலாந்திலுள்ள நாம் கோதுமையை பயிரிடுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே இந்திய மக்கள் பயிரிடத் தொடங்கியவர்கள் என்பதை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆகையால் அவர்களுடைய அநுபவம் மிகுந்த முன்னேற்றம் காண வேண்டியதாக இல்லாதிருக்கலாம். நீர், உரம் போன்ற வசதிகள் மிகக்

குறைவாக இருப்பதால் தான் அவர்கள் அதிகத் தானியங்கள் விளைவிக்க முடியாமல் தடைப்படுகிறது.

''ஆனால், சாதாரண வேளாண்மைப் பணிகளில் இந்திய உழவர்கள் தேர்ந்தவர்கள் களையின்றி வயலை மிகத் துப்புர வாக வைத்துக் கொள்வார்கள். தண்ணீர் சேந்தும் கருவிகளை மிக சாமர்த்தியமாய்ப் பயன்படுத்துவார்கள். மண்களின் தன்மைகளையும் சாத்தியக் கூறுகள் பற்றியும் நல்ல ஞானம் உடையவர்கள்; எந்தப் பருவத்தில் விதைப்பது, அறுவடை செய்வது என்று நன்ருய் அறிந்தவர்கள். இந்திய உழவர் களில் தேர்ந்தவர்களுக்கு மட்டுமல்ல, சாமானியர்களுக்குக் கூட இவ் விஷயங்கள் தெரியும். பலவிதப் பயிர்களை எந்த வரிசையில் எப்போது பயிரிடவேண்டும், எப்போது நிலத்தைப் பயிரிடாமல் விட வேண்டும் என்பன போன்ற விஷயங்களில் அவர்களுடைய ஞானம் அதிசயிக்கத்தக்கது. என்னுடைய சுற்றுப் பிரயாணத்தில், இவ்வளவு கவனமாகவும், விடா முயற்சியோடும், புத்தி சாதுரியத்தோடும் பயிர் செய்யப் படுவதை நான் வேறெங்கும் காணவில்லை என்று உறுதியாகச் சொல்கிறேன்.''

(டாக்டர் ஜே. ஏ. வோல்க்கர்: ''இந்திய வேளாண்மையின் முன்னேற்றம் பற்றின அறிக்கை,'' 1891.)

இந்திய வேளாண்மையில் நெருக்கடி முற்றுவதற்குக் காரணங்கள், இயற்கை வசதியின்மைகள் அல்ல, ஆற்றலும் அறிவும் இல்லாமை அல்ல, முன்னேற்றம் காண முடியாமல் முடக்கி வைக்கப்பட்டுள்ள உழவர்கள் இயற்கையாகவே திறமை யற்றவர்கள் எனப்படும் பொய்க் கூற்றுகளும் அல்ல; ஏகாதி பத்தியத்தின் விளைவாகவும், அது பாதுகாக்கும் சமூக உறவுகளின் விளைவாகவும் தோன்றியதே இந்த நெருக்கடி. இந்தச் சமூக உறவுகள் வேளாண்மை மீது பெருஞ்சுமை ஏற்றி, தேக்கத்தையும் நலிவையும் உண்டாக்குகின்றன. உழவர் சமுதாயம் அல்லல் களிலும் அரைப்பட்டினி நிலையிலும் உழல வைக்கின்றன. இவ்வாறு, நீண்ட பாதிப்புகளை விளைவிக்கக் கூடிய ஒரு புரட்சி தான் ஒரே விளைவு அல்லது தீர்வு என்பதற்கான நிலைமைகளைத் தோற்றுவிக்கின்றன.

வேளாண்மை நெருக்கடியின் உந்து சக்திகளை வெளிப்படுத்த, வேளாண்மையிலுள்ள இந்தச் சமூக உறவுகள்பால் நாம் இப்போது கவனம் செலுத்த வேண்டும்.

அத்தியாயம் 8

# உழவர்கள் மீதுள்ள சுமைகள்

''வேளாண்மை முறை ஏற்கனவே முறிந்து விட்டது, புதிய சமூக அமைப்பு ஏற்கனவே இன்றியமையாததாகி விட்டது.''

—1933 இல் ஜவஹர்லால் நேரு.

இப்போதைய ஆட்சி முறையின் கீழ், விவசாயத்தை நம்பி மிக அதிக மக்கள் வாழ்வதும், குறைவான உற்பத்தி அளவும், தேக்கமும், நலிவுமாக காணப்படும் வேளாண்மை நெருக்கடி, வேளாண்மையின் சமூக உறவுகளில் ஏற்பட்டுள்ள அகநெருக்கடியின் புற வெளியீடே ஆகும். ஏகாதிபத்திய ஆட்சி முறையில் உழவர்களை மிகக் கடுமையாகச் சுரண்டும் ஒரு முறை உருவாகியுள்ளது. இதற்கு இணை வேறு எந்த நாட்டிலும் காணமுடியாது. ஏகாதிபத்திய ஆதிக்கம், சுரண்டல் ஆகியவற்றின் பாதுகாப்பான கேடயத்திற்குப் பின்னால் அதை நம்பி ஏராளமான புல்லுருவிகள் தோன்றியுள்ளன. இதன் விளைவாக உழவர்களின் சுமைகள் ஏறி, அவர்களுடைய வறுமையும் கடனும் மிகுந்ததுடன் வர்க்கபேதங்கள் மிகுந்து உழவர்கள் தங்கள் நிலவுடைமைகளை இழக்கும்படியான நிலையும் மிகுந்து வருகிறது. நிலமிழந்த உழவர்கள் ஏறக்குறைய அடிமை நிலைக்கு வீழ்ந்துவிட்டனர், அல்லது, நிலமற்ற உழைப்பாளரின் கூட்டத்தை அதிகமாக்குகின்றனர். இந்தச் சூழ்நிலை தான் எதிர்காலப் புயல் நெருங்கி வருவதை அறிவிக்கிறது.

## 1. நில ஏகபோகம்

பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்பு, உழுபவனுக்கு நிலம் வழி வழியாக சொந்தமாயிருந்தது. அரசாங்கத்துக்கு விளைச்சலில் ஒரு பகுதி கிடைக்கும். ''இந்தியாவில் நிலம் ஒரு ஜாதி அல்லது அதன் ஒரு பிரிவுக்குச் சொந்தமாயிருந்தது—கிராம சமுதாயம், அல்லது கிராமத்தில் வசிக்கும் ஒரு சகோதர பாசமுள்ள மக்கள். நிலம் எந்தக் காலத்திலும் அரசனுடைய உடமையாகக் கருதப்பட்டதில்லை'' (ஆர். முகர்ஜீ, ''இந்தியாவின் நிலப் பிரச்னைகள்,'' 1933, பக்.16). ''நிலப்பிரபுத்துவ ஆட்சி முறையிலும் சரி, ஏகாதி

பத்திய ஆட்சி முறையிலும் சரி, உழவர்களுக்கன்றி வேறு யாருக்கும் நிலத்தை உடைமையாக்கும் எண்ணம் இருந்ததில்லை.'' (மேற்படி புத்தகம், பக். 36.)

ஹிந்து மன்னர்களின் ஆட்சியில் ''இறைக் கடன்'' அல்லது அரசனுக்குச் செலுத்த வேண்டிய அளவு, விளைச்சலில் ஆறில் ஒரு பகுதி முதல் பன்னிரண்டில் ஒரு பகுதி இருக்கும். போர்க்காலங் களில் இது நாலில் ஒரு பகுதியாக உயர்த்தப்படும். மனு தர்மம் கூறுகிறது:

> ''அட்டையும், கன்றும், தேனீயும் உணவு கொள்வது போல் அரசன் தன் மக்களிடமிருந்து மிதமாக வரிவசூலிக்க வேண்டும். கால்நடைகள், தங்கம் ஆகியவற்றில் கிடைக்கும் ஆதாயத்தில் ஐந்தில் ஒரு பகுதியை அரசன் எடுத்துக்கொள்ள லாம். தானியங்களில் எட்டில் ஒரு பகுதியோ, ஆறில் ஒரு பகுதியோ, பன்னிரண்டில் ஒரு பகுதியோ எடுத்துக் கொள்ள லாம். ஒரு க்ஷத்திரிய மன்னன் போர்க்காலத்தில் நாலில் ஒரு பங்கு எடுத்துக் கொண்டு தன் சக்தியால் முயன்றவரை மக்களுக்குப் பாதுகாப்பு அளிப்பானாயின் அவன் குற்றமற்ற வனே.''

முகலாயச் சக்கரவர்த்திகள் இதை மூன்றில் ஒரு பகுதியாக உயர்த்தினார்கள். அக்பரின் ஒரு சட்டம் உரைக்கிறது:

> ''முற்காலத்து மன்னர்கள் நிலத்தின் விளைச்சலில் ஆறில் ஒரு பகுதியைக் காணிக்கையாகவும் வரியாகவும் வசூலித்தார் கள். நடுத்தரமான பயிர் நிலத்தின் விளைச்சலில் மூன்றில் ஒரு பகுதி நிலவரியாகச் செலுத்தப்பட வேண்டும் என்று மாட் சிமை தங்கிய மன்னர் பிரானால் அறுதியிடப்படுகிறது.''

முகலாய சாம்ராஜ்யத்தின் சிதைவுக் காலத்தில் வரிவசூலா ளர்களுக்கு நிலவரி ஏலமாக விடப்பட்டது. அவர்கள் குறுநிலப் பிரபுக்களாக நடந்து கொள்ளலானார்கள். சில நிலப்பிரபுக்கள் இந்த நிலவரியை விளைச்சலில் சரிபாதி அளவுக்குக்கூட உயர்த்தி னார்கள்.

முகலாய சாம்ராஜ்யத்தின் இடிபாட்டின் மீது பிரிட்டிஷார் தங்கள் ஆட்சியை ஏற்படுத்தியபோது பரம்பரையாக வந்த நிலவரி முறையையே மேற்கொண்டார்கள். ஆனால், அவர்கள் அதன் தன்மையையே மாற்றி விட்டார்கள். அதனால், இந்தியாவின் நிலமுறையையே மாற்றி விட்டார்கள்.

அவர்கள் ஆட்சியை மேற்கொண்டபோது, ஆட்சிப் பீடத்தில் இருந்தோர் நலிந்து குலைந்து இருந்தார்கள். உழவர் களிடம் மிகுதியாகவும் கொடுமைப் படுத்தியும் வரிவசூல் செய்

தார்கள். ஆனால், கிராம சமுதாய முறையும், காலம் காலமாக அதற்கும் நிலத்துக்குமுள்ள தொடர்பும் பெரும்பாலும் முறி படாமலே இருந்தன; வருடவிளைச்சலில் ஒரு பகுதியை (சாதாரண மாக, தானியமாக தருவார்கள். விரும்பினால் ரொக்கம் தரலாம்) இறைக்கடனாய்ச் செலுத்தினார்கள். உற்பத்தி ஏறுமோ இறங்குமோ நிலத்தின் அளவு பேரில் ஒரு குறிப்பிட்ட தொகையை நிலவரி யாகச் செலுத்தும் பழக்கம் அப்போது இல்லை.

குழப்பமான ஒரு காலத்தில் கொடுமையாக வசூலிக்கப் பெற்ற நிலத் தீர்வைதான் வழக்கமான அளவு என்று புதிய ஆட்சியாளர்கள் கருதினார்கள். அக் காலத்து நூலாசிரியர்களின் சாட்சியத்திலிருந்து புதிய ஆட்சியாளர்களின் வருவாய் தொடக் கத்தில் ஏறியதாகத் தெரிகிறது, அல்லது மிகத் திறமையான வசூலினால், நடைமுறையில் வரிச்சுமை மிகுந்தது. பத்தொன்ப தாம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில், கம்பெனியின் சார்பில் டாக்டர் புகானன் ஒரு புள்ளிவிவர ஆய்வு செய்தார். இதுதான் அதிகார பூர்வமாகச் செய்யப்பட்ட தேர்ந்த ஆய்வு. 1800லும் அதை அடுத்த ஆண்டுகளிலும் தென் இந்தியாவில் செய்யப்பெற்ற ஆய்விலிருந்தும், 1807-14 ஆண்டுகளில் வட இந்தியாவில் செய்யப்பெற்ற ஆய்விலிருந்தும், இரு பகுதிகளிலும் கட்டாய வரி வசூல் மிக அதிகமாகித் துன்பகரமானதாகி விட்டதை அவர் கண்டார். வங்காளத்திலுள்ள தினாஜ்பூர் மாவட்டம் பற்றி அவர் எழுதினார்:

> ''முகலாய அதிகாரிகள் தங்களை அடிக்கடி துன்புறுத்தி னாலும், எப்போதும் வெறுப்புடன் நடத்தினாலும், இப்போது வரி பாக்கிக்காக நிலத்தை விற்பனை செய்யும் அக்கிரமத்துக்கு அந்தக் கொடுமைகள் எவ்வளவோ மேல் என்று மக்கள் கூறு கிறார்கள். அக் காலத்தில் லஞ்சம் தருவதால் மிகப் பயன் உண்டு; லஞ்சம் உட்பட அப்போது செலுத்திய தொகை இப்போது செலுத்தும் தொகையில் பாதி கூட இராது என்கிறார்கள்.''
>
> (டாக்டர் ஃபிரான்ஸிஸ் புகானன்: ''புள்ளி விவர ஆய்வு,'' 4-ஆம் தொகுதி, 7 ஆம் பகுதி; பாராளு மன்ற மக்கள் அவையின் பொறுக்குக் குழுவின் ஐந் தாம் அறிக்கையில் மேற்கோள் காட்டப்பட்டது.)

1826இல் பிஷப் ஹீபர் எழுதினார்:

> இப்போதைய வரிவிகிதத்தில் இந்திய விவசாயியோ, ஐரோப்பிய விவசாயியோ பிழைக்க முடியாது என்று நான் கருதுகிறேன். ஆத்மாவின் விளைச்சலில் பாதியை அரசு கேட் கிறது. ஹிந்துஸ்தானத்தில் (வட இந்தியாவில்) கம்பெனியின்

மாகாணங்களிலுள்ள உழவர்கள் சுதேச சமஸ்தானத்து உழவர்களைவிட இழிவாக வறுமைவாய்ப்பட்டு ஊக்கமற்று இருப்பதாக அரசின் அதிகாரிகளுக்கு இடையில் பொதுவாக ஒரு கருத்து நிலவுகிறது; சில சூழல்களைப் பார்த்து நானும் அவர்கள் கருத்தை ஏற்கிறேன். பொதுவாக வளம் குன்றிய இந்த சென்னையில் அந்த வித்தியாசம் இன்னும் கடுமையாக இருப்பதாய்க் கூறப்படுகிறது. உண்மையில், எந்த சமஸ்தான மன்னரும் நம் அளவு வரி கேட்பதில்லை.''

(பிஷப் ஹீபர், ''ஞாபகக் குறிப்புகளும் கடிதப் போக்குவரத்தும்,'' 1830, 2 ஆம் தொகுதி, பக். 413.)

வரலாற்றாசிரியர்கள் தாம்ஸனும் காரட்டும் எழுதுகிறார்கள்:

"பெரும்பாலும் 'நிகர விளைச்சலுக்குச்' சமமான 'சிக்கன மான வரி' வசூல் செய்யத் தொடர்ந்து பல முயற்சிகள் செய்து தோல்வி அடைந்ததே சிப்பாய்க் கலகத்துக்கு முந்தின வரி விதிப்பின் வரலாறாகும். வங்காளத்தில் தொடக்கத்தில் நிலவரிப் பண்ணைகளை ஏலம் விட்டதன் நோக்கம் 'நிகர விளைச்சலில்' முடிந்தவரை அதிகப்பங்கு பெற வேண்டும் என்பதுதான். இந்த ஏலமுறை தோல்வியுற்றதால் 'நிரந்தர ஏற்பாடு முறையை' அமுலுக்குக் கொண்டு வந்தனர். சென்னை யிலும், பம்பாயிலும் எதிர்பார்க்கப்படும் 'நிகர விளைச்சலில்' ஐந்தில் நான்கு பகுதியை அடிப்படையாகக் கொண்டு வரி விதிப்பது வழக்கம். இது மிகவும் அதிகம் என்று தெளி வாயிற்று. வடமேற்கு மாகாணங்களிலும் வரி விதிப்புக்கான முதல் முயற்சிகள் அதே மாதிரி தோல்வியுற்றன; 1842இல் கைவிடப்பட்டன...பதினெட்டாம் நூற்றாண்டின் முதல் கால்பகுதியில் சென்னையிலும் பம்பாயிலும் விதிக்கப்பட்ட கடுமையான வரிகளால் மிகுந்த துன்பம் ஏற்பட்டது என்பதில் ஐயம் இல்லை. சீக்கியர்களின் கோரிக்கையால் பிரிட்டிஷாரின் வரிவிதிப்பு குறைக்கப்பட்டிருந்த பஞ்சாபிலும், 'வசூல் செடு பிடியாலும் ரொக்கம் செலுத்த வேண்டிய நிர்ப்பந்தத்தாலும் உழவர்களுக்குக் கிட்டவேண்டிய நன்மை கிடைக்கவில்லை எனத் தோன்றுகிறது' — (எச். கால்வர்ட், 'பஞ்சாபின் செல்வமும் நலனும்,' பக். 122).''

(தாம்ஸனும் காரட்டும், ''இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் தோற்றமும் நிறைவும்,'' பக்கம் 421.)

1921-ல் தக்காணத்துக் கிராமம் ஒன்றில் இரண்டாவது முறையாக ஆய்வு செய்த டாக்டர் ஹெரால்ட் மன் பிரிட்டிஷ்

ஆட்சிக்கு முந்தின காலத்திலும் பிந்தின காலத்திலும் நிலவரியில் பெரும் வித்தியாசம் இருப்பதைக் கண்டார்.

> ''பிரிட்டிஷார் வெற்றி பெற்றபின் முழு மாறுதல் ஒன்று ஏற்பட்டது. 1823-ல் அதுவரை கேள்விப்படாத நிலவரித் தொகை ரூ. 2,121 வசூலிக்கப்பட்டது. 1817-ல் இருந்த அளவில் பாதியாகக் கிராமச் செலவுகள் குறைந்துவிட்டன.''
>
> (மன்னும் கானிட்கரும், ''ஒரு தக்காணக் கிராமத்தில் நிலமும் தொழிலாளரும்,'' 2 ஆம் தொகுதி, 1921, பக். 38.)

1844-74 ஆகிய முப்பது ஆண்டுகளில் கிராமம் முழுவதற்கும் நிலவரி ரூ. 1,161, அல்லது ஏக்கருக்கு 9 அணு 8 தம்பிடிகள்; 1874-1904 ஆகிய முப்பது ஆண்டுகளில் அது ரூ. 1,467, அல்லது ஏக்கருக்கு 11 அணு 4 தம்பிடிகள் ஆயிற்று; 1915-ல் வரிவிதிப்பு திருத்தப்பெற்று ரூ. 1581, அல்லது ஏக்கருக்கு 12 அணு 2 தம்பிடிகளாக உயர்த்தப் பெற்றது.[1] ஒரு தக்காண கிராமத்தில் 1917இல் நடத்திய முதல் ஆய்வில் டாக்டர் மன் 1829-30 இல் ரூ. 889 ஆக இருந்த மொத்த நில வருமானம், 1849-50 இல் ரூ. 1,115 ஆகவும், 1914-15 இல் ரூ. 1,660 ஆகவும் உயர்ந்துள்ளதைக் கண்டார்.

வங்காளத்தில், முகலாயர்களின் ஏஜண்டுகள் நிர்வாகம் செய்த இறுதி ஆண்டான 1764-65 இல் மொத்த நிலவருமானம்

---

1. பதினேழாம் நூற்றாண்டு வரைக்கான அவர்களுடைய வரி விதிப்பு அட்டவணை சுவாரசியமானது:

ஒரு இந்தியக் கிராமத்தில் நிலவரி ஏற்றம்

| ஆண்டு | நிலவரி ரூபாய் | வரி விதிக்கப்பட்ட நிலப்பரப்பு ஏக்கர்கள் |
|---|---|---|
| 1698 | 301 | 1,963 |
| 1727 | 620 | 2,000 |
| 1730 | 1,173 | 2,000 |
| 1770 | 1,632 | 2,008 |
| 1785 | 552 | 1,954 |
| 1790 | 66 | 1,954 |
| 1803 | 1,009 | 1,981 |
| 1908 | 818 | 1,954 |
| 1817 | 792 | 1,954 |
| 1823 (பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பிறகு) | 2,121 | 2,089 |
| 1844—1874 | 1,161 | 2,089 |
| 1874—1904 | 1,467 | 2,271 |
| 1915 | 1,581 | 2271 |

£ 818,000; கிழக்கு இந்தியா கம்பெனி நிதி நிர்வாகத்தை மேற்கொண்ட 1765-66 இல் அது £ 1,470,000 ஆக உயர்த்தப் பட்டது. 1793 இல் வங்காளத்தில் 'நிரந்தர ஏற்பாட்டு முறை' அமுலான போது அது £ 3,091,000.

1800–01 இல் கம்பெனி திரட்டிய நிலவருமானம் £ 42 லட்சம்; அது (புதிய பிரதேசங்கள் சேர்ந்ததாலும், வரி ஏற்றத் தாலும்) 1857-58 இல் £ 153 லட்சமாக, பிரிட்டிஷ் அரசு ஆட்சியை ஏற்றபோது உயர்ந்தது. பிரிட்டிஷ் முடியாட்சியில் 1900-01 இல் அது £ 175 லட்சமாகி, 1911-12 இல் £ 200 லட்ச மாயிற்று. 1936-37 இல் அத்தொகை £ 200 லட்சம்.

பிரிட்டிஷ் ஆட்சியின் தொடக்க காலத்திலும் அதற்குச் சற்று முந்தின காலத்திலும் வரி விதிப்பு மிகக் கடுமையாக இருந்ததாலும் அதே அளவைத் தொடர்ந்து வன்முறையில் வைத்துக் கொள்ள முடியாததாலும், நவீன காலத்தில், மொத்த விளைச்சலில் முன்னைவிடச் சிறுபகுதியையே வரியாக விதிக்கிறார்கள் (நிகர விளைச்சலில் பாதி என்ற அடிப்படையில் வரி விதிப்பது வழக்கம்—முகர்ஜீ, ''இந்தியாவின் நிலப் பிரச்னைகள்,'' பக்.202). ஆனால், இந்தக் காலத்திற்குள், அரசுக்கு நேராய்க் கிடைக்கும் நிலவருவாயை விட மிக அதிகமான வருவாய் தரும் ஜமீன்தாரி முறை, ஏற்றப்பட்ட வரிகள், வர்த்தக ஊடுருவல், அதிகப்படி நுகர்பொருள்கள் மீது வரிகள், வளரும் கடன் சுமை போன்ற புதிய சுரண்டல் முறைகள் உருவாகிவிட்டன. தொடக்க காலத் தில் நிலவருவாயிலிருந்தே நேராக செலுத்தப்பட்ட காணிக்கை முறை மாறி, நவீன நிதி-முதலீடு முறையாலும் அதனைச் சார்ந்த இந்தியப் பொருளாதாரத்தை உறிஞ்சும் பல்வகைப் புல்லுருவி களாலும் சுரண்டல் செய்யும் ஏராளமான புதிய முறைகள் தோன்றிவிட்டன.

அப்படி இருந்தும், நவீன காலத்திலும் ஒவ்வொரு முறை திருத்தி அமைக்கப்படும் போதும் நிலவரி தொடர்ந்து உயர்த்தப் பட்டவண்ணம் இருக்கிறது. 1928 இல் பர்டோலியில் காங்கிரஸின் தலைமையில் 87,000 உழவர்கள் திரண்டு வரிவுயர்வை எதிர்த்துக் கிளர்ச்சி செய்து, வரிவுயர்வு அநீதியானது என்று அரசு ஒப்புக் கொண்டு வரியைக் குறைக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.[1]

---

1. பர்டோலி வரிகொடா இயக்கத்தின் வெற்றி பற்றி நிர்வாக அதிகாரிகள் தெரிவித்த கருத்து பொருட்செறிவு உள்ளது; கோரிக்கையிலுள்ள நியாயத்தை அவர்கள் மறுக்கவில்லை; ஆனால், எல்லா வரி விதிப்புகளின் நியாயத்தையும் பற்றிக் கேள்வி கேட்கும் 'ஓர் உதாரணமாக' அக்கிளர்ச்சி ஆகிவிட்டதே என்று தான் அவர்கள் வருந்தினார்கள்:

''குறிப்பாக சென்னையிலும், பம்பாயிலும், ஐக்கிய மாகாணங்களிலும் வரி விதிப்பு அமோகமாக ஏறியுள்ளது,'' என்று ஆர். முகர்ஜீ, 'இந்தியாவின் நிலப்பிரச்சினைகள்' என்ற தம் நூலில் (பக். 206) எழுதுகிறார். 1890-91க்கும் 1918-19க்கும் இடையில் நிலவரி 24 கோடி ரூபாயிலிருந்து 33 கோடியாக உயர்ந்துள்ளதைக் குறிப்பிட்டு அவர் மேலும் எழுதுகிறார்:

> ''முப்பது ஆண்டுகளில் ஐக்கிய மாகாணங்கள், சென்னை, பம்பாய் ஆகிய இடங்களில் விவசாய வருமானம் சுமாராக 30, 60, 23 சதவீதம் உயர நிலவரி 57, 22·6, 15·5 சதவீதம் உயர்ந்தது. இந்த மாகாணங்களில் குறுநிலவுடைமையாளர்களே மிகுதி; நிலவரி இவ்வளவு ஏற்றப்பட்டதாலும், வரியை ரொக்கமாகவே செலுத்த வேண்டும் என்றதாலும், அறுவடைக் காலத்தில் அதை வசூல் செய்ததாலும் அவர்களுக்கு மிகவும் பாதகமாயிற்று.'' (பக். 345.)

## 2. நிலமுறையில் மாறுதல்

பிரிட்டிஷார் வெற்றி கண்டதும் தொடக்க காலத்தில் வரிச் சுமை ஏறியது என்பதைவிட முக்கியமான மற்றொரு விஷயம் உண்டு. நிலமுறையில் அவர்கள் செய்த புரட்சியே அது.

இந்தப் புரட்சியின் முதல்படி வரி விதிப்பு முறையிலும் நிலவுடைமைப் பதிவிலும் செய்யப்பட்டது. காலம் காலமாக இந்தியப் பொருளாதாரத்தில் நிலவும் கருத்துக்களும் நிறுவனங்களும் கைவிடப்பட்டு அவற்றுக்கு முற்றிலும் அந்நியமான ஆங்கிலேயக் கருத்துக்களும் நிறுவனங்களும் கைக்கொள்ளப்பட்டன அல்லது மேலே திணிக்கப்பட்டன. தொன்று தொட்டு இருந்த 'இறைக்கடன்' என்பது ஆண்டு விளைச்சலில் ஒரு பகுதியை அரசுக்குச் செலுத்துவதாகும். விளைச்சலுக்கு ஏற்ப அது மாறுபடும். உழவர்கள் கூட்டாகவோ, அல்லது சுயாட்சி படைத்த கிராம சமுதாயமோ அரசுக்குக் காணிக்கை அல்லது

---

''இந்தப் பிரதேசத்தின் (பர்டோலியின்) வரி விதிப்பை வழக்கம் போல் சாதாரணமாகத்தான் திருத்தப்பட்டது; புதிய வரி எதிர்ப்புக் கோஷத்தை அரசியல் வாதிகள் எழுப்பினார்கள்; பம்பாய் அரசுக்குத் திருப்தியான மற்றோர் அதிகார பூர்வமான விசாரணை நடந்ததில் புதிய வரிகள் முற்றிலும் மிகுதியானவை என்ற உண்மை தெளிவாயிற்று. ஆக, இவ்விஷயமாக நடந்த கிளர்ச்சி நியாயமானதே என்றாலும் ஒரு புதிய உதாரணம் தோன்றி விட்டது என்பதைக் குறிப்பிட வேண்டும். எதிர்காலத்தில் புதிய வரி விதிப்புகள் மேலும் மேலும் அரசியல் விவாதங்களுக்குக் காரணமாகலாம்.

(டபிள்யூ. எச். மோர்லாண்ட், சி. எஸ். ஐ., சி. ஐ. ஈ. ''உழவர்களும் நிலச்சுவான்களும் அரசும்,'' என்றபகுதி, ''நவீன இந்தியா,'' 1932, பக். 166.)

வரியாகத் தருவார்கள். அதற்குப் பதிலாக இப்போது ஒரு குறிப்பிட்ட தொகை செலுத்தும் முறை அமுலாயிற்று. விளைச்சல் நல்ல முறையில் இருக்குமோ இராதோ, பயிரிடப் பெற்ற நிலத்தின் பரப்பு கூடியதோ குறைந்ததோ, அத் தொகையை ரொக்கமாக அரசுக்குச் செலுத்தியாக வேண்டும். மிகப் பெரும்பான்மையான நிலப் பட்டாக்கள் நிலத்தை உழுபவர்களுக்கோ அல்லது அரசால் நியமிக்கப்பட்ட பண்ணையார்களுக்கோ வழங்கப் பட்டன. இந்தத் தொகை தொடக்க காலத்து அதிகார பூர்வ மான நிர்வாகிகளால், அக் காலத்து அரசு ஏடுகளில், ''வாடகை'' என்று சாதாரணமாய்க் குறிப்பிடப்பட்டது. இவ்வாறாக உழவர்கள் அரசுக்கோ அல்லது அரசால் நியமிக்கப்பட்ட பண்ணையார்களுக்கோ குடிவாரதாரர்கள் ஆகிவிட்டதால் ஏற் பட்டது. ஆயினும் அவர்களுக்குப் பரம்பரையான சில உரிமை களும் உடைமையுரிமைகளும் விட்டு வைக்கப்பட்டிருந்தன. இவ்வாறு ஆங்கிலேயப் பண்ணையார் முறை அமுலாக்கியதால் (இந்தியாவில் இது போன்ற ஓர் ஏற்பாடு இதற்கு முன் இருந்ததே இல்லை; முன்பு வரிவசூல் ஏலத்தைக் கம்பெனியிடம் வாங்கினவர்களே இப்போது பண்ணையார்களாக மாறினார்கள்) தனிநபர் நிலவுடைமை, நிலத்தைப் பெந்தகம் வைப்பது அல்லது விற்பனை செய்வது, மற்றும் இந்தியப் பொருளாதாரத்துக்குப் புறம்பான ஆங்கிலேயப் பூர்ஷுவா சட்டக் கருத்துக்கள், அந்நிய அதிகாரிகளின் நிர்வாகம் இந் நிர்வாக யந்திரமே சட்டமியற்றும் உரிமையையும், நிர்வாக அதிகாரத்தையும், நீதி நிர்வாக அதிகாரத்தையும் தன்னகத்தே கொண்ட ஒரு நிலை தோன்றியது. இந்த மாறுதலால், பிரிட்டிஷ் வெற்றியாளர்களின் அரசு நடைமுறையில் எல்லா நிலத்துக்கும் இறுதி உடைமையாளர் என்று ஏற்பட்டது. உழவர்கள் குடிவார தாரர்களுக்குச் சமமாயினர். அவர்கள் பணம் செலுத்தத் தவறினால் வெளியேற்றப்படலாம். அல்லது அரசால் நியமிக்கப் பெற்ற பண்ணையார்களிடம் ஒப்படைக்கபடலாம். இந்தப் பண்ணை யார்களும் அரசிடமிருந்து நிலவுரிமை பெற்றவர்களே; பணம் செலுத்தத் தவறினால் அவர்களும் வெளியேற்றப்படலாம். பழைய சுயாட்சி படைத்த கிராம சமுதாயத்தின் பொருளாதாரப் பணியும் நிர்வாகப் பணியும் அதனிடமிருந்து கவரப்பட்டன. பொது நிலங்களில் பெரும்பகுதி தனிநபர்களுக்கு வழங்கப் பட்டது.

இவ்வாறாக, காலனி முறைக்கே உரியதான ஓர் ஏற்பாட்டை முழு அளவில் இந்தியாவில் அமுலாக்கினார்கள்—இந்திய மக்களின் நிலவுரிமையைப் பறித்தார்கள். இந்த ஏற்பாட்டை மிகச் சிக்கலான சட்ட வடிவங்களில் ஓரளவு ஒளித்து வைத்தார்கள். ஒன்றரை நூற்றாண் டுக்குப் பிறகு இந்த ஏற்பாடு கதம்பமான செய்முறைகளும் குத்தகை

களும், பழக்கவழக்கங்களும் உரிமைகளும் என்றும் கடக்க முடியாத பெரும் காடாக மண்டிவிட்டது. நிலத்தின் சொந்தக்காரர்களாக இருந்த உழவர்கள் குடிவாரதாரர்களாக மாறியதுடன், நிலவுடமையின் துன்பங்களான நில அடமானம், கடன் சுமைகளை அநுபவிக்க வேண்டியதாயிற்று; அவர்களில் பெரும்பாலோரின் நிலவுடைமைகள்மீது இச்சுமைகள் சுமந்துள்ளன. இந்த ஏற்பாடு மேலும் வளர்ச்சி பெற்று, சென்ற நூற்றுண்டில், குறிப்பாக, சென்ற அரை நூற்றுண்டில் அவர்களில் பலர் நிலமற்ற உழைப்பாளர்களாக அல்லது விவசாயப் பாட்டாளிகள் என்ற புது வர்க்கமாக மாறியுள்ளனர். விவசாய மக்களில் மூன்றில் ஒரு பகுதி அல்லது பாதிப்பேர் இந்த வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்.

*இந்த மாறுதலின் ஆரம்ப நிலையைக் குறித்தே மார்க்ஸ் இந்தியாவில் பண்டைய கிராம சமுதாயங்கள் நாசமாக்கப் பட்டுவிட்டன என்றும், பூர்ஷுவா வர்த்தக ஊடுருவலாலும் யந்திரங்கள் உற்பத்தி செய்த பொருள்களின் ஆக்கிரமிப்பாலும் மட்டும் இந்த நாசம் ஏற்படவில்லை என்றும், ஆனுல் ''ஆட்சியாளர்களும் நிலக்கிழார்களுமான'' ஆங்கிலேய வெற்றியாளர்களின் நேரிடையான அரசியல், பொருளாதார அதிகாரத்தால்தான் அந்த நாசம் ஏற்பட்டது என்றும் குறிப்பிட்டதுடன், ''ஆங்கிலேயரின் நேர் அரசியல் அதிகாரச் சார்பு இல்லாத'' சைனுவில் இன்னும் மெதுவாய்க் கிராம சமுதாயங்கள் அழிந்ததை இந்திய நாட்டு நிலையுடன் ஒப்பிட்டுக் காட்டுகிருர்.*

> *''மக்களை அரித்துண்ணும் வர்த்தகச் செல்வாக்கிற்கு, உள்நாட்டு ஐக்கியமும் முதலாளித்துவத்திற்கு முந்தின தேசீய உற்பத்தி சக்திகளின் எதிர்ப்புக் குரலும் எத்தகைய தடைகளை ஏற்படுத்தும் என்பதை ஆங்கிலேயருக்கு இந்தியாவுடனும் சைனுவுடனும் இருந்த தொடர்பிலிருந்து தெளிவாய் அறியலாம். இங்கு உற்பத்தி முறைக்கு விசாலமான அடிப்படை, சிறு விவசாயமும் உள்நாட்டு வியாபாரத்தின் மீது அமைந்தது. இத்துடன் இந்தியாவில் நிலம் பொதுவுடமையாக இருக்கும் நிலையும் சேருகிறது. சைனுவிலும் ஆதியில் இதே நிலைதான் நிலவியது என்பதைப் போகிற போக்கில் குறிப்பிட வேண்டும். இந்தியாவில் ஆங்கிலேயர்கள் தங்கள் அரசியல் அதிகாரத்தையும் பொருளாதார அதிகாரத்தையும் ஆட்சியாளர்கள், நிலக்கிழார்கள் என்ற முறையில் ஏக காலத்தில் செலுத்தி அந்தச் சிறிய பொருளாதார அமைப்புகளைச் சிதைத்தார்கள்.*

*அதற்கு ஓர் அடிக்குறிப்பும் சேர்க்கிருர்:*

> *''பொருளாதாரத்தில் தொடர்ச்சியாக வெற்றிகாணுத, உண்மையில் அபத்தமான, (நடைமுறையில் தூற்றத்தக்க)*

சோதனைகள் எந்த நாட்டின் வரலாற்றிலாவது உண்டா என்றால், அது ஆங்கிலேயரின் இந்திய நிர்வாக வரலாறே யாகும். வங்காளத்தில் பெரும் அளவில் ஆங்கிலேய நில வுடைமையின் ஒரு கேலிச் சித்திரத்தைப் படைத்தார்கள். தென்கிழக்கு இந்தியாவில் சிறு ஓதுக்கீடு நிலவுடைமைக் கேலிச் சித்திரம். வடமேற்கே அவர்கள் தங்கள் முழு ஆற்றலையும் செலுத்தி நிலத்தைப் பொதுவுடைமையாகக் கொண்ட இந்தியக் கிராம சமுதாயத்தையே ஒரு கேலிச் சித்திரமாக மாற்றிவிட்டார்கள்.''

## 3. நிலப்பண்ணையார் முறையின் தோற்றம்

ஆங்கிலயே நிலப் பண்ணையார் முறையைச் சற்று திருத்தம் செய்து அமுல்படுத்தியதுதான் மேனாட்டு வெற்றியாளர்கள் முதன் முதலில் மேற்கொண்ட நிலத்திட்டம். 1793இல் கார்ன் வாலிஸ் பிரபு வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா மாகாணங்களில் புகுத்திய புகழ்பெற்ற நிலையான நிலவரித் திட்டம் இதுவே; பின்னர் வட சென்னையின் சில பகுதிகளிலும் புகுத்தப்பட்டது. முன்பு வரிவசூலாளர்கள் அல்லது பழைய ஆட்சியாளர்களால் தரகு அடிப்படையில் வரி வசூல் செய்வதற்கு நியமிக்கப்பட்ட அதிகாரிகளாக ($2\frac{1}{2}$ சதவீதத் தரகு அரசின் ஒப்புதல் பெற்றது; எனினும், நடைமுறையில் அவர்கள் மிகுதியாக வசூலித்துக் கொண்டார்கள்.) முன்பு இருந்து இப்போது ஜமீன்தார்களா யிருந்தவர்களே நிலையான நிலக்கிழார்களாக ஆக்கப்பட்டார்கள். அதற்காக அவர்கள் அரசுக்கு நிலையான ஒரு தொகை செலுத்த வேண்டும். அக்காலத்தில் உழவர்கள் செலுத்திய மொத்தத் தொகையில் பதினொன்றில் பத்து பகுதிக்குச் சமமான தொகை யாக அது இருக்கும். மீதமுள்ள $\frac{1}{11}$ பகுதி நிலக்கிழாரைச் சேரும்.

அக்காலத்தில் திட்டத்தின் இந்த நிபந்தனைகள் ஜமீன்தார் களுக்கும் உழவர்களுக்கும் துன்பகரமானதாகவும், அரசினருக்கு ஆதாயமானதாகவும் இருந்தது. வங்காளத்தில் திட்டப்படி £ 30 லட்சம் ஜமீன்தார்கள் வசூலிக்க வேண்டும். முன்னாள் ஆட்சி யாளர்கள் வசூலித்ததைவிட இது மிகமிக அதிகம். உழவர்களுக்குக் கஷ்ட காலங்களில் சற்று கருணையும் பரிவும் காட்டும் குண முள்ள பழைய தலைமுறையைச் சேர்ந்த ஜமீன்தார்களில் பலர் புதிய திட்டத்தின் பளு காரணமாக நொடித்து விட்டனர்: அவர் களுடைய ஜமீன்கள் தாட்சண்யமில்லாமல் ஏலத்துக்கு விடப் பட்டன. பழைய நல்ல ஜமீன்தார்கள் இவ்வாறு ஒழிந்தது பற்றிப் பல பரிதாபமான கதைகள் இருக்கின்றன. தங்கள் பாது காப்பிலுள்ள குடியானவர்களுக்கு உதவ வேண்டிய கடமை

என்று அவர்கள் எண்ணியவர்கள்; அவர்கள் அரசு குறிப்பிட்ட அளவு வசூல் செய்யாத காரணத்தால் புதிய ஆட்சியாளர்களால் இரக்கமின்றி வெளியேற்றப்பட்டார்கள். ஒரு புதுரக முதலைகளான பேராசை கொண்ட வியாபாரிகள் ஜமீன்களை ஏற்க முன் வந்தார்கள்; உழவர்களிடமிருந்து கடைசி அணுகூடப் பாக்கி இல்லாமல் வசூல் செய்து, அரசுக்குரியதைச் செலுத்தி, தங்கள் பைகளை நிரப்பிக் கொள்ள அவர்கள் எதுவும் செய்யத் தயாராயிருந்தார்கள். புதிய வர்க்கமான ''கனவான் உடமையாளர்களின்'' தன்மை இதுதான். இந்த வர்க்கத்தைத் தோற்றுவிப்பதே நிலையான நிலவரித் திட்டத்தின் நோக்கம் என்று அக்காலத்தில் கருத்து நிலவியது. 1802இல் மிதுனபூர் கலெக்டரின் அறிக்கை பின் கண்டவாறு குறிப்பிடுகிறது:

''சொத்துக்களை விற்பனை செய்வதாலும் ஜப்தி செய்வதாலும் வங்காளத்தின் பெரிய ஜமீன்தார்களில் பலர் துன்பவாய்ப்பட்டு பிச்சைக்காரர்கள் போலாகிவிட்டார்கள்; அதனால் வங்காளத்தின் நிலவுடமையில் ஏற்பட்டது போன்ற ஒரு மாறுதல் இந்தக் கால அளவுக்குள் எப்போதாவது எந்த நாட்டிலாவது உள்நாட்டு ஒழுங்கு முறைவிதிகளால் ஏற்பட்டிருக்குமா என்பது சந்தேகம்.''

பின்னர், இத் திட்டம் அரசினர் முதலில் எதிர்பாராத புதிய திசையில் திரும்பியது. பணத்தின் மதிப்பு குறைந்து, உழவர்களிடம் 'மானுவாரியாக' வசூலிக்கப்பட்ட தொகை அதிகமாகவே, இந்தக் கொள்ளையில் அரசினர் பங்கென நிலையாக அறுதியிடப்பட்ட தொகையான £ 30 லட்சம் வரவரக் குறைய, ஜமீன்தார்களின் பங்கு மேலும் மேலும் உயர்ந்தது. இன்று வங்காளத்தில் நிலையான நிலத்திட்டத்தின் கீழ் வசூல் நிலக் குத்தகைத் தொகை சுமார் £ 120 லட்சம் என்று மதிப்பிடப்படுகிறது. அதில் கால் பகுதி அரசுக்கும் முக்கால் பகுதி ஜமீன்தார்களுக்கும் போகிறது.[1]

இந்த உண்மை வெளியாகிவிட்டதால் நிலையான நிலவரித் திட்டத்தை இன்று ஜமீன்தார்களைத் தவிர உழவர்களும் இந்திய மக்கள் அனைவரும் மட்டுமன்றி ஏகாதிபத்தியவாதிகளும் தாக்கிக்

1. நிலக் குத்தகை வருமானம் சட்டத்துக்குப் புறம்பான வழிகளில் அதிகமாக்கப்படுகிறது வங்காள சட்டமன்றத்தில் 1937இல் 2வது கூட்டத் தொடரில் நிலக் குத்தகை மசோதா மீது விவாதம் நடந்தது. வங்காளத்தில் மொத்த நிலக்குத்தகை வருமானத்தை மூன்று உறுப்பினர்கள் மூன்று விதமாக மதிப்பிட்டார்கள்; ரூ 29 கோடி (17 கோடி சட்ட பூர்வமாக, 12 கோடி சட்ட விரோதமாக), ரூ 30 கோடி (20 கோடி சட்ட பூர்வமாக, 10 கோடி சட்ட விரோதமாக), ரூ 26 கோடி (20 கோடி சட்ட பூர்வமாக, 6 கோடி சட்ட விரோதமாக). இந்த மதிப்பீடுகள் சட்ட விரோதமான வசூல் தொகை உட்பட சுமார் £ 2 கோடிக்குச் சமம்.

கண்டனம் செய்கிறார்கள்; அதை மாற்ற வேண்டும் என்று வலு வான இயக்கம் நடக்கிறது. (இக்கால ஏகாதிபத்தியவாதிகள் நிலை யான நிலவரித் திட்டத்தின்பால் காட்டும் கடுமையான எதிர்ப்புக்கு உதாரணமாக ''ஆக்ஸ்போர்டு இந்திய வரலாறு'' இத் திட் டத்தை மிகக் கடுமையாகக் கண்டனம் செய்வதைக் (பக். 561-570) கூறலாம். ஏகாதிபத்தியத்தின் நவீன பரிந்துரையாளர் கள், இத் திட்டம் முழுவதுமே அறியாமையால் விளைந்த ஒரு தவறு என்றும், ஜமீன்தார்கள் நிலக்கிழார்கள் அல்லர் என்ற உண்மையைக் காணாத எளிய, அற்புதமான அறியாமையால் அது ஏற்பட்டது என்றும் விளக்க முன்வருகிறார்கள். ஆகையால் ஆன்ஸ்டே, ''இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி''யில் எழுது கிறார்:

> ''முதலில், சிக்கலான இந்திய நிலவரித் திட்டம் கம்பெனி ஊழியர்களுக்கு முற்றிலும் புரியவில்லை. அவர்கள் 'நிலக்கிழார் தேட்டத்தில்' முனைந்தனர்...பெரும்பாலான 'ஜமீன்தார்கள்' ஏற்கனவே ஒரு போதும் நிலவுடைமை யாளர்களாக இருந்தவர்கள் அல்லர் என்று பின்னர் தெரிந்தது...அவர்களை ஆங்கிலேய அர்த்தத்தில் 'நிலக் கிழார்கள்' என்று தவறாய்க் கருதி விட்டனர்.''

இது அர்த்தமற்ற கட்டுக்கதை. அக் காலத்துப் பதிவேடுகள் மீது ஒரு பார்வை செலுத்தினால், காரன்வாலிஸ் பிரபுவும் அரசியல் வல்லுநர்களும் தாங்கள் ஒரு புதிய நிலக்கிழார் வர்க்கத் தைத் தோற்றுவிப்பதையும், அவ்வாறு எதற்காகச் செய்கிறார்கள் என்பதையும் நன்றாக உணர்ந்திருந்ததையும் தெளிவாய்க் காணலாம்.

ஆங்கிலேயப் பாணியில் நிலக்கிழார்களின் ஒரு புதிய வர்க்கத்தை உண்டாக்கி அவர்களை ஆங்கில ஆட்சிக்கு ஆதர வாளர்களாக உருவாக்க வேண்டும் என்ற நோக்குடன் தான் நிலையான ஜமீன்தாரி முறை தோன்றியது. ஆங்கிலேயர்கள் சிறு பான்மையினர்; ஒரு மாபெரும் மக்கட் தொகையை அவர்கள் ஆள வேண்டும். அவர்களுடைய அதிகாரத்துக்குச் சமூக ஆதரவு ஏற்படுத்துவதற்கு ஒரு புதிய வர்க்கத்தைப் படைக்க வேண்டியது முற்றிலும் அவசியமாக இருந்தது. இந்தப் புதிய வர்க்கத்தினருக்கு மொத்தக் கொள்கையில் ஒரு பகுதியைத் தருவதால் (முதல் 1/11 பகுதி என்ற நோக்கம்) அவர்கள் ஆட்சியாளர்களுக்கு உறுதுணை யாக இருப்பர் என்பது இத் திட்டத்தின் நோக்கம். காரன்வாலிஸ் பிரபு தன் கொள்கையை விளக்கி எழுதிய குறிப்புரையில், தான் ஒரு புதிய வர்க்கத்தைத் தோற்றுவிப்பதை மனப்பூர்வமாக உணர்ந்தே செய்வதாகவும், பழைய ஜமீன்தார்களுக்கு இல்லாத

புதிய உரிமைகளை அவர்களுக்கு வழங்குவதாகவும் தெளிவுபடுத்துகிறார்: ''ஜமீன்தார்களின் பாத்தியக் கோரிக்கையை மறுத்தால், பொது நலனை உத்தேசித்து அவர்களுக்கோ அல்லது வேறு வகை நபர்களுக்கோ நிலத்தில் சொத்துரிமை அளிக்க வேண்டியது அவசியம்'' என்று அவருக்கு உறுதியாகத் தோன்றியது என அவர் குறிப்பிடுகிறார். சர் ரிச்சார்டு டெம்பிள் எழுதிய ''என் காலத்து மனிதர்களும் நிகழ்ச்சிகளும்'' என்ற நூலில் (பக். 30), ''இங்கிலாந்தின் நில முறையை வங்காள மக்களுக்கு இடையில் ஏற்படுத்துவதற்கான ஒரு முயற்சிதான் கார்ன்வாலிஸ் பிரபுவின் நிலையான நிலவரித் திட்டம்,'' என்று குறிப்பிடுகிறார். 1828 முதல் 1835 வரை இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருந்த வில்லியம் பென்டிங்க் பிரபு தம் பதவிக் காலத்தில் ஆற்றிய ஒரு சொற்பொழிவில், புரட்சிக்கு எதிரான ஒரு வியூகமாக இருக்க வேண்டும் என்பதே நிலையான நிலவரித் திட்டத்தின் நோக்கம் என்று மிக அருமையான தெளிவோடு உரைக்கிறார்:

> ''மக்களுடைய பரந்த கொந்தளிப்புக்கும் புரட்சிக்கும் எதிராகப் பாதுகாப்பு தேவையாக இருந்தது என்றால், நிலையான நிலவரித் திட்டம் வேறு பல முக்கியமான விஷயங்களில் தோல்வி கண்டாலும் இவ் விஷயத்தில் ஒரு பெரும் நன்மை செய்தது. பிரிட்டிஷ் ஆதிக்கம் நீடிக்க வேண்டும் என்னும் மிக ஆழ்ந்த அக்கறை கொண்ட, பண வசதியுள்ள நிலக்கிழார்கள் கூட்டம் ஒன்றைப் படைத்து மக்கள் மீது அவர்கள் முழு ஆதிக்கம் செலுத்துவதற்கான ஒரு நிலையை உண்டாக்கித் தந்தது இத் திட்டம்.''
>
> (1829, நவம்பர் 8 இல் வில்லியம் பென்டிங்க் பிரபு நிகழ்த்திய சொற்பொழிவு; ஏ. பி. கீத்தின், ''1750–1921 இந்தியக் கொள்கை பற்றின சொற்பொழிவுகளும் ஆவணங்களும்'' என்ற நூலின் முதல் தொகுதி, பக். 215 இல் மீண்டும் அச்சிடப் பெற்றது.

பிரிட்டிஷ் ஆட்சிக்கும் இந்தியாவில் அதன் சமூக அடிப்படையாகப் படைக்கப்பட்ட நிலப்பிரபுத்துவத்துக்கும் இடையில் ஏற்பட்ட இந்த நேச உறவு இன்றளவும் நீடிக்கிறது; பிரிட்டிஷ் ஆட்சியை மீள முடியாத முரண்பாடுகளில் சிக்க வைத்து அதன் வீழ்ச்சிக்கும் நிலப்பிரபுத்துவத்தின் வீழ்ச்சிக்கும் வழிகோலுகிறது. தங்களுடைய சுதந்திரப் போராட்டத்தில் இந்திய மக்கள் முன்னேறுகையில் ஒவ்வொரு மாகாணத்திலுமுள்ள நிலக்கிழார்கள் கூட்டணியும் நிலவுடைமையாளர்கள் சங்கங்களும் இவை போன்ற நிறுவனங்களும் கூடி பிரிட்டிஷ் ஆட்சியின்பால் தங்களுக்குள்ள விசுவாசத்தை அறிவிக்

கின்றன. 1925 இல் வைசிராய்க்கு வங்காள நிலக்கிழார் சங்கத் தலைவர் வாசித்தளித்த வரவேற்புரையை உதாரணமாய்க் கொள்ளலாம்:

> "மேன்மை தங்கிய தாங்கள் நிலக்கிழார்களின் இடையீடு இல்லாத ஆதரவையும் உண்மையான உதவியையும் நம்பலாம்."

1938 இல், மற்ற எல்லாச் சங்கங்களையும் இணைப்பதற்கான முயற்சியாக அனைத்திந்திய நிலவுடைமையாளர்கள் முதல் மகாநாடு நடந்தது; மைமன்சிங் மகாராஜா ஆற்றிய தலைமையுரையின் ஆதாரசுருதியாக "நாம் ஒரு வகுப்பாக வாழ வேண்டும் எனின் அரசின் கரங்களை வலுப்படுத்த வேண்டியது நம் கடமை" என்ற அவர் அறிவிப்பு விளங்குகிறது. 1935 ஆம் ஆண்டின் அரசியல் சட்டத்தில் நிலவுடைமையாளர்களுக்கு சட்டமன்றங்களும், மத்திய சட்டப் பேரவையிலும் பிரதிநிதித்துவம் கிடைக்கச் சிறப்பாக வழி செய்யப்பட்டது.

ஆனால், நிலையான நிலவரித்திட்டப்பிசகு மீண்டும் செய்யப் படவில்லை. பின்னர் செய்யப்பட்ட ஜமீன்தாரி நிலவரி திட்டங்கள் தற்காலிகமானவை—அதாவது, அரசின் ஆணைக் கேற்ப நிலவரி அடுத்தடுத்து உயர்த்தப்படுவதற்கு அவை உட்பட்டவை.

நிலையான நிலவரித் திட்டத்துக்குப் பிந்தின காலத்தில் சென்னையில் தொடங்கிப் பல மாவட்டங்களில் மற்றொரு மாற்றுத் திட்டம் முயலப்பட்டது. அரசு உழவர்களிடம் நேராக நிலவரித் தொகை வசூல் செய்து கொள்ள வேண்டியது. இத் தொகை நிலையானது அல்ல, தற்காலிகமானது—அல்லது அவ்வப்போது திருத்தப்படவேண்டியது—என்ற கருத்து மேற்கொள்ளப்பட்டது. இதனால் நிலையான நிலவரித் திட்டத்தின் இரு அசௌகரியங் களையும் தவிர்த்து, நடுவர்களுடன் பங்கிட்டுக் கொள்ளாமல் கொள்ளைத் தொகை முழுவதையும் அவர்களே அடைய முடியும். இதுதான் ரயத்துவாரி முறை. சென்னையில் இம் முறையின் தோற்றம் சர் தாமஸ் மன்ரோவின் பெயருடன் சம்பந்தம் உடையது. இந்திய அமைப்புகளை அணுக ஒரு நெருங்கிய வழியை அவர் இந்த முறையில் கண்டார். ஜமீன்தாரி திட்டத்துக்கு எதிராக 1807 லேயே இத் திட்டம் சர் தாமஸ் மன்ரோவால் சிபாரிசு செய்யப்பட்டது (முதலில் நிலையான திட்டமாக). சென்னையின் ஒரு கவர்னராக 1820 இல் அவரால் இத் திட்டம் சென்னையில் பெரும் பகுதிக்குப் பொதுவானதாக அமுலாக்கப் பட்டது. அதன் முன்மாதிரியைப் பின்னர் மற்றும் பல

மாகாணங்கள் பின்பற்றின; இப்போது பிரிட்டிஷ் இந்தியாவில் பாதிக்கு மேற்பட்ட இடங்களில் நடைமுறையில் உள்ளது.

ரயத்வாரி திட்டம் இந்திய அமைப்புகளுக்கு நெருங்கிய திட்டமெனக் கூறப்பட்டாலும், தனித்தனியாக உழவர்களிடம் வரி வசூல் செய்வதாலும், விளைச்சல் மீது அல்லாமல் நிலத்தின் அடிப்படையில் வரி விதிப்பதாலும், ஜமீன்தாரி திட்டத்துக்கு எந்தவிதத்திலும் மாறுபடாமல் இத் திட்டமும் இந்திய அமைப்புக் களைப் பிளந்தது. உண்மையில் சென்னை வருவாய் வாரியம் அதை எதிர்த்து நீண்ட போராட்டம் நடத்தித் தோற்றது. கிராம சமுதாயங்களுடன் கூட்டு நிலவரித் தீர்வு செய்து கொள்ளுமாறு —மௌஸாவாரி திட்டம் என்று இதற்குப் பெயர்—அந்த வாரியம் வற்புறுத்தியது. அவர்கள் ரயத்துவாரி முறையைக் கண்டித்து 1818 இல் சமர்ப்பித்த குறிப்புரை மேற்கோள் காட்டத் தக்கது:

"புதிதாகப் பெற்ற நாடுகளின் உண்மையான வளவகை களையும், அவற்றின் நிலவுரிமை பற்றின சரியான தன்மை யையும் அறியாத அயல்நாட்டு வெற்றியாளர்களின் ஒரு சிறிய கூட்டம், பல்வேறு இனத்தவரும், மொழிகளாலும் பழக்கவழக்கங்களாலும் ஒருவருக்கொருவர் மாறுபட்டவர் களும் வாழ்வதாகிய ஒரு பரந்த நிலப்பரப்பைக் கைப்பற்றி யதும், ஒவ்வொரு வகை புள்ளிவிவரம் உடையதும் மக்களோடு ஒன்றிய அரசு வாய்ந்தவையுமான மிக நாகரிகம் படைத்த ஐரோப்பிய நாடுகளிலும் கூட அசுரதிட்டம் அல்லது கனவுத் திட்டம் எனக் கருதப்படக் கூடிய ஒரு திட்டத்தை—அதாவது மாகாண வாரியாகவோ, மாவட்டம் அல்லது தேசவாரி யாகவோ, பண்ணைவாரியாகவோ ஒருநிலவரியை நிர்ணயிக் காமல், தங்கள் ஆட்சிக்கு உட்பட்ட ஒவ்வொரு தனி வயலுக்கும் வரிவிதிக்கும் ஒரு திட்டத்தை அமுலாக்க முயல் வதை நாம் காண்கிறோம்."

"இந்தக் கற்பனை முன்னேற்றத்தைக் காணவேண்டி அவர்கள் தங்களுக்குத் தெரியாமலே பழமையான பந்தங் களையும், ஒவ்வொரு ஹிந்து கிராமக் குடியரசையும் ஒற்றுமைப் படுத்தும் பழமையான பழக்கவழக்கங்களையும் ஒழித்து, ஒரு வகை வேளாண்மைச் சட்டத்தின் வாயிலாக நினைவுக்கெட் டாத காலம் தொட்டுக் கிராம சமுதாயத்திற்குக் கூட்டுச் சொத்தாக இருக்கும் நிலங்கள் மீது வரி விதித்துப் பிரித்துப் பராதீனப்படுத்த முற்பட்டுள்ளனர்...தங்களுடைய ஆணை ஒவ்வொரு வயலின் வரம்புக்குட்பட்டது என்று கூறுகிறார்கள்; ஆனால் உண்மையில், எட்டமுடியாத ஒரு பெருமத்தை வரம்

பாய்க் கொண்டு தங்கள் விருப்பத்துக்கு ரயத்து மீது வரி விதித்து, இவர்களுக்கு முன்பிருந்த முஸல்மான் அரசுபோல ரயத்தை வன்முறையில் கலப்பையோடு சேர்த்துக்கட்டி, மிகுதியாக வரிவிதிக்கப்பட்டதெனத் தெரிந்த நிலத்தில் உழுமாறு கட்டாயப்படுத்தி, அவன் ஓடினால் தேடி இழுத்து வந்து, அவனுடைய பயிர் முதிரும் வரை தங்கள் கோரிக்கையைத் தள்ளிவைத்து, பிறகு அவனிடம் இருப்பதை எல்லாம் எடுத்துக் கொண்டு, அவனுக்கு மாடுகளும் விதை தானியங்களையும் தவிர வேறொன்றும் விட்டுவைக்காமல்—அல்ல, ஒருகால் இவற்றையும் அவர்களே வழங்க வேண்டியிருக்கலாம்—அவன் மீண்டும், தனக்காக அல்ல, அவர்களுக்காகப் பயிரிடும் துன்பப் பணியைத் தொடர விடுவார்கள்.''

(1818, ஜனவரி 5, சென்னை வருமான வாரியத்தின் நிகழ்ச்சிப் பதிவு.)

ஸ்தலத்தில் இருந்த அதிகாரிகள் கூட்டுவரி விதிக்குமாறும், ''நினைவுக்கெட்டாத காலம் தொட்டுக் கிராம சமுதாயத்தின் கூட்டுச் சொத்தாக இருக்கும் நிலங்களை'' அப்படியே இருக்க அநுமதிக்குமாறும் வேண்டிக் கொண்டதால் பயன் ஏற்படவில்லை. லண்டன் இயக்குநர்குழு ரயத்துவாரி திட்டத்தை அமுல் செய்வதென்று தீர்மானித்தார்கள். அல்லது, அக்காலத்து ஓர் ஆவணத்தின்படி, உழவர்களுக்கு ''தனி உடமை வரம் வழங்கினார்கள்''; அவர்களுடைய யோசனைகளை ஏந்திக்கொண்டு, இந்தத் திட்டத்தைப் பொதுவான வரி விதிப்பு முறையாகத் திணிப்பதற்காக சர் தாமஸ் மன்ரோ லண்டனிலிருந்து திரும்பினார்.

விளைவாக, பிரிட்டிஷ் இந்தியாவில் நிலவுரிமை மூன்று பொதுத் தொகுதிகளாகப் பரம்பரையாக வகுக்கப்பட்டுள்ளன. இந்த உரிமை பிரிட்டிஷ் அரசிடமிருந்து வருவது; அதுவே தலையாய நிலப்பிரபு என்ற உரிமையைப் பிரதிபலிப்பது.

முதலாவதாக, வங்காளத்திலும் பீகாரிலும் வட சென்னையின் சில பகுதிகளிலும் நிலையான ஜமீன்தாரி முறை பிரிட்டிஷ் இந்தியாவின் மொத்தப் பரப்பில் 19 சதவிகிதத்தில் செயல்படுகிறது.

இரண்டாவதாக, ஐக்கிய மாகாணங்களின் பெரும்பகுதியிலும், மத்திய மாகாணங்களிலும், வங்காளம், பம்பாய், பஞ்சாப் ஆகியவற்றின் சில பகுதிகளிலும் தற்காலிக ஜமீன்தாரி முறை (பஞ்சாபில் சோதனை செய்து பார்க்கப்பட்ட கூட்டு கிராம வரி விதிப்புத் திட்டம் எனப்பட்டது போன்ற தனிநபர் அல்லது ஒரு கோஷ்டி உடமையாளர்கள்) 30 சதவீதப் பரப்பில் செயல்படுகிறது.

மூன்றாவதாக, பம்பாயிலும், சென்னையின் பெரும்பகுதியிலும், பீரார், சிந்து, அஸ்ஸாம், மற்ற பகுதிகளிலும் 51 சதவீதப் பரப்பில் செயல்படுகிறது.

பிரிட்டிஷ் இந்தியாவில் 49 சதவீத நிலப்பரப்பில் மட்டும், அதாவது ஜமீன்தாரின் முறை செயல்படும் இடங்களில் மட்டும் நிலப்பிரபுத்துவம் நிலவுவதாக யாரும் எண்ணிவிடக் கூடாது. நடைமுறையில், உள் குத்தகை விடுவதாலும், ஆரம்ப காலத்து உழவர்களிடமிருந்து வட்டிக்கடைக்காரர்களும் மற்றவர்களும் நிலத்தை வசப்படுத்திக் கொண்டதாலும் ரயத்துவாரி பிரதேசங்களிலும் நிலப்பிரபுத்துவ முறை விரைவாகவும் விரிவாகவும் பரவியுள்ளது. உழவர்களிடமிருந்து நேரிடையாக வரிவசூல் செய்ய வேண்டும் என்ற நோக்கம் ஆரம்பத்தில் இருந்திருக்கலாம்; ஆனால் இப்போது நிலைமை பெரிதும் மாறிவிட்டது. ''நிலங்களில் முப்பது சதவீதத்துக்கு மேல் சென்னையிலும் பம்பாயிலும் குடியானவர்களால் பயிரிடப்படுவதில்லை.'' (முகர்ஜீ: 'இந்தியாவின் நிலப் பிரச்னைகள்.' பக். 329) சென்னையில் 1901க்கும் 1921 க்கும் இடையில் பயிர்த்தொழில் செய்யாத நிலவுடமையாளர்களின் எண்ணிக்கை ஓராயிரத்தில் 19 லிருந்து 49 ஆக உயர்ந்தது; பயிர்த் தொழில் செய்யும் நிலவுடமையாளர்களின் எண்ணிக்கை ஓராயிரத்தில் 484 லிருந்து 381 ஆகக் குறைந்தது; பயிர்த் தொழில் செய்யும் குடியானவர்களின் எண்ணிக்கை ஓராயிரத்தில் 151 லிருந்து 225 ஆக உயர்ந்தது. 1921 ஆம் ஆண்டு பஞ்சாப் மக்கட் தொகை அறிக்கை, விவசாய நிலங்களின் வருவாயை நம்பி வாழ்ந்தவர்களின் எண்ணிக்கை 1911 இல் 626,000 இருந்து, 1921 இல் 1,008,000 ஆக உயர்ந்ததாய்ப் பதிவு செய்துள்ளது. ஐக்கிய மாகாணங்களில் 1891க்கும் 1921 க்கும் இடையில் விவசாய வருமானத்தையே பெரும்பாலும் நம்பி வாழ்வோரின் எண்ணிக்கை 46 சதவீதம் ஏறியது. மத்திய மாகாணங்களிலும் பீராரிலும் அதே காலத்தில் நிலவருவாய் பெறுவோரின் எண்ணிக்கை 52 சதவீதம் உயர்ந்தது.

நிலப்பிரபுத்துவத்தின் இந்த நீள் சங்கிலி நவீன காலத்தில் மிகவிரைவாக நீளுகிறது; பெரும் பணக்காரர்களும் சிறு பணக்காரர்களும் லாபகரமான தொழிலில் முதலீடு செய்ய இயலாமல் நிலத்தின் மீது படையெடுத்துக் கொள்முதல் செய்வதால் உழவர்கள் மேன் மேலும் நிலமற்றவர்களாவதையே இந்த நிலை காட்டுகிறது. ஏராளமான இடங்களில் உட் குத்தகைகள் பிரமிக்கத்தக்க அளவு வளர்ந்துள்ளது. (''சில மாவட்டங்களில் வியப்பூட்டும் அளவுக்கு உள் குத்தகை வளர்ந்துள்ளது. உச்சியிலுள்ள ஜமீன்தாருக்கும் அடியிலுள்ள உண்மையான உழவனுக்கும் இடையில் ஐம்பது

அல்லது அதற்கு மேற்பட்ட நடுவர்கள் உண்டாக்கப்பட்டுள்ள னர்''— ஸைமன் அறிக்கை, முதல் தொகுதி, பக். 340.)

அதன் விளைவாக, உழவர்களின் பாதுகாப்புக்கென இயற்றப் படும் சட்டங்கள் சிறு நிலக்கிழார்களுக்கே பயன்படுகின்றன; உண்மையான உழவர்களோ ஏற்கனவே நிலமற்ற தொழிலாளர் களாக மாறியிராவிடின் பாதுகாப்பற்றவர்களாய் தங்கள் மேலுள்ள சோம்பேறி நடுவர் கூட்டத்தாலும், பெரும் ரத்த முறிஞ்சிகளாலும், இறுதியாக அரசாலும் நசுக்கிப் பிழியப்படு கிறுர்கள். நிலப்பிரபுத்துவ முறையை அதன் இறுதிக் கேலிக் கூத்துக்கு கொண்டு செல்லும் இந்த நிலைமை, இந்தியாவில் வலுத்துவரும் வேளாண்மை நெருக்கடியின் கூரிய வெளியீடு ஆகும்.

## 4. வறுமைவாய்ப்பட்ட உழவர்கள்

இவற்றையெல்லாம் வைத்துப் பார்க்க, இந்தியாவில் கூரிய, பெருகிவரும் வர்க்க பேதமுள்ள வேளாண்மை உறவுகள் உள்ள ஒரு காட்சி தெரிகிறது.

1931 ஆம் ஆண்டு சென்ஸஸ் இந்திய வேளாண்மையில் கீழே கண்டவாறு வர்க்கப் பிரிவினை உள்ள ஒரு சித்திரத்தைக் காட்டுகிறது:

| | |
|---|---|
| பயிர்த்தொழில் செய்யாமல் குத்தகைப் பணம் வாங்கும் உடமையாளர்கள் | 4,150,000 |
| பயிர்த் தொழில் செய்யும் உடமை யாளர்கள், குடிவாரதாரர்களான உழவர்கள் | 65,495,000 |
| விவசாயத் தொழிலாளர்கள் | 33,523,000 |

இந்தப் பாகுபாட்டுக்கு அதிக மதிப்பு தர இயலாது; ஏனெனில் 'பயிர்த்தொழில் செய்யும் உடமையாளர்கள், குடிவாரதாரர்களான உழவர்கள்' என்ற தலைப்பு அவர்களுடைய நிலப்பரப்பின் அளவைக் வெளியிடவில்லை; அதனுல் பெரும் உழவர்கள், நடுத்தர உழவர்கள், ஏழை உழவர்கள் என்ற வேற்றுமைகள் வெளிப்படவில்லை. பொருளாதார முறையில் 'கட்டு படி ஆகாத' நிலமுள்ளவர்களும், தொழிலாளர் கீளப்போன்ற நிலையில் வசிப்பவர்களும் சாதாரணமாகத் தொழிலாளர்களாய் வேலைசெய்து பிழைப்பவர்களுமான பெரும்பாலான உழவர் கூட் டத்தின் அளவைப்பற்றி அது குறிப்பாக ஏதும் கூறவில்லை. பழக் கத்தில் சிறு உட்குத்தகைக்காரருக்கும் தொழிலாளிக்கும் பெயரள வில்தான் வித்தியாசம். ஆகையால் உண்மையான நிலவரத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமாயின், இந்த சென்லஸ் அறிக்கை

யோடு அவ்வப்பிரதேசங்களில் அதிகார பூர்வமாகவோ, அதிகார பூர்வமாக அல்லாமலோ விசாரணைகள் செய்ய வேண்டும்.

பிரிவினை செய்யும் முறையில் மாறுதல் செய்வதால் பழைய சென்ஸஸ் அறிக்கைகளோடு ஒப்பு நோக்க முடியாமல் போகிறது. 1921 ஆம் ஆண்டு சென்ஸஸ், சார்ந்திருப்போரையும் சேர்த்துக் கணக்கிட்டுப் பயிர்த் தொழிலால் வாழ்வோரின் தொகை 22·1 கோடி என்று காட்ட 1931 ஆம் ஆண்டு சென்ஸஸ் 10·3 கோடி என்று காட்டியது. ஆகையால், பழைய சென்ஸஸில் குறிப்பிடப்பட்ட ''நேராகப் பாடுபடுவோரின்'' எண்ணிக்கையை, அதாவது 10 கோடியை, 1931 ஆம் ஆண்டு சென்ஸஸோடு சேர்த்துப் பார்த்தால்தான் ஓரளவாவது ஒப்பு நோக்க முடியும். இப் பிரிவினை முறையில் மேலும் மாறுதல் செய்து, விவசாயத் தொழில் செய்வோரை 'வேறு தொழில்களுக்குத் துணைத் தொழில் செய்பவர்கள்' என்று ஒதுக்குவதும், விவசாயிகளுக்குப் பண்ணை வேலைகளில் உதவி செய்யும் அவர்களின் பெண் உறவினர்கள் 7 கோடி பெண்களை 'வீட்டு வேலை செய்வோர்' என்ற பிரிவுக்கு ஒதுக்குவதும், வேளாண்மையில் ஈடுபட்டுள்ள மக்கட் தொகையின் அளவு குறைந்துள்ளது என்ற பொய்யான, பிரமையான தோற்றத்தை உண்டாக்குவதற்கான முயற்சியே ஆகும் (168-9 பக்கங்களில் முன்பே விவரிக்கப்பட்டபடி). ஆயினும் இந்தப் பிற்தைய மாறுதல் நாம் காணும் முடிவுகளையே வலியுறுத்துகின்றன. இந்த அடிப்படையில் ஒப்பிட்டால் பின்வரும் முடிவுகள் ஏற்படும்:

| | 1921 லட்சங்கள் | 1931 லட்சங்கள் |
|---|---|---|
| பயிர்த்தொழில் செய்யாத நிலவுடைமையாளர்கள் .. | 37 | 41 |
| உழவர்கள் (உரிமையாளர்கள் அல்லது குடிவாரதாரர்கள்) .. | 746 | 655 |
| விவசாயத் தொழிலாளர்கள் .. | 217 | 335 |

இந்த விவரங்களை, குறிப்பாக, இரண்டாவது தொகுப்பின் கீழுள்ள தகவல்களை மேலே குறிப்பிட்ட காரணங்களால் நுணுக்கமாக ஒப்பிட்டு நோக்க முடியாது. ஆனால், பயிர்த்தொழில் செய்யாத நிலக்கிழார்களின் எண்ணிக்கை கூடி வருகிற பொதுவான போக்கு தெளிவாகப் புலப்படுகிறது (1911 இல் இவர்கள் எண்ணிக்கை 28 லட்சம்); நிலமற்ற தொழிலாளர்களின் எண்ணிக்கை அமோகமாய்ப் பெருகுவதும் தெரிகிறது.

சென்னைக்கான சற்று விவரமான தகவல்களைப் பார்க்கலாம்:

சென்னையில் விவசாயத்தில் வர்க்கப் பாகுபாடு
(விவசாய மக்கட்தொகையில் ஓர் ஆயிரத்துக்கு)

| | 1901 | 1911 | 1921 | 1931 |
|---|---|---|---|---|
| உழைக்காத நிலக்கிழார்கள் .. | 19 | 23 | 49 | 34 |
| உழைக்காத குடிவாரதாரர்கள் .. | 1 | 4 | 28 | 16 |
| உழைக்கும் நிலக்கிழார்கள் .. | 481 | 426 | 381 | 390 |
| உழைக்கும் குடிவாரதாரர்கள் .. | 151 | 207 | 225 | 120 |
| தொழிலாளர்கள் .. | 345 | 340 | 317 | 429 |

(சென்ஸஸ் அறிக்கைகள் அடிப்படையில் தயாரான 1901–21 ஆண்டுகளின் தகவல்கள் பி. பி. பிள்ளை எழுதிய ''இந்தியாவில் பொருளாதார நிலைமைகள்'' என்ற நூலில் தரப் பட்டுள்ளன (பக். 114); 1931 ஆம் ஆண்டு பற்றிய தகவல்கள் அவ்வாண்டின் சென்ஸஸ் அறிக்கையிலிருந்து எடுக்கப்பட்டவை.)

1901 க்கும் 1931 க்கும் இடையிலுள்ள முப்பது ஆண்டு களில் நிலத்தில் உழைக்காமல் குத்தகை வாங்குவோரின் எண் ணிக்கை இரண்டரை பங்கு கூடியுள்ளது (ஓராயிரத்தில் 20 லிருந்து 50 பேராக); பயிர்த்தொழில் செய்யும் நிலக்கிழார்கள் அல்லது குடிவாரதாரர்களின் எண்ணிக்கை நாலில் ஒரு பங்கு குறைந்துள்ளது (ஓராயிரத்தில் 635 லிருந்து 510 பேராக); நில மற்ற உழைப்பாளர்களின் எண்ணிக்கை மூன்றில் ஒரு பங்கி லிருந்து சுமார் பாதியாக உயர்ந்துள்ளது (ஓராயிரத்தில் 345 லிருந்து 429 பேராக).

வங்காளத்தில் கீழ்க்கண்டுள்ள நிலைமையைக் காண்கிறோம்
(சென்ஸஸ் அறிக்கைகளின் அடிப்படையில்)

| | 1921 | 1931 | மாறுதல் |
|---|---|---|---|
| பயிர்த்தொழில் செய்யாத நிலக்கிழார்கள் அல்லது குத்தகை வாங்குவோர் | 390,562 | 633,834 | + 61 % |
| பயிர்த்தொழில் செய்யும் நிலக்கிழார்களும் குடிவாரதாரும் | 9,274,924 | 6,079,717 | — 50 % |
| தொழிலாளர்கள் | 1,805,502 | 2,718,939 | + 34 % |

இந்த விவரமான தகவல்களும் ஒப்பு நோக்க முடியாதவை; ஏன் எனில், மொத்த விவசாய மக்கட் தொகையில் 20 லட்சம் பேர் குறைந்துள்ளதாய்ப் பொய்த்தோற்றம் காட்டும் வண்ணம் வர்க்கப் பிரிவினையில் மாறுதல் செய்யப்பட்டுள்ளது. ஆனால், நிலத்தில்

பாடுபடாமலே குத்தகைப்பணம் வாங்குவோரின் எண்ணிக்கையும், நிலமற்ற தொழிலாளர்களின் எண்ணிக்கையும் மிக அதிகமாய் உயர்ந்துள்ளதையே இது நிரூபிக்கிறது.

பயிர்த்தொழில் செய்யாமல் குத்தகைப்பணம் வாங்குவோரின் எண்ணிக்கை திடுக்கிடத்தக்க விதத்தில் பெருகியுள்ளதைச் சென்ற பகுதியில் கண்டோம்; நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் கிடைக்கும் சாட்சியங்கள் அதை உறுதிப் படுத்துகின்றன. உழவர்களின் நிலம் பராதீனம் ஆவதையே இவை காட்டுகின்றன.

அளவுகோலின் மறுமுனையில், நிலமற்ற விவசாயத் தொழிலாளர்களின் பெருக்கம் இன்னும் பொருட் செறிவு வாய்ந்தது. 1842 இல் மக்கட்தொகை அறிக்கை ஆணையாளர் என்ற முறையில் சர் தாமஸ் மன்ரோ இந்தியாவில் நிலமில்லாத குடியானவர்களே இல்லை என்று அறிவித்தார் (தவறான தகவல் என்பதில் சந்தேகமில்லை; ஆனால், அவர்களின் எண்ணிக்கை பற்றி புள்ளி விவரம் எடுக்கத் தேவைஇல்லை என கருதப்பட்டதை காட்டுகிறது). 1882 ஆம் ஆண்டு சென்ஸஸ் வேளாண்மையில் 75 லட்சம் ''நிலமற்ற பகல் தொழிலாளர்கள்'' இருப்பதாய் மதிப்பிட்டது. 1921 ஆம் ஆண்டு சென்ஸஸ் 210 லட்சம், அல்லது விவசாயத்தில் ஈடுபட்டுள்ளோரின் மொத்த எண்ணிக்கையில் ஐந்தில் ஒரு பகுதி என்று மதிப்பிட்டது. 1931 ஆம் ஆண்டு சென்ஸஸ் 330 லட்சம், அல்லது விவசாயத்தில் ஈடுபட்டுள்ளோரில் மூன்றில் ஒரு பகுதி என்று மதிப்பிட்டது. அதற்கப்பால் (1938 இல் வங்காள சட்ட மன்றத்தில் குடிவாரச் சட்டத் திருத்தத்தின் மீது நடந்த விவாதங்களின்படியும்; மேலே கொடுக்கப்பட்டுள்ள சென்னைத் தகவல்களின்படியும்) இப்போது விவசாயத்தில் ஈடுபட்டுள்ளோரில் ஏறக்குறையப் பாதிபேர் நிலமற்ற தொழிலாளர்களென மதிப்பிடப் படுகிறது.[1]

இந்த வேளாண்மைத் தொழிலாளர்களின் கூலிகள் பற்றின பின்வரும் அட்டவணை பொருள் செறிந்தது.

| | 1842 | 1852 | 1862 | 1872 | 1911 | 1922 |
|---|---|---|---|---|---|---|
| வயல் தொழிலாளருக்கு உணவின்றி(பகல்கூலி, அணுக்களில்) .. | 1 | $1\frac{1}{2}$ | 2 | 3 | 4 | 4-6 |

1. 1938 இல் வடபீகாரிலுள்ள கீர்ஹார் கிராமத்திலுள்ள நிலைமைகளைப் பற்றி ஓர் ஆய்வு நடந்தது. "கிராம மக்கட் தொகையில் 72 சதவீதமான 5023 பேருள்ள 760 குடும்பங்கள் நிலமற்ற தொழிலாளர் குடும்பங்கள்; கிராமத்தில் இவர் பெரும் வகுப்பினர்." (எஸ். சர்க்கார்: "வட பீகாரிலுள்ள ஒரு கிராமத்தின் பொருளாதார நிலைமைகள்." இண்டியன் ஜர்னல் ஆஃப் எகனுமிக்ஸ் ஜூலை, 1939.)

| | 1842 | 1852 | 1862 | 1872 | 1911 | 1922 |
|---|---|---|---|---|---|---|
| அரிசி விலை (ரூபாய்க்கு எத்தனை சேர் என்ற கணக்கில்) .. | 40 | 30 | 27 | 23 | 15 | 5 |

(ஆர். முகர்ஜீ: ''இந்தியாவின் நிலப்பிரச்னைகள்'' பக். 222.)

ஆகவே, இந்தக் கால கட்டத்தில் கூலிவீதம் நாலிலிருந்து ஆறு மடங்கு உயர, அரிசி விலை எண்மடங்கு ஏறியுள்ளது—அதாவது இந்த ''முன்னேற்றகரமான'' எண்பது ஆண்டுகளில் உண்மையான கூலி கால் மடங்கிலிருந்து அரை மடங்கு வரை குறைந்துள்ளது. ஐக்கிய மாகாணங்களில் 1934 இல் ஐந்தாண்டு கூலி ஆய்வு அறிக்கை நாள் ஒன்றுக்கு சராசரி கூலி 3 அணு அல்லது 3 பென்ஸ் என்று பதிவு செய்துள்ளது. 326 கிராமங்களில் கூலி $1\frac{1}{2}$ அணு, அல்லது $1\frac{1}{2}$ பென்ஸ் வீதம் இருந்தது.

அளவுகோலில் இன்னும் கீழே இறங்குவதற்கு சாத்தியப் படுமாஞல், இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் உள்ளவர்களும், புள்ளிவிவர அறிக்கைகளில் சிக்காதவர்களுமான கூலியை வாங்காத நிலமற்ற தொழிலாளர்கள் அடிமைகள் நிலையில், கட்டாய உழைப்புக்கும் கடன் சுமைக்கும் தலையுண்டு கிடக்கும் இருண்ட பிரதேசங்களில் அடிவைப்போம்.

''இந்தியாவின் பொருளாதார ஏணியின் அடிப்படியில் பெரும்பாலும் காசைக் கண்ணுல் காணுதவர்களும் முழு அல்லது சற்றே ஈரமான அடிமை நிலையில் வாழ்பவர்களுமான நிரந்தர விவசாயத் தொழிலாளர்கள் நிற்கிருர்கள். இந்தியாவின் பல பகுதிகளில் ஜமீன்தாரோ, மால்குஸாரோ, அல்லது சாதாரண உழவரோ தங்கள் கீழுள்ள வேலைக்காரனுக்கு எவ்வாருவது கடன் கொடுத்து அவன்மீது பரம்பரையாக ஆதிக்கம் செலுத்துவது வழக்கம்.

''பம்பாய் மாகாணத்திலுள்ள துப்லாக்களும் கோலிகளும் ஏறக்குறையப் பிறவி அடிமைகள். அவர்களுடைய பெரும்பாலான குடும்பங்கள் பல தலைமுறைகளாய்த் தங்கள் எஜமானர்களின் குடும்பங்களில் அடிமைகள்போலத் தொண்டு புரிகின்றனர்.

''சென்னைக்குத் தென் மேற்கே உள்ள ஈழவர்களும், சேருமாக்களும், புலையர்களும், ஹோலியர்களும் பெரும்பாலும் அடிமைகளே. கிழக்குக் கடற்கரையில் நிலத்தின் மீது பிராமணனுக்கு உள்ள ஆதிக்கம் வலுவானது. அங்குள்ள விவசாயத் தொழிலாளர்களில் பெரும் பகுதியினர் பறையர்கள்; அவர்கள் அடிக்கடி படியாள்களாக இருப்பதுண்டு; படியாள்

கள் ஒருவகை அடிமைகள்; கடன்பட்டது காரணமாக நிலக்கிழார்களிடம் பரம்பரையாக சம்பந்தப்பட்டவர்கள்...இந்த மாதிரிக் கடன் தீருவதில்லே; ஒரு தலைமுறையிலிருந்து மற்றொரு தலைமுறையினருக்கு இறங்கும்; ஒரு நிலக்கிழார் நிலத்தை விற்ருலோ அல்லது இறந்தாலோ அவருடைய படியாள்களும் நிலத்தோடு விற்பனை செய்யப்படுவார்கள் அல்லது அடுத்த உரிமையாளருக்கு அடிமை புரிவார்கள்...

''அடிமைத் தனத்தின் அடியாழத்தில் இருப்போர் பீகாரிலுள்ள காமியாக்கள். வாங்கிய கடனின் வட்டிக்காக எத்தகைய இழி வேலையையும் செய்யப் பந்தப்பட்டவர்கள்.''

(ஆர். முகர்ஜீ: ''இந்தியாவின் நிலப்பிரச்னைகள்,'' பக். 225-9.)

பல பகுதிகளிலுள்ள இந்த விவசாய அடிமைகளும், கடனடிமைகளும் ஆதிக்குடிமக்கள் இனத்தைச் சேர்ந்தவர்கள். ஆனுல் நிலத்தை இழந்து, கடனுல் தளையுண்ட முன்னுள் சுயேச்சையான குடியானவன் நிலேயும், விளைச்சலைப் பகிர்ந்து கொள்வதாய்க் கட்டுப்பட்ட குடியானவன் நிலேயும் சட்டபூர்வமான அடிமை நிலேக்கு வெகு தூரத்தில் இல்லை.

தோட்டங்களில் உள்ள அடிமைகளின் நிலேயும் இது போன்றதே: 10 லட்சத்திற்கும் அதிகமான தொழிலாளர்கள் இந்நிலேயில் பெரிய தேயிலே, காபி, ரப்பர் தோட்டங்களில் வேலே செய்கிருர்கள். இந்தத் தோட்டங்கள் பெரும்பாலும் ஐரோப்பியக் கம்பெனிகளுக்குச் சொந்தமானவை. மிகுந்த லாபம் தருபவை. இத் தோட்டங்களுக்குத் தேவையான தொழிலாளர்களை இந்தியா முழுவதிலும் பொறுக்குகிருர்கள்; தொழிலாளர்கள் தம் குடும்பங்களோடு கம்பெனிகளின் நேர் ஆட்சியின் கீழ் தோட்ட எஸ்டேட்டுகளில் வசிக்கிருர்கள். அவர்களுக்கு மிகச் சாதாரணக் குடியுரிமைகளும் கிடையாது; ஆண், பெண், குழந்தைகளை மிகக் குறைவான கூலி கொடுத்துச் சுரண்டுகிருர்கள். 1930 இல் விட்லி அறிக்கை வெளியான பின் தண்டனைக்குரிய ஒப்பந்தங்கள் சட்டபூர்வமாய் அழிக்கப்பட்டுப் பல திருத்தங்கள் அண்மையில் செய்யப்பட்டிருப்பினும் தொழிலாளர்கள் தங்கள் எஜமானர்களிடம் நீண்ட காலத்துக்கு, சில சமயம் ஆயுட்காலத்துக்குப் பந்தப்பட்டுள்ளனர்.

நிலமற்ற தொழிலாளர்களின் அளவு மொத்த விவசாய மக்கட் தொகையில் மூன்றில் ஒரு பகுதி அல்லது பாதியாகக்கூட வளர்ந்துள்ளதிலிருந்தே உழவர்களின் வறுமைவாய்ப்பட்டிருக்

கும் இழிநிலை தெளிவுபடுகிறது. ஆனால் உண்மையில், கட்டுபடி ஆகாத குறுநிலம் வைத்துள்ள சிறு பண்ணையார்கள் நிலையும், உட்குத்தகை எடுத்த, பாதுகாப்பற்ற குடிவாரதாரர்களின் நிலையும் விவசாயத் தொழிலாளர்களின் நிலையை ஒத்ததே. இருவகையினருக்கும் இடையில் உள்ள வித்தியாசம் அற்பமானதே. ஆகவே, 1930இல் பாங்கு விசாரணைக் கமிட்டி பின் வருமாறு குறிப்பிட்டது:

> "பண்ணை வேலைக்காரர்களுக்கும் உள் குத்தகைக்காரர்களுக்கும் இடையில் உள்ள வித்தியாசத்தைத் தெளிவாய்க் காண எங்களுக்குக் கஷ்டமாயுள்ளது. பொதுவாக அது பங்கு போட்டுக்கொள்ளும் திட்டம்; நிலக்கிழார் 40 அல்லது 60, சில சமயம் 80 சதவீதம் விளைச்சலிலிருந்து எடுத்துக் கொள்ள, எஞ்சியதைக் குத்தகைக்காரர் எடுத்துகொள்கிறார். குத்தகைக்காரர் ஆண்டுக்குப் பின் ஆண்டாக நிலக்கிழாரிடமிருந்து கடன் வாங்கிக் கொண்டும், விதையும் மாடுகளும் கருவிகளும் பெற்றுக்கொண்டும் 'ஏனோ தானோ' என்று பிழைப்பு நடத்துகிறார். பண்ணை வேலையாளோ நிலக்கிழாரின் விதையையும் மாடுகளையும் கருவிகளையும் பயன்படுத்துகிறான், சில்லறைத் தேவைகளுக்கு அவ்வப்போது அவரிடம் கடன் வாங்குகிறான், அறுவடையானதும் தானியத்துக்காக ஒரு துகையையோ அல்லது விளைச்சலில் ஒரு பகுதியையோ வாங்கிக் கொள்கிறான். பண்ணை வேலையாளுக்குச் சில சமயம் ரொக்கம் கொஞ்சமும் குறிப்பிட்ட அளவு தானியமோ கிடைக்கலாம். குத்தகைதாரர் தன் சொந்த விதை, மாடுகள், கருவிகளைப் பயன்படுத்திப் பயிரிடலாம். ஆனால், நடைமுறையில் இருவருக்கும் இடையில் பெரிய வித்தியாசம் இல்லை; நிலக்கிழார் வெளியூரில் இருந்தால் உண்மையில் பயிரிடுபவர் பண்ணையாளா அல்லது குத்தகைதாரரா என்பதை எப்போதும் நிச்சயமாய்க் கூறமுடியாது."

1927இல் அனைத்திந்தியத் தொழிற்சங்கக் காங்கிரசுக்கு முன், என். எம். ஜோஷி, விவசாயக் கூலியாட்களின் எண்ணிக்கை 2·5 கோடி என்றும், நிலத்தில் பகுதி நேர வேலை செய்யும் கூலியாட்கள் 5 கோடி பேர் இருப்பர் என்றும் மதிப்பிட்டார். எனவே, இந்திய உழவர்களில் மிகப் பெரும்பாலோர் நிலைமை விவசாயத் தொழிலாளர்களின் நிலைமையைப்போல் இருக்கிறதே யன்றி சிறுபண்ணை உடையவர்களின் நிலைமையைப்போல் இல்லை.

ஏகாதிபத்திய அசிரத்தைக்குப் பெரும் நினைவுச் சின்னமான சைமன் அறிக்கை பின் கண்டபடி (இரண்டு வருடங்களுக்கு

முந்தின விவசாயக் குழு அறிக்கையை எதிரொலித்து) 1930இல் உரைத்தது :

> "விவசாயி எனப்படுகிறவன் இப்போதும் ஒரு ஜோடி காளைகளை வைத்துக்கொண்டு சில ஏக்கர் நிலத்தில் பயிர் செய்கிறவனே. அவனுக்கு அவனுடைய குடும்பமும், சில சமயம் கூலியாட்களும் உதவி செய்கிறார்கள்."

(ஸைமன் அறிக்கை, முதல் தொகுதி, பக். 18.)

மேலே கூறப்பட்டுள்ள தகவல்களிலிருந்து இன்றைய உண்மையான நிலவரத்தின் சித்திரம் எவ்வளவு பயங்கரமாயுள்ளது! 1927 இல் வேளாண்மைக் குழுவுக்கு முன், பம்பாயில் பத்து லட்சம் ஏக்கர்கள் உள்ள, மற்றவற்றைவிட 'மிக மிக வசதியாயுள்ள' ஒரு மாவட்டம் பற்றிய ஆய்வு விவரம் சாட்சியமாய்த் தரப்பட்டது. 1917–1922 ஆகிய ஐந்தே ஆண்டுகளில் நிலவுடைமைகளில் நிகழ்ந்த மாறுதல் வருமாறு:

| நிலவுடைமைகளின் அளவு | | நிலவுடைமைகளின் எண்ணிக்கை— | | ஏற்றம் அல்லது இறக்கம் |
|---|---|---|---|---|
| ஏக்கர்களில் | | 1917 இல் | 1922 இல் | (சதவீதம்) |
| 5க்குக் கீழ் | .. | 6,272 | 6,446 | + 2·6 |
| 5விருந்து 15க்குள் | .. | 17,909 | 19,130 | + 6·8 |
| 15 ,, 25 | .. | 11,908 | 12,018 | + 0·9 |
| 25 ,, 100 | .. | 15,532 | 15,020 | — 3.3 |
| 100 ,, 500 | .. | 1,234 | 1,117 | — 9·5 |
| 500க்கு மேல் | .. | 20 | 19 | — 5·0 |

சாட்சியம் அளித்தவர் ஓர் அரசு ஊழியர்; தம் கருத்தைத் தெரிவித்தார் :

> "ஐந்து வருடகாலம் பற்றின இத்தகவல்கள் 15 ஏக்கர்கள் வரை நிலத்தில் பயிரிடும் விவசாயிகளின் எண்ணிக்கை மிக உயர்ந்துள்ளதைக் காட்டுகின்றன; இந்த அளவு வயலில் —நாட்டின் சில பகுதிகள் தவிர பிற இடங்களில்—ஒரு ஜோடி காளைகளை ஆதாயகரமாகப் பயன்படுத்தமுடியாது . . . 25 முதல் 100 ஏக்கர் நிலவுடைமையும் குறைந்துள்ளது; சிறிது மூலதனத்தை ஒதுக்கி வைக்கும் அதிர்ஷ்டமும் வசதியும் உள்ள விவசாயிகள் வகுப்பும் குறைந்துள்ளது என்பதே இதன் பொருள்."

இவ்வாறாக, 1922க்குள் உழவர்களாயிருந்த உரிமையாளர்களில் பாதிப் பேருக்கு (நிலமற்ற தொழிலாளர்களின் படையைக்

கணக்கில் சேர்க்கவில்லை) இரண்டு மாடுகளைப் பொருளாதார ரீதியில் 'கட்டுபடியாகும்படி' பயன்படுத்தக்கூடிய நிலமில்லை; இந்த அளவு ஏறிக்கொண்டே போயிற்று.

உழவர்களின் உண்மையான நிலைபற்றின எந்த ஆய்வும் அவர்களுடைய நிலவுடைமையின் அளவு பற்றின கேள்வியில் வந்து முடிகிறது; அதைப் பற்றின தகவல் இந்த அத்தியாயத்தின் இரண்டாம் பகுதியில் தரப்பட்டுள்ளது. நிலமற்ற தொழிலாளர்கள் அடங்கிய மிக மிகப் பெரும்பான்மையோருக்கும் பொருளாதார ரீதியில் 'கட்டுபடி' ஆகாத நிலமுடையோர், 'கட்டுபடி' ஆகக்கூடிய சிறிய சிறுபான்மையோர் அதைவிடச் சிறிய சிறுபான்மையோரான ''சுமாரான வசதியுள்ள விவசாயிகள்,'' பயிர்தொழில் செய்யாது குத்தகைப் பணம் வாங்குவோர் ஆகியோருக்கும் இடையிலுள்ள வித்தியாசத்தைவிட, பழைய சென்ஸஸ் பாஷையில் ''சாதாரண உழவர்கள்'' என்று பொதுவாய்க் குறிப்பிடப்பட்ட உடமையாளர்கள் அல்லது குத்தகைதாரர்களுக்கும் நிலமற்ற தொழிலாளர்களுக்கும் இடையிலுள்ள வித்தியாசம் உண்மை நிலைமையைக் குறிப்பதாக இல்லை.

வங்காள நில வருவாய்க்குழுவுக்கு (ஃப்ளவுட் கமிஷன்) முன் அளிக்கப்பட்ட சாட்சியம், ஒரு சராசரிக் குடும்பத்தின் செலவுகளை எல்லாம் சமாளிப்பதற்கு 5 ஏக்கர் நிலவுடைமை குறைந்த பட்சத் தேவை என்று கருதியது. ஆனால் குழுவின் ஆய்வுப்படி வங்காளத்தின் உழவர் குடும்பங்களில் மூன்றில் பகுதியினருக்கு 5 ஏக்கருக்குக் குறைவான நிலமே இருந்தது; 57·2 சதவீதத்தினருக்கோ 3 ஏக்கருக்கும் குறைவாக இருந்தது.

''ஒரு தக்காணக் கிராமத்தில் வாழ்க்கையும் தொழிலாளரும்'' என்கிற டாக்டர் ஹெரால்டு மன் நடத்திய அற்புதமான ஆய்வு நிலைமையை மேலும் விளக்க உதவுவதாய் அமைந்துள்ளது. பம்பாயில் வேளாண்மை இயக்குநராயிருந்த டாக்டர் மன் 1914-15 இல் தக்காணத்தில் ஓர் உருமாதிரிக் கிராமத்தின் விரிவானதோர் ஆய்வு நடத்தினர். பயிரிடுதல், பயிர்கள், நிலவுடைமைகள், கடன்கள், குடும்ப வருவாய் செலவு ஆகிய உண்மை நிலவரம் பற்றி ஓர் உருமாதிரி ''வரண்ட'' கிராமத்தில் தூய விஞ்ஞான பூர்வமான ஆய்வு அது; ஆனால், இவ்வளவு விரிவான ஆய்வு முழுமையாகவும் விவரமாகவும் நடத்தப்பட்டது இதுவே முதல் முறையாகும். இதில் காணப்பட்ட முடிவுகள் அதிர்ச்சியூட்டுவனவாக (ஆசிரியரின் சொற்களில் மிக ''எதிர்பாராதனவாகவும்'',''துன்புறுத்துவதாகவும்'') இருந்தன; அந்த முடிவுகள் விஞ்ஞான பூர்வமாகவும் சரியாகவும் இருந்தமையால் அவற்றைக் கண்டிப்பதற்கு வேறு வழி இல்லாமல், அந்தக் கிராமத்தை

உருமாதிரிக் கிராமமாய்க் கொள்ள முடியாது என அந்த ஆய்வுக்குக் கண்டனம் தெரிவிக்கப்பட்டது. டாக்டர் மன் வேறொரு கிராமத்தை ஆய்வுக்காக எடுத்துக்கொண்டார்; இந்த ஆய்வு 1921 இல் வெளியானது; அதன் முடிவுகள் பழைய ஆய்வுகளின் முடிவுகளையே இன்னும் அழுத்தமாக வெளியிட்டது. அது முதல் நாட்டின் பல பகுதிகளில் நடந்த பல ஆய்வுகளின் முடிவுகள் இந்த முடிவுகளின் உண்மையை வலியுறுத்துவனவாக உள்ளன.

முதல் கிராமத்தில் நிலவுடைமைகளில் 81 சதவீதம் ''மிகச் சௌகரியமான சூழ்நிலையிலும் உரிமையாளர்களைக் காப்பாற்ற இயலாதவை.'' 156 நிலவுடைமைகளின் பிரிவினை பின்வரும் நிலைமையை வெளியிட்டது :

| | | | | |
|---|---|---|---|---|
| 30 ஏக்கருக்குமேல் | .. | .. | .. | 2 |
| 20 முதல் 30 ஏக்கர் வரை | .. | .. | .. | 9 |
| 10 ,, 20 ,, ,, | .. | .. | .. | 18 |
| 5 ,, 10 ,, | .. | .. | .. | 34 |
| 1 ,, 5 ,, ,, | .. | .. | .. | 71 |
| 1 ஏக்கருக்கும் கீழ் | .. | .. | .. | 22 |

''இந்திய ரயத்தின் வாழ்க்கைத் தரத்துக்கு, மேற்கு தக்காணத்தின் இந்தக் கிராமத்தில் அதிகமாசவுள்ள நல்ல, வரண்ட நிலத்தில் 10 முதல் 15 ஏக்கர் இருந்தால்தான் பொருளாதார ரீதியில் நிறைவு தரும்'' என்று கீடிங் மதிப்பிட்டதுடன் தொடர்ந்து ''ஒவ்வொரு நிலவுடைமையும் ஒரே தொடராக இருப்பதாய்க் கொண்டாலும் பெரும்பாலானவை (81 சதவீதம்) இந்த அளவுக்குக் குறைந்தவை'' என்ற முடிவுக்கு வந்தார். செயற்கை விளக்குகள் போன்ற ஆடம்பரங்கள் இன்றி, கீழ்த்தரமான, வறிய உணவோடும் உடையோடும் ரயத்து வாழ்கிற வாழ்க்கைத் தரத்தைப் பொருளாதாரக் குறும அடிப்படையாய்க் கொண்டு இந்த முடிவு காணப்பட்டது. மொத்தம் 103 குடும்பங்களைப் பற்றி ஆய்வு செய்ததில் நிலவுடைமையளவின் பேரில் 'நல்ல பொருளாதார நிலையிலுள்ளவை' என அவர் கணக்கிட்ட குடும்பங்கள் 8—மொத்தம் 103 இல்; நிலவருவாயோடு வெளியிலும் வேலை செய்து தங்கள் நிலைமையைக் காத்துக் கொண்ட குடும்பங்கள் 28; நிலத்தின் வருவாய் போதாமல், வெளியில் வேலை செய்தும் போதாமல் 'அதிருப்திகரமான' பொருளாதார நிலையிலிருந்த குடும்பங்கள் 67, அதாவது 65 சதவீதம். இந்த முதல் கிராமத்துக்கு அருகாமையில் இழிந்த ஒரு பெரிய வெடி மருந்துப் பட்டறை மக்கட் தொகையில் 30 சதவீதத்

தினருக்கு வெளி வேலை வாய்ப்பு தந்தது; இந்த அளவுக்கு அங்கிருந்த நிலைமைகளை உருமாதிரியாகக் கொள்ள முடியாது.

இரண்டாவது கிராமம் உற்பத்தி அல்லது தொழில் பிரதேசம் எதற்கும் மிகத் தொலைவில் இருந்தது; குடும்பங்களில் 85 சதவீதம் இந்த ''அதிருப்திகரமான'' பொருளாதார நிலையில் இருந்தன. இந்தக் கிராமத்தில் குறைந்த அளவு பொருளாதார நிலவுடமை அளவு 20 ஏக்கராவது இருக்க வேண்டும்; 77 சதவீத நிலவுடமைகள் இந்த அளவுக்குக் கீழ்பட்டவை. 147 குடும்பங்களில் 10 குடும்பங்கள் தங்கள் நிலவுடமை அடிப்படையில் 'திருப்தியான பொருளாதார நிலையில்' வாழும் முதல் தொகுதியைச் சேர்ந்தவை, 12 குடும்பங்கள் நிலத்திலும் வெளியிலும் பாடுபட்டுத் தங்கள் நிலையைக் காத்துக் கொள்ளும் இரண்டாம் தொகுதியைச் சேர்ந்தவை. 125 குடும்பங்கள் அல்லது 85 சதவீதம் நிலத்தின் முழு வருவாயாலும் வெளி வேலை செய்தும் ''திருப்தியற்ற பொருளாதார நிலை''யில் இருந்தவை. இந்தக் கடைசித் தொகுதியில், மொத்த மக்கட் தொகையான 732இல் 664 பேர் இருந்தனர்—அதாவது மக்கட் தொகையில் 91 சதவீதத்தினர் ''திருப்தியற்ற பொருளாதார நிலையில்'' இருந்தனர்.

மிகக் கீழ்த்தரத்திலுள்ள இந்தப் பிரமாண்டமான பெரும்பான்மையோர் எப்படிதான் பிழைத்திருக்கிறார்கள்? அவர்களுக்குச் சாத்தியப்படாது, வேறு வழி இன்றி மேலும் மேலும் கடனில் மூழ்குகிறார்கள்; நிலத்தை இழக்கிறார்கள்; நிலமற்ற தொழிலாளர்களின் பெரும்படையில் சேருகிறார்கள். கிராமங்களை மேலும் மேலும் இறுக்கும் கடன் பிடிப்பை ஆய்வு வெளிப்படுத்தியது. ஆய்வு செய்யப்பட்ட முதல் கிராமத்தில் நிகர மொத்த வருமானம் ரூ. 8,338 (ஆண்டுக்கு), கடன் பளு ரூ. 2,515. ''கிராமத்தின் மொத்த மதிப்பில் 12 சதவீதமும், நிலத்தின் மொத்த ஆதாயங்களில் 24.5 சதவீதமுமாக வளர்ந்துள்ள கடன் அவர்களை நசுக்கும் சுமை ஆகியுள்ளது'' (பக். 152). இரண்டாவது ஆய்வில், நிலத்திலிருந்து கிடைத்த மொத்த நிகர வருவாயான ரூ. 15,807க்குக் கடன் இனமாக ரூ. 6,755 அல்லது நில வருவாயில் ஐந்தில் இரண்டு பாகம் வட்டிக்கடைக்காரரிடம் போயிற்று.

ஆய்வின் இறுதியில் டாக்டர் மன் கீழ்க்கண்ட பொதுவான முடிவுக்கு வந்தார்:

''ஒரு சராசரி ஆண்டு (நம்முடைய ஆய்வுகளும் கணக்குகளும் கிராமவாழ்க்கையைப் பற்றி உண்மையான சித்திரம் போன்றதொன்றைத் தருவதானால்) கிராமத்தை போதுமான

உணவு கொள்ளாமல் முன்னைவிட அதிகமான கடனில் ஆழ்த்தி, இப்போதுள்ள மக்கட் தொகைக்கு இடையில் இப்போதுள்ள பயிரிடு முறையின் வாயிலாக உண்மையான பொருளாதார சுதந்திரம் அடைவதற்கு சக்தியற்றதாக்கி விட்டுக் கழிவதாய்த் தோன்றுகிறது.''

## 5. கடன் சுமை

உழவனின் கஷ்டங்கள் ஏற, கடன்சுமை மேன்மேலும் கனமுண்டு அவன்மீது இறங்க, அதனால் அவனுடைய கஷ்டங்கள் மீண்டும் பெருகுகின்றன. இறுதியான நச்சுவட்டம் இதுதான்; இது முறிக்கப்படுவதற்கு இறுதியான வழி—சொத்து பராதீனம். இவ்வாறாக, கடன் வளர்ச்சியும், அதை அடுத்து நிலங்களை 'ஒத்திவைப்பதும்', விற்பதும், விவசாயிகள் அல்லாதார் பெயருக்கு மாற்றுவதுமான நிலைமை வேளாண்மை நெருக்கடிக்கு மிக முக்கியமான அடிப்படைகளில் ஒன்றாகும்.

சைமன் அறிக்கை (முதல் தொகுதி, 16-ஆம் பக்கம்), ''உழவர்களில் மிகப் பெரும்பாலோர் லேவாதேவிக்காரனிடம் கடன்பட்டு வாழ்கிறார்கள்'' என்றது.

பிரிட்டிஷ் ஆட்சியைத் தொடர்ந்துதான் இவ்வாறு கடன் சுமை பெருகியுள்ளது என்பதும், ஓர் அவசரமான, மேன்மேலும் பிரச்னையாக அண்மைக் காலத்தில்தான் மாறியுள்ளது என்பதும் எல்லோராலும் ஏற்கப்பட்ட விஷயங்கள். 1911-ல் எழுதிய சர் எட்வர்டு மாக்ளகன் குறிப்பிட்டார்:

> ''கடன் சுமை இந்தியாவுக்குப் புதிய விஷயம் அல்ல என்பது நீண்டகாலமாய் ஏற்கப்பட்ட விஷயம். மன்ரோ, எல்பின்ஸ்டன் மற்றும் பலர், நம் ஆட்சியின் தொடக்க காலத்திலேயே மிகுந்த கடன் இருந்தது என்பதை தங்கள் எழுத்துக்கள் வாயிலாகத் தெளிவுபடுத்துகின்றனர். ஆனால், இந்த கடன் சுமை நம் ஆட்சிக் காலத்தில் மிக வளர்ந்துள்ளது என்பதும் சென்ற அரை நூற்றாண்டுக் காலத்தில் ஏராளமாய் வளர்ந்துள்ளது என்பதும் ஏற்கப்பட்ட விஷயங்கள். அவ்வப்போது கிடைக்கும் அறிக்கைகள் வாயிலாகவும், ஆண்டுதோறும் விற்பனை, பெந்தகம் பற்றின தகவல்களாலும் சென்ற அரை நூற்றாண்டில் கடன்சுமை பெருமளவில் பெருகியுள்ளது என்று விளங்குகிறது.''
>
> (1911-ல் சர் எட்வர்டு மாக்ளகன்; மத்திய பாங்கு விசாரணைக் குழு அறிக்கை, 1931, பக். 55-ல் மேற்கோளாய்க் காட்டப்பட்டது.)

1880 லேயே பஞ்சக் கமிஷன் அறிவித்தது:

"நிலமுள்ளோரில் மூன்றில் ஒரு பகுதியினர் மீளமுடியாத கடனில் மூழ்கியுள்ளனர்; அதே அளவு பேர் மீளமுடியாத நிலை என்று கூற முடியாத அளவு கடன்பட்டுள்ளனர்."

அதுமுதல் கடன் செங்குத்தாய் ஏறுகிறது. 1928-ல் வேளாண்மை குழு அறிவித்தது:

"இந்த நூற்றுண்டில் கடன் பெருகியது எனக் கூறப் படுவது மிகச் சாத்தியமே. மக்களின் உடமைகள் பெருகி யுள்ள அளவு வீதத்துக்கு ஏற்ப அது இருக்கிறதா, பழைய காலத்து உழவரைவிட வளமாக உள்ள இக்கால உழவருக்கு அது பெரும் சுமையா, சிறு சுமையா என்ற கேள்விகளுக்கு நமக்குக் கிடைத்துள்ள சாட்சியம் பதில் தருவதாயில்லை."

(வேளாண்மைக் குழு அறிக்கை, 1928, பக். 441.)

கடன் பெருக்கம் பற்றின இந்த உண்மையை 1931-ல் மத்திய பாங்கு விசாரணைக் குழு உறுதிப்படுத்தியது:

"விவசாயக் கடன் சுமை ஏறுகிறதா அல்லது இறங்கு கிறதா என்ற கேள்விக்கு, சென்ற நூற்றுண்டின்போது சுமை ஏறியுள்ளது என்ற பொதுவான கருத்து நிலவுகிறது."

(மத்திய பாங்கு விசாரணைக் குழு அறிக்கை, 1931, பக். 55.)

அக்காலத்து (1931) மொத்தக் கிராமக் கடன் ரூ. 900 கோடி அல்லது £ 67·5 கோடி என்று குழுவினரால் மதிப்பிடப்பட்டது. அது முதல், பொருளாதார நெருக்கடியையும் விவசாய விலை களின் சரிவையும் தொடர்ந்து, மேலும் செங்குத்தாக அது ஏறி யுள்ளது; அண்மைக் காலத்து மதிப்பீடு அத்தொகை இரட்டித் துள்ளதாய் கூறுகிறது (262 ஆம் பக்கம் பார்க்க).

பிரிட்டிஷ் ஆட்சியில், குறிப்பாக அண்மைக் காலத்தில் கடன் பெருகுவதற்கான ரகசியம் யாது? மேலெழுந்தவாரியாக எழுது வோரும் ஆட்சியாளரைத் தாங்கி எழுதும் மரபுடையோரும் உழவர்கள் "ஆடம்பரமாகவும்", "ஊதாரித்தனமாகவும்" செலவிடுபவர்கள் எனக் கூறி, தங்கள் சக்திக்குமீறி அவர்கள் "கலியாணம் கார்த்தி" போன்ற சமூகப் பழக்க வழக்கங்களுக்காக வும் கொண்டாட்டங்களுக்காகவும் வழக்குகளுக்காகவும் செலவிடு வதுதான் அவர்களுடைய கடன் சுமைக்குத் தோற்றுவாய் என்று விளக்க முயலுகிறுர்கள். உண்மைத் தகவல்கள் இந்த விளக் கத்தை ஏற்பதாயில்லை. ஏற்கனவே 1875-ல் தக்காணக் கலவரக் குழு அறிவித்தது:

"திருமணங்களுக்காகவும் திருவிழாக்களுக்காகவும் செய்யப் பெறும் செலவுகளுக்கு பொருந்தாத முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது.. ரயத்தின் செலவுக் கணக்கில் இச் செலவுக்கு ஓரளவு முக்கியமான இடம் உள்ளது என்றாலும் இதுவே அவனுடைய கடன் சுமைக்கு மூலகாரணம் என்று தோன்றவில்லை."

வங்காள பாங்கி விசாரணைக் குழு, "நுட்பமாகக் கிராம ஆய்வுகள் செய்தபின், மேற்குறிப்பிட்ட குற்றச்சாட்டு நிரூபிக்க முடியாதது என்று கண்டது. உதாரணமாக, போக்ரா மாவட்டத்திலுள்ள கரீம்பூர் கிராமத்தின் 52 குடும்பங்கள் கடன்பட்டுள்ளன; 1928-29 என்ற ஓர் ஆண்டில் அவர்கள் எந்த காரணங்களுக்காகக் கடன் வாங்கினார்கள் என்பதைக் கீழ்க்காணும் தகவல்கள் விவரிக்கும்:

| | | ரூபாய்கள் |
|---|---|---|
| பழைய கடன்களைத் திருப்பித் தருவதற்காக | .. | 389 |
| மாடுகள் வாங்குவது உட்பட முக்கியமான அடிப்படை இனங்களுக்காக | .. | 1087 |
| நிலவரி, குத்தகைக்காக | .. | 573 |
| பயிர்ச் செலவுக்காக | .. | 435 |
| சமூக, சமய காரணங்களுக்காக | .. | 150 |
| கோர்ட் செலவுகளுக்காக | .. | 15 |
| வேறு இனங்களுக்காக | .. | 66 |
| மொத்தம் .. .. | .. | 2,715 |

சமூக, சமய காரணங்களுக்காகவும், கோர்ட்டு செலவுகளுக்காகவும் வாங்கப்பட்ட கடன், மொத்தக் கடன் தொகையில் பதினாறில் ஒரு பகுதியே. மொத்தத் தொகையில் ஐந்தில் இரண்டு பகுதியான இரண்டாவது இனத்திற்காக வாங்கப்பட்ட கடனை மட்டும், உழவரிடம் மூலதனம் இல்லாமையால் வாங்கப்பட்ட ஆக்ககரமான கடன் என்று மதிக்கலாம். எஞ்சிய பாதிக்கடனுக்கு மேல் உடனடியான அவசரத் தேவைகளான நிலவரி, குத்தகை, கடன்தீர்வு, பயிர்ச் செலவு ஆகியவற்றுக்காக வாங்கப்பட்டது.

1933-34 இல் வங்காளத்திலுள்ள தென்மேற்கு பீர்பம்மில் இதேபோன்ற முடிவுதான் காணப்பட்டது. இங்கு ஆறு கிராமங்களிலுள்ள 426 கிராமங்களில் 234, அல்லது 55 சதவீதம், மொத்தம் ரூ. 53,799க்கு, ஒரு குடும்பத்துக்கு சராசரி ரூ. 230 (£ 17·5 ஷில்லிங்கு) வீதம் கடனில் ஆழ்ந்துள்ளதாய்க் காணப்

பட்டது. கடனுக்கான காரணங்கள் கீழ்க்கண்ட விதத்தில் இருந்தன:

| | ரூபாய்கள் | சதவீதம் |
|---|---|---|
| குத்தகை தருவதற்காக | .. 13,007 | 24·2 |
| முக்கியமான தேவைகளுக்காக | .. 12,736 | 23·7 |
| சமூக, சமய காரணங்களுக்காக | .. 12,021 | 22·3 |
| பழைய கடன்களைத் திருப்புவதற்காக | .. 4,503 | 8·4 |
| பயிர்ச் செலவுகளுக்காக | .. 2,423 | 4·5 |
| கோர்ட் செலவுகளுக்காக | .. 708 | 1·3 |
| பலவகைச் செலவுகளுக்காக | .. 8,401 | 15·6 |

(எஸ். போஸ்: ''வங்காளம், தென்மேற்கு பீர்பம்மில் 1933-34-ல் கிராமக் கடன்பற்றி நடத்திய ஓர் ஆய்வு,'' இண்டியா ஜர்னல் ஆப் ஸ்டாடிஸ்டிக்ஸ், செப்டம்பர் 9, 1937.)

கடனில் தலையாய இனம்—சுமாராக, கால் பகுதி—வாடகை தருவதற்காக உண்டானது; வாடகையும் பழைய கடனும் கூடி மூன்றில் ஒரு பகுதி ஆகிறது; சமூக, சமய காரணங்களுக்கான செலவு பழைய உதாரணத்தைக் காட்டிலும் அதிகம். ஆயினும் ஐந்தில் ஒரு பகுதிக்குமேல் சற்று கூடுதல். கடனில் முக்கியமான பகுதி பொருளாதாரத் தேவைகளுக்காக வாங்கப்பட்டது, அதிலும் ஒரு குறைந்தபட்ச அளவு ஆக்ககரமான கடன்.

எனவே, இந்திய உழவர்களின் கடன்சுமைக்கான காரணங்கள் பொருளாதார சம்பந்தமானவை; நிலவரி, குத்தகைப் பளுக்கள் வாயிலாக அவர்கள் சுரண்டப்படுவதோடு தொடர்புள்ளவை. மேற்கண்ட விசாரணைக் குழுவின் சொற்களில், ''கடனுக்கு முக்கியமான காரணம் பயிர்த் தொழில் செய்யும் வகுப்பாரின் பொதுவான வறுமைதான்.'' பம்பாய் வருவாய்துறை அதிகாரியான சர் டி. ஹோப் தக்காண விவசாயிகள் தணிப்பு மசோதாவை முன்னிலைப்படுத்தி நிகழ்த்திய சொற்பொழிவில், ''நம் வருவாயில் ரயத்தின் கடனிலும் ஒரு பங்கு உண்டு என்பதை ஏற்பது நேர்மையாகும்,'' என்று உரைத்தார். தக்காண விவசாயிகள் தணிப்பு சட்டம் செயல்படுவதைப் பரிசீலனை செய்த விசாரணைக் குழு, ''தக்காணத்தின் ரயத்துகள் புதிய கடன்கள் வாங்குவதற்கு இப்போதுள்ள கடுமையான முறையே முக்கியமான காரணங்களில் ஒன்று என்பதைப் பற்றிக் கேள்வியே இருக்க முடியாது,'' எனத் தன் அறிக்கையில் எழுதியது. நிலையான ஒரு தொகையை முப்பது ஆண்டுக் காலம்வரை ரொக்கமாக செலுத்த வேண்டும் என வரி விதிப்பதும், அறுவடை நிலையையும் பொருளாதார மாறுதல்களை

கவனியாததுமான ஒரு வரிவிதிப்பு முறையால் வரி வசூலிக்கும் அதிகாரிக்குச் சௌகரியமானதாக இருக்கலாம் அல்லது அரசின் பட்ஜட்டைத் தயாரிக்கும் அரசியல்வாதிக்கு வசதியாக இருக்கலாம்; ஆனால், பயங்கரமாக மாறுபடுகிற வருவாயுள்ள கிராமவாசிக்கு ஒரே மாதிரியான தொகை செலுத்த வேண்டிய நிர்ப்பந்தம் கெட்ட காலத்தில் அழிவு விளைவிப்பதாய், வட்டிக் கடைக்கு விரட்டுவதாய் ஆகிறது. கடுமையான காலங்களில் வரி வஜா செய்வதாலும் வரிகுறைப்பதாலும் இந்த தீமையைச் சிறிது ஆற்ற முயலலாம்; ஆனால் அதை முற்றிலும் தடுக்க முடியாது. மேலே கூறிய குழு பூனா மாவட்டத்திலுள்ள பல கிராமங்களில் நிலவரி எப்படி செலுத்தப்படுகிறது என்பதற்கான சாட்சியம் திரட்டியது. கிராமங்கள் அளித்த பதில்களைத் தொகுத்துத் தயாரிக்கப்பெற்ற இந்த கீழ்க்காணும் அட்டவணை பொருட்செறிவுடையது:

| கிராமம் | நிலவரி எப்படி செலுத்தப்படுகிறது |
|---|---|
| வாய்வந்த் | வரிதர ரயத்துகள் கடன் வாங்க நேருகிறது. |
| பிம்பல்காம்வ் | நல்ல ஆண்டுகளிலும் கொஞ்சம் கடன் வாங்குகிறார்கள். |
| துவல்காம்வ் | சில பேர் கடன் வாங்குகிறார்கள். |
| கானகாம்வ் | வரிதர வேண்டிய காலத்துக்குள் பயிர்கள் முற்றுவதில்லை, ஆகையால் ரயத்துகள் கடன் வாங்க நேருகிறது. |
| நந்தகாம்வ் | மழை தவறினால் ஜவார் பயிரை ஜாமீனாய்க் காட்டிக் கடன் வாங்குகிறார்கள். |
| தோண்ட் | பயிர்களை ஜாமீனாய்க் காட்டிக் கடன் வாங்குகிறார்கள். |
| ரிகிம் | கணக்கில் கடன் வாங்க வேண்டும், கடன்வசதி இல்லையெனில் பயிரை விற்க வேண்டும். |
| ஸோன்வாரி | சேமிப்பிலிருந்து தர முடியாவிட்டால், கடன் வாங்கியோ, மாடுகளை விற்றோ நிலவரி கட்டுகிறார்கள். |
| வாதான | பயிர்கள்மீது கடன் வாங்கி முதல் தவணை கட்டுகிறார்கள்; பயிர்கள் இல்லாவிட்டால் நிலத்தை ஒத்தி வைக்கிறார்கள் அல்லது விற்கிறார்கள். |
| மார்கோன | ௸ ௸ ௸ |
| அம்பி | ௸ ௸ ௸ |

| | |
|---|---|
| தார்டோலி | பயிர்கள் மீது கடன் வாங்கி முதல் தவணை கட்டுகிறார்கள், அல்லது பயிர் இல்லாவிட்டால் வட்டிக்குக் கடன் வாங்குகிறார்கள். |
| குஸிகார்வ் | ஷை ஷை ஷை |

*1900* இல் வெளியான ''பெரும் பஞ்சம்'' என்ற நூலில் வாகன் நாஷ் குழுவின் அறிக்கையிலிருந்து மேற்கண்ட அட்டவணையைத் தொகுத்து எழுதுகிறார்: ''பம்பாய்க்குச் சென்றபோது, நில வரியை வசூலிப்பதற்கு அதிகாரிகள் வட்டிக் கடைக்காரர்களை நிலை வாயில்களாய்க் கருதினார்கள் என்று முழு திருப்தி அடைந்தேன்.''

இந்திய சமூகத்தில் வட்டிக்கடையும் கடனும் இப்போது புதிர்கள். ஆனால், முதலாளித்துவச் சுரண்டல் முறையின்கீழ், சிறப்பாக, ஏகாதிபத்தியத்தின் காலத்தில், வட்டிக்கடைக்காரரின் பாகம் புதிய உருவும் பொருளும் கொண்டுள்ளன. முன்பு உழவர் சொந்த ஈட்டின் பேரிலேயே வட்டிக் கடைக்காரரிடமிருந்து கடன் வாங்க முடியும்; ஆகையால் வட்டிக்கடைக்காரர் தொழில் நிச்சயமற்றதாயும் அபாயமானதாகவும் இருந்தது; கிராமத்தின் தீர்ப்புக்கு அடங்கியதாய் அவருடைய தொழில் இருந்தது. பழைய சட்டங்களின்கீழ் கடன் கொடுத்தவர் கடன்பட்டவரின் நிலத்தைப் பறிமுதல் செய்ய முடியாது. பிரிட்டிஷ் ஆட்சியில் இவை யாவும் மாற்றப்பட்டன. கடன்பட்டவர் சொத்துக்களை ஜப்தி செய்யவும், நிலத்தைப் பராதீனப்படுத்தவும் உரிமை தரும் பிரிட்டிஷ் சட்டங்கள் அமுலுக்கு வந்ததும் வட்டிக் கடைக்காரருக்கு நல்ல வேட்டைக் களம் கிடைத்துவிட்டதுடன் ஏகாதிபத்தியச் சுரண்டல் முறைக்கு அவர் இன்றியமையாத ஆதாரம் ஆகிவிட்டார். ஏனெனில் நிலவரித் தண்டலுக்குச் சாதனமாக மட்டும் அவர் அமையவில்லை; அவரே தானிய வியாபாரியாகவும் நிலத்தில் வலுவில் ஆக்கிரமிக்கும் வலிமையும் உடையவர்; அறுவடைக் காலத்தில் தானியங்களை ஏகபோக உரிமையோடு வாங்குகிறவர்; அடிக்கடி விதைக்காகவும் கருவிகளுக்காகவும் கடன் தருகிறவர்; அவருடைய கணக்குகளைப் பரிசீலிக்க முடியாத உழவர்கள் தாங்கள் செலுத்தியது எவ்வளவு, பாக்கி எவ்வளவு என்று தெரியாததால் அவருடைய வலையில் மேன்மேலும் சிக்குகிறார்கள்; அவர் கிராமத்தின் கொடுங்கோலர் ஆகிறார்; நிலங்கள் அவர் உடைமையானதும் இச் செயல் முறை மேலும் நீளுகிறது. உழவர்கள் அவருக்காகப் பாடுபடும் தொழிலாளர்கள் அல்லது பகுதி தான்யப் பங்காளர்களாய் மாறுகிறார்கள்; தங்கள் கண்டுமுதலில் பெரும்பகுதியை வட்டிக்காகவும் குத்தகைக்காகவும் தருகிறார்கள். அவரோ இந்தியக் கிராமப் பொருளாதாரத்தின் குட்டி முதலாளி ஆகி உழவர்களை

வேலைக்காரர்களாய்ப் பயன்படுத்திக் கொள்கிறார். உழவர்களின் கோபம் முதன்மையாக வட்டிக் கடைக்காரர்மீதுதான் திரும்புகிறது; அவர்களுடைய கண்களுக்குப் புலப்படும் கொடுங்கோலன், அவர்களுடைய துன்பங்களின் பரமபிதா அவராகக் காட்சி அளிக்கிறார்; இயல்பாக அமைதியான குணமுள்ளவர்களும், வெகுகாலமாய்த் துன்பத்தில் உழலுகிறவர்களுமான உழவர்கள் அவ்வப்போது வட்டிக்கடைக்காரர்களைக் கொலைபுரிந்ததாய் வருகிற செய்திகளுக்கு இந்தக் கொடுமைத்தான் காரணம். அப்பால், வட்டிக் கடைக்காரருக்குப் பின்னால் முழுவலிமையோடு பிரிட்டிஷ் அரசு இருப்பதை அவர்கள் கண்டு கொள்கிறார்கள். நிதி முதலீட்டுச் சுரண்டல் யந்திரத்திற்கு உற்பத்தி முனையில் இன்றியமையாத பல்சக்கரத்தின் ஒரு பல் போன்றவர்—வட்டிக்கடைக்காரர்.

வட்டிக்கடைக்காரரின் நாசவேலை விரிவடையவே, பொதுவான சுரண்டலின் நலனுக்காகவும், அவர் பொன் முட்டையிடும் வாத்தைத் கொன்றுவிடக்கூடாதே என்பதற்காகவும் அரசினர் அவசர அவசரமாக நடவடிக்கைகள் மேற்கொள்கின்றனர். மிகை வட்டியைக் கட்டுப்படுத்தவும், நிலங்களைப் பராதீனப்படுத்துவதைத் தடுக்கவும் பல சிறப்புச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. ஆனால், இச் சட்டங்கள் தோல்வியே கண்டன என்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டும். (கிராமக் கடன் சுமையைத் தடுக்க ஏற்பட்ட சட்டங்களின் அநுபவம் குறித்து வேளாண்மைக் குழு அறிக்கையில் 436-7ஆம் பக்கம் ''சட்டத்தின் தோல்வி,'' என்ற பகுதியைப் பார்க்க.) கடன் சுமை தடையில்லாமல் விசையுடன் பெருகி வருவதாலும் அது ருசுவாகிறது.

பிரிட்டிஷாரின் ஆட்சியில் கடன் சுமைப் பிரச்சினையையும் அதன் பெருக்கத்தையும் பற்றின மிக விரிவான ஆய்வை எம். எல். டார்லிங் முதலில் 1925-ல் வெளியிட்ட ''வளத்திலும் கடனிலும் பஞ்சாப் உழவன்'' என்ற புத்தகத்திலும், அதைத் தொடர்ந்து அவர் எழுதிய ''ரஸ்டிகஸ் லொக்யூடர்'' (1930), ''ஒரு பஞ்சாப் கிராமத்தில் விவேகமும் விரயமும் (1934) என்ற நூல்களிலும் காணலாம். ஆசிரியர் பொதுவாகப் பரிந்து பேசும் பழக்கமுடையவர், ஆயினும் உண்மைகள் வெறித்து நிற்கின்றன. அவருடைய முதல் நூலில் பிரிட்டிஷாரின் வெற்றிக்குப்பின் கடன் பஞ்சாபில் எப்படிப் பரவியது என்பதைக் காட்டினார்:

> ''சீக்கியர்களின் காலத்தில் அடைமானம் இப்போது ஒவ்வொரு கிராமத்திலும் தோன்றியது; 1878 அளவில் மாகாணத்தில் 7 சதவீதம் அடைமானத்தில் இருந்தது...
>
> ''1880 அளவில், நிலவுரிமையுள்ள உழவருக்கும் வட்டிக் கடைக்காரருக்கும் இடையில் நடந்த பொருந்தாப் போரில்

பின்னவரே பெரும் வெற்றி பெற்றார்... அடுத்த முப்பது ஆண்டுகள் வட்டிக் கடைக்காரருக்கு உச்ச காலம்; பல்கிப் பெருகி வளமாக வாழ்ந்தார், பாங்கர்கள், வட்டிக் கடைக் காரர்களின் எண்ணிக்கை (அவர்களைச் சார்ந்தோர் உட்பட) 1868இன் 53,263லிருந்து 1911-ல் 193,890க்கு உயர்ந் தது.''

(எம். எல். டார்லிங்: ''வளத்திலும் கடனிலும் பஞ்சாப் உழவன்,'' பக். 208.)

1911 அளவில் வட்டிக் கடைக்காரர் ''உச்ச காலத்தை'' அடைந்து விட்டதாய் திரு. டார்லிங் கருதினார். 1927-ல் வேளாண்மைக் குழுவுக்கு முன் சாட்சியம் அளித்தபோது, ''பஞ்சாபில் இரண்டு மாவட்டங்களைத் தவிர மற்ற எல்லா இடங்களிலும் கிராம வட்டிக் கடைக்காரர் தொழிலைச் சுருக்கிக்கொண்டு வருகிறார். இப்படிச் சுருக்குவதற்கு கூட்டுறவு இயக்கத்தின் விரைவான வளர்ச்சியும், கடன் வாங்கும் உழவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள சட்டப் பாது காப்பும், விவசாய வட்டிக் கடைக்காரரின் தோற்றமும் முக்கிய மான காரணங்கள்'' என்று நம்பிக்கையோடு குறிப்பிட்டார் (அறிக்கை, பக். 442). ஆனால் அவர் அடுத்த புத்தகம் ''ரஸ்டிகஸ் லொக்யூடர்'', வெளியிடும்போது (1930), பொதுவாக நம்பிக்கை தெரிவித்தாலும் அபாயக் குரல் எழுப்பினார் :

''நிலவுரிமை மாற்றச் சட்டம் இருப்பினும் பெருவாரி யாக நிலவுரிமை மாற்றம் மீண்டும் தொடங்கப்படக்கூடிய அபாயம் உள்ளது. மேற்கு பஞ்சாபில் பெரு நிலக்கிழார் சட்டத்தின் துணைகொண்டு உழவர்களை நாசமாக்கிவிட்டுத் தன் நிலப் பரப்பை அதிகமாக்கிக் கொள்ளும் அறிகுறிகள் தென்படுகின்றன'' (பக். 326).

1935 அளவில் பஞ்சாப் நில வருவாய்த்துறை அதிகாரிகள் அறிவித்தார்கள்:

''விவசாய வட்டிக் கடைக்காரர் கிராமாந்தரங்களில் வலுப்பெற்று வருகிறார்.''

(பஞ்சாப் நில வருவாய் நிர்வாகத்துறை அறிக்கை, 1935, பக். 6.)

1919-ல் டார்லிங் நடத்திய ஆய்வில், நிலவுரிமையாளர்களில் 17 சதவீதத்தினர் மட்டும் கடன் இல்லாமல் சுயேச்சையாக இருப் பதையும், ஏனையோருக்கு சராசரி ரூ.463 க்குக் குறையாமல், அதாவது நிலவருவாயைவிட பன்னிரண்டு மடங்கு இருப்பதையும் டார்லிங் கண்டார்.

வங்காளத்திலுள்ள பரீத்பூர் மாவட்டத்தில் கடன் பெருக்கத்தின் அருமையான காட்சி தெரிகிறது. இந்த மாவட்டத்தில் 1906-ல் ஜே. சி. ஜாக் என்பவரால் ஓர் ஆய்வு நடத்தப்பட்டது; பின்னர் இவர் உயர்நீதி மன்ற நீதிபதி ஆனார். தன் ஆய்வின் முடிவுகளை "ஒரு வங்காள கிராமத்தின் பொருளாதார வாழ்க்கை," (1916) என்ற நூலாக வெளியிட்டார்; அந்தச் சமயத்தில் பரீத்பூரிலுள்ள குடும்பங்களில் 55 சதவீதம் கடனற்று இருப்பதை அம்முடிவுகள் காட்டின. கால் நூற்றாண்டுக்குப் பின்னர், 1933-34-ல் அதே மாவட்டத்தில் வங்காளப் பொருளாதார ஆய்வு வாரியத்தால் ஒரு புதிய ஆய்வு செய்யப்பட்டது; அந்தக் காலகட்டத்திற்குள் பரீத்பூர் குடும்பங்களில் 16·9 சதவீதமே கடனற்று இருப்பதாய்த் தெரிந்தது.

## 6. மும்மடங்குச் சுமை

இவ்வாறாக, பயிர்த்தொழில் செய்யும் உழவர் இன்னும் நிலமற்ற தொழிலாளி ஆகவில்லை எனில் மும்மடங்குச் சுமையடியில் வாழ்கிறான். அரைகுறைச் சாதனங்களைக் கொண்டு, குறு நிலத்தில் அல்லது நிலத் துண்டில் பயிரிடுவதால் கிடைக்கும் மிகக் குறைவான வருமானம் உழவருடைய சொந்தத் தேவைக்கும் அவருடைய குடும்பத்துக்கும் காணாத நிலையில் அதைப் பிடுங்கிக் கொள்ள மூன்று விழுங்கிகள் காத்திருக்கிறார்கள்.

அரசின் நிலவரி விதிப்பு உழவரைப் பாதிப்பதோடு மறைமுக வரிகளும் அவருடைய எளிய கொள்முதலில் பங்குகொள்கின்றன. ("கிராமப்புறங்கள் வெளியிலிருந்தே வாங்கும் உப்பு, மண்ணெண்ணெய், மதுபான வகைகள் போன்ற சில பொருள்கள்மீது மட்டும் ஆயத்துறை வரிவிதிக்கும் படியாக இந்தியக் கிராமங்களின் தன்னிறைவு கட்டுப்படுத்தியுள்ளது," என்று சைமன் அறிக்கை புலம்புகிறது. ஆயினும், ஏழைகளின் அன்றாடத் தேவையான உப்பு வரி 1939–40-ல் £81 லட்சம் அல்லது நிலவரியில் ஐந்தில் இரண்டு பாகத்தை எட்டியது.)

அரசின் நிலவரியோடு, நிலக்கிழாரின் குத்தகைக் கோரிக்கையும் பெரும்பாலோர்மீது விழுகிறது. பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள நிலத்தில் பாதி ஜமீன்தாரி முறையின்கீழ் இருப்பதுடன் ரயத்துவாரி முறை அமுலிலுள்ள பகுதியில் மூன்றில் ஒரு பகுதி நிலங்கள் உட் குத்தகை விடப்பட்டவை.

வட்டிக் கடைக்காரரின் வட்டிக் கோரிக்கைகள் மிகப் பெரும்பான்மையோர்மீது விழுகின்றன. டார்லிங்கின் தகவல்களும், பரீத்பூர் உதாரணமும் சுட்டுவதுபோல் ஐந்தில் நான்கு பகுதியினர் வட்டி கட்ட வேண்டிய நிலையிலுள்ளனர்.

உழவரின் விளேச்சலிலிருந்து எடுத்துக்கொள்ளப்படும் அளவு என்ன? அவர் பிழைப்புக்கு எஞ்சும் அளவு என்ன? இந்திய வேளாண்மையின் அடிப்படைக் கேள்வி பற்றின புள்ளி விவரம் ஏதும் கிடைக்கவில்லே. நிலவரியன்றி குத்தகையாகத் தரப்படும் தொகை எவ்வளவு, கடன்மீது செலுத்தப்படும் வட்டி எவ்வளவு என்பதை அறுதியிட யாதொரு முயற்சியும் செய்யப்படவில்லே. சரியான தகவல் இல்லாமையால் மையபாங்கு ஆய்வுக்கு சிறு பான்மையோர் அறிக்கை மிகப்பொதுவான ஒரு மதிப்பீடு செய்ய முயன்றது (பக். 36-7). நிலவரித்தொகை ரூ. 35 கோடி என்ற அடிப்படையிலிருந்து தொடங்கி, மிகமிதமாகக் கணக்கிட்டாலும் வட்டிக்கான கடன்தொகை அதற்கு மும்மடங்கு அல்லது ரூ. 100 கோடி இருக்கும் என்றும், நிலவரிக்குமேல் குத்தகைத் தொகை நிலவரியைவிட ஒன்றரை மடங்கு இருக்கும் என்றும் அந்த மதிப்பீடு கூறுகிறது. எல்லாம் கூடி, நிலவரித் தொகையை விட ஐந்து மடங்குச் சுமை ஆகும். ஆயினும், இது ஒரு தாழ்ந்த மதிப்பீடாகவே இருக்க முடியும் என்பதை அறிக்கையே ஏற்கிறது. சென்னேயில் அறிமுகம் செய்யப்பட்டுக் கைவிடப்பட்ட ஒரு மசோதாவை ஆதாரமாய்க்கொண்டு, நடுவர்கள் எடுத்துக்கொள்ளும் குத்தகைத் தொகை நிலவரித் தொகையைப்போல் ஒன்றரை மடங்கு என்று மதிப்பீடு செய்யப்பட்டது. உண்மையில் இந்த அளவு வங்காளத்திலும் (அங்கு நிலவரியைப்போல் குத்தகைத் தொகை நாலு பங்கு, ஆறு பங்குகூட இருக்கிறது.) மற்ற இடங்களிலும் (வங்காளம் போல் பலவித அளவில்லாவிட்டாலும்) நிச்சயம் அதிகமாக இருக்கும். 'குத்தகை முறைகளும் விளேச்சல் அளவும் மாறுபடுவது காரணமாக இடத்துக்கு இடம், ஆளுக்கு ஆள் நிலேமை பெரிதும் மாறுபட்டாலும் நடுவர்கள் உள்ள இடத்தில் உழவர்கள் மீதுள்ள சுமை $1 : 1\frac{1}{2}$ என்ற அளவைவிட அதிகமாகவே இருக்கும்,'' என்ற கருத்தையே அறிக்கையும் ஏற்கிறது. 900 கோடி ரூபாய்மீது 100 கோடி வட்டி, அதாவது 11 சதவீதம் என்பது மிகத் தாழ்ந்த மதிப்பீடு; கிராமப்புறங்களில் வட்டிக் கடைக்காரர் ஒரு ரூபாய்க்கு, மாதம் ஒன்றுக்கு, ஓரணு (சில சமயம் $1\frac{1}{2}$ அணு) வட்டி வாங்குவதுதான் வழக்கம்—அல்லது 75 சதவீதம். பழைய மதிப்பீட்டுத் தொகையைப்போல் இருமடங்கு கடன் பெருக்கம் சுமையை அதிகமாக்கி இருக்கும். ஆகையால், இந்த மதிப்பீடு காட்டுவதைவிட உண்மையான சுமை மிக அதிகம். ஆயினும் இந்த மதிப்பீட்டின்படி, உப்பு வரிப் பாதிப்பையும் கூட்டினுல், ஏறக்குறைய 200 கோடி ரூபாய் அளவை எட்டும்; அதாவது, ஒரு விவசாயிக்கு 20 ரூபாய். இதற்கு எதிராக மையபாங்கு ஆய்வுக்குழுவின் பெரும்பாலோர் அறிக்கை, ''பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள ஒரு விவசாயியின் சராசரி வருவாய் ஆண்டு

ஒன்றுக்கு 42 ரூபாய் அல்லது £ 3க்கு மேல் போகவில்லை'' (பக். 39) என்கிறது.

சுரண்டலின் அளவு பற்றிய ஓரளவு உண்மைச் சித்திரம் என். எஸ். சுப்ரமணியனின் விவரமான ''ஒரு தென் இந்தியக் கிராமத்தின் ஆய்வில்'' கிடைக்கிறது (காங்கிரஸின் அரசியல் பொருளாதார ஆய்வுகள், எண் 2, 1936). நெரூர் கிராமம் திருச்சிறுப்பள்ளி மாவட்டத்தில் உள்ளது; மக்கட்தொகை 6,200. இக்கிராமம் பற்றின இந்த ஆய்வில், அதன் மக்களுக்கு எல்லா இனங்களிலிருந்தும் கிடைக்கும் வருவாயும்,வெளியேறும் தொகையும், செலவுக்கு மிஞ்சும் தொகையும் அடங்கிய சரியான பட்ஜட் கொடுக்கப்படுகிறது. சுரண்டலின் அளவை இங்கே மிகத் தெளிவாய்க் காணலாம்; நிலம் பெரும்பாலும் கிராமத்துக்கு வெளியில் இருப்போருக்குச் சொந்தம். உழவருக்குக் கடன் தந்தவர்கள் கிராமத்துக்கு வெளியில் இருப்பவர்கள். ஆகையால் வட்டியிலும் குத்தகையிலும் கிராமத்தைவிட்டு வெளியேறுகிறது; அதனால் கிராமத்தின் நிகர வருவாயிலிருந்து தெளிவான கழிவைக் காட்டுகிறது.

இந்த ஆய்வு பிரதிபலிக்கும் முடிவுகள் என்ன? எல்லா விளை பொருள்களையும் மார்க்கெட் விலையில் மதிப்பிட்டு, வேளாண்மையில் மொத்த வருவாய்: ரூ. 344,000. பயிரிடும் செலவுகளைக் கழித்த பின் (உழைப்பு அல்ல, கிராமத்துக்குள் தரப்பட்ட கூலிகள் நீங்கலாக) நிகர வருமானம்: ரூ. 212,000. வேளாண்மை அல்லாத துறைகளிலிருந்து (வெளியில் ஈட்டிய கூலிகள், அரசு ஊழியர்களின் சம்பளங்கள், ஓய்வூதியங்கள், கடன் தந்த பணத்துக்கு வட்டி) நிகரவருமானம்: ரூ. 24,000 ஐயும் சேர்த்து எல்லா இனங்களிலிருந்தும் நிகரவருமானம் ரூ. 236,000 ஆகிறது.

இதற்கு எதிராக, பின்வரும் செலவினங்கள் காணப்பட்டன. நிலவரி, பாசனமும் அதைச் சேர்ந்த செஸ் வரிகளும், ரூ. 30,000; கிராமத்திற்கு வெளியிலுள்ள நிலவுடமையாளர்களுக்குக் குத்தகைப் பணம், ரூ. 70,000; கடனுக்கு வட்டி, (மிகத் தாழ்ந்த 8 சதவீதக் கணக்கில்), ரூ. 40,000; கள், சாராயக் கடை குத்தகைப் பணம் அரசுக்கு, மரவரிகள், மரங்களின் சொந்தக்காரர்களுக்குக் குத்தகை, ரூ. 12,000; இவை எல்லாவற்றையும் சேர்த்தால் அரசு வரிகளுக்கும் நிலவரிக்கும், குத்தகைக்கும் வட்டிக்கும் மொத்தம் ரூ. 152,000 ஆகிறது. சிறு தொகை வெளியேற்றங்கள் ரூ. 4,000 உட்பட, கிராமத்திலிருந்து செலுத்தப்படும் தொகை ரூ. 156,000 போக, கிராமத்தில் மிஞ்சுவது ரூ. 80,000 அல்லது ஆளுக்கு ரூ. 13.

இந்தக் கிராமவாசி ஒவ்வொருவரும் சராசரி ரூ. 38 அல்லது £2-17 ஷில்லிங் ஓராண்டில் சம்பாதிப்பதைக் காணலாம். வரி வசூலிப்பவர்

களும், நிலக்கிழாரும், வட்டிக் கடைக்காரரும் தங்கள் பங்கை எடுத்துக் கொண்ட பிறகு அவரிடம் எஞ்சுவது ரூ. 13 க்கும் கீழ் தான் அல்லது சுமார் 19 ஷில்லிங்குகள்; ஆண்டு பூராவையும் இதைக் கொண்டு ஓட்ட வேண்டும். மூன்றில் இரண்டு பங்கு கைவிட்டுப்போக, ஒரு பங்குதான் அவரிடம் நிற்கிறது.

"நிகர வருவாய் மொத்தத்தில் நிலவரியாகவும், ஆயத்துறை வரியாகவும், வட்டியாகவும், ஸ்தலத்தில் இல்லாத உரிமையாளர்களுக்குக் குத்தகைப் பணமாகவும் மூன்றில் இரு பங்குக்கு மேல் கிராமத்தை விட்டு வெளியேறுகிறது.'' இந்த விவரமான ஆய்வில் *காணப்பட்ட முடிவு இதுதான்; மேலே குறித்த தொகைகளாய் இதுதான் தொகுக்கப் பட்டுள்ளது.*

*பெரிய புரட்சிக்கு முன் பிரான்ஸில் உழவர்கள் இருந்த நிலை பற்றிக் கார்லைல் வருணிக்கிறார்:*

*''கைம்பெண் தன் குழந்தைகளின் பகல் உணவுக்காக நெட்டில் கனிகளைச் சேகரித்துக் கொண்டிருக்கிறாள். வாசனை பூசிக்கொண்டு ஓல் டி போவ்வில் (சோபாவில்) மென்மையாகச் சாய்ந்து கொண்டிருக்கும் ஒரு கனவானுக்கு அவளிடமிருந்து மூன்றாவது கனியைப் பறிப்பதற்கான ஒரு ரஸவாதம் தெரியும்: குத்தகை, சட்டம் என்று அந்த ரஸவாதத்திற்குப் பெயர்.''*

*பிரிட்டிஷ் இந்தியாவில் அதைவிட மர்மமான ரஸவாதம் சாத்தியமாகி விட்டது. உழவருக்கு ஒரு கனி; கனவானுக்கு இரு கனி.*

அத்தியாயம் 9

# வேளாண்மைப் புரட்சி நோக்கி

*''விழித்திடுவீர் வீரவுழவர்களே, விழித்திடுவீர் இப்போதே, கண்ணன்[1] வழியைப் பின்பற்றிடுவீர்! திருடரும் கொள்ளையரும் வீட்டில் நுழைந்துள்ளனர், உறங்காதீர்!*

*விழித்திடுவீர் வீரவுழவர்களே, விழித்திடுவீர் இப்போதே, கண்ணன் வழியைப் பின்பற்றிடுவீர்! வைகாசி மாதத்தில் உழவர்கள் தானியங்களை அறுவடை செய்யுங்கால் பேர்ஹ்ராக்கள்[2] நிலத்தைப் பறிமுதல் செய்ய, நிலச்சுவான்கள் தானியங்களைச் சூறையிட, உங்கள் உழைப்பின் பலனை உங்கள் கண் முன்னலேயே கவருகிறார்கள்.*

*ஒரு நாளும் நிம்மதி இல்லை; நீங்கள் உண்ண ஒரு தானிய மணியும் இல்லை. விழித்திடுவீர் வீரவுழவர்களே, விழித்திடுவீர் இப்போதே, கண்ணன் வழியைப் பின்பற்றிடுவீர்!''*

—சடோகி சர்மா, மதுரா மாவட்டத்தைச் சேர்ந்த நிலமற்ற உழவர், கவிஞர், பரீதாபாத் கிராமக் கவிஞர், மாநாட்டுத் தலைவர்—மே, 1938.

*முன் பக்கங்களில் செய்த ஆய்வுகளை அடிப்படையாய்க் கொண்டு வேளாண்மை நெருக்கடியின் முக்கியமான அம்சங்களைத் தொகுத்துக் கூறலாம்; இந்த நெருக்கடிக்கான காரணங்களும் சூழ்நிலைகளும் பிரிட்டிஷ் ஆட்சியின் செயல்முறை முழுவதிலும் உருவாகி இன்று ஒரு உச்ச நிலையை நோக்கிச் செல்கின்றன.*

## 1. விவசாய நெருக்கடியின் வளர்ச்சி

*தேசியப் பொருளாதாரத்தில் வேளாண்மை மேன்மேலும் பொருத்தமற்ற, சீர்கெட்ட நிலையில் வைக்கப்பட்டிருந்தது முதல் அம்சம்; இந்தியாவின் காலனி நிலையை அடுத்து தொழில்மயக் குலைவு இன்னும் நீடித்ததால், ஏககாலத்தில் விவசாயத்தை நாட,*

1. குருக்ஷேத்திரத்தில் தன் உறவினர்களைக் கொல்ல அர்ச்சுனன் தயங்கிய போது, கண்ணன் அவனுக்கு யுத்த தருமத்தைப் போதித்து அவனைப் போர் புரிய ஊக்கினர்.

2. கிராம முதலாளிகள்.

முன்னேற்றம் குன்றி இருந்த நிலைமை. இப் பொதுவான நிலை மற்ற எல்லா அம்சங்களையும் பாதிக்கிறது.

இரண்டாவது அம்சம், விவசாயத்தில் தேக்கமும் தரக் குறைவும்; குறைந்த கண்டுமுதல், உழைப்புச் சேதம், பயிரிடத் தக்க நிலத்தைப் பயன்படுத்தாமை, பயிரிடப்படும் நிலத்தைப் பண்படுத்தாமை, விளைச்சலிலும் சீர்கேடு தோன்றுவதன் அறிகுறிகள், நிலம் பயிரிடப்படாமல் இருத்தல், பயிர் செய்யப்படும் நிலப்பரப்பு குறைதல்.

மூன்றுவது அம்சம், உழவர்களின் நிலப்பசி மேன்மேலும் மிகுதல், நிலவுடைமைகளின் அளவு தொடர்ந்து குறைதல், நிலப் பிரிவினையும் துண்டாடலும் பரவி 'கட்டுபடி ஆகாத' நிலவுடைமைகள் மிகுந்து இன்று இம்மாதிரி உடைமைகளே பெரும்பான்மையாக இருக்கும் நிலை.

நாலாவது அம்சம், நிலப்பிரபுத்துவம் பரவுதல், குத்தகை, உள்குத்தகை முறை, பெருகுதல், காரியமற்ற, பயிர்த்தொழில் செய்யாத, குத்தகை வாங்குவோரின் எண்ணிக்கை மிகுதல், பயிர்த் தொழில் செய்யாத இவர்களிடம் மேலும் மேலும் நிலம் செல்லுதல்.

ஐந்தாவது அம்சம், இன்னும் நிலவுடைமையுள்ள உழவர்களின் கடன் பெருகுதல், மொத்த கிராமக் கடன் தொகை அண்மையில் விண்ணளவு ஏறுதல்.

ஆறுவது அம்சம், கடன் சுமை காரணமாக உழவர்கள் நிலத்திலிருந்து வெளியேற்றப்படும் நிலை அதிகரித்தல், அதன் விளைவாக நிலம் வட்டிக் கடைக்காரர்கள், பேரச் சூதாட்டக்காரர்கள் கைக்கு மாறுதல், அதன் பயன் நிலப்பிரபுத்துவத்தின் வளர்ச்சியிலும் நிலமற்ற தொழிலாளர் வர்க்க வளர்ச்சியிலும் பிரதிபலிக்கிறது.

ஏழாவது அம்சம், தொடர்ந்து விவசாயத் தொழிலாளர் வர்க்கம் மிக விரைவாக வளர, மொத்த உழவர் தொகையில் 1921-31 க்குள் பத்தே ஆண்டில் ஐந்தில் ஒரு பகுதியாக இருந்த அவர்களுடைய எண்ணிக்கை மூன்றில் ஒரு பகுதியாக ஏறியது; மேலும் ஏறி உழவர்களில் பாதிப் பேர் விவசாயத் தொழிலாளர் எனக் கூடிய நிலை.

கடனைத் தொடர்ந்து நிலம் பராதீனமாகிறது என்பது உலகம் ஏற்ற உண்மை. 1892 லேயே தக்காண விவசாயிகள் நிவாரணச் சட்டம் செயல்படும் விதம் பற்றி விசாரணை செய்த குழு, "ஒரு விவசாய நாட்டில், நிலத்தின் முன்னேற்றத்துக்குச்

சிறிதும் பாடுபடாமல் குத்தகைத் தொகையில் சூதாடும் அந்நியர்களிடம் நிலம் செல்வதைப்'' பற்றிக் கசப்புடன் குறிப்பிட்டு, ''பொறுப்பற்ற நிலக்கிழார்களின் அதிகாரத்தைப் பயன்படுத்தும் இவர்கள் உலகத்திற்குப் பொருந்தாதவர்கள் . . . நிலக்கிழார்கள் என்ற முறையில் வட்டிக்கடை மனப்பான்மையோடு நடந்து கொள்கிறார்கள். தங்களிடம் கடன்பட்ட அடிமைகளை விடச் சற்று நல்ல நிலையிலுள்ள குத்தகைக்காரர்களிடம் மிகவும் கடுமையான நிபந்தனைகள் விதிக்கிறார்கள்,'' என்று புதிய நிலக்கிழார்களைப் பற்றி உரைக்கிறது. 1928 இல் வேளாண்மைக்குழு, ''கடன் வாங்குவதைத் தவிர்க்க முடியாது என்று மக்களுக்குத் தோன்றுவதால் வட்டிக் கடைக்காரனுக்குப் பெரும் சக்தி தருகிறது,'' என்று ஒப்புக் கொள்கிறது. ''நிலம் அவன் கைக்கு மாறவேண்டியது விதி என்று ஒப்புக்கொள்கிற சூழ்நிலை. அவனுடைய ஆதிக்க நிலை பற்றித் தட்டிக் கேட்பாரில்லை'' (பக். 435). இந்த அரசினர் குழுக்கள் நிலம் பிடுங்கும் வட்டிக்கடைக்காரனின் கொடுமை பற்றி இவ்வாறு தர்மாவேசத்தோடு பேசினாலும், அவனுக்கு ஆதிக்கம் அளிப்பது அரசின் சட்டவுதவி என்பதையும், நிலப்பராதீனத்தைச் சட்டம் அமுல் செய்வதையும் குறிப்பிடத் தவறுவதுடன் முதலில் அரசின் நிலவரியும் மற்ற வரிகளும் தான் உழவரை வட்டிக் கடைக்காரனிடம் விரட்டியது என்பதையும் சொல்வதில்லை. 1931-ல் மத்திய பாங்கு விசாரணைக்குழு பின் வருமாறு தெரிவித்தது:

> ''கடன் சுமை இறுதியில் நிலம் விவசாயிகளின் கையிலிருந்து விவசாயி அல்லாத வட்டிக்காரன் கைக்கு மாற வகை செய்கிறது; அதனால், பொருளாதார அந்தஸ்து குறைந்த நிலமற்ற தொழிலாளர் வர்க்கம் ஒன்று தோன்றுகிறது. வட்டிக் கடைக்காரன் கடுமையான நிபந்தனைகளுடன் உழவரிடம் குத்தகைக்கு விடுவதால் நன்றாகப் பயிர் செய்யும் ஊக்கம் உழவருக்கு இல்லாமற் போகிறது. இவ்வாறு விவசாயத்தரம் குறைவதாய்க் கூறப்படுகிறது.''
>
> (மத்திய பாங்கு விசாரணைக் குழு அறிக்கை, பக். 59.)

1931 ஆம் ஆண்டு சென்ஸஸ் அறிக்கை, ''பயிர்த் தொழில் செய்யாத உடைமையாளர்களிடம் நிலம் குவிவதாய்த் தோன்றுகிறது.'' என்ற முடிவு கண்டது (இந்தியாவின் சென்ஸஸ், 1931; முதல் தொகுதி, முதல் பாகம், பக். 288).

நிலச் சீர்கேடு, நிலப்பராதீனம், வர்க்க பேதம் மிகுதல் ஆகிய செயல் முறைகள் உலகப் பொருளாதார நெருக்கடி காரணமாகவும், விவசாய விலைகளின் வீழ்ச்சி காரணமாகவும், அப்பால் இரண்டாவது உலகப் போரின் பாதிப்பாலும் நாடெங்கும்

பஞ்சங்கள் அலையலையாக வந்ததாலும் வெகு விரைவாக முன்னேறி விட்டன.

வீழ்ச்சியின் அளவை தொழில் தகவல், புள்ளிவிவர இயக்குநர் வெளியிட்டுள்ள புள்ளிவிவரங்களில் காணலாம். 1928-29 இல், பொருளாதார மந்தம் ஏற்படுவதற்கு முதலாண்டு, சாதாரண அறுவடைக் கால சராசரி விலைப்படி விவசாயப் பயிர்களின் மதிப்பு ரூ. 1,034 கோடி. 1933-34 இல் அதன் மதிப்பு ரூ. 473 கோடி—55 சதவீத வீழ்ச்சி.

ஏற்கனவே தரித்திர நாராயணன், தன் வருவாயின் மதிப்பு இவ்வாறு பாதியாய்க் குறைந்ததால் உழவனின் துன்பம் எப்படி இருக்கும் என்பதைக் கற்பனை செய்து கொள்ளலாம். விலைக் குறைவுக்கு ஏற்ப அவன் செலுத்த வேண்டிய பணத்தில் குறைவு ஏற்படவில்லை. மாறாக, 1928-29 இல் ரூ. 33·1 கோடியாக இருந்த நிலவரி, 1931-32 இலும் ரூ. 33 கோடி என்ற அளவிலேயே விதிக்கப்பட்டது; உழவர்களால் வரிதர முடியாததாலும், பலர் நிலத்தைக் கைவிட்டதாலும் நிலவரி 30 கோடியாக, அல்லது 9 சதவீதம் குறைந்தது.

1920-21 க்கும் 1932-33 க்கும் இடையில் வாங்கும் சக்தியில் ஏற்பட்ட மாறுதல்களைப் பற்றி 1934 இல் வங்காள சணல் விசாரணைக்குழு அறிக்கையில் கொடுக்கப்பட்டுள்ள மதிப்பீடுகளின் வாயிலாக வங்காளக் குடியானவர்களின் கொடுந் துன்பத்தை மதிப்பிடலாம். அவற்றின்படி, 1920-21 முதல் 1929-30 வரை பத்தாண்டில், வங்காளத்தில் விற்பனையாகக் கூடிய தானியங்களின் மொத்த மதிப்பு ஒரு வருடத்துக்குக் சராசரி ரூ. 72·4 கோடியிலிருந்து, 1932-33 இல் ரூ. 32·7 கோடி வீழ்ந்தது; அதே சமயம் பணப் பொறுப்புகளின் மதிப்பு ரூ. 27·9 கோடியிலிருந்து ரூ. 28·3 கோடியாக உயர்ந்தது. உழவர்களின் 'சுயேச்சையான வாங்கும் சக்தி ரூ. 44.5 கோடியிலிருந்து ரூ. 4·4 கோடியாகச் சரிந்தது என்று இதற்குப் பொருள். கல்கத்தா விலைவாசிகள் அட்டவணை சராசரி 223 லிருந்து 126க்கு அதே காலத்தில் சரிந்தது, அதாவது 44 சதவீதச் சரிவு. 'வாங்கும் சக்தியோ' 90 சதவீதம் சரிந்தது.

இந்தக் காலத்தில்தான், உழவர்கள் பரம்பரை வழக்கப்படி நகைகளாகச் சேமித்து வைத்திருந்தவற்றில் கடைசி நகைகளையும் கடன் தீர்ப்பதற்காகவும் பொருள்களை ஏற்றுமதி செய்தும் போதாது இந்தியாவின் ஆண்டுக் காணிக்கை செலுத்தவும் பறி கொடுத்தனர். 1931-37 க்கும் இடையில் £ 24·1 கோடி மதிப்புள்ள தங்கம் இந்தியாவிலிருந்து வடிக்கப்பட்டது. ஆனால்

'இந்த ஆபத் சகாயத்' தங்கம் ஒரு பகுதிக்குத்தான் பயன்பட்டது; ஒரு சிறிது காலத்துக்குத்தான் 'கெட்ட காலத்தைத்' தள்ளி வைக்க முடிந்தது.

ஐக்கிய மாகாணங்களில் குத்தகைப் பணம் தரமுடியாமல் நிலத்தைக் கைவிட்டோரின் எண்ணிக்கை 1931 இல் 71,430; நிலவரியைக் 'கட்டாய வசூல்' செய்யுமாறு பிறப்பிக்கப்பட்ட உத்திரவுகளின் எண்ணிக்கை, 256,284. 1930 இல் வங்காளத்தில் ''நிலம் பயிரிடப்படாமல் வீணுகிறது'' என்று பாசனத் துறைக்குழு அறிவித்ததை முன்பே கண்டோம்.

1934-35 அளவில், பயிரிடப்படும் நிலத்தில் 50 லட்சம் ஏக்கர்கள் குறைந்து விட்டதாய் விவசாய அறிக்கைகள் காட்டின. 1933—34-ல் விதைக்கப்பட்ட நிலப்பரப்பு 23·32 கோடி ஏக்கர்கள்; 1934-35 இல் அது 22-69 கோடி, அல்லது 5,266,000 ஏக்கர்கள் குறைவு. உணவுத் தானியப் பயிர் நிலத்தில் 5,589,000 ஏக்கர்கள் குறைவு.

1934 முதல் விலைகள் சற்று ஏறினும் மந்தத்தைக் குறைக்கவோ, அப்போதும் தொடர்ந்த சரிவின் விளைவுகளைச் சமாளிக்கவோ பயன்படவில்லை. ''1934 முதல் மக்களின் துயரம் மேலும் கடுமை ஆகியிருக்கலாம்,'' என்று ஆன்ஸ்டே எழுதுகிருர். (''இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி,'' 488 XXVII

உழவர்களின் வருவாய் பாதியாய்க் குறைந்ததால் கடன் சுமை இரு மடங்கு ஆயிற்று. இதனுல் கடன் மீண்டும் ஏறுவதைத் தவிர்க்க முடியாது என்று பொருள்; ஆக மொத்தக் கடன் சுமை 1931 இல் இருந்த அளவுக்கு இரு மடங்கு இருக்கும் என்று மதிப்பிடப்படுகிறது.

1921 இல், விவசாயக் கடன் மொத்தம் £ 40 கோடி இருக்கும் என்று மதிப்பிடப்பட்டது (எம். எல். டார்லிங் எழுதிய ''வளமையிலும் கடனிலும் பஞ்சாப் உழவன்,'' என்ற நூலைப் பார்க்க).

1931 இல், மத்திய பாங்கு விசாரணைக்குழு அறிக்கை மொத்தக் கடன் ரூ. 900 கோடி அல்லது £ 675 கோடி என்று மதிப்பிட்டது.

1937 இல் இந்தியா, ரிசர்வ் பாங்கின் விவசாயக் கடன் துறையின் முதல் அறிக்கை மொத்தக் கடன் ரூ. 180 கோடி அல்லது £ 135 கோடி என்று மதிப்பிட்டது.

1921-31 ஆகிய பத்தாண்டுக் காலத்தில் £ 40 கோடியிலிருந்து £ 67·5 கோடிக்கு—1931-37 ஆகிய 6 ஆண்டுக்குள்

£ 67·5 கோடியிலிருந்து £ 135 கோடிக்கு-உழவர்களின் கடன் சுமை பெருகுவதைக் காட்டும் இத் தகவல்கள், விவசாய நெருக்கடி ஆழ்வதை மிகத் தெளிவாய் வெளியிடுகின்றன.

இந்திய விவசாயப் பொருளாதாரத்தின் இயலாமை, ஜப்பான் போரில் புகுந்தபோது மிக அம்மணமாய் வெளிப்பட்டது. ஜப்பான் அரிசி இறக்குமதி நிறுத்தப்பட்டது. உடனடியாக இந்தியாவில் உணவுப் பொருள்கள் தட்டுப்பாடு ஏற்பட்டு விலைவாசிகள் உயர்ந்தன. இந்த நிலையை உறுதியாகக் கையாண்டிருக்க முடியும்: முதலாவதாக, உழவர்கள் மீதுள்ள சுமையைக் குறைத்து அவர்களுக்குப் பாசனம் முதலிய வசதிகளை வழங்கி உணவுத் தானியங்களின் உற்பத்தியைப் பெருக்கச் சீரிய முயற்சி செய்திருக்க வேண்டும்; இரண்டாவதாக, விலைகளைக் கண்ட்ரோல் செய்து, நாடெங்கும் ரேஷன் முறை அமுல் செய்திருக்க வேண்டும்; இறுதியாக, நிலக்கிழார்களும் வியாபாரிகளும் பதுக்குவதையும் கறுப்புச் சந்தையில் விற்பதையும் திறம்படத் தடுத்திருக்க வேண்டும். இவ்வாறு செய்வதற்குப் பதிலாக, ஏகாதிபத்திய அரசு பொதுமக்களை சுரண்டிப் போருக்குப் பணவுதவி செய்வதிலேயே கவனம் செலுத்தியதால், பணவீக்கத்தையும், உயர்ந்த விலைகளையும் நம்பி, மக்களுக்கு நியாயமான முறையில் உணவுப் பகிர்வு செய்வதற்கு ஏற்பாடு செய்யாமல், தன் ராணுவத்தின் உணவுத் தேவைகளுக்குப் பதுக்குவோரையும் கறுப்புச் சந்தைக் காரர்களையும் பயன்படுத்திக் கொள்ளப்பட்டது. அதன் விளைவாக, 1943 இல் உணவுத் தானியங்களின் மொத்தப் பற்றுக் குறை, இந்தியாவின் தேவைகளில் சிறு பகுதியேயான 1,400,000 டன்களாக இருந்தும் நாட்டின் பெரும் பகுதிகள் பஞ்சத்தில் ஆழ்ந்து, பெருவாரியான சாவுகள் நிகழ்ந்தன.

வங்காளத்தில் மட்டும், பஞ்சம் காரணமாக 35 லட்சம் மக்கள் மாண்டதாகப் பேராசிரியர் கே. பி. சட்டோபாத்யாயா செய்த ஓர் ஆய்வில் மதிப்பிடுகிறார். அதிகார பூர்வமான பஞ்ச விசாரணைக் குழுவும் சாவுகளின் எண்ணிக்கை 15 லட்சம் என மதிப்பிடுகிறது.

பஞ்சத்தை அடுத்துத் தொத்து நோய்கள் வந்தன. 1944 செப்டம்பருக்குள் வங்காளத்தில் 1,200,000 பேர் பல நோய்களால் இறந்தனர். (பவானிசென், ''பாழ்படும் வங்காளக் கிராமங்கள்,'' பக். 18.)

பஞ்சம் மனிதன் இயற்றிய பஞ்சம். வங்காளத்தில் ஆறு வார காலப் பற்றுக்குறைதான்; இறக்குமதி செய்து அதை நிரவி, நியாயமாகப் பகிர்ந்திருக்கலாம். ஆனால் வங்காள மக்களில்

மூன்றில் ஒரு பகுதியினர் பஞ்சத்தால் பாதிக்கப்பட்டனர். கையிருப்புப் பொருள்களை எல்லாம் பெரிய ஜமீன்தார்களும் வியாபாரிகளும் பதுக்கியிருந்தனர்: அவற்றை வெளிப்படுத்துவதற்கு முயலாமல் ஊழல்மிக்க அரசு ஊழியர்கள் அவர்களுக்குத் துணை நின்று விலைகள் பெருக உதவி, லட்சக் கணக்கான மக்களின் உயிரோடு விளையாடிவிட்டனர். கல்கத்தாவில் 1942 ஜனவரியில் அரிசி விலை மணு ரூ. 6, நவம்பரில் ரூ. 11 ஆக ஏறி, 1943 பிப்ரவரி-ஏப்ரலில் ரூ. 24 ஆகி, மேயில் ரூ. 30, ஜூலையில் ரூ. 35, ஆகஸ்டில் ரூ. 38, 1943 அக்டோபர் ரூ. 40 ஆயிற்று. சில நகர்ப்புற மாவட்டங்களில் அரிசி ஒரு மணு ரூ. 50 முதல் ரூ. 100 வரைகூட விற்றது. பஞ்சகாலம் முழுவதிலும் அரிசி எவ்வளவு வேண்டுமானாலும் கிடைத்தது—ஒரு மணுவுக்கு ரூ. 100 கொடுத்தால்.

இந்தப் பஞ்சகாலத்தில் பெரு வியாபாரிகள் கறுப்புச் சந்தை லாபமாக ரூ. 150 கோடி ஈட்டினர். (மேற்கண்ட புத்தகம், பக். 1.)

முதன் முதலில் அடியுண்டவர்கள், வங்காளத்தில் 5 ஏக்கருக்கும் குறைவான தங்கள் நிலத்தில் தங்களுக்குத் தேவையான உணவுத் தானியங்களை உற்பத்தி செய்ய முடியாதவர்களும், மக்களில் 75 சதவீதத்தாருமான உழவர்களே. 1943 மே மாத அளவில் அவர்கள் கைவசம் அரிசி இருப்பு இல்லை; ''உணவு கையிருப்பு ஜோதேதார்களிடமும் வியாபாரிகளிடமும் அரசு ஏஜன்டுகளிடமும் பட்டறை முதலாளிகளிடமும் இருந்தது.'' (மேற்படி புத்தகம்–பக். 4) பஞ்சம் முதலில் ஏழை உழவனை தாக்கியது; பிறகு நடுத்தர உழவனைப் பற்றியது; உழவன் அதிக ஏழையாக இருந்தால் அவன் விரைவில் தன் சொத்துக்களை விற்று அகதியாக உயிர் துறக்க வேண்டியதுதான். இந்தியப் புள்ளிவிவர நிலையத்தைச் சேர்ந்த பேராசிரியர் பி. சி. மஹலோநபிஸும் மற்றவர்களும் நடத்திய ஓர் ஆய்வின்படி:

> ''உண்மையில், ஒரு குடும்பத்துக்குச் சொந்தமான நெல் பயிர் நிலம் பஞ்சத்துக்கு முன் எவ்வளவு சிறு பகுதிகளாய்ப் பிரிக்கப்பட்டிருந்தது என்று வகைப்படுத்தும்போது, அவை பஞ்ச நிலைமை பாதித்த அளவு பெரும்பாலும் இருந்தன.''
>
> (''1943-வங்காளப் பஞ்சத்துக்குப்பின் நடந்த ஒரு மாதிரி ஆய்வு;'' பக். iii, சாங்க்யா, 7ஆம் தொகுதி, 4 ஆம் பாகம், 1946.)

இந்தப் பஞ்சத்தின் விளைவாக உழவர்கள் மேலும் வறுமை வாய்ப்பட்டார்கள்: பணக்காரர்களான நிலப்பிரபுக்களிடமும் வட்டிக் கடைக்காரர்களிடமும் மேலும் நிலம் குவிந்தது.

இந்த ஆய்வின்படி, சுமார் 1,590,000 குடும்பங்கள் (பஞ்சத்துக்கு முன் நெற் பயிர் நிலம் சொந்தத்தில் வைத்திருந்த குடும்பங்களின் எண்ணிக்கையில் சுமார் கால் பகுதி) நிலம் பூராவையுமோ, அல்லது, ஒரு பகுதியையோ விற்று அல்லது அடமானம் வைத்து பஞ்ச வருடமான ஏப்ரல் 1943 முதல் ஏப்ரல் 1944 வரை சமாளிக்க முயன்றன. இவற்றில் 260,000 குடும்பங்கள் தம் நிலத்தை முற்றிலும் இழந்து நிலமற்ற தொழிலாளர்கள் தரத்துக்கு இழிந்துவிட்டன; 660,000 குடும்பங்கள் நிலத்தில் ஒரு பகுதியை விற்றன; 670,000 குடும்பங்கள் நெற் பயிர் நிலத்தை அடமானத்தில் வைத்திருந்தன.

இவ்வாறு நிலம் இழந்தவர்களில் ஒரு சதவீதத்தினர்கூட அதை மீட்கவில்லை; பறியுண்ட நிலத்தைத் திருப்பித்தரும் சட்டமும் அவர்களுக்கு உதவி புரியவில்லை. ("பாழ்பட்ட வங்காளக் கிராமங்கள்"—பக். 16.)

பஞ்சக் காலத்தில் விற்பனையான 710,000 ஏக்கர் நெற் பயிர் நிலத்தில் 20,000 ஏக்கர்கள் மட்டுமே கிராமங்களில் திரும்ப வாங்கப்பட்டுள்ளன. சுமார் 420,000 ஏக்கர் நெற் பயிர் நிலம் இவ்வாறு வெளியார் கைக்குப் போயின; அவர்கள் பயிர்த் தொழில் செய்யாத, நகரவாசிகளாக இருக்கலாம். ("மாதிரி ஆய்வு," பக் iv).

இப்போது நிலத்தோடு மட்டும் விற்பனை நிற்கவில்லை. மக்களின் வாழ்க்கையே சிதைவுற்றது. பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளையும் சிசுக்களையும் தெரு ஓரங்களில் எறிந்தார்கள்—யாராவது கண்டெடுத்து வளர்ப்பார்கள் என்ற நம்பிக்கையோடு. கணவர்கள் மனைவிகளைக் கைவிட்டார்கள். குடும்பமே நிகழ்ச்சிகளின் போக்குக்கு இரையாகியது. மாதர்கள் தங்கள் உடலை விற்று பொது மகளிர் விடுதிகளில் சேர்ந்தனர். கல்கத்தாவுக்கு வந்த 125,000 அகதிகளில் சுமார் 30,000 இளம் பெண்கள் உடலில் உயிரை நிறுத்துவதற்காக வேசையர் விடுதிகளில் சேர்ந்ததாய் மதிப்பிடப்படுகிறது.

லட்சக் கணக்கானோர் அகதிகள் ஆனார்கள். "மாதிரி ஆய்வின்படி" 1944, மே மாதத்தில் வங்காளத்தில் இருந்த அகதிகளின் எண் 1,080,000; அவர்களில் 480,000 பேர் போர், பஞ்சம் காரணமாக அகதிகள் ஆனவர்கள் என்பது வெளிப்படை–(மேற் கண்ட ஆய்வு, பக். v). அகதிகளாகாமல் வறுமைவாய்ப்பட்டோர் தொகை அறுபது லட்சம் ("பாழ்பட்ட வங்காளக் கிராமங்கள்," பக். 16).

கிராமப் பொருளாதார முறையே உருக்குலைந்தது. கிராமத்தைச் சேர்ந்த செம்படவர், சக்கிலியர், கன்னார், குயவர், நெச

வாளர், போன்ற கைத் தொழிலாளர்கள் மிகவும் துன்பப்பட்டார்கள். உண்மையில் முதலில் அடிப்பட்டவர்கள் அவர்களே; அடிபட்டு வெறும் 'பாப்பர்கள்' ஆய்விட்டார்கள்.

இவ்வளவு அல்லல்களை மீறிப் பிழைத்துக் கிடக்கிறவர்கள் அகதிகளாகும் அபாயத்தை நோக்கி விரைகின்றனர். கிராமக் கைத்தொழிலாளர்கள் வாழ்க்கையைச் சீராக்கிக் கொள்ள முடியாமல் கஷ்டப்படுகின்றனர். அவர்களுக்குத் தேவையான பொருள்கள் எல்லாம்—நூல், இரும்பு, வலை, தோல், முதலியன கறுப்புச் சந்தையில் பதுங்கி விட்டன. நிலத்தை உழுவதற்குக் குடியானவர்களிடம் மாடுகள் இல்லை; 300,000 அல்லது 8·5 சதவீத வங்காளக் கிராமக் குடும்பங்கள் பஞ்சத்துக்கு முன்பு வைத்திருந்த மாடுகளை இழந்து விட்டன. இந்த ஓராண்டுக்குள் மாடுகளில் 20 சதவீதம் அழிந்தன அல்லது பயிர்த் தொழில் செய்யாதோர் கைவசமாயின.

கடன்பட்ட குடும்பங்களின் அளவு மிக உயர்ந்து விட்டது. பஞ்சத்தால் மிகவும் பாதிக்கப்பட்ட இடங்களில் இன்னும் வசிக்கும் குடும்பங்களின் கடன் பெருக்கத்தை கிஸான் ஸமிதி தொண்டர்கள் திரட்டிய பின்வரும் புள்ளி விவரம் காட்டுகிறது:

| | கடன்பட்டுள்ள குடும்பங்களின் சதவீதம் | |
|---|---|---|
| | 1943 | 1944 |
| கிஸான் குடும்பங்கள் | 43 | 66 |
| பலவித கைத் தொழிலாளர் | 27 | 56 |
| பல வகை | 17 | 46 |

(மேற்படி ஆய்வு, பக். 12.)

உழவர்களில் பெரும்பாலோரிடம் இன்று நிலம் இல்லை, விதை இல்லை, மாடு இல்லை, பணம் இல்லை, தேவையான பொருள்களை வாங்கத் தோதில்லை, அடிக்கடி நோய்வாய்ப்பட்டுப் பலர் தெம்பும் இழந்துவிட்டார்கள். உண்மையில், "இன்று சொத்துள்ள உழவர் தன் நிலத்துக்காகவும், மாடுகளுக்காகவும், விரட்டிகளுக்காகவும், ஏன், விதைக்காகவும் கூட கிராமத்தில் பணக்காரர்களான உழவர்களையோ, ஜோதேதாரையோ எதிர்பார்க்க வேண்டிய நிலைமை தோன்றியுள்ளது. நிலத்துக்காகவும், மாடுகளுக்காகவும், விதைக்காகவும் அவன் தன்னை எந்த நிபந்தனையிலும் விற்றுக்கொள்ள வேண்டியுள்ளது; இல்லாவிட்டால் அவன் நிலமற்ற தொழிலாளியாக மாற நேரும்" (மேற்படி ஆய்வு, பக். 10).

நாடு முழுவதையும் பீடிக்கும் நெருக்கடியின் முதிர்ந்த வடிவம்தான் வங்காள நிலை. உழவர்கள் போர்காலத்து விலை

வுயர்வால் யாதொரு நன்மையும் அடையவில்லை. நடுத்தர உழவர்களில் ஒரு சிறு பகுதியினரே தங்கள் கடனில் ஒரு பகுதியைத் தீர்க்க முடிந்தது—ஏனைய பெரும்பாலோர் கடனில் மூழ்கிநிலங்களை இழந்தனர். போர்க்காலத்தில் ஏற்பட்ட கிராமக்கடன் பற்றி அண்மையில் சென்னை அரசு, டாக்டர் பி. வி. நாயுடுவின் கீழ் ஒரு விசாரணை நடத்தியது. விசாரணை தரும் பல புள்ளி விவரங்கள் உண்மையான நிலவரத்தைக் காட்டவில்லை; அவை ஒருதலைப் பட்சமானவை; மாதிரி காட்டுகையில் நிலக்கிழார்களின் தரப்புக்கு அதிக மதிப்பு தரப்படுகிறது. ஆனால், இந்த விசாரணையால் கூட போர்காரணமாக குறுநிலவுடைமையாளர்கள், குத்தகைக்காரர்கள், விவசாயத் தொழிலாளர்கள் ஆகியோரின் கடன் பெருமளவில் பெருகியுள்ளது என்ற உண்மையான போக்கை மறைக்க முடியவில்லை.

இந்தியாவைக் கொடிய பற்றுக்குறையிலும் பசிப்பிணியிலும் பஞ்சத்திலும் ஆழ்த்தும் விதத்தில் யுத்த காலத்தில் உழவர்கள் மிக வேகமாக நிலத்தைக் கைவிட்டு வெளியேறும் படலம் தொடர்ந்தது. 1946, பெரும் பஞ்சம் கழிந்த மூன்று ஆண்டுக் காலத்திற்குள் மறுபடியும் இந்தியாவைப் பற்றுக்குறை எதிர்நோக்கியுள்ளது; இந்தக் குறை 60 லட்சம் டன்கள் அளவு இருக்கலாம் என்று மதிப்பிடப்படுகிறது; மக்களில் நாலில் ஒரு பகுதியினர் அழிந்துவிடக் கூடிய ஆபத்து எதிர்பட்டிருக்கிறது.

## 2. விவசாயப் புரட்சியின் தேவை

எனவே, உழவர்கள் உயிர் வாழ்வதற்குத் தேவையான பிரச்சினைகள் அவர்களை எதிர் நோக்கியுள்ளன; உடனடியாக அவற்றுக்கு அவர்கள் தீர்வு காண வேண்டும்.

இப்போதுள்ள ஆட்சி முறையின் கீழ், இப்போதுள்ள நில முறையின் கீழ், அதை அடித்தளமாய்க் கொண்ட ஏகாதிபத்தியத்தின் கீழ் ஒரு தீர்வு காண முடியுமா?

நிலக் குத்தகை அடிப்படை, இப்போதுள்ள நிலப் பகிர்வு, விவசாய உற்பத்தியில் கையாளப்படும் தொழில் நுட்பங்களில் முன்னேற்றம் ஆகிய பல விஷயங்களையும் தழுவிய மாறுதல்கள் செய்யப்பட வேண்டும் என்பது வெளிப்படை; அதை அனைவரும் ஏற்கின்றனர்.

வங்காள மாகாண கிஸான் சபை வெள்ளக் கமிஷனிடம் சமர்ப்பித்த யாதாஸ்தில் குறிப்பிட்டார்கள்:

> "நிலையான நிலமுறை ஜமீன்தார்களுக்குத் தடையற்ற உரிமை வழங்கியுள்ளது; அதை அடுத்து, இந்த முறை

ஏகபோகவுரிமைக்கும் அதன் அமுக்குக் கொடுமைக்கும் கட்டுக் கோப்பான அமைப்பாக மாறியுள்ளது...எத்தகைய சீர் திருத்தத்தையும் செய்யமுடியாத இரும்புக் கவசமாக இந்த நிலையான நிலமுறை ஆகியுள்ளது என எங்கள் அநுபவம் சொல்கிறது. சட்ட புத்தகத்தில் ஒரு சீர்திருத்தச் சட்டம் இருக்கலாம்; ஆனால், நிலமுள்ள வர்க்கத்தாருக்குள்ள சக்தி யால் அது பயனற்றதாகிவிடும்...இந்த நிலமுறை தான் நிலக்கிழார், வட்டிக்கடைக்காரர், போலீஸ் போன்ற நடுவர் களின் துணையோடு தங்களை நிலத்திலிருந்து வெளியேற்ற எப்போதும் பாடுபடுகிறது என்று நசுக்கப்பட்ட உழவர்கள் உள்ளத்தில் கருதுகிறார்கள். இந்தச் சூழ்நிலையில் நிலையான நிலமுறையை ஒழிக்குமாறு எழுந்துள்ள கோரிக்கை, குழப்ப மான சிந்தனையின் விளைவு அல்ல; இப்போதுள்ள நிலக் குத்தகை முறையைச் செப்பனிட ஒருகாலும் இயலாது என்று மிகத் தெளிவாய்ப் புரிந்து கொண்டதால் எழுந்த கோரிக்கை ஆகும்.''

(யாதாஸ்து, பக். 4-5.)

நிலப்பிரபுத்துவமுறை ஒழிய வேண்டும். இந்தியாவில் நிலப் பிரபுத்துவமுறை மேற்கு நாடுகளிலிருந்து அந்நிய ஆட்சியாளரால் இறக்குமதி செய்யப்பட்ட செயற்கையான முறை என்பதையும், அதற்கு மக்களிடையில் வேரோட்டம் இல்லை என்பதையும் கண்டோம். இதன் விளைவாக, வேறெந்த நாட்டையும் விட இந்த நாட்டில் நிலப்பிரபுத்துவமுறைக்கு யாதொரு பயனு மில்லை, நிலத்தைக் காப்பதாகவோ அல்லது அபிவிருத்தி செய்வ தாகவோ அது இங்கே பாசாங்கு செய்யவில்லை. ஆனால், நேர் விரோதமாக, குறுகிய நோக்குடைய அதன் மிகையான கோரிக் கைகளால் நிலத்தைச் சிதைவடையச் செய்யப் பயன்படுகிறது. அது உழவர்களின் ரத்தம் உறிஞ்சும் புல்லுருவி முறை; அது பெரும் பாலும் பயிர்த் தொழில் செய்யாமல் வெளியூரில் வசிக்கும் நிலக் கிழார்களாகப் பெருநிலப் பரப்புகள் விஷயத்திலும், குறுநிலவுட மையாளர்கள் விஷயத்தில் பல புல்லுருவி நடுவர்கள் உருவத்தில் கூடுதல் சுமையாகவும் மாறுகிறது. உழவர்களின் விளைச்சல் ஏற்கனவே கொஞ்சம்; இந்தப் புல்லுருவிகளுக்கு இங்கு இடமில்லை. விளைவது முதலில் உயிர் பிழைக்கவும், இரண்டாவதாக சமூகத் தேவைகளுக்கும், மூன்றாவதாக விவசாய அபிவிருத்திக்கும் தேவை.

வட்டிக்கடைக்காரருக்கும் மலையொத்த கடன் சுமைக்கும் அதுவே பொருந்தும். தீவிரமாய் அவற்றைக் குறைக்கவோ, அழிக்கவோ வேண்டும். ஆனால் அது மட்டும் போதாது அல்லது

தற்காலிக ஏற்பாடாக முடியும். கடன் படுவதற்கான வழிகளை அடைத்து, வட்டிக்கடைக்காரனுக்கு வேலையில்லாதபடி செய்ய வேண்டும். உழவரிடம் மிகுதியாகப் பணம் கோருவதை முதலில் குறைத்து, பொருளாதார முறையில் கட்டுபடியாகும் விதத்தில் நிலவுடைமைகளை ஒழுங்குபடுத்தி, இரண்டாவதாக எளிய வட்டியில் கடனுதவி தரும் கூட்டு நிறுவனங்களை அமைக்க வேண்டும்: காலப் போக்கில் இந்த நிறுவனங்களுக்கும் வேலையற்று கடன் வாங்கத் தேவையில்லாத நிலை ஏற்படும்.

தற்காலிகமாகவும், பகுதி பகுதியாகவும் குத்தகைத் தொகையைத் தள்ளுபடி செய்வது அல்லது குறைப்பது, வட்டி வீதங்களைக் குறைப்பது போன்ற காரியங்களை உடனடியாகச் செய்ய முடியும்; மாகாணங்களில் காங்கிரஸ் அமைச்சரவைகள் பலவிதங்களில் இவ்வகை முயற்சிகளை மேற்கொண்டன. எனினும், முழு நில முறையையே மாற்றி அமைக்க அடிப்படையான அணுகுமுறையை மேற்கொள்ளவேண்டும். சுமார் முப்பது லட்சம் பேர் அடங்கிய சிறு நிலக்கிழார்கள் அல்லது துணை நிலக்கிழார்கள் வகுப்பு ஒன்று, இவர்கள் இயல்பாகவே ஏழைகள், குறைந்த வருவாயுள்ள நகரவாசிகளான இவர்கள் ''கிழப்பருவ ஓய்வு ஊதியமாக'' நிலவுடைமைகளை வைத்திருப்பவர்கள் உள்ள இந்த வகுப்பு இருப்பதால் நிலப்பிரபுத்துவத்தின் பிரச்னை முழுவதும் மேலும் சிக்கல் அடைகிறது. எனவே, குத்தகைத் தொகையைக் குறைப்பதற்காகத் தற்காலிகச் சட்டம் இயற்றும்போது பெரிய நிலக்கிழார்களை மட்டும் அது பாதிக்கும் வணண்ம் கவனமாக இருக்க வேண்டும். தரவாரியாக வருமானவரி விதிப்பதால் (இப்போது வேளாண்மை வருமானவரி கிடையாது; ஆகையால் தொழிலதிபர்கள் பாதிக்கப்படுவதுபோல் நிலக்கிழார்கள் பாதிக்கப்படுவதில்லை.) பெரும் விவசாய வருமானங்களுக்கு மிகுதியான வரி வீதம் விதித்து, குறுநிலவுடைமையாளர்களை வரியிலிருந்து விலக்கிவிடலாம் என்று ஒரு யோசனை கூறப்படுகிறது. அதனால் அரசின் வருவாய் அதிகரிக்குமாயினும், ஆட்சிப் பொறுப்பு மக்கள் அரசின் வசமோ, காங்கிரஸ் அமைச்சரவை வசமோ, இருப்பின் வருவாயின் அளவுக்கு விவசாய அபிவிருத்திக்கென அந்த அரசு நிதி ஒதுக்கும் என்றாலும், வரிவிதிப்பின் வாயிலாய்க் கிடைக்கும் நிதியைக் கொண்டு நிலவரியைக் குறைப்பதுடன் அதற்கு அநுசரணையாகவும் சமமாகவும் குத்தகைத் தொகையைக் குறைத்தாலன்றி உழவர்களின் சுமையை உடனடியாகக் குறைக்கும் அவசர வேலைக்குப் பயனிராது. ஏற்கனவே நிலமிழந்த குறுநிலவுடைமையாளர்களுக்கும், வேளாண்மையைப் பெருங்கூட்டமாக மக்கள் சார்ந்திருப்பதால் மேலும் நிச்சயம் நிலமிழக்கும் சாத்தியமுள்ள லட்சக் கணக்கானோருக்கும் வாழ்வதற்கு

வேறு வழிகாட்டும் முறையில் திட்டமிடப்படும் புதிய விரிவான பொருளாதார அமைப்பின் ஒரு பகுதியாகவே நிலப்பிரபுத்துவத் தீமையைக் கட்டுப்பாடாய்க் கையாள முடியும். எனவே, வேளாண்மையோடு தொழிலும் ஒருங்கே வளர்ச்சி பெற முயல வேண்டும்.

அடிப்படைப் பிரச்னை நிலப்பிரபுத்துவம் பற்றியது மட்டும் அல்ல; தற்போதுள்ள நில முறை, நிலப் பகிர்வு முழுவதையும் மாற்றி அமைக்க வேண்டும் என்பதே பிரச்னை. பொருளாதார ரீதியில் கட்டுப்படி ஆகாத நிலவுடைமைத் தீமையையும், மேலும் நிலம் துண்டு படும் தீமையையும் எதிர்ப்பதற்கு நிலவுடைமைகளைப் புதிதாய்ப் பகிர்வு செய்ய வேண்டிய பணி நீண்ட காலத்துக்கு முன்பே செய்யப்பட்டிருக்க வேண்டும். உதாரணமாக, பம்பாய் மாகாணத்தில் பண்ணைகளில் 48 சதவீதம் ஐந்து ஏக்கருக்கும் குறைவானவை. ஆயினும், முழு நிலப் பரப்பில் மொத்தம் 2.4 சதவீதத்துக்கு மேல் அவை இல்லை (வேளாண்மைக் குழுவின் சாட்சியம், தொகுதி II, பாகம் I, பக். 76) என்பதை ஞாபகத்தில் கொண்டால் புதிய நிலப் பகிர்வு எவ்வளவு அவசரமானது என்பதைக் காணலாம். ஆயினும், தனிநபர் உரிமை அறுதியுள்ள நலன்கள் என்ற தடையை உடைத்துக் கொண்டு பெரும்பாலோர் சார்பில் ஓர் அந்நிய நாட்டு ஆட்சியின் நிர்வாகம் மனம் கொண்டாலும் செயல்பட முடியாது; அதை உழவர்களே தங்கள் முயற்சியாலும் செயலாலும் சாத்தியமாக்க முடியும்; அதற்கு, அவர்களுக்குப் பிரதிநிதியாக அவர்கள் நலனுக்காகப் போராடும் ஓர் அரசின் தலைமை தேவை.

ஆயினும், விவசாயத் தொழில் நுட்பத்தை நவீன அளவுக்கு உயர்த்தி, விவசாய யந்திரங்களைப் புகுத்தி, பயிரிடப்படாமல் கிடக்கும் பயிரிடத்தக்க பெரும் நிலப் பரப்புகளைப் பயன்படுத்தி வேளாண்மையில் முன்னேற்றம் காணும் முழு பிரச்னையைக் கையாளுவதற்குப் புதிய நிலப் பகிர்வு தொடக்கப் பணியாக மட்டும் இருக்கும். இது சம்பந்தமாக மத்திய பாங்கு விசாரணைக் குழு மேற்கோள் காட்டிய (அடக்கம் XIII, பக். 700). மதிப்பீடுகளை நினைபடுத்திக்கொண்டால் பயனுடையதாயிருக்கும்; ஓர் ஏக்கரிலாகும் விளைச்சலை இங்கிலாந்து விளைச்சல் அளவுக்கு இங்கே உயர்த்தினால் நாட்டின் செல்வம் உடனடியாக ஆண்டுக்கு £ 100 கோடி பெருகியதாகப் பொருளாகும்; டென்மார்க் கோதுமை விளைச்சல், அளவுக்கு உயர்த்தினால், செல்வம் ஆண்டுக்கு £ 150 கோடி பெருகியதாகப் பொருளாகும். (அல்லது, 1933-34இல் விவசாயப் பயிர்களின் உற்பத்தியின் மொத்த மதிப்புக்கு ஐந்து மடங்கு; இந்திய மக்களுக்குக் கிடைக்கக்கூடிய நடைமுறை

வருமானத்தை இரட்டிப்பதற்கு ஏறக்குறைய சமம்). ஆயினும் இத்தகைய முன்னேற்றத்துக்கு சிறு அளவு தொழில்நுட்ப முறை அரசின் அலட்சியம் என்ற மரபுகளை உறுதியாக உடைத்துவிட்டு, இந்தியச் சூழ்நிலைகளுக்கு ஏற்பப் பெருவாரி கூட்டுப் பண்ணை முறையை நோக்கிச் செல்ல வேண்டும்.

பெருவாரி யந்திரத்தைப் பயன்படுத்த பெருவாரி நிலப் பண்ணை தேவை என்பதைக் கொள்கையளவில் ஏகாதிபத்தியத்தின் நிபுணர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர்:

> ''முக்கியமான யந்திரங்களில் மிகப் பெரியதான நீராவி உழுபடையையும் உருளு கலப்பை போன்றவற்றைக் கவனித்தால் இத்தகைய பெருவாரி யந்திரத்தின் நிலைமை தெளிவாகும். அவற்றைப் பெரும் பண்ணைகளில்தான் பயன்படுத்த முடியும். தேவையான மூலதனம் கிடைக்குமிடத்தில்தான் பயன்படுத்த முடியும். அவற்றின் வேலை எப்போதும் சிறந்தது; மேற் குறிப்பிட்ட நிலைமைகளுக்குக் கட்டுப்பட்டே அவற்றைப் பயன்படுத்த முடியும். அந்த யந்திரங்களின் தேவையை அதிகமாக்க வேண்டுமானால், அவற்றைக் கூட்டுறவு முறையில் பயன்படுத்துவது ஒன்றே நம்பகமான வழி; இப்போது அது நடக்காத காரியம்.''
>
> (புது தில்லி, அரசு வேளாண்மை ஆய்வு நிலையத்தைச் சேர்ந்த வின்ஸேயர் எழுதிய, ''வேளாண்மையில் யந்திரத்தைப் பயன்படுத்தல்'' என்ற கட்டுரை, டைம்ஸ் ஏட்டின் தொழில், பொறியியல் அநுபந்தம், ஏப்ரல், 1939.)

ஏகாதிபத்திய நிபுணரின் நோக்கில் அது 'நடக்காத காரியம்.' ஆனால், இந்தியாவின் அழிவுண்ட உழவர் சமுதாயமும் நிலமற்ற விவசாயத் தொழிலாளர்களும் எழுச்சி பெற்ற சமூக சக்திகள், எதிர்காலத்தில் இந்த நிபுணர்கள் கருதுவதுபோல் இத்தகு முன்னேற்றம் 'நடக்காத காரியம்' அல்ல என்பதைக் காட்டும். இங்கு, இருபதே ஆண்டுகளில் சோவியத் யூனியன், வறுமைவாய்ப்பட்ட ஜார் காலத்து உழவர்களை, நிலப்பிரபுத்துவ முறையை ஒழித்து, புதிய நிலப்பகிர்வு என்ற முதல் நிலையைத்தாண்டி, இப்போதுள்ள வளமான கூட்டுப் பண்ணைகளுக்கு அழைத்துச் சென்ற உதாரணம் இந்தியாவுக்குச் சிறப்பான முக்கியத்துவம் வாய்ந்தது.

## 3. அரசின் சீர்திருத்தக் கொள்கைகள் தோல்வி

ஏகாதிபத்தியச் சூழ்நிலையில் இம்மாதிரி முன்னேற்றம் அல்லது விவசாயப் பிரச்னையை அடிப்படையிலிருந்து சமாளிக்கும் முயற்சி சாத்தியமா? கேள்வி கேட்பதே அதற்குப் பதில் கூறுவ

தாகும். இம்மாதிரி ஊககமே விசித்திரமானது என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். ஏகாதிபத்திய ஆட்சியின் நிர்வாகத்தில் இருப்போர் இம்மாதிரி முன்னேற்றத்தை விரும்புவாரா என்ற கேள்வி ஒரு புற மிருக்க, நிலப்பிரபுத்துவ முறையையும் அதைச் சேர்ந்த பொய்யான நிலப்பிரபுத்துவ ஏற்பாடுகளையும் காப்பதில் தான் மக்களுக்கு எதிராக நடத்தும் ஆட்சியில் தவிர்க்க முடியாத சமூக பலம் கிட்டுவதால் அத்தோடு ஏகாதிபத்திய நலன்கள் பின்னிப் பிணைந்துள்ளன என்பதோடு பின்தங்கிய விவசாயக் காலனி நாடாக இந்தியா இருந்தால்தான் அதை நிதி முதலீட்டுச் சுரண்டலுக்கு ஆளாக்க முடியும் என்ற நிலையும் சேர்ந்து விவசாயப் பிரச்னையைத் தீர்க்க எவ்வகை முயற்சியும் செய்யா வண்ணம் ஏகாதிபத்தியத்தைத் தடுக்கிறது.

மிக மிக அவசரமான விவசாயப் பிரச்சினையைச் சமாளிக்க ஏகாதிபத்தியத்துக்கு வீறு இல்லை என்பதை ஏகாதிபத்தியவாதி களே ஏற்கிறார்கள். 170 ஆண்டு ஆட்சிக்குப் பிறகு பிரிட்டிஷ் அரசு முதன் முதலில் 1927 இல் நியமித்த விசாரணைக் குழுவான வேளாண்மைக்கான அரசுக்குழு நிலமுறையைத் தொடக் கூடாது என்று தடுக்கப்பட்டதிலிருந்தே அது நிரூபணம் ஆகிறது. எனவே வேறு வழியின்றி, வரையறுக்கப்பட்ட சிறு சீர்திருத்தங்கள் பற்றின அதன் சிபாரிசுகள் நடைமுறையில் பயனற்றவையாய், அறிக்கையும் சாட்சியமுமாய்ப் பதினேழு தொகுதிகளில் கல்லறை கட்டப்பட்டு, வலுத்துவரும் விவசாய நெருக்கடியைத் தடை செய்யப் பயன்படக் கூடிய வேளாண்மை நிலைகள் பற்றின சாட்சியச் சுரங்கமாய் அலமாரிகளில் உறங்குகின்றன. நெருக்கடி நிலையோ அறிக்கைக்குப் பின்னால் மிகக் கடுமை ஆகி விட்டது.

விவசாயப் பிரச்சினை பொறுத்தமட்டில் ஏகாதிபத்தியத்தின் கையாலாகாத்தனத்தை திவாலான தன்மை பற்றின நடைமுறை பதிவுருக்கள் நிரூபிக்கின்றன. மிக அண்மைக் காலத்தில் மிகவும் வரையறை செய்யப்பெற்ற எல்லைக்குள் வேளாண்மை ஆராய்ச்சிக் கூடங்களும் நிலையங்களும் ஏற்படுத்தக் கருமித்தனமான நிதியுதவி அளிக்கப்பட்டுள்ளது; (சிகாகோ கோடிசுவரர் ஒருவரின் நன்கொடையால் தான் அரசாங்க வேளாண்மை ஆராய்ச்சி நிலையத்தைத் தொடங்க சாத்தியமாயிற்று; மைய, மாகாண அரசுகள் சேர்ந்து 1936—37 இல் வேளாண்மைத் துறைகளுக் காகச் செலவிட்ட மொத்தத் தொகை £ 225 லட்சம் அல்லது மொத்த பட்ஜெட்டில் 1·4 சதவீதம்.) தொழில் நுட்ப முன்னேற்றம் காண்பதற்கு வழி வகைகள் இல்லாதவரை, அரைப் பட்டினியாகவும் அடிமைகளாகவும் அறியாமையிலும் உழவர்களை அமுக்கிப் பின்தேக்கி வைத்துள்ள சுரண்டல் முறை ஒழிக்கப் படாதவரை அதனால் அவர்களுக்கு யாதொரு நன்மையும் இல்லை.

கடன் சுமை வளருவதைத் தடுத்து விவசாயிகளுக்கு நன்மை புரியும் நோக்குடன் இயற்றப்பட்ட பல்வேறு சட்டங்கள் தோல்வி கண்டதைப் பற்றி வேளாண்மைக்குழு அறிக்கையில் (பக் 436-7.) ஏற்கனவே பதிவாகியுள்ளது. அதுபோலவே குத்தகைதாரர் களின் பாதுகாப்புக்கென நிறைவேற்றப்பட்ட பல குத்தகைச் சட்டங்களால் நிலப்பிரபுத்துவம் விரைவாகப் பரவுவதையோ, உட்குத்தகை விடுவதையோ, குத்தகைப் பணத்தை ஏற்று வதையோ, அல்லது ''பாதுகாப்பு பெற்ற'' குத்தகைதாரர்களே ''பாதுகாப்பு பெருத'' குத்தகைதாரர்களைச் சுரண்டி குட்டி நிலப் பிரபுக்களாவதையோ தடைசெய்ய முடியவில்லை.

முன்பே குறிப்பிட்டதுபோல் (பக். 234-5 பார்க்க.) பழைய பாசன ஏற்பாடுகள் அழிவுபடப் புறக்கணிக்கப்பட்டுக் கைவிடப் பட்டபின் பத்தொன்பதாம் நூற்றுண்டின் இடைப் பகுதி யிலிருந்து மேற்கொள்ளப்பட்ட பாசன ஏற்பாடுகள் விவசாயத்தில் பெரிய சாதனைகளாய்க் கொள்ளப் படுகின்றன. ஆனால், பிரிட்டிஷ் இந்தியாவில் விதை விதைக்கப்படும் மொத்த நிலத்தில் 23 சத வீதம் தான் பாசன வசதிகள் செய்யப்பட்டுள்ளது) 1939 இல் 24•5 கோடி ஏக்கரில் 5•5 கோடி ஏக்கர் மட்டும்.) அரசின் பாசன வசதிகள் 10 சதவீதத்துக்கு மட்டும் கிட்டுகின்றன (1939-40 இல் 2•5 கோடி ஏக்கர் மட்டும்). இதைத் தவிர, இந்திய சமஸ் தானங்களில் 1•0½ கோடி ஏக்கர் பாசன வசதி பெற்றதையும் சேர்த்தால் பாசன வசதி பெற்ற மொத்த நிலப்பரப்பு 6•55 கோடி ஏக்கர்கள். பாசன ஏற்பாடுகளுக்கான செலவுகள் (பெரும் பாலானவற்றுக்குத் தனியாக வசூலிக்கப் பட்டன.) ஏழை உழவர்களுக்கு எட்டாதவாறும், அவர்களுடைய சுமையை மிகுதி யாக்குவதாயும் இருக்கின்றன; அரசின் பாசன ஏற்பாடுகள் 1918-21 இல் 7-8 சதவீத நிகர ஆதாயமும், 1935-36 இல் 5•7 சதவீத ஆதாயமும் அரசுக்கு ஈந்தன.

பெரும்பாலும் கூட்டுறவு நாணயச் சங்கங்களாகவே உள்ள வேளாண்மைக் கூட்டுறவு இயக்கம் அரசின் துறை ஒன்றினுல் நிறுவப்பெற்றுப் பராமரிக்கப்பட்டு வேளாண்மையிலுள்ள எல்லா தீமைகளுக்கும் சர்வரோக நிவாரணியாக அரசினுல் கருதப் படுகிறது. கூட்டுறவு இயக்கத்தின்பால் அரசு சிறப்பான சிரத்தை எடுத்துக்கொள்வதன் நோக்கத்தையும் கருத்தையும் குத்தகை, நிலவரிப் பிரச்னைகள் பேரில் தோன்றும் நிலக் கிளர்ச்சியை நசுக்கு வதற்குக் கூட்டுறவு இயக்கம் ஒரு மந்திரக் கவசம் என்று அரசு கருதுவதையும் அண்மையில் வெளியான புத்தகம் ஒன்றில் டார்லிங் மிகத் துல்லியமாக விளக்குகிருர். குத்தகையும் நில வரியும் தரவேண்டாமென்று காங்கிரஸ் நடத்திய கிளர்ச்சி பற்றிக்

குறிப்பிட்ட அவர் பஞ்சாபிலுள்ள ஒரு மாவட்டத்தை "மடத்தனமான பிரசாரம் தொத்திக் கொண்டது," என்றவர், "இந்தக் கிராமங்களில் ஒன்றில் மட்டுமே ஒரு கூட்டுறவுச் சங்கம் இருந்தது குறிப்பிடத் தக்கது," என்கிறார். அவர் மேலும் கூறுகிறார்:

*"இம் மாதிரி கிளர்ச்சிகளுக்கு கூட்டுறவு இயக்கம் நல் மருந்தாகும். சென்ற ஆண்டில் மாகாணங்களில் இருந்த 20,000 சங்கங்கள் கிராமங்கள் மீது உறக்க மருந்து போல் செயல்பட்டு பல நகரங்களை ஆட்டி வைத்த அராஜகச் செயல்கள் கிராமங்களுக்குப் பரவாமல் தடுத்தன."*

*("பஞ்சாப் கிராமத்தில் வளமும் விரயமும்," —எம். எல். டார்லிங், 1934, பக். 83-4.)*

அந்த நம்பிக்கைக்கு மாறாக, துரதிர்ஷ்டவசமாக வேளாண்மைக் கூட்டுறவுக் கடன் சங்கங்கள் ஏழை உழவர்களுக்குப் பயன்படவில்லை; ஏனெனில், சங்கங்களில் உறுப்பினர்களாவதற்குத் தேவையான போதுமான அடிப்படை அவர்களுக்கில்லை, அச் சங்கங்கள் முன்பே வசதியுள்ள, கிளர்ச்சிகளில் கலந்து கொள்ளாமல் தடுக்கப்படத் தேவையற்ற நடுத்தர உழவர்களுக்கே பயன்படுகின்றன.

*"அளவு கோலின் ஒரு முனையில், சங்க உறுப்பினர்களாய்ச் சேர்ந்து வரையறுக்கப்படாத பொறுப்பின் அபாயத்தை ஏற்க விரும்பாத மிக வசதியான மக்கள்; மறு முனையில், உறுப்பினர்களாகச் சேராமல் தடுக்கப்படும் மிக வறிய மக்கள். ஆகையால், கூட்டுறவு இயக்கத்தைச் சார்ந்தோர் நடுத்தர உழவர் இனத்தைச் சேர்ந்தோர் என்று கொள்வது தவறாகாது."*

*(வங்காள பாங்கு விசாரணைக்குழு அறிக்கை, பக். 69.)*

*"மற்றொரு பெரிய கஷ்டம் என்னவெனில், மிக அவசியமாக உதவி வேண்டுகிற உழவர்கள் உள்ள மிக வறிய மாவட்டங்களுக்குக் கடன் சங்கங்களால் பயனில்லை. நிலம் துண்டுபட்டமையாலும், பருவக்காலக் கஷ்டங்கள் முதலிய காரணங்களாலும் தங்கள் நிலத்தின் வருவாயிலிருந்து ஒருகாலும் கடனைத் திருப்பித் தர முடியாதவர்களுக்குக் கடனுதவி செய்வது பயனற்றதை விட மிக மோசம். ஆகவே, மிக வளமுள்ள பகுதிகளில் மட்டுமே முக்கியமாகக் கடன் சங்கங்கள் வெற்றிகரமாய் நடக்கின்றன."*

*(ஆன்ஸ்டே: "இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி;" பக். 202.)*

இப்போதுள்ள சூழ்நிலையில் மிகக் குறுகலான எல்லைக்குள் வேளாண்மைக் கூட்டுறவு இயக்கம் பரவியுள்ளதிலிருந்து இது

வெளிப்படுகிறது. பிரிட்டிஷ் இந்தியாவில், 1939-40 இல் வேளாண்மைக் கூட்டுறவுச் சங்கங்களில் உறுப்பினர்களாயிருந்தோரின் எண்ணிக்கை 4 098,426 அல்லது கிராமப்புற மக்கட்தொகையில் 1·6 சதவீதம். கிராமப்புறக் குடும்பங்களின் அளவு வீதத்தை வேளாண்மைக் குழுவின் அறிக்கை பின்வருமாறு தருகிறது (பக். 447.):

கிராமப்புறக் கிராமங்களின் குடும்பங்களுக்கு வேளாண்மைக் கூட்டுறவுச் சங்க உறுப்பினர்கள் அளவு வீதம்

| | | | சதவீதம் |
|---|---|---|---|
| வங்காளம் | .. | .. | 3·8 |
| பம்பாய் | .. | .. | 8.7 |
| மத்திய மாகாணங்கள் | .. | .. | 2·3 |
| சென்னை | .. | .. | 7·9 |
| பஞ்சாப் | .. | .. | 10·2 |
| ஐக்கிய மாகாணங்கள் | .. | .. | 1·8 |

"பஞ்சாப், பம்பாய், சென்னை நீங்கலாக, பெரிய மாகாணங்களில் இந்த இயக்கம் கிராமப்புற மக்களில் சிறு பகுதியினரையே இதுவரை எட்டியுள்ளது என்பதைக் காணலாம்," என்று குழு அறிக்கை விமரிசிக்கிறது. அளவு வீதங்கள் எந்த நிலையை என்பதைக் காட்டுகின்றன, (வங்காளம், ஐக்கிய மாகாணங்கள் போன்ற மிகக் கடுமையாகப் பாதிக்கப்பட்ட மிக வறிய மாகாணங்களில் தாழ்வான எண் இருப்பதைக் குறிப்பாய்க் கவனிக்க வேண்டும்.) இப்போதுள்ள இயலாமைகளும் சுமைகளும் நீடித்தால் வேளாண்மைக் கூட்டுறவு இயக்கம் உழவர் சமுதாயத்தின் பிரச்னைகளைத் தீர்க்குமென்று எதிர்ப்பார்க்க முடியாது.

இந்திய வேளாண்மையின் பிரச்னையைத் தீர்ப்பதற்கு, நில முறையின் அஸ்திவாரத்திலேயே கைவைக்கும் அடிப்படை மாறுதல் தேவை—இந்திய மக்களின் அவசரமான உயிர் நாடியான விவகாரம் அது—என்பதையும், இம்மாதிரி புத்தமைப்பு செய்ய ஏகாதிபத்தியத்தால் இயலாது என்பதையும். இந்தியப் பொது மக்களாலேயே, அவர்களுக்குப் பொறுப்பான அரசின் கீழேயே அது சாத்தியம் என்பதையும் ஏகாதிபத்திய ஆதரவாளர்களின் எழுத்துக்களே விரிவான முறையில் ஏற்கத் தொடங்கியுள்ளன:

"கிராம வாழ்க்கையைச் சீர்திருத்த வேண்டிய அவசரத் தேவையை அரசியல்வாதிகளும் அதிகாரிகளும் உணர்ந்துள்ளனர்; ஆனுல் அவர்கள் மேற்கொண்ட சிகிச்சை முறைகள் போதுமானதாயில்லை அல்லது புரட்சிகரமான மாறுதல்களைச்

செய்ய வேண்டும்; அதற்கு இந்தியா சுயாட்சி பெறும் வரை கட்டாயம் காத்திருக்க வேண்டும்.''

(தாமஸனும் காரட்டும்: ''இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் தோற்றமும் நிறைவும்,'' 1934, பக் 648.)

குறிப்பிட்ட பகுதிகளை ஒவ்வொன்றாய் தாக்கி, குடும்பம், எல்லாவித சட்டவுரிமைகள் உள்பட இப்போதுள்ள அமைப்பையே 'முற்றிலும் ஒழிக்க வேண்டும்' என்பதே சிறந்த வழி என்று யோசனை கூறப்பட்டுள்ளது. ('ஐக்கிய மாகாணங்களின் நிலவுடமைகளை ஒருங்குமித்தல்''— எச். ஸ்டான்லி ஜிவான்ஸ், 1918, அலகாபாத் பல்கலைக் கழகப் பொருளாதாரத் துறையின் 9வது வெளியீடு.) ஆனால் முழு பொறுப்புள்ள அரசு ஏற்பட அனுமதிக்கும் வரை இது முற்றிலும் காரிய சாத்தியம் அல்ல.''

(ஆன்ஸ்டே : ''இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி,'' 1936, பக். 101.)

''வேளாண்மை உற்பத்தியில் புரட்சியை ஏற்படுத்துவதற்கு, இதுவரை தெரிந்துள்ள முன்னேற்றங்களை விரிவாய்க் கையாண்டாலே போதும் என்பது உண்மை என்றாலும், சென்ற காலத்தில் விரைவான முன்னேற்றம் உண்டாகாமல் தடுத்துக்கொண்டிருந்த மூலாதாரமான கஷ்டங்களை அண்மையில் அகற்றிவிட முடியுமா என்பது சந்தேகமே; ஏனெனில், தேவையான சீர்திருத்தங்கள் செய்வதற்கு ஓரளவு சமய, சமூக ஏற்பாடுகளிலும் பழக்க வழக்கங்களிலும் தலையிட வேண்டியிருக்கும்; மக்களின் முழு நம்பிக்கைக்கும் ஆதரவுக்கும் பாத்திரமாகாத எந்த அரசுக்கும் அவ்வாறு செய்வதற்கான தகுதி இல்லை.'' (மேற்படி புத்தகம், பக். 177.)

இந்தக் கருத்துக்கு அடிப்படையான கொள்கை நியாயமானதே; என்றாலும், உடனடியாகச் சீர்திருத்தம் எதையும் செய்யாமல் தாமதிப்பதற்காகவும் மறுப்பதற்காகவுமே அவர்கள் இந்த வாதங்களைப் பயன்படுத்துகிறார்கள். (''கட்டாயம் காத்திருக்க வேண்டும்,'' ''முற்றிலும் காரிய சாத்தியமல்ல,'' ''அண்மையில் ... சந்தேகமே.'')

இந்திய மக்கள் தங்கள் விருப்பப்படி தேர்ந்தெடுத்துப் படைத்த ஓர் அரசின் தலைமையில்தான், மக்களின் நம்பிக்கையை பெற்று, அவர்களுடைய ஒத்துழைப்பையும் செயல் துணையையும் பெறக்கூடிய ஓர் அரசின் தலைமையில்தான் இந்தியாவின் வேளாண் முறையில் இப்போது அவசரமான—எல்லாத் தரப்பாலும் அவசர

மானதென ஒப்புக்கொள்ளப்பட்ட பெருமாறுதல்களை,—அதாவது, இந்தியாவின் பொருளாதாரமுறையிலும் வாழ்க்கை முறையிலும் அடிப்படையான மாறுதல்களை, இந்திய மக்கள் தாமாகவேதான் சாதித்துக்கொள்ள இயலும்.[1]

அதனால்தான் இப்போதைய தேவையான வேளாண்மைப் புது அமைப்பின் தோற்றம், நாட்டு விடுதலையோடும் ஜனநாயக சுதந்திரத்தோடும் இணைந்துள்ளது. வேளாண்மைப் புரட்சி ஜன நாயகப் புரட்சியோடு இணைந்துள்ளது.

## 4. உழவர் இயக்கத்தின் வளர்ச்சி

இந்த நிலையில்தான் சமீப ஆண்டுகளில் உழவர் இயக்க வளர்ச்சி, இந்தியாவில் குறிப்பிடத்தக்க அம்சங்களில் மிக முக்கியமானது.

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் உழவர்களின் அமைதியின்மையும், உழவர்களின் எழுச்சியும் பற்றி அடிக்கடி கேள்விப்படுகிறோம். தொடக்க நிலையில் உழவர்களின் ஆத்திரமும் அமைதியின்மையும் தாமாகவே வெடித்து வெளிப்பட்டு, தனி வட்டிக் கடைக்காரர்களையும் நிலக்கிழார்களையும் வஞ்சம் தீர்க்கும் வன்முறைச் செயல்களாக ஆங்காங்கு உருவெடுத்தன, தனித் தனி நிகழ்ச்சிகளாய், 1852 ஆம் ஆண்டில் பம்பாய் அரசின் அறிக்கை ஒன்று கூறுகிறது:

> ''நம் மாகாணத்தின் எதிரெதிரான இரண்டு கோடிகளில் கடன் வாங்கியவர்கள் கடன் தந்தவர்களைக் கொலை செய்த இந்த இரண்டு வழக்குகளை, கடன் கொடுத்தோரின் அடக்கு முறைக் கொடுமைக்குத் தனியான சான்றுகளாய் கொள்ள

---

1. வேளாண்மைக் குழுவின் அறிக்கையில் சுவாரசியமானதோர் குறிப்பு உள்ளது. அதை எழுதியவர்கள் விரும்பியதைவிட அது பொருட் செறிவு உடையது என்பதில் ஐயமில்லை.

> "ஐந்து லட்சம் கிராமங்களைப் பற்றின பிரச்னை, எந்த அதிகார பூர்வமான நிறுவனமும் அக்கிராமங்களிலுள்ள ஒவ்வொரு நபரையும் அணுக முடியும் என எதிர்பார்க்க முடியாது என்பது வெளிப்படை அவ்வாறு செய்ய மக்கள் தங்களுக்குத் தாங்களே உதவி செய்துகொள்ளும் வகையில் அவர்களை ஒன்றுபடுத்த வேண்டும்; ஆங்காங்குள்ள நிறுவனங்களைச் சேர்த்து பெரு ஒன்றியங்கள் ஆக்க வேண்டும்; இவ்வாறு ஏற்பட்ட ஒன்றியங்கள் வாயிலாக ஒவ்வொரு கிராமத்துக்கும் பல்வேறு நிபுணர்களின் துறைகளைச் சேர்ந்த தகவல்களை அனுப்ப வேண்டும்." (பக். 468)

இந்தக் குறிப்பு விவேகமானது; அதனை எழுதியவர்கள் விவகாரத்தின் தகவல்களைப் பற்றித்தான் கருதினார்களேயன்றி அதற்கும் மேல் அது பொருளுள்ளது என்று கருதாததால் அதிவிவேகமானது; எதிர்கால கிராம சோவியத் அமைப்புக்கு ஆதாரமான தத்துவம் இக்குறிப்பில் அடங்கியுள்ளது.

லாகாது; ஆனால் வட்டிக் கடைக்காரர் வகுப்புக்கும் நம் விவசாய மக்களுக்கும் இடையில் பொதுவாக இன்றுள்ள தொடர்பின் இறுகிய வடிவத்தின் உதாரணங்களாகவே இவ்விரண்டு வழக்குகளையும் கொள்ள வேண்டும் என்று நான் அஞ்சுகிறேன். அப்படியானால், ஒரு தரப்பில் எந்த அளவு கடுமையாக அடக்குமுறை கையாளப்படுகிறது, மறுதரப்பில் எந்த அளவு நீண்ட துன்பம் பொறுக்கப்படுகிறது என்பதை இந்த வழக்குகள் காட்டுகின்றன? பொறுமைக்கும் நீண்ட சகிப்புத் தன்மைக்கும் எடுத்துக் காட்டாக விளங்கும் உழவர்கள், எந்தக் காலத்திலும் குறைந்த அளவிலோ மிகுந்த அளவிலோ அநியாயத்திற்கும் அவமானத்திற்கும் பழக்கப்பட்டுப்போன உழவர்கள் தங்களுடைய உயிருக்கே இழிவான ஆபத்து ஏற்படும் என்பதையும் மதியாமல் தங்களுக்கு இழைக்கப்பட்ட தீமைக்குப் பரிகாரமாக கொலைவழியை மேற்கொள்ளும்படி நிர்ப்பந்தித்த நிலைமைகள் என்ன? அவர்களுடைய நியாயவுணர்ச்சி எவ்வாறு குறையிடப்பட்டிருக்க வேண்டும்? பொறுமையும் அமைதியும் வாய்ந்த அவர்கள் இத்தகைய கொடிய செய்கை செய்யுமளவு துன்புறுத்தப்பட்டுத் தூண்டப்பட்டுள்ளனர் என்றால் அரசாலும் சட்டத்தாலும் தங்களுடைய துயரத்துக்குப் பரிகாரம் கிடைக்காது என எந்த அளவுக்கு அவர்கள் நம்பிக்கை இழந்திருக்க வேண்டும்?''

(சர் ஜார்ஜ் வின்கேட்: பம்பாய் அரசிடம் கொடுத்த அறிக்கை, 1852.)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இரண்டாம் பாதியில் உழவர்களின் எழுச்சிகளில் குறிப்பிடத் தக்கவை, 1855இல் சந்தால்கள் கலகம், 1875இல் தக்காணக் கலவரங்கள்.

ஆனால், 1914-18 போருக்குப்பின் சென்ற இருபதாண்டுகளில், உலகப் பொருளாதார மந்தம் ஏற்பட்டபின் சென்ற பத்தாண்டுகளில்தான் உழவர்களின் அமைதியின்மை முன் எப்போதும் இல்லாத அளவு விரைவுடன் முன்னேறி தெளிவான புரட்சித் தன்மை வாய்ந்ததாய் மேலும் மேலும் மாறுகிறது. ஏற்கனவே மக்கியிருந்த இந்திய வேளாண்மைப் பொருளாதாரத்தின் அஸ்திவாரத்தை உலகப் பொருளாதார மந்தம் சிதைத்துவிட்டது. அதன் விளைவுகளாகக் குத்தகை ஏற்றம், கடனடிமை, நிலவெளியேற்றம் போன்ற செயல் முறைகளின் எதிரொலியாக நாடெங்கும் உள்ள உழவர்களின் இயக்கம் தோன்றியது. நிலத்திலிருந்து வெளியேற்றப்படுவதை எதிர்க்கவும், தவணைக் கட்டத் தவறிய நிலவிற்பனையைப் பகிஷ்காரம் செய்யவும், வட்டிக்கடைக்

காரருக்கு எதிராக ஒன்றுபடவும் உழவர்கள் தாங்களாகவே கிராமக் குழுக்களை உருவாக்கினார்கள்.

தங்களுக்குள்ள குறைகள் காரணமாகவே உழவர்கள் இந்திய தேசிய காங்கிரஸின் அரசியல் போராட்டத்தில் இறங்கினார்கள்; ஆனால், அரசியல் போராட்டம் ஒருபோதும் ஆங்காங்கிருந்த கிஸான் கமிட்டிகளோடும் நேர்த் தொடர்பு கொண்டதில்லை. உழவர்கள் இக் குழுக்களை வலுப்படுத்தித் தங்களுக்காக மக்கள் இயக்கம் தோற்றுவிப்பதன் அவசியத்தை உணரலானார்கள்: உழவர்களின் கிராமக் கமிட்டிகள் மாவட்டக் கமிட்டிகளாக இணைக்கப்பட்டு, பின் தொடக்கத்தில் தளர்த்தியான முறையில், மாகாணக் கமிட்டிகளாய் இணைக்கப்பட்டன.

1936இல் அனைத்திந்திய உழவர் நிறுவனம் உருவாயிற்று: அனைத்திந்திய கிஸான் சபா. அதன் முதல் மாநாடு 1936, டிசம்பரில் பெயிஸ்பூரில்—இந்திய காங்கிரஸ் கூடிய அதேசமயம்—கூடியது. பல மைல் தூரம் நடந்துவந்து மாநாட்டில் கலந்து கொண்டோர் பலர்; 20,000 உழவர்கள் நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டார்கள். அதே சமயம் பெயிஸ்பூரில் நடந்த இந்திய தேசீய காங்கிரஸ் தன் வேளாண்மைக் கொள்கைத் திட்டத்தை ஏற்றது; இரண்டு ஸ்தாபனங்களின் ஒருமைப்பாடு அறிவிக்கப் பட்டது.

1938, மே மாதம் கோமில்லாவில் மூன்றாவது மாநாடு கூடியபோது அனைத்திந்திய கிஸான் சபாவில் 550,000 உறுப் பினர்கள் இருந்தனர். இருபது மொழிவாரி மாகாணங்களில் பத்தொன்பதில் மாகாண கிஸான் கமிட்டிகள் இருந்தன. இந்த மாநாட்டில், நிலப்பிரபுக்களையும் ஏகாதிபத்தியத்தையும் எதிர்ப்பதற்காகவும், உழவர்களின் உடனடியான தேவைகளை வற்புறுத்துவதற்காகவும் தெளிவான செயல் திட்டம் ஒன்று ஏற்கப்பட்டது.

1937இல் காங்கிரஸ் அமைச்சரவைகள் அமைக்கப்பட்ட தால் உழவர்கள் இயக்கத்துக்கு வலுவான தூண்டுகோல் கிடைத் தது. 1938 முழுவதும் இந்தியாவின் எல்லா மாகாணங்களிலும் பெரும் உழவர் போராட்டங்கள் நிகழ்ந்தன; பல போராட்டங் களில் குத்தகைய ஏற்றத்துக்கும் நிலவெளியேற்றத்துக்கும் சட்ட விரோதமான பண வசூலுக்கும் கட்டாய உழைப்புக்கும் எதிராக வும் குத்தகைக் குறைப்புக்குச் சாதகமாகவும் ஓரளவு வெற்றி கிடைத்தது. அதே சமயத்தில் வலிமைமிகு 30,000 விருந்து 40,000 மாபெரும் உழவரது ஊர்வலங்களும், ஆர்பாட்டங்களும், வார ஏடுகள், பாட்டுப் புத்தகங்கள், அறிக்கைகள் ஆகிய

வெளியீடுகளும் உழவர் வர்க்க ஆரம்பமும் இயக்கத்தின் வளரும் வலிமையையும், கட்டுக்கோப்பையும் நிரூபித்தன. காங்கிரஸ் மந்திரிசபைகள் விவசாய சீர்திருத்தங்களைக் கொண்டு வரவும், மந்திரி சபையில் நிலப்பிரபுத்துவ ஆதிக்கத்தைக் கட்டுப்படுத்தவும் இவ்வியக்கம் வற்புறுத்தியது.

1939 இல் கயாவில் நாலாவது அனைத்திந்திய கிஸான் சபை கூடியது; அப்போது அதன் உறுப்பினர்கள் தொகை 800,000 இக் காங்கிரஸின் அரசியல் தீர்மானம் பின்வருமாறு அறிவித்தது:

''சென்ற ஆண்டு, இந்தியக் கிஸான் அற்புதமான முறையில் விழிப்புற்றதையும் நிறுவன வலிமை வளர்ச்சி பெற்றதையும் கண்டது. நாட்டின் ஜனநாயக இயக்கத்தில் முன் எப்போதையும் விட மிகுதியாக உழவர்கள் பங்கு கொண்டது மட்டுமல்ல, ஈரமற்ற நிலப்பிரபுத்துவ ஏகாதிபத்தியச் சுரண்டல் முறையை எதிர்த்து உயிர் வாழ்வதற்காக மூர்த்தண்யமாகப் போராட வேண்டிய ஒரு வர்க்கம் தாங்கள் என்ற உணர்வும் அவர்களுக்குள் விழிப்பு கொண்டுள்ளது. ஆகையால் அவர்களுடைய வர்க்க நிறுவனங்கள் பெருகியுள்ளதுடன், சுரண்டல் முறையை எதிர்த்து அவர்கள் நடத்தும் போராட்டம் பல பகுதிப் போராட்டங்களில் வெளிப்பட்டது போன்ற ஓர் உயர்ந்த தரத்தை எட்டியுள்ளது; அவர்களுக்கு ஒரு புதிய அரசியல் விழிப்பையும் தந்துள்ளது. தாங்கள் எந்த சக்திகளோடு போராடுகிறார்களோ அச்சக்திகளின் தன்மையை அவர்கள் உணர்ந்து விட்டதுடன், தங்கள் சுரண்டலுக்கும் வறுமைக்கும் உண்மையான பரிகாரம் என்ன என்று அவர்களுக்குத்தெரிந்து விட்டன. நாட்டிலுள்ள ஏகாதிபத்திய விரோத சக்திகளுடன் கூட்டாக எடுத்துக் கொண்ட நடவடிக்கையால் அவர்களுடைய நோக்கு வரையறுக்கப்படவில்லை. ஆகையால் தங்களுடைய அன்றாடப் போராட்டத்தின் இயற்கையான முடிவாக ஏகாதிபத்தியத்தை வலுவாய்த் தாக்கி அதை அகற்றுவதுடன், தங்களுக்கு நிலம் தந்து, தங்களுக்கும் அரசுக்கும் இடையிலுள்ள சுரண்டல் காரர்களை ஒழித்து கடன் சுமையிலிருந்து தங்களைக் காத்து, தங்களுடைய உழைப்பின் பயனைத் தாங்களே அடைவதற்கு வழி செய்யும் ஒரு புரட்சியை நடத்த வேண்டும் என்ற தீர்மானத்துக்கு வந்துள்ளனர்.

''இரண்டாவதாக, சென்ற ஆண்டு மாகாண அரசுகளிடமிருந்து உழவர்களுக்குச் சில சிறு நன்மைகள் ஏற்பட்டதைக் கண்டது. இந்தப் பரிகாரங்கள் போதுமான அளவு இல்லாமையும், உரிமையுடையோர் எழுப்பிய தடைகளைச் சமாளிக்க

வேண்டிய நிலேயும், அடிப்படையான விவசாயப் பிரச்னே களில் எதனேயும் மாகாண சுயாட்சி முறையால் தீர்க்க இய லாது என்பதை அவர்களுக்குக் காட்டிவிட்டமையால்— மாகாண சுயாட்சியின் வெறுமை வெளிப்பட்டு விட்டது. இந்திய உழவர்கள் தங்களே நிலப்பிரபுத்துவ-ஏகாதிபத்தியச் சுரண்டலின்ன்றும் விடுவித்துக் கொள்ள உறுதியாக இருக்கி ருர்கள் என்பதையும் அவ்வாறு செய்வதற்கு முன்னெப்போ தையும் விட ஆயத்தமாக இருக்கிருர்கள் என்பதையும் இந்த நிறுவனம் இன்று பெருமிதத்துடன் அறிவிக்கிறது.

''...காங்கிரஸ்,சமஸ்தான மக்கள், உழவர்கள், தொழி லாளர்கள், நிறுவனங்கள், பொதுவாக மக்கள் அடங்கிய நாட்டின் சக்திகள் யாவும் ஒன்றுபட்டு முன்னேக்கி ஓர் அடி எடுத்து வைத்து, முழு தேசீய சுதந்திரத்துக்காகவும், இறுதி யாக கிஸான்-தொழிலாளர்-அரசை நிறுவ வழி செய்யும் இந்திய மக்களின் ஜனநாயக அரசு ஏற்படுவதற்காகவும், ஏகாதிபத்திய ஆதிக்கத்தின் அடிமைத்தன அரசியல் நிர்ணயச் சட்டத்தைத் தாக்குவதற்கான தருணம் வந்து விட்டது என்பதே இந்த உழவர் ஸ்தாபனம் உறுதிப்படுத்துகிறது.''

(''உழவர்கள், தொழிலாளர்களின் ஆட்சி.'')

இந்த மாநாடு கயாவில் நடந்த சில மாதங்களில் உலகப் போர் ஆரம்பமாயிற்று. 'இந்தியத் தற்காப்புச் சட்டத்தின் கீழ் இந்திய மக்கள் மீது அலேயலேயாக அடக்குமுறை பிரயோகம் செய்யப்பட்டது. நாடெங்கும் ஏராளமானவர்கள் கைது செய்யப் பட்டார்கள்; தொழிலாளர், உழவர் தலேவர்கள் விசாரணே யின்றிச் சிறையில் அடைக்கப்பட்டார்கள். இந்த அடக்கு முறை யைப் பொருட்படுத்தாமல் நாடு முழுவதும் உழவர்கள் நிலப்பிர புத்துவ-ஏகாதிபத்திய ஆட்சிக்கு எதிரான தங்கள் போராட் டத்தை உறுதியாகத் தொடர்ந்தார்கள். பஞ்சாபில், லாகூர், அமிர்தசரஸ் கிஸான்கள் பெரும் நடை யாத்திரையும் கிளர்ச்சி யும் நடத்தி நிலவரியைக் குறைக்கக் கோரிஞர்கள். நூற்றுக் கணக்கான பெண்மணிகள் உட்பட 5000 உழவர் சிறைப்பட்ட னர்; ஆறு மாதங்களுக்குப் பின் கோரிக்கையில் ஓரளவு அரசு ஏற்றுக் கிளர்ச்சி நிறுத்தப்படுவதற்குள் சிறையில் நால்வர் இறந் தனர். பீகார், ஆந்திரா, வங்காளம், மத்திய மாகாணம், ஐக்கிய மாகாணம், மலேயாளம், சிந்து, சூர்மா பள்ளத்தாக்கு ஆகிய இடங்களில், மனம்போன போக்கில் வரிவிதிப்பையும், கட்டாயப் படுத்தி நிலத்திலிருந்து வெளியேற்றுவதையும் எதிர்த்துத் தீர மாகப் போராடிஞர்கள் கிஸான்கள். 1940 மார்ச்சில் பவாஸா

வில் நடைபெற்ற அனைத்திந்திய கிஸான் சபையின் ஐந்தாவது மாநாடு பின்வருமாறு அறிவித்தது.

''அமைதி நிலவ வேண்டும் என்பதில் உழவர்களுக்கு மிக அதிக அக்கறை இருப்பதால் அவர்கள் தொழிலாளர்களுடன் சேர்ந்து கொண்டு, மாற்றான் அரசின் அதிகாரத்துக்கு அறை கூவல் விடுக்கும் சுதந்திரப் போராட்டத்தின் முன்னணியில் நிற்பதோடு நாட்டின் செல்வம் வடிக்கப்படுவதையும் எதிர்ப்பார்கள். அந்த நோக்கத்தோடு, பிரிட்டிஷ் அரசையும், சமஸ்தான மன்னர்களையும், மாற்றார் ஆட்சியின் தூண்களாக விளங்கும் ஜமீன்தார்களையும், சாவ்கார்களையும் எதிர்த்துத் தங்கள் நித்தியப்படிப் போராட்டத்தைத் தங்கள் சொந்த ஸ்தாபனமான இச் சபையின் தலைமையில் உழவர்கள் துவக்க வேண்டும். இந்தப் போராட்டங்கள் வலுத்து பல இடங்களில் பரவுகையில் நாடெங்கும் அவற்றை ஒருமுகப்படுத்தி வரி கொடாக் கிளர்ச்சியாகவும், குத்தகை கொடாக் கிளர்ச்சியாகவும் ஆக்கினால் ஏகாதிபத்தியத்தின் இந்தப் புல்லுருவிகளின் பொருளாதார சக்திக்கு முடிவு ஏற்படுவதுடன் நாட்டில் பிரிட்டிஷ் அரசின் அரசியல் வலிமையையும் குலுக்கி விடும். . . .''

1942-45 ஆண்டுகள் கிஸான் இயக்கத்துக்கு மிகவும் சோதனையான காலம். 1942 ஆகஸ்டில் ஏகாதிபத்தியம் இந்தியத் தேசீய இயக்கம் முழுவதன் மீதும் ஈரமற்ற தாக்குதலைத் தொடங்கியது—காங்கிரஸ் தலைவர்கள் கைது செய்யப்பட்டதைத் தொடர்ந்து கடுமையான அடக்குமுறை பிரயோகிக்கப்பட்டது. அத்தோடு, நாட்டின் பொருளாதாரத்தில் ஒரு பெரும் சீர்குலைவு நேர்ந்தது. நிலப்பிரபு-வியாபாரி, பதுக்குவோர், கள்ளச் சந்தைக் காரர்கள் ஊழல் மலிந்த அரசாங்க அதிகாரிகளுடன் சேர்ந்து கோடிக் கணக்கான மக்களின் உயிரோடு கொடுமையாக விளையாடினார்கள். உழவர்களைப் பஞ்சமும் பிணியும் பீடித்தன; வங்காளத்திலும் மற்றும் சில மாகாணங்களிலும் உழவர்கள் ஈக்கள்போல் செத்து விழுந்தார்கள்.

ஆகவே, ஸ்தாபன ரீதியில் உருப்பட்டிருந்த உழவர் இயக்கத்தின் மீது பெரும் பொறுப்பு விழுந்தது. அந்தப் பொறுப்பை நிறைவேற்றும் முறையில் அனைத்திந்திய கிஸான் சபையும் அதன் மாகாணக் கிளைகளும் தேசீயத் தலைவர்களை விடுதலை செய்யக் கோரியும் தேசீய அரசு அமைக்கக் கோரியும் தொடர்ந்து கிளர்ச்சி செய்தார்கள்; அரசின் அடக்கு முறையை எதிர்த்து வீரத்துடன் போரிட்டார்கள்; யுத்தநிதி கட்டாய வசூலை எதிர்த்துப் போரிட்டார்கள்; அதிக உணவு உற்பத்திக் செய்து அரசாங்க அதிகாரி

களையும் பதுக்குவோரையும் கறுப்பு மார்க்கெட்காரர்களையும் முறியடிக்கும் தன்னுதவித் திட்டம் ஒன்று ஒவ்வொரு கிராமத்திலும் தொடங்கினர்கள்.

இந்திய உழவர்கள் போற்றத்தக்க சாதனைகள் புரிந்த காலம் அது. ஆந்திராவில் ஆயிரமாயிரக்கணக்கான ஏக்கர் தரிசு நிலத்தைப்பயிர் நிலமாக்கினர்கள். உழவர்களேகூடி பெரிய அணைக் கட்டுகள் கட்டினர்கள்; வெள்ளங்களால் பல இடங்கள் அழியாமல் காத்தார்கள். வங்காளத்தில் மிகக் கொடிய பஞ்ச காலத்திலும், உபரி தானியமுள்ள பல கிராமங்கள் ஒன்றுகூடி பற்றுக்குறை உள்ள மாவட்டங்களிலுள்ள தங்கள் சகோதரர்களுக்கு உபரி தானியங்களை அனுப்பி உதவினர்கள். பஞ்சத்தின் கொலைப்பிடியிலிருந்து வங்காள மக்களைக் காப்பதற்காக அனைத்திந்திய கிஸான் சபையின் தலைமையில் நாடு முழுவதும் கிளர்ச்சி நடந்தது. நாடெங்குமுள்ள உழவர்கள் திரண்டெழுந்து வங்காளத்துக்காக நிதி வசூல் செய்தார்கள். தங்கள் கிராமங்களிலேயே அவர்கள் உணவுக் கமிட்டிகள் அமைத்து, கறுப்பு மார்க்கெட்காரர்களை வெளிப்படுத்தி, பதுக்கி வைக்கப்பட்டிருந்த தானியங்களை இறுதியில் தேவையுள்ளவர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கச் செய்தார்கள். ஸ்தல அரசு அதிகாரிகளின் ஒவ்வொரு தடையையும் அடக்கு முறையையும் வீறுடனும் நம்பிக்கையுடனும் எதிர்த்து முறியடித்தனர்.

நாட்டு விடுதலைக்காகவும், மக்களின் உரிமைக்காகவும், மக்களுக்கு உணவு கிட்டுவதற்காகவும், தொடர்ந்து போராட்டம் நடத்தியதால் அனைத்திந்திய கிஸான் சபை மிகச்சக்தியுள்ள மக்கள் நிறுவனமாக மேலும் மேலும் வலுப்பெற்றது. 1942இல் அதன் உறுப்பினர் தொகை 2,25,781, 1944இல் 5,53,427 ஆக ஏறி, 1945இல் 8,29,686 ஆக உயர்ந்தது. யுத்தம் முடியும் போது இந்தியாவின் ஏழை உழவர்களுக்கு இடையில் ஒரு புதிய விழிப்புணர்ச்சி ஏற்பட்டிருந்தது. ஆழ்ந்து வளர்ந்து வரும் உணவு நெருக்கடி, அவசியப் பொருள்களின் பற்றுக்குறையும் உயர்ந்த விலைகளும், அரசின் அட்டூழியம், கிராமங்களில் நிலப்பிரபுக்களின் அடக்குமுறை—எல்லாம் சேர்ந்து உழவர்கள் தங்கள் உரிமைகளுக்காகப் போராட மேலும் மேலும் தூண்டுகின்றன. நிலப்பிரபுத்துவத்தை ஒழிக்க உடனே சட்டம் இயற்ற வேண்டும் என்று கோருவதுடன், உழவர்களே கிஸான் சபையின் தலைமையில் திரண்டு நிலப்பிரபுக்களுக்குச் சொந்தமான நிலங்களைக் கைப்பற்றி நிலத்திலிருந்து அவர்களை வெளியேற்றவும் குத்தகைத் தொகையை உயர்த்தவும் செய்யப்படும் முயற்சிகளை மிகவும் கடுமையாக எதிர்த்துப் போராடுகிறுர்கள்.

நான்காம் பாகம்

# கிளர்ச்சியில் இந்திய மக்கள்

அத்தியாயம் 10

# இந்திய தேசீயத்தின் தோற்றம்

*எந்த நொடியில் கலகம் தோன்றும் என்கிற அச்சம் தோன்றுகிறதோ—அது வெறும் கலகமாக இருக்காது, தேசீய இனமெங்கும் பரவியுள்ள உணர்ச்சிகளின் வெளியீடாகவே இருக்கும்—அந்த நொடியிலேயே நம் சாம்ராஜ்யத்தைக் காப்பாற்ற முடியும் என்ற நம்பிக்கையும் எல்லா ஆசைக்கும் ஒரு முடிவு கட்டாயம் இருப்பது போல் முடிவு பெறும்.*

—ஜே. ஆர். ஸீலி, ''இங்கிலாந்தின் பெருக்கம்,'' 1883.

முன் அத்தியாயங்களில், வரலாற்றுச் செயப்படு பொருளாக இந்திய மக்களின் துன்பக் கதையையும் நிலைமையுமே முதன்மையாக நாம் கையாண்டோம். இப்போது நமக்கு முன் சற்று மகிழ்வு தரும் காட்சி தோன்றுகிறது—வரலாற்றுப் பொருளாக இந்திய மக்கள்.

இந்திய மக்களின் முன்னேறும் விடுதலை இயக்கத்தைத் தவிர்க்க முடியாததாகவும் ஆயத்தப்படுத்துவதாகவும் இருந்த நிலைமையையும் நிர்ப்பந்தங்களையும் விண்டு காட்ட முந்தின விளக்கம் முயன்றது. நிலப்பிரபுக்கள், வட்டிக் கடைக்காரர்களின் தளையிலிருந்து விடுதலை பெறுவதற்காக உழவர் நடத்தும் போராட்டத்தோடும், அதனுடன் இணைந்தும் நடக்கும் ஓர் இயக்கம் ஆரம்ப கட்டங்களில் மாற்றார் ஆட்சியினின்று விடுதலை பெறுவதற்காக நிகழும் தேசிய ஜனநாயகப் போராட்டத்தின் தன்மை வாய்ந்ததாக உருக்கொள்கிறது.

இந்திய தேசீய இயக்கத்தின் வரலாறு இந்தத் தேசீய விடுதலை இயக்கத்து மக்கள் அடிப்படையையும் வலுக்கும் உணர்வையும் பிரதிபலிக்கும் வரலாறாகும்; இந்த விடுதலை இயக்கம் புதிதாய்த் தோன்றும் பூர்ஷ்வாக்கள் சிலரும் உத்தியோக வர்க்கத்தினர் சிலரும் அடங்கிய ஒரு சிறு வட்டத்தில் மிகக் குறுகிய நோக்கத்தோடு தொடங்கியது; அது இன்று வரலாற்றுப் போக்கில் தன் முழு வடிவும் நிறைவும் பெற்று மிகத் தொலைவுப் பாதிப்பு உண்டாக்கவல்ல சமூக விடுதலைக்கு வழி செய்கிறது.

## 1. வேற்றுமையில் ஒற்றுமை

தொடக்கத்திலேயே நமக்கு முன் ஒரு சிறப்பு வினு எதிர்ப்படுகிறது; ஏகாதிபத்தியத்தின் ஆதரவாளர்கள் இப்போதும் அடிக்கடி எழுப்பும் வினு அது; வெவ்வேறு நிலையில் வெவ்வேறு விதமாய் அது வடிவெடுக்கும்.

இந்தியாவுக்கு 'ஒரு மக்கள்' இருக்கிருர்களா? சாதி, மொழித் தடைகளும் பிரிவினைகளும், வேறு வேற்றுமைகளுடன் மிகவும் விரிவாக மாறுபடும் சமூக, பண்பாட்டு வேறுபாடுகளும் உள்ள இனங்களும் சமயங்களும் வாழ்கிற பெரும் உபகண்டப் பரப்பாகிய இந்தியாவை ஒரு 'நாடு' என்று கருத முடியுமா, அல்லது என்ருவது அது ஒரு 'நாடு' ஆகமுடியுமா? அவ்வாறு செய்தால், மேலை நாட்டுக் கருத்துக்களை முற்றிலும் மாறுபட்ட நிலைகளில் பயன்படுத்துவதாகாதா? இந்தியாவில் உள்ள ஒரே ஒற்றுமை பிரிட்டிஷ் ஆட்சி விதித்த ஒரே ஒற்றுமை அல்லவா ?

இந்த அடிப்படைக் கேள்வியை அணுகும் முறை பல கட்டங்களைக் கடந்துள்ளது. ஏகாதிபத்தியவாதிகளில் பழைய கொள்கைக் காரர்கள், இந்தியா ஒரு நாடு என்ற கருத்தே பிரமை என்று வெறுப்போடு அதை ஒதுக்கிஞர்கள். இருபதாம் நூற்ருண்டில் தேசீய இயக்கம் வலுத்து வளர்ச்சி பெற்றுள்ளதைக் கண்டு, இந்தியா என்ெருரு நாடு என்ற கருத்துக்குப் பரவலான அங்கீகாரம்-ஏகாதிபத்திய வாதிகளில் தாராள வாதிகள் உட்பட— கிடைத்தது; பிரிட்டிஷ் ஆட்சியாலும், பிரிட்டிஷாரின் தாராளமான கொள்கைகள் பரவியதாலேயே இந்நிலை தோன்றியது என இப்போது வாதாடத் தொடங்கிஞர்கள். மிக அண்மைக் காலத்தில் இந்திய மக்களில் மிக ஆழத்திலிருப்போருக்கும் அரசியல் உணர்வு ஏற்பட்டு அவர்களுக்குப் பல்தேசீயத் தன்மை இருப்பதாகத் தோன்றியதும், இப்பிரச்னைக்கு ஒரு புதிய வடிவம் உண்டாகியுள்ளது. இப் புதிய வடிவம் சரியாகப் புரிந்து கொள்ளப்படின் இந்தியாவின் ஒற்றுமைக்கு எவ்வகையிலும் விரோதமானது அல்ல; ஆஞல் அதைத் திரித்து, ஹிந்து-முஸ்லீம் என்ற "இரு நாட்டுக் கொள்கையோடு" "பாகிஸ்தான்" பிரசாரம் செய்யப்படுகிறது; ஏகாதிபத்திய ஆதரவாளர்கள் இந்த வாதத்தை முற்றிலும் பயன்படுத்திக் கொள்கிருர்கள்.

தேசீய இயக்கம் வலிமை பெற்றுப் பழைய ஏகாதிபத்திய வாதிகளின் தன்னம்பிக்கையில் மண்ணடித்துச் சந்தேக விதை விதைப்பதற்கு முன்னர் அவர்களுடைய வாதமுறை நேரடியாக இருப்பது வழக்கம்.

"இந்தியா என்ெருரு நாடு இல்லை, இருந்ததும் இல்லை," என்று 1888 இல் சர் ஜான் ஸ்டிராச்சி, விலங்குக் காட்சிச் சாலை

யில் ஒட்டைச்சிவிங்கியைச் சந்தித்த குடியானவனின் மனப் பான்மையோடு உறுதியாக அறிவித்தார்:

> "இந்தியாவைப் பற்றி முதன்மையாகவும் அவசியமாக வும் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம் இதுதான்—இந்தியா என்றொரு நாடு இல்லை, இருந்ததும் இல்லை; ஐரோப்பியக் கருத்துகளின்படி பூகோள, அரசியல், சமூக அல்லது சமய ஒற்றுமை வாய்ந்த இந்தியா என்ற நாடு இல்லை; நாம் அடிக்கடி கேள்விப்படுகிற இந்தியா என்ற நாடு இல்லை,'இந்திய மக்கள்' இல்லை."
>
> (சர் ஜான் ஸ்டிராச்சி: "இந்தியா—அதன் நிர்வாக மும் வளர்ச்சியும்," 1888, பக். 5.)

இவ்விஷயமாக சர் ஜான் ஸீலீயின் கருத்திலும் உறுதிக் குறைவு இல்லை:

> "அரசியல் அறிவுநூல் மிக முதன்மையாக அழிக்க விரும்புகிற ஓர் ஆபாசமான வழுவின்மீது இந்தியா ஒரு நாடு என்ற கருத்து எழுப்பப்பட்டுள்ளது. இந்தியா என்பது ஓர் அரசியல் பெயர் அல்ல; ஐரோப்பா, ஆப்பிரிக்கா என்பதுபோல் அதுவும் ஒரு நிலநூல் சொல். ஒரு நாட்டின் நிலப்பரப்பையோ ஒரு மொழியையோ அது குறிப்ப தல்ல, ஆனால் பல நாடுகளின் நிலப் பரப்பையும் பல மொழி களையும் குறிப்பது.
>
> (சர் ஜான் ஸீலீ: "இங்கிலாந்தின் பெருக்கம்," 1883, பக். 254-7.)

"பெருமை என்பது என்ன?" என்ற வினவை எழுப்பி சர் ஜான் ஃபால்ஸ்டாப் விடையிறுக்கிறான்: "ஒரு சொல்-பெருமை என்ற அந்தச் சொல்லில் என்ன இருக்கிறது? அந்தப் பெருமை என்பது என்ன? காற்று." நேர்த்தியான எதார்த்தவாதத்தின் அதே உணர்வோடு, இந்தியாவின் லட்சக்கணக்கான மக்கள் மாற்றான் ஆட்சியிலிருந்து விடுதலை பெறுவதற்குப் போராட்டம் "'ஆபாசமான வழு" என்று நவீன சர் ஜான்களால் நிரூபிக்கப் படுகிறது. அதுபோலவே, ஆஸ்திரிய சாம்ராஜ்யக் கொள்கை வாதிகள் இத்தாலி என்பது "ஒரு நில நூல் சொல்" என நிரூபித்தார்கள்.

தேசீய இயக்கத்தின் வெள்ளப் பெருக்கை இந்த அழுத்தம் திருத்தமான, தொடக்கக் காலத்து மறுப்புகள் தடைசெய்ய இயலாததால் மன்னர்பிரான் கான்யூட்டின் தர்பாரிகள் தங்கள் தந்திரமுறையை மாற்றிக்கொண்டார்கள்; இப்போது அவர்கள் ஆதரவு பெற்ற வாதமுறை இதுதான்: இந்தியா

என்றொரு நாடு என்ற கருத்தை ஏகாதிபத்தியவாதிகள் முதலில் மறுத்தும், பிறகு நசுக்கவும் எவ்வளவோ முயற்சிகள் செய்தும் அவை தோல்வி பெற்றமையால், இந்தியா என்றொரு நாடு இருப்பதே, அதற்கு உயிர் வழங்கியதே பிரிட்டிஷ் ஆட்சியின் சாதனைக்குப் போற்றி சொல்வதாகும் என்பதே அவர்களுடைய புதிய வாதம். இவ்வாறு அவர்கள் உரிமை கொண்டாடுவதற்கு எந்த அளவு வரலாற்று நியாயம் இருக்கிறது என்பதை அடுத்த பகுதியில் பரிசீலிப்போம்.

ஆனால், இந்தியத் தேசிய இனத்தை ஜாடையாக மறுக்கும் வகையில் அல்லது அவ்வாறு பொருளாகும் வகையிலும், அல்லது இந்தியத் தேசிய இனத்தை மிகமிக மெள்ள ஏற்பதை நியாயப்படுத்தும் வகையிலும் இந்தியாவின் வேற்றுமைகளைக் காட்டிப் பேசும் வாதமுறை இன்னும் விரிவானவழக்கில் உள்ளது. இந்தியாவிலுள்ள சைமன் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் தலையாய பிரசாரக் கருவியான அறிக்கையின் ''ஆய்வுத் தொகுப்பில்'' இந்த வாத முறை இன்னும் மிகப் பிரபலமாய்த் திகழ்வதைக் காணலாம். 1930இல் ஆக்கப் பெற்ற இந்த அறிக்கை இந்தியப் பிரச்னைகளைப் பற்றி பொது மக்களுக்குத் தகவல் தரும் பதிவுரு என்ற பெயரில் பெருமளவில் விநியோகம் செய்யப்படுவதற்காகத் தயாரிக்கப்பட்டது. மறக்க வொண்ணாத இந்த அரசின் அறிக்கை அமைதியாக, '' 'இந்தியத் தேசிய இயக்கம்' என்று கூறப்படும் இயக்கம்,'' (இவ்வாறு பெயரிடப்படுவது ஒரு ஜோடிக் குறடுகளால் இடப்பட்டாற்போல்) உண்மையில் ''நேரடியாக இந்தியாவின் மிக அடர்த்தியான மக்கள்களில் மிகச் சிறு பகுதியினரின் நம்பிக்கைகளையே பாதிக்கிறது'' என்ற அறிவிப்போடு தொடங்குகிறது. இந்த அற்புதமான கண்டுபிடிப்பின் 'உண்மை'யை, உடனடியாக 1930-34 இல் நடந்த சத்யாக்கிரக இயக்கத்தின் தன்மையும் 1937 இல் நடந்த தேர்தல்களின் முடிவும் வெளிப்படுத்தி விட்டன. அறிக்கை மேலும் தொடருகிறது—தூய அறிவு பூர்வமான, பாரபட்சமில்லாத முறையில் அறிதற்கான தூய தகவல்களை நடுநிலை பிறழாமல் தருவதாய்ச் சொல்லிக் கொண்டு தான் தொடருகிறது; இந்தியப் ''பிரச்னை''யின் ''மிருதியையும் கஷ்டத்தையும்'' தீட்டிய வழக்கமான சித்திரத்தையும், ''நிலப்பரப்பின் மிகுதியை''யும், ''மக்கட்தொகை மிகுதியையும்'', ''222க்குக் குறையாத தாய் மொழிகள்'' காரணமான ''மொழிச் சிக்கலையும்'', ''எண்ணற்ற சாதிகளின் இறுக்கமான சிக்கலையும்'', ''சமய விஷயங்களில் முடிவற்ற வேற்றுமை''யையும், ஹிந்துகளுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையிலுள்ள ''அடிப்படை விரோதத்தையும்'', ''இனங்களும் மதக் கோட்பாடுகளும் பல்வகையாய்த் திரண்ட இக்கூட்டம்'', ''இனங்

களும் சமயங்களும் கூடிய இத் திரட்சி,'' இந்தப் ''பலவகை இனத்து மக்களின் கூட்டம்''—போன்ற விநயமான வருணனை களையும் ஏராளமாய்க் கொட்டிக்காட்டி வாசகரை அச்சுறுத்த முயன்ற வண்ணம் மேலும் தொட ருகிறது.

இவ்வாறு பேசப்படுவதன் நோக்கம் வெளிப்படை. இந்தியா வுக்கு விரைவில் தன்னுட்சி தரும் எந்தத் திட்டத்தையும் தர இயலாது என்ற எண்ணத்தை சராசரி நடுநிலையான வாசகரின் மனத்தில் உண்டாக்கி அவரைப் பின் கண்டவாறு முக்கியமான முடிவு காண வைக்க வேண்டும் என்பதே அந்நோக்கம் (சைமன் அறிக்கையை நல்லெண்ணத்தோடு பரிசீலித்து ஒரு சோஷலிஸ்டுப் பத்திரிகையில் எழுதிய எச். டபிள்யூ. நெவின்ஸனின் சொற்களில்):

> ''560 சுதேச சமஸ்தானங்களும் (பெயரளவில் சுதந்திர மானவை), 222 வெவ்வேறு மொழிகள் பேசும் இனங்களும், இரண்டு முக்கியமான, விரோதமான சமயங்களும் (168,000,000 ஹிந்துக்கள், 60,000,000 முஸ்லீம்கள்), 10,000,000 சாதி கடத்தப்பட்டோர் அல்லது 'தாழ்த்தப் பட்டோர்', தீண்டத் தகாதவர் என்றும் கூறப்படுவோரும் வசிக்கின்ற ஒரு சிறு உபகண்டத்துக்குப் பொருத்தமான ஓர் அரசியலமைப்புச் சட்டம் இயற்றுவதிலும் (விமரிசிப்ப தில் அல்ல) அல்லது அரசை அமைப்பதிலும் உள்ள பெரும் பாலும் கடக்க வொண்ணுக் கஷ்டங்கள்... இந்தியாவைப் பற்றி எண்ணுகிற ஒவ்வொருவரும் தொடக்கத்தில் இந்த வெறும் தகவல்களைக் கட்டாயம் தெரிந்து கொள்ள வேண்டும்; தெரிந்து கொண்டிராவிட்டால் அவர் இந்த அறிக்கையின் முதல் தொகுதியை நிச்சயமாய்ப் படிக்க வேண்டும். அவருக்குத் தெரியவும் தெரியாது. படிக்கவும் மாட்டார் என்ருல் அவர் அமைதியாக அவ்வாறே இருக்கட்டும்.
>
> (எச். டபிள்யூ. நெவின்ஸன், 1930, ஜூன் 27இல் நியூ லீடர் ஏட்டில் ஸைமன் அறிக்கை விமர்சனத்தில்.)

ஒரு 'சோஷலிஸ்டு' ஏட்டில் எழுதிய எச். டபிள்யூ. நெவின்ஸன் போன்ற பரிவுள்ள இடதுசாரிப் பிரதிநிதி ஒருவர் இத்தகைய தன்மை வாய்ந்த ஒரு முடிவுக்கு வந்தார் என்ருல், அரசின் அதிகார பூர்வமான ஏடுகள் மட்டுமல்ல, அக்காலச்துத் தாராளக் கட்சி, தொழிலாளர் கட்சி, அல்லது சோஷலிஸ்டுக் கட்சியின் ஏடுகள் உள்ளிட்ட பெரும்பாலும் செய்தி ஏடுகள் அனைத்துமே இந்த அரசுப் பிரசாரத்தின் புற மதிப்பை ஒப்புக்கொண்டு இதே மாதிரி வரவேற்பை அறிக்கைக்கு நல்கின என்ருல், இம் மாதிரிப் பிரசார முறையின் வெற்றியையே அது காட்டுகிறது. நடுநிலை நின்று, பாரபட்சமில்லாமல், அரசியல் வல்லுநர் போல்

விரும்பத்தகாத தகவல்களை ஏற்பதுபோல் பேசுகிற இந்த முறை மெய்யாகப் பிரசாரமே, வெறும் மொட்டைப் பிரசாரமே. அவை இந்தியாவைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்பும் ஒவ்வொருவரும் ''கட்டாயம் தெரிந்து கொள்ள வேண்டிய'' அடிப்படையான ''உண்மைத் தகவல்கள்'' அல்ல; ஆனால், மனப்பூர்வமாய்த் தெரிந்து, வேண்டுமென்றே, ஒரு நோக்கத்துடன் தகவல்களைப் பொறுக்கி எடுத்து, அத்தகவல்களின் மெய்ப்பொருளைத் திரித்துக் கூறிய பிரசாரமே அது. இன்றைய இந்தியா பற்றி அரசினர் வரைந்து காட்டும் இச்சித்திரம், ''பிரச்னையின் தன்மைகளைக்'' காட்டுவதாய்ச் சொல்லிக் கொள்ளும் இச் சித்திரம் இந்தியாவின் இன்றைய நிலையை உண்மையாகப் புரிந்து கொள்வதற்கு அவசியமான தகவல்களை மறைக்கிறது. இந்தியாவை ஏகாதிபத்தியம் சுரண்டல் செய்வதையும், இந்தியாவில் பிரிட்டிஷ் நிதி மூலதனத்தின் பாகத்தையும், பிரிட்டிஷ் ஆளும் வர்க்கத்தினர் அடைந்துள்ள ஆதாயங்களையும், மக்களின் துயர நிலைக்கு ஆதாரமான சுரண்டல் முறைகளையும், மக்களின் போராட்டம் (இன, சமய வேற்றுமைகளின்றி) வலுப்பதையும், ஏகாதிபத்தியம் அப் போராட்டத்தை ஒடுக்குவதற்காகக் கையாளும் முறைகளையும் மறைக்கிறது. இவைதாம் ''உண்மையான தகவல்கள்,'' நேர்மையான ஒரு சோஷலிஸ்டு ஏடோ குடியாட்சி ஏடோ வெளியிட வேண்டிய அவசியமான தகவல்கள், இந்தியாவைப்பற்றி ஒவ்வொருவரும் ''கட்டாயம் தெரிந்து கொள்ள வேண்டிய தகவல்கள்.'' மாறாக, இந்த அறிக்கை (''ஸைமன் கமிஷன் . . . தன் பணியைத் திறத்துடனும் துப்புரவாகவும் செய்துள்ளது. . . சர் ஜான் ஸைமனும் அவருடைய சகாக்களும் இப்பணியாற்றுவதில் காட்டியுள்ள கவனத்தை, இந்த முதல் அறிக்கையைப் பொறுத்த மட்டில், பாராட்ட வேண்டும். மிகத் தீவிரமான தேசீய வாதி கூட முக்கியமான தகவல்களில் பெருந்தவறுகள் நேர்ந்திருப்பதாய்க் குறைகூற முடியுமா என்று நான் ஐயப் படுகிறேன்.''—பென்னர் பிராக்வே 1930இல், ஜூன் 13இல் 'நியூ லீடர்' ஏட்டில் எழுதியது.) அறிக்கை இந்திய மக்களுக்குப் பாதகமாகத் தோன்றுமாறு செய்யக்கூடிய தகவல்களை மிக அன்போடு கையாண்டு, ஆட்சியாளரின் ''பிரித்தாளும்'' கொள்கைக்கு உறுதுணையாக உள்ளது.

ஓர் அமெரிக்கக் குடிமகன் தன்னுடைய நாட்டின் உண்மையான நிலை பற்றின பாரபட்சமில்லாத பின்காணும் வருணனையைப் பிரிட்டிஷ் பாராளுமன்ற அறிக்கை ஒன்றில் படித்தானானால் வியப்புறுவான் என்பதில் சந்தேகமில்லை:

''அமெரிக்க ஐக்கிய நாடுகள் என்னும் உபகண்டம் பருவகால, பூகோள வேற்றுமை மிகுதியும் வாய்ந்தது;

> அங்கு வாழ்வோர் அதுபோலவே இன, சமய வேறுபாடு மிகுதியாக உடையோர். ஐக்கிய நாடுகளை ஒரே நாடாய்ப் பேசும் வழக்கத்தைக் கொண்டுள்ள பிரிட்டிஷ் நோக்கர் தற்செயலாக இனங்களும் சமயங்களும் திரண்ட மொத்தத்தின் மாறுபாடு கொண்ட தொகுப்பே என்று காணும்போது பிரமிப்படைவான். நியூயார்க் நகரத்தில் மட்டும் ஒரு நூறு வகை வெவ்வேறு தேசீய இனங்களைக் காணலாம்; அவற்றுள் சிலவற்றின் பெரும் எண்ணிக்கையைக் கொண்டு நியூயார்க் ஒரே சமயத்தில் மிகப் பெரிய இத்தாலிய நகரமாகவும், மிகப் பெரிய யூத நகரமாகவும், மிகப் பெரிய நீக்ரோ நகரமாகவும் தோன்றுகிறது. வேற்றுமைச் சக்திகள் இவ்வாறு அடுத்தடுத்து இருப்பதால் மிகக் கசப்பான வகுப்புப் பூசல்கள் ஏற்பட வளமான காரணம் கிடைக்கிறது. குறிப்பாக, தெற்கு மாகாணங்களில் அதனால் இனக் கலவரங்களும் கொலைகளும் உண்டாகின்றன; அவை மீண்டும் மீண்டும் நிகழாமல் தடுக்கமுடிகிறது என்றால், சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டவல்ல, நடுநிலைநிற்கும், வெளிநாட்டு வல்லரசு அங்கு இருப்பதால்தான் பகைக் கோஷ்டிகளான சிகாகோ கொள்ளைக் காரர்களும், நியூயார்க்கின் சீனக் கிடங்குகளும் உள்ள இழிநிலை காரணமாக சக்திவாய்ந்த ஆட்சிப்பீடத்தின் கவனத்தைத் திருப்புகிறது; இன்னும் முக்கியமான பிரச்னைகளைக் கவனிக்க முடியமாற் போகிறது; யுடாவில் மார்மான்கள் தனித்து இருப்பதாலும், மின்னிஸோடாவில் பின்லாந்துக்காரர்கள் இருப்பதாலும், மிஸிஸிபியை அடுத்து மெக்சிகோகாரர்கள் குடியேறுவதாலும், ஜப்பானியர் மேற்குக் கடற்கரையில் குடியேறுவதாலும் எழுந்த பிரச்னைகள் கவனிக்கப்படவில்லை. ஆதிகுடிகள் பெரும் எண்ணிக்கையில் இன்னும் பிழைத்திருப்பதைப் பற்றியோ பேசவே வேண்டாம்.[1]

ஆயினும் இத்தகு உணர்வோடுதான் இந்திய நிலையை ஆய்வு செய்யும் தன் பணியை ஸைமன் அறிக்கை அணுகியது.

மற்றொரு உண்மையும் கவனிக்கதக்கது; அமெரிக்க மக்கள் ஒற்றுமைப்பட இயலாது என்பதற்கு இதே மாதிரி நேர்த்தியான 'ஆய்வுகளையும்', 'சாட்சியங்களையும்' அமெரிக்கப் புரட்சிக்கு முன்பு ஆங்கிலேய ஏடுகள் வெளியிட்டு வந்தன. லெக்கி தன் வரலாற்றில் எழுதுகிறார்:

1. ஆர் பேஜ் ஆர்னட் எழுதிய அருமையான கிண்டலுரை இது: "சைமன் கமிஷன் அறிக்கை'' பற்றி 1930, ஜூலை 'லேபர் மன்த்லீ' ஏட்டில் எழுதிய கட்டுரையிலிருந்து எடுக்கப்பட்டது. படித்துப் பார்க்கத்தக்கக் கட்டுரை.

''ஆங்கிலேயரின் சந்ததியாரிடையேப் பரவியுள்ள டச்சுக் காரர்களும், ஜெர்மானியரும், பிரஞ்சுக்காரரும், சுவீடிஷ் காரரும், ஸ்காட்லாந்துக்காரரும், அயர்லாந்துகாரரும் கூட்டம் கூட்டமாகப் பெரும் தொகையில் இருப்பதால் காலனிகள் (அமெரிக்கா) பல்லினத்தன்மை வாய்ந்தாகியது; பல்வேறு வகைப்பட்ட அரசு முறையும், சமய நம்பிக்கையும், வணிக நலனும், சமூகப் பழக்கவழக்கங்களும் இருப்பதால் அவர்கள் ஒன்றுபட வாய்ப்பே இல்லை என்று புரட்சிக்கு முன்னர் கூடப் பலர் கருதினர்கள்.''

(டபிள்யூ. ஈ. எச். லெக்கி, ''18ஆம் நூற்றுண்டின் இங்கிலாந்து வரலாறு,'' 4ஆம் தொகுதி, பக். 12.)

அவர் மேலும் எழுதுகிறுர்:

''வெவ்வேறு நாடுகளைச் சேர்ந்தவர்களும் வெவ்வேறு சமய நம்பிக்கை உடையவர்களும் பெருந்தொகையாக அண்மையில் குடியேறியவர்களே அதிகமாக வாழும் ஒருநாடு; மிக விரிவான நிலப்பரப்பு காரணமாகவும் போக்குவரவுச் சாத னங்கள் செவ்வையாக இல்லாத காரணத்தாலும் ஒருவரோடொருவர் நெருங்கிப் பழக அதிக வாய்ப்பே இல்லா ஒரு நாடு; பணம் பண்ணும் எண்ணமே வலுவாயுள்ள ஒரு நாடு; இத்தகைய ஒரு நாட்டில் மிகுந்த நாட்டுப்பற்றே, ஒற்றுமையுணர்ச்சியோ தோன்றும் என எதிர்பார்க்க முடியாது.''—(மேற்படி புத்தகம், பக். 34.)

1759, 1760இல் வட அமெரிக்கக் காலனிகளில் பிரயாணம் செய்த பர்னபி எழுதினர்:

''வட அமெரிக்கக் காலனிகளின் வேறுபட்ட தன்மையைப் பார்க்குங்கால் நெருப்பும் நீரும்கூட அவ்வளவு வேற்றுமை வாய்ந்தவை அல்ல என்று விடலாம். தன்மையிலும், பழக்க வழக்கங்களிலும், சமயத்திலும், நலனிலும், வேறு வேறு காலனிகளுக்கு இடையிலுள்ள வேற்றுமையைப் பார்த்தால், அவர்களை அவர்கள் போக்கிலேயே விட்டு விட்டால் கண்டத்தின் ஒரு கோடியிலிருந்து மறுகோடிவரை விரைவில் ஓர் உள்நாட்டுப் போர் தோன்றும் என்பதாய் நான் நினைக்கிறேன். மனிதமனம் பற்றி நான் முற்றிலும் அறியாதவனல்ல என்ற முறையில் இப்படிக் கருதுகிறேன்; அவ்வாறு உள்நாட்டுப் போர் ஏற்படுகையில் அவர்களை அழித்தொழிக்க இந்தியர்களும் நீக்ரோக்களும் தக்க காரணம் இருப்பதால் ஆவலோடு தக்க தருணத்தை எதிர் பார்த்திருப்பார்கள்.''

பிரபல அமெரிக்கத் தேசபக்தர் ஓடிஸ் 1765இல் எழுதினர்:

> "இவர்கள் தங்கள் தாய் நாட்டின்பால் கடமை உணர்ச்சி அற்றவர்கள் என்று நிருபிக்கப்படுவதை இறைவன் தடுத்திடுக. அந்த நாள் எப்போதாவது வந்தால் அது பயங்கரமான காட்சியின் தொடக்கமாயிருக்கும். இக் காலனிகள் தம் போக்கில் விடப்பட்டால் அமெரிக்கா குருதியும் குழப்பமும் மலிந்த கொலைக்களமாகும்."[1]

பிரிட்டிஷார் இந்தியாவைவிட்டு வெளியேறினல் "கொலையும் குழப்பமும் உறுமிக் கூக்குரலிடும்" என்று நவீன காலத்து விடாக் கண்டர் (சர்ச்சில்) ஆருடம் சொல்வது புதிய செய்தி அல்ல, பழைய பல்லவியேதான்.

ஆகவே, ஒரு தேசீய விடுதலை இயக்கம் வெற்றி காணும் தறுவாயில் இருக்கும்போது ஒரு சாம்ராஜ்யத்தின் ஆட்சியாளர்களின் சார்பாக இத்தகைய தன்னலமுள்ள ஆருடங்களும் தகவல்களின் தொகுப்பும் வெளியாவதைப் பற்றிக் குடியாட்சிவாதி எச்சரிக்கையாக இருப்பான்.

சென்ற காலத்தில் இந்திய ஒற்றுமையின் வரலாற்று அளவு என்ன என்னும் கேள்வியை வரலாற்று ஆசிரியர்களிடமே விட்டு விடலாம். ஏகாதிபத்தியத்தின் தரப்பில் உள்ளோரையும் உள்ளிட்ட, வரலாற்று ஆய்வில் புதிய பிரிவினர், மிக நுண்மையான தகவல்களை வைத்துக் கொண்டு அரை நூற்றுண்டுக்கு முன் ஸீலீக்களும் ஸ்டிராச்சிகளும்போல் நேரடி மறுப்புகளை ஆதரிக்க முயலுவதில்லை.

> "இந்தியாவின் அரசியல் ஒற்றுமை, எந்தக் காலத்திலும் முழுமையாகச் சாதிக்கப்படவில்லை எனினும், எல்லாக் காலங்களிலும் அது மக்களின் கனவாக இருந்து வந்துள்ளது. எல்லா நாடுகளையும் ஆளும் வலிமை உடையவனை சக்கரவர்த்தி ராஜா என்கிற கருத்து சமஸ்கிருத இலக்கியத்தில் விரவியுள்ளது; பல சிலாசாஸனங்களிலும் தீட்டப்படுள்ளது. மகாபாரதத்தில் கூறப்படுவதுபோல், குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் பல நாடுகளும் கலந்து கொண்டன என்னும் கதையின் உட்கிடக்கை, மிகத் தொலை தெற்கில் உள்ளோர் உள்பட இந்திய மக்கள்கள் எல்லோரும் மெய்யான பிணிப்பு உடையவர்கள், அனைவருக்கும் பொதுவான நலனுடையவர்கள் என்ற நம்பிக்கையால் ஒற்றுமைபட்டவர்கள் என்பது

1. மேஜர் பி டி பாசு 1935இல் கல்கத்தாவிலிருந்து வெளியிட்ட "இந்திய வாணிபம், தொழில்களின் சிதைவு" என்ற புத்தகம், பக் 254-67. இவையும் இவை போன்ற மேற்கோள்களும் "விடுதலை பெறும் முன்காலத்து இந்தியாவும் அமெரிக்காவும்" என்ற அநுபந்தத்தில் காண்க.

தான். ஐரோப்பிய ஆசிரியர்கள் இந்தியாவின் ஒற்றுமையைவிட வேற்றுமையைத்தான் காண்பது வழக்கம். வழக்கத்துக்கு மாறாக மிக சுதந்திரவுணர்ச்சி வாய்ந்த ஆசிரியரான ஜோசப் கன்னிங்ஹாம் ஒரு விதிவிலக்கு. 1845இல் பிரிட்டிஷார் தாக்கியபோது சீக்கியருக்கு உண்டான அச்சங்களை வருணிக்கப் புகுந்த அவர், 'மேலும், காபூலிலிருந்து அஸ்ஸாம் பள்ளத்தாக்குவரை, லங்கைத் தீவும் உட்பட்ட ஹிந்துஸ்தானம் ஒரு நாடாக மதிக்கப்படுகிறது; அதன் இறைமை ஓர் அரசன் அல்லது ஓர் இனத்தின் ஆதிக்கத்தின் பாற்பட்டது என்னும் கருத்து மக்கள் மனத்தில் ஊறியுள்ளது.' ஆகவே, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இந்தியாவுக்குச் சிறப்பான அரசியல் ஒற்றுமை என்றைக்கும் இருந்திருக்கிறது, இன்றைக்கும் இருகிறது. . . .

''தனிமையுற்ற நில அமைப்பாலும் அரசியல் ஆதிக்கத்தாலும் ஏற்படுவதைவிட நேர்த்தியான, ஆழ்ந்த, அடிப்படையான ஒற்றுமை இந்தியாவுக்கு இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. எண்ணற்ற ரத்த, நிற, மொழி, உடை, பழக்க வழக்க, சாதி வேறுபாடுகளைக் கடந்தது இந்த ஒற்றுமை.''

(வின்செண்ட் ஏ. ஸ்மித்: 'இந்தியாவின் ஆக்ஸ்ஃபோர்டு வரலாறு,' 1919; முன்னுரை, பக். IX-X.)

இப்போதைய ஒற்றுமையின் அளவை முக்கியமாய்ப் பரிசீலிக்க வேண்டும்; இந்தியா தன்னாட்சி பெறுவதற்குத் தடைகளாகவும், பிரிட்டிஷ் ஆட்சி நீடிப்பதற்குச் சாதகமாகவும் ஏகாதிபத்தியப் பிரசாரம் சிறப்பாக எடுத்துக் காட்டி வலியுறுத்திக் கூறும் பிரிவினைகள் பற்றி இங்கு சிறிது சொல்ல வேண்டியது அவசியம்.

## 2. சாதி, சமய, மொழிப் பிரச்னைகள்

ஒவ்வொரு நாட்டு மக்களுக்கும் வழிவழியாக வரும் சிறப்பான சொந்தப் பிரச்னைகள் இருப்பதுபோல், இந்தியாவுக்கும், சென்ற காலத்து எச்சங்களும், கடக்க வேண்டிய பிரிவினைகளும் ஏற்றத்தாழ்வுகளும் அடங்கிய கனமான பரம்பரைச் சுமை உண்டு என்பதில் சந்தேகம் இல்லை. தன்னாட்சி தேவை என்பதற்கு மிக வலிய காரணங்களில் ஒன்று, முன்னேற்றக் கருத்துள்ள தலைவர்கள் இந்திய மக்களின் இப் பிரச்னைகளைக் கையாண்டு, தீர்வு கண்டு, இந்திய மக்களை ஜனநாயகப் பாதையிலும் சமூக முன்னேற்றப் பாதையிலும் அழைத்துக் கொண்டு முன்னேறுவதற்கு வாய்ப்பு அளிக்க வேண்டும் என்பதாகும். ஏகாதிபத்தியம் சிதைவு பெற்ற

*புதிய கட்டத்தில் (பத்தொன்பதாம் நூற்றுண்டில் முதல் பாதியிலேயே இந்தியாவில் பிரிட்டிஷாரின் நடுநிலேயான, முன்னேற்றகரமான பிரிட்டிஷ் ஆட்சியின் பங்கு முடிவுற்றுவிட்டது) தீண்டாமை, சாதித்தடைகள், வகுப்பு வேற்றுமைகள், கல்வியறிவின்மை போன்ற தீமைகளுக்கு எதிராக நடக்கும் போராட்டங்களுக்கு இந்தியத் தேசிய இயக்கத்தின் பிரதிநிதிகள் மேன்மேலும் தலைமை வகித்து நடத்துகையில், இந்தியப் பிரதிநிதிகள் வேண்டிவற்புறுத்துகிற எண்ணிறந்த சீர்திருத்தத் திட்டங்களே எதிர்த்துத் தடை, செய்யும் பாகத்தை ஏகாதிபத்தியம் மேற்கொண்டுள்ளதுடன் இத்தீமைகள் வலுப்பெற்று நீடுவாழ்வதற்கான பணியையும் செய்கிறது:*

ஒற்றுமையும் தன்னுட்சியும் பெறுவதற்கு மக்களுக்குச் சக்தியில்லே என்பதற்கு இத்தீமைகளே துன்பகரமான சாட்சியங்களென வெளியில் உரத்தக் குரலில் கத்திவிட்டு, கரவான முறையில் அத்தீமைகளே வலுவாக்க முயலுவதும், ஓர் அடிமை மக்களின் பிரிவினேயையும் பிற்போக்குத் தன்மையையும் ஊக்கி நிலேநாட்ட முயலுவதுமான ஒரு கொள்கை தன்னேத்தானே மாய்த்துக் கொள்வதாகும்.

*இந்திய மக்களுக்கு முன்னிலேயிலுள்ள மிகக்கடுமையானதும் அவசரமானதுமான பிரச்னேகளில் ஒன்றுன சாதி, சமய வேற்றுமைகள் பற்றி இன்னும் விரிவாக மற்றேர் அத்தியாயத்தில் (அத். 13,2,3) ஆராய்வது அவசியம். இந்த வேற்றுமை பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில் மனமறிந்த கொள்கை வாயிலாக வளர்க்கப்பட்டுள்ளது என்னும் உண்மை அதிகாரபூர்வமாக மறுக்கப்பட்டாலும், அது உண்மையே என்பதற்கான சாட்சியம் தரப்படும். உண்மையில், ஹிந்து—முஸ்லீம் பகைமை பிரிட்டிஷாரின் நேராட்சியில் உள்ள பிரதேசங்களில் சிறப்பான அம்சம் என்பதை ஸைமன் அறிக்கையை ஏற்றுக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது (இந்திய சமஸ்தானங்களில் பெரும்பாலும் வகுப்புப் பூசல் இல்லாததை ஒப்பிட்டுப் பார்க்க...பக். 29); பிரிட்டிஷ் ஆட்சியில் அது வளர்ந்துள்ளது (''ஒரு தலேமுறைக்கு முன் பிரிட்டிஷ் ஆட்சியில்...வகுப்புக் பிணக்கு குடியுரிமை அமைதிக்கு ஊறு விளேவிக்கும் வகையில் குறைந்த அளவிலேயே இருந்தது. ஆனுல் சீர்திருத்தங்களின் வருகையும், அதைத் தொடர்ந்து என்ன நடக்குமோ என்ற கவலேயும் ஹிந்து-முஸ்லீம் போட்டிக்குப் புதிய முனே தந்துள்ளன''— பக். 29) ஏகாதிபத்திய ஆட்சியாளர்கள் அகற்றப்படும் வரை வகுப்புப் பிரச்னே ஒருகாலும் முற்றிலும் தீர்க்கப்படமாட்டாது என்பது நிச்சயம்.*

பிரிட்டிஷாரின் அரவணைப்பில் நிலைபெற்று நீடித்து உயிர் வாழும் சமஸ்தானங்களைப் பற்றியும் அதையே தான் உரைக்க முடியும்.

சாதித் தடைகளையும் தீண்டாமையையும் பொறுத்த மட்டில், எல்லாவகை சாதித்தடைகளையும், தீண்டாமையையும் மிக ஆவேசமாய்க் கண்டனம் செய்யும் கார்ல்டன் கிளப், நிறவேற்றுமையின் பிரதிநிதிகளின் (சாதி என்ற முதல் சொல்லுக்கு 'நிறம்' என்றொரு பொருள்; ஆரியப்படையெடுப்பாளர்களின் உயர்வையும் தனித்தன்மையையும் அது குறித்தது என்பதையும் போகிற போக்கில் சொல்லவேண்டும்.) கூற்றுக்களை, மே பார் விருந்துகளுக்கு மிகத் தாராளமாய் அழைக்கப்படும் பிரிட்டனின் தோட்டிகள் மிகவும் பாராட்டிப் படிப்பார்கள். தாழ்த்தப்பட்டோர், தீண்டத்தகாதோரின் எண்ணிக்கையைப் பெருக்கி விரித்துக் காட்ட முயலும் ஏகாதிபத்தியவாதிகளின் தாராள குணத்தைப் பாராட்டாமல் இருக்க முடியாது. அரசியல் நிலைமை இவ்வளவு கடுமையாக இல்லாத போது, ஒரு தலைமுறைக்கு முன், 3 கோடி என்ற எண்ணிக்கை சாதாரணமாய்க் கூறப்பட்டது. 1910இல் வாலன்டைன் சிரோல் வெளியிட்ட ''இந்தியக் கொந்தளிப்பு'' என்கிற நூலில் இந்த எண்ணிக்கையை 5 கோடியாக ஏற்றினால் 1929இல் முதலில் வெளியான ''இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி'' என்ற புத்தகத்தில் ஆன்ஸ்டே யாதொரு சான்றும் இன்றி தைரியமாக அத்தொகையை 6 கோடி என்றார்; இந்த எண்ணிக்கையையே பாராளுமன்றத்திலும் மேடையிலும் மிகவும் பயன்படுத்துகிறார்கள். சர் ஜான் கம்மிங்கை ஆசிரியராய்க் கொண்டு வெளியான, அரசின் ஆதரவு பெற்ற ''நவ இந்தியா'' என்னும் தொகுப்பு நூல் ''3 கோடியிலிருந்து 6 கோடி வரை'' என்று தடுமாறுகிறது. ஸைமன் அறிக்கை இத்தொகை 4·3 கோடி என அறுதியிட முயன்றது; ஆனால் அதே சமயத்தில், 4·3 கோடியில் 2·8 கோடிப் பேர் உள்ள வங்காளம், ஐக்கிய மாகாணம், பீகாரும் ஒரிஸ்ஸாவும் ஆகிய மூன்று மாகாணங்களில் ''கொள்கையளவிலுள்ள தீண்டாமைக்கும் நடைமுறையிலுள்ள இயலாமைக்கும் இடையில் நெருங்கிய சம்பந்தம் இல்லை; ஒரு சிறப்பு ஆய்வு செய்தால், பள்ளிகள், தண்ணீர் போன்ற விஷயங்களில் சமவுரிமைகள் மறுக்கப்படுவோரின் எண்ணிக்கை, அந்தப் பகுதிகளில் தாழ்த்தப்பட்டோரின் தொகையாகத் தரப்படும் எண்ணிக்கையை விடக் குறைவாக இருப்பதைக் காணலாம்,'' என்றும் அறிக்கை (பக். 41) குறிப்பிடுகிறது. ஆகவே, இந்தத் தொகை விவாதத்துக்குரியதாகவே உள்ளது.

தீண்டாமையை எதிர்த்து நடத்தப்படும் போராட்டம் பிரிட்டிஷ் அரசின் தலைமையில் அல்ல, முன்னேற்றக் கருத்துள்ள தேசிய இயக்கத்தின் தலைமையில் தான் நடக்கிறது. காலம் காலமாய்த் தீண்டத் தகாதவர்களுக்கு மூடிக்கிடந்த புகழ் பெற்ற சில தென்னிந்தியக் கோயில்கள் காந்தியின் கிளர்ச்சியால் அவர்களுக்குத் திறந்துவிடப்பட்டதையும், அவர்கள் கோயில் களில் நுழையாமல் தடுக்கப் போலீசார் அனுப்பப்பட்டதையும், அவ்வாறு அவர்கள் ஆலயங்களில் பிரவேசித்தால் மக்களின் சமயவுணர்ச்சி புண்படும், அதைக் காக்கவேண்டிய புனிதமான கடமை அரசுக்கு உண்டு என்று கூறப்பட்டதையும் இங்கே நினைத்துப் பார்க்கவேண்டும்.

தீண்டத்தகாதோர் அல்லது தாழ்த்தப்பட்ட வகுப் பினருக்குத் தனிப்பிரதிநிதித்துவம் அளிப்பதாய் உறுதி கூறி அவர்களுக்கென தனியான தேர்தல் பட்டி தயாரிக்கப் பிரிட்டிஷ் அரசு கவனமாக இருக்கிறது; பிரிவினையில் இப்படி ஒரு புதிய அம்சத்தைப் புகுத்தித் தேசிய காங்கிரஸைப் பலவீனப்படுத்து வதே அதன் நோக்கம். இவ்வாறாக அட்டவணையில் கண்ட இனங் களின், நீண்டுவரும் தனித்தொகுதிப் பட்டியலில் சேர்க்கப்பட் டன (எனினும், நடைமுறையில், இந்தத் தனிப் பிரதிநிதித்துவ முறை பூனா ஒப்பந்தம் காரணமாகப் பெரும்பாலும் செயலற்ற தாகிவிட்டது). ஆனால் அரசின் இந்த அன்பார்ந்த கவனம் பற்றித் தீண்டாதவர்களே என்ன கருதுகிறார்கள் என்பதற்குச் சான்றாக, அவர்களின் தலைவரும் பிரதிநிதியுமாக அரசால் ஒப்புக் கொள்ளப்பட்டவரும், அட்டவணையில் கண்ட இனத்தார் கூட் டணியின் தலைவருமான டாக்டர் அம்பேத்கர் அனைத்திந்திய தாழ்த்தப்பட்டோர் மாநாட்டில் 1930இல் நிகழ்த்திய தலைமை யுரையைப் பார்க்கலாம்:

''துரதிர்ஷ்டகரமான நிலைமைகளைத் தேர்ந்து பிரிட்டி ஷார் விளம்பரம் செய்வதற்குக் காரணம் அவர்கள் அவற்றை அகற்ற வேண்டும் என்பதற்காக அல்ல, அவ்வாறு செய்வதால் இந்தியாவின் அரசியல் முன்னேற்றத்தைத் தடை செய்வதற்கு நல்ல வியாஜமாகப் பயன்படும் என்பதே என்றஞ்சுகிறேன்.''

(டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: 1930, ஆகஸ்டில் நடந்த அனைத்திந்திய தாழ்த்தப்பட்டோர் மாநாட் டின் தலைமை உரை.)

டாக்டர் அம்பேத்கார் தொடர்ந்து உரைத்தார்:

''பிரிட்டிஷாருக்கு முன்பு, உங்கள் தீண்டாமை காரண மாக நீங்கள் அருவறுக்கத்தக்க நிலைமையில் இருந்தீர்கள்,

உங்கள் தீண்டாமையை நீக்கப் பிரிட்டிஷ் அரசு ஏதாவது செய்துள்ளதா? பிரிட்டிஷாருக்கு முன்பு கிராமத்தில் நீங்கள் தண்ணீர் சேந்த முடியாது. கிராமக் கிணற்றைப் பயன் படுத்தும் உரிமையைப் பிரிட்டிஷ் அரசு உங்களுக்கு வாங்கித் தந்துள்ளதா? பிரிட்டிஷாருக்கு முன்பு, நீங்கள் கோயிலில் நுழைய முடியாது. இப்போது நுழைய முடியுமா? பிரிட்டி ஷாருக்கு முன்பு நீங்கள் போலீஸ் படையில் சேரமுடியாது. பிரிட்டிஷ் அரசு உங்களை இப்படையில் சேர்த்துக் கொள் கிறதா? பிரிட்டிஷாருக்கு முன்பு நீங்கள் ராணுவத்தில் சேர்த்துக் கொள்ளப்படுவதில்லை. இப்போது நீங்கள் ராணுவ வீரர்கள் ஆக முடியுமா? கனவான்களே, இந்தக் கேள்வி களில் ஒன்றுக்கும் நீங்கள் 'ஆம்' என்று விடைதர முடியாது. இவ்வளவு நீண்டகாலமாய் நாட்டில் இவ்வளவு அதிகாரம் செலுத்தியவர்கள் சிறிது நன்மையாவது செய்திருக்க வேண் டும். ஆனால் உங்களுடைய நிலைமையில் அடிப்படையான மாறுதல் ஏற்படவில்லை என்பது மெய். ஒரு சீனத் தையற் காரனிடம் மாதிரிக்காக ஒரு பழைய கோட் கொடுத்து அதே மாதிரி தைத்துத் தரச்சொன்னார்கள்; அவன் அதே மாதிரி கிழிசல் ஒட்டுகளுடன் ஒரு புதிய கோட் கர்வத்தோடு தைத்துக் கொடுத்தான். உங்களைப் பொறுத்தமட்டில் பிரிட்டிஷ் அரசு சீனத் தையற்காரன் போலவே நடந்து கொண்டுள்ளது; அவர்கள் வரும்போது இருந்த நிலைமையை அப்படியே ஏற்று, மிகக் கவனத்துடன் அதைப் பாதுகாத்து வருகிறது. உங்களுக்கு இழைக்கப்பட்ட தீமைகள் ஆறாப் புண் களாய் அப்படியே உள்ளன; அவை இன்னும் திருத்தப்பட வில்லை.... "உங்களையன்றி வேறு யாராலும் உங்கள் குறைகளை நீக்க முடியாது; அரசியல் அதிகாரத்தை நீங்களே கைப்பற்றினாலன்றி அவற்றை நீக்க முடியாது. பிரிட்டிஷ் அரசு இப்போதுள்ளது போல் இருக்கிறவரை, இந்த அதி காரத்தில் உங்களுக்கு எவ்விதப் பங்கும் கிடைக்காது. அரசி யல் அதிகாரமின்றி உங்களுக்கு உய்வு இல்லை; ஒரு சுயராஜ்ய அரசியலமைப்பின் கீழ்தான் அரசியல் அதிகாரம் உங்கள் கைவசம் ஆகக்கூடிய ஏதாவது வாய்ப்பு உங்களுக்குக்கிட்டும்."

பொதுவான நாட்டு விடுதலை இயக்கத்துடன், தாழ்த்தப்பட்ட வகுப்பாரின் நலனும் விடுதலையும் தவிர்க்க வொண்ணாத வகையில் இணைந்துள்ளன.

அறிவுரையாலோ தூற்றுவதாலோ, இழிவுபடுத்தும் சாதி ஏற்பாடுகளை ஒழித்துவிட முடியாது; ஆனால், நவீன தொழிலும் அரசியல் ஜனநாயகமும் முன்னேறி, பழைய பந்தங்களை அகற்றி

விட்டுப் புதிய சமூக பந்தங்களும் பொதுவான நலன்களும் தோன்றிட வேண்டும். மார்க்ஸ் எழுதியதுபோல்:

> ''இந்திய முன்னேற்றத்துக்கும் இந்திய ஆற்றலுக்கும் உறுதியான தடைகளான இந்திய சாதிகளின் பேரில் அமைந்துள்ள பரம்பரைத் தொழில் பிரிவினையை நவீன தொழில் கரைத்து ஒழித்துவிடும்.''
>
> (மார்க்ஸ்: ''இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் எதிர்கால முடிவுகள்'', நியூயார்க் டிரிப்யூன், ஆகஸ்டு 8, 1853)

மார்க்ஸின் இந்தச் சோதிடம் எழுபது ஆண்டுகளுக்கு முன்பே பலிக்கத் தொடங்கியிருப்பதற்குச் சென்ஸஸ் அறிக்கைகள் சான்று தருகின்றன:

> ''புதிய சூழலில் வேலை நடக்கும் ஜாம்ஷெட்பூர் போன்ற இடங்களில், எல்லா சாதிகளையும் இனங்களையும் சேர்ந்தவர்கள், தங்களுக்கு அண்டையிலிருப்போரின் சாதி பற்றிக் கவலையில்லாமல், சேர்ந்து வேலை செய்கிறார்கள்.''
>
> (பீகார்-ஒரிஸ்ஸா சென்ஸஸ் அறிக்கை, 1921)

தீண்டாதாரை, சாதி கடத்தப்பட்டோரை, அல்லது இப்போது அதிகார பூர்வமாய் 'அட்டவணையில் கண்ட இனத்தார்' என்போரைக் கீழே இழுக்கிற சிறப்பான பலவீனங்களிலிருந்து மிகப் பளுவான பிரச்னைகள் எழுகின்றன என்பதில் சந்தேகமில்லை. இந்தப் பலவீனங்களும் குறைகளும்தான் அட்டவணையில் கண்ட இனத்தாரின் கூட்டணியின் வளர்ச்சிக்குக் காரணம்; இக் கூட்டணிக்குச் சில பகுதிகளில் வலிய ஆதரவு பெற்றுள்ளது. தொழிலாளர் இயக்கமும் ஜனநாயகமும் முன்னேறுவதாலும், இந்தப் பலவீனங்களை நீக்க ஜனநாயக தேசீய இயக்கம் போராடுவதாலும்தான் இப் பிரச்னைகளுக்குத் தீர்வுகாண முடியுமே அன்றி, இக் குழுவினர் தனித்தனிப் பொருளாதார, அரசியல் இயக்கமாக உருக்கொள்வதால் அல்ல.

''222 வெவ்வேறு மொழிகள்'' என்று பிரபலமாய்ப் பேசப்படும் மொழி வேற்றுமையைப் பொறுத்தவரை, மீண்டும் இவ் விஷயத்திலும் ஏகாதிபத்தியத்தின் கைவண்ணம் தென்படுகிறது; இந்தக் கஷ்டத்தை அது பிரமாண்டமான அளவில் மிகைப்படுத்தி, அறியாதவர்கள் தவறாகத் தெரிந்து கொள்ளும் வகையில் புள்ளி விவரங்களை தருகிறது. வெவ்வேறு சான்றுகளிலிருந்து 16 முதல் 300 வரை வெவ்வேறு மதிப்பீடுகள் செய்ய இயலும். இந்த மாறுபாடே மதிப்பீடுகளுக்குப் பின்னுள்ள அரசியல் நோக்கத்தைக் காட்டிக் கொடுத்து விடுகிறது. 1901 ஆம் ஆண்டு

சென்ஸஸ் மொத்தம் 147 மொழிகள் என்றது. இதை 1921 ஆம் ஆண்டு சென்ஸஸோடு ஒப்பிட்டால்—ஸைமன் அறிக்கை இதையே உபயோகித்தது—ரசமானதொரு முடிவு காண்கிறோம்: மக்கட் தொகை 1901இல் 29·2 கோடி, 1921இல் 31.6 கோடியாகப் (புதிய வெளி நாட்டு மக்கள் யாரும் குடியேறாமலே) பெருகியது; பேசப்படும் மொழிகளின் தொகை 1901 இல் 147, 1921இல் 222 ஆக ஏறியது (புதிய, பன்மொழிப் பிரதேசம் எதுவும் சேராமலேயே). ஒரே தலைமுறையில் இவ்வாறு இருபதுக் கணக்கில் மொழிகளைத் தோற்றுவிக்கும் இந்திய மக்களின் ஆற்றல் மிக வியக்கத்தக்கதே.

''222 வெவ்வேறு மொழிகள்,'' வெளிநாட்டார் கருத்தைக் கவர்ந்துள்ள வீரத்தனமான இக் கட்டுக்கதையை இன்னும் நுணுக்கமாக ஆராய்ந்தால் மேலும் உண்மை தெளிவாகும்.[1] இந்த ''222 வெவ்வேறு மொழி''களில் 134க்குக் குறையாதவை ''திபெத்திய—பர்மிய உட்குடும்பத்தைச்'' சேர்ந்தவை என்பதைக் காணலாம். இந்த ''மொழிகளின்'' தன்மை யாது? 1909 ஆம் ஆண்டு ''இம்பீரியல் கெஜட்டியர் ஆப் இண்டியா,'' முதல் தொகுதி, பக். 390-394 இல் வெளியான 103 இந்தோசீன மொழிகளின் முழுப் பட்டியல் இக் கேள்விக்கு விடை தருகிறது. இந்தப் பட்டியலில் காணும் 103 ''வெவ்வேறு மொழிகளைப்'' பேசுவோரின் எண்ணிக்கைகளை உதாரணமாய்க் கீழே தருகிறோம்:

| மொழி | | | பேசுவோர் எண்ணிக்கை |
|---|---|---|---|
| காபூய் | .. | .. | 4 |
| ஆண்ட்ரோ | .. | .. | 1 |
| காரூய் | .. | .. | 11 |
| ப்ரானு | .. | .. | 15 |
| ஆகா | .. | .. | 26 |
| தாய்ராங் | .. | .. | 12 |
| நோரா | .. | .. | 2 |

ஒருவருக்வொருவர் எண்ணங்களையும் கருத்துக்களையும் பரிமாறிக் கொள்ள மொழி ஒரு கருவி என்ற தத்துவக் கருத்தையே, ஒரே ஒருவர் பேசுகிற ஆண்ட்ரோ மொழி விஷயத்தில் திருத்த வேண்டியிருக்கும்; மொத்தமாக, இரண்டு பேர் பேசும் நோரா மொழி ஒருவாறு அத் தத்துவத்தைக் காத்து விடுகிறது.

1. 1930, செப்டம்பரில் வெளியான லேபர் மன்த்லி ஏட்டில் வெளியான 'ஏகாதிபத்தியப் பிரசாரமாகப் புனைந்துரை இந்தியப் புள்ளி விவரங்கள்' என்னும் கட்டுரையில் முழுமையான ஆய்வைக் காணலாம். மேலே கூறப்பட்டுள்ள தகவல்களைப் பற்றின முழு விவரம் வேண்டுவோர் அக் கட்டுரையைப் படிக்க வேண்டும்.

ஏகாதிபத்தியப் பிரசாரத்தை வெளிப்படுத்துவதற்கே பயன் படும் விரிவான ஓர் ஆய்வால் பின்வரும் உண்மைகள் வெளிப் பட்டன. (1) இந்தோ-சீனக் குடும்பத்தைச் சேர்ந்தவை என்று கூறப்படுகிற ''மொழிகளின்'' எண்ணிக்கை 1901 இல் 92, 1921 இல் 145 ஆகிவிட்டது; (2) இந்த ''மொழிகள்'' இந்தியாவில் பேசப்படுபவையே அல்ல; ஹிமாலயத்தின் புறமாவட்டங்களிலும், பர்மா-சீன எல்லையிலும் பேசப்படுபவவை; (3) இவற்றுள் பெரும் பாலானவை மொழிகளே அல்ல, மிகச்சிறு 'கொச்சைகள்' அல்லது ஓர் இனத்தின் பெயர்கள்; (4) இத்தொகுதியில் சேர்க்கப்பட்டுள்ள மொழிகளில் 17, 100 பேருக்கும் குறைவானவர்களால் பேசப்படுவை; 39, 1000 க்கும் குறைவானவர்களால்; 65, 10,000க்கும் குறைவானவர்களால்; 83, 50,000க்கும் குறைவானவர்களால்; 97, 200 000க்கும் குறைவானவர்களால் பேசப்படுபவை. தொகுதியிலுள்ள ஒரே மொழி, பர்மிய மொழி.

இம்மாதிரிக் கலப்படங்களைக் கொண்டு ''222 வெவ்வேறு மொழிகள்'' என்ற கவர்ச்சிகரமான தொகை உருவாக்கப்பட் டுள்ளது; ஒவ்வொரு ஏகாதிபத்திய மேடையிலும், செய்தித் தாளிலும், பாராளுமன்ற விவாதத்திலும் இதையே தடபுடலாக எடுத்துக் காட்டுகிறார்கள்.

அப்பால், 1931ஆம் ஆண்டு சென்ஸஸ் இத் தொகையை 203 ஆகச் சுருக்கிவிட்டது. இடைக் காலத்தில், ஒருவர், இருவர், நால்வரைப் பேசுவோராய்க் கொண்ட மொழியினர் துர்ப்பாக் கியவசமாக இறந்து விட்டார்கள் என்று தெரிகிறது; அவர்களு டைய யோசனையற்ற இந்தச் செய்கையால் இந்தியச் சுயாட்சிக்கு எதிரான ஏகாதிபத்திய வழக்கைப் பலவீனப் படுத்திவிட்டார்கள். 1937இல் பர்மா இந்தியாவிலிருந்து பிரிக்கப்பட்டதால் சேதம் இன்னும் அதிகமாகும்; ஏனெனில் இந்தியாவின் வேற்றுமையை வெளிப்படுத்தும் சான்றுகளாய் விளங்கும் இந்த மொழிகளில் பெரும்பாலானவை (128) பர்மாவைச் சேர்ந்தவை. பர்மாவை அடிப்படையாக வைத்தே பன்மொழித் தடையை உருவாக்கிய வர்கள். பர்மா பிரிவினையின் போது அது முற்றிலும் மறைந்து போனதுடன், பர்மிய மொழிகளின் ஒற்றுமைத் தன்மை பற்றி ஓங்கிப் பேசத் தொடங்கினர் என்பதைக் குறிப்பிட வேண்டும். ''மாகாணத்தில் 128 சுதேசி மொழிகள் காணப்படினும், மொத்த மக்களில் பத்தில் ஏழு பேர்—இந்த அளவு வீதம் ஏறுகிறது— பர்மிய மொழி அல்லது அதற்குத் தொடர்புள்ள ஒரு மொழியைப் பேசுகிறார்கள்'' (ஸைமன் அறிக்கை-பக்.79) கொள்கையின் நலன் வேண்டி, ஏகாதிபத்திய புள்ளிவிவரங்கள் இவ்வாறு இழுத்த இழுப்புக்கு வரக்கூடியவை.

இந்திய மக்களில் பெரும்பான்மையோர் பேசுகிற அல்லது புரிந்து கொள்கிற ஹிந்துஸ்தானியை (எழுத்துக்கேற்ப ஹிந்தி அல்லது உருது எனப்படும்) காங்கிரஸ் அதிகார பூர்வமான தேசீய மொழியாக ஏற்றுக்கொண்டதன் அடிப்படையில் இந்தியாவின் பொது மொழிப் பிரச்னை தீர்க்கப்படும் தறுவாயில் இருக்கிறது. ''ஹிந்துப் பண்டிதர்களும் முஸ்லீம் மௌல்விகளும் தம் சமயச் சொற்பொழிவுகளை இந்தியா முழுவதிலும் ஹிந்தி அல்லது உருதுவில் நிகழ்த்துகிறார்கள்; கல்வி அறிவில்லாத மக்களும் அவற்றைப் புரிந்து கொள்கிறார்கள்,'' என்கிறார் காந்தி. (''சொற்பொழிவுகளும் கட்டுரைகளும்'', பக். 398.) அதைப் போலவே, ''222 மொழிகள் என்கிற அபத்தத்துக்கு'' இடமில்லாத ராணுவத்தில் ராணுவக் கட்டளைகள் ஹிந்துஸ்தானியிலேயே தரப்படுகின்றன. ஆங்கிலமே பொது மொழி அல்லது தொடர்பு மொழி என்ற கருத்து அடிக்கடி பரப்புகிறது; அது வெறும் கனவு. ஒரு நூற்றாண்டுக் காலம் ஆங்கிலக் கல்வி அளித்த பின்னரும் மக்கட் தொகையில் 1 சதவீதத்தினருக்கு மட்டும் ஆங்கிலம் எழுதப் படிக்கத் தெரியும் (3·5 கோடியில் 35 லட்சம்—1931 சென்ஸஸ்). இதற்கு மாறாக, ''அதன் பல கொச்சைகள் உட்பட ஹிந்துஸ்தானி 12 கோடி மக்களுக்குப் புரியும்; மேலும் அது பரவுகிறது.'' (ஜ. நேரு, ''இந்தியாவும் உலகமும்,'' பக். 188.) இந்தியாவில் மொழிகள் பிரச்னை என்பது பன்னிரண்டு, பதின்மூன்று மொழிகள் பற்றிய பிரச்னையாகும் (''இந்தியாவில் பன்னிரண்டு முக்கியமான மொழிகள் உள்ளன,'' சர் ஹார்கோர்ட் பட்லர், 'நவ இந்தியா,' 1932, பக். 8.) அவற்றில் ஒன்பது வட இந்திய மொழிகள் மிக நெருங்கிய தொடர்புடையவை; அதனால் 1921 ஆம் ஆண்டு சென்ஸஸ் பின்வருமாறு உரைக்க நேர்ந்தது:

> ''வடக்கு, மைய இந்தியாவின் முக்கியமான மொழிகளில் பொதுவான ஒரு தன்மை இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை; அதனால் தங்கள் பேச்சில் மனமறிந்த பெருமாறுதல் எதுவும் செய்யாமலே ஒருவரை ஒருவர் புரிந்துகொள்கிறார்கள்; இந்தப் பொதுவான தன்மை, இந்தியாவின் பெரும் பகுதியில் ஒரு தொடர்பு மொழி ஏற்படுவதற்கு உதவிகரமாயுள்ளது.''
>
> (இந்தியாவின் சென்ஸஸ்: 1921; தொகுதி I, பாகம் I, பக். 199.)[1]

1. அரசியல் காரணங்களுக்காக மிகப் பயங்கரமாய் வருணிக்கப்படும் இந்த மொழிக் கஷ்டம். ஏகாதிபத்தியச் சுரண்டல்காரர்கள் இந்திய சந்தை பற்றின பிரச்னையை அணுகுங்கால், திடீரென்று எளிதில் கையாளப் படக்கூடிய விஷயமாக மாறுவதைக் காண வேடிக்கையாக இருக்கும்.

ஸைமன் அறிக்கை வேண்டுமென்றே தவறான கருத்து உண்டாக்கக் கூடிய தகவல்களைத் தராமல், இந்தப் பாராவை அப்படியே கொடுத்திருந்தால் நேர்மையாக இருந்திருக்கும்.

இந்தியா ஒற்றுமைப்படுவதற்கும், தன்னாட்சி பெறுவதற்கும் எதிரான கடக்க வொண்ணாத தடைகளாக இப் பிரச்னைகள் சாதாரணமாய்ச் சொல்லப் படுகின்றன; தீர்க்கப்பட வேண்டிய இந்தப் பிரச்னைகளுக்கு உரிய இடமுண்டு, அவை தேசீய அரசியல் வல்லுநர்களால் தீர்க்கப்படக் கூடியவை என்பதை இவ்வளவு விரிவாக விளக்கியதன் காரணம், இந்தப் பிரச்னைகளின் பேரில் ஏகாதிபத்தியம் கயிறு திரித்துப் பிரசாரம் செய்வதை வெளிப் படுத்தி, இந்தியாவுக்கு வெளியிலுள்ள ஜனநாயகவாதிகள் இத் தகைய பிரசாரத்தினால் ஏமாந்துவிடக் கூடாது என்று எச்சரிப் பதற்காகவே.

ஏகாதிபத்தியத்தை எதிர்த்தும், தங்கள் விடுதலைக்காகவும் தங்கள் அரசியல் எதிர்காலத்தைத் தாங்களே உருவாக்கிக் கொள்ளும் உரிமைக்காகவும் நடத்தும் போராட்டத்தில் இந்திய மக்கள் மெய்யான ஒற்றுமையோடு இருக்கிறார்கள் என்ற பொருளில், இந்தியா என்றொரு நாடு உண்மையாக இருக்கிறது என்பதை புள்ளிவிவரக்காரர்களின் அறைகளிலும், நாடாளு மன்றங்களின் விவாத சபைகளிலும் நிரூபிக்கவோ, நிரூபிக்கா திருக்கவோ முடியாது. சென்ற கால் நூற்றாண்டுக் கால அனுப வத்தைக் கொண்டு நாம் சொல்கிறோம்: அது செயல் களத்தில் நிரூபிக்கப்படும், நிரூபிக்கப்பட்டும் வருகிறது, ஏற்கனவே நிரூபித்தும் ஆகிவிட்டது. ஏனெனில், வேற்றுமைப் பிரச்னைகளும் அல்லது இந்திய மக்களில் பல்லினத்தன்மையும் இந்த அடிப்படை ஒற்றுமைக்கு எதிரானவை அல்ல. இந்திய மக்களாலேயே தீர்க்கப்பட முடிந்த, தீர்க்கப்படப்போகிற பிரச்னைகள் அவை.

## 3. இந்திய தேசீயத்தின் தொடக்கங்கள்

பழைய மறுப்புகளின் எதிரொலி இன்னும் தொடர்ந்தாலும், நவீன காலத்தில் இந்தியா என்பதொரு நாடு என்னும் உண்மையை நடைமுறையில் இனி மறுக்க முடியாது. விளைவாக, ஒரு தலைமுறைக்கு முன்பு வரை 'இந்தியா ஒரு நாடு' என்ற உரிமைக் கோரிக்கையை மிக அழுத்தம் திருத்தமாக மறுத்து,

"பல மொழிகள் இருப்பதால் மிகவும் சிரமமாக இருக்கும் என்று தோன்றினாலும், மொழிப் பிரச்னை அப்படி ஒன்றும் கடக்க முடியாத விஷயமல்ல "(எச். ஜே. வெல்ஸ்: 'இந்தியச் சந்தை: பிரிட்டிஷ் ஏற்றுமதியாளருக்குக் குறிப்புகள்"—இந்திய வாணிபம், பொறியியல் இணைப்பு-'தி டைம்ஸ் ஏடு,' ஏப்ரல், 1939.)

'இந்தியா என்பது ஒரு நில நூல் சொல்' என்று அடித்தெறிந்து பேசிய பழைய வாதத்தை வியக்கத்தக்க முறையில் மறந்து விட்டு, ஏகாதிபத்தியத்தின் நாகரீகம் மிக்க பிரமுகர்கள் மாற்று வாதம் ஒன்றுக்கு ஆதரவு தருகிறார்கள்; இந்தியா என்றொரு நாடு இருக்கிறது என்றால், இருக்கிறது என்பதை ஏற்க வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது என்றால், இந்தியத் தேசிய உணர்வுக்கு உயிரளித்து, பிரிட்டிஷ் ஜனநாயகக் கருத்துக்களை இந்தியாவில் விதைத்த ஏகாதிபத்தியத்தின் பெருமிதமான சாதனையாக அதைக் கருத வேண்டும் என்பதே இப் புதிய வாதம்; 'நடப்பதெல்லாம் நன்மைக்கே' என்ற காலத்திற்கு ஒவ்வாத கருத்தின்படி, தொடக்கத்திலிருந்து பிரிட்டிஷ் ஆட்சியின் நோக்கமே இதுதான் என்று மதிக்கப்படுகிறது.

> ''இந்திய மக்களில் அரசியல் மனப்பான்மை கொண்ட பகுதியினர்...அறிவு பூர்வமாக நம் குழந்தைகள். நாமே அவர்களுக்கு முன்னிலையில் வைத்த கருத்துக்களை அவர்கள் மனத்தில் வாங்கிக் கொண்டார்கள்; அவர்களைப் பாராட்டும் வகையில் நாம் அதை ஒப்புக்கொள்ள வேண்டும். இந்தியாவில் இப்போது நடக்கும் அறிவு பூர்வமான போராட்டம், அற எழுச்சி நம் பணிக்கு இழிவு தருவது அல்ல, உயர்வு தருவது.''
>
> (மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை, 1918, பக். 115.)

இவ்வாறாக, ஏகாதிபத்தியத்தை எதிர்த்து இந்திய மக்கள் நடத்தும் போராட்டம் அடக்கமாட்டாமல் வளருகிறது என்றால், உதாரகுணமுடைய ஏகாதிபத்தியவாதிகளின் அன்பார்ந்த கை வண்ணம் இந்திய மக்களை தேசீய விடுதலையை நோக்கி நடத்திச் செல்கிறதாம். பண்பாடுள்ள நவீன ஏகாதிபத்தியவாதி பொது மக்களின் உபயோகத்துக்காகப் பேசுகிற பாஷை இது. இப்போது மிகவும் அரிதாகிவிட்ட பழைய மாதிரிகளின் எச்சங்களை (உதாரணமாக ஜாய்ன்ஸன்-ஹிக்ஸ் பிரபலமான பேச்சு: ''இந்தியர்களின் நன்மைக்காக நாம் இந்தியாவை ஜயிக்கவில்லை. சமய போதகர்களின் கூட்டங்களில் இந்தியரின் தரத்தை உயர்த்தவே நாம் இந்தியாவை வென்றுள்ளோம் என்று பேசப்படுவதை நான் அறிவேன்: அது பாசாங்கு. நாம் இந்தியாவை வாளால் வென்றோம், அதை வாளாலே நம் வசம் வைத்துக் கொள்வோம். பிரிட்டிஷ் சரக்குகளுக்கு மிக அருமையான போக்கிடமாய் நாம் அதை வைத்துக் கொள்வோம்;'' அல்லது, ரோதர் மியர் பிரபுவின் கூற்றைப் பார்க்கலாம்: ''இந்தியாவுடன் நமக்குள்ள தொடர்பை நேரடியாகச் சார்ந்துள்ள, பிரிட்டனின்

ஜீவாதாரமான வாணிபம், பாங்குத் தொழில், கப்பல் தொழில் ஆகியவற்றின் அளவு 20 சதவீதம் என்று விஷயம் தெரிந்தவர்கள் பலர் கூறுகிறார்கள். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் அச்சாணி இந்தியா. நாம் இந்தியாவை இழந்தால், சாம்ராஜ்யமே சரிந்து விடும்—முதலில், பொருளாதார முறையிலும், அப்பால் அரசியல் முறையிலும்.'') உயர்ந்த அதிகார வட்டாரங்கள் தரக்குறை வானவை என்றும், ஏற்கனவே அல்லல் தருவதாயுள்ள சூழ் நிலையில் தந்திர நீதிப்படி விரும்பத்தகாதவை என்றும் கருது கின்றன.

நவீன காலத்தில் அரசின் பேச்சுத் தோரணையில் நேர்ந்துள்ள மாறுதலைப் பற்றிக் சந்தேகமில்லை. ஆனால், தேசீய இயக்கம் வளருவதைத்தான் இந்த மாறுதலைக் குறிக்கிறதே யன்றி, காரணத்தை அல்ல என்கிற சந்தேகவாதிகளை மன்னித்திடுவோமாக.

அரசின் இப்புதிய குரலைக் கொண்டு, ஏகாதிபத்திய இரும்பொத்த உறுதியான கொள்கையையும் அதிகாரத்தையும் பற்றியோ, அல்லது ஏகாதிபத்தியம் தன்னிடமுள்ள எல்லா சாதனங்களையும் கொண்டு (ஏமாற்று வேலை முதல் யந்திரத் துப்பாக்கிகள் ஈறாக, பிரபலமான கருவிகளுள்ள ஆயுதக்கிடங்கு முழுவதையும்) அந்த அதிகாரத்தை நிலைநாட்டிக் கொள்ள முயலும் என்பதைப் பற்றியோ பிரமைகளுக்கு இடம் தருவது போன்ற அபாயகரமானது வேறொன்றுமில்லை. அண்மைக் காலத்துப் பிரிட்டிஷ் திட்டம் பற்றிப் பேசுகையில் இந்த உண்மைகளைப் பற்றி மேலும் விரிவாகப் பரிசீலிக்க வேண்டியிருக்கும்.

இத்தகைய வாதமுறையின் பொருள் மிகத் தெளிவு. இந்தியத் தேசீயத்தைத் தன் வளர்ப்புக் குழந்தையெனத் தன் சிறகடியில் அரவணைத்து காப்பதாய் உரிமை கொண்டாடும் ஏகாதிபத்தியத்தின் போக்கை, சரிந்துகொண்டிருக்கும் ஒரு சாம்ராஜ்யம் தன்னை ஏமாற்றிக்கொள்ளவும் தன்னைத் தேற்றிக் கொள்ளவும் செய்யும் தீங்கற்ற முயற்சி எனக் கருதிவிடக் கூடாது. பின் தங்கிய மக்கள்களுக்குத் தேசீய உணர்ச்சி உண்டாக்கித் தங்களைத் தாங்களே ஆண்டு கொள்வதற்கான பயிற்சி அளித்து உதவுகிற, பரோபகாரமான நாகரிகப்படுத்தும் திட்டமே ஏகாதிபத்தியம் என்ற கருத்து (மார்க்ஸீய மொழியில் 'காலனித் தன்மையை ஒழிப்பது' என்று இது சொல்லப்படும்.) மாக்டொனல்டு போன்ற சோஷலிஸத் துரோகிகளும் ஏகாதி பத்தியதாசர்களும் முதன் முதலில் தோற்றுவித்ததாகும்; இந்த மாக்டொனல்டு பின்னர் இந்தியாவில் பயங்கர ஆட்சி நடத்தி,

குடியாட்சி உரிமைகள் கேட்ட குற்றத்துக்காக 60,000 இந்தியர்களைச் சிறையில் தள்ளி, ஏகாதிபத்தியத்தின் ''நாகரிப்படுத்தும்'' நோக்கத்தை தான் புரிந்துகொண்ட விதத்தில் செயல்படுத்திக் காட்டினான். ஏகாதிபத்தியத்தின் புதிய பிரதிநிதிகள் இந்தக் கருத்தை நடைமுறை நோக்குடன்தான் கையாளுகின்றனர். அவ்வாறு சொல்வதால் ''நிதான புத்தியுள்ள'', ''ஆக்ககரமான'' இந்தியத் தேசீயம் ஏகாதிபத்தியத்தை தன் பகைவனாய்க் கருதாது, நாட்டு விடுதலைப் போராட்டத்தைக் கைவிட்டு, அதற்குப் பதிலாக ஏகாதிபத்தியத்தோடு சமாதானமாகவும் கூட்டுறவாகவும் ஒழுகி, இந்திய மக்களைத் தெளிவற்ற, அறுதியிடப் பெறாத சுயாட்சிக்கு ஏகாதிபத்திய விதிகள் விரும்புகிற வேகத்தில் எதிர்காலத்தில் ஏதோ ஒரு தேதியில் மெள்ள மெள்ள அழைத்துச் செல்லும் வழிகாட்டியாகவும் ஆசானாகவும் மதிக்கத் தொடங்கும் என்பதே அவர்கள் எண்ணம் என்னும் முடிவுக்குத் தான் வரமுடியும்.

இந்தியத் தேசீயம் பிரிட்டிஷ் ஆட்சியின் விளைவு அல்லது பயன் என்று காண்பது சரியா?

ஒருவகையில் இந்தப் பாத்தியதைக்குப் பொருள் உண்டு என்பதில் ஐயமில்லை; ஆனால், பாத்தியதை கொண்டாடுகிறவர்கள் சொல்லும் பொருள் அல்ல என்பது நிச்சயம்.

சீனாவில் ஜப்பானியப் படையெடுப்பாளர்கள் விரும்பினால், தங்களுடைய படையெடுப்பாலும் தாக்குதலாலும் சீனமக்களுக்கு இடையில் தேசீய ஒற்றுமை ஏற்பட உதவுவதாய்க் கூறிக் கொள்ளலாம். இந்தப் பாத்தியதை ஒருவிதத்தில் சரிதான்.

அதே போல, ஏகாதிபத்தியத்துக்கு எதிரான போராட்டத்தில் புதிய இந்தியத் தேசீயம் தோன்றி வளர்ந்துள்ளமையால், ஏகாதிபத்தியமே அதன் தோற்றுவாய், முன்னிலை என்று கூறிக் கொள்ளலாம்; ரஷ்யாவில் பாட்டாளி வர்க்கத்தின் வெற்றிக்கு ஜாரின் ஆட்சியைத் தோற்றுவாய் என்பது போல், முதலாம் சார்லஸின் ஆட்சியை கிராம்வெல்லின் தோற்றுவாய் என்பது போல்.

ஆயினும், நவீன ஏகாதிபத்திய ஆதரவாளர்கள் இப்பொருளில் பேசவில்லை. இந்தியாவை அரசியல் ரீதியில் ஒற்றுமைப்படுத்தி, மையத்தில் அதிகாரத்தைக் குவித்த புதிய ஆட்சிமுறையை (இவ்விஷயத்தில் அவர்களுடைய வாதம் வலிமையானது) ஏற்படுத்தியது மட்டும் அல்லாமல், பிரிட்டிஷாரின் சட்டமுறைகளையும், பண்பாட்டு நிறுவனங்களையும் புகுத்தி, கல்வி பெறும் மிகச் சிறிய சிறுபான்மையோருக்கு

''ஆங்கில மயமான'' கல்வியை ஒரே போதனைச் சாதனமாக அமுலாக்கியதன் வாயிலாக இந்தியத் தேசீயத்தின் விதைகளைத் தவிர்க்கவொண்ணாத வகையில் விதைத்து, கல்வியறிவு பெற்ற வகுப்பாருக்கு நாடாளு மன்ற ஆட்சி முறையையும், குடியாட்சி சுதந்திரத்தையும் போன்ற கருத்துகளை அளித்ததைப் பிரிட்டிஷ் ஆட்சியின் பெரும் சாதனை என்று பொருள்பட அவர்கள் பேசுகிறார்கள். ''மக்களின் உரிமைகளைப் படிப்படியாகப் பெறுவது எப்படி என்னும் படிப்பினையை ஆங்கில வரலாறு கற்பித்தது; பர்க்கும், மில்லும் வெளியிட்ட ஆங்கில அரசியல் கருத்தை-அப் படிப்பினையை உறுதியாக்கியது. மிகக் கூர்மையான அறிவு படைத்தவர்களும், ஊக்கம் படைத்தவர்களுமான படித்த இந்தியர்கள் ஒரு புதிய தரிசனம் கண்டார்கள்.'' (எல். எப். ரஷ்ப்ருக் வில்லியம்ஸ்: ''இந்தியாவைப் பற்றி என்ன?'' 1938, பக். 105.)

இவ்வாறு அவர்கள் உரிமை பாராட்டுவதில் உள்ள உண்மையின் அளவு என்ன?

நவயுகத்தில் ஜனநாயக வளர்ச்சி பல நாடுகளிலும் ஏற்பட்டது; இங்கிலாந்தில் தொடக்க காலத்திலே அது நிகழ்ந்ததன்றி, இங்கிலாந்துக்கே உரித்தான தனியுரிமை அல்ல அது. ஜனநாயகப் புரட்சி விதை தூவுவதற்கு ஒரு நாட்டில் மாற்றார் ஆட்சி தேவை என்பதும் சரியன்று. அமெரிக்க விடுதலை அறிக்கையும், அதைவிட மேலான, சுதந்திரம்—சமத்துவம்—சகோதரத்துவம் என்னும் கோஷத்துடன் நடந்த பிரஞ்சுப் புரட்சியும், முடியாட்சியையும் நாடாளுமன்ற முறையையும் சமாதானப்படுத்த முயலும் வயதான ஆங்கிலேய ஆட்சியை விடச் சிறந்த முறையில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஜனநாயக இயக்கத்தை ஊக்கிய நிகழ்ச்சிகள். இருபதாம் நூற்றாண்டிலோ, 1905 இலும் 1917 இலும் நடந்த ரஷ்யப் புரட்சிகள், மக்கள்களின் விழிப்புக்கு, குறிப்பாக, ஆசியாவின் அடிமைப்பட்ட மக்கள்களும் எல்லா காலனி மக்கள்களும் நாட்டு விடுதலை வேண்டும் என்ற உரிமை உணர்வு கொண்டு விழிப்பு கொண்டதற்கு அறிகுறியாகவும், தோற்றுவாயாகவும் திகழ்ந்தன.

உலக நிகழ்ச்சிப் போக்குகளுக்கு ஏற்ப இந்திய விழிப்புணர்ச்சியும் பெருகியது என்பதை அதன் வளர்ச்சி நிலைகளிலிருந்து கண்டு கொள்ளலாம். பத்தொன்பதாம் நூற்றாண்டின் முன் பாதியில் இந்தியத் தேசீயத்தின் தந்தையான ராம்மோகன் ராய் 1830 இல் இங்கிலாந்துக்குப் பிரயாணம் செய்யும்போது, பிரஞ்சுப் புரட்சியின் கொள்கைகளை அறிவதில்

தனக்கு உள்ள ஆர்வத்தைக் காட்டுவதற்காக, மிகுந்த அசௌகரியங்களுக்கு இடையில், ஒரு பிரஞ்சுக் கப்பலில் பிரயாணம் செய்யவேண்டுமென வலியுறுத்தினர் என்பதை இங்கு பயனுள்ள முறையில் நினைவு கூறலாம். மக்களின் இயக்கம் வளர்ச்சி பெறுவதைத் தடுக்கவும், பிரிட்டிஷ் ஆட்சியைக் காக்கவும் என அதிகார வர்க்கத்தின் தூண்டுதல் பேரில் அவர்களுடைய கருவியாக முதன் முதலில் தோன்றிய தேசீய காங்கிரஸ் இருபதாண்டுக்காலம் தூங்கியது; 1905க்குப் பின் ஏற்பட்ட மக்கள் எழுச்சியாலும் கொந்தளிப்பாலுமே அதன் தூக்கத்தை உதறிவிட்டு அது விழித்துக்கொண்டது; அப்பால், மீண்டும், புரட்சி அலை ஓய்ந்து அரசுக்கு இணங்கிய மிதவாதத்தில் தணிந்துவிட, 1917ஆம் ஆண்டின் உலகப் புரட்சி இயக்கத்தோடு முன்னைவிடப் பெரிய அளவில் முன்னேறி விரைந்தது.

இங்கிலாந்து இடையில் இராவிட்டால் இந்தியா இந்த உலக நிகழ்ச்சிப் போக்கில் எவ்விதப் பங்கும் கொண்டிராது அல்லது தேசீய, ஜனநாயக விடுதலையை நோக்கி முனைந்து முன்னேறி இராது என்ற கருத்து மடத்தனமான தற்பாராட்டு ஆகும். மாறாக, ஏகாதிபத்தியம் முழுமையான முன் ஆதிக்கம் பெறாத சீனாவில் தேசீய ஜனநாயக உணர்ச்சி எவ்வளவு வலுவாக முன்னேறி வெற்றி கண்டுள்ளது என்ற உதாரணம் இருக்கிறது; இந்த தேசீய ஜனநாயக இயக்கம் ஏகாதிபத்தியத் தாக்குதலும் ஊடுருவலும் திணித்த தடைகளை எதிர்த்துத் தொடர்ந்து போராட வேண்டியிருந்தது.

இந்தியாவின் படித்த வகுப்பார் தங்களுடைய எஜமானர்களிடம் பர்க்கையும், மில்லையும், மெக்காலேயையும் கற்றதாலும், ஒரு கிளாட்ஸ்டன், ஒரு பிரைட்டின் நாடாளுமன்றத்தில் ஆற்றிய ஆவேசச் சொற்பொழிவுகளைக் கேட்டு இன்புற்றதாலுமா இந்திய தேசீய இயக்கம் ஓங்கியது? பழக்கமான கட்டுக்கதை இவ்வாறு சொல்கிறது. கட்டுக்கதை மிக எளிமையானது. ஒரு நெப்போலியனின் விருப்புறுதியினின்று நவீன பிரான்ஸ் தோன்றியது என்பதுபோல்; லூதரின் குணவிசேஷங்களிலிருந்து புராடெஸ்டன்ட் மதம் தோன்றியது என்ற கதோலிக்கர் கூற்றுபோல். சமூக நிலைமைகளிலிருந்தும், ஏகாதிபத்தியத்தின் நிலைகளிலிருந்தும், அதன் சுரண்டல் முறையிலிருந்தும், அந்தச் சுரண்டல் இந்திய சமுதாயத்திற்குள் தோற்றுவித்த சமூக, பொருளாதார சக்திகளிலிருந்தும் இந்திய தேசீய இயக்கம் எழுந்தது; கல்விமுறை எப்படி இருந்திருப்பினும், இந்திய பூர்ஷ்வா வர்க்கம் தோன்றுவதையும் பிரிட்டனின் பூர்ஷ்வா

வர்க்கத்தோடு போட்டியிட்டு மேலும் மேலும் மோதிக்கொள் வதையும் தவிர்த்திருக்க முடியாது; வேறு எவ்விதக் கருத்துப் போக்கிலும் கலவாமல் கன்னிமடத்துத் தனிமையிலிருப்பது போலிருந்து இந்திய பூர்ஷ்வாக்கள் சமஸ்கிருத வேதங்கள் மட்டிலும் கற்பிக்கப்பட்டிருந்தாலும், அந்த சமஸ்கிருத வேதங் களில் அவர்கள் தங்களுடைய போராட்டத்தின் கொள்கை களையும் கோஷங்களையும் கண்டிருப்பார்கள்.

ஏகாதிபத்தியத்தின் சார்பில் மெக்காலே ஆங்கில மயமான கல்வி முறையைத் திணித்து, கீழை நாட்டுவாதிகளைத் தோல்வி காணச் செய்தபோது அவனுடைய நோக்கம், இந்தியத் தேசீய உணர்ச்சியைத் தோற்றுவிக்க வேண்டும் என்பதல்ல; அதை அடிவேருடன் அழித்து ஒழிக்க வேண்டும் என்பதே—பழைய ரஷ்ய சாம்ராஜ்யத்தில் வெற்றி கொண்ட தேசீய இனங்களை ரஷ்ய மயமாக்க ஜார் சக்கரவர்த்திகள் கையாண்ட முறைகளின் அதே நோக்கம், தங்களுடைய மக்களுடன் எவ்விதத் தொடர்பும் இல்லாமல், ஆங்கிலேயர்களின் விருப்பத்தைப் பணிவாகச் செயல்படுத்தும் ஒரு வகுப்பினரைப் பயிற்சி தந்து தயார் செய்யவேண்டும் என்பதே அவன் நோக்கம். ஜனநாய கத்தின் விதைகளை நடவேண்டும் என்னும் எண்ணமே அவன் மனத்தில் இல்லை. இந்த வினை பற்றி அவன் கருத்துகள் அழுத்த மானவை. ''இந்தியா ஒரு சுதந்திர அரசை பெறமுடியாது என்று நமக்குத் தெரியும்; ஆனால், அது அடுத்தபடியாக நல்ல பொருளைப் பெறலாம்—உறுதியான, பாரபட்சமற்ற கொடுங் கோல் ஆட்சிமுறை'' என்று அறிவித்தவன் மெக்காலேதான். ஏகாதிபத்தியத்தின் நிர்வாகம் தரமாக நடக்கவேண்டும் என்ற சுயநலத்தோடு இக்கல்வி முறை திணிக்கப்பட்டது என்பது மெய்; அதே சமயத்தில், மில்டன்களும், ஷெல்லிகளும், பைரன்களும் அதே மாதிரி கொடுமையான ஆட்சிமுறையை எதிர்த்து சில சமயம் அதே பணக்கார ஆட்சிக்குழுவைச் சேர்ந்த வர்களும், இந்தியாவை அடிமைப்படுத்திச் சுரண்டல் செய்து கொண்டிருந்த அதே நபர்களுமான பிட்களையும், ஹேஸ்டிங்ஸ் களையும், வெல்லிங்டன்களையும் எதிர்த்து நடத்திய ஆங்கிலேய ஜனநாயக, மக்கள் எழுச்சியையும் போராட்டத்தையும் கொண்ட பெரும் வெள்ளத்தோடு தொடர்புகொள்ளவும் அக்கல்விமுறை வழி செய்தது—ஏகாதிபத்திய முறைக்கே உரிய முரண்பாடு இது; எந்த நாடு அம்முறையை மேற்கொண் டுள்ளதோ அந்த நாட்டு மக்களே தங்களுடைய விடுதலை வேண்டி முனைந்து முயன்று கொண்டிருந்தார்கள். இந்த முரண்பாடு அக்காலத்தில் எதிர்பார்க்கப்பட்டதல்ல; ஏகாதிபத்தியத்தின்

பின் சந்ததியார் அதற்காக வருந்துவதை நிறுத்தவில்லை;[1] இந்தியாவுக்கு அனுப்பப்படும் புத்தகங்களை மேலும் கடுமையான தணிக்கை செய்கிறார்கள்.

நன்மைக்கோ தின்மைக்கோ, இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் வரலாற்று முக்கியத்துவம் அல்லது சாதனை என்ன, இந்திய நாட்டை உருவாக்குவதற்குப் பயன்படும் சக்திகளுக்கு அந்த ஆட்சி தெரியாமலோ அல்லது விருப்பம் இல்லாமலோ அளித்தது என்ன என்பதைப் பற்றிக் குறைத்துப் பேசவேண்டிய தேவை இல்லை. நாம் ஏற்கனவே மேற்கோள் காட்டிய அந்தப் பகுதிகளில் (அத்தியாயம் IV, 4), ''மிகக் கீழ்த்தரமான நோக்கங்களோடு'' செயல் பட்டாலும் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவின் வளர்ச்சிக்கு ''வரலாற்றின் உணர்வற்ற கருவி'' யாகப் பயன்படும் பங்கை நிறைவேற்றிய இரண்டு சாதனைகளின் கூறுகளை மார்க்ஸ் காட்டினர்.

பிரிட்டிஷார் நாடு பிடித்து இந்தியாவைச் சுரண்டல் செய்ததன் முதன்மையான, மிக முக்கியமான சாதனை எதிர் மறையானது, அல்லது நாசகரமானது— பண்டைய இந்தியச் சமூக முறையின் அஸ்திவாரங்களை ஈரமின்றிச் சிதைத்தது. எந்த முற்போக்கிற்கும் இந்த நாசவேலை முதல் தேவை. பிரிட்டிஷார் படையெடுத்து வெற்றி கொண்டிராவிட்டால் இந்த அழிப்புப் பணி நடந்திராது என்பது இதன் பொருள் அன்று. மாறாக, அச்சமயத்தில் வழி வழி வந்த இந்திய சமூகம் சிதைவுறும் நிலையில் இருந்தது. தன்னுடைய சொந்த வழி முறைகளின் அடிப்படையில் பூர்ஷ்வா புரட்சி ஏற்படுவதற்கான முதல் கட்டத்தில் இந்தியா துடித்த வண்ணம் இருந்த சமயம் பிரிட்டிஷார் நாட்டைக் கைப்பற்றினர்கள். முன்பே கனிந்துவிட்ட பிரிட்டிஷ் பூர்ஷ்வா புரட்சியாளர்கள், ஒழுங்கு கெட்டுக் குழம்பி மாறுதல் நேரவிருந்த இந்திய நாட்டைக் கைப்பற்றித் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டினர்கள் என்று தீர்மானிக்கச் சில காரணங்கள் உள. ஆனல் மெய்மையான வரலாற்றுப் பதிவுப்படி இந்த நாசவேலை பிரிட்டிஷ் ஆட்சியின் சாதனையாயிற்று.

இரண்டாவது சாதனை அவ்வளவு முழுமையாக நிறைவேற்றப்படவில்லை; நாட்டை அரசியல் முறையில் ஒன்று

1. ''இந்தியாவில் மேற்கூட்டுக் கல்விமுறையை வளர்ப்பதற்காக பிரிட்டிஷ் அரசு மேற்கொண்ட முயற்சிகளின் போக்கையும் விளைவுகளையும் இத்தொகுப்பு ஆசிரியரால் மாறி மாறி ஆராயப்பட்டன. கடுமையான அரசியல் தப்புக் கணக்கின் கதை அது.''

(சர். ஆல்பிரெட் லயால், ஜி. சி. ஐ. ஈ., வாலன்டைன் சிரோல் எழுதிய ''இந்தியக் கொந்தளிப்பின் முன்னுரையில், 1910, பக். XIII)

படுத்துவதால் புதிய சமூக முறைக்கான உருப்படியான அஸ்தி வாரமிட்டு, உலகச் சந்தையோடு இந்தியாவை இணைத்து, ரயில்வேக்கள், தந்தி முறை போன்ற நவீன போக்குவரவு சாதனங்கள் அமைத்து, அதன் வாயிலாக நவீன தொழிலின் தொடக்கங்களுக்கு வழி செய்து, நிர்வாகத் தகுதிகளும் அறிவியல் தகுதிகளும் பெறுமாறு தேவையான நபர்களுக்குப் பயிற்சி அளித்ததே இந்த இரண்டாம் சாதனை.

இச்சாதனைகள் தாமாகவே விடுதலையையோ, இந்தியப் பொதுமக்களின் நிலைமையில் முன்னேற்றத்தையே கொண்டு வந்துவிடா, இரண்டிற்கும் தேவையான உருப்படியான முதனிலைகளைத்தான் தோற்றுவிக்கும். ஆனால், ''இதற்கு மேல் பூர்ஷ்வாக்கள் ஏதாவது செய்துள்ளனரா? மக்களையும் தனிநபர் களையும் ரத்தத்திலும் சேற்றிலும் துன்பத்திலும் அவமானத்திலும் போட்டு இழுக்காமல் ஒரு முன்னேற்றத்தை அது சாதித் துள்ளதா?''

அடுத்து, இந்திய மக்கள் தாமாகவே மூன்றாவது அடியெடுத்து வைக்கவேண்டும் என்று மார்க்ஸ் வற்புறுத்தினார். அவர்கள் புதிய சக்திகளைத் தம் கைவசப்படுத்தி, அவற்றைத் தங்கள் சொந்த நலனைக் கருத்தில் கொண்டு ஒழுங்குபடுத்த வேண்டும்; ஏகாதிபத்தியத்துக்கு எதிராகப் போராட உறுதி கொண்டு ''ஆங்கிலத்தளையை முற்றிலும் தூக்கியெறியும்'' வகையில் தங்களை வலுப்படுத்திக் கொள்ள வேண்டும் என்கிறார். இந்திய நாட்டு விடுதலை இயக்கத்தின் வரலாற்றுப் பணி இது; அதன் குறிக்கோளான நாட்டு விடுதலை சமூக விடுதலை நோக்கி வைக்கப்படும் முதல் காலடி ஆகும்.

பிரிட்டிஷ் ஆட்சியின் தொடக்க காலத்தில், பத்தொன்ப தாம் நூற்றாண்டின் முன் பாதியில், பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள்—தொழில் சிதைவுக்கும் துன்பத்துக்கும் இடையில்—முன்னேற்றகர மான ஒரு பணியைச் சுறுசுறுப்பாக செய்து வந்தார்கள்; இந்திய சமூகத்தின் மிதவாத, நிலப்பிரபுத்துவ சக்திகளோடு பல துறை களிலும் சுறுசுறுப்பாய்ப் போராடினார்கள். மன்னர்கள் பலரை யும் ஈரங்காட்டாமல் ஒழித்தார்கள்; எஞ்சிய அரசர்கள் பீதியுற் றார்கள். துணிகரமான சீர்திருத்தங்களின் காலம் அது; சதி அல்லது உடன்கட்டை ஏறும் வழக்கத்தை ஒழித்தார்கள் (இந்திய சமூகத்தின் முற்போக்குச் சக்திகளின் மனப்பூர்வமான ஒத்துழைப் பால்); அடிமை கொள்ளும் வழக்கத்தை ஒழித்தார்கள் (நடை முறையில், பெயரளவில் எடுக்கப்பட்ட சாதாரண நடவடிக்கை); குழந்தை பலி, தக்கர்களை எதிர்த்துப் போரிட்டார்கள்; மேனாட்டுக் கல்வியைப் புகுத்தி செய்தி சுதந்திரம் வழங்கினார்கள்.

தங்கள் நோக்கில் விட்டுக் கொடுக்காதவர்களாகவும், இந்தியப் பழக்கவழக்கங்களில் பிற்போக்காக இருந்தவற்றிடம் இரக்கம் அற்றவர்களாகவும், பத்தொன்பதாம் நூற்றுண்டுப் பிரிட்டிஷ் பூர்ஷுவாக்கள், கிறிஸ்தவர்களின் கருத்தே மனிதத் தன்மைக்கு அளவுகோல் என்னும் உறுதி கொண்டவர்களாகவும் இருந்த தொடக்ககால ஆட்சியாளர்கள் அக் காலத்தில் வளர்ச்சி பெற்று வந்த பூர்ஷுவாக்களின் உணர்ச்சியைப் பிரதிபலிக்கும் வகையில் வலிய புதுமைப் பணி ஆற்றினுர்கள்; அவர்களில் சிறந்தவர்கள், சர் ஹென்றி லாரன்ஸ் போன்றவர்கள் தாங்கள் பழைய மக்களின் மதிப்புக்கும் அன்புக்கும் உரியவர்கள் ஆனுர்கள். அக் காலத்தில் பிரிட்டிஷாருக்கும் இந்தியாவுக்கும் இடையில் நெருங்கிய தொடர்புகளை எல்லா பரம்பரைக் கதைகளும் உறுதி செய்கின்றன. பிரிட்டிஷாரின் பெரும் பகைவர்கள் பழைய பிற்போக்கு மன்னர்களே; இவர்கள் பிரிட்டிஷார் தங்களை அகற்ற வந்தவர்கள் என்று கருதினுர்கள். ராம் மோகன்ராயைப் பிரதிநிதியாய்க் கொண்ட அக் காலத்து இந்திய சமூகத்தில் மிக முன்னேற்றக் கருத்துக்களை உடையோரும், சீர்திருத்த இயக்கமான பிரம்மசமாஜத்தினரும் பிரிட்டிஷாரை முற்போக்கின் மூலவர்களாய் வியந்து போற்றினுர்கள்; அவர்களுடைய சீர்திருத்தங்களுக்குத் தயக்கமின்றி ஆதரவு தந்தார்கள்; ஒரு புதிய நாகரிகத்தின் முன்னணியாளர்களாய்ப் பிரிட்டிஷாரைக் கண்டார்கள்.

1857 எழுச்சி—பழைய மிதவாத, நிலப்பிரபுத்துவ சக்திகளும் மகுடமிழந்த மன்னர்களும் அழிவுற்று வந்த தங்கள் உரிமைகளையும் சலுகைகளையும் மீண்டும் பெறுவதற்காகத் தலைமை வகித்து நடத்திய அடிப்படைத் தன்மை வாய்ந்த கலகமாகும். எழுச்சியின் பிற்போக்குத் தன்மை மக்களின் பேராதரவைப் பெற முடியாமல் தடுத்து, அதை தோல்வி பெறச் செய்தது. ஆயினும் மேற்பரப்பின் கீழ் மக்களுக்கிருந்த அதிருப்தியையும் கொதிப்பையும் அந்த எழுச்சி வெளிப்படுத்தியது; அது பிரிட்டிஷ் ஆட்சியாளருக்குத் திகிலை உண்டாக்கியது; அதன் சுவடுகள் இன்னும் உள்ளன. ''அனைத்து இந்தியாவும் நம் வீழ்ச்சியை எதிர்பார்த்த வண்ணம் இருக்கிறது,'' என்று 1835-36இல் கவர்னர் ஜெனரலாக இருந்த மெட்காப் பிரபு இதற்கு முந்தின காலம் குறித்தே எழுதிவிட்டார். [''பதிவுருக்களும் கடிதங்களும்'', பக். 116, ''லக்னேவில் லாரன்ஸ்'' என்ற நூலில் (பக். 55) மேற்கோளாய்க் காட்டப்பட்டது] ''நாம் அழிந்துபட்டால் மக்கள் எங்கும் களிக்கூத்தாடுவர் அல்லது களிக்கூத்தாடப் போவதாய்க் கற்பனை செய்வர். இந்த மனப்பாங்கைத் தங்கள் சக்திக்கு இயன்றவரை வளர்க்க விரும்புவோரின் எண்ணிக்கையும் குறைவாக இல்லை.''

1857க்குப் பிறகு பிரிட்டிஷ் கொள்கையிலும் பிரிட்டிஷ் ஆட்சியின் தன்மையிலும் ஒரு மாறுதல் நிகழ்ந்தது. இந்தக் காலம் முதல், பிரிட்டிஷ் கொள்கை தன் கவர்ச்சி மையத்தை இடம் மாற்றி மக்களுக்கு விரோதமான பிற்போக்கு சக்திகளுக்கு ஆதரவு தரும் கொள்கையை மேன்மேலும் பின்பற்றலாயிற்று. வளர்ந்து வந்த இந்திய பூர்ஷுவாக்கள் கொண்ட புதிய முற்போக்குச் சக்திகளுடன் அதற்கு இருந்த தொடர்பில் முன்பிருந்த சௌஜன்யமும் நெருக்கமும் மறைந்து தணிந்து சில சமயம் பகைமையாகவும் மாறியது; இங்கும் மக்களுக்கு எதிராக அவ்வப்போது இருதரப்பும் சுயநலமான, தற்காலிக உடன்பாடுகள் செய்து கொள்ளும் முயற்சிகள் வாயிலாக இப் பகைமை தணிக்கப்பட்டது. பிரிட்டிஷ் இந்தியாவுடன் சமஸ்தானங்களை இணைக்கும் திட்டம் திடீரென்று கைவிடப்பட்டது. இது முதல், எஞ்சியிருந்த மன்னர்கள் நேசவுறவுள்ள "இறைமை" படைத்த ஆட்சியாளர்கள் என்ற பெயரில் பொம்மை அதிகாரங்களுடன் நீடித்துவாழப் பாதுகாப்பு பெற்றார்கள்; இழிவான நிலப்பிரபுத்துவக் கொடுங்கோலாட்சியின், அடக்கு முறையின் ஒவ்வொரு வகையும் பாதுகாப்பு பெற்றது; இந்தப்புல்லுருவி அரசர்களின் ஆட்சியில் இக்கொடுமை பெருகியது. விளைவாக, சிற்றரசுகளும் வேறுபட்ட நிர்வாகங்களும் அர்த்தமற்ற ஒட்டு வேலையாகக் காட்சி அளிப்பதாக இந்திய அரசியல் படம் மாறியது. மிக அண்மைக் காலத்தில் தங்கள் ஏகாதிபத்திய எஜமானனின் ஊழல் கருவிகளாய் முற்றிலும் மாறிவிட்ட இதே மன்னர்கள், நாட்டு விடுதலைச் சக்திகளின் எதிர்ச் சக்திகளாக அரசியலமைப்பு முயற்சிகளின் போது முன்னணிக்குக் கொண்டு வரப்பட்டார்கள். சமூகச் சீர்திருத்தப்பாதை சுறுசுறுப்பாகத் தொடரப்படவில்லை; மாறாக, பிற்போக்கான ஒவ்வொரு சமயப் பழக்க வழக்கத்தையும் ஆர்வத்துடன் பாதுகாத்துப் பராமரிக்கும் போக்கு அதிகமாகியது (இந்தக் காலத்தில் இயற்றப்பட்ட 1891 ஆம் ஆண்டின் "உடன்பாட்டு யுகச் சட்டம்" மட்டும் ஒரே ஒரு விதிவிலக்கு). 1858ஆம் வருட அரசியின் அறிவிப்பு, இந்தியருக்கும் ஆங்கிலேயருக்கும் இன ஒற்றுமை அளிப்பதாய்க் காட்டிக் கொண்டாலும் (இதைப் பற்றி பின்னர் வந்த வைசிராய் லிட்டன் பிரபு ஒளிவுமறைவில்லாமல் பேசினார்: "இவ்வாறு உரிமை கொண்டாடுவதையும் எதிர்பார்ப்பதையும் ஒருகாலும் நிறைவேற்ற மாட்டோம், நிறைவேற்ற முடியாது," XIV ஆம் அத்தியாயம், 2 பார்க்க.), "சமய நம்பிக்கையிலும் வழிபாட்டிலும் எவ்வகையிலும் தலையிடுவதில்லை," என்னும் அரசின் உறுதியை வலியுறுத்தியதுடன், இந்தியச் சமூகத்தின் மிதவாத சக்திகளுக்கு, "இந்தியாவின் பழைமையான உரிமைகளுக்கும் பழக்க வழக்கங்களுக்கும்

உரிய மரியாதை அளிக்கப்படும்'' என வாக்குறுதி தந்தது. 1876ஆம் ஆண்டில் ''ராஜரீக உரிமைச் சட்டம்'' நிறைவேற்றப் பட்டது; மறுவருடம் அதன்படி ராணி இந்தியச் சக்கரவர்த்தினி என்று அறிவிக்கப்பட்டார்; ''இது ஒரு புதிய கொள்கையின் தொடக்கத்தைக் குறிக்கிறது; இனி சக்தி வாய்ந்த ஒரு சுதேசி உயர் இனத்தாரின் நம்பிக்கைகளையும், வேட்கைகளையும், பரிவுகளை யும், நலன்களையும் பிரதிபலிப்பதாக இங்கிலாந்து மகுடம் திகழும்,'' என்று வைசிராய் லிட்டன் பிரபு அறிவித்தார். இந்தக் காலத்திலிருந்து, ஹிந்துக்களையும் முஸ்லீம்களையும் ஒருவருக் கொருவர் விரோதமாகத் தூண்டிவிடுவதற்கான வழிவகைகளும், வேறுவிதச் சில்லறை வேற்றுமைகளைப் பயன்படுத்திக் கொள்வ தற்கான வழிவகைகளும் மேலும் மேலும் கவனமாய் ஆராயப் பட்டன; வகுப்புவாரி வாக்காளர்கள் தொகுதி என்ற புதிய உத்தி அண்மையில் புகுத்தப்பட்டதும் இந்தப் பிரச்னை இந்திய அரசியலின் முன்னணிக்கு வெற்றிகரமாய்க் கொண்டு வரப்பட்டு விட்டது. அதே சமயம், 1857க்குப்பின், பிரிட்டிஷ் ஆட்சியாள ருக்கும் இந்திய சமூகத்திலுள்ள முற்போக்குச் சக்திகளுக்கும் இடையில் பகைமை மேலும் மேலும் வளர்ந்து வந்தது. இருதரப்பிலும் வழங்கும் பரம்பரைக் கதைகள், உறவில் நேர்ந்த இந்த மாறுதலை ஒப்புக் கொள்கின்றன.

பிரிட்டனிலும் உலக அளவிலும் முதலாளித்துவம் தொடக்க காலத்தில் மிக முற்போக்குத் தன்மை நிறைந்ததாய் இருந்து, போகப்போக பிற்போக்குத் தன்மை பெற்றுச் சரிந்து, ஏகாதிபத்தியத்தின் காலத்தில் இறுதியாகச் சிதைவு அடைவதான மாறுதல்களுக்கு ஏற்ப இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் தன்மை யிலும் மாறுதல்கள் நிகழ்ந்து வந்தன. நவீன ஏகாதிபத்தியம் அல்லது சிதைவுறும் முதலாளித்துவத்தின் இறுதிக் கட்டத்தை நெருங்கியதும் இந்த பிற்போக்குப் பணி சிறப்பாக வலுவுற்றது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நடுநிலை யினின்று முற்போக்குப் பணியாற்றும் பிரிட்டிஷ் ஆட்சியின் முதல் கட்டம் முடிவுபெறும் சமயம், மறுதரப்பில் இந்திய சமூகத்திற்குள் புதிய சக்திகள் வளர்ந்து கொண்டிருந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பாதியில் இந்தியப் பூர்ஷ்வாக்கள் முன்னணிக்கு வந்து கொண்டிருந்தார்கள். 1853 இல் பம்பாயில் வெற்றிகரமான முதல் பருத்தி ஆலை தொடங்கப்பட்டது. 1880 அளவில் 44,000 தொழிலாளர்கள் வேலை செய்யும் 156 ஆலைகள் இருந்தன. 1900 அளவில் 161,000 தொழிலாளர்களுள்ள 193 ஆலைகள் இருந்தன. தொடக்கத்திலிருந்தே புதிய பருத்தித் துணித்தொழில்

முதன்மையாக இந்தியர்களின் மூலதனம் கொண்டு அவர்களால் நிர்வகிக்கப்பட்டது; கடும் கஷ்டங்களை எதிர்த்து அவை முன்னேற வேண்டியிருந்தது. அதே நேரத்தில், மேனாட்டுக் கல்வி முறையில் பயின்று லாயர்களாகவும், டாக்டர்களாகவும், ஆசிரியர்களாகவும், நிர்வாகிகளாகவும் வெளிவந்து, பத்தொன்பதாம் நூற்றாண்டின் குடியுரிமை பற்றின ஜனநாயகக் கருத்துகளை ஏற்ற புதிய, படித்த நடுத்தர வகுப்பார் தோன்றிக் கொண்டிருந்தனர். முதலாளித்துவத் தொழில் துறையிலும் புதிய மேனாட்டு முறையில் படித்த அறிவாளி வகுப்புத்துறையிலும் ஏற்பட்ட இத்தொடக்கங்கள் மிகச் சிறியவையே. ஆனால், பிரிட்டிஷ் பூர்ஷ்வாக்களே தங்களைக் கீழ்ப்படுத்தும் போட்டியாளர்கள், அவர்களே தங்கள் முன்னேற்றத்தைத் தடை செய்கிறவர்கள் என்பதைத் தவிர்க்கவொண்ணாத வகையில் காணப்போகும் புதிய வகுப்பு தோன்றிக் கொண்டிருந்தது. ஆகையால், இந்தியக் கோரிக்கைகளின் தலைமைப்பீடத்தில் ஏறி முதன் முதலில் அவற்றை உரத்து வெளியிடப்போகும் வகுப்பாக அது ஆகப் போகிறது.

வளர்ந்து வந்த இந்தியத் தொழிலுக்கு விரோதமாக லங்காஷயர் உற்பத்தியாளர்கள் கோரியதற்கு இணங்க இந்தியாவில் இறக்குமதியாகும் பருத்திமீது விதிக்கப் பெற்ற எல்லாவகை சுங்கவரிகளையும் 1882 இல் அரசு நீக்கியதன் வாயிலாக பிரிட்டிஷ் பூர்ஷ்வாக்களுக்கும் இந்தியப் பூர்ஷ்வாக்களுக்கும் இடையிலிருந்த பொருளாதார அடிப்படைப் போராட்டம் நன்கு வெளிப்பட்டுவிட்டது. மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு இந்திய தேசீய காங்கிரஸ் உருவாக்கப்பட்டது.

இறுதியாக, பிரிட்டிஷ் முதலாளித்துவ ஊடுருவலின் தவிப்பு முறையின் விளைவாக உழவர்களின் வறுமையும் துன்பமும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பின் பாதியில், குறிப்பாக—கடைசி முப்பது ஆண்டுகளில் மிகக் கடுமையுற்று மக்கள் கொந்தளிப்பாக வெளிப்படத் தொடங்கியது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதல் பாதியில் ஏழு பஞ்சங்கள் ஏற்பட்டு 15 லட்சம் பேர் இறந்தனர் என்றும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் பின் பாதியில் இருபத்து நான்கு பஞ்சங்கள் ஏற்பட்டு மொத்தம் 2·8$\frac{1}{2}$ கோடி பேர் மாண்டனர் என்றும், இந்த இருபத்து நான்கு பஞ்சங்களில் பதினெட்டு பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைசி முப்பது ஆண்டுகளில் ஏற்பட்டன என்றும் முன்பே கவனித்திருக்கிறோம் (ஐந்தாம் அத்தியாயம், பக். 153). 1875 இல் ஏற்பட்ட உழவர் கலகங்கள் இந்தக் கொந்தளிப்பு மிகுந்து வருவதைக் காட்டிய அபாய எச்சரிக்கை;

1875 இல் தக்காணக் கலகக்கமிஷன் நியமித்ததிலிருந்து அரசின் கவலை வெளியாகியது; இக்கமிஷன் வேளாண்மை நிலைமையைப் பற்றி முற்றிலும் ஆராய்ந்து, கொந்தளிப்புக்கான காரணங் களையும் விசாரித்தறிந்தது; 1878 இல் பஞ்சக்கமிஷன் நியமிக்கப் பட்டது.

இவ்வாறுக, பத்தொன்பதாம் நூற்றுண்டின் முதல் முக்கால் பகுதியில் இல்லாத நிலைமைகள் அதன் இறுதி கால் பகுதியில் தோன்றி இந்திய தேசீய இயக்கம் தோன்றக் காரணம் ஆயின.

## 4. தேசீய காங்கிரஸின் தோற்றம்

இந்திய தேசீய இயக்கத்தின் முதன்மையான, இப்போதும் தலைமையான நிறுவனமான இந்திய தேசீய காங்கிரஸ் 1885 இல் தொடங்கப்பட்டது.

தேசீய காங்கிரஸ் ஆரம்பமான கதையைக் காட்டி இந்திய தேசீயத்தின் வளர்ப்புத் தந்தை தானே என்ற தன் கோரிக்கையை ஏகாதிபத்தியம் மெய்ப்பிக்க முயலுகிறது. ஆயினும், உண்மையில் அதன் தொடக்கக் கதையும், அதற்கு முரணுன அதன் பின் வரலாறும், இந்திய தேசீய சக்திகளின் வலிமையையும், ஏகாதி பத்தியத்துக்கு எதிராக அது நடத்திய தவிர்க்கமுடியாத போராட்டத்தின் வளர்ச்சியையுமே காட்டுகின்றன.

முன்னர் தோன்றிச் செயல்படத் தொடங்கியிருந்த நடுத்தர வகுப்பாருக்கு இடையிலிருந்து தோன்றிய தேசீய காங்கிரஸ், ஓர் ஆங்கிலேயரின் முயற்சியாலும் ஆதரவாலும் ஒரு நிறுவன மாக உருவாக்கப்பட்டது. அதற்கும் மேலாக—வெளியுலகத் திற்கு அதிகம் தெரியாத—ஓர் உண்மை, வைசிராயுடன் ரகசிய மாய் செய்து கொள்ளப்பட்ட ஒரு திட்டப்படி, பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பாதுகாப்பாகவும், மக்களின் கொந்தளிப்பையும் பிரிட்டிஷாருக்கு எதிரான உணர்ச்சிகளையும் வெளியிடும் சக்திகளுக்கு எதிராகவும் ஒரு கருவியாகப் பயன்படவேண்டும் என்ற அரசாங்கக் கொள்கையின் நேர்முயற்சியாலும் ஆதர வாலும் தேசீய காங்கிரஸ் உருவாக்கப்பட்டது.

ஆரம்பத்தில் அதன் எல்லைகள் எவ்வளவுதான் வரையறுக்கப் பட்டிருப்பினும் சட்டபூர்வமான சம்மதம் பெற்ற ஒரு தேசீய நிறுவனம் தோன்றியதும், தேசீயவுணர்ச்சியை ஈர்க்கும் தவிர்க்க முடியாத போக்கு அங்கு உறுதியாகிவிட்டது. தொடக்க ஆண்டுகளிலிருந்தே, முதலில் வரையறுக்கப் பெற்ற ஜாக்கிரதை யான வடிவங்களில்தான் என்றுலும், ராஜ விசுவாசமாக இருக்

கும் தன்மையைவிடத் தேசீயத் தன்மையே ஓங்கியிருக்கலாயிற்று. சில வருடங்களுக்குள்ளேயே அரசு அதைச் சந்தேகத்துடனும், பகைமையுடனும், ''ராஜத் துரோக'' நிலையமாகவும் பார்க்கத் தொடங்கியது. பின்னர், தேசீயப் போராட்டத்தின் மக்கள் இயக்கம் பின்னர் பெருகி அதனை முன்னால் தள்ளிக்கொண்டு போயிற்று; முன்பே, 1914 போருக்கும் முன்னாலேயே தொடக்க நிலைகளில் இருந்த அது போருக்குப் பின் முன்னிலும் உறுதிபெற்று, அரைகுறைப் புரட்சிகரமான மக்கள் போராட்டமாக உருவெடுத்து நாட்டின் முழு விடுதலையே தன் லட்சியம் என்று சூளுரைத்தபோது அரசு அது சட்ட விரோதமான நிறுவனம் என்று கூறி அதை ஒடுக்கமுயன்றது. இன்று, தேசீய இயக்கத்தின் கீழ் திரண்ட லட்சக்கணக்கான மக்கள் குவியும் நிறுவனம் தேசீய காங்கிரஸே; பிரிட்டிஷ் ஆட்சிக்கு வாரிசாக ஆட்சிப் பீடத்தில் அமரப்போவது இந்தக் காங்கிரஸே என்ற கருத்து பரவலாக உள்ளது.

ஏகாதிபத்தியத்தின் ஆரம்பகால பாத்தியதைகள் எல்லாவற்றையும் முறியடித்த வரலாறும் வளர்ச்சியும், தேசீய இயக்க சக்திகள் சூறாவளி வேகத்தில் முன்னேறுவதற்கும், ஏகாதிபத்தியம் வகுத்துதந்த பாதைக்குள் வரையறுத்து அச்சக்திகளை ஒடுக்கமுடியாது என்பதற்கும் சான்றாக விளங்குகின்றன.

இந்திய தேசீயத்தின் தோற்றத்தை, 1885 இல் தேசீய காங்கிரஸ் தோற்றத்தோடு இணைத்துப் பேசுவது வழக்கம் ஆகிவிட்டது. ஆயினும், உண்மையில், இயக்கத்தின் முன்னோடிகளை முந்தின அரை நூற்றாண்டிலிருந்தே காணலாம்.[1] 1828 இல் நிறுவப்பெற்ற பிரம்ம சமாஜத்தின் வடிவத்தில் வெளிப்பட்ட சீர்திருத்த இயக்கம் பற்றி முன்பே குறிப்பிட்டோம். 1843 இல் வங்காளத்தில் பிரிட்டிஷ் இந்தியா சங்கம் நிறுவப்பட்டது; ''நம் சகோதர மக்களின் எல்லா வகுப்புகளின் நலனையும், நியாயமான உரிமைகளைப் பரப்பவும், அவர்களின் நலன்களின் முன்னேற்றத்தை ஏற்படுத்தவும்'' அது முயன்றது. 1851 இல் இது பிரிட்டிஷ் இந்தியன் சங்கத்துடன் இணைக்கப்பட்டது; மறு ஆண்டு அச்சங்கம் பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் ஒரு மகஜர் சமர்ப்பித்தது: ''மகாபிரிட்டனுடனுள்ள தொடர்பால் எந்த அளவு நன்மை ஏற்படும் என்று எதிர்பார்க்க உரிமை உண்டோ அந்த அளவு நன்மை ஏற்பட்டதாய் எண்ண முடியவில்லை''

---

1 இந்த முன்னோடிகளைப் பற்றிய விரிவான விவரத்தையும், தேசீய இயக்கத்தின் தொடக்க நிலைகள் பற்றிய விவரத்தையும் சி. எம். ஆண்டிரூஸ், ஜி. முக்கர்ஜி எழுதிய ''இந்தியாவில் காங்கிரஸின் தோற்றமும் வளர்ச்சியும்'' (1938) என்னும் நூலில் காணலாம்.

என்று அந்த மகஜரில் அறிவிக்கப்பட்டது; நிலவரி முறையிலுள்ள குறைகளையும், உற்பத்திக்கு ஊக்கம் தரப்படாததையும், கல்வியிலுள்ள குறைகளையும், உயர்ந்த அரசு நிர்வாகத்துறைப் பதவிகளில் இந்தியருக்கு இடம் தரும் பிரச்னையையும் பற்றிக் குறிப்பிட்டதுடன், ''சில அம்சங்களில் மக்களின் உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் வகையில் மக்கள் பிரதிநிதித்துவம் வாய்ந்த சட்ட மன்றக் கவுன்சில் ஏற்படுத்தும்படி'' கோரியது. ஆரம்பகாலத்து இச்சங்கங்கள் பெரும்பாலும் நிலவுடமையாளர்களோடு இணைந்த தாகும்; உண்மையில் வங்காள நிலவுடமையாளர்கள் சங்கம் இணைக்கப்பெற்றே பிரிட்டிஷ் இண்டியன் சங்கம் உருவாக்கப் பட்டது. 1875இல் சுரேந்திரநாத் பானர்ஜீயால் நிறுவப்பட்ட இந்தியர் கழகம்தான் நிலவுடமையாளர்களின் ஆதிக்கத்துக்கு எதிராகப் படித்த நடுத்தர வகுப்பாரின் பிரதிநிதியான முதல் நிறுவனம். மிகப் பிற்போக்கான பிரிட்டிஷ் இந்தியச் சங்கங்களின் கிளைகளும், அவற்றைவிட முற்போக்கான இந்தியர் கழகத்தின் கிளைகளும் நாட்டின் பல பகுதிகளிலும் தொடங்கப் பெற்றன. 1883இல் கல்கத்தாவின் இந்தியர் கழகம் முதலாவது அனைத்திந் திய தேசீய மகாநாட்டைக் கூட்டியது; வங்காளம், சென்னை, பம்பாய், ஐக்கிய மாகாணங்களின் பிரதிநிதிகள் அதில் கலந்து கொண்டார்கள். தேசீய மகாநாடு 1883இல் ஆனந்த மோகன் போஸின் தலைமையில் கூடியது; பின்னர் 1898இல் இவர் தேசீய காங்கிரஸின் தலைவரானார்; துவக்க உரையில் அந்த மகாநாடு, தேசீய நாடாளு மன்றத்திற்கான முதல் கட்டம் என்று வருணித் தார். இவ்வாறாக, இந்திய தேசீய காங்கிரஸ் என்ற கருத்து ஏற்கெனவே இந்தியப் பிரதிநிதிகளால் உருவாக்கப்பெற்று அவர் களுடைய செய்கைகளாலும் முயற்சியாலும் முதிர்ந்து கொண் டிருந்த வேளையில் அரசு பங்கு கொள்ளும் நோக்கத்துடன் தலையிட்டது. ஏற்கனவே இல்லாத, அல்லது,அடிப்படை இல்லாத ஓர் இயக்கத்தை அரசு நிறுவிவிடவில்லை. எப்படியும் இந்த இயக்கம் தோன்றிவிடும், இதன் வளர்ச்சியைத் தவிர்க்க முடியாது என்று எதிர்பார்த்தே அரசு முன்வந்து இந்த இயக்கத்தின் பொறுப்பை ஏற்றது.

அரசின் நோக்கில், வரப்போகிற ஒரு புரட்சியை முறியடிக் கும் அல்லது தடுத்து நிறுத்தும் ஒரு முயற்சியின் பிரதிபலிப்பாக தேசீய காங்கிரஸ் தோற்றுவிக்கப்பட்டது. ஏற்கனவே கிடைத் துள்ள ஆவணங்களும் நினைவுக் குறிப்புகளும் இதை நிரூபிக்கின் றன; எனினும் முழுவிவரமும் கிடைப்பதற்கு அவற்றை ரகசிய மாய் இன்னும் வைத்துள்ள ஆவண நிலையங்கள் திறக்கப்பட வேண்டும்; ஆட்சியாளர்கள் மாறும் வரை அவை ரகசியமாகவே இருக்கக் கூடும்.

தேசீய காங்கிரஸின் அதிகார பூர்வமான நிறுவனர், ஆங்கிலேய உத்தியோக வர்க்கத்தைச் சேர்ந்த ஏ. ஓ. ஹ்யூம்; இவர் 1882 வரை அரசு ஊழியத்தில் இருந்தவர்; அப்பால் ஓய்வு பெற்று காங்கிரஸ் ஸ்தாபனம் அமைக்கும் பணியை மேற்கொண்டார். அரசுப் பணியில் இருந்த காலத்தில் ரகசியப் போலீசாரின் பெரிய அறிக்கைகள் ஹ்யூமின் கைக்கு வந்தன; மக்களின் கொந்தளிப்பு அதிகரிப்பதையும் ரகசியமான சதிக்கூட்டம் பரவுவதையும் அவை வெளிப்படுத்தின. எழுபதுகள் கடும் பஞ்சங்கள் தோன்றிய காலம்; அதனால் துன்புற்ற மக்களின் கொதிப்பு தக்காண உழவர் கலகங்களாய் உருவெடுத்தது. விக்டோரியா ராணி இந்தியாவின் சக்கரவர்த்தினியாக அறிவிக்கப்பட்ட அதே 1877இல் பயங்கரமான பஞ்சமும், இரண்டாவது ஆப்கானியப் போரும் நிகழ்ந்தன. கொந்தளிப்பை ஒடுக்க அடக்குமுறை பிரயோகம் செய்யப்பட்டது. 1878 ஆம் ஆண்டில் "தாய் மொழிச் செய்தி ஏடுகள் சட்டம்" நிறைவேற்றப்பட்டதன் வாயிலாக செய்திச் சுதந்திரம் பறிக்கப்பட்டது. அடுத்த வருடம், ஆயுதச் சட்டத்தால் காட்டு விலங்குகளின் தாக்குதலைச் சமாளிப்பதற்குக்கூட கிராமவாசிகள் ஆயுதங்கள் ஏதும் வைத்துக் கொள்ளமுடியவில்லை. பொதுக் கூட்டம் கூடும் உரிமை குறைக்கப்பட்டது. ஹ்யூமின் வாழ்க்கை வரலாறு ஆசிரியர் எழுதுகிறார்:

> "ரஷியப்பாணி போலீஸ் அடக்குமுறையுடன் அதிர்ஷ்டம் கெட்ட இந்தப் பிற்போக்கு சட்டங்களும் சேர்ந்து, லிட்டன் பிரபுவின்கீழ் இருந்த இந்தியாவைப் புரட்சிகரமான எழுச்சிக்கு வெகு அருகில் இழுத்துச் சென்றுவிட்டன; தக்க தருணத்தில் திரு. ஹ்யூமும் அவருடைய இந்திய ஆலோசனையாளர்களும் தலையிட ஊக்கம் கொண்டனர்."
>
> (சர். வில்லியம் வெட்டர்பர்ன்: 'ஆலன் ஆக்டேவியன் ஹ்யூம், இந்திய தேசீய காங்கிரஸின் தந்தை', 1913, பக்கம் 101.)

அவ்வாறு தலையிட்டதன் நோக்கத்தை சர் வில்லியம் வெட்டர்பர்ன் மேலும் விளக்குகிறார்:

> "வைசிராய் லிட்டன் பிரபுவின் ஆட்சி முடிவடையுமுன், அதாவது சுமார் 1878, 1879 இல், ஓங்கிக் கொண்டிருந்த கொந்தளிப்பைத் தடை செய்வதற்கு உறுதியான நடவடிக்கை ஏதாவது எடுக்க வேண்டுமென்று திரு. ஹ்யூம் உறுதி கொண்டார். மக்களின் பொருளாதாரத் துயரங்கள் காரணமாகவும் அறிஞர்கள் பகைமை காரணமாகவும், அரசுக்கும் எதிர்கால இந்திய நலனுக்கும் ஏற்படவிருந்த அபாயத்தைப்

பற்றி நாட்டின் பல பகுதிகளில் இருந்த நலம்விரும்பிகளிட மிருந்து அவருக்கு எச்சரிக்கைகள் வந்தன.''

(மேற்படி புத்தகம், பக். 50)

அரசின் ஆசியுடன் காங்கிரஸ் அஸ்திவாரம் இடப்படுமுன் அடக்கு முறைச் சட்டங்கள் வந்தன. இரண்டு காரியங்களும் ஒன்றுக் கொன்று முரண்பட்டவை அல்ல, ஒன்றை ஒன்று நிறைவு செய் பவை. வரவிருந்த புரட்சி இயக்கம் முற்றிலும் வீழ்த்தப்பட்ட பிறகுதான், ''ஓங்கிக்கொண்டிருந்த கொந்தளிப்பைத் தடை செய்வதற்கான'' அடுத்த முயற்சியாக, விநயமான ஒரு தலைமையின் கீழ் சட்ட சம்மதமான ஓர் இயக்கத்தை அமைக்கத் தீர்மானிக்கப்பட்டது. அடக்கு'முறை — சமாதான முறை, இரட்டை அல்லது மாறி மாறி வரும் முறை, உறுதியாகப் போரிடுவோரை வீழ்த்துவது, ''விசுவாசி''களான மிதவாதி களுடன் நேசம் கொள்வது—ஆகிய இந்த முறை ஏகாதிபத்திய அரசியல் வல்லுநர்கள் அடிக்கடி மேற்கொள்ளும் முறையாகும்; தொடக்கமாகவிருந்த காலத்தில் இந்த ராஜதந்திர முறை பலமுறை கையாளப்படப் போகிறது.

''மிகப் பயங்கரமானதொரு புரட்சியின் பெருத்த அபாயத் தில் நாம் உண்மையாகவே இருக்கிறோம் என்பதைப் பற்றி அப்போதோ அல்லது இப்போதோ எனக்கு எள்ளளவும் ஐயம் ஏற்படவில்லை'' என்ற முடிவுக்கு வந்ததாய் ஹ்யூம் எழுதும் படியாக அவருக்குக் கிடைத்த சாட்சியத்தின் தன்மை யாது? அவருடைய தஸ்தாவேஜுகளிலிருந்த ஒரு குறிப்பிலிருந்து அவருடைய சொற்களிலேயே அந்தச் சாட்சியத்தைப் பயனுள்ள முறையில் விவரிக்கலாம் (அவருடைய குறிப்பில் காணப்பட்ட விஷயங்கள், அவருடைய வாழ்க்கை வரலாற்றாசிரியர் சர் வில்லியம் வெட்டர்பர்ன் மேற்கோள் காட்டியதை அப்படியே கொடுத்துள்ளோம்; ஏனைய விஷயங்கள் அந்த ஆசிரியரால் தொகுக்கப்பட்டவை):

'' 'ஒரு பயங்கரமான எழுச்சி ஏற்படக்கூடிய அபாயத்திற்கு அண்மையில் நாம் இருக்கிறோம் என்று அச்சாட்சியம் அச்சமயம்—லிட்டன் பிரபு வெளியேறுவதற்கு பதினைந்து மாதங்களுக்கு முன்பு என எண்ணுகிறேன்—எனக்கு உறுதி யான நம்பிக்கை உண்டாக்கியது. என்னிடம் பெரிய எழு தொகுதிகள் காட்டப்பட்டன (பர்மா, அஸ்ஸாம், சில சிறு பகுதிகள் நீங்கலாக, நாட்டைக் கூறுபோட்டிருந்த திட்டத் துக்கு ஏற்ப அவ்வேழு புத்தகங்கள் இருந்தன); அவற்றில் ஏராளமான குறிப்புகள் எழுதப்பட்டிருந்தன; பெரிதும் சிறிதுமான ஆங்கிலத் தொகுப்புகள் அல்லது மொழி

பெயர்ப்புகள்—தாய்மொழியில் இருந்த அறிக்கைகள் அல்லது ஏதாவதொரு வகை கடிதப் போக்குவரத்துகளின் ஆங்கில மொழி பெயர்ப்புகள், மாவட்ட வாரியாகவும், துணை மாவட்ட வாரியாவும், துணைத்தொகுதி வாரியாகவும், நகரங்கள், சிற்றூர்கள், கிராமங்கள் வாரியாகவும் அப் புத்தகங்களில் வரிசைப் படுத்தப்பட்டிருந்தன. இந்தக் குறிப்புகளின் எண்ணிக்கை மிக ஏராளம்; அச்சமயத்தில் முப்பதாயிரத்துக்கும் மேற்பட்ட நிருபர்களிடமிருந்து தகவல்கள் வந்ததாய்ச் சொல்லப்படுகிறது.' குறிப்புகளில் பல, கீழ் வகுப்பு மனிதர்களின் உரையாடல்களை பற்றியவை. 'உள்ள நிலைமையால் நிராசையுற்ற இந்த ஏழை மக்கள், பட்டினிகிடந்து சாகவேண்டியதாகும் என்று திகில் கொண்டு; 'ஏதாவது' செய்யவேண்டும் என விழைவதையே அக்குறிப்புகள் எல்லாம் காட்டின. அவர்கள் ஏதாவது செய்ய் இருந்தனர், ஒருவருக்கு ஒருவர் துணையாக இருக்க உறுதியாக இருந்தனர்; அந்த ஏதாவது என்பது வன்முறையே' பழையவாள்களையும், ஈட்டிகளையும், தீக்குச்சி, வெடித்துப்பாக்கிகளையும் ரகசியமாகப் பதுக்கிவைக்கப் பட்டிருந்ததையும், தேவைப்படும் போது தயாராக இருக்கும் என்பதையும் எண்ணற்ற குறிப்புகள் காட்டின. தொடக்க நிலையில், உடனடியான விளைவாக அது நம் அரசுக்கு எதிரான புரட்சியாக இருக்கும் என்றோ, அல்லது, உண்மையான அர்த்தத்தில் புரட்சியாக இருக்கும் என்றோ யாரும் கருதவில்லை. திடீர் என வன்முறைக் குற்றங்களும், ஆங்காங்கு வெறுக்கப்படுவோர் கொலைகளும், பாங்கர்கள் கொள்ளையும், கடை வீதிகள் கொள்ளையும் நிகழும் என்று எதிர்பார்க்கப்பட்டது. 'மிகக் கீழ்பட்ட அரைப்பட்டினி வகுப்பினர் இப்போதுள்ள நிலைமையில், முதலில் சில குற்றங்கள் நேர்ந்தாலே போதும், அதே மாதிரி நூற்றுக் கணக்கான குற்றங்களுக்கு அவை பச்சைக் கொடி காட்டி, அதிகாரிகளையும் மரியாதைக்குரிய வகுப்பினரையும் முடக்கும் வகையில் பொதுவான சட்ட ஒழுங்கு கெட்ட நிலை தோன்றும் எனக் கருதப்பட்டது. ஓர் இலை மீதுள்ள நீர்த் துளிகளென, சிறிய குழுக்கள் எல்லா இடங்களிலும் பெரிய கூட்டங்களாய்த் திரளத் தொடங்கும் எனவும்; நாட்டிலுள்ள தீயசக்திகள் யாவும் சேரும் எனவும்; மிக விரைவில் இக் கூட்டங்கள் மாபெரும் அளவாகும் எனவும்; அச்சமயத்தில் அரசின்மீது ஆத்திரமும் கசப்பும் கொண்ட—ஒருகால் காரணமில்லாமலே—படித்த வகுப்பினரில் ஒரு சிறிய கோஷ்டியினர் இயக்கத்தில் கலந்துகொண்டு, ஆங்காங்கு

தலைமைப் பொறுப்பு ஏற்று, எழுச்சிக்கு ஒரு தெளிவான பொருள் தந்து, அதை ஒரு தேசீயப் புரட்சியாக நடத்தலாம் எனவும் கருதப்பட்டது.' ''

(சர் வில்லியம் வெட்டர்பர்ன், மேலே குறிப்பிடப்பட்ட வரலாறு, பக். 80—81.)

1885 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் அனுபவமிக்க அரசியல்வாதியான வைசிராய் டப்பரின் பிரபுவுடன் ஹ்யூம் தொடர்பு கொண்டார், நிலைமையை விளக்குவதற்கு. ஏகாதிபத்தியத்தின் தலைமையகமான சிம்லாவில் நிகழ்ந்த இச் சந்திப்பின் போதுதான் இந்திய தேசியக் காங்கிரஸ் அமைக்கும் திட்டம் உருவாக்கப்பட்டது. இத்தோற்றுவாய் பற்றின தம் விளக்கத்தைக் காங்கிரஸின் முதல் தலைவரான டபுள்யூ. சி. பானர்ஜீ வெளியிட்டுள்ளார்:

''இந்திய தேசீய காங்கிரஸ் தொடங்கப்பட்ட விதத்தையும் நடத்தப்படும் விதத்தையும் பார்ப்போரில் பலருக்கு, அது உண்மையில், டப்பரின், ஆவா பிரபுவின் வேலை அது, அவர் வைசிராயாக இருந்தபோது செய்த பணி அது என்ற தகவல் புதிய செய்தியாக இருக்கும். நாட்டின் தலையாய அரசியல் வாதிகளை ஆண்டுக்கொருமுறை ஒருங்குதிரட்டி, சமூக விஷயங்களைப் பற்றிச் சர்ச்சை செய்யவும் ஒருவரோடொருவர் நட்பு முறையில் பழகவும் வழி ஏற்பட்டால் நாட்டுக்கு மிக நன்மை உண்டாகும் என்கிற எண்ணம் திரு. ஏ. ஓ. ஹ்யூமுக்கு 1884 இல் தோன்றியது. அவர்களுடைய பேச்சில் அரசியல் கலப்பதை அவர் விரும்பவில்லை....

''டப்பரின் பிரபு இவ்விஷயத்தில் மிகுந்த அக்கறை காட்டினார்: சிறிது காலம் சிந்தித்த பிறகு அவர் ஹ்யூமை அழைத்தார்; ஹ்யூமின் திட்டத்தால் மிகவும் பயனேதும் இராது என்பதே தம் கருத்து என்று கூறினார்; இங்கிலாந்தில் அரசியின் எதிர்க்கட்சி ஆற்றும் பணியை இந்நாட்டில் ஆற்றக் கூடிய குழுக்கள் ஏதுமில்லை...இந்திய அரசியல்வாதிகள் வருடத்துக்கொரு முறைகூடி, நிர்வாகத்தில் எவ்விதக் குறைகள் உள்ளன, அவற்றைத் திருத்த வழி என்ன என்பதைக் குறிப்பிடவேண்டும் என்ற அவர், தம் கருத்துப்படி கூடுகிற கூட்டத்திற்கு அங்குள்ள கவர்னர் தலைமை வகிக்கக்கூடாது என்றும், ஏனெனில் கவர்னருக்கு முன்னிலையில் மக்கள் மனம் விட்டுப் பேசமாட்டார்கள் என்றும் உரைத்தார். டப்பரின் பிரபுவின் யோசனை திரு. ஹ்யூமுக்கும் திருப்தி தந்தது. கல்கத்தா, பம்பாய், சென்னை, நாட்டின் இதர பகுதி

களிலுள்ள சிறந்த அரசியல் வாதிகளிடம் இருதிட்டங்களையும்—தம் திட்டம், டப்பரின் பிரபுவின் திட்டம்—வெளியிட்டு அவர்கள் கருத்தைக் கேட்க, அவர்கள் டப்பரின் பிரபுவின் திட்டத்தை ஒரு மனதுடன் ஏற்று, அதைச் செயலாக்க முனைந்தனர். டப்பரின் பிரபு தாம் இந்நாட்டில் இருக்கும்வரை தம் பெயரை வெளியிடக்கூடாது என்று திரு. ஹ்யூமிடம் நிபந்தனை ஒன்று விதித்திருந்தார்.''

(டபிள்யூ. சி. பானர்ஜீ: ''இந்திய அரசியலுக்கு அறிமுகம்'', 1898.)

தாராள குணம் வாய்ந்த ஏகாதிபத்தியத்தின் பரம்பரைக் கொள்கை இங்கு தெளிவாகிறது. ஆரம்பகாலத் தேசீய இயக்கத்தைப் பற்றி அண்மைக்கால வரலாற்று ஆசிரியர்கள் சொல்லும் கதை கீழே உள்ளது :

''1857க்குப் பின் காங்கிரஸ் தோற்றத்துக்கு முந்தின சில ஆண்டுகள் மிக மிக அபாயகரமானவை. வரவிருந்த ஆபத்தை உணர்ந்து அதைத் தடுக்க முயன்றவர், ஆங்கிலேய அதிகாரிகளுள் ஒருவரான ஹ்யூம். நிலைமை மிகப் பயங்கரமாகியுள்ளதை அதிகாரிகளுக்குத் தெரிவிப்பதற்காக அவர் சிம்லாவுக்குப் போனார். தேர்ந்த காரியவாதியான புதிய வைசிராய் ஹ்யூமைச் சந்தித்ததன் விளைவாய் நிலைமையின் கடுமையை உணர்ந்து, காங்கிரஸ் அமைப்புப் பணியைத் தொடருமாறு ஹ்யூமை ஊக்கியிருக்கலாம். இந்த அனைத்திந்திய இயக்கத்துக்கான காலம் முற்றிலும் கனிந்திருந்தது. ஒரு விவசாய எழுச்சி படித்த வகுப்பாரின் அநுதாபத்தையும் ஆதரவையும் பெற்றிருக்கலாம்; அதன் இடத்தில், நவபாரதத்தைப் படைப்பதற்குப் புதிதாய்த் தோன்றிய வகுப்பினருக்கு அது ஒரு தேசீய மேடை அளித்தது. வன்முறையை அடிப்படையாய்க் கொண்ட ஒரு புரட்சிகரமான நிலைமை மீண்டும் தோற்றுவிக்கப்படுவதைக் காலப்போக்கில் தடுத்தது என்பதால் எல்லாம் நன்மைக்கே எனக் கொள்ளவேண்டும்.''

(ஆண்ட்ரூஸ், முகர்ஜீ: ''இந்தியாவில் காங்கிரஸ் தோற்றமும் வளர்ச்சியும்'', பக். 128—9.)

''வன்முறையை அடிப்படையாய்க் கொண்ட ஒரு புரட்சிகரமான நிலைமைக்கு'' எதிரான ஒரு கருவியாகத் தேசீய காங்கிரஸ் செயல்பட வேண்டும் என்ற அதிகார வட்டாரத்தினரின் விருப்பம் காந்தியின் காலத்தில் உண்டானது அல்ல என்பதை அறியலாம்; இக்கொள்கையை அதன் அதிகார பூர்வமானதாக ஏகாதிபத்தியம் அதன் தொடக்க காலத்திலேயே விதைத்துவிட்டது.

காங்கிரஸின் பணியைப் பற்றி ஹ்யூமின் கருத்து என்ன என்பதை இங்கு மேற்கோள் காட்டலாம்:

> ''நம் செய்கையாலேயே தோற்றுவிக்கப்பட்ட பெரிய, மேலும் பெருகுகிற சக்திகள் தப்புவதற்கு ஒரு பாதுகாப்புக் கபாடம்(சேப்டி வால்வ்) மிக அவசரமாய்த் தேவைப்பட்டது; நம் காங்கிரஸ் இயக்கத்தைவிடப் பயன்தரத்தக்க பாது காப்பு கபாடத்தை உருவாக்க முடியவில்லை.''

''விசுவாசிகளை''த் ''தீவிரவாதிகளி''டமிருந்து பிரித்து, அரசுக்கு ஆதரவான ஓர் அடிப்படையை காங்கிரஸ் ஸ்தாபனத் தின் வாயிலாக உருவாக்கவேண்டும் என்பதே டப்பரின் பிரபுவின் நோக்கம்; காங்கிரஸ் ஸ்தாபிக்கப்பட்ட மறு ஆண்டில், 1886இல், படித்த வகுப்பாரின் கோரிக்கைகளுக்குப் பதிலளித்து நிகழ்த்திய உரையில் இந்த நோக்கம் தெளிவுபடக் கூறப்பட்டுள்ளது:

> ''ஐரோப்பிய ஜனநாயகக் கிளர்ச்சிக் கருவியை விரய பயமின்றிப் பயன்படுத்தக் கூடிய நாடல்ல இந்தியா. இந்தப் பல இயக்கங்களிலிருந்து தோன்றிய கோரிக்கைகளை விழிப் போடும் கவனத்தோடும் பரிசீலித்து, வழங்க முடிந்த வற்றையும் விரும்பத்தக்கவற்றையும் விரைவில் நற்கருணை யுடன் வழங்கிவிட்டு, அடுத்த பத்துப் பதினைந்து ஆண்டு களுக்கு இச்சலுகைளே இந்திய நிர்வாக முறைக்கு இறுதி யான ஏற்பாடு என அறிவித்துவிட வேண்டும்; பொதுக் கூட்டங்களையும் கனல் பறக்கும் பேச்சுக்களையும் தடை செய்திட வேண்டும் என்பதே என்னுடைய சொந்த விருப்ப மாகும்.
>
> தீவிரவாதிகளின் கோரிக்கைகள் ஒருபுறம் இருக்கட்டும்... மேலும் முன்னேறிய எந்தக் கட்சியின் கொள்கைகளும் அபாயகரமானவையோ பகட்டானவையோ அல்ல. நான் சந்தித்த சுதேசிகளில் அறிவும் ஆற்றலும் மிக்கவர்கள் பலர் உள்ளனர்; அவர்களுடைய நம்பகமான ஒத்துழைப்பை ஐயமின்றி நம்பலாம். அரசை அவர்கள் ஆதரிக்கிறார்கள் என்பதாலேயே, இப்போது சட்டமன்றத்தில் நிர்ப்பந்தமாக நிறைவேற்றப்படுவதாய்த் தோற்றம் தரும் அரசின் பல காரியங்களுக்கு மக்களின் ஆதரவு கிடைக்கும். அவர்களுக்கு ஒரு சுதேசக் கட்சியின் பின் பலம் இருந்தால், இன்று உள்ளது போல், புயலால் கொந்தளிக்கும் கடலுக்கு நடுவில் தனித்துக் கிடக்கும் பாறை, நாலு திசைகளிலிருந்தும் அதன் அடித்தளத்தைத் தகர்க்க விரும்புவோரின் ஏககாலத் தாக்குதலுக்கு உள்ளானது போன்ற இந்திய அரசின் சங்கட மான நிலைமை மறைந்து போகும்,''

(சர் ஆல்பிரெட் லயால்: ''டப்பரின், ஆவா பிரபுவின் வாழ்க்கை வரலாறு'', தொகுதி II, பக். 151-2.)

இங்கு கணக்கு மிகவும் தெளிவாயுள்ளது. உடனடியான விளைவிலிருந்து அது முற்றிலும் வெற்றி பெற்றிவிடுமோ எனத் தோன்றியது. முதல் காங்கிரஸ் ஏகாதிபத்தியத்திடம் மிகவும் பணிவாக இருந்தது; அதனுடைய ஒன்பது தீர்மானங்களும் நிர்வாகச் சீர்திருத்தம் பற்றின விரிவான யோசனைகள்; சட்ட மன்றங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட சில உறுப்பினர்கள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும் என்னும் வேண்டுகோளை தேசீய ஜனநாயகக் கோரிக்கையின் சாயல் உடையதாய்க் கூறலாம். திரு. ஹ்யூம் தன் மந்தையை நல்லமுறையில் செலுத்தினர் என்பதை முதலாவது காங்கிரஸின் அதிகாரபூர்வமான அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள முடிவுக் கதையிலிருந்து அறியலாம்.

''தனக்கு அளிக்கப்பட்ட பெருமைக்காக நன்றி தெரிவித்த திரு. ஹ்யூம், வாழ்த்து கூறும் பொறுப்பு தன்னிடம் ஒப்படைக்கப்பட்டிருப்பதால்—ஒரு போதும் செய்யாதிருப்பதை விடக் காலம் தாழ்ந்தாவது செய்வது மேல் என்னும் வாக்கிற்கிணங்க—வாழ்த்தை முன்மொழியத் தன்னை அனுமதிக்கும்படி கோரிய அவர், யாருடைய காலணிகளின் கயிற்றைத் தளர்த்திவிடவும் தனக்கு அருகதை இல்லையோ, யாருடைய அன்புக்கு அவர்கள் யாவரும் உரியவர்களோ, யாருக்கு அவர்கள் யாவரும் குழந்தைகள் போன்றவர்களோ,—யார் அவர் என நவிலவும் வேண்டுமோ- அந்த மிக மாட்சிமை தங்கிய அரசி—சக்கரவர்த்தினிப் பிராட்டியாருக்கு, மும்முறையன்று, மும்முறைக்கு மும்முறை, முடியுமானல் அதற்கும் மும்முறை வாழ்த்து உரைக்குமாறு முன்மொழிந்தார்.

''அடுத்து வெடித்த கைத்தாளப் பேரொலியில், பேச்சாளரின் சொச்சப் பேச்சு மறைந்திட, அவர் வேண்டிய வாறு மீண்டும் மீண்டும் வாழ்த்து உரைக்கப்பட்டது.''

இந்தத் தொண்டடிமைத் தொடக்கத்திலிருந்து (ஆயினும், ஆழத்திலும் ஆழத்தில் தாழ்ந்து காலணியை நக்கும் மொழியைப் பேசியவர் கீழை நாட்டார் அல்ல, ஓர் ஆங்கிலேயர் என்பதைக் கவனிக்கவேண்டும்.) காங்கிரஸ் ஒரு சட்ட விரோதமான ஸ்தாபனம் என அறிவிக்கப்பட்டு, அரசாங்கத்தால் வேட்டை யாடப்பட்டு, லட்சக்கணக்கான இந்திய விடுதலைப் போராட்ட

வீரர்களின் பக்திக்குப் பாத்திரமான காலத்துக்கு எவ்வளவோ தூரம்.

ஆரம்ப காலத்தில் காங்கிரஸிற்கு இருந்த இரட்டைத் தன்மை, அதனுடைய பின் வரலாற்றுக்கு மிகவும் முக்கியம். அதன் பணியிலும் வாழ்விலும் உள்ள இந்த இரட்டைப் புரிகள் அதன் வரலாறு நெடுகிலும் ஓடுகின்றன; ஒரு பக்கம், மக்கள் இயக்க ''பயங்கரத்துக்கு'' விரோதமாக ஏகாதிபத்தியத்துடன் ஒத்துழைக்கும் புரி; மறுபக்கம், தேசீயப் போராட்டத்தில் மக்களுக் குத் தலைமை தாங்கும் புரி. அதன் தலைமையிலுள்ள முரண்பாடு கள் நெடுகிலும் காணப்படுகிற, பழைய நிலையிலிருந்த கோகலே முதல் அவருடைய சீடரான காந்தியின் புதிய நிலைவரை காணப் படுகிற இந்த இரட்டைத் தன்மை (இந்த இருவருக்கும் இடையி லுள்ள வேற்றுமைகள், மக்கள் இயக்கத்தின் நிலையிலுள்ள வேற்றுமைகளால் ஏற்பட்டு, அவற்றிற்கு ஏற்பப் போர்முறையை மாற்றிக்கொள்ள வேண்டிய அவசியத்தினால் தோன்றியவை.) இந்தியப் பூர்ஷ்வாக்களின் இரட்டைத்தன்மை அல்லது தட்டித் தடுமாறும் தன்மையைப் பிரதிபலிப்பதாகும்; பிரிட்டிஷ் பூர்ஷ்வாக் களுக்கு எதிராகப் போராடவேண்டும், அதே சமயம் இந்திய மக்களுக்கும் தலைமை வகிக்கவேண்டும்; ஆனாலும் அதே நேரத்தில் ''மிக விரைவாக''ப் போனால் ஏகாதிபத்தியத்தின் சலுகை களோடு தங்கள் சலுகைகளும் ஒழிந்திடுமோ என்ற அச்சம். ஏகாதிபத்தியத்துக்கும், அதன் துணைநாடுகிற சலுகை பெற்ற நலன்களுக்கும் விரோதமாக, மக்கள் மீதும் அவர்கள் நலன்கள் மீதும் முழுக்க முழுக்கத் தேசீய இயக்கம் வளர்ச்சி கண்டால் தான் இந்த முரண்பாடுகளை முற்றிலும் தீர்க்க முடியும்.

அத்தியாயம் 11

# தேசீயப் போராட்டத்தின் மூன்று கட்டங்கள்

''அரசியல் நெருக்கடி ஏற்பட்ட காலங்களில், இந்நாட்டு மக்களுக்கு வன்முறையை வெறுப்பதையும் ஒழுங்கு முறையை நேசிப்பதையும் பொறுமையைக் கடைப்பிடிப்பதையும் நினைவில் வைத்துக் கொள்ளும்படி சொல்வதைத் தவிர வேறோர் அறிவுரையும் சொல்லப்படாதிருந்திருப்பின் இந் நாட்டு சுதந்திரங்களை ஒருநாளும் அடைந்திருக்க முடியாது என்பதைக் கூற நான் வருந்துகிறேன்.''

—வில்லியம் எவார்ட் கிளாட்ஸ்டன்

அரை நூற்றுண்டுக்கு மேலாக இந்திய தேசீயம் அடைந்த வளர்ச்சியைப் பற்றித் திருப்திகரமாக எழுத வேண்டுமாயின் தனி யாகவே அதை ஆய்ந்து எழுத வேண்டும்; ஏனெனில், தேசீய ஒற்றுமைக்காகவும் விடுதலைக்காகவும் ஒரு மக்கள் நடத்திய போராட்டத்தின் மிகவும் கடுமையான கட்டங்களைக் கடப்பதைப் பற்றிய வரலாறு முழுவதுமே அதில் அடங்கும். நிகழ்கால அரசியல் நிலைமையை விளக்க வேண்டும் என்கிற உடனடியான நோக்கத்திற்காக, அந்த வளர்ச்சியின் குறிப்பிடத்தக்க எல்லைக் கட்டங்களையும், தற்கால இயக்கத்தின் தன்மையை உதவியவை யும் தங்கள் பங்குப்பணியை ஆற்றியவையுமான முதன்மையாகத் தொடர்ந்து வந்த மனப்பாங்குகளையும் கூர்ந்து பார்க்க வேண்டு வதே மிக முக்கியமாகும்.

இந்திய தேசீயத்தின் வரலாற்று வளர்ச்சியில் மூன்று பெரும் போராட்ட அலைகள் கவனிக்க வேண்டியவை; ஓரலை மற்றதைவிட உயர்ந்தது; ஒவ்வொன்றும் இயக்கத்தின்மீது நிரந்தரமான சுவடுகளைப் பதித்துவிட்டுப் புதிய கட்டத்துக்கு வழியைத் திறந்தது. இந்திய தேசீயத்தின் தொடக்க நிலையில் அது 'பெரும்' பூர்ஷ்வாக்களை,—நிலவுடைமையாளர்களுள் முற்போக்கானவர்கள், புதிய தொழிலில் ஈடுபட்ட பூர்ஷ்வாக் கள், அறிவாற்றலோடு பண வசதியும் படைத்தவர்கள் ஆகியோ ரைப்-பிரதிபலித்தது என்பதை முன்பே கண்டோம். 1914க்கு முந்தின காலத்தில், இந்தச் சாந்தமான நீர்ப்பரப்பை அலைக்

கழித்த கொந்தளிப்பின் பேரலை நகர்ப்புறத்திலுள்ள சிறு பூர்ஷ்வாக்களின் அதிருப்தியையே பிரதிபலித்தது; ஆனால், இன்னும் அது பொது மக்களை அணுகவில்லை. 1914-18 போருக்குப் பிறகு தான் பொது மக்களும், அது போன்றே உழவர்களும், தொழில் துறையைச் சேர்ந்த தொழிலாளர் வர்க்கப் புது சக்தியும் தேசீய இயக்கத்தில் பங்கு கொள்ளும் நிலைமை எழுந்தது. மக்கள் போரின் இரு பேரலைகள் எழுந்தன: போரையடுத்த சில ஆண்டுகளில் முதல் அலை; உலகப் பொருளாதார நெருக்கடியை அடுத்த சில ஆண்டுகளில் இரண்டாம் அலை. இந்தப் போராட்ட வரலாறு காரணமாக, இந்திய தேசீயம் தொடக்ககாலம் முதல் இன்று வலிமையின் உச்சாணிக் கொம்பில் உள்ளது. 1946 தேர்தலில் காங்கிரஸ் பெருமிதமான வெற்றிபெற்று பெரும்பாலான மாகாணங்களில் அமைச்சரவைகளை அமைத்ததைத் தொடர்ந்து, தீர்மானமான பிரதிநிதித்துவ நிலையைப் பெற்று விட்டது; இன்று மிகக் கடுமையான தலைமைப் பொறுப்புகள் அதை எதிர்நோக்கியுள்ளன. தேசீய இயக்கம் இன்று மீண்டும் வழிகள் பிரியுமிடத்தில் நிற்கிறது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் விதியையும், இந்திய மக்களின் எதிர்கால விதியையும் இறுதியாக நிர்ணயிப்பதான ஒரு பெரிய, புதிய போராட்ட சகாப்தம் ஆரம்பமாகிறது என்பதைப் பார்வையாளர்கள் அனைவரும் காண்கிறார்கள். இந்த நிகழ்கால நிலைமையின் பிரச்னைகளைப் பொறுத்தமட்டில், போராட்டத்தின் பழைய கட்டங்களையும் அவற்றின் படிப்பினைகளையும் பற்றி விரைவான ஓர் ஆய்வு செய்யலாம்.

## 1. போராட்டத்தின் முதல் பேரலை 1905–1910

நிறுவனர்கள் வகுத்த பாதையில் தேசீய காங்கிரஸ் இருபது வருடங்கள் முன்னேறியது. இந்த இருபது வருடங்களில், எந்த விதமான சுயாட்சிக்கான உரிமைக் கோரிக்கைகளும்—அதாவது, அடிப்படையான தேசீயக் கோரிக்கைகள்—அதன் தீர்மானங்களில் வெளியிடப்படவில்லை; பிரிட்டிஷ் ஆட்சி முறைக்குள் அதிகப்படியாக இந்தியர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும் என்று மட்டுமே கோரப்பட்டது. மிக அதிகபட்ச கோரிக்கை, பிரதிநிதித்துவ நிறுவனங்கள் வேண்டும் என்பதே; சுயாட்சி இன்னும் கேட்கப்படவில்லை. ஆரம்பகால மிதவாதத் தலைவர்களின் நோக்கத்தை, அவர்களுள் மிகத் திறமையுள்ளவர்களில் ஒருவரும், மிக மிதவாதியும், 1890 ஆம் ஆண்டுக் காங்கிரஸ் தலைவருமான ரமேஷ்சந்திர தத்தின் அறிக்கையில் தெளிவாய்க்

காணலாம்; 1901இல் ''இந்திய மக்களின்'' கோரிக்கையை அவர் பின்வருமாறு வெளியிட்டார்:

''இந்திய மக்கள் திடீர் மாறுதல்களையோ புரட்சிகளையோ விரும்புவதில்லை. சட்டமியற்றும் ஜூபிடர்களின் (ரோமானியர்களின் முக்கியமான தெய்வம்) தலைகளிலிருந்து ஆயுதபாணிகளான மினர்வாக்கள் (ரோமானியர்களின் அறிவுக் கடவுள்) தோன்றுவதைப்போல் புதிய அரசியலமைப்புச் சட்டங்களை அவர்கள் கேட்கவில்லை. ஏற்கனவே வகுக்கப்பட்ட வழியூடு செயல்படுவதையே அவர்கள் விரும்புகிறார்கள். இப்போதைய அரசாங்கத்தை வலுப்படுத்தி, அதை மக்களோடு இன்னும் நெருக்கமாய்த் தொடர்புப் படுத்தவே அவர்கள் விழைகிறார்கள். ராஜ்யக் காரியதரிசி கவுன்சிலிலும், வைசிராயின் நிர்வாகக் கவுன்சிலிலும் இந்திய வேளாண்மைக்கும் தொழில்களுக்கும் பிரதிநிதிகளான சில உறுப்பினர்கள் இருக்க வேண்டும் என விரும்புகிறார்கள். ஒவ்வொரு மாகாணத்தின் நிர்வாகக் கவுன்சில் ஒவ்வொன்றிலும் இந்திய உறுப்பினர்களுக்கான அவர்கள் ஆசைப்படுகிறார்கள். ஒவ்வொரு முக்கியமான நிர்வாகப் பிரச்னையிலும் இந்திய மக்களின் நலன்களைப்பற்றிப் பேசும் பிரதிநிதிகள் கலந்து கொள்ள வேண்டுமென்று அவாவுகிறார்கள். சாம்ராஜ்யமும் அதன் ராஜ்யங்களும் மக்களின் ஒத்துழைப்போடு நிர்வாகம் செய்யப்பட வேண்டுமென அவர்கள் கருதுகிறார்கள்.

''ஒவ்வொரு பெரிய மாகாணத்திலும் ஒரு சட்டக் கவுன்சில் உள்ளது; இக் கவுன்சிலின் உறுப்பினர் சிலர் 1892 ஆம் ஆண்டுச் சட்டப்படி தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள்; இந்தப் பரீட்சை வெற்றிகரமாய் முடிந்துள்ளது. இக்கவுன்சில்களைச் சற்று விரிவுபடுத்தினால் நிர்வாகம் வலுப்படுவதுடன் அதனை மக்களோடு மேலும் நெருங்கிய தொடர்புள்ளதாக்கும்; முப்பது மாவட்டங்களும் மூன்று கோடி மக்கட் தொகையுமுள்ள ஒரு மாகாணத்தின் சட்டக் கவுன்சிலில் தேர்ந்தெடுக்கப்பெற்ற முப்பது உறுப்பினர்கள் இருக்கலாம். மாகாணத்தின் ஆட்சியில் தனக்கும் ஏதோ பங்குண்டு என்று ஒவ்வொரு மாவட்டமும் உணர வேண்டும்.''

(ரமேஷ்சந்திர தத், 1901, ''இந்தியாவின் பொருளாதார வரலாறு'' முன்னுரை, தொகுதி I, ''ஆரம்ப காலப் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இந்தியா'', பக். XVIII.)

இக் கோரிக்கைகளிலுள்ள நிதானம், தொடக்ககால இந்திய பூர்ஷ்வாக்களின் மனப்பாங்கைச் செவ்வையாகப் பிரதிபலிக்கிறது. மேல்மட்டப் பூர்ஷ்வாக்களின், சிறப்பாக, அவர்களுடைய கருத்துகளின் பிரதிநிதிகளான படித்த நடுத்தர வகுப்பாரின் பிரதிநிதியாகவே காங்கிரஸ் இருந்தது. தொடக்கத்திலிருந்தே, இந்த வட்டாரங்கள் அதற்கு உற்சாகமாகவும் பரவலாகவும் ஆதரவு தந்தன; ஆரம்ப நாட்களிலேயே பிரதிநிதிகளின் எண்ணிக்கையைக் கட்டுப்படுவதற்கான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டிய தேவை ஏற்பட்டது; அதனால் அதற்கு ஆதரவு சமூகத்தின் இத் தரப்போடு நின்று விட்டது. ஆங்கிலேய நாடாளுமன்ற உறுப்பினரான டபிள்யூ. எஸ். கெயின் 1889-ம் ஆண்டுக் காங்கிரஸில் கலந்து கொண்டு எழுதினார்: ''என்னைச் சுற்றிலும் அமர்ந்துள்ள நாலாயிரம் கனவான்களும் இந்தியா முழுவதிலும் உள்ள சட்ட, மருத்துவ, பொறியியல், இலக்கியத் துறைகளில் ஈடுபட்டுள்ளோரில் பொறுக்கி எடுக்கப்பட்டவர்கள் ஆவர்.'' தாங்கள் மக்களின் பிரதிநிதிகள் அல்ல என்பதை ஆரம்ப கால மிதவாதத் தலைவர்கள் நன்கு அறிவார்கள்; மக்களின் பெயரால் அவர்களின் நடுவர்களாக அவர்கள் பேச முயன்றாலும் மக்களின் குரலெனத் தாங்கள் உரிமை கொண்டாட முடியாது என்று அவர்களுக்குத் தெரியும். காங்கிரஸின் தொடக்க காலத்தில் அதன் தலையாய வழிகாட்டித் தலைவராய்த் திகழ்ந்த சர் பிரோஸ்ஷா மேத்தா, ''காங்கிரஸ் உண்மையில் மக்கள் குரல் அல்ல; ஆனால், அவர்களுடைய குறைகளைக் கண்டு அவற்றை நீக்குவதற்கான ஆலோசனைகளைக் கூறவேண்டிய பொறுப்பு அவர்களுடைய நாட்டவரான கல்வியறிவு படைத்தோருக்கு உண்டு'' என்று அறிவித்தார்.

அக் காலத்துப் பூர்ஷ்வாக்களுக்குப் பிரிட்டிஷ் ஆட்சியை அறைகூவி அழைக்கும் நிலையில் தாங்கள் இல்லை என்று நன்றாய்த் தெரியும். மாறாக, பிரிட்டிஷ் ஆட்சியாளரை அவர்கள் தங்கள் நண்பர்களாய்க் கருதினர். பிரிட்டிஷ் ஆட்சியை முதல் விரோதியாக அவர்கள் பாவிக்கவில்லை; மக்களின் பின்தங்கிய நிலையும், நாட்டில் புதுமையான வளர்ச்சி ஏற்படாமையும், சீர்திருத்தங்களைப் பகைக்கும் சக்திகளும் அறியாமைச் சக்திகளும் வலிமையோடு இருப்பதும், ''உத்தியோக வர்க்க'' ஆட்சி முறையின் குறைபாடுகளுமே நாட்டு நிலைமைக்குக் காரணம் என அவர்கள் எண்ணினார்கள். இந்தத் தீமைகளுக்கு எதிரான தங்கள் போராட்டத்தில் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் ஒத்துழைப்பை அவர்கள் நம்பிக்கையோடு எதிர்பார்த்தார்கள். 1898 ஆம் வருடக் காங்கிரஸின் தலைவர் ஆனந்த மோகன் போஸ் உரைத்தார்: ''படித்த வகுப்பினர் இங்கிலாந்தின் நண்பர்கள், பகைவர்கள் அல்ல; அதன்

முன்னுலுள்ள பெரும் பணியில் அதன் இயற்கையான, அவசிய மான துணைவர்கள்.'' 1890 இல் சர் பிரோஸ்ஷா மேத்தா, ''பிரிட்டனின் அரசியல் வல்லுநர்கள் இறுதியாக அழைப்புக்கு இணங்க மாட்டார்களோ என்ற அச்சம் எனக்கில்லை'' என்று உறுதியாகக் கூறினார். காங்கிரஸின் தந்தையான தாதாபாய் நவ்ரோஜி இரண்டாவது காங்கிரஸுக்குத் தலைமை வகித்துப் பேசுகையில் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களை நோக்கி, ''இந்தச் சக்தியை (படித்த இந்தியர்களை) எதிர்க் கட்சிக்குத் துரத்தாமல் உங்கள் தரப்புக்கு இழுத்துக் கொள்ளுங்கள்'' என்று வேண்டிக் கொண்டார். பழைய காங்கிரஸ் தலைவர்களில் ''வெள்ளி நாப் படைத்த சொற்பொழிவாளரான'' சுரேந்திர நாத் பானர்ஜீ, ''பிரிட்டிஷ் தொடர்புக்குத் தடுமாற்றமற்ற விசுவாசத்துடன் பணியாற்றுவதே சிறப்பானது—ஏனெனில், பிரிட்டிஷ் ஆட்சியை இந்தியாவிலிருந்து ஒழிப்பது நோக்கம் அல்ல; ஆனால், அதன் அடிப்படையை விரிவுபடுத்தி, அதன் உணர்வை தாராளப்படுத்தி, அதன் தன்மையை மேன்மைப்படுத்தி, அதனை ஒரு நாட்டின் அன்புகளின் மாற்றவொண்ணாத அஸ்திவாரத்தின்மீது ஏற்று வதே நோக்கம்'' என்று தெளிவுபடப் பேசினார்.[1]

இக் கூற்றுக்களிலிருந்து, பழைய காங்கிரஸ் தலைவர்கள் பிற் போக்கானவர்கள், மாற்றார் ஆட்சியை ஆதரித்த தேசிய விரோதி கள் என்று கருதிவிடக் கூடாது. மாறாக, அக்காலத்து இந்திய சமுதாயத்தின் மிக முற்போக்கான சக்தியை அவர்கள் பிரதி பலித்தார்கள். வளரும் பருவத்திலிருந்த தொழிலாளர் வர்க் கத்துக்கு உணர்ச்சிகளை வெளியிடும் திறனோ நிறுவனமோ இன்னும் முற்றிலும் ஏற்படாததாலும், உழவர்களும் கோடிக் கணக்கான ஊமையர்களாக இருந்ததாலும், இந்தியப் பூர்ஷ்வாக்களே இந்தி யாவின் மிக முற்போக்கான, தூலமான புரட்சி சக்தியாக விளங் கினார்கள். அவர்கள் சமூக சீர்திருத்தம், முன்னேற்றம், கல்வி, புதுமைப்படுத்தல் ஆகிய எல்லாத் துறைகளிலும் இந்தியாவில் பின்தங்கிய, அறியாமை வயப்பட்ட அனைத்தையும் எதிர்த்துப் பணியாற்றினார்கள். தொழில் துறையிலும், தொழில் நுட்பப்

1. பிரிட்டிஷ் நிறுவனங்களை இவ்வாறு ஊதாரித்தனமாய்ப் போற்றித் துதி பாடுவது பழைய காங்கிரஸ் தலைவர்கள் வழக்கம்; ஆனால் இத் துதியிலுள்ள நிந்தனைத் தொனியைக் கவனிக்க வேண்டும். 1892-காங்கிரஸில் இதே சுரேந்திரநாத் பானர்ஜீ கூறினார்: ''நாங்கள் ஒரு பெரிய, சுதந்திர சாம்ராஜ்யத் தின் குடிமக்கள்; உலகம் கண்ட மகோன்னதமான அரசியலமைப்புச் சட்டங் களுள் ஒன்றின் பாதுகாப்பு நிழலில் நாம் வாழ்கிறோம். ஆங்கிலேயரின் உரிமை கள் நமக்கும் உரியவை, அவர்களின் சலுகைகள் நமக்கும் உரியவை, அவர் களுடைய அரசியல் சட்டம் நமக்கும் உரியது. ஆனால், அவற்றிடமிருந்து நாம் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறோம்.

பொருளாதாரத் துறையிலும் வளர்ச்சி வேண்டி வற்புறுத்திக் கோரினர்கள்.

இந்தப் பணியில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் தங்களுக்குத் துணை நிற்கும் என்கிற அவர்களுடைய விசுவாசமும் நம்பிக்கையும் ஏமாற்றமுற்றன. இந்த முன்னேற்றப் பணியின் பொருளையும், ஏகாதிபத்திய ஆட்சியின் நலனுக்கும் சுரண்டலுக்கும் அதற்கும் இடையில் எழக்கூடிய தவிர்க்க முடியாத மோதலையும் பற்றி பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் மிகத் தெளிவாக உணர்ந்திருந்தது; அவர்களை விட நன்ருக அறிந்திருந்தது. ஆகையால், ஆரம்பமான சில ஆண்டுகளுக்குள்ளேயே காங்கிரஸின் ஆரம்ப ஆதரவு சந்தேக மாகவும் பகைமையாகவும் மாறியது. காங்கிரஸ் ஸ்தாபிக்கப் பட்ட மூன்றே ஆண்டுகளுக்குள், அதை நிறுவ வேண்டும் என்று முதன் முதலில் உற்சாகமூட்டிய டப்பரின் பிரபுவே, 'பூதக் கண்ணுடியில் தெரியக்கூடிய மிகச் சிறுபான்மையோரின்' பிரதிநிதி தானே காங்கிரஸ் என்று வெறுப்புடன் பேசலானுர். திருமதி பெசன்ட் எழுதிய ''இந்தியா விடுதலைக்காக எவ்வாறு பாடு பட்டது'' என்ற நூலில், ''1880இல், மாவட்ட மேலதிகாரியின் கட்டளையை மீறிக் காங்கிரஸில் கலந்து கொண்ட ஒரு பிரதிநிதி ஈட்டுத் தொகையாக ரூ. 20,000 கொடுத்துவிட்டு சமாதானம் செய்து கொள்ள வேண்டியிருந்தது'' என்ரெரு நிகழ்ச்சியைக் கூறுகிறுர். அரசாங்க ஊழியர்கள் காங்கிரஸில் பார்வையாளர் களாகவும் கலந்து கொள்ளக்கூடாது என 1890இல் அரசு ஒரு சுற்றறிக்கை அனுப்பியது. 1900இல் கர்ஸன் பிரபு ராஜ்யக் காரியதரிசிக்கு எழுதிய ஒரு கடிதத்தில், ''காங்கிரஸ் வீழ்ச்சி நோக்கித் தடுமாறிக் கொண்டிருக்கிறது; நான் இந்தியாவில் இருக்கும்போதே அது அமைதியாக மரணம் அடைவதற்கு உதவ வேண்டும் என்பதே என் பெரிய ஆசைகளில் ஒன்று'' எனக் குறிப்பிட்டார் (ரொனுல்ட்ஷே, ''கர்ஸன் பிரபுவின் வாழ்க்கை வரலாறு'', தொகுதி II, பக். 151).

அதன் விளைவு, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின்பால் வைத்த நம்பிக்கை சிதைந்தமையால் ஏற்பட்ட குழப்பம் இந்திய தேசீயத் தின் பழைய கோஷ்டியைச் சூழ்ந்தது. அனுபவம்மிக்க மிதவாதத் தலைவரான கோகலே கசப்புடன், ''உத்தியோக வர்க்கம் கரவின்றி சுயநலத்துடனும், தேசீய அபிலாஷைகளுக்கு எதிராய் வெளிப்படையாகவும் ஒழுகுகிறது'' என்று வருந்தினுர். ''சென்ற காலத்தில் அப்படி இல்லை'' (அதிகார பூர்வமான, ''இந்திய தேசீய காங்கிரஸின் வரலாறு'', 1935, பக். 151).

பழைய கொள்கையின் தோல்வி தெளிவுபடவே, ''பழைய காவலரை''க் குறைகூறி, ஏகாதிபத்தியத்துடனுள்ள எல்லா

தொடர்புகளையும் தீர்மானமாக உடைத்தெறியத் திட்டவட்டமான செயல் முறையும் கொள்கையும் உள்ள புதிய கோஷ்டி தோன்றுவதைத் தவிர்க்க முடியாது. பா. க. திலகரின் தலைமையோடு சிறப்பாக இணைத்துப் பேசப்படும் இக்கோஷ்டி பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி பத்தாண்டுகளிலேயே முன்னணிக்கு வந்தது; ஆனால், அடுத்த பத்தாண்டுகளில் நிலைமை கனியும் வரை உறுதியான பங்குகொள்ள முடியவில்லை. எழுபதுக்களில் விவசாயக் கலகங்கள் கடுமையாக இருந்த பம்பாய் மாகாணத்திலுள்ள மகாராஷ்டிரமே திலகரின் தளம்; அவரோடு இணைத்துப் பேசப்படும் புதிய தலைவர்களில் பிரபலமானவர்கள், பிபின் சந்திரபால், அரவிந்த கோஷ்; இருவரும் வங்காளத்தைச் சேர்ந்தோர்; லாலா லஜபத் ராய் பஞ்சாப்காரர்.

புதிய கோஷ்டியினர் தங்களை ''தேசீய வாதிகள்'' என்றும், ''ஒருங்கிணைந்த தேசீயவாதிகள்'' என்றும், சநாதன தேசீய வாதிகள் என்றும் சொல்லிக் கொண்டனர்; ''மிதவாதிகளு''க்கு எதிரான ''தீவிரவாதிகள்'' எனப் பிரபலமாயினர். இடதுசாரி தீவிரவாதிக்கும், மிதவாத மனப்பான்மையுள்ள வலதுசாரிக்கும் இடையிலுள்ள சாதாரண வேற்றுமையை இச் சொற்கள் குறிக்கும் என்று எண்ணுவது தவறாகும். உண்மையில் நிலைமை முரண்பாடுற்ற தன்மை வாய்ந்ததாக இருந்தது; தேசீய இயக்கம் இன்னும் கனியாத நிலையில் இருந்ததையே அது பிரதிபலிக்கிறது.

'பழைய காவலர்'களுக்கு எதிராகத் தோன்றிய எதிர்க்கட்சி தலைமையின் ஆரம்ப ஸ்தானம், ஏகாதிபத்தியத்துடன் சமாதானம் பேசும் தணிவான வழிமுறைகளைக் கைவிட்டு, ஏகாதிபத்தியத்தை எதிர்த்து உறுதியாகவும் தளர்வில்லாமலும் போராட்டம் நடத்தும் வழியேக வேண்டும் என்ற விருப்பம்தான் என்பதில் ஐயம் இல்லை. இந்த அளவுக்கு அவர்களைப் புரட்சித் தன்மை கொண்ட தீவிரசக்தி எனலாம். ஆனால், இந்த விருப்பம் இன்னும் அவர்களுடைய மனத்தெழுந்த விருப்பமாகவே அவர்களைப் பொறுத்தமட்டில் இருந்தது. இத்தகைய உறுதியான போராட்டத்தை சாத்தியமாக்கக் கூடிய மக்கள் இயக்கத்துக்கான அடிப்படையே காணோம். குமுறிக் கொண்டிருந்த கீழ் நடுத்தர வகுப்பாரையும், படித்த இளைஞர்களின் நெஞ்சத்தையும், அவர்களிலும் மிக ஏழைகளான மாணவர்களையும், படித்துவிட்டு வேலையில்லாமல் இருந்த, அல்லது, மிகக் குறைவான ஊதியத்தில் உழைத்த புத்திசாலிகளையும் அவர்களுடைய (புதிய தலைவர்களுடைய) வேண்டுகோளையும் எட்டியது; இந்தப் புத்திசாலி வகுப்பாரின் நிலைமை இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நாளுக்கு நாள் மோசமாகி வந்தது; ஏகாதிபத்தியத்தின் கீழ் தாங்கள் முன்னே

றவோ நிறைவு பெற முடியாது என்பது அவர்களுக்குப் புரியத் தொடங்கியது; உறுதியாக ஊன்றிய மேல்மட்டத் தலைவர்கள் கூறிய படிப்படியான முன்னேற்றம் என்கிற மெதுவான, சௌகரியமான கொள்கைகளைப் பொறுமையோடு கேட்கும் மனப்பான்மையில் அவர்கள் இல்லை. சமூக மாறுதல் நிகழும் காலங்களில், பழைய அமைப்பு சிதையப் போகும் தறுவாயில் இத்தகைய மக்கள் கொந்தளிப்பும் புரட்சிக் கருவுள்ள ஆற்றலும் படைத்த சலன சக்திகளை ஏராளமாய் உண்டாக்குகிறார்கள்; தாங்கள் இருக்கிற நிலைமை காரணமாக, மக்கள் இயக்கம் சம்பந்தப்பட்டவரை தங்கள் பணியின் பங்கு என்ன என்பதைக் காணும்வரை, அவர்கள் தங்கள் விழைவுகளைப் புரிந்து கொள்ள முடிவதில்லை; உயரிய சொல்லளவுக் கண்டனங்களோடு இவர்கள் திருப்தி அடைவார்கள்; அல்லது குழப்பவாதத் தனிவாதியாகி, இறுதியில் அரசியலில் யாதொரு பயனும் தராத செயல்களில் ஈடுபடுவார்கள்.

புதிய தலைவர்களுக்குச் சமூக, அரசியல் விஷயங்களில் நவீன நோக்கு இல்லை; இருந்திருந்தால், தாங்களும் தங்கள் ஆதரவாளர்களும் செய்ய வேண்டிய முக்கியமான வேலை, தொழிலாளர் வர்க்கத்தையும் உழவர் சமுதாயத்தையும் அவர்களுடைய சமூக, பொருளாதார, அரசியல் விடுதலைக்கான போராட்டத்துக்கெனத் திரட்டி, ஒருமைப்படுத்துவதுதான் என்பதை உணர்ந்திருப்பார்கள். இந்தியாவில் இருபதாம் நூற்றாண்டின் முதல் பத்து ஆண்டுகளில் இருந்த சூழலில் இம்மாதிரி உணர்வை எதிர்பார்ப்பது, காலநிலையை மீறி முன்னதாக உணர வேண்டும் என எதிர்பார்ப்பதாகும்.

அறிவு பூர்வமான விஞ்ஞான சமூக, அரசியல் தத்துவம் இல்லாத புதிய தலைவர்கள், ''தேசீயமற்ற'', ''மேனாட்டைப் பின்பற்றும்'' போக்கை மேற்கொண்டு மிதவாதத் தலைவர்கள் பின்பற்றிய 'ராஜி'யாக நடந்துகொள்ளும் கொள்கையில்தான் அவர்கள் தோல்வியின் ரகசியம் இருப்பதாய்க் கருதி அப்போக்குகளைத் தாக்குவதில் முழு கவனம் செலுத்தினார்கள். எனவே, பழைய மிதவாதத் தலைவர்கள் எந்த விதத்தில் முற்போக்காக இருந்தார்களோ அப்போக்குகளை இவர்கள் கடுமையாகத் தாக்கினார்கள். இந்தியாவில் இன்னும் பெருமளவில் இருந்த சமூக மிதவாத சக்திகளை அடிப்படையாக வைத்து, பண்டைய ஹிந்து அல்லது ஆரிய நாகரிகம் புதிய ''மேற்கத்தி'' நாகரிகத்தை விட ஆன்மீகத் துறையில் உயர்ந்தது எனக் கருதி சநாதன ஹிந்து தர்மத்தை அடிப்படையாக வைத்து இவர்கள் தேசீய இயக்கத்தை வளர்க்க முயன்றார்கள். மிகப் பழமையுற்ற சமயத்தின் அடிப்

படையிலும், சமயமூட நம்பிக்கைகளின் அடிப்படையிலும், இந்தியாவிலேயே மிக முன்னேறிய இயக்கமாகிய தேசிய இயக்கத்தை இவர்கள்—இந்தப் புதிய தலைவர்கள் வளர்க்க முயன்றார்கள். தேசிய இயக்கத்தின் போக்கிற்குச் சொல்லொணுத் தீமை பயக்கும் முறையில் அரசியல் தீவிரவாதத்தையும் சமூகப் பிற்போக்குத் தனத்தையும் நாசகரமாய் இணைக்கும் கைங்கரியம் இந்தக் காலத்திலிருந்துதான் தொடங்கியது; அதன் சுவடுகள் இன்னும் ஒழிக்கப்படவில்லை.

தீவிரமான தேசியவாதம் மிகப் பிற்போக்கான சநாதன ஹிந்து தருமத்தோடு நேசவுறவு கொண்டதை, 1890இல் 'உடன் பாட்டு வயது மசோதாவை' எதிர்த்து, பெண்களின் திருமண வயதைப் பத்திலிருந்து பன்னிரண்டாக உயர்த்த முயன்ற அச் சட்டத்தை எதிர்த்து திலகர் போராட்டம் துவங்கியதன் வாயிலாக அறிவித்தார். மசோதாவை ரானடேயும், மற்ற முற்போக்கான பழைய தலைவர்களும் ஆதரித்தார்கள். ஹிந்து மதத்தின் மிகப் பிற்போக்கான சக்திகளின் சார்பில் திலகர் மிகவும் கடுமையாக மசோதாவை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார். அப்பால் அவர் 'பசுபாதுகாப்புச் சங்கத்தை'த் தொடங்கினுர் (ஹிந்துமதக் கொள்கைப்படி பசு புனிதமானது என்பதை ஆதியில் விளக்க முடியும்; எல்லா சமயப் பழக்கங்களையும்போல, அக்கால சமூகத்தின் தேவைகளுக்கு ஏற்ப இந்தக் கருத்து எழுந்தது; ஆனல், பயனற்ற கால்நடைகளைப் பேண நேருவதாலும் கால் நடைகள் குலைவுறச் செய்வதாலும் இப் பழக்கம் இன்று பொருளாதார ரீதியில் பிற்போக்கானது; மாட்டு இறைச்சியுண்ணும் முஸ்லீம்களுடன் மோதல் உண்டாவதற்கான அபாயகரமான பழக்கமும் ஆகும்). மராட்டர்களின் தேசிய வீரரான சிவாஜியைச் சிறப்பிக்கும் முறையில் மட்டும் அல்ல, யானைத்தலைக்கடவுள் கணேசரைக் கொண்டாடுவதற்காகவும் தேசியத் திருவிழாக்கள் ஏற்பாடு செய்யப்பட்டன. வங்காளத்தில், அழித்தல் தேவதையான காளி வழிபாட்டை இன்னும் அதிக உற்சாகமுள்ள கோஷ்டியினர் மிகத் தீவிரமாக வளர்த்தனர்.

இந்தச் சமய வடிவங்களுக்குப் பின்னுள்ள தேசிய தேசபக்தி நோக்கத்தை ஏற்க வேண்டியது அவசியம். சமயத்திரை என்னும் பாதுகாப்புக்குப்பின், ஆண்டுதோறும் விழாக்களும் பெரிய கூட்டங்களையும் நடத்துவதன் வாயிலாகப் பரவலான தேசியக் கிளர்ச்சி நடத்தப்பட்டது; மதப் பெயர்களோடு சங்கங்கள் அமைத்தும், இளைஞர்களுக்கு உடற்பயிற்சிக் கூடங்கள் அமைத்தும் கட்டுப்பாடான ஓர் இயக்கம் உருவாக்கப்பட்டது. தேசிய இயக்கம் மக்கள்பலம் என்னும் அடிப்படையைப் பெறுமுன்னர்,

எந்த விதமான நேரடி அரசியல் கிளர்ச்சியையும் இயக்கத்தையும் ஏகாதிபத்தியம் கடுமையான அடக்குமுறையால் ஒடுக்க முயன்ற சூழ்நிலையில், இந்த மாதிரி வழிமுறைகளை நியாயமானவையாகக் கொள்ளவேண்டும். ஆயினும், புறத்திரைபற்றி மட்டுமோ அல்லது ஓர் அரசியல் இயக்கத்தின் வளர்ச்சியின் வரலாற்று படிவம்பற்றி மட்டுமோ எழுகிற பிரச்னை அல்ல அது. தேசீய இயக்கத்தின் இதயபாகமாக சநாதன தருமத்தை வலியுறுத்தியதாலும், பழைய ஹிந்து நாகரிகம் புதிய மேற்கத்தி நாகரிகத்தைவிட ஆன்மீக முறையில் சிறப்பானது என்ற ஊகக் கருத்தை (நவீன உளவியல் வல்லுநர்கள் இதை நஷ்டஈட்டுப் பிரமை என்று கூறுவர் என்பதில் சந்தேகம் இல்லை.) அறிக்கை இட்டதாலும் தேசீய இயக்கமும் அரசியல் உணர்வும் முன்னேற்றம் அடைவது தடைபட்டுத் தளர்வுறுவதைத் தவிர்க்க முடியவில்லை என்பதுடன் ஹிந்து தருமத்தையே வலிவுறுத்தியதன் காரணமாக முஸ்லீம்களில் பெரும்பாலோர் தேசீய இயக்கத்தினின்று விலகி மாறுபட்டு நின்றதன் பொறுப்பையும் இப்புதிய முறை ஏற்க வேண்டும்.

இந்திய தேசீயத்தின் பின் வளர்ச்சிக்கு இக் கருத்துக்கள் மிக முக்கியமானவை என்பதால்—ஏனெனில், நவீன காலத்தில் காந்தீயத்தில் இவை இன்னும் நேர்த்தியான வடிவத்தில் மீண்டும் தோன்றுகின்றன — இவற்றைச் சற்றே கவனமாய்ப் பரிசீலித்தால் பயனுள்ளதாயிருக்கும். ஏனெனில், இந்தியாவின் வளர்ச்சிக்கும் விடுதலைக்குமான பாதை, பழைய பலவீனங்களையும் வேற்றுமைகளையும் தீமை பயக்கும் பழக்க வழக்கங்களையும் வீழ்த்துகிற சமூக வளர்ச்சித்துறை அல்ல, இறந்தகால எச்சங்களையும் நோக்குகளையும் புதுக்கி ஊக்குகிற சமூகப் பின்னேக்கு துறைதான் என்னும் நம்பிக்கையின் வெளியீடாகத் தோன்றியவை இக் கருத்துக்கள்.

இந்த நோக்கு எப்படி தோன்றியது என்பதை நாம் பார்த்து விட்டோம். பழைய மேல் வகுப்பு மிதவாதத் தலைவர்கள் ''தேசீயமற்ற'' நோக்கிலும், வழிமுறைகளிலும், பிரிட்டிஷ் பூர்ஷ்வாக்களின் கல்வி முறையிலும், சமூக வாழ்க்கையிலும், அரசியலிலும் ஊறிக்கிடப்பதை சநாதன தேசீய வாதிகள் கண்டார்கள். இந்தத் ''தேசீயமற்ற தன்மை''க்கும் பிரிட்டிஷ் பண்பாட்டுக்குச் சரணுகதியாகும் நிலைக்கும் எதிராக அவர்கள் ஒரு கலகம் செய்ய விழைந்தார்கள். ஆனல், எந்த அடிப்படையில் அவர்கள் கலகம் செய்ய முடியும்?

மெய்யாக, அவர்களே பூர்ஷ்வா நோக்கின் குறுகிய எல்லைக்குள் வட்டமடிப்பவர்கள், (சமூகவாதம்-சோஷலிஸம்-அக் காலத்து அரசியல் வாழ்க்கையுடன் இன்னும் எவ்வித தொடர்

பும் கொள்ளவில்லை) ஆகையால், முதலாளித்துவம் உடன்பாட்டு முறையிலும் எதிர்மறை முறையிலும் செயலாற்றும் என்பதை விமரிசனக் கண்ணேட்டத்தோடு அவர்களால் பார்க்க முடிய வில்லை. ஆகவே, தாங்கள் இழித்துரைக்கும் ''பிரிட்டிஷ்'' பண்பாடு என்பது உண்மையில் முதலாளித்துவப் பண்பாடு தான் என்பதை அவர்களால் காண முடியவில்லை; பூர்ஷ்வாக் களின் தலைமையில் நடைபெற்ற காரணத்தால் தேசீய இயக்கம் இன்னும் அந்த அடிப்படையைக் கடந்து செல்ல முடியவில்லை, அந்தப் பண்பாட்டுக்கு இறுதியான முற்போக்கான ஒரே எதிர்ப்பு தொழிலாளர் வர்க்கத்திடமிருந்துதான் வரமுடியும் என்பதையும் அவர்களால் காண முடியவில்லை. தொழிலாளர் வர்க்க நோக்கும் பண்பாடும் தோன்றுவதையோ, அது ஒன்று தான், மதிப்புள்ளதை எல்லாம் எடுத்துக்கொண்டு மிச்சத்தைக் கைவிடும் பூர்ஷ்வா பண்பாட்டுக்கு மாற்ருகவும் வாரிசாகவும் இருக்க முடியும் என்று அப்போதைய இந்திய அனுபவத்தின் பேரில் அவர்கள் கருதியிருக்கவே முடியாது. ஆகையால், நாட் டைக் கைப்பற்றியவர்களின் பண்பாட்டுக்கு எதிராக உறுதியான தளத்தை அவர்கள் தேடிவந்தபோது, நாடு வெல்லப்படுமுன் பிருந்த, முதலாளித்துவத்துக்கு முந்தின பண்பாட்டையே அவர் கள் அஸ்திவாரமாய்க் கொள்ள முடிந்தது.

எனவே, அழுகலும் சொத்தையும் மண்டியுள்ள தத்துவ நாற்றச் சேற்றிலிருந்து, சிதைந்து பட்ட கிராம ஆட்சியின் பாழ்த்த எச்சங்களிலிருந்து, மறைந்துபோன ஒரு நாகரிகத்தைச் சேர்ந்த அரசாங்க பகட்டுகளின் கல்லறைகளிலிருந்து அவர்கள் தங்கள் பொற்கனவான ஹிந்து பண்பாட்டை—''தூய்மையாக் கப்பட்ட'' தொரு ஹிந்து பண்பாட்டை—உருவாக்கி வளர்த்து, அதை வழிகாட்டி ஒளியாக உயர்த்திக் காட்ட விழைந்தார்கள்.

உருட்டித்தள்ளும் வெள்ளமாக வரும் பிரிட்டிஷ் பூர்ஷ்வா பண்பாடும் கருத்துகளும் இந்தியப் பூர்ஷ்வாக்களையும் அறிவாளி களையும் முற்றிலும் அடிமை கொள்ளும் என்பதைக் கண்ட அவர்கள், புதிய சூழ்நிலையில் உயிரோடிருப்பதற்கு எவ்விதமான இயற்கை அடிப்படையும் இல்லாததும் புதியதாய் அமைக்கப் பட்டதுமான ஹிந்து கோட்பாட்டை மெல்லிய கேடயமாகப் பயன்படுத்த முயன்ருர்கள்; இந்தப் புனிதக் கருத்தின் தீவிரமான பக்தர்கள் எல்லா சமூக, விஞ்ஞான முன்னேற்றத்தையும் நாட் டைப் பிடித்தவர்களின் பண்பாடு என்று கண்டித்தார்கள்: பழமை யுற்ற பழக்க வழக்கம் ஒவ்வொன்றும், அது தீய பழக்கமாயினும் சரி, சலுகைகள், சீர்திருத்தத்துக்கு எதிரான போக்கு—இவை ஒவ்வொன்றும் மதிப்பும் மரியாதையும் பெற்றது.

ஆகவே, போர்க்குணம்மிக்க இத் தலைவர்கள்,—அவர்களில் பலர் உண்மையும் அஞ்சாமையும் மிக்கோர்—பண்டை காலத் தீய எச்சங்களிலிருந்து மக்களை ஒதுக்கி அவர்களை விடுதலைப் பாதையிலும், அறிவுப் பாதையிலும் செலுத்த வேண்டிய இத் தலைவர்கள் நடைமுறையில், சமூகப் பிற்போக்கிற்கும் மூட நம்பிக்கைக்கும் ஜாதிப் பிரிவினைக்கும் ஜாதிச் சலுகைக்கும் ஆதர வாளர்களாய், ''கறுப்பு'' சக்திகளின் நேசர்களாய், பிரிட்டிஷாரின் ரின் வருகைக்கு முன்பே மக்களை இறுகக் கட்டியிருந்த சமூக, கருத்துத் தளைகளை மிகப் பெருமிதமான சமய ''தேசீய'' கோரிக்கைகளின் பெயரில் மேலும் வலுப்படுத்த முயலுவதாய்த் தோன்றியது.

இந்த வகையில் ஏகாதிபத்தியத்துக்கு எதிராக மக்களின் தேசீய இயக்கம் ஒன்றை உருவாக்குவதாய் சநாதன தேசீய வாதிகள் நம்பினார்கள். திலகரைப் போன்ற அறிவு வலிமை மிக்க ஒருவர் குழந்தை மணத்தையும், பசு பாதுகாப்புச் சங்கத்தையும் ஆதரித்துக் கிளர்ச்சி செய்ய உடன்பட்டார் என்றால் இப்படித் தான் அதை விளக்க முடியும்.

ஆனால், இந்தக் கொள்கை உண்மையில் தீமை பயப்பதாக மட்டும் அல்ல, அரசியல் தந்திரத்தில் தவறானதாகவும் ஆயிற்று. இயக்கத்தின் அரசியல் உணர்வையும் தெளிவையும் முன்னேற்றத் தைத் தவிர்க்கொணு விதத்தில் அது பலவீனப்படுத்தியது மட்டும் அல்ல (தீவிரவாதத்தின் மிகப் பிரபலமான தலைவர்களில் பெரும் பாலும் எல்லோரும் ஏகாதிபத்தியத்துக்கு வெவ்வேறு அளவில் ஒத் துழைப்பு அளிக்கத் தலைப்பட்டார்கள்; அல்லது, தத்துவார்த்த சிந்தனைகளில் ஈடுபட்டார்கள்; இயக்கத்தின் பிற்கால வளர்ச்சி யோடு சம்பந்தப்பட்டோரின் பரிவை இழந்தார்கள்) முன்னேறு கிற சக்திகளையும் பிரிவினை செய்தது.

இன்னும் மிகுதியான போராட்டத் தன்மை வாய்ந்த தேசீயக் கொள்கையை ஆதரிக்கத் தயாரான பலர் இந்தச் சமூகப் பிற்போக்கான செயல்முறையை எதிர்த்தனர்; இடதுசாரி திட்டத் திற்கு மாற்றாக அளிக்கப்பட்ட இந்தப் பிற்போக்கான தத்துவக் குப்பையை ஏற்க விரும்பாத தெளிந்த பார்வை உடையவர்கள் அவர்கள். மிகச் சிறந்தவர்கள் பலருடைய இதயத்தைக் கிழித்த இப் பிளவுக்கு உதாரணமாக மோதிலால் நேருவின் போக்கைக் குறிப்பிடலாம்; மிக வலிய சுபாவம் உடைய அவர் தீவிரவாதி களுடன் சச்சரவிட்ட மிதவாதத் தலைவர்களில் ஒருவர்; அவரைப் பற்றி அவருடைய மைந்தர் எழுதுகிறார்;

''வலிய உணர்ச்சிகளும், வலிய விருப்பு வெறுப்புகளும், மிக்க கர்வமும், மிகுந்த நினைவாற்றலும் படைத்த அவருக்கும் மிதவாத இனத்துக்கும் வெகுதூரம். ஆயினும் 1907 இலும் 1908 இலும் அதை அடுத்த சில ஆண்டுகளிலும் அவர் மிதவாதிகளிலும் மிதவாதியாக இருந்தார் என்பதில் சந்தேகமில்லை; அவர் திலகரை வியந்தார் என எனக்குத் தோன்றினாலும் அவர் தீவிரவாதிகளிடம் மிகக் கசந்திருந்தார்.

''ஏன் அப்படி?...கடுமையான, தீவிரமான சொற்களால் மட்டும் பயனில்லை, அவற்றை அடுத்து மொழிக்கு ஏற்பச் செய்கையும் தொடர வேண்டும் என்பதை அவருடைய தெளிவான சிந்தனை அவரைக் காண வைத்தது. பயனுள்ள நடவடிக்கை எடுக்கப்படுவதன் அறிகுறி ஒன்றையும் அவர் காணவில்லை... அப்போது இந்த இயக்கங்களின் பின்னணி சமயத் தன்மை வாய்ந்த தேசீயம்; அவருடைய இயற்கைக்கு ஒவ்வாதது அது. பண்டைக்காலத்து இந்தியா புத்துயிர் பெற வேண்டும் என்னும் பின்னோக்கு அவருக்கு இல்லை. அவற்றிடம் அவருக்குப் பரிவோ உறவோ கிடையாது; பல பழைய வழக்கங்களையும் ஜாதி போன்றவற்றையும் அவர் முற்றிலும் வெறுத்தார்; அவை பிற்போக்கானவை என்றும் கருதினார். அவர் மேற்கே நோக்கினார்; மேல் நாடுகளின் முன்னேற்றம் அவரைப் பெரிதும் கவர்ந்தது; இங்கிலாந்துடன் நேசவுறவு கொள்வதால் அதை இங்கு கொண்டுவர முடியுமென எண்ணினார். ''சமூக ரீதியாகப் பேசினால், 1907 இல் இந்திய தேசீயத்தில் ஏற்பட்ட மறுமலர்ச்சி நிச்சயமாகப் பிற்போக்கானதே.''

(ஜவஹர்லால் நேரு: ''சுய சரித்திரம்'', பக். 23-4.)

இந்த மத அடிப்படையை வாதமுறையாகக் கொண்டு வளர்ந்த சநாதன தேசீயவாதிகளுக்கு நடைமுறைப் போராட்டத்தில், அந்த அடிப்படையிலிருந்து வேறொரு ஆயுதமோ, செயல் திட்டமோ கிடைக்கவில்லை; நிராசையுற்ற, கையாலாகாத, மக்கள் இயக்கத்தால் விலக்கப்பட்ட சிறு பூர்ஷ்வாக்கள் உலகமெங்கும் பயன்படுத்தும் தனிநபர் பயங்கரவாதம் ஒன்றே இத் தேசீயவாதிகளுக்கும் ஆயுதமாய்க் கிடைத்தது. இவ் வகையிலும் மிக மங்கலான, பொதுவான விதத்தில் சமய உணர்ச்சிகளைத் தூண்டிப் பேசியதாலும் உயர்த்திப் பேசியதாலும் கிட்டிய பயன்களும், ரகசியச் சங்கங்கள் அமைத்ததால் கிட்டிய பயன்களும் மிக அற்பமானவை, (பீதி கொண்ட ஏகாதிபத்திய ஆட்சியாளர்கள் அவர்களை எதிர்த்துப் பேரோலமிட்டு அவர்களுக்குப் பெருத்த விளம்பரம் செய்தபோதிலும் அவை அற்பமானவையே; பதிலுக்கு

ஆட்சியாளர்கள் மிகப் பயங்கரமாக மக்களைப் பெருவாரியாக ஒழிக்கும் முறையை மேற்கொண்டார்கள்; இம் முறைக்குச் சிறப் புதாரணமாய், பின்னால் நடந்த அமிர்தசர் படுகொலையைக் கூற லாம்.) இதற்குமேல் அவர்கள் முக்கியமான பணி எதுவும் ஆற்ற வில்லை; பின்னர் நிலைமை கனிந்து போராட்டத்தில் புதிய கட்டம் உருவானபோது அதற்குத் துணையாக இந்தத் தன்மையும் முன்னால் வந்தது.

1905 அளவில் போராட்டத்தின் புதிய கட்டத்திற்கான நிலைமை கனிந்திருந்தது; புதியதொரு கருவி காணப்பட்டது; பழைய மத, தத்துவார்த்த சிந்தனைகளுக்கும் இக் கருவிக்கும் தொலைதூரம்; நவீன, பொருளாதாரத் தன்மை வாய்ந்த கருவி அது—பொருளாதாரப் பகிஷ்காரம் என்பதே அப்புதிய ஆயுதம். அக் காலத்தில் பயனுள்ள முறையில் பயன்படுத்தக்கூடிய சாத்திய முள்ள ஒரே ஆயுதமான இதைத் தேர்ந்தெடுத்ததிலும் இயக்கத் தின் பூர்ஷ்வாத் தன்மை வெளியாகிறது; உண்மையில் இந்த ஆயு தத்துக்கு ஆதரவு மிதவாதத் தலைவர்களிடமிருந்து கிடைத்தது.

1905 இல் போராட்டத்தின் புதிய கட்டத்துக்காகத் திரண்ட சக்திகள், ஜாரின் ஆட்சியை ஜப்பான் முறியடித்தைத் தொடர்ந்து உலக முற்போக்கு அலையையும் (நவீன காலத்தில், ஆசிய நாடு ஒன்று ஐரோப்பிய நாடு ஒன்றை வெற்றி கொண்ட முதல் நிகழ்ச்சி இதுதான்; இந்தியாவில் இதனால் ஆழ்ந்த விளைவு கள் ஏற்பட்டன) முதல் ரஷியப் புரட்சியின் ஆரம்ப வெற்றிகளை யும் பிரதிபலித்தன. உடனடியாக இந்தியாவில் போராட்டத் தைத் தூண்டிய பிரச்னை—வங்காளப் பிரிவினை. வங்காளம் அப்போது அரசியல் முற்போக்கு நடுநாயகமாய்த் திகழ்ந்தது. அதைப் பிரிவினை செய்ய கர்ஸன் பிரபு திட்டமிட்டார்; அவருக் குப் பின்வந்த வைசிராயின் காலத்தில் அது செயல் படுத்தப் பட்டது. நாடெங்கும் வெறுப்புணர்ச்சியை மூட்டிய இப் பிரிவினையை எதிர்த்து, அயல் நாட்டுப் பொருள்களைப் பகிஷ்கரிப்ப தென்று 1905, ஆகஸ்டு 7 ஆம் நாள் அறிவிக்கப்பட்டது.

தேசீய இயக்கத்தின் விரைவான முன்னேற்றம் தொடர்ந்தது. 1905 இல் கூடிய காங்கிரஸ் இன்னும் நிபந்தனையோடுகூடிய ஆதரவையே பகிஷ்காரத்துக்குத் தந்தது. ஆனால், 1906 ஆம் ஆண்டுக் காங்கிரஸ், தீவிரவாதிகளின் செல்வாக்கிற்கு உட்பட்டு, காங்கிரஸின் பழைய தந்தை தாதாபாய் நவ்ரோஜி தயாரித்த முற்றிலும் புதியதொரு செயல் திட்டத்தை ஏற்றது. இத் திட்டம் தான் முதன் முறையாக சுயராஜ்யம் அல்லது தன்னாட்சியை லட்சியமாய்க் குறிப்பிட்டது; இந்த சுயராஜ்ஜியத்தை சாம்ராஜ்ஜி யத்துக்குள் காலனித் தன்னாட்சி (''தன்னாட்சி வாய்ந்த பிரிட்டிஷ்

காலனிகளிலுள்ள அரசாங்கமுறை'') என்று விளக்கி, பகிஷ்கார இயக்கத்துக்கு ஆதரவு தந்து, சுதேசி அல்லது உள்நாட்டுத் தொழில்களுக்கு ஆதரவு தந்து, தேசீயக் கல்விக்கும் ஆதரவு தெரிவித்தது. சுயராஜ்யம், பகிஷ்காரம், சுதேசி, தேசீயக் கல்வி ஆகியவை காங்கிரஸ் வேலைத் திட்டத்தின் நான்கு முக்கியமான அம்சங்கள் ஆயின.

ஓராண்டுக்குப் பிறகு, 1907 இல் சூரத்தில் நடைபெற்ற காங்கிரஸில் கோகலேயின் தலைமையில் இருந்த மிதவாதிகளுக்கும், திலகரின் தலைமையிலிருந்த தீவிரவாதிகளுக்கும் இடையில் பிளவு ஏற்பட்டது. நீண்டகாலம் விவாதத்துக்குரிய விஷயமாக இருந்தவொரு கதைச் சான்றின்படி, தீவிரவாதிகளின் செல்வாக்கு மேலும் மேலும் பெருகுவதைக் கண்ட மிதவாதிகள் அஞ்சித் தன்னிச்சையாகச் சூழ்ச்சி செய்து பிளவை உண்டாக்கினார்கள் என்பதில் ஐயமில்லை. அப்பால், இரு பிரிவினரும் தனித்தனியாகவே வளர்ந்து 1916 இல் மீண்டும் ஒன்றுபட்டார்கள்; 1918 இல் மிதவாதிகள் இறுதியாகக் காங்கிரஸிலிருந்து விலகி லிபரல் பெடரேஷன் என்னும் புதிய கட்சியைத் தொடங்கினார்கள்.

இயக்கத்தின் புதிய விழிப்பை அரசின் அடக்குமுறைக்கரம் தொடர்ந்தது. 1907 இல் 'ராஜத் துரோகக் கூட்டங்கள் சட்டம்' நிறைவேற்றப்பட்டது; 1910 இல் ஒரு புதிய, கடுமையான ''அச்சுச் சட்டம்'' தொடர்ந்தது (பழைய 1878, அச்சுச் சட்டம் ரிப்பன் பிரபுவின் உதாரணமான ஆட்சியில், 1882 இல் வாபஸ் பெறப்பட்டது). 1818 ஆம் ஆண்டின் ஒரு விதிப்படி, விசாரணை இன்றி நாடு கடத்தும்முறை தீவிரவாதிகளுக்கு விரோதமாகப் பிரயோகம் செய்யப்பட்டது. இவை யாவும் ''தாராள வாதி''யான மார்லி பிரபு இந்தியாவின் ராஜ்யக் காரியதரிசியாக இருந்த காலத்தில் நிகழ்ந்தவை. அரசாங்கம் மிகவும் அஞ்சிய மனிதரான திலகர் செய்தித்தாளில் வெளியிட்ட ஒரு கட்டுரைக்காக ஆறுவருடச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டார்; மாண்டலேயில், 1914 போர் துவங்கப்படுவதற்கு முதல் மாதம்வரை ஒரு சிறையில் அடைக்கப்பட்டிருந்தார். திலகரைக் கைது செய்ததைத் தொடர்ந்து பம்பாய் துணி ஆலைத்தொழிலாளர்கள் ஒரு பொது வேலை நிறுத்தம் செய்தார்கள்—இந்தியப் பாட்டாளி வர்க்கத்தின் முதல் அரசியல் நடவடிக்கை; இதை அக்காலத்தில் லெனின் எதிர்காலத்துக்கோர் எச்சரிக்கை என்று பாராட்டினார். மற்ற முக்கியமான தலைவர்கள் பலரும் சிறைவைக்கப்பட்டனர் அல்லது நாடு கடத்தப்பட்டனர்; அல்லது தண்டனையிலிருந்து தப்புத்

தலைமறைவானார்கள். 1906 க்கும் 1909 க்கும் இடையில் வங்காளத்தில் மட்டும் வழக்கு மன்றங்களில் 550 அரசியல் வழக்குகள் இருந்தன. போலீஸ் நடவடிக்கைகள் மிகத் தீவிர மாயிருந்தன; கூட்டங்கள் கலைக்கப்பட்டன; பஞ்சாபில் விவசாயக் கலவரங்கள் கொடியமுறையில் அடக்கப்பட்டன; தேசீயப் பாடல்கள் பாடியதற்காகப் பள்ளிச் சிறுவர்கள் கைது செய்யப் பட்டனர்.

முன் காலத்தைப் போலவே, அடக்கு முறையை அடுத்து அல்லது அதனோடு சலுகைகள் வந்தன—''மிதவாதிகளைத் திரட்டுவதற்காக.'' 1909 ஆம் ஆண்டில் வழங்கப்பட்ட, மிக வரையறுக்கப்பட்ட மார்லி-மிண்டோ சீர்திருத்தங்கள், 1892இன் இந்தியக் கவுன்சில்கள் சட்டத்தில் தொடங்கப்பட்ட பிரதிநிதித் துவ முறைக்கு அரைமனத்துடன் சம்மதம் அளித்தன; அதன்படி, மறைமுகமாய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுபான்மையோர் மத்திய சட்டக் கவுன்சிலும், மறைமுகமாய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட பெரும்பாலோர் மாகாணக் கவுன்சில்களிலும் பங்குகொள்ள அனுமதிக்கப்பட்டனர்: அந்தக் கவுன்சில்கள் வெறும் ஆலோசனைக் குழுக்கள்; நிர்வாக அதிகாரம் ஏதும் அவற்றுக்கு இல்லை. காங்கிரஸை இப்போது முற்றிலும் கைப்பற்றியிருந்த மிதவாதத் தலைவர்கள் சீர்திருத்தங்கள் வழங்கப்பட்ட இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, அரசாங்கத்துடன் தங்களுக்கு உள்ள ஒற்றுமையை வெளியிட முன்வந்தார்கள்; 1910 இல் வந்த புதிய வைசிராய்க்குப் பணிவான வரவேற்பு அளிக்கப்பட்டது; 1911இல் வங்காளப் பிரிவினை ரத்து செய்யப்பட்டதை ஓர் அரசாங்க அறிக்கையின் மூலம் தெரிவித்தபோது, காங்கிரஸ் பேச்சாளர், ''பிரிட்டிஷ் மகுடத்துக்கு வணக்கமும் பக்தியும் தெரிவிக்கும் வகையில் ஒவ்வொரு இதயமும் துடிக்கிறது; பிரிட்டிஷார் அரசியல் தேர்ச்சியில் புதுக்கிய நம்பிக்கையும் நன்றியுணர்வும் கொள்கிறது'' என்று குறிப்பிட்டார்.

வங்காளப் பிரிவினை ஒழிப்பு, பகிஷ்கார இயக்கம் ஓரளவு வெற்றி பெற்றதைக் காட்டுகிறது. 1906-1911 ஆண்டுகளுக்கு இடையில் தோன்றிய போராட்ட அலை, அடுத்து வந்த ஆண்டு களில் தன் வலிமையைப் பேணிக் கொள்ளவில்லை; ஆனால், தேசீய இயக்கம் என்னும் முறையில் அதற்கு ஏற்பட்டிருந்த நிலையான செல்வாக்கு ஒருகாலும் அழியவில்லை. 1914 க்கு முந்தின ஆண்டுகளின் தீவிரவாதித் தலைவர்கள் எவ்வளவோ வரையறைக் குட்பட்டவர்களாக இருந்தாலும், அவர்கள் ஒரு மகத்தான், நிலையான பணியைச் சாதித்தார்கள்; அந்த ஆண்டுகளில் முதன் முறையாக இந்திய விடுதலைக் கோரிக்கை உலக அரசியல் பிரச்னை

களுக்கு முன்னணியில் கொண்டுவரப்பட்டது; உறுதியாகப் போராடி நாட்டின் முழுவிடுதலையைப் பெறுவதே குறிக்கோள் என்கிற விதை அரசியல் இயக்கத்தில் விதைக்கப்பட்டது; பின் வந்த ஆண்டுகளில் பொதுமக்களுள் அது வேரோட்டம் பெறுவ தாயிருந்தது.

## 2. போராட்டத்தின் இரண்டாவது பேரலை 1919-1922

ஏகாதிபத்தியத்தின் முழுக் கட்டுக்கோப்பையே நிரந்தர மாய்க் குலைத்த முதல் உலகப் போரின் அதிர்ச்சியும், அதைத் தொடர்ந்து 1917 இலும் பின்னரும் எழுந்த உலகப் புரட்சி அலையும்தான் முதல் மக்கள் இயக்கமான கலகம் இந்தியாவில் நடக்க காரணம் ஆயின.

1905 இல் ஏற்பட்ட விழிப்பு உலக இயக்கத்தைப் பிரதி பலித்ததைப் போலவே, அதைவிட மிகுதியாக, 1917 க்குப் பிறகு தொடர்ந்த ஆண்டுகளில் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி யின் அஸ்திவாரத்தையே உலுக்கிய மாபெரும் மக்கள் இயக்கம் இருந்தது எனக் கூறவேண்டும். உலகப் போராட்டத்தோடு இந்தியப் போராட்டத்துக்கு ஏற்பட்ட இந்த ஒற்றுமையின் முக்கியத்துவத்தைச் சிறப்பாய் உணரவேண்டும்; ஏனெனில், இந்திய அரசியல் சிந்தனையாளர்களில் மரபுவாதிகளான சிலர், பெரும் இயக்கங்கள் தனிநபர்கள் அல்லது கோஷ்டியினர் ஏதோ ஓர் அளவில் தலைமை வகித்ததாலோ அல்லது தலைமைவகிக்கத் தவறியதாலோ நிகழ்ந்தவை என்று கூறிவிடுகின்றனர்; இயக்கங் கள் தலைவர்களைப் பொறுத்தும் தனித்தனியாகவும் நடக்கின்றன என்னும் கருத்து இவர்களுக்கிடையில் அடிக்கடி தென்படுகிறது. மக்கட் தொகையில் ஒருசில பகுதியினருக்கு இடையில் மட்டும் பரவியிருந்த அரசியல் இயக்கம் பொது மக்களுக்கிடையில் பரவிய மாறுதல் 1917 ஐ அடுத்த ஆண்டுகளில்தான் நிகழ்ந்தது என்பதில் ஐயமில்லை. ஆனால், இந்த மாறுதல் இந்தியாவோடு நின்றுவிடவில்லை.

பத்து ஆண்டுக்குமுன் ரஷிய ஜாரிஸம் ஜப்பானால் முறியடிக்கப்பட்ட படிப்பினையைத் தொடர்ந்து 1914 ஆம் ஆண்டுப்போர், மேனாட்டு ஏகாதிபத்தியம் வெல்ல முடியாதது என்ற கட்டுக்கதையை ஆசிய மக்களின் கண்களுக்கு முன்னால் முற்றிலும் சிதைத்தது. ஏகாதிபத்திய வல்லரசுகள் தற்கொலைக் கொப்பான முறையில் தங்களுக்குள் அடித்துக் கொள்வதைக் கண்ட கோடிக்கணக்கான அடிமை மக்களின் இதயத்தில்

சாம்ராஜ்யங்களின் அழிவுக்காலம் நெருங்கிவிட்டது என்னும் நம்பிக்கை தழைத்தது.

நிலைமையைக் கட்டுக்குள் வைத்துக்கொள்ள ஏகாதிபத்தியம் உறுதியான நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டது; விசேஷச் சட்டங்களை ஆக்கி புதிய அதிகாரங்களை மேற்கொண்டது; குறிப்பாக இந்திய தற்காப்புச் சட்டத்தைச் சொல்லலாம்; புரட்சிக் குழுவினரின் உறுப்பினர்களையும், அடக்கவொண்ணாத போராட்ட வீரர்களையும் சிறையில் அல்லது காவலில் வைத்தது. இந்தப் பணியில், ஏகாதிபத்தியப் போரின் ஆரம்ப காலத்தில் அரசியல் இயக்கத்தின் மேல் மட்டத்தில் உள்ளோரின் மனப் பூர்வமான ஒத்துழைப்பு உதவியது. மிதவாதத் தலைவர்களின் ஆதிக்கத்தில் இருந்த காங்கிரஸ், ஏகாதிபத்திய போர் நடந்த காலத்தில் நடைபெற்ற நான்கு ஆண்டு மாநாடுகள் ஒவ்வொன்றி லும் தன் ராஜவிசுவாசத்தையும், ஏகாதிபத்தியப் போருக்குத் தன் ஆதரவையும் தெரிவிக்கும் தீர்மானத்தை நிறைவேற்றியது; போர் முடிந்த பிறகு, 1918 இல் நடந்த மாநாட்டிலும், மன்னருக்கு விசுவாசம் தெரிவித்து, ''போர் வெற்றிகரமாய் முடிக்கப்பட்டது பற்றிப் பாராட்டும்'' தெரிவிக்கும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பதிலுக்கு, அதிகாரபூர்வ மான ஆதரவோடு காங்கிரஸ் நடத்தப்பட்டது; 1914 காங்கிர ஸில் சென்னை கவர்னர் பென்ட்லண்ட் பிரபு கலந்து கொண்டார்; 1915 காங்கிரஸில் பம்பாய் கவர்னர் வில்லிங்டன் பிரபு கலந்து கொண்டார்; 1916 காங்கிரஸில் ஐக்கிய மாகாணங்கள் கவர்னர் சர் ஜேம்ஸ் மெஸ்டன் கலந்து கொண்டார்; அரசாங்கப் பிரதி நிதிகள் ஆரவாரமான வரவேற்பு அளிக்கப்பட்டனர். இந்தியர் களின் பிரதிநிதிகளான தலைவர்கள் சிலர் போர் தொடங்கிய போது லண்டனில் இருந்தனர்; அவர்கள் அரசுக்குத் தங்கள் ஆதரவைத் தெரிவிக்க விரைந்தனர். லஜபத்ராய், ஜின்னா, சின்ஹா ஆகியோர் உட்பட அப்போது லண்டனில் இருந்த காங்கிரஸ் தூது கோஷ்டியினர் ராஜ்யக் காரியதரிசிக்கு ஒரு கடிதம் எழுதினார்கள்; ''இந்தியாவின் அரசர்களும் மக்களும் தங்கள் சக்தியால் இயன்றதை எல்லாம் செய்து ஒத்துழைக்க மனப்பூர்வமாக ஆயத்தமாயிருப்பார்கள்; அதற்காக, தங்கள் நாட்டின் வளங்களை எல்லாம் மன்னர்பிரானின் விருப்பப்படி பயன்படுத்திக் கொள்ளும்படி வைத்து, சாம்ராஜ்யம் விரைவில் வெற்றிகாண விழைவர்'' என்று தெரிவித்தார்கள். தென்னாப் பிரிக்காவிலிருந்து அப்போது புதிதாக லண்டனுக்கு வந்த காந்தி, ஹோட்டல் செசியில் தமக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு ஒன்றுக் குப் பதில் அளிக்கையில், இளம் இந்திய நண்பர்கள் ''அரசாங்க ரீதியாக''ச் சிந்தித்து ''தங்கள் கடமை ஆற்ற வேண்டும்'' என்று

வற்புறுத்தினர்; அவரும் மற்றவர்களும் கையொப்பமிட்டு ராஜ்யக் காரியதரிசிக்கு எழுதிய ஒரு கடிதத்தில் தம் சேவைகளைப் பயன்படுத்திக் கொள்ளுமாறு குறிப்பிட்டார்:

> ''ஐக்கிய அரசில் வசிக்கின்ற இந்தியர்களில் விருப்ப முள்ளவர்கள் நிபந்தனை இல்லாமல் தங்களுடைய சேவைகளை ஆட்சியாளர்களிடம் ஒப்படைப்பது சாம்ராஜ்யத்தைப் பீடித்துள்ள நெருக்கடியான தருணத்தில் விரும்பத்தக்க தாகும் என எங்களில் பலருக்குத் தோன்றியது. எங்கள் சார்பிலும், இத்துடன் இணைக்கப் பெயர்பட்டியலில் இடம் பெற்றுள்ளோர் சார்பிலும் எங்கள் சேவைகளைப் பயன் படுத்தி கொள்ளுமாறு அதிகாரிகளைக் கேட்டுக் கொள் கிறோம்.''

அப்பால் அவர் லண்டனில் இந்தியத் தொண்டர்கள் கொண்ட கஷ்ட நிவாரண (ஆம்புலன்ஸ்)ப் படை திரட்டிய விஷயம் எல்லோருக்கும் தெரிந்ததாகும். இந்தியாவுக்குத் திரும்பியதும் அவர் தம் சேவையை ஏற்குமாறு வைசிராயிடம் மீண்டும் வேண்டினர்; மெஸபடோமியப் போராட்டத்தில் பணியாற்ற காயமுண்டவரை தூக்கிகள் படையொன்று திரட்டித் தருவதாய்க் கூறினர். உடல்நிலையைக் காரணம் காட்டி அவருடைய பணியை மறுத்த வைசிராய், ''அவர் வெளிநாடுகளில் ஆற்றக் கூடிய பணிகளைவிட, நெருக்கடியான இத்தருணத்தில் அவர் இந்தியாவில் இருப்பதே பெரிய சேவையாகும்'' என்று மறு மொழி கூறினர். காந்தி 1917 இல் வைசிராய் கூட்டிய தில்லி போர் மாநாட்டில் கலந்துகொண்டார்; 1918 ஜூலை வரையிலும் அவர் படைவீரர்களைத் திரட்டித்தரும் பணியைத் தொடர்ந்தார்; படையில் சேர்ந்து சுயராஜ்யம் பெறுமாறு அவர் குஜராத் குடியானவர்களைத் தூண்டினர்.

மிதவாதத் தலைவர்கள் தங்கள் 'ராஜபக்தியை'க் காட்டிய தற்கு, பிரிட்டிஷ் ஆட்சியின் நலன்களால் உண்டான உற்சாகமும் நன்றி உணர்ச்சியுமே காரணம் என்று பிரிட்டிஷ் அதிகார வட்டாரத்தில் கருதப்பட்டது. ஆனல், உண்மையில் இத்தலைவர் களின் கணக்கு வேறுவிதமாக இருந்தது; பின்னர் அவர்களே அதை விளக்கினர்கள்; போர்க்காலத்தில் உதவி செய்வதன் வாயிலாக இந்திய சுயாட்சியின் கதவு மிக விரைவாய்த் திறக்கப் படும் என்று நம்பியதாக அவர்கள் கூறினர்கள். ஆகவே, 1922 இல் நடந்த வழக்கு விசாரணையின் போது ஆற்றிய சொற் பொழிவில் காந்தி சொன்னர்:

> ''சேவையின் எல்லா முயற்சிகளிலும், இவ்வாறு சேவை செய்வதால் என் நாட்டு மக்களுக்கு முழு சமத்துவம் ஈட்ட முடியும் என்னும் நம்பிக்கையே என்னை ஊக்கியது.''

அவர்கள் பின்னர் தங்கள் பிரமை கலைந்ததாய்க் கூற இருந்தனர்.

போர்ச் சூழலில் மக்களின் கொந்தளிப்பு வளருவதை மேல் மட்ட அரசியல் தலைமையின் சாந்தகுணத்தால் தடுக்க முடிய வில்லை. போர்த் தேவைக்கென, மிடியால் நலிந்த இந்திய மக்களிடமிருந்து கட்டாயமாக வசூலிக்கப்பட்ட மிகக்கொடிய நிதிக்காணிக்கைகளின் சுமைகளும், ஏறும் விலைகளும், பொறுப் பற்ற அநியாய லாப ஆசையும் மக்களுக்குத் துன்பமும் வறுமையு மான நிலை உண்டாக்கி,போர் முடிந்தபிறகு இணைகாண முடியாத அளவில் இன்புளுயன்ஸா நோய் பரவி 1·4 கோடி பேரைப் பலி கொண்டது. பஞ்சாபில் தோன்றிய கத்தர் இயக்கத்திலும், படையில் நேர்ந்த கலகங்களிலும் கொந்தளிப்பின் வளர்ச்சி பிரதிபலித்தது. இக்கலகங்கள் ஈரமற்ற மரணதண்டனையாலும் சிறைத்தண்டனையாலும் ஒடுக்கப்பட்டன. 1917 இல் மன்னரின் நீதிக்குழுவைச் சேர்ந்த ஒரு நீதிபதியான ரவுலட்டின் தலைமை யில், ''இந்திய புரட்சி இயக்கங்களோடு சம்பந்தப்பட்ட சதியாலோசனைகளை''ப் பற்றி விசாரணை செய்து புதிய அடக்கு முறைச் சட்டங்கள் இயற்றச் சிபாரிசு செய்வதற்கு ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது.

வளரும் கொந்தளிப்பின் ஒரு பிரதிபலிப்பு அரசியல் இயக்கத்தில் தென்பட்டது; 1916 லிருந்து இங்கு புதிய சலசலப்புகள் தோன்றின. 1916 இல் திலகர் ஹோம்ரூல் லீக் தொடங்கினுர். அவருடைய போராட்டத்தில் ஆங்கிலேயப் பிரம்மஞானியான திருமதி பெசன்ட் பங்கு கொண்டார்; இவரும் முதலில் 'ராஜபக்தி வழி'யில் தேசீய இயக்கத்தைச் செலுத்த விரும்பினுர்; அப்பால் ஒத்துழையாமை இயக்கத்துக்கு எதிரான சண்டையில் தீவிரமாய்ப் பங்கு கொண்டார். 1916 இல் நடந்த லக்னோ காங்கிரஸில் தீவிரவாதிகளையும் மிதவாதிகளையும் மீண்டும் ஒன்றுபடுத்தும் முயற்சி வெற்றி கண்டது. அதைவிட முக்கியமாக, 1913 இல் கராச்சி காங்கிரஸில், காங்கிரஸ், முஸ்லீம் லீக் (1905 இல் நிறுவப்பட்டது) உடன்பாட்டுக்காகத் தயாரிக்கப்பட்ட திட்டங்கள் இப்போது நிறைவேறின. இந்த உடன்பாடு ஏற்படுவதற்கு முக்கியமான காரணங்களில் ஒன்று, துருக்கிக்கு எதிரான யுத்தத்தினுல் முஸ்லீம்களின் உணர்ச்சி தீவிரமாய்த் தூண்டிவிடப்பட்டிருந்தது; 1915 இல் நிகழ்ந்த முஸ்லீம் லீக் மாநாட்டில் இந்தக் குமுறல் வெளிப்பட்டது. 1916 இல் இரண்டு ஸ்தாபனங்களுக்கும் இடையில் லக்னோ உடன்பாடு ஏற்பட்டது; அதன்படி, சீர்திருத்தங்களுக்கான ஒரு பொதுத்திட்டம் தயாரிக்கப்பட்டது; சாம்ராஜ்யத்திற்குள்

ஓரளவு சுயாட்சி (கவுன்சில்களில் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்கள் பெரும்பான்மையாக இருக்கவேண்டும், கவுன்சில் களின் அதிகாரங்களை அதிகப்படுத்தவேண்டும், வைசிராயின் நிர்வாகக் குழுவில் பாதிப்பேர் இந்தியர்களாக இருக்கவேண்டும்) கோரிய இத்திட்டம் காங்கிரஸ்-லீக் திட்டம் எனப்பட்டது. அதே சமயத்தில் இந்தியாவின் குறிக்கோள், ''தன்னுட்சி படைத்துள்ள குடியேற்ற நாடுகளுக்குச் சமமான பங்காளராய் சாம்ராஜ்யத்துக்குள் இருப்பதே'' என்று அறிவிக்கப்பட்டது.

ரஷியப் புரட்சியைத் தொடர்ந்து 1917 இல் உலக நிலைமை யில் மிக வேகமாக மாறுதல் ஏற்பட்டபோது, அது நிகழ்ச்சிகளின் போக்கைப் பாதித்து, பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் இடையில் இருந்த உறவுகளைப் பிரதிபலித்த நிலைமை இதுதான். இரு பக்கங்களிலும் இருந்த ஏகாதிபத்திய வல்லரசுகளுக்கு மிக அல்லல் தரும் வகையில், தேசீய சுயநிர்ணய உரிமை, பழைய சாம்ராஜ்யங்களின் கலைவு ஆகிய பிரச்னைகள் ரஷியப் புரட்சியால் முன்னணிக்கு வந்தன. ஜார் ஆட்சி வீழ்ந்த ஐந்து மாதங்களில் பிரிட்டிஷ் அரசு மிக அவசரமாய் ஓர் அறிக்கை வெளியிட்டது (இதற்கு மாண்டேகு அறிக்கை என்று பெயர்; அப்போதிருந்த ராஜ்யக் காரியதரிசி மாண்டேகு; உண்மையில் இந்த அறிக்கை கர்ஸன் பிரபுவாலும் ஆஸ்டன் சேம்பர்லினாலும் தயாரிக்கப் பட்டது): ''பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் இன்றியமையாத பகுதி யாக இந்தியாவில் பொறுப்புள்ள அரசாங்கம் தோற்றுவிப்பதற் காக தன்னுட்சி முறைகளைப் படிப்படியாக வளர்ப்பதே'' இந்தியா வில் பிரிட்டிஷ் ஆட்சியின் நோக்கங்கள் என்று அறிக்கை அறிவித்தது: ''இவ்வகையில் உருப்படியான நடவடிக்கைகளைக் கூடிய விரைவில் மேற்கொள்ளப்படும்'' என்று உறுதி கூறியது. இந்த அறிக்கை அவசர கோலமாக வெளியிடப்பட்டது என்பதற்குச் சான்றாக, அறிக்கை வெளியிடப்பட்ட பின்னரே அதற்காக என்ன செய்யவேண்டும் என்பதைப் பற்றி ஆலோசிக்கத் தொடங்கியதைச் சொல்லலாம்; அதன் விளைவான மாண்டேகு செம்ஸ் போர்டு அறிக்கை ஓராண்டுக்குப் பிறகுதான் தயாராயிற்று. சீர்திருத்தங்கள் ('இரட்டையாட்சி முறை' மாகாணங்களில் ஏற்படுத்தப்படும் என்ற பெயரால் பிரிட்டிஷ், இந்திய அமைச்சர்கள் பொறுப்புகளைப் பகிர்ந்து கொள்ளும் முறை) 1919 முடிவுவரை சட்டமாக்கப்படவில்லை; 1920 இல் தான் அமுலுக்கு வந்தன. இடைக் காலத்தில் இந்தியாவில் நிலைமை முற்றிலும் மாறிவிட்டது.

பத்தாண்டுகட்கு முன் மின்டோ—மார்லி திட்டம்போல் மாண்டேகு-செம்ஸ் போர்டு சீர்திருத்தங்களும் மேல்வகுப்புத்

தேசீயப் பாசறையில் ஓரளவு பிளவு ஏற்படுத்துவதில் ஓரளவு வெற்றிகண்டது. அரசியல் வளர்ச்சி முன்னைவிட முன்னேற்றம் பெற்ற இந்நிலையில் மிதவாதிகளின் ஆதரவை இம்முறையில் பெற்ற தால் அதிகப் பயனுள்ளதாயில்லை. 1917 இறுதியில் கல்கத்தா காங்கிரஸுக்குத் தலைமை வகித்த திருமதி பெசண்ட், ''இந்திய மக்கள் அனைவரின் சார்பிலும் பேசுகின்ற காங்கிரஸ் தங்களுக்கு ராஜமகுடத்தின்பால் உள்ள ஆழ்ந்த ராஜபக்தியையும், பேரன்பை யும், பிரிட்டிஷ் தொடர்பில் தங்களுக்குள்ள அசைக்க முடியாத நம்பிக்கையையும், எல்லா ஆபத்துக் காலங்களிலும் எவ்விதத் தியாகமும் செய்து பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குத் துணை நிற்பதில் தங்களுக்குள்ள உறுதியையும் மிக மாட்சிமை தங்கிய மன்னர் பிரான்-சக்கரவர்த்திகளிடம் தெரிவிக்குமாறு மன்றாடி வேண்டு கிறது'' என்று ஒரு தீர்மானத்தை நிறைவேற்றச் செய்தார். ஆனால் 1918, கோடையில் அரசின் அறிக்கை வெளியானதும், பம்பாயில் கூடிய சிறப்புக் காங்கிரஸ், சீர்திருத்தங்கள் ''ஏமாற்றம் தருவனவாயும் அதிருப்திகரமாயும்'' இருப்பதாய்க் கண்டித்தது. இந்தச் சிறப்புக் காங்கிரஸுக்குப் பிறகுதான் காந்தியைத் தவிர மற்ற மிதவாதத் தலைவர்களில் முக்கியமான வர்கள் காங்கிரஸிலிருந்து விலகி, அப்பால் ஏகாதிபத்தியத்தோடு ஒத்துழைக்க விரும்பிய பூர்ஷ்வாக்களைப் பிரதிபலிக்கும் இந்திய லிபரல் கூட்டணிக் கட்சியைத் தொடங்கியது. 1919 டிசம்பர் வரைகூட காங்கிரஸ், சீர்திருத்தங்களை ஏற்பதாகவே தீர்மானம் செய்தது; ஆனால், திருமதி பெசன்டின் ஆதரவோடு காந்தி சீர்திருத்தங்களை ஆதரிக்க, சி. ஆர். தாஸ் எதிர்ப்புக் கோஷ்டிக் குத் தலைமைவகிக்க ஒரு பிளவு நேர்ந்த பிறகுதான் இவ்வாறு நடந்தது. இறுதித் தீர்மானம் சீர்திருத்தங்களைக் குறைகூறி விட்டு, ''சுய நிர்ணயக் கொள்கைக்கு இணங்க முழுப்பொறுப் புள்ள அரசாங்கம் அமைக்க விரைவில் நடவடிக்கை எடுக்குமாறு'' வலியுறுத்தியது; ஆனால், காந்தி கொண்டுவந்த ஒரு திருத்தம் அத்தோடு நிறைவேற்றப்பட்டது: ''அவ்வாறு ஏற்படும் வரை, முடிந்தவரை சீர்திருத்தங்களைப் பயன்படுத்திக்கொண்டு மக்கள் முழு பொறுப்புள்ள அரசு தோன்றப் பணியாற்றுவர் என இக் காங்கிரஸ் நம்புகிறது'' என்பதே காந்தியின் திருத்தம். 1919 ஆம் ஆண்டின் இறுதிவரைகூட சீர் திருத்தங்களோடு ஒத்துழைத்துச் செயல்படுத்த வேண்டும் என்பதே காந்தியின் கருத்தாக இருந்தது என்பதை வருட முடிவில் தம் வாரப் பத்திரிகையில் எழுதிய ஒரு கட்டுரையில் குறிப்பிட்டார்:

''சீர்திருத்தங்கள் சட்டமும், அதனோடு அறிக்கையும் இந்தியாவுக்கு நியாயம் வழங்க வேண்டும் என்ற பிரிட்டி ஷாரின் நோக்கங்களுக்கு மெய்ச்சான்றுகள்; அவ்வகையில்

இந்தியா சந்தேகத்தைக் கைவிட வேண்டும். ஆகையால், சீர்திருத்தங்களைக் குத்தலாகக் குறை கூறிக் கொண்டிருக்கக் கூடாது; ஆற அமர இருந்து அவற்றை வெற்றியாக்க முயல வேண்டும்.''

(எம். கே. காந்தி, யங் இண்டியா, டிசம்பர் 31, 1919.)

ரவுலட் சட்டங்களுக்கும், அமிர்தசர் படுகொலைக்கும், பஞ்சாபில் ராணுவச் சட்டத்துக்கும் பின்னர்—அதாவது, ஒத்துழையாமை இயக்கத்துக்குக் காரணமாய்க் காட்டப்பட்ட அதே பிரச்னைகளுக்குப் பின்னர்—வெளியான இந்த அறிவிப்பு முக்கியமானது; எனவே, அடுத்த வருடம் ஒத்துழையாமை இயக்கத்தைத் துவக்க முடிவு எடுக்கபடுவதற்கு வேறு காரணங்கள் இருந்திருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது.

ஏனெனில், காங்கிரஸின் ஆதரவு இன்னும் நீடித்தாலும் இந்தியாவில் நிலைமை உண்மையில் 1919இல் முற்றிலும் மாறி விட்டிருந்தது; ஆதரவுக்கான அடிப்படை காங்கிரஸின் காலடியின் கீழிருந்து மறைந்து கொண்டிருந்தது. 1919ஆம் ஆண்டு இந்தியா முழுவதிலும் மாபெரும் புரட்சிக் கொந்தளிப்பின் பேரலை பரவுவதைக் கண்டது. ஏற்கனவே, 1918 இன் இறுதி மாதங்களிலும், 1919இன் தொடக்க மாதங்களிலும் இந்தியாவில் அதற்கு முன் தெரிந்திராத அளவில் ஒரு வேலை நிறுத்த இயக்கம் தொடங்கியது. 1918 டிசம்பரில் பம்பாய் ஆலை வேலைநிறுத்தம் ஆரம்பித்து, 1919 ஜனவரிக்கு 125,000 தொழிலாளர்கள் அதில் கலந்து கொண்டனர். 1919 இன் தொடக்கத்தில் அறிவிக்கப்பட்டு மார்ச்சில் சட்டமான ரவுலட் சட்டங்கள், யுத்த காலச் சட்டங்கள் காலாவதியானபின் அரசாங்கத்தின் அரிய அடக்குமுறைகளான வழக்கு மன்ற நடவடிக்கை இன்றியும் விசாரணை இன்றியும் சிறைபடுத்தும் கொடுமையை நீடிக்கும் நோக்குடன் இயற்றப்பட்டவை; சீர்திருத்தம் என்ற பசுத் தோலிற்குள் பதுங்கியுள்ள ஏகாதிபத்தியப் புலியின் சுயரூபத்தை இச் சட்டங்கள் காட்டுவதாய் எங்கும் பரவலான குமுறல் ஏற்படுத்தின. தம் தென் ஆப்பிரிக்க அனுபவத்தைப் பயன்படுத்திக் காந்தி ரவுலட் மசோதாக்களை எதிர்த்து ஓர் அறப்போராட்ட இயக்கத்தைத் தொடங்கக் கருதி, பிப்ரவரியில் ஒரு சத்தியாக்கிரகக் குழுவை அமைத்தார். ஹர்த்தால் அல்லது எல்லா வேலைகளையும் ஒரு நாள் நிறுத்தி வைத்தல், ஏப்ரல் 6 ஆம் நாள் செய்யப்பட வேண்டுகோள் விடப்பட்டது. அதற்குக் கிடைத்த மக்களின் பேராதரவைக் கண்டு இயக்க கர்த்தாக்களே திடுக்கிடச் செய்தது. மார்ச்சிலும், ஏப்ரலிலும் எங்கு பார்த்

தாலும் எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்கள், வேலை நிறுத்தங்கள், கொந் தளிப்பு, சில இடங்களில் கலவரம், பெருத்த உயிர் சேதம் உண் டாக்கிய அடக்கு முறையைப் பொருட்படுத்தாமல் தீரமான எதிர்ப்பு. அதிகார பூர்வமான அரசாங்க ஆண்டு அறிக்கை மக்களுக்கு இடையில் புதிதாய்க் காணப்படும் ஒற்றுமையைப் பற்றியும், ஹிந்து முஸ்லீம் பகைமை பற்றி அதிகார பூர்வமான கருத்துக்கள் யாவும் சிதறியதைப் பற்றியும் திகிலுற்ற வியப்போடு பேசுகிறது:

> ''முன் எந்தக் காலத்திலும் இல்லாத அளவில் ஹிந்துக் களும் முஸ்லீம்களும் சகோதரவுறவு பாராட்டியதுதான் இக் கிளர்ச்சியில் ஒரு கவனிக்க வேண்டிய அம்சம். தேசீயக் கொள்கையினரின் நீண்டகால முயற்சியின் காரணமாக இந்த அவர்களுடைய, தலைவர்களுக்கு இடையில் ஒற்றுமை ஏற்பட்டது. இந்தக் கிளர்ச்சிக் காலத்தில் கீழ் வகுப்பினரும் ஒரு வழியாக வேற்றுமைகளை மறக்க ஒருப்பட்டார்கள். சகோதரவுறவு பாராட்டுகிற பல புதுமையான காட்சிகள் நிகழ்ந்தன. ஹிந்துக்கள் வெளிப்படையாக முஸ்லீம்கள் கையிலிருந்து தண்ணீர் வாங்கிக் குடித்தனர்; முஸ்லீம்களும் அவ்வாறு செய்தனர். ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையே ஊர்வலங் களின் கோஷத்திலும் பரிவட்டாக்களிலும் கொள்கையாக அறிவிக்கப்பட்டது. மசூதி மேடையிலிருந்து போதனை செய்ய ஹிந்துத் தலைவர்களே அனுமதிக்கப்பட்டனர்.''
>
> (''1919 இல் இந்தியா.'')

அடுத்து, புதிய கொடிய அடக்கு முறைகள் தொடர்ந்தன. இச் சமயத்தில்தான் அமிர்தசர் கொடுமை நிகழ்ந்தது; வெளியேற வழியின்றி அடைப்பாக இருந்த இடத்தில் கூடியிருந்த நிராயுத பாணிகளான மக்கள் மீது ஜெனரல் டயர் வெடிமருந்தை 1,600 முறைகள் சுட்டான் (அரசாங்கத் தகவலின் படி); 379 பேர் இறந்தனர், 1,200 பேர் கவனிப்பாரற்றுக் காயப்பட்டுக் கிடந் தனர்; ''கூட்டத்தில் இருந்தோருக்கு இடையில் மட்டும் அல்ல, குறிப்பாக பஞ்சாப் காரர்கள் அனைவருக்கும் இடையில் ஒரு நியாயவுணர்வு உண்டாக்க வேண்டும் என்று ராணுவக் கண் ணோட்டத்தோடு'' தான் சுட்டதாக அவன் பின்னர் தன் நோக் கத்தை விளக்கினான்—அதாவது, மக்களைப் பீதியில் ஆழ்த்த வேண்டும் என்பதே அவன் நோக்கம். இந்தப் படுகொலையைப் பற்றிய விவரமான தகவல்கள் காங்கிரஸ் கமிட்டித் தலைவர்களுக் குக் கூட நாலு மாதங்களுக்குப் பிறகு மெல்ல மெல்ல ஊர்ந்து வந்தன என்றால் அது இந்தியாவைப் போர்த்தி இருந்த அடக்கு முறை சவச்சீலையின் பெருமை ஆகும்; எட்டு மாதங்கள் வரை

அதைப் பற்றின செய்திகள்யாவும் அதிகார பூர்வமான முறையில் மறைக்கப்பட்டன; பிரிட்டிஷ் பாராளுமன்றத்திற்கும் மக்களுக்கும் கூடத் தெரிவிக்கப்படவில்லை. கிளர்ச்சியும் காங்கிரஸ் விசாரணையும் தொடங்கவே, ராஜதந்திர காரணங்களுக்காக இக் கொடுமை பற்றி விசாரணை செய்து கண்டனம் செய்வதற்காக அரசு ஒரு கமிட்டி ஏற்படுத்த வேண்டியதாயிற்று; ஆனால், ஜெனரல் டயர் தன் தீரச் செயலுக்காக ஏகாதிபத்திய வாதிகளால் புகழாரம் சூட்டப்பெற்றதோடு (£ 20,000 அடங்கிய தொரு முடிப்பு உட்பட) பிரபுக்கள் சபையின் பாராட்டும் பெற்றான். பஞ்சாபில் ராணுவச் சட்டம் அமுலுக்கு வந்தது; பெருவாரியாகச் சுடுதல், தூக்கில் இடுதல், ஆகாயத்திலிருந்து குண்டு வீசுதல், இந்தக் கொடிய ஆட்சியின்போது நியமிக்கப்பட்ட வழக்கு மன்றங்கள் மனம்போன போக்கில் தண்டனை விதித்தல் ஆகியவை பற்றின செய்திகள் பின்னர் நடந்த விசாரணைகளிலிருந்து சிறுகச் சிறுகத்தான் இப்போதும் கிடைக்கின்றன.

பிரிட்டிஷ் அதிகார வட்டாரங்களின் கருத்துப்படி, "பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்துத் திட்டமிட்ட கலகமாகக் கிளர்ச்சி உருக் கொண்டது" (சர் வாலன்டைன் சிரோல், "இந்தியா", 1926, பக். 207). நிலைமையின் போக்கைக் கண்டு காந்தி திகில் கொண்டார். கல்கத்தா, பம்பாய், ஆமதாபாத், மற்றும் சில இடங்களில் மக்கள் ஆட்சியாளருக்கு விரோதமாக வன்முறைச் செயல்களில் இறங்கியதால், "தாம் ஓர் இமாலயத் தவறு செய்துவிட்டதாகவும், அதனால் உண்மையான சத்தியாக்கிரகிகள் அல்லாதவர்கள் கலவரங்களை மூட்டுவதாகவும்" அறிவித்தார். அதன்படி ஏப்ரல் நடுவில் சத்தியாக்கிரக இயக்கத்தை நிறுத்தி வைத்தார்; ஆக, வேலைநிறுத்தம் தொடங்கிய ஒரே வாரத்திற்குள், கிளர்ச்சி உச்ச கட்டத்தை அடையும் தறுவாயில், "அரசாங்கத்தைத் தொல்லைப்படுத்த ஒரு சத்தியாக்கிரகி ஒருகாலும் முயலமாட்டான்" (பின்னர் ஜூலை 21ஆம் நாள் பத்திரிகைகளுக்கு எழுதிய கடிதம் ஒன்றில்) என்று காரணம் சொல்லி அவர் இயக்கத்தை நிறுத்தி விட்டார். "சத்தியாக்கிரக"த்தின் (இச் சொல்லுக்கு "உண்மையில் உறுதியாக இருத்தல்" என்று பொருள்; சாத்வீக எதிர்ப்பு முறைக்கு வழங்கப்படும் சொல்.) அனுபவம் பின்னால் பரந்த அளவில் பயன்படுத்தப்பட இருந்தது.

1919 டிசம்பரில், காங்கிரஸ் சீர்த்திருத்தங்களைச் செயல்படுத்தத் தீர்மானித்துக் கொண்டிருந்தது என்பதையும், "ஆற அமர இருந்து அவற்றை ஒரு வெற்றியாக்கப் பாடுபட வேண்டும்" என்பதே தேசிய இயக்கத்தின் பணி எனக் காந்தி வற்புறுத்தி வந்ததையும் முன்பே கண்டோம். இம்மாதிரிக் கனவுகளை

நனவாக்குவதாய் நிலைமை இல்லை. மக்களுக்கு இடையில் மிகுந்து வந்த கொந்தளிப்பின் புரட்சி அலை 1919 இல் புரண்டெழுந்து, 1920, 1921 இலும் முன்னேறிப் பாய்ந்தவண்ணம் இருந்தது; 1920 இன் பிற்பகுதியில் தொடங்கிய பொருளாதார நெருக்கடி யால் அது இன்னும் வலுப்பெறுவதாக இருந்தது. 1920 இன் முதல் ஆறு மாதங்கள் வேலை-நிறுத்த இயக்கத்தின் பெருஞ் சிகரங்களைக் கண்டன—பதினைந்து லட்சம் தொழிலாளர்கள் பங்கு கொண்ட 200 க்குக் குறையாத வேலை நிறுத்தங்கள் மேன்மேலும் உயர்ந்த இந்தப் புரட்சி அலை ''ஆற அமர இருந்து பணி''யாற்றச் சொல்லிய உபதேச மொழிகளை ஏளனம் செய்தன. 1920 செப்டம்பரில் கூடிய சிறப்புக் காங்கிரஸில் அதன் தலைவர் மொழிந்தார்:

> ''நாம் ஒரு புரட்சிகரமான காலத்தைக் கடக்கிறோம் என்னும் உண்மையைக் கண்மூடித்தனமாய் மறுப்பதால் பயனில்லை...சுபாவத்தாலும் மரபாலும் நாம் புரட்சிகளை விரும்பாதவர்கள். வழிவழியாகவே, நாம் மெதுவாகச் செல்லும் மக்கள்; ஆனால், நாம் அடியெடுத்து வைக்க தீர்மானித்தால்,விரைவாகவும் நீளமாகவும் அடி வைப்போம். வாழ்க்கையின் கிரமத்தில் எந்த உயிருள்ள பொருளும் முற்றிலும் புரட்சிகளிலிருந்து தப்பிவிட முடியாது.''
>
> (லஜபத்ராய்; 1920 செப்டம்பரில், தேசீய காங்கிரஸ் சிறப்புக் கூட்டம் கல்கத்தாவில் கூடிய போது ஆற்றிய தலைமை உரையில்.)

காங்கிரஸ் தலைவரின் விளக்கம் அடிப்படையில் சரியானதே. ''ஒரு புரட்சிகரமான கால''த்துக்கு இடையில் ''சுபாவத்தாலும் மரபாலும் புரட்சியை விரும்பாத'' தலைமைக் கோஷ்டியினர் வலுத்துவந்த கிளர்ச்சிக்குத் தலைமை வகித்துச் செலுத்த வேண்டிய பிரச்னை எதிர்ப்பட்டது என்பதே காங்கிரஸ் பேச்சாளருடைய அறிவிப்பின் உண்மையான பொருளாகும். யுத்தத்துக்குப்பின் இந்தியாவின் நிலையிலுள்ள முரண்பாடு இங்குதான் காணக் கிடைக்கிறது; இந்தியாவில் மட்டும் அல்ல, உலகம் எங்குமே போரினால் கிட்டிய வாய்ப்புக்களைப் பயன் படுத்திக் கொள்வதற்கு ஏற்ற அரசியல் முதிர்ச்சி பல நாடுகளுக்கு ஏற்படவில்லை.

இந்த நிலையில்தான் காந்தியும் மற்ற காங்கிரஸ் தலைமை யினரும் (பழைய மிதவாதிகள் முற்றிலும் விலகி விட்டனர்) 1920 இல் போர் முனையை முற்றிலும் மாற்ற உறுதி கொண்டு, சீர்திருத்தங்களுக்கு ஒத்துழைப்பு தருவதை நிறுத்திக் கொண்டு,

வலுக்கும் போராட்டத்தினைத் தலைமை ஏற்று நடத்துவதென்று தீர்மானித்து, அந்த நோக்கத்திற்காக 'சாத்விக ஒத்துழை யாமைப் போர்'த் திட்டத்தை உருவாக்கினார்கள். இதற்குப் பிறகு மக்கள் இயக்கத்தைக் காங்கிரஸ் தலைமை ஏற்று நடத்தலா யிற்று; இத்தலைமைக்கு விலையாக, போராட்டம் அஹிம்சை முறையில் நடக்க வேண்டும்.

1920 செப்டம்பரில் நடந்த கல்கத்தா சிறப்புக் காங்கிரஸில், புதிய அஹிம்சை முறை சாத்விகப் போராட்டத் திட்டம் ஏற்கப் பட்டது. காந்தியும் மோதிலால் நேருவும், அப்போது மிகத் தீவிரமாக இருந்த 'கிலாபத்' கிளர்ச்சியின் தலைவர்களான அலி சகோதரர்களும் (ஸெவர்ஸ் உடன்படிக்கையில் முக்கியமான முஸ்லீம் நாடான துருக்கிக்கு இழைக்கப்பட்ட அநியாயங்களுக்கு கண்டனம் தெரிவிக்கும் கிளர்ச்சிக்கு 'கிலாபத்' இயக்கம் என்று பெயர்; உண்மையில் முஸ்லீம்களின் குமுறலை ஒருமுகப்படுத்த உதவியது.) சேர்ந்து இத்தீர்மானத்தை, எதிர்ப்பில்லாமல் இல்லை, நிறைவேற்றினார்கள். ''மகாத்மா காந்தியால் தொடங்கப்பெற்ற ஒத்துழையாமை அஹிம்சைப் போராட் டத்தை, மேலே குறிப்பிட்ட தவறுகள் திருத்தப்பெற்று, சுயராஜ்யம் ஏற்படும்வரை மேன்மேலும் நடத்துவதே'' கொள்கை என்று தீர்மானம் அறிவித்தது. இக்கொள்கை பல கட்டங்களைக் கடந்தது: அரசு வழங்கிய பட்டங்களைத் துறப்பதில் தொடங்கி, மூன்று பகிஷ்காரங்கள் (அரசு சட்டமன்றங்கள், வழக்கு மன்றங்கள், கல்வி நிறுவனங்கள்), ''வீடுதோறும் கைநூற்று, கைநெசவு'' இயக்கம், பின்னொரு எதிர்காலத்தில் கடைசிக் கட்டம் ஆகிய வரிகொடா இயக்கம் உடனடியாக எடுக்கப்பட்ட நடவடிக்கைகளான பகிஷ்கார இயக்கங்களில் நடுத் தர வகுப்பினரான அதிகாரிகள், வழக்குரைஞர்கள், மாணவர்கள் போன்றோர் கலந்துகொள்ள பொது மக்களுக்கு ஆக்கப்பணி யான ''கைநூற்பு, கைநெசவு''ப் பணி அளிக்கப்பட்டதைக் காணலாம்; பொதுமக்கள் நேரடியாகப் பங்குகொள்ள வேண்டிய வரிகொடா இயக்கம் (அது குத்தகை–கொடா இயக்கமும் ஆவதைத் தவிர்க்க முடியாது) பின்னால் வைத்துக்கொள்ளப் பட்டது.

நவம்பரில் நடைபெற்ற புதிய சட்டமன்றத் தேர்தல்களின் பகிஷ்காரம் மிக வெற்றிகரமாய் நடந்தது; வாக்காளர்களில் மூன்றில் இரு பங்கினர் கலந்து கொள்ளவில்லை. கல்வி நிலையப் பகிஷ்காரம் குறிப்பிடத்தக்க வெற்றி கண்டது; மாணவர்கள் திரள் திரளாய் ஒத்துழையாமை இயக்கத்தில் உற்சாகத்தோடு கலந்துகொண்டனர். வழக்குரைஞர்களின் பகிஷ்காரம் அவ்வளவு

வெற்றிகரமாக இல்லை; சில பிரபலமான உதாரணங்களாக மோதிலால் நேருவையும், சி.ஆர். தாஸையும் கூறலாம்.

1920 டிசம்பரில் நடந்த நாகபுரி காங்கிரஸ் ஆண்டிறுதிக் கூட்டத்தில் புதிய வேலைத் திட்டம் ஒருமனதாய் ஏற்கப்பட்டது. சாம்ராஜ்யத்திற்குள் காலனீய சுயாட்சிக் கோரிக்கையே முன்பு காங்கிரஸின் குறிக்கோள்; ''அமைதியான, சட்ட இணக்கமான வழிகளில் சுயராஜ்யம்'' பெறுவதே புதிய லட்சியமாக அறிவிக்கப் பட்டது. காங்கிரஸ் நிறுவனம் இதுவரை கட்டுக்கோப்பற்ற நிலையில் இருந்தது; இப்போது காலத்துக்கேற்பப் புதிய முறையில் கட்சி வடிவம் அளிக்கப்பட்டது; கிராமங்கள், சிற்றூர்கள் என்று அடியிலிருந்து தொடங்கி, மேலே ஒரு நிர்வாகக்குழு பதினைந்து பேருடன் (ஓர்க்கிங் கமிட்டி) அமைக்கப்பட்டது.

காந்தியால் தொடங்கப்பெற்ற புதிய வேலைத்திட்டமும் கொள்கையும் தேசீய காங்கிரஸ் அசுரவேகத்தில் முன்னேற உதவின. நாட்டு விடுதலையை ஈட்டுவதற்காக அரசாங்கத்தை எதிர்த்து மக்கள் நடத்தும் போராட்டத்துக்குத் தலைமை வகிக்கும் அரசியல் கட்சியாக இப்போது காங்கிரஸ் ஆகிவிட்டது. தேசீய இயக்கத்தின் மையக் கவர்ச்சியான அந்தஸ்தை (ஆரம்ப காலத்துப் போராட்ட வீரர்களான தேசீயவாதிகள் இந்த அந்தஸ்தைக் கண்டு கண்களைத் தேய்த்துக் கொண்டு விழித்திருப்பர்) இந்தக் கட்டத்திலிருந்துதான் காங்கிரஸ் பெற்றது.

ஆனால் புதிய வேலைத் திட்டத்திலும் கொள்கையிலும் மற்றோர் அம்சம் இருந்தது; மக்கள் போராட்டத்துக்கு விரோதமான அம்சம் அது; அற்பரக பூர்ஷ்வா நீதி போதனையும் சீர்திருத்த சமாதான வாதமும் பேசும் அம்சம்; இந்த அம்சத்தைக் கள்ளமற்ற சொல்போலத் தோற்றம் தரும் ''அஹிம்சை'' என்னும் சொல்லில் காணலாம். ஒரு முழு சமய-தத்துவக் கருத்தைப் பிரதிபலிக்க வேண்டும் என்ற எண்ணத்தோடுதான் காந்தி அச் சொல்லைப் பயன்படுத்தினர்; பக்தி ஆவேசத்தோடு, பழைய இந்தியச் சிந்தனையாளர்களைப்போல், அது அவரால் போதிக்கப் பட்டது; எனினும், இக் கருத்து காந்தியின் இளமைப் பருவத்தில் மேனாடுகளில் மிகச் செல்வாக்கோடு பிரபலமாயிருந்தால் அவருடைய சிந்தனையை உருவாக்கக் காரணமான அண்மைக்கால மேலை நாட்டுச் சிந்தனையாளர்களான டால்ஸ்டாய், தோரோவ், எமர்ஸன் ஆகியோரின் கருத்தோடு சம்பந்தப்பட்டதாகும். காந்தியின் தத்துவக் கருத்தை ஏற்காத அவருடைய சகாக்களும் இப்பதப் பிரயோகத்தை ஏற்றனர்; மிக வலிய ராணுவ சக்தியுள்ள ஆளும் பகைவனோடு ஆயுதமற்ற மக்கள் போராடும்போது ஆரம்ப காலத்திலாவது இதை ஒரு கால தருமமாக ஏற்க வேண்

டும் என்ற பொது அறிவுக்கு இணங்க அவ்வாறு செய்தனர். ஆனால், பின்னர் நடந்த நிகழ்ச்சிகளிலிருந்தும் அந்தப் பதப் பிரயோகத்தின் பொருள் மாறிக் கொண்டே போனதிலிருந்தும், கள்ளமற்ற மனிதாபிமானத்தையும் அல்லது கால தருமத்தையும் பிரதிபலிப்பது போலத் தோற்றமளிக்கும் இந்தப் பதப் பிரயோகம் இறுதிப் போராட்டத்தை மறுப்பதற்கு மட்டும் அல்லாமல், இறுதியான மக்கள் போராட்டத்தை விரும்பாத பெரும் பூர்ஷ்வாக்கள், நிலப்பிரபுக்களின் நலனுக்காக மக்களின் நலனைப் பலியிடவும் பயன்படுத்தப்பட்டது. இந்த முதல் போராட்டத்திலும், அதையடுத்து பத்து ஆண்டுகளுக்குப்பின் நடந்த போராட்டத்திலும் பல பெரிய சாதனைகள் புரிந்தாலும் இயக்கம் வீழ்ச்சி அடைவதற்குக் காரண பூதமான முரண்பாடு இதில்தான் உள்ளது; புதிய கொள்கையின் விளைவாக விரைவிலும் நிச்சயமாகவும் கிடைக்கும் எனத் தாராளமாக வாக்களிக்கப்பட்டபடி சுயராஜ்யம் கிட்டத் தவறியதற்குக் காரணம் இந்த முரண்பாடுதான்.

காங்கிரஸ் புதிய கொள்கையை ஏற்று சுயராஜ்யத்தை விரைவில் பெறுவதற்கெனப் புதிய போராட்ட திட்டத்தைக் கைக் கொண்டதும் மக்கள் இயக்கம் மிகப் பெரிய முன்னேற்றம் கண்டது. காந்தி உறுதியாகவும் நிச்சயமாகவும் தங்குதடையின்றி 'ஆருடம்' கூறினார், பன்னிரண்டு மாதங்களிலேயே சுயராஜ்யம் கிடைக்கும் என அவசரக் கோலமாய் வாக்களித்தார் (அக் காலத்து உற்சாகமான சூழ்நிலையில் அவரைப் பின் பற்றினவர்கள் கரவற்ற இந்த வாக்குறுதி பலிக்கும் என நம்பினார்கள்.), நிச்சயமான தேதியும் குறித்தார்: 1921, டிசம்பர் 31, 1921 செப்டம்பரில் நடந்த ஒரு மாநாட்டில் ''ஆண்டு முடிவுக்குள் சுயராஜ்யம் கிடைத்துவிடும் என்று நம்பிக்கை இருப்பதால் டிசம்பர் 31க்குப் பிறகு சுயராஜ்யம் பெறாமல் நாம் உயிரோடிருக்க இயலாது,'' என்று கூறும் அளவுக்குச் சென்றுவிட்டார். (சுபாஷ்போஸ்: ''இந்தியப் போராட்டம்'', பக். 84) ஆயினும், அவருக்கு முன்னுள் அரசியல் பணி மிக்க நீண்ட பலப்பல ஆண்டுகள் கிடந்தன; சுயராஜ்யம்தான் கிட்டவில்லை.

வெற்றி நாளைவிட காந்தியின் போர்த் திட்டம் தெளிவற்று இருந்தது. அதிகார பூர்வமான ''இந்திய தேசீய காங்கிரஸ் வரலாறு'' உரைக்கிறது:

> ''மாபெரும் சட்ட பூர்வமான இயக்கம்தான் மக்களைக் கவர்ச்சித்துக் கொண்டிருந்தது. என்ன அது, எப்படித்தான் இருக்கும்? காந்தியே அதை விளக்கவில்லை, விரித்துரைக்கவில்லை; அவரே உருவகப்படுத்தியும் அதைப் பார்க்கவில்லை. தீர்க்க தரிசனம் உடையோருக்கு, தூய உள்ளம் படைத்

தோருக்குப் படிப்படியாகத் தானே அது விளக்கம் கொள்ளும் —அடர்ந்த காட்டினூடே களையுற்று நடக்கும் பாதசாரியின் கால்களுக்குப் பாதை தானுகத் தென்பட்டு ஓய்ந்துபோன அவன் கண்களுக்கு ஒளிக்கதிர் ஒன்று தோன்றவும் அவனுக்குப் புதிய நம்பிக்கை உதயமாவது போல.''

(அதிகார பூர்வமான ''இந்திய தேசிய காங்கிரஸ் வரலாறு'', 1935, பக். 376.)

1921இல், அந்த மகத்தான நாட்களில், ஆர்வம்மிக்க இளம் சீடராக சுபாஷ் போஸ் மகாத்மாவை முதன் முதலில் அணுகிய போது தமக்கு அதைரியம் ஏற்பட்டதாய்க் கூறுகிருர்; ''தெளிவான தகவல்கள்—அடுத்தடுத்த கட்டங்கள்—அவருடைய திட்டத்தில் யாவை,படிப்படியாக முன்னேறி அந்நிய அதிகார வர்க்கத்திடமிருந்து இறுதியாக அதிகாரத்தைக் கைப்பற்றுவது எப்படி என்னும் விவரம்'' என்ற சுபாஷின் விணுவுக்கு விடை கிடைக்கவில்லே.

''உண்மையில் அவர் என்ன எதிர்பார்க்கிருர் என்று எனக்குப் புரியவில்லே. காலம் கனியுமுன் அவர் தன் ரகசியங்களே வெளியிட விரும்பவில்லேயோ, அல்லது அரசாங்கத்தை நிர்ப்பந்தத்தில் வைக்கும் போராட்ட முறைகளே அவர் செவ்வையாக உருவாக்கிக் கொள்ளவில்லேயோ தெரியவில்லே.'

(சுபாஷ் போஸ்: ''இந்தியப் போராட்டம்—1920–1934'', பக். 68.)

ஜவகர்லால் நேரு, காந்தியின் 'ஆனந்தகரமான தெளிவின்மை' பற்றி எழுதுகிருர்:

''நம் தலேவர்களில் பலருக்கு சுயராஜ்யம் எனில் விடுதலேயைவிடக் குறைவான ஏதோ ஒன்று எனத் தெளிவாயிருந்தது. இவ்விஷயம் பற்றிக் காந்திஜீயோ ஆனந்தகரமான தெளிவின்மையோடு இருந்தார்; அதைப் பற்றித் தெளிவாய்ச் சிந்திக்கவும் அவர் ஊக்கம் தரவில்லே.''

(ஜவகர்லால் நேரு: சுய சரித்திரம், பக். 76.)

ஆயினும், அவர் விளக்குகிருர்:

''அவர் ஒரு பெரிய, அற்புதமான மனிதர், போற்றுதற்குரிய தலேவர் என்பதை நாங்கள் எல்லோரும் உணர்ந்தோம்; அவரிடம் நம்பிக்கை வைத்துவிட்டதால் கையெழுத்திட்ட காலி செக்கை அவரிடம் கொடுத்துவிட்டோம்—அப்போதைக்கு, குறைந்தபட்சமாக.''

(மேற்படி நூல், பக். 73.)

1921இல் ஏற்பட்ட இயக்க வளர்ச்சி, ஒத்துழையாமை இயக்கத்தின் உற்சாகமான முன்னேற்றத்தில் மட்டும் தென்படவில்லை, நாட்டின் பல பகுதிகளில் அதே சமயம் நடந்த மாபெரும் போராட்டங்களிலும் வெளிப்பட்டது: அஸ்ஸாம்—வங்காள ரயில்வே வேலை நிறுத்தம், மிதுனபூர் வரி கொடாப் போராட்டம், தெற்கே மலையாளத்தில் மாப்பிள்ளைமார் கலகம், பஞ்சாபில் அரசாங்க ஆதரவு பெற்ற மஹந்துக்களை எதிர்த்துப் போர்க் குணம் மிக்க அகாலி இயக்கத்தினர் போராட்டம்—ஆகியவற்றை உதாரணங்களாய் உரைக்கலாம்.

1921 இன் இறுதி மாதங்களில் போராட்டம் புதிய சிகரங்களை எட்டியது. நிலைமையின் போக்கு கண்டு மிகத் திகிலும் கவலையும் கொண்ட அரசாங்கம் காந்திக்கு எதிராக அவர்களுக்கு நம்பகமான துருப்புச் சீட்டை விளையாட முடிவு செய்தது; வருட ஆரம்பத்தில் கொன்னுட் பிரபு இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்தார்; இப்போது வேல்ஸ் இளவரசரையே இந்தியாவுக்கு அழைத்து வருவது என்பதே அந்தத் துருப்புச் சீட்டு; மக்களை முற்றிலும் அமைதிப்படுத்திவிடலாம் என்பது அரசின் நம்பிக்கை அல்ல; கிழக்கு நாடுகளின் மர்மத் தன்மையை நன்கு புரிந்து கொண்டுள்ளதாய் நினைத்த ஆங்கிலோ-ஸாக்ஸானிய வல்லுநர்கள் கீழை நாட்டு இதயம் மன்னரையும் மன்னரின் குடும்பத்தைச் சார்ந்தோரையும் பக்தி வணக்கத்தோடு போற்றும் என்று எதிர் பார்த்தார்கள்; எனவே, வேல்ஸ் இளவரசரின் விஜயத்தைக் கொண்டு இந்திய மக்களின் உணர்ச்சிகளை 'ஆழம் பார்க்கலாம்' எனத் தீர்மானித்தார்கள்: விளைவு அவர்கள் எதிர்பார்த்ததைவிட மிகுதியாக இருந்தது—அவர்கள் எதிர்பார்த்ததற்கு நேர்மாறான திசையில். நவம்பர் 17 ஆம் நாள் இந்தியா எங்கும் நடந்த வேலை நிறுத்தம், அன்று இந்தியாவுக்கு விஜயம் செய்த வேல்ஸ் இளவரசருக்கு வரவேற்பு அளித்தது; இந்திய மக்கள் தங்களுடைய வெறுப்பை இவ்வளவு பிரமாண்டமான, மலைப்பு தரும் முறையில் இதற்கு முன் வெளியிட்டதில்லை. மக்களின் பகைமை உணர்ச்சியும், அரசு கையாண்ட அடக்கு முறையும் ரத்தம் சிந்தும் போராட்டங்களாயின; அவற்றைத் தடுக்கக் காந்தி செய்த முயற்சிகள் பலிக்கவில்லை; அலுப்புற்ற அவர் சுயராஜ்யம் தம் நாசிகளில் நாறுவதாய்க் கூறினர்.

இந்த நிலையிலிருந்து தேசியத் தொண்டர் இயக்கம் தன் அணிகளை ஒழுங்குபடுத்திக் கொண்டது; அவர்கள் இதுவரை ''அஹிம்சை வழி ஒத்துழையாமை''யின் அடிப்படையில் காங்கிரஸுக்குள்ளேயோ, கிலாபத் இயக்கத்துக்குள்ளேயோ இருந்தனர்; ஆனால், பலர் சீருடை அணிந்து, உடற்பயிற்சி செய்து,

பேரணி வகுத்து, மறியல் செய்வதன் வாயிலாகவும், அமைதியாக வேண்டிக் கொண்டும் ஹர்த்தால்களுக்கும் அயல்நாட்டுத் துணிகளைப் பகிஷ்காரம் செய்வதற்கும் ஏற்பாடு செய்தனர்.

அரசின் அடக்குமுறை பலம் முழுவதும் தேசீயத் தொண்டர்களுக்கு எதிராகத் திருப்பிவிடப் பட்டது. அரசாங்க ஏடுகளான ஸ்டேட்ஸ்மன், இங்கிலீஷ்மான் போன்றவை, தேசீயத் தொண்டர்கள் கல்கத்தாவைக் கைப்பற்றிவிட்டன என்றும் அரசாங்கம் ஆட்சியைத் துறந்து விட்டது என்றும் கூறி உடனடியாக நடவடிக்கை எடுக்குமாறு ஊளையிட்டன. தொண்டர்படை சட்ட விரோதமானது என அரசு அறிவித்தது. ஆயிரக் கணக்கானோர் கைது செய்யப்பட்டனர். ஆயிரக் கணக்கான மாணவர்களும் ஆலைத் தொழிலாளர்களும் தொண்டர் அணிகளை நிரப்பினர்.

டிசம்பர் இறுதிக்குள், காந்தியைத் தவிர மற்ற பிரபலமான காங்கிரஸ் தலைவர்கள் யாவரும் சிறையில் வைக்கப்பட்டனர். இருபதாயிரம் அரசியல் கைதிகள் சிறைகளை நிரப்பினர். போராட்டத்தின் உச்சகட்டத்தில், அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் முப்பதாயிரம் பேர் சிறையில் இருந்தனர். உற்சாகம் ஜ்வர வேகத்தில் இருந்தது.

அரசாங்கம் கவலையும் குழப்பமும் அடைந்து பொறுமை இழக்கலாயிற்று. அரசு எதிர்ப்பு உணர்ச்சி தொத்து நோய்போல் நகரங்களிலிருந்து லட்சக்கணக்கான உழவர்களுக்கு இடையிலும் பரவலாயிற்று; பிரிட்டிஷ் ஆட்சிக்கு வேறு விமோசனம் இல்லை; அவர்களுடைய துப்பாக்கிகளும் வானவூர்திகளும் கொதியுலை போல் கொந்தளிக்கும் 30 கோடி மக்களை ஏதும் செய்ய முடியவில்லை. பண்டித மாளவியாவை இடை மனிதராக வைத்துக் கொண்டு வைசிராய் சிறையில் இருந்த தலைவர்களுடன் சமரசம் பேசலுற்றார். சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்திக் கொண்டால், தேசீயத் தொண்டர் படையைச் சட்டபூர்வமான ஸ்தாபனமாக ஏற்பதாகவும், சிறையிலுள்ள கைதிகளை விடுவிப்பதாகவும் கூறினார். பேச்சுகள் முறிவுற்றன.

இந் நிலையில், ஆண்டிறுதியில் ஆமதாபாதில் காங்கிரஸ் கூடியது; பெரும்பாலும் காந்தி மட்டும் தலைமையில் இருந்தார். வங்காளத்தின் வீரத் தலைவரான சி. ஆர். தாஸ் தலைமைதாங்கி இருக்க வேண்டும், ஆனால் அவர் சிறையில் இருந்தார்; நடவடிக்கைகள் ஆரம்பமாகும்போது காந்தி ஓர் ஆங்கிலேயப் பாதிரியாரை ஒரு சமயச் சொற்பொழிவு ஆற்றுமாறு வேண்டினார்; அயல்நாட்டுத் துணிகளை எரிப்பதைப் போற்றிப் பேசினார் அப் பாதிரியார்,

உற்சாகத்துக்கு இடையில், ''அஹிம்சை வழி ஒத்துழை யாமைப் போராட்டத்தை இன்னும் தீவிரமாக நீடிப்பது என்றும்....சுயராஜ்யம் கிடைத்து இந்திய அரசின் ஆட்சி மக்கள் கைக்கு மாறும்வரை'' போராட்டம் நடக்கும் என்றும் ஆமதாபாத் காங்கிரஸில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்ட துடன் பதினெட்டு வயதுக்கு மேற்பட்டவர்கள் எல்லோரும் சட்ட விரோதமான தொண்டர் படையில் சேருமாறு வேண்டுகோள் விடுக்கப்பட்டது; ''சட்ட மறுப்பு இயக்கத்தில் மட்டுமே, அது திரளமான மக்கள் பங்கு கொள்வதாயினும் சரி, தனி நபர் பங்கு கொள்வதாயினும் சரி, எதிர்த்துத் தாக்குவதற்காயினும் சரி, தற்காப்புக்காயினும் சரி, அதில் மட்டுமே முழு கவனத்தையும் செலுத்துவதே'' லட்சியம் என்று அறிவித்து, இக் காரணங்கள் எல்லா அதிகாரங்களையும் ''காங்கிரஸின் தனி நிர்வாக அதிகாரியான மகாத்மா காந்தி''க்கு அளிப்பதென்றும் முடிவாயிற்று.

காந்தியே இப்போது சர்வாதிகாரி. கிளர்ச்சி உச்சி மட்டத்தில் இருந்தது. அதை வெற்றிக்கு அழைத்துச் செல்லும் எல்லா அதிகாரங்களும் அவரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தன. இறுதியான பலப்பரீட்சைக்கான தருணம் வந்து விட்டது; மக்கள் சட்ட மறுப்பு இயக்கம் தொடங்கும் நேரம் வந்து விட்டது. நாடு முழுவதுமே காந்தியை எதிர்நோக்கியது: என்ன செய்யப் போகிறார் அவர்?

நாடு முற்றிலும் ஊக்கமும் நம்பிக்கையும் பெருகிக் குமுறும் இந்த நேரத்தில் ஒரே ஒரு மனிதர் மட்டும் நிகழ்ச்சிகளின் போக்கைக் கண்டு வருத்தமும் திகிலும் கொண்டிருந்தார். அந்த மனிதர் காந்தியே. அவருடைய இயக்கம், அவர் அகக் கண்ணால் கண்ட இயக்கம் அவர் விரும்பிய வழியே செல்லவே இல்லை. ஏதோ தவறு நடக்கிறது. அவர் சித்திரமாகத் தீட்டிய, கனவு கண்ட, தத்துவபரமான, நிறைவான ''அஹிம்சை இயக்கம்'' இது அன்று. அவர் ஒரு பூதத்தை அவிழ்த்து விட்டு விட்டார். கோர சக்திகள் தலைகாட்டுகின்றன. அவருடைய சகாக்களுக்குள்ளேயே, குறிப்பாக முஸ்லீம் சகாக்கள் சிலர் ''அஹிம்சை''ப் பிரிவைக் கைவிடும்படி பொறுப்பில்லாமல் பேசுகிறார்கள். 1921ஆம் ஆண்டின் அந்த இறுதி வாரங்களிலேயே, அவருடைய பெயரை நாவால் உச்சரித்தவாறு பத்தாயிரக் கணக்கான போராட்ட வீரர்கள் சிறை சென்று கொண்டிருக்கையில் அவர் தம் அச்சத்தையும் அருவருப்பையும் மேலும் மேலும் வெளிப்படையாக, ''சுயராஜ்யம் என் நாசிகளில் நாறுகிறது'' என்பது போன்ற அறிவிப்புகள் வாயிலாக வெளியிட்டவண்ணம் இருந்தார்.

ஆமதாபாதில் பின்வாங்கும் படலம் ஆரம்பமாயிற்று. போராட்டத்தை எதிர்பார்த்து ஆயிரக்கணக்கானோர் காத்திருக்கும் கொதிப்பான சூழ்நிலைக்கு இடையில், வெளிப்படையான பின்னேற்றம் தொடங்கவில்லை. ஆனுல், சிறு அறிகுறிகள் தென்பட்டன. ஆமதாபாத் காங்கிரஸ் கூடிய நேரமே வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சிறந்த நேரம்; மக்கள் காத்திருந்த இறுதிப் போராட்டத்துக்கும் வெற்றிக்குமான அழைப்புவிடுத்து, நாடெங்கும் சட்ட மறுப்பு இயக்கம் துவக்கத்தக்க தருணம் அது. ஆமதாபாத் காங்கிரஸிடம் இளைய கட்சியான கம்யூனிஸ்டுக் கட்சி சமர்ப்பித்த அறிக்கை கூறியது:

> "இந்தியாவின் அஸ்திவாரத்தை உலுக்கிக் கொண்டிருக்கும் புரட்சிக்குக் காங்கிரஸ் தலைமை வகித்து நடத்த விரும்பினுல், வெறும் ஆர்ப்பாட்டங்களிலும் தற்காலிகமான, கொந்தளிப்பான உற்சாகத்திலும் அது நம்பிக்கை வைக்கக் கூடாது. தொழிற் சங்கங்களின் கோரிக்கைகளை உடனடியாகக் கோரும்படி அது செய்ய வேண்டும்; கிஸான் சபைகள் தங்கள் வேலைத் திட்டங்களைத் தீட்டிக் கொள்ளுமாறு அது செய்ய வேண்டும். எந்தத் தடையாலும் காங்கிரஸ் தேங்காத காலம் விரைவில் வரும்; தங்கள் பௌதிக நலன்களுக்காகப் போராடும் மக்கள் அனைவருடைய தடுக்கவொண்ணுத பலம் அதற்குக் கிட்டும்."
>
> (இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் அறிக்கை—ஆமதாபாத் காங்கிரசுக்கு விடுக்கப்பட்டது, 1921.)

பகிரங்கப் போராட்டத்துக்கான அழைப்பு ஆமதாபாதில் விடுவிக்கப்படவில்லை. மாருக, ஆமதாபாத் தீர்மானங்களிலிருந்து வரிகொடாமை பற்றிய எல்லாக் குறிப்புரைகளும் மறைந்துவிட்டதைக் கூர்த்த பார்வையாளர்கள் கவனித்தார்கள். மக்கள் சட்ட மறுப்பு இயக்கத்திற்கான குறிப்புகளும் 'ஆனுலுக்கும், போனுலுக்கும்' உட்பட்டன: "தக்க பாதுகாப்பின் கீழ்" "பின்னர் பிறப்பிக்கப்படப் போகும் ஆணைகளின் கீழ்", "பெரும்பாலான மக்கள் அஹிம்சை முறையில் போதுமான பயிற்சி பெற்றபின்"— போன்ற வாசகங்கள்....அப்பால் வந்தது ரிபப்ளிகன் முஸ்லிம் தலைவர் ஹஸ்ரத் மொஹானியின் கதை; சுயராஜ்யம் என்பது, "எல்லா அயல்நாட்டு ஆட்சியும் நீக்கப்பெற்ற முழு விடுதலையே"— என்கிற தீர்மானத்தை அவர் கொண்டுவர விரும்பினுர். காந்தி வலுவாகப் பதிலடி கொடுத்தார் ("அது பொறுப்பின்மையைக் காட்டுவதால் எனக்கு மிகத் துயரம் தருகிறது"); அதை நிராகரிக்கச் செய்தார்.

இந்திய அரசாங்கம் கண்களுக்கு நோவு எடுக்கக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தது; ஆமதாபாதில் புலப்பட்ட சிறு சமிக்ஞைகளைக் கண்டு ஆறுதல் மூச்சுவிட்டது. லண்டனிலுள்ள ராஜ்யக் காரியதரிசிக்கு வைசிராய் தந்தி அனுப்பினார்:

> ''கிருஸ்துமஸ் வாரத்தின் போது காங்கிரஸ் தன் ஆண்டுக் கூட்டத்தை ஆமதாபாதில் கூட்டியது. பம்பாய்க் கலவரத்தால் காந்தியின் மனம் மிகப் புண்பட்டுள்ளது; அப்போது அவர் விடுத்த அறிக்கைகளிலிருந்து அது தெரிகிறது; மக்கள் சட்ட மறுப்பு இயக்கத்திலுள்ள அபாயங்களை பம்பாய்க் கலவரம் அவருக்கு உணர்த்திவிட்டது; காங்கிரஸ் தீர்மானமே இதற்குச் சான்று; கிலாபத் இயக்கத்தைச் சார்ந்த தீவிரவாதிகள் அஹிம்சையை கைவிடுமாறு கொண்டு வந்த தீர்மானத்தை அவர்கள் நிராகரித்ததோடு, சட்ட மறுப்பு இயக்கம் துவக்கப்படுவதற்கு தில்லி நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்பட வேண்டும் என்று வற்புறுத்தியதுமன்றி, வரிகொடா இயக்கம் பற்றின எவ்விதக் குறிப்பும் அதில் காணப்படவில்லை.''
>
> (''இந்திய நிலைமை பற்றித் தந்திப் போக்கு வரத்து'', 1922.)

என்ன செய்வார் காந்தி? திட்டம் ஏதும் இல்லாமலே ஆமதாபாத் காங்கிரஸ் கலைந்து விட்டது. எல்லாம் காந்தியின் பொறுப்பில் விடப்பட்டன. பாரீஸ் முற்றுகையின் போது பாரீஸ் மக்கள், ''தளபதி டிரோசுவிடம் திட்டம் இருப்பதாக நம்பித் தங்களை ஆறுதல்படுத்திக் கொள்ள முயன்றது போல், ஏகாதிபத்தியச் சுத்தியலின் அடக்குமுறை அடிகளை வாங்கிக் கொண்ட இந்திய மக்கள் காந்தி தன் போர் முறையை வெளியிடுவார் என்று நம்பிக்கையோடு எதிர்பார்த்தனர்.

காந்தியின் போக்கு ஒரு மாதிரியாக இருந்தது. ஒரு மாதம் காத்திருந்தார். இந்த மாதகாலத்தில், வரிமறுப்புப் போராட்டம் துவங்குமாறு வேண்டிக் கொண்டு மாவட்டங்கள் அவரை அணுகின. ஒரு மாவட்டம் — குண்டூர் — அனுமதி இன்றியே தொடங்கிவிட்டது. குறித்த நாளில் வரிபாக்கிகள் யாவும் செலுத்தப்படுமாறு கவனிக்கும்படி காந்தி உடனடியாகக் காங்கிரஸ் அதிகாரிகளுக்கு ஒரு குறிப்பு அனுப்பினார். அப்பால், செயல்படுவதற்கு அவர் தலைமையை எதிர்பார்த்திருந்த இந்திய மக்களில் நாலாயிரத்தில் ஒரு பகுதியினரான 87,000 பேர் வசிக்கும் பர்தோலி மாவட்டத்தில் பரிபூரண ''அஹிம்சை''க் நெறிமுறைக்கான ஜாக்கிரதையோடு

சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்குவதென்று அவர் முடிவு செய்தார். பிப்ரவரி முதல் நாளன்று அவர் வைசிராய்க்கு இறுதி எச்சரிக்கை விடுத்தார், கைதிகள் விடுதலை செய்யப்பட்டு, அடக்கு முறைகள் கைவிடப்படாவிட்டால் ''மக்கள் சட்ட மறுப்பு இயக்கம்'' பர்தோலியில் மட்டும் துவக்கப்படும் என்பது இறுதி எச்சரிக்கை. அவர் இவ்வாறு செய்த சில நாட்களுக் குள்ளேயே, ஐக்கிய மாகாணங்களிலுள்ள ஒரு சிறு கிராமமான ''சௌரி சௌரா''வில் ஆத்திரமுற்ற குடியானவர்கள் கிராமக் காவல் நிலையத்தைத் தாக்கித் தீயிட்டு விட்டனர் என்றும் அதிர்ஷ்டம் கெட்ட கிராமப் போலீஸ்காரர்கள் தீயில் மாண்டு போயினர் என்றும் செய்தி வந்தது. உழவர்களுக்கு இடையிலும் கொந்தளிப்பு பரவிவிட்டது என்கிற இச்செய்தி, இந்தியப் புரட்சிக்கு முடிவான பிரச்னையான இச்செய்தி வந்தவுடனேயே இனி தாமதிக்கக் கூடாது என்று காந்தி முடிவு செய்தார். பிப்ரவரி 12 ஆம் நாள் பர்தோலியில் அவசரமாய்க் கூட்டப் பட்ட காரியக் கமிட்டி, ''சௌரி சௌராவில் மக்கட் கூட்டம் மனிதத் தன்மையற்ற முறையில் ஒழுகியதற்காக'', மக்களின் சட்ட மறுப்பு இயக்கத்தை மட்டுமல்ல, தொண்டர் படை ஊர்வலங்கள் வாயிலான சட்டமறுப்புக் கிளர்ச்சிகள், தடை செய்யப்பட்ட கூட்டங்களை நடத்துதல் போன்ற நடவடிக்கைகள் யாவையும் நிறுத்துவதாகவும், அதற்குப் பதிலாக மக்கள் நூற்பு, மதுவிலக்கு, கல்வி அளித்தல் போன்ற ''ஆக்கப் பணி''களில் ஈடுபட வேண்டும் என்றும் முடிவெடுக்கப்பட்டது. போர் முடிந்தது. போராட்டம் முற்றிலும் முடிந்துவிட்டது. உண்மை யாகவே மலையை எலி குடைந்துவிட்டது.

பர்தோலி முடிவு காங்கிரஸ் பாசறையில் திகில் எழுப்பியது எனக் கூறுவது, மூட்டப்பட்ட உணர்ச்சிகளை வெளியிட மொழிக் குள்ள ஆற்றலின்மையால் கூறுவதாகும். ஆங்கிலேய வாசகர்கள் அதை உணர்ந்துகொள்ள வேண்டுமாயின், 1926 இல் இங்கிலாந் தில் பொது வேலை நிறுத்தம் நிறுத்தப்பட்டதை 1922 இந்தியா- பர்தோலி நிகழ்ச்சிக்கு இணையாக ஓரளவு சொல்லலாம்.

''மக்களின் உற்சாகம் கொதி நிலையினை எட்டும் தருணத் தில் பின்வாங்குமாறு ஆணை பிறப்பித்ததை ஒரு தேசிய விபத்து என்றே கூறவேண்டும். மகாத்மாவின் தலைமைத் தளபதிகளான தேசபந்து தாஸ், பண்டித மோதிலால் நேரு, லாலா லஜபத்ராய் சிறையில் இருந்தனர்; அவர்கள் அனைவரும் மக்களின் எதிர்ப்புணர்ச்சியைப் பகிர்ந்து கொண்டனர். அப்போது நான் தேசபந்து தாஸுடன் இருந்தேன்; அவர்

ஆத்திரத்தாலும் துயரத்தாலும் கலக்க முற்றதைக் கண்டேன்.''

(சுபாஷ் போஸ்: ''இந்தியப் போராட்டம்'', பக். 90.)

மோதிலால் நேருவும், லஜபத்ராயும், மற்றவர்களும் காந்தியின் முடிவை எதிர்த்து நீண்ட, ஆத்திரமான கடிதம் எழுதினார்கள். சிறையில் உள்ள மனிதர்கள் 'குடிமுறையில் இறந்தவர்களே', கொள்கையில் குறுக்கிட அவர்களுக்கு உரிமை இல்லை என்று காந்தி அமைதியாக மறுமொழி கூறினார்.

மக்கள் தானாக எவ்வித நடவடிக்கையும் எடுக்கலாகாது, ஒரே ஒரு மனிதரின் விருப்புக்கு யந்திரங்கள் போல் மக்கள் அடங்க வேண்டும் என்கிற அடிப்படையில் உருவாக்கப்பட்ட இயக்கம் பர்தோலி முடிவினால் நிராதரவான குழப்பத்திலும் ஒழுக்கக்கேட்டிலும் முற்றிலும், தவிர்க்கவொண்ணாத வகையில் ஆழ்ந்தது. ஜவகர்லால் நேரு இந்த முடிவை ஆதரிக்க முயலுகிறார்; இயக்கம் நிறுத்தப்பட்டிராவிடின் கைமீறிச் சென்று, வன்முறைச் செயல்களிலும் அரசாங்கத்தோடு ரத்தப் போராட்டத்திலும் திரும்பியிருக்கும். அந்நிலையில் அரசாங்கம் நிச்சயம் வெற்றி பெற்றிருக்கும் என்று அவர் காரணம் காட்டுகிறார்; ஆயினும் முடிவெடுக்கப்பட்ட முறை,

''ஒரு வகை ஒழுக்கக்கேட்டினை உண்டாக்கியது. ஒரு பெரும் இயக்கத்தைத் திடீரென இவ்வாறு நெருக்கி நிறுத்தியதால் நாட்டில் ஒரு துன்பகரமான நிலை எழுவதற்குக் காரணமாகியிருக்கலாம். அரசியல் போராட்டத்தில் ஆங்காங்கு நடந்த பயனற்ற வன்முறைப் போக்கு தடுக்கப்பட்டுவிட்டது; அடக்கப்பெற்ற வன்முறைவுணர்ச்சிகளுக்கு வெளியேற்ற வழி ஒன்று தேவைப்பட்டது; அடுத்த ஆண்டுகளில் இக்காரணத்தால் வகுப்புக் கலவரம் வலுத்திருக்கலாம்.''

(ஜவகர்லால் நேரு: சுயசரித்திரம், பக். 86.)

இயக்கம் இவ்வாறு உள்ளுக்குள் முடங்கி நெறி கெட்டுப்போன பிறகு அரசாங்கம் நம்பிக்கையோடு தாக்கியது. மார்ச் 10 ஆம் நாள் காந்தி கைது செய்யப்பட்டு, ஆறு ஆண்டு சிறைத் தண்டனை விதிக்கப்பட்டார். மக்கள் இயக்கத்தில் ஒரு சிற்றலைகூட எழவில்லை. இரண்டு வருடங்களுக்குள்ளாகவே காந்தி விடுதலை செய்யப்பட்டார். நெருக்கடி தீர்ந்தது.

பர்தோலி முடிவையும், அதையடுத்து ஆறு ஆண்டுகளில் அலை ஓய்ந்து தணிந்து தேசீய இயக்கத்தில் நேர்ந்த கசப்பான

பின் விளைவுகளையும் பற்றி பெருத்த விவாதம் காரசாரமாக நடந்துள்ளது. முடிவை ஆதரிப்பவர்கள், உடனடியாக இந்த முடிவை மேற்கொண்டதற்குச் சௌரி சௌரா நிகழ்ச்சி காரணம் என்று அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்டாலும், முடிவின் உண்மையான காரணத்தையும் இன்னும் ஆழ்ந்து பார்க்க வேண்டும்; உண்மையில் இயக்கத்தை நிறுத்த வேண்டிய தருணம் வந்துவிட்டது. "ஏனெனில் நம் இயக்கம் வெளித் தோற்றத்துக்கு சக்தி வாய்ந்ததாகவும் பரவலான உற்சாகம் நிறைந்ததாகவும் காணப்பட்டாலும், அது தூளாகிக் கொண்டிருந்தது" (ஜவகர்லால் நேரு: "சுயசரித்திரம்", பக். 85) என்று மொழிகிறார்கள். இயக்கம் எந்தப் பொருளில் தூளாகிக் கொண்டிருந்தது என்று கேட்கப்படலாம். அது சீர்திருத்தக்காரர்கள், சமாதானவாதிகளின் கையிலிருந்து நழுவிக்கொண்டிருந்தது என்னும் பொருளில் அவ்வாறு உரைக்கப்படுகிறது என்றால், அது மிகவும் பொருந்தும் என்பதில் சந்தேகமில்லை. இத்தகைய நிலைமை இயக்கத்தின் வளர்ச்சியிலும் வெற்றிக்கான எதிர்காலச் சூழ்நிலையிலும் ஏற்படக் கூடியதே (அனைத்திந்திய மக்கள் கலகம் நடந்தால் அரசாங்கம் வெற்றி பெறுவதைத் தவிர்க்க முடியாது என்று நேரு கருதுவது போல் அரசாங்கம் அத்தனை உற்சாகமாகக் கருதி இருக்க முடியாது). அவ்வாறல்லாமல், மக்கள் எழுச்சியின் வலிமை குன்றி விட்டது என்ற பொருளில் கூறப்பட்டால் அது நிச்சயமாய்ச் சரியல்ல; முடிவின் ஆதரவாளர்களும் அனுமாய்க்கூட அப்படி கருதவில்லை என்பது மெய். இதற்குத் தெளிவான சான்று, பர்தோலி சரிவுக்கு மூன்று நாளைக்கு முன் நிலையின் உண்மையான கடுமையை அரசாங்கம் கவலையுடன் மதிப்பீடு செய்துள்ளதிலிருந்து பெறலாம்:

> "நகரங்களிலுள்ள கீழ் வகுப்பினர் ஒத்துழையாமை இயக்கத்தால் மிகக் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளனர் . . . சில வட்டாரங்களில் குடியானவர்கள் பாதிக்கப்பட்டுள்ளனர். குறிப்பாக, அஸ்ஸாம் பள்ளத்தாக்கின் சில பகுதிகள், ஐக்கிய மாகாணங்கள், பீகார், ஒரிஸ்ஸாவும் வங்காளமும். பஞ்சாபைப் பொறுத்த மட்டில், அகாலிக் கிளர்ச்சி. . . . கிராமப்புறத்திலுள்ள சீக்கியர்கள் வரை ஊடுருவியுள்ளது . . . . நாடெங்குமுள்ள முகம்மதிய மக்களில் பெரும் அளவினர் கசப்பும் ஆத்திரமும் கொண்டுள்ளனர் . . . . கவலைதரும் சாத்தியக் கூறுகள் . . . . இறந்தகாலத்தில் நடந்ததைவிட மிகப் பயங்கரமான தன்மை வாய்ந்த ஒரு குழப்ப நிலைக்கு இந்திய அரசு ஆயத்தமாயுள்ளது; நிலைமையினால் மிகுந்த கவலை உண்டாகி

யுள்ளது என்ற உண்மையைக் குறைத்து மதிப்பிட முயற்சி செய்யக் கூடாது.''

(இந்தியாவின் ராஜ்யக் காரியதரிசிக்கு 1922, பிப்ரவரி 9ஆம் நாள் வைஸ்ராய்; ''இந்திய நிலைமை பற்றித் தந்திப் போக்குவரத்து'', 1922.)

பிப்ரவரி 12 ஆம் நாள் பர்தோலியில் முடிவு எடுக்கப்படுவதற்கு, போராட்டம் முழுவதுமே கைவிடப்படுவதற்கு மூன்று நாளைக்கு முன், நாட்டு நிலை பற்றி அரசாங்கம் தீட்டிக்காட்டிய சித்திரம் இது.[1]

மக்கள் இயக்கத்தின் கட்டுப்பாடும், இறுதிப் போராட்டத்திற்கு அவர்களின் ஆயத்த நிலையும் குண்டூர் உதாரணத்திலிருந்து வெளியாகிறது; அங்கு காந்தியின் ஆணை இல்லாமலே, ஏதோ ஒரு தவறு காரணமாக வரிதரா இயக்கம் தொடங்கப்பட்டு விட்டது. வரிகளில் 5 சதவீதம் கூட வசூலாகவில்லை—காந்தியின் எதிராணை வரும் வரை. காங்கிரஸின் ஆணை பேரில் இதே வழியை நாடுமுழுவதும் பின்பற்றி இருக்கும் என்பதில் ஐயமில்லை; நாடு முழுவதும் நிலவரியும் குத்தகையும் தர மறுக்கும் நிலைமை தோன்றியிருக்கும். இந்த வழியைப் பின்பற்றியிருந்தால் ஏகாதிபத்தியம் மட்டும் அல்ல, நிலப்பிரபுத்துவ முறையும் பறந்து போயிருக்கும்.

இந்தக் கணக்குத்தான் பர்தோலி முடிவு எடுக்கத் தூண்டிய கணக்கு என்பதைத் தீர்மானத்தின் வாசகத்திலிருந்தே கண்டு கொள்ளலாம். பிப்ரவரி 12 ஆம் நாள் பர்தோலியில் காரியக்

1. 1922 நெருக்கடி பற்றி அரசாங்கத்தின் கருத்தும், காந்தி இயக்கத்தை வாபஸ் பெற்றதால்தான் தங்களைக் காப்பாற்றியது என்ற கண்ணோட்டமும் அப்போதைய பம்பாய் கவர்னரான லாயிட் பிரபு அளித்த பேட்டி ஒன்றில் வெளிப்படுகிறது:

''அவர் எங்களுக்குப் பெரும் திகில் உண்டாக்கிவிட்டார்! அவருடைய வேலைத் திட்டம் எங்கள் சிறைகளை நிரப்பிவிட்டது. மக்களை எப்போதும் கைதுசெய்துகொண்டே இருக்க முடியுமா என்ன. அதுவும் 319,000,000 பேர்களை! அவர் அடுத்த படியேறி, வரிகொடுக்க மறுத்திருந்தால்! எங்கள் கதி என்ன ஆகி இருக்கும் என்று ஆண்டவனுக்கே தெரியும்!

''உலக வரலாற்றிலேயே காந்தியின் சோதனை மிகப் பிரமாண்டமானது. அது வெற்றிக்கு ஓரங்குலத் தூரத்தில் வந்துவிட்டது. அவர்கள் வன்முறையில் இறங்கினார்கள், அவர் வேலைத்திட்டத்தை வாபஸ் வாங்கினார்; நாங்கள் அவரைச் சிறையில் இட்டோம்.''

(ட்ருபியர்சனுக்குத் தந்த பேட்டியில் லாயிட் பிரபு, சி. எப். ஆண்டிரூஸ் 1939, ஏப்ரல் 3, நியூ ரிபப்ளிக்கில் மேற்கோள் காட்டியது.)

கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தின் வாசகம் மிகவும் முக்கிய மானது, அதை அப்படியே இங்கு கூறத்தக்கது; இந்திய தேசீய இயக்கத்தின் சக்திகளையும் முரண்பாடுகளையும் விளக்கமாய்ப் புரிந்துகொள்ள ஆழ்ந்து பரிசீலிக்க வேண்டும்; முக்கியமான பிரிவுகள் வருமாறு:

''பிரிவு 1. சௌரி சௌராவில் போலீஸ்காரர்களை மிருகத்தனமாய்க் கொலை செய்தும் குரூரமாகக் காவல் நிலையத்தை எரித்தும் கூட்டத்தினர் மனிதத் தன்மையற்ற முறையில் நடந்து கொண்டது பற்றி காரியக் கமிட்டி வருந்துகிறது.''

''பிரிவு 2. மக்கள் சட்ட மறுப்பு இயக்கம் தொடங்கப் படும் ஒவ்வொரு முறையும் வன்முறை நிகழ்ச்சிகள் நடப்ப தாலும், அதன் வாயிலாக, நாடு போதுமான அளவு அஹிம்சை வழியில் இல்லை என்று தெரிவதாலும், காங்கிரஸ் காரியக்கமிட்டி, மக்களின் சட்ட மறுப்பு இயக்கம் நிறுத்தப் படவேண்டும் என்று தீர்மானிப்பதுடன், ஆங்காங்குள்ள கமிட்டிகள் குடியானவர்கள் அரசாங்கத்துக்குத் தரவேண்டிய நில வரி, மற்ற வரி பாக்கிகளைச் செலுத்துமாறு ஆலோசனை கூற வேண்டும் எனத் தெரிவிக்கிறது.

''பிரிவு 3. நவம்பர் 17 இலும், ஜனவரி 13 இலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளான கோரக்பூர் கொடுமைகளும், பம்பாயிலும் சென்னையிலும் நடந்த விஷமச் செயல்களும் மீண்டும் நிகழா என நம்பும் அளவுக்கு அஹிம்சை சூழல் ஏற்படும் வரை சட்ட மறுப்பு இயக்க நிறுத்தம் தொடரும் . . . . .

''பிரிவு 5. சட்ட விரோதமாக நடத்தப்படும் எல்லா தொண்டர் படை ஊர்வலங்களும் பொதுக் கூட்டங்களும் நிறுத்தப்பட வேண்டும்.

''பிரிவு 6. ரயத்துகள் ஜமீன்தார்களுக்கு குத்தகைப் பணம் தராமலிருந்தால் அது காங்கிரஸ் தீர்மானத்துக்கு எதிரானதென்றும் நாட்டின் நன்னலன்களுக்கு விரோதமான தென்றும் அவர்களுக்குத் தெரிவிக்குமாறு காங்கிரஸ் காரியக் கமிட்டி காங்கிரஸ் ஊழியர்களுக்கும் நிறுவனங்களுக்கும் ஆலோசனை கூறுகிறது.

''பிரிவு 7. காங்கிரஸ் இயக்கம் ஜமீன்தார்களின் சட்ட பூர்வமான உரிமைகளைத் தாக்கும் நோக்குடனில்லை என அவர் களுக்குக் காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுதி கூறுகிறது. ரயத்துகளுக்குக் குறைகள் இருந்தாலும் ஒருவரோடொருவர்

பேசியோ அல்லது பஞ்சாயத்து மூலமோ அவற்றைத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று கமிட்டி விரும்புகிறது.''

''அஹிம்சை'' என்ற சூக்குமமான வினுமட்டும் தீர்மானத்தை உருவாக்கியவர்களை உந்தவில்லை என்பதை தீர்மானமே காட்டு கிறது. மூன்று பிரிவுகள் (சாய்வெழுத்தில் உள்ளவை) தெளிவாக வும், அழுத்தமாகவும், அவசரமாகக்கூட, குடியானவர்கள் ஜமீன் தார்களுக்கோ அரசுக்கோ குத்தகை செலுத்த வேண்டிய அவசியம் பற்றிக் குறிப்பிடுவதைக் கவனிக்கவேண்டும். அஹிம்சையா, பலாத் காரமா என்ற கேள்வி இங்கு எழவில்லை. இது சுரண்டுவோர்-சுரண்டப்படுவோர் ஆகிய வர்க்க நலன்கள் பற்றின கேள்வி. குத்தகைத்தொகை தராமல் இருப்பதை ''வன்முறைச் செயல்'' என்று யாரும் கூற முடியாது; மாருக, அது மிக அமைதியான (எனினும், மிகப் புரட்சிகரமான) எதிர்ப்பு முறை. ''வன்முறை'' யைக் கண்டனம் செய்வதாய்ச் சொல்லிக்கொள்ளும் ஒரு தீர் மானம் குத்தகை தராமலிருக்கும் பிரச்னை பற்றியும், நிலக்கிழார் கள் சட்டபூர்வமான உரிமைகள் பற்றியும் இவ்வளவு செம்மை யாக ஏன் வற்புறுத்த வேண்டும்? ஒரே ஒரு விடைதான் சொல்ல முடியும்; வர்க்க நலன்களையும், வர்க்கச் சுரண்டலையும் காக்க, தெரிந்தோ தெரியாமலோ, ''அஹிம்சை'' என்ற பதப்பிரயோகம் ஒரு மேல்மூடியாகப் பயன்படுகிறது.

காங்கிரஸில் ஆதிக்கம் செலுத்திய, காந்தியுடன் தொடர் புள்ள தலைவர்கள், விழிப்புற்று மக்கள் செயல்படுவார்களோ என்று அஞ்சியதால்தான் இயக்கத்தை வாபஸ் பெற்ருர்கள். மக்கள் செயல்படுவார்களோ என அத்தலைவர்கள் ஏன் அஞ்சிஞர்கள் என்ருல் அவர்கள் மிக நெருக்கமாய்ச் சம்பந்தப் பட்டுள்ள சொத்துடையோர் நலன்களுக்கு அதஞல் அபாயம் ஏற்படும்.

''அஹிம்சையா, வன்முறையா'' என்ற பிரச்னையால் அல்ல, மக்கள் இயக்கத்துக்குப் பகையான வர்க்க நலம் பற்றிய பிரச்னை யால்தான் 1922 இல் தேசியக் கிளர்ச்சி சிதைந்தது. இந்தப் பாறைமீது மோதித்தான் இயக்கம் சிதறியது. இதுதான் ''அஹிம்சை'' என்பதன் மெய்ப்பொருள்.

## 3. போராட்டத்தின் மூன்ருவது பேரலை 1930–34

பர்தோலியில் அடியுண்டபின் ஐந்தாண்டுக் காலம் தேசிய இயக்கம் தரையில் விழுந்து கிடந்தது. காங்கிரஸ் அலை தணிந்து கீழ்மட்டத்தில் இருந்தது. 1924 இல், ஒரு கோடி உறுப்பினர் களைச் சேர்க்க வேண்டும் என முயன்றும் 200,000 க்கு மேல் ஏறவில்லையே என்று காந்தி குறைப்பட்டுக் கொண்டிருந்தார்;

''அரசாங்க எதிர்ப்பிலன்றி வேறு எவ்விதத்திலும் அரசியல் வாதிகளான நாங்கள் மக்களின் பிரதிநிதிகள் அல்ல,'' என்றார் அவர். அந்த வருடம் ''நூற்போருக்கே வாக்குரிமை''த் திட்டத் தைச் செயல்படுத்தினார்; (இத்திட்டத்தின்படி, தேர்ந்தெடுக்கப் பட்ட காங்கிரஸ் ஸ்தாபனங்களின் உறுப்பினர்கள் மாதந்தோறும் தங்கள் கையாலேயே நூற்று 2,000 கஜம் நூல் அனுப்ப வேண்டும்.) 1925 மாரிக்காலத்தில் அதைக் கட்டாய நிபந்தனை ஆக்காமல் விரும்புவோர் செய்யலாம் என மாற்றப்படும்வரை 10,000 உறுப்பினர்களையே திட்டம் உண்டாக்கியிருந்தது. 1925 இல், பம்பாய் கிரோனிகில் என்ற ஏடு ''பொதுவான முட்டக்க நிலையும் தேக்க நிலையும் பற்றி''ப் பேசுகிறது. அதே ஆண்டு லஜபத்ராய் ''குழப்பமும் ஒழுங்கின்மையும்'' பற்றிப் பேசினார். ''அரசியல் நிலைமை நம்பிக்கையோ ஊக்கமோ தருவதாக இல்லை. மக்கள் சோகத்தில் ஆழ்ந்துள்ளனர். ஒவ்வொன்றும் — கொள்கைகள், பழக்கங்கள், கட்சிகள், அரசியல்—சிதைந்து கரைந்து வருவதாய்த் தோன்றுகிறது'' என்றார் அவர். தேசிய இயக்கத்தின் இந்த மந்தத்தில் வகுப்பு வேறுபாடுகள் நாடெங்கும் பரவும் நச்சுக்குறி தோன்றியது. முஸ்லீம்லீக் காங்கிரசுடன் தனக்கு இருந்த தொடர்பைத் துண்டித்துக் கொண்டது இந்து மகாசபை குறுகிய, பிற் போக்கான, எதிர்ப் பிரசாரம் செய்தது.

பர்தோலிக்குப் பிறகு, சி. ஆர். தாஸ், மோதிலால் நேரு ஆகியோர் உட்படக் காங்கிரஸ் தலைமையினரில் சில தலைவர்கள் காந்தியின் கொள்கைகளை நடைமுறைக்கு ஒவ்வாத மலட்டுக் கொள்கைகள் எனக் கருதியதால், அவற்றிலிருந்து விலகி, காங்கிரசுக்குள்ளேயே ஒரு புதிய கட்சி அமைப்பது என்றும், தேர்தலில் போட்டியிட்டு, போராட்டத்தைப் புதிய சட்ட மன்றங்களுக்குக் கொண்டு போவது என்றும் தீர்மானித்தனர். புதிய கட்சிக்குச் சுயராஜ்யக் கட்சி என்று பெயரிடப்பட்டது.

தேர்தல்களையும் சட்டமன்றங்களையும் பகிஷ்காரம் செய் வதை நிறுத்துவது என்ற முடிவு, மக்கள் இயக்கம் வலுவற்றிருந்த நிலையில் ஒரு முற்போக்கான முடிவு என்பதில் ஐயமில்லை. காங்கிரசிலுள்ள வீரற்ற மிதவாதிகளான 'மாறுதல் வேண்டாதோர்' இந்த முடிவை எதிர்த்தார்கள்; அவர்கள் காந்தியின் ஆக்கப்பணித் திட்டமான நூற்றல், மதுவிலக்கு, தீண்டாமை விலக்கு போன்ற சமூகச் சீர்திருத்தங்களை விமோசனத்துக்கு ஒரே வழி என்றார்கள்: மிகச் செய்கை பூர்வ மான கொள்கையை வேண்டிய காங்கிரஸ்காரர்களின் சக்தி வாய்ந்த எதிர்ப்பு காரணமாகத் தீர்மானம் நிறைவேறுவதை

'மாறுதல் வேண்டாதோரால்' தடுக்க முடியவில்லை. 1925 அளவில் காங்கிரஸ் சுயராஜ்யக் கட்சியிடம் பரிபூரணமான, நிபந்தனையற்ற சரணுகதி அடைந்தது; பெரும்பான்மை வலிமை யுள்ள சுயராஜ்யக் கட்சியின் தலைவர்கள் உறுதியாக நிர்வாகத் தைக் கைப்பற்ற, காந்தி தற்காலிகமாகப் பின்னணிக்குச் சென்முர்.

ஆயினும், இயக்கத்தைத் தேக்கத்தில் ஆழ்த்திய காந்தி யின் கொள்கைகளிலிருந்து விலகவிழைந்த சுயராஜ்யக் கட்சி யினர் மக்களோடு தொடர்பு என்ற அடிப்படையிலிருந்தும் எட்டிச் சென்று விட்டார்கள். நாட்டின் மூலவர்களான தொழிலாளர் களும் குடியானவர்களும்தான் ஏகாதிபத்தியத்துடன் ராஜி பேச முடியாத நிலையில் இருந்தவர்கள்; அவர்களுடைய நலன் களைத் தேசீயப் போராட்டத்தில் மேல்வகுப்பினர் சுயநலம் காரண மாகக் காட்டிக் கொடுத்துவிட்டனர்; இந்த மேல் வகுப்பாரின் ஆதிக்கத்திலிருந்து காங்கிரசை மீட்டிருந்தால், அது காந்தியின் கொள்கையிலிருந்து முற்போக்கான செயலாக இருந்திருக்கும்; தத்துவக் கொள்கையளவில் சுயராஜ்யக் கட்சி அதை ஏற்கும் வகை யில் ஓரடி எடுத்துவைத்தது; "98 சதவீதத்தாருக்குச் சுயராஜ்யம்" என்ற சி. ஆர். தாஸின் சொல்லடுக்கு பரவலாக எதிரொலி கள் கிளப்பியது; புதிய வேலைத்திட்டம், தொழிலாளர்களையும் குடியானவர்களையும் ஒருங்கே திரட்ட வேண்டியதன் அவசியம் பற்றிப் பொதுப்படையாகக் குறிப்பிட்டது. ஆனுல், நடைமுறை யில், சுயராஜ்யக் கட்சி, முற்போக்கு மேல்மட்ட பூர்ஷ்வாக்களின் கட்சியாகவே விளங்கியது; அதன் முக்கியத் தலைவர்கள் அவர் களுக்கு இடையிலிருந்து வந்தவர்களாதலால் அவர்களுடைய ஆதரவால்தான் அது வாழ்ந்தது. தொழிலாளர்களையும் குடியானவர்களையும் பற்றி அவர்கள் உணர்ச்சி வசப்பட்டு எவ்வளவுதான் பேசினுலும், மேல் வகுப்பாரின் ஆதரவைப் பெறுவதற்காக, தங்கள் கட்சி நிலப்பிரபுத்துவத்தையும் முதலாளித்துவத்தையுமே அடிப்படை ஆதாரமாய்க் கொண் டுள்ளது என்பதைத் தெளிவுபடுத்திக் கொண்டிருக்க வேண்டி யிருந்தது. எனவே, அஸ்திவாரத் திட்டத்தின் நோக்கங்களில் தெளிவாக, "தனியார், தனிநபர் உடமை ஏற்கப்பட்டுப் பேணப்படும்; தனிநபரின் ஸ்தாவரஜங்கம சொத்துக்களை வளர்க்க அனுமதிக்கப்படும்" என்றொரு பிரிவு உள்ளது; அதை அடுத்துள்ள விளக்கவுரையில், சுயராஜ்யக் கட்சி நிலக்கிழார் களுக்கு எதிரானது என்று "அவதூறு"க்குப் பதில் கூறப் பட்டுள்ளது: "குத்தகைக்காரர்களுக்கு நியாயம் வழங்க வேண்டும் என்று சுயராஜ்யக் கட்சி விரும்புவது உண்மையே;

ஆனால் அந்த நியாயம் நிலக்கிழாருக்கு அநியாயம் செய்வதாயின் அது மிக எளியதாகும்.''

ஆகையால், முற்போக்கான ஒரு நிலையைச் சுயராஜ்யக் கட்சி பிரதிபலிப்பதாக இருக்கவேண்டும் என்று கருதப்பட்டாலும், புரட்சி அலையின் தாழ் நிலையைப் பிரதிபலிப்பதாகவும், மேல்மட்ட பூர்ஷ்வாத் தலைமையினரின் உண்மையான நோக்கங்களைப் பிரதிபலிப்பதாகவுமே இருந்தது. ஏகாதிபத்தியத்தோடு பாராளுமன்ற முறைகளில் ஒத்துழைக்க விரும்பிய பூர்ஷ்வாக்களின் கட்சியே சுயராஜ்யக் கட்சி. தொடக்கத்திலிருந்தே அது பகைவனாய்க் கருதப்பட்டோரின் பக்கமே மிகக் குனிந்திருந்தது. தொடக்கத்தில் சட்டமன்றப் பிரவேசத்தின் நோக்கம் ''ஒரு படித்தான, மாறுதலற்ற தடைசெய்தல்'' என்று அறிவிக்கப் பட்டது. இந்த அடிப்படையில் 1923 தேர்தல்களில் கட்சி குறிப்பிடத்தக்க பெரும் வெற்றி பெற்றது; கட்சியினர் மத்திய அஸெம்பிளியில் தனிப்பெரும் கட்சியினராய்ப் புகுந்தார்கள்; சுயேச்சைகள் அல்லது லிபரல்களோடு (பழைய மிதவாதிகள்) இணைந்து உறுதியற்ற பெரும்பான்மையைப் பெறமுடியும். உள்ளே போனதும், தலைவர் என்னும் முறையில் சி. ஆர். தாஸ் உரைத்தார்: ''அவருடைய கட்சியினர் தங்களுடைய ஒத்துழைப்பை அளிக்கவே அங்கு வந்துள்ளனர், அவர்களுடைய ஒத்துழைப்பை ஏற்க அரசாங்கம் மனம் கொண்டால், சுயராஜ்யக் கட்சியினர் அதன் மனிதர்களே என்பதை அறியும்.'' 1925 இல், பரீத்பூரில் வெளியிட்ட ஒரு புகழ் பெற்ற அறிக்கையில் அவர் அரசாங்கத்திடம் ஒரு ''மனமாற்றத்தை''க் காண்பதாய்க் கூறினார். (அப்போதைய இந்தியா காரியதரிசி பர்கென் ஹெட் பிரபுவின் மனப்பாங்கிற்குப் பொருந்தாத வாக்கு இது; அவர் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசுகையில் ''இந்திய தேசீயம் என்ற உருவற்ற ஆவி'' என்று தன் வெறுப்பை ஒளிவு மறைவில்லாமல் வெளியிட்டார்.) சில நிபந்தனைகள் பேரில் ஒத்துழைப்பதற்காகப் பெயரளவில் அழைப்பும் விடுத்தார்; அந்த நிபந்தனைகளில் ஒரு பகுதி, இருதரப்பும் கூடி புரட்சி இயக்கத்தை எதிர்த்துப் போராட வேண்டும் என்பது. லிபரல் கட்சியின் பேச்சாளர்கள் இப்போது தங்களுக்கும் சுயராஜ்யக் கட்சியினருக்கும் இடையில் பிரமாத வேற்றுமை இல்லை என்று ஒப்புக்கொண்டார்கள். 1926, இளவேனில் பருவத்தில் பதவி ஏற்பது பற்றி சபர்மதி உடன்பாடு சிந்தித்தது. ஆனால், தொண்டர்களின் எதிர்ப்பால் கைவிடப்பட்டது. 1926 மாரிக் காலத்தில் நடந்த தேர்தல்களில், சென்னையைத் தவிர மற்ற இடங்களில் சுயராஜ்யக் கட்சி குறிப்பிடத்தக்க விதத்தில் பின்னடைந்தது.

ஆனால், ஏகாதிபத்தியத்தோடு நட்புறவு கொண்டு ஒத்துழைக்க வேண்டும் என்ற பூர்ஷ்வாக்கள் விருப்பம் வெறும் கனவாய் முடிவதாயிருந்தது. தேசியப் போராட்ட சக்திகள் வலுவற்று விட்டன, மக்களோடு தொடர்பில்லாத சுயராஜ்யக் கட்சி நிபந்தனை பேசும் நிலைக்குத் தாழ்ந்து விட்டது என்று தெரிந்ததும் ஏகாதிபத்தியம் இஞ்சின்களைப் பின்நோக்கித் திருப்பிவிட்டது; முந்தின ஆண்டுகளில் பூர்ஷ்வாக்களுக்கு ஓரளவு வழங்கியிருந்த சலுகைகளை மறுக்க முயன்று, தன் முழு ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்வதற்காக பொருளாதாரத் தாக்குதலைத் தொடங்கியது; 1927 ஆம் ஆண்டு நாணயச் செலாவணிச் சட்டத்தின் வாயிலாக ரூபாயின் மாற்று வீதத்தை 1 ஷில்லிங்கு 6 பென்ஸ் என்று (இந்தியா முழுவதும் எழுந்த எதிர்ப்பைப் புறக்கணித்து) நிர்ணயித்தது; 1927 ஆம் ஆண்டின் புதிய உருக்கு பாதுகாப்புச் சட்டம் 1924 ஆம் ஆண்டுச் சட்டம் அளித்த பாதுகாப்பை ஒழித்து, பிரிட்டிஷ் உருக்குக்கு சலுகை விலைகள் தந்தது. 1927 முடிவில் சைமன் கமிஷன் நியமனம் அறிவிக்கப்பட்டது; இந்தியருக்கு முற்றிலும் பிரதிநிதித்துவம் இல்லாமலே, இந்தியாவின் எதிர்கால அரசியல் அமைப்புச் சட்டத்தின் விதியை அறுதியிடுவதே இக் கமிஷனின் நோக்கம்.

எனவே, இந்திய பூர்ஷ்வாக்களுக்கு விருப்பமே இல்லாவிட்டாலும் ஒத்துழைக்கும் நம்பிக்கைகளைத் துறந்து, தங்களுக்கு ஆதரவாக மக்கள் சக்தியை மீண்டும் திரட்டக்கூடிய சாத்தியக் கூறுகளைப் பற்றி யோசிக்க வேண்டியதாயிற்று, மக்களுடன் நாங்கள் வெற்றிகரமாக இப்போது பேரம் பேச முடியுமா என்று பார்க்க வேண்டியதாயிற்று. ஆனால், பத்தாண்டுகளுக்குமுன் இருந்ததைவிட நிலைமை இப்போது சிரமம் மிக்கதாகவும் சிக்கல் பட்டதாகவும் இருந்தது. ஏனெனில், இடைக்காலத்தில் மக்கள் சக்திகள் தங்களுக்கே உரிய புதிய உயிர் பெற்று, சுதந்திரமாய் அரசியல் பேசவும் லட்சியங்களைப் பேசவும், ஏகாதிபத்தியத்தை மட்டுமல்ல, இந்தியச் சுரண்டல்காரர்களையும் எதிர்த்துப் போராடவும் ஏற்று விழிப்படைந்து விட்டன. இப்போட்டியின் முக்கோணத்தன்மை, அல்லது, ஏகாதிபத்தியத்துக்கும் இந்திய மக்களுக்குமிடையிலிருந்த ஆழ்ந்த போட்டியும், தேக்கமும் தயக்கமுமாக இருந்த பூர்ஷ்வாக்களின் தன்மையும் இப்போது முன்னை விடத் தெளிவாய் முன்னுக்கு வந்தன. அதனால் ஏற்பட்டதுதான் இப்போதைய போராட்டத்தின் புதிய கட்டத்தின் விசித்திரத் தன்மை; இப் புதிய நிலை 1927 இன் பிற்பகுதியில் அறிகுறிகள் தோன்றி 1930-34 இல் முழு வலிமையோடு திகழ்ந்தது: ஒரு தரப்பில், மிகப் பரவலான, இறுகி நீண்டுக் கொண்டிருந்த போராட்டத்தின் தன்மை; மறு தரப்பில், ஆங்காங்கு நடப்பதும்

தடையுண்ட வேகமும் வாய்ந்த வளர்ச்சி, நோக்கங்கள் வளைந்து நெளிந்து தடுமாறுதல், அத்துடன் அடிக்கடி பேரப் பேச்சுகள், முடிவுகாணுமல் திடீர் சமாதான உடன்பாடுகள்—இறுதி முறிவு வரை.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபதுகளின் இடையாண்டு களில் தோன்றி,போராட்டத்தின் புதிய அலைக்கு—அதன் தலைமைக் கல்ல—புது விசை தந்த புதிய முதன் முதலில் தோன்றிய அம்சம், சுதந்திரமானதொரு சக்தியாக, தொழில் நிறுவனங்களின் பாட் டாளி வர்க்கம் தோன்றி, தன் போராட்டத்தைத் தானே ஈடு காண முடியாத ஆற்றலோடும் வீரத்தோடும் நடத்திக்கொண்டு, தன் சொந்தத் தலைமையையும் ஆயத்தம் செய்துகொள்ளத் தொடங்கியதுதான். இத்துடன் பாட்டாளி வர்க்கத்தினரின் புதியகொள்கை, அல்லது சோஷலிசம், முதன் முதலாக இந்திய அரசியலின் ஓர் அங்கமாய்ப் பிறந்து, புத்துயிரையும் ஆற்றலையும், விரிவான கனவுகளையும் உண்டாக்கியது. புரட்சிகரமான பாட்டாளிவர்க்க அரசியலை முளையிலேயே கிள்ளி எறிய ஏகாதி பத்தியம் மிக விழிப்பாக இருப்பதை, 1924 இல் நடைபெற்ற கான்பூர் சதி வழக்கு காட்டியது. 1926–27 இல் முன்னணிக்கு வந்த பாட்டாளிகள், குடியானவர்கள் கட்சியின் வளர்ச்சி, 1928இல் தொழிற் சங்க இயக்கத்திலும் வேலை நிறுத்த இயக்கத் திலும் உண்டான பெரு முன்னேற்றத்துக்கு முற்பட்டதாகும். 1928 இன் பிரம்மாண்டமான வேலை நிறுத்த இயக்கத்தினுல் 31,647,000 வேலை நாட்கள் நஷ்டமாயின; அல்லது, அதற்கு முந்தின ஐந்தாண்டுகளில் ஏற்பட்ட மொத்த நஷ்டத்தைவிட அதிகம். புதிய, போராட்ட குணம் வாய்ந்த கிர்னிகாம்கார் சங்கம் அல்லது சிவப்புக்கொடி சங்கம் பம்பாய் ஆலைத் தொழிலாளர் களின் சங்கம்; அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்டபடி, ஒரே ஆண்டில் உறுப்பினர்களின் தொகை 65,000, தொழிற்சங்க உறுப்பினர்களின் எண்ணிக்கையில் 70 சதவீதப் பெருக்கம். பாட்டாளி வர்க்கத்தினர் அந்த ஆண்டில் செய்த தலையாய பணி, சைமன் கமிஷனை எதிர்த்து ஆர்பாட்டம் செய்ததாகும்; தொழிற் சங்கங்களின் போர்த்தன்மை பெருக்கமும், 1929இல் தொழிற் சங்க காங்கிரசில் இடதுசாரி வெற்றியும்—இவைதாம் இந்திய மக்களின் புதிய போராட்ட அலைக்கு முன்னோடியும் உந்து விசையுமாகும்.

இந்த முன்னேற்றத்தின் பிரதிபலிப்பாக, காங்கிரசிலும் தேசீய இயக்கத்திலும் ஒரு புதிய இடதுசாரி தோன்றியது. ஐரோப்பாவில் நீண்ட காலம், ஒன்றரை ஆண்டு சுற்றுப்பிரயாணம் செய்து விட்டு 1927 முடிவில் ஜவகர்லால் திரும்பினுர்; ஐரோப்பா

வில் சோஷலிஸ வட்டாரங்களோடும் கருத்துகளோடும் அவருக்குத் தொடர்பு இருந்தது. 1927 முடிவில் நடைபெற்ற சென்னை காங்கிரஸில் புதிய இடதுசாரிப் போக்கு, குறிப்பாக, இளைஞர்களுக்கு இடையில் தோன்றியது ஒரு முன்னேற்ற அம்சம். தேசிய இயக்கத்தின் நோக்கம் முழு விடுதலையே என்றொரு தீர்மானம்—முன்பு எப்போதும் தலைமையினரால் எதிர்க்கப்பட்டது—ஒருமனதாய் நிறைவேற்றப்பட்டது (காந்தி அங்கில்லாதபோது; பின்னர் அவர் அதை ''அவசர கோலத்தில் உருவாக்கி, யோசனை இல்லாமல் நிறைவேற்றப்பட்டது'' என்று கண்டித்தார்); சைமன் கமிஷனைப் பகிஷ்காரம் செய்வதென உறுதி செய்து கொள்ளப்பட்டது; அதே சமயத்தில் அனைத்துக் கட்சிகளின் மாநாட்டில் கலந்து கொண்டு மாற்று அரசியலமைப்புச் சட்ட திட்டத்தை உருவாக்க சம்மதம் அளிக்கப்பட்டது. புதிதாய் நிறுவப்பட்ட 'அனைத்து நாடுகள் ஏகாதிபத்திய எதிர்ப்புக் கழக'த்தோடு காங்கிரஸ் இணைந்தது. இளைஞர்களுக்கும், காங்கிரசில் வளரும் இடதுசாரி மனப்பான்மையினருக்கும் முக்கிய தலைவர்களான ஜவகர்லாலும், சுபாஷ் போஸும் பொதுச் செயலாளர்களாய் நியமிக்கப்பட்டனர்.

1927-காங்கிரஸில் இடதுசாரிக்குக் கிடைத்ததாய்த் தோன்றிய வெற்றி மேலெழுந்த வாரியானது, எதிர்ப்பின்மையால் கிடைத்தது. ஆனால், 1928 இல் நிகழ்ச்சிகள் உருவான போக்கு—சைமன் கமிஷனுக்கு எதிரான ஆர்ப்பாட்டங்களின் வெற்றி, வேலை நிறுத்த இயக்கத்தின் முன்னேற்றம், புதிதாய்த் தோன்றிய சுதந்திரக் கழகம்,இளைஞர்,மாணவர் ஸ்தாபனங்களின் வளர்ச்சி—இடதுசாரி ஒரு சக்தியாக உருவாகிறது, அது காங்கிரசையே கைப்பற்றலாம் என்பதைப் பழைய தலைமையினருக்கு விளங்க வைத்தது.அனைத்துக் கட்சிகள் மாநாட்டில் பழைய தலைமையினர், காங்கிரசுக்கு வெளியிலுள்ள மிதவாத, பிற்போக்கு சக்திகளோடு கூடி, ஒரு திட்டத்தை (நேரு அறிக்கை என்று தலைவரின் பெயரில்; தந்தை நேரு)த் தயாரித்தது; அத்திட்டம், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குள் ஒரு பொறுப்புள்ள அரசாங்கம் ஏற்படுத்தும் அரசியல் அமைப்புச் சட்டமாகும்; இவ்வாறு, சுதந்திரக் கோரிக்கையே சிதைக்கப்பட்டது. ஆனால், உணர்ச்சிகள் பொங்கி பெருகிக் கொண்டிருந்த அந்த நேரத்தில் காங்கிரஸ் அத்திட்டத்தை ஏற்குமா என்று சந்தேகமாக இருந்தது.

சக்திகள் இவ்வாறு ஆழ்ந்து பார்க்கிற நிலையில் இருக்கையில், பத்தாண்டுகளுக்கு முன் இருந்ததைவிட மிக முற்போக்கான சூழ்நிலையில் புதிய பெரிய போராட்டங்கள் நிச்சயம் என்ற நிலையில், வலதுசாரித் தலைமையினர் மீண்டும் காந்தியின் உதவியை

நாடினர்; எந்தக் காந்தியை அவர்கள் முன்பு ஒதுக்கினார்களோ, அதே காந்தியின் உதவியை. அவருடைய அதிர்ஷ்டம் மறுபடியும் ஏறுமுகமாயிற்று. 1928-இறுதியில் கூடிய கல்கத்தா காங்கிரஸில் காந்தி தலைமைப் பொறுப்பை மீண்டும் ஏற்றார். மிதவாதத் தலைவர்கள் அவருடைய குண விசேஷத்தைப் பற்றி என்ன கருதினாலும், பழைய கோஷ்டியினரில் மதிநுட்பமும் அனுபவமும் மிக்க அரசியல்வாதி அவர்தான்; அவருக்கு மக்களுக்கு இடையில் ஈடு இணையற்ற செல்வாக்கு இருந்தது; உலகளாவிய விளம்பரத்தால் இந்தச் செல்வாக்கு அவரை மிகப் பெரும் இந்தியத் தலைவர் ஆக்கிவிட்டது; மிகச் சமய சம்பந்தமான ஆதரிசவாதக் கருத்துக்களான அடக்கத்தையும் வறுமையைப் போற்றும் தன்மையையும் காரணமாய்க் காட்டி உடமையுரிமையை ஆதரித்த சந்நியாசித் தலைவர்; வெல்ல முடியாத இந்தத் தத்துவ — மதவாத — மனச்சாட்சிவாதி மலைப்பூட்டும் விளக்க விவாதச் சிக்கலால் எதையும் ஒவ்வொன்றையும் நியாயமாக்கிச் சமரசம் செய்யவல்ல தலைவர்; இந்த மாதிரி சாதாரண மனிதர்கள் செய்தால் நேர்மையற்ற சொற்சிலம்பம் என்று பழித்திருப்பார்கள்; ஆனால், உலகத்தின் மாமனிதர்களான மாக்டொனால்டு, காந்தி போன்றோரின் இச்செய்கை ஆன்மீக அறிவுத் துறையின் உயர்மட்டச் செய்கையாகப் போற்றப்படுகிறது; சொந்த மகத்துவத்தாலும் சுயநலமின்மையாலும் மக்களின் நெஞ்சக் கதவை—இங்கு மிதவாத பூர்ஷ்வா தலைவர்களின் பேச்சு எடுபடும் என்ற நம்பிக்கையே இல்லை-கதவைத் திறக்க கூடிய தீர்க்கதரிசி; அவருடைய வாழ்த்துபெற்ற எந்த மக்கள் இயக்கமும் சிதறும் என்று உறுதி தரக்கூடிய உத்தரவாதம். இந்தப் புரட்சி ஜோனு (கப்பலுக்கு—இயக்கத்துக்கு—துரதிர்ஷ்டம் கொண்டு வருபவர்), தோல்விகளைச் சிதறாமல் கண்ட இந்தத் தளபதியைத்தான் இந்தியப் போராட்ட அலை எழும் ஒவ்வொரு சமயத்திலும் அதிர்ஷ்டம் கொண்டு வரவல்ல தலைவராக நம்பினார்கள்—பூர்ஷ்வாக்கள். ஆகவே, புதிய இந்திய அரசியலுக்கே உரித்தான தன்மை, இந்திய அரசியலமைப்பில் எழுதப்படாத ஒரு பிரிவு—காந்தியின் இன்றியமையாமை—(உண்மையில் வர்க்க சக்திகளின் அபாயகரமான நிலையைக் குறிக்கும் பதப் பிரயோகம் இது) மீண்டும் தோன்றியது. பூர்ஷ்வாக்களின் நம்பிக்கைகள் (ஏகாதிபத்தியத்தின் நம்பிக்கைகளும்தான் என்று பகைவர்கள் கூறுவர்) காந்தியின்மீது தான் இருந்தன; அவரால் தான் கலத்தை அலைகளுக்கு இடையில் செவ்வையாகச் செலுத்த முடியும், மக்கள் இயக்கத்தில் தேவையான அளவை ஏவிப் பயன்படுத்திக் கொண்டு வெற்றிகரமாய்ப் பேரம் பண்ணி, அதே

சமயத்தில் நாட்டைப் புரட்சியிலிருந்து காப்பாற்ற முடியும் என்று அவர்கள் நம்பினார்கள்.

1928 டிசம்பரில் நடந்த கல்கத்தா காங்கிரசில், நேரு அறிக்கைக்கு ஒப்புதல் பெறுவதற்குக் காந்தி சிரமப்பட வேண்டியிருந்தது. நேரு அறிக்கையை ஏற்பதால் முழு விடுதலைக் கோரிக்கையைக் கைவிடுவதாகாது என்று அவர் தயாரித்த தீர்மான நகலில் உறுதி கூறியதோடு, இந்த அறிக்கையை 1929 டிசம்பர் 31 க்குள் அரசாங்கம் ஏற்காவிட்டால் (முதலில், இரண்டு வருடத் தவணை கொடுத்து, 1930 என்று காந்தி எழுதினார்; ஆனால், 1929 தான் ஏற்கப்பட்டது) காங்கிரஸ் மீண்டும் சாத்விக ஒத்துழையாமைப் போராட்டத்தைத் துவக்கும், இம்முறை வரிகொடா இயக்கத்தோடு ஆரம்பமாகும் என்று அறிவித்தது. இந்தத் தீர்மானமும் மிகக் குறுகிய பெரும்பான்மை வாக்குகளாலேயே வெற்றி பெற்றது. இத்தீர்மானத்திற்கு 1,350 வாக்குகளும், நேரு அறிக்கைக்கு எதிராக, முழு விடுதலையே உடனடியான நோக்கம் என வலியுறுத்திய, போஸும்
ரய நேருவும் தயாரித்த தீர்மானத்திற்கு 973 வாக்குகளும்
நன. 1928 ஆம் வருட நிகழ்ச்சிகள், மக்களின் கொந்தளிப்பு உச்ச நிலையில் இருப்பதைக் காட்டுகையில் பன்னிரண்டு மாதக்காலம் நடவடிக்கைகள் தாமதிக்கப்பட்டன. ஏகாதிபத்தியம் ஆயத்தம் செய்துகொள்ளப் பன்னிரண்டுமாத நோட்டீஸ் தரப்பட்டது. ''காலம் கடத்தும் கல்கத்தா காங்கிரஸ் தீர்மானம் அருமையான காலத்தைக் கொல்லவே பயன்பட்டது'' என்கிறார் சுபாஷ் போஸ். (''இந்தியப் போராட்டம்'', பக். 181.) இடையில் எச்சரிக்கை சமிக்ஞையாக ஒரு நிகழ்ச்சி நடந்தது; 20,000 கல்கத்தா தொழிலாளர்கள் (50,000 என்று, அதிகார பூர்வமான தேசீய காங்கிரஸ் வரலாறு கூறுகிறது) தேசீய விடுதலைக் கோரிக்கையையும், 'சுதந்திர, சோஷலிச இந்தியக் குடியரசு'க் கோரிக்கையையும் முழக்கமிட்டவாறு கல்கத்தா காங்கிரசில் தோன்றி ஆர்ப்பாட்டம் செய்து மாநாட்டுப் பந்தலை இரண்டுமணி நேரம் கைப்பற்றிக் கொண்டது; தேசீய சீர்திருத்தவாதத் தலைவர்கள் அவர்களுக்கு இடம் கொடுத்து, சமரசம் பேசாமல் தேசியப் போராட்டம் நடத்துமாறு பாட்டாளி வர்க்கத்தினர் கோரியதைச் செவிமடுத்துக் கேட்க நேர்ந்தது.

பன்னிரண்டு மாதத்தவணை, ஏகாதிபத்தியம் செயல்பட நேரம் தந்தது. ஏகாதிபத்தியம் வாய்ப்பை வீணாக்கவில்லை. 1929 மார்ச்சில், நாட்டின் பல பகுதிகளிலுமுள்ள பாட்டாளி வர்க்கத்தின் முக்கிய தலைவர்கள் எல்லாரையும் சிறையில் தள்ளியது;

வெகு தொலைவிலுள்ள மீரத் வழக்கு மன்றத்திற்கு அவர்கள் விசாரணைக்காக அழைத்து வரப்பட்டனர் (அங்கு ஜூரி இல்லாமல் விசாரணை நடத்தலாம்); நான்கு வருடகாலம் விசாரணை நீண்டது; அடுத்த போராட்ட அலை எழுந்தபோது, தண்டனை விதிக்கப்படாமலே அவர்கள் சிறைக்குள் இருந்தனர். தொழிற் சங்கங்களுக்குத் தலைவர்களாகவும், 'பாட்டாளிகள், குடியான வர்கள் கட்சி'த் தலைமையைச் சேர்ந்தவர்களுமான, கைதான தலைவர்களுள் மூவர், அனைத்திந்தியக் காங்கிரஸ் கமிட்டி அல்லது தேசீய காங்கிரசின் தேர்ந்தெடுக்கப்பட்ட நிர்வாகக் கமிட்டியின் உறுப்பினர்களும் ஆவர். இவ்வாறாக, பாட்டாளி வர்க்கத்தின் தலைவாங்கப்பட்டு, மிக வலியவர்களும் கூர்ந்த மதிநுட்பம் வாய்ந்த வர்களும், உறுதிமிக்கவர்களும் மெய்யான மக்கள் பலமுடையவர் களுமான இடதுசாரித் தலைவர்கள் அகற்றப்பட்ட பின்னரே காங்கிரசின் தலைமையில் போராட்டம் நடக்க அனுமதிக்கப் பட்டது. அதே சமயம், வைசிராயின் அவசரச் சட்டமான 'மக்கள் பாதுகாப்பு அவசரச் சட்டம்' புரட்சி இயக்கத்திற்கு விரோதமாய் அமுலாக்கப்பட்டது.

நெருக்கடியான இந்தப் போராட்ட கட்டத்தில் காந்தி காங்கிரஸ் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆயினும், நிலைமையின் சிக்கலையும் சக்திகளின் உறவு நிலையையும் புரிந்து கொள்ளும் தம் ஆற்றலை வெளிப்படுத்தும் வகையில் அவர் ஒதுங்கிக் கொண்டு, இளைஞர் தலைவரும், சுதந்திரக் கழகத் தலைவரும், சோஷலிசத்தின்பால் பரிவு காட்டியவருமான ஜவகர்லால் நேருவைத் தமக்குப் பதிலாகத் தலைவராய்த் தேர்ந் தெடுக்குமாறு கூறினர். தம்மால் தேர்ந்தெடுக்கப்பட்ட வேட்பாளரை பின்வருமாறு வருணித்துத் தம் தேர்வின் நியாயத்தை வற்புறுத்தினர் அவர்:

''தம் நாட்டின்பால் அவருக்குள்ள அன்பில் யாரும் அவரை மிஞ்ச முடியாது; வீரமுடையவர், உணர்ச்சி மிக்கவர். இத்தருணத்தில் இக்குணதிசயங்கள் மிகத் தேவை. ஆனால், உணர்ச்சி மிக்கவராகவும் போராட்டத்தில் உறுதியுடைய வராகவும் இருந்தாலும், ஒரு ராஜதந்திரியின் விவேகம் படைத்தவர். கட்டுப்பாட்டைக் கடைப்பிடிக்கும் அவர், தமக்கு இணக்கமற்ற முடிவுகளுக்கு அடங்கி நடப்பதில் தமக்குள்ள ஆற்றலை அவர் செயலளவில் நிரூபித்துள்ளார். அடக்கமானவர், தீவிர எல்லைக்கு ஓடிவிடாத நடைமுறை அறிவு உடையவர். அவருடைய கரங்களில் நாடு பத்திர மாக இருக்கும்.''

ஏகாதிபத்தியத்துடன் சமரசம் காண மிதவாதத் தலைவர்கள் இறுதியாக ஒரு முடிவு செய்தார்கள். 1929, அக்டோபர் 31 இல், வைசிராய் வெளியிட்ட தெளிவற்றதோர் அறிக்கையில் ஏதோ ஓர் எதிர்காலத்தில் என்றோ ஒருநாள் ''குடியேற்ற நாட்டு அந்தஸ்து'' வழங்கப்படுவதைப் பற்றிக் குறிப்பிடப் பட்டிருந்ததைத் தொடர்ந்து (இந்த அறிக்கையில் வாக்குறுதி களோ கொள்கை மாற்றமோ இல்லை என்று மறுநாளே தி டைம்ஸ் ஏடு கூறியது) இந்தியாவின் கட்சித் தலைவர்கள் ஒருங்குகூடி, மனப்பூர்வமாய் ஒத்துழைப்பு நல்குவதாய் அறிக்கை—தில்லி அறிக்கை என்று அதற்குப் பெயர்—வெளியிட்டார்கள்: ''அறிவிப் பில் உள்ள மெய்த்தன்மையை நாங்கள் பாராட்டுகிறோம்.... இந்தியத் தேவைகளுக்கு ஏற்ப, குடியேற்ற நாட்டு அரசியல் அமைப்புத் திட்டம் ஒன்றை உருவாக்க மன்னர்பிரான் அரசாங்கம் மேற்கொள்ளும் முயற்சிகளுக்கு எங்கள் ஒத்துழைப்பு அளிக்க இயலும் என நம்புகிறோம்.'' இந்த அறிக்கையில் காந்தி, திருமதி பெசன்ட், மோதிலால் நேரு, சர் தேஜ்பகதூர் சப்ரு, ஜவகர்லால் நேரு முதலியவர்கள் கையெழுத்திட்டிருந்தார்கள்; பின்னவர் (ஜவகர்லால்) அதை ஏற்கவில்லை; ''தவறானது, அபாயகரமானது'' என்று பின்னர் தீர்மானித்தார்; ஆனால், ''தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்'' என்ற முறையில் அவர் கையெழுத்திடாவிட்டால், ஒற்றுமைக்கு ஊறுநேரும் என்று ''பேசிக் கையெழுத்து வாங்கியதாய்'' அவர் உரைக்கிறார்; பின்னால் ''காந்திஜீயிடமிருந்து வந்த ஆறுதல் கடிதத்தால்'' தம் சந்தேகங்களுக்குச் சமாதானம் ஏற்பட்டதாய்க் கூறுகிறார். தில்லி அறிக்கையைப் பலவீனத்தின் அறிகுறியாக ஏகாதிபத்தியம் வரவேற்றது(''நேற்று இரவின் அறிக்கைக்கு என்ன பொருள் என்றால், லாகூரில் எந்த வேலை திட்டத்தின் அடிப்படையில் காங்கிரஸ் கூடப்போகிறதோ, அந்தத் திட்டம் கைவிடப்பட்டது என்பதே''—தி டைம்ஸ், நவம்பர் 4, 1929). காங்கிரஸ் போரணி களில் குழப்பம் உண்டாக்கியதைத் தவிர, அதனால் நற்பயன் ஏதும் விளையவில்லை; காங்கிரஸ் கூடுமுன் வைசிராயைச் சந்தித்த தாலும் பயனில்லை.

அதன் பேரில், 1929 இறுதியில் கூடிய காங்கிரஸில் நட வடிக்கை எடுக்கும் முடிவு காணப்பட்டது. குடியேற்ற நாட்டு அந்தஸ்து வேண்டிய நேரு அறிக்கை காலாவதி ஆகிவிட்டதாய் அறிவிக்கப்பட்டு ''பூரண சுய ராஜ்யமே'' அல்லது முழு விடுதலையே காங்கிரசுக்கு இனி லட்சியம் என ஏற்கப்பட்டது. ''தக்க சமயத்தில் சட்ட மறுப்பு வேலைத் திட்டத்தை, வரி கொடா இயக்கம் உட்பட—மேற்கொள்ள'' அகில இந்தியக்

காங்கிரஸ் கமிட்டிக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. ''நள்ளிரவில், 1930 பிறக்கும் நேரத்தில், இந்திய சுதந்திரக் கொடி (சிவப்பு, வெள்ளை, பச்சை-அப்பால், சிவப்பை நீக்கி ஆரஞ்சு நிறத்தைச் சேர்த்தார்கள்) பறக்க விடப்பட்டது. 1930, ஜனவரி 26 ஆம் நாளன்று இந்தியா முழுவதிலும் முதல் சுதந்திர தினம் கொண்டாடப்பட்டது; அன்று பெருங் கூட்டங்கள் நடந்தன; அவற்றில் முழுவிடுதலை கிட்டும் வரை போராட்டத்தை நடத்துவதாய்ப் பிரதிக்ஞை படிக்கப்பட்டது; பிரிட்டிஷ் ஆட்சிக்கு ''இனியும் பணிவது மனிதனுக்கும் இறைவனுக்கும் இழைக்கும் குற்றம் ஆகும்'' என்ற பிரதிக்ஞை வாசகம்; ''நாமே அளிக்கும் உதவியை நிறுத்திக் கொண்டு, வரிகள் செலுத்தாமல் இருந்து விட்டால், என்னதான் தூண்டினாலும் வன்முறைச் செயலில் இறங்காமல் இருந்து விட்டால் மனிதத் தன்மையற்ற இந்த ஆட்சி முடிவடைவது உறுதி'' என நம்பிக்கை தெரிவித்தது.

இப்போது துவக்கப் பெற்ற போராட்டத்தின் நோக்கம் என்னவாக இருக்கும்? போராட்டத் திட்டம் என்ன? ஒரு தீர்வுக்கு நியாயமான குறைந்த பட்ச நிபந்தனைகள் என்ன? ''இந்த மனிதத் தன்மையற்ற ஆட்சியை'' முடிவுக்குக் கொண்டு வர பிரிட்டிஷ் அரசாங்கத்தின்மீது தடுக்க முடியாத எவ்வகை நிர்ப்பந்தங்களைப் பிரயோகிக்கப் போகிறார்கள்? இந்தக் கேள்விகள் எல்லாவற்றுக்கும் ஆரம்பத்திலிருந்தே தெளிவு இல்லை.

போராட்டத்தின் நோக்கம் முழு விடுதலை என்று அறுதியிடப்பட்டு விட்டதாய்த் தோன்றலாம்; அவ்வாறு நம்பியே காங்கிரஸ் உறுப்பினர்களும் மக்களும் காங்கிரஸின் போர் அழைப்புக்கு இசைந்திருக்கலாம். உண்மையில், காந்தி-இர்வின் உடன்பாடு ஏற்படுமுன் காலமான மோதிலால் நேரு உயிர் பிரியுமுன் கூறியதாகப் பதிவாகியுள்ள வாசகங்கள் போராட்டத்தைப் பற்றி அவருடைய கருத்தும் அதுதான் என்பது போல் உள்ளன: ''நான் கட்டாயம் இறக்க வேண்டுமெனில், சுதந்திர இந்தியாவின் மடியில் நான் இறக்க வேண்டும். என் கடைசித் தூக்கத்தை ஓர் அடிமை நாட்டில் தூங்காமல், ஒரு சுதந்திர நாட்டில் தூங்க வேண்டும்'' என மோதிலால் விழைந்தார்.

ஆயினும், காந்தியின் கருத்து அது அன்று. லாகூருக்குப் பின் உடனடியாக அவர், ஜனவரி 9, நியூயார்க் வேர்ல்டு என்ற ஏட்டின் மூலம் ஓர் அறிக்கை வெளியிட்டார்; அதில் ''விடுதலை தீர்மானத்தைக் கண்டு யாரும் அஞ்ச வேண்டியதில்லை'' (அவர் மார்ச்சில் வைசியராய்க்கு எழுதிய கடிதத்தில் என்று மீண்டும்

சொன்னார்) என்று குறிப்பிட்டார்; ஜனவரி 30 ஆம் நாள், தம் ஏடான எங் இண்டியாவின் வாயிலாகப் பல சீர்த்திருத் தங்களைக் கொண்ட (ரூபாயின் நாணய மாற்று விகிதம் 1ஷில்லிங் 4 பென்ஸ், முழு மது விலக்கு, நிலவரி, ராணுவச் செலவுக் குறைப்பு, அயல் நாட்டுத் துணி மீது பாதுகாப்புச் சுங்கவரி முதலியவை) பதினோரம்சக் கோரிக்கையை வெளியிட்டு, அதை ஏற்றால் சட்ட மறுப்பு இயக்கத்தை வாபஸ் பெறுவதாய் எழுதினார். போராட்டத்துக்கு முன்பு பதினோரம்சக் கோரிக்கையை வெளியிட்டதன் மூலம், சுதந்திரக் கோரிக்கையைப் பேரம் பேசுவதற்கான 'கல்லா' போலக் கருத வேண்டும் என்று எதிர்த்தரப்புக்கு கூறுவதாகப் பயன்பட்டது; சந்தை கூடுபோது பேரம் ஆரம்பிக்கையில், உயர்ந்த பட்சத் தொகை ஒன்றை ஒதுக்கிக் காட்டி உருப்படியான சலுகைகள் பெற முயலுவார்களே, அது மாதிரி.

போராட்டத்தின் துன்பியல் நாடகம் அது போலவே தெளிவற்று இருந்தது. 1930, பிப்ரவரியில் சபர்மதியில் கூடிய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் மீண்டும் ஒருமுறை போராட்டத்தைத் தலைமை வகித்து நடத்திச் செல்ல "மகாத்மா காந்தியிடமும், அவரோடு பணியாற்றுவோரிடமும்" எல்லா அதிகாரங்களையும் ஒப்படைத்தார்கள் (இவர்கள் காங்கிரசில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அல்ல); அவ்வாறு செய்ததற்கு, "அஹிம்சையை ஒரு சமயக் கட்டளையாக நம்புகிறவர்களாலேயே தொடங்கப்பட்டு, நடத்தப்பட வேண்டும்" என்று காரணம் காட்டினார்கள். ஆனால், தேர்ந்தெடுக்கப்பட்ட தலைமையின் ஆணைகளின்றி இம்மாதிரி கைமாற்றப் பெற்ற போராட்டப் பாதை யாது? லாகூர் காங்கிரசைக் குறித்து சுபாஷ்போஸ் எழுதுகிறார்:

> "இடது சாரியின் சார்பில் இந்த ஆசிரியரால் ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது; நாட்டில் போட்டி அரசாங்கம் அமைப்பதைக் காங்கிரஸ் நோக்கமாய்க் கொள்ள வேண்டும் என்றும், அதற்காகத் தொழிலாளர்களையும் உழவர்களையும் இளைஞர்களையும் திரட்டும் பணியை மேற்கொள்ள வேண்டும என்றும் தீர்மானம் கூறியது. இத் தீர்மானம் தோற்கடிக்கப்பட்டது; முடிவு, முழு விடுதலையைக் காங்கிரஸ் தன் லட்சியமாக ஏற்றுக் கொண்டாலும், அந்த லட்சியத்தை அடைவதற்கு யாதொரு திட்டமும் வகுக்கப்படவில்லை—அடுத்த ஆண்டுக்கான வேலைத் திட்டம் கூட ஏற்கப்படவில்லை. இதை விட ஏளனத்துக்குரிய நிலைமையைக் கற்டனை செய்ய முடியாது."
>
> (சுபாஷ் போஸ்: "இந்திய போராட்டம்," பக்.200.)

ஜவஹர்லால் நேரு எழுதுகிறார்:

"எதிர் காலம் பற்றி இன்னும் எங்களுக்குத் தெளிவு ஏற்படவில்லை. காங்கிரஸ் மாநாட்டில் உற்சாகம் காணப் பட்டாலும், ஒரு நடவடிக்கைத் திட்டத்தை நாடு எப்படி ஏற்கும் என்று யாருக்கும் தெரியாது. நாம் நம் படகுகளை எரித்து விட்டோம்; திரும்பிப் போக முடியாது. ஆனால் எங்களுக்கு முன்பிருந்த நாடோ, பெரும்பாலும் ஒரு புதிய வரைபடத்தில் உருப்பெறாத நிலப்பரப்பு போலிருந்தது."

(ஜவஹர்லால் நேரு: "சுய சரிதை", பக். 202.)

அதிகார பூர்வமான காங்கிரஸ் வரலாறு, போராட்டத் திட்டத்தைக் கேட்டவர்களைக் கண்டிக்கிறது:

"சபர்மதியில் கூடியவர்கள் காந்தியிடம் அவருடைய திட்டங்களைப் பற்றிக் கேட்டார்கள். அவர்கள் அவ்வாறு கேட்டது சரிதான், எனினும் உலகப் போருக்கு முன் கிட்சனர் பிரபு அல்லது மார்ஷல் போக் அல்லது வான்ஹிண்டன் பர்க் கிடம் அவர்களுடைய திட்டங்களை வெளியிடுமாறு யாரும் கேட்டிருக்க மாட்டார்கள். திட்டங்கள் அவர்களிடம் இருந்தன; ஆனால், அவர்கள் அவற்றை வெளியிட மாட்டார்கள். சத்யாக்கிரகம் அப்படி அல்ல. எங்கள் திட் டங்களில் ரகசியம் ஏதுமில்லை; ஆனால், அவை தெளிவாக வரையறுக்கப் படவில்லை. அவை தாமாக புலப்படும், காலை பனி மூட்டத்தில் விரைவாகப் போகும் ஒரு காருக்கு, கஜம் கஜமாகப் பாதை வெளியாவது போல். சத்யாக்கிரகி தன் தலையில் ஒரு ஸர்ச் லைட் வைத்திருக்கிறான். அடுத்த படி என்ன என்று அது வழி காட்டுகிறது."

(அதிகார பூர்வமான "தேசிய காங்கிரஸ் வரலாறு", பக். 628.)

இவ்வாறாக, ஒவ்வொன்றும் காந்தி போராட்டம் பற்றி என்ன கருத்து கொள்கிறாரோ அதைப் பொறுத்திருந்தது. நாடும் அதன் விதியும் அவருடைய இயக்கத்துக்கு விடப்பட்டு விட்டன.

நோக்கத்தின் கருத்துப்படி பார்த்தால், எதிரெதிரான இரண்டு கருத்துகள் போராட்டம் பற்றி இருக்கக்கூடும் என்பது தெளிவு. ஒன்று இந்திய மக்களுடைய எல்லா சக்திகளும் திரண்டு பிரிட்டிஷ் ஆட்சியை ஒழித்து, பரிபூரண சுதந்திரத்தை அடைய இறுதியான போராட்டம் நடத்த வேண்டும் (போராட்டம் பற்றிய அத்தியாயப் பிரிவுகளில் "இறுதிவரை போர்" என்ற தலைப்பு அதிகாரபூர்வமான காங்கிரஸ் வரலாற்றில் தரப் பட்டுள்ளது); அல்லது, அது வரையறுத்து ஒழுங்குபடுத்தப்பட்ட மக்களின் ஆர்ப்பாட்டங்களால் நிர்ப்பந்தம் ஏற்படுத்தி அரசாங்கத்

திடமிருந்து சலுகைகளும் நலன்களும் பெற முயலுவதாக இருக்கவேண்டும். முதல் கருத்துதான் லாகூர் காங்கிரசினுடையது; பொது மக்கள் எதிர்பார்த்துக்கொண்டிருந்ததும் அதைத்தான். ஆனால், இதுவே நோக்கமாயின், இவ்வளவு பெரும் பணியை மேற்கொண்டு ஒரு பயங்கரமான பகைவனை வீழ்த்த வேண்டுமானால், தாக்குகின்ற சக்திகள் எதிரி எதிர் நடவடிக்கை எடுக்க முடியாதபடி செயல்பட வேண்டும் என்பது தெளிவு; எதிரி மூச்சுவிட முடியாமல் திணறும் வண்ணம் தாக்குதல் நடத்த வேண்டும்: நாட்டில் பொதுவேலை நிறுத்தம்-காங்கிரசின் முழு பலத்தோடும் பாட்டாளி வர்க்கத்தின் பின்பலத்தோடும்; உழவர் சமுதாயத்தை வரிகொடா,குத்தகை தராப் போராட்டம் துவக்கத் தூண்டுதல்; போட்டி அரசு ஒன்று நிறுவி அதன் அங்கங்களான வழக்குமன்றங்கள், தொண்டர் படைகள் முதலியவற்றை நாடெங்கும் ஏற்படுத்தல். இத்தகையதொரு போராட்டத்தை, நாட்டில் மக்களுடைய உணர்ச்சிகள் அப்போதிருந்த கொதிநிலையில் மிக விரைவுடனும் உறுதியுடனும் நடத்தியிருந்தால், பகைவனை முடக்கி, ஆயுதப் படைகளை வீழ்த்தி (கார்வால் கலகமும், பெஷாவரிலும் ஷோலாபூரிலும் ஏற்பட்ட அனுபவங்களும் இம்மாதிரி நேர வாய்ப்புள்ளதைக் காட்டின) விடுதலையை ஈட்டியிருக்கக்கூடும்.

காந்தி அவ்வாறு கருதவில்லை. உண்மையில், அப்போதும் அதற்கு அப்பாலும் வெளியான விவரங்களிலிருந்து, போராட்டத்தில் இவ்வாறான ஒரு நிலைமை ஏற்படாமல் எப்படி தடுப்பது என்பதுதான் அவருடைய பெருங்கவலையாக இருந்ததாய்த் தெரிகிறது. 1931, மேயில் எழுதிய ஒரு கட்டுரையில், தம்முடைய அஹிம்சைக் கொள்கை ''ஒரு மயிரளவு'' மீறப்பட்டாலும் அதனால் கிடைக்கும் வெற்றியைவிடத் தோல்வியையே விரும்புவதாக அவர் குறிப்பிட்டார்:

> ''அஹிம்சையினின்று மயிரளவு பிறழ்ந்து சந்தேகாஸ்பதமான வெற்றிபெறுவதைவிட, ஊறுபடாத அஹிம்சையோடு படுதோல்வி பெறுவதையே நான் வரவேற்பேன்.''
>
> (1931, மேயில் காந்தி 1931, மே 8, தி டைம்ஸ் ஏட்டில் மேற்கோளானது)

1930, மார்ச்சில் லைசிராய்க்கு எழுதிய கடிதத்தில், போராட்டத்துக்கு ஆதாரமாயுள்ள சக்திகளை ஆய்ந்து தாம் தலைமை ஏற்பதன் காரணத்தைக் காந்தி தெளிவுபடுத்தினார்:

> ''வன்முறைக் கட்சி வலிமைபெற்று வருகிறது; அதற்கு ஆதரவும் கூடுகிறது....பிரிட்டிஷ் ஆட்சியின் திரட்சியான வன்முறைக்கும், எதிராகவும் வளர்ந்துவரும் வன்முறைக்கட்சி,

யின் திரட்சி பெருதவன் முறைக்கு எதிராகவும் அந்த சக்தியை இயக்கிவிட வேண்டும் என்பதே என் நோக்கம். கைகட்டிக் கொண்டு மௌனமாக அமர்ந்திருந்தால் மேலே குறிப்பிட்ட இரு சக்திகளையும் அவிழ்த்துவிட்டார் போலத்தான்.''

*(காந்தி வைசிராய்க்கு எழுதிய கடிதம், மார்ச்சு 2, 1930.)*

எனவே, புரட்சி அலை ஓங்கி எழுகின்ற தறுவாயில் காந்தி இரு முனைப் போராட்டத்தை துவக்குவதாய் அறிவித்தார்; பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து மட்டும் அல்ல, இந்தியாவுக்குள் இருந்த பகைவனையும் எதிர்த்து போராட்டம். இந்த இரு முனை போராட்டக்கருத்து பூர்ஷ்வாக்களின் நிலைக்குப் பொருத்தமாக இருந்தது; ஏகாதிபத்தியத்துக்கும் மக்கள் இயக்கத்துக்கும் இடையில் மோதல் வலுப்பெற்றதால் தங்கள் காலடித் தரை நழுவுவதைக் கண்டு அவர்கள் திகில்கொண்டு போராட்டத்தின் தலைமைப்பொறுப்பை ஏற்கும் நிர்ப்பந்தத்துக்கு உட்பட்டனர்; அது ஒரு ''பைத்தியக் காரத்தனமான பொறுப்பு'' (வைசிராய்க்கு எழுதிய கடிதத்தில் காந்தி எழுதிய சொற்கள்); போராட்டத்தையும் கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும், இரு தரப்பையும் ''அஹிம்சை'' என்ற மந்திரக்கோலால் சமாதானப்படுத்த முயல வேண்டும் (''கை கட்டிக்கொண்டு மௌனமாக அமர்ந்திருந்தால் இரு சக்திகளையும் அவிழ்த்து விட்டாற் போலத்தான்). ஆயினும், பிற்காலத்தில் ஜனநாயக வல்லரசுகள் ஸ்பெயினுக்கு எதிராகப் பயன்படுத்திய, மிக அபக்கியாதி பெற்ற ''தலையிடாக் கொள்கை''யைப்போல், அஹிம்சையும் ''ஒரு வழி அஹிம்சையே.'' அது இந்திய மக்களுக்கு மட்டும் அஹிம்சை; ஏகாதிபத்தியத்துக்கு அல்ல; அது தன் மனம் கொண்டமட்டில் வன்முறையைப் பயன்படுத்தியது—போரில் வெற்றி கண்டது.[1]

காந்தியின் போர்த் தந்திரமும் அவருடைய இந்தப் போராட்டக் கருத்திற்கேற்ப இருந்தது. விடுதலை வெற்றிக்குச் செலுத்துவதற்காக வகுக்கப்பட்ட போர்த்தந்திரம் அல்ல, பயங்

---

1. 1930இல் காந்தி ஒத்துழையாமை இயக்கத்தை மேற்கொண்ட தன் நோக்கமே ஒருவன் முறைப்புரட்சியைத் தடுப்பதுதான் என்பதைத் தம் அறிக்கைகளிலும் கடிதங்களிலும் அவர் தெளிவாக்கியுள்ளார். இவ்வாறாக, அவருடைய சீடரான சி. எப். ஆண்டிரூஸ் கூறுகிறார்:

"அவரிடமிருந்து எனக்கு வந்துள்ள கடிதங்களில் அவர் தம் சொந்தக் காரணங்களைக் கொடுத்துள்ளார். விளைவு பற்றிக் கவலைப்படாமல் மிகத் துணிச்சலான நடவடிக்கை போலத் தோன்றும் இக்காரியத்தில் இறங்கியதற்கான காரணங்களை அவர் செய்தி ஏடுகளிலும் விளக்கியுள்ளார். அடக்கு முறைக் கொள்கையைக் கைக்கொண்ட அரசாங்கத்தின் பலாத்காரம் நாளுக்கு நாள் மிகுந்து வருவதால், அதற்கு எதிர் விளைவாகப் பலாத்காரம் தூண்டப்பெற்றுள்ளது

கரமான புரட்சி அலைக்கு இடையில் மக்களின் கிளர்ச்சிக்குத் தலைமை வகித்து, அக்கிளர்ச்சி மீது எல்லைகளும் தடைகளும் உயர்ந்த பட்ச அளவில் விதிப்பதற்கு அது ஒரு சாதனமாக அவர் கருதியிருப்பாராஞல், அது மிக ஆற்றலும் திறமையும் வாய்ந்த போர்த்தந்திரமே. போராட்டத்தின் முதல் நோக்கத்தை மிக அருமையாகத் தேர்ந்தெடுத்ததிலும், அதை நடத்தும் முறையைத் தீர்மாணித்ததிலும் அது (அவ்வாற்றல்) வெளியாகிவிட்டது. அரசின் உப்பு ஏகபோகவுரிமையை எதிர்த்து அவர் போராட்டம் நடத்த முடிவு செய்தார். இதஞல், இந்தியாவில் காந்தி அஞ்சுகிற ஒரு சக்தியான பாட்டாளி மக்கள் கலந்து கொள்ள முடியாத வாறு போராட்டம் திரும்பியது; அது உழவர் சமுதாயத்தின் ஆதரவையும் பெற்றதோடு, நிலப்பிரபுக்களுக்கு எதிராகப் போராடாமல் அவர்களை திசை திருப்பி விட்டது. உறுதியை இரட்டைமடங்கு உறுதியாக்கிக் கொள்வதற்காக காந்தி தாமும் தம் சீடர்கள் சிலர் மட்டும் போராட்டத்தை நடத்திஞல் போதும் என்று முதலில் விரும்பிஞர்:

> ''என்னைப் பொருத்தமட்டில், ஆசிரமவாசிகளையும், ஆசிரமக் கட்டுப்பாட்டுக்கு அடங்கி அதன் முறைகளில் ஊறிய வர்களையும் மட்டும் கொண்டு இயக்கத்தைத் தொடங்க வேண்டும் என்று விரும்புகிறேன்.''

('எங் இண்டியா'வில் காந்தி, பிப்ரவரி 27, 1930.)

அகவே, தண்டி யாத்திரை தொடர்ந்தது; கடற்கரை ஓரமாக, காந்தியும் அவரால் பொறுக்கி எடுக்கப்பெற்ற எழுபத்தெட்டு சீடர்களும் மதிப்பற்ற மூன்றுவார காலம் நடந்தார்கள்; உலகத் தின் திரைப்படக் காமிராக்கள் செய்தி சித்திரங்களைப் படம் பிடித்துத் தள்ளிக் கொண்டிருந்தன. மக்களோ காத்துக்கிடக்கும் படி கூறப்பட்டார்கள்.

செய்தித்தாள்களிலும், சினிமாக்களிலும், வேறு எல்லா சாதனங்களிலும் இந்த உப்பு யாத்திரைக்குத் தரப்பட்ட மா பெரும் விளம்பரத்தை, காங்கிரஸ் தலைமையினர் மக்களை விழிப் புறவும் திரட்டவும் பயன்பட்ட வகையில் தங்கள் போர்த் தந்திரத்துக்குப் பெரிய வெற்றி என்று எண்ணிஞர்கள். மக்களில் மிகப் பிற்பட்டவர்களுக்கு இடையில் இப்பணியாற்ற அது

---

என்று அவர் எனக்கு எழுதியதை உதாரணமாய்க் கூறலாம்: எங் இண்டியாவிலும் எழுதியுள்ளார். இந் நிலைமையைச் சமாளிப்பதற்கு ஒரே வழி அஹிம்சைப் போராட்டம் ஒன்றை துவக்கி அதற்கு அவரே தலைமைப் பொறுப்பு ஏற்று அதைத் தடை செய்வதுதான். அப் பொறுப்பு எவ்வளவு அபாயகரமானதாயினும் சரி.''

(ஸ்பெக்டாடர் ஏட்டில் சி. எப். ஆண்டிரூஸ், செப்டம்பர் 27, 1930.)

உதவியது என்பதில் ஐயமில்லை. ஆனால், இந்த விளம்பரத்தை அனுமதித்து தாராளமாக ஊக்கும் முறையில் ஏகாதிபத்திய அதிகாரிகள் நடந்துகொண்டு, பின்னர் அதற்கு நேர்விரோத மாக நடந்து (சுதந்திர தினத்துக்கு முன்பே, போராட்டம் துவங்கு முன்னரே, முக்கியமான இடதுசாரித் தேசீய வாதியான சுபாஷ் போஸை அவர்கள் கைது செய்ததற்கும்) கொண்டதை பார்த்தால், அவர்கள் அவ்வாறு நடந்துகொண்டது குழந்தைத்தனத்தாலோ அல்லது இயக்க விளம்பரத்தின் நோக்கைப் புரிந்துகொள்ளாத தாலோ அல்ல. ஆனால், நேர்மாறாக அதன் பொருளை நன்குபுரிந்து கொண்டு, மக்கள் இயக்கத்தை காந்தி விரும்பிச் செலுத்துகிற பாதையிலேயே செலுத்த உதவவேண்டும் என்பதே அவர்கள் எண்ணம்.

ஆயினும், ஏப்ரல் 6 ஆம் நாள் கடற்கரையில் காந்தி ஆடம் பரமாக உப்பு காய்ச்சி மூன்று வார யாத்திரை முடிவுற்றதும் நாடெங்கும் குமுறி எழுந்த மக்கள் எழுச்சி இரு தரப்பின் தலைமை யினரையும் வியப்பில் ஆழ்த்தியது. மிக வரையறுக்கப் பட்ட, தீங்கற்ற சட்ட மறுப்பு முறைகளுக்கே அதிகார பூர்வமான அனுமதி வழங்கப் பட்டிருந்தது: உப்பு சட்டத்தை மீறல், அயல் நாட்டுத் துணி பகிஷ்காரம், அயல் நாட்டுத் துணி கடை கள் மறியல், அரசாங்கத்தின் மதுபானக் கடைகள் மறியல். ஏப்ரல் 9 ஆம் நாள் காந்தி பிறப்பித்த ஆணைகளிலிருந்து அவரு டைய கருத்தை அறிந்து கொள்ளலாம்:

> ''நம்முடைய பாதை நமக்காக முன்பே வகுக்கப்பட்டு விட்டது. ஒவ்வொரு கிராமமும் சட்ட விரோதமான உப்பை வாங்க அல்லது உற்பத்தி செய்ய வேண்டும்; சகோதரிகள் மதுபானக் கடைகளை மறியல் செய்ய வேண்டும். அபினி பதுக்கு விற்பனை ஸ்தலங்களையும், அயல் நாட்டுத் துணிக் கடைகளையும் அவர்கள் மறியல் செய்ய வேண்டும். ஒவ்வொரு வீட்டிலுமுள்ள இளைஞர்களும் முதியவர்களும் தக்ளி சுற்றி நூற்று ஒவ்வொருநாளும் நூற்ற நூலை நெய்ய வேண்டும். அயல் நாட்டுத் துணி எரிக்கப்பட வேண்டும். ஹிந்துக்கள் தீண்டாமையை ஒழிக்க வேண்டும். ஹிந்துக்கள், முஸ்லீம் கள், சீக்கியர்கள், பார்சிகள், கிறிஸ்தவர்கள் யாவரும் இதய ஒற்றுமையைச் சாதிக்க வேண்டும். சிறுபான்மையினர் திருப்திகரமாய் எடுத்துக் கொண்டது போக எஞ்சியதைக் கொண்டு பெரும்பான்மையினர் திருப்தி அடைவார்களாக. மாணவர்கள் அரசாங்கப்பள்ளி, கல்லூரிகளிலிருந்து விலகு வார்களாக; அரசு ஊழியர்கள் தங்கள் வேலையை விட்டு

மக்கள் தொண்டில் ஈடுபடுக. பூரண சுய ராஜ்யம் நம் வீட்டுக் கதவுகளைத் தட்டிக்கொண்டு வருவதை நாம் காண்போம்.''

முன்பே ஏப்ரலில் உருவான மக்கள் கிளர்ச்சி இந்த எளிய எல்லைகளைக் கடந்து வெகு தொலைவு சென்று விட்டது; வேலை நிறுத்தங்கள் பெருக்கம், சக்தி வாய்ந்த மக்கள் ஆர்ப்பாட்டங்கள், வங்காளத்தில் சிட்டகாங் ஆயுதக் கிடங்குக் கொள்ளை, பெஷாவரில் நடந்த நிகழ்ச்சிகளை அடுத்து அந்நகரம் பத்து நாட்கள் மக்கள் வசப்படுதல், பல இடங்களில் உழவர்கள் தாமாகவே குத்தகை தரா இயக்கம் தொடங்குதல், குறிப்பாக ஐக்கிய மாகாணங்களில்—இங்கு 50 சதவீதக் குத்தகை செலுத்தினால் போதும் என்ற அடிப்படையில் காங்கிரஸ் செய்த மத்தியஸ்தம் பலிக்கவில்லை.

முழு எதிர் காலத்துக்கும் மிகப் பொருட் செறிவுள்ள நிகழ்ச்சி, பெஷாவரிலிருந்து கார்வாலி படை வீரர்களின் கலகமாகும். ஸ்தலத்திலுள்ள தலைவர்கள் கைது செய்யப்பட்டதைத் தொடர்ந்து ஆத்திரமுற்ற மக்களின் ஆர்ப்பாட்டங்களை அடக்குவதற்கு ஆயுதக்காரர்கள் அனுப்பப்பட்டன: ஓர் ஆயுதக் கார் எரிக்கப் பட்டது; அதில் இருந்தவர்கள் தப்பிவிட்டார்கள். அதன் பேரில் கண்மூடித்தனமாய்க் கூட்டத்தினர் சுடப்பட்டார்கள்; நூற்றுக்கணக்கானவர்கள் இறந்தனர், காயமுண்டனர். 18வது அரசு கார்வாலித் துப்பாக்கிப்படையின் 2ஆம் அணியின் ஒரு பிரிவினர்—எல்லோரும் ஹிந்துக்கள், கூட்டத்தினர் முஸ்லீம்கள்—ஆணையை மீறிச் சுட மறுத்து விட்டனர்; அணியிலிருந்து விலகி, கூட்டத்தாரோடு சேர்ந்து கொண்டனர். சிலர் தங்கள் ஆயுதங்களையும் கொடுத்து விட்டனர். உடனே, அங்கிருந்த ராணுவமும் போலீசும் முற்றிலும் வாபஸ் பெறப்பட்டன; ஏப்ரல் 25 முதல் மே 4 வரை பெஷாவர் நகரம் மக்கள் வசம் இருந்தது; அப்பால் வலிய பிரிட்டிஷ் படைகள், வான விமானங்களின் துணையோடு, நகரத்தைக் கைப்பற்றுவதற்காகக் குவிந்தன; எதிர்ப்பு இல்லை. இந்த நிகழ்ச்சிப் பற்றி விசாரணை நடத்த வேண்டும் என்ற எந்தக் கோரிக்கையையும் அரசாங்கம் ஏற்கவில்லை. பதினேழு கார்வாலித் துப்பாக்கிப் படை வீரர்கள் ராணுவக் கோர்ட்டால் காட்டு மிராண்டித்தனமான தண்டனை விதிக்கப் பட்டனர்; ஒருவருக்கு ஆயுள் முடியும் வரை நாடு கடத்தும் தண்டனை, ஒருவருக்கு 15 வருட சிறைவாசம், பதினைந்து பேருக்கு மூன்று முதல் பத்து ஆண்டுகள் வரை கடுங்காவல்.

சகோதர மக்களைச் சுட மறுத்த கார்வாலிப் படை வீரர்களின் உதாரணத்தை, காந்தியின் மனதிற்குகந்த ''அஹிம்சை'' யின் வெற்றிகரமான வெளியீடு என்றாவது குறைந்த பட்சமாகச் சொல்லியிருக்கலாம். ஆனால் காந்தியின் கருத்து அவ்வாறில்லை.

பிரிட்டிஷ் ஆட்சியின் அஸ்திவாரத்தையே ஆட்டிய அஹிம்சை இது. இர்வின்-காந்தி ஒப்பந்தத்தில் கைதிகள் விடுதலை பற்றிய பிரிவு மிகத் தெளிவாக கார்வாலி மனிதர்களை விலக்கியது. அதிகார பூர்வமான காங்கிரஸ் வரலாறு பயங்கரவாதிகளின் பல சின்னஞ்சிறு செய்கைகளை விவரித்து, அவற்றால் எழுந்த தேசிய வுணர்ச்சிபற்றி பேசுகிறது. ஆனால், கார்வாலிக் கதை அதில் இடம் பெறவில்லை. ஆண்டாண்டுகளாய் கார்வாலி மனிதர்கள் தண்டனையை நுகரக் கை விடப்பட்டனர்; 1937 இறுதியில்தான் அவர்கள் காங்கிரஸ் அமைச்சர்களின் செல்வாக்கினால் விடுதலை பெற்றார்கள். அவர்களுடைய நினைவு மக்களின் இதயங்களில் வாழ்கிறது; எதிர்கால சுதந்திர பாரதத்தின் வரலாற்று ஏடுகளில் அவர்கள் உயர்வான இடம் பெறுவார்கள்; அரசியல் வாதிகளின் நினைவு அப்போது மிகத் தாழ்நிலையில் இருக்கும். பின்னர், லண்டன் வட்ட மேஜை மாநாட்டில் கலந்து கொள்ள வந்த காந்தி, ஒரு பிரெஞ்சு பேட்டியாளரிடம், தாம் கார்வாலி மனிதர்களின் செய்கையை ஆதரிக்காததற்குக் காரணத்தை விளக்கினார்:

> "சுடுமாறு ஆணையிடப்பட்ட படை வீரன் அதற்குக் கீழ் படிந்து நடக்க மறுத்தால், அவன் தான் செய்த பிரமாணத்துக்கு எதிராக நடப்பதோடு, கீழ்பணிய மறுத்த பெரும் குற்றமும் செய்தவனாவான். அதிகாரிகளையும் சிப்பாய்களையும் கீழ்பணிய மறுக்குமாறு நான் கூறமாட்டேன்; ஏனெனில் நான் அதிகாரத்தில் இருக்கையில் அதே அதிகாரிகளையும் படை வீரர்களையும் பயன்படுத்திக் கொள்ள நேரலாம். கீழ்ப்படிந்து நடக்க மறுக்குமாறு நான் அவர்களுக்குக் கற்பித்தால், அதே மாதிரி நான் அதிகாரத்தில் இருக்கும் போதும் செய்யக் கூடும் என்று அஞ்சுகிறேன்."
>
> (பிரெஞ்சுப் பத்திரிகையாளர் சார்லஸ் பெட்ராஷ் கார்வாலி படை வீரர்களைப் பற்றிக் கேட்ட கேள்விக்கு காந்தியின் பதில்; மாண்ட், பிப்ரவரி 20, 1932.)

இந்த வாக்கியம் (காந்தியை வியக்கும் சமாதான வாதிகளின் ஆய்வுக்குச் சிபாரிசு செய்யத் தக்கது) பழைய பர்தோலி தீர்மானத்தை விட தெளிவாக—"அஹிம்சை" என்பதன் மெய்ப் பொருளைப் புலப்படுத்துகிறது.

தான் கருதிய எல்லையை மீறி மக்கள் இயக்கம் செல்வதைத் தெளிவாய்க் கண்டு, சுயேச்சையாக விடப்பட்ட காந்தியின் செல்வாக்கு மங்கிப் போகும் அபாயம் இருப்பதைக் கண்டு, அர

சாங்கம் மே 5 ஆம் நாள் காந்தியைக் கைது செய்தது. கைது செய்ததை நியாயப்படுத்தி அரசாங்க அறிக்கை கூறியது:

> "திரு. காந்தி இந்த வன்முறை நிகழ்ச்சிகளுக்காக வருத்தம் தெரிவித்த போதிலும், தம்மை பின்பற்றுவோரைப் பற்றின அவருடைய கண்டனங்கள் மேன்மேலும் பலவீனமடைந்து வருகின்றன, அவரால் அவர்களை அடக்க இயலவில்லை என்பது தெளிவு....சிறையில் இருக்கும் காலத்தில் அவருடைய உடல் நலனுக்காகவும் வசதிக்காகவும் எல்லா ஏற்பாடும் செய்யப்படும்."

இந்த கைதுக்கு எதிரொலியாக நாடெங்கும் ஹர்த்தால்களும், பெரும் வேலை நிறுத்தங்களும் நடந்தன. பம்பாய் மாகாணத்தில், தொழில் நகரமான ஷோலாபூரில், மக்கட் தொகை 140,000 இல் 50,000 பேர் துணி ஆலைகளில் வேலை செய்கிறவர்கள்; அவர்கள் ஒரு வார காலம், போலீசை அகற்றித் தங்கள் சொந்த நிர்வாகத்தில் நகரத்தை வைத்திருந்தனர்; மே 12 ஆம் நாள் ராணுவச் சட்டம் பிறப்பிக்கப்பட்ட பிறகுதான் நிலைமை மாறியது. "தன் சொந்த ஆட்சியை ஏற்படுத்த முயன்று கொண்டிருந்த கூட்டத்தினரைக் காங்கிரஸ் தலைவர்களாலும் கட்டுப்படுத்த முடியவில்லை" என்று தி டைம்ஸ் ஏட்டின் நிருபர், மே 14, 1930 இல் செய்தி அனுப்பினர். "அவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்கள்; சொந்த சட்டங்களையும் விதிமுறைகளையும் ஏற்படுத்த முயன்றார்கள்," என பூனா ஸ்டார் கூறியது. நகரத்தில் ஒழுங்குமுறை நிலவியது என்பதற்கு அப்போதே நேரில் கண்டவர்களின் சான்று உள்ளது.

ஏகாதிபத்திய அடக்குமுறைக்குக் கரை கிடையாது. ஒன்றையடுத்து ஒன்றாக அவசரச் சட்டங்கள் பிறந்தவண்ணம் இருந்தன; ராணுவச் சட்டம் அமுலான நிலைக்குச் சமமான நிலைமை. ஜூனில் காங்கிரசும் அதனுடைய நிறுவனங்களும் சட்ட விரோதமானவை என்று அறிவிக்கப்பட்டன. 1931 இளவேனில் இர்வின்-காந்தி ஒப்பந்தம் ஏற்படும்வரை ஓராண்டுக்குள்ளாக 60,000 சத்தியாக்கிரகிகள் தண்டிக்கப்பட்டதாய் அரசுச் செய்திகள் கூறின. இந்த மதிப்பீடு நிச்சயம் தாழ்வானது; ஏனெனில், இந்தத் தொகையில் அச்சுறுத்தல், கலகம் முதலிய குற்றங்களுக்காகத் தண்டிக்கப்பட்டோர் தொகை சேராது; அரசியல் கைதிகள் என்று அரசு ஒப்புக் கொண்டவர்களின் எண்ணிக்கை மட்டும் அது. விவரமான, தேசீய வாதிகளின் குறிப்புகள் மொத்தம் 90,000 என்கிறது: "1930-31 இல் மிகக் குறுகிய பத்துமாத காலத்தில் தொண்ணூறாயிரம் ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் தண்டிக்கப்பட்டனர்." ("தேசீய காங்கிரஸ் வரலாறு", பக். 876.) இவை

யாவும் ஒரு ''தொழிலாளர் அரசின்'' கீழ் நடந்தது. தொழிலாளர் கட்சி ஆட்சியில் இருந்ததைத் ''தெய்வாதீனமான வாய்ப்பு'' என்றும், ''இந்தியாவைக் கருத்தில் கொண்டு பார்த்தால், தொழிலாளர் கட்சி அமைச்சரவையே ஆட்சியில் வைத்திருப்பது தான் பெரிய, வலுத்துவருகிற பொதுத் தேவையாகும்'' என்றும் 1930, ஏப்ரல் 27 இல் பிற்போக்கு ஏடான அப்சர்வர் எழுதியது.

சிறையிடல்—அடக்கு முறையின் ஒரு சிறிய வடிவம். சிறைக் கூடங்கள் நிரம்பி வழிந்தன; 'சகட்டு மேனியாக'ச் சிறையிடுவதால் இயக்கத்தைத் தடுக்க முடியாது என்பது தெளிவாயிற்று. ஆகையால் முக்கியமான ஆயுதமாக, சித்திர வதைக் கொடுமை பயன்படுத்தப்பட்டது. கண்மூடித்தனமாய்த் தடியடிப் பிரயோகம் செய்தல், பிரம்படி, ஆயுதமற்ற கூட்டத்தினர்மீது துப்பாக்கிப் பிரயோகம், ஆண்களையும் பெண்களையும் கொல்லுதல், காயப்படுத்தல் (சில கடுமையான இடங்களில் சுட்டுத் தொங்கவிடுதல், டாங்குகள் பயன்படுதல், ஆயுதக் கார்களைப் பயன்படுத்தல், வானத்திலிருந்து குண்டு வீசுதல்) ஆகியவை பற்றிய செய்திகள், வேறு எந்த நாட்டிலும் ஈடுசெட்ட முடியாத அளவுக்கும் மிஞ்சிய கொடுமைகளை விவரித்தன; நிகழ்ச்சிகளில் ஒரு சிறிது கண்ட, அனுபவத்தால் பழுத்த செய்தி நிருபர்களும் அருவருப்பு கொண்டனர்.[1] எல்லாச் செய்திகளையும் தணிக்கை செய்வதற்குக் கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஆனால், காங்கிரஸ் மிகவும் எச்சரிக்கையாகத் தயாரித்த பதிவுருக்களில், அத்தாட்சி பெற்று உறுதியான தகவல்களிலிருந்து ஏராளமான நிகழ்ச்சிகளைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம்.

ஆயினும், 1930 இல் இயக்கத்திற்கிருந்த சக்தி, அதிகாரிகளின் எல்லா கணக்குகளையும் மீறி, அடக்கு முறையையும் மீறி வளர்ந்து ஏகாதிபத்தியப் பாசறையில் பெரும் பீதியைக் கிளப்பி விட்டது; 1930-கோடையிலேயே அதைப்பற்றி, குறிப்பாக பகிஷ்காரத்தால் பாதிக்கப்பட்ட வர்த்தக சமூகத்தினர் வெளிப்படையாகப் பேசலாயினர். இதைப் பம்பாயில் சிறப்பாய்க் கண்டிருக்கலாம்; பாட்டாளி வர்க்கத்திற்கு அது (பம்பாய்) வலிய மையம்; அங்குதான் அடக்குமுறையும் கொடுமை; ஆனால், அங்குதான் கிளர்ச்சி மிகச் சூடாக இருந்தது; போலீஸ்காரர்கள் மீண்டும் மீண்டும் தாக்கியும் மாபெரும் கூட்டத்தினர் ஆர்ப்பாட்டங்கள் செய்து தெருக்களைக் கைப்பற்றினர்; கூட்டத்தின

1. 1930 ஜூலை 14 இல் சட்டமன்றத்தில் அரசு அளித்த பதில்: ஏப்ரல் 1 முதல் அந்த நாள்வரை 21 இடங்களில் துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது; 103 பேர் இறந்தனர், 420 பேர் காயமுண்டனர்.

ரைக் கலைந்து போகுமாறு காங்கிரஸ் தலைவர்கள் எவ்வளவோ வேண்டியும் பயன்படவில்லை; அங்கு செங்கொடி, காங்கிரஸ் கொடியோடு, ஏன், அதைவிட ஓங்கிப் பறந்தது. ''கல்கத்தா அல்லது வேறு நகரங்களிலிருந்து இங்கே வருகிறவர்கள் பம்பாய் இழிந்துள்ள நிலையைக் கண்டு பெரிதும் மலைப்பு கொள்கிறார்கள்'', என்று அப்சர்வர் செய்தி நிருபர் ஜூன் 29 இல் எழுதினார். ''ராணுவத் துருப்புகளும் ஆயுதப் போலீசும் இல்லாவிட்டால் பம்பாய் அரசு ஒரே நாளில் கவிழ்க்கப்படும். ஆட்சியை எல்லோருடைய இணக்கத்தோடு காங்கிரஸ் கைப்பற்றும்'', என்று ஜூலை 5, ஸ்பெக்டாடரில் வெளியான, ''பம்பாயிலிருந்து ஒரு கடிதம்'' சொல்லுகிறது. பம்பாயிலுள்ள பிரிட்டிஷ் வியாபாரிகள் இந்திய வியாபாரிகளோடு சேர்ந்து, ''ஆலை அதிபர்கள் சங்கம்'' (இதில் மூன்றில் ஒரு பகுதியினர் ஐரோப்பியர்கள்), வர்த்தகர் கழகம் வாயிலாக, இந்தியாவுக்குக் குடியேற்ற நாட்டு அந்தஸ்துள்ள சுயாட்சி வழங்குமாறு வேண்டினார்கள். மத்தியில் பார்லிமெண்டரி முறையில் பொறுப்புள்ள அரசு வேண்டும் என முழங்கும் பெருங்கூட்டக் காட்சியை (பம்பாய்) தி டைம்ஸ் ஆப் இண்டியா ஏடு நேரில் கண்டது. ஜூலை 6 இல் இந்தியாவிலுள்ள ''ஐரோப்பியர்கள் நெறி கெட்டு''ப் போன தாக அப்சர்வர் பீதியோடு எழுதியது:

> ''கல்கத்தா ஸ்டேட்ஸ்மன் பத்திகளைத் தவிர மற்ற எங்கும் தோல்வி மனப்பான்மையே நிலவுகிறது. கல்கத்தா, பம்பாயிலுள்ள பிரிட்டிஷ் வர்த்தகர்களுக்கும் காங்கிரஸ் காரர்களுக்கும் இடையில் பேச்சுவார்த்தைகள் நடப்பதாக வும், உடனடியாகப் பகிஷ்காரம் போன்ற தற்காலிகத் தீமை களைத் தவிர்ப்பதற்காக நிரந்தரமான அரசியல் சரணாகதிக் காகப் பேசுகிறார்கள் என்றும் மிக விஷய ஞானம் உள்ள வதந்திகள் உலாவுகின்றன. . . . ஐரோப்பியரின் இழிநிலை. . . . ஆனால், இந்த இழிநிலை பொதுவானதல்ல; கல்கத்தாவில் அதற்கு எதிராய்க் கடுமையான மக்கள் கருத்து உண்டு.''
>
> (அப்சர்வர், ஜூலை 6, 1930.)

ஆகஸ்டில், அப்சர்வரின் கல்கத்தா நிருபர் ''பம்பாயில் பலவீனம்'' என்ற தலைப்பில் எழுதிக் கொண்டிருந்தார்:

> ''பிரிட்டிஷாரின் நிர்வாகத்திலுள்ள சில ஆலைகள் காங்கிரசின் நிபந்தனைகளை ஏற்க நேர்ந்தது என்றும் அதனால் ஒரு பிரபலமான பிரமுகர் பம்பாய் லேட்ஹவுஸில் தமக்குள்ள பொறுப்புகளிலிருந்து ராஜிநாமா செய்கிறார் என்றும் பம்பாயி லிருந்து வந்த செய்தி இங்குள்ளோருக்கு அதிர்ச்சி உண்டாக் கியது. அது போலவே, இந்தியக் கருத்துக்கு இசைவாக

இவ்வாறு பிரிவுப் பட்டியல் நீளுகிறது, ஒரு கையால் தருகிறது, மறு கையால் தட்டிப் பறிக்கிறது. உயர்ந்தபட்ச ஆதாயம், அயல் நாட்டுத் துணியை அமைதியாகப் பகிஷ்காரம் செய்யும் உரிமை—இந்திய தரப்பிற்கு ஒப்பந்தத்திற்குப் பின்னுள்ள நோக்கத்தைக் கோடிட்டுக் காட்டும் ஒரே உருப்படியான அம்சம்.

எந்த ஸ்தாபனத்தைச் சட்ட விரோதமானது என்று அரசு அறிவித்ததோ, எந்த ஸ்தாபனத்தை அது துகளாக்க விரும்பியதோ, அதே காங்கிரசின் தலைவருடன் உலகறிய ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திடும் நிர்ப்பந்தம் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு ஏற்பட்டது என்ற உண்மை, தேசிய இயக்கத்தின் மாபெரும் வலிமையைக் காட்டுகிறது என்பதில் ஐயமில்லை. இந்த உண்மை முதலில் பரவலாகப் பூரிப்பையும் வெற்றிக் களிப்பையும் உண்டாக்கியது; மிகுந்த அரசியல் உணர்வு உள்ளவர்களுக்கு மட்டும் அவ்வாறு மகிழ்ச்சி ஏற்படவில்லை; என்ன நடந்துள்ளது என்று அவர்களுக்குப் புரிந்ததுடன், எல்லாப் போராட்டமும் தியாகமும் பேரம்பேசும் மேஜையில் நஷ்டமாகி விட்டன என்பதை அவர்கள் கண்டார்கள். மெள்ள மெள்ளத்தான், ஒப்பந்த ஷரத்துக்களின் பொருள் புரியப் புரியத்தான், ஒரு லாபமும் கிடைக்கவில்லை என்ற தெளிவு கிட்டியது. முழு விடுதலை வேண்டும், ஏகாதிபத்தியத்தோடு ராஜி பேசமாட்டோம் என்று லாகூரில் கத்தினர்களே, அந்த நோக்கங்கள் புதைந்துவிட்டன. காங்கிரசுக்குப் பின்னல் அரசுடன் சரணுகதியாக காந்தி பதிஞேரம்சக் கோரிக்கை கொடுத்தாரே, அதையும் காணேம்; ஒரு கோரிக்கைகூட ஏற்கப்படவில்லை. முன்பு வட்ட மேஜை மகாநாட்டில் கலந்துகொள்ள மறுத்தது; இப்போது கலந்து கொள்வதாய் இழிகிறது; போராட்டம் இன்றியே அதில் கலந்து கொண்டிருக்க முடியுமே (தொடக்கத்தில் வலியுறுத்தியிருந்தால், இன்னும் சிறப்பான பிரதிநிதித்துவம் பெற்றிருக்கக் கூடும்).

ஆக, இர்வின்-காந்தி ஒப்பந்தம், பர்தோலி அனுபவத்தைப் பெரிய அளவில் பெற்றதாயிற்று. மீண்டும் ஒருமுறை, இயக்கம் உச்ச கட்டத்தை எட்டும்போது திடீரென்றும் மர்மமாகவும் அது நிறுத்தப்பட்டது (''நம் இயக்கம் சரியும் தறுவாயில் இருக்கிறது என்ற கூற்று முற்றிலும் பொய்''—காந்தி, மாண்ட் ஏட்டிற்கு, 1932, பிப்ரவரி 20 இல் பேட்டியில், ஒப்பந்தத்தின் போது இருந்த நிலைமை பற்றி). மார்ச் 5 இல், ''எந்த வைசிராய்க்கும் இத்தகைய வெற்றி கிட்டியதில்லை'', என்று டைம்ஸ் ஏடு மகிழ்ச்சி கொண்டாடியது. மார்ச் 5 இல், வியப்புற்ற செய்தி நிருபர்களிடம் ஒப்பந்தத்தின் நியாயத்தை விளக்கி அறிக்கை

வெளியிட்டார்: ''காங்கிரஸ் ஒருகாலும் வெற்றிக்காக முயன்றதில்லை'' என்றார் அதில் (காந்தி: ''பேச்சுக்களும் எழுத்துக்களும்''—பக். 778); இந்த விஷயமாக அவர் தம் போர்த் தந்திரம் பற்றின உண்மையைத்தான் உரைத்தார். அப்பால் அவர் தம் எண்ணத்தை மேலும் விளக்கினார். 1931, ஜூனில் அவர் யங் இண்டியாவில் எழுதினார்: ''ஒரு சுய ராஜ்ய அரசியல் திட்டம் பெறுவதற்கான முயற்சியை இப்போதைக்கு நாம் கைவிட வேண்டியதுதான். அரசியல் அதிகாரம் இன்றி நாம் நம் நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள முடியும்.'' மாறுதலாக, மார்ச் 6 ஆம் நாள், பத்திரிகைப் பேட்டி ஒன்றில் அவர், பூரண சுயராஜ்யம் என்பதன் உண்மைப் பொருள் ''உள்ளிருந்து, கட்டுப்பாடுள்ள தன்னாட்சி'' என்றதுடன் ''இங்கிலாந்துடனுள்ள தொடர்பை அது விலக்கவில்லை'' என்றும் கூறினார் (''தொடர்பு'' நாசுக்கானது; குறிப்பாக, அது கூர்மையான துப்பாக்கி முனைத் ''தொடர்பாக'' இருக்குமாயின்). இவ்வாறு வசனமாரி நடந்தது; ஒருபுறம் காந்தியும், மறுபுறம் மாக்டொனால்டுமாக, லாகூரில் அறிவிக்கப்பட்ட தெளிவான விடுதலைக் கோரிக்கை நோக்கம் குழப்பப்பட்டது (''பிரிட்டிஷ் ஆதிக்கத்திலிருந்தும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திடமிருந்தும் முழு விடுதலை''—என்பது லாகூர் வாசகம்). ஏராளமான சட்ட நுணுக்க மொழிகளும், சமயவாதம் மனச்சாட்சி வாதமும் பொழியப்பட்டன; இறுதியில், ''சரணாகதி, அடிமைத்தனம்'' என்ற உண்மைகளை மறைப்பதற்காக, மலைப்பூட்டும் சொற்றொடர்களையும் உயர்ந்த ஆன்மீக வேண்டுகோளையும் கையாளவல்ல இரண்டு வல்லுநர்களில், காந்தி—மாக்டொனால்டு, யாருக்குப் பரிசு வழங்குவது என்று முடிவு செய்வதே கடினமாக இருக்கிறது.

அந்த மாதமே அவசரமாய்க் கூட்டப்பெற்ற கராச்சி காங்கிரஸ் ஒரு மனதாக ஏற்றது. அதை முன்மொழியும் பொறுப்பு ஜவஹர்லாலுக்கு அளிக்கப்பட்டது; அந்தப் பணியாற்ற அவருக்கு ''மிகுந்த அகப் போராட்டமோ புறவேதனையோ இல்லாமலில்லை.'' அவர் சிந்தித்தார்: ''இதற்காகத்தான் நம் மக்கள் ஓராண்டுக் காலம் தீரமாய் நடந்து கொண்டார்களா? நம் வீர மொழிகளும் செயல்களும் இப்படியா முடியவேண்டும்?'' ஆயினும், தமக்கு உடன்பாடில்லை என்பதைத் தெரிவித்தால் அது ''வெறும் அகம்பாவம்'' ஆகும் என்று அவருக்குத் தோன்றியது. சுபாஷ் போஸும் ஒப்பந்தத்தைக் குறை கூறினர்; ஆனால், ஒப்பந்தத்தைக் காங்கிரஸில் எதிர்க்க இயலாது என்பதை உணர்ந்தார்; அது தேசிய ஒற்றுமையில் விரிசல் ஏற்பட்டாற் போலத் தோன்றும் என எண்ணினர். ஜவஹர்லாலின் கூற்றுப்படி ''ஒப்பந்தம் ஜன சம்மதமாக'' இல்லை; ஆனால், காங்கிரசிலும்

சில எதிர்ப்புக் குரல்கள் எழத்தான் செய்தன. இம் மாதிரி ஓர் ஒப்பந்தத்தைக் காந்தியைத் தவிர வேறு யாராவது கொண்டு வந்திருந்தால், அவர் கடலில் எறியப்பட்டிருப்பார் என்றொரு பிரதிநிதி கூறினர்; ஆனால், மகாநாடுகளில் இம்மாதிரி பேசுவது அபூர்வம். அழுத்தமான காங்கிரஸ் யந்திரத்துக்கும், பரந்த மக்கள் இயக்கத்துக்கும் இடையிலுள்ள பிளவு கராச்சியில் தலையெடுத்தது; ஒப்பந்தத்தின் எதிர்ப்பாளர்களுக்கு, ''காங்கிரசில் வாக்குரிமையுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் ஆதரவு அதிகம் கிடைக்காது; எனினும், மக்களுக்கு இடையில், குறிப்பாக, இளைஞர்களுக்கு இடையில், அவர்களுக்கு மிகுந்த ஆதரவு உண்டு'' என்று சுபாஷ் போஸ் எழுதுகிறார் (''இந்தியப் போராட்டம்''-பக். 233). இந்த ''மிகுந்த ஆதரவு''க்குக் குரல் கொடுக்கக் காங்கிரசுக்குள் யாருமில்லை. கராச்சி காங்கிரசில் இடதுசாரித் தேசீயத்தின் இச் சரிவினால் காந்தியின் நிலை வலுவுற்றது.

பதிலுக்கு, இடதுசாரித் தேசீயவாதிகளுக்கு ஒரு சலுகை அளிக்கப்பட்டது; முற்போக்கான சமூக, பொருளாதாரத் திட்டம் கொண்ட ''அடிப்படை உரிமைகள்'' தீர்மானத்தை நிறைவேற்றியதுதான் அச்சலுகை; அத்தீர்மானம் மிக முன்னேற்றமான ஜனநாயகத் தன்மையை அடிப்படையாகக் கொண்டது-ஆதாரத் தொழில்களையும், போக்குவரத்தையும் தேசீயமயமாக்குதல், தொழிலாளர் உரிமைகள், விவசாயச் சீர்திருத்தம் ஆகியவை அதன் முக்கிய அம்சங்கள். இன்னும் செல்லுபடியாக இருக்கும் இந்த வேலைதிட்டம் காங்கிரஸுக்கு ஒரு முக்கியமான முற்போக்கு நடவடிக்கை. ஆயினும், இர்வின்-காந்தி ஒப்பந்தத்தில் அடங்கியுள்ள சரணாகதிக்கு இது ஈடல்ல.

காங்கிரசுக்கு வெளியே ஒப்பந்தத்தை இளைஞர்கள், தொழிலாளர் இயக்கத்தினரும் கடுமையாகக் கண்டித்தார்கள். இளைஞர் ஸ்தாபனங்களும் மகாநாடுகளும் நிறைவேற்றிய தீர்மானங்களாலும், வட்டமேசை மகாநாட்டுக்காகப் புறப்பட்ட காந்திக்கு எதிராக பம்பாய்த் தொழிலாளர்கள் நடத்திய விரோத ஆர்ப்பாட்டங்களாலும் அது வெளிப்பட்டது பத்து வருடங்களுக்கு முன் இம்மாதிரி ஆர்ப்பாட்டங்களை நினைத்து பார்த்திருக்கவும் முடியாது என்றது தி டைம்ஸ் ஏடு.

ஏமாற்றம் விரைவாக விரிவான வட்டாரங்களில் பரந்தது. 1931இல் லண்டன் வட்டமேஜை மகாநாட்டில் காந்தியின் பணி (இங்கிலாந்திலுள்ள உயர்ந்த அரச் சிந்தனையின் பக்தர்கள் இடைவேளைகளில் அவருக்கு எண்ணற்ற சிறு வரவேற்புகள் அளித்தும், கூட்டங்கள் நடத்தியும் லோக குருவின் போதனைகளைச் செவி

மடுத்தார்கள்) ஒரு துன்பகரமான கேலிக் கூத்து ஆயிற்று; அதை நன்கு திரையிட்டு மூடி மறைக்கிறார்கள். அரசாங்கத்தின் பல வண்ணக் கைப்பாவைகளை, ரோமாபுரிக்கு கொண்டுவரப்பட்ட கைதிகளை போன்று அழைத்து வந்து, அவர்களுடைய குழப்பத்தை யும் வேற்றுமைகளையும் வெஸ்ட் மினிஸ்டர் சட்டமன்ற உறுப் பினர்கள் பார்த்து மகிழ்வதற்காக ஏற்பாடு செய்யப்பட்டது போன்ற அந்த மகாநாட்டில் காங்கிரஸ் கலந்துகொண்டதால் அதன் பெருமை தாழ்வுபட்டது. வழியில் முஸ்ஸோலினியைச் சந்தித்துவிட்டுக் காந்தி திரும்பினார். வட்டமேஜை மகாநாட்டி லிருந்து அவர் யாதொரு கனியும் கொண்டு வரவில்லை.

திரும்பும் வழியில், போராட்டத்தை மீண்டும் நடத்த வேண்டிய அவசியமிராது என்று நம்பிக்கை தெரிவித்தார். போர்ட் செயிட்டிலிருந்து இந்தியா ஆபீசுக்கு அனுப்பிய ஒரு தந்தியில், அமைதிக்காகத் தன் சக்திக்கு இயன்றதை எல்லாம் செய்வதாக உறுதி கூறினார். நாடு திரும்பியவுடனே அந்த நோக்கோடு ஒரு தீர்மானத்தையும் தயாரித்தார். ஆனால், அவர் தமக்கு விருந்திட்டவரைக் கணக்கில் சேர்க்கவில்லை.

ஏகாதிபத்தியத்தின் கை வலுத்திருந்தது; இந்த வாய்ப்பை அது முற்றிலும் பயன்படுத்திக் கொள்ள உறுதியாக இருந்தது. ''இடைக்கால சமாதானம்'' தொடக்கத்திலிருந்தே ஒரு தலை யானது; அடக்குமுறை நீடித்தது. 1931 இறுதி நாட்களில் திரும்பி யதும் காந்தி தன் சகாக்களிடமிருந்து ஒரு பரிதாபமான கதையைக் கேட்டார். உடனே ஒரு பேட்டிக்காக மன்றாடி வைசிராய்க்குத் தந்தி கொடுத்தார். பேட்டி மறுக்கப்பட்டது. இடைக்கால சமா தானம் நிலவிய ஒன்பது மாதங்களில் ஒவ்வொரு நாளையும் ஏகாதி பத்தியம் பயன் படுத்திக்கொண்டது (லண்டனில் நகைச்சுவை நாடகம் நடந்துகொண்டிருந்தபோது); இறுதியான போராட்டத் துக்கான தீவிரமான எல்லா ஆயத்தங்களையும் செய்து கொண்டு விட்டது. அயர்லாந்தில் 'கறுப்பு, பழுப்பு' ஆட்சி அனுபவம் வாய்ந்த சர் ஜான் ஆண்டர்சன் ஆயத்தப் பொறுப்புகளை ஏற்பதற்காக வங்காள கவர்னராய் நியமிக்கப்பட்டிருந்தார். இப்போது, இம்முறை எதிர்பாராததாக ஏதும் நடக்கக்கூடாது. காங்கிரசுக்கு ஒரு பாடம் கற்பித்தாக வேண்டும். இம்முறை இறுதிவரை போராட்டம், எதிரி நிபந்தனையற்ற சரணாகதி அடைய வேண்டும்.

1932, ஜனவரி 4; விரைவாகவும் விசையாகவும் அடி விழுந்தது. அன்றே பேச்சுவார்த்தைகள் முறிக்கப்பட்டன. வைசிராய் தம் அறிக்கையை வெளியிட்டார்; காந்தி கைது செய்யப்பட்டார்; கற்றையாக அவசரச் சட்டங்கள் வந்தன

(1930 இல் செய்யப்பட்டதைப்போல் ஒன்றன்பின் ஒன்றாக துளி துளியாக அல்ல, புறக்கூண்டிலிருந்து எல்லாமே ஏககாலத்தில் வெளிப்பட்டன); நாடெங்கும் முக்கியமான காங்கிரஸ் தலைவர்கள் அனைவரும், அமைப்பாளர்களும் கைது செய்யப்பட்டனர் காங்கிரசும் அதன் ஸ்தாபனங்கள் யாவும் சட்ட விரோதமானவை என அறிவிக்கப்பட்டன; அவர்களுடைய பத்திரிகைகள் தடை விதிக்கப்பட்டன; அவர்களுடைய கட்டிடங்கள், நிதிகள் உடமைகள் பறிமுதல் ஆயின. வெற்றிகரமான ஏற்பாடு.

எதிரியை வீழ்த்துவதுதான் தாக்குதலின் நோக்கம் என்பதை அரசு தெளிவாக்கி விட்டது. மக்களவையில் சர் சாமுவல் ஹோர் அவசரச் சட்டங்கள் மிக "வன்மையானவை, கடுமையானவை," இத்தடவை "நீண்டகாலம் இழுக்கும் போராட்டம்" நடவாது என்று அறிவித்தார். இந்திய அரசின் உள்நாட்டு அங்கத்தினரான சர் ஹாரி ஹைக், "செயற்கையான விதிமுறைகளைப் பின்பற்றி நாம் ஆட்டம் ஆடவில்லை," அரசைப் பொறுத்தவரை காலவரையறை ஏதுமில்லை என்றார். பம்பாய் அரசின் பேச்சாளர் சட்ட மன்றத்தில், "கையுறைகள் அணிந்துகொண்டு போராடப்படுவதில்லை," என்று உரைத்தார்.

காங்கிரஸ் தலைமையினர் இத்திடீர் தாக்குதலை எதிர்பார்க்கவில்லை. வட்டமேசை மகாநாட்டுச் சூழல் திடீரென்று இந்த மாறுதல், அவர்கள் ஆயத்தங்கள் ஏதும் செய்யவில்லை. 1930இல் காங்கிரஸ் தாக்குதல் நடத்தும் நிலையில் இருந்தது. இப்போது தற்காப்புப் போர் நடத்தவேண்டிய நிலை. இர்வின்-காந்தி ஒப்பந்தத்தின் விலையை அவர்கள் உணரவில்லை. காங்கிரஸ் காரியக் கமிட்டியைச் சேர்ந்த டாக்டர் சையத் முகமத் இந்தியா லீக் பிரதிநிதிகளிடம் உரைத்தார்:

> "மகாத்மா காந்தி தயாரித்து, காரியக் கமிட்டியில் கொண்டுவந்த தீர்மானம் பற்றி உலகத்திற்கு ஒன்றும் தெரியாது. மகாத்மா ஒத்துழைக்கவே முனைந்திருந்தார் . . . . அரசாங்கம் ஒத்துழைப்பை விரும்பவில்லை. எனக்குத் தெரிந்த உள் விஷயங்களைக் கொண்டு கூறுகிறேன், காங்கிரஸ் மோதலுக்குத் தயாராக இல்லை. லண்டனிலிருந்து மகாத்மா எப்படியும் சமாதானம் கொண்டுவருவார் என்று நாங்கள் எதிர்ப்பார்த்தோம்."
>
> ("இந்தியாவின் நிலைமை", இந்தியா லீக் பிரதிநிதிக் குழுவின் அறிக்கை, 1933, பக். 27.)

அவர் மேலும் கூறினர், "அவருக்கும் அவருடைய நண்பர்களுக்கும், காந்தி லண்டனில் இருந்தபோதே நவம்பர் மாதமே அடக்கு

முறைத் திட்டங்களை அரசு உருவாக்கி விட்டது என்று நிச்சயமான தகவல்கள் கிடைத்துள்ளன; அரசின் திடீர்த் தாக்குதலினால் முதலில் காங்கிரஸ் திகைப்புண்டது.''

இந்தத் தடவை, 1932-33 இல் நடந்த அடக்குமுறைக் கொடுமை 1930-31 அளவை மிஞ்சிவிட்டது. 1932, மே 2 இல் பண்டித மாளவியா பகிரங்கமாக அறிவித்தப்படி, முதல் நாலு மாதங்களில் 80,000 கைதுகள் செய்யப்பட்டன. பதினைந்து மாதங்களுக்கு அப்பால், 1933 மார்ச்சில், மொத்தக் கைதுகள் 120,000 ஐ எட்டிவிட்டது என்கிறது 1933 ஏப்ரலில், கல்கத்தாவில் சட்டவிரோதமான காங்கிரஸ் கூட்டத்தில் வெளியிடப்பட்ட அறிக்கை. அடுத்து நடந்த பெருவாரி வன்முறை, சித்திரவதைகள், துப்பாக்கிச்சூடு, தடியடி, இடமாற்றுத் தண்டனை, கூட்டு அபராதம் கிராமங்களில், கிராமவாசிகளின் நிலத்தையும் சொத்தையும் பறிமுதல் செய்தல்-ஆகிய கொடுமைகள் பற்றிய சில தகவல்களை, இந்தியா லீக் பிரதிநிதிகள் கோஷ்டி அறிக்கையான ''இந்தியாவின் நிலைமை'' (1933) யில் காணலாம்.

ஆறே வாரங்களில் இறுதிப் போரை முடித்துக்கொண்டு விடலாம் என்று அரசாங்கம் கணக்கு போட்டிருந்தது. ஆனால் தேசீய இயக்கத்தின் வலிமை காரணமாக, பாதகமான சூழ்நிலையிலும், போராட்டம் இருபத்தொன்பது மாதங்கள் இழுத்துக் கொண்டிருந்து, இறுதி சரணாகதியில் முடிந்தது. ஆனால், திட்டமிடும் தலைமை இல்லாமல், சிப்பாய்களோ நடத்திய போராட்டம், சட்டவிரோத, அடக்குமுறை நிலவிய நிலைமையில் தலைமையினரின் பணி எப்படியும் சிரமமானதுதான். அவர்களுடைய பணி காந்தியும் 'மேலிடமும்' செய்த செய்கைகளால் சுலுவாக்கப் படவில்லை; அவர்கள் தலைமைப் பொறுப்பைத் துறக்கவில்லை, உதறி எறிந்துவிட்டார்கள். காங்கிரஸ் கொள்கைகளுக்கு மாறாக, ஆணைகள் ரகசியமாகப் (சட்ட விரோதச் சூழலில்!) பிறப்பிக்கப்பட்டன. நிலப்பிரபுக்களின் நலனுக்கு விரோதமாய் எவ்விதமான போராட்டமும் ஏற்கப்பட மாட்டாது என்று ஒரு தீர்மானம் செய்யப்பட்டது. 1932 கோடையில் காந்தி தேசீயப் போராட்டத்தின் எல்லா அக்கறைகளையும் கைவிட்டு, ஹரிஜனங்களின் நலனுக்காகத் தம்மைப் பணித்துக்கொண்டார். செப்டம்பரில், நாடகபாணியில் அவர் ''சாகும்வரை உண்ணாவிரதம்'' மேற்கொண்டது, அடக்குமுறையை எதிர்த்து அல்ல, இருப்பதா— இறப்பதா என்ற நிலையில் நடந்து வந்த தேசீய இயக்கத்துக்கு ஆதரவாக அல்ல, ''தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு''த் தனித் தொகுதி அளிக்கும் திட்டத்தை எதிர்த்து. அது சாவிலும்

முடியவில்லை, நோக்கமும் நிறைவேறவில்லை, பூனா ஒப்பந்தத்தில் முடிந்தது: அதன்படி, ''தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு'' ஒதுக்கப் பட்ட இடங்கள் இரட்டிக்கப்பட்டன. இக்கதை மக்களைப் போராட்டத்திலிருந்து மக்களின் கவனத்தைத் திசை திருப்பப் பயன்பட்டது. போராட்டத்துக்குப் பொறுப்பான தலைவர் அவர் என்று மக்கள் எண்ணியிருந்தார்கள்.

1933 மேயில், காந்தி புதிய உண்ணாவிரதம் தொடங்கினார்; அரசாங்கத்தை எதிர்த்தல்ல, தம் நாட்டு மக்களின் மன மாற்றத்தை வேண்டி. ''என்னையும் என் சகாக்களையும் தூய்மைப் படுத்தி, ஹரிஜனங்களின் பிரச்னையில் மேலும் விழிப்புடனும் கவனத்துடனும் இருப்பதற்காக இதயப் பிரார்த்தனை'' என்று அவர் அதை வருணித்தார். மகிழ்ந்துபோன அரசாங்கம், அந்தப் புனித மனிதர் தம் நற்பணியைத் தொடருவதற்காக அவரை நிபந்தனையின்றி விடுதலை செய்தது. காந்தியின் சிபாரிசு பேரில் தற்காலிகத் தலைவர் சத்தியாக்கிரக இயக்கத்தை ஆறு வாரம் நிறுத்துவதாக அறிவித்தார்; அரசாங்கத்தோடு உடன் பாடு ஏற்பட்டதாலோ, உடன்பாடு ஏற்படும் என்ற நம்பிக்கை இருந்ததாலோ அல்ல; தாம் உண்ணாவிரதம் இருக்கும்போது நாட்டில் ''பெரும் மலைப்பு'' ஏற்படும், ஆகையால் அச்சமயம் போராட்டம் நிறுத்தப்படவேண்டும் (அரசாங்கம் அடக்கு முறையை நிறுத்தா விட்டாலும்) என்று காந்தி சொன்னதற்கு இணங்கப் போராட்டம் தடைப்பட்டது.[1]

1933 ஜூலையில், வைசிராயைப் பேட்டி காணக் காந்தி விருப்பம் தெரிவிக்க, முதலில் சத்தியாக்கிரக இயக்கத்தினை நிறுத்தினாலொழியப் பேட்டிதர முடியாது என்று வைசிராய் மறுத்த பிறகு, காங்கிரஸ் தலைமையினர் மக்கள் சத்தியாக் கிரகத்தை நிறுத்திவிட்டு, தனிநபர் சத்தியாக்கிரகம் தொடங்கு வதென்று முடிவு செய்தனர். அதே சமயம், காங்கிரஸ் ஸ்தாபனங்கள் அனைத்தையும் கலைப்பதாகத் தற்காலிகத் தலைவர் ஆணைபிறப்பித்தார். தனிநபர் சத்தியாக்கிரகி மீது அடக்கு முறையை அதிகமாக்கியதைத் தவிர, அரசாங்கத்திடமிருந்து வேறு பதில் இல்லை. ஆகஸ்டில் காந்தி மீண்டும் கைது செய்யப்

1. இத்தீர்மானத்தின் பலத்த அடிப்பட்டுத்தான், இந்தியாவுக்கு வெளியிலிருந்து சுபாஷ் போசும், வி. படேலும் கூடி ஓர் அறிக்கை வெளியிட்டனர்: 'சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்துவதென அண்மையில் திரு. காந்தி செய்துள்ள முடிவு, தோல்வியை ஒப்புக்கொள்வதாகும்...... அரசியல் தலைவர் என்ற முறையில் திரு. காந்தி தோல்வியடைந்து விட்டார் என்பது எங்கள் தெளிவான கருத்து. ஒரு புதிய கொள்கையையும் செயல் முறையையும் மேற்கொள்ளக் காங்கிரசைத் தீவிரமாய் மாற்றி அமைக்கவேண்டிய காலம் வந்துவிட்டது, அதற்கேற்ற ஒரு புதிய தலைவர் தேவை.''

பட்டார், ஆனால் மாத முடிவுக்குள் விடுவிக்கப்பட்டார்—ஓர் உண்ணாவிரதத்தைத் தொடர்ந்து. மனச்சாட்சி காரணமாகச் சிறிதுகாலம் எல்லா அரசியல் பணிகளிலிருந்தும் விலகிக் கொள்வதாக அறிவித்துவிட்டு காந்தி ஹரிஜன யாத்திரை மேற்கொண்டார். போராட்டமோ முடிவுமின்றி, தலைமையுமின்றி, நெடுகத் தொடர்ந்தது.

1930 இல் மகத்தான சக்தியோடு ஆரம்பமான போராட்டம் 1933 மேயில்தான் இறுதி முடிவு கண்டது. இயக்கத்தின் தோல்விக்கான காரணங்களை விளக்கி, ஏப்ரலில் காந்தி தம் கருத்தை ஓர் அறிக்கையில் வெளியிட்டிருந்தார். குற்றம் மக்களுடையது. "சத்தியாக்கிரகம் பற்றி விளக்குகிறவர்கள் செய்யும் கலப்படத்தால், மக்கள் அதன் தத்துவத்தை இன்றும் நன்றாய் புரிந்துகொள்ளவில்லை. ஆன்மீகச் சாதனங்களைப் பயன்படுத்தும் முறையை ஆன்மீக மற்ற கருவிகள் வாயிலாய்க் கற்பிப்பதால் ஆன்மீக சாதனங்களின் சக்திக் கரு பாதிக்கப்படுகிறது என்பது எனக்குத் தெளிவாகிவிட்டது....பலர் சட்ட மறுப்பை அசிரத்தையுடன் கையாண்டதால்....ஆட்சியாளர்களின் இதயத்தைத் தொடவில்லை" என்று மக்கள் மீது பழியைப் போட்டார் அவர். மக்களின் சட்டமறுப்பு இயக்கத்தைத் தனிநபர் இயக்கமாய் மாற்றியதாலும், மக்களியக்கத்தின் அடக்கொணுத் தன்மை பற்றின பிரச்னை தீர்க்கப்படவில்லை. வழுவற்ற தர்க்க முறையில் முடிவு காணப்பட்டது. "தக்கார் ஒருவர் ஒரு சமயத்தில் சத்தியாக்கிரகம் செய்யவேண்டும்", "இப்போதைய சூழ்நிலையில் ஒரே ஒருவர், அது நானே, தற்போதைக்கு சட்டமறுப்புப் போரின் பொறுப்பை ஏற்க வேண்டும்." இந்திய மக்களின் விடுதலைப் பாதையான "அஹிம்சை வழி ஒத்துழையாமை" என்னும் காந்தித் தத்துவம், தேய்ந்து கடைசியில் கேலிப் பொருளாக இறிந்துவிட்டது.

1934 மேயில், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி பாட்னாவில் கூடி நிபந்தனையின்றி சட்டமறுப்பு இயக்கத்தை முடிக்க அனுமதிக்கப்பட்டது (காந்தி சிபாரிசு செய்த ஒரே ஒரு விதிவிலக்கோடு). அரசாங்கத்துடன் உடன்பாடு ஏற்படவில்லை, சலுகைகள் கிடைக்கவில்லை. அதே சமயத்தில், முன்பே ஆரம்ப நடவடிக்கைகள் எடுத்தானதற்கு இணங்க, வருகிற தேர்தல்களில் நேரிடையாகக் காங்கிரஸின் சார்பில் போட்டியிடுவதென்று முடிவெடுக்கப்பட்டது.

1934 ஜூனில், காங்கிரஸ் மீது விதித்திருந்த தடையை அரசு நீக்கியது; ஆனால் அதன் கிளை ஸ்தாபனங்கள் பலவற்றின் மீது இருந்த—இளைஞர் ஸ்தாபனங்கள், உழவர் சங்கங்கள், வட

மேற்கு எல்லைப்புற மாகாணத்துச் செஞ்சட்டையினர்மீது—தடை இன்னும் நீக்கப்படவில்லை. 1934 ஜூலையில் இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி சட்ட விரோதமானது என்று அரசு அறிவித்தது. புதிய கட்டம் தொடங்கிக் கொண்டிருந்தது.

1934 மாரிக்காலத்தில் காந்தி காங்கிரஸ் உறுப்பினர் பொறுப்பையும் துறந்தார்; இப்போதைக்கு அவர் வேலை முடிவுற்று விட்டது. பிரியும் போது விடுத்த அறிக்கையில் அவர், ''பல காங்கிரஸ்காரர்களுக்கும் எனக்கும் இடையில் ஜீவாதாரமான நோக்க வேற்றுமை இருக்கிறது, அது மிகுந்தும் வருகிறது'' என்று விளக்கினார். ''காங்கிரஸ்காரர்களில் பெரும்பான்மையோருக்கு'' அஹிம்சை ''அடிப்படைத் தருமமாக'' இல்லை, ''வெறும் செயல்முறை''யாகத்தான் இருக்கிறது என்று தெளிவாகி விட்டது. காங்கிரசில் சோஷலிஸ்ட் கோஷ்டிகள் எண்ணிக்கையிலும் செல்வாக்கிலும் வளர்ந்து வந்தன. ''அவர்களுடைய ஆதிக்கம் ஏற்பட்டால்—ஏற்படலாம்—நான் காங்கிரசில் இருக்கமுடியாது.'' புதிய நிலையின் சக்தி புலப்பட்டது; பழைய கருத்துகளுக்கு அது உவப்பாக இல்லை.

காந்தி காங்கிரசிலிருந்து வெளியேறினார். ஆனால், அதன் விதிகளையும் அமைப்பையும் பிற்போக்கான முறையில் திருத்திக் கொடுத்துவிட்டுத்தான் போனார்; அது காங்கிரஸின் முன்னேற்றகரமான வளர்ச்சிக்குத் தடையாக உள்ளது. திரைக்குப் பின்னும் மிகச் சக்தி வாய்ந்த முறையில் அவரே வழிகாட்டிச் செலுத்தினார்; தேவை ஏற்பட்டால் நேர்த்தலைமைப் பொறுப்பைத் தாங்கத் தயாராகவும் இருந்தார். 1939-40 லும், மீண்டும் 1942 லும் அவரே நேர்த்தலைமைப் பொறுப்பை ஏற்றார்.

1930-34 இன் போராட்டப் பேரலையின் சோகமுடிவு, அதனுடைய அரும்பெரும் சாதனையையும், ஆழ்ந்த, நிலையான படிப்பினைகளையும், மாபெரும், நிரந்தர லாபங்களையும் நம் கண்களுக்கு புலப்படாமல் திரையிட்டுவிடக் கூடாது. மக்களுடைய வரம்பில்லாத ஆதரவும், ஊக்கமும், ஈடுபாடும், தியாகமும் நிறைந்த ஓர் இயக்கம், சந்தேகமின்றி வெற்றியை மிக நெருங்கிவிட்ட தறுவாயில் தற்காலிகமாய்த் தோல்வி கண்டது என்றால், அதன் போராட்ட தந்திரத்திலும் வழி முறைகளிலும் புலப்படும் காரணங்கள் சிறந்த படிப்பினையாகும், அதை எதிர்காலத்திற்காக கற்று, ஆராய்ந்து, மீண்டும் மீண்டும் ஆராய வேண்டும். அக்காரணங்கள் இந்த விவரிப்புக்குள்ளேயே உள்ளன. ஆனால், தேசிய இயக்கம் அவ்வாண்டுகளின் சாதனைகள் பற்றி கர்வம் கொள்ளலாம், ஏகாதிபத்தியம் தன் அடக்கு

முறையின் நவீன ஆயுதக்கிடங்கிலுள்ள ஒவ்வொரு கருவியைக் கொண்டு இந்திய மக்களை நொறுக்கித் தன் விருப்பிற்குப் பணிய வைத்துவிடலாம் என்றும், விடுதலை இயக்கத்தை ஒழித்து விடலாம் என்றும் அவ்வாண்டுகளில் கனவு கண்டது, தோல்வி கண்டது. இவ்வளவு அடியுண்ட பிறகு இரண்டே ஆண்டுகளில் தேசிய இயக்கம், முன்னைவிட வலிமை பெற்று, முன்னேறிக் கொண்டிருந்தது. போராட்டம் வீண் போகவில்லை. போராட்ட உலைவாய்ப்பட்டதால், ஒரு புதிய, பெரிய நாட்டு ஒற்றுமையும், தன்னம்பிக்கையும், கர்வமும், உறுதியும் உருவாயின. விளைவுகளை இன்று முன்னதாக அறுவடை செய்கிறோம். இறுதிப் போராட்டம் முன்னால் உள்ளது. முன்பு எப்போதும் இருந்ததைவிட உயர்ந்த அளவில் இப்போது தயார்நிலை திரண்டு கொண்டிருக்கிறது.

## அத்தியாயம் 12

# தொழிலாளர் இயக்க வளர்ச்சியும் சோஷலிஸத்தின் வளர்ச்சியும்

''வர்க்கவுணர்வுடன் மாபெரும் அரசியல் போராட்டம் நடத்துமளவுக்கு இந்தியப் பாட்டாளிகள் முன்பே போதுமான முதிர்ச்சி பெற்றுவிட்டார்கள்—அவ்வாறிருக்க, ஆங்கிலோ-ரஷிய வழி முறைகள் இந்தியாவில் ஆழத் தீர்க்கப்படுகின்றன.''

—1908 இல் லெனின்.

முப்பத்தேழு ஆண்டுகட்கு முன்னால் பிரிட்டனிலுள்ள சோஷலிஸத் தலைவர் ஒருவர்—ஸ்தாபனத்தில் தொடக்கப் பணிகள் புரிந்து, பிரிட்டிஷ் தொழிலாளர் வர்க்கத்தாரிடை சோஷலிஸ விழிப்பு ஏற்படச் செய்தவர்—இந்திய மக்களின் நண்பராகவும் பிரிட்டிஷ் ஆட்சியின் விமரிசகராகவும் இந்தியாவுக்குப் போனார்; நாடு திரும்பியதும் இந்தியாவைப் பற்றி ஒரு புத்தகம் எழுதினார்; அதில் இந்தியப் பாட்டாளி வர்க்கத்தைப் பற்றிச் சிறு குறிப்புகூட இல்லை; எதிர்காலத்தில் தொழிலாளர் இயக்கம் உண்டாகும் என்று ஊகமாய்க் கூட எழுதப்படவில்லை; அப்போது அப்படி எழுத முடிந்தது (கேய்ர் ஹார்டீ: ''இந்தியா: எண்ணங்களும் யோசனைகளும்'', 1909 இல் வெளியிடப்பட்டது). அதைப் போலவே, 1910 இல் வெளியான, மாக்டொனால்டின் ''இந்தியாவின் விழிப்பு'' என்ற புத்தகத்தில், இந்தியத் தொழிற்சாலைகளில் பணியாற்றும் தொழிலாளர்கள் எதிர்காலத்தில் எப்போதாவது ஒருவகைத் ''தொழிற்கூட்டு'' உண்டாக்கலாம், ''இந்தத் தொழிற் கூட்டுகள் இந்திய சாதிகளுக்கும் பிரிட்டனிலுள்ள தொழிற் சங்கங்களுக்கும் இடை நிலைப் பட்டவையாக ஒருகால் இருக்கலாம்'' என்று வெறும் ஊகம் ஒன்று உள்ளது (பக். 179).

இந்திய நிலையில் உறுதியான எதிர்கால சக்திகளைப் பற்றிய இந்தப் பக்கவாதக் குருட்டுத்தனம் வேண்டுமென்றே மேற்கொள்ளப்பட்டதன்று. மேல் மட்டத்திற்குக் கீழே திரளும்

உண்மையான சக்திகளையும், எதிர்காலத்திற்கு அதன் முக்கியத்துவத்தையும் ஊடுருவிக் காண மார்க்சீய அறிவினால்தான் முடியும். லெனின் 1908 லேயே ''இந்தியப் பாட்டாளி வர்க்கத்துக்கு'' முகமன் கூறி, ''வர்க்கவுணர்வுடன் மாபெரும் அளவில் அரசியல் போராட்டம் நடத்துமளவுக்கு போதுமான முதிர்ச்சி பெற்றவர்கள்'' என்று பாராட்டி விட்டார்; அந்த ஆண்டு திலகர் சிறையிடப்பட்டதை எதிர்த்து பம்பாய் ஆலைத் தொழிலாளர்கள் அரசியல் வேலை நிறுத்தம் செய்ததை அடிப்படையாகக் கொண்டு, அதுவே பிரிட்டிஷ் ஆட்சியின் முடிவைத் தீர்மானிக்கும் முன்னோடி என்று அவர் முடிவு செய்து விட்டார்.

இன்று, இந்த உள் நோக்கின் உண்மையை நிகழ்ச்சிகளின் சக்தி நிரூபிக்கிறது. பழைய குருட்டுத்தனம் இனி செல்லாது. இந்திய தேசீயப் போராட்டத்தின் அடுத்தடுத்து வந்த ஒவ்வொரு கட்டத்திலும் பாட்டாளி வர்க்கத்தின் பங்கும் முக்கியத்துவமும் அதிகரித்து வருவதைப் போராட்ட வரலாறு காட்டியுள்ளது; சோஷலிஸம் அல்லது கம்யூனிஸம் பற்றின பிரச்னைகளும் இந்திய அரசியல் பேச்சுகளில் முன்னிடம் பெறுகின்றன.

1914 க்கு முந்தின காலத்தில் தொழிலாளர் வர்க்கத்தின் பங்கு இன்னும் பின்னணியிலேயே இருந்தது; தேசீய இயக்கத்தை அது பின்தொடர்ந்ததேயன்றி முன் செல்லவில்லை; அதனுடைய ஒரே ஒரு பெரிய அரசியல் நடவடிக்கை, திலகருக்கு விதிக்கப்பட்ட ஆறாண்டு சிறைத் தண்டனையைக் கண்டித்து பம்பாயில் மேற்கொண்ட பொது வேலைநிறுத்தம் ஒன்றுதான்.

விழிப்பின் புதிய காலத்தில், முதல் உலகப் போர் முடியும் சமயம், 1918-21 இல் நடந்த பெரும் வேலை நிறுத்தக் கிளர்ச்சி தேசீயப் புரட்சி அலையின் முன்னோடியாகும்; அதுவே காங்கிரசை இயக்கி 1920-22 ஒத்துழையாமைக் கிளர்ச்சியில் இறக்கியது.

பத்து வருடங்களுக்கு அப்பால் தொழிலாளர் வர்க்கம் சுதந்திரமான, ஒழுங்கு திரண்ட சக்தியாக உருவாகிவிட்டது; அதற்கென்று தனியான கருத்துக்கோவை இருந்தது; அது இன்னும் தலைமைப் பணி ஆற்றாவிட்டாலும் தன் பங்குப் பணியைச் செய்து வந்தது; 1928 இன் பெரிய வேலை நிறுத்தக் கிளர்ச்சிக்குப் போர்க் குணமும் வர்க்கவுணர்வும் வாய்ந்த பாட்டாளி வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் தலைமை வகித்தார்கள்; அவர்களால் இளைஞர்களும் சிறு பூர்ஷ்வாக்களும் விழிப்பு பெற்று, புதிய தேசீயப் போராட்ட அலைக்கு வழி வகுத்தார்கள்; அந்தப் புதிய போராட்ட அலையில், 1930-34 இல், பூர்ஷ்வா தலைமை

யினர், தங்கள் போராட்டம் இருமுனைப் போராட்டம் என்றும், முக்கியமாகப் புரட்சியை எதிர்த்தும், பிறகுதான் ஏகாதிபத்தியத்தை எதிர்த்தும் நடக்கும் என்றும் பகிரங்கமாகவே தங்கள் கருத்தைக் கூறினார்கள்.

இரண்டாவது உலகப் போர் ஆரம்பமானது முதல் தொழிலாளர் வர்க்கம் இந்திய அரசியலின் எதிர்காலத்தில் உறுதியான சக்தியாக முன்னெப்போதையும் விடத் தெளிவாக ஓங்கி நிற்கிறது.

## 1. தொழில்துறைத் தொழிலாளர் வர்க்க வளர்ச்சி

இந்தியாவிலுள்ள தொழில் துறைத் தொழிலாளர் வர்க்கம், புதிய பொருளில், மக்கட் தொகைக்கு ஏற்ப எண்ணிக்கையால் மிகுந்தது அல்ல; ஆனால், அது முக்கியமான இடங்களில் குவிந்துள்ளது; மிக மிகத் தெளிவு வாய்ந்தது; முன்னேற்றம் அடைந்தது; மக்கட் தொகையில் அடிப்படையிலேயே புரட்சிகரமான பகுதி.

1922 அக்டோபரில், சர்வதேச சங்கக் கவுன்சில், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சார்பில் பேசிய செம்ஸ் போர்டு பிரபு, இந்தியாவில் ''தொழில் துறை ஊதியம் பெறுவோர்'' இரண்டு கோடி பேர் என்று உரிமை கொண்டாடினார்:

> ''தலையாய தொழில் துறை முக்கியத்துவமுள்ள எட்டு நாடுகளில் இந்தியாவைச் சேர்க்க வேண்டும் என்ற கோரிக்கையின் நியாயத்தை இனி தெளிவுபடுத்த வேண்டும். அதன் கோரிக்கை பரந்த, பொதுவான காரணங்களை அடிப்படையாகக் கொண்டது; புள்ளி விவரமுறைகள் மூலம் அதை வலியுறுத்தத் தேவையில்லை. அங்கு தொழில் துறையில் ஊதியம் பெறுவோர் சுமாராக இரண்டு கோடி பேர் இருப்பரென்று மதிப்பீடு செய்யலாம்: அதையன்றி, வேளாண்மைத் துறையில் வேலை செய்து ஊதியம் வாங்கும் பெரிய வகுப்பினரும் உள்ளனர்.''

தலைசிறந்த, தொழில் மயமான நாடுகளின் வரிசையில் இடம் கேட்கும் இந்த விந்தைக் கோரிக்கை ஒரு ராஜ தந்திர மோசடி; ஜெனிவாவில் பிரிட்டிஷ் அரசுக்கு இன்னொரு வோட் பெறுவதற்காகச் செய்யப்பட்ட தந்திரம். இரண்டு கோடி என்ற எண்ணிக்கையில் கைவினைஞர்களும், வீட்டுத் தொழில்களில் ஈடுபட்டவர்களும்தான் மிகப் பெரும்பாலோர், புதிய தொழில் துறைக்கும் அவர்களுக்கும் சம்பந்தம் இல்லை.

அதைப் போலவே, 1927-28 இல் இந்தியாவுக்கு வந்த பிரிட்டிஷ் தொழிற்சங்கக் காங்கிரஸ் தூதுக் கோஷ்டி தன் அறிக்கையில், இந்தியாவில் இரண்டரை கோடி ''ஸ்தாபன வடிவில் திரட்டக்கூடிய தொழிலாளர்கள்'' இருப்பதாய் மதிப்பிடு கிறது. ஆனால் அவர்களில் 2-1½ கோடி பேர் விவசாயப் பாட்டாளிகள்; பெருவாரி முதலாளித்துவப் பண்ணை முறையில் வேலை செய்பவர்களும் அல்ல (பத்து லட்சம் பேர் தேயிலை காப்பி தோட்டங்களில் பாடுபடுவோர்); அவ்வப்போது வேலை கிடைக் கும் போது செய்பவர்கள், அதுவும் மிக வறுமை வாய்ந்த உழவர்களிடம்; ஆகவே, தொழிற்சங்க ஸ்தாபனமாய்த் திரட்ட வழக்கமான வாய்ப்பே இல்லை (உழவர் இயக்கத்தில் மிக முக்கியமான பங்கு வகிக்கத் தக்கவர்களாக இருந்த போதிலும்). தொழில் துறையைச் சேர்ந்த, ''ஸ்தாபன ரீதியாகத் திரட்டப் படக்கூடிய'' தொழிலாளர்கள் தொகை 35 லட்சம்தான் என்பது அவர்களுடைய ஆய்வு.

இந்தியத் தொழிலாளர் வர்க்கத்தின் தொகையை மதிப்பீடு செய்யும்போது, ஏராளமான உடமையற்ற பாட்டாளிகளுக்கும் புதிய தொழில்துறையில் ஊதியம் ஈட்டும் சிறிய கூட்டத்திற்கு முள்ள வேற்றுமையைப் பாகு படுத்திப் பார்க்க வேண்டும். பின்னவர்களே (தொழில் துறையைச் சேர்ந்தோர்) இந்தியத் தொழிலாளர் வர்க்கத்தின் உறுதியான, ஸ்தாபன ரீதியில் திரண்ட, உணர்வுள்ள, தலையாய சக்தியாக முடியும்.

இந்தியத் தொழிலாளர் வர்க்கத்தின் அளவு பற்றி புள்ளி விவரங்கள் எதுவும் கிடைக்கவில்லை. 1931 சென்ஸஸ் அறிக்கை குறிப்பிடுகிறது:

> ''இந்தியாவின் மக்கட்தொகை அளவுக்கு, ஸ்தாபன ரீதி யான தொழில்களில் வேலை செய்யும் தொழிலாளர்கள் மிகமிகக் குறைவு; பிரிட்டிஷ் இந்தியாவில் பட்டறைச் சட்டத் துக்கு உட்பட்ட ஸ்தாபனங்களில் வேலை செய்வோரின் தின சரி சராசரித் தொகை 1,553,169 தான் .....
>
> ''தோட்டங்கள், சுரங்கங்கள், தொழில், போக்குவரத்து ஆகியவற்றில் வேலை பார்ப்போரின் மொத்த எண்ணிக்கை, இந்தியாவில் 1921 இல் 24,239,5_5; அவர்களில், 10 அல்லது அதற்கு அதிகமானோர் வேலைசெய்யும் ஸ்தாபனங் களில் வேலை செய்வோர் 2,685,909 பேர்களே.
>
> ''அதே தலைப்புகளின் கீழ், 1931 இல் மொத்த எண் 26,187,689 ஆகிறது: தொழிலாளர்களின் எண்ணிக்கை அதே மாதிரி ஸ்தாபனங்களில் அதே அளவில் இருக்குமானால்,

இப்போது அவர்களின் எண் 2,901,776 ஆக இருக்கும். வேலை செய்யும் நபர்களின் தினசரி சராசரி எண்கள், அது சென்ற பத்தாண்டுகளில் 30 சதவீதம் ஏறியுள்ளதைக் குறிக்கிறது, அப்படியானால் அந்த எண்ணிக்கை இப்போது 3,500,000 ஆக இருக்கும். 1931-ல் ஸ்தாபன ரீதியான தொழிலாளர்களின் தொகை நியாயமாக 5,000,000 என்று கொள்ளலாம்.''

(''இந்தியாவின் சென்ஸஸ்'', 1931, தொகுதி I, பாகம் I, பக். 285.)

மிகப் பரந்த பொருளில், இந்தியாவில் ஊதியத் தொழிலாளர்களின் தொகை சுமார் 6 கோடி என்று மதிப்பிடலாம். 1931-ல் 5·6½கோடி என்று இந்திய வாக்குரிமைக் கமிட்டியின் அறிக்கை கூறுகிறது:

''1921-ல் விவசாயத் தொழிலாளர்களின் மொத்தத் தொகை 2·15 கோடி என்று கொடுக்கப்பட்டிருந்தது, 1931 சென்ஸஸ் அது 3·15 கோடிக்கும் அதிகம் எனக் காட்டியது, அவர்களில் 2·3 கோடி 'நிலமற்றவர்'களென 1931-ல் இந்திய வாக்குரிமைக் கமிட்டி மதிப்பிட்டது, அதே சமயம் விவசாயமல்லாத துறைத் தொழிலாளர்களின் தொகை 2·5 கோடி என்பது இந்திய வாக்குரிமைக் கமிட்டியின் மதிப்பீடு. ஆகையால், இந்தியா முழுவதிலும் எல்லாத் தொழில்களிலும் ஈடுபட்டுள்ள 15·4 கோடி பேர்களில் சுமார் 5·65 கோடி பேர்கள் ஊதியம் ஈட்டும் தொழிலாளர்கள் உள்ளனர், அல்லது, வேறுவிதமாய்ச் சொன்னால் எல்லாத் தொழில்களிலும் ஈடுபட்டுள்ள மக்களில் 36 சதவீதத்தினருக்குமேல் கூலி வேலையை ஜீவனோபாயமாய் நம்பியிருப்பவர்கள்.

(அனைத்து நாடுகள் தொழிலாளர் ஸ்தாபன அறிக்கை, 1938, ''இந்தியாவில் தொழில்துறைத் தொழிலாளர்'', பக். 30.)

நவீன, அல்லது சிறியது அல்லாத, தொழில்துறைப் பாட்டாளிகள் என்ற குறுகிய பொருளில், பத்து அல்லது அதற்கு மேற்பட்ட தொழிலாளர்கள் பணியாற்றும் ஸ்தாபனங்களில் வேலை செய்வோர் தொகை 26லட்சத்தை எட்டியது என்று 1921, தொழில் துறை சென்ஸஸ் கூறுகிறது. அதற்குப்பின், தொழில் துறை சென்ஸஸ் இல்லை; ஆனால் மேலே குறிப்பிட்ட 1931 சென்ஸஸ் அத்தொகை 35லட்சம் என்று கொள்ள விரும்புகிறது. பட்டறைச் சட்ட நிர்வாகத்தினரின் பதிவுருக்கள் மட்டுமே சரியானவை; சமீபத்து 1934 பட்டறைச் சட்டம் இருபது அல்லது அதற்கு மேற்பட்ட தொழிலாளர்களுள்ள வலனியக்கிப் பட்டறைகளையும்,

சில விஷயங்களில் பத்து, அதற்கு மேற்பட்டோர் வேலை செய்யும் பட்டறைகளையும் கணக்கெடுக்கிறது: 1938 இல் மொத்தம் 1,737,755 தொழிலாளர்கள். இவர்களோடு, இந்திய சமஸ்தானங்களின் "பெரிய தொழில் துறை நிறுவனங்களில்" வேலை செய்வதாய் அறிவிக்கப்பட்ட 299,003 தொழிலாளர்களைச் சேர்க்கவேண்டும்; ஆக இந்தியாவில் நவீன பெருவாரித் தொழில் துறையிலுள்ள தொழிலாளர்களின் மொத்தத்தொகை 2,036,758.

இதை அடிப்படையாய்க் கொண்டு, பின்வரும் முடிவு காண்கிறோம்:

| | | |
|---|---|---|
| தொழிற்சாலைத் தொழிலாளர்கள், நடுத்தர அல்லது பெரிய தொழிற்சாலைகளில் (மேற்கண்ட அடிப்படையில்) | .. | 2,036,758 |
| சுரங்கத் தொழிலாளர்கள் | .. | 413,458 |
| ரயில்வேத் தொழிலாளர்கள் | .. | 701,307 |
| தண்ணீர்ப் போக்குவரத்துத் தொழிலாளர்கள் (கப்பல் செப்பனிடுவோர், ஓட்டுவோர்)[1] | .. | 361,000 |
| மேற்கண்ட தொகுதிகளின் கூடுதல் | .. | 3,512,523 |

இந்த 35லட்சம் பேர்களே, இன்றைய இந்தியாவின் நவீன பெருவாரித் தொழில்துறையின் பாட்டாளி வர்க்கத்து உமி நீக்கிய தானியம் போன்றவர்கள். சிறு தொழிலிலுள்ள எல்லா தொழிலாளர்களும் இத்தொகையில் சேர்க்கப்படவில்லை (பத்துக்கும் குறைவான ஸ்தாபனம் சிறு தொழில் ஸ்தாபனம்); வலவியக்கி யந்திரமில்லாத பெரிய தொழிற்சாலைகளில் வேலை செய்வோரும் (உதாரணமாக, சிகரெட் செய்யும் தொழிலில் சில இடங்களில் 50 பேருக்கு மேல் வேலை செய்கிறார்கள்)சேர்க்கப்படவில்லை. அமைப்பு பெற்ற தொழிலாளர் இயக்கத்துக்கு எவ்வளவு வலிமை சேரும் என்ற நோக்கில், (காபி,தேயிலை) தோட்டங்களில் உள்ள 10 லட்சத்துக்கு மேற்பட்ட தொழிலாளர்களைச் சேர்க்க வேண்டும்; இவர்கள் முற்றிலும் பெருவாரித் தொழில்களில் மிக விஞ்ஞான பூர்வமாக அடிமைப்படுத்தும் சூழலில் பாடுபடுவோர்; அமைப்பு பெறாமல் தனித்து ஒடுக்கப்பட்ட நிலையில் இருப்பினும், கொந்தளிப்புக் காலங்களில் இவர்கள் உயர்ந்த அளவு போராட்டத் தன்மையை முன்பே காட்டியுள்ளனர்; இவர்களோடு,சிறு தொழிலிலும், ஒழுங்குபடுத்தப்படாத பெரிய தொழிலிலும் வேலைசெய்வோரில் ஒரு பகுதியினரையும் சேர்க்க வேண்டும். இந்தியத்

1. 1935 விவரம்.

தொழிலாளர்களின் உடனடியாக பயன்படுமுறையில் அமைப்புப் பெறக்கூடியவர்கள் தொகை நிச்சயமாக 50 லட்சம் இருக்கும்.

தொழிற்சாலைச் சட்டங்களின் புள்ளி விவரங்களில் தொழில் துறைப் பாட்டாளி வர்க்கத்தின் வளர்ச்சி காணப்படுகிறது (எந்த அளவுக்குச் சட்டங்கள் விரிவாக்கப்பட்டுள்ளன என்பதை யும் பிரதிபலிக்கிறது):

| | தொழிற்சாலைகளின் எண்ணிக்கை | வேலைக்கு ஏற்கப்படுவோரின் தினசரி சராசரி எண்ணிக்கை |
|---|---|---|
| 1894 | 815 | 349,810 |
| 1902 | 1,533 | 541,634 |
| 1914 | 2,936 | 950,973 |
| 1918 | 3,436 | 1,122,922 |
| 1922 | 5,144 | 1,361,002 |
| 1926 | 7,251 | 1,518,391 |
| 1930 | 8,148 | 1,528,302 |
| 1935 | 8,831 | 1,610,932 |
| 1936 | 9,323 | 1,652,147 |
| 1938 | 9,743 | 1,737,755 |
| 1939 | 10,466 | 1,751,137 |
| 1943 | 13,209 | 2,436,310 |
| 1944 | 14,071 | 2,522,753 |

## 2. தொழிலாளர் வர்க்கத்தின் நிலைமைகள்

இந்தியத் தொழிலாளர் வர்க்கத்தின் நிலைமைகள் பற்றி இரண்டாம் அத்தியாயத்தில் பொதுவானதொரு சித்திரம் தீட்டிக் காட்டியிருக்கிறோம். இந்தியாவுக்கு வந்த பிரிட்டிஷ் தொழிற் சங்கக் காங்கிரஸ் தூதுகோஷ்டி 1928 இல் வெளியிட்ட அறிக்கை யில் கண்டுள்ள முடிவுகளை நினைவுபடுத்திக் கொள்வதால் பயன் தருவதாயிருக்கும்:

"இந்தியத் தொழிலாளர்களில் மிகப் பெரும்பாலோர் நாள் ஒன்றுக்கு சுமார் 1 ஷில்லிங்குக்கு மேல் பெறுவதில்லை என்று எல்லா விசாரணைகளும் காட்டுகின்றன. வங்காள மாகாணத்தில் தொழில்துறைத் தொழிலாளர்கள் மிகஅதிகம்; அவர்களில் 60 சதவீதத்தினர் ஒரு நாளுக்கு அதிகபட்ச மாக 1 ஷில்லிங்கு 2 பென்சுக்கு மேல் கூலி வாங்குவதில்லை என்றும், படிப்படியாய் குறைந்து ஆண்களுக்கு 7 லிருந்து 9 ஷில்லிங்கு, குழந்தைகள், பெண்மணிகளுக்கு 3 லிருந்து 7

பென்ஸ் கூலி என்ற கீழ்மட்டத்துக்குப் போகிறது என்றும் தங்களால் உறுதிப் படுத்திக்கொள்ள முடிந்தது என ஆய்வாளர்கள் உரைக்கின்றனர்.....எங்களுடைய சொந்த விசாரணைகளும் அந்தத் தகவலை ஆதரிப்பதாக உள்ளன. நாளுக்கு, பெண்களுக்கு 3½ பென்சும், ஆண்களுக்கு 7 பென்சும் அதற்கும் குறைவாகவும் கீழ்மட்டக் கூலி அமுலிலிருக்கும் பல தகவல்களை உண்மையில் நாங்கள் கேள்விப்படமாட்டோம்.''

(ஏ.ஏ. பர்செலும் ஜே. ஹெயில்ஸ்வொர்த்தும், ''இந்தியத் தொழிலாளர்களின் நிலைமைகள் பற்றின அறிக்கை'', தொழிற்சங்கக் காங்கிரஸ், 1928, பக். 10.)

அதே தூது கோஷ்டி தொழிலாளர்களின் குடியிருப்பு நிலைமை பற்றிப் பின்வருமாறு அறிவித்தது:

''நாங்கள் எங்கு தங்கினாலும் அங்குள்ள தொழிலாளர் வாசஸ்தலங்களைப் பார்வையிட்டோம்; நாங்கள் அவற்றை நேரில் பார்த்திராவிட்டால், இவ்வளவு கொடிய இடங்கள் இருக்கும் என்று நம்பி இருக்க மாட்டோம்....இங்கு ஒரு தொகுதி வீடுகளின் ''வரிசைகள்'' இருக்கின்றன; அவற்றின் சொந்தக்காரர் குடியிருப்பவரிடம் ஒரு குடியிருப்புக்கு ஒரு மாதத்துக்கு 4ஷில். 6 பெ. வாடகை வாங்குகிறார். ஒவ்வொரு வீட்டிலும், வாசம், சமையல், படுக்கை ஆகிய எல்லா வேலைகளுக்கும் பயன்படும் ஓர் இருண்ட அறை, 9 அடி நீளம் 9 அடி அகலம், மண் சுவர்கள், தளர்த்தியாக ஓடு வேய்ந்த கூரை, வீட்டுக்கு முன்னால் ஒரு காம்பவுண்டுச் சுவர், அங்கொரு மூலை கக்கூசாக உபயோகப்படுத்தப்படுகிறது. கூரை சிதைந்தோ, கதவு திறந்திருக்கும்போதோ காற்று வருவதையன்றி, வேறு காற்றோட்ட வசதியே கிடையாது. குடியிருப்புக்கு வெளியே ஒரு நீண்ட, குறுகிய கால்வாய்; அது எல்லாவகைக் கழிவுப் பொருள்களையும் ஏற்கிறது; ஈக்களும் வேறு பூச்சி புழுக்களும் அங்கு மொய்க்கின்றன. எல்லா வீடுகளுக்கும் வெளியே, 'வரிசைகளுக்கு' இடையில் ஒவ்வொரு பக்கத்துக் கோடியிலும் உள்ள துண்டு நிலத்தில் திறந்து கிடக்கும் சாக்கடைகள்; சில இடங்களில் குப்பையும் மலமும் மற்ற கழிவுப் பொருள்களும் அடைத்துக்கொண்டு மிக அருவருக்கத்தக்கவகையில் நாறுகிறது. இந்தச் சாக்கடைகள் 'அவசரத்துக்கும்'— குறிப்பாக, குழந்தைகளுக்கு—உபயோகப் படுகின்றன என்பது வெளிப்படை. ''எங்கு பார்த்தாலும் கூட்ட நெரிசல், ஆரோக்கிய விதிகளுக்கு ஒவ்வாத நிலை— இவற்றையெல்லாம் பார்க்கும்போது சம்பந்தப்பட்ட அதி

காரிகளின் கொடுங் குணமும், தங்கள் தெளிவான கடமைகளை மனமறிந்தே செய்யாமலிருக்கும் அலட்சியப் புத்தியும் தெள்வாய்ப் புலப்படுகின்றன.

(மேற்படி நூல், பக்.8-9.)

இந்த அறிக்கை பதினொரு ஆண்டுகளுக்கு முன்னே வெளியிடப்பட்டது. அதற்கப்பால் பிரிட்டிஷ் தொழிற்சங்கக் காங்கிரஸ் இந்தியாவுக்குத் தூது கோஷ்டி ஒன்றும் அனுப்பவில்லை.

இன்னும் சற்று அண்மைக்காலத்தில் இந்த நிலைமைகளில் சிறிதும் மாறுதல் ஏற்படவில்லை என்பதை, அல்லது, முன்னைவிட நிலைமைகள் இழிந்துள்ளன என்பதை காட்டுவதற்காக, 1938இல் ஜெனிவாவில் அனைத்து நாடுகள் தொழிலாளர் மகாநாட்டில் இந்தியத் தொழிலாளர்களின் பிரதிநிதி எஸ்.வி. பருலேகர் தந்த அறிக்கையைப் பார்க்கலாம்:

"இந்தியத் தொழிலாளர்களில் மிகப் பெரும்பாலோர், வாழ்க்கையின் மிகக் கடைப்பட்ட தேவைகளையும் பெறமுடியாத அளவு கூலி வாங்குகிறார்கள். 1921 இல் திரு. பின்லே ஹிர்ராஸ் பம்பாய்த் தொழிலாளர் வர்க்கத்தினரின் வரவு செலவு திட்டங்களைப் பற்றி ஆய்வு செய்து வெளியிட்ட அறிக்கையில், பஞ்சகாலச் சட்டம் அனுமதிக்கும் உயர்ந்த பட்ச அளவுத் தானியங்களைத் தொழில்துறைத் தொழிலாளர் உண்கிறார், ஆனால், பம்பாய் சிறைகள் சட்ட விதிகளின்படி சிறையிலுள்ள குற்றவாளிகளுக்குத் தரப்படும் உணவைவிடக் குறைவாக உணகிறார் என்று குறிப்பிடுகிறார். அந்த அறிக்கை வெளியானபின் நிலைமைகள் மேலும் மோசமாகியுள்ளன ஏனெனில் 1921ஐ விட இப்போது சம்பாத்தியம் குறைவு.

"1935இல் பம்பாய் அரசாங்கம் நடத்திய ஊதிய சென்ஸஸ் பின்வரும் உண்மையை வெளியிடுகிறது: பருத்தி ஆடைத் தொழில் மிக முதன்மையானதும் அமைப்பு பெற்றதுமாகும்; கோகாக்கிலுள்ள தொழிலாளர்களில் 18 சதவீதத்தினரின் மாதவருவாய் 3ஷில்லிங்கு முதல் 9ஷில்லிங்கு வரை, ஷோலாபூர் தொழிலாளர்களில் 32 சதவீதத்தினருக்கு 7 ஷில்.6 பென்ஸுக்கும் 15 ஷில்லிங்குக்கும் இடையில், 20 சதவீதம் தொழிலாளர்களுக்கு 22 ஷிலலிங்கு 6 பென்சுக்கும் கீழ், 32 சதவீதத்தினருக்கு 22ஷில். 6 பென்சுக்கும் 30 ஷில்லிங்குக்கும் இடையில், பம்பாய் நகரத்தில்.

"இந்தியாவில் மிகுதியாகவுள்ள அமைப்பு பெறாத தொழிற்சாலைகளில் தரப்படும் ஊதிய அளவைக் கற்பனையில்

தான் காணலாமேயன்றி வருணித்து இயலாது. நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்ட உழவர்கள் எண்ணிக்கை தாவுவேகத்தில் பெருகுவதைப் பயன்படுத்திக் கொண்டு, தொழிலதிபர்கள் பிழைப்பளவுக்கும் கீழ்ப்பட்ட ஊதியம் தருவதுடன், தொழில் நிலைமைக்கு ஏற்ப அது உயர அனுமதிப்பதில்லை ...

"இந்தியத் தொழிலாளர்களுக்கு நோய், வேலையின்மை, வயோதிகம், சாவு ஆகிய அபாயங்களுக்குப் பாதுகாப்பில்லை. ....வேலையற்றோருக்கு நலம் பயக்கும் திட்டம் எதையும் உருவாக்க இந்திய அரசினர் தொடர்ந்து மறுத்து வருகின்றனர்....வேலையின்மையிலிருந்து தப்பத் தொழிலாளர்கள் தற்கொலை செய்துகொள்வதாய்த் தெரிகிறது; பட்டினிச் சாவுகள் பற்றி, பம்பாய் நகராட்சி அறிக்கைகள் குறிப்பிடுகின்றன.

"1931 சென்ஸஸ் அறிக்கையில், இந்தியாவிலேயே மிகத் தொழில் மயமான நகரமான பம்பாயில் குடியிருப்பு நிலைமைகள் எந்த நாகரிகமான சமுதாயத்துக்கும் அவமானகரமானது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. பம்பாய் நகரத்தின் தொழிலாளர் குடும்பங்களில் 95 சதவீதத்தினர் ஓரறைக் குடியிருப்புக்களில் வசிக்கின்றனர், இக்குடியிருப்புகளின் அளவு 110 சதுர அடிகள். பம்பாயில் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் நடை பாதைகளிலேயே வீட்டுப் பாதுகாப்புக் காண்கிறார்கள்.

"1934—35இல் பம்பாயில் ஓராயிரம் குழந்தைப் பிறப்புகளுக்கு எத்தனை மரணங்கள் என்பதைப் பின்வரும் அட்டவணை காட்டுகிறது; தொழிலாளர் வகுப்பினருக்கும் மற்ற வகுப்பினருக்கும் இடையில் காணப்படும் மரண வேற்றுமை மலைப்பூட்டுவதாயுள்ளது:

| | | |
|---|---|---|
| ஓர் அறையும் அதற்கு கீழும் | .. | 524·0 |
| 2 அறைகள் | .. | 394·5 |
| 3 அறைகள் | .. | 255·4 |
| 4 அறைகளும் அதற்கு மேலும் | .. | 246·5 |

அதற்குப் பின் நிலைமைகளில் யாதொரு முன்னேற்றமும் ஏற்பட்டு விடவில்லை.

தொழிலாளர்கள் தங்களுடைய சக்திக்கு மீறி வாடகை தராமல் ஆரோக்கியமான வீடுகளில் வசிக்கவும், அவர்

களுடைய சாவு வீதத்தைப்பரிசீலித்து, தொழிலாளர் வகுப்புக் குழந்தைகள்—நான் கடுமையான ஆனால் மிகப் பொருத்தமான சொல்லை உபயோகப்படுத்தட்டுமா?—படுகொலை ஆகாது தடுக்கவும் அரசாங்கம் ஏதும் செய்யவில்லை.''

(எஸ். வி. பருலேகரின் சொற்பொழிவு 1938 ஜூலையில் ஜெனீவாவில் நடைபெற்ற அனைத்து நாடுகள் மகா நாட்டில் இந்தியத் தொழிலாளர்களின் பிரதிநிதி என்ற முறையில் பேசியது.)

இந்தியத் தொழிலில் ஊதிய அளவுகளையும் ஊதிய ஏற்றத் தாழ்வுகளையும் பற்றின முழுமையான பொது ஆய்வை, 1921இல் வெளியான விட்லி கமிஷன் அறிக்கையைத் தவிர, டி.எச். புகானன் எழுதிய ''இந்தியாவில் முதலாளித்துவத் தொழில் வளர்ச்சி'' (1934), என்ற நூலில் அத்தியாயம் பதினைந்து, 317-60 பக்கங்களில் காணலாம். ''1860 க்கும் 1890 க்கும் இடையில் இந்தியத் தொழிற்சாலைக்கைகளின் உண்மையான வருமானத்தில் யாதொரு மாறுதலும் ஏற்பட்டதாய்த் தோன்றவில்லை'' என்றும்; 1890 க்கும் 1914 க்கும் இடையில் ''விலைகள் கடுமையாக ஏறின, ஊதியமும் பின் தொடர்ந்தது. மெதுவாக,'' என்றும்; ''போர்க்கால விலையேற்றத்தோடு, ஊதியங்கள் பல்லாண்டுகள் பின்தங்கி இருந்தன, பிறகு கூர்மையாக ஏறின, ஆனால் சமமாக அல்ல, சில இடங்களில் உயர்ந்த விலைகளுக்குச் சரிசமமாக இருந்தன'' என்றும் அந்த ஆசிரியர் முடிவு காண்கிறார். எனவே, 1914-18 போர் முடிவு வரை உண்மையான ஊதிய அளவுகளில் யாதொரு முன்னேற்றமும் ஏற்படவில்லை; ஏற்பட்டதாயின் அது இறக்கம்தான். அதை அடுத்த கால கட்டத்தில் தான் ஒரு மாறுதல் நிகழ்ந்தது. ''போர்க்கால முதல் பல ஊதிய சச்சரவுகள் ஏற்பட்டுள்ளன; சில சிறு பிற் சரிவுகள் இருப்பினும் குறிப்பிடத்தக்க முன்னேற்றங்களும் ஏற்பட்டுள்ளன.'' ''சில தொழில்களில், குறிப்பாக, பம்பாய் பருத்தியாடை உற்பத்தியில், வாழ்க்கைச் செலவைவிட ஊதியங்கள் மிக உயர்ந்துவிட்டன; சமீப ஆண்டுகளில் கூட, விலைகள் மிகவும் குறைந்திருந்தும், ஊதியங்கள் நிலையாகவே இருக்கின்றன. தொழிலாளர்கள் போதுமான அளவு விழிப்பு கொண்டுவிட்டார்கள்; ஊதியக் குறைப்பை மிகவும் சிரமமாக்கி விட்டார்கள்.'' பொருளாதார மந்தம் பலத்த நஷ்டங்களை உண்டாக்கியது, ஊதிய வெட்டு, யந்திர மாற்றம், வேலை இன்மை, வேலைநேரக் குறைப்பு—வாயிலாக, ஆயினும், உண்மையான ஊதியங்களில் கிடைத்த சில ஆதாயங்

கள் நீடித்தன. போருக்கு முந்தின காலகட்டத்தில் புதிய முன்னேற்றங்கள் வெல்லப்பட்டன: 1938 இல், கான்பூர் துணியாலை வேலை நிறுத்த வெற்றி ஓர் உதாரணம். ஆகவே, இந்தியத் தொழில் துறைத் தொழிலாளர்களின் உண்மையான ஊதியங்களில் ஏற்பட்ட முன்னேற்றங்கள், தொழிற்சங்க இயக்கத்தின் வளர்ச்சியையும் செயலையும் அடுத்திருந்தன என்பதையும், தொழிற்சங்க இயக்கம் இருந்த இடத்தையும் வலிமையையும் பொருத்திருந்தன என்பதையும் காணலாம். ஆனால், மிகப் பின்தங்கிய தொழிலாளர்களில் பெரும் பகுதியினர் சிறிதும் பயன் பெறவில்லை.

இந்தியாவில் பொதுவான ஊதியப் புள்ளி விவரங்கள் இல்லை; ஒரே தொழில் கேந்திரத்தில், ஒரே மாதிரி வேலைகளுக்கு, ஒரே மாதிரி ஊதிய வீதம் கிடையாது. தொழிலாளர் நஷ்ட ஈட்டுச் சட்டத்தின் கீழ் நடந்த வழக்குகளின் விவரங்களிலிருந்து தொழில் துறையைச் சேர்ந்த அரைத் திறமை வாய்ந்த தொழிலாளர்களின் சராசரி ஊதிய விவரங்கள் தெரிய வருகின்றன. 1925-29, ஆகிய ஐந்தாண்டுகளில் நடந்த இவ்வழக்குகளை விட்லி கமிஷன் அறிக்கை ஆய்வு செய்கிறது. இந்த வழக்கு விவரங்களில் திறமையற்ற தொழிலாளர்களும், மிகக்குறைந்த ஊதியம் வாங்குவோரும் சேரமாட்டார்கள்; அவர்கள் முற்றிலும் ஆதரவற்றவர்கள்; நஷ்ட ஈடு கோர ஒரு சட்டம் உண்டு என்பதையே அறியாதவர்கள். அப்படி இருக்க, சாதகமான இந்தத் தகவல்கள் ''அமைப்பு பெற்ற தொழில் அரைத்திறமை பெற்ற தொழிலாளர்களின் ஊதிய அளவுகளின் பொதுவான நிலைமையை'' (அமைப்பு பெறாத தொழிலிலுள்ள குழந்தைகளை நீக்கிவிட்டு, திறமையற்ற தொழிலாளர்களை மிக இழிவான ஊதியம் வாங்கும் தொழிலாளர்களை நீக்கிவிட்டு) பிரதிபலிப்பதாய் அதிகார பூர்வமாய் அறிவிக்கப் படுவதிலிருந்து போதுமான பொருள் பொதிந்த ஒரு சித்திரம் உருக்கொள்கிறது. இந்தியர் களல்லாத வாசகர்களுக்கு அதன் முக்கியத்துவம் புரியும் வகையில் நாம் ஒரு ரூபாய்க்கு 1 ஷில்லிங்கு 6 பென்சு என்ற அடிப்படையில் ரூபாய் எண்களை ஆங்கிலேய நாணயத்தில் மாற்றி எழுதியதோடு, மாதத்திற்கு 4½ வாரங்கள் என்ற கணக்கில் மாத மொத்தங்களையும் வார ஊதிய எண்களாக மாற்றித் தந்துள்ளோம். இம் மாதிரிக் கணக்கினால் பின்வரும் சித்திரம் உருவாகிறது.

அமைப்புப் பெற்ற தொழிலில், வயதுவந்த அரைத் திறமைபெற்ற தொழிலாளர்களின் சராசரி வருவாய்கள்

| | வார வருவாயின் சதவீதம் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 4ஷி. 6பெ. கீழ் | 4ஷி. 6பெ. முதல் 6ஷி. வரை | 6ஷி. முதல் 7ஷி. 9பெ. வரை | 7ஷி. 2பெ. முதல் 9ஷி. 6பெ. வரை | 9ஷி. 6பெ. முதல் 11ஷி. 3பெ. வரை | 11ஷி. 3பெ. அதற்கு மேலும் |
| ஐக்கிய மாகாணங்கள் | 26 | 27 | 15 | 9 | 7 | 16 |
| சென்னை | 22 | 25 | 19 | 15 | 4 | 15 |
| மத்திய மாகாணங்கள் | 18 | 38 | 17 | 8 | 4 | 15 |
| பீகார், ஒரிஸ்ஸா | 21 | 24 | 21 | 12 | 8 | 14 |
| வங்காளம் | 13 | 18 | 18 | 15 | 10 | 26 |
| பம்பாய் | 3 | 10 | 19 | 23 | 13 | 32 |

(இந்தியத் தொழிலாளர் பற்றி விட்லி கமிஷன் அறிக்கை, பக். 204, அட்டவணை; மேலே கூறிய அடிப்படையில் ஆங்கிலேய நாணயமாக மாற்றி எழுதப்பட்டது.)

எனவே, ஐக்கிய மாகாணங்களில் வயதுவந்த, அரைத் திறமை பெற்ற தொழிலாளர்களில் நாலில் ஒரு பகுதியினர் வாரத்திற்கு 4 ஷி. 6 பெ. கீழும், பாதிக்கு மேற்பட்டோர் வாரத்திற்கு 6 ஷி. க்குக் கீழும் ஈட்டுகின்றனர்; மத்திய மாகாணங்களில் பாதிக்கு மேற்பட்டோரும், சென்னையிலும் பீகார்-ஒரிஸ்ஸா விலும் ஏறக்குறையப் பாதிபேர்களும் வாரத்திற்கு 6 ஷி. க்குக் குறைவாக ஈட்டுகின்றனர்; வங்காளத்தில் பாதிப்பேர் 7 ஷி. 9 பெ. க்குக் கீழ்; மிக உயர்ந்த வாழ்க்கைச் செலவுள்ள பம்பா யிலும் பாதிக்கு மேற்பட்டோர் வாரத்துக்கு 9ஷி. 6பெ. க்குக் கீழ் ஈட்டுகின்றனர்.

ஓரளவு நன்றாகவுள்ள தொழிலாளர்கள் பற்றின சாதகமான தகவல்கள் இவை, எல்லாத் தொழிலாளர்களுக்கும் பொதுவான தகவல்கள் அல்ல. அண்மையாண்டுகளில், மாகாணத் தொழி லாளர் துறைகளின் கீழ், தொழிலாளர் வகுப்பினரின் குடும்பப் பட்ஜெட்களைப் பற்றித் தொடர்ச்சியாக விசாரணைகள் நடந் துள்ளன, பம்பாயைப் பற்றின முடிவுகள் 1935 இலும்(விசாரணை 1932-33 ஆண்டு பற்றியது). ஆமதாபாத் முடிவுகள் 1937இலும்

சென்னை முடிவுகள் 1938 இலும் வெளியிடப்பட்டுள்ளன; இதற்கு முன்பே 1928 இல், ஷோலாப்பூரில் 1925 ஆம் ஆண்டு விசாரணை பற்றிய முடிவுகள் வெளியாகியுள்ளன.

விசாரணை முடிவுகளிலிருந்து, பம்பாயில் சராசரி குடும்ப வருவாய் (தனிநபர் வருவாயல்ல) மாதம் 1க்கு ரூ.50, அல்லது வாரம் 1க்கு 17ஷி.4.பெ என்றும், ஆமதாபாதில் மாதத்துக்கு ரூ. 46 அல்லது வாரத்துக்கு 15ஷி. 11பெ.ம். ஷோலாபூரில் மாதம் ரூ.40 அல்லது வாரம் 13ஷி. 10. பெ. ம், சென்னையில் மாதம் ரூ.37 அல்லது வாரம் 12ஷி 10. பெ. அமைப்பு பெற்ற தொழில்களில், மாதம் ரூ.20 முதல் ரூ.27 வரை அல்லது வாரம் 7ஷி. முதல் 9ஷி.3 பெ.வரை அமைப்பு பெறாத தொழில்களில் என்றும் தெரிகிறது. சராசரிக் குடும்பத்தில் (பம்பாய், ஆமதாபாத், ஷோலாப்பூர் விசாரணைகளின் படி) 4 பேர் அடங்குவர், அவர்களில் ஒன்றரை அல்லது இரண்டு பேர் சம்பாதிப்பவர்கள். மேலே குறிப்பிட்ட எண்ணிக்கைகளில் மூன்றில் ஒரு பகுதியிலிருந்து பாதி வரை கழித்தால் தனிநபர் வருமானத்தைக் கணக்கிடலாம். இந்தக் கணக்குப்படி, பம்பாயில் சராசரி வார ஊதியம் 9ஷி. 10 பெ.ம், ஆமதாபாதில் 9 ஷி. 1 பெ.ம். ஷோலாப்பூரில் 7ஷி. 11 பெ.ம். சென்னையில் அமைப்பு பெற்ற தொழிலாளர்களுக்கு 7ஷி. 4 பெ.ம். அமைப்புபெறாத தொழிலாளர்களுக்கு 4ஷி. முதல் 5 ஷி. 3. பெ. வரையிலும் என்று ஏற்படுகிறது.

தரகுகள், அபராதங்கள் முதலாளுக்கு வழக்கமான லஞ்சம் போன்ற பல கழிப்புகளும், கொடுமையான வட்டி வீதத்தில் கனமான கடன் சுமையும் (பெரும்பாலோருக்கு மாத இறுதியில் சம்பளம் தருவது வழக்கம்; சிலர் மட்டும் இரண்டு வாரங்களுக்கு ஒருமுறை சாதகமான முறையில் சம்பளம் பெறுகின்றனர். மாதம் முடிந்தும் 10, 15 நாள் கழித்து சம்பளம் தருவதன் வாயிலாகத் தொழிலாளர்களிடமிருந்து 6 வார நாணயத்தைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். இந்த நிலையில் தொழிலாளர்கள் கட்டாயம் கடன் வாங்க நேருகிறது) மெய்யளவிலுள்ள ஊதிய எண்ணிக்கையை மிகவும் குறைத்துவிடும் என்பதை ஏற்க வேண்டியது அவசியம். ''தொழில் நிறுவனங்கள், மிகுதியாகவுள்ள இடங்களில் கடன்பட்டுள்ள குடும்பங்கள் அல்லது தனிநபர்களின் அளவு, மொத்தத்தில் மூன்றில் இரண்டு பங்குக்குக் குறைந்ததல்ல,'' என்று விட்லி கமிஷன் அறிக்கை மதிப்பிட்டது: ''பெரும்பாலான கடன்கள் மூன்றுமாத ஊதியத்துக்குமேல், பெரும்பாலும் அதற்கும் மிக அதிகமாக இருக்கிறது,'' என்றும் அவ்வறிக்கை கூறுகிறது. பின்நடந்த விசாரணைகளிலிருந்து மூன்றில் இருபங்கு என்பது குறைவான மதிப்பீடு என்று தெரிகிறது. மேலே குறிப்பிட்ட

பம்பாய் விசாரணைப்படி, 75 சதவீதக் குடும்பங்கள் கடன்பட்டிருந்தது தெரிந்தது. சென்னை அறிக்கைப்படி, அமைப்பு பெற்ற தொழில்களில் 90 சதவீதக் குடும்பங்கள் 6 மாத ஊதியத்தின் அளவு கடன் பட்டிருந்தனர்.

கப்பல் பட்டறைத் தொழிலாளர்கள் சம்பளமும் மிகக் குறைவு. கொச்சின் கப்பல் பட்டறையில் ரீஜ் கமிட்டி (1946) செய்த ஆய்வுப்படி, மொத்தத் தொழிலாளர்களில் $30\frac{1}{2}$ சதவீதத்தினர் நாளுக்கு ரூ. 1க்குக் குறைவாகவும், 68 சதவீதத்தினர் ரூ. 1 முதல் ரூ. 2 வரையிலும் சம்பளம் வாங்குகின்றனர். சிந்தியா கப்பல் தளத்தில் 82 சதவீதத்தினர் ரூ. 1க்கும் குறைவாக வாங்குகின்றனர்.

சுரங்கத் தொழிலாளர்கள் சிறப்பான குறைந்த ஊதியம் வாங்குவோர்; அவர்களுடைய ஊதியம் சமீப வருடங்களில் வெட்டுக்குட்பட்டது. இந்திய நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை பார்ப்போரில் ஐந்தில் 4 பங்கினர், ராணிகஞ்ச், ஜாரியா நிலக்கரி வயல்களில் வேலை செய்கின்றனர். ராணிகஞ்ச் நிலக்கரிப் பிரதேசத்தில் 1914க்கு முன் சுரங்கத் தொழிலாளர்களுக்கு ஒரு நாளுக்கு 6 அணு அல்லது 6 பெ. சம்பளம்; போருக்குப் பிறகு அவை ஏறி, 1929 இல் 13 அணு அல்லது 1ஷி. 2பெ. ஆயிற்று; 1936 இல் நாளுக்கு $7\frac{1}{4}$ அணு அல்லது 8 பெ. ஆயிற்று. நிலக்கரிக்கனி மேலாளர் தேசீயச் சங்கத்தலைவர் 1937, பிப்ரவரியில், ''தொழிலாளர்களின் ஊதியம் மிக மோசமாய்க் குறைவு'' என்று சொல்ல வேண்டிய நிலை. இந்தியாவின் சுரங்கத் தொழிலாளரின் சராசரி நிலக்கரி ஆண்டு உற்பத்தி, தரைக்கு மேலும் கீழும் 131 டன்கள்; ஜப்பானில் 207 டன்கள், பிரிட்டனில் 298டன்கள், அமெரிக்காவில் 671 டன்கள்.

தோட்டத் தொழிலாளர்கள் (காபி, தேயிலை) நிலைமைகளோ அடிமட்டம். ''அஸ்ஸாம் பள்ளத்தாக்கு தேயிலைத் தோட்டங்களில் (இந்தியாவில் உற்பத்தியாகும் தேயிலையில் பெரும்பகுதி அஸ்ஸாமிலும், வங்காளத்திலும் உற்பத்தி ஆகின்றது), அங்கேயே வசிக்கும் ஆண் தொழிலாளர்களின் சராசரி மாத வருவாய் சுமார் ரூ. 7-13 அணு, பெண்மணிகள், குழந்தைகளுக்கு சுமார் ரூ. 5-14 அணுவும், ரூ. 4-4 அணுவும் முறையாக.'' (சிவராவ்: ''இந்தியாவின் தொழில்துறைத் தொழிலாளர்,'' 1939, பக். 128.) இது, ஆண்களுக்கு 2ஷி. 8. பெ. வாரத்துக்கு, பெண்களுக்கு வாரம் 2ஷி. குழந்தைகளுக்கு வாரம் 1ஷி. $5\frac{1}{2}$ பெ.க்குச் சமம். ''இலவச'' வீட்டுவசதி, மருத்துவ சிகிச்சை, முதலிய சலுகைகள் அவர்கள் அடிமை நிலையில் இருப்பதையே காட்டுகின்றன. சூர்மா பள்ளத்தாக்கில் சம்பளம் இன்னும் குறைவு. அஸ்ஸாம் பள்ளத்தாக்கில்

இருப்பதைவிட, சூர்மா பள்ளத்தாக்கில் மாதச் சம்பளம் ரூ. 2 குறைவு என்று ரீஜ் கமிட்டி கூறுகிறது. தென்னிந்தியத் தோட்டங்களில் சம்பள வீதங்கள் நாளுக்கு நாலு அணா முதல் ஐந்து அணா ($4\frac{1}{2}$ பெ. முதல் $5\frac{1}{2}$ பெ.) ஆணுக்கும், நாளுக்கு 3 அணா ($3\frac{1}{2}$ பெ.) வுக்கும் குறைவாய்ப் பெண்களுக்குமாய்க் குறைக்கப்பட்டு விட்டன.

இத்தகைய சுரண்டல் முறையால் ஈட்டப்படும் மாபெரும் ஆயுதங்கள் மிக இகழத்தக்கன, முதல் உலகப்போருக்குப்பின் ஏற்பட்ட விலையேற்றத்தில் அவை அசுரத்தனமான அளவை எட்டி விட்டன. இந்தியாவுக்கு வந்த டண்டி சணல் தொழிற்சங்கத் தூது கோஷ்டி 1925 இல் சணல் தொழில் சம்பந்தமாய் வெளியிட்ட அறிக்கையில் உரைக்கிறது:

''சேமநிதிகளையும் ஆதாயங்களையும் கூட்டிப்பார்த்தால், பத்தாண்டுகளில் (1915-1924) பங்குதாரர்களுக்குக் கிடைத்த மொத்த ஆதாயங்கள் மாபெரும் மொத்தத் தொகையான £30 கோடி அல்லது முதலீட்டுத் தொகைக்கு 90 சதவீதம் ஆண்டுதோறும் என்ற அளவை எட்டி விட்டன. இன்று, ஆண்டுக்குச் சராசரி £12-10ஷி. சம்பளம் வாங்கும் 300,000 முதல் 327,000 தொழிலாளர்கள் வேலையில் அமர்த்தப்பட்டுள்ளனர். 300,000 தொழிலாளர்களிடமிருந்து ஈட்டப்பட்ட லாபம் பத்தாண்டுகளில் £ 30 கோடி என்பதன்பொருள், தலைக்கு £1000 என்பதாகும். அதாவது ஒவ்வொரு தொழிலாளரிடமிருந்தும் ஓராண்டுக்கு £100. சராசரி வருடச்சம்பளம் £12-10ஷி. என்பதன் பொருள், சராசரி வருட லாபம், சம்பளப் பட்டிக்கு எட்டு மடங்கு.''

(ட.ஜான்ஸ்டன், ஜே.எப். சைம், ''இந்தியாவில் சுரண்டல்,'' பக். 5-6.)

பருத்தித் தொழில் பற்றி, சுங்கவரி வாரிய ஆய்வுக்குழுவினர் 1927 இல் அறிக்கை வெளியிட்டார்கள்:

''பம்பாய் ஆலைகளின் ஐந்தொகைக் குறிப்புகளை ஒரு பார்வை இட்டால், 1920இல் 42 ஆலைகளைக்கொண்ட 35 கம்பெனிகள் 40 சதவீதமும் அதற்கு மேலும் ஆதாயப்பங்கு (டிவிடெண்ட்) அறிவித்தது; அவற்றில் 14 ஆலைகள் கொண்ட 10 கம்பெனிகள் 100 சதவீதத்துக்கு மேலும், இரண்டு கம்பெனிகள் 200 சதவீதத்துக்கு மேலும் ஆதாயப் பங்கு தந்தன. 1921 இல் அந்த எண்ணிக்கை 47 ஆலைகள் கொண்ட 41 கம்பெனிகளாகியது; அவற்றில் 11 ஆலைகள் கொண்ட 9 கம்பெனிகள் 100 சதவீதமும் அதற்கு மேலும் ஆதாயப்பங்கு தந்தன.''

(இந்தியச் சுங்கவரி வாரியத்தின் அறிக்கை, பருத்தித் துணி ஆய்வு. 1927, தொகுதி I, பக். 83.)

365 சதவீத ஆதாயப்பங்கு கூடத் தரப்பட்டுள்ளது. 1927 இல் நாகபுரியிலுள்ள எம்பிரஸ் ஆலை பொன்விழா கொண்டாடிய போது வெளியிட்ட மலரில் கர்வத்துடன் பெருமை பேசுகிறது:

"முதல் இருபது ஆண்டுகளில் ஆதாயப் பங்குகள் கிட்டத்தட்ட சராசரி 16 சதவீதமும், உலகப்போரை அடுத்து ஏற்பட்ட ஏற்ற காலத்துக்கு முந்தி பங்குதாரர்களுக்குச் சராசரியாக 23 சதவீதமும் அளிக்கப்பட்டுள்ளன. விலை ஏற்ற காலத்தில் 90 சதவீதத்துக்கு மேல் ஆதாயப் பங்கு தருவதற்குப் போதுமான ஆதாயங்கள் கிடைத்தன. 100 சதவீத ஆதாயப்பங்கு தரவேண்டும் என்பது டாடாவின் ஆர்வம். அவருடைய மரண காலம் வரை இத்தொகையை எட்ட முடியவில்லை என்றாலும், அப்பால் நீண்ட காலத்துக்குப்பின் எட்டிவிட்டது என்பதிலிருந்து கம்பெனி தன் நிறுவனரின் மரபுகளை எவ்வளவு வெற்றிகரமாய் பின்பற்றுகிறது என்பது வெளியாகிறது. 1919இல் ஒரு சாதாரணப்பங்கு ரூ.500க்கு ஆதாயப்பங்கு ரூ.350; ஆனால் 1922இல் ஆலை மிக அல்லல்களுக்கு இடையில் வேலை செய்தாலும் ஆதாயப்பங்கு ரூ.525 ஆக மீண்டும் உயர்ந்தது....1923இல் துணித் தொழில் பொருளாதார மந்தத்தாலும் வேலைநிறுத்தத் தொல்லையாலும் பாதிக்கப்பட்டும், ஒவ்வொரு சாதாரண பங்குக்கும் ஆதாயத்தொகையாக ரூ.280 தரப்பட்டது. "போனஸ் பங்குகள் பெற்று அப்பங்குகளுக்கும் அதே அளவு ஆதாயப் பங்குகள் பெற்ற தொடக்ககாலப் பங்குதாரர்கள் 1926இல் தாங்கள் உண்மையில் பெற்ற ஆதாயப்பங்குகள் 488 சதவீதம். "பொதுவாக, 1926 ஜூன் 30 வரை எம்பிரஸ் மில்லின் மொத்த ஆதாயங்கள் ரூ.92,214,527, அதாவது தொடக்ககால சாதாரணப் பங்கு மூலதனத்தைப் போல் 61.47மடங்கு என்பது கவனிக்க வேண்டிய விஷயம்; அதே நாள்வரை சாதரணப் பங்குகளின் ஆதாயப்பங்குகளாய் ரூ.59,431,267 கொடுக்கப்பட்டுள்ளன; அதாவது தொடக்கத்தில் செலுத்திய மூலதனத்துக்கு ஆண்டுக்கு 80.86 சதவீதம் ஆகிறது....ஆகவே ரூ.500 மதிப்புள்ள ஒரு பங்கை எங்கள் கம்பெனியிலிருந்து வாங்கப் பணம் ஒதுக்கிய தொடக்க கால அதிர்ஷ்டசாலிப் பங்குதாரர், இப்போதைய மார்க்கெட் மதிப்பு அடிப்படையில் ரூ.7,838 மதிப்புள்ள 2.05 பங்குகள் இலவசமாய்ப் பெறுகிறார்....ஆதாயப் பங்குகளாய் அது அவருக்கு ரூ.19,810 கொண்டுவந்துள்ளது."

(''எம்பிரஸ் மில்ஸ், நாகபுரி, பொன்விழா, 1877-1927''-பக். 90-95.)

ஆதாயமீட்டும் இந்தப் பொன்னுலகக் கனவு காலவரையறை இல்லாமல் நீடிக்க முடியாது; ஆயினும், உலகப் பொருளாதார நெருக்கடி ஏற்படும்வரை மிகவுயர்ந்த லாபவீதங்கள் தரப்பட்டன. எனவே, மேலே குறிப்பிட்ட எம்பிரஸ்மில்ஸ் 1928 - 1929, 1930 இல் 28, 26,24 சதவீத ஆதாயப்பங்குகள் அறிவித்தன. சணலில் தலையாய கௌரேபூர் மில், (1918 இல் 250 சதவீத ஆதாயப்பங்கு தந்தது) 1927 இல் 100 சதவீதமும், 1928இல் 60 சதவீதமும், 1929இல் 50 சதவீதமும் அளித்தது. நிலக்கரியில், நான்கு பெரிய கம்பெனிகள் 1929இல் 70,55,36,30 சதவீதம் கொடுத்தன. தேயிலையில், இந்தியாவில் பதிவு செய்யப்பட்ட 98 கம்பெனிகள் 1928இல் சராசரி 23 சதவீதமும், 74 கம்பெனிகள் 1929இல் சராசரி 20 சதவீதமும் ஆதாயப்பங்குகளாய்த் தந்தன.

நெருக்கடியும் பொருளாதார மந்தமும் இந்தியத் தொழிலைக் கடுமையாகத் தாக்கின. ஆதாயங்களை நிலைக்கச் செய்வதற்காக, குறிப்பாகத் துணித் தொழிலில், சம்பள வெட்டும் யந்திரச் சீரமைப்பும் போன்ற இரக்கமில்லாத நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. பருத்தியில், 1922-23 இல் 47 லட்சம் அந்தராக இருந்த செல்மானம் 1934-35 இல் 109 லட்சமாக உயர்த்தப்பட்டது; அல்லது, 60 சதவீத ஏற்றம். வேலைக்கு அமர்த்தப் பட்டோரின் தொகை 356,000 விருந்து 414,000த்துக்குத்தான் ஏறியது; அல்லது, 16 சதவீத ஏற்றம். சணலில், மில் செல்மானம் 1922-23இல் 47 லட்சம் பேல்களாக இருந்தது, 1935-36 இல் 60 லட்சமாக உயர்த்தப்பட்டது; அல்லது 28 சதவீத ஏற்றம்; வேலைக்கு அமர்த்தப்பட்டோரின் எண்ணிக்கை 321,000 விருந்து 278,000 க்கு வீழ்ந்தது; அல்லது 13 சதவீத இறக்கம். ரயில்வேக்களில், 1929-30இல் இருந்த சிப்பந்திகள் 817,000, 1936-37இல் 710,000 ஆகக் குறைக்கப்பட்டனர். நிலக்கரியில், 1921 இல் 1.93 கோடி டன்னாக இருந்த உற்பத்தி 1935 இல் 2.3 கோடி டன் ஆக உயர்ந்தது; அதேசமயம் வேலையில் உள்ளோரின் எண்ணிக்கை 205,000 விருந்து 179,000 ஆகக் குறைந்தது

1914-18க்குப் பிந்தின விலை விகிதத்தின் போது கிடைத்த வெறியளவு ஆதாயங்கள் இல்லாவிட்டாலும், போருக்கு முந்தின ஆதாய அளவுகள் மிருந்த கரண்டலேந்தான் நன்கு வெளிப்படுத்தின. இவ்வாறாக, சணலில், ரிலையன்ஸ் சணல் மில் கம்பெனி 1935இல் 50 சதவீதம் ஆதாயப்பங்கும், 1936இல் $42\frac{1}{2}$ சதவீதமும், 1937இல் 30 சதவீதமும் கொடுத்தது. பருத்தியில், மூர்

மில்ஸ் கம்பெனி 1935 இல் 35 சதவீத ஆதாயப் பங்குகளும், 1936இல் $27\frac{1}{2}$ சதவீதமும், 1937இல் $22\frac{1}{2}$ சதவீதமும் கொடுத்தது. தேயிலையில், நியூதூவார்ஸ் டீ கம்பெனி 1935 இலும் 1936 இலும் 50 சதவீத ஆதாயப் பங்கு கொடுத்தது; நாகை சூகே டீ கம்பெனி 1935இல் 60 சதவீதமும், 1936இல் 50 சதவீதமும் கொடுத்தது; ஈஸ்ட் ஹோப் எஸ்டேட்ஸ் கம்பெனி 1935 இல் 23 சதவீதமும், 1936இல் 33 சதவீதமும் 1937 இல் 40 சதவீதமும் கொடுத்தது. போர்க்காலத்தில் லாபங்கள் பன்மடங்கு ஏறின, இந்த உயர்ந்த அளவைக்காட்டிலும்.

(ஆறும் அத்தியாயம், பக். 206-207 பார்க்க.)

1914-18க்குப் பின் முப்பது ஆண்டுகளில் பிரம்மாண்டமான, கோடிக்கணக்கான பவுன்களான மொத்த ஆதாயங்களிலிருந்து ஒரு பகுதியை ஒதுக்கியிருந்தாலும், மிக இழிந்த மட்டரகமான நிலையில் வசிக்கும் தொழிலாளர்களுக்கு மிக எளிதில் வீட்டு வசதி செய்து கொடுத்து, மிக எளிய சமூகப் பாதுகாப்பு, சுகாதார வசதிகளைச் செய்துகொடுக்க நடவடிக்கை எடுத்திருக்க முடியும். இவற்றைச் சாத்தியமாக்கும் செயலாற்றும் பொறுப்பை இப்போதைய இந்திய ஆட்சியாளர்கள் ஒரு நாளும் ஏற்றுக் கொண்டதில்லை. உலகத்தின் சிறந்த எந்த நாட்டிலும் பணக்காரர்கள் இந்தியாவைப்போல் வரி விதிப்பில் எளிதாக விடப்பட்டு, முக்கியமான வரிச் சுமை முழுவதும் ஏழைகள் மீது ஏற்றப்படுவதில்லை. உழவர்கள் நிலவரி தருகையில், நிலச்சுவான்களின் வருமானங்கள் வருமான வரியிலிருந்து விலக்களிக்கப்படுகின்றன. தொழிலாளர்கள் மறைமுக வரிவிதிப்பால் நசுங்குகையில், உயர்ந்த வருமானங்களின் வருமான வரி தாழ்ந்த அளவில் வைக்கப்பட்டுள்ளது. ஆண்டுதோறும் மறைமுக வரி விதிப்பின் சுமை, நேர் முகவரியைவிட 8 மடங்கு என்று இந்திய அரசின் நிதி அங்கத்தினரான சர் ஜேம்ஸ் கிரிக் 1938 ஏப்ரலில் பேசுகையில் குறிப்பிட்டார். 1936-37 இல், வருமான வரியிலிருந்து கிடைத்த மொத்த வருவாய் £1.$1\frac{1}{2}$ கோடி, அல்லது மொத்த வருவாயில் பதினைன்கில் ஒரு பங்கு; அதே நிதி அங்கத்தினர் கூற்றுப்படி, அது நாட்டு வருமானத்தில் 1 சதவீதத்துக்கும் குறைவு. அதே சமயம் பிரிட்டனில் வருமான வரி, உபரி வரி, மரண வரி ஆகியவைகூடி நாட்டு வருவாயில் 10 சதவீதமாகிறது.

இந்தியாவில் தொழிலாளர், சமூக நலச் சட்டமியற்றும் பணியும் மிகவும் பின் தங்கிய நிலையிலேயே உள்ளது; எட்டிநல் தெரியும் தோற்றத்தை விட உண்மை மோசமானது. 1881 இல் தொழிற்சாலைச் சட்டங்கள் இயற்றும் ஒருவகைப் பணி ஆரம்பமாயிற்று; அதுவும், இந்திய ஆலைத் தொழில் வளர்ச்சியைக் கண்டு

அச்சம் கொண்ட லங்காஷயர் தொழிலதிபர்களின் நிர்ப்பந்தத்தின் பேரில் பல ஆண்டுகள் அது பயனற்றுக் கிடந்தது; அமுல் செய்வதற்கான ஏற்பாடு இல்லாமையால் அதன் குறுகிய நோக்கங்கள் கூட பயன்பட வில்லை.

> "1905 தொடக்கத்தில் இந்தியாவில் தொழிற்சாலை ஆய்வு முறை ஓரளவு முறிந்து விட்டது. தொழிற்சாலைகள் சட்டம் என்னென்று இருந்தது; ஆனால் சில வகைகளில் விலாச தாரரைச் சேராத கடிதம்போல் இருந்தது.... ஒரு நாளில் சராசரி 114,000 பேருக்கு வேலைதரும் 79 பருத்தி ஆலைகள் பம்பாய் நகரத்தில் இருந்தன; ஆயினும், தொழிற்சாலைகளைப் பார்வை இட வேண்டிய ஒவ்வொரு அதிகாரிக்கும் வேறு பல வேலைகள் இருந்தன. 'தொழிற்சாலைகளின் தலைமை ஆய்வாளர்' துணைக் கலெக்டர்—வழக்கமாக ஒரு குடி முறைப் பணியாளர். 1905 இல் அப்பதவியிலிருந்தவர்கள் ஆறு வெவ்வேறு நபர்கள்: அவர்களுக்கிருந்த பல கடமைகளில் தொழிற்சாலை ஆய்வை முக்கியமானதொன்றாக அவர்கள் எண்ண வில்லை. ஒரே முழு நேரத் தொழிற்சாலை ஆய்வாளர் பருத்தி ஆயத்துறைக் சட்டத்தின் கீழ் உற்பத்தியான பொருள்களை கவனிக்கும் பணியிலேயே முதன்மையாக ஈடுபட்டிருந்தார்.. இந்த மாதிரி ஏற்பாட்டின்கீழ் தொழிற்சாலைச் சட்டத்தின் விதிகள் திட்டமாக மீறப்படுவது இயற்கையே. கல்கத்தாவில் தொழிற்சாலை ஆய்வு முறை தோல்வியுற்று, அதன் விளைவாக ஏற்பட்ட தீமைகள் வெளிப்படையாகத் தெரிந்தன. ஒரு தொழிற்சாலை மேலாளர் இரண்டாவது தொழிற்சாலைத் தொழிலாளர் கமிஷனிடம் தாம் தொழிற்சாலைச் சட்டத்தைக் கவனிக்கவில்லை என்று தாராளமாக ஒப்புக்கொண்டார் வேறோரிடத்திலிருந்த தொழிற்சாலை ஒன்றில் 400 குழந்தைகள் வேலை செய்தனர்; அதன் மேலாளர் குழந்தைகளைத் தொழிலாளர்களாக ஏற்பதற்குத் தடைகள் விதிக்கும் ஒரு சட்டம் இருப்பதாகவே தமக்குத் தெரியாது என்று சாதித்தார்."
>
> (லோவாட் பிரேசர்: "கர்ஸனுக்குக் கீழ் இந்தியாவும், பிறகும்," பக் : 30-31.)

1924இல் பம்பாய் கலெக்டரின் ஆணைப்படி தொழிற்சாலைகளின் ஆண்டறிக்கை வெளியிடப்பட்டது; ("ஒவ்வொரு தொழிற்சாலையிலும் ஒழுங்கீனம் நிலவுகிறது" என்று அது குறிப்பிடுவதையும் போகிற போக்கில் கூறலாம்) அதிலும் முன்னுரைக் குறிப்பில் அதிகார பூர்வமான நோக்கம் பின்வருமாறு உரைக்கப்படுகிறது:

''தொழிற்சாலைகள் சட்டத்தையும் விதிகளையும் கடுமைப் படுத்தித் தீவிரமாய்ப் பயன்படுத்துவதால் தொழில் வளர்ச்சி தடைப்படுகிறது என்பது என் கருத்து....சிறப்பான சில வேலைகளுக்காக அவ்வப்போது ஓய்வு நாட்களிலும், அதிகப் படி நேரங்களிலும் வேலை செய்யாவிட்டால் தொழிலதிபர் களுக்கும் சரி தொழிலாளர்களுக்கும் சரி, கஷ்டமாகும். இம் மாதிரி விஷயங்கள் மனமொப்பி வேலை செய்யும் ஆட்கள் அதிகப்படி கூலி பெறுகிறார்கள்: எனவே, நியாயமான விலக் குகளைச் சிபாரிசு செய்யச் சொல்வதே இத்துறையின் கொள் கையாக இருந்து வருகிறது.''

(பம்பாய் மாகாணத்தின் தொழிற்சாலை ஆண்ட றிக்கை, 1924; பம்பாய் கலெக்டரின் முன்னுரை.)

இப்போதைய, 1934ஆம் ஆண்டுத் தொழிற்சாலைகள் சட்டம், நிலையான தொழிற்சாலைகள் நாளுக்குப் பத்து மணி நேரம், வாரத்துக்கு 54 மணி நேரம் வேலை செய்ய வேண்டும் என்றும், பருவகாலத் தொழிற் சாலைகள் (வருடத்தில் ஆறு மாதங்களுக்கு மேல் வேலை செய்யாதவை) நாளுக்கு பதினொரு மணி நேரமும் (பெண்களுக்கு பத்துமணி) வாரத்துக்கு 60 மணி நேரமும் வேலை செய்ய வேண்டும் என்றும், தொடர்ச்சியாகப் பதின்மூன்று மணி நேரமே வேலைசெய்ய வேண்டும் என்றும், மிகை நேரக்கூலி தரப் பட வேண்டும் என்றும் விதிக்கிறது. பெண்களில் இரவில் வேலை செய்வதைத் தடுக்கிறது; பன்னிரண்டு வயதுக்குக் கீழ்பட்ட சிறு வர்களை வேலையில் சேர்த்துக்கொள்ளக் கூடாது; பன்னிரண்டுமணி முதல் பதினைந்து வயதானோருக்குப் பகலில் ஐந்துமணி நேரம் தான் வேலை, ஏழரை மணி நேரம் பரவலாக வேலை செய்ய வேண்டிய நாளில்-என்றும் சட்டம் விதிக்கிறது. இந்தச் சட்டம் 25 லட்சம் தொழிலாளர்களுக்கு மட்டுமே பொருந்தும். (1944.)

1935 ஆம் ஆண்டுச் சுரங்கங்கள் சட்டம் பன்னிரண்டு மணி பரவலான வேலை நேரத்தில் தரைக்கு மேல் 10 மணி நேரமும், தரைக்குக் கீழ் 9 மணி நேரமும் விதிக்கிறது; பதினைந்து வயதுக் குட்பட்ட சிறுவர்கள் வேலையில் சேர்த்துக் கொள்ளப்படக் கூடாது. இந்தச் சட்டம் இரண்டரை லட்சம் தொழிலாளர் களுக்கு மட்டுமே பொருந்தும். 1937 இல், தரைக்குக் கீழ் பெண்கள் வேலை செய்யக்கூடாது என்று தடுக்கப்பட்டது. ஆனால், 1943 இல் பிறப்பிக்கப்பட்ட நெருக்கடி காலச் சட்டப்படி இந்தத் தடை போர்க்காலத்தில் நீக்கப்பட்டது.

ரயில்வேக்களில் 60 மணி வாரம்.

1931 ஆம் ஆண்டு இந்தியத்துறைமுகங்கள் சட்டம் பன்னிரண்டு வயதுக்குட்பட்ட குழந்தைகளை வேலையில் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்று தடுப்பதுடன் கப்பல் தளத்தில் வேலை செய்வோருக்குச் சில வரையறுத்த பாதுகாப்பு விதிகளை ஏற்படுத்தியுள்ளது.

1934 ஆம் ஆண்டு, தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டம் சுமார் 60 லட்சம் தொழிலாளர்களுக்குப் பொருந்தும்; ஆனால் அதனால் கிடைக்கும் நன்மைகளை நடைமுறையில் யாரும் பெற முயலவில்லை; பெறமுயன்றால், மேலதிகாரிகளால் துன்பம் விளையும் என்ற பயம்.

1936 ஆம் ஆண்டு சம்பளப் பட்டுவாடாச் சட்டம், உயர்ந்த பட்ச சம்பளக்காலம் ஒரு மாதம் (வார, இரு வாரச் சம்பளம் மறுக்கப்பட்டது) என்றும், மாதம் முடிந்த ஒரு வாரத்தில் சம்பளம் கொடுபட வேண்டும் என்றும் விதித்து, அபராதம் விதிப்பதையும் மனம் போன போக்கில் சம்பளத்தில் கழிவு செய்வதையும் தடுக்கிறது.

இந்தியாவில் தொழிலாளர் சட்டமாக்கம் எவ்வளவு வரையறுக்கப் பட்டுள்ளது என்பதை மேலே கூறிய தகவல்களிலிருந்து அறியலாம்.

> "தொழிற்சாலைகள், சுரங்கங்கள், கப்பல் தளங்கள், ரயில்வேக்கள், தோட்டங்கள், துறைமுகங்கள் முதலியவற்றுக்குப் பொருந்துகிற எல்லா தொழிலாளர் சட்டங்களையும் கணக்கிட்டுப் பார்த்தால் வெளியிலுள்ள எழுபது அல்லது எண்பது லட்சம் பேருக்காவது அவற்றின் பாதுகாப்பு கிடைக்குமா என்பது சந்தேகம். எஞ்சியவர்கள் தொழில் துறைத் தொழிலாளர்களில் பெரும்பாலோர்; அவர்கள் சிறிய அல்லது 'ஒழுங்கு படுத்தப்படாத' எனக் கூறப்படும் தொழில்களில் வேலை செய்கிறார்கள்."
>
> (சிவராவ்: "இந்தியாவில் தொழில்துறைத் தொழிலாளர்கள்", 1939, பக். 210.)

முக்கியமான தொழிற்சாலைகள் சட்டமே 1944இல் 2,522,753 தொழிலாளர்களுக்கு, அல்லது, இந்தியத் தொழிலாளர் வகுப்பில் ஒரு சின்னஞ்சிறு பகுதியினருக்குத்தான் பொருந்துவதாக இருந்தது. இங்கும் அமுல் செய்யும் நிர்வாக யந்திரத்தின் பலவீனத்தால் அச் சட்டம் பயனற்றதாகி விட்டது. 1944 இல் தொழிற்சாலைகள் சட்டப்படி பதிவு செய்யப்பட்ட 14,071 தொழிற்சாலைகளில் 11,713 அல்லது 83.2 சதவீதம் மட்டுமே ஆய்வு செய்யப்பட்டன. 2,358 தொழிற்சாலைகள் வருட முழுவதும்

ஆய்வு செய்யப்படவேயில்லை; பல தொழிற்சாலைகள் ஆண்டில் ஒரே தடவை ஆய்வு செய்யப்பட்டன. விதிகள் எந்த அளவு பயன் தரும் என்பதை இதிலிருந்து கற்பனை செய்து கொள்ளலாம். சட்டத்தின் கீழ் 1,775 தண்டனைகள் விதிக்கப்பட்டன; மிக லேசான அபராதங்கள், விதிகளை மீறத் தூண்டுவதாக இருந்தன. "இத்தகைய அபராதங்கள் குற்றம் செய்வோர் திருந்துவதற்குப் பயன்படா; ஏனெனில், சட்டத்தை மீறுவதால் கிடைக்கும் ஆதாயம் செலுத்த வேண்டிய அபராதத் தொகையைவிட மிகுதியாக உள்ளது,'' என்று ஐக்கிய மாகாணங்களின் அறிக்கை கூறுகிறது (மற்றும் சில மாகாணங்களின் கருத்து இதுவே).

(இண்டியன் லேபர் கெஜட், செப்டம்பர், 1946, பக். 75.)

இந்திய சமஸ்தானங்களிலுள்ள தொழிற்சாலைகள் முற்றிலும் தொழிற்சாலைச் சட்டங்களுக்குப் புறம்பானவை.

இந்தியத் தொழிலின் முக்கியப்பகுதி ஒழுங்குபடுத்தப்படவில்லை. இங்கு, மிக மென்மையான வயதுள்ள சிறுவர்களும் மிகுதியாகத் தொழிற்சாலைகளில் சேர்க்கப்படுகின்றனர்; வேலை நேரம் வரையறுக்கப்படவில்லை; ஆரோக்கியத்துக்குத் தேவையான அடிப்படை வசதிகள்கூட இல்லை. முன்பே மேற்கோளான 1938 ஆம் ஆண்டு சென்னை அறிக்கை, ஒழுங்குபடுத்தப்படாத தொழில்களில் சிறுவர்களை வேலைக்கு அமர்த்தும் பழக்கம் அதிகரித்து வருவதைக் கண்டது. தோல் பதனிடும் தொழிற்சாலைகளிலும், ஜமுக்காளத் தொழிற்சாலைகளிலும், சிகரெட் செய்யும் தொழிற்சாலைகளிலும் உள்ள நிலைமை வருணனைக்கு அப்பாற்பட்டது. சிகரெட் தொழிற்சாலைகளில் ஐந்து, ஆறுவது வயதிலேயே குழந்தைகள் வேலை செய்யத் தொடங்குவது சகஜம்; நாளுக்குப் பத்து முதல் பன்னிரண்டு மணி வேலை நேரம்; வார ஓய்வு நாள் கிடையாது. பத்து, பன்னிரண்டு மணி நேரம் நாளுக்குப் பாடுபட்டு இக் குழந்தைகளுக்குக் கிடைக்கும் கூலி, இரண்டணா, நாளுக்கு 2 பென்சு.

நவீன அர்த்தத்தில், சமூக நலச் சட்டங்கள் அறவே இல்லை. உடல்நல ஈட்டுறுதி இல்லை, மருத்துவ ஏற்பாடு இல்லை, நோய் நலன் ஏதுமில்லை, வயதானவருக்குப் பாதுகாப்பு இல்லை, வேலையின்மைக்குப் பாதுகாப்பு இல்லை, பொதுவான கல்வி முறை இல்லை. தெருக்களைத் துப்புரவாக்குதல், தண்ணீர் வழங்குதல், விளக்கு, கழிவுப் பொருள்களை அப்புறப்படுத்துதல் முதலிய பொது உடல் நலத்துக்கு மிகத் தேவையான வசதிகள் கூடத் தொழிலாளர்கள் வட்டாரத்தில் புறக்கணிக்கப்படுகின்றன; ஐரோப்பியர்களும் மேல் வகுப்பு இந்தியர்களும் வசிக்கும் பணக்கார வாச ஸ்தலங்களில் ஏராளமான வசதிகள் செய்யப்படு

கின்றன; வரி விதிப்பினுல் கிடைக்கும் வருவாய்கள் இப்பகுதிகளில் செலவழிக்கப்படுகின்றன. தம்முள் வசிப்பவர்களுக்கு நோய்களும் சடிதியில் சாவும் தரும் அழுகல் குடிசைக் குடியிருப்புகள் அவற்றின் சொந்தக்காரர்களுக்கு ஆண்டுக்கு 30, 40 சதவீதம் வருவாய் கொடுக்கின்றன; அவை மேலும் நாற விடுகிருர்கள் அதிகாரிகள். தனிநபர்களுக்கும் டிரஸ்ட்களுக்கும் சொந்தமான குடியிருப்புகளில் தெருக்களைத் துப்புரவு செய்வதில்லை; குடிசை வரிசைகளுக்கு இடையிலுள்ள குறுகலான சந்துகளில் எச்சங்களும் குப்பைகளும் அழுகி நாறும்படி விடப்படுகின்றன. அலகாபாத் மேயராக இருந்தபோது தம் அனுபவத்தை ஜவகர்லால் நேரு விவரிக்கிருர்:

> ''இந்திய நகரங்களில் பலவற்றை இரண்டு பகுதிகளாய்ப் பிரிக்கலாம்: அடர்த்தியான மக்கள் கூட்டமுள்ள நகரப்பகுதி; விசாலமான நிலப்பரப்பில், மிக விரிவான காம்பவுண்டு அல்லது தோட்டத்தோடு கூடிய பங்களாக்களும் காட்டேஜ்களுமுள்ள பகுதி; ஆங்கிலேயர் இவற்றைச் சாதாரணமாக 'குடிமுறை வரிசைகள்' என்பர்; இந்த வரிசைகளில்தான் ஆங்கிலேய அதிகாரிகள், வியாபாரிகள், பல உயர் நடுத்தர இந்தியர்கள், உத்தியோகஸ்தர்கள், அதிகாரிகள் முதலியவர்கள் வசிக்கிருர்கள். நகராட்சிக்கு நகரப் பகுதியிலிருந்து கிடைக்கும் வருமானம் 'குடிமுறை வரிசைகளி'லிருந்து கிடைப்பதை விட அதிகம்; ஆனுல், 'வரிசைகளு'க்காகச் செய்யப்படும் செலவுகள் நகரப் பகுதிக்குச் செலவிடப்படுவதை விட மிக அதிகம். 'குடிமுறை வரிசைகள்' பரவலான இடத்தில் இருப்பதால், அங்கு அதிகமான வீதிகள் தேவை, அவற்றைப் பழுது பார்க்க வேண்டும், துப்புரவாக்கப்பட வேண்டும், தண்ணீர், விளக்கு வசதி செய்து தரவேண்டும்; சாக்கடை, தண்ணீர் வழங்குதல், துப்புரவு எல்லாமே பரந்த அளவில் செய்ய வேண்டியுள்ளது. நகரப் பகுதி எப்போதுமே அலட்சியப்படுத்தப்படும்; ஏழைகள் வசிக்கும் பகுதியோ கவனிக்கப்படுவதே இல்லை. அங்கு நல்ல வீதிகள் இல்லை; பெரும்பாலான குறுகிய சந்துகளில் போதுமான விளக்கு வெளிச்சம் இல்லை; முறையான சாக்கடைத் திட்டமோ, துப்புரவுத் திட்டமோ இல்லை.''

(ஜவஹர்லால் நேரு: ''சுய சரித்திரம்'', பக். 143.)

நேரு நிலமதிப்பீடுகள் மீது வரி விதித்து, சாத்தியமான சீர்திருத்தங்கள் செய்ய முயன்ருர். உடனே அவர் மாவட்ட மாஜிஸ்திரேட்டால் தடுக்கப்பட்டார்; அவ்வாறு வரி விதிப்பது பல

சட்டங்களுக்கும் நிலக் குடிவாரா விதிகளுக்கும் விரோதமா இருக்கும் என்று அவர் கூறினர்; இத்தகைய வரி குடிமுறை வரிசைகளில் உள்ள பங்களா உரிமையாளர்களையே அதிகமாய் பாதித்திருக்கும்.

இவ்வாறு ''நாகரிகமான'' பிரிட்டிஷ் அரசின் சிறப்பா பாதுகாப்பில், இந்தியத் தொழிலாளர்களின் சகதியான நிலை களும், அளவு கடந்த சுரண்டலும், அடிமை நிலையும் நிலையாக்க பட்டுள்ளன. மிக ஜாக்கிரதையாகப் பாதுகாக்கப்பட்டு, மி சுகாதார முறையில் பேணப்படும் தங்கள் அரண்மனைகளிலிருந் ஐரோப்பியப் பிரபுமார்கள் தங்கள் துயரத் துன்ப ராஜ்யத்தி மீது ஆட்சி செலுத்துகிறார்கள்:

''ஹௌராவிலும் கல்கத்தாவிற்கு வடக்கிலுள்ள புறநக களிலும் இருக்கும் 'பஸ்தி'களுக்கு (தொழிலாளர்க குடியிருப்பு) ஈடாக குப்பை கூளங்களையும் ஆபாச நாற்ற தையும் வேறெங்கும் காண முடியாது. . . . சணல் ஆலை தொழிலாளர்களில் பெரும்பாலோர் இத் தனியார் 'பஸ்தி களில் வசிக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் உள்ளனர். வங்கா நகராட்சிகள் சட்டப்படி இக் குடியிருப்புப் பிரதேசத்தை நல்ல முறையில் வைத்துக்கொள்ள வேண்டிய பொறுப்ப அவற்றின் சொந்தக்காரர்களைச் சேர்ந்ததாகும்; அவர்கள் ஏழைக் குடிசைவாசிகளிடமிருந்து ஏராளமான வருவாய் பெறுகிறார்கள். ஆனால் சட்டத்தின் அதிகாரங்கள் செயல் படாத வகையில் சுயநலமுடையோர் செய்து விடுகின்றனர். இந்தப் 'பஸ்தி'களின் நிலைமைகளை வருணிக்க முடியாது— 'ஆபாசமான நோய் மண்டின குடிசைகள்' எனக் கூறப்படும் இவற்றில் ஜன்னல்களோ, புகைப் போக்கிகளோ, அடுப்பங் கரையோ கிடையாது; வாயில் நிலைகள் மிகத் தாழ்ந்து மண்டியிட்டு ஒருவர் உள்ளே போக வேண்டியிருக்கும். விளக்கு, தண்ணீர் வசதி கிடையாது; சுகாதார வசதியும் இல்லை என்பதைச் சொல்ல வேண்டாம். 'பஸ்தி'களின் தொகுதிக்குப் போகும் வழி குறுகிய, ஆபாசமான சுரங்கப் பாதை—அங்கு ஆண்டு முழுவதும், அதுவும் மழைக் காலத்தில், கொசுக்களும் ஈக்களும் கோடி கோடியாக மொய்க்கும்.

''வங்காளத்தின் இரண்டாவது பெரிய நகராட்சியான ஹௌராவின் சில பகுதிகளில் உள்ள நிலைமை கல்கத்தாவின் வடக்குப்புற நகரிலுள்ள நிலைமையைவிட மோசம், நிலம் மிக விலை மதிப்புள்ளது என்பதால் ஒவ்வோரடி நிலத்தின் மீதும் கட்டிடம் கட்டப்பட்டுள்ளது. இரு பக்கங்களிலும் இந்தப் 'பஸ்தி'கள் கட்டப்பட்டுள்ள சந்துகள் மூன்றடி அகலத்திற்கு

மேல் இல்லை; ஆனால், மற்ற ஆலைப் பிரதேசங்களில் உள்ளது போலவே, அவற்றின் வழியே திறந்த சாக்கடைகள் ஓடுகின்றன.''

சணல் தொழிலாளர்கள் வசிக்கிற நிலைமைகள் இவை; இவர்களிடமிருந்துதான், போட்ட முதலுக்குப் பல மடங்கான, நூற்றுக் கணக்கான சதவீதமான ஆதாயப் பங்குகளை ஐரோப்பியர்களால் நடத்தப்படும் கம்பெனிகள் பிழிந்தெடுக்கின்றன.

இந்தியத் தொழிலாளர் இயக்கத்தின் பகைப்புலம் இதுதான். இந்நிலையில் வாழும் லட்சக் கணக்கானேருக்குத்தான் தொழிற்சங்க இயக்கமும் சோஷலிசமும் முதன் முதலில் நம்பிக்கையும், தைரியமும், ஒன்றுபடுவதால் உண்டாகும் வலிமையைப் பற்றிய விழிப்பும், அவர்களுடைய துன்பத்திற்கு முடிவுகாணும் ஒரு குறிக்கோளையும் நல்கின.

## 3. தொழிலாளர் இயக்க அமைப்பு

இந்தியாவில் தொழிலாளர் இயக்க அமைப்பின் தொடக்கங்கள் அரை நூற்றுண்டுக்குப் பின் செல்கின்றன. ஆனால், அமைப்பு பெற்ற இயக்கமாக அதன் தொடர்ச்சியான வரலாறு முதல் உலகப் போரின் முடிவு முதல்தான் ஆரம்பமாகிறது.

ஆயிரத்து எண்ணூற்று எழுபதுகளில் தொழிற்சாலைத் தொழில்கள் ஏற்படுவதற்கான நிலைமைகள் தோன்றியவுடனே, வேலை நிறுத்தங்கள் நிகழ்வதைத் தவிர்க்க முடியாது; ஆம், துவக்க காலத்தில் அமைப்பில்லாத முறையில்தான். நாகபுரி எம்பிரஸ் மில்லில் 1877 இல் சம்பள விகிதம் பற்றி ஒரு வேலை நிறுத்தம் நடந்ததாய்ப் பதிவுரு இருக்கிறது. 1882-க்கும் 1890க்கும் இடையில் பம்பாய், சென்னை மாகாணங்களில் இருபத்தைந்து வேலை நிறுத்தங்கள் நடந்தநாய்ச் சான்றுகளுள.

இந்தியத் தொழிலாளர் இயக்கத்தின் வழக்கமான வரலாறு 1884 இல் தொடங்குகிறது; அப்போது பம்பாய் ஆலைத் தொழிலாளர்களை ஸ்தல ஆசிரியர் ஒருவர், என். எம். லோகன்டே ஒன்று கூட்டினார்; வேலை நேர வரையறுப்பு, வாரத்திற்கு ஓர் ஓய்வு நாள், மத்தியான இடைவேளை, காயப்பட்டால் நஷ்டஈடு ஆகிய தொழிலாளர்களின் கோரிக்கைகள் அடங்கிய ஒரு விண்ணப்பத்தைத் தொழிலாளர்கள் கமிஷனிடம் தருவதற்காக அவர் உருவாக்கினார். லோகன்டே தம்மை ''பம்பாய் மில்களின் சங்கத் தலைவர்'' என்று கூறிக் கொண்டார்; இந்தச் சங்கம்தான் இந்தியத் தொழிலாளர் இயக்கத்தின் முதல் நிறுவன

மாக அடிக்கடி குறிப்பிடப்படுகிறது. பிறகு அவர் 'தீனபந்து அல்லது ஏழைகளின் நண்பர் என்ற ஏட்டைத் துவக்கினர்.

லோகன்டேயின் செய்கை பற்றின இந்தச் சித்திரத்துக்கு இந்தியத் தொழிற்சங்க வரலாற்றில் முக்கியமான பங்கு உண்டென்றாலும், இந்தியத் தொழிலாளர் இயக்கத்துக்கு ஆரம்ப முனையாக அதைக் கொள்வது தவருக முடியும்; அதன் தவரு தன்மை பற்றி இந்தியத் தொழிலாளர் இயக்க ஆரம்பகால வரலாறு பற்றி எழுதுகையில் அடிக்கடி கவனிக்க வாய்ப் ஏற்படும்; ''பம்பாய் மில்கைகள் சங்கம்'' எந்தப் பொருளிலு ஒரு தொழிலாளர் நிறுவனம் அல்ல; அதற்கு உறுப்பினர்க இல்லை, நிதி இல்லை, விதிகளில்லை. ''பம்பாய் மில்கைகளுக்கு அமைப்பு பெற்ற தொழிற்சங்கம் கிடையாது. இறுதித் தொழி லாளர் கமிஷனில் பணியாற்றிய திரு. என். எம். லோகன்டே பம்பாய் மில்கைகள் சங்கத் தலைவர் என்று தம்மைக் கூறி கொண்டாலும், அந்தச் சங்கம் முறைப்படி அமைப்பு பெற் நிறுவனமாக இருந்ததில்லை, அதற்கு உறுப்பினர் பட்டி இல்லை நிதி இல்லை, விதிகள் இல்லை. தம்மிடம் யோசனை கேட்கவரு தொழிலாளர்களுக்கு ஆலோசகராகத் திரு. லோகன்டே உத வந்தார் என்று நான் கருதுகிறேன்'' (''பம்பாயில் தொழி சாலைச் சட்டம் செயல்படுவது பற்றின அறிக்கை'', 1892 பக். 15). தொழிலாளர் சட்டம் இயற்றப்பட வேண்டும், அவ கள் நலம் பெறவேண்டும் என்று உதாரகுணமுடைய நல விரும்பி லோகன்டே; அவர் தொழிற்சங்கத்திற்கோ, தொழி லாளர் போராட்டத்திற்கோ முன்னோடி அல்ல.

இந்தியத் தொழிலாளர் இயக்கத்தின் தொடக்ககா வரலாற்றை உருவாக்க, எண்பதுகளிலிருந்து அக்காலத்து ஆவணங்களில் கிடைக்கும் வேலை நிறுத்த இயக்கம் பற்றி பதிவுருக்களைப் பொருத்திப் பார்க்க வேண்டியது அவசியம் இன்னும் நிறுவனம் ஒன்றும் தோன்றவில்லை என்றாலும், 1914 போருக்கு முந்தின பத்தாண்டுக் காலத்தில் இந்தியத் தொழி துறைத் தொழிலாளர்கள் செயல்படுவதில் காட்டிய ஒருமை யுணர்ச்சியின் வளர்ச்சியையும், ஆரம்பகால வர்க்கவுணர் பெற்றிருந்ததையும் குறைவாய் எடைபோடுவது தவருகும் 1885 இல், பட்கே பட்கேமில் இயக்குநர்களின் அறிக்கை, ''இந்த அரையாண்டில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்ததமையால் மில் சுமார் ஆறுவார காலம் மூடிக்கிடக்க நேர்ந்ததற்காக வருந்து வதாய்''க் குறிப்பிடுகிறது. 1895 இல் ஆமதாபாதில், 800 நெசவாளர்கள் ஆமதாபாத் ஆலை அதிபர்கள் சங்கத்தை எதிர்த்த

வேலை நிறுத்தம் செய்ததாய்ப் பதிவு செய்யப்பட்டுள்ளது (பம்பாய் தொழிற்சாலை அறிக்கை, 1895).

> ''1880 முதல் 1908 வரை உண்மையான தொழிலாளர் சங்கங்கள் இல்லை என்று எல்லா இடங்களிலிருந்தும் கிடைத்த சான்றுகள் கமிஷன்களிடத்தில் இருந்தாலும், ஒரு மில்லில் உள்ள தொழிலாளர்கள் ஒற்றுமையாக அடிக்கடி செயல்பட முடிந்தது என்றும், அவர்கள் திரளும் போது சுதந்திரமாக நடந்து கொண்டார்கள் என்றும் பலர் உரைக்கிறார்கள். கொதிகலங்களின் ஆய்வாளர் 1895 இல், ''மக்களுக்கே உரித்தான, பெயரிடப் பெறாத, எழுதப் பெறாத ஒற்றுமைப் பந்தம் ஒன்று தொழிலாளர்களுக்கு இடையில் இருக்கிறது'' என்று கூறினார்; பம்பாய் கலெக்டர் இது 'காற்றில் இருப்பதைவிடச் சிறிது அதிகம்' எனினும் 'சக்தி நிறைந்தது' என்றார். ''அதற்கும் நீண்ட காலமாக நிலைத்துள்ள ஏகபோக உரிமை அல்லது ஏறக்குறைய ஏகபோக உரிமைச் சம்பளத்திற்கும் ஏராளமான தொடர்பு உண்டு'' என்று அவர் அரசுக்கு எழுதினார். தொழிலாளர்களுக்கு ''குறைவான நிறுவனம் இல்லை எனினும் தங்களுக்குள் அவர்களுக்கு ஓர் உணர்வு இருந்தது'', என 1908 இல் சர் ஸஸூன் டேவிட் மொழிந்தார். பம்பாய் மாகாணத்தில் அண்மையில் தொழில்களின் இயக்குநராக இருந்த ஒரு பரூச்சா, ''தொழிலாளர்கள் அதிபர்களுக்கு எதிராக எல்லா சக்தியும் வாய்ந்தவர்கள், அவர்களுக்குத் தொழிலாளர் சங்கம் இல்லாவிடினும், எளிதில் ஒன்றுகூட முடியும்'' என்றார். இந்தக் கூற்றுகளில் ஓரளவு மிகை இருக்கிறது என்றால், வார்தாவிலுள்ள பிரிட்டிஷ் துணை ஆணையரின் கூற்று இலக்கு எல்லையைத் தாண்டிச் சுடுவதாயுள்ளது. அவர் கூறினார், ''தொழிலாளர்களே நெருக்கடியில் எஜமானர்கள்; அவர்களைக் காட்டிலும் ஆலை அதிபர்களுக்குத்தான் பாதுகாப்பு மிகத் தேவை.
>
> (டீ. எச். புகானன்: ''இந்தியாவில் முதலாளித்துவத் தொழில் வளர்ச்சி'', பக். 113-14.)

இந்தியத் தொழிலாளர்களுக்கு இடையில் நிலவும் வர்க்கவுணர்வு பற்றின எஜமானர்களின் அச்சம் இச் சொற்களிலே பெருமூச்சு விடுகிறது.

1905-9 இல், போராட்ட குணமிக்க தேசிய அலைக்கிணங்க, குறிப்பிடத்தக்க முன்னேற்றம் இருந்தது. வேலை நேர விஸ்தரிப்பை எதிர்த்து பம்பாய் ஆலைகளில் ஒரு வேலை நிறுத்தம், ரயில்வேக்

களில் கடுமையான வேலை நிறுத்தங்கள் குறிப்பாக, கிழக்கு வங்காள அரசு ரயில்வேயில், ரயில்வே ஷாப்களில் வேலைநிறுத்தம், கல்கத்தா அரசு அச்சகத்தில் வேலை நிறுத்தம்-ஆகியவை இந்தக் காலத்தில் நிகழ்ந்தவையே. 1908இல் திலகர் ஆறு வருட சிறைத் தண்டனை விதிக்கப்பட்டதை எதிர்த்துப் பம்பாயில் ஆறுநாட்கள் மாபெரும் அரசியல் வேலை நிறுத்தம் நடந்தபோது ஓர் உயர்ந்த சிகரத்தை இயக்கம் எட்டிவிட்டது.

ஒரு நிலையான நிறுவனமும் இன்றும் சாத்தியமாகவில்லை. அதற்குக் காரணங்கள் அவர்களுடைய சொல்வொண்ணு வறுமையும் படிப்பின்மையும் தானேயன்றி அவர்களுடைய பின்தங்கிய தன்மையோ, போர்க்குணமின்மையோ அல்ல. நிறுவனங்களை உருவாக்கும் வழிவகைகள் இன்னும் வேறு சக்திகளின் கைகளில்தான் இருந்தன. இவ்வாறாக 1910 இல் ''காம்கர் ஹித வர்தக் சபா'' அல்லது தொழிலாளர் நலச் சங்கம் பம்பாயில் பரோபகாரிகளால் துவக்கப்பட்டது; அரசுக்கு விண்ணப்பங்கள் செய்து கொள்வதும், அதிபர்களுக்கும் தொழிலாளருக்கும் இடையில் எழும் சச்சரவுகளைத் தீர்த்து வைப்பதும் அதன் நோக்கங்கள். தொழிற்சங்க இயக்கம் சகஜமான பொருளில் 1914க்கு முன் ரயில்வே ஊழியர்கள், அரசாங்க ஊழியர்கள் போன்ற உயர் மட்டத்தினர் (ஐரோப்பியர், ஆங்கிலோ இந்தியர்) அளவுக்குத்தான் பரவியிருந்தது; இவ்வாறு, 1897 இல் ரயில்வே ஊழியர்களின் இணைக்கப் பெற்ற சங்கம் அமைக்கப்பட்டு கம்பெனிகள் சட்டத்தின் கீழ் பதிவு செய்யப் பட்டது; நட்பு முறையில் நலன்கள் பெறுவதே அதன் முதன்மையான பணிகள்; நவீன காலத்திலும் அது தொடர்ந்திருந்தாலும் (1928 இல் ரயில்வே ஊழியர் தேசிய யூனியன் என்று பெயரை மாற்றிக் கொண்டது) இந்தியத் தொழிலாளர் இயக்கத்தில் யாதொரு பங்கும் கொள்ளவில்லை.

முதல் உலகப்போரின் இறுதியில் ரஷியப் புரட்சியை அடுத்து எழுந்த உலகப் புரட்சி அலையால் தோன்றிய சூழ்நிலைதான் இந்தியத் தொழிலாளர்கள் பாய்ச்சல் விசையோடு செயல்பட்டு இந்தியாவில் நவீன தொழிற்சங்கத்தைத் தொடங்கத் தூண்டியது. இந்தப் புதிய விழிப்புக்கு அரசியல் சூழ்நிலையும், பொருளாதாரச் சூழ்நிலையும் ஒரே மாதிரி உதவின. போர்க்காலத்தில் விலைகள் இரட்டித்து விட்டன; அதற்கு ஏற்பச் சம்பளங்கள் உயரவில்லை; தொழிலாளர்கள் பூதாகாரமான ஆதாயங்களைக் குவித்துக் கொண்டிருந்தார்கள். அரசியல் களத்தில் புதிய கோரிக்கைகள் எழுந்திருந்தன; காங்கிரஸ்-முஸ்லீம் லீக் ஒற்றுமை உருவாக்கப்பட்டு இருந்தது. உடனடியாகச் சுயாட்சி வேண்டும் என இரு கட்சிகளும் கோரி செயல்திட்டமும் வகுத்திருந்தன; புரட்சியின் முதலைகள் இந்தியாவை நெருங்கிக் கொண்டிருந்தன.

1918 இல் தோன்றி 1919 இலும் 1920இலும் நாட்டை ஒரு கலக்கு கலக்கிய வேலை நிறுத்த இயக்கம் மலைப்பூட்டும் வகையால் அடர்ந்திருந்தது. பம்பாய் பருத்தி ஆலைகளின் முக்கியமான வட்டாரத்தில் இருந்த ஒரு தொழிலை முற்றிலும் பாதித்த முதல் பெரும் வேலை நிறுத்தத்தை 1918இன் இறுதி கண்டது; 1919 ஜனவரியில் ஏறக்குறைய எல்லா மில்களிலும் இருந்த 1,25,000 தொழிலாளர்கள் வெளியேறி விட்டனர். 1919 வசந்த காலத்தில் ரவுலட் சட்டங்களை எதிர்த்து நடந்த ஹர்த்தால், பொதுவான விடுதலைப் போராட்டத்தில் தொழிலாளர்களின் முன்னணிப் பங்கினை வெளிப்படுத்தியது. 1919 முழுவதும் நாடெங்கும் வேலை நிறுத்தங்கள் பரவின. 1919 முடிவிலும் 1920 முற்பாதியிலும் அலை தன் உச்சிக்கு ஏறியது.

> ''இக்காலத்தில் நடந்த வேலை நிறுத்தங்களின் அடர்த்தியையும் பரப்பையும் பற்றிப் பின்வரும் புள்ளி விவரங்களால் ஓரளவு அறிந்து கொள்ளலாம்: 1919, நவம்பர் 4 முதல் டிசம்பர் 2 வரை, கம்பெனி ஆலைகள், கான்பூர் 17,000 பேர் வெளியேறல்; 1919 டிசம்பர் 7 முதல் 1920 ஜனவரி 9வரை, ரயில்வே ஊழியர்கள், ஜமால்பூர், 16,000 பேர் வெளியேறல்; 1920 ஜனவரி 9-18, சணல் மில்கள், கல்கத்தா, 35,000 பேர் வெளியேறல்; ஜனவரி 2 முதல் பிப்ரவரி 3 வரை, பொது வேலை நிறுத்தம், பம்பாய், 2,00,000 பேர் வெளியேறல்; ஜனவரி 20-31, ஆலைத்தொழிலாளர்கள், ரங்கூன் 20,000 பேர் வெளியேறல்; ஜனவரி 31 பிரிட்டிஷ் இண்டியா நாவிகேஷன் கம்பெனி 10,000 பேர் வெளியேறல்; ஜனவரி 26 முதல் பிப்ரவரி 16, ஆலைத் தொழிலாளர்கள், ஷோலாப்பூர், 16,000 பேர் வெளியேறல்; பிப்ரவரி 2-16, இந்தியக் கப்பல் தளத் தொழிலாளர்கள், 20,000 பேர் வெளியேறல்; பிப்ரவரி 24 முதல் மார்ச் 29, டாடா இரும்பு, உருக்குத் தொழிலாளர்கள், 40,000 பேர் வெளியேறல்; மார்ச் 9, ஆலைத் தொழிலாளர்கள், பம்பாய், 60,000 பேர் வெளியேறல். மார்ச் 20-26, ஆலைத் தொழிலாளர்கள், சென்னை, 17,000 பேர் வெளியேறல்; மே, 1920, ஆலைத் தொழிலாளர்கள், அமதாபாத், 25,000 பேர் வெளியேறல்.''
>
> (ஆர். கே. தாஸ்: ''இந்தியாவில் தொழிலாளர் இயக்கம்'', 1923, பக். 36-37.)

1920இன் முதல் ஆறு மாதங்களில், 15 லட்சம் தொழிலாளர்கள் கலந்து கொண்ட 200 வேலை நிறுத்தங்கள் நடந்தன.

இந்த நிலைமைகளில்தான் இந்தியத் தொழிற்சங்கம் பிறந்தது. முக்கியமான தொழில்களிலும் இடங்களிலும் உள்ள பல

இந்தியத் தொழிற்சங்கங்கள் இக்காலத்திலிருந்துதான் தோன்றின; ஆயினும், தவிர்க்க முடியாத நிலைமைகளால் தொடர்ச்சியாகச் சங்கங்கள் தோன்றவில்லை. போராட்டத்தன்மை மிக்க இந்த மகத்தான காலமே, நவீன இந்தியத் தொழிலாளர் இயக்க ஜனனகாலம்.

இந்தக் காலத்தில், தொழிற் சங்கங்கள் இருபது கணக்கில் அமைக்கப்பட்டன. உடனடியாகப் போராட்டம் தொடங்க வேண்டி அமைக்கப்பட்ட வேலைநிறுத்தக் கமிட்டிகளாகத் தோன்றியவை பல; ஆனால், இவற்றுக்கு நிலையான அதிகாரமில்லை. தொழிலாளர்கள் போராட்டத்துக்கு ஆயத்தமாக இருக்கையில், அலுவலக அமைப்பு மற்றவர்கள் கையில் இருப்பதைத் தவிர்க்க முடியவில்லை. எனவே, ஆரம்பகாலத் தொழிற் சங்கங்களில் முரண் பாடுகள் எழுந்தன. சோஷலிசத்தின் அடிப்படையிலும், தொழி லாளர் வர்க்கம், வர்க்கவுணர்வு அடிப்படையிலும் அரசியல் இயக்கம் ஒன்றும் இன்னும் தோன்றவில்லை. அதன் விளைவாக, வெளியார்கள் அல்லது உபகாரிகள் பல்வேறு காரணங்களால் தொழிலாளர் நிறுவனப் பணியில் ஈடுபட முன்வந்தனர்; இந்தத் தொடக்ககாலத்தில் அவர்களுடைய உதவியும் இன்றியமையாதது; அவர்கள் தொழிற்சங்க இயக்கத்தின் நோக்கங்களையும் தேவைகளை யும் புரிந்துக் கொள்ளாமல்; தங்களோடு நடுத்தர வகுப்பினரின் அரசியல் கருத்துகளையும் எடுத்துக் கொண்டு வந்தனர். சிலர் பரோபகாரப் பணியெனக் கருதி வந்தார்கள்; சிலர் இதை ஒரு தொழிலாய்க் கொண்டார்கள்; சிலர் தேசீய அரசியல் போராட் டத்தில் உள்ள ஈடுபாட்டால் வந்தார்கள். எப்படியும் அவர்கள் இயக்கத்துக்கு வெளியார் நோக்குதான் கொண்டு வந்தார்கள்; தொழிலாளர்கள் உண்மையாக நடத்தி வந்த வர்க்க போராட்ட அடிப்படையில் இளம் தொழிலாளர் இயக்கத்தை வழி நடத்த அவர்களால் இயலவில்லை. இந்தியத் தொழிலாளர் இயக்கத்தை நீண்ட காலம் இந்தத் துரதிருஷ்டம் தொடர்ந்தது; தொழிலாளர் களின் சிறந்த போராட்டத் தன்மையையும் வீரத்தையும் கடுமை யாகப் பாதித்தது; இன்றளவும் பாதித்து வருகிறது.

தொழிற்சங்க இயக்கத்தின் தொடக்கப் புள்ளியாக, பிரம்ம ஞானி திருமதி பெசன்டின் நண்பரான பி.பி. வாடியா 1918இல் தொடங்கிய மதராஸ் தொழிலாளர் யூனியனைச் சாதாரணமாய்க் கூறுவர். இந்தக் கருத்தும் இந்தியத் தொழிலாளர் வர்க்கத்தின் உண்மையான வரலாறு பொருத்தமட்டில் தவறுதலானதே. இக் காலத்தில் இந்தியா முழுவதிலும் தொழிற்சங்க இயக்கத்திற்கான கன்னி முயற்சிகள் முளைத்துக் கொண்டிருந்தன; ஆமதாபாத் பருத்தி ஆலைகளில் 1917 இல் பாவு ஓட்டுவோர் ஒரு சங்கம் கண்ட

தாய்த் தெரிகிறது. ஆனுல் நிறுவன அடிப்படை இன்னும் பலவீன மாகவே இருந்தது; தொழிலாளர் வர்க்கத்தின் போராட்டத் தன்மைக்கும் நடவடிக்கைக்கும் மிகப் பின்ஞலும் இருந்தது. மதராஸ் தொழிலாளர் சங்கம், முறையான தொழிற்சங்க நிறு வனம் அமைக்கும் முதல் முயற்சி என்பது மெய்யே; ஒரு தொழில் வட்டாரத்தைச் சேர்ந்த இந்தியத் தொழிலாளர் வர்க்கத்தினர் அதில் உறுப்பினர்களாய்ச் சேர்ந்து சந்தா கட்டினர். இந்தத் தொடக்கத்திற்காக அதன் நிறுவனர்களை எல்லாப் பெருமைகளும் சேரும். ஒப்பீட்டு முறையில் ஒரு பலவீனமான தொழில் வட்டா ரத்தில் இந்தத் தொடக்கத்தின் தோற்றம் ஏற்பட்டதால் (1921 -1933-இந்த நீண்டகால கட்டத்தில் மதராஸில் வேலை நிறுத்த நாட்களின் எண்ணிக்கை 28 லட்சத்தை, வங்காளத்தின் 2 கோடி யோடும், பம்பாயின் 6 கோடியோடும் ஒப்பிட்டு நோக்குக) தற் செயலான அதன் தனி மனிதத் தன்மை வெளிப்படுகிறது; இந்தி யத் தொழிலாளர் இயக்க வளர்ச்சியில் அதன் செல்வாக்கைப் பற்றி மிகைப்படுத்திப் பேசுவது சரியாக இராது. அதன் நிறுவந ரான பி.பி. வாடியாவின் நோக்கத்திலிருந்த வரையறைகள் உடனே வெளிப்பட்டு விட்டன; அவருடைய தலைமையில் 1918 ஏப்ரலில் சங்கம் அமைத்துக்கொண்ட தொழிலாளர்கள், தங்கள் கோரிக்கைகளை அதிபர்களிடம் கொடுத்தார்கள்; திருப்தி ஏற் படாது போகவே வேலை நிறுத்தம் செய்யக் கோரிஞர்கள்; பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திடம் தனக்குள்ள ஈடுபாட்டைக் காரணமாய்க் கூறி வாடியா அதைஎதிர்த்தார். (திருமதி பெசன்டு தேசிய இயக்கத்தில் மேற்கொண்ட அதே நிலை); 1918, ஜூலை 3 ஆம் நாள் அவர் ஒரு பேச்சில் குறிப்பிட்டார்:

> ''வேலை நிறுத்தம் செய்வதஞல் நீங்கள் பின்னி அண்டு கம்பெனியாரை மட்டும் பாதிப்பதஞல், நான் அதைப்பற்றிக் கவலைபட மாட்டேன்; ஏனெனில் அவர்கள் நிறையப்பணம் பண்ணுகிருர்கள்; ஆனுல், இத்தகைய செய்கையால் நேச நாடு களின் நோக்கத்துக்குத் தீங்கு நேரும். மில்லுடன் தொடர் புள்ள சில ஐரோப்பியர்களும் இந்த அரசும் கெட்ட முறை யில் நடந்து கொள்கிருர்கள் என்பதற்காக, ஆடை அணிவிக் கப்பட வேண்டிய படைவீரர்களுக்கு அசௌகரியம் உண் டாக்கவோ, நம் மன்னர் பிரானின் போராட்டத்தில் கலந்து கொண்டுள்ளவர்களுக்குத் தொல்லைதரவோ நமக்கு உரிமை இல்லை. ஆகையால் நமக்கு வேலை நிறுத்தங்கள் வேண்டாம்.''

வேலை நிறுத்தம் ஏற்படாமல் அவர் வெற்றிகரமாய்த் தடுத்து விட்டார்; ஆனுல், அவருடைய ''தேசபக்தி'' வாதங்களால் தயக்கம் கொள்ளாத பின்னி கம்பெனி கதவடைப்பு செய்வதாய்

அறிவித்தது; எதிர்ப்பாராமல் சிக்கிக் கொண்ட தொழிலாளர்கள், வேலை நிறுத்த ஆயுதத்தையும் கீழே போட்டு விட்டதால் கம்பெனியின் கோரிக்கைகளுக்கு அப்போதைக்கு இணங்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. சென்னையில் முக்கியமான போட்டி 1921 இல் வந்தது: ஒரு கதவடைப்பைத் தொடர்ந்து ஒரு வேலை நிறுத்தம்; கம்பெனி தடையுத்தரவுமுறையைக் கையாண்டது; உயர்வழக்கு மன்றம் சங்கத்திற்கு £7,000 அபராதம் விதித்தது; கம்பெனி தீர்ப்பை நிறைவேற்றுமலிருப்பதே அதன் விலையாகத் தீர்ப்பளித்தது. வாடியா தொழிலாளர் இயக்கத்தோடு தமக்குள்ள தொடர்பை துண்டித்துக் கொள்ள வேண்டியதாயிற்று. இந்தியாவில் தொடக்க காலத் தொழிற்சங்க இயக்கத்தை நசுக்க கையாளப்பட்ட முறைகளை இந்நிகழ்ச்சி தெளிவாய் எடுத்துக் காட்டுகிறது.

மற்ற இடங்களில் பலவித உதவியாளர்கள்—சில சமயம், தொழில் அதிபர்களோடு நெருங்கிய தொடர்புள்ளவர்கள்—தொழிலாளர் ஸ்தாபனத்தின் பொறுப்பு ஏற்க முன்வந்தார்கள். ஆமதாபாதில் ஆலை அதிபர்களோடு நெருங்கிய தொடர்புடைய காந்தி வர்க்க அமைதி என்ற அடிப்படையில் தனிவகை தொழிலாளர் நிறுவனம் ஒன்றை அமைத்தார்; இன்றுவரை ஆமதாபாத் தொழிலாளர் சங்கம் இந்தியத் தொழிலாளர் இயக்கத்தினின்றும் தனித்தே இருக்கிறது.

இந்தக் காலத்தில்தான், 1920 இல், இந்தியத் தொழிற் சங்கக் காங்கிரஸ் நிறுவப்பட்டது. 1920, அக்டோபரில் பம்பாயில், தேசியத் தலைவர் லஜபத்ராய் தலைமையில் தொடக்கக் கூட்டம் நடந்தது; ஜோசப் பாப்டிஸ்டா உதவித் தலைவர். ஆரம்ப காலத்தில் இந்த நிறுவனம் ''மேல் மட்ட'' நிறுவனமாக விளங்கியது, ஏனெனில் அதன் தலைவர்கள் பலருக்குத் தொழிலாளர் வர்க்க இயக்கத்தோடு பெரும்பாலும் தொடர்பு இல்லை. ஜெனிவாவில் நடைபெறவிருந்த அனைத்து நாடுகள் தொழிலாளர் மகாநாட்டிற்குப் பிரதிநிதிகளை நியமிக்க ஒரு நிறுவனம் தேவை என்பதற்காகவே அதை நிறுவும் ஊக்கம் தந்தது. அதன் மிக ஆரம்பகாலத் தலைவர்களில் ஒருவரான என். எம். ஜோஷி, ''இந்தியாவில் தொழிற்சங்க இயக்கம்,'' என்ற தம் சிறு நூலில், (பக். 10) வாஷிங்டன் தொழிலாளர் மகாநாட்டின் பயனாகவே தொழிற் சங்கக் காங்கிரஸ் நிறுவப்பட்டதாய்க் கூறுகிறார்; ''தொழிலாளர் நிறுவனங்களைத் தொடங்க வேண்டியதன் அவசியத்தை மட்டுமல்ல, அவர்களுக்கு இடையில் ஒருவகை ஒற்றுமையை உண்டாக்கி அவர்கள் தங்கள் சிபாரிசுகளை ஒரு குரலில் சொல்ல வேண்டியதன் அவசியத்தையும்

அது தெளிவாகப் புலப்படுத்தியது. நாலாவது மகாநாட்டுக்கு சுய ராஜ்யக்கட்சித் தலைவர் ஸி.ஆர். தாஸ் தலைவர். அதிகாரபூர்வமான சொற்பொழிவுகள், வர்க்க அமைதிக் கொள்கைகளையும், தொழிலாளர்கள் அற, சமூக முன்னேற்றத்தையும் போதித்து, தொழிலாளர் சட்டங்கள் இயற்றி அவர்களுடைய நலனுக்கு வழி வகுக்க வேண்டும் என்று கோருவதாக இருந்தன. ஆரம்பகாலத் தொழிற் சங்கத்து நடுத்தரவகுப்பினர் தலைமைக்கே உரித்தான பழைய கண்ணோட்டத்தைப் பிரதிபலிப்பதற்கு உதாரணமாக, 1926 ஆம் ஆண்டு நடந்த ஆறாவது தொழிற்சங்க காங்கிரஸ் மகாநாட்டுத் தலைவரின் சொற்பொழிவின் ஒரு பகுதியைப் பார்க்கலாம்:

''பம்பாய், மையத் தொழிலாளர் வாரியத்தினால் தொடங்கப் பெற்ற தூய்மைக் குழுவின் நற்பணியை நான் பெரிதும் மனப்பூர்வமாகப் பாராட்டுகிறேன் . . . . . . தொழிலாளர் பாவப்போக்கைக் கைவிட்டு, நேர்மையான, அமைதியான, திருப்தியான வாழ்க்கை நடத்த உதவவேண்டும் என்ற நோக்கத்தோடு குழு துவக்கப்பட்டது . . . . . . சமூகத் தொண்டர்கள் ஆங்காங்கு சென்று குடி, சூதாட்டம் முதலிய பாவச் செயல்களின் தீமைகளை விளக்குகிறார்கள். தொழிலாளருக்குத் தேவையான கல்வி இதுதான்; இதுவே அவரைச் சமூக ரீதியிலும் பொருளாதார ரீதியிலும் சிறந்த மனிதராக்கும்.''

(1926 இல் சென்னையில் நடந்த ஆறாவது தொழிற் சங்கக் காங்கிரசில் தலைவர் வி. வி. கிரியின் பேச்சு.)

1927 இல், கான்பூரில், எட்டாவது தொழிற்சங்கக் காங்கிரஸ் கூடியது; பொதுச் செயலாளரின் அறிக்கையில் வேலை நிறுத்தங்கள் பற்றின நோக்கம் கூறப்பட்டுள்ளது:

''அறிக்கையில் கண்ட காலகட்டத்தில் வேலை நிறுத்தம் எதற்கும் நிர்வாகக் குழுவினரால் அனுமதிக்கப்படவில்லை; பல தொழில்களிலும், இந்தியாவின் பல பகுதிகளிலும் உள்ள கடுமையான நிலைமைகளால், சில வேலை நிறுத்தங்களும் கதவடைப்புகளும் நிகழ்ந்தன; காங்கிரஸ் நிர்வாகிகள் அவற்றில் ஈடுபடவேண்டியதாயிற்று.''

(1927, கான்பூர், எட்டாவது தொழிற் சங்கக் காங்கிரசில், பொதுச் செயலாளர் என். எம். ஜோஷியின் அறிக்கை.)

1927 வரை தொழிற்சங்கக் காங்கிரஸ் தொழிலாளர் வர்க்கத்துப் போராட்டத்துடன் மிகச் சிறிய நேர்த்தொடர்பே கொண்டிருந்தது. ஆயினும், புதிதாய் உருவாகிவந்த தொழிற் சங்கத்

தலைவர்கள் ஒருங்கே கூட அதுவே பொது மேடை ஆயிற்று; எனவே, தொழிலாளர் வர்க்கப் போராட்ட மூச்சுக் காற்று காலப் போக்கில் அதை அணுகத்தான் போகிறது. இந்தப் புதிய காலகட்டம் 1927 இல் ஆரம்பமாயிற்று. 1927 அளவில் தொழிற்சங்கக் காங்கிரஸ் ஐம்பத்தேழு இணைந்த சங்கங்களை ஒன்று சேர்த்தது; அதன் உறுப்பினர் தொகை, 150,555.

## 4. அரசியல் விழிப்பு

இந்தியத் தொழிலாளர் இயக்கத்தின் தொடக்கத்தில் பெயரளவுத் தலைமை வாய்ந்தது என்றாலும், சென்ற இரு பத்தாண்டுகளில் தொழிலாளர் வர்க்க இயக்கம் உருவானதன் பொருட் செறிவைப் பற்றி அரசுக்கு எவ்வித ஐயப்பாடும் இல்லை. 1921 இல் ஏற்பட்ட தொழில்துறைக் கொந்தளிப்பைப் பற்றி விசாரிக்க வங்காளக் கமிட்டியும், 1922 இல் பம்பாய் தொழில்துறை சச்சரவுகள் கமிட்டியும், 1919-20 இல் மதராஸ் தொழிலாளர் துறையும், அதைத் தொடர்ந்து பம்பாய்த் தொழில் துறையும் அரசாங்கம் ஏற்படுத்தியதிலிருந்து அதன் கவலையை அறியலாம். 1921 இல் ஒரு தொழிற்சங்க மசோதா தயாரிக்கப்பட்டது; ஆயினும் 1926 வரை சட்டம் ஆக்கப்படவில்லை. 1921 முதல் தொழில்துறைச் சச்சரவுகளைப் பற்றின புள்ளிவிவரங்கள் முறையாகப் பதிவு செய்யப்பட்டன. இயக்கத்தின் முன்னேற்றத்தைத் தெளிவாய்ப் புரிந்துகொள்ள இந்தப் பதிவுரு (கீழே உள்ள அட்டவணையைப் பார்க்க) பயன்படுகிறது. இந்த மொத்தத்தில், பாதிக்குமேல், வேலை நாட்களின் அளவில், பருத்தித்துணி ஆலைகளில், அதிலும் பாதிக்குமேல், பம்பாயில் நடந்தவை.

போராட்டத்தின் மூன்றுகால கட்டங்கள் தெளிவாகப் புலப்படுவதைக் காணலாம். முதலாவது போருக்குப் பிந்தைய அலையின் தொடர்ச்சி; சம்பளவெட்டு அச்சுறுத்தலை எதிர்த்து 1925 இல் நடந்த வெற்றிகரமான பெரும் பம்பாய் பருத்தி வேலை நிறுத்தம்; மூன்றுமாதப் போராட்டத்துக்குப்பின் அதை வாபஸ்பெற வேண்டியதாயிற்று. இரண்டாவது, 1928-29 இல் அரசியல் நிலையிலும் தொழில் துறையிலும் இணைப்பாக ஏற்பட்ட விழிப்பு. மூன்றாவது, 1937 இல் காங்கிரஸ் அமைச்சரவைகள் அமைக்கப்பட்டபின் ஏற்பட்ட புதிய முன்னேற்றம்; அது இன்னும் முன்னேக்கிச் செல்கிறது.

தொழில்துறைச் சச்சரவுகள்

| ஆண்டு | வேலை நிறுத்தங்கள், கதவடைப்புகளின் எண்ணிக்கை | ஈடுபட்ட தொழிலாளர்கள் | நஷ்டமான வேலை நாட்கள் |
|---|---|---|---|
| 1921 | 396 | 600,351 | 6,984,426 |
| 1922 | 278 | 433,434 | 3,972,727 |
| 1923 | 213 | 301,044 | 5,051,704 |
| 1924 | 133 | 312,462 | 8,730,918 |
| 1925 | 134 | 270,423 | 12,578,129 |
| 1926 | 128 | 186,811 | 1,097,478 |
| 1927 | 129 | 131,655 | 2,019,970 |
| 1928 | 203 | 506,851 | 31,647,404 |
| 1929 | 141 | 532,016 | 12,165,691 |
| 1930 | 148 | 196,301 | 2,261,731 |
| 1931 | 166 | 203,008 | 2,408,123 |
| 1932 | 118 | 128,099 | 1,922,437 |
| 1933 | 146 | 164,938 | 2,168,961 |
| 1934 | 159 | 220,808 | 4,775,559 |
| 1935 | 145 | 114,217 | 973,457 |
| 1936 | 157 | 169,029 | 2,358,062 |
| 1937 | 379 | 647,801 | 8,982,000 |
| 1938 | 399 | 401,075 | 9,198,708 |
| 1939 | 406 | 409,189 | 4,992,795 |
| 1910 | 322 | 452,539 | 7,577,281 |
| 1941 | 359 | 291,054 | 3,330,503 |
| 1942 | 694 | 772,653 | 5,779,965 |
| 1943 | 716 | 525,088 | 2,342,287 |
| 1644 | 658 | 550,015 | 3,447,306 |
| 1945 | 848 | 782,192 | 3,340,892 |

இந்தக் கால கட்டம் நெடுகிலும் அரசு நியமித்த விசாரணைக் குழுக்கள் வாயிலாக, தொழிலாளர் வர்க்கத்தின் போராட்ட சக்தி போருக்குப் பிந்தின ஆண்டுகளில் எல்லாம் மிகுந்து வந்த தைக் கண்டது; தொழிலாளர் வர்க்கத்தின் இவ்வெழுச்சி

வர்க்கவுணர்வுள்ள தலைமையின்கீழ், உறுதியான நிறுவன அமைப்பும் அரசியல் விழிப்பும் பெறுமாயின் ஏகாதிபத்தியத்தின் முழு அடிப்படைக்கே நேரக்கூடிய அபாயத்தை அரசு மிகவும் கூர்மையாக உணர்ந்திருந்தது. இயக்கத்தைப் 'பாதுகாப்பான' வழிகளில் எப்படி செலுத்துவது என்பதே அவர்கள் பிரச்னை; அல்லது, அவர்களுடைய அறிக்கைகளில் ஒன்று குறிப்பிடுவது போல் ''சரியான மாதிரித் தொழிற்சங்க முறை'' உண்டாக்கு வதற்கு வழி காண்பதே அவர்கள் பிரச்னை—ஓர் ஏகாதிபத்திய நாட்டைவிட ஒரு காலனி நாட்டில் மிகவும் சிரமமான காரியம். 1926 ஆம் ஆண்டுத் தொழிற்சங்கச் சட்டத்தின் நோக்கம் இதுவே; குறிப்பாக, தொழிலாளர்கள் அரசியல் பணிகளில் ஈடுபடக்கூடாது என்று அது தடை விதிக்கிறது. இந்த நோக்கம் தான்-தொழிலாளர்கள் அரசியல் விழிப்பு கொண்டுவிடுகிருர் களோ என்று அரசு கண்களில் எண்ணெயிட்டுக் கொண்டு விழிப்பாய்க் கவனித்துக் கொண்டிருக்கவும் காரணம் ஆயிற்று.

ஆயினும், தடைகள் அனைத்தையும் மீறி, ஆரம்பகாலத்தில் இருந்த குழப்பங்களின் வழியே, தொழிலாளர் வர்க்கத்து அரசியல் விழிப்பும், சோஷலிச, கம்யூனிசக் கருத்துகளும், போருக்குப் பிந்தின ஆண்டுகளில் இந்தியாவை மெதுவாக அணுகிக் கொண்டிருந்தன. 1920 லிருந்து இன்னும் பலவீன மாகவே இருந்த கம்யூனிஸ்டுக் கட்சியின் இலக்கியம் பரவலா யிற்று. 1924 முதல், எஸ். ஏ. டாங்கேயை ஆசிரியராய்க் கொண்டு பம்பாயிலிருந்து ''சோஷலிஸ்டு'' என்ற பத்திரிகை வெளிவரலாயிற்று; இந்த ஆசிரியரே பின்னர் தொழிற்சங்கக் காங்கிரசின் துணைச்செயலாளர் ஆனுர். அரசு கால தாமதம் செய்யாது தாக்கியது. 1924 இல் (இங்கிலாந்தில், தொழி லாளர் கட்சி ஆட்சியின் கீழ்) நான்கு கம்யூனிஸ்டுத் தலைவர்கள், டாங்கே, சௌகத் உஸ்மானி, முஜபர் அகமது, தாஸ்குப்தா மீது கான்பூர் சதிவழக்கு நடந்தது. நால்வரும் நாலாண்டுச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. அரசியல் தொழிலாளர் வர்க்கத் தின் ஞானஸ்நாநம் இது.

அடக்கு முறையால் விழிப்பு பரவுவதைத் தடுக்க முடியாது. 1926-27 அளவில் சோஷலிசக் கருத்துகள் பரவ லாகப் பரவிக் கொண்டிருந்தன. அரசியல் தொழிலாளர் வர்க்கத்திலும் சோஷலிஸ்ட் நிறுவனத்திலும் புதிய தொடக்க வடிவம் ஒன்று தொழிலாளர்கள், உழவர்கள் கட்சி களில் தோன்றலாயிற்று. தேசீய காங்கிரசிலுள்ள இடதுசாரி களோடு தொழிற்சங்க இயக்கத்திலுள்ள போர்க்குணம் வாய்ந்த சக்திகளை இணைத்தது. 1926 இல் முதலாவது பாட்டாளிகள்

குடியானவர்கள் கட்சி வங்காளத்தில் உருவாக்கப்பட்டது; மற்றவை பம்பாயிலும், ஐக்கிய மாகாணங்களிலும், பஞ்சாபிலும் தொடர்ந்தன. 1928 இல் இவை யாவும் அனைத்திந்தியப் பாட்டாளி உழவர்கள் கட்சியில் இணைந்தன; அதன் முதல் காங்கிரஸ் (மகாநாடு) 1928 இல் நடைபெற்றது. அரசியல் உணர்ச்சியின் இந்த வெளியீடு தொடக்கக்காலக் குழப்பங்களின் பலவகைகளால் பாதிக்கப்பட்டாலும், புதிய சக்திகள் வளர்ச்சி பெறுவதைக் காட்டியவாறு, தொழிலாளர் வர்க்க விழிப்பின் புதிய அலையோடு சேர்ந்துகொண்டது; புதிய விழிப்பின் முதல் அறிகுறிகள் 1927 இல் தோன்றலாயின.

1927 இளவேனிலில் நடந்த,தொழிற்சங்க காங்கிரஸ் தில்லிக் கூட்டத்தில் (அதில் பிரிட்டிஷ் பாராளுமன்ற கம்யூனிஸ்டு உறுப்பினர் ஷாபுர்ஜீ சக்லத்வாலா கலந்து கொண்டார்), அதை விடச் சிறப்பாக ஆண்டின் பிற்பகுதியில் நடந்த கான்பூர் கூட்டத்தில், தொழிற்சங்கத் தலைமைக்குள்ளேயே அறைகூவும் போர்க்குரல் எழுப்பும் சக்திகள் இருப்பது வெளிப்பட்டது. புதிய பாட்டாளி வர்க்கத் தலைமைக்கு இந்தியத் தொழிற்சங்க வாதிகளில் பெரும்பாலோரின் ஆதரவு இருந்தது என்று விரைவாக வெளிப்பட்டது; ஆயினும், உண்மையான வாக்குப் பலத்தை மெதுவாகப் பதிவு செய்வதன் மூலம் தாமதப்படுத்தி, 1929 இல்தான் பெரும்பான்மையினருக்கு அதிகார பூர்வமான அங்கீகாரம் கிடைத்தது. 1927, மே முதல் நாள் தொழிலாளர் தினமாகப் பம்பாயில் முதன்முறையாகக் கொண்டாடப் பட்டது—சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தில் இந்தியத் தொழிலாளர் இயக்கம் ஒரு பகுதியே என்னும் உணர்வு தோன்றி ஒரு புதிய சகாப்தம் தொடங்குவதன் சின்னம்.

போருக்குப் பிந்தினகால கட்டத்தில் வேறு எந்த ஆண்டும் காணாத அளவு தொழிலாளர் வர்க்க முன்னேற்றமும் செயல்களும் மண்டிய மிகப்பெரும் அலையை 1928 கண்டது. முன்னேற்றத்தின் நடுநாயகம் பம்பாய். முதன் முறையாக ஒரு பாட்டாளி வர்க்கத் தலைமை உருவாகிவிட்டது; தொழிற்சாலைகளில் உள்ள பாட்டாளிகளுக்கு நெருக்கமானது; வர்க்கப் போராட்டக் கொள்கைகளால் வழிநடத்தப்படுவது; பொருளாதார அரசியல் களத்தில் ஒரே சக்தியாகச் செயல்படுவது. தொழிலாளர்களின் ஆதரவு பிரமிப்பு ஊட்டுவதாக இருந்தது. பிப்ரவரியில் வந்த சைமன் கமிஷனை எதிர்த்து நடந்த அரசியல் வேலை நிறுத்தங்களும் ஆர்ப்பாட்டங்களும், அச்சமயத்தில் தொழிலாளர்களைத் தேசீயப் போராட்டத்தின் முன்னணியில் வைத்தன; ஏனெனில், காங்கிரஸ் தலைமையும், சீர்திருத்தத்

தொழிற்சங்க வாதிகளின் தலைமையும் அந்தப் போராட்டம் பற்றிச் சந்தேகம் கொண்டிருந்தனர்; அதன் வெற்றியைக் கண்ணுற்றுத் துணுக்குற்றனர். பம்பாய் நகராட்சித் தொழிலாளர்கள் பலர் பழிவாங்கப்பட்டனர்; ஆர்ப்பாட்டங்களில் கலந்துகொண்டதற்காக வேலையிலிருந்து நீக்கப்பட்டனர்; மற்றுமொரு வேலை நிறுத்தத்தின் நிர்ப்பந்தத்தால் மீண்டும் அவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டனர்.

தொழிற்சங்க நிறுவனம் தாவி முன்னேறியது. அரசாங்கப் புள்ளி விவரப்படி, பம்பாயில் தொழிற்சங்க உறுப்பினர் தொகை, 1923-26 ஆகிய மூன்று ஆண்டுகளில் 48,669 லிருந்து 59,544 ஆகத்தான் உயர்ந்தது, 1927 இல் 75,602 ஐ எட்டியது, 1928 மார்ச்சுக்குள் 95,321 க்குப் பாய்ந்தது, 1929 மார்ச்சில் 200,325 க்குத் தாவிவிட்டது. இந்த முன்னேற்றத்தின் முன்வரிசையில் இருந்தது, பம்பாய் மில் தொழிலாளர்களின் புகழ்பெற்ற கிர்னி காம்கார் யூனியன் (செங்கொடி); அது அவ்வாண்டில் 324 உறுப்பினர்களோடு தொடங்கி, டிசம்பர், 1928 க்குள் 54,000 க்கும் 1929 முதல் மூன்று திங்கள்களுக்குள் 65,000 க்கும் ஏறிவிட்டதாய் அரசின் தொழிலாளர் கெஜட் அறிவிக்கிறது. அதே சமயம், 1926 இல் நிறுவப்பட்டு, தொழிற்சங்கக் காங்கிரசின் செயலாளரான என். எம். ஜோஷியின் சீர்திருத்தவாதத் தலைமை காரணமாகத் தேக்கம் கொண்டிருந்த பழைய பம்பாய்த் துணித்தொழிலாளர் சங்கம், அரசின் ஆதரவும் தொழிலதிபர்களின் ஆதரவும் காரணமாக, 1928 அக்டோபரில் 8,436 ஆக இருந்த உறுப்பினர் தொகை 1928 டிசம்பரில் 6,749 ஆகக் குறையப் பெற்றது என அதே கெஜட் கூறுகிறது. தொழிலாளர்கள் எப்பக்கம் என்பது தெளிவு. தொழிலாளர்களுக்கு மிக நெருங்கிய மில் கமிட்டிகள் அமைப்பு முறையில்தான் கிர்னி காம்கார் யூனியனின் வலிமை இருந்தது.

1928-ன் வேலை நிறுத்த இயக்கம் 3·1½ கோடி வேலை நாட்களைப் பாதித்தது; முந்தின ஐந்தாண்டுகளின் மொத்தத்தைவிட மிகுதி. பம்பாய் துணித் தொழிலாளர்கள் மையமாக இருப்பினும், இயக்கம் இந்தியா முழுவதும் பரவியிருந்தது. 203 சச்சரவுகளில் பம்பாயில் 111, வங்காளத்தில் 60, பீகார் ஒரிஸ்ஸாவில் 8, மதராசில் 7, பஞ்சாபில் 2; பருத்தி, கம்பளித் துணித்தொழிலில் 110, சணலில் 19, பொறியியல் தொழிற்பட்டறைகளில் 11, ரயில்வேக்களிலும் ரயில்வே பட்டறைகளிலும் 9, நிலக்கரிச் சுரங்கத்தில் 1. மற்ற எல்லாவற்றையும்விட உயர்ந்தோங்கி இருந்தது, பம்பாய் துணித்தொழிலாளர் வேலை

நிறுத்தம்; இந்தியாவின் வரலாற்றிலேயே மாபெரும் வேலை நிறுத்தம்; ஏப்ரல் முதல் அக்டோபர் வரை ஆறுமாதகாலம் ஒவ்வொருவகை நிர்ப்பந்தத்தையும் அரசின் வன்முறையையும் எதிர்த்து, 1,50,000 தொழிலாளர்களைக் கொண்ட முழுப்படையும் ஒற்றுமையாகப் போராடியது. வேலை நிறுத்தம் தொடக்கத்தில் யந்திர மாறுதலையும் $7\frac{1}{2}$ சதவீதச் சம்பள வெட்டையும் எதிர்த்து ஆரம்பிக்கப்பட்டது; பின்னர் வேறுபல கோரிக்கைகளாக வளர்ந்தது. சீர்திருத்தத்தலைமை முதலில் வேலை நிறுத்தத்தை எதிர்த்தது, என். எம். ஜோஷி தாங்கள் வெறும் ''பார்வையாளர்கள்'' என்று தம் நிலையை வருணித்தார்; ஆனால், அவர்களும் போராட்டத்தில் இழுக்கப்பட்டனர். வேலை நிறுத்தத்தை முறிக்க அரசாங்கத்தின் முயற்சிகள் யாவும் பயனற்றுப் போகவே, பாசெட் கமிட்டியை நியமித்தது; அது $7\frac{1}{2}$ சதவீதச் சம்பளவெட்டை நீக்குமாறும், தொழிலாளர்களின் வேறு சில கோரிக்கைகளை ஏற்குமாறும் சிபாரிசு செய்தது.

ஆக, 1929 தொடக்கத்தில் நெருக்கடியான ஒரு நிலையை அடைந்ததாகி விட்டது. பொருளாதார அரசியல் அரங்கில் தொழிலாளர் வர்க்க இயக்க முன் வரிசைக்குவந்து கொண்டிருந்தது. பழைய சீர்திருத்தவாதத் தலைமை ஒருபுறமாய் ஒதுக்கப்பட்டுக் கொண்டிருந்தது. இந்திய தொழிற்சங்கக் காங்கிரசை, ஐரோப்பாவிலுள்ள சீர்திருத்த மனப்பான்மை கொண்ட சர்வதேச தொழிற் சங்கத்தோடு இணைக்கும் நோக்கோடு, பிரிட்டிஷ் தொழிற்சங்க காங்கிரசின் தூது கோஷ்டி ஒன்று இந்தியாவுக்கு 1927-28இல் வந்தது; அதன்மீது ஏகாதிபத்தியம் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தது; (''பிரிட்டிஷ் தொழிற்சங்கக் காங்கிரஸ் அண்மையில் இந்தியத் தொழிலாளர்களின் நிலைமைகளில் காட்டும் அக்கறை மிகவும் நன்மை பயப்பதாக இருக்கும், அதனால் இந்தியத் தொழிலாளர் சங்கங்கள் சிறப்பான நிறுவன முறை பெற்று, கம்யூனிஸ்டு சக்திகள் வெளியேற்றப்படுவதாயின்''— லண்டன் டைம்ஸ், ஜூன் 14, 1928) ஆனால், தூது கோஷ்டியின் நோக்கம் தோல்வி கண்டது. அரசாங்கம் தன் அச்சத்தை மறைக்கவில்லை. 1929 ஜனவரியில் வைசிராய் இர்வின் பிரபு சட்ட மன்றத்தில் பேசுகையில், ''அமைதியைக் குலைக்கும் கம்யூனிசக் கொள்கைகள் பரவுவதால் கவலையாக இருக்கிறது,'' என்று குறிப்பிட்டு அரசு நடவடிக்கை எடுக்க விழைவதாக அறிவித்தார். ''கம்யூனிஸ்டுப் பிரசாரமும் செல்வாக்கும் வளர்ச்சியுறுவதை—குறிப்பாக, பெரிய நகரங்களிலுள்ள தொழில்துறையிலுள்ள வகுப்பினருக்கு இடையில் வளருவதைக் கண்டு அதிகாரிகளுக்கு கவலை உண்டாயிற்று,'' என்று அரசு வெளியிட்ட ''1928-29 இல் இந்தியா'' என்ற ஆண்டு அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கிலாந்திலுள்ள

லிபரல் கட்சியினர் இந்த அச்சத்தை எதிரொலித்தனர். 1929, ஆகஸ்டில், மான்செஸ்டர் கார்டியன் எழுதியது: ''பெரும் நகரிலுள்ள தொழில் துறைத் தொழிலாளர்கள், விவஸ்தை கெட்ட கம்யூனிஸ்ட் அமைப்பாளர்களின் விருப்புக்கு வளைந்து கொடுக்கக் கூடிய பொருளாய் விளங்குகிறுர்கள் என்பது சென்ற இரண்டு வருட அனுபவம்.'' இந்தக் கூப்பாட்டில் இந்திய தேசீய செய்தித் தாள்களும் சேர்ந்து கொண்டன. ''சோஷலிசம் எங்கும் விரவியுள்ளது; சென்ற பல மாதங்களாகவே பல மகாநாடுகளில்' குறிப்பாக, தொழிலாளர்கள், குடியானவர்களின் மகாநாடுகளில் சோஷலிஸ்டுக் கொள்கைகள் போதிக்கப்பட்டு வருகின்றன,', என்று 1929, மேயில் பம்பாய் க்ரானிகிள் எழுதியது. தங்கள் காலடிப் பூமி நழுவுவதைக் கண்ட சீர்திருத்த வாதத்தலைவர்கள் கடுமையான நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும் என்று கோரினுர்கள். தொழிற்சங்கக் காங்கிரஸ் நிர்வாகக் குழு தலைவரான சிவராவ் 1928 மே மாதத்திலேயே, ''இந்தியாவின் தொழிற் சங்க இயக்கம் தன் ஸ்தாபனத்திலிருந்து விஷமிகளைக் களையெடுத்து அகற்ற வேண்டிய காலம் வந்துவிட்டது; ஓர் எச்சரிக்கை மிக மிக அவசியம்; ஏனெனில் சில நபர்கள் வேலை நிறுத்த போதனையை உபதேசித்தவாறு அலைகிருர்கள்,'' என்று அறிவித்து விட்டார்.

1929 இல் அரசு செயல்பட்டது; தொழிலாளர் வர்க்க இயக்கத்தின் முன்னேற்றத்தைத் தடுக்க முழு அளவில் தாக்குதலைத் திருப்பியது. 1929 செப்டம்பரில், அதிகாரபூர்வமான அறிக்கைப்படி, ''இந்தியாவில் கம்யூனிஸ்டுகளின் செய்கைகளை ஒடுக்கும்''நோக்கத்துடன் மக்கள்—பாதுகாப்பு மசோதா கொண்டு வரப்பட்டு, சட்ட மன்றத்திஞல் நிராகரிக்கப்பட்டது; 1929 இளவேனிலில் அது ஓர் அவசரச் சட்டமாக வைசிராயிஞல் அறிவிக்கப்பட்டது. தொழிலாளர் பற்றின விட்லி கமிஷன் நியமிக்கப்பட்டது. மத்தியஸ்த யந்திரம் ஏற்படுத்தவும், அனுதாப வேலை நிறுத்தங்களைத் தடுக்கவும், பொதுநலப்பணிகளில் வேலை நிறுத்தம் செய்யும் உரிமையைக் கட்டுப்படுத்தவும் தொழில்கள் தகராறுச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. பம்பாய் கலவரக் கமிட்டி நியமிக்கப்பட்டது; ''பம்பாயிலுள்ள கம்யூனிஸ்டுகளின் நடவடிக்கைகளுக்கு எதிராக அரசு கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும்,'' என்று சிபாரிசு செய்தது அது; ''பதிவு செய்யப்பட்ட தொழிற் சங்கங்களின் நிர்வாகத்திலிருந்து கம்யூனிஸ்டுகளை அகற்றும் வகையில்'' தொழிற்சங்கச் சட்டத்தை ஏன் திருத்தலாகாது என்ற விஞவையும் அது எழுப்பியது.

## 5. மீரத் விசாரணை

1929 மார்ச்சில் அரசின் முக்கியமான முதல் அடி விழுந்தது. தொழிலாளர் வர்க்கத்தின் முக்கியமான, செயல்வல்ல தலைவர்கள் இந்தியா எங்கும் கைது செய்யப்பட்டு, மீரத் என்ற சிறு உள்நாட்டு நகரத்துக்குக் கொண்டுவரப்பட்டனர். இந்தச் சிற்றூர், தொழில் துறைப் பேரூர்களுக்குத் தொலைவில் உள்ளது. வரலாற்றிலேயே மிக நீண்ட, மிக விரிவான அரசாங்க விசாரணைகளில் ஒன்று தொடங்கியது.

முதலில் முப்பத்தொரு தலைவர்கள் கைது செய்யப்பட்டனர்; பிறகு, மற்றொருவர் சேர்க்கப்பட்டார். அவர்களுடைய பெயர்களை இங்கே பதிவு செய்யலாம்; பிற்காலத்தில் அவர்களுடைய போக்கும் பணியும் எவ்வாறு இருப்பினும், அவர்கள் இந்தியப் பாட்டாளி வர்க்க இயக்கத்தின் முன்னோடிகள்; அவர்களில் பலர் இன்றும் பாட்டாளி வர்க்கத்தின் சிறந்த தலைமைச் சக்திகளாக விளங்குகின்றனர். அவர்களுடைய பெயர்கள்:

எஸ்.ஏ.டாங்கே: தொழிற்சங்கக் காங்கிரசின் துணைச்செயலாளர்; முன்பு கான்பூர் வழக்கில் தண்டனை பெற்றவர்; கிர்ணி காம்கார் யூனியனின் பொதுச் செயலாளர்.

கிஷோரிலால் கோஷ்: வங்காள மாகாணத் தொழிற் சங்கங்களின் இணைப்புச் சங்கத்தின் செயலாளர்.

டி.ஆர். தெங்டி: தொழிற் சங்கக் காங்கிரசின் முன்னாள் தலைவர், நிர்வாக அங்கத்தினர்; அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்.

எஸ்.வி. காட்டே: தொழிற்சங்க காங்கிரசின் (1927) துணைச் செயலாளர்; பம்பாய் நகராட்சித் தொழிலாளர்கள் சங்க உதவித் தலைவா..

கே.என். ஜோக்லேகர்: ஜி.ஐ.பி. ரயில்வே ஊழியர் சங்கத்தின் அமைப்புச் செயலாளர்; அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்.

எஸ்.எச். ஜாப்வாலா: அகில இந்திய ரயில்வே ஊழியர் இணைப்புச் சங்க அமைப்புச் செயலாளர்; கிர்ணி காம்கார் யூனியனின் முன்னாள் உதவித் தலைவர்.

சௌகத் உஸ்மானி: கான்பூர் வழக்கில் தண்டனை பெற்றவர்; பம்பாய் பாட்டாளி ஏட்டின் ஆசிரியர்.

முஜபர் அகமது: தொழிற் சங்கக் காங்கிரசின் உதவித் தலைவர்; வங்காள பாட்டாளிகள், குடியானவர்கள் கட்சிச் செயலாளர்; கான்பூர் வழக்கில் தண்டனை பெற்றவர்.

[illegible]

பிலிப் ஸ்பிராட்: தொழிற் சங்க காங்கிரசின் முன்னாள் நிர் வாக அங்கத்தினர்.

பி.எப்.பிராட்லீ: பிரிட்டனிலுள்ள பொறியியல் இணைப்பு யூனியனின் லண்டன் மாவட்டக் கமிட்டியின் முன்னாள் உறுப்பினர்; ஜி.ஐ.பி. ரயில்வே ஊழியர் யூனியன், கிர்னி காம்கார் யூனியன் நிர்வாக அங்கத்தினர். அனைத்திந்திய ரயில்வே ஊழியர் இணைப்புச் சங்கத்தின் உதவித்தலைவர்; பம்பாய் துணித் தொழிலாளர் வேலை நிறுத்தத்தில் கூட்டு வேலை நிறுத்தக் கமிட்டியின் பொருளாளர்.

எஸ்.எஸ். மிராஜ்கர்: கிர்னி காம்கார் யூனியனின் துணைச் செயலாளர்.

பி.சி. ஜோஷி: ஐக்கிய மாகாணங்கள் தொழிலாளர்கள், குடியானவர்கள் கட்சிச் செயலாளர்.

ஏ.ஏ.ஆல்வே: கிர்னி காம்கார் யூனியன் தலைவர்.

ஜி.ஆர். காஸ்லே: கிர்னி காம்கார் யூனியன் அதிகாரி.

கோபால் பாஸக்: 1928 இல் நடந்த சோஷலிஸ்டு இளைஞர் மகாநாட்டுத் தலைவர்.

ஜி. எம். அதிகாரி: டாக்டர் பட்டம் பெற்றவர்; பம்பாய் சோஷலிஸ்டு ஏடு, ஸ்பார்க்கில் எழுதுகிறவர்.

எம்.ஏ. மஜீத்: கிலாபத் கிளர்ச்சியோடு 1920இல் இந்தியாவை விட்டுச் சென்றவர். ரஷியாவுக்குப் போனார்; திரும்பி யதும் சிறையிலிடப்பட்டார். பஞ்சாப், கீர்த்தி கிஸான் கட்சியின் செயலாளர்; பஞ்சாப் இளைஞர் லீக் நிறுவனர்.

ஆர்.எஸ். நிம்ப்கர்: பம்பாய் தொழில்கள் கவுன்சில், பம்பாய் மாகாண காங்கிரஸ் கமிட்டி செயலாளர்; அனைத்திந்திய பாட்டாளிகள், குடியானவர்கள் கட்சிப் பொதுச் செய லாளர்; அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்.

விசுவநாத் முக்கர்ஜீ: ஐக்கிய மாகாண பாட்டாளிகள் குடி யானவர்கள் கட்சித் தலைவர்.

கிதார்நாத் ஸஹகல்: பஞ்சாப் காங்கிரஸ் கமிட்டித் தலைவர்; பஞ்சாப் மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் நிதிச் செயலாளர்; அனைத்திந்திய இளைஞர் லீக் உறுப்பினர்.

ராதா ரமண் மித்ர: வங்காளச் சணல் தொழிலாளர் யூனி யன் செயலாளர்.

தர்ணீ கே. கோஸ்வாமி: வங்காளப் பட்டாளிகள் குடியான வர்கள் கட்சிச் செயலாளர்; பிரபல தொழிற்சங்கவாதி.

கௌரி சங்கர்: ஐக்கிய மாகாணங்கள் பாட்டாளிகள் குடி யானவர்கள் கட்சி நிர்வாகக் குழு அங்கத்தினர்.

ஷாமுல் ஹுடா: வங்காளப் போக்குவரத்துத் தொழிலாளர் யூனியன் செயலாளர்.

சிப் நாத் பானர்ஜீ: வங்காளச் சணல் தொழிலாளர் யூனியன் தலைவர்; முன்பு, கரக்பூர் ரயில்வே வேலை நிறுத்தம் சம்பந்தமாக ஓராண்டு சிறைத் தண்டனை விதிக்கப்பட்டவர்.

கோபேந்திர சக்கரவர்த்தி: கிழக்கு இந்திய ரயில்வே யூனியன் அதிகாரி; கரக்பூர் ரயில்வே வேலை நிறுத்தம் சம்பந்தமாக முன்பு ஒன்றரை ஆண்டு சிறைத்தண்டனை பெற்றவர்.

ஸோஹன் சிங் ஜோஷ்: அனைத்திந்தியப் பாட்டாளிகள் குடியானவர்கள் கட்சி முதல் மகாநாட்டின் தலைவர்.

எம். ஜி. தேசாய்: பம்பாய் சோஷலிஸ்டு ஏடு, ஸ்பார்க்கின் ஆசிரியர்.

அஜுத்ய பிரஸாத்: வங்காளப் பாட்டாளிகள் குடியானவர்கள் கட்சியின் சுறுசுறுப்புமிக்க உறுப்பினர்.

லட்சுமணராவ் கதம்: ஜான்ஸியில் உள்ள நகராட்சித் தொழிலாளர்கள் யூனியனின் அமைப்பாளர்.

எச்.எல். ஹட்சின்சன்: நியூ ஸ்பார்க்கின் ஆசிரியர்.

முப்பத்திரண்டாவது நபராகப் பின்னர் கைது செய்யப்பட்டவர் லெஸ்டர் ஹட்சின்சன் என்ற ஆங்கிலப் பத்திரிகைக்காரர்; கைதுகளுக்குப் பிறகு நியூ ஸ்பார்க்கின் ஆசிரியராகப் பொறுப் பேற்றார்; ஆகையால், அவரும் வழக்கில் சேர்க்கப்பட்டார்.

கைதான நபர்களில் தொழிற்சங்கக் காங்கிரசின் உதவித் தலைவர் ஒருவர், முன்னாள் தலைவர் ஒருவர், இரண்டு உதவிச் செயலாளர்கள் என்பதையும்; பம்பாய், வங்காள மாகாணத் தொழிற்சங்க இணைப்புச் சங்கச் செயலாளர்கள்; கிர்னி காம்கார் யூனியனின் அதிகாரிகள் அனைவரும், ஜி.ஐ.பி. ரயில்வே ஊழியனைச் சேர்ந்த பலர், வேறுபல யூனியன்களைச் சேர்ந்த பலர், வங்காளம், பம்பாய், ஐக்கிய மாகாணங்களின் பாட்டாளிகள் குடியானவர்கள் கட்சிகளின் செயலாளர்களும் மற்ற நிர்வாகிகளும் என்பதையும் காணலாம். பம்பாய் மாகாணச் செயலாளர் உட்பட மூன்று அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்கள் கைது செய்யப்பட்டனர். கான்பூரில் தண்டனைபெற்ற நால்வரில் மூவர் விசாரணைக்கு ஆளாயினர். மூன்று ஆங்கிலேயர்கள் கைதாயினர். இந்த மூவரும் ஆங்கிலேயப் பாட்டாளி மக்களின் இயக்கத்துப் பிரதிநிதிகளாய் இந்தியப் பாட்டாளிகளோடு குற்றவாளிக் கூண்டில் நின்று, பின் அவர்களோடு சிறைபுகுந்த காட்சி சர்வதேசப் பாட்டாளி வர்க்கத்தின் ஒற்றுமைக்கு ஜீவனுள்ள, வரலாற்றுச் சிறப்புள்ள காட்சியாகும்; பழைய எல்லைக் கற்களை

உடைத்து எறிந்துவிட்டுப் பிரிட்டிஷ் மக்களும் இந்திய மக்களும் எதிர் காலத்தில் மேற்கொள்ளப் போகும் சகோதர உறவைக் குறிக்கும் எல்லைக் கல்லாக இந்த நிகழ்ச்சி விளங்குகிறது.

இந்தியத் தொழிலாளர் வர்க்கத்துக் கைதான தலைவர்கள் ஒழுகிய நேர்த்தி, இந்தியத் தொழிலாளர் வர்க்க இயக்கம் இன்னும் தொடக்க நிறுவன நிலையில் இருந்தபோதிலும் தன் பணியைப் பற்றின முழு உணர்வையும் பெருந்தன்மையையும் பெற்றுவிட்டது என்பதை வெளியிட்டது. குற்றம் சாட்டப் பட்டோரின் தற்காப்புப் பேச்சுகள், இந்தியத் தொழிலாளர் இயக்கத்தின் மிக மதிப்புள்ள ஆவணங்களாகும்.

குற்றவாளிக் கூண்டிலிருந்து இத்தகு அறிவிப்புகள் செய்யப் படுகையில் ஒரு புதிய இந்தியா தோற்றம் கொண்டது:

> ''அரசியல், வரலாற்றுப் பொருள் பொதிந்த வழக்கு இது. போலீஸ்காரர்கள் மாமூலான தங்கள் கடமையாற்று கையில் 31 குற்றவாளிகளைப் பிடித்து அவர்கள்மீது தொடுக் கப்பட்ட வழக்கல்ல இது. வர்க்கப் போராட்டத்தில் இது ஒரு ரசமான நிகழ்ச்சி. ஒரு நிச்சயமான அரசியல் கொள் கையின் ஒரு பகுதியாக இவ்வழக்கு தொடுக்கப்பட்டுள்ளது, நடத்தப்படுகிறது. இந்தியாவின் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய அரசின் தரப்பிலிருந்து தன் உண்மையான எதிரி என்றும் இறுதியில் தன்னை ஒழிக்கவல்லது என்றும் அதற்குத் தெரிந்த ஒரு சக்தியை ஏற்கனவே தன்பால் அடக்கொணுப் பகைமை கொண்டுள்ள சக்தியை, முன்பே மிக அபாயகரமான தன் வலிமையை, இந்நாட்டு ஏழை, சுரண்டலுக்கு ஆளான மக்கள் சமுதாயத்தைக் காட்டும் சக்தியைத் தாக்கியடிப் பதற்காகச் செய்யப்படும் ஒரு முயற்சியே இவ்வழக்காகும்.''
>
> (ராதாரமண் மித்ரவின் வாக்கு மூலம்.)

> ''மாட்சிமை தங்கிய மன்னர் சக்கரவர்த்திகளுக்கு விரோதமாக நான் சதி செய்ததாய் என்மீது குற்றம் சாட்டப் பட்டுள்ளது. நான் சதி செய்யாததால் நான் குற்றவாளி அல்ல என்று அழுத்தம் திருத்தமாக உரைக்கின்றேன். ஒரு கம்யூ னிஸ்டு தனிநபர் ஒருவருக்கு விரோதமாகச் சதி செய்வதில்லை. தொழிலாளர் வர்க்கக் கட்சிகளில் மிகவும் முற்போக்கான பிரிவினர் என்பதாலும், கொள்கை பூர்வமாகப் பாட்டாளி வர்க்கத்தின் முன்னிற்பவர்கள் என்பதாலும், பாட்டாளி இயக்கத்தின் தீர்மான சக்திகளைப் புரிந்துகொள்ள வல்லவர் களாயும், அதன் பாதையையும் அதன் பொதுவான முடிவு களையும் முன்னதாய்க் காண்பது எப்படி என்று அறிந்தவர்

களாயும் இருப்பவர்கள் என்பதாலும் கம்யூனிஸ்டுகள் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்திலுள்ள உண்மையான வர்க்கப் போராட்டத்தின் தூலமான சூழ்நிலைகளைப் பொதுவான வழக்கு மொழியிலே வெளியிடவே பயன்படுகிறுர்கள்.

''ஏற்கனவே நான் குறிப்பிட்ட என் கருத்துகளுக்காகவும் நோக்கங்களுக்காகவும் இந்த வழக்கு மன்றத்தால் ஒருகால் நான் தண்டனை விதிக்கப்படத்தக்கவனுனல், அது. அத் தண்டனை, முதலாளித்துவத்திடமிருந்து இந்தியச் சுரண்டலைக் கவர்ந்து. அதன் வாயிலாய், பாடுபடும் கோடிக்கணக்கான மக்களுக்கு விடுதலை கண்டு அவர்களைக் காப்பாற்ற விழைவு கொண்டதற்கு விதிக்கப்பட்ட தண்டனையே ஆகும். இக் குற்றத்திற்காக என்மீது வழக்கு தொடுக்கப்பட்டுள்ளது எனில், நான் குற்றவாளியே என்று ஒப்புக்கொள்கிறேன்.''

(தரணீ கோஸ்வாமியின் வாக்கு மூலம்.)

''முதலாளித்துவத்தின் சுரண்டலினின்றும் அடக்கு முறையினின்றும் தொழிலாளர் வர்க்கம் விடுதலைபெற வேண்டும் என்பதே என் நோக்கம் ஆதலால் அப்போது மிகவும் பலவீனமாகவும் வளர்ச்சியுறுமலும் இருந்த தொழிற் சங்க நிறுவனப் பணிகளுக்கு என்னைப் பணித்துக் கொள்வதே என் தலையாய பொறுப்பு.

''தொழிற்சங்க இயக்கம் ஒரு தொழிலிலுள்ள சம்பளம் ஈட்டுவோர் அனைவரையும் ஒருங்கு சேர்த்து, அவர்களை வர்க்க அடிப்படையில் அமைக்க வேண்டும் என்பது அதன் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்று. ஒரு தொழிற்சங்கம்—அது உண்மையான தொழிலாளர்களின் மெய்யான நிறுவனமாக இருக்கவேண்டுமானுல்—தொழிலதிபர்கள், முதலாளிகள் வர்க்கத்துக்கு எதிராக, தொழிலாளர்களின் பொருளாதார வர்க்க நலன்களைப் பிரதிபலிப்பதாக இருக்கவேண்டும். தொழிலாளர்களுக்கு வர்க்கவுணர்வு பற்றியும் வர்க்க ஒருமை பற்றியும் அடிப்படைக் கொள்கைகளைக் கற்பிக்கத் தவறும் ஒரு தொழிற்சங்கம் தன் நோக்கத்தைத் தானே கட்டாயம் தோல்வியுறச் செய்யும்.''

(கோபேன் சக்கரவர்த்தி வாக்கு மூலம்.)

''இளைஞர்களுக்கு இடையில் பணியாற்றியதாகவும், இளைஞர்கள் நிறுவனங்களை அமைத்ததாகவும் என்மீது குற்றம் சாட்டப்பட்டுள்ளது. இந்தியாவிலுள்ள ஒவ்வோர் இளைஞனும் விரும்புவதுபோல், நானும் இந்தியாவின் விடுதலையை வேண்டுகிறேன்; நான் முழுவிடுதலை வேண்டுகிறேன்; இந்தியா

முற்றிலும் தொழில் மயமாக வேண்டும், நாடு அரசியல், பொருளாதார விடுதலைபெற வேண்டும் என விரும்புகிறேன்; ஆனால் சுதந்திரத்தை வேண்டுவதும் அதற்காகப் பாடுபடுவதும் குற்றமாக இருக்கமுடியாது....

''இந்திய இளைஞன்—அவன் இன்பத்தை விரும்பினால், அவனுக்கு இரண்டு லட்சியங்கள் இருக்கவேண்டும்: ஒன்று, சுதந்திரம்; மற்றொன்று, சோஷலிஸ்டு சமூகம்.''

(கோபால் பாஸாக் தந்த வாக்கு மூலம்.)

''தனிநபர் தற்காத்துக் கொள்ளும் கேள்வியே எழாதவாறு இந்த வழக்கின் தன்மை இருக்கிறது. கட்சிக்காகவும், அதன் கருத்திற்காகவும், அது உயிரோடு இருப்பதற்கும், சர்வதேசக் கம்யூனிஸ்டு அமைப்போடு இணைந்து, அதன் உதவியைப் பெறும் உரிமைக்காகவும் வாதாட வேண்டிய வழக்கு இது....கம்யூனிசத்தின் மீதும், கம்யூனிஸ்டுகள் மீதும், சர்வதேசக் கம்யூனிஸ்டு இயக்கத்தின் மீதும் அரசாங்கத் தரப்பினர் கீழ்த்தரமான வசைமாரி பொழிந்துள்ளனர். எங்கள் குற்றம் அரசுக்கு எதிரானது மட்டுமன்று, சமூக முழுமைக்குமே எதிரானது என்று அவர்கள் உரைத்துள்ளனர். இந்த வசவை அதற்கே உரித்தான வெறுப்போடு கையாளுவேன்; ஆனால், நான் திருப்பிக் குற்றம் சாட்டுகிறேன்: மனித சமூகப் பொதுமைக்குப் பகைவர்கள், ஏகாதிபத்தியவாதிகளின் கைப்பாவைகளாய்; அவர்களிடம் உயர்ந்த கூலி வாங்கும் ஏஜண்டுகளான அவர்களே குற்றவாளிகள். நான் கேட்கிறேன்: சமூகக் குற்றவாளிகள் யார்? கண்டம் கண்டமாக நெருப்பையும் வாளையும் எடுத்துக்கொண்டு போனவர்களும், ரத்தமும் பீதியும் சொட்டும் காலனி ஆட்சிமுறை ஏற்படுத்தியவர்களும், இந்தக் கண்டங்களின் கோடிக்கணக்கான உழைப்பாளி மக்களை முற்றிலும் வறுமையிலும் பொறுக்க முடியாத அடிமைத்தனத்திலும் ஆழ்த்தித் தாழ்த்தி அவர்களை முழு மொத்தமாய் அழித்தொழிக்க முயற்சி செய்பவர்களுமான ரத்தவெறி கொண்ட ஏகாதிபத்தியவாதிகளா? அல்லது, உலக முழுமையிலுமுள்ள உழைப்பாளி மக்களின் புரட்சி சக்திகளை ஒன்றுதிரட்டி, அதை ஈரமற்ற அடக்குமுறையையும் விலங்குத்தனமான சுரண்டலையும் அஸ்திவாரமாய்க் கொண்ட இந்த நாசகார அமைப்பு மீது வீசி எறிந்து, இவ்வமைப்பினைத் தூள்தூளாக்கிவிட்டு, அந்த இடத்தில், ஒரு புதிய அமைப்பைப் படைத்து, மனித சாதியையும் அதன் நாகரிகத்தையும்—அவை எந்தக் கேட்டை நோக்கிச் செல்கின்றனவோ அதனிடமிருந்து மீட்டுக் காக்க

முயலும் கம்யூனிஸ்டுகளா? இந்த வழக்கில் சமூகக் குற்றவாளி களின் அதிகார பூர்வமான குற்றவாளிகள் அரசுத் தரப்புப் பெஞ்சுகளில் அமர்ந்துள்ளனர்.

''அனைத்துலக தொழிலாளர் இயக்கத்தின் ஒரு நூற்றாண்டு அங்கவளர்ச்சியின் விளைவே கம்யூனிஸ்டு சர்வ தேச இயக்கம் என்பதை நான் விளக்கிவிட்டேன். அதற்கு முந்தின இரண்டு அனைத்துலக இயக்கங்களினுடைய புரட்சிகர மான மரபுகளின் வாரிசு அது. பாட்டாளிப் போராட்டத் தின் பல்லாண்டு அனுபவத்தின் பேரில், சர்வதேச கம்யூனிஸ்டு இயக்கம் இன்று முதலாளித்துவ நாடுகளில் சோஷலிசத் திற்காக புரட்சிகரமான தொழிலாளர் இயக்கத்தைத் தலைமை தாங்கி நடத்துகிறது; காலனி நாடுகளில் ஏகாதி பத்தியத்துக்கு எதிராக தேசீயப் புரட்சி இயக்கத்தின்மீது வலுவான ஆதிக்கம் செலுத்துகிறது; இறுதியாக, உலகத்தின் ஆறிலொரு பகுதியில் எழுந்துள்ள சோஷலிச அமைப்பை இயக்கி வழிநடத்திச் செல்கிறது. இறுதியாகச் சொன்ன இனத்தில் கம்யூனிஸ்டு அகிலம் புரிந்துள்ள சாதனைகளே, முதலாளித்துவ நாடுகளிலுள்ள பாட்டாளிகளின் பார்வையில் அதன் ஆதிக்கமும் செல்வாக்கும் பரவுவதற்குக் காரணம், நசுக்குண்ட காலனி நாடுகளிலுள்ள கோடிக்கணக்கான உழைப்பாளி மக்களின்மீது அதன் செல்வாக்கு ஓங்குவதற்கும் அந்தச் சாதனைகளே காரணம்.

''கம்யூனிஸ்டு அகிலம் தலைமை ஏற்று நடத்தும் அனைத் துலகத் தொழிலாளர்கள் இயக்கத்துக்கு, சோவியத் ரஷ்யா இருப்பதால் வலிய ஆதரவாகும். இந்தத் தளத்திலிருந்து கம்யூனிஸ்டு அகிலம் தொடர்ந்து செயலாற்றும்; முற்போக் கான நாடுகளிலுள்ள பாட்டாளி மக்களின் துணையுடனும், கோடிக்கணக்கான காலனி நாட்டு உழைப்பாளிகளின் துணை யுடனும், முதலாளித்துவத்தையும் ஏகாதிபத்தியத்தையும் எதிர்த்து போரிட்டு அவற்றை வீழ்த்தும்.

''உலக வரலாற்றில் கம்யூனிஸ்டு அகிலம் ஒரு மாபெரும் தொழிற் கூடம்; இந்தத் தொழில் கூடம் மனித சமூகத்திற் கும் அதன் நாகரிகத்திற்குமான விதிக்குப் புதிய உருவம் தரும். இன்றைய சமூக அமைப்பு முறையின் காரணமாக நேரவிருக்கும் கேட்டினின்று அதனைக் காக்கும்.

''ஆனால், பூர்ஷ்வாக்களின் நாசகார ஏஜண்டுகளுக்கு இது புரியாது. அவர்களுக்கு கம்யூனிஸ்டு அகிலம் என்பது

ஒறுப்புச் சட்டத்து ஒரு பிரிவின் துணையோடு ஒழிக்கப்பட வேண்டிய ரகசியச் சதிக் கும்பலாகும்.''

(ஜி. எம். அதிகாரி தந்த வாக்கு மூலம்.)

சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தின் மிகவுயர்ந்த தரங்களுக்கு ஒவ்வும் விதத்தில் இவ்வழக்கில் இந்தியத் தொழிலாளர் இயக்கம் ஒழுகியதுடன், இன்று இந்தியாவில் தொழிலாளர்கள் கொடியை, சோஷலிசக் கொடியை ஏந்தி முன்னேற வேண்டிய பொறுப்புள்ளவர்களுக்கு எடுத்துக்காட்டாகவும் எழுச்சி தருவதாகவும் அது திகழ்கிறது.

அரசாங்கம் மூன்றரை ஆண்டுகள்வரை வழக்கு விசாரணையை இழுத்துக்கொண்டு போயிற்று—இந்திய வரலாற்றில் நான்கு நெருக்கடியான வருடங்கள், தொழிலாளர் வர்க்கத்தின் மிகச் சிறந்த தலைவர்கள் இவ்வாறு விலக்கி ஒதுக்கப்பட்டார்கள். ஒறுப்புச் சட்டம் 121 ஏ பிரிவின்கீழ் செய்யப்பட்ட குற்றச் சாட்டை நிரூபிப்பதற்காக யாதொரு சான்றும் தரப்படவில்லை; ஒறுப்புச் சட்டம் 121 ஏ பிரிவு பின் வருமாறு:

''பிரிட்டிஷ் இந்தியாவுக்கு உள்ளே இருப்பவர்களோ அல்லது வெளியில் இருப்பவர்களோ யாராவது 121 ஆம் பிரிவின்கீழ் தண்டிக்கத்தக்கக் குற்றங்களில் எதையாவது செய்யச் சதி செய்தாலும், அல்லது பிரிட்டிஷ் இந்திய இறைமையை அல்லது அதன் ஒரு பகுதியை மன்னரிடமிருந்து கவரச் சதி செய்தாலும், அல்லது, இந்திய அரசையோ அல்லது உள்ளூர் அரசையோ வன்முறைச் சக்தி வாயிலாய்க் கவிழ்க்கச் சதி செய்தாலும், ஆயுட்காலத்திற்கு அல்லது அதைவிடக் குறைவான காலத்திற்கு நாடு கடத்தப்படும் தண்டனையோ, அல்லது, பத்தாண்டுகள் நீடிக்கப்படக் கூடிய இரண்டிலொரு வகைக் காவல் தண்டனையோ விதிக்கப்படும்.''

குற்றத்தை நிரூபிக்கத்தக்க யாதொரு செயலையும் காட்ட முடியவில்லை என்று ஒப்புக் கொள்ளப்பட்டது. உயர்நீதி மன்றம் இவ்வாறு தொகுத்து கூறியது:

''குற்றம் சாட்டப் பெற்ற நபர்கள், குறிப்பிடப்பட்ட சதி சம்பந்தமாக, யாதொரு வெளிப்படையான, சட்ட விரோதமான செய்கை செய்ததாய்க் குற்றம் சாட்டப்படவில்லை என்பது ஏற்கப்படுகிறது.''

அரசுத் தரப்பு வழக்குரைஞர் உரைத்தார்:

"கம்யூனிஸ்டுக் கருத்துக்கள் கொண்டதற்காக அல்ல, இந்திய இறைமையை மன்னரிடமிருந்து கவரச் சதி செய்த தாய்க் கூண்டிலிருப்போர்மீது குற்றம் சாட்டப்பட்டுள்ளது. குற்றவாளிகள் உண்மையில் ஏதாவது செய்தார்களா என்பதை நிரூபிக்க வேண்டிய தேவை இந்த வழக்கின் காரணங்களுக்குக் கிடையாது; சதியை நிரூபித்தாலே போதும்."

"சதி" ஏதுமில்லை. குற்றம் சாட்டப்பட்டோரின் சோஷலிசக் கொள்கைகள் வெளிப்படையாக இருந்தன, அவர்களும் அதை வெளிப்படையாக முழங்கினார்கள்; தொழிலாளர் இயக்கப்பணியும் அது போன்றே வெளிப்படையாக இருந்தது. "வன் முறைச் சக்தி" எதையும் காணோம். நிறுவனம் மட்டும் இருந்தது; தொழிலாளர் இயக்கத் தலைமை இருந்தது.

உண்மையான குற்றச்சாட்டு குற்றப்பத்திரிகையில்தான் வெளியிடப்பட்டது; சிறைவாசிகள் "முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையில் பகைமை மூட்டினார்கள்" என்பதும், "பாட்டாளிகள் குடியானவர்கள் கட்சிகள், இளைஞர் சங்கங்கள், யூனியன்கள் முதலியவற்றை ஏற்படுத்தினார்கள்" என்பதும், வேலை நிறுத்தங்களை ஊக்கினார்கள்." என்பதும் குற்றச்சாட்டுகள். சாட்சியத்தின் முழு வலிமையும் இந்த நடவடிக்கைகளை, குறிப்பாக, தொழிற்சங்க நடவடிக்கைகளைச் சார்ந்ததே. கைதிகளில் ஒருவரைப் பற்றி-வங்காளச் சணல் தொழிலாளர் யூனியன் செயலாளர்-அரசு வழக்குரைஞர், "இவர் கல்கத்தா நகரத் துப்புரவாளர் வேலை நிறுத்தத்தில் பங்கு கொண்டது முதல் இவருடைய சதி நடவடிக்கை தொடங்கியது" என்று அறிவித்தார்.

"1928 ஆம் ஆண்டு வேலை நிறுத்தத்தினால் வெளிப்பட்டது போன்ற கடுமையான ஆதிக்கம் அவர்களுக்குப் பம்பாய்த் துணித் தொழிலாளர்கள்மீது இருப்பதும், கிர்னி காம்கார் யூனியனின் புரட்சி கொள்கையும் இன்னும் ஆழ்ந்த கவலைத் தருவனவாக இருக்கலாம்."

என்று நீதிபதியின் வழக்குத் தொகுப்புரையில், விசாரணையின் முக்கிய நோக்கத்தை அவர் அம்பலப்படுத்திவிட்டார்.

ஒரு நூற்றாண்டுக்கு முன் பிரிட்டனின் தொழிலாளர் வரலாற்றில் புகழ் பெற்ற டார்செஸ்டர் வழக்கினைப் போல், வளர்ச்சி கொள்ளும் தொழிலாளர் இயக்கத்தை ஒடுக்குவதற்கென நடத்தப்பட்ட, வரலாற்றுச் சிறப்புள்ள இந்த வழக்கு, பிரிட்டனில் தொழிலாளர் கட்சி ஆட்சியில் இருக்கையில் நடந்தது; தொழிலாளர் அரசு அதன் "முழுப் பொறுப்பை"யும் ஏற்றுக் கொண்டது ("நாங்கள் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்கிறோம்...ராஜ்யக் காரியதரிசி இந்திய அரசை வன்மையாக ஆதரிக்

கிறுர்''-1929 இல் பிரைட்டனில் நடந்த தொழிலாளர் கட்சி மாநாட்டில் டாக்டர் டிரம்மண்டு ஷீல்ஸ்). 1929, ஜூன் 25 இல் டெய்லி ஹாரால்டு, ''சட்டயந்திரம் இயங்க வேண்டும்'' என்று தீர்ப்பு வழங்கியது. 1929, அக்டோபர் முதல்நாள் சர் வால்டர் சிட்ரின், பிரிட்டிஷ் தொழிற்சங்கக் காங்கிரசுக்கு இந்தியத் தொழிற் சங்கக் காங்கிரஸ் அனுப்பிய வேண்டுகோளுக்குப் பதில் அளிக்கையில், ''எவ்வளவு விரைவாக இயலுமோ அவ்வளவு விரைவாக வழக்கு நடத்தப்பட வேண்டும்; கைதிகள் மீது சுமத்தப் பட்டிருப்பது அரசியல் குற்றம்; எனவே, இந்தியத் தொழிற்சங்க இயக்கத்தை அது நேராகப் பாதிக்கவில்லை என்று பொதுச் சபை கருதுகிறது'' என்று எழுதினர். அப்பால் வழக்கு முடிந்து. தொழிலாளர் கட்சி அரசு பதவியிலிருந்து விலகிய பின், 1933 இல் தொழிற் சங்கக் காங்கிரசும் தொழிலாளர் கட்சியும் இணைந்த கூட்டு கவுன்சில் ஒரு சிறு கைப் புத்தகம் வெளியிட்டது; அதில், ''தொடக்கம் முதல் இறுதி ஈருக நடவடிக்கைகள் முழுவதுமே வாதத்துக்கு நிற்காதவை, நீதி நிர்வாகத்தை அவதூறு செய்யும் தன்மை வாய்ந்தவை'' என்று குறிப்பிட்டது.

1933 ஜனவரியில் காட்டுமிராண்டித்தனமான தண்டனைகள் விதிக்கப்பட்டன: முஜபர் அகமதுக்கு ஆயுள்கால நாடு கடத்தல் தண்டனை; டாங்கே, காட்டே, ஜோக்ளேகர், நிம்ப்கர், ஸ்பிராட் ஆகியோருக்கு பன்னிரண்டு வருட நாடு கடத்தல்; பிராட்லி, மிராஜ்கர், உஸ்மானி ஆகியோருக்கு பத்தாண்டு நாடு கடத்தல்; மிகவும் குறைவான தண்டனை, மூன்று வருடக் கடுங் காவல்.

இந்தத் தீர்ப்பைத் தொடர்ந்து சர்வ தேசக் கிளர்ச்சி வெற்றிகரமாக நடந்ததன் விளைவாக, அப்பீலில் தண்டனைகள் வெகுவாய்க் குறைக்கப்பட்டன.[1]

1 ஒரு நூற்ருண்டில் மூன்றிலொரு பகுதி கழிந்த பிறகு, ராஜ்யக்காரியதரிசியிடமிருந்து வைசிராய்க்குப் போன கடிதம் கிடைத்துள்ளது; மீரத் வழக்கு தண்டனைகள் சம்பந்தமாக:

நேர்ப்பார்வை-தனிப்பட்ட தந்தி, ராஜ்யக் காரியதரிசியிடமிருந்து வைசிராய்க்கு. உள்நாட்டுத் துறை எண். 444, 18-2-33.

'மீரத் வழக்கில் விதிக்கப்பட்டுள்ள சில கடுமையான தண்டனைகள் எனக்கு மனக்கவலை தருகின்றன. இவ்விஷயமாக இங்கு பல வட்டாரங்களில் பொதுவானதோர் அதிருப்தி ஏற்பட்டுள்ளதை நான் உங்களுக்குத் தெரிவிப்பது முறையாகும். வழக்கு அப்பீலில் இருக்கையில் இவ்விஷயமாக அரசு நடவடிக்கை எடுப்பது கஷ்டம் என்பதை நான் உணருகிறேன்; ஆனல், அப்பீல் விசாரணையில் மேலும் தாமதம் ஏற்பட்டு, வழக்கு மன்றத்தில் தீர்வு காண்பதற்குள் மேலும் ஆறு மாதமானல் இங்கு என் சிரமங்கள் தளர்வு பெற மாட்டா. நிலைமையின் கஷ்டம் உங்களுக்குத் தெரியும்; உங்கள் கருத்தை அறிய மகிழ்வேன்."

## 6. மீரத்துக்குப்பின் தொழிலாளர் மீட்சி

மீரத் கைதுகளுக்கு பிறகு முதல் சில வருடங்கள் இந்தியத் தொழிலாளர் இயக்கத்திற்குக் கஷ்டகாலம். இத்தகைய ஒவ்வொரு வழக்கிலும் நடப்பது போல், மீரத் வழக்கு இயக்கத்தின் எதிர்கால வலிமைக்கும் வெற்றிக்கும் ஆழ விதைத்தது என்றாலும், உடனடியாக, பேரடியாக விழுந்தது.

வளர்ச்சியின் தொடக்க நிலையிலிருந்த இந்தியத் தொழிலாளர் வர்க்கம், அகற்றப்பட்ட தலைமையின் இடத்தில் புதிய தலைமையை அமர்த்த முடியவில்லை. பொருளாதார நெருக்கடியான இந்த ஆண்டுகளில் வேலை நிறுத்த இயக்கம் பெரும் தோல்வியே கண்டது. அதைத் தொடர்ந்து விடுதலைப் போராட்டத்தின் துன்பகரமான ஆண்டுகளில், தொழிலாளர் வர்க்கத்தின் அரசியல் பணி வலுவிழந்து விட்டது—ஏகாதிபத்தியத்தின் நோக்கம் அதுவே.

தொழிற்சங்க இயக்கத்திலும் அல்லல் தொடர்ந்தது. தொழிற்சங்கக் காங்கிரசில், மிகுதியான வலிமையாலும் முந்தின இரண்டு ஆண்டுகளில் நிறுவனப் பணியில் புரிந்த சாதனைகளாலும் இடது சாரியினர் பெற்ற வெற்றி, 1929 இறுதியில் நாகபுரியில் நடந்த காங்கிரசில்தான் உருவாயிற்று. பழைய சீர்திருத்த வாதத் தலைமையினர் தாங்கள் சிறு பான்மையினராக இருப்பதைக் கண்டும், பெரும்பான்மையினரின் ஜனநாயகத் தீர்ப்பை ஏற்க மறுத்து, தொழிற்சங்கக் காங்கிரசைப் பிளந்து விட்டனர்; தங்களை ஆதரிக்கும் யூனியன்களை வைத்துத் தொழிற்சங்க பெடரேஷனை அமைத்தனர். "அகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரசின் நிர்வாகக் குழுவின் நடவடிக்கைகளிலிருந்து, அதன் உறுப்பினர்கள் பெரும்பான்மையினர் எங்களுக்கு முற்றிலும் உடன்பாடில்லாத ஒரு கொள்கைக்குக் காங்கிரசை உட்படுத்த உறுதியாக இருக்கிறார்கள் என்பது ஐயமற வெளியாகிறது," என்று என்.எம். ஜோஷி, சிவராவ், கிரி, திவான் சமன்லால் முதலியவர்கள் பெயரால் வெளியிடப்பட்டுள்ள ஓர் அறிக்கை கூறுகிறது; அவர்கள் மேலும் உரைக்கிறார்கள்: "காங்கிரசில் பெரிய, உறுதியான தொரு பெரும்பான்மையை அவர்கள் பெறுவர் என்பதைப் பற்றி எங்களுக்குச் சந்தேகம் இல்லை. இந்தச் சூழ்நிலையில் நிர்வாகக் குழுவின் தீர்மானங்களோடு சம்பந்தப்படாமல் நாங்கள் முற்றிலும் ஒதுங்க வேண்டியுள்ளது; காங்கிரசின் நடவடிக்கைகளில் நாங்கள் தொடர்ந்து பங்கு கொள்வதால் யாதொரு பயனும் ஏற்படாது என்று நாங்கள் மேலும் கருதுகிறோம்."

ஆயினும், தொழிற்சங்கக் காங்கிரசின் நிர்வாகப் பொறுப்புக்கு வந்த இடதுசாரித் தலைமையினருக்குள் இசைவு இல்லை; பல்வேறு வகைப்பட்ட கருத்துடையோராக இருந்த அவர்களுக்குள், தொழிலாளர் வர்க்கத்தின் சுதந்திரமான அரசியல் ஈடுபாடு பற்றிய பிரச்னை பேரில், மேலும் ஒரு பிளவு உண்டாயிற்று. இக்கருத்துகொண்ட கம்யூனிஸ்டுப் பிரிவினர் சிவப்புத் தொழிற் சங்கக் காங்கிரஸ் அமைத்தனர்.

இப்பிளவுகள் தொழிற்சங்க இயக்கத்தை மிகவும் பலவீனப் படுத்தின. ஆனால், தொழிலாள வர்க்கம் தனியான வேலை நிறுத்தப் போராட்டத்தின் வாயிலாக, தன் பொருளாதாரக் கோரிக்கைகளுக்காக மட்டும் அல்ல, பழிவாங்கப்படுவதை எதிர்த்தும், அதாவது, சங்கமாய்க் கூடும் ஜனநாயக உரிமைக்காகவும் தொடர்ந்து சண்டையிட்டது. இதை வேலை நிறுத்தங்களின் எண்ணிக்கை ஏறியதிலிருந்து அறியலாம்: 1929இல் 141 வேலை நிறுத்தங்கள், 1930இல் 148, 1931இல் 166, ஆண்டுதோறும் 100,000 தொழிலாளர்களுக்குமேல் கலந்து கொண்டனர். சிவப்புத் தொழிற்சங்கக் காங்கிரசின் கம்யூனிஸ்டுகள் இந்தப் போராட்டங்களை நடத்தினர்கள்; 1933 அளவில் அரசு ஏமாற்றத்துடன், மீரத் தலைமையினர் இன்னும் சிறையில் இருப்பினும், கம்யூனிஸ்டு "அபாயம் நீடிக்கிறது, அடர்ந்தும் விட்டது" என்று ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று—(இந்தியா, 1932-33.)

இந்தத் தனி வேலை நிறுத்தப் போராட்டங்கள் எல்லாம், 1934 இல் எழுந்த வேலை நிறுத்தப் பேரலைக்கு அஸ்திவாரம் இட்டன. ஆலை அதிபர்களின் 'யந்திரம் புதுக்கும்' திட்டத்தை—தொழிலாளர்களின் சுரண்டலை மேலும் இறுக்கும் திட்டத்தை எதிர்த்து இப்போராட்டம் நடந்தது. இந்தப் பேரலையின் விசையையும் அடர்த்தியையும் பின்வரும் விவரத்திலிருந்து அறியலாம்: 1933இல் 146 வேலை நிறுத்தங்கள் நடந்தன; 164,938 தொழிலாளர்கள் கலந்து கொண்டனர்; 2,168,961 வேலை நாட்கள் நஷ்டம்; 1934இல் 159 வேலை நிறுத்தங்கள், 220,808 தொழிலாளர்கள் கலந்து கொண்டனர், 4,775,559 வேலை நாட்கள் நஷ்டம்; அதாவது, முன் வருடத்தைவிட இரண்டு மடங்குக்கும் அதிகம். துணித் தொழிலில், பம்பாயில் ஏப்ரல் முதல் ஜூன் முடிய, ஷோலாப்பூரில் பிப்ரவரி முதல் மே முடிய, கடுமையான அடக்குமுறையையும் மீறி நடந்த பொது வேலை நிறுத்தம்—தொழிலாளர் வர்க்கம் சிதறிய தன் சக்திகளுக்குப் புத்துயிர் தந்துவிட்டது, தன் ஒற்றுமையை மீண்டும் கண்டுவிட்டது, போராட்டத் தன்மை வாய்ந்த ஒரு தலைமையை விளைவித்து விட்டது என்பதற்குத் தெளிவான சான்றுகும்,

அரசாங்கம் மறுபடியும் தாக்கியது. ஓர் அவசரகால அதிகாரங்கள் அவசர சட்டம் வந்தது; அதன் கீழ், கம்யூனிஸ்டுகளும் தொழிற்சங்கத் தலைவர்களும் விசாரணை இன்றிக் காவலில் வைக்கப்பட்டார்கள். கம்யூனிஸ்டுக் கட்சி சட்ட விரோதமானது என்று அறிவிக்கப்பட்டது. சட்டபூர்வமாகப் பதிவு செய்யப்பெற்ற தொழிற்சங்கங்களில் ஒரு டஜனுக்கும் அதிகமானவை சட்ட விரோதமானவை என்று அறிவிக்கப்பட்டன; இளம் தொழிலாளர்கள் லீக் தடை விதிக்கப்பட்டது; தொழிலாளர் வர்க்கத்தின் சண்டைக் குணமும் புரட்சித்தன்மையும் வாய்ந்த நிறுவனங்களை ஒடுக்கத் துப்பாக்கிப் பிரயோகமும் நடந்தது.

இந்த மாபெரும் வேலை நிறுத்தப் போரின் விளைவாகத்தான், தொழிலாளர் வர்க்க நிறுவனங்களை மீண்டும் ஒன்றுபடுத்தும் முயற்சி தோன்றியது. சிவப்புத் தொழிற்சங்கக் காங்கிரசும், அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரசும் 1935இல் இணைந்தன; அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரஸ், வரவேற்புக் குழுத் தலைவர் எஸ். எச். ஜாப்வாலா கூறினர்:

> " 'சிவப்பு' களோடு சேர்ந்து பணியாற்றுவது எனக்கு மகிழ்ச்சி தருவதாகவே இருந்தது என்பதை மிகைபடக் கூறும் அச்சத்துக்கு இடமின்றி என்னுடைய சொந்த அனுபவத்திலிருந்து நான் எளிதாய்ச் சொல்ல முடியும்; இந்தச் 'சிவப்புகளில்' சிலர் ஒற்றுமையையும் தொழிலாளர் வர்க்கத்தின் தினசரி நலனையும் இடையீடு இல்லாமல் ஆதரிப்பவர்கள் என்பதை நான் கண்டிருக்கிறேன்."
>
> (அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரஸ், பம்பாய், 15வது மாநாட்டு அறிக்கை, மே, 1936.)

இந்த மாநாட்டு மேடையிலிருந்து, தேசீயத் தொழிற்சங்க பெடரேஷனின் சீர்திருத்தவாதத் தலைவர்களுக்கு, தொழிலாளர்களின் மையத் தலைமையோடு இணையுமாறு ஒரு வேண்டுகோள் விடப்பட்டது; ஏனெனில், "தொழிலாளர் வர்க்கத்தின் நாடளாவிய தாக்குதல் முறையையன்றி வேறு எதனுலும்", அதிபர்களும் அரசும் தாக்குவதை எதிர்த்துப் போராட முடியாது. ஒற்றுமை ஏற்பட வேண்டும் என்பதற்காக அவர்கள் போடும் எல்லா நிபந்தனைகளையும் ஏற்பதாய் அறிவிக்கப்பட்டது; அவர்கள் இரண்டு அடிப்படைக் கொள்ள வேண்டும்; ஒன்று, தொழிற்சங்க இயக்கத்தின் அடிப்படையாக வர்க்கப் போராட்டத்தை ஒப்புக்கொள்ள வேண்டும்; இரண்டு, நிறுவனத்துக்குள் தொழிற்சங்க ஜனநாயகம். பெடரேஷன் தலைவர்கள் உடனடியாக சங்கங்களை இணைப்பதை—அமைப்புகளை ஒன்றுபடுத்துவதை எதிர்த்தார்கள். ஆகையால், 1936 இல் ஒரு கூட்டு வாரியம் ஏற்படுத்தினர்கள். 1938 இல்

தான் நாகபுரியில் தொழிற்சங்கங்கள் தேசீய பெடரேஷன், அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரசுடன் இணைந்தது; காங்கிரசின் ஆட்சிக் குழுவில் இரு தரப்பினருக்கும் சமப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டது. இந்தியத் தொழிற்சங்க இயக்கம் முழுவதையும் ஒன்றுபடுத்தும் நிறுவனமாக மீண்டும் தொழிற்சங்க காங்கிரஸ் மாறியது. காந்தியின் செல்வாக்கில் இருந்த ஆமதாபாத் துணித் தொழிலாளர் சங்கம் மட்டும் வெளியில் இருந்தது.

அரசியல் களத்திலும் புதிய நிலைகள் உருவாயின. பாட்டாளிகள் குடியானவர்கள் கட்சிகள் தங்கள் இரட்டை வகுப்புத்தன்மை காரணமாக, வளர்ச்சியில் ஏற்படும் ஒரு மாறுதல் நிலையாகத்தான் இருந்தன; மீரத் வழக்கிற்குப்பின் அரசியல் தொழிலாளர் வர்க்க நிறுவனம் ஒன்று தோன்றுவதற்கான அடிப்படை ஏதும் காணப் படவில்லை. கம்யூனிஸ்டுக் கட்சி சட்ட விரோதமானது என்று அறிவிக்கப்பட்டாலும், சோஷலிஸ்டு, கம்யூனிஸ்டு செல்வாக்கும் மார்க்சீயக் கருத்துகளும் வளருவதைச் சட்டங்களால் தடை செய்ய முடியவில்லை. தேசியச் சட்ட மறுப்புப் போராட்டம் 1930-34இல் நடைபெற்று முடிந்தபின் புதிய வலிமை உண்டா யிற்று; இளைய தேசீய சக்திகள் அப்போராட்டத்தின் படிப் பினையை அறிய முற்பட்டார்கள்.

1934இல், இக்காலத்தில் மார்க்சீயக் கருத்துக்களில் ஓரளவு ஈடுபாடுகொண்ட இளம் தேசீயக் கோஷ்டியினர், காங்கிரஸ் சோஷலிஸ்டுக் கட்சியை அமைத்தனர். காங்கிரஸ் சோஷலிஸ்டு கட்சியின் சிறப்புத்தன்மை என்னவென்றால், தேசீயக் காங்கிரசின் உறுப்பினர்களாய்ச் சேருவோர் தாம் இக்கட்சியில் உறுப்பினர் களாக முடியும்; எனவே, இக்கட்சி, காங்கிரசின் ஒரு பகுதியாக இயங்கியதுடன் பெருமளவில் உறுப்பினர்கள் சேருவதையும் தடுத்தது. இந்த வேலைத் திட்டமும் சங்க விதியமைப்பும் காரண மாக ஸ்தூலமாக ஏற்பட்ட பயன் என்னவென்றால் (இக்கட்சி நிறுவனர்களிலிருந்து முற்போக்கு சக்திகளின் நோக்கம் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம்) தொழிலாளர் வர்க்க இயக்கத் தின் சுதந்திரத்தை தேசீயக் காங்கிரசில் அப்போது ஆதிக்கம் செலுத்திவந்த தலைமையினரின்—அதாவது, நடைமுறையில் பூர்ஷ்வாக்களின்—ஆட்சிக்கும் கட்டுப்பாட்டுக்கும் உட்படுத்தும் ஒரு முயற்சியைப் பிரதிபலிப்பதாகவே அது இருந்தது.

காங்கிரஸ் சோஷலிஸ்டுக் கட்சியின் அடிப்படையில் இருந்த இந்த முரண்பாடு, தொழிலாளர் வர்க்கப் போராட்டத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் அது பங்கு கொண்ட வரலாறு முழு வதும் அது வெளிப்பட்டது. இந்த முரண்பாடு, கம்யூனிஸ்டுக் கட்சியோடும், தொழிலாளர் வர்க்க சக்திகளோடும் ஒத்துழைக்க

விரும்பிய இக்கட்சி இடதுசாரியினருக்கும் கம்யூனிஸ்டுக் கட்சிக்கும் தொழிலாளர் வர்க்கத்தின் சுதந்திரமான தொழிலாளர் வர்க்கப் பணிகள் யாவற்றுக்கும் விரோதமான வலிய பிற்போக்கு வலது சாரியினருக்கும் இடையில் ஏற்பட்ட மோதலிலும் மேலும் வெளிப்பட்டது.

## 7. போருக்கு முந்தின எழுச்சி

தேசீய காங்கிரஸின் தேர்தல் வெற்றிகளேயும், காங்கிரஸ் மாகாண அமைச்சரவைகள் அமைத்ததையும் அடுத்து, தொழிற் சங்க நடவடிக்கைகளில் அலே மோதியதன் விளேவாக 1937-38-ன் வேலே நிறுத்தப் பேரலே தோன்றியது; ஆயுதப் போட்டி காரண மாக, தற்காலிகமாய் முதலாளித்துவம் புத்துயிர் பெற்றதால் உலகமெங்கும் தோன்றிய வேலே நிறுத்த அலேயின் ஒரு பகுதியே இது.

பல புதிய தொழிற் சங்கங்கள் தோன்றுவதற்குக் காரண மாய்த் தொழிற்சங்க இயக்கம் பரவியதுடன், அவ்வப்போது பருவ காலங்களில் இயங்கும் தொழிற்சாலேகளிலும், அமைப்பு பெருத தொழில்களிலும் உள்ள தொழிலாளர்கள் மீதும் வலுவான செல்வாக்கு செலுத்தலாயிற்று. 1928 இல் பதிவான சங்கங்களின் எண்ணிக்கை 29 மட்டும்தான்; அது 1929 இல் 75 ஆகி, 1934 இல் 191 ஆகி, 1938 இல் 296 ஆக உயர்ந்து பதிவான உறுப்பினர்கள் 261,000 வுடன் விளங்கியது; ஆனல், இச்சங்கங்கள் உண்மையில் மையத்தானங்கள், உறுப்பினர்கள் எண்ணிக்கைக்குப் பன்மடங்கு பலத்தை அவர்கள் திரட்ட முடியும்.

1937 இல் வேலே நிறுத்தங்களின் எண்ணிக்கை 379 ஐ எட்டியது, அல்லது, 1921 க்கு அப்பால் மிக உயர்ந்த எண்ணிக்கை, 1921 இன் உச்சத் தொகைக்கு 17 குறைவு; 676,000 தொழிலாளர்கள் வேலே நிறுத்தங்களில் கலந்து கொண்டார்கள்—பதிவுருக்களில் உள்ள எண்ணிக்கைகளில் மிக அதிகமானவர்கள்; தொழிற்சங்கங்களின் உறுப்பினர்களின் தொகைக்கு மும்மடங்குக்கும் அதிகம்: பாதிக்கப்பெற்ற வேலே நாட்களின் மொத்தத் தொகை 8,983,000, அல்லது, 1929 க்குப் பிறகு மிக உயர்ந்த எண்ணிக்கை.

வேலே நிறுத்தங்களில் 45 சதவீதத்தில் சலுகைகள் பெறு வதில் வெற்றி பெற்றனர்.

இவற்றில் சிகரமாய்த் திகழ்ந்தது வங்காளச் சணல் வேலே நிறுத்தம்: கடுமையான அடக்குமுறைகளே மீறி, வங்காளத்து

சணல் தொழிலில் பொது வேலை நிறுத்தமாக மாறி 225,000 தொழிலாளர்களை ஈர்த்தது. 1929 இல் 130,000 தொழிலாளர்கள் வெளியேற்றப்பட்டு, சம்பளங்கள் வெட்டப்பட்டு, மிகவும் கடுமையான விரைவு ''வேலைகள்'' வாயிலாகவும், ''யந்திரம் புதுக்கல்'' என்ற பெயரால் சுரண்டல் முறைகள் கையாளப்பட்டதாலும் தொழிலாளர்கள் 1929 ஆம் ஆண்டு பொருளாதார மந்த காலமுதலே அதிருப்தியால் பொருமிக் கொண்டிருந்தனர். 1931-36 க்கு இடையில் தறிகளின் எண்ணிக்கை 13 சதவீதம் உயர, சணல் உற்பத்தி 65 சதவீதம் உயர்த்தது. ''உலகம் முழுவதையும் பாதித்த பொருளாதார மந்தத்தின் போது, அவர்கள் நியாயமான லாப விகிதம் பெற முடிந்தது,'' வங்காளச் சணல் முதலாளிகளில் ஒருவரான சர் அலெக்சாண்டர் மர்ரே கூறினர். 1936 முதல் சணல் தொழில் புதுவாழ்வுக் காலத்தில் நுழைந்து கொண்டிருந்தது; சம்பளவெட்டுகளை நீக்கிப் போதிய ஊதியம் தரக்கோரி சணல் தொழிலாளர்கள் பிப்ரவரியில் வேலை நிறுத்தம் தொடங்கினர்கள். பஸ்லுல் ஹக்கின் கீழிருந்த பிற்போக்கு அமைச்சரவை, அந்த வேலை நிறுத்தத்திற்குப் பொருளாதார நோக்கம் ஏதுமில்லை என்றும் ''இந்தியாவில் ஒரு புரட்சி ஏற்பட வழிவகுக்கக் கம்யூனிஸ்டுத் தலைவர்கள் அதை ஒரு கருவியாக உபயோகப்படுத்துகிருர்கள்'' என்று காரணம்கூறி அதை நசுக்கப் பெரு முயற்சிகள் செய்தும், அது மே மாதம்வரை நீடித்தது. தொழிலாளர்கள் ஒற்றுமை குலையாமல் எதிர்த்து நின்றனர், வங்காள மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் ஆதரவைப் பெற்றனர், கமிட்டியினர் சணல் தொழிலாளர்களின் வேலைநிறுத்த நிதிக்குப் பணவுதவி செய்திடுமாறு வேண்டுகோள் விடுத்தது; இறுதியில் தொழிலாளர்கள் தங்கள் சங்கத்திற்கு முதலாளிகளின் ஏற்பு பெற்றதுடன், சம்பளவெட்டை நீக்கும் கொள்கையையும் ஒப்புக்கொள்ளச் செய்தனர்.

வேலை நிறுத்த அலையில் குறிப்பிடத்தக்க அம்சம், முன்பு காந்திய வர்க்க—அமைதிவாதிகளின் தொழிற்சங்கக் கோட்டையாக இருந்த ஆமதாபாதிலும் வேலை நிறுத்தம் பரவியதுதான்; இங்கு பம்பாய் காங்கிரஸ் அரசாங்கம், வெறுக்கத்தக்க குற்றவியல் சட்டத்தின் 144 ஆம் பிரிவைப் பயன்படுத்தி — இப்பிரிவைத் தேசிய காங்கிரஸ் என்றைக்கும் எதிர்த்துவந்தது— ஐந்து அல்லது அதற்குமேல் கூடக்கூடாது என்று தடை விதித்தது.

வேலை நிறுத்த அலையின் சிறப்பான நீரோட்டக்குறி, கான்பூர் துணித் தொழிலாளர் வேலை நிறுத்தம்தான்: 1937 இல்.

தொடங்கிய இந்த வேலை நிறுத்தம் பொது வேலை நிறுத்தமாக வளர்ந்து 40,000 தொழிலாளர்களை ஈர்த்ததுடன், தீப்பெட்டித் தொழிற்சாலை, இரும்புப் பட்டறை, பர்மாஷெல் டெபோ முதலிய வேறு தொழில்களைச் சார்ந்த தொழிலாளர்களின் பரிவைப் பெற்று அவர்களும் கலந்து கொண்டார்கள். காங்கிரஸ் விசாரணைக் கமிட்டியின் தீர்ப்பு தொழிலாளர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆனால் தொழிலதிபர்கள் அதைச் செயல் படுத்த மறுத்ததால், அவர்கள் அதைச் செயல்படுத்த வேண்டு மென்று கோரி 1938 இல் ஒரு பொது வேலை நிறுத்தம் தொடங்கப்பட்டது. இப்போது ஒருவகை காங்கிரஸ்—தொழி லாளர் ஒற்றுமை உருவாயிற்று; ஐக்கிய மாகாணங்கள் காங்கிரஸ் காரியக் கமிட்டி ஒரு தீர்மானத்தில், ''கான்பூர் தொழிலாளர்கள் தங்களுக்காக மட்டும் போராடவில்லை, இந்தியா முழுவதிலு முள்ள தொழிலாளர்களுக்காகவும் போராடுகிறார்கள் . . . . மனித உரிமைகளுக்காகவும் போராடுகிறார்கள்'' என்று குறிப்பிட்டு, ''வேலை நிறுத்தக்காரர்கள் தொடங்கியுள்ள பெரும் போராட்டத் திற்கு எல்லாவகை உதவிகளும் செய்யு''மாறு வேண்டிக் கொண்டது. ஐம்பத்தைந்து நாள் போராட்டத்தில் ஹிந்துக் களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையில் வகுப்புக் கலவரம் மூட்ட தொழிலதிபர்களின் ஏஜண்டுகள் செய்த முயற்சிகளைத் தொழி லாளர்கள் ஒற்றுமையாக இருந்து குலைத்தபிறகு, சங்கம் ஏற்கப் பட்டதுடன், குறிப்பிடத்தக்க ஒரு வெற்றி கிடைத்தது.

அபாயகரமான தொழில் துறைத் தகராறு மசோதாவை (வேலை நிறுத்தவுரிமை பேரில் நாலுமாதத் தவணையோடு கூடிய மத்தியஸ்த யந்திரம் ஒன்றைத் திணிக்கவும், கம்பெனி சங்கங் களுக்குச் சாதகமாக, சங்கங்களின் பதிவு முறையில் கட்டுப் பாடுகள் விதிக்கவும் முயன்ற மசோதா) எதிர்த்து 1938 இல் ஒன்றுபட்ட தொழிற்சங்க காங்கிரஸின் முழு ஆதரவோடு 90,000 தொழிலாளர்களுக்கு மேல் கலந்துகொண்டு நடந்த பம்பாய் கண்டன வேலை நிறுத்தம், தொழிலாளர்களின் வர்க்க வுணர்வுக்கு எடுத்துக்காட்டாகவும், தொழிற்சங்க உரிமைகள் தொடர்பாகக் காங்கிரஸ் அளித்த தேர்தல் வாக்குறுதிகளை நிறைவேற்றக் காங்கிரசுக்கு ஓர் எச்சரிக்கையாகவும் விளங்கியது.

ரயில்வே தொழிலாளர்களின் அணியிலும், உச்சியில் சீர் திருத்தவாதத் தலைமை இருந்தும், சக்தி வாய்ந்த புது எழுச்சி காணப்பட்டது. 40,000 தொழிலாளர்கள் கலந்து கொண்ட வங்காள-நாகபுரி ரயில்வே வேலைநிறுத்தம் ஒருமாதம் நீடித்ததுடன் பெய்ஸ்பூர் காங்கிரசின் அனுதாபத்தையும் பெற்றது. தொழிலா ளர்களில் 17 சதவீதத்தினர் நீக்கம் செய்யப்பட்டதையும், சங்

பள வெட்டுகளையும், தொழிலாளர்களை மிகவும் இறுக்கமாக வேலை வாங்கியதால் 50 சதவீதம் விபத்துகள் அதிகமானதையும், ரயில்வே கம்பெனிகளுக்கு ஆதாயங்கள் மிகுதியாய்க் கிடைப்பதையும் சீர்திருத்த வாதத் தலைமையினரின் செல்வாக்கில் இருந்த அனைத்திந்திய ரயில்வே ஊழியர் பெடரேஷன் பேசாமல் கவனித்துக் கொண்டிருந்தது. ஆனால் தொழிற் சங்க ஆர்வ அலை, பெரிய இந்திய தீபகற்ப ரயில்வேயில் சீர்திருத்த வாதச் சங்கங்களையும் செங்கொடி சங்கங்களையும் ஒன்றுபடுத்தி, 20,000க்கு மேற்பட்ட பெரும் அளவில் தொழிலாளர்கள் உறுப்பினர்களாய்ச் சேர வழி செய்தது. இதே போன்ற புது விழிப்பு, பம்பாய்-பரோடா, மைய இநதிய, மதராஸ்-தென் மாராட்டா, தென் இந்திய ரயில்வேயிலும் காணப்பட்டது. போராட்டத்தன்மை மிக்க தொழிற்சங்க இயக்கத்தின் அபாயம் வளர்ந்து வந்ததைக் கண்ட ரயில்வே நிர்வாகத்தினர் அதனோடு போராடுவதற்குக் கையாண்ட தந்திரங்களின் ஓர் உதாரணமாக, அவர்கள் சீர்திருத்த வாதத் தலைமையினரின் கீழுள்ள பம்பாய்-பரோடா, மைய இந்திய ரயில்வே யூனியன்களுக்கு, ''திரு. ஜம்னுதாஸ் மேத்தா அத்தோடு தொடர்பு கொண்டிருக்கும் வரை, அதிலிருந்து கம்யூனிஸ்டுகள் விலக்கப்பட்டிருக்கும் வரை'' அங்கீகாரம் அளிக்க முன் வந்ததைக் கூறலாம். ஆனால், அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரசும் தொழிற் சங்கங்களின் தேசீய பெடரேஷனும் இணைந்து விட்டதாலும், போட்டி யூனியன்களை ஒற்றுமைப்படுத்த வேண்டும் என்ற ரயில்வே தொழிலாளர்களின் ஐயமற்ற ஆர்வமும் இத்தகைய பிளவு சக்திகளை முறியடிக்கப் பயன்பட்டன.

1938 அக்டோபர் 30 ஆம் நாளளவில், தொழிற் சங்கக் காங்கிரசின் நிறுவன தினத்தன்று அதில 325,000 அமைப்பு பெற்ற தொழிலாளர்கள் உறுப்பினர்களாக இருந்தனர். தேசீயக் கோரிக்கைகளுக்கு ஆதரவாக, ஏகாதிபத்தியத்தின் தீச் செயல்களை எதிர்த்து வலிய அரசியல் எதிர்ப்பு நடவடிக்கைகளில் ஈடுபட்டதன் வாயிலாகவும், ஏகாதிபத்திய அடக்குமுறையோடு நாள்தோறும் போராடியதன் வாயிலாகவும் தொழிலாளர் வர்க்கம் ஏகாதிபத்திய எதிர்ப்புச் சக்திகளில் ஒரு வலிமையுள்ள, அமைப்போடு கூடிய பிரிவாக முன்பே ஓங்கி விட்டது.

இந்த வளர்ச்சிகளை அடுத்தும், இவற்றின் காரணமாகவும் தொழிலாளர் இயக்கத்தின் அரசியல் பணியும் செல்வாக்கும் தேசீய இயக்கத்தினுள்ளும் உணரப்பட்டது. பல தொழிற் சங்கங்களும் காங்கிரஸ் தீவிரவாதிகளின் தலைமையில் கூடி, கம்யூனிஸ்டுக் கட்சி பேரிலுள்ள தடையை நீக்குமாறு கோரி விரிவான கிளர்ச்சி நடத்தின. தடை இருந்தாலும், காங்கிரஸ் அமைச்சரவைகளின்

கீழ் குடியுரிமைகள் விஸ்தரிக்கப்பட்டதால், கம்யூனிஸ்டுக் கட்சி நாஷனல் பிரன்ட்என்னும் ஆங்கில வார ஏடு ஒன்றையும், பம்பாய்த் தொழிலாளர்களில் பெரும்பாலோரின் தாய்மொழியான மராத்தியில் க்ராந்தி என்னும் ஏட்டையும் வெளியிட முடிந்தது. ஏகாதிபத்தியத்துக்கு எதிராக ஐக்கிய தேசிய முன்னணியின் கருத்துகளையும், மிகுந்து வந்த பாஸிஸ அபாயத்தையும் பற்றி மக்களுக்கு விளக்க இவை பயன்பட்டன. குடியானவர்கள், சமஸ்தான மக்கள் ஆகிய எல்லா மக்களுடைய ஆதரவையும் தொழிலாளர்களின் போராட்டங்களுக்கு அவை பெற முயன்றன. பல காங்கிரஸ் கமிட்டிகளின் நிர்வாகப் பொறுப்புகளுக்குக் கம்யூனிஸ்டுகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்; காங்கிரசிலேயே தேர்ந்தெடுக்கப்படும் மிக வுயர்ந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் 20 பேருக்குக் குறையாமல் கம்யூனிஸ்டுகள் இருந்தார்கள். கம்யூனிஸ்டுகளையும் காங்கிரஸ் சோஷலிஸ்டுகளையும் இணைத்து இடதுசாரி ஒற்றுமையைத் தோற்றுவிக்க மீண்டும் மீண்டும் செய்யப்பட்ட முயற்சிகள், காங்கிரஸ் சோஷலிஸ்டுக் கட்சியின் தலைமையிலிருந்த பிற்போக்குப் பிரிவினரின் பலத்த எதிர்ப்பு காரணமாக, ஓரளவுதான் வெற்றி பெற்றன.

## 8. இரண்டாவது உலகப்போரில் தொழிலாளர் வர்க்கம்

1939 செப்டம்பரில் போர் தொடங்கியதும் இந்தியாவின் விடுதலை இயக்கத்திற்கும், இந்தியத் தொழிலாளர் வர்க்கத்திற்கும் இறுதியான ஒரு காலக்கட்டம் ஆரம்பமாயிற்று.

தேசியத் தலைமைக் காலம் தாழ்த்திக் கொண்டிருக்கையில், 1939 அக்டோபர் 2 ஆம் நாள் அரசியல் கண்டன வேலை நிறுத்தம் செய்வதாய் அறிவித்து விட்டு, 90,000 பம்பாய்த் தொழிலாளர்கள் கருவிகளை கீழே போட்டு விட்டு முதலில் முன்னேறித் தாக்கினார்கள்—உலகத் தொழிலாளர் வரலாற்றிலேயே முதலாவது போர்-எதிர்ப்பு வேலை நிறுத்தம். வலிமை வாய்ந்த, திரட்சியான பிரிவிலிருந்து தொழிலாளர் வர்க்கம் இந்தியாவிலுள்ள ஏகாதிபத்திய எதிர்ப்பு சக்திகளின் முன்னணிக்கு முன்னேறி வந்து கொண்டிருந்தது.

போர் காரணமாக வாழ்க்கைச் செலவு கடுமையாக ஏறியதற்கு ஏற்ப ஊதியங்கள் உயரவில்லை என்பதை இந்திய அரசின் பொருளாதார ஆலோசனையாளரான டாகடர் டீ. ஈ. கிரிகரி ஒப்புகொண்டு, டிசமபர் அளவில் ''அவசியப் பொருள்களின் விலைவாசி எண் 137 ஆக உயர்ந்துவிட்டது, செப்டமபர் விலைவாசி எண்ணை 100 ஆக வைத்துக் கொண்டால்'' என்றும் கூறினர். இத்துடன் சில்லரை விற்பனையாளர்களின் ஆதாயங்களைச்

சேர்க்க வேண்டும். ''இப் பொருள்களின் செப்டம்பர் விலைகளி லுள்ள கொள்ளைலாபம் 28 சதவீதம்,'' என்று கம்பு, மக்காச் சோளம், அரிசி, கோதுமை ஆகிய உணவுத் தானியங்களைப் பற்றி குறிப்பிட்ட பம்பாய் கிராக்னிகிள், சிறப்பு நிருபர் மேலும் எழுதினுர்: ''இத்துடன் சில்லறை விற்பனையாளர்களின் லாபத்தைச் சேர்க்க வேண்டும்; அது 8 முதல் 14 சதவீதம் இருக்கும் என்று மதிப் பிடப்படுகிறது; எல்லாவற்றையும் கூட்டிப் பார்த்தால் ஏழையின் பணப்பைக்கு எவ்வளவு துன்பமாயிருக்கும் என்பதைப் பற்றித் தெளிவான கருத்து உங்களுக்கு உண்டாகும்'' (பம்பாய் கிரானிக் கிள், டிசம்பர் 6, 1939).

இந்தப் பொருளாதார சுமைகளை எதிர்த்து, 1940 மார்ச் 5 ஆம் நாள் பம்பாய் 1,75,000 துணித் தொழிலாளர்கள் அக விலைப்படி வேலைநிறுத்தம் தொடங்கியதன் வாயிலாகத் தாக்கு தலை ஆரம்பித்தார்கள். வேலைநிறுத்தம் முழுமையாக இருந்தது; வேலை நிறுத்தத் தலைவர்கள் மொத்தமாய்க் கைது செய்யப் பட்டும், போலீஸ்காரர்கள் தொழிலாளர் வீடுகளில் புகுந்து உள்ளிருந்தவர்களை அடித்து அச்சுறுத்தியும் வேலை நிறுத்தம் 40 நாள் நீடித்தது. மார்ச் 10ஆம் நாள் தொழிற் சங்கக் காங்கிரஸ் ஆணைப்படி 350,000 தொழிலாளர்கள் ஒருநாள் வேலை நிறுத்தம் செய்து தங்கள் ஒற்றுமையைக் காட்டினுர்கள்.

பம்பாய் வேலை நிறுத்தம் நாடு முழுவதும் ஒரு வேலை நிறுத்த அலை தோற்றுவித்தது; கான்பூரில் 20,000 துணித் தொழிலாளர்கள், கல்கத்தாவில் 20,000 நகராட்சி ஊழியர்கள், வங்காளம் பீகார் சணல் தொழிலாளர்கள், அஸ்ஸாமின் திக்பாயி லுள்ள எண்ணெய்த் தொழிலாளர்கள், தனபாத். ஜாரியாவைச் சேர்ந்த இரும்பு, உருக்குத் தொழிலாளர்கள் மற்றும் பலப்பல தொழில்களைச் சேர்ந்த தொழிலாளர்கள் அகவிலைப்படி கோரி வேலை நிறுத்தம் செய்தார்கள். தொழிலாளர் வர்க்கம் முழுமை யுமே செயல்பட்டது என்பது தெளிவு.

அரசாங்கம் மீண்டும் ஒருமுறை தாக்கியது. நாஷனல் பிரண்டுக்கும், கிராந்திக்கும் தடை விதிக்கப்பட்டது. இந்தியத் தற்காப்பு விதிகள் பயன்படுத்தப்பட்டன. நாடெங்குமிருந்த கம்யூனிஸ்டுகளும் தீவிரவாதிகளும் கைது செய்யப்பட்டனர்; 1941 ஜனவரியில் உள்நாட்டு உறுப்பினரான ரெஜினுல்டு மாக்ஸ்வெல், விசாரணை இல்லாமல் சிறைவைக்கப்பட்ட 700 பேரில், ''480 பேர், ஒருவர் பாக்கி இல்லாமல் எல்லாரும் கம்யூனிஸ்டுகள் அல்லது அவர்களின் வன்முறை மக்கள் புரட்சி வேலைத் திட்டத்தைச் சுறுசுறுப்பாக ஆதரிப்பவர்கள்'' (சட்ட மன்ற விவாதங்கள், பிப்ரவரி 12, 1941) என்று அறிவித்தார்.

குற்றங்களுக்காகத் தண்டனை விதிக்கப்பட்டவர்கள் எண்ணிக்கை 6,466; சிறைக்குள்ளோ வெளியிலோ 1,664 பேர் தடை விதிக்கப்பட்டிருந்தனர்.

அதிகாரிகள் இவ்வாறு கம்யூனிஸ்டுக் கட்சியை அல்லல் படுத்திக் கொண்டிருக்கையில், காங்கிரஸ் சோஷலிஸ்டுத் தலைமையினரும் கம்யூனிஸ்டுகளுக்கு எதிராக நடவடிக்கை எடுக்கலாயினர்; தங்கள் கட்சியில் இருந்தோரில் கம்யூனிஸ்டுகள் என்று சந்தேகிக்கப்பட்டவர்களைக் காந்தியின் அஹிம்சைக் கொள்கையை ஏற்காதவர்கள் என்று காரணம் காட்டிக் கட்சியிலிருந்து வெளியேற்றினர்கள். ''பொறுப்பற்ற மக்கள் இருக்கிறார்கள் . . . . சிந்தனையோ பொறுப்போ இல்லாமல் வன்முறையைத் தூண்டிவிடுகிறவர்கள் . . . . அமைதியான, ஒழுங்கு குலையாத மக்கள் போராட்டத்திற்கு நம் (காங்கிரஸ் சோஷலிஸ்டுகள்) செல்வாக்கு பயன்படுமாறு அவரால் (காந்தியால்) கவனித்துக் கொள்ளமுடிந்தது'' (பொதுச் செயலாளர் ஜெயப்பிரகாஷ் நாராயண், காங்கிரஸ் சோஷலிஸ்டுக் கட்சி உறுப்பினர்களுக்கு அனுப்பிய சுற்றறிக்கை). இக்காலத்தில், காங்கிரஸ் சோஷலிஸ்டுக் கட்சியைச் சேர்ந்தவர்களில் போர்க்குணம் மிக்கோர் பலர், கட்சி இவ்வாறு வர்க்க விரோத அடிப்படையைக் கைவிட்டு காந்தியின் அஹிம்சைக் கொள்கைகளுக்குச் சரணடைந்ததைக் கண்டு அதிருப்தி அடைந்து சட்ட விரோதமான கம்யூனிஸ்டுக் கட்சியில் சேர்ந்தார்கள். காங்கிரஸ் சோஷலிஸ்டுக் கட்சி மக்கள் நிறுவன அமைப்போ அல்லது தொழிலாளர் வர்க்கத்தின் ஆதரவோ இல்லாத ஒரு கூட்டம், தலைவர்களின் கட்சியாக இருந்தது.

அதிகாரிகளின் தாக்குதல் கம்யூனிஸ்டுக் கட்சியின் நிறுவனத்தையோ அல்லது அதன் இயக்கத்தையே முறிப்பதில் வெற்றி பெறவில்லை. பெரும்பாலும் தலைமை முழுவதும் கைதுசெய்யப்பட்டும் கட்சி தொடர்ந்து செயலாற்றியது; போலீஸ்காரர்களின் கண் கொத்தி வேட்டையில் சிக்காமல் சிலர் வெற்றிகரமாகப் பணியாற்றினர்கள்; சட்ட விரோதமான புரட்சிப் பிரசாரத்தோடு சட்டபூர்வமான மக்கள் செயல் கூடியது. எண்ணிக்கையில் குறைவாகவும், பல இடைஞ்சல்களுக்கு இடையிலும் பணியாற்ற வேண்டியிருந்ததால் அது நிகழ்ச்சிகளை உறுதியான முறையில் உருவாக்க முடியவில்லை. ஆயினும், இந்திய அரசியலில் ஜீவ சக்தியாகவும் தொழிலாளர் வர்க்கத்தின் ஐயமில்லாமல் வலிய கட்சியாகவும் அது விளங்கியது.

அதே சமயம் நாடெங்கும் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு நடவடிக்கை எடுத்ததன் விளைவாக, மைய தொழிற்சங்க

நிறுவனத்தில் முற்றிலும் ஒற்றுமை உருவாயிற்று. தொழிற் சங்கங்களின் தேசீய பெடரேஷன், அகில இந்தியத் தொழிற் சங்கக் காங்கிரசுடன் முற்றிலும் கலந்தது; ஆனால், சங்க விதிகளில், "எல்லா அரசியல் பிரச்னைகளும், வேலை நிறுத்தங்கள், அந்நிய நாட்டு நிறுவனங்களோடு இணையும் விஷயங்களிலும் நாலில் மூன்றுபகுதி பெரும்பான்மையின் ஆதரவு வேண்டும்," என்றொரு பிரிவு சேர்க்கவேண்டும் என்று வலியுறுத்தி, அவ்வாறு சேர்க்கப்பட்ட பின்னரே கலந்தது. இப்பிரிவைச் சேர்ப்பதால் அமைப்பு பெற்ற தொழிற்சங்கத்திற்கு வருங்காலத்தில் தெளிவான அரசியல் தலைமைபெறுவதற்கு இடையூறாகும் என்று தெரிந்தும் ஒற்றுமை வேண்டும் என்ற ஒரு காரணத்திற்காக இப் பிரிவு போர்க்குணம் வாய்ந்த தொழிற்சங்கவாதிகளால் ஒப்புக் கொள்ளப்பட்டது.

இவ்வாறு கட்டுப்படுத்திக் கொண்டதனால் உண்டான குறைபாடுகள், சோவியத் யூனியன்மீது நாஜிசள் படையெடுத்ததும், போரில் ஜப்பானும் இறங்கித் தென்கிழக்கு ஆசியாவைக் கைப்பற்றியதுடன் இந்தியாவுக்கு ஜப்பானால் அபாயம் நேரக் கூடிய நெருக்கடிநிலை அதிகரித்ததுமாகிய போர்விளைவுகளைப் பற்றி எழுந்த புதிய பிரச்னைகளை அணுகும் விஷயங்களில் வெளிப் பட்டன.

அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரஸ் கான்பூர் கூட்டம் 1942 பிப்ரவரியில் கூடியது. இதற்கிடையில், தொழிலாளர்களின் வாழ்க்கை நிலைமை மிகவும் இழிந்திருந்தது. ஜப்பானியப் படைகள் மலேயாவையும் பர்மாவையும் ஆக்கிரமித்துக் கொண்டு இந்தியாவைப் பயமுறுத்திக் கொண்டிருந்தன.

ஆயினும், தொழிற்சங்க இயக்கத்தின் மையத் தலைமை தெளிவாக அரசியலில் வழிகாட்டத் தவறிவிட்டது. நாட்டுத் தற்காப்பின் நலனுக்காகப் போருக்கு நிபந்தனையற்ற ஆதரவு தரவேண்டும் என்றும், நாட்டுத் தற்காப்பைப் பயனுடையதாக்க ஒரு தேசீயக் கோரிக்கைகள் உரிமை ஆவணத்திற்காகப் போராடுமாறும் தொழிலாளர்களுக்கு அழைப்புவிடுக்கும் கம்யூனிஸ்டு தீர்மானம் ஒன்றுக்குப் பெரும்பான்மை ஆதரவு கிடைத்தது. பெரும்பான்மை ஆதரவானாலும், தேவையான நாலில் மூன்று பங்கு பெரும்பான்மை கிடைக்கவில்லை. எனவே, தொழிற் சங்க இயக்கத்திலுள்ள ஒவ்வொரு குழுவினரும் தத்தம் கொள்கைகளைப் பின்பற்ற சுயேச்சை அளிக்கப்பட்டது.

1942—45 க்கும் இடைப்பட்ட காலம் தொழிலாளர் வர்க்கத்திற்கும், நாடு முழுவதற்கும் பெரும் சோதனையான காலம். போர்ச் செலவுகளுக்காக அரசாங்கம் தங்குதடையில்லா

மல் பணவீக்கம் உண்டாக்கும் காரியங்களைச் செய்ததாலும், அத்தியாவசியப் பண்டங்கள் பதுக்கப்பட்டுக் கள்ள மார்க்கெட்டிற்குப் போய்விட்டதாலும், வாழ்க்கைச் செலவு 200 சதவீதம் பெருகிவிட்டது; நாட்டுத் தலைவர்கள் கைது செய்யப்பட்டதைத் தொடர்ந்து நாடெங்கும் காட்டுமிரண்டித்தனமான அடக்கு முறை கையாளப்பட்டது; அரசுக் கொள்கைகளால் நாட்டு மக்கள் கொதித்துக் கொண்டிருந்த நிலையில், தொழிலாளர்களை வேலை நிறுத்தம் செய்யத் தூண்டுவதற்கு அக்கொள்கைகளில் ஒன்றே போதும். ஆனால், தொழிலாளர் வர்க்கத்தையும் கம்யூனிஸ்டுக் கட்சியையும் அவர்களுடைய ஆரோக்கியமான வர்க்கவுணர்வும் முற்றிய தேசீயவுணர்ச்சியும் வழிநடத்திய காரணத்தால், அவர்கள் நிலைமையில் ஏற்பட்டுள்ள மாறுதலை உணர்ந்து, நாட்டுத் தற்காப்புக்கு வேலை நிறுத்தங்களைத் தவிர்க்க வேண்டியது அவசியம் என்பதைப் புரிந்து கொண்டிருந்தனர் என்பது அவர்களுக்கு பெருமைத் தரும் விஷயம்; பலவகையில் துன்புறுத்தப்பட்டுத் தூண்டப்பட்டும், தொழிலாளர்களில் ஒரு பிரிவினரை வேலை நிறுத்தம் செய்யத் தூண்டி லஞ்சம் கொடுக்கும் முயற்சிகள் நடந்தும் தொழிலாளர்கள் மசியவில்லை. குறிப்பிடத்தக்க வேலை நிறுத்தங்கள், காந்தியவழி ஆமதாபாத் தொழிலாளர்கள் கோட்டையில் 3 மாத காலம் வேலை நிறுத்தம் நடந்ததையும், ஜாம்ஜெட்பூர் இரும்பு, உருக்குத் தொழிற்சாலையில் தொழிலாளர்கள் காரணமாக மட்டும் அல்ல, தொழிலதிபர்கள் காரணமாகவும் வேலை நிறுத்தம் நடந்ததையும் கூறவேண்டும்.

இக்கால கட்டத்தில், கம்யூனிஸ்டுத் தலைமையில் இருந்த தொழிலாளர் வர்க்கம் ஏகாதிபத்திய அடக்குமுறையை உறுதியாக எதிர்க்க முன்வந்தது. 1942, செப்டம்பர் 25ஆம் நாளை அடக்குமுறை எதிர்ப்பு நாளாய்க் கொண்டாடுமாறு அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரஸ் கோரிக்கை விடுத்தது. நாட்டுத் தற்காப்புக்கான கருத்துகளை மக்களுக்கு இடையில் பரப்பியதுடன், மக்களுடைய இன்றியமையாத தேவைகளான விலைக் கட்டுப்பாட்டுக்காகவும் ரேஷனுக்காகவும் கடும் கிளர்ச்சியைத் துவக்கியும் கள்ளச் சந்தையையும் பதுக்கலையும் எதிர்த்து கிளர்ச்சி செய்தும், ஏகாதிபத்தியத் தூண்டுதலுக்கோ, ஜப்பானிய முகத்துதிக்கோ இரையாகாமல் இருக்குமாறு மக்களை எச்சரித்தது.

இதனால் தொழிற்சங்க இயக்கத்தில் ஒருவளர்ச்சி உண்டானதோடு, தொழிற்சங்க இயக்கத்தில் கம்யூனிஸ்டுச் செல்வாக்கு வலுக்கவும் வழி பிறந்தது. எட்டு ஆண்டுகள் சட்ட விரோதமான கட்சியாக இருந்த கம்யூனிஸ்டுக் கட்சி 1942இல் சட்ட இசைவான கட்சி ஆக்கப்பட்டது தொழிலாளர் வர்க்கத்திற்கு ஒரு வெற்றியாகும்,

அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரசின் உறுப்பினர்களின் பின்வரும் அட்டவணையிலிருந்து தொழிற்சங்க இயக்கத்தின் வளர்ச்சியைக் காணலாம்:

| ஆண்டு | தொழிற்சங்கங்களின் எண்ணிக்கை | பதிவான உறுப்பினர்கள் தொகை |
|---|---|---|
| 1938 | 188 | 363,450 |
| 1940 | 195 | 374,256 |
| 1941 | 182 | 337,695 |
| 1942 (பிப்ரவரி) | 191 | 269,803 |
| 1943 | 259 | 332,079 |
| 1944 | 515 | 509,084 |

1942-45 நெருக்கடிக் காலத்தில் பல சிரமங்களையும் பொருட்படுத்தாமல், கம்யூனிஸ்டுக் கட்சி பல துறைகளில் பணியாற்றியதால் கட்சியின் உறுப்பினர் தொகையில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டது. 1942 ஜூலையில் வெறும் 4,000ஆக இருந்த அத்தொகை 1943 மேயில் 15,000க்குத் தாவி, 1944 ஜனவரியில் 30,000ஆக உயர்ந்து, 1946 கோடையில் 53,000க்கு மேல் பெருகிவிட்டது.

பிரிட்டிஷ் ஏகாதிபத்திய நலன்களோடு ஒன்றிவிட்ட எம். என். ராயின் சீடர்கள் போர்க்காலத்தில் தொழிற்சங்க இயக்கத்தில் பிளவு உண்டாக்க முயன்று தோற்றுர்கள். அவருடைய சீடர்கள் 1941இல் ''தொழிலாளர்களின் இந்தியக் கூட்டணி'' என்னும் பெயரால் ஒரு நிறுவனம் அமைத்தார்கள்; அதற்கு அரசு மாதந்தோறும் ரூ. 13,000 உதவித் தொகை அளித்து, ஏராளமாக விளம்பரம் செய்தும் அதற்கு தொழிலாளர்களுக்கு இடையில் போதிய ஆதரவு கிட்டவில்லை. 1946 செப்டம்பரில் நடைபெற்ற அரசாங்க ஆய்வு ஒன்றின்படி, 700,000 உறுப்பினர்களைக் கொண்ட அகில இந்தியத் தொழிலாளர் காங்கிரசே, இந்தியத் தொழிற்சங்க இயக்கத்திற்குப் பிரதிநிதி நிறுவனம் என்று இறுதியாக ஏற்பட்டது.

1940க்குப் பிறகு தலைவர்கள் குழு ஒன்றின் கட்சியாகத் திகழ்ந்த காங்கிரஸ் சோஷலிஸ்டுக் கட்சி, காங்கிரசின் 1942 தீர்மானம் நிறைவேற்றப்பட்டு, காங்கிரஸ் தலைவர்கள் கைது செய்யப்பட்டபின், ரகசிய நிறுவனத்தை உருவாக்க முயன்றது (பதினுரும் அத்தியாயம் பார்க்க); காங்கிரஸ் தலைவர்கள் கைதானதைத் தொடர்ந்து தாளுகவே ஏற்பட்ட மக்கள் எழுச்சியை அந்த அடிப்படையில் உருப்படுத்த முயற்சி செய்தது. இந்த முயற்சிகளில்

அக்கட்சிக்குத் தொழிலாளர் வர்க்கத்தின் ஆதரவு கிட்டவில்லை. எழுச்சி தணிந்து அவர்களுடைய முயற்சிகள் பயனற்றுப் போகவே, மேலும் மேலும் நடுநிலைமையிலிருந்து விலகி, (பாசிஸத்தின் உதவியால் இந்திய விடுதலையைப் பெறலாம் என்று நம்பி, ஜெர்மானிய, ஜப்பானியப் பாசிஸத்தோடு உறவுகொண்ட) சுபாஷ் போஸைப் பின்பற்றியவர்கள் கடைப்பிடித்ததைப்போன்ற பாசிஸ முறையை நோக்கி நகரலானார்கள். மக்களின் தன்னெழுச்சியான வீரத்தைப் போற்றி சட்ட விரோதமான புத்தகங்களை வெள்ளமாக வெளியிட்டதன் வாயிலாகவும், சில அழிவு வேலைகளை வெற்றிகரமாக நடத்தியதாலும், தேசீயப் பிரிவினரில் இளைய தலைமுறையினருக்கு, குறிப்பாக மாணவர்களுக்கு இடையில்—தொழிலாளர் வர்க்கத்தின் ஆதரவு கிட்டாவிட்டாலும்—நல்ல அளவு செல்வாக்கு உண்டாகியது. போருக்குப் பிறகு அவர்கள் மிகத் தீவிரமாய்க் கம்யூனிஸ்டு எதிர்ப்பு, சோவியத் எதிர்ப்புப் பிரசார முறையைக் கையாளலானார்கள்.

யுத்த காலத்தில் தொழிலாளர் வர்க்க இயக்கத்தின் சாதனையும் முன்னேற்றமும் அதன் வளர்ச்சியில் மறக்கமுடியாத கட்டமாகும். போர் முடிவுகண்டு, பாசிஸம் முறியடிக்கப்பட்டபோது தொழிலாளர் இயக்கம் மிகவும் உறுதியான அமைப்பும், மிகுந்த கட்டுப்பாடும் கொண்டு ஏகாதிபத்தியத்தை எதிர்த்துச் சோர்விலாது போராடும் சக்தியாக நிமிர்ந்து நின்றது என்பது போருக்குப் பின் நடந்த மக்கள் போராட்டங்களில் நன்கு வெளிப்பட்டது. பொதுவான அரசியல் இயக்கத்தில் உயர் மட்டத் தலைமையில் மோதல் உண்டானபோதும், அதுதன் அணிகளில் ஹிந்துக்கள், முஸ்லீம்கள், தீண்டாதவர்கள் முதலியவர்களை ஒற்றுமைப்படுத்துவதிலும், ஒற்றுமையாக வைத்திருப்பதிலும் வெற்றி கண்டிருந்தது. நாட்டு, சமூக விடுதலைக்காகப் பின்னர் நடைபெற்ற போராட்டங்களில், முன்னணியிலிருந்து சண்டையிடும் ஸ்தானத்தைத் தொழிலாளர் இயக்கம் ஈட்டிவிட்டது.

தேசீய காங்கிரசைப் போலவோ, முஸ்லீம் லீக்கைப் போலவோ பொதுமக்களுக்கிடையில் பெரும் அளவு செல்வாக்கு பெறாவிட்டாலும், கம்யூனிஸ்டுக் கட்சி இந்திய அரசியலில் மூன்றும் ஸ்தானத்தை அடைந்ததைத் தொழிலாளர் வர்க்கத்தின் இந்த முன்னேற்றத்திற்குப் பிரதிபலிப்பே ஆகும்.

போருக்குப்பின் நாடெங்கும் எழுச்சியாகவும், வேலை நிறுத்த இயக்கமாகவும் இருந்த சூறாவளிக் காலத்தில், தொழிலாளர் வர்க்கத்தின் இந்த முன்னேற்றமும், மக்கள் போராட்டத்தின் முன் வரிசையில் இடம் பெற்ற அதன் அரசியல் பங்கும் மேலும் தொடர்ந்து முன்னேறின.

அத்தியாயம் 13

# இந்தியக் குடியாட்சியின் பிரச்னைகள்

"'நாட்டைப் பிரித்து ஆண்டிடுக' என்பது பழைய ரோமாபுரிக் கொள்கை; அதுவே நம் கொள்கையாகவும் இருந்திட வேண்டும்."

—பம்பாய் கவர்னர் எல்பின்ஸ்டன் பிரபு,
1859, மே 14 ஆம் நாள் குறிப்பு.

இயத் தேசியம், குடியானவர் புரட்சி, தொழிலாளர் வர்க்க இயக்கம் ஆகியவற்றின் முன்னேற்ற சக்திகளே, பாரத சமுதாயத்தின் முற்போக்குத் தன்மைகளைப் பிரதிபலிப்பனவாகும். ஆனால் அவைகளே பாரத சமுதாயத்தின் முழுசித்திரம் ஆகிவிடா. இந்திய மக்களில் மிகப்பெரும்பாலோரை அவை உள்ளடக்கிக் கொண்டிருப்பினும், அவையே முழு மக்கள் அல்ல. அவ்வாறு இருந்திருந்தால், ஒற்றுமையான இந்திய மக்கள் ஒரு பக்கமும், ஒரு கைப்பிடியில் அடங்கக்கூடிய பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் மறுபக்கமுமாக நடக்கும் சிக்கல் இல்லாத மோதலாக இருந்திருப்பின் அது ஏற்கனவே முடிவு கண்டிருக்கும், அல்லது அந்த ஆதிக்கமே ஒருகாலும் ஏற்பட்டிராது.

ஏகாதிபத்திய ஆட்சியின் கீழுள்ள இந்தியாவில் இருப்பதைப் போன்று வளர்ச்சி தடைப்பட்ட ஒரு சமுகாயத்தில், சமூக மிதவாத சக்திகள் தங்களுடைய உள்வலிமைக்குத் தொடர்ப்பற்ற அளவு மிகுதியாக முக்கியத்துவம் பெற்று விளங்குவதைத் தவிர்க்க முடியாது. இந்த நலிவுச் சக்திகளே நாடு முதலில் வெல்லப்படுவதற்கு உதவின. நாட்டில் விழிப்பு அலைமோதி முன்னேறுகையில், ஏகாதிபத்திய ஆட்சியைத் தாங்கி நிற்கும் ஒரே ஆதாரம் என்னும் காரணத்தாலேயே, காலம் கடந்த இந்த பழமைச் சின்னங்களுக்கு மிகுந்த முக்கியத்துவமும் சிறப்பும் ஏற்பட்டு விடும்போலும்.

சைமன் அறிக்கைப்படி இந்தியாவில் இருந்த பிரிட்டிஷாரின் தொகை 156,000 (ஐரோப்பியர் என்று பதிவு செய்து கொண்ட

வர்கள், ஆனால், முதன்மையாகப் பிரிட்டிஷரே); 1931 சென்ஸஸ் மொத்தம் 168,000 காட்டியது. இவர்களுள், 60,000 பேர் படையில் இருந்தவர்கள்; 21,000 பேர் வியாபாரம் அல்லது தனிப்பட்ட தொழிலில் இருந்தவர்கள்; 12,000 பேர் அரசு நிர்வாக ஊழியத்தில் இருந்தவர்கள். ஆகக்கூடி 100,000 க்கு குறைவான வயது வந்தோரே, நாட்டின்மீது ஆதிக்கம் செலுத்தும் ஏகாதிபத்தியத்தின் நேர்ப் பிரதிநிதிகள், அல்லது, 4,000 இந்தியர்களுக்கு ஒருவர். இந்திய மக்களை நிராயுதபாணிகளாக்கு வதற்காக ஒவ்வொரு விதத்திலும் ஜாக்கிரதை செய்து கொண்ட பிறகும், குறிப்பாக பீரங்கி போன்ற கனரக ஆயுதங்களையும் விமானபலத்தையும் பிரிட்டிஷார் தங்கள் கையிலேயே வைத்திருந் தாலும், 40 கோடி இந்திய மக்கள்மீது இச்சிறு தொகையினர் அதிகார பலத்தால் மட்டும் தொடர்ந்து அட்சிபுரிய முடியும் என்று நம்பமுடியாது. இந்திய மக்களுக்கு இடையிலேயே ஒரு சமூக அடிப்படை ஏற்படுத்திக்கொள்வது இன்றி அமையாதது.

ஏகாதிபத்தியத்திற்குத் துணையான சமூக அடிப்படையை இந்திய மக்களுக்கிடையில் பேணுவதே ஏகாதிபத்திய ஆட்சியின் அடிப்படையைப் பேணுவதாகும். ஒவ்வொரு பிற்போக்கு ஆட்சியின் விஷயத்திலும், குறிப்பாக, மாற்றான் ஆட்சியின் விஷயத்தில், மக்களுக்குள் பிளவு ஏற்படுத்துவது ஆட்சி யாளர்களின் ராஜதந்திரத்தில் மிக அவசியமாகும். ஏகாதி பத்தியத்தை எதிர்த்துப் போரிடும் முற்போக்கு சக்திகளுக்கு இடையில் இத்தகைய சமூக அடிப்படையைக் காணமுடியாது. மக்களுடைய நலன்களுக்கு எதிரான நலன்களுடைய பிற்போக்குச் சக்திகளுக்கு இடையில்தான் அதைக் காணமுடியும். அரசாங்கம் ஒரு கொள்கையாகக் கொண்டு சட்டங்கள் செய்து வாழ்வுதந்த நிலப்பிரபுத்துவ வர்க்க அடிப்படையை எவ்வாறு பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் படைத்து வளர்த்தார்கள் என்பதை முன்பே நாம் பார்த்திருக்கிறோம். அவர்களோடு (நிலப்பிரபுக்களோடு) பல்வேறு வியாபார நலன்கள் உள்ளோரும், வட்டிக்குக் கடன் கொடுப்போரும் ஏகாதிபத்தியச் சுரண்டல் முறையோடு நெருங்கிய உறவு கொண்டவர்கள், பாதுகாப்புக்கு ஏகாதிபத்தியத்தை நாடுகிறவர்கள்; அவர்களையன்றிக் கீழ்த்தர அதிகார வர்க்கம். ஏகாதிபத்தியம் ஒரு நூற்றாண்டுக்குமுன் ஆற்றிவந்த சமூக சீர்திருத்தப் பணியைக் கைவிட்டு, இன்று சீர்திருத்தம் வேண்டும் நாட்டு மக்களின் கோரிக்கைக்கு விரோதமாக, மக்களுடைய வாழ்க்கையில் பண்பாட்டு முறையில் மிகப் பிற்போக்கானவற்றை எல்லாம் (மக்களுடைய சமூகப் பழக்கவழக்கங்களிலும் சமய நம்பிக்கைகளிலும் பாரபட்சம் இல்லாது தலையிடாமல் இருப்ப தாய்ச் சொல்லிக் கொண்டு) போற்றிப் பாதுகாத்து வருகிறது

என்பதையும், சாதி போன்ற பிரிவினைக் கோடுகளை முழுக்க முழுக்கப் பயன்படுத்திக் கொள்கிறது (தாழ்த்தப்பட்ட வகுப்பின ருக்குத் தனிப்பிரதிநிதித்துவம்; அந்த அடிப்படையுள்ள கட்சி களுக்கு ஆக்கமளித்தல்) என்பதையும் முன்பே பார்த்திருக்கிறோம். இந்தக் கொள்கை, அண்மையில் மிகச் சிறப்பு பெற்று விட்ட இரண்டு விஷயங்களில்தான், மற்ற இடங்களில் இருப்பதைவிட விளக்கமாய்ப் புலப்படுகிறது: இந்திய மன்னர்கள் அல்லது 'இந்திய சமஸ்தானங்கள்' எனப்படுபவை பற்றின பிரச்னை, வகுப்பு வேற் றுமைப் பிரச்னை, குறிப்பாக, ஹிந்து-முஸ்லீம்பகைமை வடிவத்தில்.

பிற்போக்கு சக்திகள் சம்பந்தமாகத் தேசீய இயக்கத்தை எதிர்நோக்கியுள்ள பொதுவான பிரச்னையின் இரண்டு அம்சங்கள் தான் இவ்விரு பிரச்னைகளும். நாட்டு விடுதலை இயக்கம் முன்னேற, முன்னேற இந்தப் பிற்போக்குச் சக்திகளைப் பயன்படுத்திக் கொள்ளத் தீவிர முயற்சிகள் செய்யப்படுகின்றன. இக் கால கட்டத்தின் தன்மைக்கு இது இயல்பு. ஏகாதிபத்தியச் சிதைவுக் கான அரிய நிகழ்ச்சிகள் இவை. இறுதி மூலபலத்தை அது கையாள வேண்டிய தருணம்.

இந்தியாவில் ஜனநாயகம் வெற்றிபெற, இப் பிரச்னைகளின் தீர்வு ஜீவாதாரமானது.

## 1. மன்னர்கள்

ஏகாதிபத்தியம் இந்தியாவைச் சமமற்ற பகுதிகளாய்ப் பிளந்துள்ளது: பிரிட்டிஷ் இந்தியாவும் இந்திய சமஸ்தானங்கள் எனப்படும் பகுதிகளும். இப்பிரிவினை பகுத்தறிவுக்கொவ்வாத மலைவு தரும் தன்மைவாய்ந்தது; நிர்வாக வசதிக்காக மட்டும் ஏற்பட்டதும் அல்ல; சமூக, பொருளாதார, அரசியல் சூழ் நிலையில் ஆழ்ந்து ஊடுருவியுள்ளது; இதைப் புரிந்துகொள்ள வரை படத்தை ஆய்வு செய்யவேண்டும். அராஜகக் கலவரக் குழப்ப மும், சின்னஞ்சிறு 'சமஸ்தானங்களும்' மண்டிக்கிடக்கும்— பிரிட்டிஷ் ஆட்சியின் கீழுள்ள இந்தியாவின் வரைபடத்தோடு ஒப்பிட்டால் பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு முந்தின ஜெர்மனி யின் வரைபடம் ஒழுங்குமுறையானது என்று விடலாம்.

மேற்கிலிருந்து கிழக்கே, வடக்கிலிருந்து தெற்கே, கதேவாரின் 200 சமஸ்தானங்களிலிருந்து அல்லது மேற்கிலுள்ள இருபது ராஜபுதானத்து சமஸ்தானங்களிலிருந்து கிழக் கோடியி லுள்ள மணிபுரி, இருபது காஸி குறுநிலச் சிற்றரசுகள்வரை, வடக்கில் உள்ள காஷ்மீர், சின்னஞ்சிறு சிம்லா மலைச்சமஸ்தானங் களிலிருந்து தெற்கிலுள்ள மைசூர், மதராஸ் சமஸ்தானங்கள் வரை, பல உருவங்களும் பல அளவுகளும் கொண்ட, பலப்பல

வகையான, நூற்றுக்கணக்கான சமஸ்தானங்கள் இந்தியாவின் மொத்த நிலப்பரப்பில் ஐந்தில் இரண்டு பகுதிக்குமேல் அல்லது சுமார் பாதி பரவி (பர்மா பிரிக்கப்பட்டு விட்டதால் இப்போது 45 சதவீதம்), வரைபட ஓவியரைத் திகைக்க வைக்கும் எல்லைகளுடன் காட்சி தருகின்றன. 712,000 சதுரமைல்கள் மொத்த நிலப்பரப்பும், 8·1 கோடி மக்கட் தொகையும் (1931 மக்கட் தொகைக் கணக்குப்படி) கொண்ட அல்லது இந்தியாவின் மொத்த மக்கட் தொகையில் ஏறக்குறைய கால்பகுதி (24 சதவீதம்) கொண்ட 563 சமஸ்தானங்கள் உள்ளன. இத்தாலியினளவு பெரியதும், 1·4 கோடி மக்கட் தொகையும் கொண்ட ஹைதராபாத் சமஸ்தானம் முதல், 19 சதுரமைல் நிலப்பரப்புள்ள லாவா அல்லது சிம்லா மலை சமஸ்தானங்கள், சிறு நிலவுடமைகளின் அளவேயுள்ள சின்னஞ்சிறு சமஸ்தானங்கள் வரை பலவிதமானவை இவை. பொதுவான ஒரு வருணனையில் அவர்களுடைய அந்தஸ்து, அதிகார எல்லையைப் பற்றிக் கூறிவிட முடியாது. 108 பெரிய சமஸ்தானங்கள் உள்ளன, அவற்றின் அரசர்கள் 'மன்னர்கள் மன்றத்தில்' நேராகச் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். 127 சிறு சமஸ்தானங்கள் மறைமுகமாகத் தங்கள் பிரதிநிதிகளை 'மன்னர்கள் மன்றத்'திற்கு அனுப்புகின்றன. எஞ்சியுள்ள 328 சமஸ்தானங்கள் சில நிலப்பிரபுத்துவ உரிமைகளோடு—ஆனால் மிகவும் வரையறுக்கப்பட்ட அதிகார எல்லையோடு, நடைமுறையில் ஒருவகை நிலவுடமைகள் போன்றவை. சற்று முக்கியமான சமஸ்தானங்களில் பிரிட்டிஷ் ரெசிடென்டுக்குத்தான் இறுதியான அதிகாரம்; சிறு சமஸ்தானங்கள் ஒரு தொகுதியாக்கப்பட்டுப் பிரிட்டிஷ் அரசியல் ஏஜண்டுகளின் கீழ் இருப்பன; பல்வேறு இடங்களில் உள்ள இவற்றை ஏஜண்டுகள் 'கொத்தாக'க் கவனித்துக் கொள்கிறார்கள்.

''சமஸ்தானங்கள்'' என்று அவற்றைச் சொல்வதே தவறு;[1] ஏனெனில் அவை பழைய 'நாடு'களின் பாழ்கள் அல்லது ஆவிகள்; செயற்கையாகப் பாதுகாக்கப்படுபவை; முற்றிலும் வேறுபட்ட ஓர் ஆட்சியாளரின் அரசியல் நோக்கங்களுக்காக அவற்றின் பொம்மை அரசர்கள் பாதுகாக்கப்படுகிறார்கள். இந்தச் சிற்றரசர்கள் தங்கள் மனம்போன போக்கில் கொடுங்கோன்மையாகவும், குரூரமாகவும், அராஜகமாகவும் நடந்துகொள்ளத் தாராளமாய் அனுமதிக்கப்படினும் இறுதியான அரசியல் அதிகாரம் பிரிட்டிஷாரின் கையில்தான் இருக்கிறது. முன்பு 1853 லேயே மார்க்ஸ் எழுதியது இன்று முன்னைவிட உண்மையாக இருக்கிறது:

---

1. ஆங்கிலத்தில் States என்கிறார்கள்; இச்சொல்லுக்கு நாடுகள் என்று பொருள். —மொழிப் பெயர்ப்பாளர்—

''சுதேச சமஸ்தானங்கள் பொறுத்த மட்டில், கம்பெனியின் பாதுகாப்புக்கு, அல்லது உதவிகளுக்கு அவை இணங்கிய கணமே உயிரை இழந்து விட்டன.....போலியான சுதந்திரத்தை அவர்கள் அனுபவிக்க அனுமதிக்கப்பட்டுள்ள நிலைமைகளே நிலையான அழிவுக்கும் முற்றிலும் திருத்த முடியாமைக்குமான நிலைமைகள். பிறருடைய தயவில் வாழ்கின்ற எல்லா உயிரினங்களைப் போல், அவற்றின் வாழ்க்கை நியதி, அங்க பலவீனமாகும். ஆகையால், பிரச்னை சுதேச சமஸ்தானங்களைப் பற்றியதல்ல, சுதேச மன்னர்களையும் அவர்களுடைய தர்பார்களையும் எப்படி காப்பது என்பதே பிரச்னை. இன்றைய, நரகவாதனையான ஆங்கிலேய ஆட்சி முறைக்கு சுதேச மன்னர்கள் வலிய அரண்கள் என்பதோடு இந்திய முன்னேற்றத்துக்கு மாபெரும் முட்டுக்கட்டைகள்.''

(மார்க்ஸ், ''சுதேச சமஸ்தானங்கள்'', நியூயார்க் டெய்லி டிரிப்யூன், ஜூலை 25, 1853.)

அது எண்பத்தாறு ஆண்டுகளுக்கு முன்னால். இந்திய சமஸ்தானங்கள், அல்ல, மன்னர்கள் என்பதே பொருந்தும, இன்னும் தங்கள் ''நிலையான அழிவில்'' நீடிக்கிறார்கள்; ஒரு புதிய அரசியல் திட்ட நாடகமாடுவதற்கு இந்தப் பிணங்களை அலங்கரித்துப் பயன்படுத்தப் பயங்கரமான புதிய முயற்சிகளும் நடைபெறுகின்றன. பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் இந்தியாவைக் கைப்பற்றிய போதிருந்த பலவகை ஒழுங்கீனத்தைப் பொதுவாக ஒழிக்க முயன்றவர்கள், நாடு முழுமைக்கும் ஒரேவித அரசியல் முறையையும் ஆட்சிமுறையையும் அளித்ததன் வாயிலாக இந்தியாவில் ஒற்றுமை ஏற்படுத்தியதாக தாராளமாகப் பெருமை பீற்றிக் கொள்கிறார்களே, அவர்கள் நிர்வாக ஒழுங்கு முறைக்குப் பொருந்தாத, ஒரேவிதச் சட்டமியற்ற இடம் தராத, அல்லது மிகக் குறைந்த பட்ச அளவுகோல்களுக்கும் ஏற்காத, அல்லது புள்ளி விவர ஒற்றுமைக்குக்கூட உதவாத, சிதறும் சமஸ்தானங்களில் இன்றளவும் இந்த பேய்ப் பொம்மலாட்டத்தை ஆர்வத்தோடு நடத்துகிறார்களே, ஏன்? சூக்குமமாய்ச் சிந்தித்தால், பூர்ஷ்வா ஆட்சியின் நோக்கில் பார்த்தாலும், வியாபாரியின் பாக்கிய புத்தக நோக்கில் பார்த்தாலும், முதலீடு செய்பவரின் நோக்கில் பார்த்தாலும், இந்த ஏற்பாடு பகுத்தறிவுக்கு மிகவும் ஒவ்வாதது என்றும் நாடு முழுமையிலும் வசதியாக ஊடுருவுவதற்குத் தேவையான, ஒரேவிதமான, சிக்கனமான ஆட்சி முறைக்குப் பொருந்தாதது என்றுமதான் தோன்றும். உண்மையில், பூர்ஷ்வா இங்கிலாந்தில் முடியாட்சியையும் பிரபுக்களாட்சியையும் சேர்த்து (காயடிக்கப் பட்டு, ஆவி வடிவத்தில்) வைத்திருக்கிறார்களே, அதைவிட இது

பகுத்தறிவுக்கு ஒவ்வாதது அல்ல. காரணங்கள், ''அரசாங்கக் காரணங்கள்.'' அந்நிய பூர்ஷ்வா ஆட்சி இந்தியாவில் நடக்க அதற்கு நிலப்பிரபுத்துவ முறையின் துணை வேண்டும்.

மிக ஆர்வத்தோடு மன்னர்களைக் கைப்பாவைகளாய்ப் பாது காக்கும் இக்கொள்கை எப்போதும் தொடர்ச்சியாகப் பின்பற்றப் பட்டதல்ல, நவீன காலத்தில்தான் அவ்வாறு கையாளப்படுகிறது. பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பாதியில், பிரிட்டிஷ் ஆதிக்கம் தீவிரமாக இருந்ததோடு தன்னம்பிக்கையோடு வளர்ந்து வந்த போது, ஏதாவது ஒரு சாக்கு சொல்லி, சிதையும் சமஸ்தானங் களைப் பிரிட்டிஷாரின் பிரதேசத்தோடு சேர்த்துக் கொள்ளும் கொள்கை மிக விசையோடு கடைப்பிடிக்கப்பட்டது. ஆனுல் திருப்புமுனை, 1857 கலகத்தோடு தொடங்கியது. 1857ஆம் ஆண்டுக் கலகம், அந்நியரின் ஆதிக்க அலையைப் பின்னுல் தள்ளு வதற்காக, சிதையும் நிலப்பிரபுத்துவ சக்திகளும், நாட்டின் முன்னுள் மன்னர்களும் செய்த இறுதி முயற்சியாகும். ஏற்கனவே குறிப்பிடப்பட்டது போல், அக்காலத்து முற்போக்குச் சக்திகள், வளரும் பருவத்திலிருந்த பூர்ஷ்வா வகுப்பின் பிரதிநிதிகளான படித்த வகுப்பினர் கலகத்திற்கு எதிராகப் பிரிட்டிஷ் ஆட்சியை ஆதரித்தார்கள். கலகம் நசுக்குண்டது; ஆனுல், பாடம் கற்றுக் கொள்ளப்பட்டது. இந்தக் காலம் முதல் நிலப்பிரபுத்துவ சக்திகள் பிரிட்டிஷ் ஆட்சிக்கு அபாயம் விளைவிக்கக்கூடியவர் களாகவோ அல்லது போட்டியாளர்களாகவோ விளங்கவில்லை; ஆனுல், விழிப்புறும் மக்களின் முன்னேற்றத்திற்குத் தடைவேலி களாக அமைத்தார்கள். முன்பு சலுகையோடு நடத்தப்பட்ட முற்போக்குச் சக்திகள் இப்போது, விழிப்புறும் மக்களுக்குப் புதிய தலைமை தருமோ என்று சந்தேகக் கண்களோடு பார்க்கப்பட லாயின. ஆகவே, நிலப்பிரபுத்துவ அம்சங்களை மேலும் மேலும் போற்றி வளர்த்து, அரசர்களையும் அவர்களுடைய சமஸ்தானங் களையும் பாதுகாத்து பிரிட்டிஷ் ஆட்சிக்கு அரண் ஆக்கிக் கொள் ளும் கொள்கை மிக உறுதியாகக் கடைப்பிடிக்கப்படுகிறது.

ஏற்கனவே கலகத்திற்கு முந்தின ஆண்டுகளில் சர் வில்லியம் ஸ்லீமன், ''அயோத்தியைக் கைப்பற்றியதால், அந்த முடியரசை விடப் பதின் மடங்கு மதிப்புக்கு மேல் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் விலை தர நேரும்; அதனுல் சிப்பாய்கள் கலகம் தோன்றுவதைத் தவிர்க்க முடியாது,'' என்று கவர்னர் ஜெனரல் டல்ஹௌஸி பிரபுவை எச்சரித்திருந்தார்; ''அவர்கள் எல்லாரும் அழித் தொழிக்கப்பட்டுவிட்டால், நாம் நம் சுதேசிப் படையின் தயவை நம்பியிருக்க நேரும்; அது எப்போதுமே போதுமான அளவு நமக்கு அடங்கியிருக்கும் என எதிர்பார்க்க முடியாது,'' என்று

சொன்ன அவர், இந்திய சமஸ்தானங்களை, ''நீரோட்ட விசை''யை அடக்கப் பயன்படும் தடுப்பு அணைகளைப் போல் கருத வேண்டும் என்று யோசனை கூறினார். ஆனால், தீவிரமான கருத்தாளரும், நாட்டை விரிவுபடுத்தும் கொள்கையின் ஆதரவாளருமான டல்ஹௌஸிக்கு அந்த யோசனை திருப்தி தரவில்லை; 1857 இல் ஏற்பட்ட யுத்த அனுபவத்திற்குப் பிறகுதான் கொள்கை மாற்றம் பற்றித்தீர்மானமான முடிவுக்கு வரமுடிந்தது.

1858 இல் அரசியின் அறிக்கையில் இக்கொள்கை பின்வருமாறு குறிப்பிடப்பட்டது: ''சுதேச மன்னர்களின் உரிமைகள், கௌரவம், பெருமை ஆகியவற்றை நமக்குரியனவாக நாம் மதிப்போம்.'' டல்ஹௌசிக்குப் பிறகு கவர்னர் ஜெனரலான கானிங்கு பிரபு கொள்கையின் நோக்கத்தை 1860 இல் வெளிப்படையாக வருணித்தார்:

> ''இந்தியா முழுவதையும் ஜில்லாக்களாய் (அல்லது பிரிட்டிஷ் மாவட்டங்களாய்)ப் பிரித்தால், காலம் போகிற போக்கில் நம் சாம்ராஜ்யம் ஐம்பது ஆண்டுகள் நிலைப்பது கூட சந்தேகம் என்று வெகு காலத்துக்கு முன்பு சர் ஜான் மால்கோமினால் கூறப்பட்டது; ஆனால், நாம் பல சுதேச சமஸ்தானங்களை அரசியல் அதிகாரம் இல்லாத ராஜாங்கக் கருவிகளாய் வைத்துக் கொள்ள முடியுமானால் நம் கடலாதிக்கம் நீடிக்கும் வரை நாம் இந்தியாவில் இருக்க முடியுமெனவும் அவரால் சொல்லப்பட்டது. இந்தக் கருத்திலுள்ள உருவான உண்மையைப் பற்றி எனக்கு ஐயமில்லை; அண்மைக்கால நிகழ்ச்சிகள், அக் கருத்து முன்னெப்போதையும் விட இப்போது ஆழ்ந்து கவனிக்கத் தக்கது என்பதைக் காட்டுகின்றன.''
> (கானிங்கு பிரபு, ஏப்ரல் 30, 1860.)

எனவே, ''ராஜாங்கக் கருவிகளாக''வும், ''அரசியல் அதிகாரம் இல்லாமலும்'' சமஸ்தானங்களை காத்து, பிரிட்டிஷ் ஆட்சியை நிலைநாட்ட வேண்டும் என்பதே அவர்கள் கணக்கு. பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு, விக்டோரியா மகாராணியை இந்தியாவின் சக்கரவர்த்தினியாக அறிவித்த 1876 ஆம் ஆண்டு ராஜாங்கப் பட்டங்கள் மசோதாவின் நோக்கத்தைப் பற்றி லிட்டன் இதே மாதிரி வருணித்தார்: ''சக்தி வாய்ந்த சுதேச பிரபுத்துவத்தின் நம்பிக்கைகள், விழைவுகள், பரிவுகள், நலன்களோடு இங்கிலாந்தின் மகுடம் இனி இசைந்து ஒன்றுபடுவதைக் குறிக்கும் ஒரு புதிய கொள்கை''யின் ஆரம்பத்தை அந்த மசோதா குறிப்பிடுவதாய் அவர் உரைத்தார்.

எனவே, விரைவாகவோ, தாமதமாகவோ அழிந்து பட இருந்த இந்திய சமஸ்தானங்களை அவ்வாறுகாமல் பேணிக்காக்கும்

கொள்கை நவீன பிரிட்டிஷ் கொள்கையின் கருவியே அன்றி, இந்தியாவிலுள்ள பழமையான நிறுவனங்களின், மரபுகளின் எச்சத்தை வெளியிடுவது அல்ல. மன்னர்கள் சார்பில் பிரசாரம் செய்யும் அரசுத் தலைமை அதிகாரியரான பேராசிரியர் ரஷ்புருக்-வில்லியம்ஸ் (இந்தியமன்னர்கள் சிறப்பு நிறுவனத்தின் முன்னாள் கூட்டு இயக்குநர், வட்ட மேஜை மகாநாட்டில் கலந்து கொண்ட இந்திய சமஸ்தான தூது கோஷ்டியின் ஆலோசனையாளர், 1928 வரை இந்திய அரசின் பொதுத் தகவல்துறை இயக்குநர்) 1930 இல் மொழிந்தார்:

> ''சுதேச சமஸ்தானங்களின் மன்னர்கள் தங்கள் பிரிட்டிஷ் தொடர்புக்கு மிகவும் விசுவாசமாக இருப்பவர்கள். அவர்களில் பலர் பிரிட்டிஷாரின் நியாயத்தாலும் ஆயுதங்களாலும் உயிரோடு இருப்பவர்கள். பதினெட்டாம் நூற்றாண்டின் பின் பகுதியிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முன் பகுதியிலும் நடந்த போராட்டங்களில் பிரிட்டிஷ் ஆதிக்க பலம் கை கொடுத்திராவிட்டால் அவர்களில் பலர் இன்று இருக்கவே மாட்டார்கள். பிரிட்டனுக்கு இன்றுள்ள கஷ்டங்களிலும் இனி வரப்போகும் புதிய ஏற்பாடுகளுக்கும் அவர்களுடைய அன்பும் விசுவாசமும் முக்கியமான மூலதனங்கள்.
>
> ''இந்தியா முழுவதிலும் சொக்கட்டான் பலகை போல் மாறி மாறி பரவி கிடக்கும் இந்த சமஸ்தானங்களின் அமைப்பு ஒரு பெரும் பாதுகாப்பு. சந்தேகாஸ்பதமான பிரதேசங்களில் நண்பர்களின் கோட்டைகள் பலவற்றை பெரும் பின்னல் வலையெனக் கட்டி வைப்பது போன்றது அது. இந்தியாவைக் கைப்பற்றிப் பிரிட்டிஷாரை எதிர்த்து ஒரு பொதுக் கலகம் தோன்றுவதை அது சிரமம் ஆக்கும்; ஏனெனில், வலிமையும் விசுவாசமும் உள்ள இந்தச் சமஸ்தானங்களின் பின்னல் வலை நமக்குத் துணை நிற்கும்.''
>
> (எல்.எப். ரஷ்புருக்-வில்லியம்ஸ், 1930, மே 28, ஈவினிங் ஸ்டாண்டர்ட்.)

ஆயினும், நேச மனப்பான்மையுள்ள அரசாங்கப் பிரசாரகர்கள் இந்த பிற்போக்கான அடிமைச் சாதனங்களைப் பற்றிப் பாசாங்கு செய்வது போன்று அவை அவ்வளவு வலிமை வாய்ந்தவை அல்ல. தங்கள் குடிமக்களின் விருப்பத்துக்கு மாறாகத் தங்கள் ஆட்சி நீடிப்பதற்கு இந்த மன்னர்களில் பெரும்பாலோர் பிரிட்டிஷ் ஆதிக்க பலத்தையே நம்பியிருக்கிறார்கள் என்பது பலருக்கும் தெரிந்த உண்மை.

''குடிமக்களுக்கு இடையில் இன்று ஒரு மக்கள் ஒப்பந்தம் எடுக்கப்படுவதாயிருந்தால் அவர்கள் சமஸ்தானங்கள் பிரிட்டிஷ் இந்தியாவோடு சேர்க்கப்படுவதை மகிழ்வோடு வரவேற்பார்கள். பிரிட்டிஷாரின் தயவால்தான் சமஸ்தானங்கள் இன்று பிழைத்துக் கிடக்கின்றன.''

(எஸ். சி. ரங்கய்யர், ''இந்தியா, அமைதி அல்லது போர்.'')

''நவீன நாடு, தேசிய இனம் என்பதற்கு ஏற்ற லட்சணங்கள் எவையும் சமஸ்தானங்களில் எதற்கும் இல்லை. எல்லைகள் செயற்கையானவை; இனம் அல்லது மொழி அல்லது பண்பாடு வேற்றுமைகளுக்கும் அவற்றுக்கும் யாதொரு தொடர்பும் கிடையாது. மேலும், ராஜவம்சத்தை சமஸ்தானத்தோடு இணைக்கும் தொடர்புகள் வழக்கமாக எப்படியோ தற்செயலாக ஏற்பட்டவை அல்லது செயற்கையானவை; பெரும்பாலும் இருநூறு ஆண்டுகளுக்குள் நேர்ந்தவை. மறுபக்கம், சமஸ்தானக் குடிமக்களைப் பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள அவர்களுடைய குடும்ப உறவினர்களோடு இணைக்கும் பண்பாட்டு, சமூகத் தொடர்புகள் ஒவ்வோரிடத்திலும் மிக வலிமை வாய்ந்தனவாகவும் பழமையானதாகவும் இருக்கின்றன. எனவே, பொதுவாக சொல்லப்படுவதற்கு மாறாக, குடிமக்களிடம் அரசர்களுக்குள்ள பிடிப்பு மிகவும் பலவீனமானது என்று ஏற்படுகிறது.''

(ஜே.டி. க்வின், ''காங்கிரசும் சமஸ்தானங்களும்,'' மான்செஸ்டர் கார்டியன், மே 12, 1939.)

1929 இல் வெளியான பட்லர் கமிட்டி அறிக்கை, ''கலகம் அல்லது புரட்சி'' ஏற்படாமல் சமஸ்தானங்களை பராமரிக்க வேண்டிய பொறுப்பு பிரிட்டிஷ் அரசுக்கு உண்டு என்பதை எளிய மொழியில் கூறியது:

''சமஸ்தானங்களைக் கலகம் அல்லது புரட்சியிலிருந்து காப்பாற்ற வேண்டிய பொறுப்பு ஆட்சிபீடத்துக்கு, அது அவற்றோடு செய்து கொண்ட ஒப்பந்தங்கள், ஸனத்துகளின் ஷரத்துகள் வாயிலாகவும், வழக்குமுறையாலும், அரசர்களுடைய சலுகைகளையும் உரிமைகளையும், கௌரவத்தையும் பழுதுபடாமல் காப்பதாக மன்னர்பிரான் சக்கரவர்த்திகள் தந்த வாக்குறுதியாலும் ஏற்பட்டது....அரசரின் சலுகைகளையும் உரிமைகளையும் கௌரவத்தையும் பழுதுபடாமல் காப்பதாக மன்னர்பிரான் சக்கரவர்த்திகள் தந்த வாக்குறுதி, அரசரை விலக்கிவிட்டு வேறுவகை அரசாங்கம் அமைப்

பதற்காகச் செய்யப்படும் முயற்சிகளிலிருந்து அவரைக் காப்பாற்ற வேண்டிய கடமையை உண்டாக்கி விட்டது.''

(இந்திய சமஸ்தானங்கள் கமிட்டி, 1929, 49, 50 பிரிவுகள்.)

பிரிட்டிஷ் ஆட்சியாளர்களால் இவ்வாறு காக்கப்படுவது எத் தகைய ஆட்சி முறை? ஓர் இந்திய சமஸ்தானத்தின் பொதுவான சூழ்நிலை பற்றித் தம் உணர்ச்சியை ஜவகர்லால் நேரு சுயசரிதத் தில் பின்வருமாறு வருணிக்கிறார்:

''ஒடுக்கப்படும் உணர்வு ஒன்று ஏற்படுகிறது; அது இறுக்க மாக மூச்சுவிட முடியாமல் திணறச் செய்வதாக இருக்கிறது; அமைதியான அல்லது மெதுவாக நகரும் நீரோட்டத் திற்கு அடியில் தேக்கமும் அழுகலும் உள்ளன. அடை பட்டது போலவும், தடைப்பட்டது போலவும், உள்ளமும் உடலும் கட்டிடப்பட்டது போலவும் ஓர் உணர்வு எழுகிறது. அரசர்களின் படாடோபமான அரண்மனைப் பகட்டுக்கு நேர் விரோதமாக, மக்களின் முற்றிலும் பின்தங்கிய தன்மையும் துன்பமும் பளிச்சென்று புலப்படுகின்றன. அரசரின் சொந்தத் தேவைகளுக்காகவும் ஆடம்பரத்துக்காகவும் நாட்டின் செல்வத்திலிருந்து எவ்வளவு அதிகம் அரண்மனைக்குள் பாய் கிறது, பொதுப் பணிகள் வாயிலாக எவ்வளவு கொஞ்சம் மக்களுக்குத் திரும்பிச் செல்கிறது......

''இந்தச் சமஸ்தானங்களை ஒருமர்மத் திரை சூழ்ந்துள்ளது. செய்தித்தாள்களுக்கு அங்கு ஊக்கம் தரப்படுவதில்லை; ஓர் இலக்கிய, அல்லது அறைகுறை அதிகார பூர்வமான ஒருவார ஏடு வெற்றிகரமாக நடந்தால் பெரிது. வெளியிலிருந்து செய்தித் தாள்கள் அடிக்கடி தடை விதிக்கப்படுகின்றன. பிரிட்டிஷ் இந்தியாவைவிட மிகுதியாகக் கல்வியறிவு பரவி யுள்ள திருவாங்கூர், கொச்சி முதலிய தெற்கு சமஸ்தானங் களைத் தவிர மற்ற இடங்களில் கல்வியறிவு மிகவும் குறைவு. வைசிராய் ஆடம்பரமாகவும் தடபுடலாகவும் வரவேற்பு அளிக்கப்பட்டதும், அப்போது ஒருவரை ஒருவர் துதிபாடிப் பேசிய பேச்சுகளும், அல்லது ஏக தடபுடலோடு நடை பெற்ற மன்னரின் திருமணம் அல்லது பிறந்தநாள் விழாவும், அல்லது விவசாயிகள் கலகமும்தான் சமஸ்தானங்களிலிருந்து வரும்முக்கியமான செய்திகள். அரசர்களின் குற்றம் குறைகளை ஆய்வு செய்ய முடியாத வண்ணம் சிறப்புச் சட்டங்கள் பாது காப்பு தருகின்றன. பிரிட்டிஷ் இந்தியாவில்கூட, சமஸ் தானங்களுக்குள்ளும், லேசான திறனுய்வும் மிகத் தீவிரமாய்

ஒடுக்கப்படுகின்றன. பொதுக் கூட்டங்களே அங்கு தெரியாது; சமூகக் காரணங்களுக்கான கூட்டங்களும் அடிக்கடி தடை செய்யப்படுகின்றன.''

(ஜவகர்லால் நேரு, சுயசரித்திரம், பக். 531.)

1891 ஆம் ஆண்டு ஜூன் 25, இந்திய அரசாங்க அறிவிப்பு வாயிலாக இந்திய சமஸ்தானங்களில் செய்திக் கட்டுப்பாடு மிக வெளிப்படையாகத் திணிக்கப்பட்டுள்ளது: ''பொதுச் செய்திகள் அல்லது பொதுச் செய்திகளை ஏந்திவரும் செய்தித் தாள் அல்லது அச்சிடப்பட்ட வேறு புத்தகம் எதுவும், அது கால முறைப்படி வெளிவருவதாயினும் வேறு வகையாக வெளிவருவதாயினும் சரி, தற்போதைக்கு அமுலிலுள்ளபடி அரசியல் ஏஜண்டின் எழுத்து மூலம் அனுமதி பெறுமல், கவுன்சிலோடு கூடிய கவர்னர் ஜெனரலின் நிர்வாகத்திலுள்ள எந்த ஸ்தல வட்டாரத்திலும், ஆனல் பிரிட்டிஷ் இந்தியப்பகுதி அல்லாத இடத்திலும் 1891, ஆகஸ்டு 1 க்குப் பிறகு நடத்தப்படவோ, அச்சிடப்படவோ அல்லது வெளியிடப்படவோ கூடாது.'' இந்த அறிவிப்பைத் தொடர்ந்து, பிரிட்டிஷ் இந்தியாவுக்குள் சமஸ்தானங்களிலுள்ள நிலைமைகள் பற்றின திறனாய்வு நடத்த முடியாத வண்ணம், 1934 சமஸ்தானங்கள் காப்புச் சட்டத் தொகுப்பின் வாயிலாக மேலும் விசேஷமான கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன.

பிரிட்டிஷ் பாதுகாப்பின் கீழ் உள்ள பொம்மை அரசர்களின் ஆட்சி முறைக்கு ஈடு சொல்லும்படி வரலாற்றில் வேறு ஏதாவது ஆட்சி முறை இருந்திருக்கிறதா என்பது சந்தேகம். பிரிட்டிஷ் இந்தியாவின் கீழ்மட்ட ஆட்சிமுறையைவிட உயர்ந்த முறையில் ஆளப்படும் சில இந்திய சமஸ்தானங்கள் இருக்கின்றன; அவை கட்டாயக் கல்வி முறையை அமுல்படுத்தி ஓரளவு வெற்றி கண்டதோடு, கட்டுப்படுத்தப்பட்ட பிரதிநிதி ஆலோசனையாளர்களின் நிறுவனங்களையும் மிக ஆரம்பகால முறையில் ஏற்படுத்தியுள்ளன. ஆனல், இவை விதிவிலக்குகள். ஆனல், பெரும்பாலானவற்றில் வருணனைக்கு அடங்காத அடிமைத்தனமும், கொடுங்கோன்மையும், ஒடுக்குமுறையும் நிலவுகின்றன. ஆசியக் கொடுங்கோல் அரசுகளின் வரலாற்றில் ஊழலும் ஒடுக்குமுறையும் போதுமான அளவு பரிச்சயமானவை. ஆனல், அயல் நாட்டுப் படையெடுப்பு நேரலாம். அல்லது, உள்நாட்டில் கலகம் நேரலாம் என்ற தானியங்கி அச்சத் தடைகள் இவற்றுக்கு இருந்தன. பிரிட்டிஷ் பாதுகாப்பு காரணமாக இவ்விரு அச்சத் தடைகளும் அகற்றப்பட்டு விட்டன; கடுமையான தீய ஆட்சி நடத்தும் அரசர்களை அடக்கவோ, நீக்கவோ மேற்பார்வையிடும்

அதிகார பலம் பிரயோகம் செய்யப்படுகிறது என்பது மெய்யே; தீய ஆட்சியைத் தடுப்பதற்காக அல்ல, மக்களின் விசுவாச மின்மையைத் தடுப்பதற்காகவே அது பயன்படுகிறது. இழிவான பங்குகொண்ட, காரியமற்ற கைப்பாவைகள் மன்னர்கள். அதனுல்தான், இந்தியாவிலேயே மிக அதிகமான பின்தங்கிய நிலைமையில் உள்ள இந்திய சமஸ்தான மக்கள் இகழத்தக்க இழிவையும் துன்பத்தையும் நுகருகிருர்கள்.

சமஸ்தான மக்கள் மாநாடு (சமஸ்தானத்தில் உள்ள மக்களின் ஜனநாயக இயக்கத்தின் நிறுவனம்) 1939 இல் இந்த மன்னர்களின் ஆட்சிமுறையின் தன்மையைப் பின்வருமாறு தொகுத்துக் கூறியது:

''சிறியனவோ பெரியனவோ, பெரும்பாலும் விதி விலக்கு இன்றி எல்லா சமஸ்தானங்களிலும் தனிநபரின் சுயேச்சை ஆட்சி நடக்கிறது. சட்ட பூர்வமான ஆட்சி கிடையாது; வரிவிதிப்பு கடுமையானது, பொறுக்கொணுதது. குடிமுறை உரிமைகள் நசுக்கப்படுகின்றன. அரசர்களின் செலவுக்கான கழிவுத்தொகை சாதாரணமாக அறுதியிடப் படுவதில்லை; அறுதியிடப்படும் இடங்களிலும் அதன்படி நடப்பதில்லை. ஒருபக்கம் அரசர்களின் டம்பச் செலவுகளும் ஆடம்பரமும், மறுபக்கம், மக்களுடைய கடும் வறுமை.

''வறுமையில் உழன்று துன்புறும் மக்கள் பாடுபட்டுத் தேடிய பணத்தைக்கொண்டு அவர்களுடைய அரசர்களால் அயல்நாடுகளிலும் இந்தியாவிலும் இன்பம் வாங்கப்படுகிறது, ஆடம்பரமாய்ச் செலவழிக்கப்படுகிறது. இந்த ஆட்சிமுறை நீடிக்க முடியாது. நாகரிகமுள்ள எந்த மக்களும் இதைப் பொறுக்கமாட்டார்கள். வரலாற்றின் தர்க்கமுறை முற்றி லும் அதற்குப் பகையாக இருக்கிறது; இந்திய மக்களின் உணர்ச்சி இதற்குப் பணியாது.''

(அகில இந்திய சமஸ்தான மக்கள் மாநாட்டின் நிலையான கமிட்டியின் அறிக்கை, ஜூன், 1939.)

இந்தச் சமஸ்தானங்களின் ஆட்சிமுறைத் தன்மையின் லட்சணங் களை அவர்களின் வரவு செலவுத் திட்டங்களில் காணலாம்:

''இங்கிலாந்து மன்னர் தம்நாட்டு வருவாயில் 1600 இல் ஒன்றும், பெல்ஜியம் மன்னர் 1000 இல் ஒன்றும், இத்தாலி மன்னர் 500 இல் ஒன்றும், டென்மார்க் மன்னர் 300 இல் ஒன்றும், ஜப்பான் சக்கரவர்த்தி 400 இல் ஒன்றும் பெறுகிருர்......ஆனுல், எந்த மன்னரும் திருவாங்கூர் (இந்தியாவிலேயே மிக முற்போக்கான சமஸ்தானம்)

மகாராணியைப் போல் 17 இல் ஒன்றையோ, ஹைதராபாத் நைஜாம் அல்லது பரோடா மகாராஜாவைப் போல் 13 இல் ஒன்றையோ, அல்லது காஷ்மீர், பீகானேர் மகாராஜாக்களைப் போல் 5 இல் ஒன்றையோ பெறுவதில்லை. நாட்டின் வருவாயில் 3 இல் ஒன்றை, 2 இல் ஒன்றைக் கவர்ந்து கொள்ளும் அரசர்கள் சிலர் அல்லர் என்பதை அறிய உலகமே இழியும்.''

(ஏ. ஆர். தேசாய், ''இந்திய நிலப்பிரபுத்துவ சமஸ்தானங்களும் விடுதலைப் போராட்டமும்.'')

ஏகாதிபத்தியத்தினுல் சிறப்பாகப் போற்றிப் பாராட்டப்படும் பீகானேர் சமஸ்தானத்தின் 1929-30 வரவு செலவுத் திட்டம் வருமாறு:

| | ரூபாய்கள் |
|---|---|
| குடிமுறை அலுவலர் பட்டி | ......1,255,000 |
| அரசர் திருமணம் | ...... 82,500 |
| கட்டிடங்கள், சாலைகள் | ...... 618,384 |
| அரண்மனைகள் விஸ்தரிப்பு | ...... 426,614 |
| ராஜ குடும்பம் | ...... 222,864 |
| கல்வி | ...... 222,979 |
| மருத்துவ சேவை | ...... 188,138 |
| பொதுப் பணி | ...... 30,761 |
| சுகாதாரம் | ...... 5,729 |

ஆகவே, அரசருக்காகவும் அவருடைய குடும்பத்துக்காகவும் அரண்மனைகளுக்காகவும் ஒதுக்கப்படும் தொகையில் நாலில் ஒரு பங்குக்கும் குறைவாகவே கல்வி, மருத்துவ சேவை, பொதுப் பணிகள், சுகாதாரம் ஆகியவற்றுக்காக ஒதுக்கப்படுகிறது. ஜாம் நகர் சமஸ்தானத்திற்கு 1926-27 இல் மொத்த வருவாய் பத்து லட்சம் பவுன்கள், அதில் ஏழு லட்சம் அரசரின் சொந்தச் செலவுகளுக்கு ஒதுக்கப்பட, கல்விக்காக 1·5 சதவீதமும், மருத்துவப் பணிக்காக 0·9 சதவீதமும் செலவழிக்கப்பட்டன.

இந்த ஆட்சி முறையின்கீழ் வாழும் பேறுபெற்ற மக்களின் நிலைமைகள் யாவை? இந்திய சமஸ்தானங்கள், ஒருவகை நிலப் பிரபுத்துவ முறையின் மிகமிகப் பின்தங்கிய விவசாயப் பொருளாதாரத்தைப் பரதிபலிப்பவை. மிகச் சிலவற்றில்தான் சிறிதளவாவது தொழில்துறை வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. பலவற்றில் அடிமைத்தனம் மிகக் கடுமை:

''ராஜபுதானத்துச் சமஸ்தானங்கள் பலவற்றிலும், கதேவார் சமஸ்தானம் உட்பட மேற்கிந்திய சமஸ்தானங்கள் ஏஜன்சியின் சமஸ்தானங்கள் பலவற்றிலும் அடிமைச் சாதிகள் இருக்கின்றன. 1921 ஆம் ஆண்டு சென்ஸஸ் அறிக்கைப்படி ராஜபுதானத்திலும் மத்திய இந்தியாவிலும் மட்டும், சாகர், தரோகா வகுப்புகளைச் சேர்ந்த 160,735 அடிமைகள் இருந்தனர்.''

(பி. எல். சூட்கர், ''பிரிட்டிஷ் பாதுகாப்பின் கீழ் இந்திய மன்னர்கள்'', 1929, பக். 33.)

பலவகைப் பணிகளுக்கும் கட்டாய ஊழியம் வாங்கிக்கொண்டு, கூலி தராமல் உணவுமட்டும் தருவது வழக்கமான பழக்கம்.

''வேத், பேகார் (கட்டாய ஊழியம் என்று பொருள்) என்றொரு வழக்கம் பெரும்பாலும் எல்லா சமஸ்தானங்களி லும் உள்ளது; அரசர்களுக்காகவும் அவர்களின் அதிகாரி களுக்காகவும் எல்லாவகைத் தொழிலாளர்களும், கூலியாட் களும், கைத்தொழிலாளர்களும் வேலை செய்யுமாறு கட்டாயப்படுத்தப்படுவார்கள்; பெரும்பாலும் வயிற்றுக்கு உணவு தருவதைத் தவிர வேறு கூலி தரமாட்டார்கள். அரசு ஆணையிடுவதற்கு ஏற்ப அவர்கள் எந்த நேரத்திலும் எவ்வளவு காலத்திற்காயினும் கட்டாயம் வேலை செய்தாக வேண்டும்.... இளம் பிராயமோ, வயதானவர்களோ, மணமானவர்களோ, கைம்பெண்களோ, பெண்பாலரும் விதிவிலக்கு அல்லர். இவர்களில் யாராவது, ஆண்களோ பெண்களோ பலவீனமாயிருந்து ஒழுங்காக வேலை செய்ய முடியாவிட்டால், சவுக்கடி கிடைக்கும், அல்லது சித்திரவதை செய்யப்படுபவர்.

''அறுபது வயதான ஏழைக் கிழவிகள் கான்ஸ்டபிள் களால் கடுமையான சவுக்கடி வாங்கியது இந்த ஆசிரியருக்குத் தெரியும். பொதுத் தெருக்களில் மூங்கில் கழிகளால் இத் தண்டனை நிறைவேற்றப்பட்டது; தங்கள் பலவீனத்தைக் காரணமாய்க் காட்டிக் கட்டாயக் கூலி வேலையிலிருந்து தங்களுக்கு விலக்கு அளிக்குமாறு வேண்டியதே அவர்கள் செய்த குற்றம்.''

(மேற்படி புத்தகம், பக். 37.)

குடிமுறை உரிமைகள் அங்கு இல்லை.

''அரசரோ, முதல் அமைச்சரோ, அல்லது அரசாங் கமோ ஒரு குடிமகனின் உரிமைகளை மீறி நடந்தால் அதற்குப் பரிகாரம் காணக் குடிமகன் யாருக்கும் உரிமை இல்லை.

எந்தக் குடிமகனின் உரிமைகளையும் உடைமைகளையும் பறிமுதல் அல்லது ஜப்தி செய்யுமாறு அரசர் தம் விருப்பப்படி ஆணை இடலாம். எந்தத் தொகையையும் அவர் அபராதமாக விதிக்கலாம்; அதை நிர்ப்பந்தமாய் வசூல் செய்ய எந்தவிதமான முறையையும் கையாளலாம். குற்றச் சாட்டோ விசாரணையோ இல்லாமல், காலவரை இல்லாமல் எவரையும் அவர் சிறையில் தள்ளமுடியும்.''

(மேற்படி நூல், பக். 72-3.)

அரண்மனையின் அடங்கா விடாயான தேவைகளைத் தணிப்பதற்காக, ஏழைகளிலும் ஏழைகளை அரைக்கும் வரிகள் இஷ்டம் போல் விதிக்கப்படுகின்றன:

''நவநகர் சமஸ்தானத்திலுள்ள வரிகளிலிருந்து, எல்லா சமஸ்தானங்களிலும் பொதுவாக விதிக்கப்படும் வரிகளைப் பற்றி நியாயமான, சரியான கருத்து கொள்ள முடியும். தொழில்கள் மீதும், தொழிலாளர்கள், கைத்தொழிலாளர்கள் போன்ற நபர்கள் மீதும், ஆடுமாடுகள் மீதும், நிச்சய தாம்பூலங்கள் மீதும், திருமணங்கள் மீதும், பிறப்புகள், இறப்புகள், இறுதிச் சடங்குகள் மீதும் விதிக்கப்படும் வரிகள் முதல் பட்டியில் அடங்கும். ஏழைக் கைம்பெண்கள் தங்களுடைய ஒரே ஜீவனோபாயமாக வைத்துள்ள கை அரவை மில்களைப் போன்ற சின்னஞ்சிறு வியாபாரத்திற்கும் வரி விதிக்கப்படுவதைக் கவனிக்கவேண்டும்....

''நிலவரிக்குத் திரும்பலாம்....ரொக்கமாக இந்த வரியைச் செலுத்துவதாயின், ஓர் ஏக்கருக்கு நாலு ஷில்லிங்குகள் வீதம் வரி விதிக்கப்படும்; தானியமாய்த் தருவதானால், விளைச்சலில் நாலில் ஓர் பகுதி. நடைமுறையில் இந்த அளவு அதிகமாகும். சமஸ்தானங்களின் பங்கு 40 சதவீதமாகும். மற்ற வரிகள் எல்லாம்....குறைவாக மதிப்பிட்டாலும் 10 சதவீதமாகும். ஆக, பயிரிடுபவருக்கு மிஞ்சுவது 50 சதவீதமே....

''இத்துடன்....ஒரு நாட்டாமைக்காரரின் கலியாணம், அல்லது, அவருடைய குடும்பத்தைச் சேர்ந்த ஒருவரின் கலியாணத்திற்கு ஆகும் செலவுகளுக்கு உதவி செய்ய வேண்டும்; நாட்டாமைக்காரருக்கு பிள்ளை பிறந்தாலும், அவருடைய தாய் அல்லது மனைவி இறந்தால் இறுதிச் சடங்குகளுக்கும் குடியானவர் காணிக்கை செலுத்த வேண்டும்.

(மேற்படி நூல், பக். 45-7.)

இந்திய அரசராட்சி முறையின் மிகக் கடுமையான அடக்குமுறைக்கும் துன்பத்திற்கும் இன்றைய உலகில் இணை காண முடியாது; இதற்கு முக்கியமான காரணம் என்னவென்றால், மிகப் பண்டைக் காலத்து நிலப்பிரத்துவ அடக்குமுறையையும் அடிமை முறையின் எச்சத்தையும் அடிமட்டத்திலும், மிக உயர்ந்த ஏகாதிபத்திய வலிமையையும் சுரண்டலையும் மேல்மட்டத்திலும் அது இணைக்கிறது.

இந்த ஆட்சி முறையைத்தான் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் பாதுகாத்து செயற்கை முறையில் இந்தியாவின் ஐந்தில் இரு பகுதிகளில் நிலையாக வைத்திருப்பதுமன்றி, நவீனகாலத்தில் அதை முன்னணிக்குக் கொணர்ந்து இந்தியா முழுமைக்குமான விவகாரங்களில் அதிகமான முக்கியத்துவமும் சிறப்பும் தர முயலுகிறது. நாட்டு விடுதலை இயக்கம் முன்னேற முன்னேற, ஏகாதிபத்தியம் அரசர்களோடு நேசவுறவு கொள்ளும் தன் கொள்கையை மேலும் மேலும் சார்ந்து, தேசீய இயக்கத்திற்கு எதிர்சக்திகளாய் அரசர்களை ஆக்க முயலுகிறது. 1921 இல் மன்னர்கள் மன்றம் நிறுவப்பட்டது. 1935 ஆம் ஆண்டுச் சட்டம் படைத்த கூட்டாட்சி அரசியல் திட்டத்திற்கு அரசர்கள் மூலைக்கல் போன்றவர்கள். மேலவையில் அரசர்களுக்கு ஐந்தில் இரண்டுமடங்குக்குமேல் பிரதிநிதித்துவமும் கீழவையில் மூன்றில் ஒரு பங்கு பிரதிநிதித்துவமும் அளிக்கப்பட்டது. இதன் காரணங்களை ரீடிங்கு பிரபு பாராளுமன்ற விவாதங்களில் தெளிவாக்கினார்:

> "அனைத்திந்தியக் கூட்டாட்சியில் அரசர்களும் வந்தால், அதனால் எப்போதும் நிதானப்படுத்தும் ஒரு சக்தி இருக்கும். நாம் மிகுதியாக அஞ்சவேண்டுவது யாது? இந்தியாவின் விடுதலைக்காகவும், சாம்ராஜ்யத்திலிருந்து முற்றிலும் பிரிந்து செல்லும் உரிமைக்காகவும் கிளர்ச்சி செய்வோர் இருக்கிறார்கள். அதற்கு ஆதரவாக இருப்போர் குறிப்பிடாத் தகாத சிறுபான்மையோர்தாம் என்று நானே நம்புகிறேன்; எனினும், அவர்கள் வாயாடிகளான சிறுபான்மையோர்; அவர்களுக்குப் பின்பலமாகக் காங்கிரஸ் நிறுவனம் இருக்கிறது. ஆகையால், இந்த நோக்கிற்கு எதிராக, நம்மால் எவ்வளவு நிதானப்படுத்தும் சக்தியைத் திரட்ட முடியுமோ அதைத் திரட்டி வைத்துக்கொள்ள வேண்டியது முக்கியமாகிறது...... அரசர்களில் சுமார் 33 சதவீதத்தினர் சட்டசபை உறுப்பினர்களாக இருப்பார்கள்; மேல்சபையில் 40 சதவீதம் இருப்பார்கள். காங்கிரசின் கருத்தை ஏற்காத இந்தியர்களின் பெரிய நிறுவனங்களும் இருக்கின்றன. எனவே, கூட்டாட்சி சட்ட மன்றத்தில் இத்தகு வலிமை இருப்பதால், காங்கிரசுக்கு

மிகப் பெரும்பான்மையான வாக்குகள் கிடைத்தாலும், என்ன நேருமோ என்னும் அச்சம் எனக்கு எள்ளளவும் இல்லை.''

மிக அண்மைகாலத்தில், தேசீய ஜனநாயக இயக்கம், பொம்மை சமஸ்தானங்களில் அழுகல் எல்லைகளை மேலும் மேலும் கடந்து மிகச் சக்தியோடு விரைகிறது. சமஸ்தானங்களில் மக்கள் இயக்கத்தை உருவாக்கும் சமஸ்தான மக்கள் மாநாடு மிக விசையாக வலுக்கிறது. அடிப்படை குடிமுறை உரிமைகளுக்காகப் பல சமஸ்தானங்களில் தொடர்ச்சியாகப் போராட்டங்கள் நடந்துள்ளன.

மக்கள் இயக்கம் சமஸ்தானங்களில் இவ்வாறு முன்னேற்றம் காண்பதன் பிரதிபலிப்பு தேசீய காங்கிரசின் கொள்கை மாறுதல்களில் காணப்படுகிறது; சென்ற காலத்தில், தேசீய காங்கிரஸ் சமஸ்தானங்களில் நேரடியாக கிளர்ச்சிகளிலும் நடவடிக்கைகளிலும் இறங்காமல் இருந்து வந்தது. ''தலையிடாக் கொள்கை'' தவறுதலாய்க் கடைப்பிடிக்கப்பட்டது; அரசர்களால் ஒடுக்கப்பட்ட 8 கோடி மக்களோடு ஒன்றுவதற்குப் பதிலாக அந்த பொம்மை ராஜாக்களோடு ஒருவகை ஒற்றுமை கொள்ளலாம் என்ற கற்பனை நம்பிக்கையே அதற்குக் காரணம். வட்ட மேஜை மகாநாட்டில் காந்தி உரைத்தார்: ''இதுவரை, அரசர்களின் குடும்ப, உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாமல் ஒதுங்கியிருந்ததன் வாயிலாக , காங்கிரஸ் அவர்களுக்கு உதவிபுரிய முயன்று வந்துள்ளது.'' மேலும் கூறினர்: ''அவர்கள் தங்கள் குடிமக்களின் நலன்களை மனத்தில் விழைபவர்கள் என்பதை நான் உணருகிறேன், எனக்குத் தெரியும். நாங்கள் சாதாரண மக்கள், அவர்களோ கடவுளின் அருளால் சீமான்கள், அரசர்கள் என்பதைத் தவிர அவர்களுக்கும் எனக்கும் வேற்றுமை கிடையாது. அவர்கள் நலமாய் இருக்க வேண்டும், எல்லா வளமும் பெற வேண்டும் என விழைகிறேன்.''

இந்த நாசகாரக் கொள்கை நிகழ்ச்சிகளால் முறியடிக்கப்பட்டது. காங்கிரஸ் தானுகவே தன் எல்லை பிரிட்டிஷ் இந்தியா தான் என்று கட்டுப்படுத்திக் கொண்டது; அனைத்திந்திய நிறுவனம் என்று உரிமை கொண்டாடினுலும், சமஸ்தானங்களில் தன் தலைமையில் கிளை நிறுவனங்களை அமைக்க அது முயற்சி செய்ய வில்லை. ஆனுல், அண்மைக் காலத்தில், மிக ''முற்போக்கான'' சமஸ்தானங்கள் எனப்படும் திருவாங்கூர், மைசூர் உட்பட எல்லா சமஸ்தானங்களின் அரசர்கள், மிக எளிய முறையில் தொடங்கியுள்ள மக்கள் இயக்கத்துக்கும் அல்லது தேசீய இயக்கத்தின்பால் மக்கள் காட்டிய பரிவுக்கும் எதிராக வன்முறை அடக்குமுறைப் பிரயோகம் செய்ததால் நிர்ப்பந்திக்கப்பட்டு

இந்திய தேசீய இயக்கம் விழிப்பு கொண்டு போராட்டத்தை மேற்கொண்டது. 1938-39 ஆம் ஆண்டு நிகழ்ச்சிகள், சமஸ்தானங்களில் குடியாட்சி உரிமைகளுக்காகவும், உயிர்வாழும் உரிமைக்காகவும் காங்கிரஸ் போராட்டத்தைக் கைக்கொண்ட முதல் முயற்சிகளைக் கண்டன. சமஸ்தானங்களில் நடைபெற்ற சத்தியாக்கிரக இயக்கத்துக்கு ஆதரவு தரும் பிரச்னை காங்கிரசில் ஓர் எரி பிரச்னை ஆயிற்று.

1938இல் நடைபெற்ற தேசீய காங்கிரசின் ஹரிபுரா மாநாட்டில், சமஸ்தானங்களில் காங்கிரஸ் பின்பற்ற வேண்டிய கொள்கையின் தத்துவங்களை பின்வருமாறு அறிவித்திருந்தது:

''இந்தியாவின் மற்ற பகுதிக்கு வேண்டுகிற அதே அரசியல், பொருளாதார, சமூக விடுதலையைக் காங்கிரஸ் சமஸ்தானங்களுக்கும் வேண்டுகிறது; சமஸ்தானங்கள் இந்தியாவைச் சேர்ந்த, பிரிக்க முடியாத பகுதி என்று கருதுகிறது. காங்கிரசின் குறிக்கோளான பூரண சுயராஜ்யம் அல்லது முழு விடுதலை, சமஸ்தானங்கள் உட்பட இந்தியா முழுமைக்குமான கோரிக்கை; ஏனெனில் இந்தியாவின் ஒருமைப்பாடும் ஒற்றுமையும் அடிமைத்தனத்தில் பேணப்பட்டது போலவே சுதந்திரத்திலும் பேணப்பட வேண்டும்.

''இந்தியாவின் மற்ற பகுதிகளில் உள்ள அளவு குடியாட்சி உரிமையும் சுதந்திரமும் வாய்ந்த பகுதிகளாய்ச் சமஸ்தானங்கள் பங்கு கொள்ளும் கூட்டாட்சி முறை ஒன்றைத்தான் காங்கிரஸ் ஏற்கக் கூடியது.

''ஆகையால், சமஸ்தானங்களில் முழுப் பொறுப்புள்ள அரசும், குடிமுறை உரிமைகளுக்கான உறுதிப்பாடும் ஏற்பட வேண்டும் என காங்கிரஸ் கோருகிறது; சமஸ்தானங்கள் பலவற்றில் இப்போதுள்ள பின்தங்கிய நிலைமைகளுக்காகவும், முற்றிலும் சுதந்திரம் இல்லாததற்காகவும் குடிமுறை உரிமைகள் ஒடுக்கப்படுவதற்காகவும் வருந்துகிறது.''

அதே சமயம், ஹரிபுரா தீர்மானத்தின்படி, சமஸ்தானங்களில் காங்கிரஸ் மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளுக்குத் தானாகவே ஒரு வரையறை விதித்துக் கொண்டது:

''சமஸ்தானங்களில் மக்கள் நடத்தும் உட் போராட்டம் காங்கிரசின் பெயரால் நடத்தப்படக் கூடாது. இந்த நோக்கத்திற்காக தனி நிறுவனங்கள் துவக்கப்பட வேண்டும்; சமஸ்தானங்களில் ஏற்கனவேயுள்ள நிறுவனங்கள் தொடர்ந்து நடக்க வேண்டும்.''

1939 இல், காங்கிரசின் திரிபுரிக் கூட்டத்தில் இந்தக் கொள்கை ஓரளவு மாற்றப்பட்டது:

''காங்கிரசின் ஹரிபுராக் கூட்டத்தில் சமஸ்தானங்களைப் பற்றி நிறைவேற்றப்பட்ட தீர்மானம் எதிர்பார்க்கப்பட்ட பயனை அளித்துவிட்டது என்று காங்கிரஸ் கருதுகிறது; சமஸ்தான மக்கள் தங்களைத் தாங்களே திரட்டி நிறுவனமாக்கிக் கொண்டு தாங்களே தங்கள் விடுதலை இயக்கத்தை நடத்திக் கொள்வதற்கு உற்சாகம் அளித்ததன் வாயிலாக அத் தீர்மானம் நியாயமானதே என்று உறுதிப்படுகிறது. மக்களுக்கு தன்னம்பிக்கையும் வலிமையும் உண்டாக்க வேண்டும் என்று மக்களுடைய நலன்களை மனத்தில் கொண்டு ஹரிபுரா கொள்கை வகுக்கப்பட்டது. சூழ்நிலையின் தேவையால் அக் கொள்கை தோன்றியதேயன்றி, அப்படித்தான் இருக்க வேண்டும் என்று அது உருவாக்கப்படவில்லை. சமஸ்தான மக்களுக்கு வழி காட்டி அவர்களுக்குத் தன் செல்வாக்கையும் அளித்துதவும் உரிமை, கடமையும் இருப்பதுபோல்-காங்கிரசுக்கு எப்போதும் உண்டு. மக்களுக்கு இடையில் தோன்றும் பெரும் விழிப்பு காரணமாகக் காங்கிரஸ் தானுகவே தன்மீது விதித்துக் கொண்டுள்ள கட்டுப்பாட்டைத் தளர்த்தலாம், அல்லது, முற்றிலும் அகற்றலாம்; 'இவ்வாறு செய்வதன் மூலம் சமஸ்தானங்களின் மக்களுடன் காங்கிரசுக்குள்ள ஒற்றுமை மேலும் மேலும் அதிகரிக்கும்.''

இக் கொள்கையைப் பின்பற்றி, சமஸ்தான மக்களின் இயக்கத்தில் தேசியத் தலைவர்கள் தீவிரமாய்ப் பங்கு கொண்டார்கள். அனைத்திந்திய சமஸ்தான மக்கள் மாநாடு 1939 பிப்ரவரியில் லூதியாளுவில் கூடியது; ஜவகர்லால் நேரு தலைவராகவும், பட்டாபி சீதாராமய்யா உபதலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ''பொறுப்புள்ள ஆட்சி'' வேண்டி நடத்தப்படும் போராட்டத்தில் சமஸ்தான மக்கள் கண்டுள்ள முன்னேற்றத்தை மகாநாடு வரவேற்றது:

''இந்தியாவின் விரிவான விடுதலைப் போராட்டத்தின் உட்பகுதியேயான இந்தப் போராட்டத்தை அதனுடனேயே ஒன்றுபடுத்திவிட வேண்டிய காலம் வந்துவிட்டது. இவ்வாறு இணைக்கப் பெற்ற அனைத்திந்தியப் போராட்டம் காங்கிரசின் தலைமையில்தான் அவசியம் நடைபெற வேண்டும்.''

போருக்குப் பிறகு, அனைத்திந்திய சமஸ்தான மக்கள் மகாநாடு 1945 டிசம்பரில் உதயபூரில் கூடியது; ''சுதந்திரமான, கூட்டாட்சியுள்ள இந்தியாவின் ஒன்றிய பகுதியாக சமஸ்தான மக்கள்

அமைதியான, நியாயமான வழிகளில் முழு பொறுப்புள்ள அரசாங்கம் பெறவேண்டும்'' என்பதே லட்சியமாக அது ஏற்றது. தலைமை உரையில் நேரு கூறினர்:

''தனியான பொருளாதாரப் பகுதிகளாய் அமைய முடியாத மிகப்பெரும்பான்மையான சமஸ்தானங்களை அண்டைப் பகுதிகளோடு சேர்ப்பதைத் தவிர்க்க முடியாது....இந்தச் சிறு சமஸ்தானங்களின் அரசர்களுக்கு ஒரு வகை ஓய்வு ஊதியம் தரலாம்; போதுமான தகுதிவாய்ந்தவர்களாக இருந்தால், வேறு வகையில் பணியாற்ற அவர்களுக்கு ஊக்கம் தரலாம்.

''மற்ற பதினைந்து முதல் இருபது சமஸ்தானங்கள் கூட்டரசு முறையில் தன்னாட்சியுள்ள பகுதிகளாக இருக்கும், ஒரு ஜனநாயக முறை அரசாங்கத்திற்கு அரசியலமைப்புத் தலைவர்களாக அரசர்கள் இருக்கலாம்; இந்த அரசர்களிலும் ஆட்சியாளர்களிலும் சிலர் வரலாறுடனும், மரபுடனும் நெருங்கிய தொடர்புள்ள பரம்பரைகளைச் சேர்ந்தவர்கள்.''

மாகாணங்களில் மக்களின் மந்திரிசபை ஏற்பட்டதோடு, புரட்சிகரமான எழுச்சி வலுப்பதன் விளைவாக அரசியலமைப்புபற்றின பேச்சு வார்த்தைகள் தொடக்கமானதை அடுத்து, இந்திய சமஸ்தானங்கள் இந்திய அரசியல் நிலைக்குப் புயல்களங்கள் ஆகிவிட்டன. சமஸ்தானங்களின் நிலப்பிரபுத்துவ யதேச்சாதிகாரத்தை எதிர்த்து போராட்டங்கள் தாமாகவே தோன்றத் தொடங்கிவிட்டன; பிரிட்டிஷ் அரசியல் துறையினரின் துணையோடு அவற்றை ஒடுக்க அரசர்கள் கடுமையான அடக்கு முறைகளைக் கையாளுகிறார்கள்; இந்தப் போராட்டங்களின் அழுத்தமான போக்கை, காஷ்மீர் மக்கள் டோக்ரா வம்சத்தின் யதேச்சாதிகார ஆட்சியை எதிர்த்து, ''காஷ்மீரை விட்டு வெளியே போ!'' என்ற தெளிவான கோஷத்தோடு நடத்தும் போராட்டத்தில் காணலாம்.

அரசர்களின் ஆட்சி தொடர்ந்து நடைபெற வேண்டும், சமஸ்தானங்களில் இப்போதுள்ள அமைப்பில் சீர்திருத்தம் வேண்டும் என்பதே காங்கிரசின் இப்போதைய கொள்கை என்பதையும் கவனிக்க வேண்டும். இந்த நிலை, அரைக்கிணறு தாண்டும் கதையைப் போன்றது; பிரச்னையைப் புரிந்து கொள்ளும் அளவுக்கு நாட்டின் இயக்கத்தில் குழப்பு உண்டாக்கவே அது உதவும்.

1946 இல் பிரிட்டனின் அரசியல் திட்ட யோசனைகள், மன்னர்களின் எதிர்கால அந்தஸ்து என்ன என்ற வினாவைப் புதிய கட்டத்திற்குக் கொண்டு வந்துள்ளன. கூடப்போகும் அரசியல்

நிர்ணய சபையின் மொத்தம் 386 ஸ்தானங்களில் அரசர்களுக்கு 93 ஸ்தானங்கள் அல்லது மொத்தத்தின் நாலில் ஒரு பகுதி வழங்கப்படுவதாக இருந்தன; ஜனநாயக முறையில் தேர்தல் நடத்துவதற்கு எந்த விதமான ஏற்பாடும் செய்யப்படவில்லை. 1935 ஆம் ஆண்டின் கூட்டாட்சி அரசியல் திட்டத்தில் செய்தது போலவே, யோசனையிலிருந்த அனைத்திந்திய யூனியனுள் அரசர்களை யும் கொண்டுவந்து விடவேண்டும் என்பது திட்டம். ஆனால், எந்த அடிப்படையில் அவர்கள் உள்ளே வருவார்கள் என்பதை அவர் களாகவே பேசி முடிவுசெய்ய வேண்டும். ஆயினும், பிரிட்டிஷாரின் கையிலிருந்து அதிகாரம் மாறுவதைத் தொடர்ந்து பிரிட்டி ஷாரின் முழு அதிகாரக் கொள்கை காலாவதி ஆகி, அரசர்கள் ''சுதந்திரமும் இறைமையும்'' உடையவர்கள் ஆகிவிடுவார்கள்—மனமொப்பி பேச்சு வார்த்தைகள் நடந்து வேறு ஏற்பாடு செய்யப் படாவிட்டால்—என்பதும் தெளிவாக்கப்பட்டது.

அரசர்களின் விசித்திரமான நிலையையும், சமஸ்தானங்கள் யதேச்சாதிகார அமைப்பையும் முற்றிலும் ஒழிப்பதுதான் இந்திய ஜனநாயகத்தின் எதிர்காலத்துக்கு உகந்தது. சுதந்திர பாரதத்தில் இந்திய சமஸ்தானங்களுக்கு இடம் இருக்க முடியாது. பிரிட்டிஷ் இந்தியா, அரசர்களின் இந்தியா என்ற பிரிவினை இயற்கை யானதோ, வரலாற்றுத் தேவையானதோ, மக்களுடைய உணர்ச்சிக்குத் தேவையானதோ அல்ல; மக்களைப் பிரித்தாள ஏகாதிபத்தியம் கைக்கொண்ட நிர்வாக சூழ்ச்சியே அது. சம உரிமைகளும் சமக் குடிமையும் வாய்ந்த ஜனநாயகத்தை இந்தியா முழுவதிலும் ஏற்படுத்துவது ஒன்றே தேசீய இயக்கத்தின் நோக்க மாக இருக்க முடியும்.

இந்திய நாட்டின் ஒற்றுமைக்கும், இந்தியாவின் முற்போக் கான வளர்ச்சிக்கும், இந்தியாவில் ஜனநாயகம் செயல்படுவதற்கும், இந்திய சமஸ்தானங்களை அடியோடு ஒழித்து, நிலப்பிரபுத்துவக் கொடுமையின் எச்சங்களைத் துடைத்துவிட்டு, இயற்கைக்குகந்த நில இயல் — பொருளாதார — பண்பாட்டுப் பிரிவினைகளையும் மக்களின் கூட்டத்தொகுப்பையும் அடிப்படையாய்க் கொண்ட உண்மையான கூட்டரசில் (இப்போது சொல்லப்படும் கூட்டரசு அல்ல; இப்போதுள்ள யதேச்சாதிகார ஆட்சியை நிலையாக்கி, மக்களின் விருப்பத்தை ஒடுக்குவதே இப்போது 'கூட்டரசு' எனப்படுகிறது) இந்திய மக்களை ஒன்றுபடுத்துவது மிக ஜீவாதாரமானது.

## 2. வகுப்புப் பிரிவினைகள்

அரசர்களைக் கருவிகளாய் வைத்து இந்திய மக்களைப் பிரிவினை செய்வதற்காகக் கையாளப்பட்ட கொள்கையைப் போன்றதே

ஹிந்துக்கள்—முஸ்லீம்கள் சம்பந்தமாய்க் கையாளப்பட்ட கொள்கையும்.

வகுப்பு வேற்றுமைகள் பற்றின பொதுவான பிரச்னையையும், முஸ்லீம்லீகின் வளர்ச்சியாலும் பாகிஸ்தான் கோரிக்கையாலும் சென்ற காலத்தில் இந்தப் பிரச்னை எத்தகைய சிறப்பான அரசியல் வடிவங்களை ஏற்றது என்பதையும் இங்கு பாகுபடுத்திப் பார்க்க வேண்டியது அவசியம். பாகிஸ்தான் கோரிக்கை பல முக்கியமான அரசியல் வினாக்களை எழுப்புகிறது; அதை அடுத்த பகுதியில் கவனிக்கலாம்; ஆனால், வகுப்பு வேற்றுமைகள், குறிப்பாக ஹிந்து—முஸ்லீம் பகைமை பற்றின பொதுவான பிரச்னை குறித்துச் சிறிதளவாவது முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.

இங்கு எழும் பிரச்னையின் மாதிரி ''வகுப்பு''ப் பிரச்னை அல்லது பல்வேறு சமய ''வகுப்புகளுக்கு'', நாட்டின் மூன்றில் இருபகுதி மக்களான ஹிந்துக்கள், மக்களில் சுமார் நாலில் ஒரு பகுதியினரின் பிரதிநிதிகளான முஸ்லீம்கள், மக்களில் பத்தில் ஒரு பங்கினரான மற்ற சிறிய சமயக் குழுவினர் ஆகியோருக்கு இடையிலுள்ள உறவுகள்பற்றின பிரச்னை எனப்படுவதற்கு இந்தியாவில் சிறப்பான அம்சங்கள் உண்டு என்பதுடன் தேசீய இயக்கத்துக்கு அது ஒரு கடுமையான விவகாரம். ஆனால், இந்தியாவுக்கே உரித்தான மாதிரிப் பிரச்னை அல்ல அது.

சில நிலைமைகளில், ஒரே நாட்டில் பல்வேறு இனங்கள் அல்லது சமயங்கள் கலக்கும்போது பெருங் கஷ்டங்கள் தோன்றலாம்; சில சமயம், கலவரங்களும் ரத்தப்பெருக்கும் நேரும். வடக்கு ஆரஞ்சுமெனும் கதோலிக்கர்களும்; பாலஸ்தீனத்தில் அரபுகளும் யூதர்களும்; ஜாரின் ரஷ்யாவில் ஸ்லாவ்களும் யூதர்களும்; ''ஆரியர்கள்'' என்று சொல்லிக் கொண்டோரும் யூதர்களும் ஜெர்மனியில்; இருபதாம் நூற்றாண்டு உலகத்து நன்றாகத் தெரிந்த விவகாரங்கள் இவை; பழங்கால உதாரணங்களுக்குப் போகத் தேவை இல்லை. இம்மாதிரி இன-சமய வேற்றுமைகளுக்கும் பகைமைக்கும் கூர்மையான வெளியீடாக இன்று ஐரோப்பாவில் இருப்பது செமிடிக் (யூத) எதிர்ப்பே.

எந்த நிலைமைகளில் இத்தகைய பிரச்னை எழுகிறது மிகச் சரியாக வகுத்துச் சொல்ல வரலாற்று அநுபவம் உதவுகிறது.

பாலஸ்தீனத்தில் பிரிட்டிஷ் பொறுப்பாணைக்கு முன், பல நூற்றாண்டுகளாய் அரபுக்களும் யூதர்களும் அமைதியாகக் கூடி வாழ்ந்தனர். பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுத்தப்பட்டது முதல், ஏகாதிபத்திய ஆயுதபலம் மேற்கத்தி முதலீடு மூலதனத்தின் ஆதரவோடு வலுக்கட்டாயமாக யூதர்களைக் குடியேற்றத் தலைப்

பட்டது முதல் வன்முறை மோதல்கள் தோன்றிவிட்டன; அவை சில சமயம் இன அல்லது சமய மோதல்கள் என்று கூறப்படுகின்றன; ஆனுல், அது உண்மையில் படையெடுப்புக்கும் அயல் நாட்டார் ஆதிக்கத்துக்கும் எதிராக நடைபெறும் தேசிய விடுதலைப் போராட்டம்.

ஜார்கால ரஷ்யாவில், குறிப்பாக, ஜாரிஸம் சரிந்து வீழ்ச்சி அடையும் தறுவாயில் இருந்த பின்ஞண்டுகளில், யூதர்கள் படுகொலை செய்யப்பட்டு அந்நாட்டு வரலாற்றின் ஏடுகள் கறைப் பட்டன, உலகத்தின் மனச்சாட்சியைத் துன்புறுத்தியது. அறியாமை வாய்ந்த, காட்டுமிராண்டித்தனமாக ரஷிய மக்களின் அடக்க முடியாத எழுச்சிகள் படுகொலைகள் எனப் பரவலாய்க் கருதப்பட்டது. பின்னர் வெளியான ரகசியப் போலீஸ் குறிப்புகள் வாயிலாகத்தான் உண்மை வெளிப்பட்டது; இந்தப் படுகொலைகள் அரசாங்கத்தால் நேரடியாகத் தூண்டிவிடப்பட்டு, தொடங்கப் பட்டு நடத்தப்பட்டது என்பது வெறும் குற்றச்சாட்டாகவும், அரசுக்கும் ''கறுப்பு நூறுகள்'' அல்லது போக்கிரிகளின் ''நாட்டுப் பற்றுள்ள'' நிறுவனத்துக்கும் இடையிலுள்ள ஒரு மாதிரியான உறவுகளால் தெரிவதாகவும் இருந்தாலும் ரகசியப் போலீசின் குறிப்புகள் உண்மை அதுதான் என்பதை உறுதிப்படுத்தி விட்டது. ரஷிய மக்கள் தங்கள் நாட்டு ஆட்சியைக் கைப்பற்றிய நாள் முதல் படுகொலைகள் நின்று விட்டன. சோவியத் குடியரசுகள் யூனியனில் மிகப்பல இனங்களும் மதங்களும் இன்பமாய்க் கூடிவாழ்கின்றனர்.

வீமார் குடியரசின் கீழிருந்த ஜெர்மனியில் ஜெர்மானியரும் யூதரும் அமைதியாகக் கூடி வாழ்ந்தனர். நாஜி ஜெர்மனியின் கீழ், படுகொலை ஆட்சிமுறை ஜாரின் ரஷியாவில் இருந்த தன் தளத்தை மத்திய ஐரோப்பாவுக்கு மாற்றி விட்டது.

ஆகவே, ஒரு நாட்டிலேயே பல்வேறு இனங்கள் அல்லது மதங்கள் கூடி வாழ்வதில் இயற்கையான, தவிர்க்க முடியாத கஷ்டம் ஒன்றுமில்லை. சமூக-அரசியல் நிலைமைகளிலிருந்துதான் கஷ்டங்கள் தோன்றுகின்றன. குறிப்பாக, எங்கு மக்கள் இயக்கத்துக்கு எதிராக ஒரு பிற்போக்கான ஆட்சிமுறை தன்னை நிலை நாட்டிக் கொள்ள முயலுகிறதோ, அங்கு அவை தோன்றுகின்றன. ஓர் ஆட்சிமுறை கவிழப் போகிறது என்பதற்கு நிச்சயமான அறிகுறிகள் அவை.

இந்தியாவில் இம் மாதிரியானதொரு பிரச்னைதான் நம்மை எதிர்ப்படுகிறது.

இந்தியாவில் (1941 மக்கட் தொகைக் கணக்குப்படி) மக்களில் 65.93 சதவீதத்தினரான 25.4 கோடி ஹிந்துக்கள் இருக்கின்றனர்; அவர்களில் 19 கோடி பிரிட்டிஷ் இந்தியாவில், அங்கு 64·5 சதவீதத்தினராகவும், 6·5 கோடி (சமஸ்தான மக்கட் தொகையில் 70·57 சதவீதம்) பேர் சமஸ்தானங்களில் உள்ளனர். 9.2 கோடி முஸ்லீம்கள் அல்லது மக்கட் தொகையில் 23·81 சதவீதம்; அவர்களுள் பிரிட்டிஷ் இந்தியாவில் இருப்போர் 7·9 கோடி; அல்லது 26·84 சதவீதம்; சமஸ்தானங்களில் இருப்போர் 1·2 கோடிக்கு மேல், அல்லது 13·93 சதவீதம்.

பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்பு, பிரிட்டிஷ் ஆட்சியுடன் தொடர்புற்ற காலத்து, குறிப்பாக, பிரிட்டிஷ் ஆட்சியின் பிற்காலத்து ஹிந்து-முஸ்லீம் மோதல்களைப் பற்றின சுவடுகளே காணோம். ஹிந்து அல்லது முஸ்லீம் மன்னர்கள் ஆண்ட சமஸ்தானங்களுக்குள் போர்கள் நடந்தன; ஆனால், இப் போர்கள் எந்தக் காலத்திலும் ஹிந்து-முஸ்லீம் விரோதமான தன்மை வாய்ந்ததாக இருந்ததில்லை. முஸ்லீம் ஆட்சியாளர்கள் மிகவுயர்ந்த பதவிகளில் ஹிந்துக்களைத் தாராளமாக நியமித்தார்கள்; ஹிந்து ஆட்சியாளர்கள் முஸ்லீம்களை அவ்வாறே நியமித்தார்கள்.

பிரிட்டிஷாருக்கு முந்தின இந்தியாவின் இப் பரம்பரைத் தன்மை சமஸ்தானங்களில் இன்றும் நீடிப்பதைக் காணலாம்; ''இன்று இந்திய சமஸ்தானங்களில் ஒப்பு நோக்க வகுப்புச் சண்டையே இல்லை எனலாம்'' என்று சைமன் அறிக்கையும் குறிப்பிட்டிருந்தது. அப்பால், 1931-32 இல் காஷ்மீரில் நடந்தது போன்று, இந்திய சமஸ்தானங்களிலிருந்து வகுப்புச் சண்டை பற்றி அறிவிக்கப்பட்டாலும், வகுப்புப் பிரச்னையல்லாத வேறு ஏதோ காரணங்களுக்காக நடந்த சண்டைகளே அவ்வாறு தவறுதலாக அறிவிக்கப் பட்டுள்ளன; காஷ்மீரில் மக்கட் தொகையில் ஐந்தில் நாலு பகுதியினர் முஸ்லீம்கள், மன்னர் தற்செயலாக ஒரு ஹிந்து; மன்னருக்கு எதிராக மக்கள் செய்த கிளர்ச்சியை வகுப்புக் கலவரம் என்று திரித்து அறிவித்தார்கள்; எனினும் பிரிட்டிஷ் செய்தித் தாள்கள், ''ஒரு ஹிந்துவும் கொல்லப்படாத வகுப்புக் கலகத்தின் முரணான நிலை'' என்று ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று (டெய்லி டெலிகிராப், பிப்ரவரி 8, 1932). ஆயினும், மக்கள் இயக்கம் இந்திய சமஸ்தானங்களில் பரவி வலுப்பெறத் தொடங்கியதும், மக்களுக்கு இடையில் பிற்போக்கான பிளவு உண்டாக்கப் பழைய செயல்முறைகள் இந்திய சமஸ்தானங்களிலும் புகுத்தப் பட்டன.

ஹிந்து-முஸ்லீம் விரோதம் பற்றிப் பேசுகையில் சைமன் அறிக்கை இரண்டு விசித்திரமான உண்மைகளைக் குறிப்பிட

வேண்டியதாயிற்று என்பதைக் கண்டோம்: முதலாவதாக, இந்தப் பகைமை பிரிட்டிஷ் இந்தியாவில் மிகுதியாய்க் காணப்பட, சமஸ்தானங்களில் பெரும்பாலும் அது இல்லை; இரண்டு இடங்களின் மக்களும் ஒருவரோடொருவர் நெருங்கிப் பழகியும், எல்லை வெறும் ஆட்சி வசதிக்காக ஏற்பட்டதாக இருந்தும் இந்த நிலை. இரண்டாவதாக, பிரிட்டிஷ் பிரதேசத்தில் அது மிகுந்துள்ளது; "பிரிட்டிஷ் இந்தியாவில் ஒரு தலைமுறைக்கு முன்னால்....குடிமுறை அமைதிக்கு அபாயம் உண்டாக்கும் வகுப்புக் கலவரம் மிகக் குறைவு." எனவே பிரிட்டிஷ் ஆட்சியின், குறிப்பாக, அண்மைக் காலப் பிரிட்டிஷ் ஆட்சியின், அல்லது சரியும் ஏகாதிபத்திய ஆதிக்கத்தின் ஒரு சிறப்பான விளைபொருளே வகுப்புக் கலவரம்.

இந்தியாவில் வகுப்புக் கலவரத்தைத் தூண்டி வளர்த்ததற்கான முதன்மையான பொறுப்பு பிரிட்டிஷ் ஆட்சியாளரையே சாரும் என்றால் (இப்படி கூறுவதால் அவர்களுக்கு வேறு பொறுப்புகள் இல்லை என்றாகி விடாது என்பதைப் பின் காண்போம்) அதிகார வட்டாரங்களில் அதிர்ச்சியுற்ற ஆத்திரம் உண்டாகிறது. ஆயினும் சாட்சிகளின் ஒப்பங்களிலும் வரலாற்றுப் பதிவுருக்களின் சாட்சியத்திலும் கிடைக்கும் உண்மைகள் தப்ப முடியாதவை. அதிர்ச்சியுற்ற ஆத்திரம் விவாதம் ஆகாது; ஏனெனில், ஏகாதிபத்தியம் சீஸரின் மனைவி அல்ல; தூயோராய் வேஷம் போட்டுத் தெளிவான உண்மைகளை மறுப்பதால் உலகத்தாரின் கருத்தைத் திருப்தி செய்ய முடியாத அளவுக்கு, ஏகாதிபத்திய வஞ்சனை பற்றிய பதிவுருக்கள் மிக ஏராளமாக இருக்கின்றன.

தொடக்க காலத்தில், விழிப்பான பிற்காலத்தை விடப் பகிரங்கமாகவே "பிரித்தாளும் கொள்கை" பற்றிப் பேசுவது வழக்கமாயிருந்தது. 1821 லேயே, 1921, மே, ஏஷியாடிக் ரிவ்யூவில் "கர்நாடிகஸ்" என்ற புனைபெயரில் எழுதிய ஒரு பிரிட்டிஷ் அதிகாரி, "இந்தியாவில் அரசியல் நிர்வாகமாயினும், குடிமுறை நிர்வாகமாயினும், அல்லது ராணுவ நிர்வாகமாயினும் சரி, நாட்டைப் பிரித்தாள் என்பதே கொள்கையாக இருக்க வேண்டும்" என்று அறிவித்து விட்டார். மொராதாபாத் ராணுவத் தலைவர், லெப்டினன்ட் கர்னல் கோக் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடையில் இதே கருத்தைத் தெரிவித்தார்:

"பல்வேறு சமயங்கள், இனங்களுக்கு இடையிலுள்ள (நமக்கு அதிர்ஷ்டவசமான) வேற்றுமையை முழு விசையுடன் ஆதரிப்பதே நம் முயற்சியாக இருக்க வேண்டுமேயன்றி, அவற்றை இணைப்பதாக இருக்கக் கூடாது. நாட்டைப்

பிரித்தாள வேண்டும் என்பதே இந்திய அரசின் கொள்கையாக இருக்க வேண்டும்.''[1]

1888 இல் இந்திய விவகாரங்களில் தலைசிறந்த நிபுணரான சர் ஜான் ஸ்டிராச்சி எழுதினார்:

''பகைமை கொண்ட இந்த மதங்கள் அடுத்தடுத்து இருப்பது, இந்தியாவில் நம் அரசியல் நிலைக்கு ஒரு வலுவான அம்சம் என்பது தெளிவான உண்மை.''

(சர் ஜான் ஸ்ட்ராச்சி, ''இந்தியா''—1888, பக். 255.)[2]

காங்கிரசின் கூட்டு நிறுவனரான ஹ்யூம், பிரிட்டிஷ் அரசு ''பிரித்தாளும் கொள்கையால்தான் நீடிக்கிறது'' என்று தம்மிடம் வெளிப்படையாக ஒப்புக் கொண்டதைக் காந்தி விவரிக்கிறார்.

முஸ்லீம் லீக் நிறுவப்பட்டதைக் குறித்து 1910 இல் ஜே. ராம்சே மாக்டொனல்டு எழுதினார்:

''அனைத்திந்திய முஸ்லீம் லீக் டிசம்பர் 30, 1906 இல், நிறுவப்பட்டது. லீகின் முயற்சிகளுக்குப் பரிசுகளாய்க்

1. பி. டி. பஸு எழுதிய, ''இந்தியாவில் கிறித்தவ ஆதிக்கத் திரட்சி,'' பக். 74 இல் மேற்கோளாய் உள்ளது.

2. மிக வெளிப்படையான இக் கூற்றை சர் ஜான் ஸ்டிராச்சி தம் நூலின் அடுத்த பதிப்பில் மாற்றியெழுத முயன்றார்; ஆனால், அவர் அவ்வளவாக வெற்றி பெறவில்லை. புதிய பதிப்பு வருமாறு:

''பழைய பிரித்தாளும் கொள்கையை விட வேறு எதுவும், நம் இந்திய அரசாங்கம் கடைப்பிடித்து எங்கும் செயல்படுத்த வேண்டிய கொள்கைக்கு எதிரானதாக இருக்க முடியாது. எல்லா வகுப்பினருக்கும் இடையில் அமைதியை நிலை நாட்டுவதே, ''போரில் ஈடுபட்டுள்ள நம் நாகரிகத்தின்'' மிக முக்கியமான கடமைகளுள் ஒன்று என்பது எப்போதும் ஒப்புக்கொள்ளப் பட்டுள்ளது; ஆனால், இந்தப் பகைமை கொண்ட சக்திகள் அடுத்தடுத்து இருப்பது, இந்தியாவில் நம் அரசியல் நிலைக்கு வலுவான அம்சங்களில் ஒன்று என்ற உண்மையை இதனால் நாம் கவனிக்காதிருக்க வேண்டிய தேவை இல்லை. முகம்மதியர்களில் மேல்வகுப்பினர் நமக்கு வலிமை தருகிறவர்களே அன்றிப் பலவீனம் தருபவர்கள் அல்ல. ஒப்பு நோக்க அவர்கள் சிறிய, ஆனால் சக்தி வாய்ந்த சிறுபான்மையினர்; அவர்களுடைய அரசியல் நலன்கள் நம்முடையவை போன்றன. அவர்கள், நினைத்துப் பார்க்க முடிந்த எந்த நிலைமையிலும் நம் ஆட்சிக்கு மாறாக இந்து ஆட்சியை ஏற்கமாட்டார்கள்.''

(சர் ஜான் ஸ்டிராச்சி, ''இந்தியா'', 1984, பக். 241.)

இரண்டு பதிப்புக்களையும் ஒப்பிட்டால்—''தெளிவான உண்மை'', ராஜ தந்திர ரீதியில் திருத்தல்—ஏகாதிபத்திய ஆதரவாளர்களின் வளர்ச்சி பற்றி அறிய உதவும். சற்றே ராஜ தந்திர முறையிலும் தூய கபட மொழியிலும் சொன்னாலும் கொள்கை மாறவில்லை என்ற உண்மையும் அறிவுறுத்துவதாகும்.

கிடைத்துள்ள அரசியல் வெற்றிகள் மிகக் குறிப்பிடத்தக்க வையாக இருப்பதால், வஞ்சனையான செல்வாக்குகள் செயல் படுகின்றன என்றும், முகம்மதியத் தலைவர்கள் சில ஆங்கிலோ-இந்திய அதிகாரிகளால் தூண்டப்பட்டனர் என்றும், இந்த அதிகாரிகள் சிம்லாவிலும் லண்டனிலும் தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்தி, திட்டமிட்ட கெட்ட நோக்குடன் ஹிந்துக்களுக்கும் முகம்மதிய வகுப்பினருக்கும் இடையில், முகம்மதியர்களுக்குச் சிறப்பான சலுகை அளிப்ப தன் வாயிலாக வேற்றுமை விதைக்கிறார்கள் என்றும் எழுந் துள்ள ஒரு சந்தேகத்துக்கு ஆதரவு தருவதாக இருக்கிறது.''

(ஜே. ஆர். மாக்டொனல்டு, ''இந்தியாவின் விழிப்பு'', 1910, பக். 283-4.)

''சந்தேகத்தை'' உறுதிப்படுத்துவதற்கும் மிகுதியான சாட்சியம் கிடைத்துள்ளது.

இந்தியாவின் ராஜ்யக்காரியதரிசியாகப் பதவிவகித்து, எல்லா பதிவுருக்களையும் பார்வையிடும் உரிமை பெற்றிருந்த ஒலிவியர் பிரபு 1926-ல் தி டைம்ஸ் ஏட்டுக்கு ஒரு கடிதத்தில் எழுதினார்:

''இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அதிகார வர்க்கம், ஓரளவு நெருங்கிய அனுதாபத்தைக் காரணம் காட்டியும், ஆனால் மிக முக்கியமாக ஹிந்து தேசீயத்திற்கு விரோதமான எதிரிடை யாகவும், முஸ்லீம் வகுப்புக்குச் சாதகமாய் மொத்தத்தில் மிக மிகுதியான பட்சபாதம் காட்டுகிறது என்பதை மறுக்க, இந்திய விவகாரங்களுடன் நெருங்கிய தொடர்புள்ள யாரும் முன் வர மாட்டார்கள்.''

(ஒலிவியர் பிரபு, தி டைம்ஸில் வந்த கடிதம், ஜூலை 10, 1926.)

இன்னும் சமீப காலத்தில் அதே பட்சபாதமான நோக்கு இன்னும் சாதுரியமான உருவத்தில் சொல்லப்பட்டுள்ளது. 1941-ல், தி டைம்ஸ் எழுதியது:

''ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையின் அடிப்படை முக்கியத் துவத்தை வலியுறுத்துவதால் பிரிட்டிஷார் ''பிரித்தாளும்'' கொள்கையைக் கடைப்பிடிக்கிறார்கள் என்றாகி விடாது. வேற்றுமைகள் இருக்கின்றன; அவை இருக்கும் வரை பிரிட் டிஷ் ஆட்சியும் நிச்சயம் இருக்கும்.''

(தி டைம்ஸ், ஜனவரி 21, 1941.)

இவ்வாறு, அரசின் அதிகாரப் பூர்வமான பிரதிநிதிகளின் கூற்றுக் களிலேயே அரசின் கொள்கைக்கான சாட்சியம் உள்ளது.

ஆயினும் நவீனகாலத்தில்தான் இப் பொதுவான கொள்கை ஓர் ஆட்சி முறையாக மாற்றப்பட்டுள்ளது. தேசியப் போராட்டத்தின் முன்னேற்றத்தோடும், ஒன்றையடுத்து ஒன்றாக வந்த அரசியல் திட்டச் சீர்திருத்தங்களோடு, சீர்திருத்தங்கள் தொடர்பாக ஒரு மாதிரியான தேர்தல் முறையைப் பின்பற்றியதன் வாயிலாக வகுப்பு வேற்றுமைகளை வளர்க்கும் முயற்சிகளும் நடந்த வண்ணம் இருக்கின்றன. இந்தப் புதியமுறை 1906 இல் ஆரம்பமாகியது—அதாவது, தேசியக் கொந்தளிப்பு, முன்னேற்றத்தின் முதல் அலை எழுந்த அதே சமயம்.

இந்த விளைவின் பகைப்புலத்தை அறிந்து கொள்ள வேண்டுமாயின், ஹிந்து-முஸ்லீம் மக்களை அல்ல, வளர்ந்து வரும் நடுத்தர வர்க்கத்தாரைப் பாதிக்கும் சமூக-பொருளாதாரப் போட்டியின் விதைகளைத் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம். வடக்கிலுள்ள முஸ்லீம் பகுதிகளை விட, ஹிந்து பெரும்பான்மையுள்ள பம்பாய், கல்கத்தா, மதராஸ் பகுதிகளில் வாணிபம், வர்த்தகம், கல்வி வளர்ச்சி மிக முன்னதாகவே ஆரம்பம் ஆகிவிட்டது. 1882 இல் வெளியான ஹண்டர் கமிட்டி அறிக்கைப்படி, பல்கலைக் கழக படிப்பில் முஸ்லீம் சராசரி 3·65 சதவீதம்தான். இன்றளவும், படிப்பறிவு முஸ்லீம்களுக்கு இடையில் இருப்பதைவிட ஹிந்துக்களிடையில் பெருமளவு சதவீதம் மிகுதி. எனவே, இந்திய பூர்ஷ்வா நிலைமைகள் காரணமாக ஆங்காங்கு எழுந்த போட்டி வகுப்பு வேடம் கொள்ள வாய்ப்பு இருந்தது. முஸ்லீம் மேல் மட்ட மக்களின் அடிப்படையிலான பெரும் முஸ்லீம் நிலக்கிழார்கள் வாணிபத்திலும் தொழில் துறையிலும் முன்னேறும் பூர்ஷ்வாக்களை அதிருப்தியோடு பார்த்து, அந்த முன்னேற்றத்தை ஹிந்து முன்னேற்றமாகவும், "ஹிந்து பயங்கர" அபாயம் முதலியனவாகக் கருதலானார்கள். வளர்ந்து வந்த நடுத்தர வர்க்கத்திலும், முஸ்லீம்கள் பெரிதும் பின்தங்கி இருந்ததன் காரணமாக எதிரெதிரான வாணிபக் குழுக்களுக்கு இடையில் ஏற்பட்ட போட்டியிலும் வகுப்பு விரோதத்தின் அடிப்படை இருந்தது; கல்வித் தகுதியின் பேரில் அரசாங்க நிர்வாகப் பதவிகளுக்காக நடந்த போட்டியிலும் முஸ்லீம்களுக்கு அசௌகரியமாக இருந்தது. சொத்தையும் படிப்பையும் கட்டுப்படுத்தப்பட்ட தேர்தல் தகுதிகளாக வைத்துப் பிரதிநிதித்துவ ஏற்பாடுகளின் தொடக்கங்கள் வளரத் தொடங்கவே, இங்கும் முஸ்லீம்களுக்குப் பாதகமான நிலைமையே இருந்தது; அவர்கள் தனிப்பிரதிநிதித்துவம் வேண்டும் என்று கோரலானார்கள். இந்த உள்ளூற பகைமைகளை பயன்படுத்திக் கொண்டு, அவற்றின்மேல் ஒரு முழு அரசியல் முறையை எழுப்ப உதவும் அதிகாரவர்க்கத்தின் கொள்கையை எளிதாக்கிய பூமி இதுதான்.

ஏற்கனவே 1890 லேயே, அரசாங்கத்திற்கு மிக வேண்டிய வரான சர் சையத் அகமதுகான் தலைமையில் ஒரு முஸ்லீம் கோஷ்டி யினர் முஸ்லீம்களுக்கு விசேஷமான சலுகைகளும் ஸ்தானங்களும் வேண்டுமெனத் திட்டமிட்டனர். ஆயினும் பொறுப்புள்ள முஸ்லீம் கள் அதை எதிர்த்தனர்: அது ''மாவட்டங்களிலும் கிராமங்களி லும் சமூக வாழ்க்கையில் நஞ்சு கலந்து இந்தியாவை நிச்சயமாக ஒரு நரகம் ஆக்கி விடும்'' என்று முஸ்லீம் ஹெரால்டு கண்டித்தது. அப்போது அத்திட்டம் பற்றிப் பேச்சு ஏதும் இல்லை.

ஆயினும் 1906இல், இந்தியாவில் விரிந்து பரந்த தேசிய மக்கள் இயக்கத்தைக் கண்ணுற்ற பிரிட்டிஷ் அரசாங்கம், ''மாவட்டங்களிலும் கிராமங்களிலும் சமூக வாழ்க்கையில் நஞ்சு கலந்து இந்தியாவை ஒரு நரகமாக்க''ப் போகும் ஒரு கொள்கை யைத் துவக்கி வைக்கும் பொறுப்பை ஏற்றது. ஒரு முஸ்லீம் தூது கோஷ்டியினர் தாங்களே வைசிராயிடம் சென்று எந்தவிதத் தேர்தல்முறை ஏற்படுத்தப்பட்டாலும் தங்களுக்குத் தனியான, சலுகையான பிரதிநிதித்துவம் வேண்டுமெனக் கோரினர். வைசிராய் மிண்டோ பிரபு உடனே அக்கோரிக்கைக்குத் தம் இசைவைத் தெரிவித்தார்:

> ''உங்களுடைய எண்ணிக்கை பலத்தின் பேரில் உங்கள் நிலையை மதிப்பீடு செய்ய வேண்டும் என்று நீங்கள் உரிமை பாராட்டுவது நியாயமே; ஆனால், உங்கள் வகுப்பின் அரசியல் முக்கியத்துவத்தையும், அது சாம்ராஜ்யத்திற்கு ஆற்றியுள்ள தொண்டையும் பொறுத்தமட்டில் நான் முற்றிலும் உங்கள் கருத்தை ஏற்கிறேன்.''
>
> (1906 இல் மிண்டோ பிரபு முஸ்லீம் தூது கோஷ்டி யிடம் பேசியது, ''மிண்டோ பிரபுவின் வாழ்க்கை'', ஜான் புகானன், 1925, பக். 244.)

இந்த முஸ்லீம் தூதுகோஷ்டி அரசாங்கத்தால் ஏற்பாடு செய்யப் பட்ட ஒரு ''கட்டளைச்செயல்'' என்பதை பின்னர் 1923 இல் தேசீய காங்கிரசின் தலைமை உரை ஆற்றுகையில் முஸ்லீம் தலைவ ரான முகம்மது அலியால் வெளியிடப்பட்டது. இந்தத் திட்டம், அரசாங்க அதிகாரிகளிடம்தான் தோன்றியது என்பதை, 1906 இறுதியில் மார்லி பிரபு மிண்டோ பிரபுவுக்கு எழுதிய ஒரு கடிதத் திலிருந்து அறியலாம்.

> ''நம்முடைய முகம்மதியத் தகராறில் மீண்டும் நான் தங்களைத் தொடரமாட்டேன். அவர்களுடைய அதிகப்படி யான கோரிக்கை பற்றித் தாங்கள் முன்பு பேசிய பேச்சு

தான் மு. (முஸ்லீம்) முயல்களை முதலில் கிளப்பி விட்டது என்பதை மீண்டும் நான் தங்களுக்கு நினைவுபடுத்துகிறேன்.''

(மார்லி பிரபு, மிண்டோ பிரபுவுக்கு டிசம்பர் 6, 1909இல் எழுதிய கடிதம், மார்லி, ''நினைவுகள்'', தொகுதி II, பக். 325.)

இவ்வாறாக, எந்த ஜனநாயக முறையின் வேர்களையும் வெட்டக் கூடிய வகுப்புக் வாக்காளர் தொகுதியும் பிரதிநிதித்துவமும் துவக்கி வைக்கப்பட்டன. இதற்கு ஈடு கற்பனை செய்ய வேண்டுமானால், வடக்கு அயர்லாந்தில் கத்தோலிக்கர்களும் பிராடெஸ்டண்டுகளும் தனித்தனி வாக்காளர் பட்டிகளில் சேர்க்கப்பெற்று தனித்தனி பிரதிநிதித்துவம் அளிக்கப்படுவதாய் வைத்துக் கொள்ள வேண்டும்; அதனால், தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களுக்கு முழுவாக்காளர் தொகுதியின்பால் பெயரளவில் கூடப் பொறுப்பு இல்லாமல் கத்தோலிக்கர்களின் உறுப்பினர்களாகவும் பிராடெஸ்டண்டுகளின் உறுப்பினர்களாகவும் இருப்பார்கள். பிரிவினை செய்யும் வகுப்பு நிறுவனங்களையும் பகைமையையும் வளர்ப்பதற்கு இதைவிடச் சிறந்த கருவியைக் கண்டுபிடிப்பது கஷ்டம். ஆம், தனியான முஸ்லீம்லீக் நிறுவனம் 1906 டிசம்பரில்தான் தொடங்கப் பெற்றது.

இந்து பெரும்பான்மை வெள்ளத்தில் முஸ்லீம்கள் அடித்துச் செல்லப்படாதிருக்க இம்மாதிரி தனித் தொகுதியும், தனிப் பிரதிநிதித்துவமும் இன்றியமையாதவை என்று வாதாடப்படுகிறது. இந்த வாதத்தின் பொய்மையை, அந்த காலத்தில் பழைய கூட்டுத் தொகுதி அடிப்படையிலேயே நடந்த உள்ளூர் அரசாங்கத் தேர்தல் முடிவுகள் போதுமான அளவு நிரூபித்துவிட்டன. 1910 இல் ஐக்கிய மாகாணங்களில், மொத்த மக்கட் தொகையில் ஏழில் ஒரு பகுதியினரே முஸ்லீம்கள்; கூட்டுத் தொகுதிகள் மாவட்ட வாரியங்களுக்கு 189 முஸ்லீம்களையும் 445 இந்துக்களையும், நகராட்சிகளுக்கு 310 முஸ்லீம்களையும் 562 இந்துக்களையும் உறுப்பினர்கள் ஆக்கின.

இரண்டு வகுப்புகளுக்குமிடையில் பிளவு உண்டாக்கும் இந்த நோக்கம், தனித்தொகுதி முறையும் தனிப்பிரதிநிதித்துவ முறையும் ஏற்படுத்தியதில் மட்டும் அல்ல, முஸ்லீம்களுக்குச் சிறப்பான சலுகை பெற்ற பிரதிநிதித்துவங்கள் அளித்ததிலும் மிகத் தெளிவாய்ப் புலப்படுகிறது. ஆக, மார்லி-மிண்டோ சீர்திருத்தங்களின் வாக்காளர் ஆக வேண்டுமானால், முஸ்லீம் ரூ.300 வருமானத்திற்கு வருமான வரி கட்ட வேண்டும், இந்து ரூ.300,000 வருமானத்திற்கு வருமானவரி கட்ட வேண்டும்; அல்லது, முஸ்லீம் பட்டதாரிக்கு மூன்றாண்டுத் தவணை போதும்;

ஹிந்து பட்டதாரி முப்பதாண்டு பொறுக்க வேண்டும் என்று மிக விரிவான தடுப்புத் திட்டம் ஒன்று தயாரிக்கப்பட்டது. பிரதிநிதித்துவத்தின் அளவிலும் இதேமாதிரி தடுப்பு முறை காணப்பட்டது. இவ்வாறு செய்வதால் சலுகை பெற்ற சிறுபான்மையினரின் ஆதரவு அரசுக்குக் கிடைக்கும் என்பதோடு பெரும்பான்மையினரின் சினத்தை அரசுக்குப் பதிலாகச் சலுகைபெற்ற சிறுபான்மையினர் மீது திரும்பிவிடலாம் என்று நம்பிக்கை.

பின்னர் வந்த அரசியல் திட்டங்களில் விரிவாக்கப்பட்டுப் பரவலாக்கப்பட்ட இம் முறை 1935 ஆம் ஆண்டு அரசியல் திட்டத்தில் உச்ச நிலையை எட்டியது—இன்றளவும் (1946) நடைமுறையிலும் இந்த அரசியல் திட்டத்தின் கீழ், ஒரு புதிய அரசியல் திட்டம் வகுப்பதற்காக கூடப்போகும் அரசியல் நிர்ணயசபை உறுப்பினர்களை மறைமுகத் தேர்தல் முறையில் தேர்ந்தெடுக்க ஏற்பாடாகியுள்ளது. 1935 ஆம் ஆண்டு சட்டப்படி தனிப் பிரதிநிதித்துவம் முஸ்லீம்களுக்கு மட்டும் அல்ல, சீக்கியர்கள், ஆங்கிலோ இந்தியர்கள், இந்தியக் கிறித்தவர்கள்,[1] தாழ்த்தப்பட்ட வகுப்பினரோடு, ஐரோப்பியர்களுக்கும், நிலக்கிழார்களுக்கும், வர்த்தகம் தொழில் துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கும் வழங்கப்பட்டது. கூட்டரசு சட்ட சபையின் 250 ஸ்தானங்களில், மூன்றில் ஒரு பகுதியான 82 ஸ்தானங்கள் மக்கட் தொகையில் நாலில் ஒரு பங்குக்கும் குறைவான முஸ்லீம்களுக்கு ஒதுக்கப்பட்டன; மிகப் பெரும்பான்மை மக்களின் "பொது ஸ்தானங்கள்" ஐந்தில் இரண்டு

---

1. இந்தியக் கிறித்தவத் தலைவர்கள் அரசாங்கம் தன் சுயநலத்திற்காகவேயன்றி கிறித்தவர்களின் விருப்பத்தினை நிறைவேற்றும் முறையில் அல்லாமல் இந்தத் தனித் தொகுதி முறை தங்கள்மீது திணிக்கப்படுவதைக் கடுமையாகக் கண்டிப்பதைக் கவனிக்க வேண்டும். 1938 இல் நடந்த அனைத்திந்திய கிறித்தவ மகாநாட்டுத் தலைமை உரை கூறுகிறது:

> "தனித்தொகுதி முறை, மற்ற வகுப்பினருடன் நாம் நெருங்கிப் பழக முடியாமல் தடுக்கிறது என்பதாலேயே நான் அதைப் பெரிதும் எதிர்க்கிறேன். நம் பழைய தலைவர்கள்-அவர்களில் சிலர் நம்மை விட்டு பிரிந்து விட்டனர் · அறிவுறுத்தியபடி, நம் விருப்பத்துக்கு மாறாக நம்மீது திணிக்கப்படும் தனித் தொகுதி முறையை ஒரு வகுப்பினராக நாம் எதிர்த்து வந்திருக்கிறோம். இப்போதுள்ள வகுப்பு வாரி வாக்காளர் தொகுதி முறை இந்தியாவை தானே தனக்கு எதிரியான ஒரு வீடுபோல் ஆக்கிவிட்டது. இந்தத் தனித் தொகுதி முறையால் நம் வகுப்பு எந்த அளவு நஷ்டம் அடைந்துள்ளது என்பதை எனக்கு முந்தின தலைவர்கள் ஆண்டுதோறும் விளக்கி வந்துள்ளனர். நம் நாட்டு நற் பெயருக்கு ஏற்பட்டுள்ள மாசை அகற்ற எல்லா வகுப்புத் தலைவர்களும் ஒற்றுமையாகவும் ஓயாமலும் முயற்சி எடுக்க வேண்டுமென நாம் அவர்களுக்கு வேண்டுகோள் விடுத்த வண்ணம் இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன்."
>
> (டாக்டர். எச். சி. முகர்ஜீ, தலைவர், அனைத்திந்தியக் கிறித்தவர் மகாநாடு, மதராஸ், டிசம்பர், 1938.)

பங்காக 105 ஸ்தானங்களாய் வெட்டப்பட்டதுடன், அவற்றில் 19 அட்டவணை வகுப்பினருக்காக (தாழ்த்தப்பட்ட வகுப்புகளுக்கு) ஒதுக்கப்பட்டன. வாக்காளர் தொகுதியை மாற்றியமைத்துத் தன் நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்ட ஏகாதிபத்தியச் சூழ்ச்சியின் மாபெரும் சிறப்பு இத்தகையதாம்.[2]

இந்தத் தேர்தல் கொள்கையின் விளைவாகவும், அதற்கு ஏற்ப நிர்வாகத்துறை முழுவதும் கடைபிடிக்கப்பட்டதன் விளைவாகவும் வகுப்புப் பகைமைக்கு மிக விசையான தூண்டுதல் கொடுத்தாற்போல் ஆயிற்று.

---

2. ஒரு சிறுபான்மையைக் காப்பாற்ற வேண்டும் என்ற கவலையால்தான் முஸ்லீம்களுக்கு அவர்களுடைய எண்ணிக்கைக்குச் சம்பந்தம் இல்லாத அளவு கண்களை உறுத்துகின்ற மிகுதியான பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டுள்ளது என்ற வாதம், 1935 சட்டத்தின் கீழ் வங்காளச் சட்ட சபையில் இடப்பிரிவினை செய்யப்பட்டுள்ள விதத்தைப் பார்க்கையில் முற்றிலும் அடிபட்டுப் போகிறது. இப்போதுள்ள எல்லைகளுக்குள் வங்காளத்தில் முஸ்லீம்கள் பெரும்பான்மையோர், ஆயினும் அதே முறையில் மிகுதியான பிரதிநிதித்துவமே அங்கும் நிலவுகிறது. மக்கட் தொகையில் 55 சதவீதமான முஸ்லீம்களுக்கு 117 இடங்கள்; "மக்கட் தொகையில் 45 சதவீதமான ஹிந்துக்களுக்குப் "பொது" இடங்கள்; எண்ணிக்கை 78 (அவற்றில், 30 இடங்கள் அட்டவணை வகுப்பினருக்காக, அதாவது தாழ்த்தப்பட்ட மக்களுக்காக ஒதுக்கியபின், 48 "பொது" இடங்கள் எஞ்சுகின்றன.) ஹிந்துக்களுக்கு 78 என்ற அடிப்படையில் மக்கட் தொகைப்படி பிரித்தால் முஸ்லீம்களுக்கு 99 இடங்களே கிடைக்கும். எனவே, சிறுபான்மையைப் பாதுகாக்கவே இந்தத் தடுப்புமுறைப் பிரதிநிதித்துவம் என்ற பாசாங்கு வானளாவச் சிதறுகிறது.

1916இல் காங்கிரசும் லீகும் லக்னோவில் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் சிபாரிசுகளே வகுப்பு தொகுதி முறைக்குத் தூண்டுதல் என்று சொல்லி அதை நியாயப்படுத்த செய்யப்படும் கபட வாதமும் (மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கையில் இருப்பதை அப்படியே நீளமாக சைமன் அறிக்கையும் விவரிக்கிறது ) இந்த உதாரணத்தால் அடிபட்டுப் போகிறது. மின்டோ பிரபுவும் மார்லிபிரபுவும் தொடங்கிய வகுப்பு வாரித் தொகுதி பிரிவினையைத் தவிர்க்க முடியாதது என ஏற்ற பெரிய தவறை லக்னோ ஒப்பந்தம் செய்தது, ஆனால், அவ்வொப்பந்தம், எந்த வகுப்பினர் சிறுபான்மையாக இருப்பினும் அவர்களுக்கு சாதகமான தடுப்பு முறை கையாளப்பட வேண்டும் என்றும், எனவே முஸ்லீம்கள் சிறுபான்மையாகவுள்ள இடங்களில் அவர்களுக்குச் சற்று மிகுதியான பிரதிநிதித்துவம் தரப்படும் என்றும், வங்காளம் போல் முஸ்லீம்கள் பெரும்பான்மையான இடங்களில் அவர்களுக்குச் சற்றுக் குறைவான பிரதிநிதித்துவம் தரப்படும் என்றும் யோசனை கூறவே செய்தது. ஆயினும், லக்னோ ஒப்பந்தத்தால் தூண்டப்பட்டதாய்ச் சொல்லிக்கொள்ளும் ஏகாதிபத்திய அதிகாரிகள் உண்மையில் ஒவ்வோரிடத்திலும் முஸ்லீம்களுக்கு மிகுதியான பிரதிநிதித்துவம் தந்தார்கள், அவர்கள் சிறுபான்மையாக இருப்பினும் சரி, பெரும்பான்மையாக இருப்பினும் சரி; இவ்வாறு செய்ததன் மூலம் அவர்களுடைய நோக்கம் சிறுபான்மைகளைப் பாதுகாப்பது அல்ல; விருப்பம் போல் சலுகை காட்டி, அதனால் மக்களைப் பிரித்து, அவர்களில் ஒரு பகுதியினரை மற்றொரு பகுதியினருக்கு எதிராக மூட்டிவிடும் இனவாரி நோக்கமே அவர்களுடையது என்பது வெளிப்பட்டது.

சுரண்டல் முறையையும் ஏகாதிபத்திய ஆட்சியையும் காப்பதற்காக வளர்த்து விடப்பட்ட வகுப்புப் பகைமைகளுக்குப் பின்னுல் சமூக, பொருளாதாரப் பிரச்னைகள் உள்ளன. நடுத்தர வர்க்க வகுப்புவாதி பதவியும் வேலையும் தேடிப் போட்டியிடும் விஷயத்தில் இது மிக வெளிப்படையாக இருக்கிறது. வகுப்புக் கஷ்டங்கள் பொது மக்களை அணுகும்போதும் அது எவ்விதத்திலும் குறையாமலே இருக்கிறது. வங்காளத்திலும் பஞ்சாபிலும் செல்வந்தர்களான நிலக்கிழார்கள், வாணிபத்திலும், வட்டித் தொழிலிலும் ஈடுபட்டவர்கள் ஹிந்துக்கள்; முஸ்லீம்கள் பெரும்பாலும் ஏழை உழவர்கள், கடன் பட்டவர்கள். வேறிடங்களில் ஹிந்து உழவர்களுக்கு இடையில் பெரும் முஸ்லீம் நிலக்கிழார்கள் தென்படுவார்கள். ''வகுப்பு''ச் சண்டை அல்லது கலவரம் என்று மீண்டும் மீண்டும் அறிவிக்கப்படுகிறவை முஸ்லீம் உழவர்கள் ஹிந்து நிலக்கிழாரை எதிர்த்துச்செய்யும் கலகத்தை மறைப்பதாகவேஇருக்கும்; முஸ்லீம் கடனாளிகள் ஹிந்து லேவாதேவிக்காரரை எதிர்த்து அல்லது ஹிந்து தொழிலாளர்கள் வெளியிலிருந்து கொண்டு வரப்பட்ட வேலை நிறுத்தத்தைக் கலைக்கும், பட்டாணிகளை எதிர்த்து நடக்கும் போராட்டமாக இருக்கும். தொழிலாளர்கள் ஒரு முன்னேற்றத்தைச் சாதித்த பெரும் தொழில்வட்டாரங்களில்——பெரும் வேலை நிறுத்த இயக்கத்துக்குப்பின் 1929 இல் பம்பாயிலும், 1938 இன் வேலை நிறுத்த வெற்றிக்குப்பின் 1939 இல் கான்பூரிலும்—வகுப்புக் கலவரங்கள் (இனம் கண்டுகொள்ள முடியாதவர்களால் தூண்டிவிடப்பட்டவை) வஞ்சனையாக தோன்றுவதும், அதைத் தொடர்ந்து போலீஸ் துப்பாக்கிப் பிரயோகமும் சாவுகளும் குறைவான பொருட் செறிவு வாய்ந்தவை அல்ல. பிற்போக்கின் ஆயுதமும், தொழிலாளர்களின் ஒற்றுமைக்கு உலை வைப்பதும் அதன் சமூக, பொருளாதாரக் காரணமும் தென்படுகிறது.[1]

1. வகுப்புக் கலவரங்களுக்கு அதிகார வர்க்கத்தினரின் ஆதரவு இருப்பதைக் கான்பூர் கலவரங்கள் விசாரணைக் குழு 1931 இல் கண்டது:

''கலகத்தின் பல நிகழ்ச்சிகளின் போது போலீஸ் அலட்சியமாகவும் செயல்படாமலும் இருந்தது என்கிற ஒரு விஷயத்தில் மட்டும்.. ஒவ்வொரு வகுப்பை சேர்ந்த சாட்சிகளும் ஒற்றுமையாக இருந்தனர். இந்தச் சாட்சிகளில் ஐரோப்பிய வியாபாரிகள், எல்லாவிதக் கருத்துகளுமுள்ள முஸ்லீம்களும் ஹிந்துக்களும், ராணுவ அதிகாரிகள், மேல் இந்திய வர்த்தகர் சங்கச் செயலாளர், இந்தியக் கிறித்தவ வகுப்பின் பிரதிநிதிகள், இந்திய அதிகாரிகள் கூட இருந்தனர். சாட்சியத்தின் இந்த ஒற்றுமையைப் புறக்கணிக்க முடியாது...கலவரத்தின் முதல் மூன்று நாட்களிலும் போலீசிடம் எதிர்ப்பார்க்கப்படும் கடமையை அவர்கள் ஆற்றவில்லை என்பது பற்றி எங்கள் மனத்தில் ஐயமில்லை. போலீஸ்காரர்கள் பார்வையிலேயே கடுமையான குற்றங்கள் இழைக்கப்பட்ட போதும் அவர்கள் சற்றும் அக்கறையே காட்டவில்லை என்பதற்குப் பல சாட்சிகள் உதாரணங்கள்

இந்தியாவிலுள்ள ஹிந்து பொது மக்களுக்கும் முஸ்லீம் பொது மக்களுக்கும் இரண்டு வேறுபட்ட குறிக்கோள்கள் இல்லை, இருக்கவும் முடியாது. ஹிந்து வறுமை, அடிமைத்தனம் என்றும், முஸ்லீம் வறுமை, அடிமைத்தனம் என்றும் தனித்தனியாக எதுவும் இல்லை, ஆனால், இருப்பதெல்லாம் இந்திய வறுமையும் அடிமைத்தனமும்தான். நூறாயிரக் கணக்கான இந்தியக் கிராமங்களில் மிகப் பெரும்பாலோரான ஹிந்துக்களும் முஸ்லீம்களும் அதே நிலப்பிரபுத்துவத்தின் சுமைகளின் கீழ், அதே லேவாதேவிக்காரர்களின் கட்டாய வசூலின் கீழ், நசுக்கி அரைக்கிற அதே ஏகாதிபத்தியத்தின்கீழ் வாழ்கிறார்கள்; அவர்களுக்கு இடையில் வேற்றுமையை வளர்க்கச் செய்யும் முயற்சி இந்தச் சுரண்டல் முறையைக் காப்பாற்றச் செய்யும் முயற்சியே.

சமூக பொருளாதார முன்னேற்றப் பாதையில்தான் வகுப்புப் பிரச்னையின் இறுதியான தீர்வு உள்ளது. தொழிற் சங்கங்களிலும், உழவர் சங்கங்களிலும் ஹிந்துக்களும் முஸ்லீம்களும் பாகுபாடோ வேற்றுமையோ (தனித் தொகுதியின் தேவை பற்றின எண்ணமோ) இல்லாமல் ஒன்றுபடுகிறார்கள்; வர்க்க ஒற்றுமையின் பொதுவான பந்தங்களும், பொதுவான சமூக, பொருளாதாரத் தேவைகளும் செயற்கைத் தடைகளான வகுப்பு வேற்றுமைகளையும் சாதி வேற்றுமைகளையும் அழிக்கின்றன. வகுப்புப் பிரச்னைக்கு இறுதியான, நிச்சயமான தீர்வு காணும் பாதை இங்குதான் உள்ளது. மக்களின் நலன்களையே அடிப்படையாகக் கொண்ட மக்கள் இயக்கத்தாலும், பொதுவான குடியாட்சி இயக்கத்தின் முன்னேற்றத்தாலும்தான் வகுப்புப் பகைமைகள் இறுதியாகவும் முழுமையாகவும் ஒடுக்கப்படும்.

மத அடிப்படையில் இந்தியாவை இரண்டு ''நாடுகளாய்'' செயற்கை முறையில் பிரிவினை செய்யும் முயற்சி உண்மையில் பிற்போக்கானது, காரிய சாத்தியமற்றது, குடியாட்சி சுதந்திரத்தின் நலனுக்கு விரோதமானது. 1931-ஆம் ஆண்டின் தேசிய காங்கிரஸ் ஏற்ற ஜீவாதார உரிமைகள் அறிக்கை, ஜாதி, மத, பால் பாகுபாடு இன்றி எல்லாச் சிறுபான்மையினருக்கும் பண்பாட்டுப் பாதுகாப்புறுதியும், மனச்சான்று சுதந்திரத்துக்கும் சரி

போலீசாரின் அலட்சியத்தையும் செயலற்றதன்மையையும் அப்போதே புகார் செய்யப்பட்டதாக மாவட்ட மாஜிஸ்திரேட் தம் சாட்சியத்தில் சொல்லியுள்ளார்; ஏராளமான சாட்சிகளால் எங்களிடம் கூறப்பட்டது. இப் புகார்களைப் பற்றித் தீவிரமான கவனம் செலுத்தப்படவில்லை என்பது வருந்தத் தக்கது.''

(கான்பூர் கலவரங்கள் அறிக்கை, 1931, பக். 39.

சமமான ஜனநாயகக் குடிமை என்ற அடிப்படைமீது சரியாகத் தான் அமைக்கப்பட்டுள்ளது; இதுவே தேசிய இயக்கத்தின் அடிப்படைக் கொள்கை.

ஆனால் அதே சமயத்தில் முழுமையானதொரு ஜனநாயகத் தீர்வு காண வேண்டுமானால், அண்மைக் காலத்தில் ஹிந்து முஸ்லீம் பிரச்னையோடு சேர்த்துத் தற்காலிகமாய்க் குழப்பப்படுகின்ற, வட்டார அல்லது தேசிய சுயாட்சிக் கோரிக்கை அல்லது சுய நிர்ணய உரிமைப்பற்றிப் புதிதாய்த் தோன்றுகிற கேள்விகளையும் கணக்கில் சேர்த்துக் கவனிக்க வேண்டும். மக்கள் ஸ்தாபனமாய் முஸ்லீம்லீக் கண்டுள்ள அண்மைக்கால வளர்ச்சியிலும், அதனுடைய பாகிஸ்தான் கோரிக்கைக்குக் கிடைக்கும் ஆதரவிலும் இக் கேள்விகள் பிரதிபலிக்கின்றன. காங்கிரஸ், முஸ்லீம்லீக் உறவுகள் சம்பந்தமான பிரச்னைகள் அண்மை ஆண்டுகளில் அடிக்கடி மேடையின் முன்வரிசைக்கு வருகின்றன. இக் கேள்விகளுக்கு அவசரத் தீர்வு தேவை; ஏனெனில், 1946 ஆம் ஆண்டு அமைச்சரவைத் தூது கோஷ்டியின் பேச்சுக்களில் வெளிப்பட்டது போல், காங்கிரசுக்கும் முஸ்லீம்லீகுக்கும் இடையிலுள்ள இந்த வேற்றுமைகள் மிக அண்மை ஆண்டுகளில் ஏகாதிபத்தியக் கொள்கையின் முக்கியமான நெம்புகோல் ஆகியுள்ளது. இந்தக் கேள்விகளுக்குத் தீர்வு காண்பதற்கு, ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமை பற்றின பொதுவான நோக்கத்தையும், வகுப்புப் பகைமைகளை முடிவுக்குக் கொண்டு வருவதையும் பற்றி மட்டுமல்ல, புதிதாய் எழுந்துள்ள விசேஷமான அரசியல் பிரச்னைகளையும் ஆய்ந்து தீர்வு காண வேண்டும்.

## 3. பல-நாடுகள் கொள்கையும், பாகிஸ்தானும்

பல-தேசியம், பாகிஸ்தான், காங்கிரஸ்-லீக் ஒற்றுமை ஆகிய அண்மைக்காலப் பிரச்னைகளை கவனிக்குமுன், முஸ்லீம்லீக் வளர்ச்சியைப் பற்றியும், காங்கிரஸ்-லீக் உறவுகள்பற்றியும் சுருக்கமாய் ஆராய்வது அவசியமாகும்.

1906 ஆம் ஆண்டு டிசம்பரில் முஸ்லீம்லீக் நிறுவப்பட்டது.

தேசிய காங்கிரசின் முதல் அஸ்திவாரத்தில் இருந்தது போலவே, முஸ்லீம்லீக்கின் அடிக்கல் நாட்டுவதிலும் பிரிட்டிஷ் அதிகார வர்க்கக் கொள்கை பெரும் பங்கு கொண்டது. வகுப்பு வாரித் தொகுதி முறையை ஏற்படுத்தியதை அடுத்து, முஸ்லீம்களுக்காகத் தனியானதொரு வகுப்பு நிறுவனம் தொடங்கப்பட்டால் தேசிய இயக்கத்தைக் குலைத்து, மிகுந்துவரும் காங்கிரஸ் பலத்தையும் குறைக்கலாம் என்று பிரிட்டிஷ் அதிகார வட்டாரத்

தினர் நம்பினர். அக்காலத்து வைசிராய் மிண்டோ பிரபுவிடம் அறிவித்த ஒரு பிரிட்டிஷ் அதிகாரியின் சொற்களில்:

"இன்று ஒரு பெரிய காரியம் நடந்துள்ளது என்பது மேன்மை தங்கிய தங்களுக்கு ஒரு வரியில் நான் தெரிவிக்க வேண்டும். இந்தியாவையும் இந்திய வரலாற்றையும் பல நீண்ட ஆண்டுகளுக்குப் பாதிக்கப்போகும் ராஜதந்திரம் வாய்ந்ததொரு காரியம். ராஜத் துரோகிகளான எதிரிகளோடு (காங்கிரஸ்) 6·2 கோடி முஸ்லீம்கள் சேராமல் வெளியே இழுத்துவிட்ட ஒரு பெருங் காரியம்."

(மிண்டோ சீமாட்டி. "இந்தியா, மிண்டோ, மார்லி", 1934, பக். 47.)

ஓயிட் ஹாலிலும் (பிரிட்டிஷ் அரசு) அதே கருத்தையே கொண்டனர் என்று மிண்டோ சீமாட்டி தொடர்ந்து எழுதியுள்ளார்.

தொடக்க ஆண்டுகளில் முஸ்லீம்லீக், மேல்வகுப்பு முஸ்லீம் நிலவுடைமையாளர்களை முதன்மையாக ஈர்த்த, ஒரு குறுகிய வகுப்பு ஸ்தாபனம். காங்கிரசின் விஷயத்தில் நடந்தது போலவே, தேசீய ஏகாதிபத்திய எதிர்ப்பு உணர்ச்சி முஸ்லீம்லீகிற்குள்ளும் ஊடுருவியது. 1913 அளவில், இந்தியாவுக்கு "சாம்ராஜ்யத்துக்குள் சுயாட்சியும்", அந்த நோக்கத்துக்காக "மற்ற வகுப்பினரோடு ஒத்துழைப்பதும்" தன் குறிக்கோள் என முஸ்லீம்லீக் ஏற்றுக் கொண்டு விட்டது. காங்கிரசுக்கும் முஸ்லீம் லீகுக்கும் இடையில் பேச்சு வார்த்தைகள் தொடங்கின. 1916 இல் காங்கிரஸ்—லீக் ஒற்றுமைக்கான லக்னௌ ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று. இந்த ஒப்பந்தம் தனித் தொகுதி முறையை ஏற்று, பொது நோக்கமான குடியேற்ற நாட்டு அந்தஸ்துக்காக இரு நிறுவனங்களும் பாடுபட வேண்டும் என்று அறிவித்தது.

லக்னௌவில், காங்கிரஸ்-லீக் கூட்டுக் கூட்டமொன்று நடத்தப் பட்டது. காங்கிரஸ் கூட்டத்தில் அநுமோதிக்க தலைவர் திலகர் கூறினார்:

"கனவான்களே, ஹிந்துக்களாகிய நாம் நம் முகம்மதியச் சகோதரர்களுக்கு மிகவும் அதிகமாய் விட்டுக் கொடுத்து விட்டோம் என்று சொல்லப்பட்டுள்ளது. நாம் அதிகமாய் விட்டுக் கொடுத்திருக்க முடியாது என்று நான் கூறும்போது, இந்தியா முழுவதிலுமுள்ள ஹிந்து சமுதாயத்தின் கருத்தைப் பிரதிபலிக்கிறேன் என்று நான் உறுதியாக நினைக்கிறேன். . . . ஒரு மூன்றாம் கட்சியை எதிர்த்துப் போராடும்போது இனத்தால் ஒன்றுபட்டு, மதத்தால் ஒன்று பட்டு, பலவகைப்பட்ட அரசியல் கொள்கைகளால் ஒன்று

பட்டு நாம் இந்த மேடைமீது நிற்கிறோம் என்றால், அது ஒரு பெரிய விஷயம், ஒரு மிக முக்கியமான நிகழ்ச்சி.''

அது போலவே, காங்கிரஸ்-லீக் ஒற்றுமைக்காக மிகமிகப் பாடு பட்டு வந்த லீக்தலைவர் எம். ஏ. ஜின்னா, லீக் மகாநாட்டுக்குத் தலைமைவகித்துப் பேசினார்:

''என் வாழ்க்கை முழுவதும் நான் தீவிர காங்கிரஸ் வாதியாக இருந்திருக்கிறேன்; வகுப்புக் கோஷங்களை நான் விரும்பியதே இல்லை. சில சமயம் முசல்மான்கள் பிரிவினை வேண்டுகிறவர்கள் என்று குற்றஞ் சாட்டப்படுவது பொருத்தமற்றது, முற்றிலும் குறிதப்பியது என்று, இந்தப் பெரும் வகுப்பு ஸ்தாபனம் மிகவிரைவில் வளர்ந்து ஒன்று பட்ட இந்தியாவின் தோற்றத்திற்கான வலிய சக்தியாக மாறி வருவதைக் காண்கையில் எனக்குத் தோன்றுகிறது.''

முதல் உலகப் போரைத் தொடர்ந்து தோன்றிய சூறவளி எழுச்சியின் போது, ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமைக்கான பந்தங்கள் மேலும் இறுகின. காந்தியின் தலைமையில் காங்கிரசும், முன்னணியில் இருந்த அலி சகோதரர்கள் உள்ளிட்ட போர்க் குணம் மிக்க முஸ்லீம் தலைவர்களைக் கொண்ட கிலாபத் கமிட்டி யும் நேசவுறவு கொண்டு, அரசுக்கு எதிராகவும் சுயராஜ்ய லட்சியத்திற்காகவும் போராட்டம் நடத்தும் சக்திமிக்க கூட்டணி யாக வளர்ந்தன. ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமையை வாழ்த்தி உற்சாகம் கொண்ட கூட்டங்கள் தெருக்களில் ஆர்ப்பாட்டங்கள் செய்தன. 1919 ஆம் ஆண்டுக்கான அரசாங்க அறிக்கை, ''வேறு எப்போதும் காணக்கிடைக்காத விதத்தில், ஹிந்து-முஸ்லீம் களுக்கு சகோதரவுணர்ச்சி......சகோதரபாவம் பாராட்டும் அதிசயக் காட்சிகள்'' என்று பதிவு செய்யவேண்டிய கட்டாயத் தில் ஆழ்ந்தது.

தேசீய எழுச்சியின் இந்த மகத்தான காலத்தில் முஸ்லீம் தலைவர்களும் மக்களும், தங்கள் போராட்ட சக்தியைக் காங்கிர சுடன் வெளியிட்டார்கள். முஸ்லீம் தலைவர்களான அலி சகோதரர் களும், ஹுசேன் அகமது மதானியும் இந்தியப் படையினரிடம் ராஜத் துரோகம் செய்யுமாறு தீரத்துடன் பிரசாரம் செய் தார்கள்; அதற்காக ஆறாண்டுச் சிறைத் தண்டனை பெற்றார்கள். மலபார் மாப்பிள்ளைக் குடியானவர்கள் தாயாகவே நிலச் சுவானையும் ஏகாதிபத்திய அடக்குமுறையையும் எதிர்த்து எழுந்தார்கள்; அற்புதமான வீரமும், போர்த் திறனும் காட்டித் தியாகங்கள் செய்து அஞ்சாமையோடு போரிட்டார்கள்.

சுயராஜ்யம் என்பதை முழுவிடுதலை எனக் கொள்ள வேண்டும் என்று முதலில் சொன்னவர்கள் கிலாபத் தலைவர்களே.

ஆமதாபாதில், 1921 இல், மௌலானா ஹஸரத் மொஹானி இக்கோரிக்கையை எழுப்பினார். இதனை எதிர்ப்போருக்குத் தலைமை வகித்து "இக் கோரிக்கை எனக்குத் துயரம் தருகிறது, ஏனெனில் அது பொறுப்பின்மையைக் காட்டுகிறது" எனக் கூறியவர் காந்தி என்பதைக் கவனிக்கவேண்டும்.

அது போன்றே, முஸ்லீம் லீக் அமிர்தசர் மகாநாட்டில், 1919 லேயே, இந்திய முஸ்லீம்கள் ராணுவத்தில் சேர வேண்டாம் எனக்கோரும் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது.

1922 ஜூனில், லக்னோவில் கிலாபத்தும் ஜமீயத்-உல்-உலேமாவும் நடத்திய கூட்டுக் கூட்டத்தில், "இந்தியாவின் நன்னலன்களையும் முஸ்லீம்களின் நன்னலங்களையும் கருத்தில் கொண்டு, காங்கிரஸ் கொள்கையிலுள்ள 'சுயராஜ்யம்' என்ற சொல்லை நீக்கிவிட்டு இனிமேல் 'முழுவிடுதலை' என்ற சொற்களைப் பயன்படுத்த வேண்டும்" எனக் கோரும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

துரதிர்ஷ்ட வசமாக, அந்நாளையக் காங்கிரஸ் தலைமையினர், அவ்வாறு செய்வதானால் "காங்கிரசின் விதிகளில் அடிப்படை மாறுதல்" செய்ய வேண்டியிருக்கும் என்று காரணம் சொல்லி, இக்கோரிக்கையை எதிர்த்தனர்.

காங்கிரஸ்-கிலாபத் போராட்டத்தினால் உருவான ஒற்றுமை பேணப்படவில்லை. காந்தியின் தலைமையிலுள்ள காங்கிரஸ் திடீரென்று போராட்டத்தை நிறுத்தியதால் ஒரு பிளவு உண்டாயிற்று. 1922 பிப்ரவரியில் ஒத்துழையாமை இயக்கத்தைக் காந்தி நிறுத்தியதை, கிலாபத் தலைவர்கள் யாவரும் இவ்வாறு போராட்டத்தைக் கைவிட்டது பற்றிக் கண்டித்தார்கள்.

ஏமாற்றம் வாய்ந்த அடுத்த காலகட்டத்தில், காங்கிரஸ்-லீக் பிரிவும், இந்து-முஸ்லீம் பகைமையும் பெருகிப் பரவ வழி ஏற்பட்டது. வகுப்புவாதிகள் இவ்வாய்ப்பை முற்றிலும் பயன்படுத்திக் கொண்டனர். அடுத்து வந்த ஆண்டுகளில், பழைய ஒற்றுமையான மக்கள் விடுதலைப் போராட்டத்திற்குப் பதிலாகப் பயங்கரமான வகுப்புக் கலவரங்கள் நடைபெற்றன. முஸ்லீம் லீக்கு எதிர்ப்பாக, 1925 இல் லஜபதிராய் தலைமையில், அகில இந்திய அடிப்படையில் இந்து மகாசபை நிறுவப்பட்டது. 1927 இல் சைமன் கமிஷனைப் பகிஷ்கரிப்பதில் காங்கிரசும் லீக்கும் ஒன்றுபட்டன. ஆனால், 1928 இல் அனைத்துக் கட்சிகள் மாநாட்டில் ஓர் உடன்பாடு காண்பதற்காகச் செய்யப்பட்ட புதிய முயற்சிகள் தோல்வி கண்டன.

இவ்வாருக, 1935 ஆம் ஆண்டு அரசியல் திட்டத்தின் கீழ், முன்னேவிடச் சற்றே பரவலான வாக்குரிமையோடு மாகாணச் சட்டசபைகளுக்காக 1937 ஆம் ஆண்டு நடந்த தேர்தல்களில் காங்கிரசும் லீகும் முற்றிலும் எதிர்க்கட்சிகளாய் மாறின. பொது இடங்களில் மிகப் பெரும்பான்மையைக் காங்கிரஸ் வென்றதோடு, மாகாணக் கீழ்சபைகளின் மொத்த இடங்களில் ஏறக்குறையப் பாதி (1,585 இடங்களில் 711) பெற்றது; எனினும், முஸ்லீம் இடங்களில் சிறிதும் முன்னேறவில்லே; 482 முஸ்லீம் ஸ்தானங்களில் 58 க்கு மட்டும் போட்டியிட்டு 26 இல் வெற்றி கண்டது (வடமேற்கு எல்லேப்புற மாகாணத்தில் 15 ம், இந்தியாவின் ஏனேய பகுதிகள் எல்லாவற்றிலும் 11 ம்). மறு தரப்பில், பல்வேறுப்பட்ட பிரிவினருக்கும் கோஷ்டியினருக்கும் இடையிலிருந்த வேற்றுமை காரணமாக முஸ்லீம் லீகும் பலவீன மாய்த்தான் காட்சி தந்தது: மொத்த முஸ்லீம் வாக்குகளில் 4·6 சதவீதமே அது பெற்றது (மொத்த முஸ்லீம் வாக்குகள்: 7,319,445; முஸ்லீம் லீக் வாக்குகள்: 321,772).

1937 தேர்தல்களேத் தொடர்ந்து, முஸ்லீம் தலைமையினர் தனிப்பட்ட முறையில் காங்கிரஸ் தலைமையினரைச் சந்தித்து, மாகாண அமைச்சரவைகள் அமைப்பது பற்றியும், இடங்களே ஒதுக்குவது பற்றியும் பேச்சு வார்த்தைகள் நடத்தினர். ஆயினும், தான் வலுவான நிலேயில் இருப்பதாய்க் கருதிய காங்கிரஸ், முஸ்லீம் லீக் கோரிக்கையை நிராகரித்ததுடன், லீகின் அரசியல் பங்கை முற்றிலும் மறுத்து, இந்தியநாடு முழுவதற்கும் காங்கிரசே பிரதிநிதி ஸ்தாபனம் என்று வலியுறுத்தியது. 1937 ஜனவரியில் ஜின்னுவுக்கு எழுதிய ஒரு கடிதத்தில் நேரு குறிப்பிட்டார்:

> ''இறுதியான ஆய்வில், இன்று இந்தியாவில் இரண்டே சக்திகள்தாம் உள்ளன—பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், இந்தியத் தேசீயத்தின் பிரதிநிதியான காங்கிரஸ்..... முஸ்லீம்லீக் மிக மதிப்புக்குரியவர்களான ஒரு முஸ்லீம்கள் கோஷ்டிக்குப் பிரதிநிதி நிறுவனம்; ஆனுல், அது உயர்—நடுத்தர வர்க்கத்தாரின் உயர் வட்டாரங்களில் செயல்படுகிறது; முஸ்லீம் பொது மக்களுடனே, கீழ் நடுத்தர வகுப்பு மக்களுடனே அதற்கு யாதொரு தொடர்பும் இல்லே.''

இந்தக் கட்டத்திலிருந்து, காங்கிரசுக்கும் லீகுக்கும் இடையிலுள்ள மோதல் மிகக் கடுமையாகியது. திறமை வாய்ந்த, ஜின்னுவின் தலைமையின்கீழ், முஸ்லீம் லீக், தன் ஆதரவுக்கான அடிப்படையை முஸ்லீம் மக்களுக்கு இடையில் விரிவாக்கியும்,

பல எதிர்ப்பு முஸ்லீம் கோஷ்டிகளையும் நிறுவனங்களையும் ஒன்று படுத்தியும் இந்திய முஸ்லீம்களின் முக்கியமான நிறுவனமாக்கிக் கொள்வதற்காகத் தன் ஸ்தாபனத்தை வலுப்படுத்திக்கொள்ள முற்பட்டது. இந்தக் கொள்கை வெற்றி பெருமல் இல்லை. 1937-45 காலகட்டத்தில், முஸ்லீம் பொதுமக்களின் ஆதரவு வலுத்து விட்டதால் முஸ்லீம் லீகின் நிலையிலும் பலத்திலும் தீர்மானமான தொரு மாறுதல் நிகழ்ந்தது. முஸ்லீம் லீக் உறுப்பினர் தொகை 1927 இல் 1,330; 1938 இல் அது நூறுயிரக் கணக்கில் ஏறி விட்டதாய் அவர்கள் கூறினர்கள்; 1944 அளவில் அது சுமார் 20 லட்சமாய்ப் பெருகிவிட்டது என்று அதிகார பூர்வமாய் அறிவிக்கப்பட்டது. 1946 இல் நடந்த தேர்தல்கள் மாறுபட்ட நிலைமையைக் காட்டின. மத்திய, மாகாண சட்டசபைத் தேர்தல்களில் 533 முஸ்லீம் இடங்களில் 460 ஐ முஸ்லீம் லீக் கைப்பற்றியது. இந்தக் காலகட்டத்தில், இந்திய முஸ்லீம் களுக்கு இடையிலுள்ள பெரும் அரசியல் நிறுவனம் என்ற அந்தஸ்தை முஸ்லீம் லீக் நிலைநாட்டி விட்டது என்பதைப் பற்றிச் சந்தேகம் இருக்கமுடியாது.

இந்தக் காலத்தில், முஸ்லீம் லீகின் ஆதரவாளர்களின் தொகை இவ்வாறு பெருமளவு பெருகியதன் காரணங்கள் என்ன? பல அமிசங்களைக் காணலாம்.

முதலாவதாக, சென்ற பத்தாண்டுகளில் உண்டான அரசியல் எழுச்சி, முன்பு பின் தங்கி இருந்த பிரிவினர் உட்படப் புதிய மக்களை அரசியல் உணர்வின் தொடக்க நிலையில் கவர்ந்திருந்தது. இந்தக் காலத்தில் காங்கிரசும் லீகும் விரைவாக வலுப்பெற்றன. 1935-36க்கும் 1938-39க்கும் இடைப்பட்ட காலத்தில் காங்கிரஸ் உறுப்பினர் தொகை ஒன்பது மடங்கு, 44 லட்சமாக உயர்ந்து விட்டது. ஆனால், இதில் முஸ்லீம்கள் சிறு அளவினரே. 1938 ஜனவரியில் நேரு வெளியிட்ட அறிக்கைப்படி, காங்கிரஸ் உறுப்பினர்கள் 31 லட்சத்தில் 100,000 பேரே, அல்லது 3.2 சதவீதமே முஸ்லீம்கள். புதிதாய் விழிப்புற்ற முஸ்லீம் பிரிவினரில் மிகப் பெரும்பாலோர் தங்கள் அரசியல் நிறுவனமாய் முஸ்லீம் லீகையே ஏற்றனர்.

இரண்டாவதாக, முஸ்லீம் லீகிற்குள்ளேயே இளைய, தீவிர கோஷ்டி ஒன்று உருவாகி, உச்சியில் இருந்த, வயதான, பிற்போக்கான தலைமையினரின் எதிர்ப்புக்கு விரோதமாக, ஒரு ஜனநாயக வேலைத் திட்டத்தை வலியுறுத்தி முன்னேறினர். பஞ்சாபிலும் வங்காளத்திலும் போன்ற சில மாவட்டங்களிலும் மாகாணங்களி லும் இந்த இளம் பிரிவினர், ஏழை முஸ்லீம்களின் பெரும் ஆதரவு பெற்று பெரும் சமூக, பொருளாதார பிரச்னைகள் பேரில் தீவிர

மான போராட்டம் நடத்தினர். இந்தக் கொள்கையின் வெற்றி 1946 இல் நடந்த பஞ்சாப் தேர்தல்களில் வெளிப்பட்டது; முஸ்லீம்லீகின் தாக்குதலுக்கு முன், அங்கு முன்பு செல்வாக்கோடு விளங்கிய பழைய யூனியனிஸ்டுக் கட்சி மண்ணைக் கவ்வியது.

மூன்றாவதாக, முஸ்லீம் லீகின் இந்த மாபெரும் வளர்ச்சியும், காங்கிரசுக்கு முஸ்லீம்களின் ஆதரவுக் குறைவும், காங்கிரஸின் அணுகுமுறையில் ஏதோ அரசியல், நிறுவன, தந்திரப் பலவீனங்கள் இருப்பதைக் காட்டின. ஹிந்துக்களையும் முஸ்லீம்களையும் சமமாகச் சேர்த்துக் கொள்வதே காங்கிரஸின் மூல லட்சியம். ஆனால், நடைமுறையில், உறுப்பினர்களைச் சேர்ப்பதில் இந்த அளவில் வெற்றி ஒருகாலும் கிட்டவில்லை. 1922 இல் மக்களின் ஒத்துழையாமை இயக்கம், போராட்டத்தின் உச்சநிலையில் இருக்கும் தருணத்தில் கைவிடப்பட்டதால், காங்கிரஸ்-கிலாபத் உறவால் உருவான ஒற்றுமை மீது அடிவிழுந்தது என்பதை நாம் ஏற்கனவே பார்த்து விட்டோம். காங்கிரஸ் மாகாண மந்திரி சபைகளின் காலத்தில், உடன்பாடு காண்பதற்காக முன்வந்த லீகின் கோரிக்கையை நிராகரித்தது, காங்கிரஸ் அதன் வலிமையைக் குறைத்து மதிப்பீடு செய்ததைப் பிரதிபலிப்பதோடு, பின்னர் காங்கிரஸை எதிர்த்துக் கடும் கிளர்ச்சி செய்ய லீகுக்கு ஒரு நெம்புகோல் கொடுத்தாற் போலாயிற்று. போரின் போதும் அதற்கு முன்பு மிருந்த சிக்கலான நிலைமையில், அக்காலத்துக் காங்கிரஸ் அரசியல் தலைமையினரிடமிருந்த குழப்பத்தையும், முரணான போக்குகளும், தடுமாற்றமும் (போஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது, போஸ் வெளியேற்றப்பட்டது; போரின் ஆரம்பக் கட்டத்தில் செயல்படாமை; போர் முயற்சிக்கு அநேகமாக எதிர்ப்பே காட்டாமல் இருந்தது; தனிநபர் சத்தியாக்கிரகம்; ஜப்பானியர் முன்னேறுகையில், அதிர்ஷ்டம் கெட்ட ஆகஸ்ட் தீர்மானம், அதைத் தொடர்ந்து தலைவர்கள் கைது; கலகமான, சட்ட விரோதமான நிலைமைகள், ஆங்காங்கு கலவரங்கள்; அவற்றை முதலில் ஏற்க மறுத்த தலைமையினர் பின்னர் அவற்றைத் தேசீயப் போராட்டம் என்று பாராட்டியது) பொதுவாகப் போர்த் துன்பமும் பஞ்சமுமான போர் நிலைமைகளைத் தலைமையினர் அலட்சியப்படுத்தியதும் போரின் இந்திய கட்டத்தின் பொதுவான அரசியல் ஒழுங்கினத்தையும் சீர்கேட்டையும் உண்டாக்கியதோடு, இக்காலத்தில் ஒற்றுமையான தேசிய இயக்கத்தின் வளர்ச்சியை வலிவுகுன்றவும் செய்தது.

எல்லாவற்றுக்கும் மேலாக, முஸ்லீம் லீகின் வளர்ச்சி, முஸ்லீம் பொது மக்களை அணுகவோ கவரவோ ஒருமுகப்படுத்தவோ முயற்சி செய்ய முடியாமல் காங்கிரஸ் தோல்வி கண்டதைப் பிரதி

பலித்தது. நேர்விரோதமான நிலைமை வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில்; அங்கு அப்துல் கபார்கான் தலைமையில் குதாய் கித்மத்கார்கள் முஸ்லீம்களுக்கு இடையில் தீவிரமாகப் பெரும்பணி யாற்றி அவர்களை உறுதியாகக் காங்கிரசோடு இணைத்து வைத்தி ருந்ததிலிருந்து இது ருசுவாகிறது. காங்கிரசுக்கு வகுப்புவாத மற்ற பொதுயேடையும், அதன் முன்னணியில் மிகச் சிறந்த, நாட்டுப்பற்று வாய்ந்த முஸ்லீம் தலைவர்களும் இருந்தாலும், மிகுதியான காங்கிரஸ் பிரசாரத்தில், குறிப்பாக, காந்தியின் தலைமையிலிருந்த வலதுசாரித் தலைமையினரின் பிரசாரத்தில் இருந்த, மறுக்க முடியாத, வலிய ஹிந்து சமயவாடை முஸ்லீம் மக்களுக்குக் கவர்ச்சிகரமாக இல்லை.

இங்கு, தேசீய இயக்கத்தின் பிரபலமான தலைமையினரைத் தான் பொறுப்பில் கடுமையான பங்கு சேரும். முன்பே, போருக்கு முந்தின ஆண்டுகளில் தேசீய விழிப்பின் முதல் பேரலையின் போது, திலகர், அரவிந்த கோஷ் முதலிய தேசீய இயக்கத்தின் போர்க் குணம் வாய்ந்த தலைவர்கள் எவ்வாறு தங்கள் கிளர்ச்சியை ஹிந்து மத அடிப்படையில் உருவாக்கி, நாட்டு எழுச்சியை ஹிந்துமத மறுமலர்ச்சியாக்க முயற்சி செய்தார்கள் என்பதை நாம் பார்த்து விட்டோம். இச்செய்கையால் முஸ்லீம் மக்களைத் தேசீய இயக்கத் திலிருந்து அவர்கள் வெட்டிவிட்டதுடன் அரசாங்கம் தந்திரமான எதிர் நடவடிக்கை மேற்கொண்டு 1906இல் முஸ்லீம் லீக்கை உரு வாக்க வழி திறந்துவிட்டார்கள்.

பழைய கால கட்டத்தின் ''தேசீயவாதிகள்'' அல்லது ''தீவிர வாதிகள்'' எனப்பட்டோருடன் மட்டும் இந்த விபரீதமான தவறு நின்றுவிடவில்லை. நவீனகாலத்திலும் அது நீடித்தது. காந்தியின் எல்லாக் கிளர்ச்சியிலும் பிரசாரத்தில் அது மிகவும் பிரபலமாக இருந்தது. காந்தியின் பிரசார முறையிலும், ஹிந்துமதக்கோட்பாடுகளை, அவதாரமய சமயக் கருத்து, பொதுவான ஆன்மிகக் கோட்பாடு பிர சாரம் ஆகியவை பின்னிப் பிரிக்க முடியாதபடி கலந்திருக்கும். 1920-22 இல் தேசீய ஒத்துழையாமை இயக்கப் போராட்டத்தில் இருக்கையில், ஒற்றுமையான தேசீய இயக்கத்தின் தலைவராக இருந்ததால் தாம் பேசும் ஒவ்வொரு பேச்சையும் ஒற்றுமையான தேசீய இயக்கத்தின் தலைவர் என்ற முறையில் பொறுப்போடு பேச வேண்டிய காந்தி தாம் ஒரு ''சநாதன ஹிந்து'' (வைதிகத் தீவிரவாத, அதிநம்பிக்கை கொண்ட ஹிந்து) என்று பகிரங்கமாக சொல்லிக் கொண்டிருந்தார்:

''நான் என்னை ஒரு சநாதனி ஹிந்து என்று சொல்லிக் கொள்கிறேன்; ஏனெனில்—

1. வேதங்களையும், உபநிடதங்களையும், புராணங்களையும், ஹிந்து சாத்திரங்கள் எனப்படுகிறவை அனைத்தையும், ஆகையால், அவதாரங்களையும், மறுபிறவியையும் நான் நம்புகிறேன்.

2. என் கருத்துப்படி வேதப் பொருளில், தற்போது பொதுவான பக்குவமற்ற பொருளில் அல்லாமல், நான் வருணாசிரம தருமத்தை நம்புகிறேன்.

3. மக்கள் நம்பும் பொருளில் அல்லாமல், இன்னும் விரிவான பொருளில் நான் பசுவை பாதுகாப்பதை நம்புகிறேன்.

4. விக்கிரக ஆராதனையை நான் நம்பாமல் இல்லை.

(காந்தி, எங் இண்டியாவில், அக்டோபர் 12, 1921.)

சநாதனி என்ற பதத்திற்கு மக்கள் என்ன பொருள் தருகிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ள நேருவின் வருணனையை நினைவு படுத்தினால் போதும்:

''பின்நோக்கி ஓடும் இந்தப் பந்தயத்தில் ஹிந்து மகா சபையை வெகு பின்னால் விட்டு விட்டார்கள் சநாதனிகள்; இவர்கள் தீவிரமான ஒருவகை சமயத் தேக்க வாதத்தையும் பிரிட்டிஷ் ஆட்சியின்பால் ஆர்வமிக்க அல்லது ஊக்க வெளியிடப்படுகிற விசுவாசத்தையும் இணைக்கிறவர்கள்.

(ஜவகர்லால் நேரு, ''சுயசரித்திரம்'', பக். 382.)

ஹிந்து முஸ்லீம் ஒற்றுமைக்காக வேண்டுகோள் விடுக்கும் போதும், இரு பிரிவினருக்கும் வேண்டுகோள் விடும் தேசியத் தலைவராக வேண்டுகோள் விடாமல், ஒரு ஹிந்து தலைவராகவே அவ்வாறு செய்தார்; ஹிந்துக்கள் அவருக்கு ''நாம்''; முஸ்லீம்கள், ''அவர்கள்'':

''முசல்மான்களின் உள்ளங்களை நாம் வெல்லவேண்டுமானால், ஆத்ம சுத்திக்காக நாம் தவம் இயற்றச் செய்ய வேண்டும்.''

(காந்தி, எங் இண்டியாவில், செப்டம்பர், 1924.)

நவீன தேசியப் போராட்டம் முழுவதிலும் எந்த நெருக்கடியிலும் காந்தி காங்கிரஸ் அரசியலை விடுத்து ஹிந்து சீர்திருத்த இயக்கத்திற்கு சென்று விடுவார் (1932-33 போராட்ட நெருக்கடியில் செய்தது போல்)—பிறகு திரும்புவார்.

இவ்வாறாக, தேசிய காங்கிரசின் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர், அதன் முதன்மையான பிரதிநிதி பொதுமக்களின் பார்வையில் எப்போதும் ஹிந்து மதத்திற்கும், ஹிந்து மறுமலர்ச்சிக்கும் தீவிரத் தலைவராகவே காட்சி அளித்தார். இந்தச் சூழ்நிலையில்

(இந்த வகையில் தலையாய குற்றம் காந்தியுடையதாக இருக்க, ஏராளமான மற்ற இளைய தம்பிரான்களும், குறிப்பாக, காந்தீயத் தூண்டுதலும் போக்கும் உடையவர்கள் கையாண்ட முறைகளும் அதே தன்மை வாய்ந்தவையாயின) அதிகார பூர்வமாக ஏற்கப் பட்ட தலைமையோடும் பிரசாரத்தோடும் இயங்கிய தேசிய காங் கிரசை, எதிரி விமரிசகர்கள் மட்டுமல்ல, பொதுவாகப் பொது மக்களில் பெரும் பகுதியினரும், ''ஒரு ஹிந்து இயக்கம்'' எனப் பழித்தார்கள் என்றால், அதில் வியப்படைவதற்கு என்ன இருக்கிறது? இந்த நிலைமைகளிலும், பொறுக்கி எடுத்த முஸ்லீம் தலைவர்கள் சிலர் காங்கிரசை உறுதியாக ஆதரித்தார்கள் என்றால், அது அவர்களுடைய மிகுந்த நாட்டுப் பற்றையே காட்டுகிறது. ஆனால், இந்த முறைகளால் பெரும் முஸ்லீம் ஆதரவைப் பெற முடியாது.

வகுப்பு வேற்றுமைகளை தன்னலத்துக்குப் பயன் படுத்திக் கொண்ட பிரிட்டிஷ் அரசாங்கம், மக்கள் இயக்கத்துக்கு எதிராக இகழ்ந்தக்கதொரு கருவியை உபயோகித்தது என்பதில் ஐயம் இல்லை. ஆனால், திலகரும் காந்தியும்தான் அக் கருவியை அதன் கையில் கொடுக்க உதவினர்.

ஆயினும், முஸ்லிம் மக்களின் பெரும் ஆதரவு பெற்று வளர்ச்சி அடைந்ததில், குறிப்பாக, 1940 இல் பாகிஸ்தான் திட்டத்தை ஏற்றதற்கு அப்பால் ஏற்பட்ட வளர்ச்சியில் மற்றொரு விசேஷ அம்சத்தையும் கவனிக்க வேண்டும். பாகிஸ்தான் திட்டம்—பின்னர் இதைப்பற்றி விவாதிக்கப்பட்ட தொடக்கத்தில், வடமேற்கு, வடகிழக்கு இந்தியாவின் முஸ்லிம் பெரும்பான்மையாயுள்ள பிரதேசங்களில் தனியான இறைமையுள்ள நாடுகளை ஏற்படுத்துவதைக் கோரியது. பின்னர், ஆறு மாகாணங்களில் ஒரு தனியான இறைமையுள்ள நாடு கேட்கும் கோரிக்கையாக அது வளர்க்கப்பட்டது. இந்தத் திட்டத்தை ஏற்பதற்கு வலுவான காரணங்கள் இருக்கின்றன. மிக அண்மைக் காலத்தில் இந்தத் திட்டம் அரசியல் முன்னணிக்கு வந்ததையும், அந்தப் பிரதேசங்களில் முஸ்லிம்களுக்கு இடையில் அதற்குக் கிடைத்த பேராதரவையும் பார்த்தால், அது ஏதோ ஓர் அரசியல்-குழப்பமான உருவத்திலேயே ஆயினும்-மக்களுடைய உண்மையான உணர்ச்சிகளையும் வேட்கைகளையும் பிரதிபலிக்கிறது என்பது வெளியாகிறது. பாகிஸ்தான் திட்டத்திற்கும் அதற்குக் கிட்டிய பெரும் ஆதரவுக்கும் பின்னால், இந்திய நாட்டு வாழ்க்கையில் ஒரு புதிய அம்சம் தலை எடுப்பதைக் காணலாம்.

தேசிய இயக்கம் மக்களுக்கு இடையில் விரிவாகப் பரவப் பரவ, இந்திய மக்களின் வெவ்வேறு தேசிய இனங்களைப் பிரதி

பலிக்கும் தேசியவுணர்வின் புதிய வடிவங்கள் மேலே வந்து கொண்டு இருந்தன. இந்தத் தேசிய இனங்களின் விஷயத்தில், குறிப்பாக, மக்களுக்கு இடையில் முஸ்லீம் மதம் ஆதிக்கம் செலுத்துகிற வடமேற்கு, வடகிழக்கு இந்தியாவில் பாகிஸ்தான் கோஷம் ஓரளவில் இந்தப் புதியதாய்த் தோன்றுகிற தேசிய வுணர்வை—திரிந்ததொரு உருவத்திலாயினும்—பிரதிபலித்துத் திரட்டிக் கொண்டது. தேசிய இயக்கத்தின் முன்னேற்றத்தோடு, இந்திய மக்களின் பல-நாடுகள் தன்மை தெளிவாக வெளிப்படும் என்பதை ஸ்டாலின் முன்னதாகவே கண்டு 1912 இல் எழுதினர்:

> "இந்தியாவின் விஷயத்தில்கூட, பூர்ஷ்வா வளர்ச்சிப் பாதையில், அதுவரை செயலற்றுக் கிடந்த எண்ணற்ற தேசிய இனங்கள் உயிர்த்து விடுவதைக் காணலாம்."

ஏகாதிபத்தியத்தை எதிர்த்துத் தாங்கள் நடத்தும் போராட்டத் தில் இந்திய மக்கள் ஒற்றுமையாக இருப்பதற்கும், எதிர்கால சுதந்திர இந்தியாவில் அரசியல், பொருளாதார ஒற்றுமை வேண்டும் என்ற மறுக்கமுடியாத முற்போக்கு நோக்கத்திற்கும், இந்திய மக்களை அதனல் ஒரே ஒருபடித்தான முழுமையாகக் கருத வேண்டும் என்று பொருள் ஆகிவிடாது. மாருக, இந்திய மக் களின் பல-தேசிய இனத்தன்மையை ஏற்பதற்கு வலிய காரணங் கள் இருக்கின்றன. தேசிய காங்கிரஸ் எதிர்கால சுதந்திர இந்தி யாவின் அரசியல் திட்டத்தில், இப்போது எதேச்சாதிகாரமாய்ச் செய்யப்பட்டுள்ள மாகாணங்களின் இடத்தில், இந்திய மக்களின் பண்பாட்டு, மொழி இனங்கள் என்று எல்லை வகுத்ததன் வாயி லாகவும், இந்த இனங்களுக்கு முழுமையான தன்னுட்சி உரிமை உண்டு என ஏற்றதன் வாயிலாகவும், ஏற்கனவே ஓரளவு இந்தத் தேசிய இனங்களை ஏற்றுக் கொண்டுள்ளது. ஆனல், இக்காலத்தில் காங்கிரஸ் இந்தத் தேசிய இனங்களின்-தேசியத் தன்மையை ஏற்க மறுத்ததும் அன்றி சுய நிர்ணய முழு உரிமையையும் எதிர்த்தது.

ஆயினும், இந்திய மக்களின் பல-நாடு தன்மையைப் பற்றின பிரச்னைக்கும், முஸ்லீம் லீக் கோருகிற பாகிஸ்தான் திட்டத்திற் கும் இடையிலுள்ள கூர்மையான வேற்றுமையைக் கவனிக்க வேண்டியது அவசியம்.

பாகிஸ்தான் கோரிக்கை (இன்னும் பெயரிடப்படாவிட்டா லும்) முதன் முதலாக 1940 இல் முஸ்லீம் லீகினுல் ஏற்கப்பட்டது. முன்பு, முப்பதுகளில் இந்த யோசனை முதலில் சிலரால் வெளி யிடப்பட்டபோது (1930 இல் கவிஞர் இக்பாலும், 1933 இல் கேம்பிரிட்ஜ் மாணவர்கள் சிலரும்) முஸ்லீம் லீகின் அரசியல் தலை வர்கள், அரசியல் சட்டத் திருத்தத்திற்கான கூட்டுக் கமிட்டி யிடம் 1933 இல் சாட்சியம் அளிக்கையில், அதை ஒரு "மாணவர்

கனவு'' என்றும், ''மனோராஜ்யம், செயல் படுத்த முடியாதது'' என்றும் கூறி நிராகரித்தனர். 1937 யில் கூட, முஸ்லீம் லீகின் ஆண்டுக் கூட்டத்தில், ''சுதந்திரமான ஜனநாயக ராஜ்யங்களின் கூட்டரசு வடிவத்தில் முழு சுதந்திரமுள்ள இந்தியா ஏற்படுவதே'' தன் குறிக்கோள் என அது அறிவித்தது. ஆனால், 1940 இல் லாகூரில் நடந்த முஸ்லீம் லீக் கூட்டத்தில் பின் காணும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது:

> ''பின்காணும் அடிப்படைக் கொள்கைகளின் பேரில் வகுக்கப்பட்டால் அன்றி, எந்த அரசியல் திட்டமும் இந்த நாட்டில் செயல்படுத்தத் தக்கதாகவோ அல்லது முஸ்லீம்களுக்கு ஏற்கத்தக்கதாகவோ இராது என்பதும், அதாவது, நில இயல் முறையில் அடுத்தடுத்துத் தொடர்ச்சியாக இருக்கும் பகுதிகளைத் தேவையான பிரதேச இணக்கங்களைச் செய்து அமைத்து வட்டாரங்களாய் எல்லை வகுக்கப்பட வேண்டும் என்பதும், இந்தியாவின் வடமேற்குப் பகுதியிலும் கிழக்குப் பகுதியிலும் இருப்பதைப் போன்று எண்ணிக்கையில் முஸ்லீம்கள் பெரும்பான்மையாக உள்ள பகுதிகளை இணைத்து சுதந்திர நாடுகளாய் அமைத்து, அந்த நாடுகளின் பகுதிகள் தன்னாட்சியும் இறைமையும் வாய்ந்தவையாக இருக்க வேண்டும் என்பதும் அனைத்திந்திய முஸ்லீம் லீகின் இந்தக் கூட்டத்தின் தேர்ந்த கருத்து என்று தீர்மானிக்கப்பட்டது.''

பின்னர், இந்த மிகக் கலங்கலான தீர்மானமே மிகத் தெளிவான விளக்கம் பெற்றது. 1945, டிசம்பர் 10 ஆம் நாள் அளித்த ஒரு பேட்டியில் ஜின்னா முஸ்லீம் லீகின் கோரிக்கையைப் பின் வருமாறு விளக்கினார்:

> ''இந்தியாவில் உள்ள முட்டுக்கட்டை நிலைமை, இந்தியாவுக்கும் பிரிட்டிஷாருக்கும் இடையில் எழுந்ததே அல்ல. அது ஹிந்து காங்கிரசுக்கும் முஸ்லீம் லீகுக்கும் இடையில் உள்ளது.... பாகிஸ்தான் வழங்கப்படும் வரை எதனையும் தீர்க்க முடியாது, தீர்க்கப்பட மாட்டாது....ஒன்றல்ல, இரண்டு அரசியல் நிர்ணய சபைகள் இருக்க வேண்டும்— ஒன்று, ஹிந்துஸ்தானத்தின் அரசியல் அமைப்புச் சட்டத்தை இயற்றவும், தீர்மானிக்கவும்: மற்றொன்று, பாகிஸ்தானின் அரசியல் அமைப்புச் சட்டத்தை இயற்றவும், தீர்மானிக்கவும்.
>
> ''திரு. காந்தி, 'பாகிஸ்தான் இருக்க வேண்டும் என்பதை ஒப்புக் கொள்கிறேன். சிந்து, பலுசிஸ்தான், பஞ்சாப், வடமேற்கு எல்லை மாகாணம், வங்காளம், அஸ்ஸாம் ஆகிய ஆறு மாகாணங்களையும் இப்போதுள்ள எல்லைகளுடன் சேர்த்து,

அதாவது, இந்தியாவில் நாலில் ஒரு பகுதி பாகிஸ்தான் நாடாக அமைய வேண்டும் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன்' என்று கூறினல் போதும், இந்தியப் பிரச்னையை நாம் பத்தே நிமிடங்களில் தீர்த்துவிட முடியும்.

''தாங்களாகவே மனமொப்பிச் செய்யும் அடிப்படையில் மக்களை மாற்றிக் கொள்ள வேண்டியதாக இருக்கக் கூடும். எல்லைகளைச் சரிக்கட்ட வேண்டியிருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை......எல்லாம் வரலாம், ஆனல், முதலில் இப்போதுள்ள மாகாண எல்லைகளையே எதிர்காலப் பாகிஸ்தானின் எல்லைகளாக ஏற்க வேண்டியது அவசியம். தன்னாட்சி வாய்ந்த மாகாணங்கள் முறையில் வகுக்கப்பட்ட கூட்டரசாக, எங்கள் பாகிஸ்தான் அரசு இருக்கக் கூடும்.....

''பிரிட்டிஷ் அரசின் நேர்மை பற்றி எனக்கு எவ்விதச் சந்தேகமும் இல்லை. ஆனல், இந்திய முஸ்லீம்களுக்கு முழு பாகிஸ்தான் வழங்குவதற்குப் புறம்பாக ஒரு தீர்வு காணும் நம்பிக்கை இருப்பதாய்ச் சொல்லிக் கொள்கிறவர்களின் நேர்மை பற்றி நான் நிச்சயமாகச் சந்தேகப்படுகிறேன்.''

இறுதியாக, 1946 இல் கூடிய முஸ்லீம் சட்ட மன்ற உறுப்பினர்கள் மாநாடு பாகிஸ்தானை பின் வருமாறு அறுதியிட்டது:

''வடகிழக்கே வங்காளமும் அஸ்ஸாமும், பஞ்சாபும், வடமேற்கு இந்தியாவில் எல்லைப்புற மாகாணமும், சிந்தும் பஞ்சாபும்—ஆகிய, முஸ்லீம்கள் மிகப் பெரும்பான்மையினராகவுள்ள பாகிஸ்தான் மண்டலங்களை இணைத்து ஒரு சுதந்திரமான, இறைமை வாய்ந்த நாடாக அமைக்க வேண்டும்.''

ஹிந்துக்களும் முஸ்லீம்களும் இரு ''நாடுகள்'' என்ற கருத்தை அடிப்படையாய்க் கொண்டது பாகிஸ்தான் கொள்கை. இந்தியா முழுவதிலும், இந்தியாவின் ஒவ்வொரு பிரதேசத்திலும் ஹிந்துக்களும் முஸ்லீம்களும் கூடிக் கலந்து வாழ்ந்து கொண்டிருக்கலாம்; ஹிந்துக்களும் முஸ்லீம்களும் ஒரே குடும்பத்தின் உறுப்பினர்களாக இருக்கலாம்; ஆனலும் அவர்கள் இரு ''நாடு''களே என்று அறிக்கையிட்டார்கள். சமயத்தை (சமயத்தோடு சம்பந்தப்பட்ட பொதுவான பண்பாட்டு அளவையும் சேர்த்து)த் தேசீயத்தின் அடிப்படையாய்க் கொள்ளும் இந்த முயற்சி, ஒரு நாட்டின் தன்மைபற்றின ஒவ்வொரு வரலாற்று அநுபவத்திற்கும் அனைத்து நாடுகள் அநுபவத்திற்கும் நேர்விரோதமானது என்பது வெளிப்படை. ஐரோப்பாவிலுள்ள கதோலிக்கர்களை ஒரு''நாடு'' என்பது போன்றதாகும் அது. ஒரு முஸ்லீமாக இருப்பதே ஒரு தேசீய இனத்தின் அடிப்படை என்றல், வட ஆப்பிரிக்கா முதல் இந்தியா

வரையிலுள்ள எல்லா முஸ்லீம்களும் ஒரு ''நாடு'' ஆவர், என்பதே உண்மையில் இந்த வாதத்தின் தர்க்க முறைக்குப் பொருளாகும்; பாகிஸ்தான் கொள்கை, அனைத்துலக இஸ்லாமியத்தில்தான் இறுதியாக நிறைவு பெறும்.

ஒரு நாட்டை அமைப்பது என்ன என்கிற கேள்வி பற்றின மார்க்சிய போதனை, ஸ்டாலினுல் அவருடைய ''மார்க்சீயமும், தேசீய, காலனிப் பிரச்சினையும்'' என்ற நூலின் பிரபலமான விளக்கத்தில் தொகுத்துரைக்கப்பட்டுள்ளது: ''மொழி, பிரதேசம், பொருளாதார வாழ்க்கை, மனோதர்மம் ஆகியவற்றின், வரலாற்று பூர்வமாக வளர்ச்சியுற்ற நிலையான ஒற்றுமை ஒரு பண்பாட்டு ஒற்றுமையாக உருக்கொள்வதே நாடு.'' இத்துடன் ஸ்டாலின் எதிர்மறைத் தன்மையையும் சேர்த்தார்: ''மேலே குறிக்கப்பட்ட அம்சங்களில் எந்த ஒன்றுமட்டையும் ஒரு ''நாடு'' என்று வரையறுக்கப் போதுமானது அல்ல என்பதையும் வலியுறுத்தவேண்டும். மறுபக்கம், இந்த அம்சங்களில் ஒன்றே ஒன்றுமட்டும் இல்லாமற் போனாலும் போதும், நாடு நாடாக இருக்காது.''

இந்தச் சோதனைப்படி, இந்தியாவின் முஸ்லீம்களை ஒரு''நாடு'' என அழைக்க முடியாது என்பது தெளிவு. அவர்களுடைய மொழிகள் வேறுபட்டவை, பிரதேசங்கள் வேறுபட்டவை, பண்பாடுகள் வேறுபட்டவை. இனத்தாலும் அவர்கள் வேறுபட்டவர்கள். பட்டாணிக்கும் வங்காள முஸ்லீமுக்கும் இடையில் பொதுவான ஒரே அம்சம், மதமும் பழைய பண்பாட்டின் சில எச்சங்களுமே. ஆனால், ஒரு ''நாடு'' ஆவதற்கு இது போதாது. பழைய ரஷ்ய சாம்ராஜ்யத்தில் யூதர்கள் வெவ்வேறு இடங்களில் வசித்தார்கள், வெவ்வேறு மொழிகளில் பேசினார்கள்; கீழ்க்கண்ட காரணங்களால், அவர்களை ஒரு ''நாடு'' என்று அழைக்க ஸ்டாலின் மறுத்தார்:

> ''அவர்களுடைய வாழ்க்கைக்குப் பொதுவான ஏதாவது ஒன்று இருக்குமாயின், அது அவர்களுடைய சமயம், பொதுவான தோற்றுவாய், தேசீயத்தன்மையின் சில எச்சங்கள். இவை எல்லாம் பிரச்னைக்குப் புறம்பானவை; அவர்களைச் சுற்றியுள்ள இன்றைய சமூக, பொருளாதார, பண்பாட்டுச் சூழலை விட வன்மையாக இறுகிவிட்ட சமயச்சடங்குகளும் மங்கியொழியும் உளவியல் எச்சங்களும் இந்த யூதர்களின் விதியைப் பாதிக்கும் என்று உண்மையாக நிலைநாட்ட முடியுமா?''

இங்கு எழுந்துள்ள பிரச்னை, ஒரு நாட்டை வரையறுக்கும் வெறும் பெயரளவுப் பிரச்னை அல்ல. அதுவெறும் பதப்பிரயோகம் பற்றின கேள்வியாக இருந்தால், இந்த விவாதம் பயனற்றது. ஆனால், சமயத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு நாடு அமைக்கும்

முயற்சிக்குப் பொய்யான தொடக்க முனை, மிகக் கடுமையான அரசியல் முக்கியத்துவத்தை உண்டாக்கும். கரடுமுரடான சார மற்ற உண்மை, ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தின் பேரில்தான் ஒரு நாடு இருக்கமுடியும் என்பது, ஆனால், மண்ணிலிருந்து தோன்றா மல் அரசியல் சாஸ்திரிகளால் படைக்கப்பட்ட இந்தக் கொள்கை யின் விளைவாக ''நாடு'' எனப்படுவதற்காக ஒரு நிலப்பகுதியி லிருந்து செயற்கை முறையில் ஒரு பகுதியைத் தோண்டி எடுக்கும் முயற்சி தோன்றியுள்ளது. பாகிஸ்தானின் நில இயலை ஆராய்ந்த தும், இக்கொள்கையின் வலுவின்மை வெளிப்பட்டு விடுகிறது.

பாகிஸ்தான் அமைப்பிற்குக் குறிக்கப்பட்டுள்ள ஆறு மாகாணங்களில், ''தங்கள் இப்போதைய எல்லைகளுக்குள்'' உள்ள மொத்த மக்கட் தொகை, 10·7 கோடி. இவர்களுள் முஸ்லிம்கள் 5·9 கோடி, அல்லது 55 சதவீதம்: முஸ்லீம் அல்லாதார் 4·8 கோடி அல்லது 45 சதவீதம். எனவே, ஒரு முஸ்லீம் நாட்டில் ஏறக்குறையப் பாதியளவு முஸ்லீம் அல்லாதார் இருப்பர்; அதேசமயம், இந்தியாவின் முஸ்லீம்கள் 3·5 கோடி அல்லது ஐந்தில் இருபகுதியினர் அந்த முஸ்லீம் நாட்டுக்கு வெளி யில் இருப்பர். மிக நெருக்கமாய்க் கூடிவாழும் ஹிந்து முஸ்லீம் களை யதேச்சாதிகாரமாகப் பிரதேச அடிப்படையில் வகுப்புப் பிரச்னைக்குத் தீர்வுகாணச் செய்யப்படும் முயற்சி மிக வலுவற்றது என்பதையே இது காட்டுகிறது. கிழக்கு பஞ்சாபில் முஸ்லீம் அல்லாதார் மிகுதி; ஒரு முஸ்லீம் நாட்டுடன் தாங்கள் சேர்க்கப் படுவதை சீக்கியர்கள் மிக விசையாக எதிர்க்கின்றனர்கள்; கல்கத்தா உள்ளிட்ட மேற்கு வங்காளத்தில் முஸ்லீம் அல்லாதார் மிகுதி; அஸ்ஸாமிலும் முஸ்லீம் அல்லாத பெரும்பான்மை; மிக முஸ்லீம் பெரும்பான்மையுள்ள வடமேற்கு எல்லைப்புற மாகாணமோ காங்கிரஸ் கோட்டை.

இந்தப் பிரதேசங்களை அரசியல் பிரிவினை செய்யவேண்டும் என்ற கோரிக்கை, அப்பிரதேசங்களில் உள்ள மக்களில் உறுதியான பெரும்பான்மையினர் அத்தகைய பிரிவினையை விரும்புகின்றனர்கள் என்று அறுதியிடப்பட்டால்தான் நியாயமாகும். பிரிட்டிஷ் ஆட்சி யினின்று விடுதலை வேண்டுகிற இந்திய மக்களின் கோரிக்கையைப் போன்று, அடிமையுண்ட ஒரு மக்களின், நீண்ட காலமாய் ஏற்பட்டதும் ஏற்கப்பட்டதுமான தேசியக் கோரிக்கை போன்று எழுந்துள்ளதொரு பிரச்னை அல்ல இது. இங்கு பிரச்னையில் இருப்பது மிக விவாதத்திற்கு இடம் தருவதான ஒரு கோரிக்கை; சென்ற சில ஆண்டுகளில் மேல்மட்டத்து அரசியல் சாஸ்திரி களால் தோற்றுவிக்கப்பட்டு, ஆழ்ந்த வகுப்புப் பகைமை அடர்ந்த சூழலில் அரசியலில் புகுத்தப்பட்ட ஒரு கோரிக்கை. இந்தக்

கோரிக்கை விவாதத்துக்குரிய தன்மை வாய்ந்ததாக இருப்பதாலும், இந்தப் பிரதேசங்களில் உள்ள மக்கள் மிக வேறுபட்ட தன்மை வாய்ந்தவர்களாக இருப்பதாலும், சம்பந்தப்பட்ட மக்கள் இந்தப் பிரிவினைப் பற்றி என்ன கருதுகிறார்கள் என்பதை வாக்குப் பதிவு அல்லது அது போன்ற வேறு ஜனநாயக முறையில் முதலில் அறுதிசெய்து கொள்வது அல்லது உறுதி செய்து கொள்வதுதான் நியாயமாகும். இந்த யோசனை (இந்த ஒரே விஷயத்தின்மீது, முஸ்லீம் பெரும்பான்மையுள்ள இடங்களின் முழு மக்கட் தொகையினருக்கும் இடையில் வாக்குப்பதிவு நடத்துவது) 1942 இல் சி. ராஜகோபாலாச்சாரியாராலும், 1944 இல் காந்தி-ஜின்னா பேச்சு வார்த்தைகளின் போது காந்தியாலும் வெளியிடப்பட்டது. ஆனால், முஸ்லீம் லீக் சார்பில் ஜின்னாவினால் அது நிராகரிக்கப்பட்டது. முற்றிலும் முஸ்லீம் பெரும்பான்மையுள்ள, தொடர்ச்சியான மாவட்டங்களுக்குப் பாகிஸ்தானைக் கட்டுப்படுத்துவதானால், அது ''ஊனமாக்கப்பட்ட, முடமாக்கப்பட்ட, செல்லரித்த பாகிஸ்தானா''க இருக்கும் என்கிற நிலையை ஜின்னா முதன் முதலில் மேற் கொண்டார்; இரண்டாவதாக, முழு மக்கட் தொகையினருக்கும் இடையில் வாக்குப்பதிவு நடத்துவதானால், முஸ்லீம்கள் முஸ்லீம்களாக சுயநிர்ணயம் செய்யும் உரிமையை மீறுவதாகும் என்றார். மக்களில் 55 சதவீதமான முஸ்லீம்களுக்கு இடையில் மட்டும் வாக்குப்பதிவு செய்து முடிவு காண்பது என்றால், 28 சதவீதத்தினர் (55% இல் 51%) முழு மக்கட் தொகைக்கும் முடிவு செய்வார்கள் என்று பொருள். எந்த ஜனநாயக வாதியும் இந்த யோசனைகளை ஏற்கமாட்டார்கள் என்பது தெளிவு. மக்களின் விருப்பத்தை அறியாமலும், எந்த ஜனநாயகத் தீர்வுக்குக் கட்டுப்படாமலும், ஓர் இறுதி எச்சரிக்கையாக அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்டுள்ள பாகிஸ்தான் கோரிக்கை, ஒரு பிற்போக்கான, குடியாட்சி முறைக்கு ஒவ்வாத, பிளவு படுத்துகிற கோரிக்கையாகி ஏகாதிபத்தியத்தின் வலைக்குள் விழுவதாயிருக்கிறது.

ஆயினும், பாகிஸ்தான் கோரிக்கைக்குப் பின்னால் கரந்து உள்ள மெய்யான தேசீயப் பொருளை நாம் பொருட்படுத்தாமல் இருந்துவிடக் கூடாது.

இந்தக் கேள்விக்கான எந்தத் தீர்வும் ஜனநாயக முறையில் இருக்க வேண்டும். குறிப்பிட்ட ஒரு பிரதேசத்தில் சுய நிர்ணயத்திற்கான தெளிவான தேசீயக் கோரிக்கை இருக்குமானால், அதாவது ஒரு குறிப்பிட்டுள்ள பிரதேசத்தில் உள்ள மக்களில் பெரும்பான்மையினர், தங்களுடைய தனித்தன்மை வாய்ந்த

தேசீயத் தன்மையையும் பண்பாட்டையும் காரணங்களாய்க் காட்டித் தங்களுக்குத் தனியான அரசியல் முறைவேண்டும் என்று தெளிவாய்க் கோரினுல், அப்போது, நில இயல் முறையிலும், பொருளாதார முறையிலும் அது சாத்தியமாகும் என்ருல், அவர்கள் அத்தகைய தனியான அரசியல் முறைகளைப் பெறுவதற்கு உரிமை படைத்தவர்கள், ஏனெனில், அவர்களுடைய விருப்பத்திற்கு விரோதமாக அவர்கள்மீது அரசியல் முறைகளைத் திணிக்கும் முயற்சி நியாயமாகாது என்பதை ஜன நாயகக் கொள்கையான சுயநிர்ணயம் ஒப்புக் கொள்கிறது. இந்தக் கொள்கையைச் சீராகக் கையாண்டால் இந்தியாவின் பல-தேசீய இனப்பிரச்னை தீர வெகு பயனுள்ள வழிகள் உண்டாகும். தன்னிச்சையாகச் சேரும் யூனியன் தோன்ற மிகச் சாதகமான நிலைமைகள் உண்டாகும். ஏற்கனவே, பல தேசீய இனங்களுள்ள சோவியத் யூனியனுக்குள் இந்தத் தேசீயப் பிரச்னையைக் கையாளுவதில் கிடைத்துள்ள குறிப்பிடத்தக்க வெற்றிக்கு ஒத்ததாகவும் அத்தகைய தீர்வு இருக்கும். இந்தக் கொள்கையை ஏற்பதன் பொருள், இந்திய மக்களில் தொடர்ச்சியான நிலப்பகுதியும், பொதுவான வரலாற்று மரபும், பொதுவான மொழி, பண்பாடு, மனோதர்மம் ஆகியவையும், பொதுவான பொருளாதார வாழ்க்கையும் வாய்ந்த ஒவ்வொரு பிரிவினருக்கும் தனி தேசீய இனமாகச் சுதந்திர இந்தியாவில் தன் பங்கை ஆற்றும் நியாயமான உரிமை உண்டு என்பதுடன், சுதந்திர இந்திய ஒன்றியத்துக்குள் அல்லது கூட்டாட்சிக்குள் அது விரும்பினுல் தன்னுட்சியுள்ள ராஜ்யமாக இருக்கவும் அதற்கு உரிமை உண்டு (பிரிந்து போகும் உரிமையுடன்) என்பதையும் ஏற்றுக் கொண்டதாகும்.

ஆகவே, நாளைய சுதந்திர இந்தியா ஒரு கூட்டரசு உருக் கொள்ளலாம், அல்லது, பட்டாணிகள், பஞ்சாபிகள், சிந்திகள், ஹிந்துஸ்தானிகள், ராஜ்தானிகள், குஜராத்திகள், வங்காளிகள், அஸ்ஸாமிகள், பீகாரிகள், ஒரியாக்கள், ஆந்திரர்கள், தமிழர்கள், கன்னடியர்கள், மகாராஷ்டிரர்கள் முதலியன போன்ற பல்வேறு தேசீய இனங்களின் தன்னுட்சி வாய்ந்த ராஜ்யங்களின் ஒன்றியமாக உருக்கொள்ளலாம். இவ்வாறு புதிதாய் அமைக்கப்பட்ட புதிய ராஜ்யங்களில், இடையிடையில் வாழ்கிற சிறுபான்மையினரின் பண்பாடு, மொழி, கல்வி முதலியவை பற்றின உரிமைகள் சட்டத்தால் பாதுகாக்கப்படும், மீறினுல் சட்டத்தால் தண்டிக்கப் பெறுவர். சாதி, இனம், அல்லது வகுப்பை அடிப்படையாய்க் கொண்ட தகுதியின்மைகள், சலுகைகள், பாகுபாடுகள் எல்லாம் சட்டத்தால் ஒழிக்கப்படும், மீறினுல் சட்டத்தால் தண்டிக்கப் பெறுவர்.

இத்தகைய ஜனநாயகத் தீர்வு உண்மையில், 1931 ஆம் ஆண்டு காங்கிரஸ் தன் 'உரிமைகள் அறிக்கை'யில் வெளியிட்டு, 1946 ஆம் ஆண்டு காங்கிரஸ் தேர்தல் வேலைத் திட்டத்தில் மீண்டும் அறிவித்த ஜனநாயகக் கொள்கைகளை நிறைவுபெறச் செய்வதேயாகும்.

''ஆணோ, பெண்ணோ, இந்தியக்குடி ஒவ்வொருவருக்கும் சமஉரிமைகளும் வாய்ப்புகளும் வழங்கப்பட வேண்டும் என்பதைக் காங்கிரஸ் ஆதரித்து வந்துள்ளது. எல்லா வகுப்புகளும் சமயப் பிரிவினர்களும் ஒற்றுமையாக இருக்க வேண்டும், சகிப்புத் தன்மையோடு இருக்க வேண்டும், அவைகளுக்கு இடையில் நல்லெண்ணம் நிலவ வேண்டும் என்பதை ஆதரித்து வந்துள்ளது. மக்கள் யாவரும் தங்கள் விருப்பத்திற்கும் அறிவிற்கும் ஏற்ப வளர்ச்சி பெறவும் முன்னேற்றம் பெறவும் முழுவாய்ப்புகள் தரப்பட வேண்டும் என்பதை ஆதரித்து வந்துள்ளது; ஒவ்வொரு பிரிவினரும் சுதந்திரமாக இருக்க வேண்டும் என்பதையும், நாட்டின் பெரிய அமைப்புக்குள் ஒவ்வொரு பகுதியினரும் தங்கள் சொந்த வாழ்க்கை முறையையும் பண்பாட்டையும் முன்னேற்றம் செய்து கொள்ளப் பாடுபட வேண்டும் என்பதையும் அது ஆதரிக்கிறது; இந்தக் காரணத்திற்காக, அந்தப் பகுதியில் இருப்போர் அல்லது மாகாணவாசிகள், இயன்றவரை, மொழி, பண்பாட்டு அடிப்படையில் அமைக்கப்பட வேண்டும் என்று அது அறிவித்துள்ளது. சமூகக் கொடுமையாலும் அநீதியாலும் துன்புறும் மக்களின் உரிமைகளுக்கும், சமத்துவத்திற்கான எல்லா தடைகளையும் அவர்களுக்காக அகற்றுவதற்கும் அது பாடுபடுகிறது.

''அரசியல் அமைப்புச் சட்டத்தால் உறுதி அளிக்கப்பட்ட அடிப்படை உரிமைகளும் சுதந்திரங்களும் தன் குடிமக்களுக்கு வழங்கும் ஒரு சுதந்திர, ஜனநாயக நாட்டைக் காங்கிரஸ் அகக் கண்களால் காண்கிறது. இந்த அரசியலமைப்புச் சட்டம், உள்ளடக்கப் பகுதிகள் தன்னாட்சி வாய்ந்ததாயுள்ள ஒரு கூட்டரசைத் தன் நோக்கில் கொண்டிருக்கும்; வயது வந்த எல்லாருக்கும் வாக்குரிமை முறை அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமியற்றும் உறுப்புகள் வாய்ந்ததாக இருக்கும். இந்தியக் கூட்டரசு அதன் பல பகுதிகள் தம்மிச்சையாக ஒன்றுபட்ட ஒன்றியமாக இருக்க வேண்டும். உள்ளடக்கப் பகுதிகளுக்கு உயர்ந்த அளவு சுதந்திரம் தருவதற்காக, எல்லாப் பகுதிகளுக்கும் பொருந்துகிற பொதுவான அவசியமான கூட்டரசுப் பொருள்களின் குறைந்த அளவுப் பட்டியல் ஒன்று இருக்கலாம்; ஏற்க விரும்புகிற

பகுதிகள் ஏற்கக்கூடிய பொதுப் பொருள்கள் கொண்ட ஒரு விருப்பப்பட்டியல் இருக்கலாம்.''

ஆயினும், எதிர்கால முன்னேற்ற வளர்ச்சிக்கு உயிர்நாடியாக இந்தியாவின் ஒற்றுமையைக் கருதி நியாயமான கவலை கொள்ளும் காங்கிரஸ் இன்றுவரை தேசீய சுய நிர்ணயக் கொள்கையைப் பயன்படுத்துவதை எதிர்த்து வந்துள்ளது. 1945 செப்டம்பரில் நிறைவேற்றப்பட்ட பூனு தீர்மானம் காங்கிரஸ் நிலையைப் பின் வருமாறு வரையறுக்கிறது:

''இந்திய ஒன்றியம் அல்லது கூட்டரசிலிருந்து, அதன் உள்ளடக்கமான ஒரு ராஜ்யமோ அல்லது பிரதேசப் பகுதியோ பிரிந்துபோவதற்கான சுதந்திரம் அளித்து இந்தியாவைச் சிதைக்கிற எந்த யோசனையையும் காங்கிரஸ் ஒப்புக் கொள்ள முடியாது. 1942 ஏப்ரலில் காரியக் கமிட்டி அறிவித்ததுபோல், காங்கிரஸ் இந்திய விடுதலைக்கும் ஒற்றுமைக்கும் பாடுபடுவது; நவீன உலகத்தில் மக்களின் மனங்கள் இன்னும் பெரிய கூட்டரசுகளை இன்றியமையா முறையில் எண்ணுகையில் ஒற்றுமையில் எந்தவிதச் சிதைவும் சம்பந்தப் பட்ட எல்லாரையும் வலுப்படுத்துவதாயும், சிந்திப்பதற்கே மெத்த வேதனை தருவதாயும் இருக்கும். ஆயினும், எந்தப் பிரதேசத்தின் மக்களும் அவர்களுடைய அறிவிக்கப்பட்ட உறுதியான விருப்பத்திற்கு எதிராக இந்திய யூனியனிலேயே இருக்க வேண்டுமெனக் கட்டாயப்படுத்தும் முறையில் கமிட்டி எண்ணிடவும் இயலாது என்பதையும் அறிவிக்கிறது.''

பிரிந்து செல்லும் உரிமையை ஏற்க மறுப்பதற்கும், இந்திய யூனியனில் இருக்குமாறு எந்தப் பகுதியினரையும் கட்டாயப் படுத்த மறுப்பதற்கும் இடையில்—தீர்மானத்தின் இரண்டு பாகங்களுக்கும் இடையில் ஒருவித முரண்பாடு இருப்பதைக் காணலாம்.

பிரிவினை உட்பட சுய நிர்ணயவுரிமையை ஏற்பதால் பிரிவினை விரும்பத்தக்கது என்று பொருளாகிவிடாது. மாறாக, இந்தியாவின் முற்போக்கான ஜனநாயக வளர்ச்சிக்கு இந்தியாவின் ஒற்றுமை அதி அவசியமானது. பொதுவான ஒத்துழைப்பு வாயிலாக எல்லாப் பகுதிகளும் மிகவிரைவில் முன்னேற இந்திய ஒற்றுமை குறிப்பாக முக்கியமானதாகும்; பொருத்தமான அனைத்திந்தியப் பொருளாதாரத் திட்டம் இடுவதற்கும், வளர்ச்சிக்கும், சமூக நிலைகளை உயர்த்துவதற்கும் அது தேவை. ஆனால், ஒன்றியம் தன்னிச்சையான ஒன்றியமாக இருக்க வேண்டும்.

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியால் இக்கொள்கை, வலியுறுத்தப்பட்டுள்ளது; இந்திய மக்களின் பல—நாடு தன்மையின் புதிய பிரச்னைகளைப் பற்றின முதல் ஆழ்ந்த ஆய்வாய்க் கருதத் தக்க 1942 ஆம் ஆண்டுத் தீர்மானத்தில் முதலிலும், மிக அண்மையில் 1946 இல் பிரிட்டிஷ் மந்திரிசபைத் தூது கோஷ்டியிடம் சமர்ப்பித்த குறிப்பிலும் வலியுறுத்தப்பட்டுள்ளது:

''அரசியல் நிர்ணய சபை பற்றின பிரச்னை பேரில் காங்கிரசுக்கும் லீகுக்கும் இடையில் எழுந்துள்ள கடும் வேற்றுமையை, சுய நிர்ணய உரிமைக் கொள்கையை நியாயமாகப் பயன்படுத்துவதால்தான் தீர்க்கமுடியும்.

''ஒவ்வொரு மக்களின் இயற்கையான பண்டைய தாயகங்கள் அடிப்படையாய்க் கொண்டு புதிதாய் எல்லைக் கோடு வரையவும், அவ்வாறு புதிதாய் எல்லைக் கோடிடப்பட்ட மாகாணங்கள் இயன்றவரை, மொழியிலும் பண்பாட்டிலும் ஒருபடித்தான தேசீயப் பகுதிகளாக, உதாரணமாக, சிந்து, பாட்டாணிஸ்தான், பலுசிஸ்தான், மேற்கு பஞ்சாப்[1] முதலியன கொண்டதாக அமையுமாறு கவனித்துக்கொள்ளவும் ஒரு எல்லைக் கமிஷன் நியமிக்கும் பணியை மேற்கொள்ளும் பொறுப்பை இடைக்கால அரசுக்குத் தரவேண்டும் என்று நாங்கள் யோசனை கூறுகிறோம். இத்தகைய ஒவ்வொரு பகுதியின் மக்களுக்கும் தளையற்ற சுய நிர்ணயவுரிமை இருக்கவேண்டும், அதாவது, இந்திய யூனியனைச் சேருவதா, அல்லது ஒரு தனி இறைமை வாய்ந்த நாடு அமைப்பதா, அல்லது, மற்றொரு இந்திய யூனியன் அமைப்பதா என்பதைத் தங்கள் விருப்பம் போல் முடிவு செய்யும் உரிமை இருக்கவேண்டும்.

''ஆகையால், இந்த அடிப்படையை ஏற்பதன் பேரில் அரசியல் நிர்ணய சபையின் தேர்தல்கள் நடக்கவேண்டும்; தேர்தலின்போது, பிரிவினையா அல்லது சேர்ந்திருப்பதா என்ற கேள்வியை அரசியல் கட்சிகள் மக்களுக்கிடையில் வைக்க வேண்டும். ஒவ்வொரு தேசீயப் பகுதியிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள்கூடி, அவர்கள் அனைத்திந்திய அரசியல் நிர்ணய சபையில் கலந்துகொண்டு ஓர் இந்திய யூனியனை அமைப்பதா அல்லது வெளியில் தங்கித் தங்களுக்

1. மேலே கூறப்பட்டுள்ள யோசனைப்படியும், திட்டமிட்டபடி சமஸ்தானங்கள் ஒழிக்கப்பட்ட பின்பும் உருவாகக்கூடிய தேசீயப் பகுதிகளின் விவரமான பட்டியல் வருமாறு: தமிழ்நாடு, ஆந்திரம், கேரளம், கர்நாடகம், மகாராஷ்டிரம், குஜராத், ராஜஸ்தானம், சிந்து, பலுசிஸ்தான், பதான்லாந்து, காஷ்மீர், பஞ்சாப், ஹிந்துஸ்தான், பீகார், அஸ்ஸாம், வங்காளம், ஒரிஸ்ஸா.

கெனத் தனி இறைமை வாய்ந்த நாடு அமைப்பதா அல்லது மற்றோர் இந்திய யூனியனைச் சேருவதா என்பதைப் பெரும் பான்மையால் தீர்மானிப்பார்கள்.

''இறைமை வாய்ந்த பகுதிகள் கொண்ட, சுதந்திர மான, தன்னிச்சையான, ஜனநாயக இந்திய யூனியனைக் கம்யூனிஸ்டுக் கட்சி வேண்டுகிறது. எல்லாருடைய ஒத்துழைப்பும் தேவைப்படும் விடுதலையைக் காக்கவும் வறுமைப் பிரச்னைகளைத் தீர்க்கவும், ஒரு பொதுவான சகோதரத்துவத்துடன் ஒரு பொதுவான யூனியனுக்குள் சேர்ந்திருப்பதாலேயே இந்தியப் பொது மக்களின் சிறந்த நலன்கள் காக்கப்பெறும் என்று அது உறுதியாக நம்புகிறது. மேலே குறிப்பிட்ட முறையில் சுயநிர்ணயவுரிமைக் கொள்கையைப் பயன்படுத்திக் கொள்வதன் அடிப்படையில் தான் இந்திய ஒற்றுமையை நிலையாக்க முடியும்.''

இந்தப் பிரச்னைகளுக்கு ஒரு தீர்வு காண்பதற்கு, இவ்வகை அணுகுமுறைதான் மிகச் சாதகமான பாதை.

ஐந்தாம் பாகம்

# ஏகாதிபத்தியமும் நாட்டு விடுதலையும்

*அத்தியாயம்-14.* **அரசியலமைப்புப் போர்க்களம்**

1. ஏகாதிபத்தியமும் சுயாட்சியும்
2. 1917க்கு முந்தைய சீர்திருத்தக் கொள்கை
3. குடியேற்ற நாட்டு அந்தஸ்துப் பிரச்சினை
4. 1935 ஆம் ஆண்டு அரசியல் திட்டம்

*அத்தியாயம்-15.* **போருக்குமுன் தேசீயப் போராட்டம்**

1. புதிய எழுச்சி
2. 1937ஆம் ஆண்டு தேர்தல் வெற்றி
3. காங்கிரஸ் மாகாண அமைச்சவைகள்
4. கூட்டரசுத் திட்டமும் வலுக்கும் நெருக்கடியும்

*அத்தியாயம்-16.* **இரண்டாம் உலகப்போரில் இந்தியா**

1. பிரிட்டிஷ் உலகதந்திரமும் இந்தியாவும்
2. பிரிட்டனின் உள்நாட்டு அரசியலுக்கு இந்தியா வின் முக்கியத்துவம்
3. தேசீயமும் அயல்நாட்டுக் கொள்கையும்
4. இந்தியாவும் போரும் (1939-1942)
5. ஆகஸ்டுத் தீர்மானமும் பிறகும் (1942–1945)

*அத்தியாயம்-17,* **விடுதலை**

1. மாறும் உலகில் இந்தியா
2. நாட்டுக் கொந்தளிப்பு-1945-46
3. மந்திரிசபைத் தூது கோஷ்டி
4. 1946 ஆம் ஆண்டின் புதிய அரசியல் திட்ட யோசனைகள்

அத்தியாயம் 14

# அரசியலமைப்புப் போர்க்களம்

''கிரேட் பிரிட்டன் தன் காலனிகள் மீதுள்ள தன் எல்லா அதிகாரத்தையும் தானாகவே கைவிட வேண்டும் என்றும், அவை தங்கள் சொந்த மாஜிஸ்திரேட்களைத் தாங்களே தேர்ந்து கொள்ளவும், தங்கள் சொந்தச் சட்டங்களைத் தாங்களே இயற்றிக் கொள்ளவும், தங்களுக்கு நியாயமாகத் தோன்றும் விதத்தில் சமாதானமோ போரோ செய்யவும் விட்டுவிட வேண்டும் என்றும் கோருவது, உலகத்திலுள்ள எந்த நாடும் எந்தக் காலத்திலும் செய்யாத, எந்தக் காலத்திலும் இனி செய்ய முடியாத ஒரு காரியத்தைச் செய்யும்படி கோருவதாகும். எந்த நாடும் ஒரு பிரதேசத்தின் மீதுள்ள ஆதிக்கத்தை தன்னிச்சையாக ஒருகாலும் கைவிட்டதில்லை.''

—ஆடம் ஸ்மித், 'நாடுகளின் செல்வம்', 1776, பாகம்IV, அத்தியாயம் VII.

ஆண்டுகளோடு பெருமைவளரும் ஒரு வெளியீட்டில்—1906 ஆம் ஆண்டின் சீர்திருத்தக்காரர்களின் ஆண்டுப் புத்தகம்—1905 ஆம் ஆண்டு ரஷ்யாவைப் பற்றி ஒரு பக்கம் ஒதுக்கப்பட்டுள்ளது. நிகழ்ச்சிமிக்க அவ்வாண்டில் நேர்ந்தவை பற்றி எழுதப் பெற்ற 30 வரிகளில் 23 வரிகள் டூமா,[1] அதன் அடிப்படை, அமைப்பு, வாக்காளர் அடிப்படை, அதிகாரங்கள், எதிர்கால நலன் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன. பாதிரி கபோனைப் பற்றிச் சுருக்கமான குறிப்பு இருக்கிறது. மற்றபடி, ''நாட்டு நெருக்கடி, மிகுதியான போலீஸ் மிருகத்தனம் காரணமாகத் தொழிலாளர் சங்கங்களின் தீவிர வளர்ச்சிக்கான ஆண்டாக அது இல்லை. ரஷ்யாவின் ஒவ்வொரு பகுதியிலும் கலவரமும் கலகமும் நடந்துள்ளது'' என்று நமக்குச் சொல்லப்படுகிறது. 1905 ஆம் ஆண்டு ரஷ்யப் புரட்சிக்கு, அக்காலத்தைச் சேர்ந்த ''பிரகாசமான'' மேற்கத்திக் கருத்தாளர்கள் கொடுத்த 'மரியாதை' இவ்வாறுனது.

அதுபோலவே, 1914-18 போருக்குப்பின் சென்ற 30 ஆண்டுகளின் ''இந்தியப் பிரச்னை'' பற்றி பிரிட்டிஷாரின் விவாதத்தின்

1. ரஷ்யப் பார்லிமெண்ட்—மொழிபெயர்ப்பாளர்.

பேரில் வெளியாகியுள்ள ஏராளமான நூல்களில் பத்தில் ஒன்பதைக் கொண்டு அறுதியிடுவதானால், இந்திய மக்களுக்கு ஏகாதிபத்தியம் அவ்வப்போது அடுத்தடுத்து அளித்த ''அரசியல் திட்டங்''களை முதன்மையாகக் கொண்ட பிரச்னையாகக் கருத வேண்டி வரும். பின்புலத்தில், அரசியல் திட்ட பிரச்னைக்கு ஒரு வகைக் காட்சி ஜோடனைபோல், ''கொந்தளிப்பு'' பற்றியும் ''தீவிரவாதிகளின்'' தூண்டுதல்பேரில் மக்களின் விரும்பத்தகாத நடவடிக்கைகள் பற்றியும் மங்கலானதோர் ஓரத்தில் சொல்லி, திரு. காந்தியின் புதிரொத்த குணாதிசயங்கள் பற்றின குறிப்புகள் குறிப்பிடப்பட்டிருக்கும். திரண்டு வரும் இந்தியப் புரட்சியின் ஆழ்ந்த சமூக, அரசியல் பிரச்சினைகள், அரசியல் திட்டச் சொற்களஞ்சியத்தின் வறண்ட பாலைவனத்தில் புதைபட்டுப் போகின்றன; அந்த வரட்டுச் சொற்களஞ்சியத்தினால் சொல்லொண்ணச் சோர்வு கொள்ளும் பிரிட்டிஷ் அரசியல் மக்கள், இந்திய விவகாரங்களில் தங்களுக்குள்ள அக்கறையையும் முற்றிலும் இழந்துவிடுகின்றனர். மனிதசாதியின் ஐந்தில் ஒரு பகுதியினரின் இயக்கம் பற்றின எரியுண்மைகள், வெளிப்படையான போலித்தன்மை வாய்ந்த ''புதிய அரசியல் திட்ட''த்தை மையமாகவும் குவிபுள்ளியாகவும் கொண்ட வருணக் கண்ணாடி வாயிலாக மங்கலாய்ப் பார்க்கப்படுகின்றன.

ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் அதிகாரத்தின் நடைமுறை உறவுகளே அரசியலமைப்பு என்று லஸ்ஸால் ஒருமுறை உரைத்தான். இந்திய ''அரசியல் அமைப்பு'' பிரச்னையைவிட வேறெங்கும் இக் கூற்று தெளிவாக முடியாது.

ஏகாதிபத்தியம் இந்தியாவுக்கு அளித்த பல ''அரசியலமைப்பு''த் திட்டங்கள் அல்லது அரசியல் திட்டங்கள் இந்தியப் பிரச்னையின் தீர்வுகளோ அல்லது தீர்வுக்கான முயற்சிகள்கூட அல்ல. அவை போரின் பல வடிவங்கள், ஏகாதிபத்தியத்துக்கும் தேசீயத்திற்கும் நடக்கும் போரில் ஒன்றன் ஒன்றாக வரும் கட்டங்கள் அல்லது களங்கள். அவை போரின் முக்கியமான கட்டம் கூட அல்ல. போர்—உண்மை; அரசியலமைப்பு—ஆவி.

## 1. ஏகாதிபத்தியமும் சுயாட்சியும்

இந்திய மக்களுக்குச் சுயாட்சிப் பயிற்சி அளிப்பதே பிரிட்டிஷார் இந்தியாவை ஆட்சி புரிவதன் உண்மையான நோக்கம் என்று இன்று அதிகார வர்க்க ஆதரவாளர் வட்டாரங்களில் சில சமயம் பேசப்படுகிறது.

தொடக்க காலத்தில் இந்தியாவின் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் நோக்கம் அது அல்ல. நாட்டு விடுதலை இயக்கத்தின் வலிமை சுயாட்சிப் பிரச்சினையை அரசியல் களத்தில் துருத்தித் தள்ளும் வரையில், அம்மாதிரி ஒரு நிலைமை சாத்தியம் என்பதைப் பிரிட்டிஷ் ஆளும் கட்சியினர் வெறுப்புடன் நிராகரித்தார்கள்.

மிதவாதக் கருத்துள்ளோர் மட்டுமல்ல, லிபரல் (தாராள) கருத்துள்ளோரும் பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் பண்டைக்கால முழுவதும் இவ்விஷயத்தில் ஒத்துப்போனார்கள். 1833 இல் மெக்காலே அறிவித்தார்:

> "இந்தியாவில் பிரதிநிதித்துவ ஆட்சி முறைகளை நீங்கள் வைத்துகொள்ள முடியாது. இந்திய அரசியலைப் பற்றித் தங்கள் யோசனைகளை வெளியிட்ட எண்ணற்ற சிந்தனையாளர்களில், எனக்குத்தெரிந்தவரை ஒருவர்கூட—அவர் எத்தகைய ஜனநாயகவாதியாக இருப்பினும் சரி—இந்தியாவுக்கு இந்த நிகழ்காலத்தில் இத்தகைய ஆட்சி முறைகளைத் தரலாம் என்று கூறியதேயில்லை."
>
> (டி. பி. மெக்காலே, மக்கள் சபையில் சொற்பொழிவு, ஜூலை 10, 1883.)

புகழ்பெற்ற தத்துவார்த்த தாராளவாதக் கொள்கையின் தீர்க்கதரிசியும், பிரதிநிதித்துவ நிறுவனங்களின் ஆதரவாளருமான ஜான் ஸ்டூவர்டுமில்கூட இத்தகு நிறுவனங்களை இந்தியாவுக்கு வழங்க மறுத்தார். மேற்சொன்ன சொற்பொழிவில் மெக்காலே மில்லை மேற்கோள் காட்டினார்:

> "அவர் (மில்) தூய குடியாட்சி சார்பில் வலிமையாக—மிகமிக வலிமையாக என நான் எண்ணுகிறேன்—எழுதியுள்ளார்.... ஆனால் சென்ற ஆண்டு கமிட்டி முன்னிலையில், இந்தியாவில் பொறுப்புள்ள ஆட்சிமுறையைச் செயல்படுத்த முடியுமா என்ற கேள்வி அவரிடம் கேட்கப்பட்டதற்கு, அவருடைய மறுமொழி: "முற்றிலும் கேள்விக்குப் புறம்பானது!" என்பது."
>
> (ஷை சொற்பொழிவு)

கிளாட்ஸ்டனுக்கும் பிரைட்டுக்கும் இடையில் நடந்த ஓர் உரையாடலிலிருந்து, பத்தொன்பதாம் நூற்றாண்டின் தாராளவாதிகள் (லிபரல்கள்) இந்தியப் பிரச்னைகள் பற்றி எவ்வளவு அறியாமையில் மூழ்கியிருந்தனர் என்பதை அறியலாம்.

> "இன்று மாலை பிரைட்டுடன் இந்தியாவைப்பற்றி நீண்டதொரு பேச்சு நடத்தினேன்.... ஒரு மக்களை ஒரு மக்களால்

ஆளுவதிலுள்ள—அதாவது, இந்தியாவைத் தூய நாடாளுமன்ற (பார்லிமெண்டரி) முறையில் ஆட்சி புரிவதிலுள்ள சிரமத்தை அவர் ஒப்புக் கொள்கிறார்.''

(கிளாட்ஸ்டன், 1858, ஏப்ரல் 23 இல் சர் ஜேம்ஸ் கிரஹாமுக்கு எழுதிய கடிதம், ''சர் ஜேம்ஸ் கிரகாமின் வாழ்க்கையும் கடிதங்களும்'', தொகுதி II, பக். 340.)

ஆனால், பத்தொன்பதாம் நூற்றாண்டு தாராளவாதத்தின் இவ்விரண்டு தலைவர்களில் ஒருவருக்குக்கூட (இந்தியாவில் தீய ஆட்சி நடைபெறுவதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்து பிரைட் முக்கியமானதொரு தொண்டு புரிந்தார்) இந்தியமக்கள் தங்களைத் தாங்களே ஆண்டு கொள்ள முடியும் என்ற தீர்வு தோன்றியதன் சுவடு கூடக் காணோம்.

முதல் உலகப்போர் தொடங்கு முன்னர், ஏகாதிபத்தியத்தின் கொள்கை கிரோமர் பிரபுவால் மிக அழுத்தமாக வெளியிடப்பட்டது:

''இத்தகைய நிலைமைகளில் இந்தியாவுக்குச் சுயாட்சி வழங்குவது பற்றிப் பேசுவது, ஒன்றுபட்ட ஐரோப்பாவுக்குச் சுயாட்சி கோருவது போல் இருக்கிறது ....அந்தக் கருத்து அபத்தமானது மட்டுமல்ல; அது நடைமுறைக்கு ஒவ்வாதது மட்டுமல்ல; நான் இன்னும் மேலே போய், இந்தக் கருத்தைக் கொள்வதே நாகரிகத்துக்கு எதிரான குற்றம், குறிப்பாக, நம் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டுள்ள வாயில்லாத கோடிக்கணக்கான மக்களுக்கு எதிரான குற்றம் என்பேன்.''

(கிரோமர் பிரபு, ''பழைய, புதிய ஏகாதிபத்தியம்'', 1910, பக். 123.)

அதே காலத்தைச் சேர்ந்த லிபரல் மார்லி பிரபுவின் கூற்றும் உறுதி குன்றியதாக இல்லை; மார்லி மிண்டோ சீர்திருத்தங்கள் எனப் பெயர் பெற்ற அரசியலமைப்புச் சீர்திருத்தங்களை வெளியிடுகையில், அவை பாராளுமன்ற ஆட்சிமுறை ஆயத்தம் செய்வதாக எந்தப் பொருளிலும் யாரும் கருதிவிடக் கூடாது என்று மிகவும் அழுத்தமாக இருந்தார்:

''சீர்திருத்தங்களின் இந்த அத்தியாயம் நேராகவோ மறைமுகமாகவோ இந்தியாவில் பார்லிமெண்டரி ஆட்சி முறை ஏற்படக் காரணம் ஆகும் என்று சொல்ல முடியு

மானல், எல்லாருக்கும் முன் நான் அதனுடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ள மாட்டேன்.''

(மார்லிபிரபு, பிரபுக்கள் சபையில் ஆற்றிய சொற்பொழிவு, டிசம்பர் 17, 1908.)

1917 வரை இந்தியாவைப் பற்றின ஏகாதிபத்தியத்தின் கொள்கை இவ்வாறு ஒரே விதமாக இருந்தது. 1917 முதல் பேச்சுத் தோரணையில் திடீர் மாறுதல் ஏற்பட்டுள்ளது என்றால், ''நாகரிகத்துக்கு எதிரான குற்றம்'' இன்று பெயரளவில் அறிவிக்கப்பட்டுள்ள கொள்கை ஆகியுள்ளது என்றால், கொள்கையில்-அல்லது, வெளியில் சொல்லப்படுகிற கொள்கையில் நேர்ந்துள்ள திடீர் திருப்பம் தொடக்க கால நோக்கங்களின் விளைவாக இருக்க முடியாது, வெளி நிகழ்ச்சிகளின் கடும்மோதலின் விளைவாகத்தான் இருக்க முடியும் என்பது வெளிப்படை.

எந்த அளவுக்கு உண்மையான மாறுதல் இப்போது நேர்ந்துள்ளது?

அல்லது, பிரிட்டிஷ் ஆதிக்கம் தொடர்ந்து நீடிக்க வேண்டும் என்ற அடிப்படை நோக்கத்தை எவ்விதத்திலும் கைவிடாமல் இன்னும் இறுகப் பற்றிக் கொண்டு, அதற்காகச் சூழ்நிலைகளின் நிர்ப்பந்தத்திற்கு இசைய, அடிப்படையான அரசியல் சூழ்ச்சியாக, 1917 முதல் கொள்கையிலும் கண்ணோட்டத்திலும் தோற்றம் தரும் மாறுதல் எந்த அளவுக்குக் கையாளப்படுகிறது?

இப்போது முக்கியமாக ஆராயவேண்டிய கேள்வி இதுதான்.

## 2. 1917க்கு முந்தைய சீர்திருத்தக் கொள்கை

போர் வரை, ஏகாதிபத்திய நிர்வாக யந்திரத்தில் இந்தியர்களை மேன்மேலும் இழுத்தும் முறையை விரிவாக்குவதே ஏகாதிபத்தியத்தின் அறிவிக்கப்பட்ட நோக்கமாக இருந்தது. எந்த ஏகாதிபத்திய ஆட்சி முறையும் வெற்றிகரமாய் இயங்குவதற்கு இன்றியமையாத (இந்தியாவில் அரசாங்க ஊழியத்தில் உள்ள 15 லட்சம் பேர்களில் ஒரு சிறு பகுதியினருக்குமேல் ஆங்கிலேயர்களாக இருக்க முடியாது) இந்த நோக்கம் ஒருபடித்தாக அறிவிக்கப்பட்டு, முக்கியமான இயக்கு நிலைகளின்மீது தங்கள் பிடியை நிலையாக வைத்துக் கொள்ளும் ஜாக்கிரதையுடன், ஒரு நூற்றாண்டுக் காலமாகப் பின்பற்றப்பட்டு வந்தது. இந்த நோக்கம் அதற்கு நேர் எதிரான சுயாட்சி நோக்கத்துடன் குழப்பப்படக் கூடாது: இந்தச் சுயாட்சி நோக்கம் 1917 வரை ஒருபடித்தாக நிராகரிக்கப்பட்டே வந்தது. இரண்டு நோக்கங்களையும் குழப்பிக்

கொண்டு, பொறுப்புள்ள ஆட்சி அமைக்கும் குறிக்கோளே நோக்கி படிப்படியாக முன்னேறுவதாய் ஒரு தவருன கருத்து அடிக்கடி எழுகிறது.

1833 ஆம் ஆண்டு உரிமைப்பட்டயம் உரைக்கிறது:

''சமயம், பிறந்த இடம், பரம்பரை, நிறம் ஆகியவை காரணமாகவோ அல்லது அவற்றில் ஒன்று காரணமாகவோ மட்டும், குறிப்பிடப்பட்ட அரசாங்கத்தின் கீழ் எந்த இந்தியரும் பொறுப்பு, பதவி, அல்லது ஏதாவது ஊழியம் செய்வதினின்றும் தகுதியற்றவர்கள் ஆக்கப்பட மாட்டார்.''

இந்தப் பிரிவுக்குத் தங்கள் பொருளே இயக்குநர்கள் வாரியம் பின்வருமாறு உரைத்தது:

''பிரிட்டிஷ் இந்தியாவில் ஆட்சி புரியும் ஜாதி எதுவும் இருக்கக்கூடாது என்றும், தகுதியை அறுதியிட வேறு எவ்வகைச் சோதனேகள் கையாளப்பட்டாலும், இனம் அல்லது மதப் பாகுபாடு செய்வதை அவ்வகையில் சேர்க்கக் கூடாது என்றும் இப்பிரிவு பொருள் படுவதாய் வாரியம் கருதுகிறது.''

ஒரு புதிய கொள்கையின் தொடக்கப்புள்ளியாகப் பொதுவாய்க் கூறப்படும் 1858 ஆம் ஆண்டின் மகாராணியின் அறிக்கை உண்மையில் மேற்கண்ட கருத்தையே பெருக்கிச் சொல்கிறது:

''எந்த இனம் அல்லது மதத்தைச் சேர்ந்தவர்களாயினும் நம் குடி மக்கள்-முடிந்தவரை-தாராளமாகவும் பட்சபாதம் இல்லாமலும் நம் ஊழியத்தில் பொறுப்பு ஏற்க அனுமதிக்கப்படவேண்டும் என்பது நம்விருப்பம்; அக்கடமைகளேயாற்ற தங்கள் கல்வியாலும், திறமையாலும், நேர்மையாலும் அதற்கான தகுதியை அவர்கள் பெறலாம்.''

முழு சமத்துவமும், ஆளுவோர்-ஆளப்படுவோர் என்ற பாகுபாடு ஒழிப்பும் செய்வதாய் இந்திய மக்களுக்கு அளிக்கப்பட்ட இந்த வாக்குறுதிகள் அல்லது ஆணேகள் எந்தப் பொருளில் அவை அளிக்கப்படுவதாய்த் தோன்றுகிறதோ, அந்த விரிவான பொருளில் நிறைவேற்றப்படும் நோக்கத்தோடு அளிக்கப்படவில்லே என்பது மெய். எனவேதான், 1876-80இல் வைசிராயாக இருந்த லிட்டன் பிரபு, ராஜ்யக் காரியதரிசியாக இருந்த கிரான்புரூக் பிரபுவுக்கு எழுதிய ஒரு ''ரகசிய''க் கடிதத்தில், ''செவிக்கு அவர்கள் சொன்ன உறுதிவாக்குகளே உள்ளத்தால் உடைத்தார்கள்'' என்ற புகழ்பெற்ற வரிகளே எழுதினுர்:

''இந்தக் கோரிக்கைகளும் விழைவுகளும் ஒருகாலும் நிறைவேற்றப்பட முடியாது, மாட்டாது என்பதை நாம் அனைவரும் அறிவோம். நாம் அவர்களை விலக்க வேண்டும் அல்லது மோசம் செய்ய வேண்டும், இரண்டில் ஒன்றைச் செய்ய வேண்டியிருந்தது, நாம் குறைந்த அளவு நேர்மை யான பாதையைத் தேர்ந்தோம்....இதை நான் ரகசியமாக எழுதுகிறேன், இங்கிலாந்து அரசும் இந்திய அரசும் தங்கள் சக்தியால் இயன்ற எல்லா வழிகளிலும் செவிக்கு அவர்கள் சொன்ன உறுதிவாக்குகளை உள்ளத்தால் உடைத்தார்கள் (மீறினார்கள்) என்ற குற்றச்சாட்டுக்கு இந்த விநாடி வரை திருப்திகரமாய் மறுமொழி கூறமுடியவில்லை என்பதைக் கூற நான் தயங்கமாட்டேன்.''

சாலிஸ்பரி பிரபு அடித்துப் பேசுகிற தம் பாணியில், இந்தியாவுக்கு அளிக்கப்பட்ட பிரிட்டிஷ் வாக்குறுதிகள் ''அரசியல் பாசாங்கு'' என்றார் (இந்தக் காலத்து பால்டுவின்களிடமும், லாயிட் ஜார்ஜுகளிடமும், மாக்டொனல்டுகளிடமும், சேம்பர்லின்களிட மும் சாலிஸ்பரி பிரபு என்ன கூற விரும்பியிருப்பார் என்ற கற்பனை சுவாரசியமாக இருக்கும்).

கழிந்து போன ஒரு சகாப்தத்தில் அளிக்கப்பட்ட இந்த வாக் குறுதிகளும் அறிக்கைகளும் தவறான பொருள் தரும் வண்ணம் பல் வண்ண ஜால வடிவத்தில் வெளியிடப்பட்டதன் உண்மையான நோக்கம் (ஆயினும் இன்றைக்கு ஒரு படிப்பினை-ஏனெனில் அதற்கு இணையான செயல் முறையில் நாமும் ஒருபடி முன்னேறி யுள்ளோம்), மக்களை அடிமைத்தனத்தில் இறுக்கமாய்ப் பிடித்து வைத்துக் கொள்ள உதவிபுரியக் கூடிய, பயிற்சி பெற்ற மேல் வகுப்பு, நடுத்தர வகுப்பு இந்தியர்களில் ஓர் அடுக்கின் ஆதரவைப் பெறுவதற்காக, ஜாக்கிரதையாக அடக்குண்டு கீழ்படியும் குணம் பெற்ற இந்தியர்களின் ஒரு கூட்டத்தை ஏகாதிபத்திய நிர்வாக யந்திரத்தோடு படிப்படியாகவும் மேன்மேலும் இணைத்துக் கொள்ள வேண்டும் என்பதுதான்.

இந்த நோக்கத்துக்கு இணங்க, குடிமுறைப் பணிகளில் இந்தி யர்கள் வகிக்கும் பதவிகளின் (ஆனால், முக்கியமான பெரும் பதவிகளில் ஒருகாலும் இல்லை) எண்ணிக்கையை ஜாக்கிரதையாக ஒரு பக்கம் உயர்த்திக் கொண்டே செல்லுகையில், 1861க்கு அப்பால் தொடர்ச்சியாகப் பல சீர்திருத்த முயற்சிகள் செய்யப் பட்டன.

1861 இல், இந்தியச் சட்டமன்றச் சட்டம், வைசிராயின் சட்ட மன்றத்தில் உத்தியோக வர்க்கத்தைச் சேராத ஆறு நியமன

உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்ள வழிவகுத்தது; இந்த நியமன உறுப்பினர்களில் சிலர் ஐ ாக்கிரதையாகப் பொறுக்கப்பட்ட இந்தியர்கள். பின்னர் வந்த ஒவ்வொரு சீர்த்திருத்தச் சட்டத்தையும் போல, ''சீர்திருத்தத்திற்கு''த் துணையாக ஒரு புதிய அடக்கு முறை ஆயுதமும் வந்ததைக் கவனிக்க வேண்டும்; ஆறுமாத காலம் சட்ட பலத்தோடு செயல்படக்கூடிய அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கும் அதிகாரம் வைசிராய்க்கு வழங்கப்பட்டது—இந்த அதிகாரம் இக் காலத்தில் தாராளமாய்ப் பயன்படுத்தப்படுகிறது.

1883-84 இல் உள்ளூர் சுயாட்சிச் சட்டம், நகராட்சி முறையில் தேர்தல் கொள்கையைப் புகுத்தி, கிராம வாரியங்களை யும் மாவட்ட மன்றங்களையும் ஏற்படுத்தியது.

1892இல் இந்தியச் சட்டமன்றங்கள் சட்டம் சில மறைமுக மாய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களை (நடைமுறையில் தேர்ந்தெடுக்கப்படுவதில்லை; உள்ளூர் அரசாலும் மற்ற நிர்வாக நிறுவனங்களாலும் சிபாரிசு செய்யப்படும்—மேல் இருப்போர் இசைவுக்காக) மாகாணச் சட்ட மன்றங்களுக்கும், அவற்றின் வாயிலாக மேலும் மறைமுகமான நிலையில் வைசிராயின் சட்ட மன்றத்திற்கும் சேர்த்தது.

1909 இல் இந்தியச் சட்டமன்றங்கள் சட்டம்—மார்லி-மிண்டோ சீர்திருத்தங்கள் என்ற பெயரில் பிரபலமானது—மாகாணச் சட்ட மன்றங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட பெரும்பான்மையை (ஒரு பகுதியினர் மறைமுகமாகவும், ஒரு பகுதியினர் நேர்முகமாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டோர்)யும், வைசிராயின் சட்ட மன்றத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுபான்மையையும் (நிலக்கிழார்கள், முஸ்லீம்களின் இடங்களைத் தவிர மற்றவை மறைமுகத் தேர்தல் மூலம்) புகுத்தியது. நிர்வாகத்தின் மீதும் நிதி மீதும் யாதொரு அதிகாரமும் இல்லாமல், இம்மன்றங்களின் பணி மிகவும் கட்டுப்படுத்தப்பட்டது; அவர்கள் இயற்றும் சட்டங்கள் இசைவு பெறாவிட்டால் ரத்து செய்யப்படலாம்; வாக்குரிமை மிகக் குறுகலானது; தேர்ந்தெடுக்கும் நிறுவனங்களை பெருக்கும் முறை ஏற்கனவே அமலில் இருந்தது, அத்தோடு தனி வாக்காளர் தொகுதி முறை சேர்க்கப்பட்டது.

விரிந்து பரந்த தேசிய இயக்கத்திற்கும் சுயாட்சிக் கோரிக்கைக்கும் இடையிலும், அவற்றின் விளைவாகவும் முதன் முதலில் வழங்கப் பட்ட மார்லி-மிண்டோ சீர்த்திருத்தங்கள், அந்தக் கிளர்ச்சியை முறியடிக்கவும்—மார்லியின் சொற்களில்—மிதவாதிகளைத் திரட்டுவதற்குமான உறுதியான அரசியல் நோக்கம் வாய்ந்தவை. 1905 இல் துவக்கப்பட்ட பகிஷ்கார, சுதேசிப்

போராட்டத்தின் போது தேசீய இயக்கத்தில் ஏற்பட்ட பேரெழுச்சியையும், மற்ெருரு கீழைநாட்டு மாபெரும் கொடுங்கோன்மையான ஜாரின் ஆட்சியைக் குலுக்கிய, 1905 இல் நடந்த ரஷியப் புரட்சியையும் தொடர்ந்து, 1906 இல் முதன் முதலில் சீர்திருத்தங்கள் வெளியிடப்பட்டன. ஒரு நவயுக உதயம் எனப் பலமாய்ப் பறை கொட்டி இந்தச் சிறிய சீர்திருத்தங்கள் இந் நிலையில் அறிவிக்கப்பட்டன. பின்னர் வெளியான மாண்டேகு-செம்ஸ் போர்டு அறிக்கையின் (அதுவும் இதே செயல் முறையை மேலும் பரவலானமுறையில் மீண்டும் செய்வதாக இருந்தது) சாரமற்ற சொற்களில், ''அக்கணத்து ஆவேசம் காரணமாகத் தங்களுக்காக மிகவும் மிகுதியான உரிமை பாராட்டப்பட்டது.... இந்த மிகு நம்பிக்கையான விழைவுகள் அற்ப ஆயுள் வாய்ந்தனவாயின.''

சுயாட்சி இயக்கத்தை தம் சீர்திருத்தங்களால் முறியடிக்க மார்லி பிரபு திட்டமிடுகிருர் என்பது வெளிப்படையாகவே பேசப்பட்டது. பின்காணும் அறிவுறுத்தும் சொற்களில் அவர் நிலைமையை ஆராய்ந்தார்:

''இவ்விதத் திட்டம் ஒன்றைக் கையாளுகையில் நாம் பொருட்படுத்த வேண்டிய மூவகை மனிதர்கள் இருக்கிருர்கள். என்ருவது ஒருநாள் நம்மை இந்தியாவை விட்டு வெருட்டி விடலாம் என விந்தைக் கனவு காணும் தீவிரவாதிகள்....இரண்டாவது கோஷ்டியினருக்கு இவ்விதமான நம்பிக்கைகள் ஏதும் கிடையாது; ஆனல், காலனி வகையிலும் பாணியிலும் தன்னுட்சி அல்லது சொந்த அரசு எதிர்பார்க்கிருர்கள். இத்தலைப்பில் மூன்ரும் பிரிவினர் நம் ஆட்சியோடு ஒத்துழைப்பு செய்வதற்கு அனுமதிக்கப்படுவதற்குமேல் வேெருன்றையும் எதிர்பாராதவர்கள்.

''காலனி முறை தன்னுட்சியை எதிர்பார்க்கும் இரண்டாம் பிரிவினரை, நேர்மையான முழு ஒத்துழைப்பு அளிக்க வாய்ப்பு தரப்பட்டால் அமைதி பெறக் கூடிய மூன்ரும் பிரிவினருக்குள் இழுப்பதே சீர்திருத்தங்களின் பயனுக இருந்துள்ளது, இருக்கிறது, இருக்கப் போகிறது என நான் நம்புகிறேன்.''

(வைகவுன்ட் மார்லி, பிரபுக்கள் சபைச் சொற்பொழிவு, பிப்ரவரி 23, 1909.)

எனவே, அரசியல் சீர்திருத்தங்கள் பாதையில், ''நம் ஆட்சியோடு ஒத்துழைப்பு''— இதுதான் சுயாட்சி கோரும் நாட்டு நோக்

கத்தை முறியடிக்க ஏகாதிபத்தியம் பொறுக்கி எடுத்த செயல் முறை.

''சுயாட்சிக்கான ஒரு படி'' யாகச் சீர் திருத்தங்களை வழங்கும் இச் சமயத்தில் பிரச்னை எழவே இல்லை. ''நேராகவோ மறை முகமாகவோ பார்லிமெண்டரி ஆட்சி முறையை இந்தியாவில் புகுத்த'' சீர்த்திருத்தங்கள் முயலுவதாக யாரும் கருதி விடக் கூடாது என்பதை மார்லி பிரபு மிகத் தெளிவுபடுத்தியதை முன்பே பார்த்து விட்டோம். அது போன்றே மார்லி பிரபு, மிண்டோ பிரபுவுக்கு எழுதுகையில், ''அப்போதோ எதிர்காலத்திலோ இந்தியாவில் பொறுப்பாட்சி காணும் வகையில் முன்னேறும் பிரச்னைக்கே இடமில்லை'' என்ற பின்னவரின் விருப்பத்தை ஏற்றும் வலியுறுத்தியும் பேசுகிறார்.

> மேன்மை தங்கிய தங்களுடைய அரசாங்கம், இந்தியாவுக்கு மேனாட்டுப் பொருளில் பொறுப்பாட்சி வழங்குவதை ஆதரிக்கிறது என்பதை எதிர்பார்க்கப்பட்டது போலவே மறுத்திருக்கிறீர்கள். ஐரோப்பாவில் பொறுப்பாட்சி முறையின் சக்தி வாய்ந்த ஆதரவாளர்களில் சிலர்—மேன்மை தங்கிய தங்களுடைய சொற்களில்—'' இந்திய சாம்ராஜ்யத்தின் மக்கட் தொகையில் அடங்கியுள்ள பல இனங்களின் இயல்புக்கு அது ஒத்துவராது,'' என்பதைத் தங்கள் சொந்த இந்திய அனுபவங்களில் இருந்து கற்றும் கற்பிக்கப்பட்டும் இருக்கிறார்கள்....பொறுப்பாட்சி முறையின் ஐரோப்பிய வடிவம் எதனையும் இந்திய மண்ணில் நாற்று நடவு செய்யும் நோக்கமோ விருப்பமோ இருப்பதாய்ச் சொல்லப்படுவதை நிராகரிப்பதுடன் மேன்மை தங்கிய தாங்கள் இப்போதுள்ள யந்திரத்தைச் செம்மைப்படுத்த முயலுகிறீர்கள் அல்லது 'தங்கள் நாட்டு அரசாங்கத்தில் பங்குகொள்ளப் படித்த மனிதர்கள் இயற்கையாக விழைவதை ஏற்கிற' புதிய வடிவத்தைக் காண முயலுகிறீர்கள். தங்களுடைய இந்தத் திட்டத்திற்கு மாட்சிமை தங்கிய மன்னர் பிரான் அரசின் உள்ளன்புடன் கூடிய இசைவு உண்டு என்பதை நான் கூற வேண்டியதில்லை.

எந்தக் காலத்தில் எந்தத் திட்டம் வகுக்கப்பட்டாலும் அது, முழு இறைமை வாய்ந்த சக்தியின் வலிமை பேரிலும் நிலையுண்மை பேரில் என்ன விளைவு உண்டாகும் என்பதே, இந்தியக் கொள்கையை வழிநடத்திச் செல்வதில் பங்கு கொள்வோர் அனைவரும்—அவர்கள் ஒயிட்ஹாலில் இருப்போராயினும் சரி, கல்கத்தாவில் இருப்போராயினும் சரி—

கவனிக்க வேண்டிய ஒரு முக்கியமான அளவுகோலும் சோதனையும் ஆகும்.''

(மார்லி பிரபு, மிண்டோ பிரபுவுக்கு, மாண்டேகு-செம்ஸ் போர்டு அறிக்கையில் மேற்கோளாய்க் காட்டப் பெற்றது, பக். 64.)

இந்த எல்லை வரை, ஏகாதிபத்தியத்தின் கொள்கை தெளிவாகவும், தவறாக நினைக்க முடியாத வகையிலும் இருக்கிறது. சுயாட்சி நோக்கி முன்னேறும் பிரச்னையே இல்லை. முழு இறைமை வாய்ந்த சக்தியின் நலன்களே இறுதியானவை. ஏகாதிபத்தியத்தின் நலன்களுக்காக மேல் வகுப்புச் சிறுபான்மையினரின் ஆதரவைப் பெறுவதே அரசியல் அமைப்புச் சீர்திருத்தங்களின் நோக்கம்.

## 3. குடியேற்ற நாட்டு அந்தஸ்துப் பிரச்னை

பிறகு வந்தது 1914-18 போர், ஏகாதிபத்தியத்தின் அஸ்திவாரத்தில் ஆட்டம், இந்தியாவின் விழிப்பு, அது போலவே எல்லா காலனி மக்களின் விழிப்பு, ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையும் 1916 ஆம் ஆண்டு காங்கிரஸ்-லீக் சுயாட்சித் திட்டம், 1917 மார்ச்சின் ரஷியப் புரட்சி, அதன் வாயிலாக எல்லா நாடுகளிலும் மக்கள் முன்னேற்ற அலையும் உலகம் எங்கும் தேசிய சுய நிர்ணய உரிமை முழக்கம் எழுதல்.

1917, ஆகஸ்டு 20 ஆம் நாள் ஒரு புதிய கொள்கை அறிவிப்பு வாயிலாக நிலைமையைச் சமாளிக்கப் பிரிட்டிஷ் அரசு முனைந்தது; இந்த அறிவிப்பு ஏகாதிபத்தியத்தின் அரசியல் அமைப்புத் திட்டக் கொள்கையின் அடிக்கல்லாக இப்போது மதிக்கப்படுகிறது. இந்த அறிவிப்பின் முக்கியமான பகுதிகள் வருமாறு:

''பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் அமைந்த பகுதியாக இந்தியாவில் பொறுப்பாட்சி முறையை முன்னேற்றகரமாக உருவாக்கும் நோக்குடன் சுயாட்சி நிறுவனங்களைப் படிப்படியாக வளர்ப்பதும், ஆட்சி முறையின் ஒவ்வொரு கிளையிலும் இந்தியர்களுக்குள்ள தொடர்பை மிகுதி ஆக்குவதுமே, இந்திய அரசின் முழு இசைவையும் பெற்றுள்ள, மன்னர் பிரான் அரசின் கொள்கையாம். இத்திசையில் உருப்படியான முயற்சிகள் எடுக்கப்பட வேண்டும் என அவர்கள் தீர்மானித்துள்ளனர் . . . . படிப்படியான நிலைகளில்தான் இத் திட்டத்தின் வெற்றியைச் சாதிக்க முடியும். பிரிட்டிஷ் அரசாங்கமும், இந்திய மக்களின் நலத்துக்கும் முன்னேற்றத் துக்குமுரிய பொறுப்புள்ள இந்திய அரசாங்கமும் ஒவ்வொரு

முன்னேற்றத்தின் காலத்தையும் அளவையும் பற்றின தீர்ப் பாளர்களாக இருப்பர்; இவ்வாறு ஊழியத்தின் நல்வாய்ப் புகள் யாருக்கு வழங்கப்படுகிறதோ அவர்களிடமிருந்து கிடைக்கும் ஒத்துழைப்பும் அவர்களுடைய பொறுப்புணர்ச்சி யில் எந்த அளவு நம்பிக்கை வைக்க முடியும் எனத் தோன்று கிறதோ அந்த அளவும் அவர்களுக்கு வழி காட்டும்.''

ராஜ்யக் காரியதரிசியாக இருந்த ஈ. எஸ். மாண்டேகு வாயிலாக வெளியிடப்பட்டதால் இதற்கு மாண்டேகு அறிக்கை எனப் பெயரிடப்பட்டு அப்பெயரால் பொதுவாக அறியப்படுகிறது. அதை எழுதித் தயாரித்தவர்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் அநுபவமிக்க கொடாக் கண்டர்களான கர்ஸனும், ஆஸ்டன் சேம்பர்லினும் ஆவர். கர்ஸன் பிரபு இந்த ஆவணத்தில் ''பொறுப்பாட்சி முறை''க் குறிப்பை எழுதினர் (ரொனல்டுஷே, ''கர்ஸனின் வாழ்க்கை'', தொகுதி III, பக். 167). 1905 இல் இந்தியாவிலே விட்டுப் புறப்படுகையில் கர்ஸன் பிரபு தம் பிரிவுப் பேச்சில், ''இந்திய அரசாங்கத் தலைவராக—முழுமையான பொருளில்—வைசிராய் ஒருகாலும் இல்லாதிருக்கமாட்டார் என நான் மெய்யாக நம்புகிறேன்'' என்று குறிப்பிட்டதை நினைவுபடுத்திக் கொள்ளலாம்.

அறிக்கை வெளியிடப்பட்ட பின்புதான், எந்த நோக்கத் துக்காக வெளியிடப்பட்டது என்பதைக் கண்டுபிடிப்பதற்காக விரிவான நீண்ட செயல்முறையுள்ளதொரு அரசாங்க ஆய்வு மேற்கொள்ளப்பட்டதிலிருந்து, இந்த அறிக்கை எவ்வளவு அவசர கோலமாக வெளியிடப்பட்டது என்பதை அறியலாம். இறுதி யாக 1919 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டமாய் அது விளைந்தது.

தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளும் குடியேற்ற நாடுகள் என்ற அதே பொருளில் குடியேற்ற நாட்டு அந்தஸ்து (இந்தச் சொற்கள் அறிக்கையில் இல்லை) என்பதைக் குறிக்கும் நோக்கம் இருப்பதாய் அறிக்கை பொருள்படுமா, பொருள்படும் என்றால் எந்த ஒரு கால அளவிலாவது அந்த லட்சியத்தை அடையலாம் என்பதைக் குறிக்கும் நோக்கம் அதற்கு இருக்கிறதா என்ப தெல்லாம் விவாதத்துக்குரிய பொருளாகவே இருக்கிறது.

பிரிட்டிஷ் ஆளும் வர்க்கத்தினரே ''ஒவ்வொரு முன்னேற் றத்தின் காலத்துக்கும் அளவுக்கும் தீர்ப்பாளர்களாக இருக்கும்.'' ''நிலை''களின் கற்பனைதான் கொள்கையின் திறவுகோல். முதல் நிலையை அடையவே இரண்டு ஆண்டுகள் ஆயின. இரண்டாவது நிலைமையைப் பார்க்க, இது மின்னல் வேகம். அடுத்த புதிய

நிலைக்கு முன்னேறுமுன் அவ்வப்போது, பத்தாண்டு இடைவெளியில், பரிசீலனை செய்யவும் திருத்தம் செய்யவும் மாண்டேகு-செம்ஸ் போர்டு அறிக்கை யோசித்தது. ஆயினும், இரண்டாவது நிலையை எட்டப் பதினாறு ஆண்டுகள் ஆயின—ஏழாண்டுகள் விரிவான ஆய்வு நடத்தி 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் வெளிவந்தது. பத்தாண்டு இடைக்காலம் மிகவும் குறுகியதாகையால் அதைக் கைவிடுமாறு சைமன் அறிக்கை சிபாரிசு செய்தது: ''புதிய 'முறை'யால் ஆட்சி முறையில் எத்தகைய பயன் ஏற்பட்டுள்ளது என்பதைக் காண பத்து ஆண்டுகள் போதுமான நீண்ட காலமல்ல''—(சைமன் அறிக்கை, தொகுதி II, பக். 7.)

1924 இல் பிரதம மந்திரியாக மாக்டொனல்டு, இந்தியாவில் புதிய ஏகாதிபத்தியக் கொள்கையின் வளர்ச்சிமுறைத் தத்துவத்தையும் எச்சரிக்கையான படிப்படி முன்னேற்றத் தத்துவத்தையும் வியக்கத்தக்க முறையில் கிரகித்துக் கொண்டு (ஆனால், வங்காள அவசர கால அவசரச் சட்டங்களைப் பிறப்பித்து, விசாரணை இல்லாமல் சிறையில் அடைக்கும் முறையை அதே சமயத்தில் அவர் அமுலுக்குக் கொண்டு வந்தார்; இம் மாதிரி நடைமுறைச் சட்டங்களைச் செய்யும்போது அவர் அவ்வளவாக வளர்ச்சிமுறை, படிப்படி முறைத் தத்துவங்களைக் கைக்கொள்வதில்லை) அந்த ஆண்டு ஏப்ரலில் யார்க்கில் ஆற்றிய ஒரு சொற்பொழிவில் இந்தியாவுக்கு வேண்டுகோள் விடுத்தார்:

> ''பிரிட்டிஷ் ஜனநாயகத்தில் நம்பிக்கை வைத்திடுங்கள், தொழிலாளர் கட்சியின்பால் நிச்சயமாக நம்பிக்கை வைத்திடுங்கள். இந்திய அரசினால் ஓர் ஆய்வு நடத்தப்படுகிறது; அந்த ஆய்வினால் பயன்கள் விளையும், இந்திய அரசியல் அமைப்பு, அதன் நடைமுறை, அதன் சாத்தியக் கூறுகள் ஆகியவை பற்றிப் பரிசீலனை செய்வதற்கு அப் பயன்கள் அடிப்படையாக அமையும், சுயாட்சி என்னும் ஆட்சிமுறையின் தோற்றத்தை நோக்கிச் செல்லும் பிரயாணத்தில், வழியில், அவை இந்தியர்களுக்கு உதவும்.''

இந்த நிகழ்ச்சி நிரலும் வாக்குறுதியும் அவ்வண்ணமே சற்றும் பிசகாது நடந்திடும் என்ற நம்பிக்கை ததும்பிடும் இச் சொற்களில், இந்தியா பற்றின நவீன ஏகாதிபத்தியக் கொள்கையின் சாரம் பின்பற்ற முடியாத நடை—இந்த நடையில் விசித்திரமாகத் தேர்ந்தவர் மாக்டொனல்டு—படைத்த புராண வடிவில் நிறைந்துள்ளது.

புதிய கொள்கையைச் செயல்படுத்த இதுவரை இரண்டு சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன.

முதலாவது, 1919 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் இரட்டை ஆட்சிமுறை என்னும் முறையை ஏற்படுத்தியது. மைய அரசில் யாதொரு மாறுதலும் செய்யப்படவில்லை; ஆனால், மாகாண அரசுகளில் சில இனங்கள், உடல் நலம், கல்வி போன்ற நிதியற்ற ஆக்க இனங்கள் மாகாணச் சட்டமன்றங்களுக்குப் பொறுப்பான இந்திய மந்திரிகளுக்கு ''மாற்றப்பட்டது''; மற்ற முக்கியமான போலீஸ், நிலவரி போன்ற இனங்கள் கவர்னருக்குப் பொறுப்பான அமைச்சர்களின் கையில்''ஒதுக்கீடு'' செய்யப்பட்டன. மாகாணச் சட்ட மன்றங்கள், மக்கட் தொகையில் (பர்மா நீங்கலாக) 2·8 சதவீதத்தினருக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கும் வண்ணம் சொத்துடையோருக்கு மட்டும் வாக்குரிமை கட்டுப் படுத்தப்பட்ட தேர்தல் வாயிலாக வந்த உறுப்பினர்கள் பெரும் பான்மையாக இருக்குமாறு அமைக்கப்பட்டன. நிறைவேற்றப் பட்ட சட்டங்களை ''நிராகரிக்கவும்'', சட்டமன்றங்களால் ஏற்கப் படாத சட்டங்களை ஏற்பதாய்ச் ''சான்றளிக்கவும்''—இருவித அதிகாரங்களும் மாகாண கவர்னர்களுக்கு உண்டு. மையத்தில் இரண்டு அவைகள் அமைக்கப்பட்டன; ஒரு ராஜ்யக் கவுன்சில், அதில் ஏறக்குறையப் பாதிப்பேர் நியமன உறுப்பினர்கள், மற்ற வர்கள் மிகக் குறுகலான உயர் வட்டாரங்களிலிருந்து தேர்ந் தெடுக்கப்பட்டவர்கள் (நாடு முழுமைக்கும் 18,000 க்கும் குறைவான வாக்காளர்களே); ஒரு சட்ட சபை, மாகாணங்களில் உள்ளதைவிட மிகவும் கட்டுப்படுத்தப்பட்ட வாக்குரிமை அடிப் படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட பெரும்பான்மையுடன் (மக்கட் தொகையில் அரை சதவீதத்திற்கும் குறைவு.) சட்டங்களை நிரா கரிக்கவோ ஏற்கவோ கவர்னர் ஜெனரலுக்கு எல்லையற்ற மேலதி காரம் உண்டு.

இரட்டை ஆட்சிமுறை எங்கும் கண்டனம் செய்யப்பட்டது; இந்திய வட்டாரங்களில் மட்டும் அல்ல, சிலஆண்டுகளின் அநுபவத் திற்குப் பிறகு ஆளும் ஏகாதிபத்திய வட்டாரங்களிலும் கண்டனம் எழுந்தது; அதன் பளிச்செனத் தெரியும் பலவீனங்களை ஆய்வது, இந் நூலின் நோக்கங்களுக்குப் புறம்பானது. 1925 இல் இந்தியா ராஜ்யக் காரியதரிசி, ''ஆங்கிலோ சாக்சன் வகுப்பினர் பொது வாய் உவக்காத, ஒருவகைப் புலமையைக் காட்டும், தோலட்டை யிடப்பட்ட அரசியல் திட்டம்—தங்களுடைய அரசியல் கருத்துக் களைப் பெரிதும் ஆங்கிலோ—சாக்சன் முன் மாதிரிகளிலிருந்து உரு வாக்கிக் கொண்ட ஒரு வகுப்பினரை அது வெற்றிகரமாய்க் கவர்ச்சிக்கும் என்று சொல்வதற்கில்லை'' என்று வருணித்தார் (பர்கென்ஹெட் பிரபு, பிரபுக்கள் சபையில், ஜூலை 7, 1925). இந்திய அமைச்சர்களுக்குப் 'பொறுப்பு' என்பது நிச்சயமான ஒரு கேலிக் கூத்து. இந்த முறையின் கீழ், இந்திய அமைச்சர்கள்

நடைமுறையில் ''பெரிதும் அதிகார வர்க்க ஆதரவையே நம்பியிருக்க வேண்டியிருந்தது'', ''அரசாங்க ஆட்கள்'' என மதிக்கப்பட்டனர் என்று இந்த ஆட்சிமுறையின் குறைபாடுகளை கடுமையாக வெளிப்படுத்தியது சைமன் அறிக்கை. ''அரசை ஒருமைப்படுத்தும், பெரும்பாலும் தடுக்கவொண்ணாத உணர்ச்சி.'' பொறுப்பைப் பிரிவினை செய்யும் ஏட்டுத் திட்டங்களை முறியடித்தது. ஏகாதிபத்தியத்தின் அரசியல் திட்டம் வகுக்கும் பணியில், அடுத்தடுத்து வந்த நிலைகளில், பின்நிலையைச் சேர்ந்தவர்கள் தங்களுக்கு முன்னால் திட்டம் வகுத்தவர்களின் பாசாங்கை சற்றும் பட்சபாதம் இல்லாத நியாயத்துடன் வெளிப்படுத்தியதை விடக் குறிப்பிடத்தக்கதாய் ஏதும் இருக்க முடியாது. மார்லி-மிண்டோ சீர்திருத்தங்கள் பிரமையாகப் பெருமை பாராட்டிக் கொண்டதை மாண்டேகு-செம்ஸ் போர்டு அறிக்கை இரக்கமின்றி விளாசியது. மாண்டேகு-செம்ஸ் போர்டு சீர்திருத்தங்களின் குறைகளையும் தோல்வியையும் சுட்டிக்காட்டுவதில் அதுபோலவே சைமன் அறிக்கை இரக்கம் காட்டவில்லை. ஆயினும், இப்போதைய அரசியல் திட்டம் வழக்கம்போல் குறையற்றது என்று கருதப்படுகிறது, குறுநோக்குடைய இந்திய வட்டாரங்களில்தான் கண்டனம் காண்கிறது.

1919 ஆம் ஆண்டுச் சட்டத்தைத் தொடர்ந்து இரண்டாவது அரசியல் திட்டச் சட்டமாக வந்தது, 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம். 1937 முதல் நடைமுறையிலுள்ள சட்டம் ஆதலால் (முக்கியமான கூட்டாட்சிப் பிரிவு செயல்படுத்தப்படாததுடன், போர் தொடங்கியது முதல் கால வரையறையின்றி நிறுத்தி வைக்கப்பட்டிருந்தாலும்) அதைப் பற்றி அடுத்த பகுதியில் இன்னும் விரிவாக ஆராய வேண்டியது அவசியம்; சுயாட்சியை நோக்கி முன்னேறும் ஒரு நிலையை அது எந்த அளவு பிரதிபலிக்கிறது, அல்லது, ஏகாதிபத்திய அதிகாரத்தினைப் பயனுள்ள முறையில் வலுப்படுத்தும் ஒரு திட்டமாக அது எந்த அளவு உள்ளது என்பதை அப்போதுதான் முடிவு செய்ய முடியும்.

1917 முதல் இருபத்தொன்பது வருடங்கள் இவ்வாறு தொடர்ச்சியாக ஆய்வு செய்வதும் அரசியல் திட்டம் வகுப்பதுமாய்க் கழிந்துள்ளன. இந்த ஏறக்குறையக் கால் நூற்றாண்டின் இறுதியில், ஏகாதிபத்திய ஆதிக்கம் இன்றளவும் முழுமையாகவே உள்ளது.

நவீன ஏகாதிபத்தியத்தின் இந்தியக் கொள்கைக்குக் குறிக்கோள் ''குடியேற்ற நாட்டு அந்தஸ்து'' தானா? அவ்வாறானால், எந்தப் பொருளில்? அதற்குச் சாதாரண மனிதன் செய்யும் பொரு

ளிலா, கானடாவும் ஆஸ்திரேலியாவும் ''குடியேற்ற நாட்டு அந்தஸ்தை'' அநுபவிக்கின்றன என்கிறார்களே, அதே பொருளிலா? அல்லது, 1929இல் இந்தியா ராஜ்யக்காரியதரிசி வெட்ஜ்வுட்பென், சர்வதேச சங்கத்தில் ''இந்தியா''வின் தனியான 'பிரதிநிதி' இருப்பதாலும், வெர்சேல் ஒப்பந்தத்தில் தனியாகக் கையெழுத்திட்டிருப்பதாலும் ஏற்கனவே இந்தியா குடியேற்ற நாட்டு அந்தஸ்தை அநுபவித்து வந்தது என்று கூறிக் கேட்டுக் கொண்டிருந்தோரைத் திடுக்கிட வைத்தாரே, அம்மாதிரி ஏதாவது ஒரு விசித்திரமான பொருளிலா? இந்த யாருக்கும் தெரியாத குறிக்கோளை எந்த அளவுக் காலத்திற்குள் அடைவது? இந்த எல்லாக் கேள்விகளுக்கும் மிக வேறுபட்ட விடைகளும் முரண்பாடான விடைகளும் கிடைக்கின்றன. பிரச்னை முழுவதும் ராஜதந்திரச் சொல்லடுக்கு மூடு பனிக்குள் சுருட்டப்பட்டுக் கிடக்கிறது.

''ஆங்கிலேயனின் சொல் அவன் எழுதித்தந்த பத்திரத்துக்குச் சமம்.'' ஆனால் (அவன் ஆங்கிலேய அதிகார வர்க்கத்தின் ஓர் உறுப்பினனாக இருந்திட்டாலோ) அதைப் புரிந்துகொள்ள ஒரு சட்ட அறிஞர் வேண்டும்; அப்போதும், தான் கருதியது அது அல்ல என்பதை நிரூபிக்க அவன் எப்போதும் மற்றொரு சட்ட அறிஞரை வைத்திருப்பான்.

1917-அறிக்கையில் குடியேற்ற நாட்டு அந்தஸ்து பற்றின பிரஸ்தாபமே இல்லை. 1919—இந்திய அரசாங்கத் திட்டத்திலும் இல்லை. 1921 இல் வைசிராய்க்கு அனுப்பப்பட்ட ராஜாங்க அதிகார பத்திரத்தில் புதிய சட்டத்தைக் குறிப்பிட்டு, அதன் நோக்கம், ''பிரிட்டிஷ் இந்தியா நமது குடியேற்ற நாடுகளுக்கு இடையில் தனக்குரிய இடத்தை அடையலாம்'' என்னும்போது முதன் முதலாக இதைப் பற்றின குறிப்பு வந்தது. இதற்கு எந்தப் பொருளும் கொள்ளலாம்—பொருள் கொள்ளாமலும் இருக்கலாம் என்பது கண்கூடு. 1935-இந்திய அரசாங்கச் சட்டத்தில் குடியேற்ற நாட்டு அந்தஸ்து வாக்குறுதியை உள்ளிட்ட ஒரு தோற்றுவாய் சேர்க்கவேண்டும் என்று கோரப்பட்டது—மறுக்கப்பட்டது.

சட்ட ஆவணங்களைத் தவிர, அவ்வப்போது, மாறுபடும் அளவுகளில், முக்கியத்துவமும் உறுதியும் நிறைந்த பேச்சுகளில் ஏராளமான அறிவிப்புகள் வெளியிடப்படுகின்றன—அவை யாரையும் கட்டுப்படுத்துவன அல்ல. பதவியில் இல்லாதபோது 1928 இல் மாக்டொனல்டு உரைத்தார்:

''சில ஆண்டுகள் அல்ல, சிலமாத காலத்திற்குள் நம் நாடுகளின் பொதுநலக் குழாத்தோடு ஒரு புதிய குடியேற்ற நாடு சேர்க்கப்படும்; மற்றோர் இனத்தைச் சேர்ந்த அக்குடியேற்ற

நாட்டுக்குப் பொதுநலக் குழாத்துக்குள் எல்லாருக்கும் சமமான சுயமரியாதை கிட்டும். நான் இந்தியாவைக் குறிப்பிடுகிறேன்.''

(ஜே. ஆர். மாக்டொனல்டு, பிரிட்டிஷ் பொது நலக் குழாம் தொழிலாளர் மகாநாட்டில் சொற்பொழிவு, ஜூலை 22, 1928.)

''சில ஆண்டுகள் அல்ல, சிலமாத காலத்திற்குள்'' என்ன நடந்தது என்றால், சுயாட்சிக்காகக் கிளர்ச்சி செய்த குற்றத்திற்காக இந்தியாவில் பயங்கர ஆட்சி நடந்தது, சுமார் 100,000 இந்தியர்கள்—மாக்டொனல்டினல்—சிறைப்பட்டனர்.

1929 இல் வைசிராய் இர்வின் பிரபு வட்டமேஜை மகாநாட்டிற்கான அடிப்படையை ஆயத்தமாக்கும் நோக்குடன் ஓர் அறிக்கையை வெளியிட்டார்:

''1917 ஆம் ஆண்டு அறிக்கையின் உள்ளுறையாக, இந்திய அரசியலமைப்பு வளர்ச்சியின் இயற்கையான போக்கு குடியேற்ற நாட்டு அந்தஸ்தை அடைவதுதான் என்ற கருத்து அறிக்கையில் உள்ளது என மன்னர்பிரான் அரசு கருதுவதாய் அதன் சார்பில் சொல்ல எனக்கு அதிகாரம் தரப்பட்டுள்ளது.''

(இர்வின் பிரபு, அக்டோபர் 31, 1929—ல் அறிக்கை.)

இந்த அறிக்கையை எதிர்த்து, பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் முதிய அரசியல் வல்லுநர்கள் யாவரிடமிருந்தும் கண்டனப் புயல் எழுந்தது. இந்தியாவின் அரசியலில் நெருக்கடியான, சிரமமான ஒரு நிலைமையில் அது ''நல்ல பயனை'' விளைவித்தது என்ற ஒரே காரணத்துக்காக அதற்கு ஆதரவளிக்கப்பட்டது. அதன் பொருளறிய என்ன முயன்றும், இந்தியா காரியதரிசி குறுக்கு விசாரணைகளுக்கு மறுமொழி கூற உறுதியாக மறுத்து விட்டார்: ''வைசிராயின் அறிக்கை இருக்கிறபடியே இருக்கிறது; சிரமங்கள் உண்டாக்கும் நோக்குடன் என்னைக் குறுக்கு விசாரணை செய்ய வேண்டாமென்று கனம் அங்கத்தினர்களுக்குத் தெரிவிக்கிறேன்.''

''குடியேற்ற நாட்டு அந்தஸ்து'' என்றால் என்ன பொருள்? இதற்கும் விடைகளில் குறைவான வேறுபாடுகள் இல்லை. வெர்சேல் ஒப்பந்தத்தில் ''இந்தியா'' கையெழுத்திட்டதாலும், சர்வதேச சங்கத்தில் மெம்பர் ஆகிவிட்டதாலும் பத்து வருடங்களுக்கு முன்பே இந்தியா குடியேற்ற நாட்டு அந்தஸ்தை

அடைந்து விட்டது என்ற அதிமேதாவித்தனமான வாதத்தை 1929 டிசம்பரில் இந்தியா ராஜ்யக் காரியதரிசி வெளியிட்டார் என்பதை நாம் முன்பே கண்டோம். அடிக்கடி வெளியிடப் பெறும் இந்த வாதப் போக்கிற்கும், அதே நேரத்தில் இந்திய அரசியலமைப்பு வளர்ச்சியின் எதிர்கால லட்சியம் குடியேற்ற நாட்டு அந்தஸ்தே என்று, வைசிராயின் அறிக்கையில் உள்ளது போல், வாக்களிக்கப்படுவதற்கும் என்ன பொருத்தம் என்பது விளக்கப்படவில்லை.

மாறுதலுக்கு, குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்பதை வரையறுத்துக் கூற இயலாது (வெஸ்ட் மின்ஸ்டர் சட்டம் அதை வரையறுத்து விட்டதாய்த் தோன்றினாலும்) என்ற வாதம் எழுப்பப்படுகிறது. இவ்வாறாக, இந்திய அரசாங்க மசோதாவின் தோற்றுவாயில் குடியேற்ற நாட்டு அந்தஸ்து குறிக்கோளைச் சேர்க்குமாறு எழுந்த கோரிக்கைக்கு மறுமொழி அளிக்கும் முறையில் 1935 இல் தி டைம்ஸ் எழுதியது:

> ''ஒரு செந்திருத்தமான அரசியல் திட்ட ஆவணத்தில் 'குடியேற்ற நாட்டு அந்தஸ்து' வரையறுப்புக்கு இசைவதல்ல . . . . 'குடியேற்ற நாட்டு அந்தஸ்து' என்பது பல்வேறு காலங்களில் பல்வேறு பொருட்சாயல்களை உடையதாய் இருந்திருக்கிறது, இன்றும் பலவகை அரசாங்கங்களுக்கும் பயன்படுத்தப்படுகிறது; எனவே, ஒரு பாராளுமன்ற மசோதாவின் முகவுரையிலும் எல்லாருக்கும் உடன்பாடாகும் முறையில் அதை வரையறுக்க முயலுவதால் பயனில்லை.''
>
> (தி டைம்ஸ் தலையங்கம், ஜனவரி 25, 1935.)

ஆகையால், பளபளவென ஜொலிக்கும் லட்சியம், தெரியாத, தெரிந்துகொள்ள முடியாததொரு லோகத்தில் மறைந்தே போகிறது. ''ஒரு அரசியல் திட்ட ஆவணமாகவும்'', ''ஒரு பாராளுமன்ற மசோதாவிற்காக''வும் வெஸ்ட் மின்ஸ்டர் சட்டம் மிகச் செந்திருத்தமாக ''குடியேற்ற நாட்டு அந்தஸ்தை'' வரையறுத்த பிறகு இந்தத் தலையங்கம் எழுதப்பட்டது; ஆனால் அது அப்போது கானடாவுக்காகவும், ஆஸ்திரேலியாவுக்காகவும் அல்லது தென் ஆப்பிரிக்காவுக்காகவும் — இந்தியாவுக்காக அல்ல.

வரையறுக்கப்படாத வரையறுக்க முடியாத இந்தக் குறிக்கோள் ''குடியேற்ற நாட்டு அந்தஸ்து'' எவ்வளவு தொலைவில் இருக்கிறது? யாருக்கும் தெரியாது. ஒரு தேதி குறிப்பிடப்படவில்லை. ஆனால், ஏகாதிபத்தியத்தின் தலைசிறந்த, பொறுப்புள்ள அரசியல் வல்லுநர்கள், அது வெகு தொலைவில் இருக்கிறது என்ற தங்கள் நம்பிக்கையைத் தெளிவுபடுத்தத் தவறவில்லை.

முன்னாள் இந்தியா ராஜ்யக் காரியதரிசி பர்கென்ஹெட் பிரபு 1929 இல் அறிவித்தார்:

''எந்த நாளில் இந்தியா குடியேற்ற நாட்டு அந்தஸ்து பெறும் என நாங்கள் கருதுகிறோம் என்று புத்தி சுவாதீன முள்ள எவனும் காலவரையறை செய்யமாட்டான். எந்த அண்மைக் காலத்திலாவது அவர்கள் குடியேற்ற நாட்டு அந்தஸ்து அடைவார்கள் என்று இந்திய மக்களிடம் சொல்ல யாருக்கும் உரிமை இல்லை.''

(பர்கென்ஹெட் பிரபு, நவம்பர் 5, 1929 இல் பிரபுக்கள் சபையில் சொற்பொழிவு.)

அது போன்றே, பால்டுவினும் குறைந்த எதிர்மறையில் பேசவில்லை:

''எப்போது பொறுப்பாட்சி ஏற்படுத்தப்படும் என்பதை யாரும் கூற முடியாது; அது எந்த உருவம் கொள்ளும் என்பதை யாரும் கூற முடியாது. அண்மையிலோ, சேய்மை யிலோ, இந்தியா பொறுப்பாட்சி பெறும்போது குடியேற்ற நாட்டு அந்தஸ்து எப்படி இருக்கும் என்று யாருக்கும் தெரி யாது.''

(ஸ்டான்லி பால்டுவின், மக்கள் சபையில், நவம்பர் 7, 1929 இல்.)

இவ்வாறாக, ஒரு தெரியாத எதிர்காலத்தின் ஊடுருவ முடியாத தொலைவுக்குள்ளே தெரியாத லட்சியம் மறைந்தே போகிறது.

1939 இல் யுத்தம் தொடங்கியது முதல் குடியேற்ற நாட்டு அந்தஸ்து லட்சியப் பிரச்னை மறுபடியும் முன்னணிக்குக் கொண்டு வரப்பட்டது; ஏனெனில், அரசாங்கப் பேச்சாளர்கள் விடுதலைக் கோரிக்கைக்கு மாற்றாக இதைக் காட்ட முனைந்தார்கள். 1939, அக்டோபர் 17 ஆம் நாள் வைசிராய் லின்லித் கோ பிரபு மொழிந்தார்:

''கவர்னர் ஜெனரலுக்கு அனுப்பப் பெற்ற அதிகாரப் பத்திரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளவாறு, சாம்ராஜ்யத்திற்குள் இந்தியாவுக்கும் ஐக்கிய முடியரசுக்கும் இடையிலுள்ள கூட்டை வலுப்படுத்தி, பெரும் குடியேற்ற நாடுகளுக்கு இடை யில் இந்தியா தனக்குரிய இடத்தை அடையச் செய்ய வேண்டும் என்பதே மன்னர்பிரான் அரசின் நோக்கமும் கவலையுமாம்.''

அந்த ''உரிய இடம்'' என்னவாக இருக்குமோ?—தெளிவாக்கப் படவில்லை. வைசிராயின் அறிவிப்பைத் தொடர்ந்து நடை

பெற்ற பாராளுமன்ற விவாதத்தில், அரசாங்கத்தின் சார்பில் சர் சாமுவல் ஹோர், "1926 ஆம் ஆண்டின் குடியேற்ற நாட்டு அந்தஸ்து" தான் நோக்கம் என்றார்:

> "சிலர் நினைப்பதாய்த் தோன்றுவதுபோல் குடியேற்ற நாட்டு அந்தஸ்தில் இரண்டு வகைகள் உள்ளன; நாங்கள் யோசித்த குடியேற்ற நாட்டு அந்தஸ்து, 1926ஆம் ஆண்டின் குடியேற்ற நாட்டு அந்தஸ்து."
>
> (சர் சாமுவல் ஹோர், மக்கள் சபை, அக்டோபர் 26, 1939.)

அவர் உடனே தொடர்ந்து ஒரு புதிய மாயவாதத்தைச் சேர்த்தார்:

> "குடியேற்ற நாட்டு அந்தஸ்து தகுதி வாய்ந்த ஒரு சமுதாயத்துக்கு வழங்கப்படும் வெகுமதி அல்ல, ஆனால் அது உண்மையாகவே இருக்கிற உண்மைகளை ஏற்பதாகும். இந்த உண்மைகள் இந்தியாவில் தோன்றியதும்—விரைவாகத் தோன்றினால் நல்லது என்பதே என் எண்ணம். நம் கொள்கையின் நோக்கம் நிறைவு பெறும்."

உண்மையில், இந்தச் சோதிட மொழிக்குப் பின்னால் என்ன இருக்கிறது என்ன இருக்கிறது என்பது அவ்வளவு மர்மமானது அல்ல. சர் சாமுவல் ஹோர் தொடர்ந்து சொன்ன ஒரு கூற்று, வாக்குறுதிப் பாக்கெட்டில் உள்ள பழக்கமான தொரு 'ஜோக்கர்' போல் இருந்தது:

> "வழியில் துன்பங்கள் இருப்பின், அது நம் செயல் அல்ல. ஒரு பெரிய உபகண்டத்தின் வகுப்புகளுக்கும் சமூகங்களுக்கும் இடையில் உள்ள பல வேற்றுமைகளுக்கு அவை உடன் பிறந்தவை. . . . பிரிட்டிஷ் இந்தியாவினால் அடக்கியாளப் படுவோமோ என்று மன்னர்கள் அஞ்சுகிறார்கள்; மையத்தில் ஹிந்து பெரும்பான்மை இருப்பதை முஸ்லீம்கள் எதிர்க்கிறார்கள்; தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களும் மற்ற சிறுபான்மையினரும் பொறுப்பாட்சி என்றால் ஹிந்து பெரும்பான்மையைச் சார்ந்த ஆட்சி என்று பொருளாகும், அவர்கள் தங்கள் நலன்களைப் பலியிட்டு விடுவார்கள் என நிசமாகவே நம்புகிறார்கள். இக் கவலைகள் இன்னும் இருக்கின்றன. அவை இருக்க வேண்டா என்பதே என் விருப்பம். ஆனால் அவை இருக்கிறவரை ஒரு குறிப்பிட்ட நாளில் மையத்தில் உடனே முழுப் பொறுப்பு கேட்கும் கோரிக்கையை ஏற்க அரசினால் இயலாத காரியம்."

இவ்வாறு மீண்டும் ஒரு முறை பழக்கமான அதே சூழ்ச்சி ஒரு பக்கம், பொதுவான மொழியில் தெளிவான திட்டமோ கால வரையறையோ இல்லாமல் குடியேற்ற நாட்டு அந்தஸ்து வாக் குறுதி அளிக்கப்படுகிறது. மறுபக்கம், அதை நிறைவுபெறச் செய் யும் கேள்வியை முறியடிக்க இந்திய மக்களுடைய ''வேற்றுமை களை''க் கொண்டுவந்து காட்டி வாதாடப்படுகிறது. ஒரு நெருக்கடி யான நிலைமையைச் சமாளிக்கவும், விடுதலைக் கோரிக்கைக்கு எதி ராகவும், குடியேற்ற நாட்டு அந்தஸ்து வாக்குறுதி ஒரு சிறு ராஜ தந்திரப் பகடையாகப் பயன்படுத்தப் படுகிறது; ஆனால் வாக் குறுதியைச் சுற்றிலும் கட்டப்பட்டுள்ள தகுதி வேலிகள், அவ் வாக்குறுதி நிறைவு பெறுவதை ஒரு தெரியாக்கி ஒரு தெரியாக் காலத்திற்கு தள்ளி விடுகின்றன.

1917இல் அளித்த வாக்குறுதியை நிறைவேற்றும் கேள்வி எழுகிறபோதும், அல்லது இந்தியா ''பொறுப்பாட்சி'' பெறு வதற்கான சாத்தியம் பற்றின கேள்வி எழுகிறபோதும் எல்லை யில்லா நிச்சயமின்மையின் திரளான இந்த மூடுபனிகளுக்கு நேர் எதிராக, கண்ணுக்குத் தென்படும் எதிர்காலத்தில் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியை அசைக்க முடியாத வகையில் நிலைநாட்டு வதைப்பற்றின கேள்வி எழும்போது காட்சிமாறி, நிச்சயமுண்மை யின் மிகக் கெட்டியான பாறைக்கு இடம் தருகிறது. இங்கு நாம் உறுதியான தரைமீது இருக்கிறோம்; இங்கு குரல் உற்சாகமும் நம்பிக்கையும் கொண்டதாகிறது.

இவ்வாறு பிரதம மந்திரியாக லாயிட் ஜார்ஜ் தம்முடைய புகழ் பெற்ற ''உருக்குச் சட்ட''ப் பேச்சில் 1922 இல் கூறினார்:

> ''பிரிட்டன் எந்தச் சூழ்நிலையிலும் இந்தியாவிலுள்ள தன் பொறுப்பைக் கைவிடாது என்பது இப்போதைய அரசாங் கத்திற்கு மட்டுமன்று, இந்த நாட்டு மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமான எந்த அரசாங்கத்திற்கும் தலைசிறந்த கொள்கை யாகும். . . .
>
> ''பிரிட்டிஷ் குடிமுறைப் பணியாளர்களின் இச்சிறு உயிர்க் கருவின் வழிகாட்டும் துணையையும் உதவியையும் இந்தியா அகற்றிவிடக் கூடிய ஒரு காலத்தை என்னால் காண முடியவில்லை. . அவர்களே முழு அமைப்புக்கும் உருக்குச் சட்டம் ஆவர்.''
>
> (லாயிட் ஜார்ஜ், மக்கள் சபையில், ஆகஸ்டு 2, 1922.)

அது போன்றே, 1930 இல் சர்ச்சில் முழங்கினார்:

''இந்தியாவின் வாழ்க்கை மீதும் வளர்ச்சி மீதும் நமக்குள்ள பயனுள்ள அதிகாரத்தைத் துறக்கும் நோக்கம் எதுவும் பிரிட்டிஷ் நாட்டுக்குக் கிடையாது.

''நம்முடைய மற்ற எல்லா குடியேற்ற நாடுகளையும் சார்பு நாடுகளையும் விட மிகுதியாகப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குப் பெருமையும் வலிமையும் தருவதும், மன்னரின் மகுடத்தில் மெய்யாகவே மிகப் பிரகாசமானதும் விலையுயர்ந்ததுமான மணியை எறியும் நோக்கம் நமக்குக் கிடையாது.''

(வின்ஸ்டன் சர்ச்சில், இந்திய சாம்ராஜ்யச் சங்கத்தில் சொற்பொழிவு, டிசம்பர் 11, 1930.)

இதைவிட உறுதி குன்றாத மொழியில் பிரதம மந்திரியாகப் பேசிய பால்டுவின் 1934இல் அறிவித்தார்:

''அந்த இந்திய உபகண்டம் முழுவதையும் சாம்ராஜ்யத்திற்குள் என்றைக்கும் வைத்துக் கொள்ள உங்களுக்கு நல்லதொரு வாய்ப்பு இருக்கிறது என்பதே, இன்றைய இந்தப் பரந்த உலகத்தின் எல்லா மாறுதல்களிலும் வாய்ப்புகளிலும் நான் கண்ட தேர்ந்த முடிவாகும்.''

(ஸ்டான்லி பால்டுவின், மிதவாத, ஒன்றியவாதக் கழகங்களின் தேசீய ஒன்றியத்தின் மைய மன்றத்தில் சொற்பொழிவு, டிசம்பர் 4, 1934.)

அது போலவே, 1931இல் பேசுகையில், அரசியல் சீர்திருத்தங்களின் நோக்கத்தை அவர் விளக்கினார்:

''கிரேட் பிரிட்டனையும் இந்தியாவையும் இணைக்கும் பந்தங்களைப் பலவீனமாக்குவது பற்றிச் சிந்தனை செய்வது ஒருபுறம் இருக்க—அந்த இணைப்பை வேறு எந்தக் காலத்திலும் இருந்ததை விட நெருக்கமானதாக்கவே நாங்கள் விரும்புகிறோம். நெருக்கமான இந்த இணைப்புப் பணியையே நாம் மேற்கொண்டிருக்கிறோம்.''

(ஸ்டான்லி பால்டுவின், நியூடன் அப்பட்டில் சொற்பொழிவு, மார்ச் 6, 1931.)

இந்த ஆய்வின் முடிவு தப்ப முடியாதது. இந்தக் கூற்றுகளின், இத்தகைய எண்ணற்ற கூற்றுகளின் மொத்த விளைவை ஆய்வு செய்ய இயலாது; அதுபோலவே, இந்தியாவுக்குப் பொறுப்பாட்சி வழங்கும் சாத்தியக் கூறுகள் பற்றி வஞ்சனையான சந்தேகத்துடனும் பிடி கொடாமலும் பேசுவதைப் பற்றியும், இந்தியாவில் பிரிட்டிஷ் அதிகாரம் நிலைத்து நீடிக்கும் என்று உடன்பாடான

நிச்சயத்துடனும் இறுமாப்புடனும் பேசுவதைப் பற்றியும், ஒவ்வொரு உயிர்நாடியான இனத்தையும் மும்மடங்குப் பாது காப்புடன் பிரிட்டிஷ் கைகளில் வைத்துக் கொண்டு பற்பல அரசியல் திட்டங்களையும் யோசனைகளையும் வழங்குவதோடு சேர்த்து ஆய்வு செய்தால், நவீன காலத்தில் பிரிட்டிஷாரின் இந்தியக் கொள்கையின் உண்மையான தன்மையின் விட்டுக் கொடுக்காத முடிவுக்கு வராமல் இருக்க முடியாது. குருட்டுத் தனத்துக்கோ அல்லது நிச்சயமின்மைக்கோ அல்லது எளிதில் நம்பக்கூடிய பிரமைகளுக்கோ மன்னிப்பே கிடையாது.

ஏகாதிபத்தியத்தின் அடிப்படைக் கொள்கையில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை. அரசியல் தந்திரத்தில்தான் மாறுதல் நேர்ந்துள்ளது.

ஊகமான, வரையறுக்கப்படாத, தெரியாத, காலக்குறிப் பற்ற கானல் நீரைத்தான் இம் முறையில் ஒத்துழைப்புக்குள் சிக்குகிற இந்திய அரசியல் வாதிகளுக்கு முன் பொற்காட்சியாகக் காட்டினார்கள். ஆனால், அரசியல் சீர்திருத்தங்களின் மெய்மை பெரிதும் வேறு தன்மை வாய்ந்தது.

ஏகாதிபத்திய ஆதிக்கத்தை நிலையாக்க வேண்டும் என்ற அடிப்படை நோக்கம் முந்தைய காலகட்டத்தைப் போலவே இந்தக் கால கட்டத்திலும் நீடிக்கிறது. சீர்திருத்தங்களின் பாதை 1917க்கு முந்தைய சீர்திருத்தங்களின் பாதையே; முன்னிலும் சிரமமான நிலைமைகளில் புகுந்து, ஏகாதிபத்தியச் சரிவுக்கு இன்னும் முன்னேற்றமான நிலைக்குச் செல்லும் பாதை. இந்தியாவில் ஏகாதிபத்தியத்தை மேன்மேலும் முடக்கிக் கொண்டே போய் இந்திய மக்களிடம் இந்திய ஆட்சியை ஒப்ப டைக்கும் நோக்கம் அல்ல, மிகுந்த பாதுகாப்பு ஏற்பாடுகளோடு, இந்திய மக்களில் உயர்வகுப்புச் சிறுபான்மையினரின் உதவியோடு இந்திய மக்களை ஏகாதிபத்திய ஆட்சியையும் சுரண்டல் முறையை யும் நிலையாக்குவதற்காக அடிமைத்தனத்தில் இறுக்கிப் பிடித்துக் கொண்டு இந்தியாவில் ஏகாதிபத்தியத்தைக் காப்பதே நோக்க மாக இருந்து வருகிறது. அரசியல் சீர்திருத்தங்கள் என்றும், ''நோக்கில் புதிய கோணம்'' என்றும் உரத்த குரலில் பீற்றினார் களே, அவற்றின் அடிப்படை ராஜதந்திரக் காரணம் இதுதான். 1935 ஆம் ஆண்டு அரசியல் திட்ட கர்த்தா பால்டுவினின் சொற்களில்:

''தேவைப்பட்டால், இந்திய அமைச்சர்களாலும் சட்ட மன்றங்களாலும் அரசியல் அதிகாரம் நாம் விரும்பும் நோக்கங் களுக்காகப் பயன்படுத்துமாறு உறுதி செய்யும் கடமையும்

சாதனங்களும் நம் வைசிராய்களுக்கும் கவர்னர்களுக்கும், அவர்களின் கீழ் இந்தியா காரியதரிசியால் தேர்ந்தெடுக்கப் பட்டுப் பாராளுமன்றத்தால் பாதுகாக்கப்பெறும் குடிமுறைப் பணியாளர்களுக்கும் இருக்கும்.''

(ஸ்டான்லி பால்டுவின், இந்திய அரசு மசோதா மீது ஒலிபரப்பு, பிப்ரவரி 5, 1935, பெரிய எழுத் துக்கள் சேர்க்கப்பட்டது.)

## 4. 1935 ஆம் ஆண்டு அரசியல் திட்டம்

மாண்டேகு அறிக்கைக்கு இருபது ஆண்டுகளுக்குப்பிறகு அறிவிக்கப்பட்டதும், 1937 ஆம் ஆண்டில் அமுலுக்கு வந்ததும், 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்திலுள்ளதுமான அரசியல் திட்டம், நவீன காலத்தில் இந்தியாவுக்காக ஏகாதி பத்தியம் தீட்டிய மூன்றாவது அரசியல் திட்டமாம்—மார்லி-மிண்டோ சீர்திருத்தங்களை முதலாவது எனக் கொண்டால். சைமன் கமிஷனின் முதல் நியமனத்திலிருந்து, பிரிட்டனில் ஏகப்பட்ட விவாதத்தை மூட்டியும், இந்தியாவில் மோதுதலை உண்டாக்கியும் ஏழாண்டுக் காலத்துக்கு மேல் நீண்ட கர்ப்ப வாசத்துக்குப் பின் அது விரிவாக்கப்பட்டது.

சில மாறுதல் காலப் பாதுகாப்புகளுக்கு உட்பட்டு உண்மை யாகவே சுயாட்சி அல்லது சுயாட்சியின் பெரிய, தாராளமான பகுதி நிறைவு பெற்றுவிட்டது போல் பொதுவாகப் பிரிட்டிஷ் வட்டாரங்களில் பேசப்பட்டது. அதன் விளைவாக, தேசீய காங்கிரசினால் மட்டுமல்ல, இந்திய தாராளவாத, மிதவாத வட்டாரங்களாலும் இந்தியாவில் அது ஒரு மனதாய் நிராகரிக்கப் பட்டதை, காலனி மக்களைத் தவிர மற்ற எந்தப் பொருளைப் பற்றியும் உதார குணமுள்ள ஜனநாயகக் கண்ணோட்டமுள்ள பலரும் நியாயமற்றது என வியப்போடு கருதினார்கள்.

அதன் உண்மையான நிபந்தனைகளை இன்னும் ஜாக்கிரதை யாகப் பரிசீலனை செய்தால் இந்த எதிர்ப்பின் காரணங்கள் விளங்கும்; அத் திட்டத்தின் யந்திரத்தால் வழங்கப்பட்ட ஐயமற்ற வசதிகளைத் தேசீய இயக்கத்தின் வளர்ச்சிக்கு விரிவுக்கும் குறிப்பாக மாகாணப் பகுதிகளில் முற்றிலும் பயன்படுத்திக் கொண்ட இந்திய அரசியல் தலைவர்கள் அரசியல் திட்டம் முழுவதையும், குறிப்பாக அதனுடைய கூட்டாட்சிப் பிரிவுகளில் சுயாட்சித் திட்டத்தைக் காணாது, இந்தியாவின் மீது ஏகாதிபத்தி யத்துக்குள்ள பிடியைப் பலப்படுத்தும் ஒரு திட்டத்தைக் கண்டு ஏன் நிராகரித்தார்கள் என்பதும் விளங்கும்.

அரசியல் திட்டத்தில் இரண்டு முக்கியமான பிரிவுகள் உள்ளன: கூட்டாட்சிப் பிரிவு, திட்டமிடப்பட்ட அனைத்திந்தியப் பிரிட்டிஷ் இந்திய இந்த சமஸ்தானங்கள் கூட்டாட்சியின் மைய அரசுக்காக; பிறகு, மாகாணங்கள் பிரிவு, பிரிட்டிஷ் இந்தியா விலுள்ள மாகாணங்களுக்காக மாகாணப் பிரிவு 1937 இல் செயல்பட்டது; கூட்டாட்சிப் பிரிவு ஒரு காலத்திலும் செயல் படுத்தப்படவில்லை (இப்போதுள்ள அரசாங்கம், திட்டத்தின் பிரிவுகள் கீழ் ஏற்கனவே ஓரளவு செயல்பட்டாலும்), மாகாணப் பிரிவின் கீழ் பெரும்பாலான மாகாணங்களில் ஆட்சிப் பொறுப் பேற்ற தேசீய காங்கிரஸ், கூட்டாட்சிப் பிரிவு செயல்படுத்தப் படுவதை எதிர்த்தது.

அரசியல் திட்டத்தின் திறவுகோலே, கூட்டாட்சிக் கருத்து தான். இதில்தான் அதனுடைய புதிய போக்கு அடங்கியிருந்தது; இதில்தான் அதனுடைய மிக மிகப் பிற்போக்குத் தன்மை மறைந்து கிடந்தது.

இந்தியாவின் அரசியல், சமூக, அல்லது பொருளாதார முன்னேற்றத்திற்கு இந்தியாவின் அரசியல் ஒற்றுமை மிக அவசியம். ஒவ்வொரு கருத்தின், மனோபாவத்தின் ஒவ்வொரு பிரதிநிதியும் இதை ஒப்புக் கொள்கிறார். நூற்றுக்கணக்கான, முக்கியமாகச் சின்னஞ்சிறு சமஸ்தானங்களாய் சொக்கட்டான் பலகை நிறமாற்றக் கட்டங்கள் போல் அர்த்தமில்லாது இந்தியா கூறு போடப்பட்டிருப்பதும்; நிலஇயல், பொருளாதார, இன, மொழி அல்லது பண்பாட்டுக் காரணம் அல்லது நியாயம் காட்ட முடியாத, நம்ப முடியாத விதத்தில் ‘குறுக்கும் நெடுக்குமாய்’ எல்லைகள் வகுத்து, 45 சதவீதப் பிரதேசமும் 55 சதவீதமும் முறையே இருக்குமாறு இந்தியாவின் ஒற்றுமையை முற்றிலும் வேறுபட்ட இரண்டு ஆட்சி முறைகளில் முழுப்பிரிவினை செய் திருப்பதும்—இவையாவும் காலத்துக் கொவ்வாத வரலாற்று வழுக்கள், எப்போதோ திருத்தப்பட்டிருக்க வேண்டியவை; இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் ஒவ்வொரு பிற்போக்காக சீர்திருத்தத்தையும் காக்கும் முயற்சியாகவே அவை காக்கப்படு கின்றன. ஏனெனில், நாம் முன்பே கண்டது போல், இந்திய சமஸ் தானங்கள், வலிய பிரிட்டிஷ் அதிகாரத்தின் கரங்களால் அழிவி னின்றும் காக்கப்பெற்று, செயற்கை முறையில் உயிரூட்டப்பட்டு, இந்திய மக்களின் எந்தத் தேவைக்காகவும் அல்ல, பிரிட்டிஷ் ஆட்சியின் பிற்போக்கான துணைச் சுவர்களெனப் பிழைத்துக் கிடக்கின்றன — அதிகார பூர்வமான பிரிட்டிஷ் அரசாங்கப் பேச்சாளரின் சொற்களில், “விவாதத்துக்குரிய பிரதேசங்களில் நட்புறவுள்ள கோட்டைகள்.”

ஆனால் கூட்டாட்சி யோசனை, இந்தப் பிளவைக் கடக்கவோ, காலம் கடந்து வாழும் அற்பமான கொடுங்கோலரசுகளை ஒழிக்கவோ, அல்லது மிக எளிய முறையில் ஒரே விதமான ஆட்சி முறையை ஏற்படுத்தவோ வந்த யோசனை அல்ல. அந்தப் பிற்போக்கான நிறுவனங்களின் அதிகாரத்தை மிகுதியாக்கி, பிரிட்டிஷ் இந்தியாவில் தளர்ந்து வரும் ஏகாதிபத்தியத்தின் பிடியை வலுவாக்குவதற்காக அவற்றை மைய அரசின் நெஞ்சத்தானத்துக்குக் கொண்டு வந்து, தேசிய இயக்கத்தை, அதாவது, நாட்டை ஒன்றுபடுத்தும் குறிக்கோளுடைய இயக்கத்தை எதிர்ப்பதற்காகவே வந்த யோசனை அது.

கூட்டாட்சி என்றால் என்ன? எந்த மெய்யான கூட்டாட்சிக்கும் அடிப்படைக் கொள்கைகள் என்ன? அமெரிக்க ஐக்கிய நாடுகள், சுவிஸ் குடியரசு, சோவியத் சோஷலிஸ்டுக் குடியரசுகள் யூனியன் போன்ற பெரும் வரலாற்றுக் கூட்டாட்சி உதாரணங்களை ஆய்வு செய்ய வேண்டியது அவசியம்.

பொதுவான அரசியல் நோக்கங்களாலும், ஆதரிசங்களாலும், அல்லது வெளித் தேவைகளாலும் தூண்டப்பெற்று, சுதந்திரமான, இறைமை வாய்ந்த நிலப்பகுதிகள் தம்மிச்சையாக ஒன்றுபட்டு, அந்த நிலப்பகுதிகளை அடிப்படையாய்க் கொண்டு, இறைமையுள்ள மைய நிறுவனம் ஒன்றை ஏற்படுத்தி, அது அந்த நிலப்பகுதிகளுக்கு அல்லது அவற்றிலுள்ள மக்களுக்குப் பொறுப்பாக இருப்பது கூட்டாட்சி எனப்படும்; முழுமையாக மையப்படுத்த இயலாவிட்டால், வரையறை செய்யப்பட்ட ஓர் அளவு பொதுவான நிறுவனத்தை, தம்மிச்சையாக ஏற்கப் பெற்ற வரையறைக்குள் ஒன்றியத்தின் எல்லாக் குடிமக்களுக்கும் பொதுவான ஒரு கூட்டாட்சிச் சட்டம் உடையதாக ஏற்படுத்தப்படும் ஆட்சி முறைக்குக் கூட்டாட்சி என்று பெயர்.

இந்தச் சோதனைகளை எல்லாம் கொண்டு தீர்மானித்தால், இந்தியாவுக்கு வழங்கப்படப் போவதாய்க் கூறப்படும் ''கூட்டாட்சி'' என்பது தவறான பெயர்; சில விசேஷமான பிற்போக்கு ஆதரவாளர்களை உள்ளே புகுத்தி வைத்துக் கொண்டுள்ள எதேச்சாதிகாரக் கொடுங்கோல் சர்வாதிகார ஆட்சியை வருணிப்பதற்காகச் செய்யப்பட்ட சொல் தந்திரம்.

முதலாவதாக, கூட்டரசில் இறைமை கிடையாது. கூட்டரசுக்கு வெளியிலுள்ள பிரிட்டிஷ் ஆளும் வர்க்கத்தின் அதிகாரத்தில், பிரிட்டிஷ் மகுடத்தோடும், லண்டனிலிருந்து நியமிக்கப் பெற்றுப் பிரிட்டிஷ் அரசுக்கே முழுப்பொறுப்பாகவும், உண்மையில் யதேச்சாதிகாரமாகவும் ஆட்சி செய்யும் கவர்னர் ஜெனரலோ

டும், பிரிட்டிஷ் பாராளுமன்றத்துக்குப் பொறுப்பான ராஜ்யக் காரியதரிசியோடும், இறுதியாக, இறுதி அதிகாரியான பிரிட்டிஷ் பாராளுமன்றத்தோடும் இறைமை இருப்பதாய் இந்திய அரசாங்க சட்டத்தில் மிகத் தெளிவாய் உரைக்கப்பட்டுள்ளது. கூட்டரசுக்குள்ளோ, அதன் உறுப்பினர்களுக்குள்ளோ இறைமை கிடையாது. வேறு சொற்களில் சொல்வதானுல், அது கூட்டரசு அல்ல, ஒரு சர்வாதிகாரி ஆட்சிமுறையின் ஒரு வகை ஆட்சிக் கருவி.

இரண்டாவதாக, இறைமையுள்ள பகுதிகளின் தம்மிச்சையான ஒன்றியம் அல்ல இந்த ஒன்றியம். பிரிட்டனின் ஏவலுக்குப் பணிந்து நடக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் உள்ளவர்களும், பிரிட்டனின் விருப்பத்தை வெளியிடும் மேடை ஒலிபெருக்கிகள் போன்றவர்களுமான பொம்மை ராஜாக்களின் சேர்க்கையை ராஜ தந்திர முறையில் ''தம்மிச்சையான'' செய்கையென (அந்தப் பகுதிகளிலுள்ள 9 கோடி மக்களுக்கு யாதொரு பங்கோ சொல்லுரிமையோ இல்லாதது)க் கொண்டாலும், கூட்டரசின் நாலில் மூன்று பாகமான பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களின் சேர்க்கையை வெளியிலிருந்து திணிக்கப்பட்ட கட்டாயச் செயல் என வேண்டும். அன்றித் தம்மிச்சையான செயல் என முடியாது.

மூன்ருவதாகவும், ''கூட்டரசு'' என்பதன் எந்தவிதக் கருத்துக்கும் விசித்திரமானதாகவும், கூட்டரசுச் சட்ட முறையோ, சட்டம் செய்யும் முறையோ, அல்லது ஆட்சிமுறையோ—கூட்டரசு முழுமைக்கும் ஏற்பதாக—ஒன்றும் இல்லை, கூட்டரசின் குடிமக்களின் அடிப்படை உரிமைகள் அறிக்கையில்லை. ராஜாக்களின் பிரஜைக்களுக்கோ, கூட்டரசின் பாதிப்பு இல்லை. உரிமைகளும் இல்லை. ஆனுல் இந்தக் கொடுங்கோல் அரசர்கள் கூட்டரசின் சட்ட மன்றங்களில் பங்கு கொண்டு, பிரிட்டிஷ் இந்தியாவில் அரைகுறை வாக்குரிமை பெற்ற மக்களுக்காகச் சட்டங்கள் இயற்றுவார்கள். கூட்டரசு சட்டமன்றம் சட்டம் இயற்றும், கூட்டரசுக்கு அல்ல, அதன் ஒரு பகுதிக்கு—பிரிட்டிஷ் இந்தியாவுக்கு—மட்டும். கூட்டரசுக் கருத்தில் இம்மாதிரி முரண்பாடுகள் எங்காவது இருந்ததுண்டா? இந்தக் ''கூட்டரசு'' எனப்படுவது, இந்தியா முழுமைக்கும் ஒரு புது மாறுதலோ, அல்லது நெருக்கமான பிணைப்போ அல்ல, ஆனுல், பிரிட்டிஷ் இந்தியாவுக்குள் புதிய பிற்போக்குச் சக்திகளைப் புகுத்துவதுதான் என்பது மீண்டும் ஒருமுறை தெளிவாகிறது.

எனவே, கூட்டரசுப் பிரச்னை இந்தியாவை ஒன்று படுத்தும் பிரச்னை அல்ல—இந்த இந்திய ஒருமைப்பாடு அவசியமானது, அவசியம் என எல்லாராலும் ஒப்புக் கொள்ளப் பட்டது, கட்டாயம் வரப்போவது, அப்படி வரும்போது

அது மெய்யான கூட்டரசு வடிவம் கொள்ளலாம்—என்பதைத் தொடக்கத்திலேயே புரிந்து கொள்ள வேண்டியது அவசியம். இந்த அரசியல் திட்டத்தில் ''கூட்டரசு'' எனப்படுவதன் பிரச்னை, இப்போதுள்ள, அரசியல் பிரிவினைத் தீமைகள் அனைத்தையும், கொடுங்கோல் சமஸ்தானங்கள் முறையையும் தொடாமல் அப்படியே விட்டு விட்டு, சில வரையறை செய்யப் பட்ட அரைகுறையான ஜனநாயக நிறுவனங்களைப் பெறுவதில் வெற்றிகண்டுள்ளதும், தேசீய இயக்கம் முன்னேற்றம் கண்டுள்ளது மான அப்பகுதிக்குள் ஒரு புதிய பிற்போக்குச் சக்தியைப் புகுத்த முயலும் ஜனநாயகத்துக்கு விரோதமான கருவியைப் பற்றிய பிரச்னை.

''கூட்டரசு'' என்ற தவறான பெயரால் அழைக்கப்படும் இந்தத் திட்டத்தை, தங்கள் பிரிட்டிஷ் எஜமானர்களுக்கு அன்றி வேறு யாருக் கும் பொறுப்பு இல்லாத இந்தியக் கொடுங்கோல் மன்னர்களுக்கு, பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள 27 கோடி மக்களுக்காகச் சட்டம் இயற்ற அதிகாரம் வழங்கும் திட்டம் என்று சொல்வதுதான் சரியாக இருக்கும். அரசியல் திட்டம் பற்றியோ, தேசீய காங்கிரசின் எதிர்ப்பு பற்றியோ இனி பேசப்படும் போது ''கூட்டரசு'' என்று குறிப் பிடப்பட்டால் இதுதான் அதன் பொருள் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

பிரிட்டிஷ் இந்தியாவில் பிற்போக்குச் சக்திகளின் எடையைக் கூட்டவேண்டும் என்ற ''கூட்டரசின்'' உண்மையான நோக்கம், கூட்டரசு சட்டமன்றத்தின் இரண்டு சபைகளிலும் மன்னர்களுக்கு விசேஷமான பிரதிநிதித்துவமும் செல்வாக்கும் தரப்படுவதில் வெளிப்பட்டது.

கூட்டரசு சட்டமன்றத்தில் இரண்டு சபைகள் இருக்கும், ஒரு மேல்சபை அல்லது ராஜ்யசபை, கீழ்சபை அல்லது கூட்டாட்சி சபை. இரண்டு சபைகளிலும் அரசர்களுக்குப் பிரதிநிதித்துவம் மட்டும் அளிக்கப்படவில்லை, இரண்டு சபைகளிலும் மிகுதியான பிரதிநிதித்துவம் — அவர்களுடைய ராஜ்யங்களின் அளவோடு எந்தச் சம்பந்தமும் இல்லாமல்—அளிக்கப்பட்டது.

ராஜ்யசபையில், 260 இடங்களில், 104 அல்லது ஐந்தில் இரண்டு பாகம் அரசர்களுக்கு ஒதுக்கப்பட்டது.

கூட்டாட்சி சபையில், 375 இடங்களில், 125 அல்லது மூன் றில் ஒரு பாகம் அரசர்களுக்கு ஒதுக்கப்பட்டது.

இந்தியாவின் மொத்த மக்கட்தொகையில் சமஸ்தானங்களின் மக்கட்தொகையின் அளவுவீதம் 24 சதவீதம் அல்லது கால்பங்குக் கும் குறைவு.

ஒரு நிதி அடிப்படையில் பார்த்தால் இந்த அளவு பேதம் இன்னும் தெளிவுபடும். கூட்டரசின் மொத்த வருவாய்களில் 90 சதவீதம் பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்தும், 10 சதவீதம் மட்டும் சமஸ்தானங்களிலிருந்தும் கிடைக்கும் என்று மதிப்பிடப்பட்டது. எனினும், அரசர்களுக்கு ஐந்தில் இரண்டு பங்கு பிரதிநிதித்துவம், கீழ்சபையில் மூன்றில் ஒரு பங்கு.

இவ்வாறுக, உருப்படியான, தேர்ந்தெடுக்கப்படாத, பிரதிநிதிகள் அல்லாத பிற்போக்குக் கூட்டம் ஒன்றை, பழைய அதிகார வர்க்கக் கும்பலின் இடத்தில் புகுத்தியதன் வாயிலாகத் தொடக்கத்திலேயே ''பிரதி நிதித்துவ'' ஆட்சி முறை எனப்படுவது அடிபட்டுவிட்டது—ஆனுல், பழைய மாண்டேகு—செம்ஸ் போர்டு அரசியல் திட்டத்தின் கீழ் இருந்ததை விட இது மிகப் பிற்போக்கானது, அதிகமான அளவு வீதம் கொண்டது (பழைய சட்ட சபையில் தேர்ந்தெடுக் கப்படாத அதிகார வர்க்கத்தினர் 40 பேர், 145 உறுப்பினர் களைக் கொண்ட சபையில்-அல்லது, கால் பகுதிக்குச் சற்று மிகுதி).

இந்த அருமையான சபைகளின் ''அதிகாரங்களுக்கு'' நாம் இனிதான் வரவேண்டும், வந்தால், அரசியல் திட்டத்தால் வழங்கப்பட்டு விட்டதாய் அளிக்கப்படுகிறதே, ''மையத்தில் பொறுப்பான ஆட்சி,'' அந்த அடிப்படைக் கட்டுக்கதையே கரைந்து மறைந்து போகிறது.

கவர்னர் ஜெனரலினுல் பொறுக்கி எடுக்கப்பட்ட, அவருக்கே பொறுப்பான ஓர் அமைச்சரவை அமைக்கப்படும்; ஆனுல் அவர் களுடைய அதிகாரம் கடுமையாக வரையறுக்கப்பட்டது. நான்கு துறைகள்—தற்காப்பு, வெளி நாட்டு விவகாரங்கள், மாதா கோயில் தொடர்பான விஷயங்கள்; விலக்கப்பட்ட பகுதிகள்—கவர்னர் ஜெனரலின் தனி நிர்வாகத்தின் கீழ் இருந்தன. மற்ற பல பொருள்களுக்காகச் சிறப்பு அதிகாரிகள் தனியாக நியமிக்கப் படுவதாக இருந்தது—நிதி நிலைமையையும் நாணயத்தையும் கவனித்துக்கொள்ள ஒரு நிதி ஆலோசனையாளர், சட்ட விஷயங் களுக்கு ஒரு அட்வகேட் ஜெனரல், கூட்டரசு வங்கிக்கும் ரயில் வேக்களுக்கும் மற்றவர்கள். குடி முறைப் பணியாளர்களையும் போலீஸ் பணியாளர்களையும் நியமிக்கும் தனியுரிமை ராஜ்யக் காரியதரிசிக்கு. மற்றும் ஏராளமான விதிகள், பிரிட்டிஷ் அதிகா ரத்தின் அடிப்படைச் சட்டங்களை மீருமல் தடுக்கவும், பிரிட்டிஷ் பொருளாதார நலன்களுக்கு தீங்குபயக்கும் செயல்களைத் தடுக்க வும், அல்லது சிறுபான்மையினரின் உரிமைகளை மீருமல் தடுக்கவும் அல்லது சமஸ்தானங்களின் உரிமைகளை மீருமல் தடுக்கவும் பயன்பட்டன. எல்லாவற்றுக்கும் மேலே ஓடியது கவர்னர் ஜெனரலின் பொதுவான மேலதிகாரம். அமைச்சர்கள் கவனிக்கும்

படியாக மிஞ்சுவது என்ன என்று தீர்மானிப்பது கஷ்டம். ஆயினும், ஒருகால், அஞ்சல் நிலையங்கள் செவ்வையாக இயங்குகின்றனவா என்பதைக் கவனிக்க அவர்களுக்குச் சுதந்திரம் இருக்கலாம்.

அமைச்சர்கள் சட்டமன்றத்துக்குப் பொறுப்பானவர்களாயிருக்க வேண்டும் என்பதற்குச் சட்டத்தில் ஒன்றும் இல்லை. அவர்களுடைய சம்பளங்களுக்கு சட்டமன்றத்தில் வாக்கெடுப்பு தேவை இல்லை; பெரும்பான்மையினர் நம்பிக்கை இல்லை என வாக்களித்தாலும் அவர்கள் ராஜிநாமா செய்யத் தேவை இல்லை. கவர்னர் ஜெனரலின் அதிகாரப் பத்திரத்தில்தான், சட்டமன்றத்தில் பெரும்பான்மை பலம் பெறக்கூடிய அமைச்சர்களைப் பொறுக்கி எடுக்குமாறு சிபாரிசு செய்யப்பட்டிருந்தது. ஆனால், சமஸ்தானங்களின் பிரதிநிதிகளையும் சிறுபான்மையினரின் பிரதிநிதிகளையும் சேர்த்து கொள்ளுமாறும் அதுதான் சிபாரிசு செய்தது.

சட்டசபையின் அதிகாரங்கள் பற்றி என்ன? ஒரு பிரதிநிதித்துவ சபையின் அதிகாரத்துக்கு முதல் திறவுகோல், நிதி. நிதியைப் பற்றின நிலைமை என்ன?

வரவு செலவுத் திட்டம் இரண்டு பகுதிகளாய்ப் பிரிக்கப்பட்டது: ''கூட்டரசின் வருவாய்கள் பேரில் சுமரும் செலவும்,'' ''மற்ற செலவுகளும்.'' முதலாவதில், தற்காப்புச் செலவுகள், கடன் வட்டி, பெரிய அலுவலகச் சம்பளங்கள், பென்ஷன்கள் முதலியன போன்ற எல்லா கனமான, முதன்மையான செலவுகளும் அடங்கும்; இவை சட்டமன்றத்தின் வாக்கெடுப்புக்கு உட்பட்டவை அல்ல. ''வாக்கெடுக்கத் தேவையற்ற'' இந்த இனங்கள் மொத்தச் செலவில் நாலில் மூன்று அல்லது ஐந்தில் நாலு பாகம் ஆகும்; ''இந்திய ஆட்சி முறை'' (பக். 69) என்ற நூலில் பேராசிரியர் ஜி. என். ஜோஷி மதிப்பிட்டுள்ளபடி 75 சதவீதம்; தேசிய காங்கிரசின் மதிப்பீடு 80 சதவீதம். செலவில் எந்த இனத்தை ''வாக்கெடுக்கத் தேவையற்ற'' பிரிவில் சேர்ப்பது என்பதைக் கவர்னர் ஜெனரல் தம் விருப்பம் போல் முடிவு செய்யலாம்.

மிஞ்சுவது, சிறு செலவினங்களுக்கான 20 சதவீதமோ, 25 சதவீதமோ; அதன் மீது சட்டமன்றம் கருத்து தெரிவிக்கலாம். ஆனால், கருத்து மட்டுமே. இந்தக் குறுகலான செலவின வட்டத்தில் கூடச் சட்டமன்றத்துக்கு யாதொரு அதிகாரமும் இல்லை. கவர்னர் ஜெனரலின் முன் சிபாரிசு பெறாத எந்த நிதி மசோதாவையும் திட்டத்தையும் கொண்டு வரமுடியாது சட்டசபை ஒரு மானியத்தை நிராகரித்தாலோ அல்லது குறைத்தாலோ

தம்முடைய சிறப்புப் பொறுப்புகளுக்கு அது தேவை யென்று சட்ட சபையின் வாக்குகளை மீறி ஏற்கலாம். இவ்வாருக, ஒரு பொறுப்புள்ள பிரநிதித்துவ நிறுவனத்தின் முதல் அடிப்படையான நிதியம்சம் முற்றிலும் இங்கு இல்லை.

பிரதிநிதித்துவ நிறுவனத்தின் அதிகாரத்துக்கு இரண்டாவது திறவு கோல், ராணுவ பலத்தின் அரசாங்க யந்திரத்தையும், உத்தியோக வர்க்கத்தையும் ஆட்சி புரிதல்.

தற்காப்பு சட்ட சபை அதிகார எல்லைக்குப் புறம்பே வைக்கப்பட்டிருந்தது. குடிமுறைப் பணியாளர்களும், போலீஸ் காரர்களும் ராஜ்யக் காரியதரிசியால் நியமிக்கப்படுவர். அவர் களுடைய பணியின் உரிமைகளும் நிபந்தனைகளும் சிறப்பு விதி களால் பாதுகாக்கப்பட்டன. போலீஸ் விதிகள் கவர்னர் ஜெனரலின் கைகளில் இருந்தன; ரகசியப் போலீஸ் அல்லது அரசியல் போலீஸை முற்றிலும் அவரே நிர்வகித்தார்.

அதிகாரத்தின் மூன்ருவது திறவு கோல்—சட்டம் இயற்றல், சட்டங்களை நிறைவேற்றவும், அல்லது கொண்டு வரும் சட்டங்களை ஏற்க மறுக்கவும் அதிகாரம்.

மிகவும் கட்டுப்படுத்தப்பட்ட விஷயங்களின் வட்டத்திற்குள், அரசாங்கத்தின் ஒப்புதல் பெற்ற சட்டங்களை சட்டசபை நிறை வேற்றலாம் என்பதில் ஐயமில்லை. விதிகளின் நீண்ட பட்டியல் ஒன்றன் வாயிலாக வட்டம் கட்டுப்படுத்தப்பட்டது. கவர்னர் ஜெனரலின் முன்னிசைவு பெற்றிருவிட்டால் அது நிதிச் சட்டங் களைத் தொடவோ பேசவோ முடியாது. பிரிட்டிஷ் அதிகாரத்தின் அடிப்படை அஸ்திவாரங்களான ராணுவப் பிரச்னைகள், குடி முறைப் பணியாளர் உரிமைகள், சமஸ்தானப் பிரச்னைகள், சிறு பான்மையினர் பிரச்னைகள், பிரிட்டிஷ் பொருளாதார நலன்கள் பற்றிச் சட்டம் ஆக்குவது பற்றி அவர்கள் எண்ணிப் பார்க்கவும் முடியாது. குறிப்பாக, கீழ்க்கண்ட பொருள்களைப் பற்றிச் சட்டம் செய்ய கூட்டரசுச் சட்டசபைக்கு அதிகாரம் இல்லை:

(அ) ஐக்கிய முடியரசில் குடியுரிமைபெற்ற பிரிட்டிஷ் குடி மக்களுக்கு, பிரிட்டிஷ் இந்தியாவுக்குள் நுழையவும், அல்லது பிரயாணம் செய்யவும், வசிக்கவும், சொத்தை வாங்கவும் வைத்துக் கொள்ளவும் விற்கவும், அரசாங்கப் பதவிகள் வகிக் கவும், அல்லது வர்த்தகம், வியாபாரம் அல்லது தொழில் களில் ஈடுபடவும் உள்ள உரிமைகள் மீது எந்தவிதத் தடை யையும் விதிக்கக் கூடாது;

(ஆ) ஐக்கிய முடியரசில் குடியுரிமை பெற்ற ஒரு குடிமகன் அல்லது ஐக்கிய முடியரசில் நிறுவப்பட்ட ஒரு கம்பெனிக்கு இந்தியாவில் வரி விதிப்பு சம்பந்தமாய், விரோதமாய்ப் பாகு படுத்தப்படக் கூடாது;

(இ) ஐக்கிய முடியரசில் பதிவு செய்யப்பெற்ற கப்பல்கள், அவற்றின் ஊழியர்கள், பிரயாணிகள், சரக்குகள் முதலிய வற்றுக்கு விரோதமாய்ப் பாகுபாடு செய்யப்படக் கூடாது;

(ஈ) ஐக்கிய முடியரசுச் சட்டங்களின் கீழ் நிறுவப்பட்டு இந்தியாவில் வியாபாரம் செய்யும் கம்பெனிகளுக்கு ஏதாவது மானியம், வெகுமதி, அல்லது உதவிப்பணம் கூட்டரசு வரு வாய்களிலிருந்து வழங்கப்படுவதாயின், கம்பெனிகளுக்கு எதிராகப் பாகுபாடு செய்யக் கூடாது.

இந்தியத் தொழில், வர்த்தகம், கப்பல் தொழில்களுக்குச் சிறப் பான ஊக்கம் அளிக்கவோ, அல்லது, சிறப்பான சலுகைகள் வழங்கவோ, அல்லது உதவிப் பணங்கள் வழங்கவோ (பிரிட்டனி லுள்ள பிரிட்டிஷ் அரசாங்கம் பிரிட்டிஷ் தொழில், வர்த்தகம், கப்பல் தொழிலுக்குச் செய்வது போல) முற்பட்டால் அதே மாதிரிச் சலுகைகள் அதே நேரத்தில் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் வாணிப, தொழில் நலன்களுக்கும் வழங்கப்பட்டாலன்றித் தடை செய்யும்—வீட்டோ செய்யும்—இந்தச் ''சரணுகதிகள்'', இந்தி யாவில் பிரிட்டிஷ் நிதி மூலதன நலன்களுக்கு இரும்புக்கவசப் பாது காப்புப் பெறுவதற்கான அக்கறையைக் காட்டுகின்றன.

சட்டமியற்றுவதற்கு எஞ்சியுள்ள, அனுமதிக்கப்பட்ட வட்டத்திற்குள்ளும் சட்டசபைக்கு இப்போதும் சுதந்திரமான அதிகாரங்கள் இல்லை. அரசாங்கம் விரும்பாத ஏதாவது ஒரு மசோதாவைச் சட்டசபை நிறைவேற்றினும், மகா பிற்போக் கான ராஜ்ய சபையும் அதை நிறைவேற்றினதாக வைத்துக் கொண்டாலும், கவர்னர் ஜெனரல் தம் இசைவை முற்றிலும் ''மறுத்து'' விடலாம். மாறுதலாக, அதை மறுபரிசீலனைக்காக ''நிறுத்தி''க் கொள்ளலாம், அவர் அப்படி பன்னிரண்டு மாத காலம் ''நிறுத்தினல்'', அது கைவிடப்படும். மாறுதலாக, அவர் முதலில் தம் இசைவைத் தந்துவிட்டு, அப்பால் மனம் மாறி விட் டால், அவர் அதற்கு ''அனுமதி மறுக்கலாம்'', அது பயனற்ற தாகிவிடும்.

மறுபக்கம், அரசாங்கம் அவசியம் எனக் கருதும் ஒரு சட்டத் தைச் சட்டசபை நிறைவேற்றத் தவறினல், கவர்னர் ஜெனரல் அதைக் ''கவர்னர் ஜெனரலின் சட்டமாக'' நிறைவேற்ற முடி யும்; அது மற்ற சாதாரணச் சட்டங்களைப் போலவே செயல்படும். மாறுதலாக, ஒரு முறை ஆறுமாத காலம் சட்டமாகச் செயல்படக்

கூடிய அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கக் கவர்னர் ஜெனரலினால் முடியும்.

''சட்ட சபைகளின்'' ''அதிகாரங்கள்'' இத்தகையன. இந்த அதிகாரங்களைப் பொறுக்கி எடுக்க மேற்கொள்ளப்பட மிகச் சிரமமான எச்சரிக்கை அளவு கடந்ததாகத் தோன்றியிருக்கலாம்.

ஆட்சி முறையின் தாழிடப்பட்ட கதவுகள் வாயிலாகச் சுயாட்சியின் பெருமூச்சு வெளியில் எட்டும் சாத்தியக்கூறின் அடையாளம் கூட இருக்கக்கூடாது என்பதற்கு உறுதியை மும்மடங்கு உறுதியாக்கிக் கொள்வதற்காக வெளிப்படையாக மிகக் கவலைப்பட்டுக் கொண்டிருந்த ஏகாதிபத்திய அதிகாரிகளின் கவலை மிக்க முன் எச்சரிக்கைகள் இவற்றால் தீர்ந்து போய்விடவில்லை. நாம் இன்னும் முழுமையாக, ஒதுக்கீடு அதிகாரங்களும் ''பாதுகாப்புகளும்'' உள்ள இறுதியான மந்திரஸ்தலத்தை ஆய்வுசெய்ய வேண்டும்.

சட்டசபையின் ''அதிகாரங்களி''லிருந்து கவர்னர் ஜெனரலின் அதிகாரங்களுக்கு நாம் போவது இருட்டுப் பிரதேசத்திலிருந்து பகலொளிப் பிரதேசத்திற்குப் போவதை ஒத்ததாகும்.

சட்டத்தின் தொண்ணூற்று நான்குக்குக் குறையாத பிரிவுகள் கவர்னர் ஜெனரல் மீது தீர்ப்புரிமை அதிகாரங்களைப் பொழிந்தன. இவ்வாறு, கவர்னர் ஜெனரல் தம் தீர்ப்புரிமையால் (அதாவது, அமைச்சர்களின் யோசனையோ, தேர்ந்தெடுக்கப்பட்ட நிறுவனங்களின் கருத்தோ வேண்டாமல்).

1. அமைச்சர்களை நியமிக்கவும் நீக்கவும்.
2. சட்டசபை நிறைவேற்றிய சட்டத்தைத் தடை செய்யவும்.
3. சட்டசபை நிராகரித்த சட்டத்தை நிறைவேற்றவும்.
4. சட்டத்தைப் பற்றின விவாதத்தைத் தடை செய்யவும்.
5. அவசரச் சட்டங்களை வெளியிடவும்.
6. அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்குமாறு மாகாண கவர்னர்களுக்கு ஆணை இடவும்.
7. மாகாணச் சட்டங்களைத் தடை செய்யவும்.
8. போலீசுக்கான விதிகளைப் பிறப்பிக்கவும்.
9. ராணுவ பலத்தைப் பயனை ஆளவும்.

10. சட்ட சபையைக் கலைக்கவும்.

11. அரசியல் சட்டத்தை நிறுத்தி வைக்கவும்.

இது அவருடைய தீர்ப்புரிமை அதிகாரங்களில் பொறுக்கி எடுக்கப் பட்ட சிலவற்றின் பட்டியல்.

இதற்குப் பக்கலில் வந்தன ஒதுக்கீடு அதிகாரங்கள். ஒதுக்கீடு துறைகளால் அவர் தம் தனிப்பட்ட ஆட்சியின் கீழ் தற்காப்பு, வெளிநாட்டு விவகாரங்கள், மாதா கோவில் விவகாரங்கள், விலக்கப் பெற்ற பகுதிகள் ஆகியவற்றை வைத்திருந்தார்.

இறுதியாக, வருவன சிறப்பு அதிகாரங்களும் பொறுப்பு களும்; ஏதாவது குறைபாடுகள் இருப்பதாய்க் கற்பனை செய்யப் பட்டால், அவற்றை அடைப்பதற்குத் தோன்றியவை இவை. கவர்னர் ஜெனரலுக்கு எட்டு "சிறப்புப் பொறுப்புகள்" இருந் தன; அவற்றுக்கு இணங்க அவற்றை நிறைவேற்றத் தம் சொந்த முறையில் அவசியமானதெனத் தோன்றும் எந்த நடவடிக்கையும் எடுக்கலாம். இந்தச் "சிறப்புப் பொறுப்புகள்" சட்டம் நெடுகி லும் பாதுகாப்புகள் நிறைந்திருந்தாலும் இவை "பாதுகாப்பு கள்" என்று சாதாரணமாய்க் குறிப்பிடப்படும்) வருமாறு:

1. "இந்தியா அல்லது அதன் ஏதாவதொரு பகுதியின் அமைதி அல்லது சமாதானத்துக்கு ஏற்படும் எந்தக் கடுமையான அபாயத்தையும் தடுத்தல்;"

2. "கூட்டரசு அரசாங்கத்தின் நிதி நிலையையும் நாண யத்தையும் பாதுகாத்தல்;"

3. "சிறுபான்மையினரின் நியாயமான நலன்களைப் பாதுகாத்தல்;"

4. "பொதுப் பணிகளைச் சேர்ந்த உறுப்பினர்கள், முன்னாள் உறுப்பினர்கள் அல்லது அவர்களைச் சார்ந் தோர்களின் உரிமைகளையும் நியாயமான நலன் களையும்" "காத்தல்;"

5. "இந்தியாவில் செயல்படும் பிரிட்டிஷ் தனி நபர் களுக்கு, அல்லது கம்பெனிகளுக்கு—அக் கம்பெனிகள் ஐக்கிய முடியரசில் நிறுவப்பட்டிருப்பினும், இந்தி யாவில் நிறுவப்பட்டிருப்பினும் சரி — எதிராக வர்த்தக அல்லது நிதிப் பாகுபாடு செய்யப்படுவதைத் தடுத்தல்;"

6. "இந்தியாவுக்குள் பிரிட்டிஷ் இறக்குமதிகளுக்கு எதி ரான பாகுபாடுகளைத் தடுத்தல்;"

7. ''சமஸ்தானங்கள், அரசர்களுடைய உரிமைகளைக் காத்தல்;''

8. இறுதியாக, எல்லாம் கொள்ளும் மகராஜன் கப்பலாக ஒரு மகத்தான பாதுகாப்பு—''இந்தச் சட்டப்படியோ இந்தச் சட்டத்தின் கீழோ அவரால் தம் தீர்ப்புரிமைப்படி நடவடிக்கை எடுக்கப்பட வேண்டியதன் சம்பந்தமான விஷயங்கள் சம்பந்தமான காரியங்களை உரிய முறையில் நிறைவேற்றுகையில், வேறு ஏதாவது ஒரு விஷயம் சம்பந்தமாக எடுக்கப்பட்ட நடவடிக்கையால் பாதகம் அல்லது தடை ஏற்படாமல் காத்தல்.''

பிரிட்டிஷ் நிதி-மூலதனத்தின் நேரடியான நலன்கள், வர்த்தகமும் முதலீடும், இந்தியாவில் இயங்கும் பிரிட்டிஷ் கம்பெனிகள், கடன், ரயில்வேக்கள், பாங்குத் தொழில் ஆகிய பிரத்தியேகமாய்ப் பாதுகாக்கப்பட்ட அல்லது தனி அதிகாரிகளிடம் ஒப்படைக்கப் பெற்ற விஷயங்கள் தொடர்பான, சட்டத்தின் சிறப்பு (மிக நீளமான)ப் பிரிவுகளைத் தொடருவதானால், அரசியல் திட்டம் முழுவதையும் பொதுவாக ஆய்வு செய்யும் நோக்கத்திற்கு நீண்ட நேரமாகும். ஆனால், இந்தியாவில் நிதி-முதலாளித்துவச் சுரண்டல் முறையின் பாதுகாப்புக்கான, விரிவான யந்திர அமைப்பு நுட்பக் கருவியாக அரசியல் திட்டத்தின் மெய்யான பணியை வெளிப்படுத்துவதற்குச் சட்டத்தின் இப் பிரிவுகளே மிக மிக விளக்கம் தருவன என்பதைக் கூறிவிட வேண்டும்.

அரசியல் திட்டத்தின் மாகாணப் பிரிவுகள், பிற்போக்கானதும், நடைமுறையில் உண்மையான யதேச்சாதிகாரமானதுமான மைய ஆட்சி யந்திரத்துக்கு அடங்கியவை. பொதுவாக, மைய ஆட்சி யந்திரத்தின் சரியான பாகங்களை சற்று எளிய வடிவத்தில் மாகாண ஆட்சி, யந்திரங்களை மீண்டும் படைக்கின்றன. மாகாண கவர்னருக்கு அதே மாதிரி மேலதிகாரங்கள், சட்டங்களைத் தடை செய்யவும் அல்லது சுயேச்சையாகச் சட்டம் இயற்றவும், போலீஸ் மீது சக்திவாய்ந்த அதிகாரம், சட்டம், ஒழுங்குமுறை, நிதி மீது அதிகாரம், அவருக்கே உரிய ஏழு பொறுப்புகள் அடங்கிய ஒரு பட்டியல் உண்டு. அது போலவே சட்ட சபைகள் வகுப்பு அடிப்படையில் அமைக்கப்பட்டவை; மேல் சபைகள் முன்பு மாகாணங்களில் இல்லை, இப்போது வங்காளம், பம்பாய், மதராஸ், ஐக்கிய மாகாணங்கள், பீகார் ஆகிய முக்கிய மாகாணங்களில் இப்போது திணிக்கப்பட்டன.

ஆயினும், மையத்தில் இருப்பதை விட மாகாணங்களில் இருக்கும் முறை வளைந்து கொடுக்கும் தன்மை வாய்ந்தது, ஒரு

மக்கள் இயக்கத்தினுல் பின்வரும் காரணங்களால் எளிதில் பாதிக்கப்படக்கூடியது:

முதலாவதாக, மாகாணங்களில் அரசர்கள் என்ற அங்கங்கள் இல்லை. சட்ட சபைகள் முற்றிலும் தேர்ந்தெடுக்கப்பட்டவை, நேர்முகமாய் தேர்ந்தெடுக்கப்பட்டவை; ஆனுல், மேல் சபைகள் பிற்போக்கானவை, மிகவும் கட்டுப்படுத்தப்பட்ட வாக்குரிமை மீது அமைக்கப்பட்டவை.

இரண்டாவதாக, மையத்தில் இருப்பதுபோல் ஒதுக்கீடுதுறைகள் இல்லை; போலீஸ் சம்பந்தமாகமட்டும் சிறப்பு விதிகள் உள்ளன. கவர்னர் தம் சொந்த நிர்வாகத்தின் கீழ் போலீஸ் விதிகளை வைத்திருக்கிறுர்; ரகசியப் போலீஸ் அல்லது அரசியல் போலீஸ் சிறப்பு விதிகளால் பாதுகாக்கப்படுகிறது, அவர்களுடைய ஆவணங்கள் கூட இந்திய அமைச்சர்களுக்குக் கிடைக்காது. ''சட்டத்தால் ஏற்படுத்தப்பட்ட அரசைக் கவிழ்க்கும்'' நோக்கம் இருப்பதாய்க் கருதப்படும் எந்த இயக்கத்தையும் அடக்க கவர்னர் ''மாகாணத்தின் அமைதி அல்லது சமாதானத்திற்கு அபாயம் நேர்ந்துள்ளதாய்''க் கருதினுல், தம் விருப்பத்திற்கு ஏற்ப எந்த அதிகாரத்தையும் மேற்கொள்ளலாம். அதிகார யந்திரத்தைப் பொறுத்தமட்டில், இந்த மிகக் கடுமையான வரையறைகளுக்கு உட்பட்டு, மாகாண அமைச்சரவை ஆட்சி முறை முழுவதற்காகவும் செயலாற்றுவதுடன் ஓரளவு கூட்டுப் பொறுப்பையும் வளர்க்கலாம்.

மூன்றுவதாக, சட்டம் இயற்றுவதில் அம்மாதிரி விரிவான தடைகள் இல்லை-சட்டமியற்றும் அதிகாரம் விரிவாக இருப்பதால் அல்ல, குறுகலாக இருப்பதுதான் காரணம். பிரிட்டிஷாரின் சிறப்பு நலன்களையோ, பொருளாதார நிதி முறையையோ பாதிக்கும் அனைத்திந்திய தன்மை வாய்ந்த முக்கியமான பிரச்னைகள் மாகாணங்களில் எழுவதற்கில்லை.

ஆகையால் மிகவும் குறுகிய எல்லைகளுக்குள், மக்களின் ஆதரவு பெற்ற அமைச்சர்கள் மாகாணங்களில் ஆட்சிபுரியும் பணியாற்ற முடியாவிட்டாலும், கட்டுப்படுத்தப்பட்ட பயனுள்ள பணியாற்ற முடியும்.

மாகாண சட்டசபைகளின் வாக்காளர் தொகுதியில், 11 மாகாணங்களில் 3.01 கோடி வாக்காளர்கள் அல்லது பிரிட்டிஷ் இந்தியாவின் மக்கட் தொகையில் 11 சதவீதம் (மாண்டேகு-செம்ஸ்போர்டு அரசியல் திட்டப்படி 2.8 சதவீதம்). பிரிட்டனில் மக்கட் தொகையில் 67 சதவீதத்தினர் வாக்குரிமை பெற்றிருந்ததோடு இதை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். சொத்து, செலுத்தும் வரி, ஒரு குறிப்பிட்ட மதிப்புள்ள குத்தகை வைத்திருத்தல்,

இவற்றோடு கல்வியறிவுத் தகுதி-வாக்குரிமைபெற இவையே தகுதிகள். பெண் வோட்டர்களின் தொகை 43 லட்சம். 1937 தேர்தல்களில், போட்டி இருந்த தொகுதிகளில் பதிவான வோட்டுகள் 1.55 கோடி அல்லது அத்தொகுதிகளின் வாக்காளர்களில் 55 சதவீதம்.

பதினோரு மாகாண சட்ட சபைகளில் 1,585 இடங்களின் பிரிவினை வருமாறு:

| | |
|---|---|
| பொது இடங்கள் (எல்லாருக்கும்) | ....657 |
| முஸ்லீம்கள் | ....482 |
| அட்டவணையிலுள்ள இனங்கள் | ....151 |
| வர்த்தகமும் தொழிலும் | .... 56 |
| பெண்கள் | .... 41 |
| தொழிலாளர்கள் | .... 38 |
| நிலக்கிழார்கள் | .... 37 |
| சீக்கியர்கள் | .... 34 |
| ஐரோப்பியர்கள் | .... 26 |
| பின்தங்கிய பகுதிகளும் பழங்குடிகளும் | .... 24 |
| இந்தியக் கிறித்தவர்கள் | .... 20 |
| ஆங்கிலோ இந்தியர்கள் | .... 11 |
| பல்கலைக் கழகம் | .... 8 |
| மொத்தம் | .. 1,585 |

இன்னும் கடுமையான, பிற்போக்கான உட்பிரிவு இருப்பினும் கூட்டரசு சட்டசபையில் இருப்பதைவிட இங்கு செயலின் சாத்தியக் கூறுகள் சாதகமானவை என்பதைக் காணலாம்.

பெரும்பாலான மாகாணங்களில் காங்கிரஸ் அமைச்சரவைகள் அமைப்புக்குச் சாத்தியமான நிலைமைகள் இவைதாம். ஆயினும், இந்த மாகாண அமைச்சவைகளுக்கு மிகவும் வரையறுக்கப்பட்ட அதிகாரங்களுக்கு மேல் அதிகமான அதிகாரங்கள் இருந்ததாகவோ, சுயாட்சி பெறுவதற்காக காத்திருக்கும் அடிப்படைப் பிரச்னைகளைத் தொட முடியும் என்றோ கற்பனை செய்வது தவறாக இருக்கும்.

யதேச்சாதிகாரமான மையத்தின் ஆட்சியதிகாரம் பிரிட்டிஷாரின் கைகளில் இருப்பதும், எந்த நடவடிக்கைக்கும் சட்ட வரையறை இருப்பதும் அல்லது பிரிட்டிஷாரின் நலன்களைப் பாதிக்கும் எந்த முக்கியமான பிரச்னையிலும் தலையீடு இருப்பதும் அல்லது அடிப்படை ஆட்சி நிறுவனத்தில் தலையீடு இருப்பதும், நிதி பற்றுக்குறையும், பின்னணியில் கவர்னரின் மேலதிகாரங்

களும், மாகாண அமைச்சர்கள் மிகவும் கட்டுப்படுத்தப்பட்ட எல்லை களுக்குள்ளேயே பணியாற்ற விடுகின்றன. நிதி விஷயத்தில் இது மிகவும் ஓங்கித் தெரிகிறது. வருமான வரி, சுங்கங்கள் போன்று விரிவடையும் வருவாய் இனங்கள் மைய அரசுக்கு (நிமேயர் தீர்ப் யின் கீழ் ஒரு பகுதியை புதிதாய் ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்றுள்ள விதிகளுக்கு உட்பட்டு) ஒதுக்கப்பட்டுள்ளன; மைய அரசின் வரவு-செலவு திட்டத்தில் 80 சதவீதம், இந்தியப் பிரதி நிதிகளின் வோட்டுக்கு உட்படாதது என்பதைக் குறிப்பிட வேண்டும். மறுபக்கம், செலவினங்களில் உடல் நலம், கல்வி போன்ற ஆக்க இனங்கள் மாகாணங்களுக்குத் தரப்பட்டுள்ளன; அவற்றுக்கான முக்கிய வருவாய் வழியோ, துன்பகரமான, வளர்ந்து தரும் தன்மையற்ற, மக்களால் விரும்பப்படாத நிலவரி ஆகும்-அவசரமாய் அது குறைக்கப்பட வேண்டிய நிலைமை இப் போது. மாகாண அமைச்சவைகளுக்கு தலையிடுவதும், அதே சமயம் உடல் நலம் கல்வி போன்ற அவசியமான எல்லா சமூகப் பணிகளையும் அல்லது ஆக்ககரமான வளர்ச்சியையும் அலட்சியம் செய்வதால் ஏகாதிபத்தியத்துக்கு உண்டாகும் அபக்கியாதியை அவற்றின் தலையில் கட்டுவதும்தான் இந்தப் பிரிவினையின் நோக்கம் என்பது கண்கூடு.

எனவே, மாகாண அமைச்சவைகளை எந்தப் பொருளிலும் சுயாட்சி சாதனையாகக் கருத முடியாது; வேலியிடப்பட்ட எல்லை களுக்குள் கனமாகத் தலையுண்டவாறு அவை அதிகாரம் செலுத்த வேண்டியுள்ளது என்பதால் மட்டும் அல்ல, ஆனால், எல்லா வற்றுக்கும் மேலாக, இந்திய மக்களுக்கு முன்னுள்ள ஆதாரப் பிரச்னைகளை அவை தொட்டுப் பார்க்க முடியாது என்பதாலும் தான். முக்கியமான மாகாணங்களில் காங்கிரஸ் அமைச்சரவை அமைப்பு, தேசீய இயக்கம் இன்னொருபடி முன்னேறி சுயாட்சிப் போரில், போராட்ட முறைப்படி சிறப்பான நிலையை அடைந் துள்ளதைத்தான் குறிப்பிடுகிறது. ஆனால் சுயாட்சிக்கான, மெய் யாக நாட்டு விடுதலைக்கான போர் இன்னும் போராடப்பட வேண்டியதாகவே இருக்கிறது.

மொத்தத்தில் அரசியல் திட்டத்தை, குறிப்பாக, உறுதியான மையக் கூட்டரசு சம்பந்தமாக, ஆழ்ந்து ஆராய, ஆராய அது ஜனநாயகத்தை மறுப்பது மட்டுமல்ல, இந்தியாவின் மீதுள்ள ஏகாதிபத்தியத்தின் பிடிப்பை வலுப்படுத்தவும், ஏகாதிபத்திய ஆட்சியின் கட்டுக்கோப்புக்குள் பிற்போக்கு சக்திகளின் மதிப்பினை வலுப்படுத்தவும் அது நுட்பமான யந்திரமாகப் பயன்படுகிறது என்பதும் வெளிப்படுகிறது. ''பொறுப்பு'' என்பது கேலி. ஏகாதி பத்தியத்தின் அதிகாரம் உறுதியாக்கப்பட்டு கெட்டிப்பட்டு விட்

டது. இந்தத் திட்டத்தின் எல்லேக்குள் சுயாட்சிக்கான உண்மை யான போராட்டம் நடைபெற முடியாது. அதன் யந்திரம் வாயி லாகத் துணைப்பணியும் ஆயத்தப்பணியும் நிகழ்ந்திருந்தாலும், இறுதியான போராட்டம் இந்த அரசியல் திட்டத்துக்கு வெளியில் அதனை எதிர்த்துத்தான் நடைபெற முடியும்.

அந்த அரசியல் திட்டம் பற்றி ஒவ்வொரு ஜனநாயகவாதியின் இறுதியான தீர்ப்பும், பிரிட்டனிலுள்ள தலைசிறந்த அரசியல் திட்ட வல்லுநர் பேராசியர் ஏ.பி. கீத்தின் தீர்பை ஒத்ததாகத் தான் இருக்க முடியும்; அவர் இரக்கமற்ற சொற்களில் அதை வருணிக்கிறார்:

> ''பொறுப்புள்ள அரசாங்கம் நடவாத காரியம் என்பதை வெளிப்படையாக அறிவித்திருக்க வேண்டும் அல்லது உண் மையை ஏற்றுக்கொண்டிருக்க வேண்டும் என்ற கருத்தை எதிர்க்கச் சிரமமாய் இருக்கிறது; தனிநபரின் தீர்ப்புரிமைப் படி பொறுப்புகளையும் செய்கைகளையும் நிறைவேற்றலாம் என்கிற ஆட்சிமுறையான இந்த கலப்பினப் பொருளுக்கு நன்றியோ, ஒத்துழைப்போ தாராளமாய் வரக் காணும் என்பதில் வியப்பேதுமில்லை.
>
> ''கூட்டாட்சித் திட்டம் பற்றி எவ்வகைத் திருப்தியும் கொள்வது கஷ்டம். அதன் உள்ளுறைப் பகுதிகள் ஒன்றோ டொன்று சேர்க்க முடியாத வண்ணம் மிகச் சமநிலையற்றவை யாக உள்ளன. பிரிட்டிஷ் இந்தியாவினால் அளிக்கப்பட்ட அபாயகரமான ஜனநாயக அம்சங்கள் எதனுடனும் போரிடு வதற்காகத் தூய மிதவாத அம்சம் ஒன்றுக்கு வழி செய்ய வேண்டும் என்பதற்காக இந்தத் திட்டம் பிரிட்டிஷார் தரப்பில் ஆதரிக்கப் படுகிறது என்பது மிக வெளிப்படை..... பிரிட்டிஷ் இந்தியாவின் மைய அரசுக்கு பொறுப்பாட்சி வழங்கும் பிரச்னையைத் தட்டிக் கழிக்க வேண்டும் என்பதனாலேயே கூட் டரசுத் திட்டம் வகுக்கப்பட்டது என இந்தியாவில் எழுப்பப் படும் எதிர் வாதத்தினை மறுப்பது கடினம். மேலும், கூட்டரசின் அதிகாரத்திலிருந்து தற்காப்பையும் வெளிநாட்டு விவகாரங் களையும் விலக்கி விட்டபடியால்—தவிர்க்க முடியாத செயல் அது—பொறுப்பு வழங்கப்பட்டு விட்டதாய்ச் சொல்லப்படு வதைப் பொருளற்றதாக்கிவிட்டது.''
>
> (பேராசிரியர் ஏ.பி.கீத், ''இந்தியாவின் ஒரு அரசியல் திட்ட வரலாறு 1600-1935,'' 1936, பக்.473-4.)

அத்தியாயம்—15

# போருக்கு முன் தேசீயப் போராட்டம்

''காங்கிரஸ் பேச்சாளர்கள் 'சுதந்திரம்' என்ற சொல்லைத் துர்தேவதை மந்திரம் போல் ஆக்கிவிட்டது துரதிர்ஷ்ட வசம்.''

—ஜெட்லண்டு பிரபு, இந்தியாவின் ராஜ்யக் காரியதரிசி செய்தி நிருபர்களுக்கு அளித்த பேட்டியில், பிப்ரவரி 11, 1940.

**1930**-1934—மக்கள் போராட்டங்கள் முதல் இந்திய தேசீயத்தின் வளர்ச்சி தெளிவாய்க் குறியிட்ட இரண்டு நிலைகள் உள்ளது. முதலாவதாக, அடக்கு முறையின் பலத்த தாக்குதலுக்குப் பிறகு நிறுவனம் திருத்தி அமைக்கப் பட்டு, தேர்தல்கள் வாயிலாகவும் காங்கிரஸ் மாகாண அமைச் சவைகள் வாயிலாகவும் முன் எக்காலத்திலும் அடைந்ததை விடப் பெரிய அதிகார நிலையை அடையும் வகையில் முன்னேறி யதைத் தொடர்ந்து கொள்கையில் புது வழிகள் காணப்பட்டன. 1934-39 ஆண்டுகளின் சாதனை இது. அப்பால் வளரும் நெருக் கடி தொடர்ந்தது; 1938-39லேயே அதனுடைய முதல் வடிவங் கள் புலப்பட்டன; வளர்ந்தவாறு, போர் தொடங்கப்பட்டதும் புது மோதலுக்கு வழி ஏற்பட்டது.

## 1. புதிய எழுச்சி

1936 வசந்தத்தில் தேசீய காங்கிரஸ் லக்னேவில் கூடிய போது, 1934 இல் ஓர் உச்ச நிலையை எட்டிய கடும் போராட்டத் தின், அரசாங்க அடக்குமுறையின் விளைவுகளிலிருந்து தன் படை களை மீட்டுக் கொண்டிருந்தது. உறுப்பினர் தொகை ஐந்து லட்சத் துக்கும் கீழே விழுந்து விட்டது; 457,000 பதிவான உறுப்பினர் களே இருந்தனர். 1934-36 காலகட்டம் காங்கிரசின் வாழ்க்கை யில் இன்பகரமானதொரு காலகட்டமாக இல்லை. 1934 இல் ஏற் பட்ட தோல்வியின் உடனடியான விளைவு இன்னும் புதிய முன் னேற்றத்துக்கு இடம் தரவில்லை. காந்தி பிரியும் போது விட்டுச் சென்ற சொத்தான, பிற்போக்கான, நிறுவன அமைப்பு விதி

முறை, 1934 இல் பம்பாய் காங்கிரசில் ஏற்கப்பட்டு, முன்னேற்றத்தைத் தடுக்கப் பயன்பட்டது என்பதில் ஐயமில்லை (லக்னோவில் அது ஓரளவு திருத்தப்பட்டது). 1934 இல் இறுதியில் சட்ட சபைத் தேர்தல்களில் கலந்து கொண்டதை அடுத்து, பணிக்களம் பாராளுமன்றக்களத்திற்கு மாறிவிட்டது; ஆனால், பார்லிமெண்டரி நடவடிக்கை கலைப்பூட்டும் தன்மை வாய்ந்ததாக இருந்ததால் மக்களுக்கு உற்சாகம் தருவதாக இல்லை. லக்னோ காங்கிரசில் நேருவின் தலைமை உரை, இருந்த நிலைமையின் பலவீனத்தை இரக்கமின்றி கண்டித்து, ''மக்களோடு நமக்குள்ள தொடர்பு பெரிதும் விட்டுப் போய் விட்டது,'' என ஒப்புக் கொண்டது.

லக்னோவில் ஜவகர்லால் நேருவின் காங்கிரஸ் தலைமையுரை சோஷலிச லட்சியத்தை அறிவித்ததற்காகவும், பாசிஸத்தையும் பிற்போக்கையும் எதிர்த்துத் திரண்டெழும் உலகப் போராட்ட சூழலில் இந்தியப் போராட்டத்தைப் பொருத்திக் காட்டியதற்காகவும், எல்லா ஏகாதிபத்திய எதிர்ப்புச் சக்திகளையும் கொண்ட பரந்த மக்கள் முன்னணி அல்லது மக்கள் கூட்டணி வேண்டும், அதற்கு காங்கிரசில் பெரிதும் பிரதிநிதித்துவம் உள்ள நடுத்தர வர்க்கத்தாரோடு தொழிலாளர்களையும் குடியானவர்களையும் திரட்ட வேண்டும் என்று கோரியதற்காகவும் நினைவு கூரத்தக்கது. எல்லா பக்கங்களிலும் புதிய துடிப்புகள் காணப்பட்டன. காங்கிரசில் சோஷலிஸ்டுக் கட்சி முன்னேறிக் கொண்டிருந்தது. ஏற்கனவே, லக்னோவில் ஒரு முக்கியமான, ஆனால் சிறிய கோஷ்டியாக இருந்த அது 1936, டிசம்பரில் பெய்ஸ்பூர் காங்கிரசில், காங்கிரஸ் கமிட்டியில் மூன்றில் ஒரு பகுதி எண்ணிக்கை கொண்டதாகி விட்டது. காங்கிரசோடு தொழிலாளர்கள் , குடியானவர்களின் நிறுவனங்களைக் கூட்டாக இணைக்க வேண்டும் என்று லக்னோவில் நேரு கொண்டுவந்த தீர்மானம் காங்கிரஸ் கமிட்டியால் 35 வோட்டுகளுக்கு 16ஆல் தோற்கடிக்கப்பட்டது; ஆனால் அப்பிரச்னையை மேலும் பரிசீலனை செய்வதற்காக மக்கள் தொடர்புகள் கமிட்டி அமைப்பதற்கு ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆனால், மக்களோடு நெருக்கமாக, பயனுள்ள முறையில் தொடர்பு கொள்ள வேண்டும், மக்களின் சமூக, பொருளாதார நலன்களோடு தொடர்பு கொள்ள வேண்டும் என்ற கருத்து எல்லா இடங்களிலும் ஆழ்ந்து ஊடுருவியிருந்தது. கைநூற்பையும் முன்னேற்றத்தையும் பற்றிப் போதனை செய்வதிலேயே முன்பு கவனம் செலுத்தியதற்கு மாறாக, குடியானவர்களின் உண்மையான கோரிக்கைகள் கொண்ட உருவானதொரு வேளாண்மை வேலைத் திட்டத்தை உருவாக்க முயற்சிகள் செய்யப்பட்டு வந்தன. பெய்ஸ்பூரில், குத்தகைகள் நிலவரிக் குறைப்பு, கடன்களை நிராகரித்தல் அல்லது

குறைத்தல், கட்டாயக் கூலிமுறையையும் நிலப்பிரபுத்துவக் கட களையும் ஒழித்தல், விவசாயத் தொழிலாளர்களுக்கு நியாயமா கூலி, குடியானவர்கள் சங்கம் அமைக்க உரிமை முதலிய பதின் மூன்று அம்சங்களைக் கொண்ட தற்காலிக வேளாண்மை வேலை திட்டம் ஒன்று ஏற்கப்பட்டது.

1936 ஏப்ரலில் கூடிய லக்னோ காங்கிரசிலிருந்து, தேசிய காங்கிரசின் நவீன வரலாறு ஆரம்பமாகிறது. இங்கிருந்து விரை வானதொரு முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. 1936 டிசம்பரில் பெய்ஸ்பூரில் காங்கிரஸ் கூடும்போது உறுப்பினர் தொகை 636,000க்கு உயர்ந்து விட்டது. 1937 இறுதியில், தேர்தல் களுக்கும் மாகாண அமைச்சவைகள் அமைப்புக்கும் பிறகு அது முப்பது லட்சத்திற்கும் மேல் தாவி விட்டது, 1938 பிப்ரவரியில் ஹரிபுராவில் கூடும்போது அதன் தொகை 3,102,000. 1938 இறுதியளவில் அது 40 லட்சம் குறியைக் கடந்து விட்டது—ஐக்கிய மாகாணங்களில் மட்டும் 12½லட்சம். 1939 இல் திரிபுரி காங் கிரசின் போது அது 50 லட்சத்தைத் தொட்டது.

## 2. 1937 ஆம் ஆண்டுத் தேர்தல் வெற்றி

புதிய அரசியல் திட்டம்பற்றிக் காங்கிரசின் கருத்து என்ன என்பது, அரசியம் நிர்ணயசபைக் கோரிக்கை ஏற்பட்டபோது 1934இல் கொள்கையளவில் ஏற்கனவே அறிவிக்கப்பட்டுவிட்டது. புதிய சட்டத்தின் கீழ், வருகிற ஆண்டில் தேர்தல்களில் போட்டி யிடும் முடிவை லக்னோ காங்கிரஸ் ஏற்றுக் கொண்டது. 1936 ஆகஸ்டில் தேர்தல் அறிக்கை வெளியிடப்பட்டது; பெய்ஸ்பூரில் உறுதியாக்கப்பட்டது. 1936 டிசம்பரில் பெய்ஸ்பூர் காங்கிரஸ் தீர்மானம், தேர்தலில் போட்டியிடுவதன் உறுதியான நோக்கத்தை அறிவித்தது:

''நாட்டு மக்களின் அறிவிக்கப்பட்ட விருப்பத்துக்கு மாறாக இந்தியாவின் மீது திணிக்கப்பட்டுள்ள அரசியல் திட் டத்தையும், 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத் தையும் முழுமையாகத் தான் நிராகரிப்பதைக் காங்கிரஸ் திரும்பவும் வலியுறுத்துகிறது. இந்த அரசியல் திட்டத்தோடு எவ்வகையிலாவது ஒத்துழைத்தால் அது இந்தியாவின் விடு தலைப் போராட்டத்தைக் காட்டிக் கொடுப்பதாகும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிடியை வலுப்படுத்துவதாகும்; ஏகாதி பத்திய ஆதிக்கத்தின் கீழ் மிகக் கொடிய வறுமையில் முன்பே ஆழ்ந்துள்ள இந்திய மக்களை மேலும் சுரண்டலுக்கு உட்படுத்துவதாகும். ஆகையால், இந்த அரசியல் திட்டத் துக்குப் பணிவதில்லை, அதனோடு ஒத்துழைப்பதில்லை என்ற தன்

உறுதியைக் காங்கிரஸ் மீண்டும் அறிவிப்பதுடன், சட்டசபை களுக்கு உள்ளேயும் வெளியிலும் அதனை முடிவுக்குக்கொண்டு வருவதற்காக அதனேடு போராடும் தன் உறுதியையும் அறி விக்கிறது. இந்தியாவின் அரசியல், பொருளாதார அமைப் பைப்பற்றி ஆணையிட எந்த வெளிநாட்டுச் சக்திக்கோ அதி காரத்திற்கோ உரிமை இருப்பதாய்க் காங்கிரஸ் ஏற்கவில்லை, ஏற்காது. இத்தகைய ஒவ்வொரு முயற்சியும் இந்திய மக்களின் திரண்ட, தணிக்க முடியாத எதிர்ப்புக்கு ஆளாகும். இந்திய மக்கள் தங்களால் உருவாக்கப் பெற்ற ஓர் அரசியல் அமைப் பையே ஏற்பர், அது ஒருநாடாக இந்தியாவின் சுதந்திரத்தை அடிப்படையாய்க் கொண்டதாகவும், அவர்களுடைய தேவை களுக்கும் விருப்பங்களுக்கும் ஏற்றபடி வளர்ச்சிபெற முழு வாய்ப்பு அளிப்பதாகவும் இருக்கும்.

அரசியல் அதிகாரம் மக்கள் அனைவரிடமும் மாற்றப் பெற்று, அரசாங்கம் அவர்களுடைய பயனுள்ள ஆட்சியின் கீழ் இருக்கிற உண்மையான ஜனநாயக அரசு இந்தியாவில் விளங்குவதையே காங்கிரஸ் வேண்டுகிறது. இத்தகைய ஒரு அரசு, வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் தேர்ந் தெடுக்கப்பட்டு, நாட்டின் அரசியல் அமைப்பை இறுதியாகத் தீர்மானிக்கும் அதிகாரம் படைத்த ஓர் அரசியல் நிர்ணய சபை வாயிலாகவே தோன்ற முடியும். இந்த முடிவுக்காகவே காங்கிரஸ் நாட்டில் பாடுபடுகிறது, மக்களைத் திரட்டுகிறது, இந்தக் குறிக்கோளை சட்டசபைகளில் காங்கிரஸ் பிரதிநிதி கள் எப்போதும் நினைவில் வைத்திருக்க வேண்டும்...

''புதிய அரசியல் திட்டத்தின் கீழ் சட்ட சபைகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட காங்கிரஸ் உறுப்பினர்கள் பதவியை ஏற்பதா அல்லது ஏற்பதில்லையா என்ற பிரச்னை, மாகாண சபைத் தேர்தல்கள் முடிவுற்ற பின் எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு விரைவாக அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியால் முடிவு செய்யப்படும்.''

பதவி ஏற்புப் பிரச்னைபற்றி பெயிஸ்பூரில் கருத்து வேற்றுமை இருந்தது, பெரும்பான்மையோர் முடிவைத் தள்ளி வைப்பதை ஆதரித்தனர். டாங்கேயின் (முன்னாள் மீரத்கைதி, கம்யூனிஸ்டுத் தலைவர்) திருத்தம் ஒன்று, அரசியல் நிர்ணயசபை ஏற்படுத்து வதைச் சாத்தியமாக்க மக்கள் போராட்டத்திற்கு ஆயத்தம் செய்யக் கோரியது; அது காங்கிரஸ் கமிட்டியில் 83க்கு 45 வோட்டுகளும், முழு காங்கிரசில் 451க்கு 62 வோட்டுகளும் பெற்றுத் தோற்றது. பதவியேற்பை உறுதியாக மறுக்கக் கோரிய

மற்ருெரு திருத்தம் காங்கிரஸ் கமிட்டியில் 87க்கு 48 வாக்குகள் பெற்றுத் தோற்றது.

அனைத்திந்திய அடிப்படையில் தேர்தலில் போட்டியிட்ட ஓரே நிறுவனம் காங்கிரஸ்தான். அவசர அவசரமாய்ப் படைக்கப்பட்ட, பலவகைப்பட்ட வகுப்புவாதக் கட்சிகளும், காளான்கள் போல் முளைத்த ''கட்சிகளும்'' கோஷ்டிகளும்—அடிக்கடி அரசிஞல் ஊக்கப் பெற்றவை என்பதை மறைக்க முயற்சி செய்யப்படவில்லை—பல மாகாணங்களில் காங்கிரசை எதிர்த்துப் போராடமுற்பட்டும், தேசீய காங்கிரசே ஐக்கிய தேசீய முன்னணியின் பிரதிநிதியாக ஓங்கி நின்றது. இந்தத் தேசீய ஒற்றுமை, நாட்டின் முழு விடுதலையே குறிக்கோள் என்ற அசைக்க முடியாத அறிவிப்பு பல ஆண்டுப் போராட்டம், மொத்தக் கைதுகள், சட்ட திட்டங்களைக் கடந்த மக்கள் போராட்ட வரலாறுதான் காங்கிரஸ் தேர்தல் வெற்றியின் முதல் அம்சம்.

நாட்டு முழு விடுதலை லட்சியத்தைப் பற்றியும், அரசியல் நிர்ணய சபையைப்பற்றியும் அறிவித்து, ஏகாதிபத்தியத்தின் அரசியல் திட்டத்தைத் தங்கு தடையின்றிக் கண்டனம் செய்து, சட்டசபைக்குப் பிரதிநிதிகளை அனுப்புவதன் நோக்கம் ''எந்த விதத்திலும் சட்டத்தோடு ஒத்துழைப்பதல்ல, அதைத் தீர்த்துக் கட்ட அதனோடு போராடத்தான்'' என்று விளக்கிய ஆவணம் காங்கிரஸ் தேர்தல் அறிக்கை. அதே சமயம், தேர்தல் அறிக்கை பொதுவான கொள்கைகளின் அடிப்படையோடு நின்றுவிடவில்லை. உருவான உடனடியான ஒரு வேலைத் திட்டத்தையும் அது கொடுத்தது; குடிமுறை சுதந்திரங்களையும் சமவுரிமைகளையும் வேண்டும் ஜனநாயகக் கோரிக்கைகளோடு மக்களின் பரவலான அடித்தளத்தில் இருப்போரையும் கவர்ச்சிக்கிற ஒரு சமூக, பொருளாதார வேலைத் திட்டத்தையும் வெளியிட்டது. காங்கிரஸ் தேர்தல் வெற்றியின் இரண்டாவது அம்சம் இது.

பின்னர் வரப்போகும் காங்கிரஸ் அமைச்சரவைகள் எந்த வழிகளில் செயல்பட வேண்டும் என்பதைக் குறிப்பிடுவதால் காங்கிரஸ் தேர்தல் அறிக்கையின் சமூக, பொருளாதார வேலைத் திட்டம் சிறப்பான முக்கியத்துவம் உடையதாகும். முக்கியமான பகுதிகள் வருமாறு:

''இந்தச் சட்டசபைகள் வாயிலாக விடுதலையைப் பெறமுடியாது என்பதையும், வறுமை வேலையின்மை ஆகிய பிரச்னைகளைப் பயனுள்ள முறையில் தீர்க்க முடியாது என்பதையும் காங்கிரஸ் உணருகிறது. ஆயினும், இந்திய மக்களுக்கு முன்னிலையில் காங்கிரஸ் தன் பொதுவான வேலைத்

திட்டத்தை வைப்பதற்குக் காரணம், அது எதற்காகப் பாடு படுகிறது, அதற்கு அதிகாரம் கிடைக்கும் போது அது என்ன சாதிக்க முயலும் என்பதை அவர்கள் அறிய வேண்டும் என்பது தான்.

''1931இல் கராச்சியில் நடந்த காங்கிரஸ் கூட்டத்தில், பொதுவான காங்கிரஸ் லட்சியம், அடிப்படை உரிமைகள் தீர்மானத்தில் வரையறுத்துக் கூறப்பட்டது. அந்தப் பொது வான விளக்கம் இப்போதும் பொருந்தும். ஆயினும் சென்ற ஐந்து ஆண்டுகளாய் முற்றிவரும் நெருக்கடி காரணமாக வறுமை, வேலையில்லாமை, மற்ற பொருளாதாரப் பிரச்னை களை மேலும் பரிசீலனை செய்ய வேண்டிய தேவையை உண் டாக்கியுள்ளது.

''பழமையானதும் அடக்குமுறையால் துன்புறுவதுமான நிலக்குடி முறையாலும், நிலவரி முறைகளும், அண்மை ஆண்டு களில் விவசாய விளைபொருள்களின் விலைகளில் ஏற்பட்ட பெரும் மந்தத்தாலும் இறுகிவிட்ட, குடியானவர்களின் கடன் சுமையும், வேலை இல்லாமையும், கொடிய வறுமையும் தான் நாட்டின் முன்னுள்ள மிக முக்கியமான அவசரமான பிரச்னை யாகும்.

''கராச்சியில் வெளியிட்ட அறிவிப்பைக் காங்கிரஸ் திரும்பவும் வலியுறுத்துகிறது—நிலக் குடிமுறையிலும் நில வரி முறையிலும் குத்தகை முறையிலும் சீர்திருத்தம் செய்யப் பட வேண்டும் என்றும், சிறு உழவர்கள் இப்போது செலுத் தும் விவசாயக் குத்தகையிலும் நிலவரியிலும் கணிசமாய் குறைப்பு செய்தும், பொருளாதார ரீதியில் கட்டுபடியாகாத நிலவுடைமைகளுக்கு குத்தகையிலிருந்தும் நிலவரியிலிருந்தும் விலக்கு அளித்தும் அவர்களுக்கு உடனடியான தணிப்பு உண்டாக்கி விவசாய நிலத்தின் மீதுள்ள சுமையை நியாய மான முறையில் குறைக்க வேண்டும் என்றும் அது கோரு கிறது.

''கடன் பிரச்னை அவசரமான பரிசீலனை வேண்டுவதாகும்; கடன் வசூலை நிறுத்தி வைக்க உத்தரவு பிறப்பித்து, கடன் களில் ஆய்வு செய்து அவற்றைக் குறைத்து, அரசு வாயிலாக மலிவான கடன் வசதிகளுக்கு ஏற்பாடு செய்யத் திட்டம் வகுக்கப்பட வேண்டும். இந்த உதவி விவசாய நிலக்குத்தகை தாரர்கள், குடியானவ உரிமையாளர்கள், சிறு நிலவுடமை யாளர்கள் சிறு வியாபாரிகள் ஆகியோருக்கு வழங்கப்பட வேண்டும்.

''தொழில்துறைத் தொழிலாளர்களை பொருத்த மட்டில், அவர்களுக்குத் தக்க வாழ்க்கைத் தரமும், வேலைநேரமும், நாட்டின் பொருளாதார நிலைமைகள் அனுமதிக்கும் அளவு சர்வதேச அளவுகோல்களுக்குப்பொருந்தத் தொழிலாளர் நிலைமைகளும், அதிபர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையிலெழும் தகராறுகளைத் தீர்க்கத்தக்க சாதனமும், வயோதிகம், நோய் வேலையின்மை ஆகியவற்றின் பொருளாதார விளைவுகளுக்கு எதிரான பாதுகாப்பும், சங்கங்கள் அமைத்துக் கொள்ளத் தொழிலாளர்களுக்கு உரிமையும், தங்கள் நலன்களின் பாதுகாப்புக்காக வேலை நிறுத்தம் செய்யும் உரிமையும் பெறுவதே காங்கிரசின் கொள்கை.

''பொதுப்பணியின் எல்லாத் துறைகளிலும் சமூக முறையிலோ அல்லது சட்ட ரீதியாகவோ உள்ள இன (ஆண், பெண்)ப் பலவீனங்களை அகற்றுவதே தன் நோக்கம் என்பதைக் காங்கிரஸ் முன்பே அறிவித்துள்ளது. மகப்பேறு நலன்களுக்கும் பெண் தொழிலாளர்களுக்குப் பாதுகாப்புக்கும் ஆதரவாக அது கருத்து வெளியிட்டுள்ளது. விடுதலைப் போராட்டத்தில் இந்தியப் பெண்கள் ஏற்கனவே தலையாய பங்கு கொண்டுள்ளனர்; சுதந்திர இந்தியாவின் சலுகைகளிலும் கடமைகளிலும், இந்திய ஆடவர்களுக்கு நிகரான அளவில் அவர்கள் பங்கு கொள்ளும் காலத்தைக் காங்கிரஸ் எதிர்நோக்குகிறது.

''தீண்டாமையை விலக்குவது பற்றியும், ஹரிஜனங்களும் பின் தங்கிய வகுப்பினரும் சமூக, பொருளாதார முன்னேற்றம் அடைய வேண்டியதைப் பற்றியும் காங்கிரஸ் எவ்வாறு வலியுறுத்துகியது என்பது எல்லாருக்கும் தெரிந்ததே. எல்லா குடிமுறை விஷயங்களிலும் சமமான உரிமைகளோடு மற்றவர்களுக்குச் சரிசமமான குடி மக்களாய் அவர்கள் இருக்க வேண்டுமென அது கருதுகிறது.

''காங்கிரஸ் வேலைத் திட்டத்தில் கதருக்கும் கிராமத் தொழில்களுக்கும் ஊக்கம் தருவதும் ஒரு முக்கியமான திட்டமாய் நெடுங்காலமாய் இருந்துவருகிறது. பெரிய தொழில்களுக்குப் பாதுகாப்பு தரவேண்டும்; ஆனல், தொழிலாளர்கள், மூலப்பொருள் உற்பத்தியாளர்களின் உரிமைகளும் பாதுகாக்கப்பட வேண்டும்; கிராமத் தொழில்களின் நலன்களுக்கு உரிய மதிப்பு கொடுக்கப்பட வேண்டும்.''

குடியானவர்கள், தொழில்துறைத் தொழிலாளர்கள் ஆகியோரின் உடனடியான கோரிக்கைகளுக்குக் குரல் கொடுத்த இந்த விரிவான ஜனநாயகவேலைத் திட்டம் மாபெரும் மக்களாதரவைத்

திரட்டி (வாக்காளர் தொகுதிக்கு மிக அப்பாலும்கூட) காங்கிரஸ் தேர்தல் போராட்டத்தில் வெற்றி பெறுவதில் பெரும் பங்கு கொண்டது.

தேர்தல் முடிவுகள், தேசீய காங்கிரசின் வெற்றி வெள்ளம் அரசாங்கத்தையும் அதிகார வர்க்கத்தையும் மலைவு கொள்ளச் செய்யும் அளவுக்கு இருந்ததோடு, ஐக்கிய தேசீய விடுதலை வேட்கையைச் சக்தி வாய்ந்த முறையில் வெளியிடுவதாகவும் இருந்தது. அரசாங்கம் தன்னால் இயன்ற மட்டில் காங்கிரசுக்கு எதிரான சக்திகளைத் திரட்டிப் பார்த்து விட்டது. தேசீய காங்கிரசின் பொதுச் செயலாளர் போராட்டத்திற்குப் பின் வெளியிட்ட அறிக்கைப்படி, அரசு காங்கிரசை முறியடிக்கத் தன் செல்வாக்கைத் தீவிரமாய்ப் பயன்படுத்தியது:

> ''அரசு மிகவும் விழிப்பாக இருந்தது. காங்கிரசின் வெற்றி புதிய அரசியல் திட்டத்திற்குக் கெட்ட சகுனமாகும் என்று அதற்குத் தெரியும். எதிர்த்துக் கண்டனம் செய்ததையும் பொருட்படுத்தாமல் அவர்கள் இறுதிவரை தங்கள் செல்வாக்கை நேர்முகமாகவோ மறைவாகவோ பயன்படுத்திய வண்ணம் இருந்தனர். கட்சிகளை உண்டாக்க அவர்கள் உதவி புரிந்தனர். ஐக்கிய மாகாணங்களில் தேசீய விவசாயிக் கட்சியும், பஞ்சாபில் யூனியனிஸ்டுக் கட்சியும், வேறிடங்களில் உள்ள இவ்வகை வேறு கட்சிகளும் மாகாண அரசுகளின் ஆதரவு பெற்றவை.''
>
> (1938, ஹரிபுரா தேசீய காங்கிரசுக்குப் பொதுச் செயலாளரின் அறிக்கை.)

ஐக்கிய மாகாணங்களில், காப்புளார் நீதிமன்றச் செயலாளரினால் அதிகார பூர்வமான ஓர் அறிக்கை வெளியிடப்பட்டது:

> ''காப்புளார் நீதிமன்றம் சிறப்பாகப் பிரதிபலிக்கும் வகுப்பின் நலனுக்காகவும் பொதுவான விவசாய நலனுக்காகவும் எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்கு நசுக்கும் தோல்வியைக் காங்கிரசுக்கு ஏற்படுத்த வேண்டியது அவசியம்...... ஆகையால், நீதிமன்றம் காங்கிரஸ் வேட்பாளரைக் கடுமையாக எதிர்க்கிற வேட்பாளரை ஆதரிக்க முடிவு செய்துள்ளது......தொகுதிக்குப் பின் தொகுதியாக மாகாணத்தை முறையாக ஆய்வு செய்து, ஒவ்வொரு தொகுதியிலுமுள்ள விசுவாசமுள்ள வேட்பாளருக்கு ஆதரவாகத் தங்களை ஆயத்தம் செய்து கொள்ளுமாறு மாவட்ட அதிகாரிகள் அறிவுறுத்தப்படுகிறார்கள்.''

இந்தச் சுற்றறிக்கைக்காக அதிகார பூர்வமாக மன்னிப்பு கோரும் ஓர் அறிக்கையை வெளியிட வேண்டியிருந்தது; இவ்வாறு கண்களில் உறுத்தும்படி வெளிப்படையாக இல்லாவிடினும் சாத்திய மான அளவு செல்வாக்கு பயன்படுத்தப்பட்டது என்பதில் ஐயமில்லை.

காங்கிரஸ் வெற்றியின் அளவை முடிவுகளிலிருந்து அறுதியிடலாம். காங்கிரஸ் மொத்தம் 715 இடங்களைக் கைப்பற்றியது என்பதன் பொருட் செறிவு, பெயரளவில் இருந்த மொத்தம் 1,585 இடங்களில், வேறு சிறப்புப் பிரிவுகளுக்கு ஒதுக்கப்படாமல், பொதுவாகப் போட்டியிடக்கூடிய இடங்கள் 657 தாம் என்பதை நினைத்துப் பார்க்கையில் மிக அதிகமாகிறது.

1937 மாகாணத் தேர்தல்கள் முடிவு

| மாகாணம் | மொத்த இடங்கள் | பொது "பொதுவான இடங்கள்" | காங்கிரஸ் | முஸ்லீம் லீக் | முஸ்லீம் சுயேச்சை | மற்றவர்கள் |
|---|---|---|---|---|---|---|
| மதராஸ் | 215 | 116 | 159 | 11 | — | 45[1] |
| பம்பாய் | 175 | 99 | 88 | 20 | 10 | 57 |
| வங்காளம் | 250 | 48 | 50 | 40 | 43 | 117[2] |
| ஐக்கிய மாகாணங்கள் | 228 | 120 | 134 | 27 | 30 | 37[3] |
| பஞ்சாப் | 175 | 34 | 18 | 1 | — | 156[4] |
| பீகார் | 152 | 71 | 98 | — | 15 | 39 |
| மத்திய மாகாணங்கள் | 112 | 64 | 71 | — | 14 | 27 |
| அஸ்ஸாம் | 108 | 40 | 35 | 9 | 14 | 50 |
| வ. மே. எல்லை | 50 | 9 | 19 | — | 2 | 29 |
| ஒரிஸ்ஸா | 60 | 38 | 36 | — | — | 24 |
| சிந்து | 60 | 18 | 7 | — | — | 53 |
| மொத்தம் | 1,585 | 657 | 715 | 108 | 128 | 634 |

காங்கிரஸ் முழுமையான பெரும்பான்மையை மதராஸ் (மேல் சபையிலும்), பம்பாய், ஐக்கிய மாகாணங்கள், பீகார் (மேல் சபையிலும்), மத்திய மாகாணங்கள், ஒரிஸ்ஸாவில் வென்றது.

1. ஜஸ்டிஸ் கட்சி 17 உட்பட.
2. பிரோஜா கட்சி 38 உட்பட.
3. தேசீய விவசாயிகள் கட்சி 16 உட்பட.
4. பெரும்பாலும் யூனியனிஸ்டுக் கட்சி.

வங்காளத்திலும் அஸ்ஸாமிலும் மிக வலிய ஒரே கட்சியாக வந்தது. லிபரல்கள் (அதாவது, மிதவாதிகள்) ஒவ்வோரிடத்திலும் மண்ணைக் கவ்வினர். ஒரு காலத்தில் மதராசில் எல்லாம் வல்ல கட்சியாக, அரசின் ஆதரவு பெற்ற கட்சியாக இருந்த ''ஜஸ்டிஸ் கட்சி'' (முன்பு, பிராமணர் அல்லாதார் கட்சி) மொத்த இடங்களில் பன்னிரண்டில் ஒரு பகுதி கூடப் பெறுமல் முற்றிலும் துடைக்கப்பட்டு விட்டது. அரசாங்க ஆதரவு பெற்ற ''தேசீய விவசாயிக் கட்சி'' ஐக்கிய மாகாணங்களில் இன்னும் இழிவான முடிவு கண்டது. பஞ்சாபிலும் சிந்துவிலும் மட்டும் தான் காங்கிரஸ் சரிந்தது.

காங்கிரசினுல் கைப்பற்றப் பெற்ற இடங்கள் பெரும்பாலும் முற்றிலும் ''பொதுவான'' இடங்கள். போட்டியிட்ட 58 முஸ்லீம் இடங்களில் 26 வெல்லப்பட்டன (வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் 15). சில தொழிலாளர்கள், சீக்கியர்கள், கிறித்தவர்களின் இடங்களும், 4 நிலக்கிழார் இடங்களும், 3 தொழில், வர்த்தகம் இடங்களும் வெல்லப்பட்டன.

காங்கிரஸ் வெற்றியின் பொருட் குறிப்பு ஏகாதிபத்திய வட்டாரங்களில் செம்மையாகப் பதிந்தது. ''குறிப்பிடத்தக்கதல்லாத சிறுபான்மையின்'' பிரதிநிதிதான் காங்கிரஸ் என்ற தன் பாசாங்கை தி லண்டன் டைம்ஸ் ஏடு முற்றிலும் கைவிட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு எழுதியது:

> ''ஒரு மாகாண அடிப்படைக்கு மேலும் நிறுவப்பட்ட ஒரே ஸ்தாபனம் காங்கிரசே என்பதை இந்தியத் தேர்தல்கள் மீண்டும் காட்டி விட்டன. அதனுடைய வெற்றிகளின் சாதனை சிறப்பானது.... காங்கிரஸ் முற்றிலும் நல்ல முறையில் வென்றுள்ளது; அதற்குக் காரணம், மிகவும் மிதவாத சக்திகளுக்கு நிறுவனபலம் இல்லாததும், அதற்கு நேர்த்தியான நிறுவன அமைப்பும் அதன் கிளைகளும் என்றாலும் இந்த அம்சங்கள் மட்டும் அதன் ஏராளமான வெற்றிகளை விளக்கி விடா ....கட்சியின் திட்டங்கள், பெரும்பாலான எதிரிகளின் திட்டங்களைவிட உறுதியானதாகவும் ஆக்க பூர்வமானதாகவும் இருந்தன. எதிர்பாரா வகையில் அது வெற்றி பெற்ற வேளாண்மைத் தொகுதிகளில், கிராமச் சீர்திருத்தத்துக்கான விரிவான வேலைத் திட்டத்தை அது வெளியிட்டுள்ளது..... பத்துலட்சக் கணக்கான இந்தியக் கிராம வாக்காளர்களுக்கும், வாக்கு இல்லாத கோடிக் கணக்கானவர்களுக்கும் அக்கறையான பிரச்னைகள் பேரில்....கட்சி தன் வெற்றிகளைப் பெற்றுள்ளது.''

(தி டைம்ஸ், மார்ச் 9, 1937.)

இறுதிக் குறிப்பு மிகவும் சிறப்புத் தன்மை வாய்ந்தது. கடுமையாகத் தலைப்பட்டும் கட்டுப்படுத்தப்பட்டும் ஏற்க முடியாத வகையில் கூறுபோடப்பட்டும் நடந்த தேர்தல் முறையாக இருந்த போதிலும், தங்களுடைய வாக்குகளையும் காங்கிரசுக்குப் பெரு மிதமான பெரும்பான்மையையும் பதிவு செய்த 1.5½ கோடி வாக்காளர்களின் தீர்ப்பை, விடுதலையையும் சமூக முன்னேற்றத்தையும் வேண்டும் நாட்டு மக்களின் விருப்பை வெளியிடும் உண்மையான மக்கள் ஒப்பம் என வேண்டும். தி டைம்ஸ் ஏடு ஏற்பதுபோல், இன்னும் பரவலாக மக்களுக்கு வேலைத் திட்டம் கவர்ச்சியாக இருந்ததால் அவர்களுக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டிருந்தால் வெற்றி எவ்வளவு பிரமாண்டமாக இருந்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

## 3. காங்கிரஸ் மாகாண அமைச்சவைகள்

தேர்தல்களைத் தொடர்ந்து, காங்கிரஸ் பெரும்பான்மை பெற்றிருந்த மாகாணங்கள் அமைச்சவை அமைக்கும் பிரச்னையை இறுதியாகத் தீர்க்க வேண்டியிருந்தது. 1937 மார்ச்சில், சில நிபந்தனைகளுக்கு உட்பட்டுப் பதவியை ஏற்க அனுமதிப்பதென்று ஒரு திட்டம் ஒரு வழியாக வகுக்கப்பட்டு அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியால் ஏற்கப்பட்டது:

> ''அமைச்சர்களின் அரசியல் சட்டபூர்வமான நடவடிக்கைகளில் தலையீடு செய்யவும் அல்லது அவர்களுடைய ஆலோசனைகளை நிராகரிக்கவும் உள்ள தம்முடைய சிறப்பு அதிகாரத்தைக் கவர்னர் பயன்படுத்தமாட்டார் எனச் சட்ட சபை காங்கிரஸ் கட்சித் தலைவருக்குத் திருப்தி ஏற்பட்டு அவ்வாறு பகிரங்கமாக அறிவிக்க முடிந்தாலன்றி அமைச்சுப் பதவி ஏற்கப்படக்கூடாது என்ற நிபந்தனைபேரில், சட்டசபையில் காங்கிரஸ் பெரும்பான்மையுள்ள மாகாணங்களில் பதவிகளை ஏற்க ஏற்புக்கு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அனுமதி வழங்கி அதிகாரம் அளிக்கிறது.''

இந்தச் சூத்திரம் காந்தியால் விவரிக்கப்பட்டு 70க்கு 127 வாக்குகள் பெற்று ஏற்கப்பட்டது. சோஷலிஸ்டுகளில் பெரும்பாலோரும் இடதுசாரியினரும் பதவியேற்பை எதிர்த்தனர்; அதனால் ஏகாதிபத்தியத்துடன் ஒத்துழைக்க இசைவதாகும் என்றும் மக்கள் போராட்டப் பாதைக்கு மாற்றுப் பாதையாக அது கொள்ளப்படலாம் என்றும் அஞ்சினர். பதவியேற்பை எதிர்க்கும் அவர்களுடைய திருத்தம் 135க்கு 78 வாக்குகள் பெற்றுத் தோல்வி அடைந்தது. தலைமையில் இருந்த மிதவாத, அரசியல் திட்டவாத சக்திகள் இக் கொள்கையை ஏகாதிபத்தியத்தோடு மேலும் மேலும்

சமாதானம் பேசும் கொள்கையாக மாற்றி விடுவார்களோ என்ற நம்பிக்கைக் குறைவாலும் அச்சத்தாலுமே இந்த எதிர்ப்பு எழுந்தது.

நிபந்தனையோடு பதவியேற்புத் தீர்மானத்திற்குப் பிறகு மூன்று மாதங்கள் கழித்து காங்கிரஸ் அமைச்சவைகள் தொடங்கப்பெற்றன. அமைச்சவைகளின் அரசியல் சட்ட பூர்வமான நடவடிக்கைகளில் தடை உண்டாக்கும் வகையில் கவர்னர்களின் சிறப்பு அதிகாரங்கள் பயன்படுத்தப்பட மாட்டா என அரசு முன்னதாக அறிவிக்க வேண்டும் என்ற தன் கோரிக்கையில் காங்கிரஸ் உறுதியாக இருந்தது. இடையில், ஏப்ரல் முதல் நாள், அதாவது அனைத்து முட்டாள்கள் நாளன்று (ஏகாதிபத்தியத்தின் அலுவலகங்களிலுள்ள எந்தக் கோமாளி இந்த நாளை இந்தக் காரியத்துக்காகத் தேர்ந்தெடுத்தான் என்பது பதிவு செய்யப்படவில்லை) புதிய அரசியல் திட்டம் துவக்கி வைக்கப்பட்டது. குறிப்பிடத்தக்க முழுமையான நாடளாவிய வேலை நிறுத்தம் அதற்கு வரவேற்பு அளித்தது. காங்கிரசுக்கும் அதிகாரிகளுக்கும் இடையில் நடந்த பேச்சு வார்த்தைகள் இன்னும் முட்டுக்கட்டைப்பட்ட நிலையில் இருந்ததால், பெரும்பான்மையற்ற இடைக்கால அமைச்சவைகள் அமைக்கப்பட்டன. ஜூன் 22 ஆம் நாள் வைசிராய், ''தங்களுடைய அமைச்சர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாயினும் அவர்களுடன் சச்சரவுகள் ஏற்படாமலிருக்க ஆவலாக இருப்பதன்றிக் கவர்னர்கள் இத்தகைய சச்சரவுகள் ஏற்படாமல் தடுக்கவும் தீர்க்கவும் மிகவும் ஆவலாக இருப்பார்கள்,'' என்று அறிவித்ததோடு முட்டுக்கட்டை ஒரு வழியாகத் தீர்ந்தது. இதை ஏற்றுக்கொண்டு காங்கிரஸ் பதவி ஏற்றது; எனினும் காரியக் கமிட்டியின் இறுதித் தீர்மானத்தின் வாயிலாக, வைசிராயும் மற்றவர்களும் வெளியிட்ட அறிக்கைகள் ''காங்கிரஸ் கோரிக்கையை அணுக முயலும் விருப்பத்தைத் தெரிவிப்பனவாக இருந்தாலும், அ. இ. கா. கமிட்டித் தீர்மானம் வேண்டுகிற உறுதியைத் தருவனவாக இல்லை'' என்பதைத் தெளிவுபடுத்திவிட்டது.

1937 ஜூலையில், காங்கிரஸ் கீழ்சபைகளில் முழுமையான பெரும்பான்மை பெற்றிருந்த ஆறு காங்கிரஸ் அமைச்சவைகள் அமைக்கப்பட்டன: மதராஸ், பம்பாய், ஐக்கிய மாகாணங்கள், பீகார், மத்திய மாகாணங்கள், ஒரிஸ்ஸா ஆகிய ஆறு மாகாணங்கள். சிறிது காலத்துக்குப்பிறகு வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் காங்கிரசல்லாத எட்டு உறுப்பினர்கள் காங்கிரஸ் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டுக் காங்கிரசோடு ஒத்துழைக்க (கையெழுத்திட்ட அறிவிப்புடன்) முன்வந்ததால் அங்கும் காங்கிரசுக்கு முழுமையான

பெரும்பான்மை பலம் கிட்டி காங்கிரஸ் அமைச்சவை அமைக்கப் பட்டது. இவ்வாறாக பிரிட்டிஷ் இந்தியாவின் பதினொரு மாகாணங் களில் ஏழில் காங்கிரஸ் அமைச்சவைகள் ஏற்பட்டன; இந்த ஏழு மாகாணங்களின் மொத்த மக்கட் தொகை 16 கோடி, அல்லது, பிரிட்டிஷ் இந்தியாவின் மொத்த ஜனத்தொகையில் ஐந்தில் மூன்று பகுதி, இந்தியாவின் மொத்த மக்கட் தொகையில் ஐந்தில் இரண்டு பங்குக்கும் அதிகம். காங்கிரஸ் கூட்டு மந்திரிசபைகள் அப்பால் அஸ்ஸாமிலும் சிந்துவிலும் அமைக்கப்பட்டன.

யுத்த நெருக்கடி ஏற்பட்டு, மைய அரசோடு மோதல் உண் டாகும் வரை இரண்டு ஆண்டுக்காலம் காங்கிரஸ் அமைச்சவை கள் பதவியிலிருந்து 1939 நவம்பரில் விலகினார்கள். இந்த இரண்டு களில் அவர்களுடைய பணிகளின் தன்மை தேசீய இயக்கத்துக் குள் கடுமையான விவாதத்தை மேலும் மேலும் கிளப்பியது.

மாகாணங்களில் இருந்த அமைச்சவைகளை எந்த நவீன பாராளுமன்ற பொருளிலும் அரசுகள் என முடியாது. 1938 ஆகஸ்டில் ஹரிஜனில் எழுதிய ஒரு கட்டுரையில் காந்தி, அவர் களுடைய அதிகாரங்கள் பெரிதும் வரையறுக்கப்பட்டிருப்பதை யும், அதன் விளைவாக உண்மையான விடுதலைப் போராட்டத்தில் அவர்களுடைய சிறப்பான பங்கையும் விளக்கினார்:

> ''ஜனநாயக பிரிட்டன் இந்தியாவில் சாமர்த்தியமிக்க தோர் ஆட்சி முறையை இந்தியாவில் ஏற்படுத்தியுள்ளது; அதை அதனுடைய நிர்வாணத்தில் பார்த்தால், அது உயர்ந்த முறையில் வகுக்கப்பட்ட ராணுவ ஆட்சியன்றி வேறில்லை. இன்றைய இந்திய அரசாங்கச் சட்டத்தின்கீழ் அந்த நிலை குறைந்து விடவில்லை. மெய்யான ஆட்சி அதிகாரத்தைப் பொருத்தமட்டில் அமைச்சவைகள் வெறும் பாவைகள். கவர் னர்கள் வெறும் ஆணையிட்டால் கலெக்டர்களும் போலீஸ் காரர்களும் மந்திரிகளை பதவியிலிருந்து தள்ளிக் கைது செய்து சிறையில் அடைக்க முடியும். அதனால்தான், சட்டத்தை வகுத் தவர்கள் எதிர்பார்க்கிறபடி அதை செயல்படுத்தக் காங்கிரஸ் பதவி ஏற்கவில்லை, ஆனால், இந்தத் திட்டத்தின் இடத்தில் இந்தியாவில் சொந்தப்படைப்பான, மெய்யான சட்டத்தை மாற்றிவைக்கும் நாளை விரைவுபடுத்தும் வகையில் செயல் படுத்தவே பதவி ஏற்கிறார்கள் என்று நான் குறிப்பிட்டேன்.''

ஆயினும், இத்தகையதொரு கொள்கையை ஒரு புரட்சிகர மான தலைமையினால்தான் நிறைவேற்ற முடியும். அமைச்சவைகளை இயக்கிய செல்வாக்குள்ள மிதவாதத் தலைமையோ உண்மையில் வேறுவிதக் கொள்கையையே நிறைவேற்றியது. நடைமுறையில்,

''சட்டத்தை வகுத்தவர்கள் எதிர்ப்பார்த்தபடியே சட்டத்தைச் செயல்படுத்த'' முற்பட்டார்கள் மந்திரிகள். ஏகாதிபத்தியத்தின் பிரதிநிதிகள் தங்கள் சோதனையின் ''வெற்றி''பற்றின தங்கள் திருப்தியை மறைக்கவில்லை. ஆரம்ப காலத்தில், குடிமுறைச் சுதந்திரங்கள், விவசாயச் சட்டங்கள் இயற்றல் ஆகிய துறைகளில் சில கட்டுப்படுத்தப்பட்ட சாதனைகள் செய்யப்பட்டன; உடல் நலம், கல்வி, சமூக சீர்திருத்தங்களுக்கான சில முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. ஏகாதிபத்திய ஆதிக்கத்தின் உண்மையான தளங்களையோ, சுரண்டல் முறையையோ, அல்லது மக்களின் வறுமையின் மூல காரணங்களையோ இந்தச் சீர்திருத்தங்கள் தீண்டமாட்டா, தீண்டவும் முடியா. இந்தச் சீர்திருத்தங்களுக்கு விலையாக, பதவியிலிருந்த காங்கிரஸ் அமைச்சவைகள் ஏகாதிபத்திய ஆட்சி முறையின் அங்கங்களென, மக்களுக்கு எதிராக மேன்மேலும் வெளிப்படையாக நடந்து கொள்ளலாயின.

காங்கிரஸ் அமைச்சவைகளின் மிகுதியும் முக்கியமான சாதனை குடிமுறை சுதந்திரங்கள் துறையில் நிகழ்ந்தது. இத்துறையில் முன்னேற்றமும் தொடக்க காலத்தில்தான் நேர்ந்தது. படிப்படியாக ஏறக்குறைய எல்லா அரசியல் கைதிகளும் விடுதலை செய்யப்பட்டனர். 1921 மாப்பிள்ளை எழுச்சி முதல், 1922 சௌரி சௌரா நிகழ்ச்சி முதல் இன்னும் சிறைத்தண்டனை நுகர்ந்து வந்தவர்களுக்கு இந்த நடவடிக்கை பயன்பட்டது. கார்வாலி துப்பாக்கி வீரர்களும் விடுதலை செய்யப்பட்டனர். இருபதுக் கணக்கான அரசியல் ஸ்தாபனங்களின் மீதிருந்த தடைகள் அகற்றப்பட்டன (ஆனால், மைய அரசினால் கம்யூனிஸ்டுக் கட்சிமீது விதிக்கப்பட்ட தடை நீக்கப்படவில்லை). அரசியல் தொண்டர்களின் நடமாட்டத்தின் மீதிருந்த தடைகள் நீக்கப்பட்டன. செய்தி ஏடுகளிடமிருந்து வாங்கப்பட்ட ஈட்டுத் தொகைகள் திருப்பித் தரப்பட்டன; தங்கள் அரசியல் கருத்துகளுக்காகப் பிழைப்பட்டியில் சேர்க்கப்பட்டு அரசாங்க அச்சு வேலைகளும் விளம்பரங்களும் மறுக்கப்பட்ட ஏடுகள் அப்பிழைப்பட்டியிலிருந்து நீக்கப்பட்டன. காங்கிரஸ் மாகாணங்களில் செய்தி, வெளியீடு சுதந்திரம் ஓரளவு வழங்கப்பட்டதால் அரசியலறிவை வளர்க்கும் ஏராளமான இலக்கியம் தோன்றியது.

ஆயினும் ஏகாதிபத்திய போலீஸ் ஆட்சிமுறையின் அங்கங்களாய்க் காங்கிரஸ் அமைச்சர்கள் செயல்படுவது தொடக்க காலத்திலேயே வெளிப்பட்டு விட்டது. ஏற்கனவே தொடக்க மாதங்களில் ஒரு முக்கியமான காங்கிரஸ் சோஷலிஸ்டு ராஜத்துரோகக் குற்றத்திற்காக மதராஸ் அரசாங்கத்தின் கீழ் ஆறு மாதச் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டதால் ஓர் அதிர்ச்சி உண்டா

யிற்று. எந்த அடக்குமுறைச் சட்டங்களைக் காங்கிரஸ் அளவிட முடியாத விதத்தில் ஏசி வந்ததோ அதே தண்டனைச் சட்டத் தொகுப்பின் வெறுக்கப்பட்ட 124 ஏ பிரிவும் (ராஜத் துரோகப் பிரசாரத்துக்கு எதிராக), 144 பிரிவும் (கூட்டங்களுக்குத் தடை) பயன்படுத்தப்பட்ட வழக்குகள் நடந்தன. காங்கிரஸ் உறுப்பு களுக்குள் இதைப் பற்றிக் கூர்மையான விவாதம் எழுந்தது. வழக்கமான, பிரம்மிப்பூட்டும் வகையில் வளைந்து கொடுக்கும் தன்மை வாய்ந்த அஹிம்சைக் கொள்கையில் போலீஸ் நடவடிக் கையும், ''வன்முறைப் பிரசாரம்''—இந்தச் சொற்கோவை ஆட்சிப் பீடத்தில் இருப்போருக்கு மாறுபட்ட கருத்துக்களை உடையவர்களையும், சாதாரண மக்கள் போராட்டங்களைத் தூண் டும் பிரசாரம் செய்வோருக்கு எதிராய்த் தாராளமாகவும் எளி திலும் பயன் படுத்தப்பட்டது—செய்த குற்றம்இழைத்தாய்க் கருதப்பட்டோர் சிறை செய்யப்படுவதும் அடங்குவதாய் விரிவு கொண்டது. இந்த விவாதத்துக்குப் பின் தொழிலாளர் வர்க்க மும் குடியானவர் இயக்கமும் விரைவாய் முன்னேறுவதைக் கண்டு காங்கிரசில் இருந்த உயர் வகுப்பு, மிதவாத சக்திகள் கொண்ட கிலி கிடந்தது.

சமூக, பொருளாதாரத் துறையில் புதிய மந்திரி சபைகள் மிகக் குறுகலான வேலைத் திட்டத்தையே மேற்கொண்டன. ஏகாதி பத்தியத்தின் கீழ் இருந்த நில முறையாலும் பொருளாதார முறையாலும் எழுந்த பெரும் இடையூறுகளைக் களைய அவர்கள் முயலவில்லை, காங்கிரஸ் தலைமையின் மிதவாத கோஷ்டியிடம் செல்வாக்குப் பெற்றிருந்த நிலக்கிழார்களிடமும் பணம்படைத்த வர்களிடமும் அவர்கள் பரிவோடு நடந்து கொண்டார்கள்.

சிறப்பாக, குடியானவர்கள் தொடர்பாகச் சில உடனடியான சட்டங்கள் இயற்றப்பட்டன. அவசரப் பிரச்னையான கடன் சுமை சம்பந்தமாக, மதராஸ் விவசாயிகள் கடன் நிவாரணச் சட்டம் போல பழைய பாக்கிகளில் ஒரு பகுதியை ரத்து செய்யவும், ஐக்கிய மாகாணங்களிலும் பம்பாயிலும் போல் கடன் வசூலை நிறுத்தவும், கடன்களைக் குறைத்து வட்டி வீதத்தை வழக்கமான 6 முதல் 9 சதவீதம் வரை கட்டுப்படுத்தவும் சட்டங்கள் இயற் றப்பட்டன. நிலத்திலிருந்து வெளியேற்றப்படாமல் ஓரளவு பாது காக்கவும், குத்தகைத் தொகை ஏற்றத்தை நீக்கவும், ஒழுங்கீன மான பாக்கிகளையும், செலவுகளையும் நீக்கிக் குத்தகைப் பாக்கிகள் மீதான வட்டியைக் கட்டுப்படுத்தவும் குடிவாரச் சட்டங்கள் இயற்றப் பட்டன. சில இனங்களில் நிலவரி தள்ளுபடி செய்யப் பட்டது.

பம்பாயில் இருந்த 40,000 துப்லாக்கள் அல்லது கட்டுண்ட 'அடிமை'கள் விடுவிக்கப்பட்டனர்.

விவசாயம் தொடர்பாக இயற்றப்பட்ட சட்டங்களின் அளவும் பரப்பும் குறைவு; அதற்கும் கடுமையான கிளர்ச்சியும் ஆர்ப்பாட்டங்களும் செய்து குடியானவர்கள் நிர்ப்பந்தப்படுத்த வேண்டியிருந்தது; அதற்கும் நிலச்சுவான்களின் பிடிவாதமான எதிர்ப்பு இருந்ததோடு அவர்கள் தங்கள் செல்வாக்கைப் பயன் படுத்திச் சட்டத்தைச் செதுக்கித்தள்ள முயன்றனர். மொத்தக் கடன் சுமையில் உண்மையில் குறைப்பு செய்யப்பட்ட கடன் அளவு வீதம் குறைவு. குடிவாரச் சட்டம் குடிகளில் ஒரு சிறுபான்மை யினருக்கே உதவியாயிருந்தது (பம்பாய் குடிவார மசோதா, அதனோடு இணைக்கப்பட்டிருந்த அறிக்கையின்படி, குடிவாரதாரர் களில் 4 சதவீதத்தினருக்கே நன்மை செய்யும் என்று எதிர்பார்க் கப்பட்டது). தவிர, பெரும் சுமையான குத்தகையை அது தொட வில்லை. விவசாயத் தொழிலாளர்களுக்கு யாதொரு நன்மையும் ஏற்படவில்லை; மதராஸ் மக்கட் தொகையில் 42 சதவீதத்தினராக இருந்தும் விவசாயிகள் கடன் நிவாரணச் சட்டத்திலிருந்து அவர் கள் விலக்கப்பட்டனர். விவசாயச் சட்டங்கள் எல்லாவற்றிலும் இந்த வரையறை சிறப்பாக இருந்ததுடன், இவ்வகையில் உடனடி யான சிறு பரிகாரங்களைப் பெறமுடியும் என்றாலும், இன்னும் தீவிரமான பரிகாரத்துக்கும் விசாலமான அணுகுமுறைக்கும் இன்னும் தீவிரமான சட்டங்கள் தேவை என்ற உண்மையை வலியுறுத்துவதாகவும் இருந்தது. நிலக்கிழார்களின் எதிர்ப்பைச் சமாளிக்க முடியாமல் அமைச்சர் பலவீனமாக இருந்ததால் பீகா ரிலும், ஒரிஸ்ஸாவிலும், ஐக்கிய மாகாணங்களிலும் அதிருப்தி கொண்ட குடியானவர்களின் கிளர்ச்சி விரிவாய்ப் பரந்திருந்தது; பீகாரில் ''காங்கிரஸ் -ஜமீன்தார் ஒப்பந்தம்'' எனப்பட்ட ஒப் பந்தம் பழிக்கப்பட்டது. பொதுவாக, குடிவாரச் சட்டங்கள் மிகுதியும் வரையறுக்கப்பட்ட பயனுடையனவாகவும், உட் குத்தகைதாரர்களையும் நிலம் இழந்தவர்களையும்விடப் பெரிய பயிர் செலவு செய்யும் குடியானவர்களைப் பாதுகாப்பனவாகவும் இருந்தன.

தொழில் துறைத் தொழிலாளர்கள் தொடர்பாக, காங்கிரஸ் அமைச்சவைகள் அமைக்கப்பட்டதால் நடவடிக்கைகளிலும் கூலிக் கோரிக்கைகளிலும், தொழிற்சங்க நிறுவனத்திலும் விரைவான முன்னேற்றம் காண ஊக்கம் பிறந்தது. 1937இல் நடந்த வேலை நிறுத்தங்கள் 90 லட்சம் வேலை நாட்களைப் பாதித்தன; அல்லது, முன் மூன்றாண்டுகளில் நடந்தவற்றைச் சேர்த்துப் பார்த்தால், அதைவிட மிகுதி, 1929க்குப் பின் இதுவே மிக உயர்ந்தது; கலந்து

கொண்ட தொழிலாளர்கள் 647,000; பதிவு செய்யப்பட்ட மிக உயர்ந்த எண்ணிக்கை. தொழில் அமைதியை உண்டாக்க முயன்று கொண்டும், அதற்காகத் தொழில் தகராறுகள் சட்டத்தைட பயன்படுத்திக் கொண்டும் காங்கிரஸ் அமைச்சர்கள் தொழிலாளர் களின் நிலைமைகளைத் திருத்தம் செய்யவும், கூலியேற்றத்தைட் பெறவும் தங்கள் செல்வாக்கைப் பிரயோகித்தனர். பம்பாய்த் துணித் தொழிலாளர் ஆய்வுக் கமிட்டி ஆலைத் தொழிலாளர் களுக்கு ஒரு கூலியேற்றத்தை வழங்கியது; அதன் யோசனை ஆலை அதிபர்களின் எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் நிறைவேற்றப் பட்டது. ஐக்கிய மாகாணங்களின் காங்கிரஸ் அரசு கான்பூர் வேலை நிறுத்தத்திற்குத் தீர்வுகாண உதவி செய்தது; கூலியேற்றத் திற்கும், தொழிலாளர் சங்க ஏற்புக்கும் அத் தீர்வு வழி செய்தது; 1938இல் அதிபர்கள் இந்த முடிவை எதிர்க்க முயலவே, காங் கிரஸ்—தொழிலாளர் ஒற்றுமை வெற்றியை ஈட்டியது.

வேலை நிறுத்த இயக்கம் சம்பந்தமாக, வேலை நிறுத்தம் செய்யும் உரிமை பற்றியும், தொழிற்சங்க ஏற்பு பற்றியும் கூர்மையான பிரச்னைகள் எழுந்தன. மதராசில் தகராறுகள் உண்டானால் அரசாங்கம் எப்போதும் தொழிலாளர்களுக்கு விரோதமாகவே தலையிட்டது. 144 ஆம் பிரிவை(ஊர்வலங் களுக்கும், ஐந்து பேர்களுக்கு மேல் கூடவும் தடை) ஷோலாப் பூரில் உபயோகித்தது பற்றியும், வேலை நிறுத்த இயக்கத்துக்கும் தொழிலாளர்கள் வர்க்க நடவடிக்கைச் சுதந்திரத்துக்கும் எதிராக எடுக்கப்பட்ட ஆட்சி நடவடிக்கைகள் பற்றியும் பம்பாய் அரசுக்குக் கடுமையான கஷ்டங்கள் ஏற்பட்டு, 1938 இன் பிற் பகுதியில் வந்த தொழில் தகராறுகள் மசோதா தொடர்பாக அவை மிகக் கூர்மை பெற்றன. இந்த மசோதா வேலைநிறுத்த உரிமையைப் பெரிதும் வரையறுத்தது; சமாதான யந்திரம் செயல்படுவதற்கு நான்கு மாத இடைக்காலம் தேவை என்றும், இந்தக் காலத்தில் வேலை நிறுத்தம் சட்ட விரோதமானது என்றும் அந்த மசோதா விதித்தது; கம்பெனித் தொழிற் சங்கங்கள் அல்லது அதிபர்களின் ஆதரவு பெற்ற சங்கங்களுக்குச் சாதகமான வகையில், சங்கப்பதிவு முறையில் சிக்கலான விதிகளையும் அது விதித்தது. தொழிலாளர் சங்கப் பிரதிநிதிகள் முறையீடு செய்து கொண்டதன் பேரில் மசோதாவில் சில மாற்றங்கள் செய்யப் பட்டன; ஆனால் அதன் முக்கியமான கொள்கைகள் அப்படியே இருந்தன; அதை எதிர்த்து நவம்பர் 7ஆம் நாள் ஒரு கண்டன வேலை நிறுத்தம் செய்யுமாறு பம்பாய் மாகாணத் தொழிற்சங்கக் கமிட்டி அழைப்பு விடுத்தது. பலத்த ஆதரவு பெற்ற இந்தக் கண்டன வேலைநிறுத்தத்தை அடக்கப் போலீஸ் நடவடிக்கை

எடுக்கப்பட்டதன் விளைவாகப் பலருக்குக் காயமும் ஒரு சாவும் நேர்ந்தன.

சமூக சீர்திருத்தத் துறையில், காங்கிரஸ் அரசாங்கங்கள் மது, போதைப் பொருள்கள் ஒழிப்பிலேயே தங்கள் கவனத்தைச் செலுத்தி, உள்ளூர் அடிப்படையில் சிறிது சிறிதாக அதை விஸ்தரிக்கும் முறையைக் கையாண்டார்கள் (மதுபானம், போதைப் பொருள்கள் விற்பனை ஏகாதிபத்திய அரசால், அதன் அதிகாரத்தின் கீழிருந்த நடுவர்கள் வாயிலாக ஒரு வருவாய் இனமாக ஊக்கப்பட்டது; மது விலக்குப் பெரும் நிதி நஷ்டம் உண்டாக்குவது). கல்வி சீர்திருத்தத் திட்டத்தை மேற்கொள்ளவும் முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டன; ஆனால், எந்தக் கல்வி திட்டத்திற்கும் நிதி தேவை; நிதியோ பற்றுக்குறை. ஐக்கிய மாகாணங்களில் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் பெண் தொழிலாளர்களுக்குத் தாய் சேய் நல ஏற்பாடு செய்யப்பட்டது போன்று சில சமூகச் சட்டத்துக்கான தொடக்கங்களும் செய்யப்பட்டன. நிதி இடம் கொடுத்த அளவு, கிராமங்களில் கிராமத் தண்ணீர் வழங்கு முறை விஸ்தரிப்பு, துப்புரவு போன்று பொது சுகாதார முயற்சிகளும் துவக்கி வைக்கப்பட்டன.

காங்கிரஸ் அமைச்சவைப் பணிகளின் ஒவ்வொரு திருப்பத்திலும் விலங்கிடுவதாகவும் தட்டி விடுவதாகவும், எல்லாவற்றையும் அளாவுவதாகவும், உண்மையில் ஏகாதிபத்திய ஆட்சியின் கீழ் இருந்த அவர்களுடைய கையாலாகாத்தனத்தை வெளிப்படுத்துவதாகவும் இருந்த பிரச்னை, நிதிப் பிரச்னை. மாகாண அரசுகளின் வரவு செலவு திட்டங்களை ஆய்ந்தால் நிதி பற்றுக்குறை விதித்த வரையறைகளைப் புரிந்து கொள்ளலாம். உண்மையாகச் சாதிக்கப்பட்டது எத்தனை சிறிது என்பதையும் காணலாம்.

கல்விச் செலவு

(ஆயிரக்கணக்கான ரூபாய்களில்)

| | 1937-38 | 1938-39 | 1939-40 |
|---|---|---|---|
| ஐக்கிய மாகாணங்கள் | ..20,615 | ..20,852 | ..21,242 |
| பம்பாய் | ..16,805 | ..19,064 | ..20,017 |
| மதராஸ் | ..25,796 | ..26,198 | ..26,357 |

பொது உடல்நலச் செலவு

(ஆயிரக்கணக்கான ரூபாய்களில்)

| | 1937-38 | 1938-39 | 1939-40 |
|---|---|---|---|
| ஐக்கிய மாகாணங்கள் | ..2,252 | ..2,458 | ..2,365 |
| பம்பாய் | ..2,406 | ..2,754 | ..2,810 |
| மதராஸ் | ..4,407 | ..2,657 | ..2,730 |

காங்கிரஸ் மந்திரி சபைகள் அமைப்பாலும் அவற்றின் தொடக்க காலங்களிலும் கிட்டிய அநுபவம் காரணமாக, அமைச் சவைகளின் காரியங்கள் காரணமாக அல்ல, மக்களுக்கு இடை யில் எழுந்த நம்பிக்கைகளும் தூண்டுதலும் காரணமாக, தேசீய இயக்கமும், தன்னம்பிக்கையும், மக்களின் விழிப்பும் பெருமளவில் முன்னேற்றம் கண்டன. ஆனல், கணக்கில் பற்றுவழியும் மிகுதியே. ஏற்கனவே சமாதானமாய்ப் போக விருப்பம் கொண்ட ஒரு தலைமையின்கீழ் ஏகாதிபத்திய ஆட்சி முறையில் சிக்கிக் கொள்வதிலுள்ள அபாயங்கள், காங்கிரஸ் அமைச்சவைகளின் இரண்டாண்டுக்கால அநுபவத்தால் மிகவும் தெளிவாக வெளித் தெரிந்தன. காங்கிரஸ் யந்திரத்தின்மீதும் அமைச்சவைகளின்மீதும் மெய்யான அதிகாரம் செலுத்திவந்த, செல்வாக்குள்ள மிதவாதத் தலைமை நடைமுறையில் மேன்மேலும் ஏகாதிபத்தியத்துடன் ஒத்துழைக்கத் தலைப்பட்டது, மேன்மேலும் உயர்வகுப்பு நிலக் கிழார்களுக்கும் தொழிலதிபர்களுக்கும் சாதகமாக, வெளிப்படை யாகச் செயல்படத் தொடங்கியது, மேன்மேலும் மக்கள் போராட் டத்தின் போர்க்குணம் வாய்ந்த சொற்களுக்கும் செயல்களுக்கும் கடும் பகைமை காட்டலாயிற்று. அமைச்சவைகளின் நடைமுறை அநுபவம் பெருகுகையில், அதிருப்தி வளர்ந்தது. தேசீய விடுதலைப் போராட்டத்தின் உறுதியான பணிகள் முன்னுல் உள்ளன, காங் கிரஸ் அமைச்சவை யந்திரத்தின் வாயிலாக அவற்றைத் தீர்த்து வைக்க இயலாது என்ற உண்மை மேன்மேலும் தெளிவுபட்டது. ஆகவே, தேசீய இயக்கத்தில் ஒரு புதிய நெருக்கடி தோன்ற லாயிற்று.

## 4. கூட்டரசுத் திட்டமும் வலுக்கும் நெருக்கடியும்

1938 பிப்ரவரியில் கூடிய ஹரிபுரா காங்கிரஸ், அரசியல் திட்டத்தின் கூட்டரசுப் பிரிவு பற்றியும் அதை அமுலாக்கச் செய்யப்படும் முயற்சிகள் பற்றியும் காங்கிரசின் கொள்கையை வரையறுத்துக் கூறியது. ஒருமனதாய் ஏற்கப்பட்ட தீர்மானம் பின்வருமாறு அறிவித்தது:

''புதிய அரசியல் திட்டத்தைக் காங்கிரஸ் நிராகரித்த துடன், மக்கள் ஏற்கத்தக்க இந்தியாவின் அரசியல் திட்டம் சுதந்திரத்தை அடிப்படையாகக் கொண்டதாக இருக்க வேண்டும் என்றும் அது ஓர் அரசியல் நிர்ணயசபை வாயிலாக, வெளிநாட்டு அதிகாரத்தின் தலையீடு இன்றி, மக்களாலேயே வகுக்கப்பட வேண்டும் என்றும் அறிவித்துள்ளது. இந்தக் கொள்கைக்கு இணங்க, ஆயினும், இந்த நிராகரிப்புக் கொள் கைக்கு இணங்க, மாகாணங்களில் அமைச்சவைகள் அமைக்கக்

காங்கிரஸ் அனுமதி வழங்கியதன் நோக்கம், அதனுடைய விடுதலைப் போராட்டத்தை நாட்டில் வலுப்படுத்த வேண்டும் என்பதுதான். திட்டமிடப்பட்டுள்ள கூட்டரசு பற்றின வரை இத்தகைய யோசனைகளுக்குத் தற்காலிகமாகவோ அல்லது சிறிது காலத்துக்காகவோகூட இடமில்லை; இந்தக் கூட்டரசு விதிப்பினுல் இந்தியாவுக்குப் பெருந் துன்பமே உண்டாவதுடன், அதை ஏகாதிபத்திய ஆதிக்கத்துக்கு அடிமையாகக் கட்டி வைத்துள்ள விலங்குகளும் வலுவடையும். கூட்டாட்சித் திட்டம், ஆட்சியின் பணிகளை பொறுப்பு எல்லையிலிருந்து விலக்கி விடுகிறது....

''எனவே, காங்கிரஸ் திட்டமிடப்பட்டுள்ள கூட்டரசுத் திட்டத்துக்குத் தன் கண்டனத்தைத் திரும்பவும் வலியுறுத்தப் படுவதோடு, மாகாண, உள்ளூர் காங்கிரஸ் கமிட்டிகளையும், பொதுவாக மக்களையும், மாகாண அரசாங்கங்களையும் அமைச்சவைகளையும் அந்தத் திட்டம் துவக்கப்படாமல் தடை செய்வதற்காக அழைக்கிறது. மக்களின் அறிவிக்கப்பட்ட விருப்பத்துக்கு மாருக அதைத் திணிக்க ஒரு முயற்சி செய்யப் படுமாயின், அந்த முயற்சியை எதிர்த்து ஒவ்வொரு வகையிலும் போராட வேண்டும், மாகாண அரசுகளும் அமைச்சவைகளும் அதனோடு ஒத்துழைக்க மறுக்க வேண்டும். இம் மாதிரி அவசர நிலைமை எழுந்தால், இது தொடர்பாக எவ் வகை நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும் என்பதை முடிவு செய்ய அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக்கு அதிகாரம் தரப் படுகிறது.''

அரசியல் திட்டத்தின் கூட்டரசுப் பிரிவு இத்தீர்மானத்தில் முழுமையாக நிராகரிக்கப்பட்டுள்ளதையும், எவ்விதப் பேரங் களுக்கும் அது வழிவிடவில்லை என்பதையும் காணலாம். கூட்டரசு விதிகள் சுயாட்சிப் பாதையில் அடியெடுத்து வைக்க உதவா, ஆனல், ஏகாதிபத்தியத்தின் பிடியைப் பலப்படுத்தவே பயன்படும் என்ற கருத்துதான் இந்த முழுமையான நிராகரிப்புக்குக் காரணம்.

கூட்டரசுத் திட்டத்தை ஏகாதிபத்தியம் திணிக்க முற்பட் டால் காங்கிரஸ் பின்பற்றப் போகும் தீர்மானமான கொள்கை யும் நடவடிக்கையும் என்ன? போராட்டத்தின் புதிய நிலையையும் நடவடிக்கையின் வடிவங்களையும் பற்றின முழுப் பிரச்னையையும் எழுப்பும் இந்தக் கேள்விக்கு, கொள்கையில் இருந்த பதிலைத் தவிரத் தெளிவான பதில் எதுவும் ஹரிபுரா காங்கிரசினுல் இன்னும் கொடுக்கப்படவில்லை.

அரசாங்க வட்டாரங்களில், இந்த முழுமையான நிராகரிப்பு ஒரு பூர்வாங்கச் சமிக்ஞைதான் என்றும், பின்னுல் ஏதாவது ஒரு

வகையில் மாகாணங்களில் செய்ததைப்போல் ஏற்புக்கு வபூ ஏற்படும் என்றும் கருத்து நிலவியது. நாட்டு எதிர்ப்பின் வலிமையை இந்த மதிப்பீடு முற்றிலும் குறைத்து மதிப்பிடுவது யினும் அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை; மாற்று ஏற்பாடாக ஒரு புதிய, பெரிய போராட்டத்திற்கான ஏற்பாடுகள் ஏதுட செய்யப்படவில்லை என்பதுடன், சட்டத்தின் விதிகளைத் திருத்து வது பற்றியோ அல்லது அதைச் செயல்படுத்துவது பற்றியோ பேரம் பேசும் சாத்தியம்பற்றி எண்ணிப் பார்க்கக்கூடிய, ஆதிக்கப் வாய்ந்த தலைமையில் இருந்த மிதவாத சக்திகளின் போக்கு எல்லாருக்கும் தெரிந்திருந்ததும்தான் காரணம்.

1938 இல், ஏகாதிபத்தியத்தின் முக்கியமான பிரதிநிதிகளுக் கும் தனி காங்கிரஸ் தலைவர்களுக்கும் இடையில் பல உரையாடல் கள் நடந்தன; சமாதானம் வரப்போவதாய் வதந்திகள் பரவின, அதிகார பூர்வமான எந்த அறிவிப்புகளிலும் இந்த வதந்திகளுக் கான ஆதாரமே இல்லை. ஆயினும், கூட்டரசுத் திட்டத்தில் மாற்றங்கள் செய்யப்பட்டால் சமாதானம் ஏற்படக்கூடும் என்று பொருள்படும்படியாக வலதுசாரித் தலைவர்கள் சிலர் தனிப்பட்ட முறையில் அறிக்கைகள் வெளியிட்டது உண்மை; ஏற்கனவே ''அரசியல் திட்ட வாதத்தின்பால் சாயும்'' போக்கு பற்றித் திகில் கொண்டிருந்த பல இடதுசாரிகள், காங்கிரஸ் ''மேலிடத்தில்'' வலதுசாரிகளுக்கிருந்த செல்வாக்கை அறிவார்களாதலால், வீர மாய்ப் பேசினாலும் சரணாகதி தொடருமோ என அச்சமுற்றனர்.

உண்மையில், இந்த விவாதங்களுக்குப் பின்னாலிருந்த ஆழ்ந்த பிரச்னை, காங்கிரசின் மக்கள் அடிப்படையையும், தொழிலாளர் களுக்கும் குடியானவர்களுக்கும் இடையில் உருவாகிவந்த மாபெரும் போராட்டத்துக்கும் அதற்கும் உள்ள உறவையும் பொறுத்த கேள்வியில்தான் இருந்தது. காங்கிரஸ் தன் அஸ்தி வாரத்தையும், மக்கள் போராட்டத்தோடு தன் நிறுவனத் தொடர்பையும் எவ்வளவு ஆழமாக்கி வலுவாக்குகிறதோ அந்த அளவுக்குத்தான், கூட்டரசுத் திட்டத்தை முறியடித்து ஏகாதி பத்தியத்துக்குத் தன் சொந்த நிபந்தனைகளை விதிக்கக்கூடிய வலிமையை அது பெற முடியும். தொழிலாளர் இயக்கமும், குடியானவர் இயக்கமும் விரைவாக முன்னேறுவதைக் கண்டு தலைமையில் செல்வாக்குள்ளோர் தங்கள் அச்சத்தை வெளி யிட்டதும், வர்க்கப் போரட்டம் ''அஹிம்சை''யை மீறுவது எனப் பழித்ததும், வேலை நிறுத்தங்களுக்கும் கொந்தளிப்புக்கும் எதிராகப் போலீஸ் வன்முறை நடவடிக்கைகளைப் பயன்படுத்தவும் அல்லது ஆதரிக்கவும் மேன்மேலும் முனைந்ததும், அவர்கள் ஏகாதிபத்தியத்தோடு இணக்கமாகச் செல்லும் வழியே போய்க்

கொண்டிருந்ததைத்தான் காட்டின எனக் கொள்வதைத் தவிர்க்க முடியாது.

இந்தத் தருணத்தில்தான் முன் வருடம் போட்டியின்றித் தலைவராய் நியமிக்கப்பட்ட சுபாஷ் சந்திர போஸ், கூட்டரசுத் திட்டத்தை எதிர்த்து நாடளாவிய ஒரு போராட்டத்தைத் துவக்கும் அரசியல் பிரச்னையையும், வலதுசாரித் தலைமையில் இருப்பதாய் அவர் கூறிய சமாதானப் போக்குகளை எதிர்ப்பதையும் அடிப்படையாக வைத்து 1939 ஆம் ஆண்டு காங்கிரஸ் தலைவர் தேர்தலில் தம்மை மீண்டும் தலைவராய்த் தேர்ந்தெடுக்க வேண்டும் எனப் போட்டி இட முடிவு செய்தார். முதன் முறையாகத் தலைவர் தேர்தலில் போட்டி எழுந்தது. காரியக் கமிட்டி, அல்லது காங்கிரசின் ஆட்சிக் குழு, தேர்ந்தெடுக்கப்படுவது அல்ல, தலைவரால் நியமனம் செய்யப்படுவது; எனவே, தலைவர் தேர்தல் என்பது, உறுப்பினர்கள் தலைமை எப்படி இருக்க வேண்டும் என்பதை வெளியிடுவதற்கு ஒரு ஸ்தாபன விதி பூர்வமான வாய்ப்பாகும்—இந்தப் போட்டியின் அடிப்படை முக்கியத்துவம் இதுதான். போஸை எதிர்த்த வேட்பாளர் காந்தியாலும் பழைய காரியக் கமிட்டியின் பெரும்பான்மையான உறுப்பினர்களாலும் ஆதரிக்கப்பட்டார். போஸ் இடதுசாரி தேசீயவாதிகளாலும் சோஷலிஸ்டுகளாலும் கம்யூனிஸ்டுகளாலும் ஆதரிக்கப்பட்டார். போட்டியில் 1,575 க்கு 1,376 வாக்குகள் பெற்று போஸ் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அதிகார யந்திரத்தின் எதிர்ப்பைமீறி போஸ் தேர்ந்தெடுக்கப்பட்டதால் நிறுவனத்திற்குள் கடும் நெருக்கடி ஏற்பட்டது. ஒரு தலைவர் தேர்தலுக்குச் சாதாரண உறுப்பினர்களின் உணர்ச்சியை வெளியிடும் அளவுகோல் என்னும் சிறப்பு இருப்பினும், அது உறுப்பினர்களின் அரசியல் தீர்ப்பு என்றோ, உறுப்பினர்களில் இடதுசாரி பெரும்பான்மை என்றோ முடிவு கட்ட முடியாது. திரிபுரியில் பின்னர் நடந்த நிகழ்ச்சிகள் அதை நிருபித்தன. ஆனால் முடிவு, கருத்து இடதுபக்கம் நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது என்று காட்டியது என்பதில் சந்தேகமில்லை. காந்தியே முடிவைத் தம் சொந்தத் தோல்வியாகக் கருதி, "நான் எந்தத் தத்துவங்களையும் கொள்கையையும் ஆதரிக்கிறேனோ அவற்றைப் பிரதிநிதிகள் ஆதரிக்கவில்லை என்பது தெளிவு" என்றார். தி டைம்ஸ் ஆப் இந்தியா தன் தீர்ப்பைக் கூறியது: "திரு. போஸின் தேர்தல் காங்கிரஸ் இடதுபக்கம் போவதைத்தான் காட்டுகிறது. பம்பாய் கிரானிக்கிள், "தீவிரவாதத்தையும் மக்களுரிமைகளை வற்புறுத்துவதையும் நோக்கிச் சாயும் போக்கையே தேர்தல் தெளிவாய்க் குறிக்கிறது," என்று எழுதியது. பம்பாய் மாகாணக்

காங்கிரஸ் கமிட்டித் தேர்தல்களில் கம்யூனிஸ்டுகள் சிறப்பாக தேர்ந்தெடுக்கப்பட்டனர்; முன்னுள் மீரத் கைதியான அதிகா நகரத்தில் வேறு எந்த வேட்பாளரையும்விட மிகுதியான வாக் கள் பெற்றூர்; பம்பாய் நகராட்சித் தேர்தலில் கலந்து கொண் நான்கு கம்யூனிஸ்டு வேட்பாளர்கள் வாக்குப்பட்டியில் முதன்ை யாக இருந்தார்கள்—என்பதைக் கவனிக்க வேண்டும்.

தலைவர் தேர்தலின் இந்த விளைவு காந்திக்கும் செல்வா குள்ள மிதவாதத் தலைமைக்கும் ஏமாற்றம் அளித்தது; அவர்க தங்கள் அதிருப்தியை மறைக்கவில்லை. காங்கிரஸ் ஓர் ''ஊழ ஸ்தாபனம்'', ''போலி உறுப்பினர்களைக் கொண்டதா விட்டது'', என்று காங்கிரசைக் குற்றம் சாட்டி அறிக்கை ஒன்றை வெளியிட்ட காந்தி, வலது சாரிகளுக்கும் பெரு பான்மையினரின் கொள்கை பிடிக்காவிட்டால் காங்கிரை விட்டு வெளியேறுவர் என்று பயமுறுத்தினுர். ''காங்கிர மனப்பான்மையுள்ளவர்கள் சூழ்ச்சி காரணமாக அதற்கு வெளிய லிருந்தாலும் அதைப் பெரிதும் பிரதிபலிப்பவர்கள் அவர்களே ஆகையால், காங்கிரசுக்குள் இருப்பதை அசௌகரியமாய் கருதுகிறவர்கள் வெளியே வரலாம்'' என்று எழுதினுர் அவர்

போஸ் சுதந்திரமாகச் செயல்பட வசதியாகவும், தட தேர்தல் போராட்டத்தில் அவர் தங்கள் உண்மையான நோக்கத் துக்கு மாசு கற்பித்ததாய்த் தாங்கள் கருதுவதாயும் காரணட காட்டி காரியக் கமிட்டியின் பதினைந்து உறுப்பினர்களில் பன்னிருவர் ராஜிநாமா செய்தனர். ஐவகர்லால் நேருவும் காரியக் கமிட்டியிலிருந்து ராஜிநாமா செய்தார்; ஆயினும் தம் விசேஷமான கருத்தைத் தனியான ஓர் அறிக்கையில் விளக்கினுர் (இந்த நெருக்கடி சம்பந்தமாக அவர் எழுதிய சிறு புத்தகம் ''நாம் எங்கிருக்கிறேம்?'' இல் விரிவாக விளக்கி யுள்ளார்).

1939 மார்ச்சில், திரிபுரியில் நடைபெற்ற தேசீய காங்கிரஸ் கூட்டத்தில் காங்கிரசின் நிறுவன ஒற்றுமை காக்கப்பட்டாலும், விவாதத்துக்குத் தீர்வு காண இயலவில்லை. ''தேசீயக் கோரிக்கை'' பற்றின முக்கியமான தீர்மானத்தில், இந்திய அரசாங்கச் சட்டத்தின் கூட்டரசுப் பகுதியின்பால் தனக்குள்ள சமாதானப்படுத்த முடியாத எதிர்ப்பை மீண்டும் காங்கிரஸ் உறுதி செய்ததோடு, அது திணிக்கப்பட்டால் எதிர்க்கும் உறுதியையும் வெளியிட்டது.

தலைமையில் ஏற்பட்டிருந்த வேற்றுமை பற்றிக் காந்தியின் ஆதரவாளர்களால் ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்டுக் கடும்

விவாதத்துக்குப் பிறகு இறுதியாக நிறைவேற்றப்பட்டது. இத் தீர்மானம் காந்தியின் தலைமையிலும் கொள்கைகளிலும் இருந்த நம்பிக்கையை மீண்டும் உறுதி செய்ததுடன், தலைவர் தம் காரியக் கமிட்டியைக் காந்தியின் விருப்பத்துக்கு இணங்க நியமிக்குமாறு வேண்டியது. இவ்வாறாக, நடைமுறையில், காங்கிரஸ் உறுப்பினர்கூட அல்லாத காந்தியின் தனிநபர் சர்வாதிகாரம் ஏற்பட்டது. இத்தீர்மானம் விஷயாலோசனைக் கமிட்டியில் 218 க்கு 135 வாக்குகள் வீதம் பெற்றுக் காங்கிரசினால் ஏற்கப்பட்டது.

திரிபுரி காங்கிரசுக்குப் பிறகு ஏற்பட்ட அனுபவம், உண்மையில் விவாதத்துக்குத் தீர்வு காணப்படவில்லை என்பதைப் புலப்படுத்தியது. காரியக் கமிட்டி உறுப்பினர்கள் தொடர்பாகப் போஸுக்கும் காந்திக்கும் இடையில் நடைபெற்ற பேச்சு வார்த்தைகள் முறிந்தன. 1939 ஏப்ரலில் போஸ் தலைமையை ராஜிநாமா செய்தார், ஒரு புதிய தலைவர், ராஜேந்திர பிரசாத் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியால் தேர்ந்தெடுக்கப்பட்டார். போஸ் தம்மை ஆதரிக்கும் எதிர்ப்புச் சக்திகளைத் திரட்டிக் காங்கிரசுக்குள்ளேயே ஒரு புதிய குழுவை ''பார்வேர்டு பிளாக்'' (முற்போக்குப் பகுதி) என்ற பெயருடன் அமைக்க முனைந்தார்; ''காங்கிரசுக்குள் இருக்கும் தீவிர, ஏகாதிபத்திய எதிர்ப்புச் சக்திகளை ஒன்று திரட்டுவதே'' அதன் நோக்கமென அறிவிக்கப்பட்டது.

காங்கிரசின் அமைப்பு விதிகள், நம்பிக்கை, கொள்கை, வேலைத்திட்டம் ஆகிய எதன் மீதும் பார்வேர்டு பிளாக் அடிப்படையான குற்றச்சாட்டு எதுவும் செய்யவில்லை; ஆனால், அப்போதிருந்த தலைமையின் மீது அதிருப்தி தெரிவித்து, விடுதலைக்காகவும் கூட்டரசு அந்தஸ்தை எதிர்த்தும் தீவிரமான போராட்டத்துக்கு ஆயத்தமாகுமாறு அழைப்பு விடுத்தது. 1939 கோடையில் விவாதம் மிகவும் சூடுண்டது. அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் ஒரு கூட்டம், காங்கிரஸ் விதிகளை இறுக்கவும், காங்கிரஸ் அமைச்சவைகள் சம்பந்தமாகக் காங்கிரஸ் மாகாணக் கமிட்டிகளுக்கு இருந்த அதிகாரங்களைக் கட்டுப்படுத்தவும், உரிய காங்கிரஸ் கமிட்டிகளின் அனுமதி இன்றி காங்கிரஸ்காரர்கள் சத்தியாக்கிரக இயக்கம் நடத்துவதைத் தடை செய்யவும் தீர்மானங்களை நிறைவேற்றியது. கடைசித் தீர்மானம், தொழிலாளர் இயக்கங்களும் குடியானவர் இயக்கங்களும் காங்கிரசின் கட்டுப்பாட்டை மீறி சுதந்திரமாக மேன் மேலும் செயல்படத் தொடங்கியதைத் தடுக்கும் நோக்கம் கொண்டது; தொழிலாளர்கள், குடியானவர்களின் தினசரிப்

போராட்டங்களை அது தடை செய்ததாகப் பரவலாய் அதற்கு பொருள் கொள்ளப்பட்டது. இந்தத் தீர்மானத்துக்கு எதிராக போஸும், எதிர்ப்புச் சக்திகளின் கூட்டைப் பிரதிபலித்த ''இட ஒருமிப்புக் கமிட்டியும்'' ஜூலை 9 ஆம் நாள் பொ ஆர்ப்பாட்டங்கள் செய்யுமாறு வேண்டுகோள் விடுத்தது. இந்த செய்கை காங்கிரஸ் கட்டுப்பாட்டை மீறிய தாகும்; அத பேரில் வங்காள காங்கிரஸ் தலைமைப் பதவியிலிருக்கப் போ தகுதியற்றவர் என்றும், மூன்றாண்டுக் காலம் அவர் காங்கிரசி பதவி வகிக்கக்கூடாது என்றும் தடை விதிக்கப்பட்டது.

காங்கிரஸுக்குள் மேன்மேலும் மிகுந்த இந்த வேற்றுமை களின் கடுமை, நாட்டில் மேன்மேலும் வளர்ந்த நெருக்கடியின் அறிகுறி. காங்கிரஸ் மந்திரி சபைகளைப் பயன்படுத்திக் கொண் முன்னேற்றம் காணும் சாத்தியக் கூறுகள் நொடிவு நிலைை எட்டிவிட்டன என்பதும், ஏகாதிபத்தியத்துக்கும் தேசி இயக்கத்துக்கும் இடையில் ஒரு பெரும் போராட்டம் நெருங்கி கொண்டிருந்தது என்பதும் தெளிவாய்ப் புலப்பட்டன. சொந் விவகாரங்கள் கலந்த மேல்மட்ட காங்கிரஸ் தலைமையில் உண்டான வேற்றுமைகள் தெளிவான அரசியல் அணிவகுப்புகளை இன்னும் பிரதிபலிக்கவில்லை என்பது ஒரு புறம் இருக்க காங்கிரஸ் உறுப்பினர்களுக்கு இடையிலும் மக்களில் கீழ்த் தளத்தில் இருந்தவர்களுக்கு இடையில் கொந்தளிப்பு உருவாகி வந்ததைப் பற்றி ஐயமில்லை. செல்வாக்குள்ள தலைமையினருக்கும், காங்கிரஸுக்குள் இருந்த ''பார்வேர்டு பிளாக்'' தலைமையினருக் கும் இடையில், காங்கிரஸ் வேலைத்திட்டம், நம்பிக்கை, கொள்கை விஷயங்களில் அடிப்படை வேற்றுமை ஒன்றுமில்லை. போஸின் சொற்களில், ''பார்வேர்டு பிளாக் திரு. காந்தியின் உயர் சிறப்பையும், அவருடைய அரசியல் கொள்கையான அஹிம்சை வழி ஒத்துழையாமையையும் மிகுந்த மரியாதையுடன் போற்று கிறது என்றாலும், அது இப்போதைய காங்கிரஸ் 'மேலிடத்தி'டம் நம்பிக்கை வைக்கத் தேவை இல்லை.'' மக்கள் இயக்கத்தின் அடிப்படை வேலைத்திட்டமும் தலைமையும் இன்னும் வளர வேண்டியிருந்தன. ஆனால், தேசிய இயக்கத்தில் புதிய நிலைக்கு முன்னேற நிலைமைகள் கனிந்து வந்தன என்பதை நிலவரங்கள் காட்டின.

இத்தருணத்தில்தான் போர் தொடங்கி, ஏகாதிபத்தி யத்துக்கும் தேசிய இயக்கத்துக்கும் இடையில் உருவாகிக் கொண் டிருந்த பிணக்கு உச்ச நிலையை எட்டிப் புதிய பிரச்னைகளை எழுப்பி விட்டது.

அத்தியாயம்—16

# இரண்டாம் உலகப் போரில் இந்தியா

''இந்தியாவின் பூகோள அமைப்பு அதை மேன்மேலும் அனைத்துலக அரசியலின் முன்னணிக்குத் தள்ளிவிடும்.''

—கர்ஸன் பிரபு, இந்தியா கவுன்சிலில் சொற்பொழிவு, மார்ச் 23, 1905.

இரண்டாம் உலகப்போரின் போக்கு, இந்தியாவின் சர்வ தேச அரசியலின் முழு வெள்ளத்தில் இழுத்துச் சென்று விட்டது. 1914 ஆம் ஆண்டுப் போர் இந்தியாவிலிருந்து ஓரளவு எட்டியிருந்தது—இந்தியத் துருப்புகளும் வளங்களும் கடல் கடந்த நாடுகளில் பயன்படுத்தப்பட்டாலும். ஆனால், 1942-44 போரும் படையெடுப்பும் இந்தியாவின் மிக நெருங்கிய அண்டை நாடுகளில் பரவி, இந்தியாவின் எல்லைகளை அடைந்துவிட்டன. 1914 ஆம் ஆண்டுப்போர் இந்தியாவின்மீது கனமான பொருளாதாரச் சுமையை ஏற்றியது. ஆனால், இரண்டாம் உலகப்போர் இன்னும் கனமான பொருளாதாரத் துன்பங்களை மட்டும் கொண்டு வரவில்லை; கடுமையான பண வீக்கத்தையும், பொருளாதாரச் சீர்கேட்டையும், பஞ்சத்தையும் கொண்டு வந்தது. 1914 ஆம் ஆண்டுப் போர் இந்தியாவின் அரசியல் பிரச்னைகளுக்குத் தூண்டுதலும் கூர்மையும் உண்டாக்கிற்று. ஆனால், இரண்டாம் உலகப் போர் இந்திய விடுதலைப் பற்றின அடிப்படைப் பிரச்னையை இந்திய அரசியலின் முன்னணிக்குக் கொண்டு வந்தது. இந்திய அரசியலின் இதயப் பகுதிக்குள் புதிய பிரச்னைகளையும், சிக்கல்களையும், மோதல்களையும் அது கொண்டு வந்ததோடு எல்லா அரசியல் அணிப் பிரிவுகளையும் பாதித்தது.

1914க்கு முன்பு உலக அரசியலில் இந்தியாவின் பங்கு பற்றின பிரச்னை, பிரிட்டிஷ் ராஜ தந்திரத்தையும் கொள்கையைப் பற்றின முதன்மையான பிரச்னையாகத் தோன்றியிருக்கலாம். தேசீய இயக்கத்தின் கவனம் முழுவதும் இந்தியாவுக்குள் நடந்து வந்த போராட்டத்திலேயே ஆழ்ந்திருந்தது, அவ்வாறு ஆழ்ந்திருந்ததும் இயற்கை. இந்தியா சுதந்திரம் பெறும் வரை, உலக

அரசியலில் சுதந்திரமான பங்கு கொள்ள விழையுமாறு இந்திய மக்களைக் கேட்பதே தர்க்க முறைக்கு மாறுபட்டதாய்த் தோன்றியது.

ஆனால், 1931க்கு அப்பால் உலக பாசிஸ்டு வன்முறை முன்னேற்றத்திலிருந்து நிலைமை மாறிவிட்டது. தேசீய இயக்கத்துக்குள் அயல்நாட்டுக் கொள்கைப் பிரச்னைகள் முன் வரிசைக்கு வந்துவிட்டன.

இரண்டாவது உலகப் போரின் சிறப்பான பிரச்னைகளை கவனிக்குமுன், அதற்கு முந்தின நிலைமையையும், பிரிட்டிஷ் உலக ராஜதந்திரத்தில் இந்தியாவின் பாகத்தையும், அயல் நாட்டுக் கொள்கை சம்பந்தமாய் தேசீய இயக்கத்தின் கண்ணோட்டத்தையும் பற்றிச் சுருக்கமாய்க் கவனித்தால் பயன் தருவதாக இருக்கும்.

## 1. பிரிட்டிஷ் உலக தந்திரமும் இந்தியாவும்

மிக விரிவான பொருளில் பேசினால், பிரிட்டிஷ் ஆட்சியின் கீழுள்ள இந்தியாவின் பிரச்னை ஓர் உலக அரசியல் பிரச்னையாக, உலக அரசியலில் ஒரு பெரிய பிரச்னையாக எப்போதும் இருந்து வந்துள்ளது.

இந்திய ஆதிக்கம் என்னும் முனையைச் சுற்றியே பிரிட்டிஷ் உலக தந்திரம் கவிந்திருப்பதைச் சென்ற இரண்டு நூற்றாண்டுகள் வாயிலாக மிகமிகத் தெளிவாய்க் காணலாம். பதினெட்டாம் நூற்றாண்டில் பிரிட்டனும் பிரான்சும் ஈடுபட்ட யுத்தங்களுக்கு, ஐரோப்பாவின் இடம்மாறும் நட்சத்திரக் கூட்டங்களின் கலைடோஸ்கோப் உடனடியான காரணமாகத் தோன்றினாலும் முதன்மையாக அவை புதிய உலகத்திற்காகவும், இந்திய ஆதிக்கத்திற்காகவும் நிகழ்ந்த யுத்தங்களே அவை. ஐக்கிய நாடுகளின் (அமெரிக்கா) இழப்பு இந்தியாவின் சிறப்பை மிகுதி ஆக்கிவிட்டது. நெப்போலியன் தன்னுடைய யுத்தயாத்திரையை எகிப்தின் பக்கமும், சமீபக் கிழக்குப் பக்கமும் திருப்பியபோது, அவன் இந்தியாவைப் பற்றிக் கனவு கண்டு கொண்டிருந்தான். பத்தொன்பதாம் நூற்றாண்டு நெடுகிலும், ஆசியாவுக்குள் வெகுதூரம் பரவி விரிந்து விட்ட ரஷ்யா இந்தியாவுக்கு அச்சம் காட்டும் பூச்சாண்டியாக இருந்தது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பிரிட்டன் ஒதுங்கியிருப்பதைக் கைவிட்டதும் செய்த முதல் காரியம், ஜப்பானுடன் நேசவுறவு, ஆங்கிலோ--ஜப்பானிய ஒப்பந்தம் மாற்றம் செய்யப்பட்டது; அந்த ஒப்பந்தம் புதுப்பிக்கப்பட்டபோது இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தை நிலைபெறச் செய்ய ஜப்பானிய உதவிக்கான உடன்பாடும் ஏற்பட்டது. இந்தியாவுக்கு வழிதிறக்கும் நடுகிழக்கு ஆதிக்கம் பற்றித்தான் ஜெர்மனியோடு மோதல் உண்டாயிற்று.

இந்தியா பிரிட்டனுக்கு நெடுகிலும் அமுதசுரபியாகத் திகழ்ந்து வந்துள்ளது; பொருள் பலத்திற்கு மட்டும் அல்ல, மனித பலத்திற்கும்; தன்னை வெல்வதற்கு மட்டும் அல்ல, இந்திய எல்லைகளுக்கு அப்பாலும் பிரிட்டனின் ஆசிய விஸ்தரிப்புக் கொள்கைக்காகப் போர்கள் நடத்தவும் அது பயன்பட்டது. இந்தியாவின் அரசுக் கடனில் பெரும் பகுதி, பிரிட்டிஷ் கொள்கையின் நோக்கங்களுக்காக மற்ற ஆசிய நாடுகளிலும் அல்லது ஆசிய எல்லைகளுக்கு அப்பாலும் நிகழ்த்தப்பட்ட போர்களின் செலவை இந்தியாவின் பற்றுவழி ஆக்கிய அடிப்படையில்தான் ஏற்பட்டது. 1859 இல் ஒரு பிரிட்டிஷ் ராணுவ அதிகாரி எழுதினார்:

> ''நம்முடைய சாம்ராஜ்யத்தின் எல்லைகளுக்கு அப்பாலுள்ள ஆசிய நாடுகளுடன் நடந்த போர்களின் நோக்கங்கள், சிலவற்றில் பிரிட்டிஷ் நலன்களே தொடர்புள்ளவை, மற்றவற்றில் இந்திய நலனுக்குத் தொலைதூரம் என்றாலும், அவற்றில் பெரும்பாலானவை இந்திய அரசின் ராணுவபலத்தாலும் பணபலத்தாலும் நிகழ்த்தப்பட்டவை.''
>
> (மேஜர் வின்கேட், ''இந்தியாவுடன் நம்முடைய நிதியுறவுகள்,'' 1859, பக். 17.)

இந்த அடிப்படையில்தான் ஆப்கானிஸ்தானத்திலும், பர்மாவிலும், சயாமிலும், சீனாவிலும், பெர்சியாவிலும், மெஸபடோமியாவிலும், அரேபியாவிலும், எகிப்திலும், அபிசீனியாவிலும் யுத்தங்கள் நடத்தப்பட்டன.

பிரிட்டிஷ் ஆதிக்கம் விரிந்து கொண்டிருந்த பத்தொன்பதாம் நூற்றாண்டில், இந்தியாவை அடிப்படையாக வைத்துக் கொண்டு உலக ஆதிக்கத்தைச் சாதித்துவிட வேண்டுமெனப் பிரிட்டிஷ் ராணுவ அதிகாரிகள் அளவற்ற விழைவும் வேட்கையும் கொண்டிருந்ததை, 1857 கலகத்துக்கு முன்பு டல்ஹவுஸிபிரபுவின்கீழ் படைத்தலைவராக இருந்த சார்லஸ் நேபியர் பொரிந்து தள்ளினாற்போலப் பேசியதிலிருந்து அறியலாம்:

> ''ஆ, நான் மட்டும் இந்தியாவின் அரசனாக இருந்தால்! மாஸ்கோவும் பீகிங்கும் நடுங்கச் செய்வேன்.... ஐந்து ஆறுகளும் பஞ்சாபும், இண்டசும் சிந்துவும், செங்கடலும் மால்டாவும், இந்தியாவோடு இங்கிலாந்தை இணைக்கச் சங்கிலித் தொடராய் எத்தனை நிலங்களும் நீர்களும்! நான் இங்கிலாந்தின் மன்னனாக இருந்தால், தில்லி அரண்மனையிலிருந்து கொண்டு ரஷியாவின் முகத்திலும் பிரான்சின் முகத்திலும் முஷ்டி நீட்டிக் குத்துவேன். இங்கிலாந்தின் கப்பற்படை சர்வ

அதிகாரம் மேற்கிலும், இந்திய இராணுவத்தின் சர்வ அதிகாரம் கிழக்கிலும் இருக்க வேண்டும்.''

இந்தியாவின் மக்களை அடிமைத்தனத்தில் பிடித்து வைத்துக் கொள்ளும் தேவைக்காக மட்டுமல்ல, இந்திய எல்லைகளுக்கு அப்பால் விஸ்தரிப்பதையும் ராணுவத்தைப் பயன்படுத்துவதையும் கணக்கிட்டுத்தான் இந்திய ராணுவத்தின் அளவும் அதற்கான பெரும் செலவும் பெரிதும் அறுதியிடப்படுகின்றன. 1885-ல் வைசிராயின் கவுன்சிலைச் சேர்ந்த சர் கோர்டினே இல்பர்ட் கையாளப்பட்ட கொள்கைக்கு உடன்படாமைக் குறிப்பு எழுதி விளக்கினார்:

> ''உள்நாட்டுத் தேவைகளுக்கு மேல் அவசியத்துக்கு மேல் ஒரு நிலையான ராணுவம், எல்லையைக் கடந்து முன்னேறித் தாக்குவதற்குப் பெரும்பாலும் தடுத்து நிறுத்த முடியாத ஓர் ஆயுதமெனக் கவர்ச்சிகரமாக இருக்கும்.''
>
> (சர் கோர்ட்னே இல்பர்ட், கருத்து வேறுபாட்டின் நுட்பம், ஆகஸ்டு 14, 1885.)

அவருடைய தீர்க்கதரிசனமுள்ள இச்சொற்களைச் சொன்னதற்கு உடனடியாகவே பர்மாவின்மீது படை எடுத்து அதைக் கைப்பற்றியதன் வாயிலாகப் பலித்துவிட்டது. பிறகு, 1895 இல் சித்ரால் படையெடுப்பும், இகழத்தக்க திரஹ் போர், 1900 இல் கர்ஸனின் கீழ் வடமேற்கு எல்லைப்புற மாகாணப் பகுதிகளைக் கைப்பற்றுதல், 1904-இல் திபெத் படையெடுப்பு.

1904-5 பட்ஜெட் விவாதங்களின் போது, தேசியத் தலைவர் கோகலேயின் குற்றச்சாட்டுகளுக்கு எதிராக விஸ்தரிப்புக் கொள்கையை ஆதரித்து சர் ஈ. எல்லிஸ் பேசினார்:

> ''ஆசிய மன்னர்களின் அரசுகள் மேன் மேலும் கைப்பற்றப்பட்டுக் கொண்டிருக்கையில், நாம் பத்திரமாக இருப்போம் என்கிற முட்டாள்தனமான எண்ணத்தோடு, மலை வேலிகளுக்கு அப்பால் நாம் மறைந்துறைவதோடு திருப்தி கொள்ள வேண்டுமா? . . . . . ஆசியாவில் அதிகாரச் சம நிலையை நிலைநாட்டும் பணியில் எதிர்காலத்தில் இந்திய ராணுவம்தான் முக்கியமான அங்கமாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. உள்நாட்டுப் பாதுகாப்புக்காகவும் ஒழுங்கைக் காக்கவும் ஏற்பட்ட உள்நாட்டு ராணுவமாக இனி அதைக் கருத முடியாது.''

அதே விவாதம் தொடர்பாக வெளியிட்ட அறிக்கையில் கர்ஸன் பிரபு இன்னும் வெளிப்படையாகப் பேசினார்:

''தன்னுடைய இரண்டு முகப்பகுதிகளிலும் விசாலமான கடலகழிகளும், எஞ்சிய பகுதிகளில் மலைச்சுவர்களும் கொண்டதொரு கோட்டை போல இருக்கிறது இந்தியா. ஆனால், சிலசமயங்களில் கடக்க முடியாத உயரம் கொண்டன வாகவும் ஊடுருவ முடியாதனவாகவும் கூறமுடியாத இந்தச் சுவர்களுக்கு அப்பால் மாறுபடும் அகலமும் அளவும் கொண்ட மென்மையான சரிவு பரந்து கிடக்கிறது. அதை நாம் கைப் பற்ற விரும்பவில்லை, எனினும் நம் பகைவர்கள் அதைக் கைப் பற்றுவதைப் பார்த்துக் கொண்டு நாம் வாளாயிருக்க முடியாது. அது நம் நேசர்கள் அல்லது நண்பர்கள் வசம் இருப்பதானல் நமக்குப் பரம திருப்தியே; ஆனல், போட்டி அல்லது பகை சக்திகள் அங்கு படர்ந்து நம் சுவர்களுக்கு நேர் கீழே தங்குமானல், நாம் தலையிட வேண்டிய கட்டாயம் உண்டாகிறது, ஏனெனில், ஒரு காலத்தில் நம் பாதுகாப்புக்கு அச்சமான ஓர் அபாயம் அதனல் வளரலாம். அரேபியா, பெர்சியா, ஆப்கானிஸ்தானம், திபெத், கிழக்குப்பக்கம் சயாம் வரை இருக்கும் நிலவரத்தின் ரகசியம் இதுதான்.''

கர்ஸன் பிரபுவின் கருத்து, பின்னர் இன்றுவரை கடைப்பிடிக்கப் படும் கொள்கையில் நீடித்துச் செல்வாக்கு பெற்றுள்ளதைக் காணலாம். ''தொலைகிழக்குப் பிரச்னைகள்'' என்ற தம் நூலில் இக்கருத்தை விரிவுற விளக்கியுள்ளார்:

''உலகத்தின் மிக முக்கியமான மூன்றாவது பகுதியின் போர்த்தந்திர முறை மையத்தில் இந்திய சாம்ராஜ்யம் இருக் கிறது......ஆனல் தனக்கு அண்டையிலும் தொலைவிலும் உள்ள அண்டை நாடுகளின் விதிகள்மீது அதற்குள்ள அரசியல் செல்வாக்கிலும், இந்திய அச்சுமீது அவற்றின் எதிர்கால விதிகள் சுழலும் அளவிலும் காணப்படுவதைப் போல் வேறெங்கும் அதனுடைய மைய, ஆதிக்க அந்தஸ்தைக் காண முடியாது.''

(ரைட் ஆனரபிள் ஜி. என். கர்ஸன், ''தொலை கிழக்குப் பிரச்னைகள்'', 1894, பக். 9–10.)

இந்தியா கமிட்டியில் ராணுவம் பின்வருமாறு 1913 இல் குறிப் பிட்டது: ''இந்திய எல்லைக்கு வெளியில் நிகழும் போர்களுக்காக, உள்நாட்டு அரசின் விருப்பப்படிப் பயன்படுத்துமாறு அதனிடம் ஒப்படைக்கும் தெளிவான நோக்கத்துக்காக இந்தியா துருப்பு களைப் பராமரிக்க வேண்டிய தேவை இல்லை; எனினும்—சென்ற காலத்தில் செய்தது போல்—தாராளமாக இருந்தால் துருப்புகளை அது கடன் தரலாம்.''

இந்தியாவின் இந்த உபயோகத்தை, 1914-18 யுத்தம் நன்கு காட்டியது. சுமார் 10 லட்சம் துருப்புகள்,—அவர்களில் ஐந்து லட்சத்துக்கும் அதிகமானவர்கள் நேர்முகமாய்ப் போர் புரிகிறவர்கள்,—கடல் கடந்து பிரான்ஸ், கிழக்கு ஆப்பிரிக்கா, எகிப்து, மெஸபடோமியா முதலிய நாடுகளுக்கு அனுப்பப் பட்டனர்; இந்தியாவிடமிருந்து கோடிக்கணக்கான பவுன்களும் அதேசமயம் கறக்கப்பட்டன. அண்டை நடுகிழக்கு சாம் ராஜ்யத்தைக் கைப்பற்ற இந்தியா தளம் ஆக்கப்பட்டது; எனினும், பின்னர் துருக்கியில் ஏற்பட்ட மறுமலர்ச்சியும் சௌதி அரேபியாவின் வலிமையும் வெற்றியின் முழுமையை ஊனப்படுத்தி விட்டன.

இந்தியாவுக்கு வெளியே பயன்படுத்தப்படுவதற்கான, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் கருவியே இந்திய ராணுவம் என்னும் அதிகார வர்க்கத்தின் கருத்தை, 1913 இல் இந்தியா கமிட்டியில் ராணுவம் வெளியிட்டதைவிட மிகமிக அழுத்தமாக, 1920 இல் வெளியான ஈஷர் கமிட்டி அறிக்கை வெளியிட்டது:

> ''சாம்ராஜ்யத்தின் ஆயுதப்படைகளின் தொகுதியில் ஒரு பகுதியாக இந்தியாவில் ராணுவத்தின் நிர்வாகத்தை நாம் கருத முடியுமே தவிர நம்மால், வேறுவிதமாய்க் கருதவே முடியாது.''

இந்தக் கொள்கைக்கு இணங்க, மூன்று பகுதிகளாக இந்திய ராணுவம் இன்று அமைக்கப்படுகிறது; சென்ற போருக்குப் பிறகு படைத்தலைவராக இருந்த ராலின் சன் பிரபு 1921 இல் செய்த ஏற்பாடு இது; பின்னர், அரசு வெளியிட்ட ''இந்தியாவில் ராணுவமும், அதன் வளர்ச்சியும்'' என்ற கைப்புத்தகத்தில் விரிவாக விளக்கப்பபட்டுள்ளது:

1. களப்படை, இந்தியாவுக்கு வெளியே நடக்கும் பெரிய போருக்காக;
2. ஆதரவுத் துருப்புகள், எல்லைப் போருக்கும், பெரும் போர் நிகழ்கையில் ஒரு திரையாக மறைத்துக் கொண்டு நிற்கவும்—அதற்குப் பின்னால் போர் முயற்சிகள் தடையின்றி நடக்க உதவும்;
3. உட்பாதுகாப்புத் துருப்புகள், இந்தியாவுக்குள் காவல் செய்யும் நோக்கத்துக்காக.

களப்படையில் நான்கு பிரிவுகளும் (டிவிஷன்கள்), நான்கு (யந்திர மயமாக்கப்பட்ட) குதிரைப்படைகளும் இருக்கும்; இது பெரும் போர் நேருகையில் தாக்கும் படை என வருணிக்கப்படுகிறது.

1918 க்குப் பிந்தின காலத்தில், சாம்ராஜ்ய ராணுவச் சுமைகளின் கனம் எந்த அளவு இந்தியாவின் மீது மேலும்மேலும் அதிகமாய் ஏற்றப்பட்டது என்பதை ராணுவச் செலவுகளின் அளவுவீதத் தகவல்களிலிருந்து அறியலாம். பின்வரும் அட்டவணை பிரிட்டன், இந்தியா, குடியேற்ற நாடுகள் ஆகியவற்றில் 1913-28க்கும் இடையில் ராணுவச் செலவின் அளவுவீதப் பெருக்கத்தைக் காட்டுகிறது:

ராணுவச் செலவு 1913-28
(£ மில்லியன் கணக்கில்)

| | 1913 | 1928 | பெருக்கம் சதவீதம் |
|---|---|---|---|
| கிரேட் பிரிட்டன் .. | 77 | 115 | 49 |
| இந்தியா .. | 22 | 44 | 100 |
| குடியேற்ற நாடுகள் .. | 9 | 12 | 33 |
| மொத்தம் .. | 108 | 171 | 57 |

(ஈஸ்டர்ன் ஆர்மமெண்ட் அநுபந்தம், அக்டோபர் 19, 1929.)

இந்தியாவின்மீது ஏற்பட்ட சுமை (அதற்கு இதைப் பற்றிப் பேசவும் அதிகாரம் இல்லை) இரட்டிக்கப்பட்டிருக்கையில், கிரேட் பிரிட்டனின் சுமை பாதிக்கும் குறைவாகவே ஏற்றப்பட்டுள்ளது, குடியேற்ற நாட்டின் சுமை மூன்றில் ஒரு பகுதி ஏற்றப்பட்டுள்ளது. 1914 யுத்தத்துக்கு முன்பு பட்ஜட்டில் ஐந்தில் இரண்டு பகுதி இருக்கும்; 1891-92 இல் 41 சதவீதம், 1913-14 இல் 42·6 சதவீதம். அது 1914க்கு முந்தின சராசரி 30 கோடி ரூபாய்களிலிருந்து 1920-21இன் பணவீக்க விலைகளில் 87.4 கோடியாக, அல்லது, பட்ஜட்டில் 51 சதவீதமாக உயர்ந்தது; விலைகள் குறைந்தமையாலும் சிக்கனத்தாலும் 1925-26 இல் 56 கோடி ரூபாய்களாக, அல்லது, பட்ஜட்டில் 39 சதவீதமாய்க் குறைக்கப்பட்டது; 1928-29 இலோ மீண்டும் 45 சதவீதத்துக்கு ஏறிவிட்டது. 1936-37 இல், அதிகார பூர்வமான மதிப்பீட்டின்படி மைய அரசு பட்ஜட்டில் 54 சதவீதமாகவும், மைய, மாகாண அரசுகளின் கூட்டு பட்ஜட்டில் 29 சதவீதமாகவும் இருந்தது.

இரண்டு போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் பிரிட்டனுக்கு இந்தியாவின் ராணுவ தந்திர முக்கியத்துவம் மிகுந்துவிட்டது. மெடிடரேனியன் மீதுள்ள ஆதிக்கம் இழக்கப்படக்கூடிய சாத்தியம் இருந்ததால் அதற்கு ஈடு செய்ய, புதிய கப்பல்தளமான சைமன்ஸ் டவுனுடன் கேப் பாதையில் கவனமும்,ஊடுருவ முடியாதது எனக் கூறப்படும் சிங்கப்பூர் கப்பல்தளத்தின்மீது பசிபிக்கிலிருந்து இந்துமகா சமுத்திரத்திற்கு வாயிலெனக் கவனம் செலுத்

தப்படுவதிலிருந்து, சாம்ராஜ்யத்தின் முனையாக இந்தியா மீதும் இந்தியாவுக்குச் செல்லும் பாதைகள் மீதும் பெரும் கவனம் செலுத்துகிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம். மெடிடரேனியன் வாயிலாகவும் சூயஸ் கால்வாய் வாயிலாகவும் செல்வது அபாயகரமாகிக் கொண்டே வந்ததால், பாக்டாட், கராச்சி, கல்கத்தா, சிங்கபூர் வழியாக ஆஸ்திரேலியாவோடு பிரிட்டனை இணைப்பதும், இந்தியா, சயாம் வழியாகத் தொலைகிழக்கோடு பிரிட்டனை இணைப்பதுமான இம்பீரியல் ஏர்லயன் சாம்ராஜ்யத்தின் ஜீவாதாரமான பாதை ஆகிவிட்டது. பசிபிக் மீதும், சீனுவின் கடற்கரை, ஆற்று வழிகள் மீதும் ஜப்பானின் பிடி வலுக்கவே, பர்மா வாயிலான தரைப் பாதைக்குப் புதிய முக்கியத்துவம் ஏற்பட்டது.

இந்த எல்லா ஏற்பாடுகளின் பலவீனமும் இரண்டாவது உலகப் போரில் வெளிப்பட்டது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு ஆசியாவில் உள்ள வலிமையால் அல்ல, அச்சு நாடுகளுக்கு எதிராக ஐக்கிய நாடுகளின் உலக வெற்றி அமெரிக்க ஐக்கிய நாடுகள், சோவியத் யூனியன், பிரிட்டன் ஆகிய நாடுகளின் கூட்டு வலிமை வாயிலாகவும், ஐரோப்பாவில் முக்கியமான போர்கள் நடந்ததால் ஜப்பானுக்கு எதிராக இறுதியாக எல்லா சக்தியையும் திரட்டிப் போராட முடிந்ததாலும்தான், ஆசியாவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு உண்டான எல்லா ஆபத்துகளுக்கும் இழப்புகளுக்கும் இறுதியான பரிகாரம் ஏற்பட்டது. ஆனால், பழைய காலனி முறைகளை மீளவும் ஏற்படுத்தச் செய்யப்பட்ட முயற்சிகள், ஆசியாவில் காலனி விடுதலை இயக்கங்கள் பெரிதும் முன்னேறி விட்டதால், கடுமையான எதிர்ப்புக்குள்ளாயின.

ஆயினும், பிரிட்டிஷ் உலகத்தந்திரத்துக்கு இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு இந்தியா முக்கியமான பங்கு வகிக்கிறது என்பதைப் பற்றி கேள்விக்கே இடமில்லை. பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆதிக்கத்துக்கும் செல்வாக்குக்கும் ஆதாரப்பகுதிகளான—நடுகிழக்குக்கும் தென்கிழக்கு ஆசியாவுக்கும் இடையில், இந்தியா வலுவான சுழலச்சு போன்றது, பிரிட்டிஷ் கொள்கையின் கண்ணோட்டத்தில், இன்றியமையாத தளம். தொழிலாளர் கட்சியின் முதன்மையான பேச்சாளரான பெதிக் லாரன்ஸ்பிரபு 1944 ஜூலையில் நடந்த மக்கள்சபை விவாதத்தில் மனம் விட்டுப் பேசினர்:

''ஏழு கடல்களிலும் அமைதியைக் காக்கப் பிரிட்டனின் சக்தியால் மட்டும் முடியும் என்பதைப் பற்றிச் சிறிது சந்தேகப் படும்படியாக பல விஷயங்கள் நேர்ந்து விட்டன; பெரும் உபகண்டமான இந்தியாவுக்கு அண்மையில் இருந்ததைவிட

உலகின் வேறு எந்தப் பகுதியிலும் அவ்வளவு சந்தேகப்படும் படி இருக்கவில்லை.''

(இந்திய ஆண்டுப் பதிவேடு, 1944, தொகுதி II, பக்.298.)

ஆசியாவில் தன் காலனி இயக்கங்களுக்கு எதிரான ஆபத்தான போராட்டத்தில், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இந்தியாவைத் தன் முதன்மையான ராணுவத் தளமாகப் பயன்படுத்திக் கொண்டதோடு, அதன் ராணுவத் தேவைகளுக்குப் பொருள்களை வழங்கவும், துருப்புகளைத் திரட்டவும்கூட (இண்டோனேஷியா மீது நடந்த போரில், தேசிய இயக்கம் இந்த முயற்சியை எதிர்த்து இந்த வழக்கத்துக்கு முடிவு காட்டும் வரை) உபயோகித்துக் கொண்டு அண்டையிலுள்ள ஆசிய நாடுகளான பர்மா, மலேயா, இந்தோனேஷியாவில் மீண்டும் காலனி ஆட்சியை ஏற்படுத்தவும், விடுதலை இயக்கங்களை ஒடுக்கவும் முற்பட்டது. சோவியத் எதிர்ப்பு அணிவகுப்புக்காகப் பிரிட்டனும் அமெரிக்காவும் பின்பற்றும் பிற் போக்குக் கொள்கையின் அபாயகரமான போக்குகளின் சக்தி வாய்ந்த எதிரொலி இந்தியாவிலும் உண்டு. 1946 இல் அமைச் சவைத் தூது கோஷ்டியை அனுப்பி ஒரு தீர்வு காண்பதற்காகச் செய்யப்பட்ட முயற்சியில் ராணுவ தந்திரச் சிந்தனைகளுக்குப் பெரும் பங்குண்டு என்பதில் சந்தேகமில்லை. போலி ''விடுதலை''ப் பதவி தருவதாய் ஒருபுறம் சொல்லிக்கொண்டே, பிரிட்டிஷ் ராணுவ—ராணுவ தந்திர ஆதிக்கம் இந்தியாவில் வலுப்பதற் கான நடைமுறை ஏற்பாடுகள் பெரிதும் வலியுறுத்தப்பட்டன.

## 2. பிரிட்டனின் உள்நாட்டு அரசியலுக்கு இந்தியாவின் முக்கியத்துவம்

பிரிட்டனுக்கு இந்தியாவின் ராணுவ தந்திரமுக்கியத்தோடு, பிரிட்டனின் உள்நாட்டு சமூக-அரசியல் உறவுகளின் முழு கட்டுக்கோப்புக்கும் தன்மைக்கும் இந்தியாவின் ஆட்சிக்கும் சுரண் டலுக்கும் உள்ள முக்கியத்துவம் பின்னிப் பிணைந்து கொண்டுள் ளது, படிப்படியாக, விசேஷமாக இந்தியாவைச் சுரண்டல் செய்து, பதினேழாவது பதினெட்டாவது நூற்றுண்டுகளின் தொடக்க காலக் கொள்ளை தொழிற் புரட்சிக்கு தேவையான முதல் மூலதனத்தைத் திரட்டிக்கொள்ள உதவியதையும், பத் தொன்பதாம் நூற்றுண்டில் இந்தியாவை யந்திர உற்பத்தி களுக்கு முக்கியமான சந்தையாகவும் மூலப் பொருள்களின் உற் பத்தி ஸ்தலமாகவும் மாற்றியதையும், பின்னர் இந்தியாவை முதற் பொருள் ஏற்றுமதிக்கான சந்தை ஆக்கியதையும், இவ்வாறுக பிரிட்டனில் முதலாளித்துவப் பொருளாதாரம் வளர்க்கப்பட்ட

தையும் நாம் ஏற்கனவே விவரித்திருக்கிறோம். இந்த நெருக்கமான பொருளாதாரத் தொடர்பின் தவிர்க்க முடியாத எதிர்விளை பிரிட்டனின் பொருளாதார அமைப்புமீது மட்டுமல்ல, அதே போலவே சமூக, அரசியல் நிறுவன அமைப்புமீதும், பிரிட்டனின் அரசியல் போக்கு முழுவதன்மீதும் உண்டாகியது.

ஸீலீ தம்முடைய ''இங்கிலாந்தின் விஸ்தரிப்பு'' என்ற நூலில் தாமே விஸ்தரிப்பு கொள்ளும் மனோபாவத்தில் இருந்த ஒரு நேரத்தில், ''சாம்ராஜ்யத்தின் தீக்கனவு[1] தான் ரோமாபுரியின் சுதந்திரத்தை அழித்தது என்பதை ஒவ்வொரு வரலாற்று மாண வனும் அறிவான்'' என்றொரு அருமையான அறிவுரையை எறிந்து விட்டார். இந்த அறிவுரை ஆழம்மிக்கது, அவர் ஏற்பதற்கு முன் வராத அர்த்தபுஷ்டியுள்ள முடிவுகளைக் கொள்ளச் செய்வது. சாம் ராஜ்யத்துக்கும் ஜனநாயகத்துக்கும் இடையிலுள்ள மோதல், இங்கிலாந்தின் நவீனகால வரலாறு நெடுகிலும் தொடர்ச்சியான இழைபோல் ஓடுகிறது.

பதினெட்டாம் நூற்றாண்டின் இடையில் இந்தியா வெற்றி கொள்ளப்பட்டது முதல், பிரிட்டனின் உள்நாட்டு அரசியலில் சாம்ராஜ்யம் நேராக செல்வாக்கு செலுத்தும் இழையோட்டத் தைத் தொடர்ச்சியாய்க் காணலாம்.

பதினெட்டாம் நூற்றாண்டு அரசியலையும், சீர்திருத்தத் திற்கு முந்தைய பாராளுமன்றத்தையும் ஊழல் படுத்திய ''நவாப்'' களின் செல்வாக்கு மிக அபக்கியாதி பெற்றது. இந் தியப் பிரச்னைபேரில் பாக்ஸின் சீர்திருத்த அமைச்சவை 1783 இல் தோற்கடிக்கப்பட்டது; அதன் இடத்தில் பிற்போக்கு சக்திகளின் நீண்டகால ஆட்சி, பிரெஞ்சுப் புரட்சியின்பால் பிடிவாதமான பகைமை கொண்ட எதிர்ப் புரட்சிக்காரர்களின் ஆட்சி ஏற்பட்டு இங்கிலாந்தில் ஜனநாயகச் சீர்திருத்தம் தள்ளி வைக்கப்பட்டுக் கொண்டே சென்றது. 1832 இன் சீர்திருத்த மசோதா பழைய ஆதிக்கத்தை அகற்றி அதன் இடத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டு லங்காஷயரின் ஆதிக்கத்தை ஏற்படுத்தியபோது, இந்தியச் சுரண்டலில் லங்காஷயர் கொண்ட பாகம் பத்தொன்பதாம் நூற்றாண்டு லிபரலிஸத்தின் (தாராளக் கொள்கையினரின்) வேட்கைகளை எல்லாம் நாசமாக்கி, அதை நடத்திச் சென்ற பாதை லிபரல் ஏகாதிபத்தியத்தில் முடிவுற்றது.

1. ஸீலீ INCUBUS என்னும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார்; ஆண் வடிவு கொண்டு பெண்களைப் புணருப் பிசாசுகளைப் பற்றின அச்சம் கொள்ளும் தீக்கனவு என்பது இச்சொல்லின் பொருள்.

—மொழி பெயர்ப்பாளர்—

கொடுங்கோல் ஆதிக்கம் செலுத்தும் செயல் முறைகளில் பயிற்சிபெற்ற ஆங்கிலோ—இந்திய ஆட்சியாளர்களின் அணியிலிருந்து, பிரிட்டனின் உள்நாட்டு அரசியலில் பிற்போக்குச் சக்திகளைத் திரட்டும் வழக்கம், ஒரு வெல்லிங்டன் காலம் முதல் ஒரு கர்ஸன் அல்லது ஒரு லாயிட் காலம் வரை தொடர்ச்சியாக நீடித்து வந்துள்ளது. கன்சர்வேடிவ்களுக்கு (மிதவாதிகளுக்கு) இடையில் ஏற்பட்ட பிளவுகளிலும் போக்குகளிலும், ஆங்கிலோ-இந்தியர்களுக்கும் விடாக்கண்டர்களுக்கும் இடையிலுள்ள நெருங்கிய தொடர்பைத் தொடர்ச்சியாய்க் காணலாம்.

ஆளும் வர்க்கத்தின் அணிகளுக்குள் மட்டுமல்ல, தொழிலாளர் வர்க்க அணிகளுக்குள்ளும் அதே சாம்ராஜ்யச் செல்வாக்கு பரவியிருந்ததுதான், பிரிட்டிஷ் தொழிலாளர் இயக்கம் வக்கிரமாகவும் கோணலாகவும் நடந்துகொள்வதற்குப் பொறுப்பாகும். ஆகையால், உலகத் தொழிலாளர் வர்க்கத்தை வர்க்க விடுதலைக்காக வெளிப்படையான வர்க்கப் போராட்டத்துக்குத் தூண்டியதும், காலனி மக்களின் பிரச்னையை ஆதரித்ததுமான, புதிய, சக்தி வாய்ந்த சார்ட் இயக்கத்தைப் பின்பற்றுமல், உயர்மட்டத் தொழிலாளர் வர்க்கத்தினர் இகழத்தக்க பத்தொன்பதாம் நூற்றுண்டின் சமாதான முறையைப் பின்பற்றித் தங்கள் எஜமானர்களின் வாலைப் பிடித்துக் கொண்டு பணிவாக நடந்தார்கள். இந்த ஊழலுக்கும் இழிவுக்கும் வேரோட்டம், உலக காலனிகளின் சுரண்டல் கொள்ளையை—அதில் முக்கியமான பகுதி இந்தியாவுடையது—பங்கிட்டுக் கொள்வதில்தான் உள்ளது என்பதை மார்க்சும் எங்கெல்சும் மீண்டும் மீண்டும் சுட்டிக் காட்டினர். ஆகையினுலும், பிரிட்டனின் தொழிலாளர் வர்க்கம் புதிதாய் விழிப்பு கொள்வதற்கு, உயிரோட்டம் தரும் சோஷலிச மூச்சு திரும்ப வந்தும், தொழிலாளர் ஏகாதிபத்தியத்தின் அரிப்பு முறை காரணமாக முன்னேற்றம் பெரிதும் வலுவற்றும், பிளவுபட்டும், வக்கிரமுற்றும் இருந்தது; அதற்கான விலையை 1914 போரிலும் இப்போதைய போரிலும் செலுத்த வேண்டியிருந்தது. ஜாரிஸத்தின் எல்லா முறைகளையும் பயன்படுத்தி ஒரு ஜனநாயக இயக்கத்தை ஒடுக்க முயன்ற இரண்டு தொழிலாளர் அரசாங்கத்தின் செய்கைகள் மட்டும் அல்ல, எதிர்க் கட்சியிலிருந்த தொழிலாளர் கட்சி ஆட்சியிலிருந்த மிதவாதக் கட்சியோடு இந்தியாவுக்கு எதிராகக் கூட்டணியாகச் சேர்ந்ததுமான தொழிலாளர் கட்சியின் அதிகாரபூர்வமான, வெட்கப்படத்தக்க வரலாறு, பிரிட்டிஷ் தொழிலாளர் வர்க்கத்தின் விடுதலையைப் பின்தள்ளிக் கொண்டிருக்கும் இந்தக் கான்சர் தொழிலாளர் இயக்கத்தின் செல்வாக்குள்ள பகுதி

யினரின் ரத்தவோட்டத்தில் இன்னும் கலந்துள்ளது என்பதை காட்டுகிறது. 1937 இல் போர்ன்மவுத்தில் நடந்த தொழிலாள கட்சி மாநாட்டில், ஓர் அரசியல் நிர்ணயசபை வாயிலாக இந்திய வுக்குச் சுய நிர்ணய உரிமை—எதிர்க்க முடியாத அடிப்படையா ஜனநாயகக் கோரிக்கை—கோரும் ஒரு தீர்மானம் நிகழ்ச்சி நிரலி வைக்கப்பட்டபோது, அத்தீர்மானத்தை எட்ட முடியாமலு வாக்கெடுப்புக்கு விடமுடியாமலும் அதிகாரத்தில் இருப்பவர்க தடுத்து விட்டார்கள்.

இந்த ஆதிக்கத்தின் அடிப்படை நொறுங்கி, அதன் விளை வாகத் தொழிலாளர்களின் ஒரு பகுதியினருக்கிடைத்த போ லாபங்கள் மறைந்து வரும் இன்றுகூட ஏகாதிபத்தியத்தி அரசியல் வல்லுநர்கள், ஏகாதிபத்தியத்தின் ஆதாயங்க பிரிட்டிஷ் தொழிலாளர் வர்க்கத்திற்கும் பிரிட்டிஷ் மக்களுக்கு இன்றியமையாதவை என வலியுறுத்திப் பேசுகிறார்கள். இவ்வாறு சர்ச்சில்:

> "நம்முடைய மாபெரும் வெளிநாட்டுத் தொடர்புகள் இல்லாமலும், இப்போது பாதியாகியிருக்கிற வெளிநாட்டு வர்த்தகம் இல்லாமலும், இப்போது பெரிதும் முடக்கப்பட்டி ருக்கிற கப்பல் தொழில் இல்லாமலும், நம் சமூகப் பணிகளுக் காக வரிவிதிப்புக்கு உட்பட்டிருக்கிற நம் வெளிநாட்டு முதலீடுகளின் வருவாய் இல்லாமலும் உயிர்வாழக் கூடிய அளவு மக்களைவிட மிகுதியாக நூற்றைம்பது லட்சம் மக்கள் இங்கு இருக்கிறார்கள். நமக்கும் இந்தியாவுக்கும் இடையில் ஒருவருக்கொருவர் நலம்தரும் பணிகளைப் பரிவர்த்தனை செய்து கொள்வதன் வாயிலாக இந்தத் தீவுகளிலுள்ள இருபது அல்லது முப்பது லட்சம் பேருக்கு பிழைப்பு நடக்கிறது என்று நான் கருதுகிறேன்."
>
> (வின்ஸ்டன் சர்ச்சில், மக்கள் சபையில் சொற் பொழிவு, மார்ச் 29, 1933.)
>
> "பிரிட்டனில் ஊதியம் ஈட்டுவோருக்கும் இந்தியாவுக்கும் நிறையத் தொடர்பு உண்டு. லங்காஷயர் பருத்தித் தொழில் நிபுணர்கள் அதை முன்பே கண்டுபிடித்து விட்டார்கள். அவர்களில் ஒரு நூறாயிரம் பேர் இன்று அரசு உதவித் தொகையால் ஏற்கனவே பிழைக்கிறார்கள். நாம் இந்தியாவை இழந்தால், அயர்லாந்தின் விடுதலை இயக்கக்காரர்கள் நமக்குத் துன்பம் தரும் வகையில் நம்மோடு பழகுவது போல் இந்திய விடுதலை இயக்கக்காரர்களும் நம்மோடு பழகத் தொடங்கினால் இந்த நாட்டிலுள்ள இருபது லட்சத்திற்கும் மேற்பட்ட உணவு ஈட்டுவோர் தெருக்களில் அலைந்து திரிய

வும், தொழிலாளர்களுக்கு வேலை தேடித்தரும் நிலையங்களில் காத்துக் கிடக்கவும் நேரும்.''

(வின்ஸ்டன் சர்ச்சில், இந்தியாபற்றின ஒலிபரப்பு, ஜனவரி 29, 1935.)

இந்த விவாதமுறை நடைமுறையில் எவ்வளவு பொய்யானதோ, கொள்கையில் அவ்வளவு நச்சுத்தன்மை வாய்ந்தது. சுண்டிச் சாகப்போகும் ஓர் ஏகபோக ஆதிக்கம் சிந்திச் சொட்டும் துண்டுத் துணுக்குகளுக்காக, பிரிட்டிஷ் தொழிலாளர்கள் தங்கள் பிறப் புரிமையான சுதந்திரத்தை விட்டுத்தர வேண்டும், தங்கள் உழைப்பின் முழுப்பயனையும் அடையாமல் நஷ்டப்பட வேண்டும், அடிமை மக்கள்களுக்கு எதிராகத் தங்கள் எஜமானர்களோடு துணைசேர வேண்டும். இந்தக் கொள்கையின் விளைவு செழுமை அல்ல, அழிவு. நிகழ்காலத்தின் கடுமையான நடைமுறையில் அது ருசுவாகியுள்ளது. இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்கப்படவில்லை, ஆயினும், பிரிட்டனிலுள்ள இருபது லட்சம் உணவீட்டுவோர் வேலை தேடித்தரும் நிலையங்களுக்கு முன் க்யூ வரிசையில் காத்துக் கிடப்பதைத் தடுக்க முடியவில்லை. பழைய பத்தொன்பதாம் நூற்றாண்டு ஏகபோக ஆதிக்கத்துக்குச் சாவுமணி அடித்தாகி விட்டது, இனி ஒருகாலும் அதை மீட்க முடியாது. அதைத் தூக்கி நிறுத்துவதற்காகச் சுரண்டல்காரர்களுடன் கூட்டுச்சேர முயலுவதாலும், பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள்மீது மட்டுமல்ல பிரிட்டிஷ் மக்கள் மீதே அடிமைப்பட்ட மக்கள்களின் பகைமை யைக் கூர்மையாக்குவதாலும், பிரிட்டிஷ் மக்களே தனித்து விடப்பட்டு அழியும் காலத்தை விரைவுபடுத்திக் கொள்வதாகும். இதற்கு மாற்று அடிப்படையை, பிரிட்டிஷ் தொழிலாளர்கள் வளமையாகவும் கண்ணியமாகவும் வாழ்வதற்கு முழுவாய்ப்பு தருகிற, சகோதரத் தன்மை வாய்ந்த, ஆக்ககரமான உறவுகளில் தான் காண வேண்டும். அந்த உறவுகளின் அடிப்படையைக் கண்டுபிடிக்க முடியும், ஏகாதிபத்தியச் சுரண்டலின் பழைய உறவுகளை அகற்றுகிற மக்களின் சரிசமானமான தோழமை அடிப் படையில்தான் அந்த அடிப்படையைக் கண்டுபிடிக்க முடியும்.

ஏகாதிபத்தியங்களின் போட்டி அதன் கொலைகார விளைவான புதுப்பிக்கப்பட்ட போருக்கு மீண்டும் செலுத்தியிருக்கையில், பிரிட்டிஷ் தொழிலாளர்களுக்கும் பிரிட்டிஷ் மக்களுக்கும் முன் னிலையில் மாற்றுவழி திறக்கிறது, இந்திய மக்களோடும் அடிமை யுண்ட எல்லா மக்கள்களோடும் சேர்ந்து சமமான ஜனநாயக உரிமைகளுக்காகவும், நாட்டு விடுதலைக்காகவும், உலக அமைதிக் காகவும், எனவே சோஷலிசத்துக்காகவும் நடைபெறும் பொது வான போராட்டத்தின் பாதை. இந்தப் பிரச்னைகள்பற்றி இந்திய

மக்கள் விழிப்பு கொள்வதைவிட பிரிட்டிஷ் மக்கள் விழிப் கொள்வது குறைந்த முக்கியத்துவம் வாய்ந்தது அல்ல.

## 3. தேசீயமும் அயல்நாட்டுக் கொள்கையும்

சென்ற காலத்தில் பிரிட்டிஷ் உலகக் கொள்கைக்கு பிரிட்டிஷ் உள்நாட்டு அரசியலுக்கும் இந்தியாவின் ராணுவ தந்திர முக்கியத்துவத்தைப்பற்றிப் பரிசீலனை செய்வதால், இந்தியாவின் பாகம் ஒரு கைப்பாவையின் பாகமே என்பதும், உலக சக்திகள், உலக மோதல்களின் சமநிலையில் தன் சொந்த விருப்பப்படி தேர்ந்தெடுத்த வழியிலோ அல்லது தன் சொந்த ஆதிக்கத்தின் படியோ அல்லாமல் பங்கு கொண்டுள்ளது, பெரும் பங்குகொண் டுள்ளது என்பது புலப்படும்.

அந்த நிலைக்கு இப்போது முடிவு ஏற்படுகிறது. இந்திய மக்கள் தங்கள் கருத்துக்களை இந்திய விவகாரங்களில் மட்டும் அல்ல, உலக எல்லையிலும் வலியுறுத்தத் தொடங்கி விட்டனர்.

1914 யுத்தத்துக்கு முன்பு, இந்திய தேசீய இயக்கம், வெளி நாடுகளிலுள்ள இந்தியர்களின் சிறப்பான பிரச்னை பற்றியும் சாம்ராஜ்யத்தின் ஏனைய நாடுகளில் அவர்களுக்கு உண்டாகும் துன்பங்களைப் பற்றியும் கவனிப்பதைத் தவிர, உலக அரசியல் பிரச்னைகளில் தீவிரமான பங்கு கொள்ள முயற்சி செய்ததில்லை

சகாப்தத்தின் பெரும் உலக அரசியல் பிரச்னைகள் சம்பந்த மான முக்கியத்துவ உணர்வு இவ்வாறு இல்லாதிருப்பதை அலட்சிய புத்தி என்றோ அல்லது வேண்டுமென்றே ஒதுங்கி நிற்கும் தன்மை என்றோ தவருக கருதிவிடக் கூடாது. அரசியல் இயக்கத்திற்குள்ளும், மக்கட் தொகையின் எட்டிய பகுதியினருக்கு இடையிலும் அயல்நாட்டு நிகழ்ச்சிகளைப் பற்றி, இந்திய விடுதலையின் சாத்தியக் கூறுகளை அவை எவ்வாறு பாதிக் கும் என்கிற அளவில் ஆழ்ந்த அக்கறை இருந்தது. தென் ஆப்பிரிக்கப் போரில் நிகழ்ந்ததைப்போல் ஏகாதிபத்தியம் வலிவு குன்றும் ஒவ்வோர் அறிகுறியும் ஆவல்மிக்க நம்பிக்கையோடு கூர்ந்து கவனிக்கப்பட்டது. 1905 இல் ஜப்பானுக்குக் கிட்டிய வெற்றி உற்சாகமாய்ப் போற்றப்பட்டது, மேலே ஏகாதிபத்தியத் தின் வெல்லமுடியாத படைகள் எனப்பட்டதை ஓர் ஆசிய நாடு வீழ்த்திய முதல் வெற்றி என்று ஒரு புதிய நம்பிக்கை உணர்ச்சி உண்டாயிற்று. பிரிட்டிஷ் ஆதிக்கத்தை எதிர்த்து எகிப்தும், அயர் லாந்தும் நடத்திய போராட்டம், வல்லரசுகளின் கொன்று தின்னும் திட்டங்களுக்கு எதிராக, அச்சுறுத்தப்பட்ட துருக்கி சாம்ராஜ்யத்தின் போர், அல்லது, ஆங்கிலோ—ரஷியர்களின்

பிரிவினைத் திட்டங்களுக்கு எதிராகப் பெர்சியா நடத்திய போர் உணர்ச்சிமிக்க பரிவை எழுப்பியது. 1905 ஆம் ஆண்டு ரஷியப் புரட்சியும், துருக்கியப் புரட்சியும், சீனப் புரட்சியும் எதிரொலிக்கும் ஒலி எழுப்பின. பரந்த அனைத்துலக உணர்வின் முதல் தொடக்கங்களின் சின்னங்களே இவை.

1914 போரும், 1917 ரஷியப் புரட்சியும் ஒரு புதிய நிலையைக் கொண்டுவந்தன.

1914 போரில் தேசீய இயக்கத்தின் மேல்மட்டத் தலைமையினர் தங்கள் முழு ஆதரவையும் ஏகாதிபத்தியத்துக்குத் தந்தனர்; அதற்குப் பரிசாக இந்தியாவில் ஜனநாயக முன்னேற்றத்தைப் பெறலாம் என்று நம்பிக்கை கொண்டிருந்தனர். போர்த் தொடக்கத்தின்போது லண்டனில் லஜபத்ராய், ஜின்னு, சின்ஹா முதலியவர்களைக் கொண்ட தேசீய காங்கிரஸ் தூது கோஷ்டி இருந்தது; அவர்கள் ''சாம்ராஜ்யத்தின் விரைவான வெற்றி''க்குத் தங்கள் ஒத்துழைப்பை மிக அவசரமாக வெளியிட்டார்கள். காந்தியின் பங்கு முன்பே விவரிக்கப்பட்டுவிட்டது. போரின் ஆரம்ப ஆண்டுகளில், தேசீய காங்கிரஸ் கூட்டங்களில் கலந்து கொண்ட அரசுப் பிரதிநிதிகள் ஆரவாரமான வரவேற்பு அளிக்கப்பட்டனர்.

போர்க்குணம் வாய்ந்த தேசீயவாதிகளின் ஒரு சிறு கோஷ்டியினர், ஹரதயால், பர்கதுல்லா, மற்றவர்கள் ஜெர்மனியோடு தொடர்பு கொண்டனர், பெர்லினில் ஓர் இந்தியா கமிட்டி அமைத்தனர். ஆயினும், இவை பெரிய பாதிப்பு ஏற்படுத்தவில்லை. இந்தியாவுக்குள், தேசீய இயக்கத்தின் இடதுசாரிகளால் போர்க்குணம் வாய்ந்த கிளர்ச்சிகள் நடத்தப்பட்டன.

யுத்தம் முடிந்தபிறகு, பரவலாகப் பேசப்பட்ட சுய நிர்ணய வாக்குறுதிகள் இந்தியாவுக்கும் பயன்படுத்தப்படும் என இன்னும் தேசீய காங்கிரஸ் நம்பிக் கொண்டிருந்தது. வெர்சேலில் நடந்த அமைதி மாநாட்டில் கலந்து கொள்ளத் திலகர் காங்கிரஸ் பிரதிநிதியாக அனுப்பப்பட்டார்; பிரிட்டிஷ் அரசால் அவருக்குப் பயண அனுமதிச் சீட்டு மறுக்கப்பட்டதால் மாநாட்டில் கலந்து கொள்ள முடியாதுபோகவே திலகர் அமைதி மாநாட்டுத் தலைவரான கிளெமன்சுவுக்கு இந்திய உரிமையை வலியுறுத்துமாறு கேட்டுக்கொண்டு ஒரு கடிதம் எழுதினர். கடிதத்துக்கு இடையில் அவர் எழுதினர்:

''உலகத்தின் எதிர்கால அமைதியை உறுதிப்படுத்துவதற்கும், இந்திய மக்களின் முன்னேற்றத்திற்கும் இந்தியப்

பிரச்னேக்குத் தீர்வுகாண வேண்டிய தலேயாய முக்கியத்துவம் பற்றி நான் எழுதத் தேவை இல்லே. இந்தியா தன்னிறைவு கொண்டது, மற்ற நாடுகளின் ஒருமைப்பாட்டுக்கு விரோத மான தீயநோக்கங்கள் அதற்கு இல்லே, நாட்டுக்கு வெளியே பேராசைகள் ஏதும் இல்லே. தன்னுடைய விரிவான பரப்பா லும், மிகுதியான வளங்களாலும், பெரும் மக்கட் தொகை யாலும் ஆசியாவில் ஒரு தலேசிறந்த வல்லரசாய் விளங்க அது விழையலாம். எனவே, கீழ்த்திசையில் அமைதியைப் பேணவும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் நிலேயுண்மையைக் காக்கவும் ஆசியாவிலோ அல்லது வேறிடங்களிலோ தாக்கு தல்காரர்களுக்கும் அமைதியைக் குலேப்பவர்களுக்கும் எதி ராகவும் சர்வதேச சங்கத்தின் சக்திவாய்ந்த காவலஞக அது இருக்கும்.''

1919 ஆம் ஆண்டின் இந்த ஆவணம், உலகக் கொள்கைத் துறை யில் இந்திய தேசீய இயக்கத்தின் முதலாவதாகும், அப்போதிருந்த கண்ணேட்டத்தையும் அது பிரதிபலிக்கிறது.

இந்த நம்பிக்கைகள் நொறுங்கிவிழ இருந்தன. ''இந்தியா'' சர்வதேச சங்கத்தின் ஒரு மூல உறுப்பினர் ஆக்கப்பட்டது. இந்தியாவின் மீது ஆதிக்கமும், எனவே அதன் பிரதிநிதிப் பொறுப்பும் கொள்கையும் முற்றிலும் பிரிட்டிஷாரின் கைகளில் இருக்க, இவ்வாறு ''உறுப்பினரை''ச் சேர்க்கும் முரண்பாட்டு, பேராசிரியர் ஏ. பீ. கீத்திஞல் கடுமையாகக் கண்டிக்கப் பட்டுள்ளது:

''இந்தியாவின் உள்நாட்டு வெளிநாட்டுக் கொள்கை மீது பிரிட்டிஷ் அரசிஞல் முற்றிலும் ஆதிக்கப்படும் ஒரு சமயத்தில் அதற்கு சர்வதேச சங்கத்தில் ஓர் இடம் கொடுக் கப்பட்டபோது 1919 இல் தான் அடிப்படைத் தவறு நடந் தது. சங்க உறுப்பினராக, சுயாட்சியே தகுதி; பெரும் குடி யேற்ற நாடுகளுக்கு அதை நியாயமாகச் சோதிடம் கூறலாம்; இந்தியா பற்றியோ அது நிகழ்கால உண்மை அல்ல; அண்மை யில் அது நிறைவேறுமா என்றும் சொல்வதற்கில்லே. இந்தச் சூழ்நிலேயில், அப்போது இந்தியாவுக்கு லீகில் ஓர் இடம் கொடுக்கப்பட முடியாது என்றும், அது சுயாட்சியோடுள்ள காலத்தில் தனி உறுப்பினராகத் தாராளமாய்ச் சேர்த்துக் கொள்ளப்படும் என்றும், வெளிப்படையாகச் சொல்லியிருந் தால் விவேகமாக இருந்திருக்கும்.... இப்போது உள்ளபடி, லீகில் இந்தியாவின் நிலே உண்மையில் ஒழுங்கீனமாக இருக் கிறது; ஏனெனில் அதன் கொள்கை பிரிட்டிஷ் அரசால் முடிவு

செய்யப்படுகிறது, காலவரையறை இன்றி முடிவு செய்யப் படவும் போகிறது.''

(சர். ஏ. பீ. கீத், ''இந்தியாவின் அரசியலமைப்பு வரலாறு'', பக். 472-3.)

1919 இல் திலகர் எழுதியுள்ள கடிதப்படி தேசீய இயக்கத்தின் பழைய தலைமையினர் இன்னும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமே தங்களுக்கு இயற்கையான தலைவர் என்று கருதி, ''பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் நிலையுண்மையைக் காக்கும் சக்தி வாய்ந்த காவலனாக'' இருக்க விழைவதாய்ப் பகிரங்கமாய்ச் சொல்லுகையில், புதிய சிந்தனையோட்டங்கள் முதல் உலகப்போரின் முடிவு முதல் தோன்றிக் கொண்டிருந்தன. 1917 ரஷ்யப் புரட்சியும், அதைத் தொடர்ந்து போர் முடிவுக்குப் பின் எழுந்த உலகப் புரட்சி அலையும், எல்லா அடிமை நாடுகளிலும் காலனி விடுதலை இயக்கங்களின் முன்னேற்றமும், இந்தியாவுக்கு உயிர் நாடியான தொடர்புள்ள ஒரு புதிய உலகச் சூழலை உண்டாக்கின. மேலை ஏகாதிபத்தியத்தின் பழைய பிற்போக்குப் பாசறைக்கு எதிராக, சோவியத் யூனியனின் விசாலமான பொதுநலன்களும், அனைத்துலகத் தொழிலாளர்வர்க்க இயக்கமும், காலனி நாடுகளில் தேசீய இயக்கமும் ஒரு புதிய உலக அணிவகுப்பு ஏற்பட வழி விடுகின்றன. இந்தப் புதிய உலகஅணிக்கு இந்திய தேசீயத்தின் முற்போக்குச் சக்திகள் ஆர்வத்தோடு ஆதரவு தந்தன.

1925-27 இல் சீன தேசீயப் புரட்சியின் முன்னேற்றம் இந்தியாவில் உற்சாகமான பிரதிபலிப்பை எழுப்பியது. சீனப் புரட்சிக்கு எதிராய்ப் பயன்படுத்த ஷாங்காய்க்கு இந்தியத் துருப்புகளை அனுப்புவதைக் கண்டனம் செய்து 1927 இல் தேசீய காங்கிரஸ் ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. அதே ஆண்டில் ''ஏகாதிபத்தியத்துக்கு எதிரான ஒடுக்கப்பட்ட மக்களின் லீகை'' நிறுவுவதிலும் அதனுடன் இணைவதிலும் பங்குகொண்ட தேசீய காங்கிரஸ், லீகின் பிரஸ்ஸல்ஸ் மாநாட்டுக்கு நேருவைப் பிரதிநிதியாக அனுப்பியது. காலனி மக்கள்களும் அனைத்துலகத் தொழிலாளர் வர்க்கமும் இணைந்து உலக ஏகாதிபத்திய எதிர்ப்புச் சக்திகள் பொதுவான அணியாக வளர்ச்சி பெற்றதில் இது ஒரு முக்கியமான மைல்கல் ஆகும்.

பாசிஸ்டு போர் ஆக்கிரமிப்பும், அந்த ஆக்கிரமிப்புக்குப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் உதவியாக இருந்து பங்கு கொண்டதால் உலகப் போரின் முன்னேற்றத்தை விரைவுபடுத்தியதுமான சூழலில் இந்த எழுச்சி பெருக்கெடுத்து ஓடியது. தேசீய காங்கிரஸ் அபிசீனிய மக்களையும், ஸ்பானிஷ் ஜனநாயகத்துக்கும் ஆதரவு தந்து, அவற்றுக்கு நடைமுறை உதவியையும் வழங்கிற்று. 1936

செப்டம்பரில் பிரஸ்ஸல்ஸில் நடைபெற்ற உலக சமாதானக் காங்கிரசில் அதன் பிரதிநிதி கலந்துகொண்டார்; ஏகாதிபத்தியச் சுரண்டலின் அடிப்படையில் நிலையான அமைதியை வளர்க்க முடியாது என்றும், ஏகாதிபத்திய ஆதிக்கத்தைப் பேணும் எந்த ஒப்பந்தங்களின் புனிதத் தன்மையை ஏற்க முடியாது என்றும், சர்வதேச சங்கத்தில் சுயேச்சையான உறுப்பினராய்ப் பணியாற்ற இந்தியாவுக்கு விடுதலை வேண்டும் என்றும் காங்கிரஸ் கூறிய கருத்துக்கு உட்பட்டு, அது ''அனைத்திந்திய சமாதானப் போராட்ட''த்தோடு இணைக்கப்பட்டது. 1936 இல் ஸ்பானிஷ் ஜனநாயகத்தை எதிர்த்து ஜெர்மானிய-இத்தாலிய ஆக்கிரமிப்புப் போர் செய்தபோது, பிரிட்டிஷ் அரசும் பிரெஞ்சு அரசும் ''தலையிடாமை''க் கொள்கையைப் பின்பற்றிய போது, 1936 இல் பெய்ஸ்பூரில் கூடிய இந்திய தேசீய காங்கிரஸ் பின்வரும் தீர்மானத்தை நிறைவேற்றியது:

> ''ஐரோப்பாவின் மீதும் உலகத்தின் மீதும் ஆதிக்கம் செலுத்தி, அரசியல், சமூக விடுதலையை நசுக்கும் நோக்கத்துடன் பாசிஸ்டு வல்லரசுகள் கூட்டாய்ச் சேர்ந்தும் கோஷ்டியாக் கூடியும் நடத்தும் பாசிஸ்டு ஆக்கிரமிப்பு பெருகிவிட்டது. முற்போக்கு நாடுகளோடும் உலக மக்கள்களோடும் சேர்ந்து இந்த உலக அபாயத்தை எதிர்க்க வேண்டியதன் அவசியத்தைக் காங்கிரஸ் முற்றிலும் உணருகிறது.''

1938 பிப்ரவரியில், ஹரிபுராவில் கூடிய காங்கிரஸ் ''கூட்டுப் பாதுகாப்புக்கு''த் தன் ஆதரவைத் தெரிவித்தது; யுத்த அபாயத்தை அருகில் கொண்டுவந்த பாசிஸ்டு ஆக்கிரமிப்புக்கு உடந்தையாக இருக்கும் கொள்கையை கண்டித்தது. 1938 இல் ஜப்பானியப் பொருள்களைப் பகிஷ்காரம் செய்யுமாறு அறிவிக்கப்பட்டது. 1938 வசந்தத்தில் திரிபுரியில் கூடிய தேசீய காங்கிரஸ் மியூனிக் கொள்கையினின்றும் தன்னைத் தெளிவாய் விலக்கிக் கொண்டது:

> ''மியூனிக் ஒப்பந்தத்திலும் ஆங்கிலோ-இந்திய உடன்பாட்டிலும், கலகம் செய்த ஸ்பெயினை ஏற்பதிலும் உச்ச நிலையை எட்டிய பிரிட்டிஷ் அயல் நாட்டுக் கொள்கைக்குத் தன் உடன்பாட்டின்மையைக் காங்கிரஸ் பதிவு செய்கிறது. இந்தக் கொள்கை மனமறிந்து ஜனநாயகத்தைப் பலி இடுவதாகவும், வாக்குறுதிகளைத் திரும்பத் திரும்ப மீறுவதாகவும், கூட்டுப் பாதுகாப்பு முறைக்கு முடிவுகட்டுவதாகவும், ஜனநாயகத்துக்கும் சுதந்திரத்துக்கும் ஜன்ம விரோதிகளான அரசுகளுடன் ஒத்துழைப்பதாகவும் இருக்கிறது.....முரண்படாமல் பாசிஸ்டு வல்லரசுகளுக்கு உதவி, ஜனநாயக நாடு

களின் அழிவுக்கு உடந்தையாக இருக்கும் பிரிட்டிஷ் அயல் நாட்டுக் கொள்கையினின்றும் காங்கிரஸ் தன்னை முற்றிலும் விலக்கிக் கொள்கிறது.''

இவ்வாறாக, 1939 இல் பிரிட்டன் ஜெர்மன் மீது போர் தொடுப்பதற்கு நெடுங்காலத்துக்கு முன்னரே, அதற்கு முந்தின நெருக்கடியான ஆண்டுகளில் பிரிட்டிஷ் அரசாங்கம் நடைமுறையிலும் ராஜதந்திர முறையிலும் பாசிஸ்டு ஆக்கிரமிப்புக்கு உதவி செய்யும் காலத்திலேயே இந்திய மக்கள் தங்கள் தேசீயத் தலைவர்கள் வாயிலாக பாசிஸத்துக்குத் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்ததோடு, பாசிஸத்துக்கு எதிராக உலகத்தின் ஜனநாயக, முற்போக்கு சக்திகளுடன் தாங்கள் அணிவகுத்து நிற்பதையும் வெளியிட்டு விட்டார்கள்.

## 4. இந்தியாவும் போரும் (1939-1942)

1939 இல் பிரிட்டன் ஜெர்மனிமீது போர் தொடுத்தபோது, 1914 இல் இந்தியா சம்பந்தமாக எந்தக் கொள்கை முறைகளைக் கையாண்டதோ அவற்றையே இப்போதும் பின்பற்றத் தலைப்பட்டது. இந்திய மக்களைக் கலந்து கொள்ளாமல், யந்திரமெனப் பிரிட்டனுக்குப் பின்னால் இழுத்துச் செல்லப்படுகிற செயலற்ற கைப்பாவையாக இந்தியா இருக்க வேண்டும் என்பதே பிரிட்டிஷ் கொள்கை.

போர் தொடுக்கப்பட்ட சில மணிகளுக்குள் இந்திய மக்களின் பிரதிநிதிகளைக் கலந்து கொள்ளாமலே வைசிராய், இந்தியா ஒரு ''போரிலுள்ள நாடு'' என்று அறிவித்தார். பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் இந்திய அரசாங்கத் திருத்தச் சட்டம் ஒன்று பதினொரு நிமிடங்களில் மெத்த அவசரமாய் நிறைவேற்றப் பட்டது; அதன்படி, மாகாண சுயாட்சி தொடர்பான அரசியல் நடைமுறையை நீக்கவும் வைசிராய்க்கு அதிகாரம் வழங்கப் பட்டது. 1939, செப்டம்பர், இந்தியத் தற்காப்பு அவசரச் சட்டம், மைய அரசின் சட்ட ஆணையாட்சிக்கான அதிகாரம் தந்ததுடன், ''பிரிட்டிஷ் இந்தியாவின் தற்காப்புக்காகவும், பொதுபாதுகாப்புக்காகவும், பொது ஒழுங்குமுறைக்காப்புக்காகவும், அல்லது திறப்பாட்டுடன் போரை நடத்தவும், சமுதாய வாழ்க்கைக்கு அவசியமான பொருள்களும் பணிகளும் வழங்கலைக் காக்கவும்,'' கூட்டங்களையும் வேறுவகைப் பிரசாரங்களையும் தடுக்கவும், கட்டளை இன்றிக் கைது செய்யவும், விதிகளை மீறினால் தண்டனைகள் விதிக்கவும், மரண தண்டனை அல்லது ஆயுள் முடிய நாடு கடத்தல் தண்டனை விதிக்கவும் தனக்கு அவசியமெனத் தோன்றும் விதிகளை இயற்றவும் அதிகாரம் வழங்கியது.

செப்டம்பர் 11ஆம் நாள், கூட்டாட்சிக்கான ஆயத்த ஏற்பாடுகளை நிறுத்திவைப்பதாக அறிவித்தார். அரசியலமைப்பு வேடம் ஏதும் இல்லாமல், மிக ஆழ்ந்து செல்லும் அசாதாரண ஒரு அதிகாரங்களுள்ள யதேச்சாதிகார ஆட்சி தொடர்ந்து நடக்க இருந்தது. கால் நூற்றுண்டுக்கு முன்பு நடந்தது போல மீண்டும் ஒருமுறை, போரைத் தவிர்க்க முடியாததாக்கிய எந்தக் கொள்கையை இந்திய மக்கள் தொடர்ந்து கண்டித்து வந்திருந்தார்களோ, எந்தப் போரின் தோற்றத்துக்கு அவர்கள் எவ்விதத்திலும் பொறுப்பில்லையோ, அந்தப் போருக்குப் பிரிட்டிஷ் அரசின் குதிகால்களோடு சேர்த்து இழுத்துச் செல்லப்படவிருந்தார்கள்.

1914 லிருந்து இந்திய நிலைமை மாறிவிட்டதை நிகழ்ச்சிகள் சீக்கிரம் காட்டின.

செப்டம்பர் 14 ஆம் நாள் தேசீய காங்கிரசின் காரியக் கமிட்டி யுத்தம்பற்றித் தன் அறிக்கையை வெளியிட்டது.

> ''ஏகாதிபத்திய முறைகளில் நடத்தப்பட்டு, இந்தியாவிலும் வேறிடங்களிலும் ஏகாதிபத்தியத்தை வலுவாக்கும் நோக்குடன் நடத்தப்படும் ஒரு போரில் தங்களைச் சம்பந்தப்படுத்திக் கொள்ளவோ ஒத்துழைக்கவோ கமிட்டியால் முடியாது.''

அந்த அறிக்கை பின்வரும் உரிமை கோரியது:

> ''வெளித் தலையீடு இல்லாமல் ஓர் அரசியல் நிர்ணய சபை வாயிலாகத் தங்கள் சொந்த அரசியல் திட்டத்தை வகுத்துக் கொண்டு, தங்கள் கொள்கையைத் தாங்களே அறுதியிடும் சுய நிர்ணய உரிமை இந்திய மக்களுக்கு வேண்டும்.''

அதன்படி, தேசீய காங்கிரஸ் பிரிட்டிஷ் அரசுக்கு நேர் அறைகூவல் விடுத்தது:

> ''ஆகையால், ஜனநாயகத்தையும் ஏகாதிபத்தியத்தையும், குறிப்பாக அவர்கள் ஏற்படுத்த விழையும் புதிய சமுதாய அமைப்பையும் பற்றி பிரிட்டிஷ் அரசினரின் யுத்த நோக்கங்கள் என்ன, இந்த நோக்கங்களை இந்தியாவுக்கு எவ்வாறு பயன்படுத்தப் போகிறுர்கள், இப்போதைக்கு எப்படி செயல்படுத்தப் போகிறுர்கள் என்பதை ஐயந்திரிபுக்கு இடமின்றி அறிவிக்குமாறு காரியக் கமிட்டி பிரிட்டிஷ் அரசை வேண்டுகிறது. அந்த நோக்கங்களில், ஏகாதிபத்தியத்தை விலக்கி, தன்னுடைய மக்களின் விருப்பத்திற்கு ஏற்பத் தன் கொள்கையை வகுத்துக்

கொள்ளும் சுதந்திர நாடாக இந்தியாவை நடத்துவதும் அடங்குகிறதா?''

தேசிய காங்கிரசின் இந்த நேரடிக் கேள்விக்குப் பிரிட்டிஷ் அளித்த மறுமொழி உண்மையில் எதிர்மறையானது. ஏதோ ஓர் எதிர்காலத்தில் என்றோ ஒருநாள் ''குடியேற்ற நாட்டு அந்தஸ்து'' ச் சலுகையை அளித்துவிடப் போவதாய்ச் சொன்ன பழைய வாக்குறுதிகளைத் திரும்பவும் சொல்கிற பாவனையில் (சென்ற போரின்போது இதேமாதிரி சூழலில், இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் அளிக்கப்பட்ட வாக்குறுதிகள் இன்னும் நிறைவேற்றப்படாமலேயே கிடந்தன) பிரிட்டிஷ் அரசு தன்னுடைய உடனடியான வேலைத்திட்டத்தை, அதாவது, இந்தியாவை அடிமைத்தனத்தில் அமுக்கிக் கொண்டு போர் முயற்சிகளுக்குத் துணைபுரிகிற முறையில் இந்தியர்களைக் கொண்ட ஓர் ஆலோசனை கமிட்டியை வைசிராய்க்கு உதவிசெய்ய நியமனம் செய்யும் திட்டத்தை வெளியிட்டது.

தேசிய காங்கிரஸ் தலைமையினருக்கும் பிரிட்டிஷ் அரசினருக்கும் இடையில் ஏற்பட்ட இந்த பூர்வாங்க ராஜதந்திர மோதல், உள்ளுக்குள் உருவாகிவந்த ஆழ்ந்த போராட்டத்தின் முதல் அறிகுறி மட்டும்தான். காங்கிரஸ் தலைமையினர் வைசிராயுடன் இவ்வாறு ராஜதந்திரப் பரிவர்த்தனைகள் நடத்திக்கொண்டிருக்கையில், மக்கள் ஏற்கனவே கிளர்ச்சியைத் தொடங்கி விட்டார்கள். அக்டோபர் 2 ஆம் நாள் 90,000 பம்பாய்த் தொழிலாளர்கள் போருக்கு எதிராகவும் ஏகாதிபத்தியத்தின் அடக்குமுறைகளை எதிர்த்தும் ஒரு நாள் அரசியல் வேலை நிறுத்தம் செய்தது. ''ஏகாதிபத்தியப் போர் ஒழிக!'' ''இந்திய சுதந்திரம் நீடு வாழ்க!'' ''செங்கொடிக்கு ஜே!'' —என்னும் முழக்கங்கள் பம்பாய் வீதிகளில் எதிரொலித்தன. போரில் ஈடுபட்டுள்ள நாடுகள் எதனிலும் நடந்த முதல் போர் எதிர்ப்புப் பெரும் வேலைநிறுத்தம் இதுவே. வேலை நிறுத்தத்தின் முடிவில் காம்கர் மைதானத்தில் நடைபெற்ற பெருங் கூட்டத்தில் ஏகமனதாய் நிறைவேறப்பட்ட தீர்மானம் பின்வருமாறு அறிவித்தது:

''ஏகாதிபத்திய வல்லரசுகளால் மிக நாசகரமான போரில் இழுத்துவிடப்படும் அனைத்துலகப் பாட்டாளி வர்க்கத்தோடும் உலக மக்களோடும் தனக்குள்ள ஒருமைப்பாட்டை இந்தக் கூட்டம் அறிவிக்கிறது. இப்போது நடக்கும் யுத்தம் தொழிலாளர் வர்க்கத்தின் அனைத்துலக ஒருமைப்பாட்டுக்கு ஓர் அறைகூவல் என்று இக் கூட்டம் கருதுவதுடன், மனித இனத்துக்கு எதிரான இந்த ஏகாதி

பத்தியச் சூழ்ச்சியை முறியடிக்க வேண்டிய பொறுப்பு பல் வேறு நாடுகளைச் சேர்ந்த தொழிலாளர்களையும் மக்களையும் சார்ந்தது என்றும் அறிவிக்கிறது.''

பம்பாய் மில் தொழிலாளர்களின் இத் தீர்மானம், இந்திய தொழிலாளர்களின் போராட்டம், ஏகாதிபத்தியத்தை எதிர்த்து அனைத்துலகத் தொழிலாளி மக்கள் நடத்தும் போராட்டத்தின் ஒரு பகுதியே என்னும் உணர்ச்சியை வெளியிடுகிறது.

வைசிராயின் எதிர்மறை மறுமொழியின் விளைவாக 1939 அக்டோபரில் காங்கிரஸ் அமைச்சவைகள் எல்லாம் பதவி விலகல் செய்தன. 1940, வசந்தத்தில் ராம்கரில் கூடிய காங்கிரஸ்,

''இந்தியா தொடர்பாகப் பிரிட்டிஷ் அரசின் சார்பில் அண்மையில் வெளியான அறிவிப்புகள், கிரேட் பிரிட்டன் ஏகாதிபத்திய நோக்கங்களுக்காகவே போரை நடத்துகிறது என்பதைக்காட்டுகின்றன..... இச் சூழ்நிலையில் காங்கிரஸ் எவ்வகையிலும், நேர்முகமாகவோ மறைமுகமாகவோ போருக்கு உடந்தையாக இருக்க முடியாது,''

என்று தன்னுடைய கருத்தை வெளியிட்டது.

பிரான்ஸ் வீழ்ந்து போர் நெருக்கடி ஆழ்ந்து, ஐரோப்பாவில் நாஜிகள் முன்னேற்றத்தைத் தொடர்ந்து 1940 கோடையில் காங்கிரஸ், இந்திய விடுதலையை ஏற்று, மையத்தில் இடைக் காலத் தேசிய அரசு ஒன்று ஏற்படுத்தி, இந்த அரசு சிறிதுகால ஏற்பாடேயானாலும், மையச் சட்டமன்றத்தின் தேர்ந்தெடுக்கப் பட்ட உறுப்பினர்களின் நம்பிக்கைக்கு உரியதாக இருக்கும் வகையில் அமைக்கப்பட வேண்டும் என்கிற நிபந்தனை பேரில் புதிய ஒத்துழைப்பு யோசனை ஒன்றை வெளியிட்டது.....இந்த யோசனைகள் ஏற்கப்பட்டால், நாட்டின் தற்காப்புப் பணிகளைப் பயனுள்ள முறையில் உருப்படுத்தும் முயற்சிகளில் தன் முழு வலிமையையும் ஈடுபடுத்தக் காங்கிரசுக்கு வழி ஏற்படும்.'' வெளித் தற்காப்பு பொருத்த மட்டில் காந்தியின் அஹிம்சை வழியை முற்றிலும் வெளிப்படையாக நிராகரித்த இந்த யோசனை, 1940 இல் பூனாவில் மூன்றில் இரண்டு பகுதி பெரும்பான்மையோடு ஏற்கப் பட்டது. வாக்குகள் 91-63 அஹிம்சையை நிராகரிக்கவும், 95-47 நிபந்தனை பேரில் ஒத்துழைப்பு அளிக்கவும் பதிவாயின.

ஆயினும், மீண்டும் இந்தத் திட்டத்துக்கும் பிரிட்டிஷ் அரசின் 'இல்லை' பதிலே கிடைத்தது. 1940, ஆகஸ்டு 8 ஆம் நாள் வைசிராய் வெளியிட்ட அறிக்கை (பொதுவாக ''ஆகஸ்டுத் திட்டம்'' எனப்படுகிறது, பின்னர் வந்த கிரிப்ஸ் திட்டம்,

மற்றும் கொள்கை அறிவிப்புகளுக்கு இது அடிப்படை ஆயிற்று), ''இந்தியாவின் தேசீய வாழ்க்கையிலுள்ள பெருத்த, வலிய சக்திகளில் நேரடியாக மறுக்கப்படும் ஓர் ஆட்சி முறையிடம், இந்தியாவின் அமைதிக்கும் நலத்துக்குமான இப்போதைய தங்கள் பொறுப்புகளை மாற்றுவதைப்பற்றி'' பிரிட்டிஷ் அரசினர் சிந்திக்க முடியாது என்று உரைத்தது, அதாவது, முஸ்லீம்லீகும், அரசர்களும் எவ்வித இந்திய தேசீய அரசு அமைப்பதையும் 'வீடோ' செய்யும் (நீக்கும்) அதிகாரம் வழங்கப்படவேண்டும். அது ஒரு மாற்று யோசனையும் கூறியது:

1. ''புதிய அரசியல் திட்ட அமைப்பை வகுப்பதற்காக, இந்தியாவின் தேசிய வாழ்க்கையிலுள்ள முக்கியமான சக்திகளின் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு நிறுவனத்தை''ப் போருக்குப் பிறகு ஏற்படுத்துவது;

2. கூடுதலாக நியமனம் செய்யப்பெற்ற இந்தியர்களைச் சேர்த்துக் கொண்டு வைசிராயின் ஆட்சிக் குழுவை விஸ்தரித்தல்;

3. இந்திய சமஸ்தானங்கள், மற்ற இந்தியர்களின் பிரதிநிதிகளைக் கொண்ட ''போர் யோசனைக் குழு'' ஒன்று அமைத்தல்.

இந்த மறுமொழியின் அதிருப்திகரமான தன்மை காரணமாக, காந்தியின் தலைமையில் தனிநபர் சத்தியாக்கிரகப் போராட்டத்தைத் துவக்குவதென்று காங்கிரஸ் தீர்மானித்தது. 1940 அக்டோபரில் போராட்டம் தொடங்கியது. ஏகாதிபத்தியத்துக்கு எதிராக இறுதியான போராட்டம் வேண்டும் என வலியுறுத்திய சக்திகளின் பெரும் வளர்ச்சியின் பிரதிபலிப்பு, 1939-40 லிருந்து தொழிலாளர் வர்க்கத்தின்மீதும், உழவர் சக்திகள்மீதும், தீவிரத் தேசீய சக்திகள்மீதும் இரக்கமற்ற முறையில் அரசாங்கம் நடத்திய தாக்குதலில் மட்டும் வெளியாகவில்லை. காந்தியால் துவக்கப்பெற்ற போராட்டத்தின் மிகவும் கட்டுப்படுத்தப்பட்ட, கடுமையான எல்லை கட்டப்பட்ட தன்மையிலும் வெளிப்பட்டது. அது விடுதலைக்காக நடத்தப்பட்ட போராட்டம் அல்லவாம்; பேச்சுரிமையை வலியுறுத்தும் அடையாள சத்தியாக்கிரகம் தானாம்! சத்தியாக்கிரகிகளின் பட்டிகளை அவருடைய பரிசீலனைக்கும் அனுமதிக்கும் அனுப்பப்பட வேண்டும். அவரால் ஏற்கப்பட்டவர்கள் எங்கு, எப்போது தங்கள் அடையாள யுத்த எதிர்ப்பைத் தெரிவிக்கப் போகிறார்கள் என்பதைப் போலீசுக்கு முன்னதாக அறிவித்துவிட வேண்டும். இவ்வாறிருந்தும் அடுத்த மாதங்களில் ஏராளமானவர்கள் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார்கள் (1941, மே 24 அளவில் ஐக்கிய மாகா

ணங்களில் மட்டும் 12,000 என்பது அதிகார பூர்வமான அறிக்கை; மாகாண சட்டசபைகளின் 398 உறுப்பினர்கள், 31 முன்னுள் அமைச்சர்கள், மைய சட்ட மன்ற உறுப்பினர்கள் 22 பேர் உட்பட, இந்தியா முழுவதிலும் 20,000 பேர் சிறையிடப் பட்டிருப்பர் என்று மதிப்பீடு செய்யப்படுகிறது).

1941 பிற்பகுதியில் சோவியத் யூனியன்மீது ஜெர்மன் தாக்குதல், பிரிட்டன்-சோவியத் ஒப்பந்தம், தொலை கிழக்கில் ஜப்பானியர் தாக்குதல், பிரிட்டிஷ்-சோவியத் ஒப்பந்தம், பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள், சோவியத் யூனியன், சீனு ஆகிய நாடுகளின் தலைமையில் ஐக்கிய நாடுகள் ஒப்பந்தமாக விஸ்தரிக்கப்படுதல் ஆகிய நிகழ்ச்சிகள் போரின் தன்மையில் பெரும் மாறுதலைக் கொண்டு வந்தபோது இருந்த முட்டுக்கட்டை நிலைமை இது.

போரின் இந்த மாற்றத்தையும் இந்தியாவுக்கு அதன் முக்கியத்துவத்தையும் இந்திய தேசீயக் கருத்து விரைவில் பிரதி பலித்தது. 1941 டிசம்பரில் ஜவஹர்லால் நேரு அறிவித்தார்: ''உலகத்தின் முற்போக்குச் சக்திகள், ரஷியா, பிரிட்டன், அமெரிக்கா, சீனு ஆகியவற்றைப் பிரதிபலிக்கும் கோஷ்டியோடு அணிவகுத்து நிற்கின்றன.''

போரின் மாற்றமுற்ற தன்மையை தேசீய இயக்கத்தின் எல்லாப் பகுதியினரும் இவ்வளவு உறுதியாகப் பிரதிபலிக்க வில்லை. சில பகுதியினர் இன்னும் காந்தியின் அஹிம்சை வழி அமைதிவாதக் கொள்கையைப் பின்பற்றினர். மற்றவர்கள் ஏகாதிபத்தியத்தோடு எவ்விதத்திலும் ஒத்துழைப்பது பற்றிச் சந்தேகப்பட்டார்கள். காங்கிரஸ் தலைவர் மௌலானு ஆஸாத், ஜவஹர்லால் நேரு முதலிய முக்கியமான, பொறுப்புள்ள தேசீய இயக்கத் தலைமையினர் பெரும்பான்மை ஆதரவோடு ஐக்கிய நாடு களின் ஒரு சமமான கூட்டாளியாக, ஒத்துழைக்கும் அடிப் படையைக் காண முயன்றனர். இந்தச் சக்திகளோடு ஒப்பந்தம் காண முயல்வது, பிரிட்டன், ஐக்கிய நாடுகளின் நலனுக்கே உகந்தது. இவ்வாறு, 1941 பிற்பகுதியிலிருந்து ஒரு சாதகமான தருணம் பிரிட்டிஷ் அரசை எதிர்ப்பட்டது, புதிய வாய்ப்பைப் புதிய உணர்வோடு பயன்படுத்துகிற விவேகம் தேவை.

பிரிட்டிஷ் அரசின் முதல் மறுமொழி-எதிர்மறை. 1941 ஆகஸ்டு, அட்லாண்டிக் உரிமைப் பட்டயம் பிரிட்டிஷ், அமெரிக்க அரசுகளின் உறுதியான கொள்கையாகப் பின்வருமாறு அறிவித் ததைப் பின்னர் எல்லா ஐக்கிய நாடுகளும் பின்பற்றின:

''தாங்கள் எவ்வகை அரசின்கீழ் வாழவிரும்புகிருர்களோ அதை முடிவுசெய்ய எல்லா மக்கள்களுக்கும் உள்ள உரிமையை அவை மதிக்கின்றன; வன்முறையாக இறைமை உரிமைகளும் சுயாட்சியும் பறிக்கப்பெற்ற நாடுகளுக்கு அவை மீண்டும் வழங்கப்படுவதைக் காண அவை (பிரிட்டனும் அமெரிக்காவும்) விரும்புகின்றன.''

ஆனல் 1941, செப்டம்பரில் நிகழ்த்திய ஒரு சொற்பொழிவில் பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச்சில் அதிகார பூர்வமாக வெளியிட்ட அறிவிப்பில், இந்தியா, பர்மா, மற்ற சாம்ராஜ்ய நாடுகளை அட்லாண்டிக் பட்டயத்தின் எல்லையிலிருந்து விலக்கி விளக்கினர்:

''இப்போது நாஜி நுகத்தடியில் கட்டுண்டு கிடக்கும் ஐரோப்பிய நாடுகள், அரசுகளின் இறைமை, சுயாட்சி, தேச வாழ்க்கை முறை ஆகியவற்றின் மீட்சியையே அட்லாண்டிக் கூட்டத்தில் நாங்கள் முதன்மையாக மனத்தில் கொண்டிருந்தோம்.''

இந்த மாற்றம் இந்திய தேசீய வட்டாரத்தில் ஆத்திரம் உண்டாக்கியதுடன், ஐக்கிய நாடுகளுக்கு எதிரான போக்குகளுக்கு வலுவும் தந்தது.

ஆயினும், 1941 டிசம்பரில் முக்கியமான காங்கிரஸ் தலைவர்கள் விடுதலை செய்யப்பட்டது, புதிய சாத்தியக் கூறுகளுக்கான வழியைத் திறந்து ஒத்துழைப்பு அடிப்படையை நோக்கி முன்னேற ஒரு முதல்படியாகத் தோன்றியது.

1941 டிசம்பரில், தேசீய காங்கிரசின் பர்தோலி தீர்மானம் (1942 ஜனவரியில் உறுதி செய்யப்பட்டது), ஒரு தேசீய அரசின் கீழ் இந்தியா ஐக்கிய நாடுகளின் ஒரு நேச நாடாகச் சக்திகளைத் திரட்ட முடியுமானல், அச்சு நாடுகளுக்கு எதிராக ஆயுதம் ஏந்திப் போரிடும் கொள்கைக்குச் சாதகமாக இருந்தது. தீர்மானம் கூறியது:

''இந்தியா பற்றின பிரிட்டிஷ் கொள்கையில் யாதொரு மாறுதலும் இல்லாவிட்டாலும், போரின் போக்காலும் போர் இந்தியாவை நெருங்கி வருவதாலும் எழுந்துள்ள புதிய உலக நிலையைக் கமிட்டி கவனத்தில் கொள்ள வேண்டியுள்ளது. ஆக்கிரமிப்புக்கு உள்ளாகித் தங்கள் விடுதலைக்காகப் போராடிக் கொண்டிருக்கும் மக்கள்களின்பால்தான் காங்கிரசின் பரிவுகள் இன்றியமையாத முறையில் இருக்க வேண்டும்; ஆனல் ஒரு விடுதலை பெற்ற சுதந்திர இந்தியாதான், தேசீய அடிப்படையில் நாட்டின் தற்காப்பை மேற்கொள்ள முடியும்.''

இந்தத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதைத் தொடர்ந்து, அஹிம்சையைக் கைவிட்டதை ஏற்காததால் காந்தியைத் தேசியக் காங்கிரசின் தலைமையிலிருந்து விடுவித்தார்கள்.

தீர்மானம் பற்றி தி டைம்ஸ் ஆப் இண்டியா பின் வருமாறு விமரிசனம் செய்தது:

> ''பிரிட்டிஷ் அரசோடு உடன்பாடு காண்பதற்குத் தீர்மானம் மீண்டும் கதவைத் திறக்கிறது, அதன் வாயிலாக வழி காட்டப்படும் இந்த அருமையான வாய்ப்பு பயன்படுத்திக் கொள்ளப்படும் என்று நம்புகிறோம்.''

பிரிட்டனின் தரப்பிலிருந்து குறைந்த அளவு அரசியல் வல்லமையும் சாதகமான பதிலும் வெளிப்பட்டால் போதும்—வழி திறந்து கிடந்தது.

இந்தச் சாதகமான தொடக்கத்துக்கு, பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் ஏக காலத்தில் பொது வேண்டுகோள் விடுத்த வண்ணம் 1942 பிப்ரவரியில் ஜெனரலஸ்ஸிமோ சியாங்கே-ஷேக் இந்தியாவுக்கு வருகை புரிந்ததால் மேலும் வலுவளித்தது. ''ஆக்கிரமிப்பு, அநாக்கிரமிப்பின் இரு பாசறைகளுக்கும்'' இடையில் ''நடுப்பாதை'' என ஒன்று கிடையாது என்று அவர் இந்திய மக்களுக்கு வலியுறுத்திச் சொன்னார். எவ்வளவு விரைவில் முடியுமோ, இந்திய மக்களுக்கு மெய்யான அரசியல் அதிகாரம் தந்து அவர்கள் முழு வலிமையோடு போரில் கலந்து கொள்ள வழி செய்யுமாறு அவர் பிரிட்டனுக்கு வேண்டுகோள் விடுத்தார். போரில் இந்திய மக்கள் பங்கு கொள்வதைப் பலப்படுத்த ''மெய்யான அரசியல் அதிகாரம்'' தருமாறுதான் அவர் வற்புறுத்தினார் என்பதை, அதாவது, போர்கால நடவடிக்கையாகவேயன்றி போருக்குப் பிந்தின வாக்குறுதியாக அல்ல என்பதைக் கவனிக்க வேண்டும். இந்தக் கண்ணோட்டம் தேசீய இயக்கத்தின் கருத்துக்குப் பொருத்தமானதே.

அதுபோலவே, ஆஸ்திரேலிய வெளி விவகார அமைச்சரும் 1942 பிப்ரவரியில், இந்தியா போரில் பங்கு கொள்வதைப் பலப்படுத்துவதற்காக உடனடியாக, போர் நடக்கையிலேயே இந்தியாவுக்குச் சுயாட்சி வழங்கும்படி அதே கருத்தை வெளியிட்டார்:

> ''தன்னாட்சி படைத்த நாடுகளில் ஒன்றாக ஆக வேண்டும், ஆகி ஆசியாவில் நேச நாடுகளின் லட்சியத்தின் காப்பில் பங்கு கொள்ள வேண்டும் என்ற இந்திய மக்களின் விழைவுகளிடம் எங்களுக்குப் பரிவுஉண்டு.''

(டாக்டர் எச்.வி. இவாட், ஆஸ்திரேலிய காமன் வெல்த் வெளி விவகார மந்திரி, ஆஸ்திரேலியப் பாராளுமன்றத்தில் சொற்பொழிவு, பிப்ரவரி 27, 1942.)

1942, பிப்ரவரி 22 இல், பிரசிடென்ட் ரூஸ்வெல்டு, அட்லாண்டிக் உரிமைப்பட்டயம் ''உலகம் முழுவதற்கும்'' பொருந்தும் என்று வெளிப்படையாக அறிவித்தார் (இவ்வாறாக 1941 செப்டம்பரில் திரு. சர்ச்சில் வெளியிட்ட அறிக்கையை மறைமுகமாய்த் திருத்தினார்):

''அட்லாண்டிக் உரிமைப்பட்டயம் அட்லாண்டிக் கரையோர உலகப் பகுதிகளுக்கு மட்டுமல்ல, உலகம் முழுவதற்குமே பொருந்துவது.''

(பிரஸிடென்ட் ரூஸ்வெல்டு, ஒலிபரப்பு, 1942, பிப்ரவரி 22.)

இந்த ஒலிபரப்பை அடுத்து, இந்திய விடுதலையை ஆதரித்து பிரிட்டிஷ் அரசுடன் நேர் முகமாய்த் தொடர்பு கொண்டார்: முன்னாள் அமெரிக்க ராஜ்யக் காரியதரிசி சம்னர் வெல்ஸ் 1946 இல் இத்தகவலை வெளியிட்டார்:

''1942 இல் ஜப்பானிய அபாயம் உச்ச நிலையில் இருந்த போது, இந்தியாவில் கொந்தளிப்பு கடுமையாக இருந்த போது, பிரசிடென்ட் ரூஸ்வெல்ட் திரு. சர்ச்சிலிடம் இந்திய விடுதலை இனியும் தாமதப்படுத்தப்பட மாட்டாது என்றும், அமெரிக்கக் கூட்டரசு விதிகளின் மாதிரியில் ஒரு தேசீய அரசியல் திட்டத்தை வகுத்துக் கொள்ள இந்தியத் தலைவர்களுக்கு வாய்ப்பு அளிக்கப்படும் என்றும் உடன்படுமாறு வற்புறுத்தினார். இத்தகைய இடைக்கால அரசு ஏற்படுத்துவதால் இந்தியத் தலைவர்கள் கூடிப் பணிபுரிய ஊக்கம் உண்டாகி இருக்கும் என்றும், இந்திய மக்களின் தேவைகளுக்கு உரித்தான முறையில் பொருத்தமான, நிலையான அரசியல் திட்டத்தை அறுதியிடுவதற்கு நடைமுறைஅனுபவத்தின் வாய்ப்பு கிட்டும் என்றும் பிரசிடென்டின் நம்பிக்கை. இத்தகைய ஒரு தீர்வை இந்தியத் தலைவர்கள் அப்போது ஏற்றிருக்கலாம். அதேமாதிரி யோசனையை இப்போது செய்து கொண்டிருக்கும் இப்போதைய பிரிட்டிஷ் அரசாங்கம் நான்கு ஆண்டுகளுக்கு முன் அதைப் பரிசீலிக்கத் திரு. சர்ச்சில் சினமாக மறுத்ததைப் பற்றி நன்கு வருத்தப்படலாம்.''

(சம்னர் வெல்ஸ், கிரிஸ்டியன் சயின்ஸ் மானிடரில், ஜூன், 1946.)

இந்தியத் தேசீயக் கோரிக்கையின் சந்தர்ப்பத்தையும், போரின் போது இந்தியாவுக்கு இன்னும் பொறுப்புள்ள தேசீய அரசை வழங்க மறுக்கும் பிரிட்டிஷ் அரசின் அதிகாரபூர்வமான கொள்கையால் ஐக்கிய நாடுகள் அது பெரிதும் தனிமைப்பட்டு இருந்ததையும் புரிந்து கொள்ள, இந்த அமெரிக்க-ஆஸ்திரேலிய-சீன சிபாரிசுகளின் பங்கைக் கவனிக்க வேண்டியது அவசியமாகும்.

1942 வசந்தத்தின் போது ஒரு சாதகமான நிலைமை தோற்றுவிக்கப்பட்டிருந்தது. பந்து பிரிட்டனின் காலடிகளில் கிடந்தது. பிரிட்டிஷ் அதிகார வட்டாரங்களில் இன்னும் விருப்பமின்மையும் எதிர்ப்பும் இருப்பின், மார்ச்சில் ஜப்பானியர்கள் ரங்கூனை அடைந்ததால் தேவையான விசை கிடைத்திருக்கும்.

மார்ச் 8 ஆம் நாங், ரங்கூன் வீழ்ந்தது.
மார்ச் 11 ஆம் நாள் கிரிப்ஸ் தூது அறிவிக்கப்பட்டது.

போர்க்காலத்தில் பிரிட்டிஷ் இந்திய உறவுகளில் ஏற்பட்ட நெருக்கடியில் திரும்பு முனையாக, 1942 மார்ச்–ஏப்ரலில் இந்தியாவுக்கு வந்த கிரிப்ஸ் தூது அமைந்தது. கிரிப்ஸ் திட்டம் அல்லது பிரிட்டிஷ் போர்கால அமைச்சவையால் தீட்டப்பட்டு, ஒரு தீர்வுக்கு அடிப்படையாக இந்திய அரசியல் தலைவர்களுடன் விவாதிக்கப்படுவதற்கு சர் ஸ்டாப்போர்டு கிரிப்ஸால் இந்தியாவுக்கு கொணரப்பட்ட அரசியல் திட்ட யோசனைகள் இரண்டு முக்கியப் பகுதிகள் கொண்டது.

1. போருக்கு முந்தின திட்டம்:

(அ) ''விரும்பினுல் பிரிட்டிஷ் பொது நல அரசுக் குழாமிலிருந்து பிரிந்து செல்லும் உரிமையோடு ஓர் இந்திய யூனியனுக்கு''க் குடியேற்ற நாட்டு அந்தஸ்து;

(ஆ) போர் முடிந்தவுடனடியாக ''அரசியல் திட்டம் வகுக்கும் சபை'' ஒன்று ஏற்படுத்தப்படும்; அதன் உறுப்பினர்களில் ஒரு பகுதியினர், போருக்குப் பிறகு விகிதபாகப் பிரதிநிதித்துவ அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படப் போகிற மாகாண சட்ட சபைகளின் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுவர், மற்றொரு பகுதியினர் சமஸ்தானங்களின் மக்கட் தொகையின் விகிதபாகப்படி அரசர்களால் நியமிக்கப்படுவர்; இந்த உறுப்பினர்கள் இந்தியாவுக்கு ஒரு புதிய அரசியல் திட்டம் வகுப்பர்;

(இ) பிரிட்டிஷ் இந்தியாவின் எந்த மாகாணத்திற்கும், எந்த சமஸ்தானத்திற்கும் வெளியில் இருக்க உரிமை உண்டு; இப்போதுள்ள அடிப்படையில் தொடர்ந்து இருக்கவோ,

அல்லது சமவுரிமையுள்ள தனிகுடியேற்ற நாடாக ஒரு புதிய அரசியல் திட்டம் வகுத்துக் கொள்ளவோ உரிமை உண்டு;

(ஈ) இனவழி, சமயவழி சிறுபான்மையினர் பாது காப்புக்கு மன்னர்பிரான் அரசினால் அளிக்கப்பட்டுள்ள வாக்குறுதிகளுக்கு வகை செய்யப்படும் என்று அரசியல் திட்டம் வகுக்கும் சபைக்கும் இடையில் ஒப்பந்தம்.

2. போர்க்காலத்தில் உடனடியான திட்டம்:

இந்தியப் பிரதிநிதிகளின் ஆலோசனை ஒத்துழைப்புடன் பிரிட்டன் அதிகாரத்தை தன்வசம் வைத்திருத்தல்.

இறுதி இனம்—போர்க் காலத்தில் அதிகாரங்களுள்ள இடைக் கால அரசு அமைக்க மறுப்பு—திட்டத்தின் முக்கியமான இனமாகி பேச்சு வார்த்தைகளின் முறிவுக்குக் காரணம் ஆயிற்று.

ஒரு புதிய சகாப்தத்தைத் தோற்றுவிக்கும் திட்டம் என்று செய்தித்தாள்களில் பிரமாதமாக விளம்பரம் செய்யப்பட்டாலும் கிரிப்ஸ் திட்டம் எவ்விதக் கொள்கை மாற்றத்தையும் பிரதிபலிக்க வில்லை என்பதையும், ஏற்கனவே இந்திய வட்டாரங்களின் எல்லாக் கருத்தினராலும் நிராகரிக்கப்பட்ட, 1940 இல் வைசிரா யினால் வெளியிடப்பட்ட ''ஆகஸ்டுத் திட்டத்தின்'' பழைய பல்லவியையே திரும்பப் பாடியது என்பதையும் கவனிக்க வேண்டும். கிரிப்ஸ் தூதின் பாதி—அதிகார பூர்வமான வரலாற்று ஆசிரியர் இந்த உண்மையை ஏற்கிறார்.

> ''வரைவு அறிவிப்பு ஒரு தீவிரமான கொள்கை மாற்றத் தைப் பிரதிபலிக்கவில்லை......தத்துவத்தில், உண்மையில், வரைவு அறிவிப்பு 'ஆகஸ்டுத் திட்டத்தை'த் தாண்டிப் போகவே இல்லை.''
>
> (பேராசிரியர் ஆர். கூப்லாண்ட், ''கிரிப்ஸ் தூது'', ஆக்ஸ்போர்டு யுனிவர்சிடி பிரஸ், 1942, பக். 30.)

மேலும்:

> போர்க்காலத்தில் அரசியல் திட்டவடிவில் பெரிய மாறு தல் எதனையும் செய்ய, வரைவு அறிவிப்பு திட்ட வட்டமாக மறுத்து விட்டது.'' (மேற்படி, பக். 31.)

நிச்சயமான ஒரு தீர்வு கண்டு விடலாம் என்கிற நம்பிக் கையின் பேரில், பேச்சு வார்த்தைகளில் காங்கிரஸ் வெகுதூரம் விட்டுக் கொடுத்தது; தங்களுக்கு உண்மையான பொறுப்பும் அதிகாரங்களும் வழங்கப்படுவதாக இருந்தால் ஒரு பிரிட்டிஷ் வைசிராயின் கீழ் பணியாற்றவும், ராணுவ நடவடிக்கைகளைக் கவனிப்பதற்காக மட்டுமல்லாமல் அமைச்சவை உறுப்பினராகவும் ஒரு பிரிட்டிஷ் தளபதியை ஏற்கவும் ஒப்புக்கொண்டது.

பயன் இல்லை. பிரிட்டனின் அதிகாரம் முழுமையான தாகவும் சர்வாதிகாரம் வாய்ந்ததாகவும் இருக்க வேண்டும் என்றும், ஓர் இந்தியத் தற்காப்பு அமைச்சர் அதிகபட்சம் கான்டீன்களையும் எழுதப் பயன்படும் பொருள்களையும் நிர்வாகம் செய்யலாம் என்றும் அவர்களிடம் கூறப்பட்டது. வேற்றுமை யின் அளவை குறைக்க அவர்கள் பேச்சுவார்த்தையைத் தொடர முயன்றபோது, ''எடுத்துக் கொள்ளுங்கள், இல்லாவிட்டால் விடுங்கள்'' என்று அவர்களிடம் சொல்லப்பட்டது. இந்த 'எடுத்துக் கொள், இல்லாவிட்டால் விடு' என்ற மனப்பான்மை, பேச்சுவார்த்தைத் தொடர மெய்யான நோக்கம் இல்லை, ஆனால், எதிர்கால மோதலுக்கு ஆயத்தம் செய்யப்படுகிறது என்னும் எண்ணத்தை உண்டாக்கியது.

பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருக்கையிலேயே ஏப்ரல் 7 ஆம் நாள் ஹாலிபாக்ஸ் பிரபு ஆற்றிய துரதிர்ஷ்டவசமான ஒரு சொற்பொழிவால் இந்த எண்ணம் வலுத்தது; முன்னதாகவே தோல்வியை எதிர்பார்த்த அவர் அப்படி நேர்ந்தால் பிரிட்டிஷ் அரசு தனியாகவே ஆட்சி புரியும் என்றும், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியைக் குறைகூறும் எதிர்கால விமரிசகர்களுக்கு எதிராக மறுக்க முடியாத ஒரு வழக்கை ஏற்படுத்தும் பணியைக் கிரிப்ஸ் தூது செய்து விட்டது என்று அவர் அப்பேச்சில் குறிப்பிட்டார்.

மிக மிதவாதக் கருத்தினர் உட்பட, இந்தியாவிலுள்ள எல்லா விதக் கருத்தினரின் எதிர்ப்புக்கும் கிரிப்ஸ் திட்டம் ஆளாயிற்று. காங்கிரஸ் மட்டுமல்ல, முக்கியமான ஒவ்வொரு இந்திய ஸ்தாபனமும் கிரிப்ஸ் திட்டத்தை நிராகரித்தது.

பேச்சு முறிவு பற்றிக் கல்கத்தா ஸ்டேட்ஸ்மன் தன் தீர்ப்பைக் கூறியது:

> ''இந்தியா ஆபீசும் இந்திய அரசும் திட்டங்களை வரையும் வரை எந்தத் தூதுவரும் வெற்றிகாண முடியாது, இந்த நாட்டுக்கு ஒவ்வொரு மணியிலும் அதிகரிக்கும் அபாயத்தைச் சமாளிக்க எவ்வித முயற்சியும் செய்யப்பட மாட்டாது.....
>
> ''இந்தியா ஆபீசையும் இந்திய அரசின் அதிகார வட்டாரத்தையும்தான் குற்றம் சாரும்.''

## 4. ஆகஸ்டுத் தீர்மானமும் பிறகும் (1942–1945)

கிரிப்ஸ் பேச்சுவார்த்தைகள் முறிந்ததைத் தொடர்ந்து அரசியல் நிலைமை விரைவாகச் சீர்கேடுற்றது.

இனி ஒன்றும் செய்வதற்கில்லை என்று அறிவித்த பிரிட்டிஷ் அரசாங்கம், தேசீய இயக்கத்தை மாசுபடுத்துவதற்காகப் பட்ச பாதமான பிரசாரத்தில் இறங்கி, ஆண்டாண்டாய்க் கூறப்படும் செல்லரித்துப் போன காரணங்களைச் சொல்லி உலகத்தை திருப்திப்படுத்த முனைந்தது: காங்கிரசிற்குப் பிரதிநிதித்துவம் இல்லை எனவும், நம்பிக்கைக்கு இடம் இல்லாத வகையில் இந்திய மக்களுக்கு இடையில் அரசியல் வேற்றுமைகள் உள்ளன எனவும், அதனால் அவர்களுக்குச் சுயாட்சித்திறன் இல்லை எனவும் உரைக்கப் பட்டது.

ஒத்துழைக்க வேண்டும் என்ற தன் ஆவலில் ஏமாற்றமுற்ற காங்கிரஸ், சிறிது காலத் தயக்கத்துக்கும் மாறுபட்ட யோசனைகளுக்கும் பிறகு, தேசீயக் கோரிக்கையை வலியுறுத்துவதற்கு ஒத்துழையாமைதான் ஆயுதம் என்ற முடிவின் பக்கம் சாய்ந்தது.

இந்திய தேசீயக் கோரிக்கையைப் பிரிட்டிஷார் நிராகரித்தாலும், ஜப்பானால் உண்டாகியுள்ள அபாயத்தை எதிர்த்து ஒன்று பட்ட நாட்டு எதிர்ப்பைத் திரட்டி உருப்படுத்துவதற்காக வாவது, முஸ்லீம் பெரும்பான்மை உள்ள இடங்களில் தேசீய சுய நிர்ணய உரிமை தருவது என்கிற அடிப்படையில் முஸ்லீம் லீகுடனுடனும் மற்ற ஸ்தாபனங்களுடனும் உடன்பாடு செய்து கொண்டு ஒரு தேசீய முன்னணியை உருவாக்குகிற இன்னும் திட்டவட்டமான கொள்கையைப் பின்பற்ற வேண்டும் என்று மதராஸ் முன்னாள் முதல் அமைச்சர் சி. ராஜகோபாலாச்சாரியாரை உள்ளிட்ட ஒரு கோஷ்டி காங்கிரஸில் வாதாடியது. இந்த யோசனை மே மாதத்தில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியினால் 120க்கு 15 வாக்குகள் பெற்று நிராகரிக்கப்பட்டாலும், காங்கிரஸ் தலைவர் மௌலானா ஆசாத், முஸ்லீம் லீகுடன் ஒரு பொதுவான உடன்பாடு காண்பதற்காகப் பேச்சுவார்த்தை நடத்துவதற்கு ஒரு தூது கோஷ்டியை நியமிக்கத் தயாராக இருப்பதாய்த் தெளிவுபடுத்தினார். தம் கொள்கையைப் பரப்புவதற்காகத் திரு. ராஜகோபாலாச்சாரியார் காங்கிரசிலிருந்து விலகினார்.

1941 டிசம்பர் முதல் தலைமையிலிருந்து விலக்கி வைக்கப் பட்டிருந்த காந்தியின் கைகளிலேயே காங்கிரசின் நேர்முகத் தலைமை மறுபடியும் சென்றடைந்தது. காந்தி தம்முடைய அமைதி வாதத் தத்துவத்தைப் பிரசாரம் செய்து கொண்டிருந்தார்: 1. ஜப்பானுக்கு அஹிம்சை முறை எதிர்ப்பு; 2. பிரிட்டிஷ் அதிகாரிகளுடன் ஒத்துழையாமை; 3. பாசிஸத்துக்கு எதிராக நேச நாடுகளுக்கு அறவழிப் பரிவு; 4. இந்தியாவைப் போருக்குப்

புறம்பாக வைத்திருக்க முயற்சி; நேரு ஆயுதம் தாங்கி எதிர்ப் பதையும், கொரில்லாக்கள் படை அமைப்பதையும், ''நிலம் சுட்டுப்பொசுக்கும்'' கொள்கையையும் பிரசாரம் செய்துவந்த தற்கு எதிர்ப்பு. காங்கிரஸ் காந்தியின் அமைதி வாதத்தை ஏற்கவில்லை. ஆனால், இந்தியாவின் விடுதலையைப் பெற்று அதனால் இந்தியாவின் பயனுள்ள தற்காப்புக்கு வழி செய்து கொள்ள அவருடைய ஒத்துழையாமைத் திட்டம் ஒன்றே எஞ்சி யுள்ள ஆயுதம் என்று கருதத் தலைப்பட்டது. காந்தியுடன் நேரு வும் ஆஸாதும் கூடிப் பேசியதில் எல்லாருக்கும் இணக்கமான ஓர் உடன்பாடு காணப்பட்டது; அதன் விளைவுதான் ஜூலை 14 ஆம் நாள் காரியக் கமிட்டியால் ஏற்கப்பட்ட ஒத்துழை யாமைத் திட்டம். மிகக் கடுமையாகப் பாசிஸத்தை எதிர்த்த தலைவர்களும், ஐக்கிய நாடுகளுடன்[1] ஒத்துழைக்க வேண்டும் எனப் பிரசாரம் செய்தவர்களும்கூட இவ்வாறாகக் காந்தியையும் ஜப்பானியத் தாக்குதல் மிரட்டிக் கொண்டிருந்த நேரத்தில் ஓர் ஒத்துழையாமைப் போராட்டம் நடத்த முற்பட்ட அபாயகர மான திட்டத்தையும் பின்பற்றலானார்கள்.

அச்சு நாடுகளின் பிரசாரத் துறைக்கு ஒரே கொண்டாட்டம், காங்கிரசைப் போற்றியது. அச்சு நாடுகளின் பாதுகாப்பில் பிரசாரம் செய்து வந்த சுபாஷ் சந்திர போஸின் ஆதரவாளர்கள் தங்கள் ஊடுருவலுக்கு ஏற்ற வாய்ப்பு பெறுவதைக் காங்கிரஸ் திகிலோடு கவனித்தது (''இந்த ஏமாற்றத்தால், பிரிட்டனுக்கு எதிரான தீய எண்ணம் விரைவாகவும் விரிவாகவும் மிகுந்து வருகிறது, ஜப்பானியப் படைகளின் வெற்றியைக் கண்டு திருப்தி யும் பெருகி வருகிறது. இந்த நிலையைக் காரியக் கமிட்டி கவலை யோடு நோக்குகிறது''—ஜூலை 14, காங்கிரஸ் காரியக் கமிட்டித் தீர்மானம்).

பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தின் நாணயமற்ற பிரசாரத் துறையும் காங்கிரசை மாசுபடுத்துவதற்குக் கிட்டிய புது வாய்ப் பைப் பயன்படுத்திக் கொண்டது. நேருவையும் ஆஸாதையும் போன்ற பாசிஸ எதிர்ப்புத் தலைவர்களையும் ஐக்கிய நாடுகளுடன் ஒத்துழைப்பதை ஆதரித்தவர்களையும் இவ்வாறு காந்தியிடமும் ஒத்துழையாமையிடமும் துரத்திய கொள்கையின் நெடிவை ஏற்பதற்கு மாறாக, இந்த விளைவு அதிகார வர்க்கத்தின் கொள்கைக்கு ஒரு வெற்றியாகக் கருதப்பட்டது. அமைதிவாதத்

1. பிரிட்டன், அமெரிக்கா, சோவியத், சீனா, ஆகிய பாசிஸ-எதிர்ப்பு நாடுகள் ''நேச நாடுகள்'' என்று தமிழக ஏடுகள் குறிப்பிட்டன; அப் பெயரே பிரபலமாகிவிட்டது; அந் நாடுகளையே ஆசிரியர் ''ஐக்கிய நாடுகள்'' எனக் குறிப்பிடுகிறார்.

—மொழிபெயர்ப்பாளர்—

தையும் சமாதானத்தையும் வலியுறுத்தித் தமக்கே உரித்தான முறையில் காந்தி பேசியதை எல்லாம் நல்ல வாய்ப்பாக ஏற்று அவற்றை இந்தியா முழுவதிலும் உலகமெங்கும் விரிவாக விளம் பரப்படுத்தி, தேசீய இயக்கமே சரணுகதி மனப்போக்கு கொண் டது என்றும் ஜப்பானேடு சமாதானம் பேசத் தயாராக இருப்ப தாகப் பிரசாரம் செய்தார்கள். காந்தியின் வெளிப்படையான கட்டுரைகள் வாயிலாக ஏற்கெனவே எல்லோரும் அறிந்த தகவல் களை வெளிப்படுத்துவதாய்ச் சொல்லிக் கொண்டு ஒரு போலீஸ் சோதனையில் கண்டெடுத்த ஆவணங்களை வெடிகுண்டு வெளியீடு களாய்க் கொண்டுவந்தது, எதிர்கால மோதலுக்கு ஆயத்தங்கள் நடப்பதையே காட்டியது.

காங்கிரசின் ''ஜெனரல்லஸ்ஸிமோ'' வாகக் (அவருக்கு வழங்கப்பட்ட பட்டம்) காந்தியின் தலைமை மீண்டதால் இந்திய தேசிய இயக்கத்துக்குப் பெரும் நஷ்டம் என்பதில் ஐயமில்லை; காந்தியின் அமைதிவாத, சமாதான கருத்துகளை இந்திய தேசீயத் தின் கருத்துகளாய்த் தவிர்க்கவொண்ணுமல் குழப்பிய உலகத்தின் பார்வையில் அதற்கு மிகுந்த கெடுதல் உண்டாயிற்று. ஆனுல், காந்தியின் சொந்தக் கருத்துகளான அஹிம்சையையும், சமா தானப்பேச்சையும் காங்கிரசின் அதிகார பூர்வமான ஒவ்வோர் அறிக்கையும் தீர்மானமும் வெளிப்படையாக மறுத்து வந்துள்ளது என்பதையும் நியாயமாக ஏற்க வேண்டும்.

காங்கிரசின் ஒத்துழையாமைத் தீர்மானம் ஜூலையில் வெளி யிடப்பட்டது, திருத்தப்பட்ட உருவத்தில் ஆகஸ்டு 8 ஆம் நாள் இறுதியாக ஏற்கப்பட்டது (இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் எதிர்ப்பு வாக்குகள் 13 க்கு எதிராக; ஜூலை 22 ஆம் நாள் சட்ட பூர்வமான உரிமைகளை மீண்டும் பெற்றது, இக் கட்சியின் செல்வாக்கும் வலிமையும் மிகுந்து வருவதன் அடையாளம்).

இத் தீர்மானம் ஐக்கிய நாடுகளின்பால் உள்ள பரிவை மீண்டும் வலியுறுத்தியதுடன், ஒரு தேசீய அரசின் கீழ், ஐக்கிய நாடுகளோடு ஒத்துழைப்பாக பாசிசத்தை எதிர்த்து ஆயுதம் ஏந்திப் போர் புரியும் தோழமை நாடாக சுதந்திர இந்தியாவை ஏற்கும்படியும் வற்புறுத்திற்று:

> ''இந்தியாவின் நலத்திற்கும் ஐக்கிய நாடுகளின் லட்சியம் வெற்றி பெறுவதற்கும் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியை உடனடியாக முடிவுக்குக் கொண்டு வரவேண்டியது அவசரத் தேவை.
>
> ''இந்தியாவின் சுதந்திரம் அறிவிக்கப்பட்டதும் ஓர் இடை கால அரசாங்கம் அமைக்கப்படும், சுதந்திர இந்தியா ஐக்கிய

நாடுகளின் நேசநாடாகி, அவர்களுடைய கூட்டு முயற்சியின், விடுதலைப் போராட்டத்தின் சோதனைகளிலும் துன்பங்களிலும் பங்கு கொள்ளும்.

''நாட்டிலுள்ள முக்கியமான கட்சிகள், கோஷ்டிகளின் ஒத்துழைப்போடுதான் ஓர் இடைக்கால அரசாங்கம் அமைக்க முடியும். . . . இந்தியாவைத் தற்காப்பதும், தன்னிடம் உள்ள ஆயுதப்படைகளையும் அஹிம்சைப் படைகளையும் கொண்டு, நேசநாடுகளோடு சேர்ந்து கொண்டு ஆக்கிரமிப்பை எதிர்ப்பதே அதன் முதல் வேலையாகும்.

''இந்தியாவுக்கும் நேசநாடுகளுக்கும் இடையில் எதிர்கால உறவுகள், இந்த சுதந்திர நாடுகளின் பிரதிநிதிகள் கூடிக் கலந்து ஒருவருக்கொருவர் நலத்துக்கும், ஆக்கிரமிப்பை எதிர்க்கும் பொதுவான பணியில் ஒத்துழைப்புக்கும் ஏற்ற வகையில் அமைக்கப்படும். . . .

''சீனு அல்லது ரஷ்யாவின் சுதந்திரம் மதிப்புமிக்கது, நிலையாக இருக்க வேண்டியது; அந்நாடுகளின் தற்காப்புக்கு எவ்விதத் தொல்லையும் ஏற்பட்டு விடக்கூடாது என்றும், ஐக்கிய நாடுகளின் தற்காப்புச் சக்தியை அல்லற்படுத்தக் கூடாது என்றும் கமிட்டி கவலை கொள்கிறது.''

தீர்மானத்தில் இப்பகுதி மட்டும், இந்தியாவிலும் உலகமெங்கும் உள்ள ஜனநாயக, பாசிஸ எதிர்ப்புக் கருத்துடையோரின் ஆதரவைப் பெறும். ஆனுல், தேசியக் கோரிக்கை ஏற்கப்படாவிட்டால் ஒத்துழையாமை வேலைத்திட்டம் மேற்கொள்ளப்படும் என்று இறுதிப்பகுதி கூறியது:

''உலக விடுதலையின் நலன்களைக் கருத்தில் கொண்டு இந்த இறுதி விடிையிலும் பிரிட்டனுக்கும் ஐக்கிய நாடுகளுக்கும் இன்னும் மறுபடியும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி இந்த வேண்டுகோளை விடுக்கிறது.

''ஆனுல், நாட்டின்மீது ஆதிக்கம் செலுத்தி, அது தன்னுடைய நலன்களுக்கும் மனித இனத்தின் நலன்களுக்கும் உகந்த முறையில் செயல்பட முடியாதவாறு தடுத்துக் கொண்டிருக்கும் ஏகாதிபத்திய, யதேச்சாதிகார அரசை எதிர்த்துத் தங்கள் கருத்தை வலியுறுத்த முயலும் நாட்டைப் பிடித்து வைத்துக் கொள்வது தனக்கு நியாயமாகாது என்று கமிட்டி கருதுகிறது.

''ஆகையால், இந்தியாவின் மாற்றவொண்ணுத விடுதலை, சுதந்திர உரிமையை நிலைநாட்டும் பொருட்டு, சென்ற 22 ஆண்டுக்காலம் அமைதியான போராட்டம் நடத்தியதன்

வாயிலாகத்தான் திரட்டிக் கொண்டுள்ள அஹிம்சைப்பலம் முழுவதையும் நாடு பயன்படுத்திக்கொள்ளும் வகையில் மிகப் பரந்த அளவில் ஒரு மாபெரும் போராட்டத்தைத் தொடங்குவதற்கு அனுமதி வழங்குவதெனக் கமிட்டி தீர்மானிக்கிறது.

''இத்தகைய ஒரு போராட்டம் காந்திஜீயின் தலைமையில் இருப்பது இன்றியமையாதது; தலைமையை ஏற்று, செல்ல வேண்டிய வழிகளில் நாட்டை நடத்தி செல்லும் வண்ணம் கமிட்டி அவரை கேட்டுக் கொள்கிறது.''

கிரிப்ஸ் தூது பேச்சு வார்த்தைகளின் தோல்வியால் உண்டான ஏமாற்றத்தின் விளைவு ஆகஸ்டுத் தீர்மானம்.

''என்ன செய்வது என்றே எனக்குத் தெரியவில்லை; ஆனால், அமைதியின்மை உணர்ச்சி ஒன்றினால் உந்தப்பெற்று நான் வேகமாய்ச் சென்று கொண்டே இருக்கிறேன்; இந்தியா ஒரு பகைவனால் தாக்கப்படுகையில், அதை எதிர்த்து அமெரிக்காவும் பிரிட்டனும் மற்ற நாடுகளும் பங்கு கொள்ளுகையில் நானோ எதற்கும் பயனற்றவனாக இருக்கிறேன் என்னும் எண்ணம் என்னைப் பிழிகிறது.''

என்று ஏப்ரல் 19ஆம் நாள் நேரு பேசிய பேச்சில் இந்த ஏமாற்றம் வெளிப்படுகிறது.

ஆகஸ்டுத் தீர்மானத்தின்மீது கடுமையான விவாதம் நடந்தது. அதைக் குறை கூறுமுன், சற்றும் முரண்படாமல் சர்வதேசவாதிகளாகவும் பாசிஸஎதிர்ப்பாளர்களாகவும் இருந்த பிரிவினரை உள்ளிட்ட தேசீயத் தலைமையை இந்த நிர்ப்பந்தமான வழியை ஏற்கும் நிலையில் வைத்த கொடிய சிக்கல் நிலையைப் புரிந்து கொள்ள வேண்டியது அவசியம். தங்களுடைய விருப்பத்திற்கு விரோதமாய் அந்த முடிவுக்குத் துரத்தப்பட்டதாய் அவர்கள் உணர்ந்தார்கள்; ஏனெனில் சுதந்திரமான அடிப்படையில் ஒத்துழைப்பை ஈட்ட அவர்கள் செய்த ஒவ்வொரு முயற்சியும் தோற்றுவிட்டது; இந்திய மக்களை ஒன்றுபடுத்தி, அவசரமான யுத்த நெருக்கடியில் இந்தியாவுக்குத் தக்க தற்காப்புக்கு வழி செய்ய மாற்றுக் கொள்கை எதுவும் மிஞ்சி இருப்பதாய் அவர்களுக்குத் தெரியவில்லை.

ஆயினும், ஆகஸ்டுத் தீர்மானம் இந்தியாவில் விளைவித்த பயன்களாலும் உலக ஜனநாயகக் கருத்துடையோருக்கு இடையில் விளைவித்த பயன்களாலும் ஒரு நாசகரமான தவறு என்றே முடிவு செய்ய வேண்டும். அரசியல் ரீதியாக, தீர்மானம் நாசகரமான ஒரு முரண்பாட்டை வெளியிட்டது, அதனால், தீர்மானத்தின்

ஏற்புக்குக் காரணமான நோக்கக் குழப்பம் வெளிப்பட்டது. முன்னுரைக்கும் முடிவுரைக்கும் இடையில் இருந்த பிளவை எந்த விளக்கத்தாலும் அடைக்க முடியாது. ஒரு பக்கத்தில், 1941 முதல் போர் ஏகாதிபத்தியப் போட்டி முகாம்களின் ஏகாதி பத்தியப் போர்த் தன்மை வாய்ந்தது அல்ல, அதன் விளைவு அலட்சியப்படுத்தக் கூடியது அல்ல, ஆனால் ஐக்கிய நாடுகளின் தரப்பினரின் வெற்றியில் இந்தியாவுக்கு ஜீவாதாரமான அக்கறை உண்டு—என்பதை ஒப்புக் கொண்ட தீர்மானம் தன் நோக்கத்தில் ''ஐக்கிய நாடுகளின் லட்சியத்தின் வெற்றி'' அடங்கும் என்றும் இந்தியா ''ஐக்கிய நாடுகளின் ஒரு நேசநாடு'' ஆக வேண்டும் என்றும் குறிப்பிட்டது. ''சீனா அல்லது ரஷ்யாவின் தற்காப்பில் எவ்விதமான பலவீனமும் ஏற்படக் கூடாது'' என்பதிலும், ''ஐக்கிய நாடுகளின் தற்காப்பு சக்திக்கு எவ்விதத்திலும் அல்லற் பட்டுவிடக் கூடாது'' என்பதிலும் காங்கிரசுக்குள்ள கவலையைத் தெளிவுபட உரைத்து விட்டது. இறுதி முடிவுரையில் முடிவு செய்யப்பட்டுள்ள செயல்முறை செயல்படுத்தப்பட்டாலோ, நேச நாடுகளைச் சேர்ந்த ஒரு பெரிய தேசத்தில் கடுமையான உள் நாட்டு மோதலும் ஒழுங்கீனமும் உண்டாகி, அதனால் நடை முறையில் ஐக்கிய நாடுகளின் தற்காப்பு சக்திக்குக் குலைவு ஏற்பட்டு, அச்சு நாடுகளின் வெற்றிக்கு வசதி உண்டாகும்.

போரின் தொடக்க நிலையில், அது இன்னும் ஆங்கிலோ-பிரெஞ்சு ஏகாதிபத்தியத்துக்கும் நாஜி ஜெர்மனிக்கும் இடையில் நடக்கும் யுத்தமாக இருந்தபோது, பிரிட்டிஷ் காலடிகளோடு கட்டி இழுக்கப்பட்டதையன்றி இந்தியா நேரடியாகச் சம்பந்தப் படாதபோது, நேரடியாகப் படையெடுப்பு அபாயத்தால் அச்சுறுத்தப்படாதபோது, காங்கிரஸ் கொள்கையின் எந்த முயற்சியாலும் யுத்த முயற்சிக்குத் தொல்லை நேரிடக்கூடாது என்பதைப்பற்றி மிகுந்த கவனம் செலுத்தப்பட்டது. 1939, செப்டம்பர் 5 ஆம் நாள் காந்தி, பிரிட்டன் ஒரு ''நியாயமான லட்சிய''த்துக்காகப் போராடுவதாகவும், இந்தியா நிபந்தனையற்ற ஒத்துழைப்பு தரவேண்டும் என்றும் அறிவித்திருந்தார்:

> ''ஆகையால் நான் இப்போது இந்தியாவின் விடுதலையைப் பற்றி எண்ணிக் கொண்டிருக்கவில்லை. அது கட்டாயம் வரும், ஆனால் இங்கிலாந்தும் பிரான்சும் வீழ்ந்துவிட்டால் என்ன ஆகும்?''
>
> (ஹரிஜன், செப்டம்பர். 9, 1939.)

விளைவாக, இந்தக் காலகட்டத்தில்,—காங்கிரசின் சொற் களில்—''ஏகாதிபத்திய நோக்கங்களுக்காக'' போர் நடை பெற்றுக் கொண்டிருந்தபோது, தீவிர விசையுடன் இந்தியா

முன்னேற மிகச் சாதகமான நிலைமைகள் இருந்தபோது, பெரும் கிளர்ச்சி அல்லது பெரும் சத்தியாக்கிரகப் போராட்டத்திற்கான ஒவ்வொரு திட்டமும், அதனால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் யுத்த முயற்சிகளுக்குத் தொல்லையாகும் என்ற காரணத்தின் பேரில் கடுமையாக எதிர்க்கப்பட்டது. தூய அடையாள முறை யான தனிநபர் சத்தியாக்கிரக இயக்கத்தைத் தேர்ந்ததன் நோக்கமே தொல்லைப்படுத்தக் கூடாது என்பதுதான்; உண்மை யில் பாதி-அதிகார பூர்வமான வரலாற்றுசிரியரான சர் ரெஜி னல்டு கூப்லன்ட், ''போராட்டம் அரசாங்கத்தைக் கடுமையாகத் தொல்லைப்படுத்தவில்லை'' என்பதை ஒப்புக் கொள்கிறார்.

(''இந்தியா: ஒரு மறு அறிவிப்பு'', 1945, பக். 206.)

ஆயினும், போரின் முழுத்தன்மையே மாறிவிட்ட பிறகு, காங்கிரஸ் இந்த மாற்றத்தை ஏற்றுக்கொண்ட பிறகு, ரஷியா, சீனா, ஐக்கிய நாடுகளின் பாசறையின் வெற்றியோடு இந்தியாவின் ஜீவாதாரமான நலன்கள் பிணைந்துள்ளன என்பதை ஏற்றுக் கொண்டபோது, இந்தியா நேரடிப் படையெடுப்பால் மிரட்டப் படும்போது, 1939-40 இல் அனுமதிக்கத் தகாதது எனக் கருதப் பட்ட பெரும் எதிர்ப்பு இயக்கத்தைத் துவக்குவதற்குத் தக்க தருணம் இது என்று தீர்மானிக்கப்பட்டது.

இவ்வாறு ஒரு போராட்டத்தைத் துவக்கும் தீவிரமான எண்ணம் ஏதுமில்லை, அதற்கான எவ்வித ஏற்பாடும் தலைமை யினரால் செய்யப்படவில்லை, போராட்ட மிரட்டலினால் பேச்சு வார்த்தை நடத்துவதே நோக்கம் என்பது மெய்யே. தங்கள் கொள்கையை ஆதரித்துத் தலைமையினர் திரும்பத் திரும்பச் சொல்லும் இந்த உண்மை அவர்களுடைய நெஞ்சங்களுக்குப் பெருமை தருவதாக இருக்கலாம், ஆனால் தலைகளுக்குப் பெருமை தருவது அல்ல. ஒரு பெரும் யுத்தத்துக்கு இடையில் இத்தகைய அணுகுமுறையின் குருட்டுக் கனிவின்மை, நெருக்கடியையோ அல்லது ஏகாதிபத்திய தந்திரத்தையோ புரிந்து கொள்ளும் யதார்த்த ஞானம் முற்றிலும் இல்லாமையையே காட்டுகிறது.

போர்த் தந்திர முறையிலும், இத் தீர்மானம் குறைவான தவறாய்த் தீர்மானிக்கப்பட்டது அன்று. தன்னுடைய தாக்குதலைத் தொடங்குவதற்காக ஆவலோடு காத்திருந்த ஏகாதிபத்தியப் பிற்போக்குக்கு இத்தீர்மானம் நல்ல சாக்காக உதவியது. கிரிப்ஸ் தூது தோல்வி அடைந்ததைத் தொடர்ந்து ஏகாதிபத்தியப் பிற்போக்காளர்களின் முழுப் போர் தந்திரமே, காங்கிரசை ஒரு சங்கட நிலையிலிட்டு அது இவ்வாறு தவறாக அடியெடுத்து வைக் கும் நிலைமைக்குத் துரத்தி, அதனால் அடக்குமுறைப் பிரயோகந்

திற்கான சாக்கை உண்டுபண்ண வேண்டும் என்பதுதான் என்பது தெளிவு. எதிர்க்க முடியாத, பாசிஸ்டு எதிர்ப்பு வரலாற்றோடு, பாசிஸத்தை எதிர்த்து உலக மக்கள்களின் பொதுவான போராட்டத்திற்கு இந்திய மக்களைத் திரட்ட முயலும் உறுதியான அரசியல் சக்தியாகக் காங்கிரஸ் நிமிர்ந்து நிற்கையில், ஐயத்திற்கு இடமளிக்கும் வண்ணம் பாசிஸ்டு ஆதரவு வரலாறுடைய ஏகாதிபத்தியமே மக்களைத் திரட்ட முடியாத முட்டுக்கட்டையாகக் காட்சி தந்தது—போர்த்தந்திர நிலையில் ஏகாதிபத்தியத்துக்கு இது அசௌகரியம். தீர்மானம் நிறை வேற்றப்பட்ட நொடியிலேயே, வாய்ப்பை ஏகாதிபத்தியம் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது; இந்தியத் தற்காப்பைச் சிதைக்கச் செய்யப்படும் முயற்சிகளுக்கு எதிராகத் தான் இந்தியத் தற்காப்புக்காகப் பாடுபடுவதாய்ச் சொல்லிக் கொண்டு, இந்திய தேசீய இயக்கம் பாசிஸ்டுகளுக்கு ஆதரவானது, ஜப்பானியருக்கு ஆதரவானது என்றும், ஐக்கிய நாடுகளின் மக்கள்களின் போர் முயற்சியை நாசம்செய்வது என்றும் பழித்து, இதை அரசியல் அடிப்படையாகக்கொண்டு ஏகாதிபத்தியம் தனது பிற்போக்கு அடக்குமுறைக் கொள்கையைத் தேசீய இயக்கத்துக்கு எதிராகப் பயன்படுத்த முனைந்தது.

எனவே, தீர்மானம் இந்திய விடுதலைக்கு ஒரு குறுக்கு வழி அல்ல: ஏகாதிபத்தியத்தின் எரிச்சலூட்டுதலுக்கு அது கீழ்ப்பணிந்ததாகும்; அதை நிறைவேற்றியதன் பொருள், ஏகாதிபத்தியத்தின் பொறியில் நேராகப் போய்ச் சிக்கியதாகும். துரதிர்ஷ்டவசமாக தேசீயத் தலைமையினர் மெய்யான நிலைமையை முற்றிலும் உணராதவர்களாய், தீர்மானத்தை நிறைவேற்றி விட்டு வைசிராயுடன் அமைதியாகப் பேச்சு வார்த்தைகள் நடத்துவதற்காக ஆயத்தம் செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் கைதுகளையும் எதிர்பார்க்கவில்லை, அம்மாதிரி ஒரு நிலைமைக்கு ஏற்ப முன்னேற்பாடு எதுவும் செய்யவில்லை, எந்த வழியைப் பின் பற்றுவது என்பதற்கு ஆணைகளும் பிறப்பிக்கவில்லை.

காங்கிரசில் தீர்மானத்தை எதிர்த்த சிறுபான்மையோர் இந்த விளைவு உண்டாகுமென உறுதியாக எச்சரித்துக் கொண்டிருந்தார்கள். 1942, ஜூலை 26 ஆம் நாள் இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி வெளியிட்ட பகிரங்கக் கடிதம் ஒன்றில் பின்வருமாறு எழுதியது:

''நீங்கள் போராட்டத்தைத் தொடங்கினால், தொடங்கும்போது என்ன நடக்கும்? அவர்கள் அமைதியாக உங்களையும் ஆயிரக்கணக்கான காங்கிரஸ் தொண்டர்களையும் சிறையில் அடைப்பார்கள், பாசிஸ்டு படையெடுப்பாளர்களிடமிருந்து இந்தியாவைக் காப்பாற்றக் கூடியவர்களாய் இருக்க

வேண்டியது தங்களுடைய துரதிர்ஷ்டவசமான கடமை என்று ஆஷாடபூதித்தனமாய் அறிவிப்பார்கள்.''

துரதிர்ஷ்டவசமாக, இந்த எச்சரிக்கை செவிடன் காதிலூதிய சங்காயிற்று. கைதுகள் தலைமையினரை முற்றிலும் வியப்பில் ஆழ்த்தி விட்டது என்பதைப் பின்னர் அவர்கள் வெளியிட்ட அறிக்கைகளும் நினைவுக் குறிப்புகளும் ஒப்புக் கொள்கின்றன. 1942, ஆகஸ்டு 14 ஆம் நாள், கைதுகள் நடந்ததைத் தொடர்ந்து உடனே காந்தி வைசிராய்க்கு எழுதினார்:

''நான் பெரும் நடவடிக்கையைத் தொடங்கும் வரையிலாவது இந்திய அரசாங்கம் காத்திருக்க வேண்டும். உருப்படியான ஏதாவது நடவடிக்கை எடுக்கும் முன் உங்களுக்கு ஒரு கடிதம் அனுப்பப் பூரணமாகச் சிந்திப்பதாய் நான் வெளிப்படையாக அறிவித்திருக்கிறேன்.''

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியை பிரதிபலித்தவர்களும், தேசிய இயக்கத்தில் பாசிஸ்டு எதிர்ப்புக் கொள்கை உடையவர்களுமான தொழிலாளர் வர்க்கப் பிரிவினர், போரினால் ஏற்பட்ட பணிகளையும் பொறுப்புகளையும் செவ்வையாக நிறைவேற்றியதன் வாயிலாக, விடுதலைப் போர் சம்பந்தமாகத் தெளிவான, மாறுபாடற்ற வழியைத் தொடக்கத்திலிருந்தே பின்பற்றினார்கள். இந்திய மக்களின் உற்சாகத்தையும் தேசீயக் கோரிக்கையையும் பிரிட்டிஷ் பிற்போக்காளர்கள் பின்தள்ளினாலும், இவ்வளவு உறுதியான வழியை எப்படி பின்பற்றமுடியும், அப்படிப் பின்பற்றுவது எவ்வளவு அவசியம் என்பதை அவர்கள் உருப்படியாகச் செய்து காட்டினார்கள். இந்த அடிப்படையில், ஒத்துழையாமைத் திட்டத்துக்கு மாற்றாக ஒரு உறுதியான திட்டத்தை அப்போதிருந்த நெருக்கடி நிலைக்கு ஏற்றதாக உருவாக்கினார்கள்:

1. பாசிஸ்டு எதிர்ப்பு என்ற பொதுவான அடிப்படை மீது, காங்கிரஸ், முஸ்லீம் லீக் மற்ற அரசியல் கட்சிகள் அனைத்தையும் ஒற்றுமைப்படுத்தி ஐக்கிய இந்தியத் தேசீய முன்னணியை உருவாக்குதல்;

2. இத்தகைய ஒரு தேசீய முன்னணி அடிப்படை பேரில், எல்லாப் பிரிவினர்களின் ஒன்றுபட்ட ஆதரவோடு ஒரு தீர்வுக்கும், தேசீய அரசுக் கோரிக்கைக்கும் வலியுறுத்துதல்;

3. நியாயமான அரசியல் கோரிக்கையை வற்புறுத்துகையில், யுத்த முயற்சியிலும் மக்களைத் திரட்டுவதிலும் முழு மனத்தோடு ஒத்துழைத்தலும், யுத்த முயற்சியையும் மக்களின் பாசிஸ்டு எதிர்ப்புச் சக்தியையும் வலுப்படுத்து

வதற்கு தேசீய இயக்கத்துத் தலைமையின்கீழ் மக்களைத் திரட்டு வதற்கு அதிகார பூர்வமல்லாத முயற்சிகளை மேற்கொள்ளு தலும்;

4. இந்திய மக்களின் நலன்களுக்கு நாசகரமானவை என ஒத்துழையாமைக் கொள்கைகள் அனைத்தையும் நிரா கரித்தலும்.

ஆனால், தேசீய உணர்ச்சி மிகவும் கசப்பு கொண்டிருந்த தாலும், தேசீய அரசுக் கோரிக்கையைப் பிரிட்டிஷ் ஆட்சி வட்டாரங்கள் பிற்போக்கான முறையில் மறுத்ததாலும் தேசீய இயக்கத்தில் பெரும்பான்மையினரின் ஆதரவை இக்கொள்கை இன்னும் பெற முடியவில்லை.

இந்திய தேசீயத்தின் பெரும்பாலான தலைவர்கள், ஒரு சிறு கடுமையான போராட்டத்தின் வாயிலாக இந்திய நாட்டு விடு தலையைப் பெற்று (காந்தியின் முக்கியமான தளபதியாகிய வல்லப்பாய் படேல் ஒரே வாரத்தில் வெற்றி என்றார்; என்றாலும் காந்தி "அது ஒரு வாரத்தில் முடிவதாயின், அது ஓர் அற்புதமாக இருக்கும்" என்றார்) ஜப்பானிய ஆக்கிரமிப்பை எதிர்க்கவும் ஐக்கிய நாடுகளின் பயனுள்ளதொரு நேசநாடாய் நடந்து கொள் ளவும் மிக வலிமையான நிலைமையில், உரிய காலத்தில் இருக்க முடியும் என்று நம்பினார்கள். இத்தகைய வெற்றி, இந்தியாவில் மிகச் சிறந்த தற்காப்பாகவும், பாசிஸத்தின்மீது உலகம் வெற்றி கொள்ள மிக நல்ல உதவியாகவும் பயன்பட்டுத் தங்கள் போர் முறையை நியாயப்படுத்தும் என்று அவர்கள் உறுதியாக நம்பினார் கள். இந்தக் கணக்கின் தற்கொலைக்கொப்பான குருட்டுத்தனம் கண்கூடு. இருபத்திரண்டு ஆண்டுகளாய்ப் பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் கோட்டையைத் தங்கள் போர் முறையால் அசைக்கமுடியாமல் தோல்விகண்ட அஹிம்சையின் தூதர்கள், இப்போது அதே மாதிரியான போராட்டத்தின் வாயிலாக சிலவாரங்களுக்குள் அதிகாரமாற்றம் பெற்றுத் தக்க தருணத்தில் ஜப்பானிய படை யெடுப்பாளரை வாயிலில் எதிர்கொள்ளலாமென எதிர்பார்த் தார்கள். இன்னொரு விதமாக, அவர்கள் தங்கள் போராட்டம் ஒரு பெரிய வன்முறைக்கலகமாக உருக்கொள்ளும் என எதிர்ப் பார்த்திருந்தார்களானால், ஒரு போருக்கு இடையில், எதிரிப் படைகள் எல்லைகளை எட்டுகையில் அஹிம்சை முறையில் பயிற்சி பெற்ற, நிராயுதபாணிகள் ஆட்சியைப் பிடிக்கும் ஒரு புரட்சிகர மான போராட்டத்தை எவ்வகையில் நடத்த முடியும் என்பதைப் பற்றி அவர்கள் எளிய மதிப்பீடு செய்ததைத்தான் அது காட்டும். தங்களுடைய போராட்டம் இந்திய விடுதலையின் வெற்றிக்கு வழி வகுக்காது, ஆனால் உள் நாட்டில் பிணக்குக்கும் குழப்பத்துக்கும்

முடக்கத்துக்கும்தான் வழிவிடும், அதனால் இந்தியாவில் பாசிஸம் வெற்றி பெறத்தான் வழி ஏற்படும் என்கிற வெளிப்படையான, எல்லாவற்றையும் 'கபளீகரம் செய்கிற' அபாயத்தை அவர்கள் புறக்கணித்துவிட்டார்கள். இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி கரவின்றி கூறியது போல், அவர்களுடைய கொள்கை ''நம் கழுத்தை நாமே வெட்டிக்கொள்வதைப் போன்றதாகும். ஆக்கிரமிப்பாளருக்கு எதிரான நாட்டுத் தற்காப்பை அது பலவீனப்படுத்துகிறது, பாசிஸ்டுப் படையெடுப்பாளரின் வேலையைச் சுலுவாக்குகிறது.''

ஒத்துழையாமைக் கொள்கை எல்லா நம்பிக்கைகளையும் இழந்த ஏமாற்றக்கொள்கை. ஆனால், அதை ஏற்றுக்கொண்ட தலைவர்களோ உண்மையில் ஒத்துழைப்புக்கு ஏற்ற அடிப்படையைக் காணப் பெரு முயற்சி செய்துகொண்டிருந்தார்கள்; தங்கள் போராட்டத்தைத்துவக்க முடியும் எனத்தங்களுக்கு நம்பிக்கையே இல்லை என்பதை அவர்கள் வெளிப்படையாகத் தெளிவுபடுத்தி விட்டார்கள், முதலில் ஒரு தீர்வுகாண விழைவதாகவும் கூறிவிட்டார்கள். இத்தகைய தருணத்தில் ஒத்துழையாமைப் போராட்டம் துவக்குவதைப் பற்றிப் பேசிய ஒரு கொள்கையைக் கண்டிப்பதற்கு எவ்வளவு நியாயமான காரணம் இருப்பினும், இந்தியாவின் நியாயமான கோரிக்கைகளை மறுத்து, சமமான அந்தஸ்தோடு ஒத்துழைக்க முன்வந்த கூர்மையான ஆவலை மழுக்கி, இந்த நிர்ப்பந்தமான விளைவை உண்டாக்கிய அரசாங்கத்தின் கொள்கையைத்தான் பொறுப்பின் பெரும் சுமை சேரும்.

இறுதிவரை காங்கிரஸ் ஒரு தீர்வுகாணவும் பேச்சுவார்த்தை நடத்தவும் தன் விருப்பத்தைக் காட்டியது. காரிய சாத்தியமான தீர்வுக்கும், பாசிஸ எதிர்ப்புக்கு ஆயுதமேந்தி ஒத்துழைக்கவும் தங்களுக்குள்ள விருப்பத்தை வலியுறுத்துவதற்காகத் தீர்மானம் மாற்றி அமைக்கப்பட்டது. காந்தியும் நேருவும் ஆற்றிய இறுதிச் சொற்பொழிவுகள் பேச்சுவார்த்தை நடத்தும் விருப்பத்தையே வற்புறுத்தின. விவாதத்துக்குக் கடைசியாக மறுமொழி கூறுகையில் நேரு உரைத்தார்: ''தீர்மானம் ஒரு மிரட்டல் அல்ல: அது ஓர் அழைப்பு, ஒரு விளக்கம்; அது ஓர் ஒத்துழைப்பு வேண்டுகோள்.'' ஜெனரல்லஸ்ஸிமோ சியாங்கே-ஷேக்கிற்குக் காந்தி ஜூலையில் எழுதி, பின்னர் வெளிவந்த கடிதத்தில் அவர்

> ''அவசரப்பட்டு எந்த நடவடிக்கையும் எடுக்க மாட்டேன்; ஏதாவது நடவடிக்கை எடுத்தாலும் அதனால் சீனாவுக்குத் தீங்கு நேரக் கூடாது, இந்தியாவிலோ அல்லது சீனாவிலோ ஜப்பானிய ஆக்கிரமிப்புக்கு ஊக்கம் தருவதாக இருக்கக் கூடாது என்பதைப்பற்றின கவனம் எடுத்துக்

கொள்ளப்படும். பிரிட்டிஷ் ஆட்சியாளர்களோடு தகரா,
ஏற்படுவதைத் தவிர்க்க நான் பெருமுயற்சி செய்கிறேன்.''

போராட்டம் தொடங்கும் பிரச்னை எழுவதற்கு முன், முதல் நட வடிக்கையாக, வைசிராய்க்குப் பேச்சுவார்த்தை வேண்டிக் கடிதம் எழுதப்படும் என்று விளக்கம் செய்யப்பட்டது.

காங்கிரஸ் கமிட்டி கூட்டம் முடிவுற்றதும் கடிதம் எழுதத் தொடங்கினார்கள்; ஆனால் அப்போது அதை முடிக்க அவர்கள் அனுமதிக்கப்படவில்லை. சிலமணி நேரத்திற்குள் மொத்தக் கைதுகள் ஆரம்பமாயின, அதை அடுத்து பரவலான மோதல் ஏற்பட்டது.

காங்கிரஸ் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது ஆகஸ்டு 8 ஆம் நாள். ஆகஸ்டு 9 ஆம் நாள் காலையில், காந்தி, நேரு, ஆஸாத், படேல், கிருபளானி, ராஜேந்திர பிரசாத், மற்றவர்கள் ஆகிய முக்கியமான எல்லா காங்கிரஸ் தலைவர்களும் கைது செய்யப் பட்டார்கள் (பம்பாயில் 148), காங்கிரஸ் ஒரு சட்ட விரோத மான ஸ்தாபனம் என்று அறிவிக்கப்பட்டது.

காரியக்கமிட்டி உறுப்பினர்கள் ஆமதுநகரக் கோட்டையில் சிறையிலிடப்படுகையில், காந்தி ஆகாகான் அரண்மனையில் தனி யாக வைக்கப்பட்டார்—ஆம், அவருக்கு எவ்வித அசௌகரியங் களும் இல்லாத சூழலில்தான் (''பௌதிகமான ஒவ்வொரு வசதி யும் நிரம்பிய ஓர் அரண்மனையில்தான் என்னை நீங்கள் வைத் திருக்கிறீர்கள்; அதை ஒரு கடமையாக—களிப்புக்கல்ல—நான் தாராளமாய்ப் பயன்படுத்திக் கொள்கிறேன்''—காந்தி வைசி ராய்க்கு எழுதிய கடிதம்; டிசம்பர் 31, 1942). ஆனால், அடுத்த நெருக்கடியான ஆண்டுகளில் எவ்வித அரசியல் பணிகளி லும் பங்கு கொள்ளவோ தலைமை வகிக்கவோ முடியாத நிலைக்கு முற்றிலும் கட்டுண்டார்கள். டாக்டர் சீதாராமய்யாவின் நினைப் புக் குறிப்புக்களின்படி, இந்த ஆண்டுகளில் காரியக் கமிட்டி உறுப் பினர்கள் அரசியல் பிரச்னைகளைப் பற்றி விவாதிக்கவும் முடிய லாமல் சமயம், தத்துவம், பொழுது போக்கில் காலம் கழித்தார் கள். இவ்வாறாக, தேசீய இயக்கம் தலைமையற்றுவிடப்பட்டது; மாற்றுத் தலைமைக்கான ஏற்பாடுகளோ, கைதுகள் நடைபெற்றால் எவ்வகை நடவடிக்கை எடுப்பது என்பதற்கான கட்டளைகளோ இல்லாமல் இயக்கம் தலைமையற்றதாயிற்று.

தேசீயத் தலைவர்கள் கைது செய்யப்பட்டதால் நாடெங்கும் ஆர்ப்பாட்டங்கள் நடந்தன, ஆங்காங்கு கலவரங்களும் குழப்பங் களும் உண்டாயின; அவற்றைப் போலீசும், ராணுவமும் வன் முறையான, விலங்குத்தனமான அடக்குமுறைகளைப் பயன்படுத்தி,

'மொத்தமாய்' ச் சுட்டுப் பலரை கொன்றும் காயப்படுத்தியும் ஒடுக்க முற்பட்டன. மைய சட்ட சபையில் உள்நாட்டு உறுப்பினர் சமர்ப்பித்த அதிகார பூர்வமான அறிக்கையின் சுருக்கப்படி, 1942, ஆகஸ்டு 9 க்கும் 1942 டிசம்பர் 31க்கும் இடையில் 60,229 பேர் கைது செய்யப்பட்டனர்; இந்தியத் தற்காப்பு விதிகளின் கீழ் 18,000 பேர் காவலில் வைக்கப்பட்டனர்; போலீசும் ராணுவமும் சுட்டதில் 940 பேர் இறந்தனர்; போலீஸ் அல்லது ராணுவம் சுட்டதால் 1,630 பேர் காயமுண்டனர் (''நிகழ்ச்சிகளின் நடைப்பயணம்—1942-45''—பம்பாய் மாகாணக் காங் காங்கிரஸ் கமிட்டி வெளியீடு, 1945).

தேசியத் தலைமையினர் கைதுசெய்யப்பட்டதைத் தொடர்ந்து எழுந்த பெரும் எதிர்ப்புகளும் நாட்டின் ஆத்திர எழுச்சியும் தாமாகத் தோன்றியவை, எங்கும் பரவியிருந்தவை. ஆனால், ஆங்காங்கு தோன்றிய குழப்பங்களும் கொந்தளிப்பும், தனிப்பட்ட கோஷ்டிகளும் பிரிவுகளும் பிறப்பித்த ஆணைகளும்—ஒரு ஒழுங்கான காங்கிரஸ் போராட்டத்தை பிரதிபலிப்பன அல்ல. ஆங்காங்கு தோன்றிய இக் கலவரங்கள், சர்ச்சில் பாராளுமன்றத்தில் பின்னர் குறிப்பிட்டதுபோல் ''குறிப்பிடத்தக்க விதத்தில் சுளுவாக'' ஒடுக்கப்பட்டு விட்டன. அவை காங்கிரசின் அனுமதி பெற்றவை அல்ல, போராட்டம் நடத்தும் முழுப் பொறுப்பும் ஏற்ற காந்தியே அவற்றை ஏற்க வெளிப்படையாக மறுத்துவிட்டார்:

> ''மொத்தமாகப் பெருமளவில் காங்கிரஸ் தலைவர்கள் கைது செய்யப்பட்டதால் தங்களை அடக்கிக் கொள்ளும் ஆற்றலை இழக்கும் அளவுக்கு மக்கள் சினத்தால் வெறி கொண்டு விட்டதாய்த் தோன்றுகிறது. நடந்துள்ள நாசத்துக்கு காங்கிரஸ் பொறுப்பல்ல, அரசாங்கமே பொறுப்பு என்று நான் கருதுகிறேன்.''

மறுபடியும் 1943 ஜூலை 15 இல் உள் நாட்டுத் துறைக்கு எழுதிய கடிதத்தில்:

> ''இந்தியா முழுவதிலும் கைதுகள் செய்ய அரசாங்கம் எடுத்த நடவடிக்கை மிக வன்முறையாக இருந்ததால், காங்கிரசிடம் பரிவு உள்ள மக்கள் தன்னடக்கத்தை இழந்து விட்டார்கள். இந்தத் தன்னடக்க இழப்புக்குக் காங்கிரஸ் உடந்தை என்று பொருளாகி விடாது.''

வரையப்படாத சுற்றறிக்கை (1943, ஜூலை 15 இல் காந்தி தயக்கத்துடன் இதை மேற்கோள் காட்டினாலும், மேற்கோள் காட்டப்பட்ட பகுதி சரியானதே என ஒப்புக் கொண்டு எழுதினர்) பின்வருமாறு:

''மகாத்மா முடிவு செய்யும் வரை எந்த இயக்க தொடங்கக்கூடாது, எவ்வித நடவடிக்கையும் எடுக்கக்கூடா இறுதியாக அவர் வேறு விதமாக முடிவு செய்யலாம், பெரிய, அனுமதி பெருத தவறுக்கு நீங்கள் பொறுப்பாளி ஆவீர்கள். ஆயத்தமாக இருங்கள், ஏற்பாடு செய்யுங்க விழிப்போடு இருங்கள்; ஆனால் எவ்விதத்திலும் செ படாதீர்கள்.''

காங்கிரசின் சார்பில் ஜவகர்லால் நேரு, வல்லப்பாய் படே ஜி.பி. பந்த் ஆகியோரால் கையெழுத்திடப்பட்ட ஓர் அதிக பூர்வமான அறிக்கை செப்டம்பர் 21, 1945 இல் வெ யாயிற்று:

''அ.இ.கா.க.வாலோ காந்திஜீயாலோ எந்த இயக்கமு அதிகார பூர்வமாய்த் தொடங்கப்படவில்லை.''

பிறகுதான், தற்காலிகமான, சில பிரிவினரின் அரசிய தந்திரமாக, 1942 ஆகஸ்டு மாதத்திலும் அதை அடுத் மாதங்களிலும் நடைபெற்ற குழப்பமான, தலைமையற் நிகழ்ச்சிகளை ''ஆகஸ்டுப் போராட்டம்'' என ஏற்பதென்றுட அதிகாரம் பெற்ற ஒரே காங்கிரஸ் தலைமையினால் மறுத் நிராகரிக்கப்பட்ட இப் போரட்டத்தைக் காங்கிரஸ் போராட்ட மாக ஏற்பதென்றும்; காங்கிரஸ் கொள்கைக்கு மாறான சின்ன அராஜக வன்முறைச் செயல்களை காங்கிரஸ் செயல்களா ஏற்பதென்றும்; ஆகஸ்டுத் தீர்மானத்துக்கு நேர் விரோதமாக போஸையும் ஜப்பானிய முகாமையும் ஆதரித்தும், ஐக்கிய நா களைத் தாக்கியும் நடந்த பிரசாரத்தைக் காங்கிரஸ் பிரசா மாக ஏற்பதென்றும்; இறுதியாக, முரண்பாட்டின் சிகரமாக காந்தியின் ஆணையின்றி எந்தப் போராட்டத்தையும் தொடங்க கூடாது என்று காங்கிரஸ் கட்டுப்பாடு விதித்திருக்கையில் தாம் எவ்வித ஆணையும் பிறப்பிக்கவில்லை எனத் தெளிவ படுத்தி இருக்கையில், அடிப்படையில் காங்கிரஸ் எதிர்ப்பான இப் போராட்டத்தில் கலந்து கொள்ளத் தவறியது காங்கிரஸ் கட்டுப்பாட்டை மீறியதற்குச் சமமாகும் என்றும் கரவுவுள்ள ஒரு முயற்சி செய்யப்பட்டது.

ஆகஸ்டு இயக்கத்தைத் தொடர்ந்து தேசீய இயக்கத்தில் நேர்ந்த குலைவும், ஒழுங்கான தலைமை ஒன்று இல்லாமையும், தெளிவான கொள்கை அறிவிப்பு இல்லாமையும், அடுத்த ஆண்டு களை அரசியல் முட்டுக்கட்டையும் நிலையோடு நிராசை குழப்பமும் மண்டிய கால கட்டமாக்கின. இக்காலத்தில் தான் முஸ்லீம் லீக் வலிமையில் வளர்ந்தது.

**1944**, மே 6 இல் காந்தி உடல் நலம் காரணமாகச் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டார். அவர் சற்றும் காலதாமதம் செய்யாது 1942, ஆகஸ்டு 8 தீர்மானத்தில் பெரும் சத்தியாக்கிரகப் பகுதி, 1944 இல் அவர் 1942 க்குத் திரும்பிச் செல்ல முடியாதாகையால் தானாகவே ரத்தாகி விட்டது என்று அறிவித்தார். ஆனால், முட்டுக்கட்டை நீடித்தது, ஏனெனில் ஆகஸ்டுத் தீர்மானத்தை வாபஸ் வாங்கும் வரை பேச்சு வார்த்தைகள் நடத்துவது பற்றி யோசிக்க முடியாது என்று அரசாங்கம் மறுத்ததுடன், அதே சமயத்தில் ஆகஸ்டுத் தீர்மானத்தைப் பரிசீலனைசெய்து, எந்தவிதப் புதிய கொள்கை அறிவிப்பும் செய்வதற்கு உரியவர்களான காரியக் கமிட்டியினரையும், 1945, ஜூன் வரை, விடுதலை செய்ய மறுத்துக் கொண்டே இருந்தது.

முட்டுக்கட்டை நிலைக்குத் தீர்வு காண 1945 வேனிலில் மற்றொரு முயற்சி செய்யப்பட்டது. மே மாதத்தில், மையச் சட்ட சபை காங்கிரஸ் கட்சியின் பார்லிமெண்டரி தலைவர் புலாபாய் தேசாய்க்கும் (காந்தியின் யோசனைக்கும் இசைவுக்கும் இணங்க நடந்து கொண்டவர்) முஸ்லீம் லீக் கட்சியின் பார்லிமெண்டரி தலைவர் லியாகத் அலிகானுக்கும் இடையில் ஒரு தற்காலிகமான உடன்பாடு ஏற்பட்டது; அதன்படி, ஓர் இடைக்கால தேசீய அரசு அமைப்பது என்றும், அதில் காங்கிரசுக்கும் முஸ்லீம் லீகுக்கும் சமமான இடங்கள் இருக்கும் (40 சதவீதம் காங்கிரஸ், 40 சதவீதம் முஸ்லீம் லீக், 20 சதவீதம் மற்ற கோஷ்டியினருக்கு) என்றும் முடிவு காணப்பட்டது. இத்திட்டம் வைசிராய் வேவல் பிரபுவிடம் கொடுக்கப்பட்டது; கலந்து ஆலோசனை செய்வதற்கு அவர் அதை எடுத்துக் கொண்டு லண்டனுக்குப் பறந்தார். நீண்ட ஆலோசனைக்குப் பிறகு வேவல் பிரபு, 1945, ஜூன் 14 இல் பிரிட்டிஷ் அரசு வெளியிட்ட புதிய கொள்கை அறிவிப்போடு திரும்பினார். இதுவும் தேசீய இடைக்கால அரசு அமைப்பதை ஏற்றாலும், காங்கிரசும் லீகும் உடன்பாடு கண்ட பிரதிநிதித்துவ ஏற்பாட்டில் நுட்பமான ஒரு மாறுதல் செய்தது. காங்கிரஸ்-லீக் சமநிலை என்பதைப் பிரிட்டிஷ் திட்டம் ''சாதி ஹிந்து-முஸ்லீம் சமநிலை'' என்று மாற்றியது. இவ்வாறு பிரச்னை மீண்டும் வகுப்புக்குப் பின்னால் தள்ளப்பட்டது. லண்டனிலுள்ள இந்தியா ஆபீஸின் அதிவிவேகத்தினால் புகுத்தப் பட்ட, பார்வைக்குச் சிறிதாய்த் தோற்றம்தரும் இந்த மாறுதல் முறிவை உறுதி ஆக்கியது. அதாவது, ஒன்று, காங்கிரஸ் தான் ஒரு ஹிந்து ஸ்தாபனம் என்ற நிலைக்குத் தள்ளப்படுவதை ஏற்க வேண்டும், அல்லது முஸ்லீம் இடங்களில் ஒன்று காங்கிரஸ் முஸ்லீமுக்குத் தர வேண்டும் என்ற உரிமைகோரி, முஸ்லீமுடன்

உள்ள சமநிலையை மீறவேண்டும். மற்ருெரு விதமா சொன்னுல், லீக் முஸ்லீம் இடங்களில் காங்கிரஸ் முஸ்லீமுக் தர ஒப்புக்கொண்டு, இவ்வாறு சமநிலையை விட்டுக் கொடுத் காங்கிரசைவிடத் தாழ்ந்த நிலையை ஏற்க வேண்டும் அல்ல இதை எதிர்ப்பதன் வாயிலாக மாநாட்டைக் குலைத்த பொறுப் ஏற்க வேண்டும்.

1945 ஜூனில், காங்கிரஸ், முஸ்லீம் லீக் பிரதிநிதிகளு மற்றவர்களும் சிம்லா மாநாட்டில் கூடியபோது மிக விசைய நிகழ்ச்சிகள் முட்டுக்கட்டை நிலையை எட்டிவிட்டன. மு திட்டத்துக்காகக் கூட்டாகப் போராடுவதற்கு மாருக, காங்கிர லீக் தலைவர்கள் ஒருவரை ஒருவர் எதிர்த்து, தத்தம் பிரிவி நலனுக்கு ஏற்ற வகையில் பிரிட்டிஷ் சூத்திரத்துக்குப் பொரு கூறும் தந்திரத்தைக் கையாண்டன. சிம்லா மாநாடு முறிவ முடிவுற்றது.

எனவே போர் முடிவடையும் தறுவாயில் உலகம் எங்கு மக்கள்கள் விடுதலையை நோக்கி முன்னேறுகையில், இந்தி போரின் தொடக்கத்திலிருந்தது போல ஓர் அடிமை நாடாகவே போரிலிருந்து வெளிப்பட்டது.

## அத்தியாயம் 17

''நம்முடைய வேலை நிறுத்தம் நம் நாட்டு வாழ்க்கையில் ஒரு வரலாற்று நிகழ்ச்சியாக இருந்துள்ளது. முதன் முதலாக ஒரு பொது லட்சியத்துக்காக, ராணுவத்திலுள்ள மனிதர், களின் ரத்தமும் வீதியிலுள்ள மனிதர்களின் ரத்தமும் சேர்ந்து பெருகின. படையிலுள்ள நாங்கள் இதை ஒருகாலும் மறக்க மாட்டோம். எங்கள் சகோதர சகோதரிகளான நீங்களும் மறக்க மாட்டீர்கள் என்பதையும் நாங்கள் அறிவோம். நம் முடைய பெருமக்கள் நீடூழி வாழ்க! ஜய் ஹிந்த்!''

—கப்பற்படை மைய வேலை நிறுத்தக் கமிட்டியின் இறுதிச் செய்தி, பிப்ரவரி 23, 1946.

''பிரிட்டிஷ் அமைச்சவைத் தூது கோஷ்டி வருமுன் இந்தியா ஒரு புரட்சியின் விளிம்பில் இருந்தது என்பது பல ருடைய கருத்து. அமைச்சவைத் தூதுகோஷ்டி அபாயத்தை அறவே நீக்காவிட்டாலும் குறைந்த பட்சம் தள்ளியாவது வைத்தது.''

(பி. ஜே. கிரிபித்ஸ், இந்திய மையச் சட்டசபை ஐரோப்பியக் குழுத் தலைவர், லண்டனில் கிழக்கு இந்தியச் சங்கத்தில் பேச்சு, ஜூன் 24, 1946.)

1946 ஜூனில் தொழிலாளர் கட்சி பிரதமந்திரி, சி. ஆர். அட்லி தொழிலாளர்கள் கட்சி மகாநாட்டில் உரையாற்றுகையில் கூறினார்:

''நமக்காக நாம் கேட்கும் சுதந்திரத்தையே நாம் பிறருக் காகவும் கேட்கிறோம். நாம் இந்த சுதந்திரத்தை அறிவிக்கி றோம், ஆனால் அறிவிப்பதைவிட அதிகமாகச் செய்கிறோம். அதை நடைமுறைக்குக் கொண்டுவர முயலுகிறோம்: இந்தியா வைப் பாருங்கள்.''

அதைப் போன்றே, தொழிலாளர் கட்சித்தலைவர் பேராசிரியர் லாஸ்கி, 1946, மே 23 இல் இந்தியச் செய்தித்தாள்களில் வெளி யான ஒரு பேட்டியில் கூறினார்:

"நவீனகால வரலாற்றில் எந்த ஏகாதிபத்திய வல்லரச எந்த மக்களுக்கும் அஹிம்சை முறையில் செய்கிற மிகப்பொ அதிகாரத் துறப்பு அது; இந்திய தேசியத் தலைவர்கள் தங்க தாம்பாளத்தில் வைத்து வழங்கப்படும் இந்த நிவேதன தைப் போற்றுவார்கள் என்று நம்புகிறேன்."

1946 ஆம் ஆண்டின் புதிய பிரிட்டிஷ் அரசியல் திட்ட யோசனை கள் பற்றின இக் கருத்து உலகச் செய்தி ஏடுகளில், குறிப்பாக- ஆங்கிலோ அமெரிக்க ஏடுகளில்—அவை பிரிட்டிஷ் தன்னல தியாகத்தை வியப்பதில் தம்மை இழந்து விட்டன—விரிவா விளம்பரம் பெற்றுள்ளது.

மறுபக்கம் இந்தியக் கருத்தரங்கில் இக்கருத்து எவ்வள யிலும் ஏற்கப்படவில்லை.

1946 ஜூன் முதல்நாள் அதிகார பூர்வமான அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி செய்திக் கடிதம் அதன் தீர்ப்பை வெ ளியிட்டது:

"நாங்கள் அஞ்சுவது நிகழ்ந்துவிட்டது. அமைச்சவை தூது கோஷ்டி வகுப்பு நலன்களுக்கும் நிலப்பிரபுத்துவ நல களுக்கும் வசதி செய்ய முயலுகையில் நாட்டின் பெருநல களைப் புறக்கணித்து விட்டது. பிரிட்டிஷ் அமைச்சர் நல்லே கருதினார்கள், தங்களுக்குத் தோன்றிய மிகச் சிறந்ததே செ தார்கள், ஆனால் அவர்களுடைய 'மிகச்சிறந்தது' துரதிர்ஷ் வசமாக 1942 மார்ச்சில் திருவாளர் சர்ச்சிலும் திருவாள அமெரியும் வழங்க விரும்பியதைவிட 'நல்லதாக' இல்லாத ஆகிவிட்டது....வாக்களிக்கப்பட்டுள்ள சுதந்திரத்துக்கு கட்டப்பட்டுள்ள வேலித் தடைகளைப் பார்த்தால் அதை அ பெயரால் அழைப்பது தவறான பெயராகும்."

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் புகழ்ச்சிக்கும் இந்திய ஏமாற்ற துக்கும் இடையில் கண்ணோட்டத்தில் இவ்வாறு முழு வேற்றுமை ஏற்படக் காரணம் என்ன? 1946 ஆம் ஆண்டின் பிரிட்டிஷ் அரசியல் திட்டப் பிரேரணைகள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் இறுதியான பதவித்துறப்பையும் இந்தியாவின் விடுதலை ஏற்பை யும் பிரதிபலிப்பவையா? அல்லது, பிரிட்டிஷ் ஏகாதிபத்திய மாறுகின்ற நிலைமைகளுக்கும், வளருகின்ற தேசீய கோரிக்கைக்கு தன்னைப் பொருத்திக்கொள்வதற்காக ஓர் அரசியல் திட்ட சம தானத்தைப் படைத்துவிட்டு, அதே சமயத்தில் தன் அதிகாரத் தின் சாரத்தையும், ஆதிக்கத்தின் சாரத்தையும் தன் வசமே வைத்துக் கொள்வதற்காக அது செய்து வரும் தொடர் முயற்சி களைப் பிரதிபலிப்பனவா? புதிய யோசனைகள் இந்திய விடுதலை

யைப் பிரதிபலிக்கின்றனவா? அல்லது சுதந்திரம் தருவதாய் வெறும் முகப்பு அலங்காரத்தையும் காட்சியையும் காட்டிவிட்டு, நடைமுறையில் நிபந்தனைகளும் தடைகளும் வரையறைகளும் மண்டி ஊடுருவ முடியாத புதிராய் அதை ரத்து செய்யும் முயற்சிகளைப் பிரதிபலிக்கின்றனவா?

## 1. மாறும் உலகில் இந்தியா

*1946 இல் அமைச்சவைத் தூது கோஷ்டி இந்தியாவுக்கு அனுப்பப்பட்டது ஏன்?*

பிரிட்டிஷ் கொள்கையின் புதிய போக்கிற்கு நான்கு முக்கியமான காரணங்களைக் குறிப்பிடலாம்.

முதலாவதாக, போர் முடிவு உலகம் முழுவதிலும் ஒரு புதிய மக்கள் எழுச்சியை உண்டாக்கியது. இந்த யுகத்தில் பிற்போக்குத் தன்மையின் தலையாய முன்னணிப் படையும், குடியாட்சிக்கு எதிராய்த் தாக்குதலை நடத்திய தலைமையும், இன ஆதிக்கக் கொள்கையை வெளிப்படையாகவும் ஒளிவில்லாமலும் மிகுதியும் விலங்குத்தனமாக விரித்து விளக்கியதுமான பாசிஸம் ஜனநாயக மக்கள்களின் ஒன்றுபட்ட போராட்டத்தால் முறியடிக்கப்பட்டது. ஆங்கிலோ-அமெரிக்க ஏகாதிபத்தியம் எஞ்சி இருந்தது, ஆனால் உலகத் தலைமையை சோஷலிஸ்டு சோவியத் யூனியனுடன் பங்கிட்டுக் கொள்ள வேண்டி இருந்தது—மூன்று உலக வல்லரசுகளின் நிம்மதியற்ற கூட்டாண்மை. போரின் முக்கியமான சுமையை செஞ்சேனையும் சோவியத் மக்களும் தாங்க நேர்ந்ததால் பயங்கரமான இழப்புகள் ஏற்பட்டிருந்தும் சோவியத் யூனியன் தன்னுடைய உலக அந்தஸ்திலும் செல்வாக்கிலும் மகத்தான வலிமையுற்றதாய்ப் போரினின்றும் வெளிப்பட்டது.

நாட்டு லட்சியத்தைக் காட்டிக் கொடுத்து ஹிட்லருக்குத் தொண்டு செய்த பழைய நிலப்பிரபுத்துவ சக்திகளுக்கும், ராணுவ சக்திகளுக்கும், பெரும் வியாபார சக்திகளுக்கும் எதிராக, விடுவிக்கப்பெற்ற ஐரோப்பிய நாடுகள் உயர்ந்த ஜனநாயக ஆட்சிப் பாதை வழியே விரைந்து முன்னேறிக் கொண்டிருந்தன. சீனாவின்மீது ஜப்பானுக்கிருந்த பிடிப்பு அற்றுவிட்டது, அமெரிக்கப் பிற்போக்குச் சக்தி வழியில் தடைகள் இட்டும் சீனாவின் தேசீய ஜனநாயக இயக்கம் தன் பயணத்தைத் தொடர்ந்தது. காலனி மக்கள்கள் எல்லாருமே தீவிரமாய்ச் செயல்பட்டனர், தங்கள் விடுதலை இயக்கம் போராடிய விடுதலையைக் கோரினர். இந்தப் புதிய உலக நிலையில், மிகப் பெரிய காலனிப் பிரதேசமும் மிகச் சக்திவாய்ந்ததாய் வளர்ந்திருந்த தேசீய இயக்கம் உடையது

மான இந்தியாவில் பழைய யதேச்சாதிகார, அதிகார வர் ஆட்சியை மாருமல் வைத்துக் கொள்ளும் கேள்விக்கே இடமில்

இரண்டாவதாக, பொதுப்படையான வெற்றியில் பா கொண்டாலும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அடிப்படைய வலுவற்றுவிட்டது. தன் உள்நாட்டுப் பொருளாதாரத்திலு சரி, உலக பொருளாதாரத்தில் தனக்கிருந்த அந்தஸ்திலு காலனி சாம்ராஜ்யத்தின் மீதிருந்த பிடிப்பிலும் சரி, பிரிட்டி முதலாளித்துவத்தின் சரிவு இரண்டு போர்களுக்கும் இடை பட்ட காலத்தில் குறிப்பிடத்தக்க அம்சமாகும். பழை ஆதிக்கமான உலக அந்தஸ்தில் ஏற்பட்டிருந்த இந்தச் சரி இரண்டாவது உலகப் போரின் விளைவுகளால் மேலும் மிகு ஆயிற்று. ஒரு ஸ்மட்ஸ் அல்லது ஒரு சர்ச்சில் போன் வயதான அரசியல் வல்லுநர்கள், புதிய உலகத்தின் இரண் ''அரசு'' வல்லரசுகளான—அவர்களுடைய வருணனை இது- அமெரிக்க ஐக்கிய நாடுகளும் யு. எஸ் எஸ். ஆரும் தா தம்மப்படி வலிமையில் மேலும் மேலும் வளர்ந்து மிகுந் ஆதிக்கம் பெறுவதையும், பிரிட்டன் இரண்டாவது அல்ல மூன்றுவது வரிசைக்குத் தாழ்ந்துவிடக் கூடிய சாத்திய கூறுகளையும் திகிலோடு கவனித்தார்கள். பிரிட்டிஷ் ஏகா பத்தியம் நேர் முகமாகவோ மறைமுகமாகவோ அடக் ஆண்டு வந்த மக்கள்கள் ஒவ்வொரு பக்கத்திலிருந்தும், எகிப் லிருந்தும், பாலஸ்தீனத்திலிருந்தும், பர்மாவிலிருந்தும், மலேய விலிருந்தும், இந்தோனேஷியாவிலிருந்தும் அதை அனை கூவும் வகையில் நெருக்கித் தாக்கினுர்கள்.

பிரிட்டிஷ் மக்கள் புதிய நிலைமைகளை முற்றிலும் புரிந் கொண்டு பிரிட்டனின் வளர்ச்சிக்கும் வளத்திற்கும் புதிய வ காண்பதற்கு டோரியி சத்தினின்றும் விலகிச் சென்று கொண் டிருந்தனர். ஆனுல் பழைய சாம்ராஜ்யத்தின் ஆட்சியாள களோ சிதைந்து வந்த பழைய ஆதிக்க அடிப்படையை எ விதத்திலாவது புதுக்கி நிலைநாட்ட முயன்று வந்தார்கள் பர்மா, மலேயா, இந்தோனேஷியாவில் போல, மீண்டு வெல்லப்பட்ட பிரதேசங்களில் காலனி அடக்குமுறையை மீளவும் ஏற்படுத்த அவர்கள் முயன்ருர்கள். மாறிவிட்ட உல சமநிலையை புதிய ஏகாதிபத்திய நேச உடன்பாடுகள் வாயிலாக எதிர்க்க முயன்ருர்கள்— முதலில் மேற்கு ஐரோப்பியக் கூட்டு ஒன்றை உண்டாக்கும் முயற்சியை மேற்கொண்டு ஐரோப்பிய மக்களின் எதிர்ப்பு காரணமாகத் தோல்வி கண்டு, சோவியத் யூனியனுக்கு எதிராக ஆங்கிலோ-அமெரிக்கக் கூட்டு அமைத் தார்கள். இந்த அரசியல் தந்திரத்தின் புதிய மதிப்பீடுகளில்

எல்லாம், இந்தியாவுக்கு முதன்மையான முக்கியத்துவம் இருந்தது. வலுவிழந்து வந்த ஏகாதிபத்தியத்திற்கும், பொருளாதாரத் தேவைகளுக்கும், போர்த் தந்திரத் திட்டங்களுக்கும் இந்தியப் பிரச்னையின் தீர்வுக்கான ஓர் அடிப்படையைக் காண வேண்டியது மிக அவசியமாக இருந்தது; அந்த அடிப்படை, தேசீய இயக்கத்தின் உயர் மட்டத்திலிருந்தவர்களைச் சமாதானப்படுத்தவோ அல்லது முடியுமானால் தன்பக்கம் இழுத்துக் கொள்வதாகவோ இருந்து இந்தியாவைப் பிரிட்டனின் பொருளாதார, போர்த் தந்திர வட்டத்துக்குள் பிடித்து நிறுத்தி வைக்கத் தக்கதாக இருக்க வேண்டியதும் அவசியம்.

மூன்றாவதாக, பிரிட்டனுக்கு உலக அந்தஸ்தில் ஏற்பட்ட மாறுதல் பிரிட்டனின் உள்நாட்டு நிலைமையிலும் பிரதிபலித்தது. சர்ச்சிலின் கௌரவத்தையும் வெற்றியின் பெருமையையும் பயன்படுத்திக் கொண்டு பழைய டோரி தேர்தல் யந்திரம் செய்த ஒவ்வொரு முயற்சியும் பயன்படாமல் 1945 கோடையில் நடந்த தேர்தலில் டோரிக் கட்சி பெரும் அளவில் தோற்கடிக்கப்பட்டது. முதன் முறையாக ஒரு தொழிலாளர் கட்சிப் பெரும்பான்மை ஆட்சிக்கு அனுப்பப்பட்டது. புதிய அரசை அமைத்த தொழிற்கட்சியின் மிதவாத வலதுசாரித் தலைவர்கள் நடைமுறையில் டோரி பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கொள்கையுடன் நெருங்கிய தொடர்பு உள்ளவர்கள் பின் அனுபவத்தால் வெளிப்பட்டாலும், பிரிட்டிஷ் மக்கள் பழைய ஏகாதிபத்திய அடிப்படையின் இடத்தில் புதிய பாதைகளைத் தேட முனைந்து விட்டனர் என்பதைத்தான் தேர்தல்களில் டோரிகள் மாபெரும் அளவில் நிராகரிக்கப்பட்டது காட்டுகிறது. தொழிற் சங்கக் காங்கிரசைத் தொடர்ந்து நடந்த தொழிலாளர் கட்சி மாநாடு, சங்கத்தினால் உருவாக்கப்பட்டு, தொடக்கத்தில் நிர்வாகக் குழுவினரின் எதிர்ப்பு தள்ளாகி, இந்திய விடுதலை கோரிய ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. இவ்வாறு தொழிலாளர் இயக்கம் அதிகார பூர்வமாக இந்திய விடுதலைக்குக் கட்டுப்பட்டுவிட்டது; ஆகையால் புதிய தொழிலாளர் அரசு இந்தியா சம்பந்தமான கொள்கையில் புதிய மாறுதல் செய்ய வேண்டியது மிக அவசியமாக இருந்தது.

நான்காவது, உறுதியான முக்கியத்துவமுள்ள காரணம், இந்தியாவில் மக்களின் எழுச்சி வலுத்து, உடனடியாக விடுதலை வேண்டும் என்ற கோரிக்கை நாடெங்கும் எழுந்தது. ஏகாதிபத்தியம் இனி பழைய முறையில் இந்தியாவைத் தொடர்ந்து ஆள முடியாது.

## 2. 1945–46 இன் நாட்டு எழுச்சி

பாசிஸம் தோல்வி கண்ட பிறகு எழுந்த, உலகளாவி மக்கள் முன்னேற்றப் பேரலை இந்தியாவைக் குலுக்காம விடவில்லை. பாசிஸ்டுகள் வசப்படுத்திக் கொண்ட நாடுகள் வெற்றிபெற சக்திவாய்ந்த முறையில் உதவியவை யு போருக்குப் பிறகு அரசியல் மாற்றத்துக்கான வழிவகுத்தன மான பெரும் மக்களின் விடுதலை இயக்கங்களைப் போல் ஐக்கி நாடுகளோடு சேர்ந்து போரில் பங்குகொள்ள இயலாவிட்ட லும், அதே நாட்டு விடுதலை உணர்ச்சியும், ஜனநாயக மு ன்னேற்ற உணர்ச்சியும் இந்தியா முழுவதிலும் ததும்பியது. ஒ தலைகீழ் முறையில், அச்சு நாடுகளின் முகாமில் போ தொடங்கிய இந்திய தேசீய ராணுவத்தின் உதாரணமுட குறிப்பாக, போருக்குப்பிறகு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அத தலைவர்களை விசாரணைகளை நடத்தியதும் இந்தியாவில் போர் குணம் வாய்ந்த தேசபத்தி உணர்ச்சிக்குக் கனலூட்டு முறை யில் சூடேற்றியதுடன், ஆயுதப் படையினருக்கு இடையிலு அதன் முத்திரை பதிந்தது.

1945 கோடையில் நேர்ந்த சிம்லா மாநாட்டு முறி பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கொள்கை அடைந்திருந்த நெரு கடியை வெளிப்படுத்தியது. ஆனால், அது காங்கிரசுக்கும் மு லீம்லீகுக்கும் இடையிலுள்ள ஆழ்ந்த, அடைக்க முடியாததாய் தோன்றிய பிளவையும் வெளிப்படுத்தியது. காங்கிரஸ் தலை யும் முஸ்லீம்லீக் தலைமையும் ஒன்றுய்க் கூடி பிரிட்டிஷாரை எதிர்ப்பதைவிட, ஒருவருக்கு ஒருவர் விரோதமாய்ப் பிரிட் ஷாருடன் பேச்சுவார்த்தை நடத்துவதே சுலபம் என் கருதினார்கள். முதல் உலகப் போரைத் தொடர்ந்து காங்கிர லீக்-கிலாபத் நேசவுறவு ஏற்பட்டதற்கு நேர் மாறுனது இரண்டாவது உலகப் போரைத் தொடர்ந்து தேசீய முன்ன ணியில் ஏற்பட்ட அடிப்படைப் பலவீனம் இது. பிரிட்டி கொள்கை இப் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டது.

எனவே, போரை அடுத்து இந்தியாவில் ஏற்பட்ட பெரு எழுச்சி, அதிகார பூர்வமான தேசீய இயக்கத்தின் ப னுள்ள ஒன்றுபட்ட தலைமையற்றதாயிற்று. ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நடக்கும் போராட்டத்தில் ஒற்றுமை வேண்டும் என் விருப்பம் பொதுமக்களுக்கு இடையில் அளவு கடந்து இருந்தது கல்கத்தா, பம்பாய், இன்னும் முக்கியமான நகரங்களில் நடந் பெருத்த ஆர்ப்பாட்டங்களின்போது காங்கிரஸ், முஸ்லீட லீக் கொடிகளையும், பல இடங்களில் கம்யூனிஸ்டுக் கட்சி கொடிகளையும் கூட்டத்தினர் ஒற்றுமையாக ஏந்திச் சென்றந

லிருந்து இது வெளியாகியது. துரதிர்ஷ்டவசமாக, கீழே காணப்பட்ட இந்த ஒற்றுமைக்குப் பொருத்தமான ஒற்றுமை மேலே காணப்படவில்லை.

ஆயினும், இயக்கம் சாதாரண குடிமக்களுக்கு இடையில் மட்டும் அல்ல, ஆயுதப் படையினருக்கு இடையிலும் அலை மோதிப் பரவியது. இந்தியாவில் இது புதிய நிலை, அதன் பொருட் செறிவை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஆளும் வர்க்கத்தினருக்கு மட்டும் அல்ல, தேசீய இயக்கத்தின் மேல்மட்டத் தலைமையினருக்கும் புரியாமல் இல்லை. முன்பு, 1930 இல் கார்வாலிகள் கூட மறுத்தார்கள். ஆனால், இப்போது ஆயுதப் படையினர், குறிப்பாக, வானப்படையையும் கப்பற்படையையும் சேர்ந்தோர் பரந்த முறையில் வேலை நிறுத்தம் செய்ததிலிருந்து பிரிட்டிஷ் ஆட்சியின் அடிப்படையில் அதிகாரயந்திரமே சிதைந்துவிட்டது வெளியாயிற்று. 1946 பிப்ரவரியில் இந்தியக் கப்பற்படையின் எழுச்சி-இந்தியப் புரட்சியின் முதிர்ந்துவரும் சக்திகளை மின் வெட்டு நேரத்தில் 'பளிச்' எனக் காட்டிவிட்டது. 1905 இல் ரஷ்யாவில் பொடெம்கின் நினைவுகளும், 1917 இல் ரஷ்யாவில் கிரான்ஸ்டாட்டின் நினைவுகளும் அல்லது 1918 இல் ஜெர்மனியில் கீலின்களும் பெரிய புரட்சிகளின் முன்னணியில் கப்பற்படையினருக்குள்ள முக்கியத்துவத்தை ஆழப் பதித்துள்ளன. 1946 பிப்ரவரியின் கப்பற்படை எழுச்சி, இந்தியாவுக்குள் அதற்கு ஆதரவான பெரும் இயக்கம், பம்பாய்த் தொழிலாளர் வர்க்கத்தின் வீரமிக்க உறுதி-இந்தியாவில் புதிய யுகம் பிறப்பதன் மணியோசை, இந்திய வரலாற்றின் மிகப் பெரிய எல்லைக் குறிகளில் ஒன்று. அந்த பிப்ரவரி நாட்களில் இந்திய மக்களின் முன்னேற்றத்திற்கு நண்பர்கள் யார், பகைவர்கள் யார் என்று தெளிவாய்ப் புலப்பட்டது.

பம்பாயிலும், கராச்சியிலும், மதராசிலும் உருவான ராயல் இந்தியக் கடற்படை—ராயல் இண்டியன் நேவியின் மாலுமிகள் எழுச்சி, அந்த நகரங்களின் மக்களும் பிற நகர மக்களும் ஆதரவு தர, பம்பாயை மையமாய்க் கொண்டது. தீர்க்கப்படாத குறைபாடுகளின் நீண்ட தொடரின் விளைவாக அது பிப்ரவரி 18 ஆம் நாள் காலையில் தல்வார் பயிற்சிப் பள்ளியில் தொடங்கியது. பிப்ரவரி 19 ஆம் நாள் காலை அளவில், பன்னிரண்டு பம்பாய்க் கடற்கரை ஸ்தாபனங்களிலும் புறநகரிலும் துறைமுகத்திலிருந்த இருபது கப்பல்களிலும் இருந்த 20,000 மாலுமிகளுக்கு இடையில் அது பரவிவிட்டது. கப்பல்களின் கொடிக்கம்பங்களில் இருந்து யூனியன் ஜாக் அகற்றப்பட்டு, அதன் இடத்தில் காங்கிரஸ், முஸ்லீம் லீக் கொடிகள் ஏற்றப்பட்டன. நகரப்பகுதியில்

ஆர்ப்பாட்டங்கள் தொடர்ந்தன, காங்கிரஸ், முஸ்லீம்லீக், (
கொடிகள் ஒற்றுமையாகப் பறந்தன, 'ஜய்ஹிந்த்!', 'பு
ஓங்குக!' 'ஹிந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்றுபடுங்க
'பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் வீழ்க!' 'எங்கள் கோரிக்கை
ஏற்றுக் கொள்ளுங்கள்!' 'இ. தே. ரா. கைதிகளையும் அரசி
கைதிகளையும் விடுதலை செய்!' 'இந்தோனேஷியாவிலிரு
இந்தியப் படையை வாபஸ் வாங்கு!' என்பன போன்ற முழக்
கள் எழுந்தன, கராச்சியின் ஹிந்துஸ்தான்—இக்கப்பல் அப்ப
ஆயுத நடவடிக்கையில் சம்பந்தப்பட்டது—உட்பட இந்தி
கடற்படையைச் சேர்ந்த மற்ற கப்பல்களுக்கும் வேலை நிறுத்
பரவியது.

தொடக்கத்திலிருந்தே கடற்படை மாலுமிகள் காங்கிர
முஸ்லீம்லீக் தலைமையினருடன் தொடர்பு கொண்டார்க
ஆனால் எவ்வித ஆதரவும், நடைமுறை உதவியும் கிடை
வில்லை. அவர்கள் மையக் கடற்படை வேலை நிறுத்தக் கமிட்
ஒன்றைத் தேர்தெடுத்தார்கள், முழுக் கட்டுப்பாடும் பின்பற்
பட்டது. கப்பல்களுக்கு உணவு கொண்டு வந்து கொடுத்
பம்பாய் மக்களின் ஆதரவு அளவு கடந்ததாக இருந்த
இயக்கம் பெரும் அளவில் பெருகியிருப்பதைக் கண்ணுற்
பிரிட்டிஷ் அதிகாரிகள் முற்றிலும் வியப்புற்றவர்களாய் அடக்
முறையைக் கையாள முற்பட்டார்கள். பம்பாய்க்கும் கராச்சிக்கு
அவசரமாய்ப் பலத்த கடற்படையும் ராணுவமும் அனுப்பின
கள். இந்திய சிப்பாய்கள் சுட மறுக்கவே, பிரிட்டிஷ் துருப்புக
வரவழைக்கப்பட்டன, பிப்ரவரி 21 ஆம் நாள் காஸி
பாரக்சுக்கு வெளியே ஏழுமணி நேர சண்டை நடந்தது. அன்
பிற்பகல் அட்மிரல் காட்பிரே தம் இறுதி எச்சரிக்கையை ஒ
பரப்பினர்: ''அரசாங்கத்தின் வசமுள்ள ஏராளமான படைக
முற்றிலும் பயன் படுத்தப்படும்......அதனால் கடற்படை
அழிவதாயினும் சரி.'' மைய கடற்படை வேலைநிறுத்தக் கமிட்ட
பதிலுக்கு பொது மக்களுக்கு அமைதியாக வேலை நிறுத்தமு
ஹர்த்தாலும் செய்யுமாறு வேண்டுகோள் விடுத்தது. இந்
மிரட்டலை முறியடித்துக் கடற்படை மாலுமிகளைக் காப்பாற்
வேண்டிய அவசரமாய் ஆதரவு தேவைப்பட்டும் காங்கிரஸ்
தலைமையின் சார்பில் வேலை நிறுத்தத்துக்கு ஆதர
தர மறுத்து வல்லப்பாய் படேல் அதற்கு எதிரான ஆணை
களும் பிறப்பித்தார். ஆயினும், பம்பாய் தொழிற் சங்கங்
களாலும் கம்யூனிஸ்டுக் கட்சியாலும் ஆதரிக்கப்பட்ட மையக்
கடற்படை வேலைநிறுத்தக் கமிட்டியின் வேலைநிறுத்த
அழைப்புக்கு, பிப்ரவரி 22 ஆம் நாள் பம்பாய் தொழிலாளர்
வர்க்கத்தின் முழு ஆதரவையும் பெற்றது. மக்கள்மீது போலீசும்

ராணுவமும் கண்மூடித்தனமாய்ச் சுடுவதன் வாயிலாகப் பிரிட்டிஷ் அதிகாரிகள் மக்களின் இயக்கத்தை நொறுக்க முயன்றார்கள். 21, 22, 23 ஆகிய மூன்று நாட்களில் 250 பேர் கொல்லப்பட்டதாய் அதிகார பூர்வமான தகவல்கள் கூறின. ஒரு பிரிட்டிஷ் ஆபீசரின் கண்கண்ட சாட்சியம் மேற்கோள் காட்டத்தக்கது:

''பம்பாய் தொழிலாளர் பகுதியான பரேலில், எல்பின்ஸ்டன் சாலை மூலை அருகில், சுபாரிபாக் ரோட் வழியாக மாலை 4 மணிக்கு நான் நடந்து கொண்டிருந்தேன்.

''தெருவில் பலபேர் இருந்தனர், அவர்களைக் கூட்டம் என முடியாது, வெறிபிடித்த கூட்டம் எனவே முடியாது. கம்யூனிஸ்டுக் கட்சியின் யோசனைப்படி அவர்கள் யாரும் ஆயுதம் ஏந்தவில்லை, கழிகள் அல்லது கற்கள்கூட இல்லை.

''திடீரென்று, சின்னஞ்சிறு எச்சரிக்கைகூட இல்லாமல், துப்பாக்கிகளும் ஒரு பிரென் கன்னும் தாங்கிய பிரிட்டிஷ் துருப்புகள் நிரம்பி வழியும் ஒரு திறந்த லாரி எல்பின்ஸ்டன் சாலையைக் கடந்து வந்தது.

''நான் உட்பட மக்கள் கதவு வழிகளில் ஓடுகையில் துருப்புகள் அப்பக்கம் நோக்கிச் சுட்டன. இருபது பேருக்குக் காயம், நாலு பேர் செத்தனர்.

''என்ன காரணம் இதற்கு?

''கடற்படை மாலுமிகளுக்கு ஆதரவாகத் தொழிற் சங்கங்கள் பொது வேலை நிறுத்தம் செய்யக் கோரியிருந்தன. வேலை நிறுத்தம் துணி ஆலைகளிலும், தொழிற்சாலைகளிலும், ரயில்வே பட்டறைகளிலும் 100 சதவீதம் வெற்றி பெற்றது.

''உயர்ந்த பதவியிலுள்ள யாரோ ஒருவர் 'இந்த நாய்களுக்கு ஒரு பாடம் கற்பிக்க' முடிவு செய்தார். ஆகவே, ஆயுதப் படைகள், முழு போர் முஸ்தீபுடன், லாரிகளில் தெருக்களில் புகுந்து, கூட்டமாயிருந்த தெருக்களில் மனம் போனபடி சுட்டுவிட்டு யாரும் ஒரு கல்லைக்கூடப் பொறுக்கு முன்பு அங்கிருந்து நகர்ந்துவிட்டன.

''தெருக்களில் நோயாளர் வண்டிகள் இல்லை, மக்கள் தங்களால் இயன்ற முறையில் ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டியிருந்தது.

''பிறகு, டெலிஸ்லி ரோடில், துருப்புகள் சவால்களில் (குடிசைக் குடியிருப்புகள்) புகுந்து தங்கள் வீடுகளுக்குள்ளேயே மக்களைச் சுடுவதைக் கண்டேன். நாலுபேர் கொல்லப்பட்டனர், பதினாறு பேர் காயமுற்றனர்.

''ஓர் ஆஸ்பத்திரியில், கிங் எட்வர்டு மெமோரி ஹாஸ்பிடல் பரேல் மாவட்டத்தினருக்குப் பணியாற்றுவ 50 சாவுகள். காயமுற்ற 600 பேரில் 200 பேரைப் பு ஆஸ்பத்திரிகள் ஏற்றன.

''பல செய்திகள் உங்களுக்குப் பொறுப்பற்ற கலக பற்றிக் கூறியிருக்கின்றன. ஆனால், வேலை நிறுத்தக்காரர்க காஸில்பாரக்சுக்குள் செல்லும்படி ஆணையிட்டு, உண அல்லது தண்ணீர்கூடத் தராமல் அவர்களை வளைத்து கொண்டு, தண்ணீர் சாப்பிட அவர்கள் வெளியே வந்தபோ அவர்கள்மீது சுட்டார்கள் என்று அவை உங்களுக்கு சொல்லியிரா (''அவர்கள் வாசலை நோக்கி நெருக்கி முண்டி கொண்டு போனார்கள்'' என்று அறிக்கை சொல்கிறது).

''வெறி பிடித்த கூட்டத்தின் வன்முறையையும் கலா டாவையும் பற்றி அவை உங்களுக்குக் கூறின. வெகு வேகமா ஓட்டப்பட்ட ஒரு லாரி ஒழுங்கானதோர் ஊர்வலத்தி இருந்த பலரை மோதித் தள்ளிவிட்டுப் போனபோது அத மீதுதான் முதல் கற்கள் எறியப்பட்டன என அவை உங் ளுக்குக் கூறவில்லை.

''பாகுபாடில்லாத பயங்கரத்துக்கு எதிராகத் தங்க உயிர்களையும் வீடுகளையும் காத்துக் கொள்வதற்காக ஒன் பட்டு நடத்திய போராட்டம் இது.

''ஒன்றுபட்டு—அதுதான் வார்த்தை. பித்தளை தொப்பிகளுக்கு விதிர்விதிர்ப்பு கொடுத்த காட்சி, காங்கிரசின் மூவர்ணம், முஸ்லீம்லீகின் பிறை, செங்கொடியை ஊர்வலங் களில் பக்கம் பக்கமாய் ஏந்திச்சென்ற காட்சி; லீக், காங்கிரஸ் கொடிகள் போர்க்கப்பல் நர்பதாவின் கொடிக் கம்பத்தில் பறந்த காட்சி.

''கதவு வழியில் நாங்கள் குனிந்து வளைந்து செல்லுகை யில், துப்பாக்கிக் குண்டுகள் எங்களருகில் பறந்து சென்ற போது ஓர் இந்தியர் என்னிடம் ''இதுதான் செயல்படும் பிரிட்டிஷ் சோஷலிசம்'' என்றார். எனக்குத் தொழிலாளர் கட்சி அரசின் கௌரவம்பற்றிக் கவலையாக இருக்கிறது, இந் தோனேஷியாவுக்குப் பிறகு எஞ்சியிருந்த ஆதரவை எல்லாம் 24 மணி நேரத்தில் அது இழந்துவிட்டது.

''எல்லாவற்றையும் விட அதிகமாக எனக்குப் பிரிட்டிஷ் மக்களைப்பற்றிக் கவலையாக இருக்கிறது. பெரும்பாலும் எல்லாத் துப்பாக்கிப் பிரயோகமும் செய்தவர்கள் பிரிட்டிஷ் படை வீரர்களே.

''போலீஸ் பின் இடத்தில் இருந்தார்கள். நான் இந்தியத் துருப்புகளையே காணவில்லை. ராணுவத்திலும் வெறுப்பு பரவலாம் என்ற அச்சத்தால் அதிகாரிகள் இந்த அடக்குமுறை வெறியாட்டத்தில் இந்தியத் துருப்புகளைப் பயன்படுத்தவில்லை என்று என்னிடம் சொல்லப்படுகிறது.

''பிரிட்டிஷ் போர்வீரர்கள் சிறப்புத் துருப்புகளோ அல்லது பாதுகாப்புப் பகுதித் துருப்புகளோ அல்ல. போர்க் காலச் சட்டப்படி ராணுவத்தில் சேர்ந்தவர்கள் அல்லது போர்க்காலத்தில் தாங்களாக ராணுவ சேவைக்குவந்த போர்வீரர்கள்—ராணுவ உடை அணிந்த பிரிட்டிஷ் தொழிலாளர்கள்; லைசெஸ்டர் ரெஜிமெண்ட், எஸ்ஸெக்ஸ் ரெஜிமெண்ட், ராயல் ஆர்டிலரி, ராயல் மரைன்ஸ்—ஆகிய படைப் பகுதிகளைச் சேர்ந்தவர்கள்.''

இறுதியாக, வல்லப்பாய் படேல் சரணடையுமாறும் ''பழிவாங்கப் படாமல் இருக்கக் காங்கிரஸ் தன் சக்திக்கு இயன்றதை எல்லாம் செய்யும்'' என்றும் யோசனை கூறி வற்புறுத்தியதாலும், முஸ்லீம் லீகும் அவ்வண்ணமே உறுதி கூறியதாலும், பிப்ரவரி 23ஆம் நாள் மையக் கடற்படை வேலைநிறுத்தக் கமிட்டி சரணடைவதென முடிவு செய்தது. ''நாங்கள் இந்தியாவிடம் சரணடைகிறோம், பிரிட்டனிடம் அல்ல,'' என்பதே வேலைநிறுத்தக் கமிட்டியின் தலைவர் வெளியிட்ட கடைசி அறிக்கை. இரண்டே நாட்களில் தலைவர்கள் கைது செய்யப்பட்டனர்.

பிப்ரவரி நாட்களின் கடற்படை எழுச்சியும் பம்பாயில் மக்களின் போராட்டமும் 1946 தொடக்கத்தில் இந்தியாவில் உருவாகிவந்த எந்த நிமிடமும் வெடித்திடக்கூடிய நிலையில் சக்திகளின் அணிவகுப்பைத் தப்பவொண்ணுத தெளிவுடன் பிரதிபலித்தன. ஒருபக்கம், இயக்கத்தின் உயர்வையும், மக்களின் துணிவையும், உறுதியையும், ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமைக்கும் காங்கிரஸ்லீக் ஒற்றுமைக்கும் பொதுமக்கள் அளித்த அளவற்ற ஆதரவையும் அது காட்டியது. இயக்கம் ஆயுதப்படைகளை எட்டிவிட்டது, ஆகையால் பிரிட்டிஷ் ஆட்சியின் அஸ்திவாரத்துக்கு இனி பாதுகாப்பு இல்லை என்பதை அது காட்டியது. மறுபக்கம், தேசீயத் தலைமையினருக்கு இடையில் இருந்த ஒற்றுமை இன்மையையும், ஆயத்தம் இன்மையையும் அதன் விளைவாகத் தேசீயப் போராட்டத்துக்கு வழிகாட்ட அவர்களுடைய சக்தியின்மையையும் அது காட்டியது.

முன்பு, சுபாஷ் போஸையும், முதலில் ஜப்பானியரிடமும் பிறகு பிரிட்டிஷாரிடமும் இரண்டுமுறை சரணடைந்த இந்திய தேசீய ராணுவத்தையும் புரட்சிகரமான தேசீய போராட்டத்தின்

சின்னங்களாய்ப் போற்றிப் பொதுமேடைக் காரணங்களுக்காக தடபுடலாகப் பேசப்பட்டது. பொதுமக்கள் தன்மையை ஒ காலும் எட்டாத 1942 நிகழ்ச்சிகளைப் போற்றித் துதி செய் பெரிதும் முயலப்பட்டது.

ஆனால், இப்போது பொதுமக்கள் மெய்யாகவே இயக்கத்தி இருந்தபோது, ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமை உருவாகிச் செயலுற் போது, பொதுவான தேசியப் போராட்டத்தில் பொதுமக்களோ ஆயுதப்படைகளும் ஒன்றுபட்டபோது, உண்மையான விடுதலை போராட்டம் பிரிட்டிஷ் ஆட்சியின் வாயிலைத் திறந்துவிட்டபோது தேசீய இயக்கத்தின் மேல்மட்டத் தலைமையினரின் போக்கி பெரும் மாறுதல் தென்பட்டது. காங்கிரஸ், முஸ்லீம்லீக் ஆகி இரண்டு ஸ்தாபனங்களின் மேல்மட்டத் தலைமையினர் தாங்க பொதுமக்கள் இயக்கத்துக்கு எதிராகவும், மக்களுக்கு விரோ மாகச் சட்டத்திற்கும் ஒழுங்கிற்கும் பிரதிநிதியான ஏகாதிபத்திய தோடு இணைந்தும் இருப்பதைக் கண்டார்கள். வன்முறையை தங்களுடைய ஈரமற்ற துப்பாக்கிச் சூட்டினால் மூன்று நாட்களி நூற்றுக்கணக்கானவர்களை படுகொலை செய்த ஏகாதிபத்திய ஆட் யாளர்களின் வன்முறையை அல்ல ராணுவத் துப்பாக்கிகளுக் இலக்கான ஆயுதமற்ற மக்களின் வன்முறையைக் கண்டித்து இகழ்ந்தும் அடுக்கு அடுக்காய் ஒரு முழு அறிக்கைகளின் தொட வெளியிடப்பட்டது. கடற்படை மாலுமிகள் ஆயுதக் கலகம் செ திருக்கக்கூடாது என்றும், ''கடற்படையில் கட்டுப்பாடு இருக்க வேண்டும் என்றும் தளபதியின் கூற்றை ஆதரிப்பதாக''வும் வல்ல பாய்படேல் ஓர் அறிக்கையை வெளியிட்டார். காங்கிரஸ் தலைவ ஆசாத் உரைத்தார்:

> ''வேலை நிறுத்தங்களுக்கும் ஹர்த்தால்களுக்கும் இன்னை யத் தற்காலிகமான அதிகாரத்தை மீறி நடப்பதற்கும் தேவை இல்லை. இடைக்காலப் பொறுப்பாளர்களாய்ப் பணியாற்று அயல் நாட்டு ஆட்சியாளர்களுடன் பிணக்கு கொள்வதற் உடனடியான காரணம் எதுவும் எழவில்லை.''

அஹிம்சைக் கொள்கையை மீறி ஹிந்துக்களும் முஸ்லீம்களு சேர்ந்த ''பாவகரமான சேர்க்கை'' என்று குறிப்பிட்டுக் காந் ஒரு முக்கியமான அறிக்கையை வெளியிட்டார்:

> ''அவர்கள் மேலிருந்து கீழ்வரை ஒன்றுபட்டிருப்பின அதை என்னால் புரிந்துகொள்ள முடிந்திருக்கலாம். அ இந்தியாவை வெறிக் கூட்டத்திடம் ஒப்படைப்பதாகும் என பது மெய். அந்த முடிவைக் கண்ணால்காண 125 வயதுவ

உயிர்வாழ நான் விரும்பவில்லை. அதற்குப் பதிலாக நெருப்பில் விழுந்து அழியவே விரும்புகிறேன்.''

(ஹரிஜன், ஏப்ரல் 7, 1946.)

இவ்வாறு, தேசீய சீர்திருத்தக்கார தலைமையினருக்கும் பொது மக்களின் இயக்கத்துக்கும் இடையில் இருந்த பிளவு 1922 இல் சௌரி சௌராவுக்குப் பிறகும், 1931 இல் காந்தி-இர்வின் ஒப்பந்தத்துக்குப் பிறகும் வெளியான பிறகு, இப்போது புதிதாக இன்னும்உயர்ந்த மட்டத்தில் வெளிப்பட்டது. பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிரான கூட்டுப் போராட்டமாய் ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமை நோக்கப்படவில்லை, தடுக்கப்பட வேண்டிய பெருத்த அபாயமாய் அது கருதப்பட்டது (''வெறிக் கூட்டத்திடம்[1] இந்தியாவை ஒப்படைப்பதாகும்''—பொருள் செறிந்த இந்த வார்த்தைகள் மேல் மட்ட தலைமையினருக்குக் கீழ்மட்ட மக்களின்பால் உள்ள பகைமையைக் காட்டுகின்றன). பிரிட்டிஷார் இந்தியாவின் ஒடுக்குமுறையாளர்களாய்ப் பார்க்கப்படவில்லை, இந்திய உயர் வகுப்பினரின் சார்பில் ''இடைக்காலப் பொறுப்பாளர்களாய்''ப் பார்க்கப்பட்டார்கள். நெருக்கடித் தருணத்தில் இந்திய நிலையில் உள்ளுறை புரட்சி சக்திகள் இந்திய மக்களின் போராட்டத்தின் ஒவ்வோர் உச்ச கட்டத்திலும் வெளிப்பட்டுள்ளன, இந்திய விடுதலைப் போராட்டத்தில் மிக நெருக்கடிக் கட்டமான இப்போதும் புதிதாய்த் தன்னை வெளிப்படுத்திக் கொண்டன—இந்த உள்ளுறைப் புரட்சி சக்திகளின்பால் உள்ள கிலியால்தான் இந்த இழிநிலை, ஏகாதிபத்தியத்தின் பக்கம் சாய்வு.

தேசீய இயக்கத்தின் இந்த வலிவின்மையை விரைவில் கண்டு கொண்டு தங்களுக்குச் சாதகமாய்ப் பயன்படுத்திக் கொண்டார்கள் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள். பின்னர் வந்த அமைச்சவைத் தூது கோஷ்டியின் நடவடிக்கைகள் காட்டியபடி, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் அரசியல் தந்திரம் முற்றிலும் காங்கிரஸ்-முஸ்லீம்லீக் தலைமையினரின் பக்கமே திரும்பியது; ஒரே நேரத்தில்—அவர்கள் கையில் அதிகார மாற்றத்தை அமைதியான முறையில் நம்பிக்கை காட்டுவதும், கீழ்மட்டப் பொது மக்களிடமும், அவர்களுக்குள் இருக்கும் வேற்றுமையிடமும் பகைமையிடமும் தலைமையினருக்கு இருந்த அச்சத்தை மூட்டுவதும் ஏகாதிபத்தியத்தின் ஏக தந்திரம் ஆயிற்று.

பிப்ரவரி 18 ஆம் நாளன்று பம்பாய் கடற்படை வேலை நிறுத்தம் தொடங்கியது.

---

1. காந்திஜீ பயன்படுத்திய சொல் RABBLE என்பது; இதற்கு வெறிக் கூட்டம், ஒழுங்கீனமான கூட்டம் என்ற பொருளோடு மிகவும் கீழ்மட்ட மக்கள் என்ற பொருளும் உண்டு. —மொழிபெயர்ப்பாளர்—

பிப்ரவரி 19 ஆம் நாளன்று மக்கள் சபையில் அமைச்சவை; தூது கோஷ்டியை அனுப்பும் முடிவை அறிவித்தார்.

## 3. அமைச்சவைத் தூதுகோஷ்டி

1946 மார்ச்சில் அமைச்சவைத் தூது கோஷ்டி இந்தியா வுக்கு வந்து சேர்ந்தது. 1945 செப்டம்பரில் வைசிராய் ஒலி பரப்பிய பழைய கொள்கையறிவிப்பைப் பின்பற்றியே தூது கோஷ்டியின் யோசனைகளும் இருந்தன; 1945 செப்டம்பரில் வைசிராயின் ஒலிபரப்பு பின்வருமாறு அறிவித்தது:

''கூடிய விரைவில் அரசியல் திட்டம் வகுக்கும் ஒரு சபையைக் கூட்டவேண்டும் என்பது மன்னர்பிரான் அரசினரின் நோக்கம்; பூர்வாங்கப்பணியாக, தேர்தல்கள் முடிந்தவுடனே மாகாணங்களின் சட்டசபைப் பிரதிநிதிகளுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தி, 1942 அறிக்கையில் அடங்கியுள்ள யோசனைகளை அவர்கள் ஏற்கிறார்களா அல்லது மாற்று யோசனைகள் சொல்கிறார்களா அல்லது திருத்தம் செய்யப்பட்ட திட்டத்தை ஏற்பார்களா என்பதை அறிந்துகொள்ள அவர்கள் எனக்கு அதிகாரம் வழங்கியுள்ளனர்.

''இந்திய சமஸ்தானங்கள் அரசியல் திட்டம் வகுக்கும் சபையில் எந்த வகையில் சிறப்பாய்ப் பங்கு கொள்ளலாம் என்பதை அறிந்து கொள்வதற்கு அவைகளின் பிரதிநிதிகளுடனும் பேச்சுவார்த்தைகள் மேற்கொள்ளப்படும்.

''கிரேட் பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் இடையில் ஏற்படத் தேவையான ஒப்பந்தத்தின் உள்ளடக்கத்தைப் பற்றிப் பரிசீலனை செய்ய மன்னர்பிரான் அரசாங்கம் தொடங்கியுள்ளது.

''இந்த ஆயத்த ஏற்பாடுகள் நடக்கும் நிலையில், இந்திய அரசாங்கம் தொடர்ந்து செயல்பட வேண்டும்....ஆகையால்,மாகாணத் தேர்தல்களின் முடிவுகள் வெளியான உடனே, இந்தியாவின் முக்கியமான கட்சிகளுடைய ஆதரவு பெறக்கூடிய ஒரு நிர்வாகக் கவுன்சிலை அமைக்குமாறு மன்னர்பிரான் அரசாங்கம் எனக்கு மேலும் அதிகாரம் வழங்கியுள்ளது....''

இந்த அறிக்கை 1942 ஆம் ஆண்டின் கிரிப்ஸ் திட்டத்தின் பொதுவான போக்கையே பின்பற்றி, மாறுதல் செய்யும் சாத்தியக்கூறுக்கு இடம் தருவதாய்த் தொடர்ந்து செல்வதைக் காணலாம். வைசிராயின் ஒலிபரப்பு செய்யப்பட்ட அதேசமயத்தில் பிரதம மந்திரி வெளியிட்ட அறிக்கையில் கூறினார்:

''இந்த நாட்டிலுள்ள எல்லாக் கட்சிகளின் ஆதரவையும் பெற்றுள்ள 1942 ஆம் ஆண்டின் அறிக்கையில் அடங்கியுள்ள

இந்தியா சம்பந்தமான பிரிட்டிஷ் கொள்கையின் விரிவான வரையறுத்த விளக்கம், அதன் முழுமையிலும் நோக்கத்திலும் இப்போதும் நீடிக்கிறது.''

1946 இன் ஆரம்ப மாதங்களில் தேர்தல்கள் நடந்தன. விடுதலைக் குறிக்கோள் கொண்ட இரு பெரும் ஸ்தாபனங்களான காங்கிரசுக்கும் முஸ்லீம்லீகுக்கும் ஆதரவாக, காங்கிரசுக்குப் பொது இடங்களிலும் லீகுக்கு முஸ்லீம் இடங்களிலும் ஆதரவாகவும் மக்களின் கருத்து உருவாகியிருந்ததோடு, பழைய சிறு கோஷ்டிகளான ஹிந்து மகாசபை போன்ற கட்சிகளும், பஞ்சாபில் இருந்த யூனியனிஸ்டுக் கட்சியும், மதராசில் இருந்த ஜஸ்டிஸ் கட்சியும் போன்ற வட்டார அல்லது அரசாங்க ஆதரவு பெற்ற கட்சிகள் பெரும்பாலும் இருளடையுமாறும் மக்களின் கருத்து உருவாகியிருந்ததை தேர்தல் முடிவுகள் காட்டின. மையச் சட்டசபையில் (பிரிட்டிஷ் இந்தியாவின் மக்கட் தொகையில் ஒரு சதவீதத்தில் பாதிக்கும் குறைவான வாக்குரிமை அடிப்படையில் தேர்ந்து எடுக்கப்பட்டது) பொது இடங்களின் வாக்குகளில் 91 சதவீதமும், மொத்த வாக்குகளில் 59 சதவீதமும் பெற்று காங்கிரஸ் 56 இடங்களை (முன்பு, 36) வென்றது. முஸ்லீம் லீக் எல்லா 30 முஸ்லீம் இடங்களையும் (முன்பு, 25), முஸ்லீம் வாக்குகளில் 86 சதவீதமும், மொத்த வாக்குகளில் 27·6 சதவீதமும் பெற்று வென்றது. மாகாண சட்டசபைத் தேர்தல்களில், மக்கட் தொகையில் 11 சதவீதத்தினருக்கும், வயது வந்தோரில் $\frac{1}{5}$ க்கும் $\frac{1}{4}$ க்கும் இடைப்பட்டோருக்கும் வாக்குரிமை முறையில், காங்கிரஸ் 930 இடங்களைப் பிடித்தது; 1937 இல் 715 இடங்கள்தான் அதற்கு; மொத்த வாக்குகளில் 55.5 சதவீதம் பெற்றது. முஸ்லீம் லீக் 1937 இல் வென்ற 108 இடங்களுக்குப் பதிலாக இப்போது 507 முஸ்லீம் இடங்களில் 427 ஐக் கைப்பற்றியது, முஸ்லீம் வாக்குகளில் 74·3 சதவீதம் வாங்கியது. முதன் முறையாக, கம்யூனிஸ்டுக் கட்சி தேர்தலில் போட்டி இடமுடிந்தது, 8 இடங்களையும், 6,84,928 வாக்குகளும் பெற்றது.

பிப்ரவரி 19 ஆம் நாள் பிரிட்டிஷ் பிரதம மந்திரி மூன்று அமைச்சர்களைக் கொண்ட தூது கோஷ்டியை—இந்தியாவின் ராஜ்யக் காரியதரிசி பெதிக்லாரன்ஸ், தொழில் வாரியத் தலைவர் சர் ஸ்டாபோர்டுகிரிப்ஸ், கடற்படை விவகாரப் பிரபு அலெக்சாண்டரைக் கொண்டது—அனுப்புவதாய் வெளியிட்ட அறிக்கையோடு, அமைச்சவைக் கோஷ்டியின் ஆலோசனை வரையறை பற்றின அறிவிப்பும் இருந்தது; அதில் ''இந்தியக் கருத்தின்

தலைவர்களோடு சேர்ந்து இந்தியாவில் முழு சுயாட்சி விரை ஏற்படுவதற்கு வழி காண'' என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

பின்வரும் நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்:

''1. ஓர் அரசியல் திட்டம் வகுப்பது பற்றின மு கள் சம்பந்தமாகப் பரந்த அளவில் உடன்பாடு கண்ப காகப் பிரிட்டிஷ் இந்தியாவின் தேர்ந்தெடுக்கப்பட்ட பி நிதிகளோடும் இந்திய சமஸ்தானங்களோடும் ஆயத் பேச்சுகள்;

2. அரசியல் திட்டம் ஆக்கும் சபை ஒன்றை ஏற்ப துதல்;

3. முக்கியமான இந்தியக் கட்சிகளின் ஆதர பெற்றுள்ள ஒரு நிர்வாகக் கவுன்சிலை அமைத்தல்.''

மார்ச் 15 ஆம் நாள் பாராளுமன்றக் கூட்டத்தில், தூதுகோஷ் புறப்படும் தறுவாயில் பிரதமமந்திரி மேலும் ஒரு கொள்6 அறிக்கையை (முதல் அத்தியாயம் 32-33 பக்கங்கள் பார்க் வெளியிட்டார், அதில் இரு அம்சங்கள் பரந்த கவனம் பெற்ற முதலாவது, குடியேற்ற நாட்டு அந்தஸ்துக்குப் பதிலாக இந்திய ''சுதந்திர''த்தைத் தேர்ந்து கொள்ளலாம் என்ற குறிப்பு:

''தன்னுடைய எதிர்கால அரசியல் திட்டம் என்ன எ பதையும் உலகத்தில் தன் அந்தஸ்து என்ன என்பதைய இந்தியா தானுகவே தேர்ந்துகொள்ள வேண்டும். பிரிட்டி பொதுநல அரசுக் குழாமுக்குள் இருக்கவே இந்தியா விருப்ப கொள்ளும் என்று நான் நம்புகிறேன்....ஆனுல், மாறு அது சுதந்திரம் வேண்டும் என்று விருப்பம் தெரிவித்தால் அதற்கு அந்த உரிமை உண்டு என்பதே எங்கள் கருத்து— எங்கள் தரப்பில் அதிகார மாற்றத்தை முடிந்தவரை அமை யாகவும் எளிதாகவும் செய்ய உதவுவோம்.''

இரண்டாவது, சிறுபான்மைகளைப் பற்றிக் குறிப்பிட்டது:

''சிறுபான்மையினரின் உரிமைகளைப் பற்றியும், அவர்க அச்சமற்று வாழ முடிய வேண்டும் என்பதைப் பற்றியு நாங்கள் கவனமாக இருக்கிறோம். மறுபக்கம், பெரும்பா மையினரின் முன்னேற்றத்தின் பேரில் ஒரு சிறுபான்மையின ரத்து அதிகாரம் செலுத்துவதையும் நாங்கள் அனுமதிக் முடியாது.''

''சுதந்திரம்'' இந்திய அரசியல் வளர்ச்சியின் லட்சியம் ஆக கூடிய சாத்தியமுண்டு என்ற குறிப்பு, கொள்கையில் பிரமிக் வைக்கும் புதியமாறுதல் என்றும் பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கு

இடையிலுள்ள உறவுகளில் ஒரு புதிய தத்துவம் தோன்றியுள்ள தன் சான்று என்றும் பரந்த முறையில் பாராட்டி வரவேற்கப் பட்டது. ஐயம் கொள்ளத்தக்க முறையில் டோரி பேச்சாளரும் கோரஸில் (கோஷ்டிகானத்தில்) கலந்து கொண்டார்: ''சுதந்திரம் என்ற சொல்லை அச்சத்தோடு ஏன் தொடங்க வேண்டும்?''— இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் பழைய முரட்டுப் பிடிவாத மான ஆதரவாளரான சர் ஸ்டான்லி ரீட். ஆயினும், பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் தீர்மானத்துக்கும் செல்வாக்குக்கும் உட்பட்ட அந்தஸ்தும் நடைமுறையும் கொண்டதும் ஜனநாயக முறையற்றது மான ஓர் எதிர்கால அரசியல் வகுக்கும் சபை குடியேற்ற நாட்டு அந்தஸ்தா அல்லது சுதந்திரமா என்று முடிவு செய்யும் என்ற மிகவும் பாதுகாப்பான அனுமானத் திட்டம் உண்மையில் ஒரு புதிய கொள்கை விளக்கம் அல்ல. 1942 இன் கிரிப்ஸ் திட்டத்தி லேயே, டோரி ஆதிக்கமிருந்த அமைச்சவையினுலேயே அது முன்பே அனுமதிக்கப்பட்டுள்ளது:

> ''இந்தியாவில் மிக விரைவாக சுயாட்சியைச் சாத்திய மாக்குவதை நிறைவேற்றும் பொருட்டு, முழு குடியேற்ற நாட்டு அந்தஸ்துள்ள ஒரு புதிய இந்திய யூனியனை, அது விரும்பினுல் பிரிட்டிஷ் பொதுநல அரசுக் குழாமிலிருந்து பிரிந்து செல்லும் உரிமையோடு, உண்டாக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் திட்ட மிடுகிறது.''

ஒரு சிறுபான்மையினர் அரசியல் முன்னேற்றத்தைத் தடை செய்வதற்கு ரத்து அதிகாரத்தைப் பயன்படுத்த அனுமதிக்க முடியாது என்ற வாக்குறுதி, சிம்லா மாநாட்டு நிலையிலும் முன் னேற்றமானதுதான், இப்போதைய அரசியல் முட்டுக்கட்டை நிலைக்குத் தீர்வுகாண வேண்டும் என்ற உறுதியையும் அது வெளிப் படுத்துகிறது. ஆனால், அப்பால் இந்தியாவில் அரசுத் தரப்பினர், சிறுபான்மையினர்களைப் பற்றின குறிப்பு முஸ்லீம் வகுப்பை குறிப்பிடாது என்று கூறிய விளக்கத்தால் கொள்கைமாற்றம் எனப்பட்ட இதன் முக்கியத்துவம் குறைந்து விட்டது.

அமைச்சவைத் தூது கோஷ்டி முதல் சிலவாரங்களைக் கவர் னர்கள், அரசர்கள், மாகாண முதல் அமைச்சர்கள், எதிர்க் கட்சித் தலைவர்கள், காங்கிரஸ், முஸ்லீம்லீக், மற்ற ஸ்தாபனங் களின் பிரதிநிதிகளைத் தனித்தனியாகப் பேட்டி காண்பதில் கழித் தது. இந்தத் தனிப் பேச்சுகள், இந்தியாவின் பல்வேறு அரசியல் பிரிவினர்களுக்கு இடையில், குறிப்பாக, காங்கிரசுக்கும் முஸ்லீம் லீகுக்கும் இடையில் உள்ள வேற்றுமைகளை உலகக் கருத்துக்

காட்டுவதற்குப் பயன்பட்டன. அடுத்தக் கட்டத்தில், ஈஸ்ட ஓய்வுக்குப் பிறகு, தூது கோஷ்டி காங்கிரசுக்கும் லீகுக்கும் இடை யில் பொதுவான அடிப்படை காணும் நோக்குடன் பேச்சுகளை தொடங்கியது. இத்தகைய அடிப்படைக்கான திட்டங்களை தூது கோஷ்டி கூறியதுடன் மே 5லிருந்து 12 ஆம் நாளுக் மாநாடு தள்ளி வைக்கப்பட்டது; மே 12ஆம்நாள் சிம்லாவில் மு தரப்பு மாநாடு, தூது கோஷ்டி, காங்கிரஸ்,லீக் மாநாடு நடக்கு என முடிவாயிற்று. ஓராண்டுக்கு முன்பு நடந்த சிம்லா மாநா போலவே, இந்த இரண்டாவது சிம்லா மாநாடும் முறிவி முடிவுற்றது. இவ்வாறாக, அமைச்சவைத் தூது கோஷ்டியி முதல் ஏழுவார நடவடிக்கைகள் ஒரு பிரிட்டிஷ் தீர்ப்பு வழங் வதற்கு ஏற்ற அடிப்படையை தயாரித்துவிட்டன.

மே 16ஆம் நாள், வைசிராயோடும், பிரிட்டிஷ் அமைச்சவை யோடும் சேர்ந்து அமைச்சவைத் தூது கோஷ்டி தன் கொள்கை அறிக்கையை வெளியிட்டது. இந்தக் கொள்கை அறிக்கையி முடிவுகளும் சிபாரிசுகளும் அடங்கி இருந்தன: முடிவுகள், அரசிய நிர்ணயசபையின் அமைப்பும் உள்ளுரையும் அதன் நடைமுறை யும் சம்பந்தமாக உடனடியான நடவடிக்கைகள் எடுப்பது பற்றி சிபாரிசுகள், ஓர் எதிர்கால அரசியல் திட்டத்தின் முக்கியமான கொள்கைகள் பற்றி, சிபாரிசுகள் அரசியல் நிர்ணயசபையின் திருத்தத்துக்கு உட்பட்டவை, முடிவுகள் ஏற்புக்கோ மறுப்புக்கோ கூறப்பட்டவை. பின்னர் அரசியல் திட்டத்தின் தன்மையை தவிர்க்க இயலாத வகையில் தீர்மானிக்கப்போகும் எல்லா அடிப் படை நடவடிக்கைகளிலும் முடிவுகளின் ஆதிக்கமே இருக்குமாத லால், இந்தக் கொள்கை அறிக்கை உண்மையில் ஒரு தீர்ப்பு (இந்தச் சொல் தவிர்க்கப்பட்டு, மறுக்கவும் பட்டாலும்), பிரிட டிஷார் ஒருதலையாகத் திணித்த தீர்ப்புதான்.

அமைச்சவைத் தூது கோஷ்டியுடன் நடத்திய பேச்சு வார்த்தைகளில் இந்தியப் பிரதிநிதிகளின் பலவீனம், காங்கிர சுக்கும் முஸ்லீம்லீகுக்கும் இடையில் இருந்த வேற்றுமையில்தான் இருந்தது. இரண்டு கட்சிகளுக்கும் தத்தம் பின்பற்றுவோருக்கு இடையில் இருந்த வலிமையைத் தேர்தல் முடிவுகள் உறுதிப் படுத்திவிட்டபடியால் இந்த வேற்றுமை வலுத்தது. காங்கிரசும் லீகும் ஒரு கூட்டு மேடையைத் தயாரிக்க ஒரு முயற்சி செய்திருந் தால், சுதந்திரத்தையும் அதிகார மாற்றத்தையும் முன்னதாக அறிவிக்க வேண்டும் என்னும் நாடளாவிய கோரிக்கையை அமைச்சவைத் தூது கோஷ்டி அவ்வளவு எளிதாய்த் தாண்டிச் சென்றிருக்க முடியாது. மற்றொரு விதமாய்க் கூறினால், எதிர்கால அரசியல் திட்டம்பற்றி உடனடியான உடன்பாடு காண முடியா

விட்டாலும் காங்கிரசும் லீகும் ஒன்றுபட்டுத் தூது கோஷ்டியை சந்தித்து, தனித்தனியாக பேச்சுவார்த்தைகள் நடத்த மறுத்து, உடனடியாக சுதந்திரத்தையும் அதிகார மாற்றத்தையும் அறிவிக்க வேண்டுமென்று இணைந்து கோரியிருந்தால் (இந்திய அரசியல் திட்டத்தின் தன்மை பற்றின மற்ற கேள்விகளை எல்லாம், உள் நாட்டு அரசியல் பிரச்னைகள், மூன்றாவது நபர் தலையீடு இல்லாமல் இந்திய நிறுவனங்கள் தீர்த்துக் கொள்ள வேண்டியவை என்று விட்டிருக்க வேண்டும்) அதனால் காரியத்தைத் துவக்க வேண்டிய பொறுப்பு பிரிட்டிஷாரிடம் விழுந்திராது, பிரிட்டிஷார் ஒரு தலையாகத் தீர்ப்புக் கூறவும் சாத்தியப்பட்டிராது. துரதிர்ஷ்ட வசமாக, காங்கிரஸ், லீக் தலைமையினர் தங்களுக்குள் பேசிக் கொள்வதைவிட, தூது கோஷ்டியுடன் நெருக்கமாகவும் ரகசிய மாகவும் பேச மிகத் தயாராக இருந்தார்கள், தங்களுடைய வேறு பட்ட கோரிக்கைகளுக்காக, ஒருவருக்கு ஒருவர் விரோதமாகத் தூது கோஷ்டியின் ஆதரவு பெற முயற்சி செய்யத் தொடங்கி னார்கள். எனவே, இந்திய சுதந்திரத்துக்கு ஒரே ஒரு தடை காங் கிரசுக்கும் லீகுக்கும் உள்ள வேற்றுமைகளே என்றும், அதனால் தான் இந்திய அரசியலின் எதிர்காலத்துக்கு ஒரே தீர்வாகப் பிரிட்டிஷ் அரசாங்கம் தவிர்க்க முடியாத வகையில் தங்கள் தீர்ப்பை விதிக்க நேர்ந்தது என்றும் உலகத்துக்குப் பிரிட்டிஷ் பிர சாரம் அறிவிக்கிற ஒரு நிலை எழுந்தது.

## 4. 1946 ஆம் ஆண்டின் புதிய அரசியல் திட்ட யோசனைகள்

மே 16 ஆம் நாள், அமைச்சவைத் தூது கோஷ்டி அறிவிப்பு பின்வரும் யோசனைகளை வெளியிட்டது:

**1. எதிர்கால அரசியல் திட்டத்திற்கான சிபாரிசுகள்**

1) பிரிட்டிஷ் இந்தியாவையும் சமஸ்தானங்களையும் உள் ளிட்ட ஓர் இந்திய யூனியன் இருக்க வேண்டும், அது வெளி நாட்டு விவகாரங்கள் தற்காப்பு, போக்குவரத்துகள் ஆகிய வற்றைக் கையாள வேண்டும், இவ்விஷயங்களுக்காக தேவைப் படும் நிதியை எழுப்புவதற்கு அவசியமான அதிகாரம் அதற்கு இருக்க வேண்டும்.

2) பிரிட்டிஷ் இந்திய, சமஸ்தான பிரதிநிதிகளிலிருந்து, அமைக்கப் பெற்ற ஒரு செயல்துறையும் ஒரு சட்டமன்ற மும் யூனியனுக்கு இருக்க வேண்டும்.

சட்ட மன்றத்தில் ஒரு பெரிய வகுப்பு விவகாரம் பற்றிய ஏதாவது பிரச்னை எழுந்தால், அதனுடைய முடிவுக்கு, ஆஜ

ராகியுள்ள உறுப்பினர்களின் பெரும்பான்மையும் இரண் பெரிய வகுப்புகளில் (காங்கிரசும் முஸ்லீம்லீகும்) ஒவ்வொ றின் வாக்களிப்பில் பெரும்பான்மையுடன் ஆஜராகியுள் எல்லா உறுப்பினர்களிலும் வாக்களிப்பிலும் பெரும்பான் வேண்டும்.

3) யூனியன் பொருள்களைத் தவிர மற்ற எல்லா பொரு களும் எஞ்சிய எல்லா அதிகாரங்களும் மாகாணங்களுக் உரியவை.

4) யூனியனுக்கு அளித்தன போக மற்ற எல்லாப்பொரு களும் அதிகாரங்களும் சமஸ்தானங்கள் வைத்துக் கொள் வேண்டும்.

5) மாகாணங்கள் செயல் துறைகளோடும் சட்ட மன்ற களோடும் குழுக்கள் அமைக்க சுதந்திரமாக இருக் வேண்டும், ஒவ்வொரு குழுவும் பொதுவில் கையாளப்ப வேண்டிய மாகாணப் பொருள்களைப் பற்றி முடிவு செய் முடியும்.

6) யூனியனின் அமைப்பிலும் குழுக்களின் அமைப்பிலு ஒரு விதியை ஏற்படுத்திக் கொண்டு அந்த விதியின்படி, எந் மாகாணமும், தன் சட்ட சபை பெரும்பான்மை வாக்கால் தொடக்கப் பத்தாண்டுகளுக்குப் பிறகும், அதற்கப்பா பத்தாண்டு இடைவெளியிலும் அமைப்பின் நிபந்தனைகளை மறுபரிசீலனை செய்யுமாறு கோரலாம்.

2. அரசியல் வகுக்கும் யந்திரத்துக்கான யோசனைகள்

1) 389 உறுப்பினர்களைக் கொண்ட ஒரு அரசிய நிர்ணயசபை; இப்போதுள்ள மாகாண சட்டசபைகளால் மக்கட் தொகைக்கு ஏற்ப பொது, முஸ்லீம், சீக்கியப் பிரி களுக்கு இடங்கள் ஒதுக்கி வகுப்பு அடிப்படையில் தேர்ந்தெடு கப்பெற்ற உறுப்பினர்கள் பிரிட்டிஷ் இந்தியாவின் மாகாண களிலிருந்து 292; சமஸ்தானங்களிலிருந்து 93; அவர்களை எப்படி பொறுக்கி எடுப்பது கலந்தாலோசனை செய்து முடி செய்யப்படும்.

2) மூன்று பகுதிகளாய் மாகாணங்கள் பிரிவினை:

அ) ஹிந்து—பெரும்பான்மைப் பகுதிகள் கொண்டது (மதராஸ், பம்பாய், ஐக்கிய மாகாணங்கள், பீகார், மத்திய மாகாணங்கள், ஒரிஸ்ஸா).

ஆ) வடமேற்கு முஸ்லீம்-பெரும்பான்மைப் பகுதி யும் (பஞ்சாப், வடமேற்கு எல்லை மாகாணம், சிந்து,

பலுசிஸ்தானம்) மற்றொன்று வடகிழக்கு முஸ்லீம்— பெரும்பான்மைப் பகுதியும் (வங்காளமும் அஸ்ஸாமும்).

இந்தப் பிரிவுகளின் பிரதிநிதிகள் தனியாகக் கூடி, ஒவ்வொரு பிரிவிலுமுள்ள மாகாணங்களுக்கும் மாகாண அரசியலமைப்புகள் பற்றி தீர்மானிக்க வேண்டும். புதிய அரசியல் திட்டமும் இந்த அடிப்படையில் தேர்தல் களும் முடிவுற்ற பிறகே மாகாணங்களுக்கு வெளியேறும் உரிமை இருக்கும்.

3) சிறிய சிறுபான்மையினர்களுக்காக ஆலோசனைக் கமிட்டி.

4) யூனியன் அரசியல் நிர்ணயசபை யூனியன் அரசியல் திட்டத்தைத் தீர்மானிக்கும்.

பெரிய வகுப்புப் பிரச்னைகளை எழுப்பும் தீர்மானங்களுக்கு ஆஜராகியுள்ள பிரதிநிதிகளில் பெரும்பான்மையும், இரண்டு பெரிய வகுப்புகளில் ஒவ்வொன்றின் வாக்கில் பெரும்பான் மையும் இருக்க வேண்டும்.

### 3. சமஸ்தானங்கள்

புதிய இந்திய யூனியனில் சமஸ்தானங்களின் ஒத்துழைப் புக்கான அடிப்படை பேச்சுவார்த்தைப் பேரம் வாயிலாகத் தீர்மானிக்கப்படும். தொடக்க நிலைகளில் சமஸ்தானங்களின் பிரதிநிதியாக ஒரு பேச்சுவார்த்தை பேரக்கமிட்டி செயல் படும்.

பிரிட்டிஷ் இந்தியா சுதந்திரம் பெறுவதுடன் தலையாய அதிகாரம் முடிவுறும்.

### 4. பிரிட்டிஷ்—இந்திய உடன்படிக்கை

யூனியன் அரசியல் நிர்ணய சபைக்கும் ஐக்கிய முடி யரசுக்கும் இடையில் ஒரு பிரிட்டிஷ்-இந்திய உடன்படிக் கைக்குப் பேச்சுவார்த்தை நடக்கும்.

### 5. இடைக்கால அரசு

தம்முடைய ஆட்சிக்குழு புதிதாய் அமைக்கும் அடிப் படையில் வைசிராயினால் ''பெரிய அரசியல் கட்சிகளின் ஆதரவு பெற்ற ஓர் இடைக்கால அரசு'' அமைக்கப்பட வேண்டும் என்கிற சிபாரிசு.

அமைச்சவைத் தூது கோஷ்டியின் திட்டத்துக்கு உடனடி யாகக் கிடைத்த வரவேற்பு கலப்படமாக இருந்தது. இந்திய

சுதந்திரத்துக்காகவும் இந்திய மக்கள் தங்கள் அரசியல் திட் ஷைதத் தாங்களே வகுத்துக் கொள்ளும் உரிமைக்காகவும் அளிக் பட்ட வாக்குறுதி முழுமையாகவும் தாராள மனப்பான் யோடும் நிறைவேற்றப்பட்டு விட்டது என்று திட்டத்தை பிரிட்டிஷ் விமரிசகர்கள் பாராட்டினார்கள். திட்டத்தின் உள்ளு இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்குவதுதான் என்கிற அ அனுமானத்தை விமரிசனம் அடிப்படையாகக் கொண்டிருந்தது. சர்ச்சிலைப் பிரதிநிதியாய்க் கொண்ட வலதுசாரி டோரி க தாளர்களில் ஒரு பிரிவினரின் விமரிசனம் இந்தப் பொதுவ அணுகுமுறையை மட்டும் வலியுறுத்தியது.

இந்திய விமரிசனம் இன்னும் வேறுபட்டிருந்தது. கலந்து யாடலின்போது தூது கோஷ்டியும் பிரிட்டிஷ் அரசும் உண்ம யாகவும் நல்லெண்ணத்துடனும் நடந்து கொள்வதாய் மி தாராளமாய்ப் புகழ்ந்த காந்தி (''அவர்கள் நமக்குத் துரோ செய்ய மாட்டார்கள்''—தன்னை ஒடுக்கி ஆளுவோரை—எதிர்த் கலகம் செய்யும் ஒரு நாட்டின் தலைவரிடமிருந்து வரும் அதி மான, பொருட் செறிவுள்ள சொற்கள்), ''இந்த சோக பூமியை சோகமோ கஷ்டமோ இல்லாத பூமியாக மாற்றுவதற்கு விதை அடங்கியிருப்பதாய்''த் திட்டத்தை வரவேற்றார். தலைய காங்கிரஸ் விமரிசனம் பெரும்பாலும் ஆதரவு தருவதாகவ குறை கூறுவதாகவும் இருந்தது. லீக்கின் கருத்து முதலில் விடு போடும் பட்டும் படாததுமாக இருந்தது, அப்பால், ஜின் திட்டம் ''பாகிஸ்தானுக்கு அஸ்திவாரமும் அடிப்படைய தருவதாக'' அறிவித்தார். இடதுசாரி காங்கிரஸ்காரர்களி கருத்து வெளிப்படையாக எதிரானதாக இருந்தது. ஃபிரீ பிர ஜர்னல் திட்டத்தை, ''இந்தியாவின் எதிர்காலத்தைக் குழப வந்த பிரிட்டிஷ் திட்டம்'' என்று பழித்தது. கம்யூனிஸ்டு தலைவர் பி. சி. ஜோஷி ''தங்கள் மிகப் பெரிய காலனித்தளமா இந்தியாவை என்றும் வைத்துக் கொள்வதற்கான பிரிட்டி ராஜாங்கத் திட்டம்'' என்றும், ''இந்தியர்கள் நிரந்தரமாய் தங்களுக்குள் சண்டை இட்டுக் கொண்டிருப்பதற்காகவு சுதந்திரத்தின் சட்டம் ஒன்று நிறைவேற்றப்படாமல் தடுப்பத காகவும் ஒரு சூழ்ச்சி'' என்றும் திட்டத்தை இகழ்ந்தார்.

திட்டத்தின் அறிவிப்பைத் தொடர்ந்து நீண்டு வளர்ந் கலந்துரை நடந்தது. மே 24 ஆம் நாள் காங்கிர காரியக்கமிட்டி தன் கருத்தைத் தெரிவிக்கும் இடைக்கா அறிக்கை ஒன்று விடுத்தது. காங்கிரஸ் தீர்மானம் இறுதியா தீர்ப்பை நிறுத்திக் கொண்டது, ஆனால், காங்கிரஸ் கொ கைக்கும் திட்டத்துக்கும் உள்ள பல வேறுபாடுகளைக் குறி

பிட்டது; குறிப்பாக, இடைக்காலத்தில் ராணுவத்தை நிறுத்தி வைத்துப் பராமரித்தலைப்பற்றிக்குறிப்பிட்டது (''சுதந்திரமின்மையில் வெளிநாட்டு ஆதிக்கப்படை தொடர்ந்து இருப்பது''): அரசியல் நிர்ணய சபையில் ஐரோப்பியர்களுக்குப் பிரதிநிதித்துவம்; நிர்ப்பந்தமாய் மாகாணங்களைக் குழுக்களாய்ப் பிரிவினை செய்வதால் மாகாண சுயாட்சியை மீறுதல்; சமஸ்தானங்களில் ஜனநாயகத்திற்கான விதிகள் இல்லாமை; ஆலோசனையில் இருந்த இடைக்கால அரசின் அதிகாரம் வரம்பு கட்டப்பட்டிருத்தல்.

ஜூன் முதல் நாள் அ. இ. கா. க. தன் அதிகார பூர்வமான செய்திக் கடிதத்தில் தன் விமரிசனத்தை விரிவாக்கி உரைத்தது; அது திட்டம்—

''1942 மார்ச்சில் திருவாளர்கள் சர்ச்சிலும் அமெரியும் வழங்க முன்வந்ததைவிட அதிகத் தரமாக இல்லை.

''வாக்களிக்கப்பட்டுள்ள சுதந்திரத்துக்குக் கட்டப்பட்டுள்ள தடை வேலைகளைப் பார்த்தால் அதை அப்பெயரால் விளிப்பது தவறாகும். அரசியல் நிர்ணயசபை எனக் கூறப்படும் சபைக்கு இறைமை வாய்ந்த ஒரு சபையின் தோற்றம் இருக்குமே தவிர, உண்மையில் அது அப்படி இராது. யூனியனும் சரி, மாகாணங்களும் சரி, சில, யதேச்சாதிகாரமான மாகாணக் குழுக்களின் தயவில் இருக்க வேண்டியதாகும். வகுப்பு அடிப்படையில் பிரிவினை செய்யப்பட்டுள்ள ஓர் இந்தியாவின் எல்லா குறைகளும் திட்டத்தில் இருக்கின்றன; ஆனால், மாகாணப் பகுதிகளை ஒரே தன்மையும் இறைமையும் வாய்ந்தனவாக இருப்பதற்கு அனுமதிக்கக்கூடிய ஒரு பாகிஸ்தானின் முழு அளவுத் திட்டம் என்கிற ஆறுதல் தரக்கூடிய அம்சம் இல்லை.

''நாணயச் செலாவணி, பாங்குத் தொழில், சுங்கம், திட்டமிடுதல் ஆகியவைமீது அதிகாரம் இல்லாத யூனியன் அரசு, இன்றைய நவீன தொழில்துறை நிலைமைகளில் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தை இயக்குவதற்கு வலுவற்றதாக இருக்கும். . . .

''வகுப்பு நலனுக்கு மட்டும் அல்ல, அதற்குக் குறையாமல் நிலப்பிரபுத்துவ நலனுக்கும் நாட்டு நலன் உட்படுத்தப்பட்டுள்ளது. யூனியனுக்கும் சமஸ்தானங்களுக்கும் உள்ள எதிர்காலத் தொடர்புகளை அவற்றின் மக்கள் அல்ல, அரசர்களே முடிவு செய்வார்கள் . . . .

''எளிதானதாகவும் எளிதில் செயல்படுத்தத் தக்கதாகவும் இருக்கும் தகுதிகூடத் திட்டத்துக்கு இல்லை.

''இறைமை நெடுகிலும் மிகவும் சாமர்த்தியமாக கூட்டாட்சி யூனியன், துணைக் கூட்டாட்சிக் குழுக்கள், மாகாணப் பகுதிகள், அரசர்கள் (அரசியல் திட்டம் வகுக்கப்பட்ட பின்னரும் கடைசி முடிவு சொல்லும் அதிகாரம் வாய்ந்த மன்னர்பிரான் அரசு பற்றிச் சொல்லவே வேண்டாட ஆகியவற்றுக்கு இடையில் பிரிவினை செய்யப்பட்டுள்ளதா அது எங்கேதான் இருக்கிறது என்பதைக் கண்டுபிடிப்ப எப்போதுமே கஷ்டம்....

''தடைகள், ஒதுக்கீடுகள், பாதுகாப்புகள், ஒரு நலனுக்கு எதிராக மற்றொரு நலனைச் சமநிலைப்படுத்துதல் ஆகிய சிக்கல்களுக்குள், விடுதலை பெற்ற, சுதந்திரமான ஓர் இந்தியாவை பற்றிய தெளிவான, முழுமையான சித்திரத்தைக் காண்பதே கஷ்டமாயுள்ளது.

''இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்க விளையாட்டுக்கு வகுப்பு நலன்களும் நிலப்பிரபுத்துவ நலன்களும் இன்றுவரை பெரும் தூண்களாக இருப்பவை. சுதந்திரம் பெற்றதாகச் சொல்லப்படும் இந்தியாவிலும் அவற்றை நிலையான, வலுவுள்ள அம்சங்களாய் நீடித்து வைத்துக் கொள்ளச் செய்யப்படும் முயற்சியைப் பார்த்தால், பிரிட்டிஷ் அரசியலார் தங்கள் மூதாதையரின் கொள்கையைக் கைவிட முடியவில்லையோ என்ற ஐயப்பாட்டுக்கு இடம் ஏற்படுகிறது.''

மே 24 ஆம் நாள் காங்கிரஸ் தீர்மானத்திற்கு மறுமொழி கூறும் முறையில் அமைச்சவைத் தூது கோஷ்டி மே 25 ஆம் நாள் அறிக்கைக்கு விளக்கமாக மற்றோர் அறிக்கை வெளியிட்டது. மற்ற விஷயங்களுக்கு இடையில் கீழ்க்கண்டவற்றை அறிக்கை தெளிவுபடுத்தியது:

1. ''திட்டம் முழுமையானதாக இருக்கிறது''—அதாவது, ஏற்றால் முழுமையாக ஏற்க வேண்டும், நிராகரித்தால் முழுமையாக நிராகரிக்க வேண்டும்.

2. ஓர் அரசியல் திட்டம் ஏற்படுத்தப்பட்டு, செயல்படுத்தப்பட்டு, தேர்தல்கள் நடந்து முடியும்வரை மாகாணங்களுக்குக் குழுக்களிலிருந்து வெளியேற உரிமை இல்லை—அவற்றின் விருப்பம் எப்படி இருப்பினும் சரி.

3. எதிர் காலத்தில் இந்தியாவுக்கு இறைமை அளிக்கப்படுவது இரண்டு நிபந்தனைகளுக்கு உட்பட்டிருக்கும்:

அ) ''சிறுபான்மையினரின் பாதுகாப்புக்குப் போதிய ஏற்பாடு;''

ஆ) ''அதிகார மாற்றத்தினால் எழும் பொருள்களைப் பற்றிப் பிரிட்டிஷ் அரசுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொள்ள விருப்பமுடைமை.''

4. அரசியல் நிர்ணய சபையில் சமஸ்தானங்களின் பிரதிநிதித்துவம் அவற்றின் இசைவோடு தீர்மானிக்கப்படும். ''அது சார்பாளர் குழுவினால் தீர்மானிக்கப்படக்கூடிய ஒரு பொருள் அல்ல.''

5. ''இடைக்காலத்தில் இப்போதைய அரசினர் திட்டமே நீடிக்க வேண்டும். ஆகையால் இடைக்கால அரசு மையச் சட்டமன்றத்துக்குப் பொறுப்பானதாக இருக்க முடியாது.''

6. இப்போதைய அரசியல் திட்டத்தின்கீழ், இந்தியப் பாதுகாப்புக்கான இறுதிப் பொறுப்பு பிரிட்டிஷ் பாராளு மன்றத்தைச் சாரும், ஆகையால் பிரிட்டிஷ் துருப்புகள் இருக்க வேண்டியது அவசியம், எனவே இடைக்காலத்தில் ராணுவம் கட்டாயம் நீடித்திருக்க வேண்டும்.

அரசியல் நிர்ணய சபைத் தேர்தல்களுக்காகப் பின்னர் நடந்த ஆயத்தங்களிலிருந்து, அரசியல் நிர்ணயசபை உறுப்பினர்கள் அரசியல் நிர்ணயத் திட்டத்தை ஏற்பதாகவும் செயல்படுத்துவதாகவும் முன்னதாகவே வாக்குறுதி அளிக்க வேண்டும் என்று தெரிய வந்தது.

தூது கோஷ்டியின் திட்டம், திணிக்கப்படும் தீர்ப்பின் தன்மை வாய்ந்ததே என்பதைக் கடுமையாக வெளிப்படுத்திய அதன் உள்ளுறைகள் காரணமாக, காங்கிரசுக்குள் பெரும் பிரிவினர்களுடைய எதிர்ப்பும், இடதுசாரி தேசீயக் கருத்துடையோரின் எதிர்ப்பும் வலுத்தது.

ஜூன் 6 ஆம் நாள், முஸ்லீம் லீக், ''ஒரு முழு இறைமை வாய்ந்த பாகிஸ்தானை அடையும் லட்சியமே இன்னும் இந்திய முஸ்லீம்களின் மாற்ற முடியாத நோக்கம்'' என்பதை மீண்டும் வலியுறுத்திவிட்டு, ''பாகிஸ்தானின் அடிப்படையும் அஸ்திவாரமும் தூது கோஷ்டியின் திட்டத்தினுள் அடங்கி இருப்பதால்,'' நீண்டகால, இடைக்கால யோசனைகள் உட்படத் திட்டத்தை முழுமையாக ஏற்பதாய் அறிவித்தது.

சிறுபான்மையினரின் முக்கியமான பிரதிநிதிகளாய்க் காங்கிரசுக்கும் லீகுக்கும் கூட்டுப் பிரதிநிதித்துவம் என்ற அடிப்படையில் இடைக்கால அரசு அமைப்பது பற்றிக் கலந்துரைகள் தொடர்ந்தன. திட்டத்தைச் செயல்படுத்துவதற்காக மேற்கொள்ளப்பட்ட ஒவ்வொரு முயற்சியிலும் நடைமுறையில் சிக்க

வைக்கும் வேற்றுமையும் மோதலும் நிச்சயமாக நிலைநிறுத்த
படுவதை கலந்துரைகள் உடனே வெளிப்படுத்தின. இடைக்கா
அரசு அமைப்பு பற்றிக் காங்கிரசுக்கும் லீகுக்கும் இடையி
உடன்பாடு ஏற்பட முடியவில்லை. உடன்பாட்டின்மையா
பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் மீண்டும் பிளவில் காலிட்டு, ஜூ
16 ஆம் நாள் மற்றொரு தீர்ப்பை வெளியிட்டார்கள். காங்கி
சுக்கு 5 பிரதிநிதிகள் (எல்லோரும் ஹிந்துக்கள், எந்தக் காங்கிர
முஸ்லீமும் இருக்கக்கூடாது) முஸ்லீம் லீகுக்கு 5 பிரதிநிதிகள்
சிறுபான்மையினரின் (சீக்கியர்கள், கிறித்தவர்கள், ஹரிஜன
கள், பார்சிகள்—காங்கிரசுக்கு மற்றொரு கண்துடைப்பு, ஹரிஜன்
காங்கிரஸ் ஹரிஜனராக இருக்க வேண்டும் என்பது; ஆகவே
காங்கிரசுக்கு 6 இடங்கள்) பிரதிநிதிகள் 4 பேர் என்ற அடிப
படையில் இடைக்கால அரசு அமைக்கப்பட வேண்டும் என்று
அறிவிக்கப்பட்டது.

''மே 16 ஆம் நாள் அறிக்கையின்படி அரசியல் நிர்ணயட்
பணி தொடர்ந்து நடைபெறும் என்கிற அடிப்படை''யில்தான்
அரசாங்கத்தில் பங்குகொள்ள முன்வர வேண்டும் என்று
தெளிவாக்கப்பட்டது.

காங்கிரஸ் ஒரு ஹிந்து நிறுவனம் என்ற நிலைக்கு அதைப் பின்தள்ளும் வகையில், ஒரு காங்கிரஸ் முஸ்லீமை அரசில் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்பதைக் குறிப்பாகவும், இடைக்கால அரசை இவ்வாறு அமைக்கும் யோசனையையும் பலர் வன்மையாக எதிர்த்தார்கள். ஜூன் 24 ஆம் நாள், இடைக்கால அரசு தொடர்பான திட்டத்தை நிராகரிப்பதாய்க் காங்கிரஸ் அறிவித்தது, ஆனால், அரசியல் நிர்ணயசபையில் பங்கு கொள்வது தொடர்பாகத் திட்டத்தை ஏற்றது. ஜூன் 26ஆம் நாள் காங்கிரஸ் காரியக் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானம், அமைச்சவைத் தூது கோஷ்டியின் திட்டத்திலுள்ள ''குறைபாடு''களை வலியுறுத்தி, ''உடனடி சுதந்திரம்'', சமூக முன்னேற்றம் பற்றிய காங்கிரஸ் நோக்கங்களைத் திரும்பவும் சொல்லி, திட்டம் இந்த நோக்கங்களுக்குப் பொருந்துவனவாக இல்லை என்று அறிவித்தது. காங்கிரஸ் தீர்மானம் திட்டத்தை ஏற்பதாய் அறிவிக்கவில்லை, ''சுதந்திரமான, ஒன்றுபட்ட, குடிமுறை ஆட்சியுள்ள இந்தியாவின் அரசியல் நிர்ணய திட்டத்தை வகுக்கும் நோக்குடன்'' ஆலோசனையுள்ள அரசியல் நிர்ணய சபையில் சேருவது என்ற தன் முடிவைத்தான் அறிவித்தது. சட்ட ஆலோசனைக்கு இணங்கத் தங்கள் சொந்த விளக்கப்படிதான் அவர்கள் அரசியல் நிர்ணய சபையில் சேர விரும்புவதையும், நிர்ப்பந்த முறையில் மாகாணங்

களைக் குழுக்களாய்ப் பிரிப்பதைத் தாங்கள் ஏற்க விரும்பவில்லை என்பதையும் அவர்கள் தெளிவுபடுத்தி விட்டார்கள்.

இந்த அறிவிப்பைத் தொடர்ந்து, ஒரு தற்காலிகத் தேசீய அரசுக்கான கலந்துரை பின்னல் நிகழும் என்றும், அதுவரை அரசாங்க அதிகாரிகளைக் கொண்ட ஓர் இடைக்கால நிர்வாக அரசு அமைக்கப்படும் என்றும் அமைச்சவைத் தூது கோஷ்டியும் வைசிராயும் அறிவித்தார்கள்.

ஜூன் 29 ஆம் நாள், அமைச்சவைத் தூது கோஷ்டி இந்தியாவை விட்டுப் புறப்பட்டது.

1946 இன் புதிய அரசியல் திட்டம் இந்திய விடுதலைக்கான திட்டம் என்று மிக விரிவாய் உலகக் கருத்துக்கு விளம்பரம் செய்யப்பட்டுள்ளது. ஆயினும், அதன் விதிகளை ஆய்வு செய்தால், அது உண்மையில் 1945 ஆம் வருட கிரிப்ஸ் திட்டத்தை விடச் சற்று மிகுதியானது என்றும், இந்திய விடுதலைக்கும் திட்டத்தின் நோக்கத்துக்கும் வெகு தொலைவு என்றும், அல்லது இந்திய மக்களே தங்கள் எதிர்காலத்தை அறுதியிடுவதற்கு ஜனநாயக முறையில் தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் உரிமை வழங்குவதல்ல என்றும்தான் முடிவு செய்ய முடியும்.

இந்தியாவின் புதிய நிலைக்கு ஏற்பப் பிரிட்டிஷ் கொள்கையைப் பொருத்தி வைப்பதற்குத் திட்டம் ஆற்றல் வாய்ந்ததொரு முயற்சி என்பதில் ஐயமில்லை. சென்ற ஆண்டுகளில் இந்தியாவில் எவ்வித அரசியல் திட்ட முன்னேற்றத்திற்கும் வழியடைத்துக் கொண்டிருந்த முட்டுக்கட்டையை அகற்றுவதற்கு முக்கியமான யோசனைகள் வகுக்கப்பட்டிருந்தாலும், அவற்றின் யந்திர அமைப்பின் தன்மையே தொடர்ச்சியாகப் பல புதிய முட்டுக் கட்டைகளைத் தோற்றுவிப்பதாக இருந்தது.

காங்கிரசும் முஸ்லீம் லீகும் ஆதரவும் ஒத்துழைப்பும் நல்கு வதற்கு ஏற்ப ஓர் அடிப்படையை அது அளித்தது. எதிர்கால விடுதலைக்கு அது அனுமானமாய் உறுதி வழங்கியது. முக்கிய மான கட்சிகளைக் கொண்ட ஓர் இடைக்கால அரசு ஏற்படுத்த அது திட்டமிட்டது. 1942 ஆம் வருட கிரிப்ஸ் திட்டம், 1940 ஆம் வருட ஆகஸ்டுத் திட்டம், 1935 ஆம் வருட கூட்டாட்சித் திட்டத்திற்கு மேலே இத்திட்டம் சிறிது சென்றது. ஆனல், திட்டத்தின் வரையறைகள் கண்களைக் கூசவைப்பதாயிருந்தன.

முதலாவதாக, குடியேற்ற நாட்டு அந்தஸ்து அல்லது சுதந் திரம் என்று பிற்காலத்தில் தேர்ந்து கொள்ளலாம் என்கிற அனு மான வாக்களிப்புக்கும், விதிவிலக்கு இல்லாமல் இந்திய அரசியல்

ஸ்தாபனங்கள் கோரிய உடனடி சுதந்திர அறிவிப்புக்கும் வெ( தூரம். பிரிட்டிஷ் தீர்ப்பாலும், பிற்போக்குத் திசையில் செல்லு நிபந்தனைகளாலும் தீர்மானிக்கப்பட்ட நடைமுறையும் உ ளூறுப்புகளும் கொண்ட பிரதிநிதித்துவம் இல்லாத ஒரு சபை யால் தீர்வு காணப்பட வேண்டியதாக சுதந்திரப் பிரச்னே ஆக்கப்பட்டு விட்டது என்பதே உண்மை.

இரண்டாவதாக, ஜனநாயகமுறைப்படி தேர்வு செய்யப்படு எந்த அரசியல் திட்டத்துக்கும் இன்றியமையாத அடிப்படை அதாவது வயது வந்தோருக்கு எல்லாம் வாக்குரிமை என்ற அடிப்படையில் தேர்தல்கள் நடத்தி உருவாக்கப்படும் ஒரு ஜன நாயக அரசியல் நிர்ணய சபை, பெயரளவில் அவசரம் என்ற காரணம் காட்டி மறுக்கப்பட்டது.

வகுப்பு வேற்றுமையை நிலேயாக்கியதால் அரசியல் நிர்ணய சபை அமைப்பு ஜனநாயகத்திற்கு மாறுனது; மக்கட் தொகை யில் 11 சதவீதத்தினருக்கே பிரிதிநிதிகளான வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட சபைகளால் அது மறைமுகமாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டதுமன்றி, சபையின் மொத்த உறுப்பினர் களில் நாலில் ஒரு பங்கான 93 பேர் அரசர்கள் நியமன உறுப் பினர்களாய்ச் சேர்த்துக் கொள்ளப்படுவர்.

மூன்ருவதாக, இந்தியாவில் மூன்றில் ஒரு பகுதியான அரசர்களின் பிரதேசத்தில் ஜனநாயகத்திற்கு எவ்வித விதி முறையும் வகுக்கப்படவில்லே. அரசியல் நிர்ணயசபைப் பிரதி நிதித்துவம் உட்பட எல்ல ஏற்பாடுகளும் அரசர்களின் தம்மிச்சை யான கலந்துரைகளுக்கு முற்றிலும் விடப்பட்டுள்ளன. சமஸ் தானங்கள் தொடப்படாமல் விடப்பட்டதும் அன்றி, முழுமை யான அதிகாரம் முடிவுக்கு வந்த பிறகு, இடைக்காலத்தில் அவர்களுடைய இசைவோடு ஓர் உடன்பாடு காணுவிட்டால், அவை சட்டபூர்வமாகவும் ராஜதந்திர ரீதியிலும் சுதந்திரமும் இறைமையும் வாய்ந்த தனி நாடுகள் ஆகிவிடும்.

நான்காவதாக, திட்டம் இந்தியாவை நான்கு மண்டலங் களாய்ப் பிரிவினே செய்தது—ஒன்று, ஹிந்து பெரும்பான்மை மண்டலம், இரண்டு முஸ்லீம் பெரும்பான்மை மண்டலங்கள், நான்காவது மண்டலம் அரசர்களின் சமஸ்தானங்கள். அந்தப் பிரதேசங்களில் வாழும் மக்களின் விருப்பங்களே இந்தப் பிரிவினே கள் சப்பந்தமாக யாதொரு ஏற்பாடும் செய்யப்படாமல், இந்தப் பிரிவினே முடிவு யதேச்சாதிகாரமான தீர்ப்பாக விதிக்கப்படு கிறது. இந்தப் பிரிவினே எவ்வித சுய நிர்ணயக் கொள்கைக்கும் உகந்தது அல்ல; அதன் விளேவாகத் தோன்றும் மூன்றடுக்கு

அமைப்பு மிகவும் தொல்லை தருவதாகவும், நடைமுறையில் ஒருகால் செயல்படுத்த முடியாததாகவுங்கூட இருக்கலாம்.

ஐந்தாவதாக, இந்தப் பிரிவினையின் காரணமாக மைய அரசு வலுவற்றதாகவும், வரையறுக்கப்பட்ட அதிகாரங்கள் வாய்ந்ததாகவும் ஆகிவிடும். குறிப்பாக, ஆக்கபூர்வமான ஜனநாயக முன்னேற்றத்திற்கும், பயனுள்ள பெருமளவு பொருளாதார மாற்றமைப்பிற்கும், சமூகத் தரங்களை உயர்த்துவதற்கும் தேவையான பொருளாதாரத் திட்டமிடுதல் அல்லது சமூக விதிகள் வகுத்தல் முதலிய பணிகளை அனைத்திந்திய அளவில் மேற்கொள்ளும் அதிகாரங்கள் அதற்கு இல்லை.

ஆறுவதாக, இடைக்காலத்தில் அதிகார மாற்றம் ஏதும் ஆலோசிக்கப்படவில்லை; பழைய அரசியல் சட்டமே நீடிக்கும்; இடைக்கால அரசு என்பது வைசிராயின் ஆட்சிக் குழு திருத்தி அமைக்கப்பட்டதாக இருப்பதோடு, தேவைப்பட்டால் ரத்து அதிகாரமும், மேல் அதிகாரமும் தொடர்ந்து நீடிக்கும்.

ஏழாவதாக, முடிவு தெரியாத இடைக்காலத்தில் ராணுவ நிறுத்தம் நீடிக்கும்; அதனால் புதிய அரசியல் வகுக்கும் பணி ராணுவ நிறுத்தத்தின் நீழலிலேயே நடைபெறும்.

எட்டவதாக, அரசியல் நிர்ணய சபை இறைமை வாய்ந்ததாக இராது. அதனால் தீட்டப்படும் அரசியல் சட்டம் பிரிட்டிஷார் ஏற்கும்வரை செல்லுபடி ஆகாது; பிரிட்டிஷாரின் ஏற்போ இரண்டு நிபந்தனைகளுக்கு உட்பட்டதாக இருக்கும்—சிறுபான்மையினருக்கு போதுமான பாதுகாப்பு புதிய அரசியல் திட்டத்தில் இருப்பதாய்ப் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களுக்குத் திருப்தி ஏற்பட வேண்டும், ஓர் இந்திய-பிரிட்டிஷ் உடன்படிக்கைக்கு அவர்களுடைய இசைவு வேண்டும்—இறைமை வழங்கப்படுவதற்கு முன் இந்த இரண்டு நிபந்தனைகளும் நிறைவேற்றப்பட வேண்டும்.

இந்தத் திட்டம் இந்தியாவிலுள்ள மேல் மட்டத் தலைமையினரோடு உடன்பாடு ஏற்படுத்தும் ஓர் அடிப்படையைக் காண்பதற்கான ஒரு முயற்சி என்பதில் ஐயமில்லை. அரசியல் திட்டக் கலந்துரைகள் நடைபெறுகையிலேயே பிரிட்டிஷ், இந்தியப் பெரு மூலதனங்களுக்கு இடையில் நெருக்கமான உறவுகள் ஏற்படுத்த சுறுசுறுப்பான முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன (பிர்லா-நப்பீல்டு, டாடா—ஐ. சி. ஐ. ஒப்பந்தங்கள் முதலியன)என்பதை ஆறும் அத்தியாயம் 8ஆம் பிரிவில் ஏற்கனவே கண்டோம்.

இந்த நேசவுறவு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட பிறகு முக்கியமான காரணம் இந்தியாவின் உள்நாட்டு நிலவரத்தை

மட்டும் பொறுத்தது அல்ல, அனைத்துலக நிலவரத்தையுட பொறுத்ததாகும். மேல்மட்டத் தலைமையினரோடு நேசவுறவு கொள்ளும் அடிப்படையிலும், அரசர்களுக்கு மிகுதியான பிற் போக்குச் செல்வாக்கு அளித்தும் இந்தியாவிலுள்ள நிலவரத்தை அப்படியே தேக்கி நிறுத்தி, அதிகமாகிவரும் மக்களின் சக்திகளைத் தடை செய்து பிரிட்டிஷ் நலன்களைக் காப்பது மட்டும் அல்ல இந்தியாவைப் போர் தந்திரத்துக்குகந்த தளமாகவும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் உலகக் கொள்கையில் இந்தியாவை நேச நாடாகவும் வைத்துக் கொள்ள வேண்டும் என்பதுதான். இந்தியா வில் கலந்துரை நடக்கையிலேயே பிரிட்டிஷ் உலகக் கொள்கை பிற்போக்கு முத்திரை பதிந்த, ஜனநாயக முறையற்ற, சோவியத் எதிர்ப்பு வாய்ந்ததாக அமைந்ததை நோக்குங்கால் இந்த அம்சம் மிகவும் கடுமையானது ஆகின்றது. சுதந்திரத்துக்கான பேச்சு வார்த்தை நடக்கும் போதே ராணுவ, போர்த்தந்திர ஆயத்த ஏற்பாடுகள் வலுப்படுத்தப்பட்டன. இந்திய ராணுவத்தைப் பத்து ஆண்டுகளில் இந்திய மயமாக்க வேண்டும் என்ற கோரிக் கைக்கு மையச் சட்டசபையில் மறுமொழி அளித்த தலைமைத் தளபதி, காலவரையறை ஒன்றும் குறிப்பிட முடியாது, இந்திய மயமாக்கும் பணி இருபது அல்லது அதற்கும் அதிகப்பட்ட ஆண்டுகள் ஆகலாம் என்றார். அமைச்சவைத் தூது கோஷ்டியின் கொள்கை அறிக்கை வெளியிடப்பட்ட உடனேயே பீல்டுமார்ஷல் மான்ட் கொமரி சிறப்பான ராணுவ தந்திர ஆலோசனைகளுக் காக இந்தியாவுக்குப் பறந்துபோனார். அமைச்சவைத் தூது கோஷ்டியின் திட்டத்தோடு வந்த கொள்கையின் அம்சங்கள் அப்போது நாட்டு மக்களின் கவனத்தை ஈர்க்கவில்லை என்றாலும், இந்தியாவின் எதிர்காலத்திற்குக் கடுமையான விளைவுகள் உண்டாக்கி இருக்கக் கூடியவை.

பொதுவான முடிவு தப்ப முடியாதது. 1946 ஆம் ஆண்டு அரசியல் திட்டம், இந்திய அரசியல் வாழ்க்கையிலுள்ள பல்வேறு சக்திகளைச் சமனப்படுத்துவதும் ஈடு செய்வதுமான பழைய முறையையே தொடர்ந்து கையாண்டு, காங்கிரசை முஸ்லீம் லீகுக்கு எதிராகச் சமனப்படுத்தி வகுப்புப் பகைமை மீதும், அரசர்களைப் பிற்போக்குச் சுழலச்சாய்க் கொண்டும் இந்தியாவில் ஓர் அரசியல் நிலவரத்தை உருவாக்கி இந்தியா வுக்கு விடுதலை அளிப்பதாய்ச் சொல்லப்படுவதை நடை முறையில் ரத்து செய்து, தங்கள் கையிலேயே இறுதியான அதிகாரத்தை நிறுத்தி வைத்துக் கொள்ளும் நோக்குடன் உருவாக்கப்பட்டது. நெருக்கடியானதும் நிச்சயமற்றதுமான இடைக்காலத்தில் பிரிட்டிஷ் அதிகாரம் நீடிக்கும், அதனால், உருவாக்கப்படும் அரசியல் திட்டத்தின் தன்மை முழுவதிலும்

அதன் ஆதிக்கம் நீடிக்கும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இன்னும் தன் அதிகாரத்தைத் துறக்கவில்லை, இந்திய மக்களிடம் அதிகார மாற்றம் செய்யவில்லை. மாறாக, தன் சாமர்த்தியத்தையும் மிக பழமையான அரசியல் அனுபவத்தையும் பயன்படுத்தி ஒரு விரிவான, தொல்லையான, அபாயகரமான ஒரு யந்திரத்தை ஏற்படுத்தி, இந்திய ''சுதந்திரம்'' என்ற முகப்பு அலங்காரத்தைக் காட்டிவிட்டு, உள்ளிருந்தவாறே தன்னுடைய முக்கியமான பொருளாதார, ராணுவதந்திர ஆதிக்கத்தைத் தொடர்ந்து இயக்கவும் நிலை நிறுத்தவுமே அது முயன்றது. அமைச்சவைத் தூது கோஷ்டி அறிவிப்பைத் தொடர்ந்து 1946 கோடையில் பேச்சுவார்த்தை நீண்டு வளர்ந்து நடக்கும்போது, இறுதியான இந்திய சுதந்திர விஜயம் எதிர்காலத்தில் நிறைவுபெறும் என இந்திய மக்கள் நன்கு உணரலானார்கள்.

## ஆறும் பாகம்

# முடிவுகள்

அத்தியாயம்-18. **எதிர்காலம்**

1. பிரிட்டிஷ் ஆட்சியின் இறுதி நாட்கள்
2. எத்தகைய சுதந்திர இந்தியா ?
3. புத்தமைப்பு, தொழில் மயமாக்கல், சோஷலிசம்
4. இந்திய நாட்டுக்கு முன்னுள்ள பணிகள்

## அத்தியாயம் 18

# எதிர்காலம்

''ஒரு நாட்டின் முன்னேற்றத்துக்கு எல்லைக் கோடிட எந்த மனிதனுக்கும் உரிமை இல்லை; தன் நாட்டினிடம், 'இவ்வளவு தூரம்தான் நீ செல்ல வேண்டும், இதற்குமேல் போகக் கூடாது', என்று உரைத்திட எந்த மனிதனுக்கும் ஓர் உரிமை இல்லை.''

—பார்னெல்.

ஒரு நூற்றாண்டுக்கு முன்னால், ''சிதைந்துவிட்ட ஒரு சமுதாயத்தைச் செப்பனிட்டுப் புதிதாய்க் கட்டும் ஒரு பெரிய, மகத்தான பணியில்'' இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி வர்க்கம் ஈடுபட்டுள்ளதாய் மெக்காலே மொழிந்தார். உண்மையில், அதே நேரத்தில் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி வர்க்கம் பழைய இந்திய சமுதாயத்தை முன்னிலும் மிகுதியாகச் சிதைவுபடுத்தி வந்தது என்பதையும், பல நூற்றாண்டுகளாய் இந்திய மக்கள் கடைப்பிடித்த வாழ்க்கை முறையின் பழைய அஸ்திவாரத்தை முற்றிலும் வெகு நறுவிசாகத் தகர்த்து வந்தது என்பதையும், இந்தியாவின் பழைய நிலைமையை அவர் வருணித்துக் காட்டிய ஒரே நடைச் சித்திரத்தின்படி, ''தற்காப்பற்ற சாம்ராஜ்யத்தின் மீது அலாரிக்குகளும் அட்டில்லாக்களும் விரைவாக அடுத்தடுத்துத் தாக்குதல் நடத்தியதை''விட பிரிட்டிஷ் ஆட்சி வர்க்கத்தின் நாசவேலை அதிகமானது என்பதையும் அவர் தம்காலத்தின் அமைதியுற்ற, எல்லாம் நன்மைக்கே என்னும் திட நம்பிக்கையின் காரணமாக, ஆனந்தமாக அறியாமல் இருந்தார்.[1]

1. 1833 ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 10 ஆம் நாள் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியால் ஏற்படும் நலநலன்களையும், கிழக்கு இந்தியக் கம்பெனியின் குணநலன்களையும் போற்றி ஆதரித்து மெக்காலே இந்தியா பற்றி நிகழ்த்திய புகழ்பெற்ற சொற்பொழிவின் நேர்த்தியான வாக்கு வன்மையினை முற்றிலும் பாராட்டுவதற்கு, எந்தச் சூழ்நிலையில் அவர் எவ்வாறு எழுதினார் என்பதைத் தெரிந்து கொள்வது அவசியம். 1833, ஆகஸ்டு 17 ஆம் நாள் மெக்காலே தம் சகோதரிக்கு எழுதினார்:

''நான் வாழ வேண்டும்; என் பேனாவினால்தான் நான் வாழ முடியும்; கண்ணியமாகப் பிழைப்பு நடத்தவும், அதே சமயம் அரசியலில் தீவிரமான பங்கு கொள்ளவும் போதுமான அளவு எழுத எந்த மனிதனாலும் முடியவே

இன்று காட்சி தலைகீழாக மாறி விட்டது. இன்று சிறை பெறுவது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம்; அண்மைக்காலப் பா அநுபவம், ஐரோப்பிய பண்பாட்டை மிதித்து நசிக்கிடும் ''அ ரிக்குகளும் அட்டிலலாக்களும் விரைவாக அடுத்தடுத்து''த் த குதல் செய்வார்களோ என்ற கிலியின் கீழ்வாழும் ''ஒரு சிதை விட்ட சமுதாய''க் காட்சியை நன்றாய்க் காட்டிவிட்டது.[1] ஏக பத்தியத்தையும், பாசிசத்தையும், பிற்போக்கையும் எதிர்த் விடுதலையை நோக்கி முன்னேறும் மக்களின் பேரணி முன்னே

முடியாது. என் பேனுவினுல் ஆண்டு ஒன்றுக்கு இரண்டு நூறுக்குமேல் ஞல் ஈட்ட முடிந்ததில்லை. ஐந்து நூறுக்குக் குறைவாக நான் வசதிய இருக்க முடியாது, மற்றும் பலரையும் நான் பெரும்பாலும் ஆதரிக்க வேல யிருக்கும். நம் குடும்பத்தின் எதிர்காலம் முன்னெப்போதையும் விட இ டைந்ததாக இருக்கக்கூடும்.''

இந்தியாவில் சட்ட உறுப்பினர் பதவி கிடைக்கும் என்ற அவருடைய பிக்கை பலிக்குமானுல்—அவர் அப்பதவியில் 1834 இல் நியமிக்கப்பட்டார்— முடைய பிரச்சினை தீர்ந்துவிடும் என்று அதே கடிதத்தில் அவர் விளக்கினுர்:

''ஆண்டு ஒன்றுக்குபத்தாயிரம் பவுன்கள் சம்பளம், கல்கத்தாவைப்ப மிக நன்றாய்த் தெரிந்தவர்களும், தாங்களே அந்த மாகாணத்தில் உயர் வட்டாரங்களில் பழகி உயர்ந்த பதவிகளை வகித்தவர்களும், வருடத் ஐயாயிரத்துக்குள் நான் அங்கு பகட்டாக வாழமுடியும் என்றும், சம்பளத் எஞ்சியதை, உரிய வட்டியோடு மிச்சமாகச் சேமித்து வைக்கலாம் என் கூறுகிறுர்கள். ஆகையால், முப்பத்தொன்பதாவது வயதிலேயே, வாழ்க் யின் முழு வீறும் இருக்கையிலேயே, முப்பதாயிரம் பவுன்கள் கொண் பெருஞ் செல்வத்தோடு நான் இங்கிலாந்துக்குத் திரும்ப முடியும். அ விடப் பெரிய செல்வத்துக்காக நான் ஒருகாலும் ஆசைப்பட்டதில்லை.''

ஏகாதிபத்தியத்தின் தன்மையையும் பூர்ஷ்வாக்களின் முழு வாழ்க்கைத் த வத்தையும் வெளிப்படுத்தும் இந்தச் சிறு குறிப்பை, இந்தப் புகழ்பெற்ற செ பொழிவின், இன்றும் இந்தியாவில் பிரிட்டிஷாரின் உன்னதமான நோக் களைப் புராணச் சிறப்புடன் வெளியிடுவதாய்ப் பாராட்டப்படும் இச் செ பொழிவின் ஒவ்வொரு மறு பதிப்பிலும் (குறிப்பாகப் பள்ளிப் பதிப்புகளில்) தலை குறிப்பாய்ச் சேர்க்க வேண்டும். அத்தலைக்குறிப்பு, பின் வரும் பகுதியில் உள்ள போல், வாக்குவன்மையின் முழுமணத்தையும் வெளிக்கொணர உதவும்:

''வலிய கவர்ச்சிகளுக்கு இடையில் உறுதியாய்க் காப்பாற்றப்படும் நே மைக்குச் சான்ருகத் திகழும் மேன்மைத்தங்கிய வறுமையை நான் ப வோடும் மகிழ்ச்சியோடும் நோக்குகிறேன். பத்துலட்சக்கணக்கான மக்க ஆண்டுவிட்டுத் தாயகம் திரும்பும் என் நாட்டு மக்கள் கண்ணியமான தகு யன்றி வேறென்றும் இன்றி வருவதைக்காண நான் மகிழ்கிறேன்.

1. பிரிட்டிஷ் ஆட்சியின் அருளாசி வருமுன்னர், பதினெட்டாம் நூற்ற டின் இந்திய வாழ்க்கையில் நிலவிய அராஜகத்தையும் பயங்கரங்களையும் உயர் வண்ணச் சித்திரமாக மெக்காலே தீட்டிக் காட்டினுர் அல்லவா? அதற்கு பு தாரமாக, 1914-18 இல் ஐரோப்பிய வாழ்க்கைப் பற்றின சர்ச்சிலின் வருணனை யைச் சூட்டலாம்:

''எல்லாம் முடிந்த பிறகு, நாகரிகம் வாய்ந்த விஞ்ஞான பூர்வமா கிறித்தவ நாடுகள் சித்திரவதை மனித இறைச்சி உணவு ஆகிய இரண்

கிறது; அந்த முன்னேற்றத்தில் தங்களுக்கு உரிய இடத்தை அடைய இந்திய மக்கள் விரைந்து கொண்டிருக்கிறார்கள்.

## 1. பிரிட்டிஷ் ஆட்சியின் இறுதி நாட்கள்

இந்தியாவின்மீது நிலையான யதேச்சாதிகார ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கலாம் என்ற பழைய நம்பிக்கைகள் மறைந்துவிட்டன. தவிர்க்க முடியாத புதிய உருவங்களுக்குப் பின்னால் மறைந்து கொண்டு ஏகாதிபத்தியச் சலுகை, சுரண்டல் ஆகியவற்றின் சாரத்தை மட்டும் காத்துக்கொள்ளுதற்கு இணக்கமான ஒரு செயல் முறையைக் கையாளுவது ஒன்றுதான் இப்போதுள்ள நிலைமைகளில் ஏகாதிபத்தியத்தின் உயர்ந்தபட்ச நம்பிக்கை. இந்த நோக்கத்தோடுதான் சென்ற அரை நூற்றாண்டுகாலம் அரசியல் சீர்திருத்தங்களைத் தொடர்ந்து பனிப்பாறை மழையெனப் பெரு விரைவுடன் பொழிந்து, அதைத் தொடர்ந்து, சில விதங்களில் வலுத்துவிட்ட அடக்குமுறைகளையும் பிரயோகம் செய்தார்கள்; 1946ஆம் வருடம் மகா உச்சகட்டமாகச் ''சுதந்திரம்'' அளிப்பதாய்ப் பெயரளவில் அறிக்கை இட்டார்களே, அதுவும் ஏகாதிபத்திய ஆட்சியின் முடிவு அல்ல, அரசியல் திட்ட இணக்க முயற்சிகளின் நீண்ட தொடரில் அது ஒருகால் இறுதியானதாக இருக்கும்.

வலதுசாரியின் பழைய விடாக் கண்டர்கள் இந்தியப் பிரச்னைக்கு எளிய தீர்வாக ''இரும்புக் குதிகால்'' முறையைக் கையாளுமாறு கொக்கரித்த காலம் மலையேறிவிட்டது; இப்போது, ''அந்தக் கறுப்பர்கள்'' (பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் முதல் இந்திய உறுப்பினரை சாலிஸ்பரிபிரபு அழைத்தபடி; தங்களுக்குரிய இடங்களில் வைக்கப்பட்டிருந்த ''பழைய நல்ல நாட்கள்'' திரும்பாவா என்று அவர்கள் பெருமூச்சு விடலாம், ''இழந்த குடியேற்ற நாடு'' பற்றி ஆவேசப் பிலாக்கணம் இயற்றலாம்.

மேற்குத் திசையின் பொருத்தமற்ற நிறுவனங்களை மாறுதலற்ற கிழக்குத்திசையின் நன்றி கெட்ட மண்ணுக்கு மாற்ற முயற்சி செய்யும், சீர்திருத்தக்கார பார்லிமெண்டரி அரசியல்வாதிகளின் ஆதரிச வாத ஆவேசத்தால்தான் ''இந்திய அரசுரிமை''யை இழக்க நேர்ந்தது என அவர்கள் இன்னும் நம்பலாம். (''வெல்லிங்டன் பிரபு ஒருமுறை சொன்னதாக நினைக்கிறேன்: 'எப்போதாவது நாம் இந்தியாவை இழந்தால், நமக்காக அதை

---

**அவசர வழிகளைத்தான் பின்பற்றுது மறுதளித்துக் கொள்ள முடிந்தது; அவ்விரண்டு வழிகளும் சந்தேகமான பயனுடையவை''—(வின்ஸ்டன் சர்ச்சில் ''உலக நெருக்கடி'', I, ப. 20).**

**இருபது ஆண்டுகளுக்குப் பிறகு சித்திரவதை நீக்கமும் நல்லதாக நீடிக்கவில்லை.**

இழந்தது பாராளுமன்றமாக இருக்கும்,''—கிரோமர் பிர
''பழைய, புதிய ஏகாதிபத்தியம்,'' ப. 126). ஆனால், பத்தொ
பதாவது நூற்றாண்டின் ஆதிக்கத்தை மீட்பதற்காக வன்முன
அடக்குமுறையை கையாளுவதை எளிதாக்கப் பெற்ற தீர்வு, நவீ
காலத்தில் பிரிட்டிஷ் பாசிஸத்தின் இளம்பிராயப் படைப்புகளி
தான் ஒரு வேலைத் திட்டமாக உருவாயிற்று.[1]

வன்முறை வழி மட்டும் போதாது, அதற்கு மேலும் மேலு
புதிய அரசியல் சூழ்ச்சிகளும் துணை நிற்கவேண்டும் என்பதை
பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் விடாக்கண்டர்களான அரசிய
வல்லுநர்கள் நீண்ட காலத்திற்கு முன்பே உணர்ந்து விட்டார்கள்

நாட்டின் கலகப் போக்குக்கு அரணாக இருக்கும் என்னு
வீண் ஆசையோடு இந்தியத் தேசீய காங்கிரசின் தொடக்கத்தை
தூண்டிவிட்டவர் தீவிரவாதி ரிப்பன் பிரபு அல்ல, ஆனால் லிபர
யூனியனிஸ்டும், அரசியல் திறப்பாட்டைத் தொழிலாய்
கொண்டவருமான டப்பரின் பிரபுதான். தேசீய இயக்கத்தி
உண்மை நிலவரத்தை நேரில் கண்ட டோரி மிண்டோ பிரபுதான்
தீவிரவாதி மார்லி பிரபு அல்ல, மார்லி பிரபுவோ அல்ல
லிபரல் கட்சி இங்கிலாந்து அரசோ ஏற்கவிரும்பியதைவிட அதி
மாக 1909 ஆம் வருடச் சீர்திருத்தங்களுக்கு மேலும் இட
சாரியாகச் செல்ல முற்பட்டார். ரஷ்யப் புரட்சியைத் தொடர்ந்

---

1. பிரிட்டிஷ் பாசிஸம், ''பாசிஸமும் இந்தியாவும்''என்ற தலைப்போடு ஒ
வேலைத் திட்ட அறிக்கையைப் படைத்துள்ளது; அதனுடைய அரசிய
கல்விச் சூனியத்திற்கு ஈடாக அதனுடைய அடிப்படை உண்மைகளின் ஞான
சூனியத்தைதான் கூற முடியும்; அதனுடைய தவறுதல் அற்ற மருத்துவமுறை
இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி விரைவில் அழிந்தொழிய உதவும். ''கிழக்கத்
மூளைக்கு'' நன்கு புரியும்படி பாசிஸ்டு வீரசிகாமணிகள் உறுதியானதோ
அறிவிப்போடுதான் தொடங்குவார்கள்: ''அண்மையிலோ சேய்மையிலோ, பிரிட
டிஷ் ஆதிக்கத்தில் எவ்வகைக் குறைவும் ஏற்படும் சாத்தியமே இல்லை!'' –
என்பார்கள்; அரசியல் சீர்திருத்தங்களைப் பறித்து எறிவார்கள்; ''இறுதி அதிகார'
மாகப் ''பெரிய ஜமீன்தார்களுக்கு'' ஆதரவு தருவார்கள்; தொழில் துறை வளர்
சியைத் தடுப்பார்கள்.

(''இந்தியாவின் எதிர்காலம் விவசாயத்தைப் பொறுத்தது''); புதிய கல்வ
முறைக்குத் தடைவிதிப்பார்கள் (''பொதுவாக, இந்தியனுக்கு மேலை நாட்டு
கல்வி கூடாது.'') இவ்வாறு இந்தியாவை பலாத்காரத்துக்கு உட்படுத்தக்கூடிய
ஏராளமான சக்தியின் துணையால் பத்தொன்பதாம் நூற்றாண்டின் சொர்க்கப்
மீண்டும் படைக்கப்படும். ''இரண்டு நாடுகளுக்கும் இடையில் நாம் வர்த்தக சம
நிலை உண்டாக்குவோம்; கிரேட் பிரிட்டனிலிருந்து யந்திர உற்பத்திப்பொருள்கள்
இந்தியாவிலிருந்து மூலப்பொருள்களும் உணவுப் பொருள்களும்'' (மாஸ்லி, ''பாசி
சமும் பருத்தியும்'', 1934), ''ஒரு பாசிஸ்டு அரசாங்கத்தின் கீழ் இந்தியா முதலீடு
செய்வதற்கு மிகப் பொருத்தமான இடமாயிருக்கும்.'' ஏகாதிபத்தியத்தின்
சாமர்த்தியமற்ற வேட்கைகள் பொறுப்பற்ற முறையில் இதில் வெளியிடப்படு
கின்றன,

எழுந்த புரட்சி அலையைச் சமாளிப்பதற்கு ஒரே வழியாக, 1917 இல் பொறுப்பாட்சி வழங்குவதாய் உறுதி கூறிய அரசாங்க அறிக்கையை உருவாக்கியவர் லிபரல் மாண்டேகு அல்ல, அதிமித வாதிகளான கர்சன் பிரபுவும் ஆஸ்டென் சேம்பர்லினும்தாம்; அது போன்றே, செயல்படுத்த முடியாத அற்புதமான ''இரட்டை ஆட்சித் திட்டத்தை''ச் செயல்படுத்தும்படி தயாரித்துக் கொடுத்தவர் 'வட்டமேஜை'க் குழுவைச் சேர்ந்த மில்னர் சிறுர் பள்ளியின் தோன்றல்தான். 1935 ஆம் ஆண்டு இந்திய அரசுத் திட்டத்தையும் கூட்டாட்சி அரசியல் திட்டத்தையும் விரிவுபடுத்தியவை தொழிற்கட்சி அரசுகள் இரண்டில் ஒன்று கூட அல்ல, ஆனல் மிதவாதக் கட்சியின் பால்டுவின் அரசுதான்.

இவ்வாறு, இந்த நவீன காலம் நெடுகிலும் இந்தியாவில் மேற்கொள்ளப்பட்ட ஒவ்வொரு அரசியல் திட்டச் ''சீர்திருத்தமும்'' மிதவாதக் கட்சியின் தூண்டுதலிலும் தலைமையிலும் நடந்துள்ளதைக் காணலாம், சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்கிற ஆசைப்பற்றி அவர்கள் அவ்வாறு செய்து விடவில்லை, தேசீய விடுதலை இயக்க வெள்ளப் போக்குக்கு ஓர் அணைக்கட்டு எழுப்ப வேண்டும் என்கிற துணிச்சலான நம்பிக்கையால்தான் அவ்வாறு செய்தார்கள். தொழிற் கட்சி அரசின் 1946 ஆம் வருட அரசியல் திட்டம் கூட, அமெரியை ராஜ்யக் காரியதரிசியாய்க் கொண்ட டோரி ஆதிக்கமுள்ள அமைச்சவையின் கீழ் உருவான 1941 ஆம் திட்டத்தின் பொதுவான வழிகளையே பின்பற்றி மாற்றம் செய்யப்பட்டிருந்தது என்பதையும் இங்கு குறிப்பிடலாம்.

ஒன்றன் பின் ஒன்ருக இப்படி அணைகள் கட்டுவதாலும், மாற்ற நிலைகளும் தற்காலிகமான சமாதானத் தீர்வுகளுமான நீண்ட தொடர் முயற்சிகளாலும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத் தலைவர்கள் தங்கள் பின்னணி நடவடிக்கை வெற்றி பெறும் என நம்பி இருந்தார்கள். இணக்கச் செயல்முறையை அவர்கள் பயன் படுத்திக் கொள்வதற்காக அரும்பாடு பட்டு வந்துள்ளனர்; இந்தியாவில் தங்கள் சுரண்டல் முறையின் சக்தி வாய்ந்த பொருளாதார, நிதிநலன்களையும் இந்தியாவில் தங்கள் போர்த்தந்திர ஆதிக்கத்தையும் நீடித்துக்காக்கவும், மக்களை ஒழுங்கு குலையாமல் கவனித்துக் கொள்ளும் பொறுப்பைப் படிப்படியாக இந்தியர்களிடமே ஒப்படைத்து விட்டு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தோடுள்ள கூட்டுறவை நிலைநிறுத்திக் கொள்ளவும் இப்போது கூட அம்முறையைக் கடைப்பிடிக்க முயலுகிருர்கள்.

ஆனல், அவர்கள் அதைச் செய்ய முடியுமா?

முற்றிலும் தீர்ந்துவிட்ட விவகாரம் என்றும், இந்தியா ஏகாதிபத்திய ஆட்சி அஸ்தமித்து விட்டது என்று கருது பெரிய தவருகும். பிரிட்டிஷ் ஆட்சியின் தேர்ந்த ராஜதந் ஆதரவாளர்கள் இப்போது பிரிவு உபசார அறிக்கைகள் வெளி வதை வழக்கம் ஆக்கிக் கொண்டுள்ளனர்; அதைக்கொ ஏகாதிபத்தியம் ஒரு போராட்டமும் இன்றிப் பதவியைத் துற விடப் போவதாகவும், இந்தியாவில் அது ஹரா-கிரி (ஜப்பான மொழி: தற்கொலே என்று பொருள்) செய்து கொள்ள முனை விட்டதாகவும் என்று கற்பனை செய்வதைவிடப் பெரிய பிர வேறென்றும் இருக்க முடியாது.

இந்தியாவில் தொடர்ந்து ஆதிக்கம் செலுத்துவதுதா பிரிட்டிஷ் பூர்ஷ்வாக்களின் நலனுக்கு உகந்தது என்பது நீண் காலமாய் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். ஏகாதிபத்தி சரிந்து வரும் நிலையில், பழைய உலக ஏகபோக உரிமை மு நொறுங்கி உலகச் சந்தையில் பிரிட்டிஷ் தொழில்களின் பிடிட் வலுவிழந்து வருகையில், வெள்ளைக் குடியேற்ற நாடுகள் மே மேலும் சுதந்திரமான பொருளாதார, அரசியல் முறைகளைப் பி பற்றுகையில், காலனி சாம்ராஜ்யத்தையும் இந்தியாவின் மீதுள் ஏகபோகப் பிடியையும் பிரிட்டிஷ் ஆட்சி வர்க்கம் காத்து கொள்வது மட்டும் அல்ல, விரிவாக்க வேண்டிய அவசிய குறைந்து விடவில்லை, அதிகம்தான் ஆகியுள்ளது. இந்தியாவி பிரிட்டிஷ் ஏகாதிபத்திய நலனின் சமாதானப்படுத்த முடியாத மிக உக்கிரமான பேச்சாளராக இந்தக் காலகட்டம் நெடுகிலு விளங்கிய சர்ச்சில் 1933 இல் இதைத் தெளிவுபட உரைத்தார்

> ''பிரிட்டனின் நல்வாழ்வுக்கு இந்தியா ஜீவ நாடியானது நம் மக்களைப் பெரிதும் காத்துவரும் சக்திகள் படிப்படியாக குன்றி வருவதைக் காண நான் கவலைப்படாமல் இருக்க முடியவில்லை. அயல்நாட்டு முதலீடுகள் மெதுவாய்ச் சுருங்கு கின்றன, கப்பல் தொழிலோ தாழ்நிலையில் இருக்கின்றது இவற்ருேடு, ஏதாவது ஒருவகையில் நாம் இந்தியாவையும் இழந்து விட்டால், நாம் இதுவரை கண்டுள்ள பிரச்னைகளோடு ஒப்பிட முடியாத அளவு கடுமையான பிரச்னைகள் இங்கே தோன்றும். அரசிஞல் பயனுள்ள முறையில் பராமரிக்க முடி யாத அளவு ஓர் அதிகப்படி மக்கட் தொகை இங்கே இருக்கும்.''
>
> (வின்ஸ்டன் சர்ச்சில், 1933, ஜூலை 8 இல் எப்பிங்கில் சொற்பொழிவு செய்தது.)

இந்தியாவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய நலன்களை விலங்குத் தன்மையாக வலியுறுத்தும் இந்தப் பழைய கொள்கையினர்,

சீர்திருத்தங்களும் சலுகைகளும் வழங்கப்பட்ட காலகட்டம் நெடுகிலும் சக்தி வாய்ந்தவர்களாய் விளங்கினுர்கள். அமிர்தசர் நிகழ்ச்சியின் போது பஞ்சாபில் லெப்டினென்ட் கவர்னராக இருந்த சர் மைக்கேல் ஓ'டயர் கரவின்றி வெளிப்படையாகப் பேசினதைப் போன்ற பழக்கமான பேச்சுக்களை மீண்டும் இங்கே குறிப்பிடத் தேவை இல்லை: ''நம்முடைய அரசாங்க அந்தஸ்துக்கு, இந்தியாவிலுள்ள நம்மின மக்களுக்கு, இந்தியாவில் முதலீடு செய்யப் பட்டுள்ள கோடிக்கணக்கான மூலதனத்துக்கு நம் கடமை'' என்றுன் அவன் (ஆசிரியர்கள் சங்கத்தில் பேசியது; 1925, மார்ச் 12 மான்செஸ்டர் கார்டியனில் ஒலிவியர் பிரபு வினுல் மேற்கோள் காட்டப்பட்டது). அல்லது 1930, மே 16 இல் ரோதர் மியர் பிரபு டெயிலி மெயிலில் எழுதினுரே: ''பிரிட்டனின் உயிர் நாடியான வர்த்தகம், பாங்குத் தொழில், கப்பல் தொழில்களில் நேர்முகமாய் இந்தியத் தொடர்பை நம்பியுள்ள அளவு 20 சதவீதம் என்று பல நிபுணர் கள் மதிப்பீடு செய்கிறுர்கள்.......இந்தியா பிரிட்டிஷ் சாம் ராஜ்யத்தின் கடையாணி......நாம் இந்தியாவை இழந்தால், சாம்ராஜ்யம் சரிந்துவிடும்—முதலில் பொருளாதார முறையில், அப்புறம் அரசியல் முறையில்''—இதையும் கூறத் தேவை இல்லை.

எல்லா ராஜதந்திர பாஷையிலும், மழுப்பலான, பல பொருள் தரக்கூடிய வாக்குறுதிகளும், மன இசைவில்லாத சலுகைகளிலும் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தை நிலைநிறுத்த வேண்டும் என்கிற மைய நோக்கத்தைக் காணலாம், தீர்மானமான ஒவ்வோர் அறிக்கையிலும் அது வெளிப்பட்டது. 1922, ஆகஸ்டில் லாயிட் ஜார்ஜ் ஆற்றிய ''உருக்குச் சட்ட''ச் சொற்பொழிவின் பொருள் இதுதான்: ''பிரிட்டன் எந்த நிலைமையிலும் இந்தியா விலுள்ள தன் பொறுப்பைக் கைவிடாது''; ''பிரிட்டிஷ் ஆட்சி யாளர்களின் வழி காட்டித் துணையை இந்தியா கைவிடுகிற'' ஒரு காலத்தை அவரால் காணவே முடியவில்லை. ''சுமாராக எந்தக் காலத்தில், எந்த நாளில், இந்தியா குடியேற்ற நாட்டு அந்தஸ்து அடையுமென நாம் கருதுவதற்கு இயலும் என்பதை எந்த புத்தி சுவாதீனம் உள்ள மனிதனும் குறிப்பிட மாட்டான்,'' என்று 1929 இல் பர்க்கெட்ஹெட் விடுத்த எச்சரிக்கையின் பொருள் இதுதான். ''இந்திய வாழ்க்கையையும் வளர்ச்சியையும், பயனுள்ள முறையில் ஆளுகின்ற பொறுப்பைக் கைவிடும் எண்ணம் பிரிட்டிஷ் நாட்டுக்கு இல்லை,'' என்று 1930 இல் சர்ச்சில் விடுத்த எச்சரிக் கையின் பொருள் இதுதான். ''கிரேட் பிரிட்டனையும் இந்தியா வையும் இணைக்கும் பந்தங்களை வலுவற்றதாக்குவதைப் பற்றிச் சிந்திப்பது ஒருபுறம் இருக்க, முன்பு வேறெப்போதும் இருந்ததை விட நெருக்கமான இணைப்பையே உருவாக்க நாம் விரும்பு

கும்'' என்று 1935 ஆம் வருட அரசியல் திட்டத்தி நோக்கத்தை அதிகார பூர்வமாகப் பால்டுவின் விளக்கம் தந்தத பொருள் இதுதான்.

மிகவும் அண்மைக்காலத்தில் பாஷை மாறிவிட்டது. மு யேற்ற நாட்டு அந்தஸ்து என்ற நிச்சயமற்ற லட்சியத்தை ஒ நீண்ட தொடர்ப்படிகளின் வாயிலாக அடைவதுபற்றி அதிகா பூர்வமான அறிக்கைகள் பேசுவதில்லை. மாறாக, இந்தியாவி பிரிட்டிஷாரின் அதிகாரத் துறப்பு முழுமையானது, இந்திய வுக்கு இறுதியாக ''முழு சுதந்திரம்'' அளிக்கப்படும் என்ே இப்போது அதிகார பூர்வமான அறிக்கைகள் வலியுறுத்துகின்றன ஆயினும், 1946 ஆம் வருட அரசியல் திட்டத்தைச் சென் அத்தியாயத்தில் பரிசீலனை செய்ததிலிருந்து, உண்மையில் இந்த திட்டம் இந்திய சுதந்திரத்துக்கு ஈடானது என்று எவ்விதத்திலு கருத முடியாதென உறுதிப்படுகிறது.

ஏகாதிபத்தியச் சரண்டல் முறைகள் சற்றும் முடிக்கப்படா போதே, ''ஏகாதிபத்தியத்தை முடிவுக்குக் கொண்டு வருவ பற்றியும், ''சுதந்திரம்'' பற்றியும் சரமாரியாகப் பேசுகி முறையில் ஏகாதிபத்தியத்தின் கொள்கையும் பிரசாரமும் மாற தல் கொண்டதை நாம் எவ்வாறு அறுதியிடுவது? இந்த வின விற்கு விடை தருதற்கு, நவீன ஏகாதிபத்திய வளர்ச்சிமீது இன்னும் விசாலமான நோக்கு செலுத்தி, நம் பார்வையை இந்தி யாவில் விரித்திட வேண்டும். மிக அண்மைக் காலத்தில் ஏகாதிபத்தியக் கொள்கையில் ஒருபுதிய உத்தி கண்டுபிடிக்கப்பட்டு விரிவாக்கப்பட்டு, மேலும் மேலும் மிகுதியாகப் பயன்படுத்தப் பட்டும் வருகிறது: இந்த உத்தியைப் ''பெயரளவு சுதந்திர உத்தி'' எனலாம். இக் கொள்கை புதிதல்ல; உண்மையில், இந்தி யாவில், பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் தொடக்கக் காலத்துக்கு உரித் தாயிருந்த பழைய கொள்கையின் மறைமுகமான விதியின் தொடர்ச்சியே அது; ஆனால், நவீன காலத்தில் அது மேலும் விரிவும் பரப்பும் பெற்றுள்ளது—தேசிய விடுதலை இயக்கத்தின் முன்னேற்றத்தைத் தடை செய்வதற்கு.

1922 இல் எகிப்து விஷயத்தில் புராண வடிவத்தில் இந்த உத்தி வெளிப்பட்டது. 1922, பிப்ரவரி 28 ஆம் நாள் வெளி யிடப்பெற்ற ஒரு பிரிட்டிஷ் கொள்கை அறிக்கைப்படி எகிப்து சுதந்திரம் பெற்றுவிட்டதாய் அறிவிக்கப்பட்டதை நாம் நினைவு படுத்திக் கொள்ள வேண்டும். ஆனால், சில பொருள்கள் மன்னர் பிரான் அரசின் முழுத் தீர்ப்புரிமையின்கீழ் இருக்கும் என்றும், அவற்றின் ஒழுங்குமுறை பற்றிப் பிரிட்டனுக்கும் எகிப்திய அரசாங்கத்திற்கும் இடையில் கலந்துரை நடைபெற்று ஓர் உடன்

படிக்கை ஏற்படும் வரை அவ்வாறு இருக்கும் என்றும் அறிக்கை உரைத்தது. இந்தச் சிறப்புப் பொருள்கள் கீழே உள்ளன:

1) எகிப்தில் ஏகாதிபத்தியப் போக்குவரத்துகளுக்குப் பாதுகாப்பு;

2) எகிப்தின் தற்காப்பு;

3) எகிப்திலுள்ள வெளிநாட்டு நலன்களுக்கும் சிறுபான்மையினருக்கும் பாதுகாப்பு;

4) சூடான்;

5) வெளி நாடுகளுடன் எகிப்தின் தொடர்புகள்.

எகிப்து தேசீய இயக்கம் இந்த நிபந்தனைகளை நிராகரித்தது. ஆயினும், எகிப்து சுதந்திரநாடு என அறிவிக்கப்பட்டது; புவாத் அரசராக நியமிக்கப்பட்டார்; ஏற்றதொரு பிரதம மந்திரியும் கண்டுபிடிக்கப்பட்டார். 1923 ஆகஸ்டு வரை பிரிட்டிஷ் ராணுவச் சட்டம் அமுலில் இருந்தது. இவ்விதமாக எகிப்து சுதந்திரம் பெற்றது.

இருபத்துநான்கு ஆண்டுகளுக்குப் பிறகு 1946 இலும் பிரிட்டிஷ் துருப்புகளை வாபஸ் பெறுவது பற்றின தீர்வுகாணாத பிரச்னையித்து பிரிட்டிஷ் அரசுக்கும் எகிப்திய அரசுக்கும் இடையில் இன்னும் பேச்சுவார்த்தைகள் நடந்து கொண்டிருந்தன. அதற்கு அப்பால், இந்தப் புதிய ஏகாதிபத்திய ''சுதந்திர'' உத்தி மேலும் விரிவாகவும் பரவலாகவும் ஆக்கப்பட்டுள்ளது— ஈராக்கிலும் வேறிடங்களிலும் நடந்ததுபோல.

எனவே, இந்தியாவில் கையாளப்படுவதற்கு இந்த முறை முன்பே நன்கு சோதிக்கப்பட்டுத் தேர்ந்த முறை. பெயருக்குச் ''சுதந்திரம்'' தரும் இந்த உத்தி இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கைக்கு ஈடாகாது என்பது தெளிவு. ஏகாதிபத்தியம் இன்னும் தன்பிடியைத் தளர்த்தவில்லை. போராட்டம் இன்னும் எதிரில் இருக்கிறது.

ஆனல், ஏகாதிபத்திய ஆட்சியாளர்கள் தங்கள் பிடிப்பை இப்படியே வைத்துக்கொள்ள முடியுமா? அது வேறு கேள்வி. இந்தியாவில் தலைபோகிற வேகத்தில் இப்போது உருவாகி வருகின்றனவே, மாறுதல் வேண்டுகிற சக்திகள், அவற்றை அவர்களால் அடக்க முடியுமா? திரண்டு வரும் இந்திய விடுதலை இயக்கத்தைத் தடைசெய்யத் தங்களுக்கு ஆதரவு தரக்கூடிய புதிய சக்திகளையும் சமூக அடிப்படையையும் அவர்கள் கண்டு மாறுதலின் செயல் முறைகளை ஏகாதிபத்தியத்தின் சுரண்டல் முறைகளின் நோக்கத்துக்காகப் பயன்படுத்திக் கொள்ள

அவர்களால் முடியுமா? பெரிதும் சிக்கலான செயல்முறைகளுக்கு
மாறுபடும் உறவுகளுக்கும் பகிரங்கப் பதிவேடுகளேயா
அரசியல் சீர்திருத்தங்களின் ஒளிவெள்ள மடையைப் பற்றி
கேள்வியைவிட இந்தக் கேள்வியின் பதில் இந்தியாவில் ஏகா
பத்தியத்தின் எதிர்காலத்தைப் பற்றின கேள்வியின் பதிலை
பொறுத்ததாகும்.

ஏனெனில், உண்மையில் பழைய இந்தியா மறைந்துவிட்டது இனி திரும்பாது. சென்ற ஒன்றரை நூற்றுண்டுக் காலமாக முதலாளித்துவ ஊடுருவல் என்னும் இரக்கமற்ற அலைகளா பழைய சமுதாய முறையின் அஸ்திவாரம் அழிவுண்டதா தோன்றிய வலிய மாறுதல் சக்திகள் இப்போது இயக்கிவிட்டுள்ள செயல்போக்கை இனி தடை செய்ய முடியாது. பழைய அஸ்தி வாரங்களின் அழிவோடு, மெதுவாக, ஆனால் தவிர்க்க முடியாத வகையில் பழைய கண்ணேட்டங்களும், சமூக மிதவாதத்தின் நம்பிக்கைகளும், பழைய சமய ஈடுபாடுகளும் தடைகளும் பொடித்துப் பாழாகின்றன.

ஜாம்ஷெட்பூர் உருக்குப் பட்டறையில், அல்லது பம்பாய் ஸ்டாக் எக்ஸ்சேஞ்சில் சாதிக்கு என்ன வேலை? நிலங்கள் பறிக்கப் பெற்று, இப்போது கிராம மக்கட்தொகையில் மூன்றில் ஒரு பகுதி யாக இருக்கிற, மேலும் அதிகமாகிற கிராமப் பாட்டாளி வர்க்கத் தாருக்கு இடையில் கூட்டுக் குடும்ப முறைக்கு என்ன பங்குதான் இருக்க முடியும்? மலிவான பிரிட்டிஷ் அல்லது ஜப்பானிய யந்திரப் பொருள்களின் வெள்ளம் லட்சக்கணக்கான கைத்தொழிலாளர் களை மெல்லப் பட்டினியால் சாகவிட்டது அல்லவா, அந்தக் கொடுமைக்குச் சற்றும் குறையாத முறையில், மரபு, அந்தஸ்து மீது கட்டப்பட்டுள்ள சமூக நிறுவனங்களின் கட்டுக்கோப்பை, பூர்ஷ்வா உடைமை உறவுகள் என்னும் அரிக்கும் அமிலம் கரைத்து வருகிறது.

இந்தியா இன்றும் காலத்துக்கு ஒவ்வாத வழுக்கள் உள்ள நாடு; மோட்டார் கார்களுக்கும் மின்தந்திக்கும், கம்பி இல்லாத் தந்திக்கும் இடையில் நிலப்பிரபுத்துவ அல்லது அரைகுறை நிலப்பிரபுத்துவ எச்சங்களும், ஒழுங்கீனமான அரசர் பரம்பரை களும், கட்டாய உழைப்பு முறையும், பண்ணையாள் முறையும்; நவீன குடிசைக் குடியிருப்புகளுக்கு அண்டையில் காலம் கால மாய்க் கொண்டாடப்படும் பலி உற்சவங்கள் உள்ள ஆலயங்கள். அஸ்திவாரம் மறைந்த பிறகு மேல் கட்டிடத்தின் ஆவிமட்டும் இன்னும் நீடிக்கிறது. உள்ளிருந்து சமூக சக்திகளைப் புதுக்கு வதற்குப் பதிலாகத் தன்னுடைய சொந்தச் சுரண்டல் முறையை மேலே எழுப்ப வேண்டும் என்கிற ஒரே நோக்குடன் ஏகாதி பத்தியத்தின் செத்தகரம் முழுக் கட்டுக்கோப்பையும் நிறுத்தி

வைக்கப்பட்ட உயிர்ப்பு நிலையில், தடை செய்யப்பட்ட வளர்ச்சி நிலையில் பற்றியுள்ளது.

ஆனால், இருபதாம் நூற்றாண்டு ரஷ்யாவில் பழைய ஜார் ஆட்சியின்கீழ் இருந்தது போலவே, எஞ்சியிருப்பது மேல் ஓடு மட்டுமே, கைபட்டால் பொடியாகிவிடும். ஏகாதிபத்தியத்தின் சிதைவுக் காலத்தைச் சேர்ந்த கற்பனை மிக்க அறிவாளிகள் நவநாகரிகத்தின் முன்னேற்றத்தினால் தங்களுக்கு ஏற்பட்ட துயரங்களுக்கு ஆறுதல் பெறுவதற்காக புனித ரஷ்யாவின் ஆபாசமான பன்றிக் கொட்டில்களைக் கற்பனையால் காண்கிறார்கள், அங்கு நிரந்தரமான ஆன்மீக மதிப்பீடுகளின் ஆலயத்தையும், நவீன ஜனநாயக, சோஷலிசக் கருத்துக்கள் அணுகவும் முடியாத, தாழ்ந்த, பணிவுள்ள குடியானவர்களின் கற்பனைச் சமுதாயத்தைக் காண்கிறார்கள்; அவர்கள் வாழ்க்கையின் அளவற்ற சக்தியையும், அவர்களுடைய பொய்க் கற்பனையைச் சிதைக்கப் போகும் மெய்யான பொது மக்களின் விழிப்பையும் கண்டு கொள்ளாத கபோதிகளாய் ஒரு மாமிச பிண்டத்தைத்தான் வழிபட்டுக் கொண்டிருந்தார்கள். அது போலவே, இன்று கூர்த்த மதி நலம் படைத்த மேலை நாட்டு யாத்திரீகன் நினைவுக்கும் எட்டாத பழமை வாய்ந்த கீழை நாடான இந்தியாவைப் பார்க்கப் போகிறான்; அவன் போவது, கீழை நாட்டு ஆன்மீக உயர்ஞான வோடையின் சேற்று நீரைப் பருகவோ, அல்லது, ''இந்தியத் தாயின் உள்ளார்ந்த பிற்போக்குத் தன்மையை ஆதரவாளன் போல் ஏளனம் புரிவதற்கோ; அவன் காண்பது என்னவோ இடைக்காலத்துக் கழிபொருள்களின் காட்சி நிலையத்தைத்தான்; இந்திய மக்களின் ஜீவசக்தி அவன் கண்களுக்குத் தென்படுவதில்லை.

இந்திய மக்களின் முன்னேற்ற சக்திகள் சாதியை எதிர்த்தும், கல்வியின்மையை எதிர்த்தும், தீண்டாமை தாழ்வை எதிர்த்தும், வகுப்பு வேற்றுமைகளை எதிர்த்தும், பெண்மணிகளின் அடிமைத் தனத்தை எதிர்த்தும், மக்களைப் பின் தள்ளும் எல்லாவற்றையும் எதிர்த்தும் போராட்டம் நடத்தத் தலைப்பட்டுள்ளன. பழமையான ஹிந்து நாகரிகத்தையும், அதன் மாறுதலற்ற தன்மைகளையும் பற்றிப் புலமைமிக்க சொற்பொழிவுகள் நிகழ்த்தப்படுகையில், மக்களில் மிகப் பெரும்பாலோரின் ஐயமற்ற ஆதரவைப் பெற்ற இந்திய தேசிய இயக்கத்தின் முதன்மையான ஸ்தாபனம் தன்னுடைய மாவட்டங்களிலேயே, சாதி, மத, பால் வேற்றுமை இன்றி எல்லாருக்கும் சமக் குடிமை உரிமை, எல்லாச் சிறப்புச் சலுகைகளையும் பட்டங்களையும் ஒழித்தல், வயதுவந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை, எல்லாருக்கும் கட்டாய இலவசச்

கல்வி, சமய சம்பந்தமாய் அரசு நடுநிலைமை, பேச்சு, செய்தி, மனச்சாட்சி, கூட்டம், நிறுவனம் ஆகியவற்றுக்குச் சுதந்திரம் ஆகியவை அடங்கிய ஒரு முழு ஜனநாயக வேலைத்திட்டத்தை— பிரிட்டனின் அரைகுறை ஜனநாயகத்தைவிட எவ்வளவோ முற்போக்கான வேலைத்திட்டத்தைப் பொறித்து விட்டது.

1936 இன் பிற்பாதியில் தாராளக் கொள்கையுடைய மான்செஸ்டர் கார்டியனில் ''இந்தியாவில் கொந்தளிப்பு'' என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை வெளிவந்தது; அக்கட்டுரை, ''அரசியல் தேசீயத்தின் பழைய கருத்தாளர்கள் கனவு கண்ட எதனையும் விட மிக முக்கியமான ஒரு புரட்சியின் தொடக்கக் கதிர்கள்'' இருப்பதை ஏற்க வேண்டியதாயிற்று:

> ''போர் நிறுத்தம் ஏற்பட்டுப் பதினெட்டு ஆண்டுகள் கழித்து, இந்தியா உலக சக்திகளினால் பாதிக்கப்படாமல் பழைய நிலையான சமநிலைக்கு ஒருகாலும் திரும்ப முடியாது என்று நாம் உணருகிறோம்......பிரிட்டிஷ் ஆட்சியின் மிதவாதம் நீண்ட நெடுங்காலமாயுள்ள தீய பழக்கங்களுக்கு ஆதரவு தந்தது. வாக்கு வேட்டையாடும் காட்சிகள் வாயிலாகவும், வாக்கு அதிகாரத்தை தாங்கும் வலிய கரங்கள் வாயிலாகவும் செயல்படும் ஜனநாயகத்தின் புதுமை உணர்ச்சி, பகுத்தறிவாலோ, வலிமையாலோ, துணிவாலோ ஆதரிக்கப்படாத் பண்டைச் சலுகைகளைத் தீர்த்துக் கட்டுவதுப் பொருத்தமே. சாதிச் சலுகைகளுக்காகப் போராடியவர்கள் ஏற்கனவே பின் வாங்கிக் கொண்டிருக்கிறார்கள், இந்தப் பின் வாங்கலே முழுத் தோல்வி ஆகலாம் எனத் தோன்றுகிறது.....தீண்டாமையே சாடப்படுகிறது எனில், சாதிப் பாகுபாடுகள் எஞ்சுமா? ஹிந்து மதத்தின் வலிமை சட்ட மன்றங்களிலோ, ஆலயங்களிலோ இல்லை, ஆனால் இல்லத்தில்தான் இருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை. ஆயினும், பெண் கல்விவாயிலாக புதுமைப்படுத்தும் உணர்ச்சி இல்லத்தில்தான் செயல்படுகிறது. சாதி முறைக்கு முக்கிய அரணான ஹிந்து கூட்டுக் குடும்ப முறை, பெண் கல்வியாலும், போக்குவரத்து வசதிகளாலும், வெளியுலகத் தொடர்பாலும் தகர்க்கப்படுகிறது.''

(மான்செஸ்டர் கார்டியன் வீக்லி, டிசம்பர் 4, 1936.)

சமூகத் துறையிலும் சரி, அரசியல் துறையிலும் சரி, இவ்வாறு ஜனநாயக அலை முன்னேறி வருகிறது. அதுபோலவே ஐயத்துக்கு இடமில்லாமல், அடிப்படைப் பிரச்னையான ''இந்தியாவின் வறுமை''க்குத் தீர்வுகாண, ''முழுமையான சமூக, பொருளா

தாரப் புரட்சி'' யின் ஆழ்ந்த சக்திகள் திரண்டு கொண்டிருப் பதையும் அந்தக் கட்டுரை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று;

> ''இந்தியாவின் வறுமைமீது கவனம் நிலை நாட்டப் படும். இந்தியாவின் மக்கட் தொகையைச் செல்வத்தை உற்பத்தி செய்யும் அதன் சக்தியோடு ஒப்பிட்டுப் பார்க்கிறவர் இது தீர்க்க முடியாத நோய் என உரைக்கலாம். ஆனால், கம்யூனிச மதப் பிரசாரர்கள் வளமுடையவர்களின் வரட்டு அவநம்பிக்கையை ஏற்க மாட்டார்கள்.முடியாததை முயன்று பார்க்கும் துணிவு அவர்களுக்கு உண்டு, இந்தியாவில் துன்புறும் பத்துலட்சக் கணக்கான மக்கள் அவர்களை அவசரக் குடுக்கைகள் என்று குறை கூற மாட்டார்கள். புதிய இந்திய அதிகாரிகளுக்கு ஒரு முழுமையான சமூக, பொருளாதாரப் புரட்சியை எதிர்க்கும் அல்லது வழி நடத்தும் பொறுப்பு ஏற்பட்டிருப்பதைக் காண வேண்டியிருக்கும் என்று நாம் எதிர்பார்க்கிறோம்.''

இந்திய மக்களைச் சுரண்டல் செய்யும் முழு முறையின் கோட்டை யும் மையமுமான தன்னுடைய சொந்தச் சுரண்டல் முறையைப் பத்திரமாய்க் காத்துக் கொள்வதற்காக ஏகாதிபத்தியத்தினால் இந்தச் சக்திகளைத் தளையிட்டு அடக்கி, வழி நடத்திச் செல்ல முடியுமா? அந்த நம்பிக்கை அதற்கு இருக்கிறதா? இந்த வினாவின் விடை, தாராளமான ஏகாதிபத்தியத்தின் நம்பிக்கைகளைப் பற்றி நுணுக்கமான, அனுமான விவாதங்கள் நடத்துவதிலோ, அரசியல் திட்டத் தத்துவங்களைப் பற்றின, வழக்குரைஞர்களின் நுட்பமான சொற்களிலோ இல்லை. ஆனால், ஏகாதிபத்தியத்தின் பொருளா தார அஸ்திவாரங்களைப் பற்றின பிரத்தியட்ச உண்மைகளிலும், அவற்றுக்கு நேர்விரோதமாக, இந்திய மக்களுடைய கனலும் பொருளாதார, சமூகத் தேவைகளிலும்தான் இருக்கிறது.

இந்திய மக்களைப் பிரம்மாண்டமான பணிகள் எதிர் நோக்கி உள்ளன. இந்தியா ஒரு நோயுற்ற நாடு, ஒரு பின்தங்கிய நாடு, வளர்ச்சி தடையுண்டு, நோயும் வறுமையும், புல்லுருவித்தனமும், விரயமும் உலகத்தின் வேறு எந்தப் பகுதியிலும் இல்லாத அளவு மலிந்த நாடு. இந்தியாவின் அளவற்ற இயற்கைச் செல்வத்துக்கும் சாத்தியக் கூறுகளுக்கும், இந்திய மக்களின் வறுமைக்கும் துன்பத் திற்கும் இடையில் உள்ள வேற்றுமை ஒவ்வொரு நோக்கரின் கண் களையும் உறுத்துகிறது. அவருடைய சமூக அரசியல் கருத்துகள் எத்தகையனவாக இருந்தாலும் சரி, ஒரு நூற்றாண்டு வளர்ச்சி மீது இடையீடற்ற பொறுப்பு வகித்த அரசாங்கத்தின் சாதனை யைப் பற்றி, மக்களுடைய நிலைமை சபிக்கத்தக்க தீர்ப்பு அளிக்கிற நிலையில் இருப்பதை எந்த நாட்டிலும் காணமுடியாது.

இந்தியாவின் அடிப்படைப் பிரச்னை பொருளாதார சம்பந்த மானது, சமூக சம்பந்தமானது; தேசீய விடுதலைக்காகவும் ஜன நாயகத்துக்காகவும் நடக்கும் போராட்டமான அரசியல் பிரச்னை இந்தப் பிரச்னையின் புற வெளியீடு மட்டுமே, போராட்டத்தின் முதல் கட்டம். வேளாண்மை நெருக்கடி முற்றிக்கொண்டிருக் கிறது, ஒவ்வோராண்டும் அபாயகரமாகி வருகிறது, பயனுள்ள தொரு வேளாண்மை புரட்சி வாயிலாக அன்றி அதற்கு தீர்வு காண இயலாது என்பதை நிபுணர்கள் ஒவ்வொருவரும் ஏற்கின் றார்கள். ஆனால், தொழில் வளர்ச்சியை விடுத்து விவசாயப் பிரச் னையை மட்டும் தனியாகக் கவனிக்க முடியாது. நாட்டின்வீணுக்கப் படும் வளங்களைப் பயன்படுத்தி, புதிய சக்தி மூலங்களைத் தோற்று வித்து, பத்து லட்சக்கணக்கான மக்களின் தவறுதலாக உபயோகப் படுத்தபடும் அல்லது முற்றிலும் உபயோகப் படுத்தப்படாத உழைப்பை உபயோகித்து நாட்டு வளத்திற்கான அஸ்திவாரத் தொழில்களை உண்டாக்க வேண்டும், முன்னேறிய உற்பத்தியை கையாளும் நாடுகளுக்கு ஈடாக உற்பத்தி அளவை உயர்த்த வேண்டும்—இதற்காக, தொழில் வளர்ச்சிக்காக ஒரு மாபெரும் வேலைத்திட்டம் வகுக்க வேண்டிய தேவை உள்ளது என்பதையும் எல்லாரும் ஒப்புக் கொள்கிறார்கள். கல்வி, உடல் நலம், சுகா தாரம், மக்களின் அடிப்படைத் தேவைகளுக்கு ஏற்பாடு செய்தல் முதலிய சமூக, பண்பாட்டுப் பணிகள் அளவற்றவை உள்ளன. இந்திய மக்களுக்கு முன்னுள்ள கேள்வி இது: எல்லாருடைய கவனத்தையும் வலுவில் ஈர்க்கும் அவசியமான பணியான இந்தப் புதுக்கும் அசுரப்பணியை மேற்கொண்டு நடத்தக் கூடியவர்கள் யார்? அதனை நிறைவேற்றுவதற்கு ஏற்ற முன்னிலைகள் யாவை? எந்த உருவங்களிலும் வழிவகைகளிலும் அதனை நிறைவேற்ற முடியும்?

இந்தியாவில் தவிர்க்கவொண்ணாத மாறுதல் அலைகள்மீது சவாரி செய்யலாம் என்று ஏகாதிபத்தியம் இன்னும் நம்புகிறது, கணக்கிடுகிறது என்பதில் சந்தேகம் இல்லை.

பிரிட்டிஷ் மூலதனம் தொடர்ந்து சுரண்டல் செய்வதற்குத் தோதாக இந்தியாவின் மீதுள்ள ஏகபோகப் பிடிப்பின் அடிப்படை களைக் காக்கவும், உண்மையான சுதந்திர இந்தியா தோன்றுவதன் அடிப்படையினைத் தடுக்கவும், எந்த உருவங்களிலும் வழிவகை களிலும் மாறுதலை அனுமதிக்கலாமோ அம்முறைகளில் அனு மதிக்கும் வண்ணம் அது வழி நடத்தி, தடைசெய்து, அல்லது உருவாக்கும் வகையில் சலுகைகளையும் அதிகார விநியோகத் தையும் சாமர்த்தியமாக இணைக்கலாம் என்று கருதுகிறது.

ஆகையால்தான், நவீன காலத்தில் மிக விரிவாய் விளம்பரப்படுத்தப்படும் அரசியல் சீர்திருத்தங்களுக்குப் பக்கலிலேயே, சிறப்புக் கமிஷன்கள் வாயிலாகவும், அவற்றைத் தொடர்ந்து சட்டம் இயற்றுவதன் வாயிலாகவும், முழு முன் அணிக்கும், தற்காப்புத் தனி அணிக்குமான கொள்கை, ராணுவ தந்திரத்துக்கான விரிவான ஆயத்தம் நடக்கிறது: 1916-18 இல் இந்தியத் தொழில் துறைக் கமிஷன்; 1921-22 இல் இந்திய நிதிக் கமிஷன்; 1926-28 இல், இந்திய நிதி, நாணயச் செலாவணிக்கான ராயல் கமிஷன்; 1926-28 இல் இந்திய விவசாயத்துக்கான ராயல் கமிஷன்; 1929—31 இல் இந்தியத் தொழிலாளர் தொடர்பான ராயல் கமிஷன். நிதி-முதலாளித்துவ ஆதிக்கத்தின் இறுதி அரணாக 1935 இல் இந்திய ரிசர்வ் பாங்கு ஏற்படுத்தப்பட்டது; பாங்கு ஆப் இங்கிலாந்து போல ''அரசியல் செல்வாக்''கைத் (அதாவது, இந்திய அரசியல் செல்வாக்கு) தவிர்ப்பதற்காகத் தனியார் பங்குத் தொகை அடிப்படையில் பிரிட்டிஷ் வைசிராயின் தனிப்பட்ட நிர்வாகத்தின்கீழ் அமைக்கப்பட்டது; வைசிராயே கவர்னர்களையும் துணைக்கவர்னர்களையும் நியமனம் செய்வார், வாரியத்தைத் தள்ளுபடி செய்ய அவருக்கு அதிகாரம் உண்டு; அரசியல் சீர்த்திருத்தங்களின் பார்வையினின்றும் இந்திய அரசாங்கச் சட்டத்தின் 152 ஆம் பிரிவின்படி சிறப்பாக விலக்களிக்கப்பட்டு, வைசிராயின் ''தனிப்பட்ட முடிவு'', ''தீர்ப்புரிமை'' போன்ற தடுக்க முடியாத அதிகாரங்களால் பாதுகாக்கப்பட்டது. இவ்வாறு, நவீன முதலாளித்துவ பொருளாதாரச் செயலாற்றல் அதிகாரத்தின் மையக் கோட்டையான-நிதி அதிகாரம், நாணயச் செலாவணியின்மீதும் நாணயத்தின்மீதும் ஆதிக்கம் ஆகியவற்றைப் பிரிட்டிஷ் நிதி-மூலதனத்தின் தனிப்பட்ட ஒதுக்கீட்டுப் பொருள்களாய்த் தங்கள் பொறுப்பிலேயே வைத்துக் கொண்டார்கள்.

இந்தியாவில் பிரிட்டிஷ் பாங்குத் தொழிலின் இறுக்குப் பிடியின் எதிர்காலம் என்ன ஆகும்? ஏகாதிபத்தியப் பொருளாதார ஏகபோக நலன்களைப் பற்றின மற்ற அடிப்படை கேள்விகளைப் போலவே இந்தக் கேள்வியும், ஓர் எதிர்கால பிரிட்டிஷ்—இந்திய உடன்படிக்கைக்கான கலந்துரையின் போது முடிவு காணப்பட வேண்டிய ''அதிகார மாற்றத்திற்குப் பிறகு உடனடியாக எழும் சில பொருள்களில்'' முக்கியமான பகுதி ஆகும் என்பதில் ஐயமில்லை. இந்திய மக்களுக்கு இறைமை வழங்குதற்கு இன்றியமையாத இரண்டு நிபந்தனைகளில் ஒன்றாக இந்த உடன்படிக்கை யோசனை ஏற்கப்பட வேண்டும் என்று 1946, மே 25 ஆம் நாள் அமைச்சரவைத் தூது கோஷ்டி வெளியிட்ட அறிக்கை குறிப்பிட்டதை இங்கு நினைவுபடுத்திக் கொள்ளவேண்டும்.

அதே சமயம் அண்மை ஆண்டுகளில் பிரிட்டிஷ் நிதி மூல தனத்தின் சுறுசுறுப்பான நடவடிக்கைகளைக் கவனிக்க வேண்டும்; குறிப்பாக, இம்பீரியல் கெமிகல் இண்டஸ்டிரீஸ், நப்பீல்டுல் முதலியன போன்ற பெரிய டிரஸ்டுகளும், ஏகபோக நிறுவனங் களும் நவயுகத்துக்குத் தங்களைத் தயாரித்துக் கொள்ளும் முறை யில் இந்தியாவில் தங்கள் தளங்களைக் கட்ட முயலுகிறார்கள்.

இந்தச் செயல் முறைக்குக் கிடைத்துள்ள வெற்றியின் அளவைக் குறைத்து மதிப்பிடுவது தவறாகும். அரசியல் சீர் திருத்தங்களின் பளபளப்பாலும், உரத்த குரலில் அறிவிக்கப்படும் அதிகாரச் சலுகைகளைப் பற்றின அறிவிப்புகளாலும் கண்களை இழந்து, இந்தியாவில் இருந்த ஏகபோக உரிமை பறி போயிற்றே என லங்காஷயர் ஒப்பாரிவைக்கும் ஆரவாரத்தால் காதுகளை இழந்து, இந்தியாவில், நவீன காலத்தில் பிரிட்டிஷ் நிதி-மூலதனம் மிக நுட்பமான முறைகளைக் கையாண்டு சில வகை களில் தன் பிடிப்பை இறுக்கி வருவதை உணராமல் இருப்பதை விடப் பெரிய அரசியல் அசட்டுத்தனம் வேறொன்றும் இருக்க முடியாது. இச்செயல் முறையின் சான்றை ஆறும் அத்தியாயத்தில் நாம் ஆய்வு செய்திருக்கிறோம். பிரிட்டிஷ் நம்பகக்கிளை நிறுமங்கள் இந்தியத் தொழில் துறைக்கம்பெனிகள் என்ற பெயரில் நட மாடுகிற புதிய ஏகாதிபத்தியப் படையெடுப்பு இந்தியாவில் சென்ற சில ஆண்டுகளில் ஏற்பட்டுள்ளதற்குச் சான்றாக, போர்க் காலத் துவக்கத்திற்கு முன் 1939 இல் இந்திய முதுநிலை வர்த்தகக் கமிஷனர் சமர்ப்பித்த அறிக்கையைக் கூறலாம்; அவர் எழுதினார்:

> ''சில முக்கியமான விஷயங்களில்—குறிப்பாக, சிகரெட்டு கள் தீப்பெட்டிகள், ரப்பர்டயர்கள், சோப்புகள், வர்ணங் கள், சில ரசாயனப் பொருள்களின் உற்பத்தி—இத்தொழில் கள், ஐக்கிய முடியரசு அல்லது வேறிடங்களில் உள்ள முக்கிய மான கம்பெனிகளின் கிளைகள்; இந்தியத் தேவையை இந்திய சுங்கவரி எல்லைக்குள்ளேயே அமைந்த தொழிற்சாலைகளி லிருந்து நிறைவேற்றவும், அரசாங்கக் கொள்முதல் துறை களுக்கு ஒப்பந்தப்புள்ளி தரும்போது இந்தியாவில் நிறுவப் பட்டது என்ற அந்தஸ்துக்கு உரிமை கொண்டாடும் நிலையில் இருக்கவும் அது தங்களுக்கு நல்லது என அக்கம்பெனிகள் முடிவு செய்துள்ளன.''
>
> (சர் தாமஸ் ஐன்ஸ்காப், இந்தியாவில் ஐக்கிய முடியரசின் வர்த்தகத்தின் நிலைமைகளையும் நம்பிக் கைகளையும் பற்றின அறிக்கையின் அறிமுக உரை, 1939.)

இவ்வாறு இந்தியத் தொழிலுக்குத் தரப்படும் பாதுகாப்பின் நோக்கம் தோற்கடிக்கப் படுகிறது என்று இந்திய தேசீய வட்டாரங்களில் மிகவும் கசப்போடு குறை கூறப்படுகிறது; இந்தியத் தொழில் என்ற மாறு வேடத்தில் உலாவும் பிரிட்டிஷ் மூலதனத்துக்கே அரசாங்கமும், பாங்குத் தொழிலும் சலுகை காட்டுகின்றன என்றும், இந்தியப் பூர்ஷ்வாக்களுக்கு அளிக்கப்படுவதாய் வெகுவாய் விளம்பரப்படுத்தப்படும் சுங்கச் சலுகைகள் மெய்யாக இந்தியாவில் பிரிட்டிஷ் முதலாளித் துவத்தை வலுபடுத்தவே பயன்படுத்திக் கொள்ளப் படுகின்றன என்றும் அவர்கள் குற்றம் சாட்டுகிறார்கள்.

''நாட்டுக் குடிமக்களுக்குச் சொந்தமான, அவர்களால் நிர்வாகம் செய்யப்பட்டு இயக்கப்படுகிற தேசிய ஆக்கமும் ஊக்கமும் அளிக்க வேண்டும் என்னும் பாதுகாப்பின் நோக்கம், இந்தியாவில் செயல்படும் இந்தியரல்லாதார் தொழில்களால் முறியடிக்கப்படுகின்றன. வெளிநாட்டு மூலதனம் இவ்வாறு இந்திய மண்ணைப் படையெடுக்கக் கையாளப்படும் முறையோ நுட்பமானது, சிக்கலானது . . . . அதற்கு ஓர் இந்தியத் தோற்றம் கொடுக்கச் சில சமயங்களில் ஒரு முயற்சி செய்யப்படுகிறது; அது முகப்பு அலங்காரத்தை விடச் சற்று அதிகமானது, ஏனெனில் அதிகாரமும் நிர்வாகமும் பெரும்பாலும் இந்தியர் அல்லாதார் கையிலேயே இருக்கின்றன; அவர்கள் தங்களுக்கு உதவியாகச் சில இந்தியப் 'பொம்மை' இயக்குநர்களை வைத்துக்கொள்ளுகிறார்கள்.....

''இது பொருளாதாரத் தீமைமட்டும் அல்ல; ஏனெனில், இவ்வாறு சட்டவுரிமையோடு தொடங்கப்படும் ஒவ்வொரு தொழிலுக்கும்,அது நிலைபெறுவதற்கு அரசியல் சட்டப் பாதுகாப்புகள் கிடைக்கும் என்கிற உறுதி அளிக்கப்பட வேண்டியிருக்கும், அப் பாதுகாப்புகள் இந்தியச் சட்டமன்றங்களின் உரிமைகளையும் அதிகாரங்களையும் கடுமையாய்க் கட்டுப் படுத்தி, ஜீவாதாரமான தொழில்களைத் தேசீயமயம் ஆக்குவதைச் சிரமப்படுத்தும். தொழிலில் இந்திய-பிரிட்டிஷ் ஒத்துழைப்பு என்ற பொய்ப் பெயரால் நடக்கும் இந்த ஏற்பாட்டின் கனம் இறுதியாக அரசியல் பிற்போக்கின் பக்கம் ஏறி, உண்மையான பொருளாதார சுயராஜ்யத்தை இழந்ததொரு லட்சியம் ஆக்கிவிடும்.

*(''ஒரு புதிய அபாயம்''—அமிர்த பஜார் பத்ரிகாவில், வெளியான ஒரு கட்டுரை, கல்கத்தா, நவம்பர் 11, 1937.)*

1946 ஆம் ஆண்டு அரசியல் திட்டத்தை அடுத்து அண்மைக் கால கட்டத்தில் பிரிட்டிஷ் மூலதனத்தின் பொருளாதார நம்பிக்கைகள் பைனான்ஷியல் டைம்ஸில் சொல்லுருவம் பெற்றன:

''பொருளாதார முறையில் இந்தியா பிரிட்டிஷார் இல்லாமல் ஒன்றும் செய்து கொள்ள முடியாது; இந்தியச் சந்தையை இழக்கப் பிரிட்டனாலும் இயலாது. இந்தியாவின் வளர்ச்சியிலும் வளமையிலும் பிரிட்டனுக்கு இன்னும் ஏராளமான நிதிப் பொறுப்பு இருக்கிறது. இந்தியாவுக்குப் பிரிட்டிஷ் அனுபவமும் கருவிகளும் தேவை, பெரும் ஸ்டர்லிங் மிச்சங்கள் உள்ள பிரிட்டனின் நிதி எதிர்காலத்தில் ஆழ்ந்த அக்கறை உண்டு. . . . ஆகையால், பிரிட்டன் இந்தியாவை விட்டு வெளியேறுவதாயின், தனக்குச் சாத்தியமான எல்லா நல்லெண்ணத்தையும் விட்டு வரவேண்டும். பிரிட்டிஷ் நலன்களுக்குச் சாதகமான வசதிகள் பெறுதற்கு ஏற்ற தலையாய பாதுகாப்பு என்ன? அது வெறும் சூதாட்டம் தானா? முழு திட்டமே பல விஷயங்களின் சூதாட்டம்தான்; ஆனால் முடிவு எடுக்கப்பட்டு விட்டது. அதனால் ஏகாதிபத்திய நலனுக்குத் தீங்கு நேரலாம். அல்லது அதை வலுப்படுத்தலாம். இந்த நிலையில் யாரும் சொல்ல முடியாது.''

(''பைனான்ஷியல் டைம்ஸ்'', மே 18, 1940.)

எனவே, பொருளாதாரத் துறையிலாகட்டும், அரசியல் துறையிலாகட்டும், தன்னை நவயுகத்திற்கு ஏற்ப இணக்கம் செய்து கொண்டு, இந்த நவயுகத்திலும் தனக்குள்ள தனிச் சலுகை அந்தஸ்தை நிலைநாட்டிக் கொள்ள வேண்டும் என்பதோடு, அந்த நவயுகத்தில் இந்தியக் கொடி பறந்தாலும் உண்மையான உள்ளுறையும் இறுதி அதிகாரமும் சுரண்டலின் ஆதாயங்களின் சாரமான பகுதியும் பிரிட்டிஷ் முதலாளித்துவத்தின் கைகளிலேயே இருக்க வேண்டும் என்கிற நோக்கோடுதான் இன்றைய ஏகாதிபத்திய தந்திரம் செயல்படுகிறது.

இந்த அபாயத்தின் மெய்ம்மையே, இந்திய தேசிய இயக்கம் முழு சுதந்திரத்தைத் தன் லட்சியமாய்க் கொண்டு போராட வேண்டும் என்பதைப் பெரிதும் அவசியம் ஆக்குகிறது. இத்தகைய சுதந்திரம் முழுமையாக நிறைவு பெறுவதற்கு, வெளிநாட்டு மூலதனத்திற்கு அளிக்கப்படும் எல்லாச் சலுகைகளை நீக்குதலையும், வெளிநாட்டினருக்குச் சொந்தமான தொழில்கள், தோட்டங்கள், தொழிற்சாலைகள், ரயில்வேக்கள், கப்பல் தொழில் முதலியவற்றை மேற்கொள்ளுதலையும் உள்ளிட்ட முழு பொருளாதார, அரசியல் சுதந்திரம் தேவை.

நவீன காலத்தில் ஏகாதிபத்தியத் தந்திரம் அறிவுக் கூர்மையும் வெகுவிழிப்பான திறமையும் வாய்ந்தது என்பதில் ஐயமில்லை என்றாலும் பிரிட்டிஷ் ஆதிக்கத்தையும் ஏகபோகத்தையும் நவயுகத்திலும் நிலைநாட்டிக் கொள்ள வேண்டும் என்கிற அவர்களுடைய கனவுகள் பலிக்கும் என முடியாது. பிரிட்டிஷ் ஆட்சி வர்க்கம் மிக சாமர்த்தியமாய்த் தங்களுக்காக வகுத்துக் கொடுக்கும் வழிகளில் செல்ல இந்தியாவில் கிளர்ந்தெழுந்துள்ள சக்திகள் எளிதில் இணங்கா. ஒவ்வொரு வருடமும் அவசரமாக நவீன கால இந்தியாவில் எழும் பிரச்னைகளை ஏகாதிபத்திய நிலைமைகளுக்குள் தீர்க்க முடியாது. ஏகாதிபத்திய ஆதிக்கத்தின் கீழ் நவீன காலத்தில் நிகழ்ந்துள்ள பொருளாதார வளர்ச்சியின் அளவு, அல்லது அந்த ஆதிக்கம் எழுப்பிய இடையூறுகளை மீறி ஏற்பட்டுள்ள வளர்ச்சியின் அளவு முடக்கி ஒடுக்கி திரிக்கப்பட்டதே ஆகும், அது எவ்வகையிலும் தேசீயப் புத்தமைப்புத் தன்மை வாய்ந்தது அல்ல. பிரிட்டிஷ் மூலதனத்தின் ஆதிக்கத்தின் கீழும் தொடக்கத்தின் கீழும் தோற்றுவிக்கப்பட்டவை என வர்த்தகக் கமிஷனர் அறிக்கையின் பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ள ''புதிய தொழில்கள்'', முக்கியமாக இரண்டாந்தர மென் ரகத் தொழில்கள் (சிகரெட்கள், தீப்பெட்டிகள், ரப்பர் டயர்கள், சோப், வர்ணங்கள், சில ரசாயனப் பொருள்கள்), தொழில் மயமாக்கும் அடிப்படை அல்ல. இந்தியாவின் ரசாயன வளங்களைப் பயன்படுத்திக் கொள்ளவும், பெரிதும் கண்டுபிடிக்கப்படாமல் இருப்பனவற்றைக் கண்டுபிடிக்கவும் திட்டங்கள் அறிவிக்கப்பட்டன; உதவி செய்யும் அரசாங்கத்தால் ஐ.சி.ஐ. (இண்டியா) லிமிடெட்டுக்கு ஏராளமான சலுகைகள் வழங்கப்பட்டன என நம்புவதற்குக் காரணம் உண்டு. ஆனால், அதற்கு ஏற்ப, கனரகத் தொழிலுக்கான அடிப்படையை அமைக்கும் முயற்சியையே காணோம். சாத்தியக் கூறுகளையும் தேவைகளையும் பார்க்குமிடத்து, இரும்பு, உருக்குத் தொழிலின் வளர்ச்சி பரிதாபகரமாக இருக்கிறது; இத் துறையிலும் முன்னோடியான பணிகள் பிரிட்டிஷ் மூலதனத்தினால் செய்யப்படவில்லை, இந்தியக் கம்பெனியான டாடாவினால்தான் செய்யப்பட்டது; அப்பால்தான் பிரிட்டிஷ் மூலதனம் நிதி இறுக்குப் பிடிப்பு ஏற்படுத்திக் கொள்வதற்காகப் பங்குகளை வாங்கியது (இண்டியன் அயன் அண்டு ஸ்டீல் கம்பெனி பங்குகளில் பெரும்பாலானவற்றைப் பிரிட்டிஷாருக்குச் சொந்தமான பெங்கால் அயன் கம்பெனி வாங்கியது). 1935இல் இரும்பு, உருக்குத் தொழிலில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களின் மொத்த எண்ணிக்கை, 32,000 மட்டுமே. 1924க்கும் 1939-40க்கும் இடையில் உருக்குப் பாளங்களின் உற்பத்தி 341,000 டன்களிலிருந்து 1,070,355 டன்களுக்கு உயர்ந்தது; அதே காலத்தில்

சோவியத் யூனியனில் 1924 இல் 1,408,000 டன்களிலிருந்து, 1936இல் 16,300,000 டன்களுக்கு உயர்ந்தது.

கடைசி யுத்தத்தின்போது, நெருக்கடி நேரத்தில் இந்தியா ஒரு மோட்டார் எஞ்சினையோ ஏரோப்பிளேனையோ உற்பத்தி செய்ய முடியாது என்பது கண்டுபிடிக்கப்பட்டது. அரசுக்குச் சொந்தமாய் அதன் நிர்வாகத்தில் இருந்த பெங்களூர், ஹிந்துஸ்தான் ஏர்கிராப்ட் பாக்டரி கூட (சிறிது காலத்திற்கு அமெரிக்கப் படையிடம் ஒப்படைக்கப்பட்டது.) ஒரு வானவூர்தியும் உற்பத்தி செய்யவில்லை. போருக்குப் பிறகும் வளர்ச்சித் திட்டங்கள் அதே போக்கில் காணப்பட்டன. பிர்லா—நப்பீல்டு ஒப்பந்தத்தைத் தொடர்ந்து வெளியிடப்பட்ட அறிவிப்பில் ஒரு புதிய ''இந்திய''க் கார் தயாரிக்கும் திட்டங்கள் கையிலிருப்பதாய்க் கூறின; ''ஹிந்துஸ்தான்டென்'' என்ற அந்தக்காரின் முக்கியமான பாகங்கள் நப்பீல்டினுல் உற்பத்தி செய்யப்பட்டு இந்தியாவில் கோக்கப்படும் என்று தெரிந்தது. அது போலவே, டாடா-ஐ.சி.ஐ. வியாபார ஒப்பந்தப்படி, அடிப்படை ரசாயனப் பொருள்கள் இந்தியா தன்னிறைவு பெறும்வரை (குறைந்த அளவு 20 ஆண்டுகள் ஆகலாம் என அறிவிக்கப்பட்டது) இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு இந்தியாவில் ''இந்தியப் பொருள்கள்'' என விற்பனை செய்யப்படும். சிங்ப்பூமில் உள்ள ரயில்வே தொழிற் பட்டறை டாடாவிடம் ஒப்படைக்கப்பட்டு, இனி இறுதியாக இந்திய ரயில் என்ஜின்கள் டாடாவினுலேயே தயாரிக்கப்படும் என்று பெரிதாய்ப் பேசுகிறார்கள்; ஆனால், முதல் ரயில் எஞ்சின் உற்பத்திஆகப்பல ஆண்டுகள் ஆகும் என்று கூறப்படுகிறது. இனி ஹிந்துஸ்தான் ஏர்கிராப்டுத் தொழிற்சாலை இந்திய அரசாங்க உடைமையாகி அதன் நிர்வாகத்தில் பிரிட்டிஷ் எஞ்சினியர்களின் மேற்பார்வையில் ஆகாய விமானங்களைத் தயாரிக்கும் என்ற அறிவிப்பு உலகமெங்கும் பறை சாற்றப்படுகிறது. ஆனால், அந்த அறிக்கையே 20 ஆண்டுக் காலத்திற்குள் ''ஆகாயவிமான உற்பத்தியில் முழு தன்னிறைவு பெறும்'' என்று உரைக்கிறது.

ஒருங்குபட்ட பொருளாதார வளர்ச்சிக்கு அவசியத் தேவையான கனரகத் தொழில் அடிப்படையை உண்டாக்கத் தவறியது தற்செயலாக நேர்ந்தது அல்ல, ஒரு நாட்டின்மீது ஏகாதிபத்தியம் ஆதிக்கம் செலுத்துவதன் கடுமையான பிரதிபலிப்பே ஆகும். இந்தியா இன்றும் தன் யந்திரத் தேவை முழுவதற்கும் வெளிநாடுகளையே நம்பியுள்ளது. ஏற்கனவே குறிப்பிட்டது போல் ''உலோகத் தொழில்களின் வளர்ச்சியின் பொருள், தொழிற் புரட்சி. இந்தியா, ஜெர்மனி, அமெரிக்க ஐக்கிய நாடுகள் தங்கள் துணி ஆலைகளைத் தொடங்கு முன்னரே நவீன அளவில் இரும்பு, உருக்குத் தொழில்களைத் தொடங்கின.'' (எல். சி. ஏ. நௌல்ஸ்,

"கடல்கடந்த சாம்ராஜ்யத்தின் பொருளாதார வளர்ச்சி", ப. 443-முன் ப. 160 இல் முழுவிவரம் காண்க). இந்த நடை முறையின் வெற்றி சோவியத் யூனியனில் இன்னும் சக்திவாய்ந்த முறையில் வெளிப்பட்டுள்ளது. இந்தியாவிலுள்ள தலைகீழ் நிலைமைக்குக் காரணம் அதனுடைய காலனி அந்தஸ்துதான். இந்தியாவில் கனரகத் தொழிலின் உண்மையான வளர்ச்சிக்குத் தேவையான எல்லா இயற்கை, தொழில் நுட்பச் சாத்தியக் கூறுகளும் உள்ளன, நாட்டு நிலைமையும் அதை வலுவாய் வேண்டுகிறது, ஆனால் அந்த வளர்ச்சி அதன்காலனி அந்தஸ்துக்கு உகந்தது அல்ல, உண்மை யான வளர்ச்சி ஏற்பட்டு விட்டால், உலக அளவில் ஒரு தலையாய நாடாக சுதந்திர இந்தியா மாறுவதற்கு அடிப்படை இடுவதாகும்.

இக்காரணத்தால், இந்தியாவில் பொருளாதார வளர்ச்சிக் கான அவசரத் தேவைகளுக்கும் ஏகாதிபத்திய ஆதிக்கத்தின் இறுக்கும் விலங்குகளுக்கும் இடையிலுள்ள மோதல் தவிர்க்க முடியாத வகையில் மிகுதியாக வலுத்து இணக்கத்துக்கும் ஒத்துழைப் புக்குமான எல்லா முயற்சிகளையும் சிதறச் செய்யும்.

பலநாச வேலையும் காட்டுமிராண்டிச் செயலையும் செய்தும், ஏன், அவற்றின் வாயிலாகவும், ஒரு நூற்றாண்டுக்கு முன் இந்தியாவில் பிரிட்டிஷ் பூர்ஷ்வாக்களின் ஆட்சி, பழைய சமூக முறையின் அஸ்திவாரங்களை அழித்து, புது சமூக முறைக்கான சூழ்நிலையை உண்டாக்கும், "வரலாற்றின் உணர்வற்ற கருவி யாக"ச் செயல்படும் பணியை ஆற்றியது. அப்பணிக்குத் தொடர்ச்சியாகப் பணியாற்ற நவீன ஏகாதிபத்தியத்தால் இனி முடியாது—இப்போது புத்தமைப்புப் பணிகள் மேற்கொள்ளப் பட வேண்டியது அவசியம்.

இந்தியாவின் இன்றைய நிலையிலும் அதன் மக்களின் நிலைமையிலும் ஏகாதிபத்தியத்தின் நொடிவு பளிச்சென்று தெரிகிறது. சென்ற நூற்றாண்டின் பின் கால்பகுதியில் சோவியத் யூனியனில் ஏற்பட்டுள்ள சாதனைக்கும் (ஜார் ஆட்சி யில் சீரழிந்த மிகமிகத் தாழ்மட்டத்திலிருந்து தொடங்கியது) அதே காலத்தில் இந்தியாவில் ஏற்பட்டுள்ள சாதனைக்கும் இடையிலுள்ள வேற்றுமையைக் கவனியாமல் இருக்க முடியாது. இரும்பு, உருக்குத் தொழில்பற்றி மேலே கூறிய தகவல்களைக் கவனிக்கும்போதும், விவசாய வளர்ச்சியிலும் தேசீய வரு மானத்தின் இயக்கத்திலும் உள்ள வேற்றுமையைக் கவனிக்கும் போதும்; சோவியத் யூனியனில் கல்வியின்மை முற்றிலும் ஒழிக்கப் படுகையில் இந்தியாவில் இருபது ஆண்டுகளில் கல்வியின்மையில் 2 சதவீதம் குறைக்கப்பட்டதைக் கவனிக்கும் போதும், உடல் நலம், சமூகப்பணிகள் அடுக்கடுக்காய் அங்கு நடைபெறுகையில்

இந்தியாவில் மிகவும் எளிய பணிகள்கூட நடைபெறுமையைக் கவனிக்கும் போதும், இந்திய மக்களுக்கு அவை பொருள் நிறைந்த பாடங்களாய் உள்ளன, அப்பாடங்களை அவர்கள் தங்கள் மனத்தில் பதித்தும் வருகிறார்கள்.

... இந்த நொடிவு, தனிப்பட்ட ஆட்சியாளர்களின் திறமையையோ, அல்லது நாணயத்தையோ, நல்லெண்ணத்தையோ பற்றின ஒரு கேள்வியே அல்ல; மிக மதியொளி வாய்ந்த சில ஆட்சியாளர்கள், நாட்டின் பயங்கரமான நிலைமையையும் அது எங்கே போகின்றது என்பதையும் வீரியமற்ற திகிலோடு கவனித்தார்கள். அவர்களுக்கு மனம் இருந்தாலும் வேறு பயன்களைத் தரும் பணிகள் புரிய அவர்களுக்கு அதிகாரம் இல்லை. ஏனெனில், ஏகாதிபத்தியப் பராமரிப்பின் சமூக அடிப்படை, இந்தியாவைப் பிற்போக்கில் வைத்துள்ள சக்திகளோடு இணைந்தது. நாளுக்கு நாள் வலுத்துவரும் இந்திய விவசாய நெருக்கடியின் அடிப்படைப் பிரச்னையான நிலப் பிரச்னையைப்பற்றி வேளாண்மைக் கமிட்டி விவாதிக்கவும் கூடாது என அதிகாரபூர்வமாய்த் தடை விதிக்கப்பட்டதே இந்தியாவில் ஏகாதிபத்தியம் நொடிவு கண்டு விட்டதன் சின்னம்தான். நிலப்பிரபுத்துவப் பிரச்னையைத் தீர்த்தாலொழிய, நிலப்பிரச்னைக்குச் செம்மையான தீர்வு கண்டாலன்றி, இந்திய முன்னேற்றப் பிரச்னைக்குத் தீர்வுகாண முடியாது. அடிப்படைப் பொருளாதார அல்லது சமூகப் புத்தமைப்புக்கும் வழி கிடையாது. ஆனால், நிலப்பிரபுத்துவ முறையின்மீது கோடரி வைப்பதன் பொருள் ஏகாதிபத்தியத்தின் அஸ்திவாரத்தில் கோடரி வைப்பது, எந்தச் சக்திகளின் முன்னேற்றம் ஏகாதிபத்தியத்தின் முடிவுக்குக் கட்டியம் கூறுமோ அந்தச் சக்திகளுக்குக் கதவு திறந்து விடுவது என்பதுதான். மக்களில் கீழ்நிலையில் இருப்போரின் நலன்களுக்கு எதிரிடையான நலன்களுடைய மேல் வகுப்பினரின் சலுகைகளைப் போற்றி அவர்களைத் தன் அதிகாரத்துக்கு அரணாக வைத்துக் கொள்வதைத் தன் சமூக பலமாய்க் கொள்ள ஏகாதிபத்தியம் முயன்றது. பிரிட்டிஷ் ஆட்சியின் சமூக மிதவாதத்திற்குக் காரணம் இதுதான், மிகமிக எளிய சீர்திருத்தங்களுக்கும் அது தயங்கித் தயங்கித் தடை விதித்ததற்கும் காரணமும் இதுதான்.[1] நிலவுடமையாளர் வர்க்கம், அரச பரம்

1. 1912 ஆம் வருட மையச் சட்டமன்ற ஆவணங்களைப் பார்வை இடுகையில் திரு. பூபேந்திரநாத் பாசு வேறு வேறு சாதிகளுக்குள் கலப்பு மணம் செய்து கொள்ள அனுமதி வேண்டும் ஒரு மசோதாவைக் கொண்டு வந்திருந்ததைக் கண்டேன். 1872 ஆம் வருட 'சிறப்பு மணச் சட்டத்தை' (அது சீர்திருத்த மணத்திற்கு வகை செய்வதாய்த் தெரிகிறது) "இந்தியாவில் தெரிந்த எந்த மதத்தையும் தாங்கள் பின்பற்றவில்லை" என்று உறுதி கூறாமலே பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதற்கு மேல் மசோதாவில் ஒன்றும் இல்லை என்று தோன்றுகிறது. ஒருவரைத் தவிர, விவாதத்தில் கலந்து கொண்டவர்கள்

பரை, வகுப்பு வேற்றுமையில் சட்டவுரிமை பெற்றவர்கள், பிற்போக்குத் தன்மைக்கும் சிதைவுக்கும் காரணமான பிற்போக்குச் சக்திகள் அனைத்தின் விதியோடும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் தன் விதியைப் பிணைத்துக் கொண்டுள்ளது.

இந்தியத் தொழில் துறைப் பூர்ஷ்வாக்களுடன் ஒத்துழைப்பு அடிப்படையைக் காண்பதற்கு அண்மைக் காலத்தில் ஒரு கடைசி முயற்சி செய்யப்பட்டது; ஆனால், மக்களில் கீழ்நிலையில் இருப்போரின் சமூக முன்னேற்றத்திற்கு எதிரான சில பொதுநலன்கள் இருப்பினும் இந்த அடிப்படை நிலைக்காது. வருங்காலத்தில் மக்களின் முன்னேற்றத்துக்கு முன்னால் பழைய பிற்போக்குச் சக்திகள் சரியப்போவது உறுதி, அவற்றோடு ஏகாதிபத்தியமும் சரிய வேண்டியதுதான்.

ஆகையால், இறுதிப் போராட்டம் இன்னும் போராடப்பட்டே ஆக வேண்டும் எனினும், இந்தியாவின் சுதந்திரம் வருமகாலத்தில் வெல்லப்படும் சாத்தியம் உண்டு. அந்தச் சுதந்திரம் மிகவிரைவில் சாத்தியமாகுமா குறைந்த விரைவில் சாத்தியமாகுமா என்பது, தேசிய

எல்லாரும் இந்தியர்களே. அந்த விதிவிலக்கு உறுப்பினர் உள்நாட்டு உறுப்பினர், அவர் மாறுதலுக்குச் சாதகமாகப் பெருமிதமான பெரும்பான்மை இருப்பதாய் மசோதவைக் கொண்டு வந்தவர் நிரூபித்தால் ஒழிய, அரசு அதை எதிர்க்கும் என்று மொட்டையாகத் தெரிவித்தார். அரசு உறுப்பினர்கள் பெரும்பாலோராக இருக்கும் பொறுக்குக் குழுவுக்கு மசோதாவை அனுப்பலாம் என திரு. கோகலே எவ்வளவோ வாதாடியும் பயன்படவில்லை. பதில் அளிக்கப்பட்டபின் மசோதாவைக் கொண்டு வந்தவரை மற்றும் பத்து உறுப்பினர்களால் ஆதரிக்கப்பட்டார். உடனே வைசிராயும் அவருடைய ஆட்சிக் குழுவினரும் ஆணையிட்டதற்கு இணங்கப் பிரிட்டிஷ் அதிகார வர்க்க உறுப்பினர்களின் அணி முழுவதும் மன்றத்துக்கு வந்து மசோதாவுக்கு விரோதமாக வாக்களித்து அதை முறியடித்தனர்......

"இவ்விஷயங்களில் இந்திய அரசின் போக்கினால் சமூக சீர்திருத்தக்காலை எதிர்ப்படும் இடையூறுகள் உள்ளத்தை உடைப்பதாய் உள்ளன."

(லயோனல் கர்டிஸ், "பொறுப்பாட்சி பற்றி இந்திய மக்களுக்குக் கடிதங்கள்", 1918, பப. 140-2.)

அதற்கு அப்பால் திருத்தச் சட்டம் ஒன்று நிறைவேற்றப்பட்டுள்ளது; ஆனால் பொது சீர்திருத்தச் சட்டம் இன்னும் வரவில்லை. (அதன் விளைவாக, மக்களில் வெவ்வேறு பிரிவினருக்கு இடையில் உள்ள போலித்தடைகளால் அவர்களுக்கு ஏற்படும் சிரமங்களைப்பற்றி நேருவின் 'சுயசரித்திரம்' ப. 451 பார்க்கவும்.) ஓர் ஆங்கிலேய ஏகாதிபத்தியவாதியின் இந்த விமரிசனத்தோடு நேருவின் சொந்தத் தீர்ப்பை ஒப்பிட்டுப் பார்க்கலாம்:

"சமூக சீர்திருத்தவாதிகளின் நோக்கில் அண்மையில் நிலைமை மேலும் மோசமாகிவிட்டது; ஏன் எனில், பிரிட்டிஷார் இந்தத் தீமைகளின் மோனக் கோட்டைகளாய் மேன்மேலும் மாறிவருகின்றனர். இந்தியாவிலுள்ள மிகப் பிற்போக்கான சக்திகளுடன் அவர்களுக்குள்ள தொடர்பே இதற்குக் காரணம்."

(நேரு: "சுயசரித்திரம்", ப. 382.)

இயக்கத்திலுள்ள ஒற்றுமையின் அளவையும்; மக்களில் கீழ்மட்டத்தில் இருப்போரிடம் அதற்குள்ள பிடிப்பையும், அதன் நோக்கத்தின் தெளிவையும் பொறுத்தது. இந்தியாவில் வரலாற்றுப் பூர்வமாக எஞ்சியுள்ள பணிகள் நிறைவேற்றப்பட வேண்டும், இந்திய மக்களா லேயே அவற்றை நிறைவேற்ற முடியும் .

## 2. எத்தகைய இந்தியா?

எனவே, இந்தியாவின் எதிர்காலம் பற்றின அடுத்த கேள்வி, இந்திய மக்களின் உள்ளுறை சக்திகள்பால் திரும்புகிறது. இந்திய மக்கள் ஒரு படித்தான முழுமை அல்லர். தங்களுடைய சலுகை களைக் காத்துக்கொள்ள வேண்டும் என்கிற நம்பிக்கையில் ஏகாதிபத்தியத்துடன் ஒருமித்த உறவுகள் கொண்டுள்ள வலிய பிற்போக்கு சக்திகள் உள்ளன என்பதை நாம் பார்த்திருக்கிறோம் (ஏகாதிபத்தியம் வலிவு குன்ற, இவைகளுக்கு இடையிலும் புதிய தயக்கங்கள் புலப்படத் தொடங்கியுள்ளன). பிரிட்டிஷ் பூர்ஷ்வாக்களுடன் பெரும் மாறுபாடு கொண்டுள்ள இந்தியப் பூர்ஷ்வாக்களின் தயக்கம் கொண்ட பங்கை முன்பே நாம் பார்த் திருக்கிறோம்; இந்தியப் பூர்ஷ்வா வர்க்கம் எதிர்கால இந்தியாவை ஒரு சுதந்திர நாடாய்க் கண்டு, தேசீய இயக்கத்தில் சக்திவாய்ந்த, செல்வாக்குமிக்க பங்கு கொண்டுள்ளது; ஆயினும், அதே சமயத்தில் பெரும் போராட்டத்தின் முன்னேற்றத்தின் போதெல் லாம் அச்சம் கொண்டு தேசீய இயக்கத்திற்கு மீண்டும் மீண்டும் தடைசெய்து, ஏகாதிபத்தியத்துடன் தற்காலிகப் பேரங்கள் பேசி, மீண்டும் தகராறு செய்து கொண்டன என்பதைப் பார்த்தோம். தொழில் துறைத் தொழிலாளர் வர்க்கத்தின் எழுச்சியையும், குடியானவர் கலகத்தையும், அதன் விளைவாக இந்திய அரங்கில் மேன்மேலும் முன் வரிசைக்கு வந்துகொண்டிருக்கிற புதிய, சமூகப் பிரச்னைகளையும் நாம் பார்த்திருக்கிறோம். திரண்டுவரும் தேசீய, சமூக நெருக்கடியின் கொந்தளிப்பில் உணர்வுள்ள அரசியல் இயக்கத்தின் மிகத் தீவிரமான கிளர்ச்சி சக்தியையும் நிறுவன சக்தியையும் வழங்குகிறவர்களும், ஆனால், தனிப்பங்கு கொள்ள முடியாதவர்களுமான அறிஞர்களின் வரிசைகளிலும், மாணவர்கள், இளைஞர்களின் வரிசைகளிலும், நகர்ப்புற சிறு பூர்ஷ்வாக்களிலும் மாறுபட்ட இந்த எல்லா பாதிப்பின், கண்ணோட்டத்தின் பிரதிபலிப்பும் செவ்வையாகத் தென்படுகிறது. ஏகாதிபத்தியத்திடமிருந்து இறுதியாகச் சுதந்திரம் வெல்லப்படும் அளவுக்குத் தேசீய இயக்கத்தின் ஒற்றுமை வெற்றிகரமாய்க் காக் கப்படுமா; அல்லது, பெரும் இயக்கத்தின் முன்னேற்றத்தால் அச்சம்கொண்டு பூர்ஷ்வாக்களின் மிதவாத தேசீய சக்திகள் பிரிந்து

போய் ஏகாதிபத்தியத்தோடு நெருங்கிய உறவு பூண்டு, இவ்வாறு ஏகாதிபத்தியத்திற்குத் தற்காலிகமான உயிர்ப்பிச்சை தந்து, அதனுல் தேசீய விடுதலையின் இறுதி வெற்றி, சமூக விடுதலைக்கான பெரும் போராட்டத்துடன் இணைந்து விடுமா? சுதந்திரம் வெல்லப்பட்டால், பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்டிருந்த பழைய இந்தியாவின் இடத்தில் எத்தகைய இந்தியா வரப் போகிறது? புதுப்பிக்கப்பட்ட கிராமப் பொருளாதாரத்தையும் வரையறுக்கப்பட்ட தொழில் மயத்தையும் அடித்தளமாய்க் கொண்டு, நவீன சூழ்நிலைக்கு இணக்கமான புத்தமைப்புபெற்ற ஹிந்து அல்லது பண்டைய இந்திய நாகரிகத்தின் மறுமலர்ச்சி ஆதரவாளர்களின் கைஓங்கி, அவர்கள் தங்கள் கனவுகளுக்கு ஏற்ப இந்தியாவினை உருவாக்குவார்களா? அல்லது, தொழில் துறைப் பூர்ஷ்வாக்களும் படித்த வகுப்பினரிடையில் இருக்கும் அவர்களுடைய பிரதிநிதிகளும் தலைமைப் பொறுப்பை ஏற்று மேலை முதலாளித்துவ நாடுகளின் மாதிரியில் நவீன மயமான முதலாளித்துவ இந்தியாவை உருவாக்குவார்களா? அல்லது, கட்டுப்படுத்தப்பட்ட முதலாளித்துவப் பாணியில், ஒற்றைக் கட்சித் தேசீயப் புத்தமைப்பு முறை தற்காலிகமாக, துருக்கி மாதிரி, செயல்படுமா? அல்லது, பொது மக்களின் துன்பமும் போராட்டமும், சோஷலிசத்தை நோக்கி முன்னேறும் மக்களின் இந்தியாவை அண்மையிலுள்ள எதிர்காலத்திலேயே தோன்றப் பயன்படுமா?

இக் கேள்விகளும் இவை போன்ற கேள்விகளும் இந்திய விவாதத்தில் ஏற்கனவே அடிக்கடி எழத் தொடங்கிவிட்டன. எதிர்காலம் பற்றின வெறும் அனுமானமான கேள்விகள் அல்ல அவை. ஏனென்றுல், எதிர்கால நோக்கங்கள் பற்றின கருத்தும், இப்போதைய போராட்டத்தில் வேறுபட்ட சமூகப் பிரிவுகளும் சக்திகளும் ஏற்கும் பங்கின் மதிப்பீடும், இன்றைய போராட்டத்தையும், நாட்டு விடுதலையின் வெற்றிக்கான சாத்தியக் கூறுகளையும் பெரிதும் பாதிக்கின்றன. இந்தியாவில் வர்க்கப் போராட்டமும் தேசீயப் போராட்டமும் பரஸ்பரம் நெருங்கிய தொடர்பு கொண்டவை; இந்தப் பரஸ்பரத் தொடர்பைப் புரிந்து கொள்வதுதான், இந்திய மக்களுக்கு முன்னுள்ள புயலிடைபட்ட கடலை வெற்றிகரமாய்க் கடப்பதற்குத் திட்டமிடுவோரும், இந்திய அரசியலுக்குத் திறவுகோலும் ஆகும்.

இந்தக் கேள்விகளை அணுகுகையில் உண்மையான சமூக சக்திகள் அல்லது வர்க்க சக்திகள் யாவை என்பதைப் பாகு படுத்திப் பார்க்க வேண்டியது அவசியம்; அவற்றின் பரஸ்பர வலிமையும் ஊடாட்டமும்தாம் அடுத்தடுத்து வரும் கட்டங்

களையும் இறுதி விளைவையும், பற்பல நிகழ்காலக் கண்ணோட்டங் களையும் கருத்துக் கொள்கையையும் அடக்கி ஆளும் என்பது உண்மை; இக்கண்ணோட்டங்கள் கருத்துக் கொள்கை வாயிலாகத் தான் இச்சக்திகள் ஓரளவு அல்லது உருவாகிவரும் வெளியீடு பெறுகின்றன; அவை மேல்மட்டத்தில் பார்ப்பதற்குத் தனிப் பட்ட கருத்துக்களின் போருக்கு அடிப்படை எனக் காட்சி தரு கின்றன.

தேசீய இயக்கத்தில் இன்று மூன்று முக்கியமான போக்கு கள் அல்லது பொது சமூகக் கண்ணோட்டத்தின் மாதிரிகள் காணப்படுகின்றன.

முதலாவதாக, மிதவாத (சமூகப் பொருளில், அரசியல் பொருளிலோ அல்லது ஏகாதிபத்தியத்தின் தொடர்பிலோ அல்ல) அல்லது பின்னோக்கும் போக்கு; உயர்வாக்கப்பெற்ற பண்டைய இந்திய நாகரிகத்தினுடைய கொழுத்த தீமைகளை அகற்றிவிட்டு, ஹிந்து சமயத்தின் சாரமான கொள்கைகளையும் ஸ்தாபனங் களையும் கைக்கொண்டு, அதன் அடிப்படையில் தன் வேலைத் திட்டத்தை உருவாக்கிக் கொள்ள இப்போக்கு முயலுகிறது; நவீன தொழில்மயக் கொள்கையை (பாகுபடுத்திப் பாராமல், அதை முதலாளித்துவம் என்றோ, கம்யூனிசம் என்றோ எண்ணு கிறது) அச்சத்தோடு பார்க்கிறது; தன்னுடைய ஆதர்சமான கைநூற்பும் ஆதிகால விவசாய வாழ்க்கையும் குடியானவர் சமுதாயத்தின் விழைவுகளைப் பிரதிபலிப்பதாய் நம்பிக் கொண் டிருக்கிறது.

இரண்டாவதாக, தொழில் துறைப் பூர்ஷ்வாக்களின் சக்தி வாய்ந்த போக்கு; அது மேற்கத்திப் பாணியில் ஒரு நவீனமய மான முதலாளித்துவ இந்தியாவை உருவாக்க விரும்புகிறது; ஆனால் அதே சமயத்தில் அதற்குப் பக்கலிலேயே தொழில் துறைத் தொழிலாளர் வர்க்கத்தின் வலிமையும் கோரிக்கைகளும் ஏறிக் கொண்டேபோகும் என்கிற அச்சமும், குடியானவர் குமுறலைப் பற்றின அச்சமும் கொண்டு, தன்னுடைய நோக்கங்களை அரைகுறை சோஷலிசத் தன்மை வாய்ந்த பொதுப் படையான சொற்களில் ''வர்க்கப் போராட்டமற்ற சோஷலிசம்'', ''இந்திய சோஷலிசம்'' என்று கலங்கலான மனிதாபிமானத் தையும் வர்க்க சமாதானத்தையும் குறிப்பிட்டு சில சமயம் ஆதரிசவாதம் ஆக்கவும் முயலுகிறது.

மூன்றாவதாக, மேலெழும் சோஷலிசப் போக்கு; அதனு டைய மிகத் தெளிவான உருவத்தில், தொழில் துறைத் தொழி லாளர் வர்க்கத்தின் நோக்கத்தை உணர்வோடு அது வெளியிடு வதுடன் இந்திய சமுதாயத்தின் அடிப்படை மாற்றத்தையும்

பிரதிபலிக்கிறது; மிக வேறுபடும் அளவுத் தெளிவுடன் தேசீய இயக்கத்திற்குள் விரிவான, மேன்மேலும் பெருகுகிற ஆதரவை, குறிப்பாக இளந்தலைமுறையினரின் ஆதரவைப் பெற்று வருகிறது.

இந்தப் போக்குகளில் முதலாவதற்கு இந்த நிகழ்காலத்திலும் தொடர்ந்து முக்கியத்துவம் இருந்துவருவதைக் குறைவாக மதிப்பீடு செய்துவிடக்கூடாது; அதற்கு உறுதியான சமூக அடிப்படை இல்லை, அதனுடைய நோக்கங்கள் நிறைவு பெறுவதற்கான நடைமுறை சாத்தியக் கூறுகளும் இல்லை எனினும் அதன் முக்கியத்துவத்தை எக்காரணம் கொண்டும் குறைத்து மதிப்பிட்டுவிடக் கூடாது. தான் குடியானவர் சமுதாயத்தின் விளைவுகளைப் பிரதிபலிப்பதாயும், ஆகையால் ''உண்மையான பொதுமக்களு''க்கும் ''இந்தியவாழ்க்கை முறையின் நீடிக்கும் கட்டுக் கோப்பு''க்கும் நெருங்கி இருப்பதாகவும் அதற்குள்ள நம்பிக்கை வெற்றுப் பிரமையாகும்; அதற்கு ஈடாக. ஒரு காலத்தில் அதே மாதிரி கண்ணோட்டத்துடன் ரஷியாவில் இருந்த பாபுலிஸ்டுகளையும், அதே போல் வேறு நாடுகளில் இருந்த இயக்கங்களையும் கூறலாம்; அந்த இயக்கங்கள் எவ்வாறு தொழில் துறைத் தொழிலாளர் வர்க்கத்தின் நெருங்கிய துணையோடு விவசாயப் புரட்சி தோன்றியதும் சிதைந்தனவோ, அதே போல் இதுவும் சிதறிப் போகும். உண்மையில், தங்களால் கட்டுப்படுத்த முடியாத ஈரமற்ற பொருளாதார மாற்றத்தின் செயல் முறைகளால் அலைக்கழிக்கப்பட்டும் அபாயத்துக்கு ஆட்பட்டும், தங்களுக்குப் பழக்கமான இடத்திலிருந்தும் பொருளிலிருந்தும் பிய்த்து எறியப்பட்டும், மாற்றமும் மோதலுமான ஒரு கால கட்டத்தின் புயல்களின் இடையில் திசைகாட்டும் கருவி இல்லாமல் உலுக்கப் பட்டும், பழமையான உறுதிவாய்ந்த பாறை ஏதாவது கிடைக்காதா என்று வீணே தேடும் திகைப்புண்ட சிறு பூர்ஷ்வா வர்க்கத்தின் ஏராளமான பிரிவினர்களின் வேட்கையிலிருந்துதான் அது முளைக்கிறது. ஏகாதிபத்தியத்தினால் அழிக்கப்படுகிற சமூகசக்திகள் (அழிவுண்ட கைத் தொழிலாளர்கள், நிலமிழந்த குடியானவர்கள், நொடித்துவிட்ட சிறு வியாபாரிகள்) அனைத்தின் பாழ்பட்ட தன்மையையே அது பிரதிபலிக்கிறது என்று ஆழ்ந்து சொல்லலாம்; அச்சக்திகள் ''தீமையே வடிவான மேலை நாகரிகத்தையும்'', யந்திரத்தையும் தங்கள் பகைவர்களாய்க் காண்கிறது. அது பெரிதும் வருந்தத்தக்கக் கண்ணோட்டம்; பிரமைகளும் துன்பங்களும் நிறைந்த பள்ளத்தாக்கின் வழியே பிரயாணம் செய்வது போன்றதுதான் இவ்வுலக வாழ்க்கை என்று மிகவும் அவநம்பிக்கை கொண்டு எங்கோ இருப்பதாய்க் கூறப்படும் கற்பனையான ஆன்மீக உலகத்தில்

அமைதி தேடும் கண்ணோட்டம். அழிந்துபட்ட சக்திகளின் வேட்கை அது; நம்பிக்கையும் முன்னேற்றமுமே சுபாவமான தேசீய இயக்கத்திற்குள் அது ஏற்கனவே தோல்விகண்டு வருவது கண்கூடு. இந்தியாவில் ஏகாதிபத்தியத்தின் வாயிலாக நடைபெறும் அழிவுச் செயல் முறையின் சமூகச் சின்னமாக மட்டும் அல்லாது, காங்கிரஸ் இயக்கத்திற்குள்ளேயே காந்தியைத் தீர்க்கதரிசியாகக் கொண்டு அவரைச் சூழ்ந்துள்ள பழங்காலச் ''சநாதன'' முறையின் அடிப்படையாக இன்னும் இருப்பதாலும் அதற்கு இப்போது சிறப்பு உண்டு.

இந்தப் போக்கின் பிரதிநிதிகளின் உறுதியான வேலைத் திட்டம் கிராமப் புத்தமைப்பும், தொழில் மயம் ஆக்குவதற்கு எதிர்ப்பும்.

> ''கிராமத் தொழில்களின் ஆக்கத்தில்தான் உண்மையான சோஷலிசம் இருக்கிறது. பெருமளவு உற்பத்தியின் விளைவாக மேலை நாடுகளில் நிலவும் குழப்பமான நிலைமைகளை நாம் நம் நாட்டிலும் தோற்றுவிக்க விரும்பவில்லை''
>
> (வல்லபாய் படேல், ஆமதாபாத்தில் சொற்பொழிவாற்றியது, ஜனவரி 3, 1935.)

> ''இந்தியாவும் சீனாவும் எகிப்தும் தங்களுடைய பண்பாடுகளின் வளமான காலத்திற்காக, தங்களுடைய விவசாய நாகரிகத்தின் பழைய நாட்களைத் திரும்பிப் பார்க்க வேண்டியதாக இருக்கிறது.
>
> (ஜே.சி. குமரப்பா, அனைத்திந்தியக் கிராமத் தொழில்கள் சங்கச் செயலாளர், ''கிராம இயக்கம் எதற்கு?'', 1936, ப.55.)

தன்னிறைவு கொண்ட கிராம சமுதாயத்தை அடிப்படையாய்க் கொண்ட (மார்க்ஸ் சுட்டிக் காட்டியது போல்—உண்மையில் அதன் ஒரே மாதிரி வடிவங்கள் கீழை நாட்டுக் கொடுங்கோன்மைக்கும், அடிமைத்தனத்துக்கும், மூடநம்பிக்கைக்கும், தேக்கத்துக்கும் அடிப்படையை வகுத்துத் தந்தன) பழைய ''இந்திய நாகரிகமே'' மறுமலர்ச்சி செய்விக்கப்படவேண்டிய ஆதரிசமாய்க் கருதப்படுகிறது:

> ''இந்தியா கண்டுள்ள நாகரிகம் உலகத்தில் வெல்ல முடியாதது என்று நான் நம்புகிறேன்.''
>
> (காந்தி, ''இந்திய சுய ஆட்சி,'' 1908, புதிய முன்னுரையுடன் மீண்டும் அச்சிடப் பட்டது, 1919, ப.1916.)

ஆரம்பகாலத்தில் எந்த சமாதானத்துக்கும் இணங்காத மொழியில் காந்தி நவீன விஞ்ஞானத்தையும் யந்திரத்தையும் கடுமையாய்க் கண்டித்தார்:

''யந்திர சாதனம் கெட்டது என்பதை உணர வேண்டியது அவசியம். அப்பால் நாம் படிப்படியாக அதை ஒழித்து விடலாம்.''

(காந்தி, ''இந்திய சுய ஆட்சி'', ப.124 )

''ஆஸ்பத்திரிகள் பாவத்தை பரப்பும் நிறுவனங்கள்.''

(ஷை, ப.64)

1909 இல் ஒரு நண்பருக்கு எழுதிய ''நம்பிக்கையின் ஏற்பு'' வில் காந்தியின் கண்ணோட்டம் மிகவும் கூர்மையாக வெளிப்படுகிறது:

''இந்தியாவை ஆளுவது பிரிட்டிஷ் மக்கள் அல்ல, தன்னுடைய ரயில்வேக்கள், தந்தி, டெலிபோன், நாகரிகத்தின் வெற்றி எனக் கொண்டாடப்படும் ஒவ்வொரு சாதனத்தின் வாயிலாகவும் நவநாகரிகம் தான் ஆட்சி புரிகிறது......

''பிரிட்டிஷ் ஆட்சியின் இடத்தில் நவீன முறைகளை அடிப்படையாய்க் கொண்ட இந்திய ஆட்சி வந்தால், இங்கிலாந்துக்கு இன்று வடிகட்டி எடுத்துச் செல்லப்படும் பணத்தில் கொஞ்சம் கையில் தங்கும் என்பதைத் தவிர, இந்தியா சிறப்பாக இராது; ஆனால், அப்போது இந்தியா, ஐரோப்பா அல்லது அமெரிக்காவின் இரண்டாவது அல்லது ஐந்தாவது நாடாக இருக்கும்......

''மருத்துவ விஞ்ஞானம் மாந்திரீக முறையின் வடித்தெடுத்த சாரம். உயர்ந்த மருத்துவத்திறமை எனப்படுவதற்குப் போலி வைத்திய முறை எவ்வளவோ மேல்....

''சென்ற ஐம்பது ஆண்டுகளில் கற்றவற்றை எல்லாம் மறப்பதில்தான் இந்தியாவின் விமோசனம் இருக்கிறது. ரயில்வேக்கள், தந்திகள், ஆஸ்பத்திரிகள், லாயர்கள், டாக்டர்கள்—இவை, இவர்கள் போன்றன மறைய வேண்டும், உயர் வகுப்பினர் எனப்படுவோர் உணர்வோடும், சமய நம்பிக்கையோடும், மனமறிந்தும் எளிய குடியானவ வாழ்க்கை வாழக் கற்க வேண்டும்.''

(காந்தி, ''நம்பிக்கையின் பாவ ஏற்பு,'' 1909, ''சொற்பொழிவுகளும், பப.1041-1043.)

இந்தத் திட்டம் இந்திய வறுமைக்குத் தீர்வு காண முயலுவது அல்ல, மனித இனத்தில் பெரும் பாலோருக்குத் தெய்வீகமாய்

அமைந்த வாழ்க்கை நிலைமையே வறுமை என்று அதை ஏற்றிப் போற்றுவதாகும்:

''பௌதிக வசதிகளின் பெருக்கம் எவ்வகையிலும் அற வளர்ச்சிக்கு உகந்தது அல்ல.''

(காந்தி, ''நம்பிக்கையின் பாவ ஏற்பு'', ப.1042.)

''நம்முடைய பௌதிக உடைமைகள் அதிகமானால், நம் முடைய உலக பந்தமும் அதிகமாகும்.''

(குமரப்பா, ''கிராம இயக்கம் எதற்கு?'',ப.39.)

''ஏராளமான பொருள்கள் நமக்குச் சொந்தமாக இருப்ப தால் நாம் இன்பம் பெற முடியாது.''

(குமரப்பா,''கிராம இயக்கம் எதற்கு?'', ப.55.)

பசிப் பிணிவாய்ப்பட்டு அதிருப்தி கொண்ட பொது மக்களுக்கு இடையில் செய்யப்பட்ட இத்தகைய போதனைக்கு இந்தியத் தொழிலதிபர்களின் பேராதரவும், நேர்முக உதவியும் கிடைத்த தில் வியப்பில்லை; யந்திர சாதனங்களையும் தொழில் துறைச் சுரண்டல் முறையையும் கொண்டு செல்வதைக் கொண்டே அவர் கள் ஓய்வு நேரத்தில் கொஞ்சம் கைநூற்பு செய்து மக்களின் எளிய வாழ்க்கையின் திருப்திக்கு எடுத்துக் காட்டாக விளங்க அவர்களுக்குக் கசக்கவில்லை. செல்வத்தின் உரிமைகள் பற்றிக் காந்தி தன் சொந்தக் கோட்பாட்டைத் தெளிவாகவே மொழி கிறார்:

''நாம் எல்லாரும் சமமாகப் பிறந்திருந்தாலும், அதாவது, சமவாய்ப்புகளுக்கு நமக்கு உரிமை உண்டு என்றா லும், நம் எல்லோருக்கும் ஒரேவிதத் திறமைகள் இல்லை என்பது என் சமூகக் கொள்கை. நம் எல்லாருக்கும் ஒரே நிறத்தோல் இருக்க வேண்டும் என்பதோ, ஒரே அளவு மதி நுட்பம் இருக்க வேண்டும் என்பதோ, ஒரே அளவு உயரம் இருக்க வேண்டும் என்பதோ இயற்கையில் சாத்தியமில்லை; எனவே, மற்றவர்களைவிடச் சிலர் மிகுதியான பொருளாயத ஆதாயம் பெறுவதற்கு ஏற்றவர்களாக இருப்பது இயற்கை. சக்தி உள்ளவர்கள் அதிகமாய் அடைய வேண்டும் என்று விரும்புகிறார்கள், தங்கள் ஆற்றல்களை அதற்காகப் பயன் படுத்துகிறார்கள். அவர்கள் தங்கள் ஆற்றல்களை நல்லுணர்ச்சி யோடு பயன் படுத்தினால், மக்களின் நலத்திற்காகப் பணி யாற்றுவார்கள். இவர்கள் 'நம்பகர்கள்' அவ்வளவுதான். மதிநுட்பம் உள்ளவன் மிகுதியான ஆதாயம் ஈட்டுவதை, நான் அனுமதிப்பேன், தன் ஆற்றல்களைப் பயன்படுத்துவ தினின்று நான் அவனைத் தடுக்க மாட்டேன்.''

(காந்தி, சார்லஸ் பெட்ராஷுக்குப் பேட்டி, மாண்ட், பிப்ரவரி 20, 1932.)

இங்கு ஆதரிசவாதப் போர்வை போர்த்திக்கொண்டு பூர்ஷ்வா தத்துவம் வெளிவருகிறது.

இந்தத் திட்டத்தின் உடனடியான நடைமுறை வேலைகளாக, சர்க்கா அல்லது ராட்டையையும், தக்ளியையும் பரப்புதல், இந்தியக் கைத்தறித் துணியான கதரைத் தேசீயச் சின்னமாக ஆக்குதல், கிராமக் கைத்தொழில்களுக்கு ஊக்கம் தருதல் ஆகியவை மேற்கொள்ளப்பட்டுள்ளன. ''அனைத்திந்தியக் கிராமத் தொழில்கள் சங்கம்'', தேசீய காங்கிரசின் முக்கியமான கிளை நிறுவனமாக நிறுவப்பட்டுள்ளது. இந்த இயக்கத்திற்குள்ள காரிய சாத்தியமான அடிப்படையை இங்கு ஒப்புக் கொள்ள வேண்டியது அவசியம். முற்றிய பூர்ஷ்வா பொருளாதாரத்தில் தேர்ந்த பொருளாதார வல்லுனர்கள் தங்கள் ஞானத்தின் உயர்ந்த பீடத்திலிருந்து, இந்தியப் பொருளாதாரத்தின் மாபெரும் பிரச்னைகளையும், உற்பத்திக் குறைவையும் கைநூற்பாலும் ஆதிகால உத்தியாலும் தீர்த்துவிடலாம் என்கிற மிகப் பிற்போக்கான கருத்தைத் தாராளமாக ஏளனம் செய்கிறார்கள். ஆயினும், கொள்கை வசப்பட்டது மட்டும் அல்லாமல், நடைமுறையில் பொது அறிவுள்ள காரணங்களால் இந்த இயக்கத்துக்கு ஓரளவு—வரையறுக்கப்பட்டதாயினும்—ஆதரவு கிடைத்துள்ளது. விவசாயத்தில் நிலைமை சீர் கேடுற்றுள்ளது, நிலத்தையே நம்பிவாழும் பெருங்கூட்டமான மக்களுக்கு வருடத்தில் பாதி நாட்கள் யாதொரு வேலையும் இல்லாத நிலைமை, தொழில்துறை வளர்ச்சியும் இல்லை,—இந்தச் சூழ்நிலையில் கைநூற்பும், கைத்தொழில்களும் ஏராளமான மக்களுக்குத் தற்காலிகமாக உக்கிரத்தைத் தணிக்க உதவுகின்றன, இந்தத் தொழிலைச் செய்யக் கருவிகளோ வசதியோ தேவை இல்லை.

ஆயினும், இந்தியப் பொருளாதாரத்தில் இப்போதுள்ள முடக்கங்களையும் ஒடுக்கல்களையும் ஏற்பதன் அடிப்படையில் இத்திட்டம் உருவானது, இந்தத் தீமைகளை மாற்றாமல் அவற்றுக்கு இணக்கமாக இருக்க முயலுவது. பொருளாதார ரீதியாக, ஒரு முதலாளித்துவ உலகத்தில் கைத்தொழிலின் செயற்கையாக மறுமலர்ச்சி முயற்சிக்கு இடம் கிடையாது. காதி அல்லது கைநெசவுத்துணி விலையில் ஆலைத்துணியோடு போட்டி இட முடியாது, ஆகையால் மிக ஏழைகளுக்கு அது பயன்படாது. 1938, நவம்பர் 19 ஆம் நாள் தம் ஹரிஜன் ஏட்டில் காந்தி, காங்கிரஸ் விதிகளில் கதரைப் பற்றின பிரிவு கௌரவிக்கப்படவில்லை என்று குறைகூறி ''வெளி நாட்டு ஆடம்பரத் துணிபோல் தோற்றத்தில்

நேர்த்தியாகவும் மென்மையாகவும், அவ்வளவு மலிவாகவும் இல்லாவிட்டாலும் காதியையே கட்டும்படி'' தம் நாட்டு மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தார். தேசபக்தி நிறைந்த வேண்டுகோள்களால் முதல் கஷ்டத்தைச் சமாளித்து விடலாம். இரண்டாவது கஷ்டம் (''அவ்வளவு மலிவாகவும்'', இந்திய மக்களுக்கு இப்போதுள்ள வருவாய் நிலையில் சமாளிக்க முடியாதது. இந்தியாவைப் போல் மிகக்கொடிய வறுமை நிறைந்த நாட்டில், எல்லாவற்றுக்கும் முதன்மையாக வேண்டியது, மிக மிகத் தாழ்ந்த உற்பத்தியை உறுதியாக்கும் மிக உழைப்பு தேவைப்படுகிற பண்டைக்கால முறை அல்ல; ஆனால், மிக உயர்ந்த அளவு விரைவுடன் உற்பத்தியை ஏராளமாய்ப் பெருக்கி வறுமையை வெல்ல உதவும் சாதனங்களை வழங்கக்கூடிய மிக நவீன தொழில் நுட்பமும், கருவிகளும்தாம் என்பது தெளிவு. உண்மையில் காந்தி பின்னர் வெளியிட்ட தம் அறிவிப்புகளில் காந்தி யந்திர சாதனம் பற்றிய தம் கண்ணோட்டத்தை மாற்றிக் கொண்டுள்ளதைக் காணலாம்; ஹரிஜனில் பின்னர் வெளி வந்த ஒரு கட்டுரையில் ''நிறைவேற்றப்பட வேண்டிய வேலைக்குப் போதுமான கைகள் இல்லாவிட்டால் யந்திரமயம் ஆக்குவது நல்லது; இந்தியாவில் இருப்பதைப் போல் தேவைக்கு மேல் அதிக மான கைகள் இருக்கும்போது அது ஒரு தீமையே'' என்று வாதிக்க முயலுகிறார். இந்த வாதத்தின் கீழுள்ள பிற்போக்கு வழு வெளிப்படை.

இந்தியாவின் பிரச்னைகளுக்குத் தீர்வாகப் பண்டைக் காலப் பொருளாதார முறையைப் பிரசாரம் செய்வது பிற்போக்கானது; தீர்வைத் தேட வேண்டிய இடத்துக்கு நேர் எதிர்த்திசையில் அது அழைத்துச் செல்கிறது என்பதால் மட்டும் அல்ல (ஏனெனில், இப்போதுள்ள வறுமை, துன்பம் ஆகிய தீமைகள் பண்டைக் காலத் தொழில் நுட்பத்தில் வேரோடியுள்ளன, அந்தப் பண்டைக் காலத் தொழில் நுட்பமோ ஏகாதிபத்தியத்தின் கீழ் சமூகச் சுரண்டல் முறையில் வேரோடியுள்ளது), ஆனால், குடியானவர் சமுதாயத்துக்கும், மக்களில் கீழ்நிலையில் இருப்போருக்கும் முன்னுள்ள அடிப்படை சமூகப் பணிகளிலிருந்து அது திசைதிருப்பி விட முயலுகிறது என்பதாலும்தான். நிலப்பிரச்னையையும், நிலப் பிரபுத்துவப் பிரச்னையையும், நிலத்தை மீண்டும் பிரிவினை செய்யும் பிரச்னையையும் தீர்க்காமல் விவசாய முன்னேற்றம் சாத்தியம் அல்ல. ஆனால், இங்கு, மறைந்து விட்ட கிராம சமுதாயத்தை வழிபடுவோரின், விவசாய ஆதரிசவாதிகளின் குரல் பலவீனமுற்றுத் தள்ளாடி, வெட்கத்தோடு, தெளிவில்லாமல், நிலப்பிரபுத்துவத்தை ஆதரிப்பதில் ஒடுங்கிவிடுகிறது. ஆகையால், 1934 இல் சோஷலிச அபாயம் பற்றி அச்சம் கொண்டு தம்மைக்

காணவந்த ஐக்கிய மாகாணங்களின் ஜமீன்தார்களுக்கு அல்லது நிலப்பிரபுக்களுக்குக் கான்பூரில் அளித்த பிரபலமான பேட்டியில் காந்தி அவர்களுக்கு, ''இருதரப்பிலும் மனமாற்றம் நிகழ்ந்தால் ஜமீன்தார்களுக்கும் குடிவாரதாரர்களுக்கும் இடையில் நல்லுறவு களை உண்டாக்க முடியும். தாலுக்தாரி அல்லது ஜமீன்தாரி ஒழிப் பைத் தாம் ஆதரிக்கவில்லை'' என்று உறுதி கூறினர். அவர் மேலும் கூறினர்:

> ''நியாயமான காரணம் இல்லாமல் சொத்துடைய வகுப் பினரிடமிருந்து அவர்களுடைய தனிவுடமையைப் பறிப் பதற்கு நான் உடந்தையாக இருக்க மாட்டேன். உங்களுடைய உள்ளத்தில் புகுந்து, உங்களை மாற்றி, உங்களுடைய தனி வுடமையை எல்லாம் உங்களுடைய குடிவாரதாரர்களுக்காக நீங்கள் நம்பகத்தில் வைத்துக் கொள்ளுமாறும், அவர் களுடைய நன்மைக்கே முதன்மையாக அதைப் பயன்படுத்து மாறும் செய்ய வேண்டும் என்பது என் நோக்கம்.....நான் கனவு காணும் ராமராஜ்யத்தில் அரசனைப் போல் ஆண்டிக் கும் உரிமைகள் உறுதி செய்யப்படும். ஒரு வர்க்கப் போரைத் தடுக்க என் செல்வாக்கின் முழுபாரத்தையும் பயன்படுத்து வேன் என்பதை நீங்கள் நம்பலாம்.......உங்களுடைய சொத்தை உங்களிடமிருந்து பறிக்க அநியாயமான ஒரு முயற்சி நடப்பதாய் வைத்துக் கொண்டால் நான் உங்கள் பக்கம் போராடுவதைக் காண்பீர்கள். நம்முடைய சோஷ லிசம் அல்லது கம்யூனிசம், அஹிம்சையையும், முதலாளிக்கும் தொழிலாளிக்கும்இடையில் இணக்கமான ஒத்துழைப்பையும், நிலப்பிரபுவுக்கும் குடிவாரதாரருக்கும் இடையில் ஒத்துழைப் பையும் அடிப்படையாய்க் கொள்ள வேண்டும்.''
>
> (காந்தி ஐக்கிய மாகாணங்களின் ஜமீன்தாரர்கள் தூது கோஷ்டிக்கு அளித்த பேட்டி, ஜூலை, 1934, மஹ்ராட்டா, ஆகஸ்டு 12, 1934.)

இவ்வாறே, காந்தி தொழில் துறை முதலாளித்துவத்திற்கு ஆதரவு தந்ததையும், வர்க்கப் போராட்ட அடிப்படையில் தொழிலாளர் நிறுவனங்கள் அமைப்பதற்கு எதிர்ப்பு தெரிவித் ததையும் நாம் ஏற்கனவே கவனிக்க வாய்ப்பிருந்தது.

பெரிய பூர்ஷ்வாக்களின் நோக்கில் இவ்விதப் போதனையின் பயனுள்ள சிறப்பு இதுதான்: அவர்கள் இந்தக் கனவுலோக வேட்கைகளையும், கபடமற்ற கற்பனைகளையும் ஒரு புன்சிரிப்போடு பொறுத்துக் கொள்வதோடு ஊக்கியும் விடுகிறார்கள்; ஏனெனில், தங்களுடைய வர்க்க நலன்களைக் காக்கவும், பொதுமக்களைக் கட்டுப்படுத்தி வர்க்க அமைதி ஏற்படுத்தவும் அந்தப் பிரசாரம்

எவ்வளவு வியாபார மதிப்புடையது என்று அவர்களுக்குத் தெரியும். நவீன காலத்தில் நெருக்கடியான மாற்றங்கள் நிகழ்கையில் பூர்ஷ்வா தேசீயத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதியாகவும் மிகத்திறமை வாய்ந்த தலைவராகவும் காந்தியின் வரலாற்றுச் சிறப்புள்ள பங்கின் சமூக முக்கியத்துவம், அவருடைய சமூக தத்துவத்திற்கும் பூர்ஷ்வா கண்ணோட்டத்திற்கும் இடையில் மேலெழுந்த வாரியான முரண்பாடு இருந்தாலும், நடைமுறையில் அவருடைய அரசியல் பங்கோடு ஒத்திருந்தது. மிகச் சாதாரண விமரிசகன்கூட கண்டுகொண்டு காட்டிவிடக்கூடிய அளவில் அவருடைய கூற்றுகளிலும் போதனைகளும் உள்ள வெளிப்படையான முரண்பாடுகளும் குறைபாடுகளும்தாம் உண்மையில் அவருக்கே உரித்தான சிறப்புக்கும் சாதனைக்கும் திறவுகோலாகும். தேசிய இயக்கத்தில் நேர்முகத் தலைமைக்கும் விழிப்புக்கும்—இன்னும் பொது மக்களின் உணர்வுள்ள விழிப்பு அல்ல—இடையில் இந்த மாற்ற கால கட்டத்தில் இருந்த பிளவை வேறு எந்தத் தலைவராலும் இணைத்திருக்க முடியாது. நன்மைக்கும் சரி, தீமைக்கு சரி, காந்தி இதைச் சாதித்தார், அவரே தோற்றுவித்தது போலத் தோன்றும்படி இயக்கத்துக்குத் தலைமைவகித்து நடத்தினர். மக்களில் கீழ் நிலையிலுள்ளோர் தங்கள் நலன்களைப்பற்றின உணர்வு கொள்ளும் அளவுக்கும், புராணத் திரைகளின் தேவை இல்லாமல் இந்திய அரங்கில் உண்மையான வர்க்க சக்திகளும் வர்க்க உறவுகளும் தெளிவாக வெளிப்படும் அளவுக்கும்தான் இந்தப் பங்கு முடிவுக்குவரும்.

ஆயினும், காந்தீயத்தை அலங்கார பொம்மையாகவும் பொதுமக்களின் மீதுள்ள அதன் தலைமைக்காகவும் தாராளமாகப் பயன்படுத்திக் கொள்ளும் தொழில் துறைப் பூர்ஷ்வாக்கள், தேசிய இயக்கத்தின் அவசியமான வேலைத்திட்டத்தில் தங்கள் தேவைகளிலும் முன்னேற்றகரமான தங்கள் தொழில் வளர்ச்சியிலும் காந்தீயம் குறுக்கிடுவதை அவர்கள் அனுமதித்ததில்லை. இவ்விஷயத்தில் கொள்கையளவில் சமூக மிதவாதம் எவ்வாறு பிரசாரம் செய்ய அனுமதிக்கப்படினும் நடைமுறையில் அதைத் தள்ளித்தான் வைக்க வேண்டியிருந்தது; இந்தியாவில் யந்திர சாதனங்களால் உற்பத்தி செய்யப்பட்ட துணிக்குச் சம உரிமைகள் ஏற்கப்பட்டதையும், அல்லது 1930 ஆம் ஆண்டில், சாதாரணமான பூர்ஷ்வா வர்த்தக, தொழில்துறை, நிதித் திட்டமான காந்தியின் பதினோம்சத் திட்டத்தையும் இங்கு குறிப்பிடலாம். இன்று, தேசீய இயக்கமும் தேசீய காங்கிரசும் ஒற்றுமையாகத் தொழில்துறை வளர்ச்சியை விரைவுபடுத்தும் திட்டங்களில் கவனம் செலுத்துகின்றன; 1938 ஆம் வருட தொழில்துறைத் திட்ட மாநாட்டைத் தொடர்ந்து காங்கிரஸ் ஒரு

தேசீய திட்டக்குழு ஏற்படுத்தியிருப்பதிலிருந்து இது வெளியாகிறது.

1938 ஆகஸ்டில் நடந்த இந்திய விஞ்ஞானக் கழகத்தின் ஆண்டுவிழாக் கூட்டத்தில், தொழில் வளர்ச்சி பற்றின நவீன காங்கிரஸ் கண்ணேட்டத்தை அதன் தலைவர் வெளியிட்டார். இக் கூட்டத்தில் பேராசிரியர் சாஹா பின்வரும் கேள்வியை எழுப்பினர்:

> ''எதிர்கால இந்தியா கிராம வாழ்க்கை அல்லது மாட்டு வண்டித் தத்துவத்தைப் புதுப்பித்து, அதன் மூலம் அடிமை மனப்பான்மையைச் சாசுவதம் ஆக்கப் போகின்றதா, அல்லது, தன்னுடைய இயற்கை வளங்கள் எல்லாவற்றையும் பயன் படுத்திக் கொண்டு, வறுமை, அறியாமை, தற்காப்புப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகண்டு, நாடுகளின் நல்லுறவு வரிசையில் மதிப்புக்குரிய ஓர் இடத்தை ஏற்று, நாகரிகத்தின் புதுயுகம் ஒன்றைத் தொடங்கும் வகையில் ஒரு நவீன தொழில்மயமான நாடாக விளங்கப் போகிறதா என்று நான் கேட்கலாமா?''

தேசீய காங்கிரசின் தலைவர் சு. ச. போஸ் மறுமொழி கூறினர்:

> ''விஞ்ஞானத்தின் உதவியோடுதான் நாட்டுப் புத்தமைப்பு சாத்தியமாகும்.... இந்தியா இன்னும் வளர்ச்சிக் கிரமத்தில் தொழில்துறைக்கு முந்தின நிலையிலேதான் இருக்கிறது. ஒரு தொழிற் புரட்சியின் வேதனைகளைப் பட்டாலொழிய மீட்சிக்கோ, புத்தமைப்புக்கோ வழி இல்லை. விரும்புகிறேமோ, இல்லையோ, நவீன வரலாற்றில் இப்போதைய யுகம் தொழில் துறை யுகம் என்ற உண்மையை நாம் ஏற்பதைத் தவிர வேறு வழி இல்லை. தொழிற் புரட்சியினின்று தப்பவே இயலாது. உயர்ந்த பட்சம், இந்தப் புரட்சி, அதாவது, தொழில்மயமாக்கம், கிரேட் பிரிட்டனைப்போல் படிப் படியானதாக இருக்க வேண்டுமா, அல்லது சோவியத் ரஷ்யாவைப்போல் வலுக்கட்டாயமான முன்னேற்றமாக இருக்க வேண்டுமா என்பதை நாம் தீர்மானிக்க முடியும். இந்த நாட்டிலும் அது வலுக்கட்டாயமான முன்னேற்றமாக இருக்க வேண்டியதாக இருக்கும் என்று நான் அஞ்சுகிறேன்.''

நடைமுறை அனுபவமும் வளர்ச்சியும் இவ்வாறு பழைய தத்துவ சிந்தனைகளுக்குப் பதில் தந்துவிட்டன. பழைய குழப்பங்களின் மிஞ்சிய எச்சங்களாகச் சமூக மிதவாதம் தீவிர தேசீய இயக்கத்தில் தங்கி இருக்கிறதே அன்றி, கொள்கையை அறுதியிடும் சக்தியாக அது இல்லை. எனவே நடைமுறை விளைவில் மூன்றல்ல, இரண்டு

முக்கியமான போக்குகள், கோஷ்டிகள், வேலைத் திட்டங்கள், கொள்கை முறைகள் நவீன தேசீய இயக்கத்தில் உள்ளன என்று ஏற்படுகிறது; சிறு பூர்ஷ்வா வர்க்கத்தாரின் அணிகளில் பல வகைகளில் பிரதிபலிக்கும் செல்வாக்குள்ள தொழில் துறைப் பூர்ஷ்வா வர்க்கம்; தொழிலாளர் நலன்களையும், பெரும் ஏழைக் குடியானவர் சமுதாயத்தையும், நகர்ப்புற சிறு பூர்ஷ்வாக்களில் கீழ் நிலையில் இருப்போரையும் பிரதிபலிக்கும் தொழில்துறைத் தொழிலாளர்களின், சோஷலிசத்தின் போக்கு. அணிகள் இப்போது இன்னும் தெளிவாகப் பிரிவினை ஆகவில்லை என்றாலும், இந்த இரண்டு முக்கியமான கொள்கை அணிகளுக்கு இடையில் தான் பற்பல வேலைத் திட்டங்களும், தலைமைகளும், பிரிவினரும் உண்மையில் கோஷ்டிகளாய்க் கூடுகிறார்கள். இப்போது தேசீயப் போராட்டத்தின் நோக்கங்களுக்காக ஒன்றுகூடி முன்னேறும் இந்தக் கோஷ்டிகளின் ஊடாட்டத்தையும் அதிகாரத் தொடர்புகளையும்,மாறுபட்ட சமூக நோக்கங்கள் இருந்தாலும் இப்போதைய பிரச்சினைகளைப் பாதிக்கும் நாட்டுப் புத்தமைப்பின் நோக்கங்களில் ஓரளவையும் பொறுத்துத்தான் இந்திய அரசியலின் முன்னேற்றத்தின் எதிர்காலப் பாதை இருக்கும்.

## 3. புத்தமைப்பு, தொழில்மயமாக்கல், சோஷலிசம்

தொழில்மயமாக்கலை அடிப்படையாய்க் கொண்ட மிகுந்த பயன்தரக்கூடிய ஒரு வேலைத்திட்டம் நாட்டுப் புத்தமைப்புக்குத் தேவை என்பதை நவீன காலத்தில் தேசீய இயக்கம் ஒரு மனதாய் ஏற்றுக் கொண்டுள்ளது. 1938, அக்டோபரில் தில்லியில், காங்கிரஸ் மாகாண அரசுகளின் தொழில் அமைச்சர்கள் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் பின்வருமாறு குறிப்பிடுகிறது:

> ''தொழில்களின் அமைச்சர்களின் இந்த மாநாடு, வறுமை, வேலை இன்மை, தற்காப்பு, பொதுவாகப் பொருளாதார மறுமலர்ச்சிக்கான பிரச்சினைகளைத் தொழில்மயம் ஆக்காமல் தீர்க்க முடியாது என்று கருதுகிறது. இத்தகைய தொழில் மயமாக்கலுக்கு முதல் நடவடிக்கையாகத் தேசியத் திட்டமிடலுக்கான ஒரு விரிவான திட்டம் வகுக்கப்பட வேண்டும்....
>
> ''பல மாகாண அரசுகளின் கருத்துகளைப் பரிசீலனை செய்தபின், இந்தியா முழுமைக்குமான விரிவான தொழில் திட்டம் தயாரிக்கப்பட்டுப் பரிசீலிக்கப்படுவது ஒருபுறம் இருக்க, பின்கண்ட தேசிய முக்கியத்துவமுள்ள பெருவாரித் தொழில்களை அனைத்திந்திய அடிப்படையில் தொடங்குவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்றும்,

இயன்றவரை எல்லா மாகாணங்களின், சமஸ்தானங்களின் எல்லா முயற்சிகளும் ஒருங்கிணைந்த முறையில் மேற்கொள்ளப் படவேண்டும் என்றும் இந்த மாநாடு கருதுகிறது:

அ) எல்லா வகை யந்திர சாதனங்கள் தளவாடங்கள், கருவிகள் உற்பத்தி;

ஆ) கார்கள், மோட்டார் படகுகள் முதலியனவும், அவற்றின் துணைப் பொருள்களும், போக்குவரத்து, செய்தித்துறைகள் சம்பந்தப்பட்ட மற்ற தொழில்களும்;

இ) மின்சார யந்திர வகைகளும் துணைப்பொருள்களும் உற்பத்தி செய்தல்;

ஈ) கனரக ரசாயனப் பொருள்களும், உரமும் உற்பத்தி செய்தல்;

உ) உலோக உற்பத்தி;

ஊ) வலன் உற்பத்தி, வலன் வழங்கல் சம்பந்தப் பட்ட தொழில்கள்.''

இந்தத் தீர்மானத்தின்படி, காங்கிரஸ் காரியக் கமிட்டியின் ஆலோசனை பேரில் ஓர் அனைத்திந்தியத் தேசீயத் திட்டக் கமிட்டி அமைக்கப்பட்டது. இந்தக் கமிட்டியின் சிபாரிசுகளின் தொகுப்பு ஏற்கனவே வெளியிடப்பட்டுவிட்டது.

இந்தியாவில் இப்போது புத்தமைக்கும் திட்டமிட்ட வளர்ச்சிக்குமான பல பேராசையான திட்டங்கள் கூறப்படுகின்றன, விவாதிக்கப்படுகின்றன. உயர் மட்டத்திலுள்ள இந்தியத் தொழிலதிபர்களின் திட்டமான ''இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கான ஒரு திட்டம்'' (பொதுவாக ''பம்பாய் திட்டம்'' என்ற பெயரால் அறியப்படுகிறது.) 1944 இலும் 1945 இலும் இரண்டு பாகங்களாக வெளிவந்ததைச் சிறப்பாய்க் குறிப்பிட வேண்டும். பிர்மாண்டமான தொகையான 10,000 கோடி ரூபாய்கள் முதற் பொருள் செலவினத்தின் அடிப்படையில், 15 வருட காலத்துக்குள், மொத்தத் தேசிய வருவாயை மும்மடங்கு பெருக்கி, அதன் வாயிலாக, தனிநபர் வருமானத்தை இரட்டிப்பாக்க வேண்டும் என்னும் நோக்குள்ள இத்திட்டம் மக்கட் தொகைப் பெருக்கத்தையும் கணக்கிடுகிறது. இந்த நோக்கத்தை நிறைவேற்ற, முதன்மையாகத் தொழிலின்மீதே நம்பிக்கை வைக்கப்படுகிறது. தொழிலிலிருந்து கிடைக்கும் வருமானம் 500 சதவீதமும், விவசாய வருமானம் 130 சதவீதமும், பணியாளர் தொகுதி வருமானம் 200 சதவீதமும் உயர்த்தப்பட வேண்டும் என்றும் அதனால், இப்போது மொத்த தேசீய வருமானத்தில்

17 சதவீதமாக உள்ள தொழிலின் பங்கு 35 சதவீதமாகவும், இப்போது 53 சதவீதமாயுள்ள வேளாண்மையின் பங்கு 40 சதவீதமாகவும், இப்போது 22 சதவீதமாயுள்ள பணியாளர் தொகுதியின் பங்கு 20 சதவீதம் ஆகும் என்றும் திட்டத் தயாரிப்பாளர்கள் உரைக்கிறார்கள். சக்தி, சுரங்கம், பொறி இயல், ரசாயனப் பொருள்கள், கப்பல் கட்டுதல், கார்கள், ஆகாய விமானங்கள் முதலிய அடிப்படைத் தொழில்களுக்கு முதன்மை தரவேண்டும் என்று திட்டத் தயாரிப்பாளர்கள் கோருகிறார்கள். சிறுதொழில்களுக்கும் குடிசைத் தொழில்களுக்கும் போதிய வாய்ப்பு தரப்படும்.

இந்தப் பாராட்டத்தக்க நோக்கங்களைப் பேசும் திட்டம், அவை நிறை பெறுவதற்குத் தேவையான அடிப்படை முன்நிபந்தனைகளைப் புறக்கணித்துவிடுகிறது. நிலப்பிரபுத்துவத்தின் மரணப்பிடியும், பிரிட்டிஷாரின் சட்டவுரிமை பெற்ற நலன்களின் ஆதிக்கமும்தான் இந்தியாவில் தொழில்களின் வளர்ச்சிக்கு விலங்குகளாய் இருப்பவை; அவற்றை அகற்றுவது பற்றித் திட்டம் பேசவில்லை. நாட்டுச் செல்வத்தைச் சமமாகப் பகிர்வு செய்யும் பிரச்னையைப் பற்றியும் திட்டம் பயனுள்ள முறையில் பரிசீலனை செய்யவில்லை. நிதியும் பெருத்த அளவில் பணவீக்கத்தாலும் வெளிநாட்டு மூலதனத்தாலுமே ஏற்பாடு செய்யப்படும். உண்மையில், தேசிய நலன்களுக்கு உகந்த முறையில் சுதந்திரமான தொழில் வளர்ச்சியை அகக்கண்களால் காண்பதாய்த் திட்டம் இல்லை; மாறாக, பிரிட்டிஷ் நிதி-மூலதனத்தோடு ஒத்துழைத்து இந்திய பூர்ஷ்வாக்கள் இந்தியாவைக் கூட்டாகச் சுரண்டல் செய்யும் முயற்சியின் நாற்றம் திட்டத்தில் வீசுகிறது. இந்தத் திட்டத்தின் தயாரிப்பாளர்களான ஜே. ஆர். டி. டாடா, ஜி. டி. பிர்லா, சர் ஸ்ரீ ராம் ஆகிய மூவரும் பிரிட்டிஷ் முதலாளிகளுடன் வியாபார ஒப்பந்தம் செய்து கொண்டதிலிருந்தே, வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது பற்றி அவர்கள் பகட்டாய்ப் பேசும் பேச்சுகளுக்குப் பின்னுள்ள இந்த உண்மையான நோக்கம் முன்பே வெளியாகிவிட்டது.

இந்தியாவின் சமூக, பொருளாதாரப் புத்தமைப்புக்கு மிகுந்த பயனுள்ள வழியாகத் தொழில் மயமாக்குவதைப் பொதுவாகவும் மேன்மேலும் மிகுதியாகவும் வற்புறுத்தப்படுவதைத் தேசிய இயக்கத்தின் பெரிய முன்னேற்றகரமான நடவடிக்கை என வேண்டும். ஆனால், அத்தகைய வேலைத்திட்டத்தின் பிரச்னை, அதை நிறைவுபெறச் செய்வதற்குத் தேவையான நிலைமைகளையும் முறைகளையும் பற்றியும், அதை நிறைவேற்றும் சக்தி வாய்ந்த சமூக சக்திகளைப் பற்றியும் ஆழ்ந்து பாதிக்கக்கூடிய புது மாதிரி

யான பிரச்னைகளை எழுப்புகிறது என்பது கண்கூடு. பொருளாதார அதிர்ச்சியின் கீழும் சோவியத் யூனியனில் சோஷலிஸ்டுத் திட்டமிடல் வெற்றிகள் பெற்றதால் ஊக்கப்பட்டும், பல முன்னேற்றம் பெற முதாளித்துவ நாடுகளில் ''திட்டமிடல்'' என்ற கருத்து பல வட்டாரங்களில் விரிவான முறையில் கைக்கொள்ளப் பட்டுள்ளது; ஆனால், முதலாளித்துவப் பொருளாதாரத்தையும் சோஷலிசப் பொருளாதாரத்தையும் ஆளும் வேறுபட்ட விதிகளைக் கவனியாமலும், உண்மையான சமூக, வர்க்க சக்திகளைக் கவனியாமலும் நுட்பமான தொழில் நுணுக்க முறையில் அதைக் கையாளுகிறார்கள். முதலாளித்துவ நாடுகளின் அனுபவம் இத்தகைய அணுகுமுறையின் பலவீனத்தை மிகத் தெளிவாய்க் காட்டியுள்ளது. ஒரு புரட்சிகரமான சமூக மாற்றச் செயல் முறையில் புகுந்து கொண்டிருப்பதும், பசிமிக்க தொழிலாளர்கள், குடியானவர்களின் கோரிக்கைகள் மாற்றத்தின் தீர்மானமான உந்து சக்தியாகக் களத்தின் மையப்பகுதியில் அவசியமாக இருக்கவேண்டியதுமான இந்தியாவில் இத்தகைய அணுகுமுறை முற்றிலும் சாத்தியம் அல்ல. பொருளாதாரப் புத்தமைப்புப் பிரச்னையை, அடிப்படையான சமூக, வர்க்கப் பிரச்னைகளினின்றும் பிரிக்கமுடியாது.

தொழில் மயமாக்கலும், இப்போதைய வறுமைவாய்ப்பட்ட, தாழ்ந்த உத்தியின் தரங்களிலிருந்து முன்னேற்றகரமான உத்தியுள்ள நாடாக இந்தியாவைப் பொதுவாகப் புதிதாய் அமைத்தலும் அசுரசக்திகள் தேவைப்படும் பணிகள் என்பது வெளிப்படை. அதற்கு மொத்த மக்கட்தொகையின் முழு ஒத்துழைப்பும் தேவை. தேசீயப் பொருளாதாரம், நிதியின் முக்கியமான விஷயங்களில் அதற்கு அரசாங்க அதிகாரம் தேவை.

இந்தியப் பூர்ஷ்வா வர்க்கத்தினால் தன் பணியை நிறைவேற்ற முடியுமா? இந்தியப் பொதுமக்கள் தாங்கள் போராடி தேசீய சுதந்திரத்தை வென்றபிறகு, தாங்கள் பாடுபட்டு வென்ற இந்தியாவை ஒரு சிறு சுரண்டல் வர்க்கத்திடம் ஒப்படைத்துவிட்டுத் தாங்கள் அடிமை நிலையில் இருப்பதோடு திருப்தியுறுவார்களா? இந்தியாவில் பொருளாதார, சமூக முன்னேற்றப் பணியும், தொழில் மயமாக்கிப் புதிய சமூகம் அமைக்கும் பணியும், மேலைநாடுகளில் முதலாளித்துவத்தின் தொடக்க காலத்தின் செயல்முறையும் அடிப் படையிலேயே வேறுபட்டவை என்பதைக் காண இந்தக் கேள்வியை எழுப்புவது அவசியம். முதலாளித்துவம் சிதைந்து, அனைத்துலக பாட்டாளிப் புரட்சி முன்னேறும் காலகட்டத்தில் இந்தியாவில் தொழில்மயமாக்கிப் பொருளாதார புத்தமைப்புப் பணி நடைபெறுவதால் அப்பணி அதே போன்ற வடிவங்களிலும் முறைகளிலும்தான் நிறைவு பெறமுடியும்.

தொழில் மயமாக்கும் பணி முழுமையான விவசாயப் புத்தமைப்பு இன்றி நிறைவு பெறமுடியாது. இன்னும் இதுதான் இந்தியப்பொருளாதாரத்தின் அடிப்படைப் பிரச்னே. உண்மையில் இரண்டு செயல்முறைகளும் ஒன்றை ஒன்று நிறைவு செய்கிறவை. முதலாளித்துவப் பொருளாதாரத்தின் நிலைமைகளுக்குள்ளும்கூட, வேளாண்மையில் ஈடுபட்டுள்ள மக்கட்தொகையில் பெரும் பாலோர் வறுமையின் தாழ்மட்டத்தில் இருக்கும் வரை, தொழில் துறையில் உற்பத்தி ஆகும் பொருள்களைப் பயன்படுத்த உள்நாட்டுச் சந்தை வளராத வரை, தொழில் வளர்ச்சி தளேபட்டும் முடங்கியும்தான் இருக்கிறது. எதிரிடையாகச் சொன்னல், வேளாண்மைப் புத்தமைப்புக்கு தொழில் வளர்ச்சி தேவை; உற்பத்தி அளவை உயர்த்தி, பயிரிடப்படாது கிடக்கும் பெரும் நிலப்பரப்புகளில் பயிரிடுவதற்கும் அவசியமான விவசாய யந்திர சாதனங்களே வழங்குவதற்கும், இப்போது வேளாண்மையையே சார்ந்துள்ள பல லட்சக்கணக்கானவர்கள் கொடும் வறுமையிலும் அரைகுறை வேலேயில்லாத் திண்டாட்டத்திலும் தங்கள் சக்திகளே வீணுக்கும் நிலேமாறி, வேளாண்மைப் புத்தமைப்பால் விடுதலே பெறுவோருக்கு வேலேவாய்ப்பு தருவதற்கும் தொழில் வளர்ச்சி தேவை.

ஆனல், மூன்றும் பாகத்தில் பிரச்னேயின் நிலேமைகளே ஆய்வு செய்ததால் புலப்பட்டதற்கு இணங்க, விவசாயப்புத்தமைப்புக்கு, நிலப்பிரபுத்துவ முறை ஒழிக்கப்படவேண்டும், நிலவுடமைகளே அடிப்படையிலேயே புதிதாய்ப் பகிர்வு செய்யவேண்டும். பொருளாதார முறையில் கட்டுபடி ஆகாத நிலவுடமைகளே வைத்துக் கொள்ளும் திவாலான முறையை ஒழிக்கவேண்டும், பண்டைக் கால சிறுவாரிப் பயிர் முறையிலிருந்து படிப்படியாகப் பெருவாரி கூட்டுப்பண்ணே முறையை நோக்கி முன்னேற வேண்டும். இதில் அரைகுறைத்தீர்வே சாத்தியம் இல்லே. நிலப்பிரபுத்துவ முறையை அப்படியே விட்டு வைத்து விவசாயச் ''சீர்திருத்தம்'' செய்யலாம் என்ற கருத்தும், இப்போதுள்ள நிலப்பகிர்வைத் தொடாமல் ''சீர்திருந்திய'' விவசாயம் பற்றிப் பொதுவாகப் பிரசாரம் செய்வதும்—வெறும் உருவெளித் தோற்றங்களே. இப்போதுள்ள கொடிய சூழ்நிலேயில், இப்போதைய நிலப் பிரபுத்துவ, துணே—நிலப்பிரபுத்துவ முறையின் அளவற்ற புல்லுருவித்தனத்தையும், எண்ணற்ற சுமைகளேயும் குடியானவர் சமுதாயத்தின்மீது ஏற்றவோ, இப்போதைய நிலக்குடிவாரமுறை, பயிரிடும் முறையின் கீழ் ஏற்படும் மாபெரும் சேதத்தைத் தாங்கவோ இடமில்லே, வழியுமில்லே. இந்தியாவின் தலேசிறந்த விவசாய வல்லுநரான ராதாகமல் முக்கர்ஜீ சோஷலிசக் கண்ணேட்டம் உடையவர் அல்லர் எனினும், 1935ஆம் ஆண்டில்

ஆக்ரா விஸ்தரிப்புச் சொற்பொழிவு நிகழ்த்துகையில், ''சிறிய, தனித்தனி நிலவுடமைகளின் தொகுதியாக உள்ள கிராமத்தை ஒரே கூட்டுறவுப்பண்ணையாக மாற்றி, விவசாயத்தைக் கூட்டுப் பணியாக மதித்தாலன்றி'' இந்திய விவசாயத்தில் யாதொரு முன்னேற்றமும் காணமுடியாது என்று சொல்லும் அளவுக்குச் சென்றுவிட்டார். இந்த விளைவை ஒரே தாவலில் எட்டிவிட முடியாது. ஆனால், முதல் நடவடிக்கையாக நிலப்பிரபுத்துவ முறை ஒழிக்கப்பட்டு நிலவுடமைகளைப் புதிதாய்ப் பகிர்வு செய்யப்படவேண்டும்; அதைத் தொடர்ந்து, அரசு உதவியும், கூட்டுறவுக் கடன் வசதிகளும், விவசாயத்தின் தொழில் நுட்பத்தை உயர்த்துவதற்குக் கிடங்கு நிலையங்களிலிருந்து யந்திர சாதனங்களும் வழங்கப்படவேண்டும். விவசாயப் புரட்சியை ஒதுக்கிவிட்டுச் செல்லமுடியாது. மாற்றத்தின் உந்துவிசை அதுதான்; நவபாரதத்தின் அஸ்திவாரக் கல்லும் அதுதான்.

ஆயினும், இந்தியத் தேசீய முன்னேற்றத்தின் வருங்காலத் தலைவன் என்னும் முறையில் இந்தியப் பூர்ஷ்வா வர்க்கத்தின் பலவீனம் மிக நன்றாய் வெளிப்படுகிறது. தன்னுடைய வளர்ச்சி, முன்னேற்ற நிலைமைகளிலிருந்தே, தொழில் துறை, வணிகத் துறை பூர்ஷ்வா வர்க்கம் நிலப்பிரபு வர்க்கத்தோடு நெருக்கமாய் இணைந்துள்ளது; செல்வத்தின் நலன்களும் வகைகளும் ஒன்றோடொன்று இணைந்தவை. அதனால்தான் முன்னேற்றக் கருத்துள்ள பூர்ஷ்வா வர்க்கம், இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்கும், இந்தியத் தொழில்துறை வளர்ச்சிக்கும் எவ்வளவு அவசியமாக இருப்பினும் அடிப்படையான நிலமுறைச் சீர்திருத்தம் செய்வதற்கும், நிலப்பிரபுத்துவ முறையை ஒழிப்பதற்கும் அருகில் செல்லவே எப்போதும் பெரிதும் தயக்கம் காட்டுவதன் காரணம் இதுதான். 1946 ஆம் வருடக் காங்கிரஸ் தேர்தல் வேலைத் திட்டம் நிலப்பிரபுத்துவ முறையை ஒழிக்கும் கொள்கையை ஏற்றாலும், நிலவுடமையாளருக்கு ''நியாயமான நஷ்டயீடு'' தர வேண்டும் என்ற அடிப்படையிலேயே அதை ஏற்றது; உண்மையில் சுமை நீடிக்கும் என்பதுதான் அதன் பொருள். அது போலவே, 1946 இல் காங்கிரசின் தேசீயத் திட்டக்குழுவின் ஆதரவில் வெளிவந்த தொடக்கக் கல்விபற்றின வரைவுத் திட்டம், குடியானவர்களின் கடனைத் தீர்க்க அரசு நிதி உதவ வேண்டும் என்றும் குடியானவர்களிடம் 10 சதவீதம் மட்டுமே வசூலிக்க வேண்டும் என்றும், அதில் 5 சதவீதம் கடன் கொடுத்தவர்களுக்குப் போக 5 சதவீதம் தொடக்கக் கல்வி நிதிக்குப் பயன்படுத்தப்படும் என்றும் அமைதியாக ஆலோசனை கூறியது.

நிலப் பிரச்னையை அணுக இந்தியப் பூர்ஷ்வா வர்க்கம் இவ்வளவு தயக்கம் காட்டுவதற்கு, நிலவுடைமையாளர் வர்க்கத்தின் நலன்களும் அவர்களுடைய நலன்களும் இணைந்திருப்பதும் நெருங்கிய உள் தொடர்பும் மட்டும் காரணம் அல்ல, விவசாயப் புரட்சியால் விடுதலையாகும் சமூக சக்திகள் தங்கள் வர்க்கச் சலுகைகளையும், முதலாளித்துவ சொத்துடைமை, சுரண்டலின் முழு அடிப்படையையும் ஒழித்துவிடும் என்ற அச்சமும் காரணம். இந்தியப் பூர்ஷ்வா வர்க்கத்தின் எதிர்ப்புப் போராட்டத்தை முடக்குவதற்காக ஏகாதிபத்தியம் இந்த அச்சத்தினை மனமறிந்தும் மாறுபாடில்லாமலும் பயன்படுத்திக் கொண்டு, தேசிய இயக்கத்தை உள்ளிருந்தே பலவீனப்படுத்த முயன்றது. அதனால்தான் ஹெயிலி பிரபு (அப்பால், சர்மால்கோம் ஹெயிலி) 1924 லேயே சட்டசபையில் சுயராஜ்யக் கட்சியை எச்சரித்துப் பின்வருமாறு உரைத்தார்:

''இந்தியாவில் உண்மையான புரட்சி என்பதாக ஏதாவது ஒன்று வருமானால், இப்போது சட்டசபைக்கும் மாகாணச் சட்டமன்றங்களுக்கும் பிரதிநிதிகளை அனுப்பியுள்ள வகுப்பினருக்கே நாசகரமான விளைவுகள் ஏற்படும்; ஏனெனில், இந்தியாவில் பொதுமக்களுக்கு இடையில் தோன்றும் ஓர் அரசியல் புரட்சி குறுகிய காலத்துக்குள்ளேயே சமூகப் புரட்சியாக மாறிவிடும்.''

இதனோடு, 1940 இல் தம்முடைய ஹரிஜன் ஏட்டில் ஒரு கட்டுரையில் காந்தி மிக அறிவுறுத்துவதாக எழுதியதையும் ஒப்பிடலாம்:

''இந்தத் தடவை நான் சத்தியாக்கிரக இயக்கம் மலைவு கொள்ளத்தக்க ஆதரவு அதற்குக் கிட்டும் என்று மிகுந்த செல்வாக்குள்ள ஒரு காங்கிரஸ்காரர் என்னிடம் கூறினார். இந்தியாவின் பல பகுதிகளிலுள்ள தொழிலாளர்கள், குடியானவர்கள் உலகம் முழுவதுமே ஏககாலத்தில் வேலை நிறுத்த அறிவிப்பு செய்யும் என்று அவர் எனக்கு உறுதி சொன்னார். அப்படி நேர்ந்தால் எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கும் என்றும், என் திட்டங்கள் எல்லாம் குலைந்துவிடும் என்றும் அவரிடம் உரைத்தேன்.... அராஜகத்திலும் சிவப்பு அழிவிலும் முடிவுறக் கூடிய ஒரு போராட்டத்தை நான் மனமறிந்து மேற்கொள்ள வேண்டும் என யாரும் என்னிடம் எதிர்பார்க்கவில்லை என்று நம்புகிறேன்.''

தொழிலாளர்களும் குடியானவர்களும் எடுத்துக் கொள்ளும் நடவடிக்கையால் ''சிவப்பு அழிவு'' ஏற்படும் என்கிற அச்சம், எல்லா நாடுகளிலும் மிதவாதப் பிற்போக்காளர்கள் வழக்கமாய்ப்

பேசுகிற மொழி இது; ஏகாதிபத்தியமும் தேசிய பூர்ஷ்வா வர்க்கமும் சந்திக்கிற பொது மேடை.

எனவே, இவ்வாறுதான் இந்தியச் சூழலின் நேர்முக அனுபவத்திலிருந்தும், அதனுடைய மிக அவசரமான தேவைகளிலிருந்தும், தேசீயப் போராட்டத்தில் பூர்ஷ்வாத் தலைமையினரின் பலவீனம், தோல்வியிலிருந்தும், எல்லாவற்றுக்கும் மேலாக, தொழிலாளர் வர்க்கத்தின் வலிமையும் நடவடிக்கையும், உணர்வும் மேன்மேலும் அதிகரித்து வருவதிலிருந்தும், விவசாயப் புரட்சியின் சக்திகள் திரளுவதினின்றும்தான் இந்தியாவில் தேசிய இயக்கத்தில் நவீன காலத்தில் சோஷலிசம் பற்றின பிரச்னை தவிர்க்க முடியாத வகையில் முன்னணிக்கு வந்துள்ளது. இந்தியாவில் சோஷலிசக் கருத்து வெளிநாட்டிலிருந்து இறக்குமதியான, எதிர்காலம் பற்றின வெறும் தத்துவ வாதம் அன்று, எல்லா நாடுகளையும் போல உலக இயக்கத்தின் அனுபவத்தையும், தத்துவத்தையும் செய்முறையையும் பயன்படுத்திக் கொண்டு இந்திய நிலைமைகளிலிருந்தும் இந்திய அனுபவத்திலிருந்தும் விளைந்ததாகும். இந்தியாவில் அரசியல் தொழிலாளர் வர்க்க இயக்கம் இன்னும் வளர்ச்சி நிலையிலேயே இருக்கிறது; நிறுவனத்தை வலுப்படுத்திக் கொள்ள வேண்டும், தெளிவான வேலைத் திட்டம் வகுத்துக் கொள்ள வேண்டும், அனுபவமும், பொதுமக்கள் அடிப்படையும் வேண்டும்; ஆனல், எதிர்கால சக்தியாக மேன்மேலும் வளரும் என்று ஏற்கனவே பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டது.

தேசிய இயக்கத்திற்குள் சோஷலிசக் கருத்துகள் செல்வாக்கு பெற்றதும், சோஷலிசத்துக்கும் தேசீயத்துக்கும் உள்ள தொடர்பு மக்களுக்கிடையில் பரவியதும் சென்ற பத்தாண்டில், மாற்ற நிலையில் 1929 இல் ஜவகர்லால் நேரு காங்கிரஸ் தலைவராக இருந்தபோதும், அப்பால் 1936-38 இல் அவர் சோஷலிச நிறுவனத்துக்கு வெளியில் இருந்து கொண்டு, வளர்ந்து வந்த சோஷலிசக் கருத்து கொண்ட கோஷ்டிக்கும் பழைய தலைமையினருக்கும் இடையில் இணைப்புப் பாலமாக விளங்கிய போதும்தான். தேசீய விடுதலைக்கும் சமூக விடுதலைக்கும் இடையிலுள்ள நெருங்கிய தொடர்பை நேரு வலியுறுத்தினர்:

> ''வெளிநாட்டு அரசின் இடத்தில் உள்நாட்டு அரசு ஏற்பட்டு, சட்டவுரிமை பெற்ற நலன்களை அப்படியே வைத்திருந்தால், இது விடுதலையின் நிழல்கூட ஆகாது....
>
> ''எனவே, இந்தியாவின் உடனடியான லட்சியம், அதனுடைய மக்கள் சுரண்டப்படுவதை முடிவுக்குக் கொண்டு வருவதை மனத்தில் கொண்டுதான் சிந்திக்கப்பட வேண்டும்.

அரசியல் முறையில், ஏகாதிபத்திய ஆதிக்கமான பிரிட்டிஷ் தொடர்பிலிருந்து பிரிந்து சுதந்திரம் பெற வேண்டும் என்பது அதன் பொருள்; பொருளாதார முறையிலும் சமூக முறையிலும், சிறப்பான எல்லா வகுப்புச் சலுகைகளையும் சட்டவுரிமை பெற்ற நலன்களையும் முடிவுக்குக் கொண்டு வர வேண்டும் என்பது அதன் பொருள்.''

(ஜவகர்லால் நேரு, ''இந்தியா எங்கு செல்கிறது?'', 1933.)

தேசீயப் போராட்டத்தில் சோஷலிச சக்திகளும், சோஷலிசமல்லாத சக்திகளும் கூடிப் பணியாற்றுவதையே காங்கிரஸ் பிரதிபலிக்கிறது என்பதையும், சோஷலிஸ்டு அல்லாத சக்திகளே இப்பொழுது பெரும்பான்மையினராக உள்ளனர் என்பதையும் ஒப்புக் கொண்டு, அவர் தேசீய இயக்கம் சோஷலிஸ்டுக் கண்ணோட்டத்தை நோக்கி எவ்வழியில் முன்னேறும் எனத் தாம் எதிர்பார்க்கிறார் என்ற தம் கருத்தை வெளியிட்டுள்ளார்:

''நான் இந்திய சுதந்திரத்துக்காகப் பணியாற்றுவது ஏனென்றால் என்னுள் உள்ள தேசீயவாதியால் வெளி நாட்டார் ஆதிக்கத்தைப் பொறுக்க முடியாது; அதற்காக இன்னும் மிகுதியாக நான் பணியாற்றுவது ஏனென்றால் எனக்கு அது சமூக, பொருளாதார மாற்றத்திற்குத் தவிர்க்க முடியாத நிலையாகும். காங்கிரஸ் ஒரு சோஷலிஸ்டு ஸ்தாபனம் ஆகி, புதிய நாகரிகத்திற்காகப் பாடுபடும் மற்ற உலக சக்திகளோடு சேர்ந்து செயலாற்ற வேண்டும் என்று நான் விழைகிறேன். ஆனால், இன்று அமைந்துள்ளபடி, காங்கிரசில் பெரும்பான்மையினர் அவ்வளவு தூரத்திற்குச் செல்லத் தயாராக இருக்க மாட்டார்கள் என்பதை உணருகிறேன்......

''இந்த நாட்டில் சோஷலிசம் பரவ வேண்டும். நான் எவ்வளவு மிகுதியாக விரும்பினாலும் அந்தப் பிரச்னையைக் காங்கிரசில் வலுக்கட்டாயமாய்த் திணிக்க முயன்று அதன் மூலம் நம் விடுதலைப் போராட்டத்தில் தொல்லைகள் உண்டாக்க எனக்கு விருப்பமில்லை. சோஷலிஸ்டுத் தீர்வை ஏற்காதவர்களானாலும் விடுதலைக்காக உழைப்போருடன் நான் மகிழ்ச்சியாக ஒத்துழைப்பேன், என்னுள் உள்ள முழு வலிமையோடும் ஒத்துழைப்பேன். ஆனால், என் நிலையை வெளிப்படையாகச் சொல்லிவிட்டே அவ்வாறு செய்வேன்; உரிய காலத்தில் காங்கிரசையும் நாட்டையும் அக் கருத்துக்கு மாற்றிவிடலாம் என நம்பியவாறே அவ்வாறு செய்வேன்;

ஏனெனில் அது அவ்வாறுதான் விடுதலையை ஈட்ட முடியும் என நான் காண்கிறேன்.''

(ஜவஹர்லால் நேரு, லக்னோ தேசீய காங்கிரசில் தலைமையுரை, 1936.)

காங்கிரஸ் படிப்படியாக சோஷலிசத்துக்கு மாறுவதையும், இடைக்காலத்தில் தற்காலிகமாகச் சமநிலையைக் காப்பதையும் பற்றின சித்திரம் இது. ஆயினும், இக் கருத்து இப்போதைய வர்க்க சக்திகளின் மோதலைப் பற்றிக் குறிப்பிடவே இல்லை; அது காங்கிரசுக்குள்ளும், காங்கிரசுக்கும் பொது மக்களுக்கும் இடையிலும் உள்ள தொடர்புகளிலும் பிரதிபலிப்பதைத் தவிர்க்க முடியாது எனினும் அவர் குறிப்பிடவில்லை. ஆகவே, தேசீய ஒற்றுமையின் பெயரால் வர்க்க சமாதானம் பேசும் கொள்கையாக இக் கருத்து ஆகிவிடுகிறது; இத்தகைய வர்க்க சமாதானம் நடைமுறையில் தீவிரமான தேசீயப் போராட்டத்தைத் தடைசெய்கிற தேசீய பூர்ஷ்வாக்களின் வலையிலே வீழ்வதாகும்.

சோஷலிஸ்டு வழிகளில்தான் இந்தியப் பிரச்னைகளுக்கு இறுதியானத் தீர்வு காண முடியும் என்பதில் சந்தேகமில்லை, முன்னேற்றமான கருத்துள்ள இந்தியர்களுக்கு அது மேன்மேலும் தெளிவாகி வருகிறது. சமூக மயமாக்கப் பெற்ற தொழிலும், கூட்டு வேளாண்மையும்தான் உலகச் சேரியாக உள்ள இந்தியாவை வளப்பமும் இன்பமும் நிறைந்த நாடாக உயர்த்தும். முழுமையாகவும் தலைமைப் பொறுப்பு ஏற்கத் தக்கதாகவும் தொழிலாளர் வர்க்கத்தின் வலிய சமூக சக்திகள் வளர்ச்சி பெற்றதும், உழைக்கும் குடியானவர் சமுதாயம் தளையிலிருந்து விடுவிக்கப்பட்டதும், மிகத் தெளிந்த நோக்கும் முற்போக்கான கருத்துக்களையும் கொண்ட அறிஞர்களுடைய ஒத்துழைப்பையும் நகர்ப்புறத்துச் சிறு பூர்ஷ்வாக்களின் ஒத்துழைப்பையும் சேர்த்துக் கொண்டுதான் பழைய குப்பை கூளக் குவியலைத் துப்புரவு செய்து விட்டு இந்தியாவில் புதிய சமூகத்தை நிர்மாணிக்க முடியும்.

எதிர்கால இந்தியாவைப் பற்றின இந்தக் காட்சி, தூரத்தி லுள்ள நோக்கர்கள் கற்பனை செய்வதுபோல வெகு தொலைவில் இல்லை. இந்தியாவின் சோஷலிஸ்டு எதிர் காலத்தின் இயக்கம் மிக்க சக்திகள்—தொழில்துறைத் தொழிலாளர் வர்க்க சக்திகளும், விழிப்புற்ற குடியானவர் சமுதாயத்தின் கடைக்கோடியில் இருப்போரும்—முன்பே அரசியல் அரங்கின் முன்னணியை நோக்கித் திரண்டு முன்னேறுகிறார்கள். வர்க்கப் போராட்டம் என்னும் உறுதியான அடிப்படையின் பேரில் தன்னுடைய அரசியல் கட்சியையும் தொழிற்சங்க நிறுவனத்தையும் நிர்மாணம்

செய்து, மார்க்சீயக் கொள்கை ஒளி வழிகாட்ட, தொழிலாளர் வர்க்கம் தன் நிறுவனத்திலும் அரசியல் தலைமையிலும் முதிர்ச்சி பெற்றவுடனே, ஏழைக் குடியானவர் சமுதாயத்துடனும் தங்கள் குடியானவர்கள் சங்கங்களை முன்பே அமைத்துவரும் விவசாயப் பாட்டாளிகளுடனும் அது தொடர்பும் உறவும் கொண்டவுடனே, உழைக்கும் மக்களின் இந்தியக் குடியரசு தோன்றுவதற்கான நிலைமைகள் கனிந்துவிடும்; தீவிரவாதிகளான அறிஞர்கள், நகர்ப் புற சிறு பூர்ஷ்வாக்களின் மற்ற சக்திகளின் துணையோடு தொழிலாளர்களும் குடியானவர்களும் கண்ட ஜனநாயகத்தை அக் குடியரசு பிரதிபலிக்கும்; அவர்களுடைய பொது முயற்சியால், சோஷலிசத்தை நோக்கிச் செல்லும் வழியில், சமூகப் புத்தமைப்புக் கான அஸ்திவாரங்கள் இடப்படும்.

இது சம்பந்தமாக, சோவியத் யூனியனின் அனுபவமும், அங்கு வளர்க்கப்பட்டுள்ள புதுவித ஜனநாயகமும் இந்தியாவைப் போன்ற ஒரு நாட்டுக்கு மிக முக்கியமான படிப்பினைகளும் பொருட் செறிவும் உடையன ஆகும். புரட்சிக்கு முன்பிருந்த பழைய ஜார் கால ரஷ்யாவுக்கும் இன்றைய இந்தியாவுக்கும் அடிப்படையான வேற்றுமைகள் இருந்த போதிலும், ஒன்று ஏகாதிபத்திய நாடு, மற்றது காலனி நாடு என்கிற உயிர் நாடி யான வேற்றுமை இருப்பதால் யந்திரம்போல ஒப்பிட்டுப் பேச முடியாவிட்டாலும், சோவியத் யூனியனில் இருந்த சமூக சக்தி களின் உறவுகளும், அதை எதிர்ப்பட்ட சிறப்புத் தன்மை வாய்ந்த பிரச்னைகளும், அவை தீர்வு காணப்பட்ட விதமும் இந்தியாவில் இருப்பன போன்றவை, இந்தியாவுக்கு மிகுந்த பயன் அளிக்கக் கூடியவை. இந்தியாவில் ஒரு எதேச்சாதிகார வெளி நாட்டு ஆளும் வர்க்கம் ஏற்கனவே வலுவிழந்து, தனக்கு முக்கியத் துணையாக பிற்போக்கான நிலப்பிரபுத்துவ சக்திகளை வளர்க்கும் காட்சியினைக் காண்கிறோம்; ஒரு பலவீனமான தொழில் துறை பூர்ஷ்வா வர்க்கம், முன்னேறப் பேராசை கொண்டு, யதேச்சாதி கார ஆட்சியைத் தடுமாற்றத்துடன் எதிர்க்கிறது, ஆனால், அதே சமயம் பெரும் மக்களின் சக்திகளைக் கண்டு அஞ்சுவதைக் காண்கிறோம்; ஒரு வளரும் தொழிற்துறைத் தொழிலாளர் வர்க்கம், எண்ணிக்கையால் சிறியது, ஆனால் பெருவாரி தொழில்துறை முயற்சிகள் உள்ள எண்ணிக்கையில் இன்னும் குறைந்த செல்வாக்குமிக்க இடங்களில் குவிந்துள்ளது, முன்பே போர்க்குணம்மிக்க வர்க்கவுணர்வையும் செய்கைத் திறனையும் காட்டுகிறதைக் காண்கிறோம்; மக்கட் தொகையில் மிகப் பெரும்பாலோரான ஒரு பெரும் குடியானவர் சமுதாயம், காலம் கடந்த ஒரு நிலமுறையின்கீழ் மிகப் பின்தங்கிய நிலையில் வாழ்வது, அறியாமையிலும் கல்வியின்மையிலும் ஆழ்த்தப்

பெற்றும், துயரக் கோடிக்குத் துரத்தப் பெற்றும், அடிப்படையான ஒரு விவசாய மாற்றத்தை நோக்கி முன்னேறுவதைக் காண்கிறோம்.

இந்தியாவைப் போன்ற சமூக நிலைமைகள் உள்ள ஒரு நாட்டில் பாராளுமன்ற ஜனநாயக முறை மிகப் பொருத்தமானதாக இராது என்பது வெளிப்படை; ஆனால், மக்களில் பெரும் பாலோருடைய வாழ்க்கைக்கும் நிலைமைகளுக்கும் பொருந்துவதாகவும், உழைக்கும் குடியானவர் சமுதாயத்தின் கிராம மன்றங்களை, தொழிற்சாலைகளிலும் அவற்றையொத்த நிறுவனங்களிலும் உள்ள தொழிலாளர்களின் மன்றங்களுடன் இணைப்பதாகவும் உள்ள ஒரு ஜனநாயக முறை தேவை. இத்தகைய ஜனநாயக முறைதான் சோவியத் ஜனநாயக முறை. சோவியத் ஜனநாயகம் மக்களுக்கு நெருங்கியதாக இருக்கும், தொழிற்சாலைகளில் உள்ள தொழிலாளர்களுக்கு நெருங்கியதாக இருக்கும், கிராமங்களில் உள்ள குடியானவர்களுக்கும் நெருங்கியதாக இருக்கும். இப்போதைய முறையின்கீழ்ப் பொதுநலனுக்காகத் தங்கள் ஆற்றல்களைப் பயன்படுத்த முடியாதவாறு முடக்கி ஒடுக்கப்பட்டிருக்கும் தொழிலாளர் வர்க்கத்தின், குடியானவர் சமுதாயத்தின், அறிஞர்களின், விஞ்ஞானிகளின், தொழில் நுட்பப் பணியாளர்களின், நகர்ப்புறச் சிறுபூர்ஷ்வா வர்க்கத்தின் படைப்புச் சக்திகளை வேறு எந்த முறையாலும் இயலாத அளவில் சோவியத் ஜனநாயக முறையால் வெளிப்படுத்த இயலும்; புதிய இந்தியாவை அமைக்கும் பொதுப் பணியில் ஒத்துழைக்கச் செய்யும்.[1]

ஜார் ஆட்சியின்கீழ் மிக முழுமையான தேசிய, சமூக அடிமைத்தனத்தில் அமுக்கி வைக்கப்பட்டிருந்த, சோவியத்

1. 1936 இல் நடந்த லக்னோ தேசிய காங்கிரசில் ஜவகர்லால் நேரு தம்முடைய தலைமை உரையில் சோவியத் ஜனநாயகத்துக்கு அளித்த பாராட்டு கவனிக்கத்தக்கது.

''ரஷியாவைப் பற்றின மிகச் சிறந்ததும் மனத்தில் நிலைப்பதுமான வெப்பின் புதிய நூலில், விரிவான, உயிரோட்டமுள்ள ஜனநாயக அஸ்திவாரத்தின்மீது முழு சோவியத் அமைப்பு எவ்வாறு எழுப்பப்பட்டுள்ளது என்பதைப் படிக்கச் சுவையாக இருக்கிறது. மேற்கத்திப்பாணியில் ரஷியா ஒரு ஜனநாயக நாடாக மதிக்கப்படுவதில்லை. ஆயினும், வேறு எங்கும் காணப்படுவதைவிட மிக மிகுதியான அளவில் அங்கு பொது மக்களுக்கு இடையில் ஜனநாயகத்தின் அடிப்படைகள் இருப்பதைக் காண்கிறோம். அங்குள்ள ஆறுநூறு ஆயிரம் நகரங்களும் கிராமங்களும் ஒரு பரந்த ஜனநாயக அமைப்பைப் பெற்றுள்ளன; கொள்கையை வரையறுப்பது பற்றியும் உயர்ந்த குழுக்களுக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பது பற்றியும் எந்நேரமும் உரையாடிக் கொண்டும், விவாதித்துக்கொண்டும், விமரிசித்துக் கொண்டும், உதவிக்கொண்டும் இருக்கும் ஒரு சொந்த சோவியத் ஒவ்வொன்றுக்கும், குடிமக்களின் இந்த அமைப்புக்குள் பதினெட்டு வயதுக்கு மேற்பட்ட மக்கட்தொகை முற்றிலும் அடங்கி விடுகிறது. உற்பத்தியாளர்களான மக்களின் மற்றொரு பெரிய அமைப்பு

யூனியனிலுள்ள மைய ஆசியக்குடியரசுகளின் அனுபவம், பண்பாட்டின் மிகப் பண்டைய நிலையில் இருந்த மக்கள்களும், தொழில்துறைத் தொழிலாளர்களின் முன்னேற்றகரமான ஒத்துழைப்பின் வாயிலாக, முதலாளித்துவ நிலைகளின் இடை வழிகளில் புகுந்து செல்லவேண்டிய தேவை இல்லாமலே, தொழில் நுட்ப, பண்பாட்டு முன்னேற்றப் பாதை வழியே சோஷலிசத்தை நோக்கி விரைந்து செல்லமுடியும் என்பதைக் காட்டிய அனுபவம் இந்தியாவுக்கு—குறிப்பாக, நாட்டின் பின் தங்கிய பகுதிகளுக்கும், நாட்டின் ஆதிக்குடிகளின் பிழைத் திருக்கிற இனத்தவரின் எச்சங்களுக்கும்—சிறப்பான மதிப்பு வாய்ந்தாகும்.

## 4. இந்திய நாட்டுக்கு முன்னுள்ள பணிகள்

சோஷலிசத்தை நோக்கி முன்னேறும் மக்களின் இந்தியா, அல்லது தொழிலாளர்கள், குடியானவர்களின் இந்தியாவைப் பற்றின காட்சி, நவீன உலகத்தில் இந்தியாவின் எதிர்காலத்தை உருவப்படுத்திக் காண்பிக்கிறது. அந்தக் காட்சி வழியே பார்வையை முன்னோக்கிச் செலுத்திக்கொண்டே சென்றால், இந்தியாவில் சோஷலிச அமைப்பு உருக்கொள்வதையும், இறுதி விளைவாக எதிர்கால வர்க்கமற்ற சமுதாயம் தோன்றுவதையும், நாட்டின் வேற்றுமைகள் யாவும் (இவை, ஒரு தேசீய இனம் மற்றொரு தேசீய இனத்திற்கு அடிமைப்பட்டுக் கிடப்பதை முடிவுக்குக் கொண்டு வருவதற்கு, சுதந்திரமும் பிரிவினையுமான மாற்ற நிலையில் தவிர்க்க முடியாதவை) அந்த நிலையில் மறைந்து விடுவதையும், இந்தியா ஒன்றுபட்ட உலக வர்க்கமற்ற சமுதாயத்தின் ஒரு பகுதியாக விளங்குவதையும் காட்சியாக விரித்துக் காண நம்மால் முடியும்.

இந்த லட்சியத்தை ஒரே முயற்சியால் அடைந்துவிடலாம் என்பதோ, இந்தியாவில் உடனடியான அடுத்தநிலை சோஷலிசமாக இருக்கும் என்பதோ இதன் பொருள் அல்ல.

முதல் பணியாக, நாட்டுச் சுதந்திரத்தை வெல்லவேண்டும். இந்திய மக்களுக்கு முன்னுள்ள உடனடியான அடுத்த பணி, ஏகாதிபத்திய ஆட்சியை ஒழித்து, அதற்கு ஆதரவாக மக்கட் தொகையில் இருக்கும் நிலப்பிரபுத்துவப் பிற்போக்குக் கும்பலையும்

---

இருக்கிறது, மூன்றாவதாக, நுகர்வோர்களின் அதே போன்ற பெரிய அமைப்பு. இவ்வாறு பல லட்சக்கணக்கான ஆண்களும் பெண்களும் பொது விஷயங்களைப் பற்றின விவாதங்களில்—மெய்யாக நாட்டின் ஆட்சியில் எப்போதும் பங்கு கொள்கிறார்கள். ஜனநாயகச் செயல் முறையை இவ்வாறு நடைமுறையில் பயன்படுத்தியதை வரலாறே கண்டதில்லை."

ஒழித்து, அதாவது, — ஜனநாயகத்துக்கான போராட்டத்தைத் தொடர்ந்து நாட்டுச் சுதந்திரத்தை வெல்ல வேண்டும்.

*இந்தியாவில் நாட்டு விடுதலைப் பணிகளும், ஜனநாயகப் புரட்சிப்பணிகளும் நிறைவு பெறுவதற்கு பிரிட்டிஷ் ஆட்சியாளர்களிடமிருந்து இந்திய ஆட்சியாளர்களிடம் அதிகார மாற்றமும், இறைமை மாற்றமும் மட்டும் போதா.*

முதலாவதாக, பயனுள்ள முறையில் முழுமையான சுதந்திரத்தை வெல்வதற்கும், இந்தியாவில் ஏகாதிபத்திய ஆதிக்கத்தை முடிவுக்குக் கொண்டு வருவதற்கும், இந்தியாவில் ஏகாதிபத்தியத்தின் அரசியல் ஆட்சியைப் பெயரளவில் முடிவுக்குக் கொண்டு வந்தால் போதாது, இந்திய மக்களின் வளர்ச்சியின் வாழ்க்கையையும், உழைப்பையும், வளத்தையும், சுதந்திரத்தையும் இறுக்கிப் பற்றியுள்ள பிரிட்டிஷ் நிதி-மூலதனத்தின் பிடிப்பை வெட்டிவிட வேண்டும் என்பதை நாம் முன்பே பார்த்திருக்கிறோம்; அதாவது, வெளிநாட்டு மூலதனத்துக்கு இப்போது தரப்படும் சலுகைகளை நீக்க வேண்டும், வெளிநாட்டினருக்குச் சொந்தமான எல்லாத் தொழில்களையும், தோட்டங்களையும், தொழிற்சாலைகளையும், ரயில்வேக்களையும், கப்பல் தொழிலையும், பாசனப் பணிகளையும், இவை போன்றவற்றையும் மேற்கொள்வதோடு, வலிமையின் சம்பந்தங்களுக்கு ஏற்றபடி கடன் சுமையைக் குறைக்கும் வகையில், அரசியல் முறையிலோ தூதுவர் முறையிலோ ஏற்பாடுகள் செய்துகொள்ளவேண்டும்.

இரண்டாவதாக, முன்பே நாம் கண்டுள்ளபடி, ஜனநாயக மாற்றம் விவசாயப் புரட்சியோடு இணைந்தது—நிலப்பிரபுத்துவ முறையை ஒழித்து, நிலத்தை மீண்டும் பகிர்வு செய்து, குடியானவர்களின் கடன் சுமையை அகற்றி, விவசாயத்தைப் புதுமை மயமாக்க வேண்டும்.

மூன்றாவதாக, தொழில் மயம் ஆக்குவதையும் தேவையான பண்பாட்டு முன்னேற்றத்தையும் சுதந்திர இந்தியாவின் ஒரே அடிப்படை ஆக்குவதைச் சாத்தியம் ஆக்குவதற்கு, இந்தியாவில் பொருளாதார, சமூகப் புத்தமைப்புக்கான உடனடியான பணிகளுக்கு, காங்கிரஸின் உரிமைகள் அறிக்கையில் முன்பே கண்டுள்ளதற்கு இணங்க, சுதந்திர இந்திய அரசிடம் பொருளாதாரத்தின் அடிப்படை விஷயங்கள், அதாவது, அடிப்படைத் தொழில்களும் பணிகளும், கனிவளங்கள், ரயில்வேக்கள், நீர்வழிகள், கப்பல்கள் முதலிய போக்குவரத்துச் சாதனங்கள், பாங்குகள், நாணயமும் இருக்க வேண்டும்.

*இவையும் சோஷலிசத்தை உருவாக்கும் பணிகள் அல்ல, எனினும் அதற்குரிய முதன்மையான அஸ்திவாரத்தை இவை இடுகின்றன; இடத் தொடங்கிவிட்டன.*

*தேசீய விடுதலைப் போராட்டத்தின் இப்போதைய லட்சியமான இந்திய ஜனநாயகக் குடியரசு, மேல் திசையின் பணக்கார ஏகாதிபத்திய அரை குறை ஜனநாயகங்களின் தன்மைக்குப் பெரிதும் மாறுபட்டதாய் ஒரு புதிய மாதிரி ஜன*

**நாயகக் குடியரசாக இருப்பதைத் தவிர்க்க முடியாது; நிலப்பிரபுத்துவ முறையின் அஸ்திவாரங்களையும், நிலச்சுவான் முறையின் அஸ்திவாரங்களையும் ஒழித்துவிட்ட, நாட்டின் வளர்ச்சிக்குரிய பொருளாதாரத்தின் அடிப்படைப் பொறுப்புகளைத் தன்னிடம் வைத்துக் கொண்டுள்ள, தொழிலாளர் வர்க்கமும் குடியானவர் சமுதாயமும் நிறுவனம் காண்பதற்கும் முன்னேறுவதற்கும் தாராளமாய் வாய்ப்பு தருகிற ஒரு ஜனநாயகக் குடியரசாக அது திகழும்.**

*இறுதியான இந்திய விடுதலைப் போராட்டங்கள் அண்மையிலுள்ள எதிர்காலத்தில் நடைபெறும். விடுதலைக்கு மாற்றமாகும் அந்தநிலை புயல் போன்றதாகிப் பெருத்த தியாகங்களுக்குப் பிறகு நிறைவு பெறுமா அல்லது முன்னைவிட மென்மையாகவும் விரைவாகவும் இருக்குமா என்பது தேசீய இயக்கத்தின் வலிமையை மட்டும் பொறுத்தது அல்ல, பிரிட்டிஷ் தொழிலாளர் வர்க்கமும் பிரிட்டிஷ் ஜனநாயக இயக்கமும் புரிந்து கொண்டு, தீவிரமாக ஒத்துழைப்பதையும் பொறுத்தது. எவ்வாறாயினும், போராட்டத்து நிலைமைகள்எவ்வாறு இருப்பினும், வரலாற்று முறையில் மாற்றம் ஏற்படுவது திண்ணம், இதைப் பிரிட்டனிலுள்ள தொழிலாளர் வர்க்கமும் ஜனநாயக சக்திகளும் காலத்தில் உணருவது நல்லது. இந்தியாவில் முன்பே முதிர்ந்து வந்த பிரச்சினைகளைப் போர் முடுக்கி விட்டுத்தான் இருக்கிறது—நாட்டு விடுதலைக்கான இறுதிப் போராட்டப் பிரச்சினை, அதைச் சார்ந்த, சமூக விடுதலைப் போராட்டப் பிரச்சினை.*

*இந்தியாவில் மக்களுடைய சக்திகள் முன்னேறுகின்றன என்பதைப் பற்றி ஐயமே இல்லை. தொழிலாளர் வர்க்க சக்திகளும் குடியானவர் சமுதாய சக்திகளும் போராட்டத்தின் வாயிலாக வலிமையுணர்வை நோக்கி, ஒரு பெரும் படைப்புப் பணியை நோக்கி, இன்பகரமானதோர் எதிர்காலத்தை நோக்கி முன்னேறுகின்றன. உலகமெங்கும் உள்ள தொழிலாளர் வர்க்கத்தின், முற்போக்குச் சக்திகளின் பயனுள்ள பரிவுகளும் நல்லெண்ணமும், முழு விடுதலைக்காகப் போராட்டம் நடத்தும் இந்திய மக்களுக்குத் துணையாக வரும், ஆதரவாக நிற்கும்—அந்த விடுதலை உலகத்தின் எதிர்காலத்திற்கு அவ்வளவு ஆழ்ந்த பொருட் செறிவு உள்ளது, நம்பிக்கை நிறைந்தது. இந்தியாவை விடுதலை செய்வது என்பதன் பொருள், மனித இனத்தின் சுதந்திரத்தையும், சமத்துவத்தையும், எனவே—ஒற்றுமையையும் நோக்கி, உலக அமைதியும் உலக சோஷலிசமும் இறுதி வெற்றி பெறுவதை நோக்கி அடியெடுத்து வைப்பது என்பதாகும்.*

முற்றும்

# சொற்குறிப்பு அகராதி

## ஆ

## இ

## ஏ



## ஐ



## ஒ



## ஓ



## க

## கி

## கீ



## கு

## தொ

## தோ



## ந

நா



நி



நெ



நே

## நௌ



## ப

## ம



## மா

## மி



## மீ



## மு

## மூ



## மெ



## மே



## மை



## மொ



## மோ

## வீ



## வெ



## வே



## வோ

## ஜி



## ஜெ



## ஜோ



## ஷா



## ஷி



## ஷெ



## ஷோ



## ஹ

# பிழையும் திருத்தமும்

| பக்க எண் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 71 | 15 | 1926 | 1927 |
| 143 | அடிக்குறிப்பில் | (1911) | (1901) |
| 143 | அடிக்குறிப்பில் | (1913) | (1903) |
| 197 | 13 | கோடியில் | £ கோடியில் |
| 201 | 10 | 1901 | 1905 |
| 469 | 8 | 1933 | 1934 |
| 499 | 32 | பக். 113–14 | 425 |
| 676 | 30 | ஆங்கிலோ-இந்திய உடன்படிக்கை | ஆங்கிலோ-இத்தாலிய உடன்படிக்கை |
| 768 | 11 | பக். 55 | பக். 65 |

# எமது சிறந்த சமூகவியல் நூல்கள்

| | |
|---|---|
| அரிஸ்டாடில் | |
| அரசியல் | 20-00 |
| எங்கெல்ஸ் | |
| குடும்பம் தனிச் சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம் | 1-00 |
| இயற்கையின் இயக்க இயல் | 3-90 |
| மார்க்ஸ் எங்கெல்ஸ் | |
| இந்தியாவைப் பற்றி | 3-00 |
| சீனுவைப் பற்றி | 2-00 |
| ந. சுப்ரமணியன் | |
| இந்திய வரலாறு (2ஆம் பாகம்) | 6-00 |
| ,, (மாணவர் பதிப்பு) | 12-50 |
| எஸ். அலெக்சியேவ் | |
| சோவியத் நாட்டு வரலாறு | 3-00 |
| சோவியத் நாட்டின் சுருக்கமான வரலாறு | 5-00 |
| டாக்டர் ரொமிலாதாப்பர் | |
| வரலாறும் வக்கிரங்களும் | 3-00 |
| மயிலை சீனி வெங்கடசாமி | |
| கொங்கு நாட்டு வரலாறு | 12-00 |
| பழங்காலத் தமிழர் வாணிபம் | 6-00 |
| ஜான்ரீடு | |
| உலகை குலுக்கிய பத்து நாட்கள் | 4-50 |
| ப. விருத்தகிரி | |
| இந்தியப் பாதை | 5-00 |
| ஜி. கே. ஷிரோக்கோவ் | |
| தொழில் மயமாகும் இந்தியா | 9-00 |
| எல். லியோண்டியேவ் | |
| அரசியல் பொருளாதாரச் சுருக்கம் | 10-00 |